# வில்லி பாரதம்

ஆரணிய - விராட - உத்தியோக
பருவங்கள் கொண்ட

## இரண்டாம் புத்தகம்

கலா நிலயம்
கே. ராஜகோபாலாச்சாரியார்

ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-600 005

முதற் பதிப்பு—செப்டம்பர் 1970
இரண்டாம் பதிப்பு—டிசம்பர் 1985,


விலை ரூ. 95-00

BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Language | : | Tamil |
| Title of the Book | : | Villi Bharatham—II |
| Author | : | K. Rajagopalachariar |
| First Edition | : | September, 1970 |
| Second Edition | : | December, 1985 |
| Copyright Holder | : | Star Publications, Madras-5 |
| Paper Used | : | 16 kg. |
| Size of the book | : | 22×14 Cms. |
| No. of Copies | : | 1200 |
| Printing Points | : | I0 |
| No. of pages | : | 784 |
| Binding | : | Straw-Board |
| Printer | : | Caxton Press, Madras-1 |
| Price | : | Rs. 95-00 |
| Publisher | : | STAR PUBLICATIONS<br>72, Big Street,<br>Madras-600 005. |
| Subject | : | Epic - Literature |

# பதிப்புரை

பாரதம் வியாசரால் எழுதப் பெற்ற பெரிய நூலாகும். அதிலேயே இந்து மதத்தின் கண்ணாடி போன்ற ஸ்ரீமத் பகவத் கீதை உள்ளது. திருமாலின் ஆயிரம் பெயர்களைப் பேசிப் புகழும் விஷ்ணு சகஸ்ரநாமம் உள்ளது ; காவியம் எழுதுவோருக்கு வழி காட்டி நூலாக உள்ளது ; காவிய அணிகளும், நீதியுரைகளும் நிரம்பியுள்ளது. இவற்றையெல்லாம் எண்ணியே **மகா பாரதம்** என்று அதனைப் பெருமைப்படுத்திச் சொல்கின்றனர். 'மகா' என்ற அடைமொழி வேறு எந்தப் பழம்பெரும் நூலுக்கும் இல்லை.

மகாபாரதத்தின் பெரும் பிரிவு 'பருவம்' என்று கூறப்படும். இராமாயணப் பிரிவு 'காண்டம்' எனப்படுவது போலாகும் இது.

மொத்தம் பதினெட்டுப் பருவங்கள் உள்ளன பாரதத்தில். அவையாவன :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆதி | பருவம் | 10. | சௌப்திக | பருவம் |
| 2. | சபா | ,, | 11. | ஸ்த்ரீ | ,, |
| 3. | வன | ,, | 12. | சாந்தி | ,, |
| 4. | விராட | ,, | 13. | அனுசாசன | ,, |
| 5. | உத்தியோக | ,, | 14. | அசுவமேத | ,, |
| 6. | பீஷ்ம | ,, | 15. | ஆச்ரம | ,, |
| 7. | துரோண | ,, | 16. | மௌசல | ,, |
| 8. | கர்ண | ,, | 17. | மகாப்ரஸ்தான | ,, |
| 9. | சல்ய | ,, | 18. | ஸ்வர்க்கா ரோஷண | ,, |

இந்தப் பதினெட்டுப் பருவங்களும் பாண்டவர்களின் வரலாற்றினைக் கூறுவனவாகும். இவற்றுள் பத்துப் பருவங்களி

ிலுள்ள பாண்டவர் வரலாற்றினை மட்டுமே பாடி தருமபுத்திர னின் பட்டாபிஷேகச் செய்தியொடு தம் நூலை முடித்தார் வில்லி புத்தூரார். கண்ணன் புகழும் பெருமையும் இந்தப் பத்துப் பருவங்களிலுமே மிகுதியாக விரவி வருவதால் இவற்றைப் பாடினதாகத் தொடக்கத்தில் சொல்லித் தம் நூலைத் தொடங்கு கிறார், தீவிர விஷ்ணு பக்தராகிய அவர் வடமொழியிலும் மிக வல்லுநராயிருந்த அவர் மிகச் சிறந்த முறையில் வடசொல் தமிழ்ச் சொற் கோவை அமைத்தும், படிப்போருக்கு உற்சாகத் தையும் எழுச்சியையும் ஊட்டும் சந்தப் பாக்கள் அமைத்தும் மிகவும் சிறப்பாக நூலைப் பாடியுள்ளார். இன்றும் கிராமப் புறத்து மக்களும் இவர் பாடல்களைப் பாடியும், தெருக்கூத்தாக ஆடியும் மகிழ்கின்றனர்,

மொத்தம் பத்துப் பருவங்கள் கொண்ட வில்லி பாரதத்தின், இத் தொகுதியில் மூன்று பருவங்கள், அதாவது ஆரணிய, விராட, உத்தியோக பருவங்கள் அடங்கியுள்ளன. பழுத்த தமிழறிஞர் திரு. கே. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள், செய்யுள் சந்தி பிரித்துச் சொற்களைக் காட்டுதல், கடின பதங்களுக்கு பொருள் விளக்கம், பாடல்களில் பயிலும் அணி விளக்கம், கடைசியில் கருத்து விளக்கம் என்ற முறையில் உரை எழுதி உள்ளார்கள். ஓரளவு தமிழ் கற்றவர்கள் கூட, இப் பாடல்களை எளிதில் படித்துப் பொருள் உணர்ந்து கொள்ளலாம்.

ஸ்டார் பிரசுரம்

# முன்னுரை

திருவுடைய நம் பாரத நாடெங்கும் பண்டைக் காலந் தொட்டுப் பரவி நிலை நின்றுள்ள கதை இராமாயணமும், பாரதமும் ஆகும். இந்த இரு பெரும் நூல்களையும் **இதிகாசம்** என்று சிறப்பித்துக் கூறுவர். இவற்றில், பாரதத்தைத் **''தூது சென்றவன் ஏற்றங் கூறும் நூல்,''** என்றும், **''கீதை பிறக்க நிலைக்களனாய நூல்,''** என்றும், **''மறை நாலோடு ஒத்த சிறப்புடைய ஐந்தாம் வேதம்,''** என்றும், பெரியோர் போற்றுவர்.

இப் பெரு நூலை வடமொழியில் யாத்தவர், வேதவியாசர் என்ற முனிபுங்கவர். இவரது நூலோடு, **அகத்தியபட்டர்** என்ற வித்தகரால் வடமொழியில் பாடப் பெற்ற **பாலபாரதம்** என்னும் நூலையும் மூலமாகக் கொண்டு இதைப் பாடி யருளியவர் வில்லிபுத்தூர் ஆழ்வார் என்று அழைக்கப்படும் அந்தணர் குலச் செம்மலாவார்.

இப் பெரியார் தமிழில் பாடிய இப் பாரதத்தை முதன் முதல் அச்சேற்றி வெளியிட்டவர் யாழ்ப்பாணச் செல்வரான ஸ்ரீ **ஆறுமுக நாவலர்** என்ற சைவப் பெருமகனார். இந்நூலை அழியாமல் பாதுகாத்து உதவிய பெருமை அவரதாகின்றது. எனவே, அவர் தமிழ் இலக்கிய உலகத்தோடு, வைணவ சமூகத்தையும் தமக்குக் கடப்பாடுடையதாகச் செய்து கொண்டவர் ஆகின்றார். வாழி அவர்!

ஆனால், நாவலர் உதவிய பதிப்பில் மதாபிமானத்தின், இடையீட்டால், சொற்களும், செய்யுளடிகளும் பல இடங்களில் மாற்றப் பட்டுள்ளன என்பது பின்வந்த பதிப்புக்களிலிருந்து தெரிய வருகின்றது. சேற்றூர் சுப்பிரமணியக் கவிராயர் என்ற அறிஞர், அவரது பதிப்பின் முகவுரையில் ''சுவமதக் கொள்கை பரம துவேஷம் என்பவற்றை உட்கொண்டு, பாடங்கள் சிதையாமல், பிரதிகளில் உள்ளவற்றை உள்ளவாறே ஆராய்ந்து பிறழாமல் பாடங்கள் வெளியிடப்பட்டன,'' என்று கூறியிருத்தல், நாவலர் பதிப்பில் 'மதங்காரணமான இடைச் செருகல்கள் நேர்ந்துள' என்பதற்குச் சான்றாகின்றது.

''தீர்ந்த வைணவரான வில்லிபுத்தூரார் கூறத்துணியாதன, நூலில் இடங்கொண்டிருக்கின்றனவே,'' என்று எண்ணிய

வித்வான், வி. பூதூர் வேங்கடசாமி ரெட்டியார், என்ற தமிழறிஞர், தீர ஆய்ந்து, **வில்லி பாரதத்தில் வினோதத் திருத்தங்கள்** என்ற தலைப்புடைய ஒரு நூலில் சரியான பாடங்களைத் தந்து, வைணவ உலகத்தைக் கடன் கொண்டு விட்டார். மேலும், அவர் அந்நூலில், தாம் தேடிக் கண்ட திருத்தங்களுடன் வில்லி பாரதப் பதிப்பொன்று வரவேண்டும் என்று, தமது விருப்பத்தையும் தெரிவித்துள்ளார்.

இந்நிலையில், ரெட்டியார் அவர்களது அவாவை நிறைவேற்றி வைக்கச் சைவப் பெருமகனாரும், ஸ்டார் பிரசுராலயத் தலைவருமான **திரு. இராமநாதன் செட்டியார்** அவர்கள், நூலை ஓரிலக்கியச் செல்வமாகக் கருதி, வெளியிட முன் வந்தார். திரு. செட்டியார் அவர்கள், நூலுக்குச் சுருக்கமான உரையெழுதும் பணியை எம்மிடம் ஒப்புவித்தார்.

யாம் மேற்கொண்ட உரைமுறை புதியது. ஓதுவார் செய்யுள்களின் பொருள் தெளிந்து கொள்வதற்கு வேண்டியபடி, பதம் பிரித்தும், அன்வயங் கூறியும், அவசியமான இடங்களில் பொழிப்பும் கருத்துங் கூறியும், அரிய சொற்களுக்கும் வடமொழிச் சொற்களுக்கும் உரை தந்தும், உரை விளக்கம் செய்துள்ளோம். தமிழ் எழுதவும் படிக்கவும் தெரிந்தோர், சிறிது முயற்சி யுளதேல் செய்யுள்களின் பொருளை இவ்வுரை கொண்டு தெளிதல் எளியதே. இவ்வழி முயன்று படிப்போர், எந்தச் செய்யுள் நூல்களையும் பதவுரையின் துணையின்றிப் பொருள் காணும் பயிற்சியும் பெறுவர்.

பாரதம் என்னும் இப் பெருங்காப்பியம் பாடிய, வில்லிபுத்தூரர், திருமுனைப்பாடி நாட்டில் சனியூர் என்ற சிற்றூரில், வீரராகவன், என்ற பெரியாருக்கு மகனாய்த் தோன்றியவர். தென்மொழியோடு வடமொழியிலும் புலமையுடைய இப் பெரியார், **ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்** என்ற நால்வகைக் கவிகளையும் எளிதில் பாடும் ஆற்றலர் என்றும் இவரது புலமையை வியந்து தமிழ்நாட்டு மூவேந்தரோடு, தமிழறிஞர்களும் இவரைக் கொண்டாடினர் என்றும் அறிகின்றோம். கம்பனுக்குச் சடையப்பர் அமைந்ததுபோல், வரபதி ஆட்கொண்டான் என்ற சிற்றரசன் அமைந்து, இவரை ஆதரித்து வந்தான் என்றும் அவனது விருப்பத்திற்கு இணங்கியே, இம் மாகாவியத்தைத் தமிழில் சந்தம் செறிந்த விருத்தப் பாக்களினால், தருமனது பட்டாபிஷேகத்தோடு முடியும் பத்துப் பருவங்களையும் பாடி

முடித்தார் என்றும் அறிகின்றோம். ஆறாயிரஞ் செய்யுள் களால் பதினெட்டுப் பருவங்களும் இவரால் பாடப் பெற்றன வென்றும், பிந்தியவான எட்டுப் பருவங்கள் கிடைக்காமற் போயின என்றுங் கூறுவாருமுளர்.

இவரது காலம் பதினான்காம் நூற்றாண்டின் இடைப் பகுதி என்று அறிஞர் கருதுகின்றனர். இவருக்குப்பின் வந்த நல்லாப் பிள்ளை என்ற வித்தகர், வில்லிபுத்தூராரின் பாடல்களில் நாலா யிரம் பாடல்களை எடுத்துக் கொண்டு- பதினோராயிரம் பாடல் களால் பதினெட்டுப் பருவங்களையும், விரிவாகப் பாடி முடித் தார் என்று தெரிகின்றது. மகாபாரதம் தவிர வேறு எந்த நூலும் இவரால் பாடப் பெற்றதாகத் தெரியவில்லை.

இவரது நூலில் வடமொழிச் சொற்கள் தனிமொழியாகவும், தொடர் மொழியாகவும், திரிந்தும், மொழி பெயர்ந்தும் இடம் பெற்றிருக்கக் காண்கின்றோம். இக் காவியத்தில் **உவமை, உரு வகம், தற்குறிப்பேற்றம், பிறிதுமொழிதல்** முதலிய பொருளணி களோடு, **யமகம் திரிபு பிராசம்** முதலிய சொல்லணிகளும் அமைந்திருக்கக் காண்கின்றோம். போர் பாடுவதில் வல்லவர் என்று புலவர்கள் இவரைக் கொண்டாடுவர்.

முதல் புத்தகம் முன்னுரையோடு, 912 பக்கங்களையும், 23 பாயிரச் செய்யுள்களோடு 1258 செய்யுள்களையும் கொண்ட தாகும். ஆரண்ய, விராட, உத்தியோக பருவங்களைக் கொண்ட இரண்டாம் புத்தகம் 1448 செய்யுள்களையும், வீட்டும துரோண கர்ண, சல்லிய, சௌப்திக பருவங்களைக் கொண்ட மூன்றாம் புத்தகம், 1654 செய்யுள்களையும் தாங்கி வெளிவந்துள்ளன.

இந்த இதிகாச நூல் வெளியிடுவதில் எமக்கு ஊக்கந் தந்த வழக்கறிஞர் திரு. **கோவிந்தசாமி பிள்ளை** அவர்களுக்கும், புதுவைச் செல்வர் **திரு. ஆனந்தரங்கம் கிருஷ்ணபிள்ளை** அவர் களுக்கும், எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

இந்த நூலை நல்ல முறையில் அச்சியற்றித் தந்த **காக்ஸ்டன் அச்சகத்**தாரையும், அவர்களது தொழில் திறமையையும் மன மாரப் பாராட்டுகின்றோம்.

பெரும் பொருட் செலவில் வெளிவரும், இப் பெருங் காப்பி யத்தைத் தமிழன்பர்கள் ஏற்றுப் போற்றுவர் என்று நம்பு கின்றோம்.

**ஆசிரியன்**

# பொருளடக்கம்

## 3. ஆரணிய பருவம் :



## 4. விராட பருவம் :



## 5. உத்தியோக பருவம்

# வில்லி பாரதம்

## 5. ஆரணிய பருவம்

### 1. அருச்சுனன் தவநிலைச் சருக்கம்

பாண்டவரது வனவாசத்தில் நிகழ்ந்த செய்திகளைக் கூறும் பாகம் ஆதல்பற்றி, ஆரணிய பருவம் எனப்பட்டது. இப் பருவம், அருச்சுனன் தவநிலைச் சருக்கம், நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம், புட்ப யாத்திரைச் சருக்கம், சடாசுரன் வதைச் சருக்கம், மணிமான் வதைச் சருக்கம், துருவாச முனிச் சருக்கம், பழம் பொருந்து சருக்கம், நச்சுப் பொய்கைச் சருக்கம் என்ற எட்டுச் சருக்கங்களைக் கொண்டது. அவற்றுள், அருச்சுனன் தவநிலைச் சருக்கம் முதலாவதாகும். இப் பருவம் 723 செய்யுள்களைக் கொண்டது.

**பாண்டவர் காமியவனம் அடைதல்**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. **பெருமித வலியும் பாரும் பேணலார் கவர வின்சொல்
தருமனுந் தம்பி மாரும் தழலெழு தைய லாளும்
அருமக முனிவர் முந்நான் காயிரர் சூழ்ந்து போதக்
கருமுகில் படியுஞ் சாரற் காமிய வனம்புக் காரே.**

[பெருமிதம் வலியும் பாரும் பேணலார் கவர, இன்சொல் தருமனும், தம்பிமாரும், தழல் எழு தையலாளும், அரு மகம் முனிவர் முந்நான்கு ஆயிரர் சூழ்ந்து போத, கருமுகில் படியும் சாரல் காமிய வனம் புக்கார், ஏ.]

**விளக்கம் :-** பெருமிதவலி :- மிகுதியான வலிமைக்கு ஆதாரமான படை, மந்திரி முதலிய துணை. பார் - பூமி, இராஜ்யம். பேணலார் - பகைவர்களான துரியோதனாதியர். தழல் எழு தையல் - திரௌபதி. அரு மகம் முனிவர் - அரிய வேள்விகளைச் செய்துள்ள முனிவர். சூழ்ந்து போத - சூழ்ந்து உடன் செல்ல. சேனையும், மந்திரிகளும், பன்னீராயிரம் முனிவர்களும் உடன்வரத் தருமன் தன் தம்பிமாரோடும், பத்தினியுடனும், கரிய மேகங்கள் படிந்துள்ள மலைச் சாரல்களையுடைய காமியவனம் சென்றான், என்பது பொருள்.

பெருமிதம் - அளவின் மிகுதியைக் குறிக்கும். பேணலார் - விரும்பாதவர், எனவே பகைவர். இன்சொல், என்றது மற்ற நல்ல குணங்களுக்கும் உபலக்ஷணம். இறைவனைத் தியானித்த வராய் இருப்பவர் முனிவர்; அல்லது முக்கால உணர்வினர் முனிவர், என்றும் பொருள் கொள்ளலாம். காமிய வனம், என்ற இடம், சரஸ்வதி நதிக்கு அருகில் உள்ளது, என்பர்.

**2. ஆரமு மகிலு நாறு மருவியுஞ் சுனையு மத்த
வாரணம் பிடிக ளோடு வாரிதோய் கானி யாறும்
ஈரமு நிழலுங் காயுங் கனிகளும் யாவு மீண்டிக்
காரினம் பொழியு மந்தக் கானகத் தழகு கண்டார்.**

[ஆரமும் அகிலும் நாறும் அருவியும் சுனையும், மத்தவாரணம் பிடிகளோடு வாரி தோய் கான் யாறும், ஈரமும் நிழலும், காயும் கனிகளும் யாவும் ஈண்டி, கார் இனம் பொழியும் அந்த கானகத்து அழகு கண்டார்.]

**விளக்கம் :-** ஆரம் - சந்தனக்கட்டை. அகில் - அகில் கட்டை. சுனை - மலையிடத்தே உள்ள நீரூற்று. மத்தவாரணம் - மதம் பிடித்த யானை. பிடி - பெண் யானை. வாரி தோய் கான் யாறு- (யானை முதலியன) நீரில் தோய்ந்து விளையாடற்குரிய காட்டு ஆறு ஈரம் - குளிர்ச்சி. நிழல் - மரநிழல். ஈண்டி - தன்னகத்தே செறிந் திருக்கப்பெற்று. கார் இனம் - மேகக் கூட்டம்.

நீர் வளத்தோடு இயற்கை வளத்தையுங் கொண்ட காமிய வனத்தின் அழகைப் பாண்டவர் கண்டனர், என்பதாம்.

**3. அங்கிவர் புகுந்த பின்ன ரங்கியின் புகையு மாறிப்
பொங்கிய வோமத் தீயின் புகையினான் முகிலுண் டாகச்
சிங்கமுந் துதிக்கை மாவுஞ் சேர்ந்துடன் றிரியச் சூழல்
எங்கணு மழகு பெற்ற திமகிரிச் சாரல் போன்றே.**

[அங்கு இவர் புகுந்த பின்னர் அங்கியின் புகையும் ஆறி, பொங்கிய ஓமம் தீயின் புகையினால் முகில் உண்டாக, சிங்கமும் துதிக்கை மாவும் சேர்ந்து உடன் திரிய, சூழல் எங்கணும் அழகு பெற்றது இமகிரி சாரல் போன்று, ஏ.]

**விளக்கம் :-** அங்கி - அக்கினி. அங்கியின் புகை - காட்டுத் தீயின் புகை. இமகிரி - இமய மலை, பனி மலை. நல்லவர்களாகிய பாண்டவர்கள் காமியவனம் சென்றதும், அங்கே அக்னி பயம் ஒழிந்து, யாகம் முதலிய வைதிக காரியங்கள் நிகழ்தலினால் உண்டா கும் புகையினால் மேகந்திரண்டு, கால மழை எங்கும் பொழிதலும், விலங்குகள் பகை மறந்து வாழலும் இயல்வதாயின. ஆகவே, இச் சூழல் குளிர்ச்சி பொருந்திய இமயமலைச் சாரலை ஒத்த தாயிற்று, என்க.

## கலிவிருத்தம்

**4. துருப னுந்திட்டத் துய்மனுஞ் சோமக**
**நிருப ரானவர் யாவரு நேர்ந்துடன்**
**விரவு தானைவி ராடனுஞ் சுற்றமும்**
**மருவி னுரவ்வ னத்திருந் தோரையே.**

[துருபனும் திட்டத்துய்மனும், சோமக நிருபர் ஆனவர் யாவரும், நேர்ந்து (விரும்பி), உடன் விரவு தானை விராடனும், சுற்றமும் மருவினார் அ வனத்து இருந்தோரை, ஏ.]

**விளக்கம் :-** துருபதன் - பாஞ்சால மன்னன். திட்டத் துய்மன் - அவன் மகன். சோமக நிருபர் - சோம குலத்தில் பிறந்த மன்னர். நேர்ந்து உடன் விரவு தானை விராடன்-விரும்பி உடன் வரும் சேனையை உடைய விராட மன்னன். அவ் வனத்து இருந்தோரை மருவினார் - அந்த வனத்தில் இருந்த பாண்டவரைக் (காண) வந்து சேர்ந்தார்கள். 'துருபதன்' என்பது **துருபன்** என்று விகாரப்பட்டு நின்றது; மச்சநாட்டு அரசன் விராடன். துருபதன் முதலிய சுற்றத்தார், காமிய வனத்தில் வசிக்கும் பாண்டவரைக் காண வந்தனர், என்பதாம்.

**5. மற்று மற்று மகீபரி லன்பினால்**
**உற்ற வுற்ற வுறவுடை யோர்களும்**
**கற்ற கற்ற கலைவித மாக்களும்**
**சுற்று மொய்த்தனர் தோமறு கேண்மையார்.**

[மற்றும் மற்றும் மகீபரில் அன்பினால் உற்ற உற்ற உறவு உடையோர்களும், கற்ற கற்ற கலை விதம் மாக்களும், சுற்றும் மொய்த்தனர், தோம் அறு கேண்மையார்.]

**விளக்கம் :-** தோம் (குற்றம்) அறு கேண்மையார், மற்றும் மற்றும்—சுற்றும் மொய்த்தனர், என்று அன்வயிக்க. மற்றும் மற்றும் மகீபர்-உறவினர் ஒழிந்த வேறு வேறான நாட்டு அரசர்கள். (அன்பினால்) மிக நெருங்கிய உறவு பூண்டவர்களும்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். பலவித நூல்களை மிகுதியாகக் கற்ற கலைஞர்களும்,—என்பது மூன்றாவது அடியின் பொருள் கேண்மையர் - நட்புடையவர்.

உறவினரோடு, அவர் ஒழிந்தவர்களான அன்பினால் நெருங்கிய அரசர்களும், பல நூல் வித்தகர்களும் பாண்டவர்களைக் காண வந்து கூடினார்கள்,—என்பதாம். மாக்கள், என்பது இங்கே ஐம்புலன் உணர்ச்சியோடு அறிவையும் உடைய மக்கள், என்ற பொருளது. மற்று மற்று, உற்ற உற்ற, கற்ற கற்ற, என்ற அடுக்குகள், மிகுதிப் பொருளன.

## கண்ணபிரான் வருகை

**6. மாத வத்தின் பயனென மாதவன்**
**யாத வகுலத் தேறிமை யோர்பதி**
**ஆத வத்துக் கருநிழல் போலருள்**
**வேத வித்த கவீரனு மேவினன்.**

[மா தவத்தின் பயன் என மாதவன், யாதவ குலத்து ஏறு இமையோர் பதி, ஆதவத்துக்கு அரு நிழல்போல், அருள் வேதம் வித்தகம் வீரனும் மேவினான்.]

**விளக்கம் :-** மாதவன்...வேத வித்தக வீரனும், மாதவத்தின் பயன் என மேவினான்,—என்பது அன்வயம். மாதவன் - லக்ஷிமி பதியான கண்ணன். யாதவ குலத்து ஏறு - யது குலத்திலே அவதரித்த ஆண் சிங்கம் போன்ற கண்ணன். இமையோர் பதி - தேவர் தலைவன். ஆதவன் - சூரியன். ஆதவம் - (ஆதபம்) நன்றாகத் தபிப்பது. ஆகவே, வெயிலினுல் உண்டாகும் வருத்தத்தை அகற்றும் அருமையான நிழல் போல், அன்பருக்கு உதவியருளும் (கண்ணன்), என்பது மூன்றாவது அடியின் பொருள். வேத வித்தகன் - வேதத்தால் அறியப்படுதற்கு உரியவன்; அல்லது, வேத வித்தகத்திற்கு விஷயமானவன். ஆதவத்துக்கு அருநிழல் - வெயிலினால் உண்டாகும் வருத்தம் தணிக்கும் அரிய நிழல்.

பாண்டவர் செய்த அரிய தவத்தின் பயன்போல், அன்பர்க்கு அருளுவதையே தொழிலாகக் கொண்ட கண்ணபிரான், காமிய வனம் வந்தருளினான் என்க.

**7. பாரி ழந்தவிப் பாதகச் சூதுகேட்(டு)**
**ஈரு நெஞ்சின ரேமுறு நோக்கினர்**
**பேர றன்றரு பிள்ளையைப் பார்த்தருள்**
**கூர வன்போ டிவையிவை கூறுவார்.**

[பார் இழந்த இ பாதகம் சூது கேட்டு ஈரும் நெஞ்சினர், ஏம் உறு நோக்கினர், பேர் அறன் (அறக் கடவுள்) தரு பிள்ளையை நோக்கி, அருள்கூர அன்போடு இவை இவை கூறுவார்.]

**விளக்கம் :-** பார் இழந்த-பூமியை (இராஜ்யத்தை) இழக்கச் செய்த. ஈரும் - பிளக்கும். ஏம் - வருத்தம். பேர் அறன்தரு பிள்ளை - பெருமையுடைய யமதர்ம ராஜன் தந்த யுதிட்டிரன். அருள்கூர - கருணை மிக. இவை இவை - வார்த்தைகள் சில. அவர்கள் சொல்லியவற்றை இனி வரும் நான்கு செய்யுள்கள் கூறும். துன்பங் கண்டவிடத்து இயல்பாக உண்டாகும் பரிவு, கருணை ஆகும். ஒரு தொடர்பு காரணமாக ஒருவரிடம் உண்டாகும் பரிவு அன்பாகும்.

**8. மரபின் வல்லியை மன்னவை யேற்றிய**
**குருகு லேசனைக் கொற்றவெஞ் சேனையோ(டு)**
**இரிய வெற்றுது மிப்பொழு தேயென**
**உரமுஞ் சீற்றமுந் தோற்றவு ரைசெய்வார்.**

[மரபின் வல்லியை மன் அவை ஏற்றிய குருகுல ஈசனை கொற்றம் வெம் சேனையோடு இரிய எற்றுதும் இப்பொழுதே, என உரமும் சீற்றமும் தோற்ற உரை செய்வார்.]

**விளக்கம்** :- மரபின் வல்லி - உயர்குலம் வந்த கொடிபோன்ற திரெளபதி. குருகுலேசன் - துரியோதனன். இரிய - நிலைகெட்டோட. உரம் - வலிமை. பாண்டவரைக் காண வந்தவர்களில் சிலர், மன்னவை அழைத்துத் திரெளபதியை மானபங்கஞ் செய்த துரியோதனனை, அவன் சேனையோடு சிதறும்படி எதிர்த்து எற்றுவோம், என்றார், என்பதாம்.

**9. தம்பி மாரைத் தனித்தனி யேயுயிர்**
**வெம்பி வீழ விரைந்துவில் வாங்கியின் (று)**
**உம்பர் காண வுயிரழிப் போமெனத்**
**தும்பை சூடக் கருதினர் சொல்லுவார்.**

[தம்பிமாரை தனி தனியே உயிர் வெம்பி வீழ, விரைந்து வில் வாங்கி, இன்று உம்பர் காண உயிர் அழிப்போம், என தும்பை சூட கருதினர், சொல்லுவார்.]

**விளக்கம்** :—தம்பிமார் - துரியோதனனது தம்பியரான தொண்ணூற்றொன்பதின்மர். தனத்தனி - ஒவ்வொருவராக. துரியோதனனது தம்பியரைக் கொன்று ஒழிப்போம் என்றார், சிலர். போரெழுந்து செல்வோர் தும்பைப்பூ மாலையை அணிந்து செல்வது வழக்கம். 'உம்பர் காண' என்பதற்கு, வீர சுவர்க்கம் செல்லும்படி, என்றும் பொருள் கொள்ளலாம்.

**10. வஞ்ச கச்சுப லன் தரு மைந்தனை**
**வெஞ்ச மத்தினில் வீழக் கணத்திடைச்**
**செஞ்ச ரத்தின் வழியுயிர் செல்லவே**
**எஞ்சு விக்க வெழுமென் றியம்புவார்.**

[வஞ்சகன் சுபலன் தரு மைந்தனை வெம் சமத்தினில் வீழ கணத்திடை, செம் சரத்தின் வழி உயிர் செல்லவே எஞ்சுவிக்க எழும், என்று இயம்புவார்.]

**விளக்கம்** :—சுபலன் தரு மைந்தன் - சகுனி. சமம் - போர்க்களம். கணத்திடை - கணப்பொழுதில். எஞ்சுவிக்க - நாசம் அடையும்படி செய்ய. வஞ்சனைச் சூதாடிப் பாண்டவரை நலங் குலைத்த சகுனியைக் குலத்தோடு அழியச் செய்யப் போரெழுங்கள் என்றார் சிலர், என்க.

**11. சீத வெண்குடை வேந்தர்தந் தேர்விடும்**
**சூதன் மைந்தன் சுயோதனன் றோழனை**
**மாதி ரங்களில் வானவர் காணவிப்**
**போது டற்றுவ மென்னப் புகலுவார்.**

[சீதம் வெள் குடை வேந்தர் தம் தேர் விடும் சூதன் மைந்தன் சுயோதனன் தோழனை, மாதிரங்களில் வானவர் காண, இ போது உடற்றுவம் என்ன புகலுவர்.]

**விளக்கம்** :—சூதன் (சாரதி) மைந்தன் - கர்ணன். மாதிரம் - திக்கு. உடற்றுவம் - போர் செய்வோம். எட்டுத் திக்குக்களிலிருந்தும் தேவர்கள் காணும்படி சூதன் மகனும், துரியோதனனது

தோழனுமான கர்ணனோடு இப்போழுதே போர் செய்வோம், என்றார் சிலர்,—என்பதாம்.

பாண்டவரைத் துரியோதனன் துன்புறுத்துவது தம்பியரது துணையோடு, சகுனியின் வஞ்சனையும், கர்ணனது வீரமுங் கொண்டே யாதலால், பாண்டவர்பால் அன்புடையார் சிலர் இவ்வாறு கூறினார், என்க.

## கண்ணன் கூறல்

**12. உந்த வுந்த வொருவர்க் கொருவர்வாய்
முந்த முந்த முடுகு சினத்தராய்
அந்த வந்த வவனிபர் யாவரும்
இந்த விந்த வுரைக ளியம்பவே.**

[உந்த உந்த ஒருவர்க்கு ஒருவர் வாய் முந்த முந்த, முடுகு சினத்தர் ஆய், அந்த அந்த அவனிபர் யாவரும் இந்த இந்த உரைகள் இயம்பவே.—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம்** :—உந்த உந்த-(பாண்டவர்க்குத் துரியோதனாதியர் இழைத்த தீங்கு) மேலும் மேலும் முன்னே உந்தித் தள்ள. முடுகு சினம் - கடுஞ்சினம். அவண் இருந்த அரசர்கள் மேலே கூறியபடி சினமொழிகளைக் கூறவும்,—அடுத்த செய்யுளோடு முடியும். ''ஒருவருக்கு ஒருவர் வாய் முந்த முந்த'', என்றது, ''ஒருவருக்கு முன் ஒருவரது வாய்ச்சொற்கள் சினத்தோடு விரைந்து எழ'' என்ற பொருளது. 'அந்த வந்த', என்று பிரித்துக்கொண்டால், ''பாண்டவரிடம் வந்த அந்த அவனிபர்'', என்பது பொருளாகும். வாய், சொல்லுக்குக் கருவியாகு பெயர்; அல்லது இடவாகு பெயர் என்றலும் அமையும்.

**13. கேட்டி ருந்தருள் கேசவன் வாசவன்
காட்டி ருந்தன னென்னக் கவின்பெறும்
தோட்டி ருந்தளி தேனுகர் சோலையின்
மாட்டி ருந்தம கீபர்க்குரை செய்வான்.**

[கேட்டு இருந்து அருள் கேசவன், வாசவன் காடு இருந்தனன் என்ன, கவின் பெறும் தோடு இருந்து அளி தேன் நுகர் சோலையின் மாடு இருந்து அ மகீபர்க்கு உரை செய்வான்.]

**விளக்கம்** :—வாசவன் (இந்திரன்) வனத்தில், அல்லது கற்பகச் சோலையில் இருந்தான் என்று சொல்லும்படி, அழகின் நலம் பெற்ற மலர் இதழ்களில் தங்கியிருந்து வண்டுகள் தேன் பருகும் சோலையிடத்தே இருந்து, (அரசர்கள் சொன்னவற்றைக்) கேட்டுக் கொண்டிருந்த கேசவன் (கண்ணன்), அந்த அரசர்களுக்குத் தன் கருத்தைக் கூறுவானாயினான்,—என்பது பொருள்.

**14. விடுக விந்த வெகுளியைப் பின்புற**
**அடுக நுந்திற லாண்மைக டோன்றவே**
**வடும னங்கொடு வஞ்சகஞ் செய்பவர்**
**கெடுவ ரென்பது கேட்டறி யீர்கொலோ.**

[விடுக இந்த வெகுளியை, பின்பு உற அடுக நும் திறல் ஆண்மைகள் தோன்ற (ஏ), வடு மனம் கொடு வஞ்சகம் செய்பவர் கெடுவர், என்பது கேட்டு அறியீர் கொலோ.]

**விளக்கம்** :—பின்புற - (வனவாசமும் அக்ஞாத வாசமும்) முடிந்த பின்பாக. அடுக - கொல்க. திறல் ஆண்மைகள் - பல பராக்கிரமங்கள். வடு - குற்றம். அறியீர் கொல் (ஓ) - அறிய மாட்டீரோ.

'கெடுவான் கேடு நினைப்பான்', என்றபடி, துரியோதனாதியர் தமது கேட்டிற்கே அடிகோலுகின்றனர். வனவாசம் முடிந்த பின், நீங்கள் உங்கள் போராற்றலைக் காட்டலாம்; எனவே, சினம் தணிக,— என்று கண்ணன் அரசர்களுக்குக் கூறினான், என்பதாம்.

**15. இயைந்து ரைத்த வியையின் படியினி**
**வியந்தி ருக்கும் விபினந் தொறுமிருந்(து)**
**உயர்ந்த பின்செய் வினையையின் றுன்னுதல்**
**அயர்ந்து ரைத்த லலாதிலை யாவதே.**

[இயைந்து உரைத்த இயையின்படி இனி வியந்து இருக்கும் விபினம் தொறும் இருந்து உயர்ந்த பின் செய்வினையை, இன்று உன்னுதல் அயர்ந்து உரைத்தல் அலாது இலை ஆவது (ஏ)-]

**விளக்கம்** :—இயைந்து - சம்மதித்து. இயைபின் படி - உடன் பாட்டின்படி. வியந்து (வியக்க - எச்சத் திரிபு) இருக்கும் விபினம்- (கண்டார்) வியப்புக் கொள்ளும்படியான காடு. உயர்ந்த பின் - (ஏற்றுக் கொண்டபடி வனவாசம் செய்து முடித்ததாகிய) பெருமை யை எய்திய பின். (அப்பொழுது செய்ய வேண்டிய காரியத்தை இப்பொழுது நினைத்தல்) அயர்ந்து உரைத்தல் அலாது ஆவது இலை-முறை மறந்து பேசுதல் அல்லாது, (அதனால்) ஏற்படக்கூடிய பயன் ஒன்றும் இல்லை.

பெரியோர் பலர் முன் ஏற்றுக் கொண்டதைச் செய்து முடித்தலே தர்மமாதலால், அதற்கு எதிராக ஒன்று செய்ய முற் படல் தக்கதன்று, என்று சினந்தெழுந்த அரசர்களுக்குக் கூறிக் கண்ணன், அவர்களது சினத்தைத் தணிவித்தான், என்பதாம்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**16. கேட்டிநீ முரச கேது கிளைஞர்தம் மிருக்கை தோறும்**
**ஈட்டிய புதல்வ ருள்ளோர் யாரையு மிருத்தல் செய்து**
**காட்டிடை நீரும் வைகிக் கடவ நாள் கழித்து மீண்டு**
**நாட்டிடை வந்தாற் காண்டி நலனுளோர் நலன்க**
**ளெல்லாம்.**

[கேட்டி நீ முரசகேது, கிளைஞர் தம் இருக்கை தோறும் ஈட்டிய புதல்வர் உள்ளோர் யாரையும் இருத்தல் செய்து, காட்டிடை நீரும் வைகி, கடவ நாள் கழித்து மீண்டு நாட்டிடை வந்தால், காண்டி நலன் உளோர் நன்மை எல்லாம்.]

**விளக்கம் :**—முரசகேது - முரசைக் கொடியிலே கொண்ட தருமன். கிளைஞர் - பந்துக்கள். இருக்கை - இருப்பிடம். ஈட்டிய புதல்வர் - பெற்ற புத்திரர். உள்ளோர் யாரையும் - மற்றுமுள்ள அன்னை முதலிய சுற்றத்தாரையும். நலன் உளோர் நலன்கள் எல்லாம் காண்டி-நல்வினை உடையோர் அவர்க்குரிய நன்மைகளை எல்லாம் பெறுதலைக் காண்பாய்; அல்லது நல் ஊழினால் துரியோதனாதியர் பெற்றுள்ள நன்மைகள் எல்லாம் அழியக் காண்பாய். நலன், என்பது ஆகுபெயராய் நல் ஊழினைக் குறித்தது.

**17. அன்னையைச் சுபலன் பாவை யருகுற விருத்தி யுங்கள்**
**தன்னையர் தம்மை யாக சேனனூர் தன்னில் வைத்துப்**
**பின்னையும் வேண்டு வோரைப் பிரிவுற நெறியிற் போக்கி**
**நன்னயத் தொடுநீர் கானம் வைகுத னன்மை யென்றான்.**

[அன்னையை சுபலன் பாவை அருகு உற இருத்தி, உங்கள் தன்னையர் (தனையர்) தம்மை யாகசேனன் ஊர் தன்னில் வைத்து, பின்னையும் வேண்டுவோரை பிரிவு உற நெறியின் போக்கி, நல் நயத்தொடு நீர் கானம் வைகுதல் நன்மை என்றான்.]

**விளக்கம் :**—சுபலன் பாவை - காந்தாரி. யாகசேனன் -துருபதன். பின்னும் வேண்டுவோர் - மற்று முள்ள உறவினர். பிரிவு உற நெறியின் போக்கி - பிரிந்து செல்லும்படி முறையே அனுப்பி விட்டு. நல் நயம் - பண்புடைய வாழ்க்கை, நீதியின் நலம்.

குந்தியைக் காந்தாரியோடு இருக்கச் செய்தும், தனையர்களைப் பாஞ்சால மன்னனான துருபதனுடைய ஊரில் இருக்கச் செய்தும், மற்ற உறவினர்களை அவரவர் இருப்பிடம் அனுப்பி விட்டும், நீங்கள் பெருமை குன்றாத வழி வனத்தில் வசித்தல் நலம், என்று கண்ணன் கூறினான், என்பதாம்.

## பாண்டவர் வனவாசம்

**18. அச்சுத னுரைத்த மாற்ற மறன்சு தன் மகிழ்ந்து கேட்டு**
**மெய்ச்சுதர் முதலா மற்றும் விளம்பிய கிளையை யெல்லாம்**
**இச்சையின் படியே யாங்காங் கெய்துவித் தீரா றாண்டும்**
**அச்சுறு கானில் வைகு மார்வமே யார்வ மானான்.**

[அச்சுதன் உரைத்த மாற்றம் அறன் சுதன் மகிழ்ந்து கேட்டு, மெய் சுதர் முதலாம் மற்றும் விளம்பிய கிளையை எல்லாம் இச்சையின் படியே ஆங்கு ஆங்கு எய்துவித்து, ஈர் ஆறு ஆண்டும் அச்சு உறு கானில் வைகும் ஆர்வமே ஆர்வம் ஆனான்.]

**விளக்கம்** :—அச்சுதன் - கண்ணன். அறன் சுதன் - யமதர்ம ராஜனின் மகனான தருமன். மெய்ச்சுதர் - தங்கள் உடம்பினின்று தோன்றிய புதல்வர். புதல்வர் முதலாக மேலும் சொல்லப்படு கின்ற ரத்த சம்பந்தமுள்ள பந்துக்களை எல்லாம்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். இச்சையின்படி - கண்ணனது விருப்பத்தின்படி. அச்சுறு கான் - அச்சம் தருவதற்கு இடமான கொடிய காடு. ஆர்வமே ஆர்வமானான் - (கண்ணன் கூறியபடி வனவாசம் செய்யும்) விருப்பத்தையே (தருமன்), விரும்புபவன் ஆனான். அச்சுதன், என்பது அழிவில்லாதன், என்ற பொருளது. அச்சு என்பது அச்சம் என்பதின் திரிபு.

**19. சோனைமா முகிலின் மேனித் தோன்றலுந் துவரை புக்கான்**
**ஏனையோர் தாமுந் தத்த மெயிலுடை நகரி புக்கார்**
**ஞானயோ கிகளு மொவ்வா நரேசனுந் தம்பி மாரும்**
**கானமே தாங்க ளாளுங் காசினி யாகக் கொண்டார்.**

[சோனை மா முகிலின் மேனி தோன்றலும் துவரை புக்கான், ஏனையோர் தாமும் தம் தம் எயிலுடை நகரி புக்கார், ஞானயோகி களும் ஒவ்வா நரேசனும் தம்பிமாரும் கானமே தாங்கள் ஆளும் காசினிஆகக் கொண்டார்.]

**விளக்கம்** :—கண்ணன் துவாரகை சேர்ந்தான், என்பது முதலடியின் பொருள். சோனை மாமுகில் - இடைவிடாது பொழி யும் அடர்ந்த மேகம். ஞான யோகிகளும் ஒவ்வா நரேசன் - மெய் யறிவு கைவந்த யோகிகளும் தனக்கு நேராக மாட்டாத் தருமன். காசினி - உலகம், இங்கே, இராஜ்யம். க்ஷத்திரியர்களை வென்று பூமியைத் தனதாகக் கொண்ட பரசுராமன், அதைக் காச்யப முனி வனுக்கு அளித்தானாதலால், பூமி, காசினி என்ற பெயர் பெற்றது.

## வியாசர் வருகை

**20. அவ்வனந் தன்னில் வந்த வரசெலா மகன்ற பின்னர்**
**வெவ்வனம் விடாது மேவித் தவம்புரி வியாத னென்னும்**
**செவ்வன முனிவன் வந்தே சேயவன் சேய்க ளான**
**இவ்வன சரிதர் தம்மை யினைவுட னெய்தி னானே.**

[அ வனம் தன்னில் வந்த அரசு எலாம் அகன்ற பின்னர், வெம் வனம் விடாது மேவி தவம் புரி வியாதன் என்னும் செவ் வனம் முனிவன் வந்தே, சேயவன் சேய்களான இ வனசரிதர் தம்மை இனைவுடன் எய்தினான்,(ஏ).]

**விளக்கம்** :—வெவ்வனம் - கொடிய காடு. செவ்வன முனி வன் - நேர்மையை உடைய முனிவன்; அல்லது நன்மைகளைச் செய்யவல்ல முனிவன். சேயவன் சேய்கள்-வியாசரது புத்திரனான

பாண்டு மகாராஜனின் குமாரர்களான பாண்டவர். வன சரிதர் - வனவாச வாழ்க்கையர். இனைவு - இரக்கம். பாண்டவர் உறையும் காமிய வனத்திற்கு வேத வியாசர் வந்தார், என்பதாம்.

**21. கண்டெதிர் சென்று போற்றிக் கண்ணினுஞ் சென்னி மீதும்**
**கொண்டன ரவன்றன் பாதங் குளிர்ந்தன ருயிரு மெய்யும்**
**புண்டர நுதலி னானைப் பூசனை செய்த பின்னர்**
**வண்டணி தாரான் செய்த வஞ்சனை யனைத்துஞ் சொன்னார்.**

[கண்டு எதிர் சென்று போற்றி, கண்ணினும் சென்னி மீதும் கொண்டனர் அவன் தன் பாதம், குளிர்ந்தனர் உயிரும் மெய்யும், புண்டரம் நுதலினானை பூசனை செய்த பின்னர், வண்டு அணி தாரான் செய்த வஞ்சனை அனைத்தும் சொன்னார்.]

**விளக்கம் :**— புண்டரம் நுதலினான் - நெற்றியில் இடும் குறி, அல்லது விபூதி அணிந்த நெற்றியையுடைய வியாசமுனிவன். வண்டு அணி, தாரான் - துரியோதனன். ''மெய்யும் உயிரும் குளிர்ந்தனர்'' என்பது, ''வியாச பகவானைக் கண்டதும் பாண்டவர் மிக்க மகிழ்ச்சி அடைந்தனர்'', என்ற பொருளது. ''கண்ணினும் சென்னி மீதும் கொண்டனர்'', என்பது, வியாசனது திருவடிகளில் கண்ணும் முடியும் படும்படி சாஷ்டாங்கமாக வணங்கினர், என்ற பொருளது. துரியோதனாதியர் தங்களுக்கு இழைத்த தீமைகளைப் பாண்டவர் வியாச முனிவனிடம் விவரமாய்க் கூறினர்,— என்பதாம்.

**22. செறிந்தவர்க் கூற்றங் கோலாஞ் செய்தவ முனியு முன்னே**
**குறிந்தன நிகழ்ந்த வெல்லாங் கூறுதல் கொடிது பாவம்**
**பிறிந்தன தாயந் தன்னிற் பெரும்பகை யினிதென் றன்றோ**
**அறிந்தவ ருரைத்தா ரைய வவாவினுக் கவதி யுண்டோ.**

[செறிந்தவர்க்கு ஊற்றம் கோல் ஆம் செய்தவ முனியும் முன்னே குறிந்தன நிகழ்ந்த எல்லாம் கூறுதல் கொடிது பாவம்! பிறிந்தன தாயம் தன்னில் பெரும் பகை இனிது என்று அன்றோ, அறிந்தவர் உரைத்தார்; ஐய, அவாவினுக்கு அவதி உண்டோ.]

**விளக்கம் :**—செறிந்தவர்க்கு - தன்னை நெருங்கினவர்களுக்கு. ஊற்றம் கோல் - ஊன்று கோல். குறிந்தன (குறித்தன) நிகழ்ந்த எல்லாம் - (பகையில்) நினைக்கப்பட்டனவாய் நிகழ்ந்தவற்றை எல்லாம். கூறுதல் கொடிது பாவம் - (இப்பொழுது நினைத்துச்) சொல்லுதல் கொடுமை யுடைய பாவம் ஆகும்; அதாவது மறந்து விட வேண்டும் என்றபடி. மனம் வேறுபட்டுப் பிரிந்த பங்காளிகளைக் காட்டிலும் நம்பால் பெரும் பகையுடைய அயலார் இனியவர்க ளாவர், என்று அல்லவா விஷய ஞானம் உடைய பெரியோர் கூறியுள்ளார்; ஐயனே, ஆசைக்கு எல்லை உண்டோ!—என்பது பின் இரண்டு அடிகளின் பொருள், (அவதி - எல்லை).

''பகைவர்களைக் காட்டிலும், தாயத்தார் கொடியவர்களாவர். மனம் வேறுபட்ட அவர்களோடு நாட்டில் வாழ்வதைக் காட்டிலும், அவரைப் பிரிந்து காட்டில் வாழலே நலம்'', என்று முனிவன் கூறும் கருத்தின ஈற்றடிகள். 'கொடிது பாவம்', என்பது நடந்து போனவற்றை நினைத்துப் பேசுவதின் பயனின்மையைத் தெரிவிக்கும் கருத்தது. அவாவினுக்கு அவதி உண்டோ, என்றது, ஆசைக்கு அளவில்லை யாதலால், துரியோதனாதியர் உங்களை வஞ்சித்துக் கான் செலுத்தினர், என்று முனிவர் கூறும் குறிப்பினது. தாயம், என்றது ஆகுபெயராய்த் தாயத்தாரைக் குறித்தது.

**23. துன்றின ரின்ன லெய்தத் துன்னல ராகித் தம்மில்**
**ஒன்றினர் செறினு முள்ள துண்டென வுணரத் தேற்றிக்**
**கன்றினர் கவலை தீர்த்தான் கண்ணுடைக் கருணை மூர்த்தி**
**குன்றின துயர்ச்சி யந்தக் குன்றினுக் கறிய வுண்டோ.**

[துன்றினர் இன்னல் எய்த துன்னலர் ஆகி தம்மில் ஒன்றினர் செறினும், உள்ளது உண்டு என உணர தேற்றி, கன்றினர் கவலை தீர்த்தான் கண் உடை கருணை மூர்த்தி; குன்றினது உயர்ச்சி அந்த குன்றினுக்கு அறிய உண்டோ.]

**விளக்கம் :**—துன்றினர் - உறவின் நெருங்கிய பந்துக்கள். இன்னல் - துன்பம். துன்னலர் - பகைவர். தம்மில் ஒன்றினர் செறினும் - தங்களுக்குள் ஒன்றுபட்டுக் கேடு சூழினும். உள்ளது உண்டு என உணர தேற்றி-ஊழினால் விளையும் நன்மை தீமைகள் உண்டாதல் உண்டு என்று தெளிந்து கொள்ளும்படி கூறிப் (பாண்டவர்களைச்) சமாதானப்படுத்தி. கன்றினர் கவலை தீர்த் தான் - வருந்திய பாண்டவர்களது கவற்சியை (முனிவன்) அகற்றி வைத்தான். கண்ணுடை கருணை மூர்த்தி - வேத வித்தகத்தை உடைமை கொண்ட கருணையின் வடிவம்போன்றவனான வியாச முனிவன்; அல்லது ஞானக் கண்ணை உடைய கருணை மூர்த்தி யான வியாசன். ''மலையினது உயரத்தை அம் மலை அறியும்படி இருக்கின்றதோ'', என்பது ஈற்றடியின் பொருள்.

''பந்துக்களே பகைவர்களாய்த் தம் பந்துக்களுக்குத் தீங்கு இழைப்பா ரானாலும், அவரவரது நல்லூழின் பயனாய் ஏற்பட வேண்டிய நன்மை வாராமல் தீராது; எனவே, ஆறியிருங்கள்,'' என்று வருத்தமுற்ற பாண்டவரை வியாசர் தேற்றினார்,—என்பது கருத்து. கல்வி கேள்விகளை உடைய பாண்டவர், ''நன்மையும் தீமையும் வினையின் வயத்தன, நல்வினையின் பயனாய் வருவது நன்மையே யாகும்'', என்பதை மறந்து வருந்தினா ராதலால், மலை தன் உயரத்தை அறியாதது போல், வியாசர் கூறும் வரையில், பாண்டவரும் இந்த உண்மையை உணர்ந்து வருத்தம் அகலப் பெறாதவராய் இருந்தனர், என்பது ஈற்றடியின் பொருள். ஈற்றடி, பிறிதுமொழிதல் அணியின் பாற்படும்.

**24. நீவிரே யல்லீர் முன்னா ணிலமுழு தாண்ட நேமி**
**நாவிரி கீர்த்தி யாள னளனெனு நாம வேந்தன்**
**காவிரி யென்னத் தப்பாக் கருணையான் சூதிற் றோற்றுத்**
**தீவிரி கானஞ் சென்ற காதைநுஞ் செவிப் படாதோ.**

*[நீவிரே அல்லீர் முன் நாள் நிலம் முழுது ஆண்ட நேமி, நா விரி கீர்த்தியாளன், நளன் எனும் நாமம் வேந்தன், காவிரி என்ன தப்பா கருணையான் சூதில் தோற்று, தீவிரி கானம் சென்ற காதை நும் செவி படாதோ!]*

**விளக்கம் :-** சூதினால் கேடுற்றவர் நீங்கள் மாத்திரம் அல்லீர்; முன்னாள், உலகம் முழுதையும் ஆண்ட ஆஜ்ஞா சக்கரத்தையும், உலகினரின் வாய் விரிந்த புகழையும், உடையவனும், (சோழ நாட்டிற்குப் பெருகி ஓடும் நீரால் வளந்தரும்) காவிரியாறு போன்ற அருளைச் செய்கின்றவனும் ஆன, நளன் என்ற பெயரை உடைய வேந்தன், (புஷ்கரன் என்பவனிடம்) சூதில் நாட்டைத் தோற்று, அக்கினி பரவிய காட்டிற்குச் சென்று வருந்திய கதை உம் செவி சேர்ந்ததில்லையோ!—என்பது பொருள். சூதினால் நாடிழந்து கானகம் சென்று வருந்திய நளனது சரித்திரத்தை வியாசர் கூறிப் பாண்டவர்களைத் தேற்றுவித்தார், என்பதாம். அரசனது ஆணையை **நேமி** என்பது கவி சமயம்.

**25. தோத்திர மான தெய்வச் சுருதிகள் யாவு நான்காக்**
**கோத்தவன் பின்னுஞ் சொல்வான் குன்றவில் லவன்பா லின்று**
**பார்த்தனே சென்று பாசு பதக்கணை வாங்கி னல்லால்**
**ஆர்த்தபைங் கழலா யெய்தா தரும்பகை முடித்த லென்றான்.**

*[தோத்திரம் ஆன தெய்வம் சுருதிகள் நான்கு ஆ(கி) கோத்தவன் பின்னும் சொல்வான்,—குன்றம் வில்லவன் பால் இன்று பார்த்தனே சென்று, பாசுபதம் கணை வாங்கினால் அல்லால், ஆர்த்த பைங்கழலாய், எய்தாது அரும் பகை முடித்தல், என்றான்.]*

**விளக்கம் :—**தோத்திரமான தெய்வச் சுருதி - துதிவடிவமான தெய்வத்தன்மை பொருந்திய வேதம், அதை நான்காகப் பகுத்து வகை செய்தவன் வியாச முனிவன். குன்றம் வில்லவன் - மகாமேருவை வில்லாகக் கொண்ட சிவபெருமான். பாசுபதக் கணை - பாசுபதாத்திரம். ஆர்த்தபைங் கழலாய் - கட்டிய வீரக் கழலையுடைய தருமனே.

வியாச முனிவன், தருமனை நோக்கி, ''அருச்சுனன் தவம் செய்து சிவபிரானிடத்திலிருந்து பாசுபதக்கணை பெற்றாலன்றிப் பகை வெல்லல் முடியாது'', என்று கூறினான், என்பதாம். சிவ பெருமானைத் தெய்வமாகக் கொண்டது, பாசுபதாத்திரம்.

**26. பரிவுடன் முனிவன் மாற்றம் பணிந்துதன் றலைமேற் கொண்டு**
**வரிசிலைக் குலக மெண்ணு மகபதி மகனை நோக்கிக்**
**கிரிசனை யுன்னி வெள்ளிக் கிரிபுற மெய்தி யார்க்கும்**
**அரியநற் றவம்செய் தேனு மவனருள் பெறுதி யையா.**

[பரிவுடன் முனிவன் மாற்றம் பணிந்து தன் தலைமேல் கொண்டு, வரிசிலைக்கு உலகம் எண்ணும் மகபதி மகனை நோக்கி, கிரிசனை உன்னி வெள்ளி கிரி புறம் எய்தி, யார்க்கும் அரிய நல் தவம் செய்தேனும் அவன் அருள் பெறுதி, ஐயா.]

**விளக்கம்** :-முனிவனை (தருமன்) பரிவுடன் பணிந்து, (அவன்) மாற்றம் தலைமேல் கொண்டு, வரிசிலைக்கு உலகம் எண்ணும் மகபதி மகனை நோக்கி, ஐய, வெள்ளி கிரிபுறம் எய்தி, கிரிசனை உன்னி, யார்க்கும் அரிய நல் தவம் செய்தேனும், அவன் அருள் பெறுதி,—என்பது அன்வயம்.

மாற்றம் - முனிவனது வார்த்தை. வரிசிலைக்கு உலகம் எண்ணும் - வில் வித்தைக்கு ஒருவன் என்று உலகம் மதிக்கும். மகபதி மகன் - இந்திர குமாரனான அருச்சுனன். வெள்ளி கிரி - கைலாசம் கிரிசன் - (கிரீசன்) சிவபெருமான். உன்னி - குறித்து, (தியானப் பொருளாகக் குறித்து). தருமன், முனிவனை வணங்கி, அவனது வார்த்தையை ஏற்று, இளைய தம்பியை நோக்கிக் கயிலை சென்று சிவபெருமானைக் குறித்து அரிய தவத்தைச் செய்து, அவனது அருளைப் பெறுமாறு கூறினான், என்பதாம்.

**27. எனவிடை கொடுப்ப மண்ணி லிணையிலா வியாதன் பாதம்**
**மனனுற விறைஞ்சி யாங்கோர் மந்திர முறையிற் பெற்று**
**நனிமிகு திதியு நாளு நல்லதோர் முகூர்த்தந் தன்னில்**
**தனிவதி யியக்கர் காட்டத் தனஞ்சயன் சேற லுற்றான்.**

[என விடை கொடுப்ப, மண்ணில் இணை இலா வியாதன் பாதம் மனன் உற இறைஞ்சி, ஆங்கு ஓர் மந்திரம் முறையின் பெற்று, நனிமிகு திதியும் நாளும் நல்லது ஓர் முகூர்த்தம் தன்னில், தனி வதி இயக்கர் காட்ட தனஞ்சயன் சேறல் உற்றான்.]

**விளக்கம்** : - என (தருமன்) விடை கொடுப்ப, தனஞ்சயன், மண்ணில் இணை இலா வியாதன் பாதம் மனன் உற இறைஞ்சி... முகூர்த்தம் தன்னில் இயக்கர் தனி வதி காட்ட (கயிலை) சேறல் உற்றான்,—என்பது அன்வயம்.

விடை கொடுப்ப - (தவம் செய்யச்) சென்று வருமாறு தருமன் கூற, மனம் உற - மனம் பொருந்த. நனிமிகு திதியும் நாளும் (உடைய) நல்லதோர் முகூர்த்தம் - பிரயாணத்திற்கு மிகச் சிறந்ததான நாளும் நட்சத்திரமும் நல்லதாயுள்ள ஒரு வேளை. இயக்கர் - யக்ஷர். வதி - வழி. சேறல் உற்றான் - செல்லப் புறப் பட்டான்.

பிரதிஸ்மிருதி, என்பது முனிவனிடமிருந்து அருச்சுனன் பெற்ற மந்திரமாகும். திதி - பிரதமை, துவிதியை முதலியன. நாள் - அசுவினி, பரணி முதலிய நட்சத்திரங்கள். சேறல் : தொழிற் பெயர்.

**28. வெஞ்சல மனத்த ரானோர் விரகினாற் கூட்டங் கூட்டி**
**நஞ்சல துவமை யில்லா நவைபுரிந் தனர்க ளேனும்**
**சஞ்சல மும்மைப் போலுந் தரணிப ருறுதல் செய்யார்**
**அஞ்சலி ரென்று மீள வாரண முனியும் போனான்.**

[வெம் சலம் மனத்தர் ஆனோர் விரகினால் கூட்டம் கூட்டி, நஞ்சு அலது உவமை இல்லா நவை புரிந்தனர்கள் ஏனும், சஞ்சலம் உம்மைப் போலும் தரணிபர் உறுதல் செய்யார்; அஞ்சலிர், என்று மீள ஆரணம் முனியும் போனான்.]

**விளக்கம்** :—வெம் சலம் - கொடிய பகை. விரகு - தந்திரம். கூட்டங் கூட்டி - சபை கூட்டி ஆலோசித்து. நவை - தீங்கு. உம்மைப்போலும் (போன்ற) தரணிபர் சஞ்சலம் உறுதல் செய்யார், என்று கூட்டுக. சஞ்சலம்-மனக்கவலை, துன்பம். ஆரண முனி - தேவ வியாச முனிவன். மீளப் போனான் - திரும்பிச் சென்றான். ''துரியோதனாதியர் இழைத்த தீங்குகளை நினைத்து மனக் கவலை கொள்ளாதீர்; நல்ல காலம் வரும்'', என்று வியாசன் கூறும் கருத்தது இது.

அருச்சுனன் தவம் புரிதல்

**29. மரவுரி யுடையன் சென்னி வகுத்தசெஞ் சடையன் றூணிச்**
**சரமுட னங்கி யீந்த தனுவினன் தவத்தின் மேலே**
**புரிதரு மனத்த னெல்லாப் புண்ணியங் களுக்குந் தானே**
**உரைபெறு தசர தன்றன் மகனலா துவமை யில்லான்.**

[மரவுரி உடையன், சென்னி வகுத்த செம் சடையன், தூணி சரமுடன் அங்கி ஈந்த தனுவினன், தவத்தின் மேலே புரிதரு மனத்தன், எல்லாம் புண்ணியங்களுக்கும் தானே உரை பெறு தசரதன் தன் மகன் அலாது உவமை இல்லான்,—அடுத்த செய்யுளில் முடியும்.]

**விளக்கம்** :- எல்லாப் புண்ணியங்களுக்கும் தானே உரை பெறு தசரதன் மகன் அலாது உவமை இல்லான் (ஆகிய அருச்சுனன்), மரவுரி உடையன், சென்னி வகுத்த செம் சடையன், தூணி சரமுடன் அங்கி ஈந்த தனுவினன், தவத்தின் மேலே புரிதரு மனத்தன், என்று அன்வயிக்க.

தூணி - அம்பறாத்தூணி. அங்கி - அக்கினிதேவன். எல்லாப் புண்ணியங்களுக்கும் தானே உரை பெறு தசரதன் - புண்ணிய வினைகள் எல்லாவற்றிற்குந் தானே இடம் என்று சொல்லப்பெறும் தசரதன். திருமாலை மகனாகப் பெறும் பாக்கியம் உடைமை பற்றித் தசரதனை, ''எல்லாப் புண்ணியங்களுக்கும் தானே உரை

பெறும் தசரதன்'' என்றார். ஸ்ரீஇராமபிரானைப் போல் தவக் கோலங் கொண்டு, தவம் புரிய அருச்சுனன் வடதிசை சென்றான், என்க.

**30. நெறியிரு புறத்து மூசி நுழையொணா நெருக்க மிக்க**
**செறிதரு வனமுஞ் சிங்கஞ் சிந்துரஞ் செருச்செய் சாரல்**
**பொறைகளும் வெம் பிசாச பூதமோ டியக்கர் யாரும்**
**உறைதரு குவடு நீங்கி யுத்தர முடிவு கண்டான்.**

[நெறி இரு புறத்தும் ஊசி நுழை ஒணா நெருக்கம் மிக்க செறி தரு வனமும், சிங்கம் சிந்துரம் செரு செய் சாரல் பொறைகளும், வெம் பிசாசம் பூதமோடு இயக்கர் யாரும் உறைதரு குவடும் நீங்கி, உத்தரம் முடிவு கண்டான்.]

**விளக்கம் :-** நெறி - பாதை. (ஊசி நுழைய ஒணாதபடி நெருங்கி) செறிதரு வனம் - மரங்கள் அடர்ந்த காடு. சிந்துரம் - யானை. செரு செய் சாரல் - போர் புரியும் சாரல் (மலையின் பக்கம்), பொறை-மலை. குவடு-மலைச் சிகரம். உத்தரம் முடிவு கண்டான் - (அருச்சுனன்) வடதிசையின் எல்லையைக் கண்டான்.

ஊசிநுழைய முடியாதபடி அடர்ந்த காடுகளையும், சிங்கங்களும் யானைகளும் போர் செய்யும் சாரல்களை உடைய மலைகளையும், கொடிய பிசாசுகளும் பூதங்களும், (அவற்றோடு) யக்ஷர்களும் வாசம் செய்யும் மலைச் சிகரங்களையுங் கடந்து, அருச்சுனன் வடதிசையின் முடிவாகும் எல்லையைக் கண்டான்,—என்பது பொருள்.

**31. அத்திசை யிமய மென்னு மரசவெற் படைந்து மிக்க**
**பத்தியோ டம்மை தன்னைப் பயந்தகுன் றென்று போற்றிச்**
**சத்திய விரதன் தம்பி தபோவனந் தோறுந் தங்கள்**
**முத்தழல் வளர்ப்போர் பாத முளரிகண் முடிமேற் கொண்டான்.**

[அ திசை இமயம் என்னும் அரச வெற்பு அடைந்து, மிக்க பத்தியோடு அம்மை தன்னை பயந்த குன்று என்று போற்றி, சத்திய விரதன் தம்பி, தபோவனம் தோறும் தங்கள் முத்தழல் வளர்ப் போர் பாதம் முளரிகள் முடிமேல் கொண்டான்.]

**விளக்கம் :-** அத்திசை - வடதிசை. அம்மை - உமாதேவி. (வடதிசையில் உள்ள, மலைகளுக்கெல்லாம் அரசு என்று சொல்லு தற்குரிய இமயமலையை, உமாதேவியைப் பயந்த மலை என்று) போற்றி - துதித்து. சத்திய விரதன் தம்பி - தருமனது தம்பி யாகிய அருச்சுனன். தங்கள் முத்தழல் வளர்ப்போர் - தங்களுக்கு உரியதான மூன்று வகை அக்கினி வளர்த்து ஓமம் செய்யும் அனுஷ்டானமுடைய முனிவர். பாதம் முளரி - பாதமாகிய தாமரை; அல்லது முளரி பாதம், தாமரை போன்ற பாதம். அப் பாதங்களை அருச்சுனன் தலைமேற் கொண்டான்; அதாவது, சர்வ அங்கமும் பூமியில் படும்படி வணங்கினான்.

சிறந்ததை அரசு என்னும் மரபு பற்றி, இமயத்தை **அரசவெற்பு** என்றார். பத்தி (பக்தி), தன்னினும் உயர்ந்தோர் மாட்டுக் கொள்ளும் அன்பு. தட்சன் மகளாய்த் தோன்றிய அம்பிமை, மலையின் வேண்டுகோளுக்கு இணங்கி, தட்சன் மகளான உரு வத்தை அக்கினியில் தோய்ந்து ஒழித்து, மலையரசன் மகளாய்த் தோன்றினாள், என்பது புராணக் கதை.

**32 சாரண ரியக்கர் விச்சா தரர்முதற் பலருஞ் செஞ்சொல்**
**ஆரணப் படியே சூழ்ந்த வடவிக டோறும் வைகி**
**நாரணன் மலரோ னும்பர் நாயகன் பதங்க ணச்சிக்**
**காரணத் தவஞ்செய் வோரைக் கண்டுகண் டுவகை**
**கூர்ந்தான்.**

[சாரணர் இயக்கர் விச்சாதரர் முதல் பலரும், செம் சொல் ஆரணம் படியே சூழ்ந்த அடவிகள் தோன்றும் வைகி, நாரணன், மலரோன், உம்பர் நாயகன் பதங்கள் நச்சி, காரணம் தவம் செய்வோரை கண்டு கண்டு உவகை கூர்ந்தான்.]

**விளக்கம் :-** சாரணர் - தேவ ஜாதியில் ஒரு வகையினர். இயக்கர் - யக்ஷர். விச்சாதார் - வித்தியாதரர். செம் சொல் ஆரண - சத்தியச் சொற்களைக் கொண்ட வேதம். சூழ்ந்த - (அருச்சுனன் சேர்ந்த இடத்தைச்) சுற்றியுள்ள, அடவிகள் தோறும் - எல்லாக் காடுகளிலும். நாரணன் - திருமால். மல ரோன் - பிரும்மன். உம்பர் நாயகன் - சிவபிரான். பதங்கள் நச்சி - இம்மூன்று தேவர்களின் பாதங்களை விரும்பி; அல்லது, அவர்களது லோகத்தை விரும்பி. காரணத் தவம் செய்வோர் - தாம் விரும்பிய பயனை அடைவதற்கு ஏதுவான தவங்களைச் செய்யும் மேலோர். கண்டு கண்டு - தரிசித்து (அடுக்கு மிகுதிப் பொருளது). 'நன்றாகத் தரிசித்து', என்பது பொருள். உவகை கூர்ந்தான் - மிக மகிழ்ந்தான்.

அருச்சுனன் சென்றடைந்த இடத்தைச் சுற்றியுள்ள காடு தோறும், வேதம் வகுத்த முறையின்படி அரிய தவம் முயலும் பெரியோர்களைக் கண்டு மகிழ்ச்சியின் மிகுந்தான், என்பதாம்.

**33. அரியும்வெங் கரியும் தம்மி லமர்புரி முழக்கங் கேட்டும்**
**கிரியினின் முழக்கங் கேட்டுங் கிராதர்போர் முழக்கங்**
**கேட்டும்**
**எரிகிளர் முழக்கங் கேட்டு மெம்பிரா னிமவான் றந்த**
**புரிகுழ லோடும் வைகும் புண்ணியப் பொருப்பைச்**
**சேர்ந்தான்.**

[அரியும் வெம் கரியும் தம்மில் அமர் புரி முழக்கம் கேட்டும், கிரியின் முழக்கம் கேட்டும், கிராதர் போர் முழக்கம் கேட்டும், எம்பிரான், இமவான் தந்த புரி குழலோடும் வைகும் புண்ணியம் பொருப்பை சேர்ந்தான்.]

**விளக்கம் :-** கிரியின் முழக்கம் - அரியும் கரியும் செய்யும் முழக்கத்தின் எதிரொலியாகிய மலையின் முழக்கம். கிராதர் - வேடர். எரிகிளர் முழக்கம் - காட்டுத் தீயால் உண்டாகும் ஒலி. எம்பிரான் - சிவபெருமான். இமவான் தந்த புரிகுழல் - பார்வதி. புண்ணியப் பொருப்பு - சிவபெருமான் தங்குவதற்குரிய புண்ணி யத்தை யுடைய கயிலையங்கிரி; அல்லது, புண்ணியமயமான கயிலை மலை.

பலவித முழக்கங்களைக் கேட்டுக்கொண்டே வழி நடந்த விசயன் இறுதியில் கயிலையை அடைந்தான், என்பதாம்.

**34 கைம்மலை யுரிவை யோடு கட்செவிக் கச்சுஞ் சாத்தும்**
**மெம்மலை விழியிற் காணான் சிந்தையாற் கண்டு போற்றி**
**அம்மலைச் சார ரேறு மருந்தவம் புரிநர் கூற**
**விம்மலை நீங்கி யாங்கண் மெய்த்தவ விரத னானான்.**

[கைம்மலை உரிவையோடு கட்செவி (கண்செவி) கச்சும் சாத்தும் செம்மலை விழியில் காணான்; சிந்தையால் கண்டு போ..ற்றி, அ மலை சாரல்தோறும் அரு தவம் புரிநர் கூற, விம்மலை நீங்கி ஆங்கண் மெய் தவம் விரதன் ஆனான்.]

**விளக்கம் :-** கைம்மலை......காணான், அம் மலைச் சாரல் தோறும் அருந்தவம் புரிநர் கூற, விம்மலை நீங்கி, சிந்தையால் கண்டு போற்றி, ஆங்கண் மெய்த்தவ விரதன் ஆனான்,—என்பது அன்வயம்.

கைம்மலை - யானை. உரிவை - தோல். கச்சு - இடுப்பில் அணியும் அணி. கட்செவி கச்சும் சாத்தும் செம்மல் - (யானைத் தோலோடு) பாம்பாகிய கச்சையும் அணிந்துள்ள சிவபெருமான். விழியில் காணான் - கண்ணால் சிவபெருமானைக் காணாதவனாய் (துயர் கொண்ட அருச்சுனன், அம் மலைச்சாரல் எங்கும் தவம் புரிவோர் புறக்கண்ணிற்கு விஷயமாக மாட்டா அவனது மேன்மை யைக் கூற) சிந்தையால் கண்டு - உள்ளத்தால் (அகக்கண்ணால்) கண்டு. விம்மலை நீங்கி - துன்பத்திலிருந்து விடுபட்டு. ஆங்கண் - அங்கே. மெய் தவம் விரதன் ஆனான் - உண்மையான தவத்திற் குரிய அனுஷ்டானங்களை மேற்கொண்டவனானான்.

தவச் செருக்கினால் தன்னை மதியாத தாருக வனத்து முனிவர்களின் கர்வத்தை அடக்க எண்ணிச் சிவபெருமான் காபாலி வேடங் கொண்டு வர, முனிபத்நியர் அவன்பால் மையல் கொண்டு கற்பு நிலை கெடலானார். அதனால் சீற்றங்கொண்ட முனிவர் அபிசார யாகம் செய்து, நாகம், பூதம், மான் முதலியவற்றை அப் பிரான்பால் ஏவ, அவன் நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங் களைத் தமது கணங்களாகவும், மானைக் கையில் ஏற்றும், அவற்றின் வலி யடக்கினான், என்பது கட்செவி சாத்திய கதை. சிவபெருமான், தன்னை எதிர்த்து வந்த கஜாசுரன் என்பவனைக்

கொன்று அவனது தோலை உரித்துப் போர்த்திக்கொண்டார், என்பது, கைம்மலை உரிவை சாத்திய கதை.

**35. எயிலொரு மூன் றுஞ் செற்றோ னேந்திழை யுடனே வைகும்**
**கயிலையின் பெருமை தன்னைக் கட்டுரை செய்வ தெங்ஙன்**
**வெயிலவன் முதலோர் நாளு மேம்பட வலஞ்செய் வார்கள்**
**அயிலுநல் லமுதோர் சூழ்வந் தன்புடன் போற்று வாரே.**

[எயில் ஒரு மூன்றும் செற்றோன் ஏந்து இழையுடனே வைகும் கயிலையின் பெருமை தன்னை கட்டுரை செய்வது எங்ஙன்? வெயிலவன் முதலோர் நாளும் மேம்பட வலம் செய்வார்கள், அயி லும் நல் அமுதோர் சூழ்வந்து அன்புடன் போற்றுவாரே.]

**விளக்கம் :-** எயில் - நகரம். எயில் ஒரு மூன்றும் செற்றோன் - ஒப்பற்ற திரிபுரத்தை அழித்த சிவபெருமான். ஏந்திழை-பார்வதி. வெயிலவன் - சூரியன். நாளும் - தினந்தோறும். மேம்பட - (சூரியன் முதலியோர்) தாங்கள் மேன்மையுற. அயிலும் நல் அமுதோர் - தேவர்கள் (அயிலல் - உண்ணல்). சூழ்வந்து - பிரத க்ஷணம் செய்து.

கயிலைமலை, சொற்கொண்டு வருணிக்க முடியாத பெருமையது, என்பது முதல் இரண்டடிகளின் கருத்து. சூரியன் முதலியோர் தினம் கயிலையை வலம் வருவதும், தேவர்கள் அன்புடன் துதிப்பதும், கயிலையின் பெருமைக்கு ஆதாரம் ஆகின்றன.

தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன், என்பவர் சுவர்க்கமத்ய பாதளம் என்னும் மூன்றிடத்திலும் மூன்று பட்டணங்களை அமைத்துக்கொண்டு மூவுலகத்தாருக்கும் அழிவு செய்து வந்தார்கள். அவர்கள் இழைத்து வந்த துன்பத்தைப் பொறாத தேவர்களும் முனிவர்களும், தங்களைக் காத்தருளுமாறு சிவபெருமானை வேண்ட, அப் பிரான் அவ்வசுரர்களை அழித்தான், என்பது கதை.

**36. உருகிய வெள்ளி போல வுயர்முழை தோறும் வீழும்**
**அருவி நீர் புனிதன் வேணி யமருமா நதியிற் றோன்ற**
**உருகிய பனிவான் குன்றி லொண்பனிக் கடவுள் வந்து**
**மருவிய தென்னத் தோன்றும் வருணமால் வரையின்**
**றென்பால்.**

[உருகிய வெள்ளி போல உயர் முழைதோறும் வீழும் அருவி நீர் புனிதன் வேணி அமரும் மா நதியின் தோன்ற, உருகிய பனிவான் குன்றில் ஒள் பனி கடவுள் வந்து மருவியது என்ன தோன்றும், வருணம் மால் வரையின் தென்பால்,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** முழை-குகை. உருகிய வெள்ளிபோல், உயர்ந்த மலைக் குகைகள் எல்லாவற்றிலும் விழுந்தோடும் அருவி நீர்,

பரிசுத்தனாகிய சிவபெருமானது சடை முடியில் பொருந்திய சிறந்த கங்கா நதிபோல் தோன்ற, உருகுகின்ற பனியை உடைய பெரிய இமயக் குன்றினிடத்தே உள்ள, வெண்ணிற ஒளியை உடைய பனிக்கு உரியதான தெய்வம் இங்கே வந்து பொருந்தியது என்று சொல்லும்படி தோன்றும் வெண்ணிறத்தை யுடைய கயிலை மலையின் தென்புறத்தில்,—என்பது பொருள். வேணி - சடை. வருணம் - வெண்ணிறம்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

**37. ஆசிநான்ம றைப்படியு மெண்ணில் கோடி**
**யாகமத்தின் படியுமெழுத் தைந்துங் கூறிப்**
**பூசினான்வ டிவமெலாம்வி பூதி யாலப்**
**பூதியினைப் புரிந்த சடைப் புறத்தே சேர்த்தான்**
**தேசினாலப் பொருப்பின்சிக ரமேவுஞ் சிவனி**
**வனே போலுமெனத் தேவ ரெல்லாம்**
**பேசினார்வ ரிசிலைக்கை விசயன் பூண்ட**
**பெருந்தவத்தி னிலைசிலர்க்குப் பேச லாமோ.**

[ஆசு இல் நால் மறை படியும், எண் இல் கோடி ஆகமத்தின் படியும் எழுத்து ஐந்தும் கூறி, பூசினான் வடிவம் எலாம் விபூதி யால், அ பூதியினை புரிந்த சடை புறத்தே சேர்த்தான், தேசினால் அ பொருப்பின் சிகரம் மேவும் சிவன் இவனே போலும் என தேவர் எல்லாம் பேசினார்; வரிசிலை கை விசயன் பூண்ட பெருந் தவத்தின் நிலை சிலர்க்கு பேசல் ஆமோ.]

**விளக்கம் :-** ஆசு - குற்றம். எண் இல் கோடி ஆகமத்தின் படியும் - பலவான ஆகம நூல்களில் கூறிய விதமாகவும். ஐந்து எழுத்து - பஞ்சாட்சரம். கூறி - ஜபித்துக்கொண்டு. விபூதியால் வடிவம் எலாம் பூசினான் - தேகம் முழுவதும் திருநீற்றால் பூசி னான். அ பூதியை - அந்த விபூதியின் மிகுதியை. புரிந்த சடை புறத்தே - முடிந்த, அல்லது கட்டிய சடையின் மேலே. சேர்ந் தான்-அணிந்துகொண்டான். தேசு-ஒளி, பிரகாசம். சிலர்க்குப் பேசலாமோ - (அருச்சுனன் மேற்கொண்ட தவத்தின் தன்மை இத்தகையது என்று சிலரால் வருணித்துச் சொல்லுதற்கு, முடியுமோ, (முடியாது என்றபடி).

வேதங்களும், ஆகம நூல்களும் கூறிய முறை தவறாது, திரு நீறு அணிந்து, இவனேதானோ சிவன் என்று தேவர்களும் கொண் டாடும்படி, தவத்தினை மேற்கொண்டான்,—என்பது கருத்து.

**38. ஒருதாளின் மிசைநின்றுநின்ற தாளி**
**னூருவின் மேலொருதா ளையூன்றி யொன்றும்**
**கருதாமன் மனமடக்கி விசும்பி னோடுங்**
**கதிரவனைக் கவர்வான்போற் கரங்க ணீட்டி**

**இருதாரை நெடுந்தடங்க ணிமையா தோரா**
**யிரங்கதிருந் தாமரைப்போ தென்ன நோக்கி**
**நிருதாதி பரின்மனுவாய்த் தவஞ் செய் வாரி**
**னிகரிவனுக் கார்கொலென நிலைபெற் றானே.**

[ஒரு தாளின் மிசை நின்று, நின்ற தாளின் ஊருவின்மேல் ஒரு தாளை ஊன்றி, ஒன்றும் கருதாமல் மனம் அடக்கி, விசும்பின் ஓடும் கதிரவனை கவர்வான்போல் கரங்கள் நீட்டி, இரு தாரை நெடு தடங்கண் இமையாது, ஓர் ஆயிரம் கதிரும் தாமரைபோது என்ன நோக்கி, நிருத அதிபரில் மனுவாய் தவம் செய்வாரில் நிகர் இவனுக்கு ஆர் கொல்? என நிலை பெற்றான். (ஏ).]

**விளக்கம்** :- ஊரு-தொடை. இரு தாரை நெடுந்தடங்கண்- இரண்டு கரு விழிகளை நடுவில் உடைய நெடிய விசாலமான கண்கள்; (தாரை - கருவிழி). நிருதாதிபர் - (கடுந்தவங்களைச் செய்யும்) அசுரர் தலைவர். மனு - சிறந்தவன்.

ஒரு காலில் நின்று, மறு காலை நின்ற காலின் தொடைமேல் வைத்து, சிவபெருமானை ஒழிய வேறு எதையும் நினையாமல் மனத்தை அடக்கி, ஆகாயத்தில் செல்லும் சூரியனை எட்டிப் பிடிப்பான்போல் கைகளை மேலே உயர்த்தி, கருவிழிகளோடு கூடிய இரு கண்களையும் மூடாமல், தாமரை மலர்போல் சூரியனது ஓராயிரங்கதிர்களைப் பார்த்துக்கொண்டு, வலிமையும் மேன்மையும் பெறுங்கருத்தில் அரிய தவங்களைச் செய்யும் நிருதர் களினும் சிறந்தவனாய், 'இவனுக்கு நிகர் ஆவார் யார்?' என்று சொல்லும்படி (அருச்சுனன்), தவத்தில் நிலைத்தவனானான்,— என்பது பொருள்.

**39. தோற்றியதம் மிடத்தேயித் தோன்றன் மாலை**
**சூட்டியபொற் றொடியென்றோ துரங்கம் பொற்றேர்**
**கூற்றியல்வெஞ் சிலைபாணந் தூணி நாணி**
**குரக்குநெடுங் கொடிமுன்னங் கொடுத்தே மென்றோ**
**காற்றினுடன் விரைவுறச்சென் றருந்து மாறு**
**காண்டவநம் பசிக்களித்த காளை யென்றோ**
**நாற்றிசையும் வளர்த்ததழற் கடவு ளந்த**
**நரனுடலங் குளிர்விக்கு நாரம் போன்றான்.**

[தோற்றியது எம் இடத்தே இ தோன்றல் மாலை சூட்டிய பொன் தொடி என்றோ, துரங்கம் பொன்தேர் கூற்று இயம் வெம் சிலை பாணம் நூணி நாணி குரக்கு நெடுங்கொடி முன்னம் கொடுத்தேம் என்றோ, காற்றினுடன் விரைவு உற சென்று அருந்துமாறு காண்டவம் நம் பசிக்கு அளித்த காளை என்றோ, நால் திசையும் வளர்த்த தழல் கடவுள் அந்த நரன் உடலம் குளிர் விக்கும் நாரம் போன்றான்.]

**விளக்கம்** :—தோன்றல் மாலை சூட்டிய பொன் தொடி தோற்றியது (தோன்றியது) எம் இடத்தே என்றோ - அருச்சுனன்

மணமாலை சூட்டிய பொன் தொடி (வளையல்)களை அணிந்த திரௌபதி உண்டானது தனது இடத்திலே என்றோ. துரங்கம் - குதிரை. கூற்று இயல் - பகைவரைக் கொல்லுதலில் யமனை ஒத்த தன்மையுடைய. சிலை - வில். பாணம் - அம்பு. தூணி -அம்பறாத் தூணி. நாணி - நாண் கயிறு. குரக்கு நெடுங்கொடி - குரங்கின் உருவம் எழுதப் பெற்ற கொடி. காண்டவம் நம் பசிக்கு அளித்த - காண்டவ வனத்திற்கு எரியூட்டி எனது பசிக்கு இரையாகச் செய்த. நால் திசையும் வளர்த்த தழல் - அருச்சுனன் நான்கு பக்கங்களிலும் வளர்த்த அக்கினி. நாரம் - ஜலம்.

தவம் செய்யும் அருச்சுனன் தன்னைச் சுற்றிலும் வளர்த்த அக்கினி, அவன் மாலை சூட்டிய பொன் தொடி தன்னிடத்தே தோன்றியவள் என்றோ, அல்லது, அவனுக்கு வில்லும் சரமும் கொடியும் தான் உதவியதை எண்ணியோ, அல்லது, காண்டவ தகனம் செய்து தனது பசியைத் தணித்தான் என்பதை எண்ணியோ, அக்னிபகவான் அவனுக்குக் குளிர்ந்த நீரைப்போல் குளிர்ச்சி செய் தான்,—என்பது பொருள்.

அர்ச்சுனனையும், கண்ணனையும் நர நாராயணர் என்பர். எனவே திருமாலின் அம்சமாகத் தோன்றிய நரன், என்பது தோன்ற, அவனை நரன் என்றார்.

**40 வலப்பாகஞ் செழும்பவளச் சோதி யென்ன**
**வாணீலச் சோதியென்ன மற்றப் பாகம்**
**கலப்பான திருமேனி யணிந்த நீற்றாற்**
**கதிர்முத்தின் சோதியென மேனை யீன்ற**
**குலப்பாவை யுடன்கயிலைக் குன்றில் வாழ்விற்**
**குன்றுடையோன் றிருக்கோலங் குறிப்பா லுள்ளம்**
**புலப்பாடு புறம்பொசிய மார்புந் தோளும்**
**பூரித்தா னுடல்புளகம் பாரித் தானே.**

[வலம் பாகம் செழும் பவளம் சோதி என்ன, வாள் நீலம் சோதி என்ன மற்ற பாகம், கலப்பு ஆன திருமேனி அணிந்த நீற்றால் கதிர் முத்தின் சோதி என, மேனை (மேனகை) ஈன்ற குலம் பாவையுடன் கயிலைக் குன்றில் வாழ், வில் குன்று உடையோன் திருக்கோலம் குறிப்பால் உள்ளம் புலப்பாடு புறம் பொசிய, மார்பும் தோளும் பூரித்தான், உடல் புளகம் பாரித்தான், (ஏ).]

**விளக்கம் :**—வலப்பாகம் செம்மையின் வளம் மிகுந்த பவளம் போல் பிரகாசிக்கவும், மற்றையதான இடப்பாகம் ஒளிமிக்க நீல மணி போல் பிரகாசிக்கவும், (அவ்விரு விதமான வடிவமும்) கலந்த தான திருமேனி, பூசிய விபூதியால் பிரகாசிக்கும் முத்தைப்போல் வெண்மையாய் விளங்கவும், மேனகை தந்த சிறந்த பாவை போன்ற பார்வதியுடனே கயிலாச மலையில் வாழும், வில்லாகிய மேரு மலையை உடைய (மேரு மலையை வில்லாக உடைய)

சிவபெருமானின் அர்த்த நாரீச்வர வடிவத்தை மனத்தினால் தியானித்து, அத் தியானமாகிய உள்ள நிகழ்ச்சி வெளியே தோன்ற, மார்பும் தோள்களும் (சிவானந்தத்தால்) பெருக்கப் பெற்றான்; தேகம் முழுதும் புளகம் உண்டாகப் பெற்றான்,— என்பது பொருள்.

குலப்பாவை - சிறந்த பாவை. பாவை - பதுமை போன்ற அழகுடைய பார்வதி. மேனகையினிடத்தே இமவானுக்குப் பிறந்தவள் என்பது புராணக்கதை. திருக்கோலம் - அர்த்த நாரீச்வர மூர்த்தியாகிய தோற்றம். குறிப்பால் - மனக் குறிப்பால். புலப்பாடு - உள்ள நிகழ்ச்சியின் வெளித் தேற்றம். யாக்கை பருத்தல், மயிர்க்கூச்சு உறுதல், கண்ணீர் விடல் முதலியன உள்ள நிகழ்ச்சி யின் வெளித் தோற்றமாகும். அஃறிணை சினைப் பெயர், உயர் திணை முதல் பெயரின் வினைகொண்டு முடிதல், திணை வழு.

**41. கருந்துறுகல் லெனக்கருதிப் பிடியுங் கன்றுங்**
**களிற்றினமு முடனுரிஞ்சக் கறையா னேறிப்**
**பொருந்துமுழை புற்றதெனப் புயங்க மூரப்**
**பூங்கொடிகண் மரனென்று பாங்கே சுற்றப்**
**பரிந்துவெயி லாண்மழைநாள் பனிநா ளென்று**
**பாராம னெடுங்காலம் பயின்றான் மண்ணில்**
**அருந்தவமுன் புரிந்தோரி லிவனைப் போன்மற்**
**றார்புரிந்தார் சிவசிவவென் றரிய வாறே.**

[கருந் துறுகல் என கருதி பிடியும் கன்றும் களிறு இனமும் உடன் உரிஞ்ச, கறையான் ஏறி பொருந்தும் முழை புற்று அது என புயங்கம் ஊர, பூ கொடிகள் மரன் என்று பாங்கே சுற்ற, பரிந்து வெயில் நாள் மழை நாள், பனிநாள் என்று பாராமல் நெடுங் காலம் பயின்றான்; மண்ணில் அரு தவம் புரிந்தோரில் இவனைப்போல் மற்று ஆர் புரிந்தார் சிவ சிவ என்று அரிய ஆறே?]

**விளக்கம்** :—இச் செய்யுள் கவிக்கூற்று. அருச்சுனனது தவத்தின் சிறப்பைக் கவி கொண்டாடுகின்றார். துறுகல் - மலையடிவாரத்திலுள்ள சிறு பாறை. கறையான் - செல்லுகள். ஏறிப் பொருந்தும் - ஏறி வாழுமிடமாகக்கொண்டு (கறையான்) தங்கும். முழைப் புற்று - துவாரங்களை யுடைய புற்று. புயங்கம் பாம்பு. சிவ சிவ என்று - சிவ நாமத்தை ஜபித்துக்கொண்டு. அரிய ஆறே - அரிய விதமானது ஆகும்படி (இவன் செய்த தவமானது, வேறு எவராலும் செய்ய முடியாத விதத்தினதாகும். அருச்சுனன் உலகப் பிரக்ஞையின்றி அசைவற்றவனாய்த் தவம் புரிந்தானாதலால், அவனது உடலைத் துறுகல் என்று யானை முதலிய மிருகங்கள் அவ்வுடல்மீது உராயலாயின; அவனது உடலைச் சுற்றிக் கறையான் ஏறவே, பாம்புகள் அது கறையான் புற்று எனக் கொண்டு ஊரலாயின; பூங்கொடிகள், மரம் எனக்கொண்டு

அவனைச் சுற்றி வளரலாயின; அவனது இந்த நிலையில் சிவ நாமத்தை உச்சரித்துக்கொண்டே அரிய தவம் பயின்றான், (செய்தான்). இவனைப்போல் வேறு யார் தவம் செய்தார்கள்? ஆகவே, இவனது தவம் அரியவிதமானதே ஆகும்!— என்பது பொருள்.

**42.** **பகிரதனே முதலான வெண்ணில் கோடிப்**
**பார்த்திவருந் தவம்புரிந்தார் பைம்பொன் மேனி**
**இகலவுணர் முதலான ககன வாண**
**ரெத்தனைபேர் தவம்புரிந்தா ரிமையோ ரேத்தும்**
**மகபதிதன் மதலையிவ னெழுதொ ணாத**
**வனப்பினுக்கு வரிசிலைக்கைம் மதவே ளொவ்வான்**
**சகலகலை களுக்குமிவன் றானே யிங்ஙன்**
**றவம்புரிய நினைப்பதே சார்ந்த பாவம்.**

[பகிரதனே முதலான எண் இல் கோடி பார்த்திவர் தவம் புரிந்தார்' பைம்பொன் மேனி இகல் அவுணர் முதலான ககன வாணர் எத்தனை பேர் தவம் புரிந்தார்? இமையோர் ஏத்தும் மகபதி தன் மதலை இவன் எழுத ஒணாத வனப்பினுக்கு வரிசிலை கை மதம் வேள் ஒவ்வான்; சகல கலைகளுக்கும் இவன் தானே, இங்ஙன் தவம் புரிய நினைப்பதே சார்ந்த பாவம்.]

**விளக்கம் :**—பகிரதன் - கடுந்தவம் புரிந்து ஆகாச கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்த சூர்யவம்சத்து அரசனான பகீரதன். பைம் பொன் மேனி அவுணர் முதலான ககனவாணர் - பொன்னிற மேனியை உடைய வலிய இரணியன் முதலான ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இயல்புடைய அசுரர். இமையோர்-தேவர். மகபதி - இந்திரன். (அவனது மகனாகிய) இவன், எழுத ஒணாத வனப் பினுக்கு வரிசிலை கை மதம்வேள் ஒவ்வான் - இந்த அருச்சுனனது எழுதமுடியாத அழகிற்குக் கட்டமைந்த கரும்பு வில்லைக்கொண்ட கையை உடைய காமமதத்தை (வெறியை) உண்டாக்கும் மன் மதனும் நிகராகான். சகல கலைகளுக்கும் தானே - எல்லா வகை யான கலைகளுக்கும் தானே தனக்கு ஒப்பாவான். (இவன்) இங்ஙனம் தவம் புரிய நினைப்பதே - இவ்வாறு தவம் புரிய நினைக்க நேர்ந்ததே! சார்ந்த பாவம் - இவன் இப்படித் தவம் முயன்று வருந்துவது முன் பிறப்பில் செய்த தீவினையின் பயன் போலும்! கடுந்தவம் பல புரிந்த பூலோக அரசர்களினும், இரணியன் போன்ற அவுணர்களினும் சிறப்புமிக அருச்சுனன் தவம் புரிந்தான்,—என்பது முதலிரண்டடிகளின் கருத்து, நினைப்பதே, என்பதிலுள்ள ஏகாரம், புலவர் அவனுக்கு இரங்கும் குறிப்பது. மதவேள், என்பதை மதன் வேள் என்றும் கொள்ளலாம். கந்த வேளை விலக்க மதன்வேள், என்றார், - என்க. இரணியன், நிவாதகவசர் காலகேயர் பொன்னிறத் தவம். தேவர்களைப் போல் ஆகாசத்தில் வசிக்க வல்லவர்; எனவே, **ககனவாணர்,** எனப்பட்டார்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**43. பண்ணுக்கு வாம்பரித்தே ராதவனும்
பணிந்துபசு பதியை நோக்கி
மண்ணுக்குத் தவம்புரியுந் தனஞ்சயற்குக்
கோடையினு மதியம் போன்றான்
எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்குங்
கண்ணாவா னிவனே யன்றோ
கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்ணோட்ட
மென்பதெல்லாங் கருணை யன்றோ.**

[பண் உக்கு வாம் பரி தேர் ஆதவனும் பணிந்து பசுபதியை நோக்கி, மண்ணுக்கு தவம் புரியும் தனஞ்செயற்கு கோடையினும் மதியம் போன்றான்; எண்ணுக்கு வரும் புவனம் யாவினுக்கும் கண் ஆவான் இவனே அன்றோ? கண்ணுக்கு புனை மணி பூண் கண்ணோட்டம் என்பது எல்லாம் கருணை அன்றோ?]

**விளக்கம் :**—பண்-குதிரையின்மேல் உட்காருவதற்குப் போடப் படும் ஆசனம், சேணம். உக்கு - குலைந்து விழும்படி. வாம் - தாவுகின்ற. பரி - குதிரை, ஆதவன் - சூரியன். பசுபதி - சிவபெருமான். பசுபதியை (ஆதவன்) நோக்கி (குறித்துப்) பணிந்து, என்று இயைக்க. மண்ணுக்கு தவம் புரியும் தனஞ்செயன் - (பகை வென்று) இழந்த மண்ணை (ராஜ்யத்தை) பெறும் பொருட்டுப் (பாசுபதக்கணை பெறத்) தவம் புரியும் அருச்சுனனுக்கு. எண்ணுக்கு வரும் புவனம் - (பதினான்கு என்று) எண்ணுதற்கு (கணக்கிடுதற்கு) வருகின்ற உலகங்கள். கண் ஆவான் இவனே அன்றோ - கண் ஆகின்றவன், இச்சூரியன் அல்லவா. கண்ணுக்கு, விளக்கமுடைய அழகிய ஆபரணம் கண்ணோட்டம், என்று சொல்வதெல்லாம், துன்பத்தினிடத்தே கண் சென்றபோது உண்டாகும் கருணையே அல்லவா? என்பது ஈற்றடியின் பொருள். திருவள்ளுவரும் கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் (கருணை) என்றார். ஈரேழு பதினான்கு உலகத்திற்கும் கண்ணாகும் சூரியன், கருணை உடையவனாய்க் கோடை காலத்திலும் தவம் புரியும் தனஞ்செயனைச் சுடா திருந்தான், என்றபடி. இந்தக் கருணையால், சூரியன் கண்ணாவான் ஆயினான். சூரியனுக்கு ஜகச்சக்ஷு என்ற பெயருளது. கண்ணொளியின் விளக்கத்திற்கு சூரியன் ஆதாரமாதலால், கண்ணாவான், என்றதாகவுங் கொள்ளலாம்.

## கலிவிருத்தம்

**44. அங்கியா லங்கியை வெதுப்பி வெம்மையைப்
பொங்கிய வாயுவாற் போக்கி மெய்ச்சிரம்
தங்கிய வமுதினாற் றண்ணெ னும்படி
இங்கிதத் தொடுக்கின னிதயந் தன்னையே.**

[அங்கியால் அங்கியை வெதுப்பி வெம்மையை பொங்கிய வாயுவால் போக்கி, மெய் சிரம் தங்கிய அமுதினால் தண்ணெனும் படி இங்கிதத்து ஒடுக்கினான் இதயம் தன்னையே.]

**விளக்கம் :-** அங்கி - அங்கத்தில் உள்ளது, அதாவது பிராண வாயு. அங்கியால் அங்கியை வெதுப்பி - பிராணிவாயுவினால் இதயத்திலுள்ள அக்கினியை கிளர்ந்து எழச் செய்து, வெம்மை யை - அந்த வெப்பத்தை. பொங்கிய வாயுவால் போக்கி - எழுந்த வாயுவால் அடங்கச் செய்து, மெய் சிரம் - உடலின் உறுப்புக்களில் சிறந்ததான சிரசிலே உள்ள, அமுதினால் - அமுதத்தினால், தண்ணெனும்படி இதயம் தன்னை இங்கிதத்து ஒடுக்கினன் - குளிர்ச்சியுறும்படி மனத்தை இனிதே அடக்கி ஒருமுகப்படுத்தி னான். அருச்சுனனது தவநிலையைக் கூறும் இச் செய்யுளின் பொருளை, யோக சாத்திர வல்லுநரைக் கேட்டுத் தெளிந்து கொள்க. இங்கிதம் - இனிமை.

**45. ஈண்டுதன் கருத்தினோ டியைந்த மாதவம்**
**பூண்டிள மதிமுடிப் புண்ணி யன்றனை**
**வேண்டிய வாறெலாம் விருப்பொ டுன்னினான்**
**பாண்டிய னுயர்குலப் பாவை கேள்வனே.**

[ஈண்டு தன் கருத்தினோடு இயைந்த மாதவம் பூண்டு, இளமதி முடி புண்ணியன் தன்னை வேண்டிய ஆறு எலாம் விருப்பொடு உன்னினான், பாண்டியன் உயர் குலம் பாவை கேள்வனே.]

**விளக்கம் :-** ஈண்டு - இப்படி. கருத்தினோடு இயைந்த - பாசுபதக்கணை பெற வேண்டும் என்ற தன் கருத்திற்கு ஏற்ற தான, இளமதி முடி புண்ணியன் - சிவபெருமான். விருப்பொடு உன்னினான் - மனப்பூர்வமான அன்போடு தியானித்தான். பாண்டியனது உயர்ந்த குலத்திலே வந்த பெண்ணின் கணவனான அருச்சுனன்,—என்பது ஈற்றடியின் பொருள். அருச்சுனன் தீர்த்த யாத்திரை செய்த பொழுது சித்திரவாகனன் என்னும் பாண்டிய மன்னனது மகளை மணந்துகொண்டானாதலால், ''பாண்டியன் பாவை கேள்வன்,'' எனப்பட்டான். அவள் பெயர் சித்ராங் கதை.

**46. நிரந்தர மநேகநாள் நினைவு வேறற**
**உரந்தரு புலன்களை யொடுக்கி யாயுதம்**
**இரந்தனன் வரையிடை யியற்று நற்றவம்**
**புரந்தர னறிந்துமெய் புளக மேறவே.**

[நிரந்தரம் அநேக நாள் நினைவு வேறு அற, உரம் தரு புலன் களை ஒடுக்கி, ஆயுதம் இரந்தனன் வரைஇடை இயற்றும் நல் தவம், புரந்தரன் அறிந்து மெய் புளகம் ஏறவே,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** நிரந்தரம் - இடையீடு இல்லாமல். இரந்த னன் - பாசுபதக் கணையை வேண்டினனாய். வரை - கயிலை மலை. புரந்தரன் - இந்திரன். புளகம் ஏற-(சந்தோஷத்தினால்

இந்திரன்) மயிர்ச் சிலிர்ப்பைக் கொள்ள,—அடுத்த செய்யுளோடு முடியும். பாசுபதம் வேண்டித் தன் மைந்தன் அருந்தவம் முயல் வதை அறிந்து, இந்திரன் மகிழ்ந்தான், என்பதாம்.

**47. குருவுடன் விரகுறக் கூறி யீசனை**
**மருவுறு கொன்றைநாண் மாலை மௌலியைக்**
**கருமயில் பாகனைக் காண்டல் வேண்டிய**
**திருமகன் றவநிலை தெரிய வுன்னினான்.**

[குருவுடன் விரகு உற கூறி, ஈசனை, மரு உறு கொன்றை நாள் மாலை மௌலியை, கருமயில் பாகனை காண்டல் வேண்டிய திருமகன் தவநிலை தெரிய உன்னினான்.]

**விளக்கம் :-** ஈசனை...தவநிலை, குருவுடன் கூறி, விரகுஉற தெரிய உன்னினான்,—என்று அன்வயிக்க. குரு - பிரகஸ்பதி. விரகுஉற - தந்திரமாக. மரு - வாசனை. மௌலி - முடியை உடைய சிவபிரான். கருமயில் பாகன் - கரு நிறமுடைய மயில் போன்ற சாயலை உடைய உமாதேவியைத் தன் இடப்புறங் கொண்ட சிவபிரான். உன்னினான் - நினைத்தான். சிவ பெருமானைக் காணவேண்டி அரிய தவம் முயலும் தன் மகனது தவநிலையைத் தன் குருவான பிரகஸ்பதியிடம் கூறி, மேலும், அவனது மன உறுதியை ஓர் உபாயத்தினால் அல்லது தந்திரத் தினால் சோதித்து அறிய நினைத்தான், என்பதாம்.

## இந்திர சோதனை

**48. அரும்பகை வலிமையா லவுண ரூர்சுடும்**
**பெரும்பிறை யணிசடை பிஞ்ஞு கன்றன(து)**
**இரும்பக ழிகள்பெற வெண்ணி யேகொலாம்**
**விரும்பிய தித்தவம் வில்வ லானரோ.**

[அரு பகை வலிமையால் அவுணர் ஊர் சுடும் (சுட்ட) பெரு பிறை அணி சடை பிஞ்ஞுகன் தனது இரும் பகழிகள் பெற எண்ணியே கொல் ஆம், விரும்பியது இ தவம் வில் வலான், (அரோ—ஈற்றசை.]

**விளக்கம் :-** வில் வலான் இத்தவம் விரும்பியது. அரும் பகை....எண்ணியே கொலாம்,—என்பது அன்வயம். (தேவருக்கு) விலக்கரிய பகையாகிய அசுரர்களது திரிபுரத்தைத் தன் வலிமை யால் சுட்டழித்த, என்பது முதலடியின் பொருள். பெரும்பிறை அணிசடை பிஞ்ஞுகன் - பெருமையுடைய பிறைச்சந்திரனை அணிந்த சடையை உடைய சிவபெருமான். வில் வலான் - அருச்சுனன். அருச்சுனன் இந்த அரிய தவத்தை மேற்கொண்டது, சிவபெருமானிடமிருந்து பாசுபதக் கணை பெற விரும்பியே போலும், என்று இந்திரன் எண்ணினான்,—என்பது கருத்து. இதுவும் இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும் ஒரு தொடர். சுடும், (சுட்ட) என்றது கால வழுவமைதி. பிஞ்ஞுகன்-அழிக்கும் தொழிலை உடைய கடவுள், அல்லது, சடைமுடியுடைய அழகன்.

**49. நற்றவத் துறுதியும் நரன்க ருத்துநாம்
முற்றறி குவமென முன்னுஞ் சிந்தையான்
கற்றையஞ் சடையவன் கயிலை யங்கிரி
உற்றறி வுறுவதற் குபாய முன்னினான்.**

[நல் தவத்து உறுதியும் நரன் கருத்தும் நாம் முற்று அறிகுவம் என முன்னும் சிந்தையான், கற்றை அம் சடையவன் கயிலை அம் கிரி உற்று, அறிவு உறுதற்கு உபாயம் உன்னினான்.]

**விளக்கம் :-** நரன் - அருச்சுனன். அவனது கருத்தையும், தவநிலையில் நிற்கும் உறுதியையும் முழுவதும் சோதித்து அறிந்து கொள்வோம் என்ற சிந்தையினனான இந்திரன்,—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். உற்று - (கயிலையங்கிரியை) அடைந்து, அறிவுறுவதற்கு உபாயம் உன்னினான் - நன்கு அறிந்து கொள்வதற்குரிய வழியை ஆலோசிக்கலானான். கற்றை அம் சடை, கயிலை அம் கிரி, என்பவற்றினுள்ள அம் சாரியை; அழகிய என்ற பொருளும் கொள்ளலாம்.

**50. தூநகை யுருப்பசி யரம்பை தொண்டைவாய்
மேனகை திலோத்தமை யென்று வேலையின்
மானென மயிலென வந்த மாதரீர்
ஆனவா றறிதிர்போ யவன்ற னெண்ணமே.**

[தூ நகை உருப்பசி, அரம்பை, தொண்டை வாய் மேனகை, திலோத்தமை என்று, வேலையின் மான் என, மயில் என வந்த மாதரீர், ஆன ஆறு அறிதிர்போய் அவன் தன் எண்ணமே.]

**விளக்கம் ,-** தூநகை - வெள்ளிய பற்களை உடைய; அல்லது இனிய சிரிப்பின் பொலிவுடைய. என்று - என்று பெயர் கொண்டு. வேலையின் வந்த மாதர் - பாற்கடல் கடைகையில் அக் கடலி னின்று வெளிப்பட்ட மாதர். ஆனவாறு அறிதிர் - (அருச்சுனனது மனத்தை உங்களால்) முடிந்தவரை முயன்று அறிவீர்களாக. அருச்சுனனது மனவுறுதியைச் சோதித்து அறிந்து வரும்படி தேவ மாதரை இந்திரன் ஏவினன், என்க. தூநகை - சுத்தமான அழகிய பற்கள். வேலை - கடற்கரை; கடலுக்கு இலக்கணை. அறிவு உறுவதற்கு, என்பதிலுள்ள உறு, துணிவுப் பொருளது.

## தேவமாதர் சோதனை

**51. என்றுகொண் டிந்திர னியம்ப மற்றவன்
துன்றிய பேரவைத் தோற்ற மிக்கவர்
குன்றிரண் டெடுப்பதோர் கொடிம ருங்குலார்
சென்றன ரவ்வுழிச் செய்ய வாயினார்.**

[என்று (கொண்டு) இந்திரன் இயம்ப (மற்று) அவன் துன்றிய பேர் அவை தோற்றம் மிக்கவர், குன்று இரண்டு எடுப்பது ஓர் கொடி மருங்குலார், சென்றனர் அ உழி செய்ய வாயினார்.]

**விளக்கம் :-** என்று இந்திரன் இயம்ப, அவன், துன்றிய பேர் அவை தோற்றம் மிக்கவர், குன்று இரண்டு எடுப்பது ஓர் கொடி மருங்குலார், செய்ய வாயினர், (ஆகிய தேவமாதர்) அ உழி சென்றனர் - என்று என அன்வயிக்க. துன்றிய பேரவை - தேவர் முதலியோர் நெருங்கியுள்ள பெரிய சபை. தோற்றம் மிக்கவர் - அழகினால் சிறந்தவர்கள். முலைகளாகிய இரண்டு குன்றுகளைத் தாங்குவதான ஒரு பூங்கொடி போன்ற இடையை உடையவர் என்பது மூன்றாவது அடியின் பொருள். அவ்வுழி - (அருச்சுனன் தவம் புரியும்) அந்த இடம். செய்ய வாயினர் - சிவந்த வாயை உடையவர்.

அருச்சுனனைச் சோதித்து வருமாறு இந்திரன் கூற, அழகிற் சிறந்தவர்களும், கொடி போன்ற இடையினரும், சிவந்த வாயினரு மான தேவமாதர் அருச்சுனன் தவம் புரியும் இடத்தை அடைந் தனர் - என்பதாம். கொண்டு, மற்று: அசைகள். குன்றுகளை எடுக்குங் கொடி, என்றது நயமுடையது; இது இல்பொருள் உவமையின் பாற்படும்.

**52. காமனை நினைத்தனர் காம ராசனும்**
**மாமலர் வாளியு மதுர சாபமும்**
**தேமரு மலர்க்கையிற் சேர்த்திச் சேனையோடு**
**ஆமுறை புகுந்தன னரனு மஞ்சவே.**

[காமனை நினைத்தனர்; காமராசனும் மா மலர் வாளியும் மதுரம் சாபமும், தேன் மரு மலர் கையில் சேர்த்தி, சேனையோடு ஆம் முறை புகுந்தனன் அரனும் அஞ்சவே.]

**விளக்கம் :-** மதுரசாபம் - இனிய கரும்புவில், தே மரு மலர்க்கை - தேன் பொருந்திய மலர் போன்ற கை. சேர்த்து - எடுத்துக்கொண்டு. சேனை - பெண்களாகிய சேனை. ஆம் முறை - போருக்கு உரிய முறை.

தேவமாதர் நினைக்க, மன்மதன் கரும்பு வில்லுடனும், மலரம்புகளுடனும், தேவமாதரைப் படையாகக் கொண்டு வந்தான், என்பதாம். குமார சம்பவத்திற்காகத் தேவர்களது வேண்டுகோளுக்கு இணங்கிச் சிவனது நிஷ்டையைக் கலைத்தானா தல் பற்றி, 'அரனும் அஞ்சுவான்' என்றார். 'அரனை அஞ்சு வான்' என்றும் பாடமுளது. சிவபெருமானால் எரிக்கப்பட்டுப் பின் அவனது அருளால் **அநங்கன்** ஆனவனாதலால், 'சிவனை அஞ்சுவான்,' ஆனான், என்க.

**53. செந்தமிழ் வரைதரு தேரன் செக்கர்வான்**
**அந்தியா னையன்மதி யாத பத்திரன்**
**சிந்துவெம் முரசினன் செவ்வி கூரவே**
**வந்தனன் காலமும் வசந்த மாக்கியே.**

[செம் தமிழ் வரை தரு தேரன், செக்கர் வான் அந்தி யானை யன், மதி ஆதபத்திரன், சிந்து வெம் முரசினன் செவ்வி கூரவே, வந்தனன் காலமும் வசந்தம் ஆக்கியே.]

**விளக்கம் :**—செந்தமிழ் வரை - செந்தமிழ் வழங்கும் பொதிய மலை. (அம் மலை தரு தென்றலாகிய) தேரன் - தேரை உடையவன். செக்கர் (சிவந்த) வான் அந்தி யானையன் - செவ்வானத் தோடு சம்பந்தங் கொண்ட அந்திப் பொழுதாகிய யானையன். மதி ஆதபத்திரன் - சந்திரனாகிய வெண்கொற்றக் குடையை உடையவன். சிந்துவெம் முரசினன் - கடலாகிய பகைவருக்கு வெம்மையைத் தருகின்ற முரசவாத்தியத்தை உடையவன். காலமும் வசந்தம் ஆக்கியே செவ்விகூர வந்தான் - காலத்தையும் வசந்தகாலமாகச் செய்துகொண்டு எங்கும் அழகு சிறக்க (மன்மதன்) வந்தான்.

மன்மதன் விசயனது தவத்தைக் குலைக்கத் தனது சேனையுடன், வந்தான் என்பதாம். தென்றல், அந்தி, சந்திரன், வசந்தம் முதலியன காமத்தை மூட்டும் தன்மையன.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**54. கந்தனை யளித்த கன்னியோர் பாகங்**
**கலந்தமெய்க் கண்ணுதற் கெதிராய்ச்**
**செந்தமி ழுரைத்த குறுமுனி யிருந்த**
**தெய்வமால் வரையிடைத் தோன்றி**
**இந்துவு மரவு முறவுசெய் முடிமே**
**லிருந்தமந் தாகினி யருவி**
**வந்திழி புனலுஞ் சந்தனங் கமழ**
**வந்தது மந்தமா ருதமே.**

[கந்தனை அளித்த கன்னி ஓர் பாகம் கலந்த மெய் கண் நுதற்கு எதிராய், செம் தமிழ் உரைத்த குறுமுனி இருந்த தெய்வம் மால்வரை இடைதோன்றி, இந்துவும் அரவும் உறவு செய் முடிமேல் இருந்த மந்தாகினி அருவி வந்து இழி புனலும், சந்தனம் கமழ வந்தது மந்த மாருதமே.]

**விளக்கம் :**—கந்தனை...கண் நுதல் - சிவபெருமான். எதிராய் - சிவபெருமானுக்கு ஒப்பாக, செந்தமிழ் உரைத்த குறுமுனி - செந்தமிழை வெளியிட்ட அகத்தியமுனி. இந்துவும் அரவும் உறவு செய் முடி - சந்திரனும் பாம்பும் பகைமறந்து வாழும் சிவ பெருமானின் திருமுடி. மந்தாகினி - கங்கை. அருவி வந்து இழி புனல் - அந்த கங்கையின் அருவியாக வந்து இழிந்தோடும் நீர். மந்தமாருதம் - தென்றல்.

சிவபெருமானை ஒத்துச் செந்தமிழ் தந்த அகத்தியன் வாழ் பொதிய மலையில் தோன்றி, சிவபெருமான் திருமுடியில் தங்கி, அங்கிருந்து பூலோகம் வந்த மந்தாகினியின் அருவியாகிய பூலோக கங்கை நீரின் குளிர்ச்சியையும், சந்தனத்தின் மணத்தையும் உடைய தென்றல், வந்து வீசலாயிற்று, - என்பது பொருள். தென்றல் காமோத்தீபகப் பொருள்களில் ஒன்று.

**55. வம்பறா மதுரப் பல்லவங் கோதி**
**மாமக ரந்தமா கந்தக்**
**கொம்பெலா மிருந்து குயிலினங் கூவக்**
**கொற்றவெஞ் சிலையினான் முன்னம்**
**சம்பரா சுரனை வென்றவீ ரனைப்பைந்**
**தாமமா மணிமுடி சூட்டி**
**எம்பிரான் முனிவுக் கஞ்சலென் பதுபோ**
**லியைந்தது வசந்தகா லமுமே.**

[வம்பு அறா மதுரம் பல்லவம் கோதி மா மகரந்தம் மாகந்தம் கொம்பு எலாம் இருந்து குயில் இனம் கூவ, கொற்றம் வெம் சிலையினான் முன்னம், சம்பராசுரனை வென்ற வீரனை பைந்தாமம் மாமுடி சூட்டி எம்பிரான் முனிவுக்கு அஞ்சல் என்பது போல் இயைந்தது வசந்தகாலமும், ஏ.]

**விளக்கம் :**—வம்பு - மணம். பல்லவம் - தளிர். மா மகரந்தம் - மிகுந்த பூந்தாது. மா கந்தம் கொம்பு - மாமரத்தின் மணங் கமழும் கிளைகள். கொற்ற வெம் சிலையினால் முன்னம் சம்பராசுரனை வென்ற வீரன் - மன்மதன். பைந்தாமம் மணிமுடி சூட்டி - பசிய (வாடாத) மலர் மாலையோடு அழகிய மலர் முடியும் சூட்டி. எம்பிரான் முனிவுக்கு அஞ்சல் - சிவபெருமானது கோபத்திற்கு அஞ்சாதே (என்று மன்மதனுக்குச் சொல்வதுபோல்) (வசந்த காலம்) இயைந்தது - வந்து பொருந்தியது.

குயில்கூவ, மன்மதனுக்கு மலர்மாலையும் முடியுஞ் சூட்டி, ''சிவபிரானுக்கு அஞ்ச வேண்டா; வசந்தமாகிய உன்னுடைய ராஜ்யத்தை இனிதே ஆள்க'' என்று சொல்வது போல், மந்தமாருதம் வந்தது, என்றது **தற்குறிப்பேற்ற** அணியின் பாற் படும். சம்பரனை மன்மதன் வென்ற கதை; தெரியவில்லை. அஞ்சல் - எதிர் மறை வியங்கோள்.

**56. பூதமைந் திணையும் புலத்துட னொடுக்கிப்**
**புரிசடை யுடன்புரு கூதன்**
**காதலம் புதல்வ னருந்தவம் புரிதல்**
**கண்டுபா விப்பன போல**
**மாதிரந் தொறுஞ்செம் பல்லவச் செந்தீ**
**வளர்த்துவான் மணியினை நோக்கிப்**
**பாதமொன் றினினின் றுயர்ந்தன வொளிகூர்**
**பணையுடைப் பாதவங் களுமே.**

[பூதம் ஐந்தினையும் புலத்துடன் ஒடுக்கி, புரிசடையுடன் புரு கூதன் காதல் அம் புதல்வன் அரு தவம் புரிதல் கண்டு பாவிப்பன போல், மாதிரம் தொறும் செம் பல்லவம் செம் தீ வளர்த்து, வான்

மணியினை நோக்கி பாதம் ஒன்றினில் நின்று உயர்ந்தன ஒளிகூர் பணை உடை பாதவங்களும் (ஏ)]

**விளக்கம் :-** பூதம் ஐந்தினையும் புலத்துடன் ஒடுக்கி - பஞ்ச பூதங்களையும் ஐம்புலன்களோடு அடங்கச் செய்தது; அதாவது, ஐந்து பூதங்களுக்கும் உரிய மணம், சுவை, ஒளி ஊறு, ஓசை என்னும் குணங்களாகிய ஐந்தையும், மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் பொறிகள் நுகர்தலைச் செய்யாமல் விலக்கி, புரி சடையுடன் புருகூதன் காதல் அம் புதல்வன் - முருக்கிக் கட்டிய சடை முடியோடு கூடிய இந்திரன் புதல்வனான அருச்சுனன். (அம்: சாரியை) பாவிப்பன போல் - (மரங்கள் அருச்சுனன் தவம் புரிதலைக் கண்டு தாமும்) அவனை ஒத்து நடப்பனபோல், அதாவது தவம் செய்வனபோல். மாதிரம் - திக்கு. செம் பல்லவம் செம்தீ வளர்த்து - சிவந்த தளிர்களாகிய செந்நிறத் தீயை வளர்த்து. வான் மணி - வானத்திலிருக்கும் சூரியன். பாதம் ஒன்றில் நின்று - அடிமரமாகிய ஒரு காலில் நின்று. உயர்ந்தன - உயர்தலை அடைந்தன. ஒளி கூர் பணை உடை பாதங்கள் - ஒளி சிறந்த கிளைகளை உடைய மரங்கள்.

அருச்சுனனைப் போல், ஆங்கு இருந்த மரங்களும் தவம் செய்வன போன்றவாயின, என்றது, தற்குறிப்பேற்றத்தின் பாற்படும். மேலோரின் கூட்டுறவால் மற்றோரும் மேன்மையுறுவர், என்ற வாய்மொழியின் வாய்மையைப் புலவர் மரங்களின்மேல் ஏற்றிக் கூறினா ராயிற்று. அருச்சுனன் தீயினிடையே நின்று தவம் புரிந்தான். பல்லவங்கள் தீயாக உருவகிக்கப் பெற்றது. அருச்சுனனைப்போல் மரங்களும் தம்மைச் சுற்றித் தளிர்களாகிய தீயை வளர்த்து, அடிமரமாகிய ஒற்றைக் காலில் நின்று, சூரியனை நோக்கிக்கொண்டு ஓங்கினவாயின. உயர்தல் - மேன்மையின் நிமிர்தல், உயர்ந்து வளர்தல். ஆகவே, அருச்சுனனைப்போல், மரங்களும் உயர்ந்தனவாயின.

**57. உள்ளுறக் கலக்க மறத்தெளிந் தசலத்**
**துயர்தலை முழையினின் றருவி**
**வெள்ளமொத் தமுதங் கரையறப் பொழிய**
**வெம்மையற் றளியுடன் குளிர்ந்து**
**புள்ளுடைக் கொடியோன் றருமுமை பங்கன்**
**புண்ணியப் பொருப்பிடைத் தவஞ்செய்**
**வள்ளலொத் தனவச் சாரலைச் சூழ்ந்து**
**வயங்கு நீள்வாவியுஞ் சுனையும்.**

[உள் உற கலக்கம் அற தெளிந்து, அசலத்து உயர் தலையில் நின்று அருவி வெள்ளம் ஒத்து, அமுதம் கரை அற பொழிய வெம்மை அற்று, அளியுடன் குளிர்ந்து, புள் உடையோன் தரும் உமை பங்கன் புண்ணியம் பொருப்பு இடை தவம் செய் வள்ளல் ஒத்தன, அ சாரலை சூழ்ந்து வயங்கு நீள் வாவியும் சுனையும்.]

உள் உற கலக்கம் அற தெளிந்து - ஆழத்தில் பொருந்தப் பெற்றும் கலக்கம் நீங்கப்பெற்றும் தெளிவு கொண்டுள்ள, அசலத்து உயர்தலை முழையில் நின்று - மலையின் உச்சியில் உள்ள குகை களிலிருந்து, (பெருகும்) அருவி வெள்ளம் ஒத்து - அருவியின் நீரோட்டத்தை ஒத்து, அமுதம் கரை அற பொழிய - அமுதத்தைச் சிரசிலுள்ள பிரும்மரந்தரத்திலிருந்து மிகுதியாகச் சுரக்க, வெம்மை அற்று - வெப்பம் நீங்கி. அளியுடன் குளிர்ந்து - கருணையோடு குளிர்ச்சியுற்று, புள் உடைக் கொடியோன் தரும் உமை பங்கன் புண்ணியம் பொருப்பு இடை - கருடனைக் கொடியிலே கொண்ட திருமால் உதவிய உமாதேவியை இடப்புறங் கொண்ட சிவ பிரானின் பரிசுத்தமான கயிலாச மலையிடத்தே. தவம் செய் வள்ளலை - தவம் புரியும் அருச்சுனனை, அ சாரலை சூழ்ந்து வயங்கு நீள் வாவியும் சுனையும்-அக் கயிலையங் கிரிச்சாரலிடத்தே விளங்கும் பெரிய நீர்நிலைகளும், நீர் ஊற்றுக்களும், ஒத்தனவாய் இருந்தன.

கயிலாய மலையினிடத்தே இருந்த வாவியும் சுனையும், அங்கே தவம் புரியும் அருச்சுனனை ஒத்திருந்தன, என்று புலவர் வருணிக்கின்றார். இது சிலேடையின் துணைகொண்டு அமைந்த தற்குறிப்பேற்றம். சிரசின் பிரும்மரந்திரத்திலிருந்து அமுதம் பெருக, உடலோடு உள்ளமுங் குளிர்ந்து தவத்துறை ஆழ்ந்திருந்த பார்த்தனைப் போல், ஆங்குள்ள வாவிகளும், சுனைகளும், மலைச் சிகரத்திலிருந்து பெருகி அருவியிடும் நீரால் வெம்மை அகலக் குளிர்ந்து இருந்தன, என்றார்.

அசலத்து உயர்தலை முழை - மலையின் சிகரத்திலுள்ள குகை; அசைவில்லா பார்த்தனின் உடலின் உச்சியிலுள்ள சிரசி னிடத்தே உள்ள பிரும்மரந்திரம். மலையின் சிகரத்திலிருந்து நீர் பெருகி வாவிகளையும் சுனைகளையும் குளிரச் செய்கின்றது; அது போல் அருச்சுனனின் சிரசிலிருந்து அமுத தாரை பெருகி அவனைக் குளிரச் செய்கின்றது. எனவே, வாவியும் சுனையும் தவம் செய்யும் அருச்சுனனை ஒத்தன வரகின்றன.

**58** **நீறுபட் டிலங்கு மெய்ந்நில வொளியா**
**னெஞ்சினி லிருளினை யகற்றி**
**மாறுபட்டி டுமைம் புலன்களு மொடுக்கு**
**மாதவன் வளர்த்தசெந் தழலால்**
**கூறுபட் டுமையோ டொருவடி வானோன்**
**குன்றுசூ ழறைபொறை யனைத்தும்**
**மாறுபட் டுருகிப் பெருகியோ டினவா**
**லம்மலை வெள்ளியா தலினால்.**

[நீறுபட்டு இலங்கும் மெய் நிலவு ஒளியால் நெஞ்சினில் இருளினை அகற்றி, மாறுபட்டிடும் ஐம்புலன்களும் ஒடுக்கும் மா தவன் வளர்த்த செம் தழலால், கூறுபட்டு உமையோடு ஒரு வடிவு

ஆனோன் குன்று சூழ் அறை பொறை அனைத்தும் மாறுபட்டு உருகி பெருகி ஓடின(ஆல்) அ மலை வெள்ளி ஆதலினால்.]

**விளக்கம்** ;—திருநீறு பூசப்பட்டு விளங்கும் அருச்சுனனது திருமேனியின் வெண்ணிற ஒளியால் மனத்தின் இடத்ததான இருள் (அஞ்ஞான இருள்) அகற்றி,—என்பது முதலடியின் பொருள். நன்னெறி படராமையைச் செய்யுந் தன்மையை உடைய ஐந்து புலன்களையும், புறச் செய்திகளில் செல்லாது அடக்கி மாதவம் செய்யும் அருச்சுனன் நான்கு புறத்திலும் வளர்த்த செந்தழலால், —என்பது இரண்டாவது அடியின் பொருள். தனது வாம பாகமாகப் பொருந்தியுள்ள உமையோடு ஒரே வடிவினனான சிவபெருமானின் கயிலை மலையைச் சூழ்ந்துள்ள அறை (கற்பாறை) களும், பொறை (சிறுபாறை) களும் ஆகிய எல்லாம், முன்னையவான கடின நிலையிலிருந்து வேறுபட்டு, அம் மலை வெள்ளி மலை ஆனதினால் உருகி ஓடின,—என்பது ஈற்றடிகளின் பொருள். வெள்ளி நெருப்புக்கு முன் உருகுதல் இயல்பு. எனவே, அருச்சுனன் வளர்த்த தீயால், வெள்ளி மலை உருகிற்று, என்க.

**59. அலைத்தடங் கடலி லமுதொடுற் பவித்தாங்**
**கமரர்வாழ் பதிகுடி புகுந்தோர்**
**குலைத்துமென் றெண்ணி யொருவருக் கொருவர்**
**கொடியிடை நுடங்கவந் தந்த**
**மலைத்தட நெருங்கப் புகுந்தனர் குயிலும்**
**மயூரமு மானுமே யனையார்**
**நிலைத்தவம் புரிவோ னைவகை நெருப்பி**
**னடுவுற நின்றவா கண்டார்.**

[அலை தட கடலில் அமுதொடு உற்பவித்து (ஆங்கு) அமரர் வாழ் பதி குடி புகுந்தோர், குலைத்தும் என்று எண்ணி ஒருவருக்கு ஒருவர் கொடி இடை நுடங்க வந்து, அந்த மலை தடம் நெருங்க புகுந்தனர், குயிலும் மயூரமும் மானுமே அனையார் நிலை தவம் புரிவோனை ஐவகை நெருப்பின் நடு உற நின்ற ஆ கண்டார்.]

**விளக்கம்** :—அலைதடங்கடலில்.... புகுந்தோர் (ஆனா) குயிலும் மயூரமும் மானுமே அனையார் (ஆன, மேனகை ஆதி தேவமாதர்) தவத்தைக் குலைத்தும் என்று எண்ணி, ஒருவருக்கு ஒருவர் (முந்தினராய்) கொடி இடை நுடங்க வந்து, அந்த மலை தடம் நெருங்க புகுந்தனர் நிலை தவம் புரிவோனை ஐவகை நெருப்பிடை நின்றவா கண்டார்,—என்பது அன்வயம்.

அலைதடங் கடல் - பாற்கடல். அமரர் வாழ் பதி—தேவலோகம். குலைத்தும் - அழிப்போம். மயூரம் - மயில். நிலை தவம் - நிலையான அரிய தவம். ஐவகை நெருப்பு - தன்னைச் சுற்றி நாற்புறமும் மூட்டி வளர்த்த நெருப்பு, இதைப் பஞ்சாக்னி, என்பர். ஆங்கு, அசை.

**60. அந்தரத் தமரர் துந்துபி முழங்க**
**வநங்கதுந் துபியெ திர் முழங்க**
**வந்துபொற் சிலம்பு மேகலை விதமு**
**மலர்க்கைவெள் வளைகளு முழங்கப்**
**பந்தடித் திடுவா ரம்மனை யெறிவார்**
**பயில் கழங் காடுவார் நெற்றிச்**
**சிந்துரத் திலகந் தீட்டுவா ராகித்**
**தனித்தனி திசைதொறுஞ் சூழ்ந்தார்.**

[அந்தரத்து அமரர் துந்துபி முழங்க, அநங்க துந்துபி எதிர் முழங்க வந்து, பொன் சிலம்பு மேகலை விதமும் மலர் கை வெள் வளைகளும் முழங்க, பந்து அடித்திடுவார், அம்மனை எறிவார், பயில் கழங்கு ஆடுவார், நெற்றி சிந்துரம் திலகம் தீட்டுவார் ஆகி, (தேவமாதர்) தனி தனி திசை தொறும் சூழ்ந்தார்.]

**விளக்கம்** :—துந்துபி - தேவலோகத்துப் பறை. அநங்க துந்துபி - மன்மதனது பறை. மேகலை - இடையணி. மேகலை விதம் - இடையணி வகைகள், அம்மனை - ஆட்டக்காயை உயரே எறிந்து பிடித்தல் (அம்மானை ஆடல் என்பர்). கழங்கு ஆடல் - கழற்சிக் காயைக் கொண்டு ஆடும் ஆட்டம். சிந்துரம் - குங்குமம். திசை தொறும் - அருச்சுனன் தவம்புரியும் சாரலைச் சுற்றியுள்ள திசை எங்கும்.

அருச்சுனனது மனத்தைக் கவர்ந்து, அவனது தவத்தைக் கெடுக்கத் தேவமாதர், அவனைச் சூழ்ந்துகொண்டு பந்தடித்தல் முதலிய பெண்களுக்குரிய விளையாடல்களைச் செய்தனர், என்பதாம்,

**61. குயிலொடு கூவிக் கிஞ்சுக மலர்ந்து**
**கொஞ்சுபைங் கிளிகளை யழைப்பார்**
**மயிலின நடிக்கத் தாமும்வண் கலாப**
**மணியணி யொளியெழ நடிப்பார்**
**வெயில்விடு பரிதி மதியுடன் வலஞ்செய்**
**விடரக முழுவது மொலிப்பக்**
**கயிலையங் கிரியின் சாரலோ வெம்மூர்க்**
**கடவுளா லயமெனக் களிப்பார்.**

[குயிலொடு கூவி கிஞ்சுகம் மலர்ந்து, கொஞ்சு பைங் கிளிகளை அழைப்பார், மயில் இனம் நடிக்க தாமும் வள் கலாபம் மணி அணி ஒளி எழ நடிப்பார், வெயில் விடு பரிதி மதியுடன் வலம் செய் விடர் அகம் முழுவதும் ஒலிப்ப, கயிலை அம் கிரியின் சாரலோ, எம் ஊர் கடவுள் ஆலயம் என களிப்பார்.]

**விளக்கம்** :—கிஞ்சுகம் மலர்ந்து குயிலொடு கூவி கொஞ்சு பைங் கிளிகளை அழைப்பார். கிஞ்சுகம் - சிவப்பு, முருக்கமலர்; கிளி போல் பேசும் பெண்; இங்கே சிவந்த வாயைக் குறிக்கும். வள்கலாபம் - சிறந்த இடை அணி. மணி அணி ஒளி - (அவ்வா

பரணத்திலுள்ள) இரத்தினக் கற்களின் அழகிய ஒளி. வெயில் விடு பரிதி - வெயிலை வெளிப்படுத்துகின்ற சூரியன். விடர் - மலைக்குகை. கடவுள் ஆலயம் - தேவலோகம்.

சூரியனும் சந்திரனும் வலம் வருகின்ற மலைச்சாரலின் குகையிடங்கள் எங்கும் ஒலி ஒழும்படி தேவமாதர், கூவியும் ஆடியும், இக் கயிலைமலைச் சாரலானது தேவர்களின் இருப்பிடம் என்று சொல்லிக்கொண்டு களித்தனர், என்பதாம். அல்லது, கயிலைச் சாரல் அன்று, இது தேவலோகம், என்று சொல்லிக் களித்தனர், என்றும் பொருள் கூறலாம்.

**62 கூந்தன்மா முகிலைக் குலைத்துடன் முடிப்பார்**
**குங்குமங் கொங்கைமே லணிவார்**
**ஏந்துபே ரல்குற் கலைநெகிழ்த் துடுப்பா**
**ரிட்டவுத் திரியமாற் றிடுவார்**
**பூந்துகி லனைய நறுஞ்சுனை படிவரர்**
**புழுகுசந் தனநறும் பனிநீர்**
**காந்திகொ டெறிவார் காமவே தத்தைக்**
**கருங்கடைக் கண்களான் மொழிவார்.**

[கூந்தல் மாமுகிலை குலைத்து உடன் முடிப்பார், குங்குமம் கொங்கைமேல் அணிவார், ஏந்து பேர் அல்குல் கலை நெகிழ்த்து உடுப்பார், இட்ட உத்தரியம் மாற்றிடுவார், பூந்துகில் நனைய நறுஞ்சுனை படிவார், புழுகு சந்தனம் நறும் பனிநீர் காந்திகொடு எறிவார், காமவேதத்தை கருங் கடைக் கண்களால் மொழிவார்;]

**விளக்கம் :-** அருச்சுனனது தவத்தைக் குலைக்க வந்த தேவ மாதர், கூந்தலை அவிழ்த்து முடிந்தும், முலைகளின்மேல் குங்குமத்தைப் பூசியும், புடவையை அவிழ்த்து உடுத்தியும், மேலாடையை மாற்றியும், சேலை நனையும்படி நீராடியும், சந்தனத்தையும் குளிர்ந்த நீரையும் ஒருவர்மேல் ஒருவர் வீசியும், கண் கடையால் காமக் குறிப்புடன் நோக்கியும் தவத்தைக் குலைக்க முயன்றார்,—என்பதாம். 'காந்திகொடு' என்பதற்குத் தங்களது தேகத்தின் காந்தி வெளித் தோன்றும்படி, என்று பொருள் கொள்க. தங்களது தேக காந்தி வெளிப்பட்டுத் தோன்ற, ஒருவர்மேல் ஒருவர் நீரை வீசினார்கள், என்க.

**63. பண்ணுடை யெழாலி னின்னிசை வழியே**
**பாடுவார் பைங்குழல் குறிப்பார்**
**பெண்ணுடை மடநா ணகன்றபே ரமளிப்**
**பேச்செலாம் பேசிவந் தடுப்பார்**

**விண்ணுடை யமிர்தம் பருகுவா ருகிரான்**
**மென்மலர் கொய்துமே லெறிவார்**
**எண்ணுடை மடவார் புரிந்தன விவ்வா**
**றிங்கித மெத்தனை கோடி.**

[பண் உடை எழாலின் இன் இசை வழியே பாடுவார், பைங் குழல் குறிப்பார், பெண் உடை மடம் நாண் அகன்ற பேர் அமளி பேச்சு எலாம் பேசி வந்து அடுப்பார், விண் உடை அமிர்தம் பருகு வார், உகிரால் மென் மலர் கொய்து மேல் எறிவார், எண் உடை மடவார் புரிந்தன இ ஆறு இங்கிதம் எத்தனை கோடி.]

**விளக்கம் :-** எழால் - யாழ். பைங்குழல் குறிப்பார் - பசிய மூங்கிலினால் ஆன புல்லாங்குழலை ஊதுவார். பெண்களுக்குரிய மடமும் நாணமும் நீங்கிய பள்ளியறைப் பேச்சுக்களைப் பேசிக் கொண்டு வந்து அருச்சுனனை நெருங்குவார்,—என்பது இரண்டா வது அடியின் பொருள். வீண் உடை அமிர்தம் - தேவாமிருதம். உகிர் - நகம். எண்ணுடைய மடவார் - தவத்தைக் கெடுக்கும் எண்ணமுடைய தேவமாதர். இவ்வாறு புரிந்தன இங்கிதம் எத்தனை கோடி - இவ்வாறு செய்தனவாகிய காமக் குறிப்புடைய செயல்கள் மிகப் பலவாகும்.

**64. காவும்வண் புறவுங் கயங்களு மரும்பக்**
**கவர்ந்தவெங் கணைகளா லைந்து**
**பூவும்வந் துள்ள முறவுறப் பட்டுப்**
**புதையவும் புலன்வழி யன்றி**
**மேவுதன் கருத்தின் வழியிலே நின்ற**
**விசயனை யங்கிபால் வில்லும்**
**ஏவுமுன் பெற்ற விறைவனை யெய்தெய்**
**திளைத்தன னிரதிகேள் வனுமே.**

[காவும் வண் புறவும் கயங்களும் அரும்ப கவர்ந்த வெம் கணைகளால் ஐந்து பூவும் வந்து உள்ளம் உற உற பட்டு புதைய வும், புலன் வழி அன்றி மேவு தன் கருத்தின் வழியிலே நின்ற விசயனை, அங்கிபால் வில்லும் ஏவும் முன் பெற்ற இறைவனை, எய்து எய்து இளைத்தனன் இரதி கேள்வனும், (ஏ).]

**விளக்கம் :-** கா - சோலை. புறவு - காடு. கயம் - நீர் நிலை. அரும்ப - (மேலே கூறிய காவும் புறவும், கயங்களும், மா, தாமரை, குவளை, அசோகு, முல்லை ஆகிய மலர்களை) தோற்று விக்க. கவர்ந்து - (அம் மலர்களை மன்மதன்) பறித்து. வந்து உற உற பட்டு புதையவும் - (மன்மதன் ஏவிய மலர்க்கணைகள் அருச்சுனன் மேனியில்) வந்து நன்றாகத் தைத்துப் பதியவும். புலன் வழியால் அன்றி மேவு தன் கருத்தின் வழியிலே நின்ற விசயன் - இந்திரியங்களின் வழியிலே செல்லாமல் (சிவானுக்கிரகம் பெற வேண்டும் என்ற) தனது பொருந்திய கருத்தின் வழியில் நிலை நின்ற அருச்சுனன். (அத்தகையானை மேலும்)

அங்கிபால் வில்லும் ஏவும் (அம்பும்) பெற்ற இறைவனை - அக்கினி தேவனிடத்தே வில்லும் கணைகளும் பெற்ற குருகுலத் தலைவனை. இரதி கேள்வனும் எய்து எய்து இளைத்தனன் - மன்மதனும் (கணைகளை) ஏவி ஏவி (தனது எண்ணம் நிறைவேறாமல்) களைத்துப் போனான்.

சிவபெருமானது மோனம் கலைத்த மன்மதனால், அருச்சுனனின் தவத்தைக் குலைக்க முடியாமற் போயிற்று,—என்பதாம்.

**65.** **கூற்றினை யுதைத்த பாதமு முடுத்த**
**குஞ்சரத் துரிவையு மணிந்த**
**நீற்றொளி பரந்து நிலவெழு வடிவு**
**நிலாவெயி லனலுமிழ் விழியும்**
**ஆற்றறல் பரந்த கொன்றைவார் சடையு**
**மல்லதை யாவையுங் கருதான்**
**மாற்றமொன் றின்றி நின்றனன் வரைபோல்**
**வச்சிரா யுதன்றிரு மகனும்.**

[கூற்றினை உதைத்த பாதமும், உடுத்த குஞ்சரத்து உரிவையும் அணிந்த, நீறு ஒளி பரந்து நிலவு எழு வடிவும், நிலா வெயில் அனல் உமிழ் விழியும், ஆறு அறல் பரந்த கொன்றை வார் சடையும், அல்லதை யாவையும் கருதான், மாற்றம் ஒன்று இன்றி நின்றனன் வரைபோல் வச்சிராயுதன் திருமகனும்.]

**விளக்கம் :-** கூற்றினை உதைத்த பாதம்—(மார்க்கண்டேயன் பொருட்டு) எமனை உதைத்த சிவபெருமானது பாதம். குஞ்சரத்து உரிவை - யானைத்தோல். நீறு ஒளி பரந்து நிலவு எழு வடிவு - பூசிய திருநீற்றின் ஒளி பரவுதலால் எழும் வெண்ணிறம் உடைய திருமேனி. ஆறு - கங்கை. அறல் - நீர். அல்லது - (சிவ பெருமானது திருவுருவம்) அல்லாமல். யாவையும் (வேறு எவற்றையும்) நினையாதவனாய் இந்திரன் மகனாகிய விசயன், வாய் பேசாதவனாய் மலைபோல் அசையாமல் நின்று தவம் செய்தான்).

சிவபெருமானுக்குச் சூரியன், சந்திரன், அக்கினி ஆகிய முச்சுடர்கள் மூன்று கண்கள். ஆதலால், வெயில், நிலா, அனல் உமிழும் கண்கள், என்றார். அல்லதை, என்பதின் ஈற்றுகரம் ஐகாரமாய்த் திரிந்தது.

**66.** **அன்றர னிருந்த யோகினை யகற்றி**
**யறிவிலா தநங்கனாய் வெந்த**
**குன்றிது தடங்க ணாயிர முடையோன்**
**கூறிய கூற்றினைத் தேறி**
**இன்றவன் மதலை புரிதவங் குலைத்தா**
**லென்விளைந் திடுமென வஞ்சி**
**நின்றிலன் மதன னிற்குமோ நெற்றி**
**நெருப்பினா னீறுபட் டுள்ளோன்**

[அன்று அரன் இருந்த யோகினை அகற்றி அறிவு இலாது அநங்கன் ஆய் வெந்த குன்று இது, தடங்கண் ஆயிரம் உடையோன் கூறிய கூற்றினை தேறி இன்று அவன் மதலை புரிதவம் குலைத்தால், என் விளைந்திடும்? என்று அஞ்சி நின்றிலன், மதனன்; நிற்குமோ நெற்றி நெருப்பினால் நீறுபட்டு உள்ளோன்.]

**விளக்கம் :-** குன்று இது - (சிவபெருமானது யோகத்தை அகற்ற முயன்று அதன் பயனாய்த் தேகம் வெந்து அநங்கன் ஆயதற்கு இடமான) குன்று இது. தடங்கண் ஆயிரம் உடையோன் - இந்திரன். கூற்றினை தேறி - (அவ்விந்திரனுடைய) சொல்லை நம்பித் துணிந்து. (இன்று அவன் மகனான அருச்சுனனது தவம் குலைத்தால், என்ன விளைவு ஏற்படுமோ என்று பயந்து, மன்மதன் அங்கே நின்றிலன், அதாவது அவ்விடம் விட்டு அகன்றான்). நெற்றி நெருப்பினால் நீறுபட்டுள்ளோன் நிற்குமோ-சிவபிரானது நெற்றிக்கண் நெருப்பினால் சாம்பலானவன் அங்கே நிற்பானோ?

நெற்றி நெருப்பால் சாம்பலான மன்மதன், இப்பொழுது விசயனது சிவத்தியானத்தைக் கலைத்தால் என்ன தீங்கு விளையுமோ என்று அஞ்சி, அவ்விடம் பெயர்ந் தகன்றான், என்பதாம்.

**67 வானவர் பெருமா னேவலால் வந்த**
**வானவர் மகளிருந் தம்மால்**
**ஆனவக் கிரீடை யாவையும் புரிந்து**
**மொருபயன் பெற்றில ரகன்றார்**
**கானக முழுதும் பரிமளம் பரப்பிக்**
**கானவண் டிமிர்தரப் புகுந்த**
**வேனிலு மகன்ற தருக்கனுங் குடபால்**
**வெண்டிரை வேலைவாய் வீழ்ந்தான்.**

[வானவர் பெருமான் ஏவலால் வந்த வானவர் மகளிரும் தம்மால் ஆன அ கிரீடை யாவையும் புரிந்தும் ஒரு பயன் பெற்றிலர் அகன்றார், கானகம் முழுதும் பரிமளம் பரப்பி கான வண்டு இமிர்தர புகுந்த வேனிலும் அகன்றது, அருக்கனும் குடபால் வெள்திரை வேலைவாய் வீழ்ந்தான்.]

**விளக்கம் :-** வானவர் பெருமான் - இந்திரன். கிரீடை - விளையாட்டு. கான வண்டு - காட்டு வண்டுகள், அல்லது இசை பாடும் வண்டுகள். இமிர்தர - இசைக்க, ரீங்கரிக்க. வேனில் - வசந்த காலம். அருக்கன் - சூரியன், குடபால் - மேற்குத் திசை.

தேவ மாதரும் (மன்மதன் அகன்றபின்) அகன்றனர், வசந்தமும் அகன்றது, சூரியனும் அஸ்தமித்தான்; விசயனோ சலியாது நிஷ்டையில் இருந்தான், என்பதாம்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**68. இந்திரன் சுதன்ற னெண்ணம் யாவதென் றினிதி னெண்ணி**
**இந்திர சால மாக வேவினா ரெவரு மெய்தி**
**இந்திர நீலந் தன்னி லிறைவனுக் குரைத்தா ரந்த**
**இந்திரன் றானு மைந்தன் றவம்புரி யிருக்கை சேர்ந்தான்.**

[இந்திரன் சுதன் தன் எண்ணம் யாவது என்று இனிதின் எண்ணி, இந்திர சாலம் ஆக ஏவினார் எவரும் எய்தி, இந்திர நீலம் தன்னில் இறைவனுக்கு உரைத்தார்; அந்த இந்திரன் தானும் மைந்தன் தவம் புரி இருக்கை சேர்ந்தான்.]

**விளக்கம்** ;—இந்திரசாலம் ஆக ஏவினார் எவரும் இந்திரன் சுதன் தன் எண்ணம் யாவது என்று இனிதின் எண்ணி, எய்தி இந்திர நீலம் தன்னில் இறைவனுக்கு உரைத்தார்; அந்த இந்திரன் சேர்ந்தான், என்று அன்வயிக்க. எண்ணம் யாவது என்று இனிதின் எண்ணி - (அருச்சுனனது) மனம் எத்தன்மையது என்று நன்றாக அறிந்துகொண்டு. இந்திர சாலமாக ஏவினார் - இந்திர சாலம்போல் மனத்தை மயக்கும்படி ஏவப் பெற்ற தேவ மாதர். இந்திர நீலம் (நிலம்) தன்னில் இறைவன் - இந்திரலோகம் தன்னில் உள்ள தேவர் தலைவனான இந்திரன், (நிலம், என்பது நீலம் என்று திரிந்துளது.) அவன், தன் மகன் தவம் புரியும் குன்றம் வந்தான், என்க.

**69. விருத்தமா முனிவ னாகி விசயனை நோக்கி யாது**
**கருத்துநீ தவஞ்செய் கின்ற கார ண மென்னை யென்னத்**
**திருத்தகு சிந்தை யோடுஞ் செந்தழ லிடைநின் றோனும்**
**மருத்துவ னுருவ மாறி வந்தவா றுணர்கி லாதான்.**

[இந்திரன்) விருத்தன் மா முனிவன் ஆகி, விசயனை நோக்கி, யாது கருத்து? நீ தவம் செய்கின்ற காரணம் என்னை? என்ன, திருதகு சிந்தையோடும் செம் தழல் இடை நின்றோனும், மருத்து வன் உருவம் மாறி வந்த ஆறு உணர்கிலாதான்.]

**விளக்கம்** :- திருத்தகு சிந்தை - சிவத் தியானமாகிய நல்ல எண்ணம். மருத்துவன் - இந்திரன். வந்தவாறு உணர்கிலா தான் - இந்திரன் உருமாறி வயது முதிர்ந்த முனிவன் வேடத்தில் வந்த விதம் அறியாதவனாகிய விசயன்,—அடுத்த கவியோடு முடியும். தன் மகனிடம் அன்புகொண்ட இந்திரன், மகனது மன விறுதியை நன்கு தெளிந்துகொள்ள, ஒரு விருத்த முனிவனது வேடத்தில் அவன் முன் தோன்றி, ''எது கருத்தாக நீ தவம் செய்கின்றாய்?'' என்று கேட்டான், என்க, மருத்துவன், (மருத்வாந்) இந்திரன்.

**70. மாசறு மதிய மன்ன வாண்முக மங்கை பாகத்(து)
ஈசன்வந் தெய்து காறு மித்தவம் புரிவே னென்ன
ஆசறு கடவு ளன்ன வருந்தவர் தமக்கு மெட்டாத்
தேசவன் வருமோ வென்று சிரித்தனன் தேவர் கோமான்.**

[மாசு அறு மதியம் அன்ன வாள் முகம் மங்கை பாகத்து ஈசன் வந்து எய்து காறும் இ தவம் புரிவேன் என்ன, ஆசு அறு கடவுள் அன்ன அரு தவர் தமக்கும் எட்டா தேசவன் வருமோ! என்று சிரித்தனன், தேவர் கோமான்.]

**விளக்கம்** :—(சிவனைத் தரிசிக்கும்வரை இத் தவம் புரிவேன் என்று விசயன் கூற, (இந்திரன்) ஆசு அறு கடவுள் அன்ன - குற்றமில்லாத தேவர்களை ஒத்த. அருந்தவர்க்கும் - அரிய தவத்தைச் செய்துள்ள தவசிகளுக்கும். எட்டா - எட்டாத. தேசவன் - ஒளி வடிவை உடையவனான பெருமான், வருமோ - நீ காணுமாறு வந்து நிற்குமோ, (என்று கூறிச் சிரித்தான்) என்க. காறு, என்பது அளவுப் பொருளது. சிவபெருமான் சோதி வடிவினன், எனவே, தேசவன் என்றார்.

**71. சிரித்ததே னென்ன மீண்டுந் திருமகன் றன்னை நோக்கி
வருத்தமே யன்றி யிந்த மாதவம் பயனின் றென்றான்
உருத்திவ னவனை நோக்கி யுயிரிறு மளவு மிந்தக்
கருத்துநான் வீடே னென்றான் கடுங்கன லூடு நின்றான்.**

[சிரித்தது ஏன்? என்ன,—மீண்டும் திருமகன் தன்னை நோக்கி, வருத்தமே அன்றி இந்த மாதவம் பயன் இன்று, என்றான்; உருத்து இவன் அவனை நோக்கி, உயிர் இறும் அளவும் இந்த கருத்து நான் வீடேன் என்றான், கடும் கனல் ஊடு நின்றான்.]

**விளக்கம்** :—கடுங்கனலின் மத்தியில் நின்றவனாகிய விசயன், ''சிரித்தது ஏன்?'' என்று கேட்க, இந்திரன் மீண்டும் தன் மகனை நோக்கி, ''இத்தவம் வருத்தம் தருவதொன்றே அல்லாமல், எப் பயனையும் தருவதாகாது'', என்னலும், இவன், (விசயன்) உருத்து (கோபித்து) அவனை நோக்கி, ''உயிர் அழியும்வரை எனது எண்ணத்தை விடமாட்டேன்,'' என்று பதில் மொழிந்தான்,— என்பதாம். வீடேன்—விடேன், என்பதின் நீட்டல் விகாரம்.

**72. மைந்தனிம் மாற்றங் கூற மனனுற மகிழ்ந்து தெய்வத்
தந்தையும் விருத்த வேடந் தனையொரு கணத்தின் மாற்றி
இந்திர னாகி முன்னின் றிப்பெருந் தவத்தால் வந்து
பைந்தொடி பாகன் பாசு பதமுனக் குதவு மென்றான்.**

[மைந்தன் இ மாற்றம் கூற மனன் உற மகிழ்ந்து, தெய்வம் தந்தையும் விருத்த வேடம் தனை ஒரு கணத்தில் மாற்றி,

இந்திரன் ஆகி முன் நின்று, இ பெரு தவத்தால் வந்து பைந்தொடி பாகன் பாசுபதம் உனக்கு உதவும், என்றான்,]

**விளக்கம் :—** விசயனது மன உறுதியைக் கண்டு மனம் மகிழ்ந்த இந்திரன், தனது உண்மையான ரூபத்துடன் அவன் முன் தோன்றி, சிவபெருமான் பாசுபதக்கணை அருள்வான், என்று கூறினான், என்பதாம். பசுபதி - பசுக்களுக்கு, அதாவது ஜீவான்மாக்களுக்குத் தலைவன்.

## சிவபெருமான் தவத்தை உவத்தல்

**73. என்றுரைத் தமரர் கோமா னேகிய பின்னர் வெள்ளிக்**
**குன்றுடைப் புனிதன் பாதங் குறிப்புறு மனத்த னாகி**
**நின்றுநற் றவஞ்செய் கின்ற நெடுந்தகை நீர்மை யெல்லாம்**
**சென்றுமைக் குரிய ரான சேடியர் செப்பி னாரே.**

[என்று உரைத்து அமரர் கோமான் ஏகிய பின்னர், வெள்ளி குன்று உடை புனிதன் பாதம் குறிப்புறும் மனத்தன் ஆகி, நின்று நல் தவம் செய்கின்ற நெடு தகை நீர்மை எல்லாம் சென்று உமைக்கு உரியர் ஆன சேடியர் செப்பினார், ஏ.]

**விளக்கம் :—** புனிதன் - பரிசுத்தனான சிவபெருமான். குறிப்புறும் மனத்தனாகி - தியானம் செய்யும் மனத்தை உடையவனாய். நெடுந்தகை - மேன்மைக் குணத்தை உடைய அருச்சுனன். நீர்மை - தன்மை. அருச்சுனன் புரியும் அரிய தவத்தின் நீர்மையை உமா தேவிக்கு உரியரான பணிப்பெண்கள், அவளுக்கு உரைத்தார்,—என்பதாம். தகை - தகுதி, நன்மையின் தகுதியையுடைய குணம்.

**74. மேனைமுன் பெற்ற கிள்ளை வேலையுஞ் சேலி னோடு**
**மானையும் பொருத செங்கண் மரகத வல்லி கேட்டுத்**
**தானையுங் கரிய பேருத் தரியமு மாகச் சாத்த**
**ஆனையன் றுரித்த நக்கற் கடிபணிந் தருளிச் செய்தாள்.**

[மேனை முன் தந்த கிள்ளை, வேலையும் சேலினோடு மானையும் பொருத செங்கண் மரகத வல்லி கேட்டு, தானையும் கரிய பேர் உத்தரியமும் ஆக சாத்த ஆனை அன்று உரித்த நக்கற்கு அடி பணிந்து அருளிச் செய்தாள்,]

**விளக்கம் :—** மேனை - மேனகை. முன் பெற்ற கிள்ளை - முன்னொரு காலத்தில் தந்த கிள்ளை மொழியாளான பார்வதி. சேல் - ஒருவகை மீன். மரகத மணி போன்ற நிறத்தையுடைய பூங்கொடி போன்ற பார்வதி. தானை - அரையில் உடுக்கும் வஸ்திரம் உத்தரீயம் - மேலே அணியும் வஸ்திரம். சாத்த - சாத்திக்கொள்ள, தரித்துக்கொள்ள. ஆனை - கஜமுகாசுரன்; அல்லது தாருகவனத்து முனிவர்கள் ஏவிய யானை. நக்கன் - சிவபெருமான். அவனது அடிபணிந்து பார்வதி, அருச்சுனனது

தவநிலையை அவனுக்குத் தெரிவித்தாள், என்க. இது, அருச்சுனனுக்கு அருள் புரிய வேண்டும், என்று கூறுங் குறிப்பினது.

தாக்ஷாயணிப் பெயருடன் தக்ஷன் மகளாய் அவதரித்த தேவி, அந்த ஜன்மத்தை ஒழித்து, இமய மலையின் அதிதேவனான இமவான் மகளாகத் தோன்றினாள். இமவானது மனைவியான மேனகை அக் குழந்தையைத் தன் குழந்தையாக ஏற்றாள், என்பது புராணக் கதை. வேல் சேலொடு மானையும் பொருத கண் - வேலையும் சேலையும் மானையும் ஒத்த கண்; அல்லது அவை நலங் கெடும்படியான சிறந்த கண். கூர்மையால் வேலும், பிறழ்ச்சி யால் சேலும், பார்வையால் மானும் கண்ணுக்கு உவமை.

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

**75. ஆலமுண் டமுதம் பொழிதரு நெடுங்க**
**ணம்பிகை யருண்மொழி கேட்டு**
**நீலமுண் டிருண்ட கண்டனு மிரங்கி**
**நிரைவளைச் செங்கையாய் நெடிது**
**காலமுண் டருள்கூ ரறத்தின்மைந் தனுக்குக்**
**காற்றின்மைந் தனுக்குநே ரிளையான்**
**ஞாலமுண் டவனுக் குயிரெனச் சிறந்தோ**
**னரனெனு நாமமும் படைத்தோன்.**

[ஆலம் உண்டு அமுதம் பொழிதரு நெடு கண் அம்பிகை அருள் மொழி கேட்டு, நீலம் உண்டு இருண்ட கண்டனும் இரங்கி, நிரைவளை செம் கையாய், நெடிது காலம் உண்டு, அருள் கூர் அறத்தின் மைந்தனுக்கும், காற்றின் மைந்தனுக்கும் நேர் இளையான், ஞாலம் உண்டவனுக்கு உயிர் என சிறந்தோன், நரன் எனும் நாமமும் படைத்தோன்.]

**விளக்கம் :-** ஆலம் - விஷம், கரு நிறம். அமுதம் - அருள். (விஷத்தை உட்கொண்டு அமுதைச் சொரியும் நெடிய கண்களை உடைய உமாதேவி). அருள் மொழி கேட்டு - சொல்லி அருளிய வார்த்தையைக் கேட்டு. நீலம் - கருநீல நிறமான விஷம். நீலம் உண்டு இருண்ட கண்டன் - விஷம் உண்டு அதனால் கருமை எய்திய கழுத்தை உடைய சிவபெருமான். (அவன் நிரைவளை செங்கையாய்' என்று அம்பாளை அழைத்து) நெடிது காலம் உண்டு - அருச்சுனனது தவம் நெடுங்காலமாக உளது; (அதாவது "நீண்ட காலமாக அவன் தவம் புரிந்து வருகின்றதை அறிவேன்" என்ற பொருளது என்று நினைக்கின்றோம்.) அறத்தின் மைந்தன் - யமதர்ம ராஜனது மகனான தருமன். காற்றின் மைந்தன் - வாயு புத்ரனான வீமன். ஞாலம் உண்டவன்-திருமால். நரநாராயணர் களில் அருச்சுனன் நரன்; கண்ணன் நாராயணன்.

தருமனுக்கும் வீமனுக்கும் தம்பியும், கண்ணனுக்கு உயிர் போன்றவனும், நரன் என்ற பேர் படைத்தவனுமான விசயன் தவம் செய்வதை அறிவேன், என்று சிவபெருமான், அம்பிகையினிடம் கூறினான், என்க. பாற்கடல் கடைந்தபொழுது எழுந்த விஷத்தை உட்கொண்டு அதைக் கழுத்தில் நிறுத்திக்கொண்டதால் சிவபெருமான் கண்டங் கறுத்தவ னானான்.

**76.** **ஆடியா னனன்றன் மதலையர் விரகா**
**லாடிய சூதினுக் கழிந்து**
**காடுதா முறையுங் கடனின ரவரிற்**
**கடவுணா யகன்றரு காளை**
**நீடுபே ரமரிற் பகைவரைச் செகுக்கு**
**நினைவினா னெருப்பிடை நம்மை**
**நாடியே யரிதிற் றவம்புரி கின்றா**
**னாமிது முன்னமே யறிவோம்.**

[ஆடி ஆனனன் தன் மதலையர் விரகால் ஆடிய சூதினுக்கு அழிந்து காடு தாம் உறையும் கடனினர், அவரில் கடவுள் நாயகன் தரு காளை நீடு பேர் அமரில் பகைவரை செகுக்கும் நினைவினால் நெருப்பு இடை நம்மை நாடியே அரிதின் தவம் புரிகின்றான்; நாம் இது முன்னமே அறிவோம்.]

**விளக்கம் :-** ஆடி ஆனனன் - கண்ணாடி போன்ற முகத்தை உடைய திருதராட்டிரன். விரகு - மோசம், வஞ்சனை. சூதினுக்கு அழிந்து - சூதில் தோல்வியுற்று - தாம் காட்டில் வசிக்கும் கடமை உடையவர்கள் ஆயினர். கடவுள் நாயகன் தரு காளை - இந்திர குமாரனாகிய அருச்சுனன். நீடு பேர் அமர் - நீண்ட பெரிய பாரதப் போர். செகுத்தல் - அழித்தல். கொல்லல். பகையை அழிக்கும் எண்ணத்தில் விசயன் நம்மைக் குறித்துத் தவம் செய்கிறான்; அதை முன்னமே நாம் அறிவோம், என்று சிவ பெருமான், அம்பிகைக்குக் கூறுகின்றார். கண்ணாடி பிறரால் காணப்படும்; பிறரைக் காணும் சக்தி கண்ணாடிக்கு இலது. அது போல் திருதராட்டிரன் பிறரைக் காண முடியாத பிறவிக் குருடன் ஆதல் பற்றி, ஆடி ஆனன், என்றார். அல்லது, கண்ணாடிபோல் பளபளப்பான முகத்தினன், என்றும் பொருள் கொள்ளலாம். சூதினுக்கு, - (உருபு மயக்கம்) சூதாட்டத்தில்.

**77.** **பருகுநீர் துறந்து காற்றும்வெவ் வெயிலும்**
**பாதவங் களின்சினை யுதிர்த்த**
**சருகுமே யொழியக் காய்கனி கிழங்குந்**
**தானினி தருந்துத றவித்தான்**
**உருகுமா மனத்தை நாமுவந் திருத்தற்**
**குறைபதி யாக்கிநம மிடத்தே**
**செருகினா னுணர்வை யாவரே யிவன்போற்**
**செய்தவஞ் சிறந்தவ ரென்றான்.**

[பருகும் நீர் துறந்து, காற்றும் வெம் வெயிலும் பாதவங்களின் சினை உதிர்த்த சருகுமே ஒழிய, காய் கனி கிழங்கும் தான் இனிது அருந்துதல் தவிர்த்தான், உருகும் மனத்தை நாம் உவந்து இருத்தற்கு உறை பதி ஆக்கி, நம் இடத்தே செருகினான் உணர்வை; யாவரே இவன் போல் செய்தவம் சிறந்தவர்? என்றான்.[

**விளக்கம்** :- பருகும் நீரைத் துறந்தும், காய்கனி கிழங்கு களை உண்ணுதல் ஒழித்தும், காற்று வெயில் மரங்களிலிருந்து உதிர்ந்த சருகுகள் ஆகியவற்றை உட்கொண்டும் அர்ச்சுனன் தவம் செய்தான்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். அன்பி னால் உருகும் சிறந்த மனத்தை நாம் விரும்பி இருப்பதற்கான வாழும் இடமாக்கி, தனது உணர்வை நம்மிடத்தே பதிய வைத்தான்; இவனைப்போல் செய்தவத்தால் சிறந்தவர் வேறு எவர் இருக்கின்றனர்?—என்பது ஈற்றடிகளின் பொருள். இரண் டாவது அடியில் உள்ள **ஒழிய** என்பது **அல்லாமல்** என்ற பொருளது. பற்றற்ற யோகியரின் உள்ளக் கமலம் இறைவன் உறைதற்குரிய இடமாதல் பற்றி, ''மனத்தை நாம் உவந்து இருத்தற்கு உறைபதி யாக்கி'' என்றார்.

**78. போகமாய் விரிந்தும் போகியாய்ப் பரந்தும்**
**புலன்களின் வழிமனஞ் செலுத்தா**
**யோகியா யிருந்தும் யோகிகண் முதலா**
**முரைப்பரும் பலபொரு ளாயும்**
**ஏகமாய் நின்ற தத்துவ மறைக்கு**
**மெட்டுதற் கரியதன் வடிவில்**
**பாகமாய் விளங்கும் பைந்தொடி யுடனே**
**பரிவுடன் சின்மொழி பகர்வான்.**

[போகம் ஆய் விரிந்தும் போகி ஆய் பரந்தும், புலன்களின் வழி மனம் செலுத்தா யோகி ஆய் இருந்தும், யோகிகள் முதல் ஆம் உரைப்பு அரும் பல பொருள் ஆயும், ஏகம் ஆய் நின்ற தத்துவம் மறைக்கும் எட்டுதற்கு அறிய தன் வடிவில், பாகம் ஆய் விளங்கும் பைந்தொடியுடன் (ஏ) பரிவுடன் சில் மொழி பகர்வான்.]

**விளக்கம்** :- போகமாய் விரிந்தும் - போகப் பொருள்களாய் எங்கும் வியாபித்தும், போகியாய் பரந்தும் - அப் பொருள்களை அனுபவிக்கும் போகியாய்ப் பரவியும். புலன்களின் வழி மனம் செலுத்தா யோகியாயும் இருந்தும் - (ஆனால்) இந்திரியங்களின் வழியில் மனத்தைச் செலுத்தாத யோகநிலை உடையவனாய் இருந்தும். யோகிகள் முதலாம் உரைப்பு அரும் பல பொருளா யும் - யோகநிலையில் நிலைத்துள்ள முனிவர் முதலாகிய பலவிதப் பொருள்களாயும். ஏகமாய் நின்ற - அவ்வாறிருந்தும் எதனிலும் ஒட்டாமல் தனித்த பொருளாய் நின்ற சிவபெருமான். தத்துவ மறைக்கும் எட்டுதற்கு அறிய தன் வடிவில் - உண்மையை உட்

கொண்ட வேதங்களுக்கும் எட்டமுடியாத தனது திருமேனியில். பாகமாய் விளங்கும் பைந்தொடியுடன் - இடப்பாகத்தில் விளங்கு கின்ற உமாதேவியினிடம். பரிவுடன் சில் மொழி பகர்வான் - அன்புடன் சில வார்த்தைகளைக் கூறுவா னாயினான்.

சிருஷ்டியின்கண் பட்ட சேதனாசேதனப் பொருள்கள் அனைத்தையும் தன் சரீரமாகக் கொண்டும், அவற்றோடு ஒட்டாத தனி நிலையினனான இறைவன் ஆதலால், ''அவனைப் பல பொருள்களாக விருந்தும் ஏகமாய் நின்ற தத்துவம்'', என்றா ராயிற்று. போகப் பொருளும் போகியும் தானாக நின்றும், அவற்றோடு எந்த விதத் தொடர்பும் இல்லாத யோகி யாகும் நிலையுடைய அப் பிரான், வடிவத்தில் ஒரு பாதி பெண் வடிவங் கொண்டவன் என்று அவனது விசித்திரமான சக்தியைப் பாராட்டும் கருத்தது.

**79. கேட்டிநீ செவ்வாய்க் கிளிநிகர் மொழியாய்**
**கிரீடியைத் துணைவர்க ளுடனே**
**காட்டிலே யொதுக்கி யிளைஞருந் தானுங்**
**கடியவஞ் சனையினாற் கவர்ந்த**
**நாட்டிலே வாழ்வோ னேவலான் மூக**
**நாமதா னவனிவன் றன்னைக்**
**கோட்டிலே கொலைசெ யேனமாய் வந்திக்**
**குன்றிடை யின்றுபுக் கனனால்.**

[கேட்டி நீ, செம் வாய் கிளி நிகர் மொழியாய், கிரீடியை துணைவர்களுடனே காட்டிலே ஒதுக்கி, இளைஞரும் தானும் கடிய வஞ்சனையினால் கவர்ந்த நாட்டிலே வாழ்வோன் ஏவலால், மூக நாம தானவன் இவன் தன்னை கோட்டிலே கொலை செய் ஏனமாய், வந்து இ குன்றிடை இன்று புக்கனன் (ஆல்).]

**விளக்கம் :**—கிரீடி - அருச்சுனன். கவர்ந்த நாட்டிலே வாழ்வோன் - அபகரித்துக் கொண்ட குரு நாட்டிலே வாழ்பவனான துரியோதனன், (அவனது ஏவலால்) மூக நாம தானவன் - மூகன் என்னும் பெயருடைய அசுரன். இவன் தன்னை - தவம் செய்யும் அருச்சுனனை, கோட்டிலே கொலை செய - கொம்பினால் குத்திக் கொல்ல. ஏனமாய் - பன்றியின் உருவங் கொண்டு (இக் குன்றிடைப் புகுந்துள்ளான்).

தனது சகோதரர்கள் என்று எண்ணாமல் சூதினால் வஞ்சித்து நாட்டைக் கவர்ந்து கொண்ட துரியோதனன், வனத்தில் அவர்கள் வாழ்வதையும் பொறாதவனாய், அருச்சுனனைக் கொல்ல, அவனது ஏவலின் அமைந்த மூகா சுரன் என்பவன், பன்றி வடிவில் நமது இக் குன்றிடை வந்துள்ளான், என்று சிவபெருமான் பார்வதிக்குக் கூறினான்,—என்பதாம்.

கிரீடி - கிரீடத்தை அணிந்தவன். இனி, இந்திரன் தனது லோகத்தில் அருச்சுனனுக்குப் பிரும்மதேவன் தனக்கு அளித்த இரத்தின கிரீடத்தைச் சூட்டப்போகின்றானாதலால், வருவது உணர்ந்த சிவபெருமான், இப்பொழுதே கிரீடி என்று அழைத்தார் என்க.

**80.** **மற்றவன் விரைவி னுடனமர் மலைந்து**
**வாசவன் மதலையை வதைத்து**
**நற்றவ மகற்று முன்னமே விரைந்து**
**நாமுயிர் கவருதல் வேண்டும்**
**கொற்றவன் மதலை கேட்டன வரங்கள்**
**கொடுத்தலும் வேண்டுமென் றெழுந்தான்**
**கற்றவர் வளைத்துத் திரிபுர மெரித்தோன்**
**கற்றவர் கருத்தினாற் காண்போன்.**

[மற்று அவன் விரைவினுடன் மலைந்து வாசவன் மதலையை வதைத்து நல் தவம் அகற்றும் முன்னமே விரைந்து நாம் உயிர் கவர்தல் வேண்டும்; கொற்றவன் மதலை கேட்டன வரங்கள் கொடுத்தலும் வேண்டும், என்று எழுந்தான், கல் தவர் வளைத்து திரிபுரம் எரித்தோன், கற்றவர் கருத்தினால் காண்போன்.]

**விளக்கம் :-** மற்று : அசை. அவன் - மூகாசுரன். கொற்றவன் மதலை - ராஜகுமாரனாகிய அருச்சுனன். கேட்டன வரங்கள் - (கால வழு) கேட்பனவாகிய வரங்கள். கல் தவர் - மேரு மலையாகிய வில். கற்றவர் கருத்தினால் காண்போன் - ஞான வித்தகரால் ஞானக் கண்ணைக் கொண்டு காட்சி கொள்ளப் படுகின்றவனான சிவபெருமான், ஞான வித்தகரால் தமது அகக்கண் கொண்டு தரிசிக்கப்படுகின்றவனும், மேருவாகிய வில்லைக் கொண்டு திரிபுரம் செற்றவனுமாகிய சிவபெருமான், மூகாசுரனை விரைவில் வதைக்கவேண்டும், என்றும், அருச்சுனனுக்கு அவன் கேட்கும் வரங்களைக் கொடுக்கவேண்டும், என்றும் உமைக்குச் சொல்லி, அக் காரியங்களைச் செய்து முடிக்க எழுந்தான்,—என்பதாம். கற்றவர் என்பது ஈற்றடியில் வேறு வேறு பொருளில் வந்துளது, மடக்கு என்னும் சொல்லணியாகும்.

**81.** **நனைமலர் சிதறித் தொழுதுமுன் னின்ற**
**நந்திமே னயனம்வைத் தருளி**
**வினைபடு கேழல் வேட்டைநா மின்றே**
**வேடரா யாடுதல் வேண்டும்**
**நினைவுற வெமது கணத்தொடிக் கணத்தே**
**நீயுமவ் வுருக்கொளு கென்று**
**மனைவிரிந் தானுங் கிராதர்தங் குலத்து**
**மகிழ்நனும் வனிதையு மானார்**

[நனைமலர் சிதறி தொழுது முன்நின்ற நந்திமேல் நயனம் வைத்து, வினைபடுகேழல் வேட்டை நாம் இன்றே வேடர் ஆய் ஆடுதல் வேண்டும்; நினைவு உற எமது கணத்தொடு இ கணத்தே நீயும் அ உரு கொளுக, என்று மனைவியும் தானும் கிராதர் தம் குலத்து மகிழ்நனும் வனிதையும் ஆனார்.]

**விளக்கம் ;**—நனை மலர் - நனைந்த மலர். சிதறி - தூவி. அதாவது சிவபெருமானை அருச்சித்து. நயனம் வைத்து - நந்தியை நோக்கி. நாம் இன்றே வேடராய் வினைபடு கேழல் வேட்டை ஆடுதல் வேண்டும், என்று இயைக்க. வினைபடு கேழல் - தீய வினையில் பொருந்திய பன்றி, நினைவு உற - (எமது) நினைவோடு பொருந்த, (நீயும் நமது சணத்தோடு வேடர் உருவங் கொள்க, என்று நந்திக்குச் சிவபெருமான், கூறினான், என்க.) (அவ்வாறு நந்தி தேவனுக்குக் கூறிய சிவபெருமான்) தானும் தேவியோடு வேடர் குலம் பிறந்த கணவனும் மனைவியுமாக உருக்கொண்டார்,—என்பது ஈற்றடியின் பொருள். மகிழ்நன் - கணவன்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**82.** **என்றபொழு தினினந்தி முந்திமுதற்**
**கூற்றுதைத்த விருதாள் போற்றி**
**வென்றிபுனை கணநாதர்க் குரைசெய்தா**
**னவர்களுமவ் வேடங் கொண்டார்**
**கொன்றைகமழ் முடியோனும் பிஞ்ஞகத்தைப்**
**பின்னல்படு குஞ்சி யாக்கித்**
**துன்றுமயிற் பீலிநெடுங் கண்ணிதிரு**
**நெற்றியுறச் சுற்றி னானே.**

[என்ற பொழுதினில் நந்தி, முந்தி முதல் கூற்று உதைத்த இருதாள் போற்றி, வென்றி புனை கணம் நாதர்க்கு உரை செய்தான், அவர்களும் அ வேடம் கொண்டார்; கொன்றை கமழ் முடியோனும் பிஞ்ஞகத்தை பின்னல் படு குஞ்சி ஆக்கி, துன்று மயில் பீலி நெடுங் கண்ணி திரு நெற்றி உற சுற்றினானே.]

**விளக்கம் ;**—முந்தி - விரைந்து. முதல் - முதலில். கூற்று உதைத்த இருதாள் - மார்க்கண்டேயனுக்காக யமனை உதைத்த சிவபெருமானது திருவடிகள். சிவபெருமான் பணித்ததும், அவரது திருவடிகளை முதலில் தொழுது, அதன்பின், வேடங் கொள்ளுமாறு கணநாதர்க்குக் கூறினான், என்பதாம். பிஞ்ஞகம் - முடி, சடை, பின்னல் படு குஞ்சி ஆக்கி - பின்னுதல் செய்த கூந்தலாக மாற்றி. துன்று மயில் பீலி - நெருங்கிய மயில் இறகு. நெடுங் கண்ணி - (அம் மயில் இறகினால் ஆன) நீண்ட மாலை. நெற்றி உற சுற்றினான் - (அம்மாலையை) நெற்றியில் பொருந்தச் சுற்றிக் கொண்டான். நந்தியும் கணநாதர்களும் வேடராகக் கோலங் கொள்ள, ஐயனும் கோலங் கோண்டான், என்க.

**83.** நீலமணித் திருக்கண்ட நிலவெழவே
பலகறைப்பூ ணிறையக் கட்டிக்
கோலமணிக் குழைகளினுங் குழையாகப்
பிணையன்மலர் கொண்டு சாத்தி
சேலையெனப் புலியதளுந் திருமருங்கி
லுறச்சேர்த்திச் செய்ய பைம்பொன்
காலிணையிற் செருப்பணிந்து செய்யதிரு
வடிவுமிகக் கரிய னானான்.

[நீலம் மணி திரு கண்டம் நிலவு எழவே பல கறை பூண் நிறையை கட்டி, கோலம்மணி குழைகளினும் குழை ஆக பிணையல் மலர் கொண்டு சாத்தி, சேலை என புலி அதளும் திருமருங்கில் உற சேர்த்தி, செய்ய பைம்பொன் கால் இணையில் செருப்பு அணிந்து செய்ய திரு வடிவு மிக கரியன் ஆனான்.]

**விளக்கம் :**—நீலமணி போன்ற வண்ணமுடைய கழுத்தில், நிலவு போன்ற ஒளி உண்டாகும்படி பல நிறமுள்ள ஆபரணங்களை மிகுதியாக அணிந்து, என்பது முதலடியின் பொருள். அழகிய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற குண்டலங்களைக் காட்டிலும் சிறந்த குண்டலம் ஆகும்படி தொடுத்த மலர்களைக் (காதில் குண்டலமாக) அணிந்து, என்பது இரண்டாவது அடியின் பொருள். பிணையல் மலர் - தொடுக்கப்பெற்ற மலர். சேலை - ஆடை. புலி அதள் - புலித் தோல். திருமருங்கில் உற சேர்த்தி - அழகிய இடுப்பில் (புலித் தோலை) நன்றாகக் கட்டி. செய்ய பொன் - சிறந்த பொன் ஆபரணம். செய்ய திருவடிவு மிக கரியன் ஆனான் - (தனது) சிவந்த திரு உருவம் மிகவும் கறுத்தவனானான். சிவபெருமான் கொண்ட வேட்டுவக் கோலத்தின் வர்ணனை இது.

**84.** இடக்கைமலர் வரிசிலையும் வலக்கைமலர்ப்
பாணமும்வெந் நிடையே பாணம்
அடக்கியவெங் கொடுவரித்தோ லாவநாழி
கையுமிக வழகு கூரக்
கடக்களிறன் றுரித்தபிரான கண்டவர்கள்
வெருவரமுன் கொண்ட கோலம்
தொடக்கியுரை செயநினைக்கி லாயிரநா
வுடையோற்குஞ் சொல்ல லாமோ.

[இடம் கை மலர் வரிசிலையும் வலம் கை மலர் பாணமும், வெந் இடையே பாணம் அடக்கிய வெம் கொடு வரி தோல் ஆவம் நாழிகையும், மிக அழகு கூர, கடம் களிறு அன்று உரித்த பிரான் கண்டவர்கள் வெருவர முன் கொண்ட கோலம், தொடக்கி உரை செய நினைக்கில் ஆயிரம்நா உடையோற்கும் சொல்லல் ஆமோ.]

**விளக்கம் :-** சிவபெருமான் கொண்ட கோலத்தின் சிறப்பைக் கவி கொண்டாடும் கூற்று இது. இடக்கை வரி சிலை. வலக்கை அம்பு. வெந்நிடை-முதுகினிடத்தே. கொடு வரி (புலி) தோல் ஆவம் நாழிகை-புலித் தோலாலாகிய அம்புறாத் தூணி. (ஆவ நாழிகை - அம்புப் புட்டில்) மிக அழகு கூர - அழகு மிகப் பொருந்த வும். கண்டவர்கள் வெருவர - கண்டவர்கள் அஞ்சும்படியாகவும். முன் கொண்ட கோலம் - சிவபெருமான் விரைவில் கொண்ட வேடம். அதை ஆரம்பித்து வருணிக்க ஆயிரம் நாவுடைய ஆதி சேஷனுக்கும் முடியாது,—என்பதாம். சிவபெருமானது வில் **பினாகம்** என்ற பெயரது.

வேறு

**86. வரையரசன் றிருமடந்தை வனமுலைமேன்**
**மணிக்குன்றி வடமுஞ் செங்கை**
**நிரைவளையும் புலிப்பல்லா னிறந்திகழ்மங்**
**கலப்பூணு நீல மேனி**
**விரையகிலி னறுஞ் சாந்தும் விரித்த தழைப்**
**பூந்துகிலும் வேட மாதர்**
**நிரை நிரையே தனைச் சூழ நின்றவடி**
**வழகினுக்கு நிகர்வே றுண்டோ.**

[வரை அரசன் திரு மடந்தை வன முலைமேல் மணி குன்றி வடமும், செம் கை நிரை வளையும், புலி பல்லால் நிறம் திகழ் மங்கலம் பூணும், நீலம் மேனி விரை அகிலின் நறு சாந்தும், விரித்த தழை பூந்துகிலும், வேடமாதர் நிரை நிரையே தனை சூழ நின்ற வடிவு அழகினுக்கு நிகர் வேறு உண்டோ.]

**விளக்கம் :-** உமாதேவியார் கொண்ட வேட்டுவக் கோவத் தின் வருணனை இது. வரை அரசன் திருமடந்தை - பார்வதி. குன்றி மணி வடம் - குன்றி மணிகளைக் கோத்துச் செய்த மாலை. நிரை - வரிசை. புலி பல்லால் நிறம் திகழ் மங்கலப் பூண் - புலியின் பற்கள் கோக்கப்பெற்று ஒளி விளங்கும் மங்கல நாணாகிய தாலி. விரித்த தழை பூந்துகில் - மரத் தழைகளால் ஆன அழகிய சேலை. வேட மாதர் நிரை நிரையே தனை சூழ - வேட்டுவப் பெண்கள் வரிசை வரிசையாக (கூட்டமாக) தன்னைச் சூழ்ந்திருக்க. நின்ற - வேட்டு வச்சியின் வேடத்தில் தோன்றி நின்ற. வடிவழகினுக்கு-திரு மேனியின் அழகிற்கு. நிகர் வேறு உண்டோ-ஒப்பு வேறொன்று உள தோ, (இல்லை என்றபடி). மங்கலப்பூண் - திருமாங்கல்யம், அல்லது மங்கலத்தைக் குறிக்கும் ஓர் ஆபரணம்.

**87. யாரேனுந் தனைத்தேட வளித்தருளு**
**மிருபாதத் தொருவ னந்தப்**
**போரேனந் தனைத்தேடிக் கணங்களுடன்**
**புறப்பட்டான் புனங்க ளெல்லாம்**

**சீரேனல் விளைகிரிக்குத் தேவதையாங்**
**குழவியையுஞ் செங்கை யேந்திப்**
**பாரேனை யுலகனைத்தும் பணிவுடனே**
**புகழ்ந்திடத்தன் பதிபின் வந்தாள்.**

[யாரேனும் தனை தேட அளித்து அருளும் இரு பாதத்து ஒருவன், அந்த போர் ஏனம் தனை தேடி கணங்களுடன் புறப்பட்டான், புனங்கள் எல்லாம் சீர் ஏனல் விளை கிரிக்கு தேவதை ஆம் குழவியையும் செம் கை ஏந்தி, பார் ஏனை உலகு அனைத்தும் பணிவுடனே புகழ்ந்திட தன் பதி பின் வந்தாள்.]

**விளக்கம்** :- யாரேனும் தன்னை அன்புடன் தேடி நிற்க, அவர்களுக்குத் தன் அருளைத் தந்தருளும் இரண்டு திருவடிகளை உடைய சிவபெருமான், அருச்சுனனோடு போர் செய்ய வந்துள்ள மூகாசுரனாகிய பன்றியைத் தேடிக்கொண்டு தனது வேடி உருக் கொண்ட கணங்களுடனே வேட்டைக்குப் புறப்பட்டான்; மலைச் சாரல் புனங்களில் எல்லாம் சிறந்த தினைப் பயிர் விளையும் மலைக்குரிய தெய்வமான தனது புதல்வனான குழந்தை முருகனைச் செங்கையிலே ஏந்திக்கொண்டு, மற்ற உலகங்கள் எங்கும் உள்ளவர்களும் பணிவுடன் தன்னைத் துதிக்குமாறு, தன் பதியான சிவபிரானுக்குப் பின்னே (வேட்டுவக் கோலத்தில்) வந்தாள்,—என்பது பொருள். தன்னை நாடும் அன்பருக்கு அருள் செய்வதையே தொழிலாகக் கொண்ட பெம்மான், வேட வடிவத்தில் மனைவியும் கணநாதர்களும் பின்தொடரப் பார்த்தனைப் பகைத்து வந்த பன்றியைத் தேடினனாய்ப் புறப்பட்டான், என்பதாம். தேவர் பகைவரான சூரபத்மாதியரை அழித்துத் தேவர்களை ரட்சித்த முருகனைத் தந்தவ ளானபடியால், பூலோகத்தாரோடு, ஏனை உலகத்தாரும் பார்வதியைப் பணிவுடன் போற்றினார், என்க. **ஏனை**, என்பது, **பிறிது** என்ற பொருளது. முருகன் குறிஞ்சி நிலத்தின் கடவுளாதலால், அவனைக் **கிரிக்கு (மலைக்கு) த் தேவதை** என்றார்.

வேறு

**88. அனந்தவே தமுமிறைவ னேவலினான்**
**ஞாளிகளா யருகு சூழ**
**அனந்த கோடியிற்கோடி கணநாதர்**
**வேட்டுவரா யருகு போத**
**அனந்தனா லினித்தரிக்க வரிதரிதிப்**
**பூதலமென் றமரர் கூற**
**அனந்தமா முகமாகி யடிச்சுவடு**
**நோக்கினா னடவி யெல்லாம்.**

[அனந்தம் வேதமும் இறைவன் ஏவலினால் ஞாளிகளாய் அருகு சூழ, அனந்தம் கோடியின் கோடி கணநாதர் வேட்டுவராய் அருகு

போத, அனந்தனால் இனி தரிக்க அரிது அரிது இ பூதலம் என்று அமரர் கூற, அனந்தம் மா முகம் ஆகி அடி சுவடு நோக்கினான் அடவி எல்லாம்.]

**விளக்கம் :-** அனந்தம் - எல்லையில்லாத, அளவற்ற, ஞாளி - நாய். கோடியின்கோடி - கோடியினும் பல கோடிகள் ஆகிய. (மிகப் பலவாகிய) அனந்தன் - ஆதிசேஷன். முகம் - பக்கம், இடம், திசை, வழி. மா முகம் ஆகி - பெரிய பல இடங்களிலும், அல்லது வழிகளிலும் தேடுவதாகி. அடவி - காடு. சிவபெருமான் வேதங்களை நாய்களாகக் கொண்டு தனது பரிவாரங்களோடு பல விடங்களிலும், பன்றியின் அடிச்சுவட்டைத் தேடிப் பார்த்தான், என்பதாம். சிவபெருமானைத் தொடர்ந்த பரிவாரங்களின் மிகுதியைத் தெரிவிக்க, ''அனந்தனால் பூமியைத் தாங்குதல் அரிது'', என்றார். அரிது, அரிது என்ற அடுக்கு, தேற்றம்.

**89. மூகதான வனிவன்மேன் முந்தியுயிர்**
**கவருமெனுஞ் சிந்தை யானப்**
**பாகசாத னிதவஞ்செய் பாக்கியபூ**
**மியைநோக்கிப் பரிவி னோடும்**
**ஏகசாப மும்வணக்கி யேகினா**
**னேகுதலு மிலங்கு வெண்ணீற்(று)**
**ஆகனா னோக்கப்பட் டணுகியதா**
**லருந்தவன்மே லந்த வேனம்.**

[மூக தானவன் இவன் மேல் முந்தி உயிர் கவரும் எனும் சிந்தையான், அ பாகசாதனி தவம் செய் பாக்கிய பூமியை நோக்கி பரிவினோடும், ஏக சாபமும் வணக்கி ஏகினான் ; ஏகுதலும், இலங்கு வெள் நீறு ஆகனால் நோக்கப்பட்டு அணுகியது (ஆல்) அருந்தவன் மேல் அந்த ஏனம்.]

**விளக்கம் :-** பாகசாதனி - இந்திரனின் குமாரனாகிய அருச்சுனன். பாக்கிய பூமி - புண்ணிய பூமி, சித்தி தருதற்குரிய இடம். ஏக சாபம் - ஒப்பற்ற வில். இலங்கு வெள் நீறு ஆகன் - திருநீறு தரித்த திருமேனியான சிவபெருமான். அருந்தவன் - அருச்சுனன். மூகாசுரன், தான் அவனைக் காணுமுன்பே அருச்சுனனைக் கொன்றுவிட்டால் என் செய்வது என்ற எண்ணத்துடன் வளைத்த வில்லோடு அருச்சுனன் தவம் செய்யும் பூமியை நோக்கி விரைகையில் காணப்பட்ட அந்தப் பன்றி, அருச்சுனனை நெருங்கியது, என்பதாம். பாகன் என்னும் அசுரனைக் கொன்றதினால், இந்திரன், **பாகசாதனன்**, எனப்பட்டான். அவனது மகன் **பாக சாதனி** ஆனான்.

**90. அதிர்ந்துவரு கேழலைக்கண் டருந்தவத்தை**
**யழிக்குமென வஞ்சி நாளும்**
**உதிர்ந்தசரு குணவொழிய வுணவிலான்**
**விரைவினிற்றன் னொருவில் வாங்கி**
**முதிர்ந்தசினத் துடனெய்தான் முகம்புதைய**
**வக்கணைக்கு முன்னே யண்டம்**
**பிதிர்ந்திடவின் னாணெறிந்து வேடனத**
**னபராங்கம் பிளக்க வெய்தான்.**

[அதிர்ந்து வரு கேழலை கண்டு, அரு தவத்தை அழிக்கும் என அஞ்சி, நாளும் உதிர்ந்த சருகு உணவு ஒழிய உணவு இலான் விரைவினில் தன் ஒருவில் வாங்கி முதிர்ந்த சினத்துடன் எய்தான் முகம் புதைய, அ கணைக்கு முன்னே, அண்டம் பிதிர்ந்திட வில் நாண் எறிந்து வேடன் அதன் அபராங்கம் பிளக்க எய்தான்.]

**விளக்கம் :-** நாளும் - தினந்தோறும். உதிர்ந்த சருகு உணவு ஒழிய உணவு இலாதான் - உதிர்ந்த சருகுகள் **அ**ல்லாமல் வேறு உணவு இல்லாதவனான விசயன், அண்டம் பிதிர்ந்திட (சிவபெருமான் எழுப்பிய நாணொளியால்) உலகம் பிளவுறும்படி. அபராங்கம் - பின்புற உறுப்பு, (இதற்கு எதிர்ப்பதம் பூர்வாங்கம்). தவத்தைப் பன்றி கெடுக்கும் என்று அஞ்சின விசயன், அதன் முகத்தில் தைக்கும்படி ஒரு பாணத்தைப் பிரயோகம் செய்தான். அதன்முன் வேட வடிவங்கொண்ட பிரான் அப் பன்றியின் அபராங்கம் பிளக்கும்படி ஒரு கணையைச் செலுத்தினான், என்க.

**91 இருவருமே வியவாளி யுடனேபட்**
**டுடலுருவி யேனம் வீழ**
**வெருவருமா றடவியெலாந் தடவிவரு**
**வெஞ் சிலைக்கை வேடன் சேனை**
**ஒருவன்முத லெய்திருக்க வவ்விலங்கை**
**நீயெய்த துரனோ வென்று**
**பொருவருமா தவம்புரியும் புருகூதன்**
**மதலையுடன் பூச லிட்டார்.**

[இருவரும் ஏவிய வாளி உடனே பட்டு உடல் உருவி ஏனம் வீழ, வெருவரும் ஆறு அடவி எலாம் தடவி வரு வெம் சிலை கை வேடன் சேனை, ஒருவன் முதல் எய்து இருக்க, அ விலங்கை நீ எய்தது உரனோ, என்று, பொருவரு (பொருவு - அரு) மா தவம் புரியும் புருகூதன் மதலையுடன் பூசல் இட்டார், (ஏ).]

**விளக்கம் :-** உடனே பட்டு - ஒரே காலத்தில் பட்டு. உருவி - உருவ (எச்சத்திரிபு). வெருவமாறு - (கண்ட பிராணிகள்) அஞ்சும் படி. தடவி வந்த வெம் சிலை கை வேடன் - தேடிக்கொண்டு வந்த சிவபெருமான். சேனை - சிவகணம். பொருவரு - நேரில் லாத. புருகூதன் - இந்திரன். பூசல் இட்டார் - சண்டை செய்

தார்கள், அதாவது சண்டைக்கு இழுத்தனர். இலக்கை, என்ப திற்குப் பதிலாக விலங்கை என்றும் பாடம் உளது. உரனோ, என்பது 'வலிமையோ', என்றும், 'வலிமைச் செருக்கோ'. என்றும் பொருள்படும்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**92. புராத னாகம வேத கீதபு ராண ரூபமொ ழித்துவெம்**
**கிராத னாகிய வடிவு கொண்டகி ரீச னோடுரை செய்குவான்**
**விராத னாதிநி சாச ரேசரை வென்று முச்சிக ரத்தின்மேல்**
**இராத வாறட லமர்பு ரிந்தவி ராம னேநிக ரேவினான்.**

[புராதனம் ஆகமம் வேதம் கீதம் புராணம் ரூபம் ஒழித்து வெம் கிராதன் ஆகிய வடிவு கொண்ட கிரி ஈசனோடு உரை செய்கு வான், விராதன் ஆதி நிசாசர ஈசரை வென்று முச்சிகரத்தின்மேல் இராத ஆறு அடல் அமர் புரிந்த இராமனே நிகர் ஏவினான்.]

**விளக்கம் :-** விராதனாதி.......... ஏவினான், புராதனாகம...... உரை செய்குவான்,—என்பது அன்வயம். விராதன் முதலான அசுரத் தலைவர்களை வென்று, மூன்று சிகரங்களை உடைய திரிகூட மலையில் இருந்த இலங்கை அரக்கர் எவரும் இல்லாதபடி கொடிய போர் புரிந்த தசரத ராமனையே ஒத்த சரத் தொழில் வலிமையினனான அருச்சுனன்,—என்பது ஈற்றடிகளின் பொருள், (சரத் தொழில் வல்லவனான விசயன்). வேடனாகி வந்த சிவ பெருமானுக்குக் கூறுவானாயினான். புராதனம் - பழமையான. ஆகமம் - ஆகம நூல்களிலும். வேத கீதம் - இசையோடு கூடிய வேதப் பாடல்களிலும். புராணம் - பழமையான புராணங்களி லும். (சொல்லப்பெற்ற) ரூபம் - உண்மையான வடிவத்தை. ஒழித்து - அகற்றி. வெம் கிராதன் ஆகிய வடிவு கொண்ட - கொடிய வேடனாகிய உருவத்தைக் கொண்ட. கிரீசனோடு உரை செய்குவான் - கயிலையம் கிரியின் தலைவனான சிவ பெருமானுக்கு எதிர் மொழிவானாயினான் தன்பால் சரண் புகுந்த பக்தர்களை ரட்சித்தற்கு இறைவன், தன்னைத் தாழ்த்திக் கொள்ளவும் செய்வான், என்பது கருத்து. நிசாசரர் - இரவில் சஞ்சரிப்பவர், அசுரர், இராக்கதர். அவர்களுக்கு இரவில் வலிமை அதிகம். **ஆகமம்** என்பது சைவ சமயத்திற்குரிய சிறந்த நூல். எனவே, அது வேதத்திற்கு முன்னே கூறப்பட்டது.

**93. முன்பு விட்டவென் வாளி கேழன்மு கம்பி ளந்துபி னுருவநீ**
**பின்பு விட்டச ரஞ்சி ரத்திடை யுருவு மாறுபி ளந்ததால்**
**வன்பொ டிப்படி புகலு கின்றது வன்மை யோதிறல் வின்மையோ**
**என்பெ யர்ப்பொறி யேவு பாரித னுடலி னீ விடு மேவுபார்.**

[முன்பு விட்ட என் வாளி கேழல் முகம் பிளந்து பின் உருவ, நீ பின்பு விட்ட சரம் சிரத்திடை உருவும் ஆறு பிளந்தது, ஆல், வன்பொடு இப்படி புகலுகின்றது வன்மையோ, திறல் வின்மையோ! என் பெயர் பொறி ஏவு பார், இதன் உடலில் நீ விடும் ஏவு பார்.]

**விளக்கம் :-** வன்பு - கொடுமை, பகை. வன்மை - தேக பலம். வின்மை - (வில் - மை) வில் தொழில் வல்லமை. ஏவு - அம்பு. அம்பு என்ற பொருளுடைய **ஏ** என்னும் பெயர்ச்சொல், உகரச் சாரியை பெற்று **ஏவு** என்று நின்றது. ''நான் முன்னே விட்ட அம்பு பன்றியின் முகத்தைப் பிளந்தது, பின்னே நீ விட்ட அம்பு சிரத்தில் துளை உண்டாகும்படி பிளந்தது. அவ்வாறாக, நீங்கள் என்னைச் சண்டைக்கு இழுப்பதற்குக் காரணம், உடல் வலியா, அல்லது, வில் தொழில் வல்லமையா? என் பெயர் அடையாளமாகப் பொறித்த என் அம்பு தைத்த இடத்தையும், நீ விட்ட அம்பு தைத்த இடத்தையும் பார். வீண் சண்டை வேண்டா'', என்று அருச்சுனன் சிவபிரானுக்குக் கூறினான், என்க. முன்பு - முதலில், அல்லது முன்புறத்தில். பின்பு - பின்புறத்தில், அல்லது அர்ச்சுனனது அம்பு தைத்த பின்பு. அருச்சுனன், தானே முதலில் அம்பு செலுத்தியவன், என்ற எண்ணத்தில் பேசுவானா யினான். முன்பு, பின்பு: முரண் தொடை. ஒகாரங்கள், ஐயத் தோடு வினாவும் ஆகும்.

**94. எனக்க ருந்தவ முயற லாலுதிர் சருக லாலுண வில்லையால்**
**உனக்கு முன்படை வேட ருக்குநல் லுண்டி யாமிது**
**கொண்டுபோ**
**வனக்கு றும்பொறை நாட வுன்படை வலிமை கொண்டுவ**
**ழக்கறச்**
**சினக்கில் வெங்கணை விடுவன் யானுயர் திசைதொ**
**றுந்தலை சிந்தவே.**

[எனக்கு அரு தவம் முயறலால் உதிர் சருகு அலால் உணவு இல்லை ஆல், உனக்கும் உன் படை வேடருக்கும் நல் உண்டி ஆம் இது, கொண்டு போ; வனம் குறும்பொறை நாட, உன் படை வலிமை கொண்டு வழக்கு அற,சினக்கில் வெம் கணை விடுவன் யான் உயர் திசை தொறும் தலை சிந்தவே.]

**விளக்கம் :-** வனக் குறும் பொறை நாட, என்று அருச்சுனன், வேட வடிவங்கொண்ட சிவபிரானை அழைக்கின்றான். காடுகள் சூழ்ந்த சிறு குன்றுகளை உடைய நாட்டின் தலைவனே, என்பது பொருள். வழக்கு அற - நியாயம் இல்லாமல். சினக்கில் - சினந்து போருக்கு இழுப்பாயாகில். உயர் திசை - உயர்ந்த திக்குகள். ''நான் சருகை உண்பவன். எனவே, உனக்கும் உன் படையினருக்கும் இப் பன்றி நல்ல உணவாகும். எடுத்துக் கொண்டு போ. நியாயம் இல்லாமல், படை வலிமை காரணமாக என்னைப்

போருக்கு இழுப்பாயாயின், திசை தொறும் உங்கள் தலை சிதறும் படி கணைகள் தொடுப்பேன்'', என்றான் அருச்சுனன், என்பதாம். குறும் பொறை - குறிஞ்சி நிலத்து ஊர், என்றும் பொருள் கொள்ள லாம்.

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

**95.** **என்றமொழி செவிப்படலு மெயினர்க் கெல்லா**
**மிறைவனாகி யவெயின னிவனை நோக்கிப்**
**பன்றிபெரு மோகரத்தோ டின்றுன் னாவி**
**பருகியிடு மெனமிகவும் பயப்பட் டாயோ**
**நின்றுபெருந் தவமுயல்வோர் தாங்கள் கொண்ட**
**நினைவொழியப் புறத்தொன்று நினைவ ரோசொல்**
**பொன்றிடினு நீயறியப் பசுத்தோல் போர்த்துப்**
**புலிப்பாய்ச்சல் பாய்வரோ புரிவி லாதாய்.**

[என்ற மொழி செவி படலும் எயினர்க்கு எல்லாம் இறைவன் ஆகிய எயினன் இவனை நோக்கி, பன்றி பெரு மோகரத்தோடு இன்று உன் ஆவி பருகி இடும் என மிகவும் பயப்பட்டாயோ? நின்று பெருதவம் முயல்வோர் தாங்கள் கொண்ட நினைவு ஒழிய புறத்து ஒன்று நினைவரோ, சொல்; பொன்றிடினும், நீ அறிய, பசு தோல் போர்த்து புலி பாய்ச்சல் பாய்வரோ, புரிவு இலாதாய்.]

**விளக்கம் :-** செய்யுள் மிக சுலபமானதே, எயினன் - சிவ பெருமான், இவன் - அருச்சுனன். மோகரம் - ஆரவாரம், பேரொலி. நின்று பெருந்தவம் முயல்வோர் பொன்றிடினும், தாங்கள் கொண்ட நினைவு ஒழிய புறத்தொன்று நினைவரோ, புரிவு இலாதாய், நீ அறிய சொல்; பசி தோல் போர்த்து புலி பாய்ச்சல் பாய்வரோ! - என்று ஈற்றடிகளை அன்வயிக்க. பொன்றிடினும் - சாக நேர்ந்தாலும், புரிவு இலாதாய் - உண்மை யான அன்பு இல்லாதவனே, அறிய - தெரியும்படி. ''பசுத்தோல் போர்த்த புலி நீ'' என்றும், ''நீ செய்வது உண்மையான தவம் அன்று'' என்றும் சிவபெருமான், அருச்சுனனை ஏசினன் என்ப தாம். ''தனக்கு எவரும் துன்பம் செய்யாதிருக்கும் பொருட்டுப் பசுத்தோலைப் போர்த்திக்கொண்டு இரையைக் கண்டக்கால், தாவிக் கொல்லும் புலி போல், தவவேடத்தை மேற்கொண்டு, குரூரமான கொல்லும் தொழிலைச் செய்தாய்'', என்று சிவபெருமான் இடித் துரைக்குங் கருத்தது செய்யுள். சாந்தமான தவத்துறை படிந்த மேலோர், கொடுமையான போர்த் தொழிலைச் செய்யப் புகார், என்பதை உபமான வாயிலாகக் கூறும் இது **பிறிது மொழிதலின்** பாற்படும்.

**96.** **மறையவனோ வொருகுடைக்கீழ் வையங் காக்கு**
**மன்னவனோ வைசியனோ வடிவ மாறிப்**
**பொறையுடனே தவம்புரியு மவுண மாக்கள்**
**புத்தேளிர் நிருதரிலோர் புறத்துளானோ**

**நிறைவுடன்மெய்ப் பிறைபோல வடிவந் தேய்ந்து**
**நெருப்பிடைநீ நிற்கின் றாய் நெடுநா ளுண்டு**
**குறையுனக்கி யாதுரையென் றா னென்ற போதக்**
**குருகுலநா தனுந்தன்னைக் கூறினானே**

*[மறையவனோ, ஒரு குடைகீழ் வையம் காக்கும் மன்னவனோ, வைசியனோ, வடிவம் மாறி பொறையுடனே தவம் புரியும் அவுண மாக்கள், புத்தேளிர், நிருதரில் ஓர் புறத்து உளானோ? நிறை வுடன் மெய் பிறைபோல் வடிவம் தேய்ந்து நெருப்பு இடை நீ நிற்கின்றாய் நெடு நாள் உண்டு, குறை உனக்கு யாது உரை என்றான்; என்ற போது அ குருகுலம் நாதனும் தன்னை கூறி னான், (ஏ)]*

**விளக்கம் :-** *நீ அந்தணனா, அரசனா, வைசியனா? அல்லது, உருவம் மாறி பொறுமையுடன் தவம் செய்யும் அசுரமக்கள், தேவர், அரக்கர் ஆகியவர்களில் ஒரு வகுப்பைச் சேர்ந்தவனா? - என்பது முதலிரண்டடிகளின் பொருள். அவுண மாக்கள் - அசுர மக்கள். புத்தேளிர் - தேவர். நிருதரில் - அரக்கர் ஆகியவர் களில், நிறைவுடன்-தவத்திற்குரிய இலக்கண நிறைவோடு. பிறை மெய்போல் - சந்திரனது உருவம்போல். வடிவம் தேய்ந்து - உடல் இளைத்து. நெடுநாள் உண்டு - நெடுங்காலமாக. தீயிடை நிற்கின்றாய். உனக்குக் குறை யாது? என்று வேடவடிவங் கொண்ட சிவபெருமான் கேட்டான்; குருகுலத் தலைவனான அருச்சுனனும், தனது வரலாற்றைக் கூறினான்,—என்பதாம். நாளை உண்ணல் - காலத்தைக் கழித்தல்; ஆகவே, 'நெடு நாள் உண்டு' என்பது 'நீண்டகாலமாக' என்ற பொருளதாகின்றது. எண்ணியது நிறைவேறாமை,* **குறை**.

## சிவபெருமான் போருக்கு அழைத்தல்

**97. கூறியசொற் கொண்டறிந்து வேடன் மீண்டுங்**
**குருகுலத்தோ ரைவருளுங் குனிவிற் கற்றுச்**
**சீறிவரு துருபதனைத் தேரிற் கட்டிச்**
**சென்றுகுரு தக்கணைசெய் சிறுவனீயோ**
**வீறியவெங் குலத்திலொரு வேடன் தன்னை**
**வின்மைபொறா தவன்றடக்கை விரலுங் கொண்டாய்**
**பேறறவன் றொருமுனிவன் வார்த்தை கேட்டுப்**
**பிளந்தனைபல் வேடுவரைப் பிறைவா யம்பால்.**

*[கூறிய சொல் கொண்டு அறிந்து, வேடன் மீண்டும் குருகுலத் தோர் ஐவருளும் குனிவில் கற்று, சீறி வரு துருபதனை தேரில் கட்டி, சென்று குரு தக்கணை செய் சிறுவன் நீயோ? வீறிய எம் குலத்தில் ஒரு வேடன் தன்னை, வின்மை பொறாது அவன் தடக்கை விரலும் கொண்டாய், பேறு அற அன்று ஒரு முனிவன் வார்த்தை கேட்டு பிளந்தனை பல் வேடுவரை பிறை வாய் அம்பால்.]*

**விளக்கம் :**—வீறிய - வீரச் சிறப்புடைய. எம் குலத்து ஒரு வேடன் - ஏகலைவன். வின்மை பொறாது - அவனது விற் கலையைக் கண்டு பொறுக்காமல் (பொறாமை கொண்டு). ஒரு முனிவன் வார்த்தை கேட்டு பல் வெடுவரை பிறைவாய் அம்பால் பேறு அற பிளந்தனை - என்று ஈற்றடியை இயைக்க. ஓர் அந்தணன் முறையீட்டை ஏற்று, பல வேடர்களைப் பிறைமதி போன்ற வடிவுடைய சரங்களால் பெருமையின்றி, அல்லது எய்தும் பயன் ஏதும் இல்லாது கொன்றாய், - என்பது பொருள். ''வில்வித்தையில் தன்னிலும் மிக்கார் இல்லை என்ற செருக்கினன் நீ'' என்று பழிக்கும் பொருட்டுச் சிவபெருமான் துருபதனைத் தேர்க்காலில் கட்டிய செய்தியை முதற்கண் கூறினானாயிற்று. அதன்பின் வேட்டுவக் குலத்திற்கு அவன் இழைத்த தீங்குகளை எல்லாம், எடுத்துக் கூறலாயினான். ஏகலைவன், குருதக்கணையாகத் தன் வலக் கையின் பெருவிரலைத் துரோணனுக்குக் கொடுத்த வாலாறு முன்னரே கூறப்பட்டுளது. ஓர் அந்தணனது பசுக்களைக் கொள்ளையடித்த வேடர்களைக் கொன்று, பசுக்களை அருச்சுனன் மீட்ட கதையும் முன்னரே கூறப்பட்டுளது.]

**98. கன்றிவரு கனற்கடவுள் கையிற் றேருங்**
**காண்டீவக் கார்முகமுங் கணையும் வாங்கி**
**ஒன்றுபடக் காண்டவக்கா னெரித்த நாளி**
**லோருயிர்போற் பலயோனி யுயிரு மாட்டிக்**
**குன்றுதொறுங் குன்றுதொறு மிருந்த வேடக்**
**குழாமனைத்து நீறுபடக் கொன்றா யென்பர்**
**இன்றுமென் முகநோக்கி வன்மை வின்மை**
**யிரண்டுக்கு மன்னவநீ யிகழ்ந்திட்டாயே.**

[கன்றி வரு கனல் கடவுள் கையில் தேரும், காண்டீவம் கார் முகமும் கணையும் வாங்கி, ஒன்றுபட காண்டவம் கான் எறித்த நாளில், ஓர் உயிர்போல் பலயோனி உயிரும் மாட்டி, குன்று தொறும் குன்று தொறும் இருந்த வேடர் குழாம் அனைத்தும் நீறுபட கொன்றாய், என்பர்; இன்றும் எனைமுகம் நோக்கி வன்மை, வின்மை இரண்டுக்கும், மன்னவ, நீ இகழ்ந்திட்டாய், (ஏ)]

**விளக்கம் :**—கன்றி வரு கனல் கடவுள் - பசியால் வருந்தி வந்த அக்கினிதேவன். ஒன்றுபட - ஒருங்கே. ஓர் உயிர்போல் பலயோனி உயிரும் மாட்டி - ஓர் உயிர்போலவே பலவகையினவான பிறப்புக்களில் தோன்றிய உயிர்களை எல்லாம் அழித்து. எனை முகம் நோக்கி - என்னைப் பார்த்து, (இகழவும் செய்துவிட்டாய்). ஏகலைவனது வலக்கையின் பெரு விரலை வஞ்சித்து வாங்கியது மன்றிக் காண்டவதகனத்தில் பலவகைப்பட்ட உயிர்களோடு வேடர் பலரையும் கொன்று அழித்தாய் என்னையும் இகழ்ந்தாய், என்று கூறிச் சிவபெருமான், அருச்சுனனை இகழ்ந்தான், என்க.

## விசயனோடு வேடன் பொரல்

**99. மல்லுக்கும் புயவலிக்குங் கலக்கு றாத
மனவலிக்கு மறையுடன்போர் வாளி யேவும்
வில்லுக்கு முனின்மிகுந்தார் மண்மே லுண்டோ
விசயனெனும் பெயர்க்குரிய விசயத் தாலே
சொல்லுக்கு விடே னின்று நீயு நானுந்
தோள் வலியுஞ் சிலைவலியுங் காண்டல் வேண்டும்
கல்லுக்கு நிகர்மனத்தா யென்றா னந்தக்
காளையும்வில் வளைத்தொருவெங் கணைமேல் விட்டான்.**

[மல்லுக்கும் புயவலிக்கும் கலக்கு உறாத மனவலிக்கும் மறையுடன் போர் வாளி ஏவும் வில்லுக்கும் உனின் மிகுந்தார் மண் மேல் உண்டோ! விசயன் எனும் பெயர்க்கு உரிய விசயத்தாலே, சொல்லுக்கு விடேன்; இன்று நீயும் நானும் தோள்வலியும் சிலை வலியும் காண்டல் வேண்டும், கல்லுக்கு நிகர் மனத்தாய் என்றான்; அந்த காளையும் வில் வளைத்து ஒரு வெம் கணை மேல் விட்டான், ஏ.]

**விளக்கம்** :-மல் - யுத்தம். கலக்குறாத மனவலி - எந்த நிலையிலும் கலக்கம் அடையாத மனோ தைரியம். மறையுடன் போர் வாளி ஏவும் வில் - அஸ்திரங்களை அவற்றிற்குரிய மந்திரங்களுடன் பிரயோகம் செய்யும் வில்வித்தை. உன்னின் மிகுத்தார் மண்மேல் உண்டோ - (மற்போர், தோள்வலி, மனோதைரியம், வில்தொழில் ஆகியவற்றில்) உன்னை விட உயர்ந்தோர் உளரோ, அதாவது எவரும் இலர் என்று எண்ணிச் செருக்குகின்றாய். விசயன் எனும் பெயருக்கு உரிய விசயத்தால் - விசயன் என்ற பெயரைப் பெறுவதற்குரிய விசேஷ வெற்றிகளால். சொல்லுக்கு விடேன் - (விசயன் என்ற) சொல்லுக்குப் பயந்து உன்னைச் சும்மா விடேன். கல்லுக்கு நிகர் மனத்தாய், என்று சிவபெருமான், அருச்சுனனை விளிக்கின்றான். இரக்கம் இல்லாத மனத்தை உடையவன், என்பது பொருள். ''மனவலியும், தோள்வலியும், வில்வலியும், பல வெற்றிகளின் பயனாகிய விசயப் பெயரும் தனக்குத்தான் உண்டென்று, ஐய நீ செருக்கிக் கிடக்கின்றாய்; உனக்கு நான் அஞ்சேன். உனது ஆற்றலைச் சோதித்து அளக்க நினைத்துள்ளேன்,'' என்று சிவவேடன் கூற, விசயன் அவன் மேல் ஒரு சரம் செலுத்தினான், —என்க. இனிவரும் ஆறுகவிகள் வேடனும் விசயனும் செய்த போர் வர்ணனையாகும்.

**100. விட்டகொடுங் கணையையொரு கணையால் வேடன்
விலக்கிவரி சிலைக்குரிய வீரன் றன்மேல்
தொட்டனனோ ரிரண்டுகணை யவைபோய் மார்புந்
தோளுமுடன் துளைத்தனவாற் றுளைத்த போது**

**கட்டழலி னிடைநின்ற காளை மீளக்**
**கடுங்கணைக ளொருமூன்று கடிதின் வாங்கி**
**வட்டநெடும் பீலியணி முடியு மார்பும்**
**வாகுவுமே யிலக்காக வலியொ டெய்தான்.**

[விட்ட கொடு கணையை ஒரு கணையால் வேடன் விலக்கி, வரி சிலைக்கு உரிய வீரன் தன்மேல் தொட்டனன் (ஏ) இரண்டு கணை அவை போய் மார்பும் தோளும் உடன் துளைத்தன (ஆல்), துளைத்த போது கட்டு அழலின் இடை நின்ற காளை மீள கடு கணைகள் ஒரு மூன்று கடிதின் வாங்கி, வட்டம் நெடு பீலி அணி முடியும் மார்பும் வாகுவுமே இலக்கு ஆக வலியொடு எய்தான்.]

**விளக்கம் :**—வரிசிலைக்கு உரிய வீரன் - அருச்சுனன். வட்ட நெடும் பீலி அணி முடி - வட்டமான நீண்ட மயில் இறகினால் ஆன தலை மாலையை அணிந்த சிவபெருமானது தலை. வாகு - தோள், கட்டு அழல் - மிகுதியான நெருப்பு. அருச்சுனன் ஏவிய கணையைத் தனது கணையொன்றால் விலக்கிய சிவபெருமான், இரண்டு கணைகளை விசயனின் மார்பும் தோள்களும் இலக்காக விடவே, அக்கணைகளால் துளைக்கப்பட்ட விசயன் எதிரியின் சிரசும் மார்பும் தோளும் இலக்காக மூன்று அம்புகளை விட்டான்,—என்பதாம்.

**101. எய்தகணை திருமேனி யெய்து முன்ன**
**ரிறகுதுணிந் தொன்றிரண்டா யிலக்கு றாமல்**
**வெய்தின்வலி யுடனெய்தான் மூன்று வாளி**
**விண்ணவர்கோன் மகன் மேலும் வேறொன் றெய்தான்**
**ஐதினிவன் வினோதமுறத் தொடுத்தா னென்ப**
**தறியாம லெயினன்முடி யணிந்த பீலி**
**கொய்துநதி யறல் சிதறப் பிறையு மானுங்**
**குலையவொரு கணைகுரக்குக் கொடியோ னெய்தான்.**

[எய்த கணை திருமேனி எய்தும் முன்னர் இறகு துணிந்து ஒன்று இரண்டு ஆய் இலக்கு உறாமல், வெய்நின் வலியுடன் எய்தான் மூன்று வாளி: விண்ணவர் கோன் மகன் மேலும் வேறு ஒன்று எய்தான்; ஐதின் இவன் வினோதம் உற தொடுத்தான் என்பது அறியாமல், எயினன் முடி அணிந்த பீலி கொய்து நதி அறல் சிதற, பிறையும் மானும் குலைய ஒரு கணை குரக்கு கொடியோன், எய்தான்.]

**விளக்கம் :**—இறகு துணிந்து - அம்புகள் வேகமாகச் செல்லுதற்காகக் கட்டப்பெற்ற சிறகுகள் அறுக்கப்பெற்று. ஒன்று இரண்டு ஆய் - (விசயன் விட்ட அம்புகள்) ஒவ்வொன்றும் இரண்டாய்ப் பிளக்கப்பெற்று. இலக்கு - இலட்சியம். உறா - அடையாதபடி. வெய்தின் - விரைவாக. இவன் ஐதின் வினோதம் உற தொடுத்தான் - சிவவேடன் சுலபமாகவும் விளையாட்டுப் பொருந்தவும் கணை போக்கினான் (என்பதை விசயன் அறியாமல்) நதி அறல் - (சிவபெருமான் முடியில் உள்ள) கங்கையின் நீர். பிறையும்

மானும் - அர்த்த சந்திரனும், அதில் களங்கமாக உள்ள மானும். குரக்குக் (குரங்குக்) கொடியோன் விசயன். தன்னோடு போர் செய்யும் சிவவேடன் கோபம் இல்லாமலும் விளையாட்டாகவும் சரம் செலுத்துகின்றான் என்பதை அறியாத அருச்சுனன், எதிரி யின் முடியை அலங்கரித்த பீலி அறுந்து சிதறவும், கங்கையின் நீர் சிந்தவும், பிறையும் மானும் நிலைகுலையவும் அம்பைத் தொடுத் தான், என்பதாம். ஐது - மென்மை, அற்பம்.

**102. அற்போலச் சூழ்கின்ற கிராத ரெல்லா**
**மவன்முடிமே லிவனெய்த தறிந்து தீயின்**
**நிற்போன்மே லெழுதலுமங் கவரை யெல்லா**
**நில்லுமெனக் கையமர்த்தி நீயின் றெய்த**
**விற்போர்கண் டன மடடா விற்பி டிக்கும்**
**விரகறியோ முன்னிடத்தே வேத விற்போர்**
**கற்போமென் றொருகணைமற் றவன்மேல் விட்டான்**
**கனகமலைச் சிலைவளைத்த கையி னானே.**

[அல் போல சூழ்கின்ற கிராதர் எல்லாம் அவன் முடிமேல் இவன் எய்தது அறிந்து தீயின் நிற்போன்மேல் எழுதலும், அங்கு அவரை எல்லாம் நில்லும் என கை அமர்த்தி, நீ இன்று எய்த வில் போர் கண்டனம், அடடா, வில் பிடிக்கும் விரகு அறியோம், உன் இடத்தே வேதம் வில் போர் கற்போம், என்று ஒரு கணை மற்று அவன் மேல் விட்டான், கனக மலை சிலை வளைத்த கையினான் (ஏ)]

**விளக்கம்** ;—அல் - இருள். தீயின் நிற்போன் - அருச்சுனன். அடடா, என்ற இசைச் சொல் அடுக்கு இகழ்ச்சிப் பொருளது. கனக மலைச்சிலை வளைத்தவன் - சிவபெருமான். அருச்சுனன் சிவவேடன் தலைமீது கணை எய்தது கண்ட கணநாதர்களான வேடர்கள் போரெழ, சிவபெருமான் அவர்களைக் கையமர்த்தி, அதன்பின், அருச்சுனனை நோக்கி, ''உனது விற்போரின் திறங் கண்டோம்! வில் பிடிக்கும் விரகு (சாமர்த்தியம், திறமை) அறி யோம்! வேத வில் போரை (மந்திர பலத்துடன் செய்கின்ற வில் போரை) உன்னிடத்திலேதான் யாம் கற்க வேண்டும்! (என்று பரிகசமொழி கூறி)'' ஓரம்பை அவன் மேல் விட்டான்,-என்பதம்.

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**103. பீலிமுடி யோன்விடுபி றைக்கணையை வேறொருபி**
**றைக்கணையி னால்வி லகிவில்**
**கோலிவடி வாளிமழை சிந்தினன்ம ழைக்கிரிய**
**கொண்டலென நின்ற குமரன்**
**மூலிவடி வாமெயினன் மேலவைப டாமன் முனை**
**மண்மிசைகு ளிக்க முரணார்**
**வேலியிடு மாறெனவி ழுந்தனவி ழுந்ததனை**
**விசயனனி கண்டு வெகுளா.**

[பீலி முடியோன் விடு பிறை கணையை வேறு ஒரு பிறை கணையினால் விலகி, வில் கோலி வடி வாளி மழை சிந்தினன் மழை கரிய கொண்டல் என நின்ற குமரன்; மூலி வடிவு ஆம் எயினன் மேல் அவை படாமல் முனை மண்மிசை குளிக்க முரண் ஆர் வேலி இடும் ஆறு என விழுந்தன, விழுந்ததனை விசயன் நனி கண்டு வெகுளா.]

**விளக்கம் :-** பீலி முடியோன் - சிவபெருமான். பிறைக் கணை - அர்த்தசந்திரபாணம். வில் கோலி - வில்லை வளைத்து. மழை கரிய கொண்டல் என நின்ற குமரன் - மழை பொழியும் கரிய மேகம் போன்ற நிறத்தவனாகிய அருச்சுனன். மூலி - மூலம். மூலிவடிவாம் எயினன்-பொருள்களுக்கெல்லாம் மூல காரணனான சிவ வேடன். (விசயனது கணைகள் அவன் மேற்படாது) முரண் ஆர் வேலியிடுமாறு முனை மண்மிசை குளிக்க விழுந்தன - வலிய வேலி சுற்றிலும் போடப்பட்டது போல் (அம்புகள்) பூமியில் அவற்றின் நுனிகள் புதையும்படி விழுந்தன. (அவ்வாறு) விழுந்த அம்புகளைக் கண்டு விசயன் கோபங்கொண்டு,—(இது அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்). விசயன் செலுத்திய அம்புகள் சிவபிரான் மேல் விழாமல், அவனைச் சுற்றி வேலிபோல் பூமியில் புதைந்து நின்றன, என்பதாம்.

**104. வேணிமுடி வேடன்மிசை வேறுமொரு சாயகம்**
**விலுடுத்தனன் விடுத்த கணைவில்**
**நாணியொடு முன்பினொடு பின்புதொடு கின்றகணை**
**நடுவணற வெட்டு தலுமே**
**கோணியவி ளம்பிறைமு டித்தவன்வெ குண்டுபல**
**கோல்கள் விட விந்த்ர குமரன்**
**பாணியுட னேதொடைந டுங்கியய னின்றதொரு**
**பாதவம ருங்க ணுகினான்.**

[வேணி முடி வேடன் மிசை வேறும் ஒரு சாயகம் விடுத்தனன், விடுத்த கணை, வில் நாணியொடு முன்பினொடு பின்பு தொடு கின்ற கணை நடுவண் அற வெட்டுதலும் (ஏ) கோணிய இளம் பிறை முடித்தவன் வெகுண்டு பல கோல்கள் விட, இந்த்ரகுமரன் பாணியுடனே தொடை நடுங்கி அயல் நின்றது ஒரு பாதவம் மருங்கு அணுகினான்.]

**விளக்கம் :-** சாயகம் - அம்பு. சிவவேடன்மீது விசயன் வேறு ஓர் அம்பை விடுத்தான். வில் நாணியோடு முன்பினொடு விடுத்த கணை பின்பு தொடுகின்ற கணை நடுவண் அற வெட்டு தலும் - வில்லின் நாணியினின்றும் வலிமையோடு விட்ட அம்பு, (சிவவேடன்) பின்பு எய்த கணையை நடுவில் முறியும்படி பிளத்த லும். கோணிய இளம் பிறை முடித்தவன் - சிவபெருமான். (தனது கணை விசயனால் பிளக்கப்பட்டது கண்டு சிவபெருமான்) வெகுண்டு பல கோல்கள் விட - கோபித்துப் பல அம்புகளை விடலும், (அருச்சுனன் தளர்ந்து ஒரு மரத்தின் அருகு சென்று ஒதுங்கினான்). சிவபிரானது கணையை அருச்சுனன் இடை

முறியச் செய்தலும், அவன் வெகுண்டு பல கணைகளைத் தொடுக்க, இந்திர குமாரனான அருச்சுனன் அஞ்சி நடுங்கி அயல் நின்ற ஒரு மரத்தைச் சார்ந்து நின்றனன்,—என்பதாம்.

**105.** **கொண்டுதவ மேதனமெ னப்புரியும் வில்லிமெய்கு**
**லைந்தயரு கின்ற நிலையைக்**
**கண்டருகு நின்றவிம வான்மகளு ரைக்கமிகு**
**கருணையொடி ரங்கி யவனைப்**
**பண்டுதவ மேபுரியி ளைப்பறம னத்தின்மிகு**
**பரிவுடைய னாகி வெகுளா**
**எண்டிசையும் வென்றனல ளித்தசிலை நாணியற**
**வெயினர்பதி யெய்த னனரோ.**

[கொண்டு தவமே தனம் என புரியும் வில்லி மெய் குலைந்து அயருகின்ற நிலையை கண்டு, அருகு நின்ற இமவான் மகள் உரைக்க மிகு கருணையோடு இரங்கி, அவனை பண்டு தவமே புரி இளைப்பு அற மனத்தில் மிகு பரிவு உடையவன் ஆகி, வெகுளா, எண் திசையும் வென்று அனல் அளித்த சிலை நாணி அற எயினர் பதி எய்தனன், (அரோ).]

**விளக்கம் :-** தவமே தனம் என கொண்டு புரியும் வில்லி - அருச்சுனன். இமவான் மகள் - பார்வதி. [பார்வதி மிகுந்த கருணையோடு அவனை (அவனுக்கு) இரங்கி (சிவபிரானிடம்) சொல்ல], பண்டு தவம் புரி இளைப்பு அற மனத்தின் மிகு பரிவு உடையன் ஆகி வெகுளா - இந்தப் போருக்கு முன் தவம் புரிந்த தால் உண்டான களைப்பு நீங்கும்படி மனத்தில் (சிவபிரான்) பரிவு உடையவனாகி, ஆனால் கோபங் கொண்டவன் போல் வெள்ளிக்குக் காட்டி, எண் திசையும் வென்ற - எட்டுத் திசை களிலும் உள்ளாரைவென்று வெற்றி கொண்ட. அனல் அளித்த சிலை நாணி அற - அக்கினி தேவன் கொடுத்த காண்டீபம் என்னும் வில்லின் நாண் கயிறு அறும்படி, (அம்பு தொடுத்தான்). சிவபெருமான் அருச்சுனன்பால் இரக்கங் கொண்டு, ஆனால் வெகுண்டவன்போல், அவனது வில்லின் நாணை அறுத்தான், என்க. அரோ - ஈற்றசை, வென்று, (எச்சத்திரிபு) வென்ற என்ற பொருளது.

**106.** **உழுந்துருளு மெல்லை தனில் வில்லினெடு நாணறவு**
**ரத்தொடெதி ரோடி வரிவில்**
**கழுந்துகொடு மாமுடியின் மோதுமுனி ழந்ததுயர்**
**கண்ணிபடு பீலி மதியின்**
**கொழுந்தமுது சோரவிட நாகர்சு டிகைத்தலை**
**குலைந்துமணி சிந்த நதியாள்**
**எழுந்து தடு மாறியகல் வானிலுற வேடனுமி**
**ளைத்தவச முற்றன னரோ.**

[உழுந்து உருளும் எல்லைதனில் வில்லின் நெடு நாண் அற, உரத்தொடு எதிர் ஓடி வரிவில் கழுந்து கொடு மா முடியின் மோது முன், இழந்தது உயர் கண்ணி படுபீலி, மதியின் கொழுந்து அமுது சோர, விடம் நாகர் சுடிகை தலை குலைந்து மணி சிந்த, நதியாள் எழுந்து தடுமாறி அகல் வானில் உற, வேடனும் இளைத்து அவசம் உற்றனன் அரோ.]

**விளக்கம் :-** உழுந்து - உளுந்து. உளுந்து உருளும் காலத்திற்குள் அருச்சுனனது வில்லின் நாண் அறுந்து போகவே, (வெகுண்ட அருச்சுனன்) வலிமையோடு (சிவ வேடனுக்கு) எதிரே விரைந்து சென்று, வில்லின் கழுந்தால் (தண்டால்) சிவனது சிறந்த முடியில் அடித்த உடனே, சிறந்த தலை மாலையாகக் கட்டப்பெற்ற பீலி முடியினின்று நீங்கியது. இள மதியின் இடத்ததான அமுதம் சிந்தவும், முடியில் அலங்காரமாக அமைந்த பாம்புகளின் உச்சிக் கொண்டையுடைய தலைகள் குலைவுற்று நாகரத்தினங்களைச் சிந்தவும், முடியிலுள்ள கங்காதேவி நிலை தடுமாறி வானில் இடங்கொண்டு பொருந்தவும். சிவபெருமான் மெலிவுற்று தன் வசம் இழந்தவனானான்,—என்பது பொருள். அரோ அசை. கொழுந்து - இளமை. மதிக்கொழுந்து - இளஞ் சந்திரன், பிறைமதி. உளுந்து - பயறு, துவரை போன்ற சிறு தானியம். வேடனும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியது. ''மோதுமுனமே முடி கிழிந்த துயர் கண்ணி மதியின்'', என்று ஏட்டுப் பாடம் உளது. இருக்கின்ற பாடமும் பொருத்த முடையதே.

**107. விண்ணிலுறை வானவரில் யாரடிப டாதவர்**
**விரிஞ்சன்மு தலோரு முததிசூழ்**
**மண்ணிலுறை மானவரில் யாரடிப டாதவர்**
**மனுக்கண் முதலோர் களதலக்**
**கண்ணிலுறை நாகர்களில் யாரடிப டாதவர்கள்**
**கட்செவிம கீபன் முதலோர்**
**எண்ணில்பல யோனியிலும் யாவடி படாதன**
**விருந்துழி யிருந்து ழியரோ.**

[விண்ணில் உறை வானவரில் யார் அடிபடாதவர்? விரிஞ்சன் முதலோரும் உததி சூழ் மண்ணில் உறை மானவரில் யார் அடி படாதவர்? மனுக்கள் முதலோர்கள் அதலம் கண்ணில் உறை நாகர்களில் யார் அடி படாதவர்கள்? கட்செவி மகீபன் முதலோர், எண்ணில் பல யோனியிலும் யா அடிபடாதன இருந்துழி இருந்துழி, அரோ.

**விளக்கம் :-** விரிஞ்சன் - பிரும்மா. உததி - கடல். மனுக்கள் முதலோர்கள் மண்ணில் உறை மானவர் - மனுவின் சந்ததியார் களாகிய பூலோகத்தில் வசிக்கின்ற மனிதர்கள். அதலம் கண்ணில் உறை நாகர் - பாதாள லோகத்தில் வசிக்கும் நாக சாதியர்.

கட்செவி - பாம்பு. கட்செவி மகீபன் - பாம்புகளுக்குத் தலைவனான ஆதிசேஷன். எண் இல் பல் யோனியில் - எண்ணிக்கையில்லாத பல திறப்பட்ட பிறப்புக்களில். இருந்துழி இருந்துழி - (பலவகைப்பட்ட பிறப்புக்களிலும்) உயிர்கள் இருந்த இடங்கள் எல்லாவற்றிலும், யா அடிபடாதன - எவை அடிபடாதவை; சராசரப் பொருள்கள் யாவும் அடிபட்டன, என்றபடி. உயிரின் உயிராயுள்ள இறைவனது ஜகத் சரீரத்துவம் கூறும் கருத்தது செய்யுள். மிருகங்கள், பறவைகள், நீர் வாழ்வன, ஊர்வன முதலியவற்றை யோனி குறிக்கும்.

**108.** **வேதமடி யுண்டனவி ரிந்தபல வாகமவி**
**தங்களடி யுண்டன வோரைம்**
**பூதமடி யுண்டனவி நாழிகைமு தற்புகல்செய்**
**பொழுதொடு சலிப்பில் பொருளின்**
**பேதமடி யுண்டனபி றப்பிலியி றப்பிலிபி**
**றங்கலர சன்றன் மகளார்**
**நாதனம லன் சமர வேடவடி வங்கொடுந**
**ரன்கையடி யுண்ட பொழுதே.**

[வேதம் அடி உண்டன, விரிந்த பல ஆகமம் விதங்கள் அடி உண்டன, ஓர் ஐம்பூதம் அடி உண்டன, விநாழி கை முதல் புகல் செய் பொழுதொடு சலிப்பு இல் பொருளின் பேதம் அடி உண்டன, பிறப்பு இலி இறப்பு இலி பிறங்கல் அரசன் தன் மகளார் நாதன் அமலன் சமரம் வேடன் வடிவம் கொடு, நரன் கை அடி உண்ட பொழுதே.]

**விளக்கம் :-** வேதம் - வேதங்கள். விரிந்த பல ஆகமம் விதங்கள் - விரிவான பகுப்புடைய ஆகம சாத்திர விதங்கள். ஓர் ஐம்புதம் - பஞ்ச பூதங்கள். விநாழிகை முதல் புகல் செய் பொழுது - நாழிகை முதலாகச் சொல்லப்படும் கால தத்துவம். சலிப்பு இல் பொருளின் பேதம் - பெயர்தல் இல்லாத நிலையுடைய தாவரப் பொருள்களின் வகை. பிறப்பிலி - பிறப்பு இல்லாதவனும், இறப்பிலி - சாதல் இல்லாதவனும், பிறங்கல் அரசன் தன் மகளார் நாதன் - மலையரசனாகிய இமவானினுடைய மகளாகிய உமையின் நாதனும், அமலன் - பரிசுத்தமானவனுமாகிய சிவ பெருமான். சமரம் - போர்.

ஆணவம் முதலிய மல சம்பந்தம் இல்லாமையோடு, தனக்குச் சரீரமாகவுள்ள சிருஷ்டிப் பொருள்களின் மல சம்பந்தத்தால் பாதிக்கப் படாதவன், அமலன். மிக உயர்ந்தவனாகிய சிவ பெருமான் அடியவர்களுக்கு எளியனாய் இருத்தலைத் தெரிவிக்கும் கருத்தது செய்யுள்.

**109.** **என்பொடுகொ ழுந்தசைநி ணங்குருதி யென்னுமவை**
**யீரிரண் டானும் வயிரா**
**வன்பொடுவ ளர்ந்தமிகு காதிபதி காரியெனும்**
**வடிவழகு பெற்ற மறவோன்**

**அன்பினொடு பேரறம்வ ளர்த்தருளெ யிற்றிமிக**
**வஞ்சவபி ராம வெயினன்**
**பொன்புரையு மேனியில டித்தமைபொ றாதுமற்**
**போர்புரியு மாறு கருதா.**

[என்பொடு கொழு தசை நிணம் குருதி என்னும் அவை ஈர் இரண்டானும் வயிரா, வன்பொடு வளர்ந்த மிருக அதிபதி காரி எனும் வடிவு அழகு பெற்ற மறவோன், அன்பினொடு பேர் அறம் வளர்த்து அருள் எயிற்றி மிக அஞ்ச, அபிராமன் எயினன் பொன் புரையும் மேனியில் அடித்தமை பொறாது, மல் போர் புரியுமாறு கருதா.]

**விளக்கம்** :-என்பொடு மறவோன், அபிராம எயினன், பொன் புரையும் மேனியில் அடித்தமை பொறாது, அன்பினொடு பேர் அறம் வளர்த்து அருள் எயிற்றி மிக அஞ்ச, மற்போர் புரியுமாறு கருதா,— என்பது அன்வயம். என்பு - எலும்பு. எலும்போடும் கொழுமையுடைய தசை, கொழுப்பு, குருதி என்று சொல்லப்படும் அப்பொருள் நான்கினாலும் வயிர்த்து (உறுதி கொண்டு), வலிமை யோடு வளர்ச்சியுற்ற, யானைக்குத் தலைவனான தேவேந்திரன் என்று சொல்லுதற்குரிய வடிவ அழகு பெற்ற வீரனான அருச்சுனன், என்பது முதல் இரண்டடிகளின் பொருள். (மிருகாதி பதி - யானைக்குத் தலைவன். காரி - இந்திரன்). (அவன் தன்னை வில்லின் தண்டால் அடித்தது பொறாமல்) அபிராம எயினன் - அழகிய உருவமுடைய சிவவேடன். அன்பினொடு பேர் அறம் வளர்த்தருள் எயிற்றி - உள்ளன்போடு பெரிய தர்மங்களை வளர்த்தருளிய உமாதேவியாகிய வேடச்சி. மிக அஞ்ச - மிகவும் அஞ்ச, மற்போர் - மல் யுத்தம் (புரியக் கருதி, அடுத்த செய்யுளில் முடியும்.) அபிராமம் - அழகு. அபிராமன் - அழகன். உமாதேவி அறம் வளர்த்த வரலாறு காஞ்சி புராணத்தில் உளது. காரி, என்பது இந்திரனது பெயர்களில் ஒன்று, மிருகம் - யானை, (அதற்குத் தலைவனான) காரி - இந்திரன்.

**110. உள்ளடிவி ரற்றலைகள் புறவடிப ரட்டினுட**
**னுயர்கணைக் கான்மு ழந்தாள்**
**தள்ளரிய வூருவுயர் தாழ்வரைக ளொத்தகடி**
**தடமுதர மார்பு திணிதோள்**
**துள்ளிவரு செங்கையொடு முன்கைபிடர் நெற்றியொடு**
**சூடமென வெண்ணு படையால்**
**வள்ளலெனை யாளுடைய மாதவனு மாதவனு**
**மல்லமர்தொ டங்கி யுறவே.**

[உள் அடி, விரல் தலைகள், புற அடி, பரட்டினுடன் உயர் கணைக்கால், முழந்தாள் தள் அரிய ஊரு, உயர் தாழ்வரைகள் ஒத்த கடிதடம், உதரம், மார்பு, திணிதோள், துள்ளி வரு செம் கையொடு முன் கை, பிடர், நெற்றியொடு சூடம் என எண்ணு

வி. பா. II — 6

படையால் வள்ளல், எனை ஆளுடைய மாது அவனும் மாதவனும் மல் அமர் தொடங்கியுற,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம்** :-ஆயுதங்கள் இல்லாமல் உடலின் உறுப்புக்களையே கருவியாகக்கொண்டு செய்யும் போர், மற்போர். உள் அடி - உள்ளங்கால். புற அடி - காலின் மேற் புறம். பரடு - புறங்கால். விரல்தலை - விரல் நுனி. உயர் கணைக்கால் - வலிமை மிக்க கணைக்கால். முழந்தாள் - முழங்கால். தள்ளரிய ஊரு - விலக்கு தற்கு அரிய வலிமையுடைய தொடை. (உயர்ந்த மலையின் தாழ் வரைகளை ஒத்த) கடி தடம் - இடுப்பு. உதரம் - வயிறு. மார்பு, - திணி தோள் - வலிய தோள். துள்ளி வரு செங்கை - விரைந்து தொழிற்படும் சிவந்த கைகள். பிடர், நெற்றி, சூடம் (உச்சி, தலையின் மேற்புறம்) என எண்ணு படை - என்று கணக்கிட்டுச் சொல்லப்படுகின்ற உடல் உறுப்புக்களாகிய ஆயுதங்கள். வள்ளல் - வரையாது அன்பர்க்கு அளிப்பவனும். எனை ஆளுடைய மாது அவனும் - என்னை ஆளாகக் கொண்ட உமாதேவியை வாம பாகத்தில் கொண்ட சிவபெருமானும். மாதவனும் - சிறந்த தவத்தை மேற்கொண்டவனான அருச்சுனனும், (மற்போர் தொடங்கலும்). அப் போரை இனி வரும் இரண்டு செய்யுள்கள் கூறும்.

**111. மல்லமர்தொ டங்கியிவ ரிருவரும்வெ குண்டுபொர**
**மாதிரமு மாநி லமுமேல்**
**எல்லையும திர்ந்து சுழல் கின்றபொழு தத்திமய**
**வின்பமயில் கேள்வன் வெகுளா**
**நல்லிசைபு னைந்தமணி நூபுரவி சாலவொளி**
**நண்ணுபத நாண்ம லரினால்**
**வில்லியரி லெண்ணுதிறல் வில்லுடைய காளைதனை**
**விண் ணினுற வீசி னனரோ.**

[மல் அமரர் தொடங்கி இவர் இருவரும் வெகுண்டு பொர, மாதிரமும் மாநிலமும் மேல் எல்லையும் அதிர்ந்து சுழல்கின்ற பொழுதத்து, இமயம் இன்பம் மயில் கேள்வன் வெகுளா, நல் இசை புனைந்த மணி நூபுரம் விசாலம் ஒளி நண்ணு பதம் நாள் மலரினால், வில்லியரில் எண்ணு திறல் வில் உடைய காளைதனை விண்ணின் உற வீசினான், அரோ.]

**விளக்கம்** :-மேல்எல்லை - தேவர் உலகம். இமயம் இன்பம் மயில் கேள்வன் - இமவான் மகளான பார்வதியின் கணவனான சிவவேடன். நல்ல கீர்த்தியை உடைய அழகிய வீரக் கழலினது ஒளி விளக்கம் பொருந்திய பாதங்களாகிய அன்று அலர்ந்த தாமரைகளினால், (அதாவது அன்று அலர்ந்த தாமரை போன்ற திருவடிகளினால்), என்பது மூன்றாவது அடியின் பொருள். வில் கலை வல்லுநர்களில் சிறந்தவனாக மதிக்கப்படுகின்ற வலிய

காண்டீவம் என்னும் வில்லையுடைய காளை போன்ற விசயனை, (சிவ வேடன்) வானில் பொருந்தும்படி தூக்கி எறிந்தான், என்பது ஈற்றடியின் பொருள். அரோ - அசை. சிவபெருமானும், அருச்சுன னும், திசைகள் எங்கும் உள்ளோர் அதிர்ச்சி யுற்றுச் சுழலும்படி கடும் போர் புரிகையில், பெருமான் வெகுண்டு (அல்லது வெகுளா மல் வேடிக்கையாக) எதிரியை வானில் வீசி எறிந்தான், என்ப தாம்.

**112** **விண்ணவர்த மூர்புகுத விண்ணவர்பி ரான்மதலை**
**விசையுடனெ ழுந்து முகில்போல்**
**மண்ணினிடை வீழ்தருமுன் மார்பமுக மல்லதை**
**வயங்குபுற மென்று தெரியான்**
**எண்ணரிய ஞானமுடை யோகியர்கள் பேசவரு**
**மெயினர்பதி யான கருணைப்**
**புண்ணியன் மகிழ்ந்துருக நின்றொலியு டன்பழைய**
**பூசல்பொர வெண்ணி யெதிர்வான்.**

[விண்ணவர் தம் ஊர் புகுத விண்ணவர் பிரான் மதலை விசையுடன் எழுந்து முகில்போல் மண்ணின் இடை வீழ்தரும் முன், மார்பம் முகம் அல்லதை வயங்கு புறம் என்று (எதிரி தெரி யும்படி) தெரியான், எண் அரிய ஞானம் உடை யோகியர்கள் பேச வரும் எயினர் பதி ஆன கருணை புண்ணியன் மகிழ்ந்து உருக, நின்று ஒலியுடன் பழைய பூசல் பொர எண்ணி எதிர்வான்.]

**விளக்கம்** :-புகுத - எட்டும்படி. விண்ணவர் பிரான் மதலை - அருச்சுனன். (எறியப்பெற்ற அருச்சுனன் மேகம்போல் வேகமாக மேலே போய் பூமியில் விழுமுன்) மார்பம் முகம் அல்லதை - மார் பும் முகமும் அல்லாது, வயங்கு புறம் என்று எதிரி காணும்படி காட்டாதவனாய் (மீண்டும் போரைத் தொடர்பவனானான்). பேசவரும் - போற்றுதற்கு வரும். எயினர் பதியான கருணை புண்ணியன் - வேடர் தலைவனாய் உருக்கொண்ட கருணை மிக்க பரிசுத்த மூர்த்தியான சிவபெருமான். அப் பெருமான், மனமகிழ்ந்து உருகும்படி, விசயன், சலியாது எதிர் நின்று, ஆரவாரத்துடன் முன் செய்த மற்போரைத் தொடர்ந்து செய்ய நினைத்து, (சிவபெருமானை) எதிர்ப்பவனானான், என்க. முதுகு காட்டல் தோல்வியின் அடையாளமாதலால் விசயன், முதுகை வேடனுக்குக் காட்டாது, எழுந்து மீண்டும் போர் தொடர முற்பட்டான், என்ப தாம்.

## சிவபிரான் காட்சி தரல்

**113.** **வெய்யகண நாதர்கண தேவர்விபு தரதியர்வி**
**ரிஞ்சிசிவ யோகி யரரும்**
**செய்யசுட ரோனளகை யாதிபதி கின்னரர்கள்**
**சித்தர்பல சார ணர்மணிகி**

**பையரவி னாடர்புரு கூதனிவர் சூழ்தரவோர்**
**பச்சைமயில் பாதி யுடனே**
**துய்யவிடை மீதொருசெ ழுஞ்சுடர்நி கர்க்கவரு**
**தூயவனெ திர்ந்த வளவே.**

[வெய்ய கணநாதர், கணதேவர், விபுத ஆதியர், விரிஞ்சி, சிவ யோகியர், அருஞ் செய்ய சுடரோன், அளகை ஆதிபதி, கின்னரர் கள், சித்தர், பல சாரணர், மணி பை அரவின் நாடர், புருகூதன், (என்னும்) இவர் சூழ்தர ஓர் பச்சை மயில் பாதியுடனே, தூயவன் எதிர்ந்த அளவே.]

**விளக்கம்** :-தேவ கணங்களாலும், பூத கணங்களாலும் சூழப் பட்டவன் சிவபிரான். வெய்ய கணநாதர் - பகைவர்களுக்குக் கொடியரான பூதகணங்களின் தலைவர். கணதேவர் - கணங் களாகிய தேவர். விபுத ஆதியர் - (விபுதாதியர்) மற்றைத் தேவர். யோகியர். அரும் செய்ய சுடரோன் - கிட்டுதற்கு அரியவனும், சிவந்த கிரணங்களை உடையவனும் ஆன சூரியன். அளகை ஆதி பதி - அளகாபுரியின் அரசனான குபேரன். கின்னரர் - கந்தர்வ சாதியில் ஒரு வகையினர். சித்தர் - அஷ்டமாசித்திகளைப் பெற்ற பெரியோர், அல்லது சித்தர் எனப்படும் தேவ சாதியர். சாரணர் - தேவர்களில் ஒரு வகுப்பினர். பை அரவின் நாடர் - நாகலோகத் தார். புருகூதன் - இந்திரன். (ஆகிய இவர்கள் தன்னைச் சூழ்ந் திருக்க) பச்சை மயில் பாதியுடனே - பார்வதியின் உருவையுடைய இடப்புறத்துடனே, துய்யவிடைமீது - தூய்மை யுடைய ரிஷபத் தின்மீது, ஒரு செழும் சுடர் - செழுமையுடைய ஓர் ஒளியை. நிகர்க்க வரு தூயவன் எதிர்ந்த அளவே - ஒத்ததாய் வந்த தூயவனான சிவபெருமான், எதிரில் தோன்றிய உடனே,—விசயன் வணங்கினான், என்க. எதிர்ந்த - எதிரில் தோன்றிய.

**114. கைவிலுட னேயெயினர் கோடிபலர் சூழவரக்**
**கன்னிமயில் பின்னர் வரவே**
**தெய்வமறை ஞாளிகடொ டர்ந்துவர வந்துபொரு**
**செய்யசிவ வேடன் முடிமேல்**
**சைவமுறை யேயிறைவர் தண்மலரி னோடறுகு**
**சாத்தியொளிர் நாண்ம லரெலாம்**
**மெய்வடிவு கொண்டனைய கரியதவ வேடனிணை**
**விழிமலர்ப ரப்பி மகிழா.**

[கை வில் உடனே எயினர் கோடி பலர் சூழவர, கன்னி மயில் பின்னர் வரவே, தெய்வம் மறை ஞாளிகள் தொடர்ந்துவர, வந்து பொரு செய்ய சிவவேடன் முடிமேல், சைவ முறையே இறைவர் தண் மலரினோடு அறுகு சாத்தி ஒளிர் நாள் மலர் எலாம், மெய் வடிவு கொண்டு அனைய கரிய தவவேடன் இணை விழி மலர் பரப்பி மகிழா.]

**விளக்கம் :-** கோடிக்கணக்கான எயினர் (வேடர்) பலர் கை யில் வில்லுடனே சுற்றி வரவும், கன்னி மயில் (பார்வதி) பின்னே வரவும், தெய்வத் தன்மையுடைய வேதங்களாகிய ஞாளி (நாய்)கள்) பின் தொடரவும், (அருச்சுனனின் முன்) வந்து போர் புரிந்த செய்ய (அழகிய) சிவ வேடனின் திருமுடியின்மேல், சைவ ஆகம முறைப்படி தேவர்கள் தண்ணிய மலர்களோடு அறுகம் புல்லையும் சாத்த, (அதனால் சிவவேடனது திருமுடியிடத்தே) பிரகாசிக்கின்ற புதிய மலர்களை எல்லாம், மெய்மை என்பது உருவம் கொண்டாற் போன்ற தவத்திற்குரிய வேடங்கொண்ட கரிய நிறமுடைய அருச்சுனன், இணையான தன் கண்களை (அப் பிரான்மீது) படிய வைத்து, மகிழ்ந்து,—(அடுத்த செய்யுளோடு முடியும்), என்பது பொருள். வேடன், என்பது வேட்டுவச் சாதியினன் என்றும், வேடங்கொண்டவன், என்றும் பொருள்பட நிற்றல் காண்க. சாத்த, என்பது சாத்தி என்று திரிந்துளது.

**115 தும்பைவகை மாலைசெறி வில்வமொடு கொன்றைமலர்**
**சூதமறு கேக மழ்தரும்**
**செம்பவள வேணிமிசை திங்கணதி சூடியருள்**
**செம்பொன்வட மேரு வனையான்**
**உம்பர்மணி யாழினொடு தும்புருவு நாரதனு**
**முருகியிசை பாட வருள்கூர்**
**அம்பையுட னேவிடையின் மீதொளிர நின்றதனை**
**யஞ்சலிசெய் தன்பொடு தொழா.**

[தும்பை வகை மாலை செறி வில்வமொடு கொன்றை மலர், சூதம் அறுகு(ஏ) கமழ்தரும் செம்பவளம் வேணிமிசை திங்கள் நதி சூடியருள் செம் பொன் வடமேரு அனையான், உம்பர் மணி யாழினொடு தும்புருவும் நாரதனும் உருகி இசை பாட, அருள் கூர் அம்பையுடனே விடையின்மீது ஒளிர நின்றதனை அஞ்சலி செய்து அன்பொடு தொழா,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** தும்பை வகை மாலை - தும்பை மலர்களினால் கட்டப்பெற்ற பலவகைப்பட்ட மாலைகள். செறி வில்வம் - நெருங்கிய வில்வ இலைகளினால் ஆகிய மாலை. சூதம் - மாந்தளிர். அறுகு - அறுகம்புல். வேணி - சடை, உம்பர் மணி யாழ் - தேவலோகத்திற்குரிய அழகிய யாழ். தும்புருவு - கந்தர்வ வகுப்பைச் சேர்ந்த ஒரு முனிவன் (இசை வல்லுநன்). நாரதர் - தேவமுனி, (தும்புருவும் நாரதனும் இசை பாட) அருள்கூர் அம்பையுடனே - அருள் மிக்கவளான அம்பாளுடனே. விடையின் மீது ஒளிர நின்றதனை - ரிஷபத்தின் மேல் விளங்கி நின்ற திருக் கோலத்தை, (அருச்சுனன் கைகூப்பி அன்போடு வணங்க),—அடுத்த கவியோடு முடியும். தும்புருவின் வீணையின் பெயர், களாவதி. மகதி, என்பது நாரதர் வீணையின் பெயர். தேவியோடு விருஷப

வாகனத்தில் தோன்றிக் காட்சியளித்த சிவபெருமானை, அருச்சுனன் பக்தியோடு வணங்கினான்,—என்பதாம்.

## கலிவிருத்தம்

**116. ஆடினன் களித்தன னயர்ந்து நின்றனன்**
**ஓடினன் குதித்தன னுருகி மாழ்கினன்**
**பாடினன் பதைத்தனன் பவள மேனியை**
**நாடின னடுங்கின னயந்த சிந்தையான்.**

[ஆடினன், களித்தனன், அயர்ந்து நின்றனன், ஓடினன், குதித்தனன் உருகி மாழ்கினன்; பாடினன், பதைத்தனன், பவள மேனியை, நடுங்கினன், நயந்த சிந்தையான்.]

**விளக்கம்** :- செய்யுள் சுலபமானது. சிவபெருமானைக் கண்டதால், அருச்சுனன் உற்ற பரவச நிலையைக் கூறும் செய்யுள் இது. மாழ்குதல் - மயங்கல். பதைப்பு - நடுக்கம், அசைவு, களிப்பு, விரைவு. **பதைத்தனன்,** என்பதற்குக் ''களிப்பின் பயனாய அசைவு', என்றும், நடுங்கினன், என்பதற்கு, ''வில்லால் இப் பெம்மானை அடித்தோமே', என்று உள்ளமும் உடலும் நடுங்கினான்,'' என்றும் பொருள் கொள்ளலாம். மாழ்கினான் - தான் காணும் காட்சி உண்மையோ, அல்லது மதிமயக்கமோ, என்று தடுமாறினான். நயந்த சிந்தையான் - அன்பு கொண்ட மனத்தான்.

**117. விழுந்தரு வினையினின் மெலிந்து நாயினும்**
**அழுந்திய பிறவியி னயரு வேன்முனம்**
**செழுஞ்சுடர் மணிப்பணித் திங்கள் மௌலியாய்**
**எழுந்தரு ளியவி:: தென்ன மாயமோ.**

[விழுந்து அரு வினையினின் மெலிந்து நாயினும் அழுந்திய பிறவியின் அயருவேன் முனம், செழும் சுடர் மணி பணி திங்கள் மௌலியாய், எழுந்தருளிய இஃது என்ன மாயமோ.]

**விளக்கம்** :- ஒளிமிகுந்த இரத்தினத்தைத் தலையிலே உடைய பாம்புகளையும் சந்திரனையும் அணிந்த திருமுடியை உடையவனே, என்று சிவபெருமானை விளித்து, (விசயன் கூறுவான்:— விலக்குதற்கு அரிய வினையினால், அழுந்திய (தாழ்ந்த) பிறப்புக்களில் விழுந்து நாயினும் தாழ்மை யுற்று உழல்பவனாகிய என் முன் எழுந்தருளித் தரிசனம் தந்த இது என்ன மாயமோ, (அதாவது மிக ஆச்சரியமானது என்று வியந்தபடி). தீவினையேபோல் நல்வினையும் பிறவிக்குக் காரணமாவதால், **பிறவியின் வீழ்ந்து,** என்றானாயிற்று. இதுவும் இதைத் தொடரும் ஐந்து கவிகளும் ஒரு தொடர்.

**118. ஆதியே யண்டமு மனைத்து மாயொளிர்
சோதியே கொன்றையந் தொங்கன் மௌலியாய்
வாதியே மரகத வல்லி யாளொரு
பாதியே பவளமாம் பரம ரூபியே.**

[ஆதியே, அண்டமும் அனைத்தும் ஆய் ஒளிர் சோதியே, கொன்றை அம் தொங்கல் மௌலியாய், வாதியே, மரகத வல்லி யாள் ஒரு பாதியே, பவளம் ஆம் பரம ரூபியே.]

**விளக்கம் :-** வாதி - பேசவல்லவன்; இங்கே, முற்றிய அறிவினன் என்ற பொருளது. மரகதவல்லி - பார்வதி. பவள மாம் பரம ரூபியே - பவள மயமான திறந்த வலப் பாகத்தை யுடைய திரு வடிவத்தை உடையவனே. இடப்பாகம், மரகத வல்லி.

**119. பையரா வணிமணிப் பவள மேனியாய்
செய்யவாய் மரகதச் செல்வி பாகனே
ஐயனே சேவடி யடைந்த வர்க்கெலாம்
மெய்யனே மாசற விளங்கு மெய்யனே.**

[பை அரா அணி மணி பவளம் மேனியாய், செய்ய வாய் மரகதம் செல்வி பாகனே, ஐயனே, செ அடி அடைந்தவர்க்கு எலாம் மெய்யனே, மாசு அற விளங்கும் மெய்யனே.]

**விளக்கம் :-** படத்தை உடைய பாம்புகளை அலங்காரமாக அணிந்த அழகிய திருமேனியை உடையவனே,—என்பது முதலடி யின் பொருள். அடைந்தவர்க்கு எலாம் மெய்யனே—உன்னைச் சரண் பற்றியவர்களுக்கு எல்லாம் உண்மையாய் இருப்பவனே. மாசு-குற்றம். மெய்யனே-திருமேனியை உடையவனே. ''எங்கு மாய் விளங்கும் சோதியே'', என்றும் பாடம் உளது.

**120. முக்கணு நிலவெழ முகிழ்த்த மூரலும்
சக்கர வதனமுந் தயங்கு வேணியும்
மைக்கயன் மரகத வல்லி வாழ்வுறு
செக்கர்மெய் வடிவமுஞ் சிறந்து வாழியே.**

[முக்கணும். நிலவு எழ முகிழ்த்த மூரலும், சக்கரம் வதனமும், தயங்கு வேணியும், மை கயல் மரகதம் வல்லி வாழ்வுறு செக்கர் மெய் வடிவமும் திறந்து வாழியே.]

**விளக்கம் :-** முகிழ்த்தல் - அரும்புதல், தோன்றுதல். மூரல்-பல், நகை, நிலவு போன்ற ஒளி எழும்படி தோன்றும் இளநகை. சக்கர வதனம் - வட்ட வடிவமான திருமுகம். மை கயல் மரகத வல்லி - மை தீட்டிய கயல் மீனைப் போன்ற கண்களை உடைய உமாதேவி. வாழ்வுறு செக்கர் மெய் வடிவம் - பொருந்தி வசிப்ப தற்கு இடமான சிவந்த திருமேனியின் வடிவம். ''சிவபெருமானது

 

அழகிய திருமேனி கால தத்துவம் உள்ள வரையில் ஒருவிதக் குறையுமில்லாமல் நிலைபெற்றிருக்க வேண்டும்'', என்ற தன் விருப்பத்தின் ஆர்வத்தால், விசயன் 'சிறந்து வாழியவே' என்று வாழ்த்தினான், என்க.

**121. அன்புறு தருமனுக் கனுச னாயினேன்**
**நன்பரம் பொருளுக்கு நண்பு மாயினேன்**
**பொன்புரை மேனியாய் போற்றி னேனுனை**
**என்பெருந் தவப்பயன் யார்பெற் றார்களே.**

[அன்பு உறு தருமனுக்கு அனுசன் ஆயினேன், நல் பரம் பொருளுக்கு நண்பும் ஆயினேன், பொன் புரை மேனியாய், போற்றினேன் உனை; என் பெரும் தவம் பயன் யார் பெற்றார் களே.]

**விளக்கம்** :- அனுசன் -பின் பிறந்தவன். நல் பரம் பொருள்-கண்ணன். பொன்புரை மேனியாய், (பொன்னை ஒத்த திரு மேனியை உடையவனே) என்று விசயன் சிவபெருமானை விளிக் கின்றான். நண்பு - (ஆகுபெயர்) நண்பன்.

**122. என்றுகொண் டிம்முறை யிவனி யம்பவே**
**மன்றலங் கொன்றையம் மாலை மௌலியான்**
**ஒன்றிய தவம்புரி யும்பர் தம்பிரான்**
**தன்திரு மதலையைத் தழுவி னானரோ.**

[என்று (கொண்டு) இ முறை இவன் இயம்பவே, மன்றல் அம் கொன்றை அம் மாலை மௌலியான் ஒன்றிய தவம்புரி உம்பர் தம்பிரான் தன் திரு மதலையை தழுவினான், அரோ.]

**விளக்கம்** : மன்றல் - வாசனை. ஒன்றிய தவம் - பொருத்த முடைய அல்லது சிறந்த தவம். உம்பர் தம்பிரான் - இந்திரன். கொண்டு, அசை. கொன்றையம் என்பதிலுள்ள **அம்** சாரியை. இதன் முன் கூறியபடி அருச்சுனன் சிவபெருமானைத் துதிக்கவும், அப்பிரான், அவனை அன்புடன் தழுவிக் கொண்டான், என்பதாம். அரோ: ஈற்றசை.

**123. தழுவினன் பெருந்துய ரகற்றித் தண்ணளி**
**பொழிதரு கண்ணினன் புரக்குஞ் சிந்தையன்**
**அழிவற வொழிவற வமர்ந்த சோதியன்**
**பழுதறு மொழிசில பகர்ந்து தேற்றினான்**

[தழுவினன் பெரு துயர் அகற்றி, தண் அளி பொழிதரு கண்ணினன், புரக்கும் சிந்தையன், அழிவு அற ஒழிவு அற அமர்ந்த சோதியன், பழுது அறு மொழி சில பகர்ந்து தேற்றினான்.]

**விளக்கம்** :- அழிதலும் ஒழிதலும் இல்லாமை இயற்கையாய் அமைந்த சோதியனான சிவபெருமான், **தண்ணளி** (கருணை)

பொழியும் கண்ணினனும், (விசயனை) ரட்சிக்கவேண்டும் என்னும் திருவுள்ளம் உடையவனுமாய், அவனை அணைத்து, அவனது பெரிய துயரத்தை அகற்றிப் பழுதற்ற அதாவது நன்மை தரக்கூடிய சில வார்த்தைகளைக் கூறித் தேற்றுவா னாயினான்,—என்பதாம். துயர் அகற்றி-சிவபெருமானை அடித்ததால் உண்டான விசயனது துன்பத்தை அகற்றி, அல்லது, தவம் செய்ததாலும், போர் புரிந்த தாலும் உண்டான துன்பத்தை அகற்றி. தேற்றுதல் - சமாதானப் படுத்தல், அமைதியுறச் செய்தல்.

## சிவபிரான் பாசுபதம் அருளல்

**124.** **சூதினில் யாவையுந் தோற்றுக் கானிடை**
**ஏதிலர் போலநீ ரிளைத்து வாடினீர்**
**வாதுசெய் புலன்களை யடக்கி மண்ணின்மேல்**
**நீதவம் புரிந்தமை நினைய லாகுமோ**

[சூதினில் யாவையும் தோற்று, கானிடை ஏதிலர் போல நீர் இளைத்து வாடினீர், வாது செய் புலன்களை அடக்கி மண்ணின் மேல் நீ தவம் புரிந்தமை நினையல் ஆகுமோ.]

**விளக்கம்** :- ஏதிலர் - தரித்திரர். வாது செய் புலன்களை அடக்கி - நன்னெறி படரவொட்டாமல் தடுத்துக் கெடுக்கும் இந்திரியங்களை அடக்கி. நீ தவம் செய்த விதம் இத்தன்மையது என்று மதிப்பிடக் கூடியதாகுமோ! (மற்றவரால் செய்தற்கு முடியாத தவம், என்றபடி),—என்பது ஈற்றடியின் பொருள்.

**125.** **மூகனென் றுரைக்குமம் மூக தானவன்**
**வேகமோ டேனமாய் விரைவில் வந்தனன்**
**நாகவெங் கொடியவ னவின்ற வாய்மையால்**
**யோகுசெய் யுனதுயி ருண்ண வெண்ணியே.**

[மூகன் என்று உரைக்கும் அ மூகதானவன் வேகமோடு ஏனமாய் விரைவில் வந்தனன், நாகம் வெம் கொடியவன் நவின்ற வாய்மையால் யோகுசெய் உனது உயிர் உண்ண எண்ணியே.]

**விளக்கம் :-** நாகம்வெம் கொடியவன் - பாம்பைத் தன் கொடியில் கொண்ட துரியோதனன். வாய்மை - வார்த்தை, சொல். துரியோதனனது ஏவலில், உன்னைக் கொல்லும் பொருட்டு மூகன் என்ற அசுரன் பன்றி வடிவத்தில் விரைந்து வந்தான்,— என்பதாம்.

**126.** **வந்தவன் முந்துமுன் மங்கை தன்னுடன்**
**இந்தவெற் புறைதரு மெயின வேடமாய்**
**சுந்தர மரகதச் சோதி வீரனே**
**அந்தவல் லசுரனை யம்பின் வீழ்த்தினேன்.**

[வந்தவன் முந்துமுன் மங்கை தன்னுடன் இந்த வெற்பு உறை தரும் எயின(ன்) வேடமாய், சுந்தரம் மரகதம் சோதி வீரனே, அந்த வல் அசுரனை அம்பின் வீழ்த்தினேன்.]

**விளக்கம் :-** அழகிய மரகத மணிபோன்ற நிறத்தை உடைய வீரனே, என்று சிவபெருமான் விசயனை அழைத்துக் கூறுகின்றார். உன்னைக் கொல்ல வந்த அசுரன் முந்திக் கொள்ளுமுன், அவனைக் கொன்று வீழ்த்தினேன்,—என்று சிவபெருமான் கூறினார்,—என்க.

**127.** **நின்னுட னமர்செய்து நின்வின் னாணறுத்(து)**
**அந்நெடு வில்லினா லடியு முண்டனன்**
**உன்னரு மல்லினா லுதையு முண்டனன்**
**என்னினி யுன்கருத் தென்று கூறினான்.**

[நின்னுடன் அமர் செய்து நின் வில்லின் நாண் அறுத்து, அ நெடு வில்லினால் அடியும் உண்டனன், உன் அரு மல்லினால் உதையும் உண்டனன், என் இனி உன் கருத்து என்று கூறினான்.]

**விளக்கம் :-** வில் போரில் உன் வில்லின் நாண் அறுத்து, அவ் வில்லினால் அடியும் பட்டேன், மல் போரில் உதையும் பட்டேன், இனி உன் கருத்து யாது, சொல் என்று சிவபெருமான் கூறினான், என்பதாம். 'உன் அரு மல்', 'உன்னரும் மல்', என்று கொண்டு 'நினைத்தற்கு அரிய மல்' என்றும் பொருள் கொள்ள லாம். அடியும், உதையும் என்பதிலுள்ள உம்மைகள், இழிவு சிறப்பின.

**128.** **அந்தவில் விசயனு மரன்ப தம்பணிந்(து)**
**எந்தைபா ரதவமர்க் கிசைந்த வீரர்மெய்**
**சிந்தநின் பேர்பெறு தெய்வ வாளியைத்**
**தந்தரு ளென்றனன் றவத்தின் மேனின்றான்.**

[அந்த வில் விசயனும் அரன் பதம் பணிந்து, எந்தை, பாரதம் அமர்க்கு இசைந்த வீரர் மெய் சிந்த, நின் பேர் பெறு தெய்வம் வாளியை, தந்தருள் என்றனன் தவத்தின்மேல் நின்றான்.]

**விளக்கம் :-** பாரத அமர்க்கு இசைந்த வீரர் - பாரதப் போருக்குப் பகைவர் பக்கம் இணங்கி வந்த வீரர், (பகைவர்). சிந்த - சிதறும்படி செய்ய, அழிக்க. நின் பேர் பெறு தெய்வ வாளி - பாசுபதாத்திரம். பாரத அமர் - பரத வம்சத்தாருக்குள் நிகழும் போர்; அல்லது, பார் அதம் அமர் என்று பிரித்துப் பூபாரம் தீர்க்கும் போர், என்றும் பொர்ருள் கொள்ளலாம்.

**129** **ஐயனு மம்மையோ டருள்பு ரிந்துபின்**
**வெய்யபொற் றூணியும் வில்லு மந்த்ரமும்**
**துய்யபா சுபதமெய்த் தொடையு முட்டியும்**
**ஒய்யென நிலையுட னுதவி னானரோ.**

[ஐயனும் அம்மையோடு அருள் புரிந்து, பின், வெய்ய பொன் தூணியும், வில்லும் மந்த்ரமும், துய்ய பாசுபதம் மெய் தொடையும், முட்டியும் ஒய்யென நிலையுடன் உதவினான், அரோ.]

**விளக்கம் :-** தூணி - அம்பு வைக்கும் புட்டில். மந்த்ரம் - அந்த அத்திரத்திற்கு உரிய மந்திரம் தொடை - அஸ்திரம். முட்டி - கைக்கவசம். ஒய்யென - விரைவாக. நிலை - உடலுக்குரிய கவசம். சிவபெருமான், தூணி, வில், பாசுபதக்கணை, முட்டி, நிலை ஆகியவற்றை அளித்தும், மந்திரத்தை உபதேசித்தும் அருளினான், என்க.

**130.** **பெற்றனன் விசயனும் பேயும் பூதமும்**
**சுற்றிய கணங்களுஞ் சுருதி யோசையும்**
**வெற்றிகொள் பெற்றமும் விழைந்து சூழவே**
**கற்றையஞ் சடையவன் கயிலை போயினான்.**

[பெற்றனன் விசயனும், பேயும் பூதமும் சுற்றிய கணங்களும் சுருதி ஓசையும், வெற்றிகொள் பெற்றமும் விழைந்து சூழவே, கற்றை அம் சடையவன் கயிலை போயினான்.]

**விளக்கம் :-** பெற்றம் - நந்தி தேவர் (ரிஷபம்). ஆன் இனத்தின் ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுப் பெயரான **பெற்றம்** என்ற சொல் தென்பாண்டி நாட்டினின்று வந்த திசைச் சொல். அருச்சுனனுக்கு, பாசுபதம் உதவிய பின் சிவபெருமான், பேய் பூதம் முதலிய கணங்கள் சூழவும், வேதங்கள் கோஷித்துப் போற்றவும் அம்மையுடன் கயிலை சென்றான், என்பதாம்.

### விசயன் வானுலகம் செல்லல்

**131.** **ஏகிய பின்னரா யிரங்க ணாதனும்**
**மோகர துந்துபி முழங்கத் தேரின்மேல்**
**நாகரு முனிவரு நண்ணி வாழ்த்தவே**
**வாகைகொள் விசயனை வந்து புல்லியே.**

[(சிவபிரான்) ஏகிய பின்னர், ஆயிரம் கண் நாதனும் மோகரம் துந்துபி முழங்க, தேரின்மேல் நாகரும் முனிவரும் நண்ணி வாழ்த்தவே, வாகை கொள் விசயனை வந்து புல்லினான்.]

**விளக்கம் :-** ஆயிரம் கண் நாதன் - இந்திரன், துந்துபி - தேவ வாத்தியம். மோகர துந்துபி - பேரொலி செய்யும் துந்துபி. நாகர் - தேவர். வாகை - வெற்றி. சிவபிரான் சென்றபின் இந்திரன் வந்து, தன் மைந்தனாகிய பார்த்தனைத் தழுவிக்கொண்டான், என்க. வாகை என்பது வாகை என்னும் மரத்தின் பூவைக் குறிக்கும். வீரர் வெற்றியின் அடையாளமாக, அம் மலரைச் சூடுவர். அது இங்கே வெற்றி என்ற பொருளதாயிற்று.

**132.** **நீபுரி தவப்பய னீடு வாழியே**
**சாபமுந் தூணியுஞ் சரமும் வாழியே**
**தீபமெய் யொளியுடன் சேர்ந்து போர்செயும்**
**மாபெரு நீலமெய் வாழி வாழியே.**

*[நீ புரி தவம் பயன் நீடு வாழியே, சாபமும் தூணியும், சரமும் வாழியே, தீபம் மெய் ஒளியுடன் சேர்ந்து போர் செயும் மா பெரு நீல மெய் வாழி வாழியே.]*

**விளக்கம்** :- சிவபெருமானது அருளைப் பெற்ற அருச்சுனனை இந்திரன் வாழ்த்தும் கருத்தது. சாபம் - வில். தூணி - அம்பு வைக்கும் புட்டில். சரம் - அம்பு. அவியாது என்றுமுளதான தீபம் போன்ற ஒளி வடிவினனான சிவபெருமானுடன் ஒன்று பட்டுப் போர் செய்த சிறந்த பெரிய நீலமணி போன்ற (அருச்சுன னது) திருமேனியை, அது நன்கு வாழ்வதாக,—என்று இந்திரன் வாழ்த்தும் பொருளது ஈற்றடிகள். நீண்டு, என்பது நீண்ட என்பதின் விகாரம்.

**133.** **என்றுகொண் டிணையடி யிறைஞ்சு மைந்தனைத்**
**தன்றிருத் தேரின்மேற் றாழ்ந்த கைகளால்**
**ஒன்றிய வுவகையோ டேற்றி யும்பர்கோன்**
**சென்றனன் றன்பெருந் தெய்வ வானமே.**

*[என்று (கொண்டு) இணை அடி இறைஞ்சும் மைந்தனை, தன் திரு தேரின்மேல் தாழ்ந்த கைகளால் ஒன்றிய உவகையோடு ஏற்றி, உம்பர் கோன் சென்றனன் தன் பெரும் தெய்வம் வானமே.]*

**விளக்கம்** :- என்று உம்பர்கோன், இணைஅடி இறைஞ்சும் மைந்தனை..... தன் பெரும் தெய்வம் வானம், சென்றனன்,— என்பது அன்வயம். என்று - என்று வாழ்த்தி. தாழ்ந்த கை - முழங்கால் அளவு நீண்ட கை. தெய்வவானம் - தேவலோகம். இந்திரன் விசயனைத் தன் தேரின்மேல் ஏற்றித் தனது உலகத்துக்கு அழைத்துச் சென்றான், என்பதாம். வான் - அம் - வானம், **அம்** சாரியை.

**134.** **ஒருபெரு மாதலி யூருந் தேரின்மேல்**
**இருமர கதகிரி யிருந்த வென்னவே**
**மருவரு கற்பக மாலை மௌலியும்**
**விரிபுகழ் மைந்தனும் விளங்கி னாரரோ.**

*[ஒரு பெரு மாதலி ஊரும் தேரின்மேல், இரு மரகதம் கிரி இருந்த என்ன (ஏ) மருவரு கற்பகம் மாலை மௌலியும், விரி புகழ் மைந்தனும் விளங்கினார், அரோ.]*

**விளக்கம்** :—ஒரு பெரு மாதலி - இந்திரனது ஒப்பற்ற சிறந்த சாரதி. ஊரும் - நடத்தும், செலுத்தும். மரகதம் கிரி - மரகத மயமான மலைகள். மருவரு கற்பகம் - மணம் மிகுந்த கற்பக மலர். மௌலி - முடி. மாதலி நடத்தும் தேரில், இந்திரனும் அருச்சுனனும் மரகதமலை இரண்டு வீற்றிருந்தனபோல் விளங்கி னார்கள்,—என்பதாம். நிறமும் தோற்றமும் பற்றி வந்த தற்குறிப் பேற்றத்தின் பாற்படும் இந்த வருணனை. அரோ : ஈற்றசை.

**135. ஆயிரம் பொலங்கிரி யழித்து வானின்மேல்**
**மாயிரு வொருபுரம் வகுத்த தென்னவே**
**பாயிர மறைபுகழ் பரமன் தேசெனச்**
**சேயிரு பொன்னகர் திகழ்ந்து தோன்றுமால்.**

[ஆயிரம் பொலம் கிரி அழித்து வானின்மேல் மா இரு ஒரு புரம் வகுத்தது என்ன (ஏ), பாயிரம் மறை புகழ் பரமன் தேசு என சே இரு பொன் நகர் திகழ்ந்து தோன்றும் (ஆல்).]

**விளக்கம்** :-பொலம் கிரி - பொன்மலை மா இரு - மிகப் பெரிய. புரம் - பட்டணம். பாயிரம் மறை புகழ் பரமன் தேசு - தோத்திரரூபமான வேதங்கள் புகழ்கின்ற திருமாலினது ஒளி வடி வினதான வைகுண்டம். சேய் இரு - நெடுந்தூரத்திலுள்ள, பொன் நகர் - தேவலோகம், அமராவதி. வானுலகம் பரமபதத் தைப்போல் சிறந்து விளங்கியது, என்று கூறியபடி. பாயிரம், என்பது புகழ்ச்சி, அதாவது வேதத்தின் முன்னும் பின்னும் கூறும் தோத்திரம்.

**136. விண்ணவர் முனிவருள் விளங்கி வாழ்தலால்**
**நண்ணிய முடிப்பெயர் நாகம் பூணலால்**
**எண்ணரு மகபதி யிருந்த மாநகர்**
**புண்ணியன் வடிவெனப் பொலிந்தி லங்குமால்.**

[விண்ணவர் முனிவர் உள் விளங்கி வாழ்தலால், நண்ணிய முடி பெயர் நாகம் பூணலால், எண் அரு மகபதி இருந்த மா நகர் புண்ணியன் வடிவு என பொலிந்து இலங்கும், ஆல்.]

**விளக்கம்** :-எண்ணுதற்கரிய சிறப்பையுடைய மகபதி (இந்திரன்) தலைமை பூண்டிருந்த சிறந்த தெய்வலோகம், பரிசுத் தனான சிவபெருமானது திருவுருவம் போன்ற அழகினதாய் விளங் கிற்று,—என்பது ஈற்றடிகளின் பொருள். இந்திரன் நகரம் எவ்வாறு சிவபிரானின் திருமேனியை ஒத்ததாயிற்று என்பதைச் சிலேடை யின் துணைகொண்டு புலவர் முன்னிரண்டடிகளில் கூறுகின்றார்- விண்ணவரும் முனிவர்களும் தன்னிடத்தே சிறப்புடன் விளக்கத் தோடு தங்கி வாழும் நகரம் தேவலோகம். விண்ணவரும் முனிவர் களும் ஆகியவர்களின் உள்ளத்தே (மனத்தில்) தங்கி வாழ்பவன் சிவபெருமான். பொருந்திய முடியையும் (கோபுரத்தின் சிகரத்தை யும்) நாகம் என்ற பெயரையும் உடையது இந்திரலோகம். பொருந்திய முடியிலே (சிரசில்) பெயரும் (ஊர்தலைச் செய்யும்)

பாம்புகளை அலங்காரமாக அணிந்திருப்பவன் சிவபெருமான். ஆதலால், விண்ணுலகம் சிவபெருமானை ஒத்த நிலையினதா கின்றது. நாகம் : தேவலோகத்தின் பெயர்களில் ஒன்று.

**137. மாவலி சிறைப்பட வைத்த தாண்மலர்**
**தாவிய விண்ணிடைத் தயங்கு பொன்னகர்**
**தேவருந் தொழுகழற் றேவ னுந்தியம்**
**பூவிருந் ததுவெனப் பொலிந்து தோன்றுமால்.**

[மாவலி சிறை பட வைத்த தாள் மலர் தாவிய விண்ணிடை தயங்கு பொன் நகர், தேவரும் தொழுகழல் தேவன் உந்தி அம் பூ இருந்தது என பொலிந்து தோன்றும், ஆல்.]

**விளக்கம்** :-தேவர்களுக்குத் தீங்கு இழைத்த மகாபலிச் சக்கர வர்த்தியைப் பாதளத்தில் சிறையிருக்கும்படி, அவனது தலையில் வைத்த தாமரை மலர் போன்ற திருவடி தாவி அளந்த விண்ணிலே விளங்கும் இந்திரனது பொன் நகரான அமராவதி என்னும் பட்டணமானது, தேவரும் தொழுகின்ற திருவடிகளை உடைய திருமாலினது நாபிக்கமலம் என்று சொல்லும்படி பொலிந்து தோன்றும், - என்பது பொருள். அதாவது, இந்திரனது நகர், திருமாலினது உந்தித் தாமரை போன்ற நலத்ததா யிருந்தது, என்றபடி.

**138. பொலிவுறு மந்நகர் புகுந்து தாதையும்**
**சிலைகணை பெறுதிறற் றெய்வ மைந்தனும்**
**மெலிவுறு மின்னிடை நுடங்க மீனினும்**
**பலரர மாதரார் பரிவு கூரவே.**

[பொலிவு உறும் அ நகர் புகுந்து, தாதையும் சிலை கணை பெறு திறல் தெய்வம் மைந்தனும், மெலிவு உறு மின் இடை நுடங்க மீனினும் பலர் அர மாதரார் பரிவு கூரவே.]

**விளக்கம்** ;-தாதை - இந்திரன், சிலை கணை பெறுதிறல் தெய்வ மைந்தன் - சிவபிரானிடமிருந்து) வில்லையும், பாசுபதக் கணையையும் பெற்ற ஆற்றலுடைய தெய்வத்தன்மை பொருந்திய அருச்சுனன். மீனினும் பலர் அரமாதர் - நட்சத்திரங்களைக் காட்டிலும் அதிகமான எண்ணிக்கை யுள்ள தேவமாதர். பரிவு கூர - அன்பு மிக,—அடுத்த செய்யுளில் முடியும். சிவபக்தனும், இந்திர மைந்தனும் ஆதல் பற்றி அருச்சுனனைத் **தெய்வ மைந்தன்** என்றார்.

**139. பருமணி வெயிலெழப் பணில மாநிரை**
**தருமணி நிலவெழத் தமனி யப்பெரும்**
**குருமணிச் சிலம்பொலி கூரு மண்டபத்து**
**ஒருமணி யாசனத் தோங்கி வைகினார்.**

[பருமணி வெயில் எழ, பணிலம் மாநிரை தரு மணி நிலவு எழ, தமனியம் பெரு குரு மணி சிலம்பு கூரும் மண்டபத்து ஒரு மணி ஆசனத்து ஓங்கி வைகினார்.]

**விளக்கம்** :-தேவர் உலகிலுள்ள அமராவதி நகரின்கண் தேவ மாதர் சிலம்பொலிக்க ஆடுதலைச் செய்த **சுதர்மை** என்ற பெயரை யுடைய சபாமண்டபத்தில் ஓர் அழகிய சிங்காதனத்தில், பார்த் தனும் இந்திரனும் வீற்றிருந்தனர், என்பது பொருள். நடன மாடிய மாதர் அணிந்திருந்த பருத்த மணிகளிலிருந்து வெயிலும், அவர் அணிந்திருந்த முத்துமாலைகளிலிருந்து நிலவும் எழுந்தன. பணிலம் - சங்கு. மா பணிலம் தரு நிரைமணி - பெரிய சங்குகள் உயிர்த்த வரிசையான, அல்லது கூட்டமான முத்துக்கள். ஓங்கி வைகினார் - அந்த சபையிலிருந்த தேவர்கள் எல்லோரையும் விடச் சிறப்பின் மிக்கவராகத் தந்தையும் மைந்தனும் வீற்றிருந் தார்கள். தமனியம் - (தபநீயம்) பொன். சிலம்பொலிக்குக் காரணமாகிய ஆடலை, அதன் பயனாகிய சிலம் பொலியால் தெரிவித்தது, உபசார வழக்கு.

## இந்திராணி வருகை

**140. முருகவிழ் பரிமள மொய்த்த தண்டுழாய்**
**மரகத கிரிதிரு மைத்து னன்றனைப்**
**பெருமித வபிமனைப் பெற்ற காளையை**
**அருள்பெறு முவகையோ டன்னை யெய்தினாள்.**

[முருகு அவிழ் பரிமளம் மொய்த்த தண் துழாய் மரகத கிரி திரு மைத்துனன் தனை, பெருமிதம் அபிமனை பெற்ற காளையை அருள் பெறும் உவகையோடு அன்னை எய்தினாள்.]

**விளக்கம்** :-முருகு - தேன். பரிமளம் - வாசனை. தண்துழாய் மரகத கிரி - கண்ணன். மைத்துனன் - கண்ணனது அத்தையாகிய குந்தியின் மகனாகிய விசயன். அபிமன் - அபிமந்யு (அருச்சுனனது வீரமகன்). அன்னை - இந்திராணி. அருச்சுனனைக் கண்டு ஆசீர் வதிக்க இந்திராணி அவை வந்தாள், என்பதாம். அருள் பெறும் உவகை - அருளோடு கூடிய களிப்பு.

**141. அன்னையை மின்னிடை யரிய பாவையைக்**
**கன்னலை யமுதொடு கலந்த சொல்லியை**
**உன்னருந் தவப்பய னுற்ற மைந்தனும்**
**சென்னியை யவள்பதஞ் சேர்த்து நின்றனன்.**

[அன்னையை மின் இடை அரிய பாவையை, கன்னலை அமு தொடு கலந்த சொல்லியை (கண்டு), உன்ன அரும் தவம் பயன் உற்ற மைந்தனும், சென்னியை அவள் பதம் சேர்த்து நின்றனன்,]

**விளக்கம்** ;- கன்னல் - கரும்புச் சாறு, எண்ணுதற்கு அரிய தவத்தின் பயனாய் பாசுபதக் கணையைப் பெற்ற அருச்சுனன், என்பது மூன்றாவது அடியின் பொருள். சென்னி - தலை. வந்த

இந்திராணியைப் பார்த்தன் வணங்கினான், என்க. கன்னலை அமுதொடு கலந்த சொல்லியை என்றதன் பின், 'கண்டு' என்ற சொல்லை வருவித்துக் கொள்க. பதுமைபோன்ற அழகோடு, இனிய சொல்லையும் உடைய இந்திராணி, என்பது முதல் இரண்டடிகளின் பொருள்.

**142. நின்றவக் குமரனைத் தழுவி நேயமொ(டு)**
**ஒன்றிய வுவகைய ளுரைவ ழுத்தினாள்**
**வென்றிகொ ளையநீ விபுதர் தம்பிரான்**
**தன்றிருச் செல்வமுந் தாங்கு வாயெனா.**

[நின்ற அ குமரனை தழுவி நேயமொடு ஒன்றிய உவகையள் உரை வழுத்தினாள், ''வென்றி கொள் ஐய நீ விபுதர் தம்பிரான் தன் திரு செல்வமும் தாங்குவாய்'' எனா.

**விளக்கம்** :-வணங்கி நின்ற மைந்தனை இந்திராணி அன்போடு அணைத்துக்கொண்டு, உள்ளம் பொருந்திய களிப்பினளாய், இந்திர செல்வத்தையும் பெற்று வாழ்வாயாக, என்று வாழ்த்தினாள், - என்பதாம். விபுதர் தம்பிரான் - தேவர்களின் தலைவனான இந்திரன். உரை வழுத்தினாள் - வாழ்த்துரை கூறினாள்.

**143. ஆயிரம் பதின்மடங் காக வன்னையும்**
**மாயிரும் புதல்வனை வாழ்த்தி வாழ்த்தியே**
**தூயசெம் பருமணி சுடரு மாளிகை**
**ஏயின ளிந்திர னிதயம் போன்றுளாள்.**

[ஆயிரம் பதின் மடங்கு ஆக அன்னையும் மா இரு புதல்வனை வாழ்த்தி வாழ்த்தியே, தூய செம் பருமணி சுடரும் மாளிகை ஏயினள், இந்திரன் இதயம் போன்று உளாள்.]

**விளக்கம்** :-இந்திரன் இதயம் போன்றுளாள் ஆன (விசயனின்) அன்னையும், மா இரும் புதல்வனை...ஏயினள், — என்று அவன் யிக்க. ஆயிரம் பதின்மடங்கு ஆக - ஒரு தாய் மகனை வாழ்த்தும் அளவினும் பதினாயிரம் மடங்கு அதிகமாக. மா இரு புதல்வன் - சிறப்பினால் மிகுந்த புதல்வனாகிய அருச்சுனன். இந்திராணி புதல்வனை மனமார வாழ்த்திவிட்டு அவளது திருமாளிகை சென்றாள், என்பதாம்.

## விசயனுக்குச் சிறப்புச் செய்தல்

**144. அந்தர துந்துபி யதிரும் பேரொலி**
**முந்திய மறையொலி முழங்குஞ் சங்கொலி**
**சிந்துர மதகிரி சீறு நீடொலி**
**சுந்தர முகிலொலி தூங்கத் தூங்குமால்.**

[அந்தர துந்துபி அதிரும் பேர் ஒலி, முந்திய முறை ஒலி, முழங்கும் சங்கு ஒலி, சிந்துரம் மதகிரி சீறும் நீடு ஒலி, சுந்தரம் முகில் ஒலி தூங்க தூங்கும் (ஆல்)]

**விளக்கம்** :-சுந்தர முகில் ஒலி தூங்க, அந்தர துந்துபி...தூங் கும். (ஆல்: அசை). அழகிய மேகங்களின் முழக்கமாகிய ஒலி அடங்கும்படி, அந்தர துந்துபியின் ஒலியும், பழமையான வேதங் களின் பாராயண ஒலியும், சங்கின் ஒலியும்,சினந்து சீறும் யானை களின் பிளிறலாகிய மிகுந்த ஒலியும் எங்கும் முழங்கின, என்க. சிந்துர மதகிரி - சிந்துரத் திலகம் அணிந்த மதமுடைய மலை போன்ற யானை. அந்தர துந்துபி முதலியவற்றின் ஒலிகள், மேகத்தின் இடி யொலியை அடங்குமாறு செய்தன, என்ற இது, **மலறவு அணி** என்பதை உட்கொண்டதாகும். தூங்க - அடங்க, **தூங்கும்** - தங்கி ஒலிக்கும். முந்திய - பழைய.

**145. பத்திகொ ணவமணி பயின்று செந்துகிர்க்
கொத்தொளிர் தளிருடன் குலாவு கற்பகம்
சித்திர விசயவில் விசயன் சென்னிமேல்
வைத்தது முருகவிழ் வாச மாலையே.**

[பத்திகொள் நவமணி பயின்று செம் துகிர் கொத்து ஒளிர் தளிருடன் குலாவு கற்பகம், சித்திரம் விசயம் வில் விசயன் சென்னி மேல் வைத்தது முருகு அவிழ் வாசம் மாலையே.]

**விளக்கம்** :- பத்தி கொள் நவமணி பயின்று - வரிசைப்பட்ட நவமணிகள் நிறைந்து. செந்துகிர் - சிவந்த பவளம். வரிசை கொண்ட நவமணிகள் நிறைந்து சிவந்த பவளக் கொத்தைப் போல் விளங்குகின்ற தளிருடன் கூடிய கற்பக விருக்ஷம், என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். சித்திர விசயவில் - அழகிய வெற்றி தரும் வில். முருகு அவிழ் வாசம் மாலை - தேன் பொழியும் வாசனை உடைய மாலை, வைத்தது - சூட்டியது. கற்க தருவின் மலர்கள் அருச்சுனன் தலையில் விழுந்திருப்பது, அக்கற்பகம் அவனது தலையில் மலர் மாலையைச் சூட்டியது போன்றிருந்தது, என்பது பொருள். நவமணி ;— கோமேதகம், நீலம், பவளம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம், வைடூரியம், என்பவை.

**146. கிளரிசைத் தும்புரு கிளரும் கற்பகத்
தளையவிழ் நாண்மலர் சாத்து நாரதன்
அளிபயி லமுதமுண் டகம கிழ்ந்துளக்
களியொடு கின்னரர் கானம் பாடவே.**

[கிளர் இசை தும்புரு, கிளரும் கற்பகம் தளை அவிழ் நாள் மலர் சாத்தும் நாரதன், அளிபயில் அமுதம் உண்டு, அகம் மகிழ்ந்து உளம் களியொடு கின்னரர் கானம் பாடவே.]

**விளக்கம் :-** கிளர் இசை தும்புரு - விளங்கும் இசை வித்தகம் உடைய தும்புரு. கிளரும்....சாத்தும் நாரதன் - ஓங்கி விளங்கும் கற்பகத்தினது கட்டவிழ்ந்த புதிய மலர் மாலை சாத்திக்கொண்ட நாரதர். அளிபயில்...கின்னரர் - இனிமை மிகுந்த, அல்லது வண்டு கள் நெருங்கி மொய்க்கும் அமுதம் உண்டு மனம் மகிழ்ந்து உள்ளம் எழுந்த களிப்போடு கின்னரர். விசயனும் இந்திரனும் வீற்றிருந்த சபையிலே இம்மூவரும், பாடினர், - என்க. மலர், ஆகுபெயராய் மாலையைக் குறித்தது, கின்னரர், தேவ சாதியாரில் ஒருவகை யினர்.

**147. சிகையன னிகரகத் தியன்பு லத்தியன்**
**வகைபெறு வசிட்டனேழ் வசுக்க ளாதியர்**
**அகமகிழ்ந் துவகைகொ ளன்பி னாற்றிரு**
**முகமலர்ந் தருமறை முனிவர் வாழ்த்தவே.**

[சிகை அனல் நிகர் அகத்தியன், புலத்தியன், வகை பெறு வசிட்டன், ஏழ் வசுக்கள் ஆதியர், அகம் மகிழ்ந்து உவகை கொள் அன்பினால் திருமுகம் மலர்ந்து அருமறை முனிவர் வாழ்த்த வே.]

**விளக்கம் :-** சிகை அனல் நிகர் அகத்தியன் - சுவாலையோடு கூடிய நெருப்பை யொத்த அகத்திய முனிவன். வகை பெறு வசிட் டன் - வகை வேறுபாடுடைய தத்துவ வித்தகனான வசிட்ட மா முனிவன், ஏழ் வசுக்கள் - பீஷ்மனாய்ப் பிறந்திருக்கும் வசு ஒழிந்த மற்ற வசுக்கள் எழுவர். (அகஸ்தியர், புலஸ்தியர், வசிட்டர்) ஆதியர் - முதலியவர்களாகிய, அரு மறை முனிவர் - கற்பதற் கரிய வேதம் பயின்ற வித்தகர்கள், அகம் மகிழ்ந்து - மனம் மகிழ்ந்து, உவகை கொள் அன்பினால் - உள்ளக் களிப்பின் பயனாகிய அன்பி னால், முக மலர்ந்து வாழ்த்தவே - மலர்ந்த முகத்துடன் வாழ்த் தவும்,—அடுத்த செய்யுளோடு தொடரும்.

'சிகை அனல் நிகர்,' என்பதைப் புலத்தியனோடும் சேர்க் கலாம். சிகையுடைய அனல் போன்ற திருமேனி விளக்கமுடைய, அதாவது பிரும்ம தேசினையுடைய முனிவர், என்பது கருத்து. வசுக்கள் எண்மர்: அநலன், அநிலன், ஆபன், சோமன், அத்வரன், துருவன், பிரத்தி பூஷன், பிரபாசன், என்பவர் அவர். அவர்களில் பிரபாசன் என்பவன், பீஷ்மனாய் இருக்கின்றான்.

**148. செம்மணி வெயில்விரி சிலம்பு கொஞ்சவே**
**கைம்மணி வரிவளை கலந்து பொங்கவே**
**பெய்மணி மேகலை பிறங்கி யார்க்கவே**
**துய்மணி யொளியர மாதர் சூழவே.**

[செம் மணி வெயில்விரி சிலம்பு கொஞ்சவே, கை மணி வரிவளை கலந்து பொங்கவே, பெய் மணி மேகலை பிறங்கி ஆர்க்கவே, துய்மணி ஒளி அரமாதர் சூழவே.]

**விளக்கம் :-** மணி, என்பது இரத்தினம்; அழகு, முத்து என்ற பொருள்களில் வந்துளது. கொஞ்ச, பொங்க, ஆர்க்க என்பவை, **சப்திக்க** என்ற பொருளன. தேவமாதர் சூழ, விசயன் இந்திர னோடு அரியணையில் வீற்றிருந்தான் என்பதாம்.

வேறு

**149.** **இவ்வாறிவ ரிருவோர்களு மிணைமாமுகி லெனவே**
**செவ்வாளரி கிளர்கின்றதொர் செம்பொற்றவி சிடையே**
**மைவ்வானக முழுதுஞ்செழு மறையோசைவி ளைக்கும்**
**அவ்வானவர் புடைசூழ்தர வழகெய்தியி ருந்தார்.**

*[இ ஆறு இருவோர்களும் இணை மா முகில் எனவே செம் வாள் அரி கிளர்கின்றது ஓர் செம் பொன் தவிசு இடையே, மை வானகம் முழுதும் செழு மறை ஓசை விளைக்கும் அ வானவர் புடை சூழ்தர அழகு எய்தி இருந்தார்.]*

**விளக்கம் :-** இருவோர்கள் - விசயனும் இந்திரனும். இணை மா முகில் - இரண்டு பெரிய கருமேகங்கள். சிவந்த பிரகாசத்தை உடைய சிங்கத்தின் உருவம் விளங்கும்படி அமைக்கப்பெற்ற சிவந்த பொன்னாலான ஆசனத்தினிடத்தே, அதாவது சிங்காசனத் திடத்தே,—என்பது. இரண்டாவது அடியின் பொருள். மேகங்க ளோடு கூடிய வானகம் முழுவதும், கருத்தின் வளமுடைய வேதங் களின் பாராயண ஒலி, அதாவது வேதம் ஓதும் ஒலியை எழுப்பும், அத் தேவர்கள் சூழ்ந்து இருக்க (இருவோரும்) புதிய பொலிவை எய்தினவர்களாய் இருந்தார்கள் என்பதாம். மைவானம் என்பது எதுகை நோக்கி **மைவ்வானம்** என்று வகரம் விரிந்தது.

**150.** **இருந்தாரிவர் குளிர்சாமரை யிருபாலுமி ரட்டப்**
**பெருந்தாரகை மதியொத்தொளி பெறுகின்றகு டைக்கீழ்**
**முருந்தார்நகை யரமாதரின் முதன்மைப்பெயர் புனையும்**
**செருந்தார்குழ லுடையாளரி திருவூருவின் வந்தாள்.**

*[இருந்தார் இவர், குளிர் சாமரை இருபாலும் இரட்ட, பெருந்தாரகை மதி ஒத்து ஒளி பெறுகின்ற குடைகீழ், முருந்து ஆர் நகை அர மாதரின் முதன்மை பெயர் புனையும், செருந்து ஆர் குழல் உடையாள் அரி திரு ஊருவின் வந்தாள்.]*

**விளக்கம் :-** பெரு தாரகை மதி ஒத்து ஒளி பெறுகின்ற குடைகீழ் இவர் இருந்தார் என்று இயைக்க. பெரிய நட்சத்திரக் கூட்டங்களால் சூழப்பெற்ற பூர்ண சந்திரனைப் போன்று, ஒளி பெற்ற வெண் கொற்றக் குடையின் கீழ், தந்தையும் மைந்தனும் இருந்தார்கள், என்பது பொருள். அப்பொழுது, அங்கே ஊர்வசி வந்தாள் என்பதைக் கூறும் பின்னடிகள். முருந்து - மயில் இறகின்

அடிப்பாகம். நகை-பல். அரமாதர்-தேவலோகமாதர். செருந்து-மலர் மரங்களில் ஒன்று; அது இங்கே மலரைக் குறித்து நின்றது. அரி திரு ஊருவின் வந்தாள் - திருமாலின் அழகிய தொடையினின்று உண்டானவள், (எனவே ஊர்வசிப் பெயரினள் ஆனாள்). முருந்து போன்ற வெள்ளிய பற்களை உடைய தேவமாதர்களில் தலைமைப் பெயர் பெற்ற, செருந்து மலர் நிறைந்த கூந்தலை உடையவளும், திருமாலின் தொடையினின்று வந்தவளுமான ஊர்வசி, (அவண் வந்து ஆடினாள்) என்பதாம்.

**151. மானேதரு விழியாடிரு மாதேநிக ரெழிலாள்**
**தேனேதிகழ் மொழியாள்பொரு சிலையேதரு நுதலாள்**
**தானேதனை நிகர்வாள்பெயர் தருநாடக மெல்லாம்**
**கானேசெறி தொடையானிரு கண்கண்டுக ளித்தான்.**

[மானே தரு விழியாள், திருமாதே நிகர் எழிலாள், தேனே திகழ் மொழியாள், பொரு சிலையே தரு நுதலாள், தானே தனை நிகர்வாள், பெயர் தரு நாடகம் எல்லாம் கானே செறி தொடையான் இரு கண் கண்டு களித்தான்.]

**விளக்கம்** :-மிக மிக சுலபமான செய்யுள். அருச்சுனன் எழிலரசியான ஊர்வசியின் நடனத்தைக் கண்டு களித்தான், என்பதாம். பெயர் தரு நாடகம் - அடி பெயர்த்துத் தாளக் கட்டோடு ஆடும் நடனம். கான் செறி தொடையான்-மணம் மிகுந்த கற்பக மலரின் மாலையை அணிந்த அருச்சுனன். இந்திரன் ஊர்வசியின் நடனத்தைத் தினந்தோறும் கண்டுகளித்து வருபவனாதலால், அவனை விலக்கி, இன்று புதுமையாகக் கண்ட அருச்சுனனை நடனத்தைக் கண்டு களித்தவனாகக் கூறினார், என்க.

**152. இந்நாடக விதம்யாவையும் யாரேதனி புரிவார்**
**மின்னாரிடை மின்னேரிழை மென்கொம்பைய லாதார்**
**என்னாவிழி களியாமன முருகாவிசை யெழுதும்**
**பொன்னாடுடை யவன்மைந்தன் வியப்பொடு புகழ்ந்தான்.**

[இ நாடகம் விதம் யாவைவும் யாரே தனி புரிவார், மின் ஆர் இடை மின் நேர் இழை கெல் கொம்பை அலாதார்? என்னா, விழி களியா, மனம் உருகா, இசை எழுதும் பொன் நாடு உடையவன் மைந்தன் வியப்பொடு புகழ்ந்தான்.]

**விளக்கம்** :- இசை எழுதும் பொன் நாடு உடையவன் மைந்தன் (நடனத்தைக் கண்டு) விழி களியா, மனம் உருகா, மின் ஆர் இடை மின் நேர் இழை மெல் கொம்பை அலாதார், இ நாடகம் விதம் யாவையும் யாரே தனி புரிவார்? என்னா வியப்போடு புகழ்ந்தான்,—என்பது அன்வயம்,

**விளக்கம் :-** நாடக விதம் - நாட்டிய வகை. மென் கொம்பு - மென்மையான பூங்கொம்பு போன்ற ஊர்வசி. களியா - களித்து. உருகா - உருகி. இசை எழுதல் - கீர்த்தி எங்கும் பரவச் செய்தல். பொன் நாடி உடையவன் - இந்திரன், மைந்தன் - அவன் மகனான விசயன். ஊர்வசி ஆடிய நடன வகைகளைக் கண்டு, அவளை அருச்சுனன் புகழ்ந்தான்,—என்பதாம்.

**153. திகழ்கின்றன வுரைதந்தைசெ விப்போதுறு முன்னே**
**இகல்கொண்டுயர் தோளாய்புதி திந்நாடக மென்னா**
**மகவான்பெரு மிதவாழ்வுறை வானோர்முதல் யாரும்**
**மிகுகுங்கும முலையாருடன் விடைகொண்டிட விட்டான்.**

[திகழ்கின்றன உரை தந்தை செவி போதுறும் முன்னே, ''இகல் கொண்டு உயர் தோளாய், புதிது இ நாடகம்'' என்னா, மகவான், பெருமிதம் வாழ்வு உறை வானோர் முதல் யாரும், மிகு குங்குமம் முலையாருடன் விடை கொண்டிட விட்டான்.]

**விளக்கம் :-** திகழ்கின்றன உரை - (அருச்சுனனது) திகழ்கின்றனவான பாராட்டுரை. போதுறும் முன்னே - செவிசேரும் முன்னே. இகல் - வலிமை. இ நடனம் புதிது என்னா - இன்று ஊர்வசி ஆடிய இந் நடன வகைகள் புதியன (என்று இந்திரன் மகனுக்குச்) சொல்லி. மகவான் - இந்திரன். பெருமித வாழ்வு உறை - பெருமை சான்ற வாழ்வில் தங்கியிருக்கின்ற. குங்கும முலையார் - குங்குமம் பூசிய முலைகளையுடைய தேவமாதர். விடை கொண்டிட விட்டான் - (தேவமாதரோடு எல்லோரும்) விடைகொண்டு செல்லுமாறு அனுப்பினான். அவையிருந்தோர்க்கு இந்திரன் விடை கொடுத்தான், என்க.

**154. மகனும்புகழ் புனைதந்தையும் மந்தாகினி யாடிச்**
**சிகரம்பயில் வரைபோலுயர் திருமண்டப மிசையே**
**அகிறுன்றிய குழலார்பல ரரமாதர ளிக்கும்**
**நிகரம்பயி லமுதுண்டவர் நிறைவெய்தி யிருந்தார்.**

[மகனும் புகழ் புனை தந்தையும் மந்தாகினி ஆடி, சிகரம் பயில் வரை போல் உயர் திரு மண்டபம் மிசையே, அகில் துன்றிய குழலார் பலர் அர மாதர் அளிக்கும் நிகரம் பயில் அமுது உண்டவர் நிறைவு எய்தி இருந்தார்.]

**விளக்கம் :-** மந்தாகினி - ஆகாச கங்கை, சிகரம் பயில்வரை போல் உயர் - சிகரங்களின் கூட்டம் பொருந்திய மலைபோல் உயர்ந்துள்ள. நிகரம் பயில் அமுது - திரளாகப் பொருந்திய அமுதம் போன்ற உணவு வகைகள். நிறைவு - திருப்தி. இந்திரனும் விசயனும் அமுதுண்டு திருப்தியுடன் இருந்தனர், என்பதாம். வானில் ஓடும் கங்கை **மந்தாகினி** என்ற பெயரது.

**155. தருக்குங்களி யமுதுண்டவர் தனிவாழ்வுறு மெல்லைச்
சுருக்குங்கண மணிநீள்வெயில் சுடர்மாளிகை வேறொன்(று)
இருக்கும்படி விசயன்பெற வீந்தான்விடை யதுகண்(டு)
அருக்கன்குட கடன்மாளிகை யணிதேரொட டைந்தான்.**

[தருக்கும் களி அமுது உண்டு அவர் தனி வாழ்வுறும் எல்லை, சுருக்கும் கணம் மணி நீள் வெயில் சுடர் மாளிகை வேறு ஒன்று இருக்கும்படி விசயன் பெற ஈந்தான் விடை, அது கண்டு அருக்கன் குடகடல் மாளிகை அணி தேரொடு அடைந்தான்.]

**விளக்கம்** :- தருக்கும் களி அமுது - அதிகமான களிப்பைத் தருகின்ற உணவு. தனி வாழ்வுறும் எல்லை - தனியே மகிழ்ந்து இருக்கும் சமயம். சுருக்கும் கணமணி நீள் வெயில் சுடர் மாளிகை- நெருக்கமாகப் பதிக்கப்பெற்ற கூட்டமான மணிகளின் நீண்ட ஒளி சுடரும் (பிரகாசிக்கும்) மாளிகை; (அல்லது நீண்ட தூரம் வெயிலைத் தருகின்ற சூரியனைப்போல் மணிகள் ஒளிவிடும் மாளிகை, என்றும் பொருள் கொள்ளலாம்). விசயன் பெற விடை ஈந்தான் - (வேறொரு மாளிகையை) விசயன் பெறும்படி செய்து (இந்திரன்) அவனுக்கு விடை கொடுத்தான். அருக்கன் - சூரியன். குடகடல் - (குடக்கு - கடல்) மேற்கு சமுத்திரம். மாளிகை - (மேலைக்கடலாகிய) வீடு, தங்குமிடம். அருச்சுனன் தனியே வசிக்க இந்திரன் அவனுக்கு ஒரு மாளிகையைக் கொடுத்து, விடை கொடுத்து அனுப்பலும், சூரியன் அஸ்தமித்தான், என்பது தாம்.

**156. மேலைத்திசை காலைச்சுடர் வீழ்தந்திடு முன்னம்
மாலைச்சுடர் காலைத்திசை வாழ்வுற்றிட வந்தான்
சோலைத்தரு வருள்வாரிதி சூழ்வான்முக டேறிப்
பாலைப்பொழி வதுபோனில வொளிகொண்டுப ரப்பா.**

[மேலை திசை காலை சுடர் வீழ்தந்திடும் முன்னம் மாலை சுடர் காலை திசை வாழ்வு உற்றிட வந்தான், சோலை தரு அருள் வாரிதி சூழ் வான் முகடு ஏறி, பாலை பொழிவதுபோல் நிலவு ஒளி (கொண்டு) பரப்பா]

**விளக்கம்** :- காலை சுடர் மேலைதிசை வீழ்தந்திடும் முன்னம், மாலைச்சுடர், சோலை தரு அருள் வாரிதி, சூழ்வான் முகடு ஏறி, பால் பொழுவது போல் நிலவு ஒளி (கொண்டு) பரப்பா, காலைதிசை வாழ்வு உற்றிட வந்தான், - என்பது அன்வயம்,

காலை சுடர் - சூரியன். மாலை சுடர் - சந்திரன். சோலை தரு - தேவ லோகத்துச் சோலையில் உள்ள கற்பக விருக்ஷம். அருள் வாரிதி - (கற்பகம் முதலியவற்றைத்) தந்தருளிய பாற் கடல். சூழ்வான் - உலகத்தைச் சூழ்ந்துள்ள ஆகாயம். முகடு - உச்சி, மேல் புறம், மலை. பரப்பா - பரப்பி. சூரியன் மேற்குத் திசையில் அஸ்தமித்த அளவில் சந்திரன், கற்பகம் முதலியவற்றை அளித்த பாற்கடலானது, வானத்தின் முகடு ஏறிப் பால் பொழி

வதுபோல், நிலவொளியை எங்கும் பரப்பிக்கொண்டு, சூரியனது உதய காலத்திற்குரிய கிழக்குத் திக்கில் யாவரும் மகிழ வந்து தோன்றினான்,—என்பது பொருள், வாரிதி - நீர் தங்கும் இடம், இங்கே பாற்கடல். ஈற்றடிகள், தன்மைத் தற்குறிப் பேற்றத்தை உட்கொண்டது.

ஊர்வசி விசயனைச் சபித்தல்

**157. அந்தச்சிலை மகவான்மக னம்மாளிகை யிடையே**
**முந்துற்றதொர் தவிசிற்கரு முகில்போலவி ருந்தான்**
**கந்தர்ப்பன்வெ குண்டேவிய கணைபட்டுள முருகா**
**நொந்துற்றமு னடனம்புரி நுண்ணேரிழை யங்கண்.**

[அந்த சிலை மகவான் மகன் அ மாளிகை இடையே முந்து உற்றது ஓர் தவிசில் கரு முகில் போல் இருந்தான், கந்தர்ப்பன் வெகுண்டு ஏவிய கணை பட்டு உளம் உருகா நொந்துற்று, முன் நடனம் புரி நுண் நேர் இழை அங்கண்,—அடுத்த செய்யுளில் முடியும்.]

**விளக்கம் :-** முந்துற்றது ஓர் தவிசு - முன்னே பொருந்தி யிருந்ததான ஓர் ஆசனம். விற்கலை வித்தகனான அருச்சுனன், அவனுக்கு இந்திரனால் அளிக்கப்பட்ட மாளிகையில் ஓர் ஆசனத்தில் கருமேகம் போல் வீற்றிருந்தான்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். கந்தர்ப்பன் - மன்மதன். நொந்துற்று - விரக வேதனை கொண்டு. முன் நடனம் புரி நுண் நேர் இழை-முன்னே இந்திரசபையில் நடனம் ஆடிய ஊர்வசி. அங்கண் - அருச்சுனன் இருக்குமிடம். விசயன் உழை வந்தாள், என்று அடுத்த செய்யுளில் முடியும். நுண்ணேரிடை, என்றும் பாடம் உளது. கந்தர்ப்பன், என்பது மன்மதனது பெயர்களில் ஒன்று.

**158. அக்கங்குலி னிடையேமல ரரிசந்தன வாசம்**
**மைக்கங்குனி கர்க்குஞ்செறி மலர்நீலம ணிந்தாள்**
**உய்க்கும்பரு மணிநீலித வுடையாடையு டுத்தாள்**
**மெய்க்குந்தவ வயவாளிகொள் விசயன்னுழை வந்தாள்.**

[அ கங்குலின் இடையே மலர் அரிசந்தனம் வாசம், மை கங்குல் நிகர்க்கும் செறி மலர் நீலம் அணிந்தாள், உய்க்கும் பரு மணி நீலி தம் உடை ஆடை உடுத்தாள். மெய்க்கும் தவம் வயம் ;வாளி கொள் விசயன் உழை வந்தாள்.]

**விளக்கம் :-** கங்குல் - இரவு. அரி சந்தனம் - பஞ்ச தருக்களில் ஒன்று. உய்க்கும் - ஒலிக்கும். நீலிதவுடை ஆடை - நீலச் சாயம் ஏற்றப்பெற்ற சேலை. மெய்க்கும் தவம் வயம் வாளி கொள் விசயன் - மெய்யுடைய, அல்லது அரிய தவத்தின் பயனாய் வெற்றி

தரவல்ல பாசுபதக் கணையைச் (சிவபிரானிடமிருந்து) பெற்ற அருச்சுனன். அந்த இரவில், அரிசந்தனம் வீசும் வாசனையுடைய இருண்ட இரவை நிகர்த்த மலர் செறிந்த நீல மலர் மாலையை அணிந்தவளாயும், பிரகாசிக்கும் பருத்த நீலமணி போன்ற நீல நிற ஆடையை அணிந்தவளாயும், ஊர்வசி அருச்சுனனிடம் (வேட்கையால்) வந்தாள்,—என்க.

உடை ஆடை - உடுக்கும் வஸ்திரம், அரிசந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டும், நீலோற்பல மலரால் கட்டப்பெற்ற மாலையை அணிந்துகொண்டும், நீலப் பட்டு உடுத்திக்கொண்டும் ஊர்வசி வந்தாள், என்றும் பொருள் கொள்ளலாம்.

**159. ஓராயிர மகல்வான்மணி யொக்குந்தவி சிடையே**
**ஈராயிர தீபங்களெ றிக்குஞ்சுட ரெழவே**
**வாராயிர முகமாநுகர் மஞ்சேநிகர் செங்கண்**
**பேராயிர முடையான்மக னெதிர்கொண்டிவை பேசும்.**

[ஓர் ஆயிரம் அகல் வான் மணி ஒக்கும் தவிசு இடையே, ஈர் ஆயிரம் தீபங்கள் எறிக்கும் சுடர் எழவே, வார் ஆயிரம் முகம் ஆக நுகர் மஞ்சே நிகர் செம் கண் பேர் ஆயிரம் உடையான் மகன் எதிர் கொண்டு இவை பேசும்.]

**விளக்கம் :-** அகல் வான் மணி - சூரியன். வார் ஆயிர முகமாக நுகர் மஞ்சு-ஜலத்தைப் பல முகமாகப் பருகும் கருமேகம். பேர் செம் கண் - பெரிய செவ்வரி படர்ந்த கண். ஆயிரம் உடையான் மகன் - (கண்கள்) ஆயிரம் உடையவனான இந்திரனின் மகனான விசயன். ஆயிரம் சூரியர்களின் பிரகாசத்தை ஒத்து விளங்கும் ஆசனத்தில், ஆயிரம் தீபங்களின் பிரகாசம் எழுந்து விளங்க, காளமேகத்தை ஒத்த ஆயிரங் கண்ணனான இந்திரன் மகனான விசயன், (தன் மனை வந்த ஊர்வசியை) எதிர்கொண்டு வரவேற்று இனிவரும் வார்த்தைகளைக் கூறலானான்,—என்க. வார் - நீர். இரத்தினம் போல் அமைந்து வானுக்கு விளக்கம் தருதல் பற்றி, சூரியன் **வான்மணி** எனப்பட்டான்.

**160. எந்தைப்பெயர் புனையாயுவெ னும்பேர்முடி யிறைவன்**
**தந்தைக்குயிர் நிகராகிய தளவத்திரு நகையாய்**
**கொந்துற்றெழு குழலாய்குழ னிகராகிய மொழியாய்**
**வந்துற்றதெ னெனவன்னை மலர்த்தாள்களில் வீழ்ந்தான்.**

[எந்தை பெயர் புனை ஆயு எனும் பேர் முடி இறைவன் தந்தைக்கு உயிர் நிகர் ஆகிய தளவம் திருநகையாய், கொந்து உற்று எழு குழலாய், குழல் நிகர் ஆகிய மொழியாய், வந்து உற்றது என்? என, அன்னை மலர் தாள்களில் வீழ்ந்தான்.]

**விளக்கம் :-** எந்தை - எமது வம்சத்துப் பிதாவாகிய, பெயர் புனை ஆயு எனும் பேர் - பிரசித்தி பெற்ற ஆயு என்ற பெயருடைய, முடி இறைவன் - கிரீடாதிபதியான எம் முன்னவனது, தந்தைக்கு - தந்தையாகிய புரூரசக்ரவர்த்திக்கு. உயிர் நிகராகிய தளவம் திருநகையாய் - உயிருக்கு நிகரான மனைவியாகிய முல்லை மலர் போன்ற வெள்ளிய சிறந்த பற்களை உடையவளே. கொந்து - பூங்கொத்து. தன் வம்சத்துப் பிதாவாகிய ஆயு என்பவனின் தந்தையாகிய புரூர சக்ரவர்த்தியின் உயிர் போன்ற மனைவியே, ''நீ இங்கே வந்த காரணம் என்?'' என்று கேட்டு, விசயன் அவளை வணங்கினான்,—என்பதாம். ஊர்வசி வந்த காலத்தையும், அவளது அலங்காரத்தையுங் கொண்டு, அவள் கருத்தை அறிந்துகொண்ட விசயன், அதற்குத் தன் உடன்பாடின்மையைத் தெரிவிக்கும் பொருட்டுத் தாயாகும் முறை கூறி அவனை வணங்கினான்,—என்க. தளவம் - முல்லை, இங்கே ஆகு பெயராய் மலரைக் குறித்தது. கொத்து, என்பது கொந்து என்று விகாரப்பட்டுளது.

**161. இவ்வாறிவ னவடாள்களி றைஞ்சிப்புற நின்றான்**
**மெய்வாய்மையி னுயருந்தவ விபுதாதிபர் மகளும்**
**செவ்வாயிதழ் மடியாவிழி சிவவாவுள மழலா**
**வெவ்வாளர வுமிழுங்கடு விடநேர்மொழி பகர்வாள்.**

[இ ஆறு இவன் அவள் தாள்கள் இறைஞ்சி புறம் நின்றான்; மெய் வாய்மையின் உயரும் தவம் விபுத அதிபர் மகளும், செம் வாய் இதழ் மடியா, விழி சிவவா, உளம் அழலா, வெம் வாள் அரவு உமிழும் கடு விடம் நேர் மொழி பகர்வாள்.]

**விளக்கம் :-** பிழையாத உண்மையினால் மேலும் மேலும் உயர்தல் உறும் தவத்தினரான தேவர்களின் தலைவனான நாராயண முனிவரின் மகளான ஊர்வசி,—என்பது, இரண்டாவது அடியின் பொருள். மடியா, சிவவா, அழலா, என்பவை மடிந்தும், சிவந்தும், அழன்றும் என்ற பொருளன. விசயன் தன்னை வணங்கியது கண்டு வெகுளி கொண்ட ஊர்வசி, கொடிய நாகம் உமிழும் விஷத்திற்கு ஒப்பான வார்த்தைகளைக் கூறுவாளாயினாள்,—என்க. இரண்டாவது அடியின் யகரமெய், இன எதுகை.

**162. இந்தத்தனி யிரவின்கணின் னிருதோடழு வுறவே**
**வந்துற்றவெனைத் தாயர்தம் வகையிற்புகல் செய்யா**
**நிந்தித்தனை நீசெய்தவ நெறியின்பய னெல்லாம்**
**வெந்துற்றரு நீறாயெழ விடுவேனென வெகுளா.**

[இந்த தனி இரவின்கண் நின் இரு தோள் தழுவுறவே வந்து உற்ற எனை, தாயர்தம் வகையில் புகல் செய்யா நிந்தித்தனை; நீ செய்தவம் நெறியின் பயன் எல்லாம் வெந்துற்று அரு நீறு ஆய் எழ விடுவேன் என வெகுளா.]

**விளக்கம்** :- தனி என்பதை, தனி வந்துற்ற எனை, என்று இயைக்க. தாயர் தம் வகையில் - தாய்மார் என்ற முறையில். புகல் செய்யா - புகன்று, (அதாவது, தாயுறவில்) அமைத்துப் பேசி. நிந்தனை செய்தனை - என்னை அவமதித்தனை. நீ செய்த தவநெறியின் பயன் எல்லாம் - நீ செய்த தவ ஒழுக்கத்தின் பயன் முழுவதையும். வெந்துற்று அரு நீறாய் எழ விடுவன்,—வெந்து சாம்பலாய்ப் போகும்படி சாபமிட்டு விடுவேன். வெகுளா - வெகுண்டு. அணைந்து மகிழ வந்தவளைத் தாயாக வைத்து வணங்கியது, தன்கருத்தோடு பொருந்தாமையின், அவன் செயல் ஊர்வசிக்கு, நிந்தனை ஆயிற்று.

**163. நின்போன்மர புடையாரிரு நிலமன்னரி னுண்டோ**
**வன்போடழல் வருபாவையை அடைவுன்னிய ளித்தாய்**
**பொன்போலிர விடையாடவர் புகலாமொழி புகல்வாய்.**
**அன்போவரு ணலமோபெரு மிதமோவளர் புகழோ,**

[நின் போல் மரபு உடையார் இருநில மன்னரின் உண்டோ? வன்போடு அழல் வரு பாவையை அடைவு உன்னி அளித்தாய், பொன்போல் இரவு இடை ஆடவர் புகலாமொழி புகல்வாய், அன்போ, அருள் நலமோ, பெருமிதமோ, வளர்புகழோ!]

**விளக்கம்** :- பெரிய நிலவுலக மன்னரில் உன்னைப் போல் வம்சப் பெருமையைப் பெற்றவர் வேறு இருக்கின்றார்களோ? வீர மரபோடு யாகத்தீயினின்று உதித்த திரௌபதியை மனைவி முறை எண்ணி அருள் புரிந்தாய். காமுகர்களுக்குப் பொன்போல் சிறந்த இரவில் (வந்த எனக்கு) ஆண்மையுடைய புருஷர் சொல்லத் தகாததைச் சொல்வாய் ஆனாய். (நீ செய்த இது) அன்பாகுமா? அருளின் நலமாகுமா? வீரப் பெருமையாகுமா? அல்லது வளரும் கீர்த்தி மேன்மேலும் வளர்தற்குரியதாகுமா?—என்று ஊர்வசி சினந்து கூறினாள் என்பதாம். ''குலப் பெருமையுடைய நீ, அழல் வந்த பாவைக்கு அருள் புரிந்தாய், அவ்வாறாக உன்னைத் தழுவி மகிழும் விருப்பத்தில் இரவில் தனியே வந்த எனக்கு ஆண்மையோடு பொருந்தாத வார்த்தைகளைச் சொல்லி அருளாமையை நல்கினாய். இது, அன்போ, அருளோ, வீரப் பெருமையோ, புகழுக்குரிய செயலோ ஆகாது'', என்று சினந்து கூறும் கருத்தது. இரண்டாவது அடியை **அன்போடு** என்றும் பிரித்துக்கொள்ளலாம்.

**164. எனமன்னனை நீபேடிய ரியல்பாகென விதியா**
**நனைமென்குழன் மலர்மங்கையு நாணுந்நல முடையாள்**
**தனிகங்குலி னிடைசென்றுயர் தன்கோயில் புகுந்தாள்**
**அனலன்றரு சிலைவீரனு மஃதெய்தின னந்தோ.**

[என மன்னனை நீ பேடியர் இயல்பு ஆகு என விதியா, நனை மென் குழல் மலர் மங்கையும் நாணும் நலம் உடையாள், தனி

கங்குலின் இடை சென்று உயர் தன் கோயில் புகுந்தாள்; அனலன் தரு சிலை வீரனும் அஃது எய்தினன், அந்தோ!]

**விளக்கம் :-** செய்யுள் சுலபமானதே. நனை மெல் குழல் - அரும்புகளைச் சூடிய கூந்தல் உடைய ஊர்வசி. மலர் மங்கையும் நாணும் நலம் உடையாள் - திருமகளும் நாணும்படியான அழகை யும் உடைய ஊர்வசி. அனலன்தரு சிலை வீரன் - அக்கினிதேவ னிடமிருந்து வில்லைப் பெற்ற விசயன். அஃது எய்தினன் - (ஊர்வசி விதித்த சாபத்தின்படி) பேடித் தன்மையை அடைந் தான். அந்தோ, இரக்கப் பொருளது.

**165. ஆடித்திரு முகமன்னவ னனுசன்றரு விசயன்**
**பேடிப்பெயர் நாமோபெறு வோமென்றெழில் வடிவம்**
**வாடிப்பெரி துளநொந்தணி மாசற்றதோர் தூசால்**
**மூடித்துயில் கொண்டான்மணி முடிமன்னவர் திலகன்.**

[ஆடி திருமுகம் மன்னவன் அனுசன் தரு விசயன் பேடி பெயர் நாமோ பெறுவோம் என்று எழில் வடிவம் வாடி, பெரிது உளம் நொந்து, அணி மாசு அற்றது ஓர் தூசால் மூடி துயில் கொண் டான், மணி முடி மன்னவர் திலகன்.]

**விளக்கம் :-** ஆடி (கண்ணாடி) திருமுகம் மன்னவன் - திரு தராட்டிரன். அனுசன் - அவனது தம்பியாகிய பாண்டு மகராசன். அணி மாசு அற்றது ஓர் தூசு - அழகியதும் குற்றமற்றதுமான ஒரு வஸ்திரம். முடிமன்னவர் திலகனான விசயன், பேடி உருவம் வந்து பற்றவே, மனம் வருந்தி, ஒரு வஸ்திரத்தால் தனது உடலை மறைத்துக்கொண்டு உறங்கினான், என்க. நாமோ, என்றது உயர்வுபற்றி வந்த பன்மை. துயில் கொண்டான், என்றது, உற்சாகங் குன்றினவனாய் மனச் சோர்வுடன் படுத்துக் கிடத்தலைக் குறிக்கும்.

**166 அக்காலையில் விசயன்றன திடரார்இரு ளகலச்**
**செக்காவியு மரவிந்தமும் வரிவண்டொடு திகழ**
**மைக்காரிருள் வெள்ளம்பில வள்ளத்திடை வடியத்**
**தொக்கானுயர் குணதிக்கினி லகிலந்தொழு சூரன்.**

[அ காலையில் விசயன் தனது இடர் ஆர் இருள் அகல, செக்கா வியும் அரவிந்தமும் வரி வண்டொடு திகழ, மை கார் இருள் வெள்ளம் பிலம் வள்ளத்திடை வடிய, தொக்கான் உயர் குணதிக்கினில் அகிலம் தொழு சூரன்.]

**விளக்கம் :-** செக்காவி - செங்காவி, அதாவது செங்கழு நீர் மலர். வள்ளம் - கிண்ணம். பிலம் - பாதளம். பிலவள்ளம் - கிண்ணம்போல் உள் ஆழமுடைய பிலம் (சுரங்கம்). பாதாள லோகம், எப்பொழுதும் இருண்டிருக்கும், என்பதாம். குணதிக்கு- சூர்யோதயத்திற்குரிய கீழைத் திசை. அகிலம் தொழு சூரன் - உலகத்தாரால் வணங்கப்படும் சூரியன். அப்பொழுது, விசயனது

சாபமாகிய இடர் அகலவும், காவியும் தாமரையும் வண்டுகளுடன் விளங்கவும், மை போன்ற கரிய இருள்வெள்ளம் பாதளமாகிய வள்ளத்தில் வடியவும், குணதிசையில் சூரியன் தொக்கான் (உதித்தான்), என்பது பொருள். சூர்யோதய வருணனையாகிய இது, தன்மை நவிற்சி அணியின் பாற்படும். மறுநாள் இந்திரனது வேண்டுகோளின்படி, ஊர்வசி, அவன் வேண்டும் பொழுது பேடி வடிவம் வந்து பொருந்துமாறு மறு சாபம் கொடுக்கப்போகின்றா ளாதலால், 'இடர்ஆர்இருள் அகல', என்றார்.

வேறு

**167. கதிரு தித்தவக் காலையின் மாமறை**
**முதல்வர் முப்பத்து மூவருஞ் சூழ்வரப்**
**புதல்வ னுற்ற துணரான் புரந்தரன்**
**விதம ணிப்பணி மண்டப மேவினான்.**

[கதிர் உதித்த அ காலையில், மாமறை முதல்வர் முப்பத்து மூவரும் சூழ்வர, புதல்வன் உற்றது உணரான், புரந்தரன் விதம் மணி பணி மண்டபம் மேவினான்.]

**விளக்கம் :-** கதிர் - சூரியன். தேவர் முப்பத்து மூவர் - ஆதித்தர் 12, உருத்திரர் 11, வசுக்கள் 8, அசுவினி தேவர் 2, ஆகியவர். விதம் மணி பணி மண்டபம் - பலவிதமான இரத்தினங்கள் பதிக்கப்பெற்று அலங்கார வேலைகளைக் கொண்ட **சுதர்மை** என்ற மண்டபம். சூர்யோதயத்தில், தன் மகனான விசயன் சபிக்கப்பெற்றதை அறியாத இந்திரன், வேதவித்தகர்களான முனிவர்களும், தேவர் முப்பத்து மூவரும் சூழ்ந்துவர, அழகிய அலங்காரங்களை உடைய சுதர்மை என்ற தனது சபாமண்டபம் அடைந்தான்,—என்பதாம்.

**168. கண்ப ரப்பியொர் கந்தரு வன்றனை**
**விண்பு ரக்குமவ் வேந்தனி ருந்தபின்**
**மண்பு ரக்கும் வரிசிலை வீரனை**
**எண்பெ றக்கொணர் வாயென வேவினான்.**

[கண் பரப்பி ஓர் கந்தருவன்தனை விண் புரக்கும் அ வேந்தன் இருந்தபின், மண் புரக்கும் வரிசிலை வீரனை, எண் பெற கொணர் வாய் என ஏவினான்.]

**விளக்கம் :-** விண் புரக்கும் அ வேந்தன் இருந்த பின், ஓர், கந்தருவன் தனை கண் பரப்பி, மண் புரக்கும் வரிசிலை வீரனை எண் பெறக் கொணர்வாய் என ஏவினான்,—என்பது அன்வயம். இந்திரன் தனது ஆசனத்தில் அமர்ந்த பின் கந்தருவன் ஒருவனைக் குறிப்போடு நோக்கி, விசயனைக் கௌரவத்துடன் அழைத்து வருக, என்று ஏவினான்,—என்பதாம். கண் பரப்பி - குறிப்பின் நோக்கி. மண் புரக்கும் வரி சிலை வீரன் - விசயன். எண் பெற - மதிப்பு அல்லது கௌரவம் குறையாமல். அருச்சுனனை அழைத்து வருமாறு குறிப்பினால் இந்திரன் ஏவினான், என்க.

**169. மற்ற வன்றிருத் தாண்மலர் போற்றியக்
கொற்ற வன்றிரு முன்னர்க் குறுகியாங்(கு)
உற்ற யாவுமு ணர்ந்தவன் மீண்டுபோய்ச்
சொற்ற னன்சுரர் கோமுன் தொழுதரோ**

[மற்று, அவன் திரு தாள் மலர் போற்றி, அ கொற்றவன் திரு முன்னர் குறுகி யாங்கு உற்ற யாவும் உணர்ந்தவன், மீண்டு போய் சொற்றனன் சுரர் கோமுன் தொழுது, (அரோ).]

**விளக்கம் :-** மற்று : அசை. அவன் - கந்தருவன். தாள் மலர் போற்றி - இந்திரனது பாதமலர்களை வணங்கி. கொற்றவன் - அருச்சுனன், குறுகி - அடைந்து, (விஷயத்தை) சுரர்கோமுன் தொழுது சொற்றனன் - இந்திரனை அவன் முன் சென்று, தொழுது கூறினான். ஊர்வசியின் சாபத்தைக் கந்தருவன் சொன்னான்,—என்பதாம்.

சாப நீக்கம்

**170. சொன்ன வாசகங் கேட்ட சுரபதி
கன்னம் வெந்துகண் ணாயிர மும்புனல்
துன்ன வானவர் சூழ்வரத் தானும்போய்
அந்த ராதிபன் தன்னை யணுகினான்.**

[சொன்ன வாசகம் கேட்ட சுரபதி கன்னம் வெந்து, கண் ஆயிரமும் புனல் துன்ன, வானவர் சூழ்தர தானும் போய் அ நராதிபன் தன்னை அணுகினான்.]

**விளக்கம் :-** சுரபதி - இந்திரன். கன்னம் - காது. புனல் துன்ன - (கண்) நீர் நிறைந்து தளும்ப. நராதிபன் - விசயன். கந்தருவன் கூறியது கேட்ட இந்திரன் காதுகள் வெதும்பவும், கண்கள் நீர் பனிக்கவும், தேவர்கள் தன்னைச் சூழ்ந்து வர அருச்சுனன் இருக்குமிடம் சென்றான்,—என்பதாம். **வேவ**, என்பது **வெந்து**, என்று திரிந்துளது.

**171. அணுகி மைந்தனை யன்பொடு றத்தழீஇக்
கணிகை யிட்ட கடுங்கொடுஞ் சாபநீ
தணிதி யஞ்சலென் றானொரு தையலால்
பிணியு ழந்துமுன் பேர்பெறும் பெற்றியான்.**

[அணுகி மைந்தனை அன்பொடு உற தழீ இ, கணிகை இட்ட கடு கொடு சாபம் நீ தணிதி, அஞ்சல், என்றான், ஒரு தையலால் பிணி உழந்து முன் பேர் பெறும் பெற்றியான்.]

**விளக்கம் :-** தழீஇ - தழுவி. கணிகை - தேவதாசியான ஊர்வசி. சாபம் நீ தணிதி - நீ சாபம் நீங்கப் பெறுவாய். (அகலிகை என்ற ஒரு பெண்ணால்) இதன்முன் கௌதம சாபம்

உற்று வருந்தி (அது நீங்கப் பெற்று) ஆயிரங்கண்ணன் என்ற பேரைப் பெற்ற தன்மையனான இந்திரன், என்பது ஈற்றடியின் பொருள். ''ஐய, சாபம் நீங்கப் பெறுவாய், பயப்படாதே'', என்று இந்திரன் சொல்லி மகனைத் தேற்றினான், என்க.

**172. அன்ன மென்னடை யாயிழைத் தன்னுழைத்**
**துன்னி னன்சுர ரோடுஞ்சு ரேசன் போய்**
**மின்னி னுண்ணிடை யாளும் வெருவுறா**
**மன்ன வன்பதம் வந்துவ ணங்கினாள்**

[அன்னம் மெல் நடை ஆய் இழை தன் உழை துன்னினன் சுரரோடும் சுரேசன் (சுர - ஈசன்) போய்; மின்னின் நுண் இடையாளும் வெருவுறா மன்னவன் பதம் வந்து வணங்கினாள்.]

**விளக்கம் :-** சுரர் - தேவர். சுரேசன் - இந்திரன். துன்னினன் - அடைந்தான். இந்திரன் ஊர்வசியின் மனை சென்று சேர்ந்தான்; நுண்ணிய இடையையுடைய அவளும் பயந்தவளாய், இந்திரனது பாதங்களை வணங்கினாள்,—என்பதாம்.

**173. வணங்கு முன்ன மடநடை யோதிமக்**
**கணங்கொ லென்னக் கவின்பெறு கோதையைச்**
**சுணங்க றாமுலைத் தோகையை வார்குழல்**
**அணங்கை யண்ட ரனைவரும் போற்றியே.**

[வணங்கும் முன்னம், மடை நடை ஓதிமம் கணம் கொல்? என்ன கவின் பெறு கோதையை, சுணங்கு அறா முலை தோகையை, வார் குழல் அணங்கை, அண்டர் அனைவரும் போற்றியே.[

**விளக்கம் :-** வணங்கு முன்னம் - வணங்கிய உடனே (விரைவில் என்றபடி), மடநடை - அழகிய இள நடை. ஓதிமம் - அன்னம். கணம்-இனம், சாதி. சுணங்கு-தேமல். அண்டர்-தேவர். நடையில் அன்ன சாதியைச் சேர்ந்தவளோ? என்று சொல்லும்படியான அழகிய பூமாலை அணிந்தவளும், சுணங்கு நீங்காத திருமுலைத் தடத்தையுடைய மயில் போன்றவளும், நீண்ட கூந்தலையுடைய தெய்வப் பெண்ணான ஊர்வசியை, அண்டர் துதித்தனர்,—என்பது பொருள். போற்றியே, என்பது அடுத்த செய்யுளோடு தொடரும்.

**174. அன்னை நீயெவர்க் காயினு மாசையின்**
**இன்ன றீர்ப்பதெ வர்க்குமி யல்பரோ**
**மன்ன னாயினும் வான்பிழை செய்தனன்**
**என்ன நாகர வட்கிதங் கூறியே.**

[அன்னை நீ எவர்க்கு ஆயினும் ஆசையின் இன்னல் தீர்ப்பது எவர்க்கும் இயல்பு (அரோ), மன்னன் ஆயினும் வான் பிழை செய்தனன் என்ன நாகர் அவட்கு இதம் கூறியே.]

**விளக்கம்** :- (எவர்க்கு நீ அன்னை ஆயினும்) ஆசையின் இன்னல் - காமத்தால் வரும் துன்பத்தை. தீர்ப்பது எவர்க்கும் இயல்பு - தீர்த்து வைப்பது ஆடவராகிய எவர்க்கும் இயல்பான தாகும். அரோ : தேற்றப்பொருளது. ''அரச குலத்தில் பிறந்தவ னாயினும், (இரந்து நின்ற உனக்கு அருளாமையாகிய) பெரிய பிழையை அருச்சுனன் செய்துவிட்டான்'', என்று நாகர் (தேவர்), அவளுக்கு மனச்சாந்தி ஏற்படக்கூடிய இதமொழிகளைச் சொல்லி (ஏ) – என்பது ஈற்றடிகளின் பொருள். இது அடுத்த செய்யுளோடு தொடரும்.

''அன்னை நீ எவர்க்கு ஆயினும்'', என்பது, புரூரவ சக்ர வர்த்திக்கு மனைவியும், அவனது மகனும் எங்கள் வம்சத்தின் பிதாவுமாகிய **ஆயு** என்பவனுக்கு அன்னையும் ஆகிய அணங்கே, என்று அருச்சுனன் கூறி வணங்கியதைக் குறிக்கும். ஊர்வசியின் சினத்தைத் தணிவித்தற் பொருட்டுக் கூறிய உபசார வார்த்தை யாகும் இது.

**175. காம மிக்கவுன் கட்டுலரைச் சாபநோய்**
**பூமி பொய்ப்பினும் பொய்ப்பதன் றாலரோ**
**வெய்ம லர்த்தொடை யானெஞ்சில் வேண்டுநாள்**
**ஆம வற்கிவ் வுருவருள் செய்திநீ.**

[காமம் மிக்க உன் கட்டு உரை சாபம் நோய் பூமி பொய்ப் பினும் பொய்ப்பது அன்று, (ஆல், அரோ.). வேய் மலர் தொடையான் நெஞ்சில் வேண்டும் நாள் ஆம் அவற்கு இ உரு, அருள் செய்தி நீ.]

**விளக்கம்** :- கட்டுரை - உறுதிச் சொல். சாப நோய் - சாபத் தால் உண்டான பேடித் தன்மை. வேய் மலர் தொடையான் - அணிந்து கொண்ட பூமாலையை உடைய அருச்சுனன். அவன் விரும்பிய பொழுது இப் பேடி உருவம் வருவதாம்படி அருள் செய்க, என்று, தேவர்கள் ஊர்வசியைக் கேட்டுக்கொண்டனர், என்பதாம். பூமி பொய்த்தல் - சலியாத நிலையுடைய பூமி நிலை கெடல். ஆல், அரோ: ஈற்றசைகள்.

**176 என்று வானவர் யாவரு மேத்தவே**
**அன்ற வற்கவ் வரங்கொடுத் தாளவள்**
**வென்றி வார்சிலை மீளியுந் தன்பெருந்**
**துன்று கோலஞ் சிறந்திடத் தோன்றினான்.**

[என்று வானவர் யாவரும் ஏத்தவே, அன்று அவற்கு அ வரம் கொடுத்தாள் அவள்; வென்றி வார் சிலை மீளியும் துன்று கோலம் சிறந்திட தோன்றினான்.]

**விளக்கம்** :- மீளி - வலிமை மிக்க வீரனான விசயன். தன் பெரும் துன்று கோலம் - தனது பெருமை பொருந்திய உருவம். ஊர்வசியின் அனுக்கிரகத்தால் அருச்சுனன் தனது இயற்கையான ஆண் வடிவத்தைப் பெற்றான், என்பதாம்.

## 2. நிவாதகவசர் காலகேயர் வதைச் சருக்கம்

நிவாத கவசர் காலகேயர் என்ற அசுரர்களை அருச்சுனன் வதைத்ததைக் கூறும் சருக்கம் இது. நிவாத கவசர் என்பவர் கடலிடையேயுள்ள தோய மாபுரம் என்னும் நகரத்தில் வசிப்பவர்கள். காலகேயர் என்பவர் ஆகாசத்திலுள்ள இரணியபுரம் என்ற நகரத்தில் வசிப்பவர்கள். இவர்கள் பிரும்மாதி தேவர்களைக் குறித்துக் கடுந்தவம் செய்து அளவிறந்த வரங்களைப் பெற்றவர்கள். வரபலத்திலும், புஜபலத்திலும், தமக்கு நேராவார் எவரும் இலர் என்று செருக்குற்று, இந்திராதி தேவர்களுக்கு இடையறா இன்னல்களை இழைத்து வந்தனர். இந்திரனின் வேண்டுகோளுக்கு இசைந்த விசயன், அவ்வசுரர்களை வதைத்த வரலாற்றை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

### அருச்சுனனுக்கு இந்திரன் சிறப்புச் செய்தல்
### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அவ்வரந் தனக்கு நல்கு மன்னைதாள் வணங்கும் வென்றிக்**
**கைவரு சிலையி னானைக் கடவுளர்க் கிறைவன் கொண்டு**
**மொய்வரு சுரர்கள் சூழ முதன்மைசேர் சுதன்மை யெய்தி**
**வெவ்வரி முகத்த பீடம் விளங்கவீற் றிருந்த காலை.**

[அ வரம் தனக்கு நல்கும் அன்னை தாள் வணங்கும் வென்றி கைவரு சிலையினானை, கடவுளர்க்கு இறைவன் கொண்டு, மொய் வரு சுரர்கள் சூழ முதன்மை சேர் சுதன்மை எய்தி, வெவ் அரி முகத்த பீடம் விளங்க வீற்றிருந்த காலை,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** அவ்வரம் - வேண்டுங்காலத்தில் பேடி வடிவம் வந்து அமையும் வரம். வணங்கும் - வணங்கிய (காலவழு). முதன்மை சேர் சுதன்மை - (இதற்கு ஈடான மண்டபங்கள் இல்லை என்று) தலைமைப் பெயர் பெற்ற **சுதர்மம** என்னும் மண்டபம். வெவ் அரிமுகத்த பீடம் - சிங்காசனம். தனக்குச் சாப நீக்கம் அருளிய ஊர்வசியை வணங்கி இந்திரனோடு விசயன் சுதர்மை என்ற சிறந்த மண்டபத்தில் ஓர் அரியாசனத்தில் இருந்தான், என்க.

**2. தூண்டகு தோளின் மொய்ம்பால் நம்வலி தொலைத்து மென்மேல்**
**மூண்டெழு மவுணர் தம்மை யிவனன்றி முடிப்பா ரியாரென்(று)**
**ஆண்டகை யமரர்க் கெல்லா மவன்செய லடைவே சொல்லிக்**
**காண்டவ மெரித்த வீர னிவனெனக் காட்டி னானே.**

[தூண்தகு தோளின் மொய்ம்பால் நம் வலி நொலைத்து மெல் மேல் மூண்டு எழும் அவுணர் தம்மை இவன் அன்றி முடிப்பார் யார்? என்று, ஆண் தகை, அமரர்க்கு எல்லாம் அவன் செயல் அடைவே சொல்லி, காண்டவம் எரித்த வீரன், இவன் என காட்டினானே.]

**விளக்கம் :-** தூண்தகு - தூண் போன்ற, (தகு, உவம உருபு). மொய்ம்பு - வலிமை. மெல் மேல் - மேலும் மேலும், இடைவிடாது. அடைவே - முறைப்படி. ஆண் தகை - இந்திரன். செயல் - (விசயனது) வீர வரலாறு. காண்டவம் எரித்த வீரன், என்றது, நமது ஆற்றலையும் கடக்கக்கூடிய வீரன், என்று தெரிவிக்கும் கருத்தது. நமது வலி அழித்து நம்மை நலிந்து வருகின்ற அசுரர்களை ஒழிக்கவல்லவன் இவனே, என்றும், காண்டவ தகனம் செய்த வீரன் இவனே, என்றும், விசயனது வீர வரலாற்றை இந்திரன் தேவர்களுக்குச் சொல்லி, அவனை அறிமுகப் படுத்தினான்,—என்க.

**3 அவ்வுரை கேட்ட தேவ ரகமகிழ்ந் தவனுக் கன்பால்**
**திவ்விய மறையின் மிக்க தெக்கிணை பலவுஞ் செய்தார்**
**செவ்விய தாதை தானுஞ் சேணதித் தூநீ ராட்டி**
**விவ்விர வாத வாசத் தாமமும் விழைந்து சூட்டி.**

[அ உரை கேட்ட தேவர் அகம் மகிழ்ந்து அவனுக்கு அன்பால் திவ்வியம் மறையின் மிக்க தெக்கிணை பலவும் செய்தார்; செவ்விய தாதை தானும் சேண் நதி தூநீர் ஆட்டி, வி (வண்டு) விரவாத வாசம் தாமமும் விழைந்து சூட்டி,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** திவ்விய மறை - தெய்வத் தன்மையுடைய வேதம். தெக்கிணை - (தக்ஷிணை) சன்மானம். சேண் நதி - ஆகாச கங்கை. ஆட்டி - நீராடச் செய்வித்து. வி - (வடசொல்) வண்டு, (பறவைப் பொதுப் பெயரான வி, இங்கே வண்டைக் குறித்தது). இந்திரன் கூறியதைக் கேட்ட தேவர்கள் அன்பால் பலவகைப்பட்ட சன்மானங்களைச் செய்தார்கள், (அதாவது, தேவர் அல்லாதாருக்குச் செய்யத் தக்கனவென்று வேதங்களால் சிறப்பாகச் சொல்லப் பெற்ற சன்மானப் பொருள்களைத் தந்தார்கள், என்றபடி). வி விரவாத வாசம் தாமம் - வண்டுகள் மொய்த்தல் இல்லாத வாசனை மிகுந்த கற்பக மலர் மாலை. வாடலும், வண்டு மொய்த்தலும் இல்லாதவை தேவலோக மலர்கள். இந்திரன், விசயனை ஆகாச கங்கையில் நீராடச் செய்து, கற்பக மலர் மாலையை விருப்பத்தோடு அணியச் செய்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். (தாமம் - மாலை.) இரண்டாவது, அடியிலுள்ள **தக்கிணை** என்பதற்கு ஆசீர்வாதம் என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது, திவ்விய மறையால் (வேத மந்திரங்களால்) மிகுந்த ஆசிர்வாதங்களைத் தேவர் செய்தார்கள், என்பது பொருளாகும்,

**4. ஆயிரங் கதிருந் திங்க ளனந்தமு மடங்க மேன்மேல்
காய்கதிர் விரிவ தியார்க்குங் கருத்துறக் காண வொண்ணாச்
சேயொளி தவழ்வ தாகித் திசைமுகன் றனக்கு நல்கும்
மாயிரு கிரண ரத்ந மவுலியுங் கவித்தா னன்றே.**

[ஆயிரம் கதிரும் திங்கள் அனந்தமும் அடங்க, மேல் மேல் காய் கதிர் விரிவது யார்க்கும் கருத்து உற காண ஒண்ணா சேய் ஒளி தவழ்வது ஆகி, திசை முகன் தனக்கு நல்கும் மா இரு கிரணம் ரத்நம் மவுலியும் கவித்தான், அன்றே.]

**விளக்கம் :-** பிரும்மதேவன் தனக்கு அளித்த சிறந்த மணியை இந்திரன் மகனுக்குச் சூட்டி மகிழ்தலைக் கூறும் செய்யுள். ஆயிரம் கதிர் - மிகப் பல கதிர்களை உடைய சூரியன். திங்கள் அனந்தம் - அநேக சந்திரர்கள். (சூரியனும், சந்திரர்களும் ஒளி மங்கும்படி) மேல் மேல் காய் கதிர் விரிவது - மிக அதிகமாக விளங்குகின்ற கதிர்களை (கிரணங்களை) விரிப்பதும். யார்க்கும் கருத்து உற காண ஒண்ணா - எவர்க்கும் நன்றாக அல்லது முடியக் காண முடியாத. சேய் ஒளி - நெடுந்தூரம் பிரகாசிக்கும் ஒளி. தவழ்வதாகி - தங்குவதாகிய. (பிரும்ம தேவன் முன்னொரு காலத்தில் தனக்கு அளித்த மிகுந்த ஒளியை உடைய ரத்தினங்கள் இழைத்த கிரீடத்தை அருச்சுனனுக்கு இந்திரன் சூட்டினான், என்றபடி). மவுலி - (மௌலி) தலை, இங்கே தலையில் சூடும் கிரீடத்தை உணர்த்திற்று. இந்தச் சிறந்த கிரீடத்தை அணிந்ததால், அருச்சுனன், **கிரீடி** என்ற ஒரு பெயரும் பெற்றான்.

**5. ஆடையுங் கலனுந் தெவ்வை யடுந்திறற் படையு நல்கி
ஏடவி ழலங்க லானோ ராசனத் திருத்தி யென்றும்
தேடுதற் கரிய தூய வமுதுசெம் பொற்க லத்தில்
கூடவுண் டமரர்க் கெல்லாங் குரிசிலாஞ் சிறப்புஞ் செய்தான்.**

]ஆடையும் கலனும் தெவ்வை அடும் திறல் படையும் நல்கி, ஏடு அவிழ் அலங்கலான் ஓர் ஆசனத்து இருத்தி, என்றும் தேடுதற்கு அரிய தூய அமுது செம்பொன் கலத்தில் உடன் உண்டு, அமரர்க்கு எல்லாம் குரிசில் ஆம் சிறப்பும் செய்தான்.]

**விளக்கம் :-** ஏடு அவிழ் அலங்கலான் - இந்திரன். குரிசில் - ஆண்பால் சிறப்புப் பெயர். இந்திரன், விசயனுக்கு ஆடை அணி கலன்களையும் பகை வெல்லவல்ல ஆயுதங்களையுங் கொடுத்து, அவனோடு ஓராசனத் திருந்து உடன் உண்டு, தேவர்களின் அரசனாதற்குத் தகுந்த சிறப்புக்களையும் செய்தான்,—என்பதாம். சிறப்பு - சன்மானம்.

**6. அன்னது நிகழ்ந்த காலை யவன்திருத் தேவி கண்டு
துன்னிய கோபச் செந்தீ விழியுகச் சிலசொற் சொன்னாள்
மன்னிய புவியில் வைகு மானுட மன்னன் வந்துன்
தன்னுட னொக்க வுண்ணத் தக்கதோ வுரைத்தி யென்றே.**

[அன்னது நிகழ்ந்த காலை, அவன் திரு தேவி கண்டு துன்னிய கோபம் செம் தீ விழி உக, சில சொல் சொன்னாள்; மன்னிய புவியில் வைகும் மானுட மன்னன் வந்து உன் தன்னுடன் ஒக்க உண்ண தக்கதோ! உரைத்தி, என்றே (சினந்து சில சொற்கள் சொன்னாள்).]

**விளக்கம் :-** தேவேந்திரன், ஒரு மானுட மன்னனான விசயனுடன் ஒக்க உண்டதைப் பொறாது, இந்திராணி சினந்து கூறினாள்,—என்பதாம். துன்னிய கோபச் செந்தீ விழி உக - அடர்ந்த கோபமாகிய நெருப்பு விழிவழி வழிய, அதாவது மிகுந்த சினத்தோடு.

**7. என்றலுங் கடவுள் வேந்த னிருபுயந் துளங்க நக்கு
மன்றலந் துளப மாயோன் மைத்துன னெனக்கு மைந்தன்
கொன்றையஞ் சடையா னோடு மமர்புரி குரிசில் தன்னை
நன்றியின் மனித னென்றிங் கிகழ்வதோ நங்கை யென்றான்.**

[என்றலும் கடவுள் வேந்தன் இரு புயம் துளங்க நக்கு, மன்றல் அம் துளபம் மாயோன் மைத்துனன், எனக்கும் மைந்தன், கொன்றை அம் சடையானோடும் அமர் புரி குரிசில் தன்னை, நன்றி இல் மனிதன் என்று இங்கு இகழ்வதோ, நங்கை என்றான்.]

**விளக்கம் :-** கண்ணபிரானது உறவினனும், எனக்கு மைந்தனும், சிவபிரானொடு போர் செய்யும் பேராற்ற லுடையவனுமான விசயனை மானிடன் என்று இகழ்தல் அமையாது, என்று இந்திரன் தன் மனைவிக்குக் கூறும் கருத்தது செய்யுள். நன்றி இல் மனிதன் - தேவரோடு ஒத்த சிறப்பில்லாத மனிதன் (என்று எண்ணுதல் முறை யாகாது,) என்ற பொருளது.

**8 ஆங்கது கேட்ட தேவ ரடிபணிந் தரிய வேந்தே
பூங்கொடி தருவோ டன்று புவியினிற் கவர்ந்த வீரற்(கு)
ஓங்குமைத் துனனே யாகி லிதனின்மற் றுறுதி யுண்டோ
ஈங்கிவன் புகுந்த சூழ்ச்சிக் கேதுவுண் டாகு மென்றார்.**

[ஆங்கு அது கேட்ட தேவர் அடிபணிந்து, அரிய வேந்தே, பூங்கொடி தருவோடு அன்று புவியினில் கவர்ந்த வீரற்கு, ஓங்கு மைத்துனனே ஆகில், இதனில் மற்று உறுதி உண்டோ; ஈங்கு இவன் புகுந்த சூழ்ச்சிக்கு ஏது உண்டாகும் என்றார்.]

**விளக்கம் :-** பூங்கொடி தருவோடு அன்று புவியினில் கவர்ந்து சென்ற வீரன் - சத்யபாமைக்காகத் தேவ தருவான பாரிசாதத்தைப் பூமிக்குக் கவர்ந்து சென்ற வீரனான கண்ணன். அவனது மைத்துனன் இவ்வருச்சுனன் ஆகில், அவனை இங்கு அழைத்துச் சிறப்புச் செய்தற்கு ஏது (காரணம்) இருக்கவேண்டும்; அது யாதோ, என்று தேவர்கள் இந்திரனைக் கேட்டனர்,—என்க.

புவியினில், உருபு மயக்கம். ஓங்கு மைத்துனன் - சிறந்த மைத்துனன். சூழ்ச்சி - ஆலோசனை, கருத்து. உறுதி உண்டோ - விசேஷம் உண்டோ.

நரகாசுர வதம்செய்த பின் கண்ணன் சத்யபாமையோடு தேவலோகம் செல்ல, அவள், அங்கிருந்த பாரிசாத தருவைத் துவாரகைக்கு எடுத்துச் செல்ல விரும்பினாள். அத்தரு இந்திரனால் கொணரப்பட்டு, சத்யபாமையின் மாளிகைத் தோட்டத்தில் நடப்பெற்றது, என்பது கதை.

**9. தேவர்தம் முரையுந் தேவி செப்பிய வுரையுங் கேட்டுத்**
**தாவரும் புரவித் திண்டேர்த் தனஞ்சயன் றொழுது சொன்னான்**
**யாவரும் பரவு முன்ற னுடனொரா சனத்தி ருந்து**
**மேவரு முடியுஞ் சூடப் பொறுக்குமோ விமல வென்றே.**

[தேவர் தம் உரையும் தேவி செப்பிய உரையும் கேட்டு, தாவரும் புரவி திண் தேர் தனஞ்சயன் தொழுது சொன்னான், யாவரும் பரவும் உன் தனுடன், ஓர் ஆசனத்து இருந்து, மேவு அரு முடியும் சூட (தேவி), பொறுக்குமோ, விமல, என்றான்.]

**விளக்கம் :-** தாவரும் புரவி - பாய்ந்து செல்லும் குதிரை. மேவு அரு முடி - விரும்பிப் பெறுவதற்கு அரிய முடி. பொறுக்குமோ - (உனது தேவியான இந்திராணி) பொறுப்பாளோ, (அதாவது பொறுக்காமை தக்கதே, என்றபடி). இராயசூய யாகத்திற்கு வடதிசையிலுள்ள அரசர்களை வென்று பெருந்தனம் கொணர்ந்தா னாதலால், அருச்சுனனுக்குத் **தனஞ்சயன்,** என்ற பெயர் ஏற்பட்டது.

## இந்திரன் வரம் வேண்டல்

**10. அவனுரை மகிழ்ந்து கேட்டாங் கமரருக் கதிபன் சொல்வான்**
**புவனமூன் றினுக்கு முன்னைப் போலொரு வீர னுண்டோ**
**சிவனருள் படையும் பெற்றாய் செந்தழ லளித்த தெய்வக்**
**கவனவாம் பரியுந் தேருங் கணையுங்கார் முகமும் பெற்றாய்.**

[அவன் உரை மகிழ்ந்து கேட்டு ஆங்கு அமரருக்கு அதிபன் சொல்வான், புவனம் மூன்றினுக்கும் உன்னைப்போல் ஒரு வீரன் உண்டோ! சிவன் அருள் படையும் பெற்றாய், செம் தழல் அளித்த தெய்வம் கவனம் வாம் பரியும் தேரும் கணையும் கார்முகமும் பெற்றாய்.]

**விளக்கம் :-** இதுவும் இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும் ஒரு தொடர். செந்தழல் - அக்கினிதேவன். கவனவாம்பரி - விரைந்து செல்லும் நடையையும், தாவிச் செல்லும் இயல்பினையும் உடைய குதிரை. (புவனம்) மூன்றினுக்கும் (உருபு மயக்கம்)-மூன்று உலகங்களிலும். கார்முகம் - காண்டீவம் என்னும் வில்.

**11. பிரமனே முதலா வெண்ணும் பேர்பெறும் தேவ ரீந்த
வரமிகு மறையுங் கொற்ற வான்பெரும் படையும் பெற்றாய்.
அருமறை முதலை நட்டா யமரர்மற் றுன்னி னுண்டோ
திருவரும் வின்மை வீர செப்புவ தொன்று கேளாய்.**

[பிரமனே முதல் ஆ(க) எண்ணும் பேர் பெறும் தேவர் ஈந்த வரம்மிகு மறையும் வான் பெரும் படையும் பெற்றாய்; அரு மறை முதலை நட்டாய், அமரர் மற்று உன்னின் உண்டோ? திருவரும் வின்மை வீர, செப்புவது ஒன்று கேளாய்.]

**விளக்கம்** :- பிரமனே...தேவர் - பிரும்மனை முதலாகக் கொண்டு எண்ணப்படும் கீர்த்திபெற்ற தேவர். மிகுவரம் - சிறந்த வரங்கள். மறை - அஸ்திரங்களுக்குரிய மந்திரங்கள். வான் பெரும் படை - பாசுபதாஸ்திரம். அருமறை முதல் - கண்ணபிரான். திருவரும் வின்மை வீர - ஜெயத் திரு வந்து பொருந்துவதற்குரிய விற்கலை வித்தகனான விசயனே (விளி).

''திருவரும் வின்மை வீரனே, தேவர்களது வரங்களையும், மறையையும், பாசுபதக்கணையையும் பெற்றதோடு, கண்ணனின் நேயத்தையும் பெற்றுள்ள உன்னைக் காட்டிலும் சிறந்த தேவர்கள் வேறு உளரோ? இல்லை என்றபடி. நான் சொல்லப் போவதைக் கேள்'',—என்று இந்திரன் கூறினான், என்பதாம்.

**12 கற்றவர் கலைகள் யாவுங் கசடறக் கற்பித் தோர்கள்
பெற்றிடக் கொடுக்குஞ் செல்வ முண்டென்று பெரியோர்
சொல்வர்
கொற்றவ வுனக்கு நானுங் கூறுநற் குருவே யாகும்
உற்றவா றெனக்கு நீயு மொருவரந் தருக வென்றான்.**

[கற்றவர், கலைகள் யாவும் கசடு அற கற்பித்தோர்கள் பெற்றிட கொடுக்கும் செல்வம் உண்டு என்று பெரியோர் சொல்வர்; கொற்றவ, உனக்கு நானும் கூறும் குருவே ஆகும்; உற்ற ஆறு எனக்கு நீயும் ஒரு வரம் தருக, என்றான்,]

**விளக்கம்** :- கற்றவர் - கல்வி கற்ற மாணாக்கர்கள். கலைகள் யாவும் கற்பித்தோர் - பலதிறப்பட்ட கலைகளையும் கற்பித்த நல்லாசிரியர். கசடு அற - குற்றம் அற, அதாவது ஐயந்திரிபுகள் ஆகிய குற்றம் நீங்க (அவ்வாசிரியர் பெறும்படி கொடுக்கும்) செல்வம் - குரு தட்சிணை. கூறும் நல்குரு ஆகும் - (நானும் உனக்கு அடும் திறல் படையை நல்கியுள்ளே னாதலால்) சொல்லப்படும் ஆசிரியன் ஆவேன். உற்ற ஆறு - பொருந்திய முறையின்படி. ''ஆசிரியர்களுக்கு மாணாக்கர்கள் குருதட்சிணை கொடுத்தல் கடன், என்று பெரியோர் கூறுவர். நானும் உனக்குத் தெய்வப் படைகள் ஈந்ததால் குருவாகின்றேன். எனவே, எனக்கு அம்முறைப் படி ஒரு வரம் தருவாயாக'', என்று இந்திரன், மைந்தனைக் கேட்டான், என்க.

**13 தந்தைசொன் மகிழ்ந்து கேட்டுத் தனுவினுக் கொருவ னான**
**மைந்தனுந் தேவர்க் கைய மானுடர் செய்வ துண்டோ**
**சிந்தையி னிகழ்ந்த தொன்று செப்புகென் றவனுஞ் செப்ப**
**இந்திரன் றானு மீண்டு மின்னன பகர லுற்றான்.**

[தந்தை சொல் மகிழ்ந்து கேட்டு தனுவினுக்கு ஒருவன் ஆன மைந்தனும், தேவர்க்கு ஐய, மானுடர் செய்வது உண்டோ! சிந்தையில் நிகழ்ந்தது ஒன்று செப்புக, என்று அவனும் செப்ப, இந்திரன் தானும் மீண்டும் இன்னன் பகரல் உற்றான்.]

**விளக்கம் :-** தனுவினுக்கு ஒருவன் - வில்வித்தையில் நேரில் லாதவனாகிய விசயன். சிந்தையில் நிகழ்ந்தது ஒன்று செப்புக - மனத்தில் எழுந்ததான ஒரு காரியத்தைச் சொல்லுக, (என்று அருச்சுனன் கூற, இந்திரனும் மீண்டும் கூறுவானாயினான்). செப்புக, என்ற வியங்கோளின் ஈற்று அகரம் தொக்கது. செய்யுள் களில் இவ் விகாரம் நேர்வதுண்டு.

**14. ஆழிநீ ரழுவத் தென்று முறைபவ ரலரு ளோனும்**
**ஊழியி னாதன் றானு முருப்பினு முலப்பி லாதோர்**
**ஏழிரு புவனத் துள்ளோ ரியாரையு முதுகு காண்போர்**
**கோழியான் றனக்குந் தோலோ வவுணர்முக் கோடி யுண்டால்.**

[ஆழி நீர் அழுவத்து என்றும் உறைபவர், அலர் உளோனும் ஊழியின் நாதன் தானும் உருப்பினும் உலப்பு இலாதோர், ஏழ் இரு புவனத்து உள்ளோர் யாரையும் முதுகு காண்போர், கோழி யான் தனக்கும் தோலா அவுணர் முக்கோடி உண்டு, ஆல்.]

**விளக்கம் :-** ஆழி நீர் அழுவம்-கடலினிடையேயுள்ள (தோய மாபுரம் என்னும்) நாடு. அலர் உளோன் - பிரும்மா. ஊழியின் நாதன் - எமன். உருப்பினும் - வெகுண்டு அழிக்க முயன்றாலும், உலப்பு இலாதோர் - அழிதல் இல்லாத ஆற்றலர். கோழியான் - கோழியைக் கொடியிலே கொண்ட முருகக் கடவுள். கடலிடையே யுள்ள தோயமாபுரம் என்னும் நாட்டில் நிவாத கவசர் என்று அழைக்கப்படும், மூன்று கோடி அவுணர்கள் இருக்கின்றனர். அழிவு இல்லாதவர். பதினான்கு லோகங்களிலும் உள்ளார் யாவரையும் முதுகிடச் செய்தவர். முருகக் கடவுளுக்கும் அடங்காத ஆற்றலர், —என்று கூறும் பொருளது.

**15. தவாதபோர் வலியின் மிக்க தவத்தினர் சாபம் வல்லோர்**
**சுவாதமே வீசி யெல்லா வுலகையுந் துளக்கு கிற்போர்**
**விவாதமே விளைக்குஞ் சொல்லர் வெகுளியே விளையு நெஞ்சர்**
**நிவாதக வசத்த ரென்னும் பெயருடைக் கொடிய நீசர்.**

[தவாத போர் வலியின் மிக்க தவத்தினர், சாபம் வல்லோர், சுவாதமே வீசி எல்லா உலகையும் துளக்குகிற்போர், விவாதமே விளைக்கும் சொல்லர், வெகுளியே விளையும் நெஞ்சர், நிவாத கவசத்தர், என்னும் பெயர் உடை கொடிய நீசர்.)

**விளக்கம் :-** நிவாத கவசத்தர் என்னும் பெயருடைய கொடிய நீசர்களாகிய அவ்வசுரர்கள், கெடாத போர்வலியோடு, மிகுந்த தவ பலமும் உடையவர், சாபம் (வில்) வித்தையில் வல்லவர், சுவாதமே வீசி (பெருமூச்சு விட்டே) எல்லா உலகையும் நடுங்கச் செய்பவர், பூசலையே விளைவிக்கும் கடுஞ் சொல்லை யுடையவர், கோபமே மூண்டெழும் மனத்தர்,—என்பது பொருள். சுவாதம் - (வடசொல்) சுவாசம்; மூச்சுக் காற்று. விவாதம் - சொல்லால் உண்டாகும் கலகம், இங்கே பூசல் அல்லது போர்.

**16. மற்றவ ரெனக்கு நாளும் வழிப்பகை யாகி நிற்போர்**
**கற்றவர் வணக்கி னாற்குங் கடக்கரும் வலியின் மிக்கோர்**
**செற்றிட நின்னை யன்றிச் செகத்தினிற் சிலர்வே றுண்டோ**
**வெற்றிவெஞ் சிலைகொள் வீர விவ்வரம் வேண்டிற்**
**றென்றான்.**

[மற்று, அவர் எனக்கு நாளும் வழி பகை ஆகி நிற்போர்; கல்தவர் வணக்கினாற்கும் கடக்க அரும் வலியின் மிக்கார்; செற்றிட நின்னை அன்றி செகத்தினில் சிலர் வேறு உண்டோ! வெற்றி வெம் சிலை கொள் வீர, இ வரம் வேண்டிற்று, என்றான்.]

**விளக்கம் :-** மற்று - மேலும். நாளும் - எப்பொழுதும். வழிப் பகை - பரம்பரைப் பகை. கல் - மலை. தவர் - வில். கல்தவர் வணக்கினான் - திரிபுரம் எரிக்குங்காலை மகா மேரு மலையை வில்லாக வளைத்த சிவபெருமான். ''எனக்கு அவர் வழிப் பகை ஆயினர். சிவபெருமானினும் வலியினால் மிக்கவர், நீ அலால் அவர்களை அழிக்க வல்லார் வேறு யாரும் இலர். அவர்களை அழித்தலாகிய இவ் வரமே உன்பால் வேண்டுகின்றேன்'', என்று இந்திரன் கூறும் பொருளது. கடக்கரும் (கடக்க - அரும்), என்ற எச்ச வினையின் ஈறு தொக்கது.

**17. செருவென்ற மாற்றங் கேட்டுச் சிந்தையி லுவகை பொங்க**
**மருவொன்று மலங்கன் மார்பும் வாகுபூ தரமும் பூரித்து**
**உருவொன்று மதனை யொப்பா னொருப்பட்டா னுரைப்ப**
**தென்னோ**
**திருவொன்று வண்மை வீரன் மறுக்குமோ தேவர் கேட்டால்.**

[செரு என்ற மாற்றம் கேட்டு சிந்தையில் உவகை பொங்க, மரு ஒன்றும் அலங்கல் மார்பும், வாகு பூதரமும் பூரித்து, உரு ஒன்றும் மதனை ஒப்பான் ஒருப்பட்டான், உரைப்பது என்னோ! திரு ஒன்றும் வண்மை வீரன் மறுக்குமோ தேவர் கேட்டால்.]

**விளக்கம் :-** செரு - போர். மரு - வாசனை. வாகு - தோள். பூதரம் - மலை. வாகுபூதரம் - தோள்களாகிய மலைகள், அதாவது மலை போன்ற தோள்கள். உரு ஒன்றும் மதனை ஒப்பான் - சிவபெருமானால் எரிக்கப்படும் முன் உருவத்தோடு இருந்த மன்மதனை ஒப்பான். உருவத்தால் மன்மதனை ஒப்பானாகிய விசயன், வின்மையில் அவனினும் மிக்கவன், மன்ற கருத்தின் தொனியது இது. வீரத்திருவின் சேர்க்கையோடு, ஈகைக்குணமும் வாய்ந்த வீரனான விசயன், தேவர் வேண்டுகோளுக்கு இசைந்தான்,— என்க.

பார்த்தன் போரெழல்

**18. காற்றெனக் கடிய வேகக் கனலெனக் கொடிய வென்றும்**
**மேற்றிசை யெல்லை யெல்லாம் வீதிபோ யொல்லை மீள்வ**
**கூற்றமு முகிலு முட்கக் குமுறும்வெங் குரலு மென்மேல்**
**சீற்றமுந் திறலு மிக்க தீக்கதி செலாத தூய.**

[காற்று என கடிய வேகம், கனல் என கொடிய, என்றும் மேல் திசை எல்லை எல்லாம் வீதி போய் ஒல்லை மீள்வ, கூற்றமும் முகிலும் உட்க குமுறும் வெம் குரலும், மெல் மேல் சீற்றமும் திறலும் மிக்க, தீ கதி செலாத தூய,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** இந்திரன் பார்த்தனுக்கு உதவிய போர்க் குதிரைகளை வர்ணிக்கும் செய்யுள் இது. அவை :- காற்றினும் கடிய வேகம் உள்ளவை; கொடிய அக்கினிபோல் (பகை அழிக்கும்) கொடிய தன்மை உள்ளவை; மேல்திசை எல்லை எல்லாம் (ஆகாயமாகிய இடம் முழுதும்) ஒழுங்காகச் சென்று திரும்பக்கூடிய திறமை உடையவை; எமனும், மேகமும் அஞ்சும்படி கனைக்கும் கொடிய குரலும், (பகை கண்டவுடன்) மேல் மேலும் வளரும் கோபமும் திறமையும் மிகுந்துள்ளவை; விரும்பத்தகாத கதி (நடை) நடவாதவை, அதாவது செலுத்துவோன் மனத்திற்கு ஒவ்வாத கதியில் செல்லாதவை, தூய்மை உள்ளவை,—அடுத்த செய்யுளோடு முடியும். வீதிபோதல் - வழி மாறாது, அல்லது நேரே செல்லல். மேல்திசை, என்பதற்கு, மேற்குத் திக்கு, என்றும் பொருள் கொள்ளலாம்; அதாவது, இந்திரன் திக்காகிய கிழக்கிலிருந்து, மேற்குத்திசை வரை சென்று மிளவல்லவை, என்பது பொருளாகும். கூற்றம், அம், சாரியை. குதிரைக்குத் தூய்மை, அச்வலக்ஷணம் முழுமையும் குறைவின்றிப் பெற்றிருத்தல்.

**19. ஆயிரம் பத்து வெம்போ ரடற்பரி பூண்ட தேரும்**
**மாயிருங் கலையின் மிக்க மாதலி தனையு நல்கிக்**
**காயிருங் கிரணச் செம்பொற் கவசமுங் கொடுத்துப் பின்னர்**
**வேயிருந் தெரிய லாற்குச் சுரபதி விடையு மீந்தான்.**

[ஆயிரம் பத்து வெம் போர் அடல் பரி பூண்ட தேரும், மா இரு கலையின் மிக்க மாதலி தனையும் நல்கி, காய் இரு கிரணம்

செம்பொன் கவசமும் கொடுத்து, பின்னர் வேய் இரு தெரியலாற்கு சுரபதி விடையும் ஈந்தான்.]

**விளக்கம் :-** (இதன் முன் செய்யுளில் கூறிய லட்சணங்கள் பொருந்திய) கொடிய போருக்குரிய வலிமை வாய்ந்த பத்தாயிரம் குதிரைகள் பூட்டிய தேரும், மிகச் சிறந்த அச்வ சாத்திரத்திர வித்தகமுடைய மாதலி என்னும் தனது சாரதியும் கொடுத்து,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். மிகுதியாகச் சுவலிக்கும் பிரகாசமுடைய செம் பொன் கவசமும் கொடுத்து, அணிந்த சிறந்த (தும்பை) மாலையை உடைய விசயனுக்குப் போரெழுந்து செல்லு மாறு (இந்திரன்) விடையும் கொடுத்தான், — என்பது ஈற்றடிகளின் பொருள். போருக்கு உரிய மாலை தும்பை. வேய் - அணிந்த.

**20. விடையெனத் தொழுது போந்து வெஞ்சிலை வினோத வீரன்**
**சுடுசரத் தூணி கொற்றப் புயத்தினிற் றுதையத் தூக்கி**
**இடுமணிக் கவச மெய்யி லெழிலுறப் புனைந்து தன்னைத்**
**திடமுடைச் சிங்க மன்னான் செருத்தொழில் கோலஞ்**
**செய்தான்.**

[விடை என, தொழுது போந்து வெம் சிலை வினோதம் வீரன் சுடு சரம் தூணி கொற்றம் புயத்தினில் துதைய தூக்கி, இடு மணி கவசம் மெய்யில் எழில் உற புனைந்து, தன்னை, திடம் உடை சிங்கம் அன்னான் செரு தொழில் கோலம் செய்தான்.]

**விளக்கம் :-** திடல் (வலிமை) உடை சிங்கம் அன்னானும், கொடிய வில் தொழிலை விளையாட்டாகக் கொண்ட வீரனுமான விசயன்,—விடை என - (இந்திரன்) நீ போகலாம் என்று அனுமதிக்க. தொழுது போந்து - இந்திரனை வணங்கிச் சபையை விட்டு வெளியே போய். தூணி - அம்பு வைக்கும் புட்டில். துதைய தூக்கி - (தோளில்) பொருந்தும்படி கட்டிக்கொண்டு. தன்னைச் செருத் தொழிலுக் குரியபடி அலங்கரித்துக்கொண் டான். சிங்கம் - தைரியம், கம்பீரப் பார்வை, நடை, வலிமை முதலியவற்றால் உவமை.

**21. மோதுபோர் தனக்கு வேண்டு**
**முரட்படை பலவுங் கொள்ளாக்**
**கோதைவிற் றடக்கை வீரன்**
**கொடிமணித் தேர்மேற் கொண்டு**
**மாதலிப் பெயரா யந்த**
**வஞ்சரெத் திசைய ரென்றான்**
**சூதனு மவனுக் கன்னே**
**ரியல்பெலாந் தோன்றச் சொல்வான்.**

[மோது போர் தனக்கு வேண்டும் முரண் படை பலவும் கொள்ளா, கோதை வில் தடக்கை வீரன் கொடி மணி தேர்மேல்

கொண்டு, மாதலி பெயராய், அந்த வஞ்சகர் எ திசையர் என்றான்; சூதனும் அவனுக்கு அன்னோர் இயல்பு எலாம் தோன்ற சொல்வான்.]

**விளக்கம் :-** முரண் படை - வலிய ஆயுதங்கள். கோதை - நாணி. கோதை வில் தடக்கை வீரன் - அருச்சுனன். மாதலிப் பெயராய் - மாதலி என்னும் பெயருடைய சாரதியே. எத் உசையர் - (வஞ்சகர்களான அவ்வசுரர்) எந்தத் திசையில் திள்ளவர், சூதன் - தேர்ப்பாகன், (மாதலி) விசயனுக்கு நிவாத கவசர்களின் இயல்புகளை முறையே கூறலுற்றான்,—என்க. கோதை - வில்லின் நாணி, கைக் கவசம்.

**22. தோயமா புரமென் றுண்டு தொடுகட லழுவத் தொன்று**
**மாயமா புரமே யொக்கு மப்புர மதனில் வாழ்வோர்**
**தீயவ ரென்று செப்பிச் சித்திர சேனன் றன்னைத்**
**தூயதன் னெறிகாட் டென்று சூதன்றேர் தூண்டு மெல்லை.**

[தோய மாபுரம் என்று உண்டு தொடு கடல் அழுவத்து ஒன்று, மாயம் மா புரமே ஒக்கும், அ புரம் அதனில் வாழ்வோர் தீயவர் என்று செப்பி, சித்திரசேனன் தன்னை, ''தூய நல் நெறி காட்டு'', என்று சூதன் தேர் தூண்டும் எல்லை,—அடுத்த செய்யுளோடு சேரும்.]

**விளக்கம் :-** தொடு கடல் - சகர புத்திரர்களால் தோண்டப் பெற்ற கடல், அழுவம் - நிலம், நாடு, மையம், பரப்பு. (ஆகவே, கடலினிடத்ததான பரப்பு, என்பது பொருள்). ''தோயமாபுரம் என்று ஒன்று (ஒரு நகர்) உளது. அது மாயம் நிறைந்த ஒரு பெரிய நகரத்தையே ஒக்கும். அதில் வாழ்பவர் தீமை செய்தலைத் தொழிலாகக் கொண்டவர்'', என்று மாதலி கூறி, சித்திரசேனன், என்ற பெயருடைய கந்தருவனை நோக்கி, ''இடரில்லாத (நல்ல) வழியைக் காட்டுக'', என்று சொல்லி, தேரை நடத்துங்காலை,— (தொடரும்) என்பது பொருள். சித்திரசேனன், இசைக்கலை வல்லவனான ஒரு கந்தருவன்.

**23. மொய்திறற் கடவு ளோர்முப் பத்துமுக் கோடி யாலும்**
**செய்தமர் தொலைக்க வொண்ணாத் தெயித்தியர் சேனை தன்னை**
**எய்தொரு மனிதன் வெல்வ தேழைமைத் தென்று நக்கார்**
**மைதவழ் கருங்கட் செவ்வாய் வானவ மகளி ரெல்லாம்.**

[மொய் திறல் கடவுளோர் முப்பத்து முக்கோடியாலும் செய்து அமர் தொலைக்க ஒண்ணா தெயித்தியர் சேனை தன்னை, எய்து ஒரு மனிதன் வெல்வது ஏழைமைத்து, என்று நக்கார் மை தவழ் கருங்கண் செவ்வாய் வானவ(ர்) மகளிர் எல்லாம்.]

**விளக்கம்** :- தெயித்தியர் - அசுரர். (ஒரு மனிதன் (அம்பு) எய்து வெல்வது என்பது) ஏழைமைத்து - அறிவின்மை உடைய தாகும், (என்று தேவ மாதர் நக்கனர்). முப்பத்து முக்கோடி தேவர்களால் அழிக்க முடியாத தைத்தியரை, ஒரு மனிதன் பொருது அழிப்பதென்பது அறிவின்மையின் பாற்படும் என்று தேவருலகப் பெண்கள் சிரித்தனர்,—என்க. தெயித்தியர், தைத்தியர், என்ற சொல்லின் விகாரம்; காச்யபரின் மனைவி **திதி** என்பாளிடம் உண்டானவர். கருங்கட் செவ்வாய் : முரண் தொடை.

**24. மங்கையர் வாய்மை கேட்டு மணிக்குறு முறுவல் செய்து**
**கங்கையம் பழன நாடன் கடிமதில் வாயில் செல்ல**
**அங்கவன் றன்னைக் கண்ட வணிகழ லமர ரெல்லாம்**
**மங்குல்வா கனனென் றெண்ணிக் கதுமென வந்து தொக்கார்.**

[மங்கையர் வாய்மை கேட்டு மணி குறு முறுவல் செய்து, கங்கை அம் பழன நாடன் கடி மதில் வாயில் செல்ல, அங்கு அவன் தன்னை கண்ட அணி கழல் அமரர் எல்லாம், மங்குல் வாகனன் என்று எண்ணி கதுமென வந்து தொக்கார்.]

**விளக்கம்** :- மங்கையர் வாய்மை - வான மகளிர் சொன்ன வார்த்தை, கங்கையம் பழன நாடன் - விசயன். மங்குல் வாகனன் - மேகத்தை வாகனமாகக் கொண்ட இந்திரன். கதுமென - விரைவில். தொக்கார் - கூடினர். தேவர்களால் முடியாததை இம் மனிதன் எப்படிச் செய்ய முடியும், என்று அர மகளிர் சிரித்துச் சொன்ன வார்த்தையைக் கேட்டு இளமுறுவல் கொண்டவனாய், விசயன் கோபுர வாயிலை அடையவும், அவனைத் தேவர்கள் இந்திரன் என நினைத்து, அவன் அருகு வந்து கூடினர்,—என்பதாம். திருமேனி நிறத்தாலும், மாதலி தேர் செலுத்துவதாலும், அருச்சுனனைத் தேவர் இந்திரனாக மயங்கி னர். இது மயக்க அணியின் பாற்படும். கதுமென, என்பது விரைவைக் குறிக்கும் சொல்.

**25. கார்க்கோல மேனி யானைக் கண்டபி னைய நீங்கிப்**
**போர்க்கோல மிவனுக் கெவ்வா றிசைந்தது புகறி யென்று**
**தேர்க்கோலஞ் செய்வான் றன்னைச் செப்பின ரவனும் போற்றி**
**வார்க்கோல புரத்து வைகு மவுணரை வதைத்தற் கென்றான்.**

[கார் கோலம் மேனியானை கண்டபின் ஐயம் நீங்கி, போர் கோலம் இவனுக்கு 'எவ்வாறு (எ - ஆறு) இசைந்தது? புகறி, என்று தேர் கோலம் செய்வான் தன்னை செப்பினர்; அவனும் போற்றி, வார் கோலம் புரத்து வைகும் அவுணரை வதைத்தற்கு என்றான்.]

**விளக்கம் :-** கார்க்கோல மேனியான்-அருச்சுனன். அவனைக் கண்டபின், 'இந்திரனோ இவன்? என்று கொண்ட சந்தேகம் நீங்கப்பெற்று, இவனுக்கு இப் போர்க்கோலம் எவ்வாறு இப் பொழுது அமைவதாயிற்று, என்று தேவர்கள், தேர்க்கோலம் செய்பவனாகிய மாதலியைக் கேட்டனர்; அவனும், அருச்சுனனைப் புகழ்ந்து, வார் கோலபுரத்து (நீரினிடத்தே யுள்ள அழகிய தோயமாபுரத்து) வாழும் அசுரர்களை வதைத்தற்கு (இக் கோலம் அவசியமாயிற்று) என்று பதில் மொழிந்தான்,—என்பது பொருள். வார் - ஜலம், கடல். 'போற்றி', என்பதற்கு, மாதலி, தன்னை வினவிய தேவர்களை வணங்கி, என்றும் பொருள் கொள்ளலாம்.

**26. என்றவ னுரைத்த மாற்ற மின்புறக் கேட்டு நெஞ்சில்
துன்றிய வுவகை தூண்டச் சுருதியா லாசி சொல்லி
வென்றுமீள் கென்று வாழ்த்தி விரைவினில் வீரன் றன்னைச்
சென்றிடு கென்று தேவர் தத்தமிற் சிறப்பு மீந்தார்.**

[என்று அவன் உரைத்த மாற்றம் இன்புற கேட்டு நெஞ்சில் துன்றிய உவகை தூண்ட, சுருதியால் ஆசி சொல்லி, வென்று மீள்க என்று வாழ்த்தி, விரைவினில் வீரன் தன்னை சென்றிடுக என்று தேவர் தத்தமில் சிறப்பும் ஈந்தார்,]

**விளக்கம் :-** மாதலி சொன்ன வார்த்தை கேட்டுத் தேவர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு விசயனுக்கு வேத வாக்கியங்களால் ஆசீர் வாதம் செய்து, 'வென்று மீள்க', என்று வாழ்த்தித் தங்களால் இயன்ற அளவு சன்மானங்களை வழங்கினர், என்பதாம். தேவ தத்தமும் சிறப்பின் ஈந்தார், என்றொரு பாடமும் உளது. மற்ற சன்மானப் பொருள்களோடு **தேவதத்தம்** என்னும் சங்கையும் தேவர் கொடுத்தார், என்பது பொருளாகும். காண்டவதகனம் செய்த பொழுது அக்கினி பகவான், இச் சங்கைக் கொடுத்தான், என்றலும் உண்டு.

**27. சம்புவன் சம்பு மாலி யெனும்பெயர்த் தனுசர் தம்மை
உம்பர்கோன் வதைத்த வந்நா ளூர்ந்ததெவ் வுலகு மேத்தும்
தும்பையஞ் சடையான் வெற்பைத் துளக்கிய சூரன் மாள
விம்பவார் சிலையி ராமன் வென்றநா ளூர்ந்ததித்தேர்.**

[சம்புவன் சம்புமாலி எனும் பெயர் தனுசர் தம்மை உம்பர் கோன் வதைத்த அ நாள் ஊர்ந்தது, எ உலகும் ஏத்தும் தும்பை அம் சடையான் வெற்பை துளக்கிய சூரன் மாள, விம்பம் வார் சிலை இராமன் வென்ற நாள் ஊர்ந்தது இ தேர்.]

**விளக்கம் :-** (சம்புவன் சம்புமாலி எனும் பெயரையுடைய) தனுசர் - (தநுஜர்) காசியபரின் மனைவிகளில் ஒருத்தியான நநு என்பவளிடம் உண்டான அசுரர். தும்பை அம் சடையான் -

சிவபெருமான். வெற்பு - கைலாசமலை. துளக்கிய சூரன் - அசைத்த சூரனான இராவணன். இத்தேர், சம்புவன் சம்புமாலி என்ற அசுரர்களை வதைத்தபோது இந்திரன் ஏறியதும், இராவணனை வதைத்தபோது தசரத ராமன் ஏறியதுமான தேர், என்க. பரசுராமனையும், பலராமனையும் விலக்கும் பொருட்டு, **வார்சிலை இராமன்**, எனப்பட்டது.

**28. ஆதலா லித்தேர் மேல்கொண் டடல்புனை யவுண ருக்குப்
பேதியாக் கவசம் பெற்றுப் பிறங்குபொன் முடியும் பெற்றாய்
கோதிலம் யெங்க ணெஞ்சிற் குறையெலாந் தீர்த்தி யென்றார்
போதில்வா ழயனு மொவ்வா வாய்மொழிப் புலவ ரெல்லாம்.**

[ஆதலால் இ தேர் மேல் கொண்டு, அடல் புனை அவுணருக்கு பேதியா கவசம் பெற்று, பிறங்கு பொன் முடியும் பெற்றாய், கோது இலாய் எங்கள் நெஞ்சில் குறை எலாம் தீர்த்தி என்றார் போதில் வாழ் அயனும் ஒவ்வா வாய்மொழி புலவர் எல்லாம்.]

**விளக்கம் :-** போதில் வாழ் அயனும் ஒவ்வா வாய்மொழி புலவர் எல்லாம் - பிரும்மதேவனும் ஒப்பாகமாட்டாத் தவறாத வாய்ச் சொல்லை உடையதேவர் எல்லோரும்,—அருச்சுனனைக் 'கோது (குற்றம்) இலாய்', என்று அழைத்து, ''வெற்றியை அளித்த இத் தேர்மேல் ஏறிக்கொண்டு, வலிமை பொருந்திய அவுணருக்குப் பிளக்க முடியாத சிறந்த கவசத்தைப் பெற்று, (இந்திரனிட மிருந்து) பொன் கிரீடமும் பெற்றாய்; ஆதலால் எங்கள் மனக் குறைகளை எல்லாம் தீர்ப்பாய் என்பது நிச்சயம்'', என்று கூறி னார்கள். புலவர் - தேவர். வாய்மொழி - தவறாது பயன் தர வல்ல நிறை மொழியாகிய வாய்ச்சொல். பிறங்கல் - விளங்கல்.

**29. வீரனு முவகை தூண்ட விண்ணவர் மலர்த்தாள் போற்றிச்
சாரதி தடந்தேர் தூண்டத் தபனனில் விசும்பிற் சென்றான்
கார்நிறக் குன்ற மொன்றைக் கனகவான் குன்றொன் றேந்திச்
சீருறப் பறந்து வானில் திசையுறச் செல்வ தொத்தே.**

[வீரனும் உவகை தூண்ட விண்ணவர் மலர் தாள் போற்றி, சாரதி தடத்தேர் தூண்ட தபனனில் விசும்பில் சென்றான், கார் நிறம் குன்றம் ஒன்றை கனகம் வான் குன்றம் ஒன்றும் ஏந்தி, சீர் உற பறந்து வானில் திசை உற செல்வது ஒத்து, ஏ.]

**விளக்கம் :-** தபனன் - சூரியன். வீரனான விசயன் விண்ண வர்களை வணங்கி, மாதலி செலுத்திய தேரில் சூரியனைப்போல் ஆகாய வழியில் சென்றான். அவன், அவ்வாறு சென்றதானது, கருநிறக் குன்றம் ஒன்றை பொன்நிறக் குன்று ஒன்று ஏந்திச் சீர் பொருந்த ஆகாயத்தில் மேற்குத் திசையை நோக்கிப் பறந்து செல்வதை ஒத்து,—அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும், ஒளியாலும், வான வீதியில் விரைந்து செல்வதாலும், சூரியன்

அருச்சுனனுக்கு உவமை ஆயிற்று. கார்நிறக் குன்று - அருச்சுனன். கனகவான் குன்று - இந்திரன் அளித்த தேர். எனவே, பின்னடிகள் இல் பொருள் உவமையை உட்கொண்டவை.

கலிவிருத்தம்

**30. திரைகொ ழித்திடுஞ் சிந்துவின் சூழலில்**
**குரக தத்தடந் தேர்போய்க் குறுகலும்**
**மரக தக்கொண்டன் மாதலிக் கன்பினால்**
**விரகு றச்சில மாற்றம் விளம்பினான்.**

[திரை கொழித்திடும் சிந்துவின் சூழலில் குரகதம் தடதேர் போய் குறுகலும், மரகதம் கொண்டல் மாதலிக்கு அன்பினால், விரகு உற சில மாற்றம் விளம்பினான்.]

**விளக்கம் :-** அலைகள் கரையில் மோதும் கடலின் அயலே உள்ள இடத்தே, குதிரைகள் பூட்டிய விசாலமான தேர் அடைந்த அளவில்,—என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். மரகதம் கொண்டல் - மரகதம் போன்ற காள மேகத்தை ஒத்த அருச்சுனன். மாதலிக்கு அன்போடு, உற்காகம் பொருந்திய சில வார்த்தைகள் கூறலானான், என்க. விரகுற, என்பதற்கு அறிவு பொருந்திய என்றும் பொருள் கொள்ளலாம். விரகு - அறிவு, உற்சாகம், உபாயம், புத்தி, தெளிவு. சூழ்ந்துள்ள இடம், சூழல்.

**31. இப்பு ரத்தி லவுண ரியல்பெலாம்**
**செப்பெ னக்குத் தெரிதர வென் றலும்**
**அப்பு ரத்தவ ராண்மையுந் தோற்றமும்**
**செப்ப லுற்றனன் திண்டி றற் றேர்வலான்.**

[இ புரத்தில் அவுணர் இயல்பு எலாம் செப்பு எனக்கு தெரிதர என்றலும், அ புரத்தவர் ஆண்மையும் தோற்றமும் செப்பல் உற்றனன் திண் திறல் தேர்வலான்.]

**விளக்கம் :-** இந்த நகரத்திலுள்ள அவுணர் இயல்பெலாம் எனக்கு விளங்கும்படி கூறுக, என்று விசயன் கேட்ட அளவில், அந்த நகரத்தவர் ஆண்மையும் தோற்றமும் ஆகியவற்றைத் தேர்த் தொழிலில் வல்லவனான மாதலி சொல்லலுற்றான்,– என்பது பொருள். திண் திறல் - ஒரு பொளையுடை இரு சொல்.

மாதலி கூறல்

**32. தெழித்த சொல்லினர் சீற்றவெங் தீயுக**
**விழித்த கண்ணினர் விண்முகி லைக்கவின்**
**அழித்த மேனிய ராழ்வெம் பிலத்தையும்**
**பழித்த கன்ற பெரும்பகு வாயினார்.**

[தெழித்த சொல்லினர், சீற்றம் வெம் தீ உக விழித்த கண்ணினர், விண் முகிலை கவின் அழித்த மேனியர், ஆழ் வெம் பிலத்தையும் பழித்து அகன்ற பெரும் பகு வாயினர்.]

**விளக்கம் :-** தெழித்தல் - அதட்டல். கவின் - அழகு, நிறம். பிலம் - குகை. பகுவாயினர் - பிளந்த, அல்லது பெரிய வாயினர். சொல்லினர், கண்ணினர், மேனியர், வாயினர், என்பவற்றிற்குத் தோயமாபுரத்து **அவுணர்** என்ற எழுவாய் வருவிக்க.

**33. மண்ணு நீரு மனலு மருத்துடன்**
**விண்ணும் வேண்டின் விரைவின் முருக்குவார்**
**எண்ணெ யூட்டி விருட்குழம் பாலெழில்**
**பண்ணி யாக்கை வகுத்தன்ன பான்மையார்.**

[மண்ணும் நீரும் அனலும் மருத்துடன் விண்ணும் வேண்டின் விரைவின் முருக்குவார், எண்ணெய் ஊட்டி இருள் குழம்பால் எழில் பண்ணிய யாக்கை வகுத்தன்ன பான்மையார்.]

**விளக்கம் :-** மருத்து - வாயு. பஞ்சபூதங்களையும் விரும்பி னால் விரைவில் அழிக்கவல்லவர்,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். இருள் பிழம்பால் எழில் பண்ணி, எண்ணெய் ஊட்டி வகுத்தன்ன யாக்கை பான்மையர், என்று இயைக்க. இருளாகிய சேற்றால் எழில் (உருவம்) செய்து, அதன்மேல் எண்ணெயைத் தடவி அமைத்தது போன்ற உடம்பின் தன்மையை உடையவர், என்பது பொருள். நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும் ஒடுங்கும் என்பதுபற்றி, மண்ணும், நீரும், அனலும், மருத்தும், விண்ணும் என்றாராயிற்று. ஈற்றடிகள் தற்குறிப்பேற்றத்தின் பாற்படும்.

**34. மற்பு யாசலத் தின்வலி யாலிகல்**
**சற்ப ராசன் தலைச்சுமை மாற்றுவார்**
**அற்ப வாழ்வுடை யம்போ ருகத்தர்தம்**
**கற்ப கோடி கடையுறக் காண்குவர்.**

[மல் புய அசலத்தின் வலியால் இகல் சற்பராசன் (சர்ப்ப ராசன்) தலை சுமை மாற்றுவார், அற்பம் வாழ்வு உடை அம்போருகத்தர்தம் கற்பம் கோடி கடை உற காண்குவார்.]

**விளக்கம் :-** புயாசலம் - (தோள்களாகிய மலை) மலை போன்ற தோள்கள். சற்பம் - சர்ப்பம் (எதுகை நோக்கி விகாரப் பட்டது), ஆதிசேஷனது தலைச்சுமையாகிய பூமியைத் தாங்கி, அதற்குச் சுமை நீக்கந்தர வல்லவர்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். அம்போருகத்தர் - தாமரையில் தோன்றும் பிரும்மர்கள். ஜீவராசிகளின் வாழ்நாளினும் மிக நீண்டதான பிரும்மர்களது ஆயுளும் அவுணர்களது ஆயுளை நோக்கும்போது

அற்பமாகும், என்பதை, அற்ப வாழ்வுடைய அம்போருகத்தர், என்றார். அதாவது தீர்க்காயுசை உடையவர் அவுணர், என்ற பொருளது. அப் பிரும்மர்கள் பலரது முடிவைக் காணும் ஆயுள் நிட்சியை உடையவர்—என்பது ஈற்றடியின் பொருள். புஜபலத்தால் பூமியைத் தாங்கி ஆதிசேஷனது சுமையை மாற்றும் ஆற்றலர், என்றும் நீண்ட ஆயுளை உடைய பிரும்மர்களது ஆயுள் காலமும் சிறிதே என்னும்படி நீண்ட ஆயுள் காலத்தை உடையவர் என்றும், கூறியபடி. கற்பகோடி - கற்பகாலம் பல; நீண்ட ஆயுள் காலம்.

**35.** **பாழி யாடக வெற்பிற் படர்சிரம்**
**கீழ தாக்கிளர் மூச்சடக் கிநின்(று)**
**ஊழி நாளுந் தவமுயன் றோங்குவார்**
**ஆழி நீரு மளவிடுந் தாளினார்.**

*[பாழி ஆடகம் வெற்பில் படர் சிரம் கீழது ஆக, கிளர் மூச்சு அடக்கி நின்று ஊழி நாளும் தவம் முயன்று ஓங்குவார், ஆழி நீரும் அளவிடும் தாளினார்.]*

**விளக்கம் :-** பாழி - பெருமை, வலிமை. ஆடக வெற்பு-பொன் மலையாகிய மேரு. படர் சிரம் - விசாலித்த, அல்லது மேடுற்ற தலை, ஆழி நீர் - சமுத்திரம். மேரு மலையில் தலை கீழாக நின்று, மேல் எழும் மூச்சுக் காற்றைப் பிராணாயாமப் பயிற்சியால் பந்தனம் செய்து, கற்ப காலம் வரை தவம் செய்து வரங்கள் பல பெற்று உயர்ந்தவர்; சமுத்திரத்தை அளவிடும் நீண்ட கால்களை உடையவர், என்பது பொருள். ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம், என்ற நால்வகைப் பொன்களில் ஒன்று ஆடகம்.

**36.** **ஏதி சூல மெழுமழு வீட்டியின்**
**சாதி சக்கரந் தாங்குந் தடக்கையார்**
**மோது போரெனின் மொய்ம்புடன் முந்துவோர்**
**ஒத மேழு முடனுண் டுமிழுவோர்.**

*[ஏதி, சூலம், எழு, மழு, ஈட்டியின் சாதி, சக்கரம் தாங்கும் தடகையார், மோது போர் எனின் மொய்ம்புடன் முந்துவோர், ஓதம் ஏழும் உடன் உண்டு உமிழுவோர்.]*

**விளக்கம் :-** ஏதி - வாள், எழு - வளைதடி. மழு - பரசு. ஈட்டியின் சாதி - ஈட்டி வகை. சக்கரம் - வட்டமான ஆயுதம். ஏழு கடல்களின் நீரையும் ஒருசேர உண்டு (குடித்து) உமிழும் ஆற்றலர், என்பது ஈற்றடியின் பொருள். வாயால் நுகரப்படும் பொருள்கள் எல்லாவற்றையும் உணவு என்றல் பற்றி, **ஓதம்** உண்டு என்றார்.

**37. கூரு நல்லுரை கூறினுங் கூற்றுடன்**
**கார்தொ றும்மிடி சேர்ந்தன்ன காட்சியார்**
**தேர்தொ றுஞ்செருச் செய்யுமத் தேவரைப்**
**போர்தொ றும்புறங் கண்டன்றிப் போகலார்.**

[கூரும் நல் உரை கூறினும் கூற்றுடன் கார் தொறும் இடி சேர்ந்து அன்ன காட்சியார், தேர் தொறும் செரு செய்யும் அ தேவரை போர் தொறும் புறம் கண்டு அன்றி போகலார்.]

**விளக்கம் :-** கூரும் நல் உரை - இனியதான நல்ல வார்த்தை. கூற்று - எமன். கார் - மேகம். காட்சியார்-எமன் இடி ஆகியவற்றின் தோற்றத்தை உடையவர். அத் வேதர் - அமிர்தம் உண்டமையால் அழிதல் இல்லாமை பெற்ற அந்தத் தேவர். ''அவ்வசுரர் நல்ல வார்த்தை சொல்லும்பொழுதே தோற்றத்தால் எமனையும் குரலொலியால் இடியையும் ஒப்பார் எனில், அவர் சினந்து பேசினால் எத்தன்மையராவர், என்பது கூறாமலே புலப்படும். உண்டாகும் போர் தோறும், தேவர்களைப் பின்னிடச் செய்யாமல், அவர் திரும்பிப் போகார். அத்தகைய ஆற்றலர் அவர்'', என்று கூறும் கருத்தது செய்யுள். தேர் தொறும் - தேர்களில் வந்து (போர் செய்யும்.)

**38 மூன்று கோடி யசுரர் முகிலெனத்**
**தோன்று மேனியர் தோமறு மாற்றலர்**
**ஏன்று போர்பொரி னெவ்வெவ் வுலகையும்**
**கீன்று சேரக் கிழிக்கு மெயிற்றினார்.**

[மூன்று கோடி அசுரர் முகில் என தோன்றும் மேனியர், தோம் அறும் ஆற்றலர், ஏன்று போர் பொரின் எவ உலகையும் (எவ்வெவ் உலகையும்) கீன்று சேர கிழிக்கும் எயிற்றினார்.]

**விளக்கம் :-** மூன்று கோடி என்னுந் தொகையினர் அவ்வசுரர். மேகம் போன்ற தோற்றமுடைய வடிவம் உடையவர். குற்றம் அற்ற வலிமையினர். ஏற்று, அல்லது எதிர்த்துப் போர் செய்யின் எல்லா உலகங்களையும் ஒருசேரக் கீறிக் கிழிக்கவல்ல பற்களை உடையவர்கள்,—என்பது பொருள். தோம் - குற்றம். குற்றம் அற்ற ஆற்றலாவது, எவராலும் கடக்க முடியாத ஆற்றல்.

**39. செப்பு ரத்தினிற் செஞ்சடை வானவன்**
**முப்பு ரத்தை முனிந்தவந் நாளினும்**
**தப்பு ரத்தர் சதமகன் றன்னைவென்(று)**
**இப்பு ரத்தை யிவர்கவர்ந் தாரெனா.**

[செப்பு உரத்தினின் செம் சடை வானவன் முப்புரத்தை முனிந்த அ நாளினும் தப்பு உரத்தர், சதமகன் தன்னை வென்று இ புரத்தை இவர் கவர்ந்தார் எனா - இதுவும் இதைத் தொடரும் இரண்டு கவிகளும் குளகம்.]

**விளக்கம் :-** செப்பும் உரம் - யாவராலும் புகழ்ந்து பேசப்படும் வலிமை. செஞ்சடை வானவன் - சிவபெருமான். தப்பு உரத்தர்டு (சிவபெருமான் திரிபுரம் எரித்த காலத்திலும் அத் தீயில் அகப்பட் - எரியாமல்) தப்பித்துக் கொள்ளும்படியான வலிமை உடையவர் கள். சதமகன் - இந்திரன், (நூறு அச்வமேத யாகங்கள் செய்த வன்). இ புரம் - இத்தோயமாபுரம். நிவாதகவசர் என்ற இவ் வவுணர் இந்திரனை வென்று அவன் ஆட்சியிலிருந்து இத் தோயமா புரத்தைக் கவர்ந்துகொண்டனர், எனா,-என்பது பொருள்.

அவுணரைப் போருக்கு அழைத்தல்

**40. தீதி லாத்திறற் சித்திர சேனனைக்**
**கோதி லாத குனிசிலை வீரற்கு**
**மோது போர்தர மொய்ம்புடை வஞ்சர்பால்**
**தூது போகெனப் போக்கித் தொலைவிலான்.**

*[தீது இலா திறல் சித்திரசேனனை, கோது இலாத குனி சிலை வீரற்கு, மோது போர்தர மொய்ம்பு உடை வஞ்சர்பால், தூது போகு என போக்கி, தொலைவு இலான்.]*

**விளக்கம் :-** தொலைவு இலான் ஆகிய மாதலி, தீது இலாத் திறல் போகெனப் போக்கி,—என்று அன்வயிக்க. கோது இலாத குனிசிலை வீரன் - விசயன். வஞ்சர் - நிவாத கவசர். தொலைவு இலான் - தேர்த் தொழிலில் குறைவு இலா ஆற்றலினனான மாதலி. விசயனோடு போர் செய்ய வருமாறு அழைக்க, அவுண ரிடம் சித்திரசேனன் என்ற கந்தருவனை மாதலி அனுப்பினான், என்பதாம்.

**41. விண்ணின் மீது விரைவுறுந் தேரினை**
**மண்ணின் மீது நடத்தினன் மாதலி**
**அண்ண லுந்த னருஞ்சிலை நாணியின்**
**துண்ணெ னோதை தொடரத் துரத்தினான்.**

*[விண்ணின்மீது விரைவு உறும் தேரினை மண்ணின் மீது நடத் தினன் மாதலி, அண்ணலும் தன் அருஞ்சிலை நாணியின் துண் ணென் ஓதை தொடர துரத்தினான்.]*

**விளக்கம் :-** விண்ணின்மீது விரைந்து சென்ற தேரை மாதலி மண்ணின்மீது செலுத்தினான். அப்பொழுது அண்ணலும் (அருச் சுனனும்) தனது அரிய சிலையின் துண்ணென் நாணொலி, (அவுணர்பால் சென்ற கந்தருவனை) தொடர்ந்து செல்லும்படி நாணியைக் கை விரலால் தெறித்து ஒலி உண்டாக்கினான்,— என்பதாம். துண்ணென் ஓதை - அச்சத்தை உண்டாக்கும் நாணின் ஓசை. (ஓசையைத்) துரத்தினான் - வெளிப்படச் செய்தான். துரத்தினான், என்ற சொல், கந்தர்வன் போய்ச் சேருமுன், நாணொலி பகைவரின் செவி சேரச் செய்தான், என்ற பொருளது.

**42. தேரி னார்ப்பொலி யுஞ்சிறு நாணெனும்**
**காரி னார்ப்பொலி யுங்கலந் தெங்கணும்**
**பாரு மேற்றிசை யும்பகி ரண்டமும்**
**சேரு நாற்றிசை யுஞ்செவி டாக்கவே.**

[தேரின் ஆர்ப்பு ஒலியும் சிறு நாண் எனும் காரின் ஆர்ப்பு ஒலியும் கலந்து எங்கணும், பாரும் மேல் திசையும், பகிர் அண்டமும், சேரும் நால் திசையும் செவிடு ஆக்கவே.]

**விளக்கம் :-** மாதலி நடத்திய தேரின் பேரொலியும், விசயனது நாணி என்னும் மேகத்தின் பேரொலியும், கலந்து பூமியும் வானும், இவ்வண்டமே அன்றி வெளி அண்டங்களும், நான்கு திசைகளும் ஆகிய எங்கணும் சென்று சேர்ந்து, அங்குள்ள ஜீவராசிகளின் காதுகளைச் செவிடு ஆக்கின,—என்பது பொருள். ஆர்ப்பு - பேரொலி. ஆர்ப்பொலி - பேரொலியாகிய ஓசை. பகிரண்டம் - (வடமொழித் தொடர்) பிற அண்டங்கள்.

**43. அந்த வோசை யவுணர் செவிப்புக**
**முந்த வோடி முடுகி முறுவலித்(து)**
**இந்தி ரன்பொர வந்தன னென்றுதம்**
**சிந்தை கன்றி விழியுஞ் சிவந்திட்டார்.**

[அந்த ஓசை அவுணர் செவி பட முந்த ஓடி, முறுவலித்து, இந்திரன் பொர வந்தனன் என்று தம் சிந்தை கன்றி, விழியும் சிவந்திட்டார்.]

**விளக்கம் :-** அந்த ஓசை (கந்தருவனுக்கு) முந்த முடுகி ஓடி அவுணர் செவி பட, (அவ்வவுணர்) முறுவலித்து,—என்று அன்வயிக்க. தேரின் ஒலியும், அருச்சுனன் எழுப்பிய நாணொலியும் கந்தருவன் சென்று சேருமுன், அவுணர்களின் செவி சாரவும், அவர்கள் (கோபத்தால்) சிரித்து, 'இந்திரன் (மீண்டும்) போர் செய்ய வந்தனன் போலும்', என்று எண்ணி, மனம் கொதித்துக் கண்களும் சிவக்கப்பெற்றார்,—என்பது பொருள். முறுவலிப்பு - வீரத்தினால் எழுந்த கோபச் சிரிப்பு. விழி சிவந்திட்டார், திணை வழு.

**44. போய தூதனுஞ் செம்பொற் புரிசைசூழ்**
**தோய மாபுரந் தன்னிற் றுதைந்தவம்**
**மாய வஞ்சகர் மறுகவெம் புண்ணின்மேல்**
**தீயை யொப்பன சில்லுரை சொல்லுவான்.**

[போய தூதனும் செம் பொன் புரிசை சூழ் தோய மாபுரம் தன்னில் துதைந்த, அ மாய வஞ்சகர் (மனம்) மறுக, வெம் புண்ணின் மேல் தீயை ஒப்பன சில் உரை சொல்லுவான்,]

**விளக்கம் :-** புரிசை - மதில். துதைந்த - நிறைந்த. மறுக - மனம் சினக்கும்படி, மனம் மாறுபட. போருக்கு அழைக்கச் சென்ற சித்திரசேனன் தோயமாபுர அவுணர் சினங்கொள்ளும்படி தீயை ஒத்த சில வார்த்தைகளைக் கூறலானான்,—என்பதாம். தேரொலியும் நாணொலியுங் கேட்டுச் சினங்கொண்ட அவுணர்களுக்குச் சித்திரசேனன் சொன்னவை தீயைப்போல் சுட்டு, மேலும் அவர்களது கோபத்தை மிகுவிப்பன வானமையின், 'புண்ணின் மேல் தீ ஒப்பன', என்றார்.

**45.** **ஒருகு லத்தினில் வேந்துமொவ் வாதுயர்**
**குருகு லத்திற் குனிசிலை வீரற்குத்**
**தருக யுத்தந் திறலுடைத் தானவர்**
**வருக மற்றும் வரூதினி தன்னொடும்.**

[ஒரு குலத்தினில் வேந்தும் ஒவ்வாது உயர் குரு குலத்தின், குனி சிலை வீரற்கு தருக யுத்தம், திறல் உடை தானவர் வருக மற்றும் வரூதினி தன்னொடும்.]

**விளக்கம் :-** எந்தவொரு குலத்தில் பிறந்த வேந்தனும் ஒப்பாக மாட்டாது உயர்ந்துள்ள, குருகுலத்தில் தோன்றிய குனி சிலை வீரனான விசயனுக்குத் திறல் உடைத்தானவர் யுத்தம் தருக; மேலும், சேனையோடும் (போருக்கு) வருக,—என்று கந்தர்வன் கூறினான், என்க. மற்றும் - மேலும். வரூதினி - சேனை..

அசுரர் இகழ்ந்து பேசல்

**46.** **என்று தூத னிசைத்தது கேட்டலும்**
**நன்றெ னக்கை புடைத்து நகைத்திடாக்**
**கன்று நெஞ்சினர் கண்கள்செந் தீயுகத்**
**துன்று கோபத் துடனவர் சொல்லுவார்.**

[என்று தூதன் இசைத்தது கேட்டலும், நன்று என கை புடைத்து நகைத்திடா, கன்று நெஞ்சினர் கண்கள் செம் தீ உக துன்று கோபத்துடன், அவர் சொல்லுவார்.]

**விளக்கம் :-** மனிதனோடு பொர அழைத்தமை குறித்துக் கை கொட்டிச் சிரித்த அவுணர், கோபம் எழப்பெற்றவரும் ஆயினர்,—என்பதாம். நன்று, என்றது இகழ்ச்சியின் பாற்படும். கன்றும் நெஞ்சு - கனலும் மனம். துன்று கோபம் - மிகுந்த கோபம்.

**47.** **பூசை யொன்று புலியின் குழாத்துடன்**
**ஆசை கொண்டு பொரவந் தழைப்பதே**
**வாச வன்பெரு வாழ்வுக் கெலாமொரு**
**நாசம் வந்து புகுந்த தெனாநகா.**

[பூசை ஒன்று புலியின் குழாத்துடன் ஆசை கொண்டு பொர வந்து அழைப்பதே! வாசவன் பெரு வாழ்வுக்கு எலாம் நாசம் வந்து புகுந்தது எனா நகா,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்** :- பூசை - பூனை. பூனை ஒன்று புலிக் கூட்டத் துடன் போர் செய்வதற்கு ஆசை கொண்டு போருக்கு அழைப்பது விந்தையானதே!—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். இந்திரனது பெருமையுடைய வாழ்வுக்கு (இப்பொழுது) நாசம் வந்து சேர்ந்தது, என்று அவ் வவுணர் சிரித்தனர், —என்பது ஈற்றடிகளின் பொருள்.

அற்ப ஆற்றலுடையவனான மனிதன், வரபலத்திலும் புஜபலத்திலும் மிக்காரான அசுரர்களைப் போருக்கு அழைப்பதோ, என்ற பொருளைத் தரும் முதலிரண்டிடிகள், பிறிது மொழிதல் என்னும் அணியின் பாற்படும். புலிக் கூட்டத்தை ஒரு பூனை போருக்கு அழைத்தல், என்றது **இல்பொருள் உவமை**. விசயன் இந்திரன் மைந்த னாதலால், இந்திரன் வாழ்வுக்கு நாசம் புகுந் தது, என்றனர்,—என்க. புகுந்தது என்ற இறந்த காலம் நிச்சயம் பற்றிய காலவழு.

**48. வரையு ளானு மலரினு ளானும்வெண்**
**திரையு ளானுஞ் செகுப்பரு மெம்முடன்**
**தரையு ளான்வந்து போர்பொரத் தக்கதோ**
**உரையு ளாரென் றுரையீ ருணரவே.**

[வரை உளானும் மலரின் உளானும் வெள் திரை உளானும் செகுப்பு அரும் எம்முடன் தரை உளான் வந்து போர் பொர தக்கதோ? உரை உளார் என்று உரையீர் உணரவே.]

**விளக்கம்** :- வரை உளான் - சிவபெருமான். மலர் உளான் - பிரும்ம தேவன். வெள்திரை உளான் - வெள்ளிய பாற்கடலில் உள்ள திருமால். ''இம் மூர்த்திகளாலும் அழிப்பதற்கு அரிய எங்க ளோடு, தரையுளானாகிய மனிதன் போர் செய்தால் தகுமோ?— என்பது முதல் மூன்று அடிகளின் பொருள். உரை உளார் - பேச்சை உடையவர், அதாவது இவ்வாறு இகழ்ச்சி தோன்றப் பேசும் பேச்சை உடைய அவுணர். இதைப் போய் உம் வீரனான மனி தனுக்கு, நன்றாக உணர்ந்து கொள்ளும்படி சொல்வீராக, என்று அவுணர் கந்தருவனுக்குக் கூறினார், என்க. உரையீர், என்ற பன்மை இகழ்ச்சியின் பாற்படும். அலை, என்ற பொருளுடைய திரை, என்பது ஆகுபெயராய்க் கடலை உணர்த்திற்று.

**49. தனுசர் தானை தனைமதி யாதொரு**
**மனுசன் வந்து மலையம திப்பதோ**
**அனுச ருங்கொ லையாட லவுணரும்**
**குனிசெ யுஞ்சிலை யென்றுகொ தித்திட்டார்.**

[தனுசர் தானை தனை மதியாது, ஒரு மனுசன் வந்து மலைய மதிப்பதோ ? அனுசரும், கொலை ஆடல் அவுணரும் குனி செயும் சிலை, என்று கொதித்திட்டார்.]

**விளக்கம்** :- தனுசர் - அசுரர். தானை - சேனை. அசுரரது (ஆற்றலுடைய பெரிய) சேனையை மதிக்காது, தனி மனிதன் ஒருவன் போர் செய்ய எண்ணுவதோ! —என்பது முதலிரண்டடிகளின் பொருள். அனுசர் - இளையர் (தம்பி என்ற பொருளுடைய இச் சொல் இங்கே வயதில் இளையவரான அசுரரைக் குறித்து நின்றது). கொலை ஆடல் அவுணர் - கொலை செய்தலில் பயிற்சி பெற்ற அவுணர். அவுணர் அனைவரும் வில்லைக் குனி செய (வளையச்) செய்யுங்கள் என்று கூறி (அவுணர்) கோபக் கொதிப்புடையவர் ஆயினர்,—என்க.

**50. செங்க ணாகக் கொடியவன் செல்வமும்**
**தங்க ணாடுங் கவரத்த ரிப்பறப்**
**பொங்கு கானிற் புகுஞ்சி லைவீரனோ**
**எங்க ளோடு மெதிர்க்கவந் தெய்தினான்.**

[செம்கண் நாகம் கொடியவன் செல்வமும் தங்கள் நாடும் கவர, தரிப்பு அற, பொங்கு கானில் புகும் சிலை வீரனோ, எங்களோடும் எதிர்க்க வந்து எய்தினான்.]

**விளக்கம்** :- செங்கண் நாகக் கொடியவன் - அரவக் கொடியினனான துரியோதனன், தரிப்பு அற - தங்குவதற்கு இடம் இல்லாமல் போக. பொங்கு கான் - காட்டுத்தீ பொங்கி எரியும் காடு. புகும் - புகுந்த. சிலை வீரன் - அருச்சுனன். சொந்த நாட்டை ஒருவன் கவர்ந்து கொள்ள நிற்பதற்கும் சொந்தமான இடம் இல்லாமல் உடன் பிறந்தாரோடு கான் புகுந்த வீரனோ, இப்பொழுது எங்களோடு போர் செய்ய வந்துள்ளான், என்று அவுணர் இகழ்ந்தபடி. வீரன், என்றது இகழ்ச்சிக் குறிப்பினது.

## அவுணர் போரெழல்

**51. என்று கூறி யிகலசு ராதியர்**
**துன்று சேனைக் குழாம்புடை சூழ்வரச்**
**சென்று காந்தத் திரைக்கட லார்ப்பபோல்**
**ஒன்ற யாரு மொருங்குசென் றுற்றனர்.**

[என்று கூறி இகல் அசுர அதிபர் துன்று சேனை குழாம் புடை சூழ்வர, சென்று உகாந்தம் (உக - அந்தம்) திரை கடல் ஆர்ப்ப போல் ஒன்ற யாரும் ஒருங்கு சென்று உற்றனர்.]

**விளக்கம்** :- அவுணர் தம் சேனையோடு ஆரவாரம் செய்து கொண்டு போர் எழுந்தனர், — என்பதாம். அசுர அதிபர் - அசுரர்களின் தலைவர். உகாந்தம் - யுகாந்தம் (பிரளய காலம்), ஆர்ப்ப -

ஒலிக்க.ஒருங்கு - ஒன்றுபட்டு ஓரிடத்தில். ஆர்ப்பது என்னும் தொழிற் பெயர் ஆர்ப்ப என்று விகாரப்பட்டு நின்றது.

**52. ஆனை தேர்பரி யாளெனு நால்வகைத்**
**தானை யோடு மெழுந்தனர் தானவர்**
**வானு மண்ணுந் திசையுமற் றெண்பெறும்**
**ஏனை லோகமு மெங்கும் நடுங்கவே.**

[ஆனை (யானை) தேர் பரி ஆள் எனும் நால்வகை தானை யோடும் எழுந்தனர் தானவர், வானும் மண்ணும் திசையும், மற்று எண் பெறும் ஏனை லோகமும் எங்கும் நடுங்கவே.]

**விளக்கம்** :- மற்று எண் பெறும் ஏனைலோகமும் - மேலும் (இவற்றோடு சேர்த்து) எண்ணப்பெறும் மற்றை உலகங்களும். அல்லது மற்றைய உலகமாகிய பாதாளமும். யானை, என்பதின் மரூஉ ஆனை. அவுணர்கள் போரெழ உலகங்கள் நடுங்கின, என்பதாம்.

**53. சங்கும் பேரியுந் தாரையுஞ் சின்னமும்**
**துங்க மாமுழ வுந்துடி யீட்டமும்**
**அங்கண் மாமுர சும்முக வந்தத்தில்**
**பொங்கும் வேலை யொலியிற் புலம்பவே.**

[சங்கும் பேரியும் தாரையும் சின்னமும், துங்கம் மா முழவும், துடி ஈட்டமும், அம் கண் மா முரசும் உக அந்தத்தில் பொங்கும் வேலை ஒலியின் புலம்பவே.]

**விளக்கம்** :- பேரி - அடிக்கும் வாத்தியம். தாரை, சின்னம் - ஊதும் கருவிகள். முழவு - மத்தளம். சங்கு, பேரி, தாரை, சின்னம், முழவு, முரசு முதலிய வாத்தியங்களின் ஒலி, யுகமுடிவில் கிளர்ந்தெழும் கடலின் பேரொலிபோல் சப்திக்க, அவுணர் போர் செய்யத் திரண்டனர்,—என்க.

**54. சூல நேமி யெழுமழுத் தோமரம்**
**கோலும் வார்சிலை குந்தங் கொடுங்கணை**
**நாலு தானை நடுவுஞ் சுடரயில்**
**வேலும் வாளின் விதமு மிடையவே.**

[சூலம், நேமி, எழு, மழு, தோமரம், கோலும் வார்சிலை, குந்தம், கொடுங்கணை, நாலு தானை நடுவும் சுடர் அயில் (கூரிய) வேலும், வாளின் விதமும் மிடையவே.]

**விளக்கம்** :- நேமி - சக்கராயுதம். எழு - வளைதடி. மழு- கோடரி, தோமரம் - இருப்பு உலக்கை, அல்லது கைவேல். கோலும் வரி சிலை - வளைதலையுடைய வில். குந்தம் - ஈட்டி. அயில் வேல்-கூரிய வேல். வாள்விதம் - வாள்வகை. போருக்குத் திரண்டு எழுந்த அவுணர்களின் ஆயுத மிகுதியைக் கூறும் செய்யுள் இது.

**55. முந்து கோப வசுரர் முடுகுதேர்**
**உந்து வீர னொருதனித் தேரினை**
**வந்து சூழ வளைந்தார் மதுமலர்க்**
**கொந்து சூழ்வரி வண்டின் குழாத்தினே.**

*[முந்து கோபம் அசுரர் முடுகுதேர், உந்து வீரன் ஒரு தனி தேரினை வந்து சூழ வளைந்தார், மது மலர் கொந்து சூழ் வரி வண்டின் குழாத்தினே.]*

**விளக்கம் :-** முந்து கோபம் - முன்கோபம். முடுகு தேர் - (அசுரர்களின்) விரையும் தேர்கள், உந்து வீரன் ஒரு தனி தேர் - (மாதலி) நடத்தும் அருச்சுனனது ஒப்பற்றதும், துணை இல்லாதது மான தேர். மதுமலர்க் கொத்தை வண்டுகள் சூழ்ந்து கொள்வது போல், அருச்சுனனது படைத்துணை இன்றித் தனியே இருக்கும் தேரை (அசுரர்)களின் தேர்கள் சுற்றிக் கொண்டன, என்பதாம். குழாம் - அத்து - இன் - குழாத்தின்: மகர ஈற்றோடு அத்துச் சாரியையின் அகர முதலுங் கெட்டுப் புணர்ந்துளது.

## இருதிறத்தாரும் பொரல்

**56. நீல மால்வரை யொன்றி னெருக்கிவீழ்**
**கால மாமுகி லென்னக் கடியவர்**
**கோலும் வார்சிலைக் கொண்டலன் னான்மிசைச்**
**சூல நேமி சுடுசரந் தூவினார்.**

*[நீலம் மால் வரை ஒன்றில் நெருக்கி வீழ், காலம் மாமுகில் என்ன, கடியவர் கோலும் வார்சிலை கொண்டல் அன்னான் மிசை, சூலம் நேமி சுடு சரம் தூவினார்.]*

**விளக்கம் :-** கடியவர் - அசுரர். கோலும் வார்சிலை கொண்டல் - அருச்சுனன். நீல நிறமான பெரிய மலை ஒன்றில் ஒன்றை யொன்று நெருக்கிக்கொண்டு கீழ் நோக்கி இறங்கும் மேகக் கூட்டம் போன்று, கொடிய அசுரர், அருச்சுனன் மேல் சூலங்களை யும், சக்கரங்களையும், அழிக்க வல்ல சரங்களையும் செலுத்தினர், அல்லது சொரிந்தனர்,—என்பதாம். நீலமலை அருச்சுனனுக்கும், காலமுகில் அசுரருக்கும் உவமை. நீலமலைமேல் மேகம் பொழிவது போல், (அசுரர்) ஆயுதங்களைச் சொரிந்தனர்,—என்றது இல் பொருள் உவமையின் பாற்படும். அருச்சுனனது பெருமை, வலிமை, அழித்தற்கு அருமை ஆகியவற்றைக் குறிக்குங் கருத்தில், அவனைப் புலவர், **நீல மாமலை** என்றார்.

## வேறு

**57. அக்கார் முகவீ ரனுமங் கவர்தம்**
**மைக்கார் முகிலென் னவழங் கியதிண்**
**மெய்க்காய் கணைசா பம்விசித் துவிடா**
**நக்கா னிவைநின் றுநவின் றனனே.**

[அ கார் முகம் வீரனும், அங்கு அவர் தம் மை கார்முகில் என்ன வழங்கிய திண் மெய் காய் கணை சாபம் விசித்து விடா, நக்கான் இவை நின்று நவின்றனன், ஏ.]

**விளக்கம் :-** அக் கார் முகம் வீரன் - அருச்சுனன், அவர் தம் மை கார் முகில் என்ன வழங்கிய திண் மெய் - அந்த அசுரர்களின் கரிய கார் காலத்து மேகம் போன்றது என்று வழங்கும் திண்ணிய உடல். (அவர்களது அவ்வுடலை) காய் கணை - தைத்து வருத்தும் அம்புகள். சாபம் விசித்து விடா - வில்லில் பதியச் செய்து இழுத்து விட்டு. நக்கான் - (அவர்களைப் பார்த்துச்) சிரித்தான்; மேலும், சலியாது நின்று இவ் வார்த்தைகளைக் கூறினான், என்க. மெய் - காய், என்பது எதுகை நோக்கி **மெய்க்காய்**, என நின்றது. வழங்கும் - சொல்லப்படும்.

**58** **திக்கோ டியநுந் திறலும் புகழும்**
**தொக்கோ டியடற் றுபடைத் தொகையும்**
**மைக்கோ டியவெஞ் சிலையின் கணையான்**
**முக்கோ டியுமின் றுமுருக் குவனால்.**

[திக்கு ஓடிய நும் திறலும் புகழும், தொக்கு ஓடி உடற்று படை தொகையும், கை கோடிய வெம் சிலையின் கணையால் முக் கோடியும் இன்று முருக்குவன், ஆல்.]

**விளக்கம் :-** திரண்டு வந்து (பகையின்) வலி அழிக்கும் படையின் தொகை, அல்லது கூட்டம் என்பது இரண்டாவது அடியின் பொருள். கை கோடிய வெஞ்சிலை - எனது கையிலுள்ள வளைந்த கொடிய வில். முருக்குவன் - அழிப்பன், ஆல் : அசை. மூன்று கோடி என்னும் தொகையுடைய உங்களை என்கைக் கணைகளால் அழிப்பேன், என்று அருச்சுனன், கூறினான், என்பதாம். திக்கு ஓடிய - திசை எங்கும் பரவிய.

**59.** **முன்போர் தொறும்வந் துமுனைந் துவெரீஇ**
**வென்போ கியவிண் ணுறைவீ ரரலேன்**
**பொன்போ லுநும்மே னிபொடி செய்திடா**
**பின்போ குவனென் றுவைபே சலுமே.**

[முன் போர் தொறும் வந்து முனைந்து வெரீஇ, வென் போகிய விண் உறை வீரர் அலேன்; பொன்போலும் நும் மேனி பொடி செய்திடா, பின் போகுவன் என்று இவை பேசலும், ஏ.]

**விளக்கம் :-** முன் போர்தொறும் - முன்னே செய்த ஒவ்வொரு போரிலும். முனைந்து - போர் செய்து. வெரீஇ - (வெருவி) பயந்து. வென் - முதுகு. பொன் போலும் மேனி - பொன்னைப் போன்ற அருமையான உடல். பொடி செய்திடா - பொடி செய்திட்டு. இதுவும், இதன் முன் கவியும் அருச்சுனன் கூறிய வீரவாதம், உங்களை அழிக்காமல் திரும்பேன், என்று அசுரர்களுக்கு அருச்சுனன், கூறினான், என்பதாம். இவ்வாறு கூறலும், அவுணர் எதிர் உரைப்பா ராயினர்.

**60. தழல்வந் தருள்பா வைதடந் துகிலும்
குழலுங் கவர்தந் தடல்கூ ருமக்(கு)
அழறுன் றியகா னமளித் தவரைக்
கழல்வெஞ் சிலைவீ ரகடிந் திலையே.**

*[தழல் வந்து அருள் பாவை தட துகிலும் குழலும் கவர்தந்து, அடல்கூர் உமக்கு அழல் துன்றிய கானம் அளித்த வரை, கழல் வெம் சிலை வீர, கடிந்திலையே.]*

**விளக்கம் :-** தழல் வந்து அருள் பாவை - திரௌபதி. தடந்துகில் - பெரிய புடவை. கவர்தந்து - கவர்ந்து, அதாவது கூந்தலைப் பற்றி இழுத்தும், துகில் உரிந்தும் மானபங்கம் செய்து. அடல் - வலிமை. கழல் வெஞ்சிலை வீர, என்று விளித்தது, இகழ்ச்சியின் பாற்படும். ''மனைவியை மானபங்கம் செய்து, உங்களையும் கானகம் ஓட்டிய துரியோதனாதியரின் வலியழிக்க இயலாது, கானில் திரியும் நீ, இவ்வாறு வீர வாதம் செய்தல் மிக நன்று, என்று அவுணர் இகழ்ந்தபடி.

**61. என்னா வசுரே சரிசைத் தலுமே
மன்னா கவவீ ரனும்வார் சிலைநாண்
தன்னா கமுறத் தழுவத் தழல்வாய்
மின்னார் கணைதூ விவெகுண் டனனே.**

*[என்னா அசுர ஈசர் இசைத்தலுமே, மன் ஆகவம் வீரனும் வார்சிலை நாண் தன் ஆகம் உற தழுவ, தழல் வாய் மின் ஆர் கணை தூவி வெகுண்டனன், ஏ.]*

**விளக்கம் :-** அசுரேசர் - அசுரத்தலைவர்கள். ஆகவம் - போர்க்களம். மன் ஆகவ வீரன் - போர்க்களத்தில் சலியாது நிலைத்து நிற்கும் வில் வீரனான விசயன். ஆகம் - மார்பு. வெகுண்டு கணை தூவினன், என்று இயைக்க. கோபங்கொண்டு அம்புகளைப் பொழிந்தான். அவுணர் இகழ்ந்து பேசலும், விசயன் வெகுண்டு தீயை ஒத்த சரங்களை அவர் மேல் செலுத்தினான்,— என்பதாம்.

**62. பொய்த்தா னவர்போ ரரியன் னவன்மேல்
மொய்த்தா முகில்செங் கதிர்மூ டுவபோல்
வைத்தா ரைவடிக் கணைவாண் மழுவேல்
உய்த்தார் வரைமே லுருமே றெனவே.**

*[பொய் தானவர் போர் அரி அன்னவன் மேல் மொய்த்தார், முகில் செம் கதிர் மூடுவ போல் வை தாரை வடி கணை, வாள், மழு, வேல் (ஆகியவற்றை) உய்த்தார், வரைமேல் உரும் ஏறு எனவே.]*

**விளக்கம் :-** பொய் தானவர் - பொய்யுடைய அல்லது வஞ்சனையுடைய அசுரர். போர் அரி அன்னவன் - போரில் சிங்கம் போன்றவனான விசயன். மொய்த்தார் - நெருங்கிச் சூழ்ந்து

கொண்டார். செங்கதிர்களை உடைய சூரியனை முகில் மூடி மறைப்பதுபோல், அருச்சுனனை அவுணர் சூழ்ந்து மொய்த்துக் கொண்டார், என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். வை தாரை வடி கணை, வாள், மழு, வேல் - கூரிய முனையை உடைய காய்ச்சி அடிக்கப்பெற்ற அம்பு, வாள், மழு, வேல். (இவற்றை அசுரர் விசயன் மேல்) வரை மேல் உரும் ஏறு என உய்த்தார் - மலைமேல் விழும் பேரிடிகளைப்போல் செலுத்தினார்கள். சூரியனை மூடிய முகில் விரைவில் மறைவதுபோல் அவுணரும் விரைவில் அழிந்து மறைவர் என்பது தோன்ற ''முகில் செங்கதிர் மூடுவ போல்'' என்றார். உரும் ஏறு - பேரிடி (பெரியதை ஏறு என்றல் மரபு). (தாரை - முனை, நுனி).

**63. என்முன் னவனென் முனெனா வெவரும்**
**முன்முன் வரமுந் தமுருக் கினனால்**
**தன்முன் னொருவீ ரர்தரா தலமேல்**
**வின்முன் னினிலா விறல்வில் விசயன்.**

[என் முன் அவன், என் முன் எனா எவரும் முன் முன் வர முருக்கினன் (ஆல்) தன் முன் ஒரு வீரர் தராதலம் மேல் வில் முன்னின் இலா விறல் வில் விசயன்.]

**விளக்கம் :-** வில் முன்னின் தராதலம் மேல் தன் முன் ஒரு வீரர் இலா விறல் விசயன், எவரும் என் முன் அவன், என் முன் எனா முன் முன் வர, முந்த முருக்கினன், (ஆல்),என்பது அன்வயம்.

அசுரர்கள் எல்லோரும், அவன் (விசயன்) எனக்கு முன் போர் செய்யட்டும், என்று சொல்லிக்கொண்டு முற்பட்டவராய், முன்னே வர, (அவர்களை விசயன்) அழித்தான் என்பது முதலிரண்டடிகளின் பொருள். வில் முன்னின் - வில் கலைபற்றிக் கருதுமிடத்து, தன் முன் ஒரு வீரர் தராதலத்து மேல் இலா - தனக்கு முன்னே நிற்கக்கூடிய ஒரு வீரர் இந்தப் பூமியில் இல்லாத, விறல் வில் விசயன் - வலிய வில்லை உடைய விசயன். 'நான் முன் நான் முன்' என்று அவுணர் வந்து பொர, அவர்களை விசயன் அழித்தான், என்க.

**64. ஒருதேர் கொடுவீ ரனுடன் றவர்தம்**
**கரிதேர் பரியா ளணிகை யறமுன்**
**நிருதே சரைவென் றவனே ரெனமேல்**
**வருதே ரணிதோ றுமலைந் திடவே.**

[ஒரு தேர் கொடு வீரன், உடன்றவர்தம் கரி தேர் பரி ஆள் அணி கையற, முன் நிருத ஈசரை வென்றவன் நேர் என, மேல் வரு தேர் அணி தோறும் மலைந்திடவே.]

**விளக்கம் :-** முன் நிருதேசரை வென்றவனே நேர் என, வீரன் ஒரு தேர் கொடு, மேல் வரு அணி தேர் தோறும் உடன்றவர் தம்

கரிதேர் பரி ஆள் அணி கையற மலைந்திட, என்று அன்வயிக்க. உடன்றவர் - போர் செய்த அசுரர். கரி தேர் பரி ஆள் அணி - யானை, தேர், குதிரை, காலாள் ஆகிய நால்வகைச் சேனையின் அணிவகுப்பு. கையற - அழிய. முன் நிருதேசரை வென்றவன் - சென்ற யுகத்தில் இராவணாதி அரக்கரை வென்றவனான இராம பிரான். மேல் வரு அணி தேர் தொறும் - மேலும்மேலும் வரு கின்ற அழகிய தேர்களிலிருந்து (உடன்றவர் ஆகிய அசுரர்). ஒரு தேரை உடைய விசயன், இராமபிரானே நேர் என்று சொல்லும் படி, தேர்க் கூட்டங்களிலிருந்து போர் செய்த அவுணரது நால் வகைச் சேனைகளும் அழியும்படி மலைய,—என்பதாம். இது அடுத்த செய்யுளோடு முடியும். கொடு என்பது, கொண்டு, என்பதின் விகாரம்.

**65. வீரன் சரம்வஞ் சகர்மெய் முழுவதும்**
**கூரும் படிசென் றுகுளித் திடலால்**
**ஆரும் பொரவஞ் சினரப் பொழுதில்**
**தேருந் தினரெண் ணிறெயித் தியரே.**

[வீரன் சரம் வஞ்சகர் தம் மெய் முழுதும் கூரும்படி சென்று குளித்திடலால், ஆரும் பொர அஞ்சினர்; அ பொழுதில் தேர் உந்தினர் எண் இல் தெயித்தியர், ஏ.]

**விளக்கம் :-** கூர் - உரிச் சொல், மிகுதிப் பொருளது. விசயனது சரங்கள் அசுரர் உடலைத் தைத்துத் துளைக்கவே, (முன்னணியில் நின்ற) அசுரர்கள் எல்லோரும் போர் செய்ய அஞ்சினர்; அப்பொழுது, எண்ணிக்கையில் அடங்காத அசுரத் தலைவர்கள் தேரை (விசயனுக்கு முன்) செலுத்தினர், என்பதாம். தயித்தியர் - (தைத்தியர்) தெயித்தியர் என்று மோனை கருதித் திரிந்தது.

**66. என்னே யொருமா னுடனுக் கெவரும்**
**கொன்னே யடலாண் மைகொடுக் குமதோ**
**இன்னே யிவனா வியழித் திமையோர்**
**முன்னே வயவா கையுமுற் றுவமால்.**

[என்னே, ஒரு மானுடனுக்கு எவரும் கொன்னே அடல் ஆண்மை கொடுக்குமது ஓ! இன்னே இவன் ஆவி அழித்து இமை யோர் முன்னே வயம் வாகையும் முற்றுவம், ஆல்.]

**விளக்கம் :-** கொன்னே - வீணே. அடல் ஆண்மை கொடுக்கு மதோ - வலிய ஆண்மையை இழந்து நிற்பது தகுதியாமோ. இமை யோர் முன்னே - இவனைப் போருக்கு அனுப்பிய தேவர்களின் முன்னிலையில், வயம் வாகை முற்றுவம் - வெற்றியின் அடையாள மான வாகை மாலையைக் குறைவில்லாமல் அணிவோம், என்று கூறினர், என்று வருவித்துக்கொள்க. ஆல்: அசை. முற்றுவம் -

நீங்களும் நாங்களும் வாகை சூடுவோம்; இது பின்வாங்கிய அவுணரை உளப்படுத்திக் கூறியபடி.

67. காளப் புயலென் னநிறங் கரியார்
மீளப் படைகொண் டுவிரைந் துவெகுண்(டு)
ஆளித் திறன்மொய்ம் பனையங் கடலால்
வாளக் கிரியென் னவளைந் தெவரும்.

[காளம் புயல் என்ன நிறம் கரியார், மீள படை கொண்டு விரைந்து வெகுண்டு, ஆளி திறல் மொய்ம்பனை அங்கு அடலால் வாளம் கிரி என்ன வளைந்து எவரும்.]

**விளக்கம் :-** காளப்புயல் - காளமேகம். ஆளித்திறல் மொய்ம்பன் - அருச்சுனன், (ஆளி - சிங்கம்). அடல் - வீரம். வாளக்கிரி - சக்கரவாளகிரி : ஏழு தீவுகளையும் சூழ்ந்துள்ள ஏழு சமுத்திரங் களுக்குப் புறத்தே, பூமிக்குக் கோட்டை மதில் போல் இருப்ப தாகக் கூறும் ஒரு மலை. சக்கரவாளகிரிபோல் தயித்தியர் அனை வரும் தங்களது வீரத்தால் அருச்சுனனைச் சுற்றிக்கொண்டு, (ஆர்த்தார்,) என்க.

68. ஆர்த்தா ரகல்வா னமுமாழ் கடலும்
தூர்த்தார் சுடர்வெம் படைகொண் டெவரும்
தேர்த்தா னவர்வா னுறைதேவருமெய்
வேர்த்தா ரினிமேல் விளைவே தெனவே.

[ஆர்த்தார், அகல் வானமும் ஆழ் கடலும் தூர்த்தார், சுடர் வெம் படை கொண்டு எவரும் தேர் தானவர்; வான் உறை தேவரும் மெய் வேர்த்தார், இனிமேல் விளைவு ஏது எனவே.]

**விளக்கம் :-** தேர் தானவர் எவரும் ஆர்த்தார், சுடர் வெம் படை கொண்டு வானமும் ஏழ் கடலும் தூர்த்தார்; (அது கண்டு வான் உறை தேவரும் இனிமேல் விளைவு ஏது என மெய் வேர்த் தார்,-என்பது அன்வயம். ஆர்த்தார் - போர் முழக்கஞ் செய்தனர். படை - ஆயுதங்கள். அசுரர் செய்யும் கடும் போரைக் கண்டு தேவர்கள், இப் போரினால் ஏற்படும் அபாயம் யாவதாகுமோ என்று அஞ்சி உடல் வேர்ப்பவர் ஆயினர், — என்பதாம், உடல் வியர்த்தல், அச்சத்தின் மெய்ப்பாடு. அருச்சுனன் தோற்பானா யின், அதன் பயனாய் என்ன விளையுமோ, என்று தேவர்கள் அஞ்சினர், என்க.

69. கூற்றொப் பனபல் படைகொண் டவன்மேல்
சீற்றத் தொடெறிந் தனர்தீ யவரும்
ஆற்றற் சிலைவீ ரனுமவ் வவெலாம்
மாற்றிச் சரமா ரிவழங் கினால்.

[கூற்று ஒப்பன பல் படை கொண்டு அவன் மேல் சீற்றத்தொடு எறிந்தனர் தீயவரும், ஆற்றல் சிலை வீரனும் அவ் அவ் எலாம் மாற்றி சரமாரி வழங்கினன், ஆல்.]

**விளக்கம் :-** எமனை ஒத்த ஆயுதங்களை அசுரர் விசயன் மேல் பிரயோகிக்க, ஆற்றல் சிலை வீரனும், (விசயனும்) அந்த வந்த ஆயுதங்களைத் தனது கணைகளால் விலக்கி, (அவர்கள் மேலும்) சரமழை பொழிந்தான்,—என்பது பொருள். மிக மிக சுலபமான செய்யுள்.

**70. அவன்விட் டசரங் களறுத் தணிதேர்**
**கவனப் பரிபா குகலக் கமுறப்**
**பவனத் துடனங் கிபரந் ததுபோல்**
**துவனித் தவர்வெம் படைதூ வுதலும்.**

[அவன் விட்ட சரங்கள் அறுத்து, அணிதேர் கவனம் பரி, பாகு கலக்கம் உற, பவனத்துடன் அங்கி பரந்தது போல், துவனித்து அவர் வெம் படை தூவுதலும்.]

**விளக்கம் :-** அவன் (விசயன்) விட்ட சரங்கள் அறுத்து... அவர் துவனித்து, வெம்படை தூவுதலும், (அடுத்த செய்யுளோடு சேரும்)—என அன்வயிக்க. கவனம் பரி - விரைந்த கதியை உடைய குதிரை. பாகு - பாகன், (இவ் வடசொல் ஆகு பெயராய் தேர்த் தொழில் செய்யும் பாகனை உணர்த்திற்று.) பவனம் - காற்று. அங்கி - அக்கினி. துவனித்து - ஆரவாரித்து. அருச்சுனனது தேர்க் குதிரையும் பாகனும் கலங்கும்படி அவுணர்கள் படைகளைச் சொரிந்தனர்,—என்பதாம்.

**71. கட்டார் முதுகார் முகவீ ரனுமுன்**
**கிட்டா வுலகோர் புகழ்கேழ் கிளர்சீர்**
**முட்டா மரைமேன் முனிவன் படையைத்**
**தொட்டா னசுரே சர்தொலைந் துகவே.**

[கட்டு ஆர் முது கார் முகம் வீரனும் முன் கிட்டா, உலகோர் புகழ் கேழ் கிளர் சீர் முள் தாமரை மேல் முனிவன் படையை தொட்டான், அசுர ஈசர் தொலைந்து உகவே.]

**விளக்கம் :-** கட்டு ஆர் முது கார்முக வீரன் - கட்டமைந்த பழமையான காண்டீவம் என்ற வில்லையுடைய விசயன். முன் கிட்டா - (அசுரர்) முன்னே நெருங்கி. உலகோர் புகழ் கேழ்கிளர் சீர் முள் தாமரைமுனிவன் - நான்முகன், (கேழ்கிளர் - ஒளி விசேஷித்து விளங்குகின்ற) அசுரர் தொலைந்து விழும்படி பிரும் மாத்திரத்தை விட்டான், என்க.

**72. காற்றாய் மிகமண் டுகடுங் கனலாய்க்**
**கூற்றா யவரா விகுடித் துகுசெஞ்**
**சேற்றா லொருபா திசிவந் ததுபார்**
**ஏற்றா னொருபங் கெனவெங் கணுமே.**

[காற்றாய், மிக மண்டு கடி கனலாய், கூற்றாய், அவர் ஆவி குடித்து, உகு செம் சேற்றால் ஒரு பாதி சிவந்தது பார், ஏற்றான் ஒரு பங்கு என எங்கணும், ஏ.]

**விளக்கம் :-** (விசயன் போக்கிய பிரும்மாத்திரம்) மிகுதியாக ஜுவாலை விட்டு எரியும் கனலாய், எமனாய், அவ்வசுரர் உயிரைக் குடிக்க, அதனால் பெருகிய சிவந்த இரத்தங் கலந்த சேற்றால் உமையைத் தன்னொரு பாகத்திலே ஏற்றவனான சிவபெருமானது வலப் பாகம்போல் யுத்த களமானது ஒரு பாதி முழுதும் சிவந்தது,—என்பது பொருள். எங்கணும் - முழுதும், எல்லாவிடமும். குடிக்க, என்ற எச்சவினை, **குடித்து** என்று திரிந்தது. ஒரு பாதி - யுத்தகளத்தில் அசுரர் இருந்த பகுதி.

ஏற்றான், என்பதை இரஷபம் என்று பொருள் கொண்டால், இரஷபவாகனனான சிவபெருமான் என்று பொருள்படும். அல்லது, மாவலியிடம் மண்ணை இரந்து ஏற்றவனான திருமால் என்றும் பொருள் கொள்ளலாம். ''பிறை தங்கு சடையானை வலத்தே வைத்தான்,'' என்பது ஆழ்வார் வாக்கு. எனவே, திருமாலினது வலப்பாகம் போல் சிவந்தது, என்றும் கூறலாம். சிவபெருமான் நெருப்பைப்போல் சிவந்த திருமேனியன், என்பர். ஏற்றான், என்பதற்கு, தாருகவன முனி பத்னிகளிடம் பிக்ஷாண்டியாக வேடங் கொண்டு பிச்சை ஏற்ற சிவபெருமான் என்றும் பொருள் கொள்ளலாம்.

**73. நூறா யிரதே ரணிநூ றியுமேல்**
**ஆறா தசினத் துடனக் கணைபோய்**
**மாறா யவர்மார் பமும்வான் முகமும்**
**சீறா வெதிர்சென் றுசெறிந் ததுவே.**

[நூறு ஆயிரம் தேர் அணி நூறியும், மேல் ஆறாத சினத்துடன் அ கணை போய் மாறு ஆயவர் மார்பமும், வான் முகமும் சீறா எதிர் சென்று செறிந்தது, ஏ.]

**விளக்கம் :-** நூறாயிரம் தேர் அணி - ஒரு லட்சம் தேரின் வரிசை. நூறி - பொடி செய்து. மாறு ஆயவர் - பகைவர். சீறா - சீறி. செறிந்தது - பதிந்தது. விசயன் விடுத்த அத்திரம் அசுரரின் மார்பிலும் முகத்திலும் அழுந்தின, என்பதாம். ஆயிரம் தேர் - (ஆயிரந் தேர்) ஆயிரதேர் என்று விகாரப்பட்டது.

**74. குருகோ டியையுங் குருதிக் கடல்வாய்**
**ஒருகோ டிதயித் தியரா ருயிருண்(டு)**
**அருகோ டியவா ளியடர்ப் பதுகண்(டு)**
**இருகோ டியுமுற் றனமற் றிவன்மேல்.**

[குருகோடு இயையும் குருதி கடல்வாய் ஒரு கோடி தயித்தியர் ஆர் உயிர் உண்டு அருகு ஓடிய வாளி அடர்ப்பது கண்டு, இரு கோடியும் உற்றன இவன் மேல்.]

**விளக்கம் :-** (அசுரர்களின்) அருகு ஓடிய வாளி குருகோடு இயையும் குருதி கடல்வாய் ஒரு கோடி தயித்தியர் ஆர்உயிர் உண்டு அடர்ப்பது கண்டு, இவன் மேல் இரு கோடியும் உற்றன, என்று அன்வயிக்க. அசுரர்களின் அருகே சென்ற அத்திரம், குருகு முதலிய புலால் உண்ணும் பறவைகளோடு சம்பந்தங் கொண்ட குருதிக் கடலில், ஒருகோடி அசுரர்களின் அருமையான உயிரைக் குடித்து அழித்தலைக் கண்டு, எஞ்சியிருந்த இருகோடி அசுரர்களும் விசயன் மேல் எதிர்த்து நெருங்கினர், என்பது பொருள்.

குருதிக் கடல் - களத்தில் உண்டான இரத்தப் பெருக்கு. மற்று: அசை, அல்லது வேறான இருகோடி.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**75. இருண்டது மண்ணும் விண்ணு மெல்லையெண் டிசையு மெங்கும்**
**புரண்டது குருதி வெள்ள மூழிவெங் கடலிற் பொங்கி**
**முரண்டகு தேரோன் றன்னை மொய்த்தவெம் பனிபோன் மூடித்**
**திரண்டது திருகி மீண்டுந் திறலுடைத் தகுவர் சேனை.**

[இருண்டது மண்ணும் விண்ணும் எல்லை எண் திசையும், எங்கும் புரண்டது குருதி வெள்ளம் ஊழி வெம் கடலின் பொங்கி, முரண் தகு தேரோன் தன்னை மொய்த்த வெம் பனி போல் மூடி திரண்டது திருகி மீண்டும் திறல் உடை தகுவர் சேனை.]

**விளக்கம் :-** மண்ணும் விண்ணும் எல்லை எண் திசையும் இருண்டது, ஊழி வெம் கடலின் பொங்கி குருதி வெள்ளம் எங்கும் புரண்டது; திறல் உடை தகுவர்சேனை, முரண் தகு தேரோன் தன்னை வெம்பனி போல் மூடி, திருகி திரண்டது,—என்பது அன்வயம். எல்லை எண்திசை - எல்லையுடைய எட்டுத் திசை, அல்லது எட்டுத் திக்கின் எல்லை. ஊழி வெம் கடலின் - ஊழிக் காலத்துக் கொடிய கடல் போல். முரண் தகு தேரோன் - வலிமையின் தகுதி பொருந்திய தேரை உடையவனான சூரியன். திறல் உடை தகுவர் சேனை திருகி திரண்டது - (இரு கோடித் தொகை உடைய) அசுரர்களுடைய சேனை, அருச்சுனனைச் சுற்றித் திரண்டது, (தகுவர் - அசுரர்) சூரியனை மொய்த்த பனி என்றது,

பனி விரைவில் அழிவதுபோல் அசுரர் படையும் அழியும், என்ற குறிப்பினது.

**76. எங்கெங்கே யெங்கே வல்வின் மனிதனென் றெதிர்ந்தோர் யார்க்கும்**
**அங்கங்கே யங்கே யாகி யவரொடு மடுபோர் செய்தான்**
**சங்கங்கேய் செங்கை நல்லார் விடுத்தன சுரும்பின் சாலம்**
**கொங்கெங்கே யெங்கே யென்று தனித்தனி குடையுந் தாரான்.**

[எங்கு எங்கே எங்கே வல்வில் மனிதன் என்று எதிர்ந்தோர் யார்க்கும், அங்கு அங்கே அங்கே ஆகி அவரோடு அடுபோர் செய்தான்; சங்கு அங்கு ஏய் செங்கை நல்லார் விடுத்தன சுரும்பின் சாலம் கொங்கு (தேன்) எங்கே எங்கே என்று தனி தனி குடையும் தாரான்.]

**விளக்கம் :-** சங்கு அங்கு ஏய்....தாரான், எங்கு எங்கே எங்கே வல்வில் மனிதன் ......அடுபோர் செய்தான்,—என்பது அன்வயம். சங்கு வளையல் முன்னிடத்திலே பொருந்தப்பெற்ற நல்லியல் நங்கையர் தூது போக்கிய வண்டுகளின் கூட்டம், தேன் எங்கே எங்கே என்று தனித்தனி மலர்களைக் குடைந்து (தேன்) பருகும் மாலையை அணிந்த அருச்சுனன், எங்குளான், எங்கே எங்கே வலிய வில்லையுடைய மனிதன் என்று சொல்லிக்கொண்டு எதிர்த்து வந்த தானவர் அனைவருக்கும், அவர் வந்த அந்த அந்த இடத்திலே தோன்றுபவனாகி அவருடனே அடு போர் செய்தான்,- என்பது பொருள்.

நல்லார் விடுத்த சுரும்பு - அருச்சுனன் அழகில் ஈடுபட்டு மயங்கிய நங்கையர் தங்கள் சார்பில் தூது அனுப்பிய வண்டுகள், அவ் வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கும் தாரான், என்றது, அவனது அழகைப் பாராட்டுங் கருத்ததாகும்.

**77. கார்முகக் கொண்ட லன்னான் மிசைக்கடுங் கணைக ளேவித்**
**தேர்முகத் தியக்க மாற்றித் திதிமைந்தர் வெம்போர் செய்யப்**
**போர்முகத் தொருவ ரொவ்வாப் புரிசிலை வீரன் றானும்**
**கூர்முகப் பகுவாய் மாயோன் கொடுங்கடும் பகழி கோத்தான்.**

[கார்முகம் கொண்டல் அன்னான்மிசை கணைகள் ஏவி, தேர் முகத்து இயக்கம் மாற்றி திதி மைந்தர் வெம் போர் செய்ய, போர் முகத்து ஒருவர் ஒவ்வா புரிசிலை வீரன் தானும் கூர் முகம் பகுவாய் மாயோன் கொடு கடும் பகழி கோத்தான்.]

**விளக்கம் :-** கார்முகம் கொண்டல் அன்னான் - வில்லை யுடைய மேகம் போன்ற நிறத்தினனான அருச்சுனன். திதி மைந்தர் - அசுரர். திதி மைந்தர்கள் அருச்சுனன்மீது கணைகளை ஏவி, அவனது தேரின் முன்னேறும் இயக்கத்தைத் தடுத்துக்

கொடிய போரைச் செய்ய, யுத்த பூமியிலே தனக்கு ஒருவர் நேரில்லாத புரி சிலை வீரனாகிய அருச்சுனனும், கூரிய நுனியை யும், பிளந்த வாயையும் உடைய வைணவாத்திரத்தை ஏவினான், —என்பதாம். கொடுங்கடும், என்பதிலுள்ள கடும் என்பது **கடி** என்ற உரிச்சொல்லின் திரிபு. புரிசிலை-கட்டமைந்த வில்.

**78. விண்ணிடத் தசனி நாகர் மேல்வெகுண் டிடுவ தென்ன**
**எண்ணுடைச் சேனை வெள்ள மெங்கணுந் தானே யாகி**
**வண்ணவிற் படையி ராமன் வாரிதி வெள்ளம் வீத்த**
**பண்ணெனப் படுத்த தந்தப் பைந்துழாய்ப் பரமன் வாளி.**

*[விண் இடத்து அசனி நாகர் மேல் வெகுண்டு இடுவது என்ன, எண் உடை சேனை வெள்ளம் எங்கணும் தானே ஆகி, வண்ணம் வில் படை வாரிதி வெள்ளம் வீத்த பண் எனபடுத்தது, அ பைந் துழாய் பரமன் வாளி.]*

**விளக்கம் :-** விண்ணிடத்து அசனி-மேகத்தினிடத்தே தோன் றும் இடி (விண் - மேகம்). நாகர் - பாதாளத்தில் வாழும் சர்ப்ப சாதியார். எண் உடை சேனை வெள்ளம் - இரண்டு கோடி என்ற எண்ணிக்கையுடைய சேனை வெள்ளம். வாரிதி - கடல். வீத்த பண் என - (அக்கினிக் கணையால்) ஒழியச் செய்த விதம் போல. பைந்துழாய் பரமன் வாளி - வைணவாத்திரம். படுத்தது - அழித்தது. இடியானது நாகர்மேல் வெகுண்டு அழிப்பதுபோல், அருச்சுனன் விடுத்த திருமால் அத்திரம், அசுரர்கள் இருக்குமிடம் எங்கும் தானேயாகி நின்று, தசரத ராமன் சமுத்திரராஜன்மேல் கோபங்கொண்டு கடல் நீரை வற்றச் செய்த விதம்போல், அசுரச் சேனை வெள்ளத்தை அழித்தது,—என்க. வண்ணம் வில்-அழகிய வில், கோதண்டம். நாகர், இடிக்கு அஞ்சி மடிவர், என்பது நூற் கொள்கை. பண் - விதம்.

**79. தசையும்வெம் பிணமுந் துன்ற தனிதனிப் பெருகி யெல்லாத்**
**திசைதொறுங் குருதி நீத்தந் திரைக்கடற் சென்று மண்ட**
**அசைவிலா வவுணர் மீண்டு மந்தரத் தொளித்து நின்று**
**விசையவில் விசயன் றன்மேல் வெகுண்டுவெம் படைகள்**
**விட்டார்.**

*[தசையும் வெம் பிணமும் துன்ற தனி தனி பெருகி எல்லாத் திசை தொறும் குருதி நீத்தம் திரை கடல் சென்று மண்ட, அசைவு இலா அவுணர் மீண்டும் அந்தரத்து ஒளித்து நின்று, விசயம் வில் விசயன் தன்மேல் வெகுண்டு வெம்படைகள் விட்டார்.]*

**விளக்கம் :-** தசை - சதை. வெம் பிணம் - அச்சந்தரும் பிணங்கள். எல்லாத் திசை தொறும் - திசைகள் எங்கும். குருதி

நீத்தம் - இரத்த வெள்ளம். அசைவு இலா அவுணர் - அழிந்தவர் போக அழியாமல் எஞ்சியிருந்த அசுரர். சதைகளும் பிணங்களும் நிறைந்து கிடக்க, அவற்றிலிருந்து குருதி வெள்ளம் தனித்தனி வழிந்து பெருகிக் கடலில் சேர, அழியாதிருந்த அசுரர் வானில் மறைந்து நின்று விசயன் மேல் கொடிய கணைகளைச் செலுத் தினர்,—என்க.

**80. விட்டவெம் படைக ளெல்லாம் விண்ணிடைச் சுண்ண மாகக்**
**கட்டழ குடைய வீரன் மகேந்திரக் கணையால் வீக்க**
**எட்டுணைப் பொழுதில் வஞ்ச ரெழிலியின் படைமேல் வீச**
**வட்டவார் சிலையி னானு மண்டழற் படையான் மாற்ற.**

[விட்ட வெம்படைகள் எல்லாம் விண் இடை சுண்ணம் ஆக, கட்டு அழகு உடைய வீரன் மகேந்திரன் கணையால் வீக்க, எள் துணை பொழுதில் வஞ்சர் எழிலியின் படை மேல் வீச, வட்டம் வார் சிலையினானும் மண்டு அழல் படையால் மாற்ற,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** மகேந்திரக் கணை - இந்திரனைத் தெய்வ மாக உடைய மகேந்தி ராத்திரம். எழிலியின் கணை-வருணனைத் தெய்வமாக உடைய மேகாத்திரம். அழல் படை - ஆக்நேயாத் திரம், அக்கினிக்கணை. மண்டு அழல் - எரிகின்ற தீ. வானில் மறைந்து நின்று அவுணர் விட்ட ஆயுதங்கள் எல்லாவற்றையும் பொடியாகும்படி மகேந்திரக் கணையால் அருச்சுனன் வீக்க (அழிக்க), அவர்கள் கணப்பொழுதில் மேகாத்திரத்தைப் பிரயோகித்தார்கள்; அதை விசயன் அக்கினிக் கணையால் மாற்றி னான்,—என்க. எள்துணைப் பொழுது - எள்ளளவு காலத்தில், அதாவது கணப்பொழுதில்.

**81. மண்டிமே லெழுந்திங் கெல்லா வுலகையு மடிக்கு மாயச்**
**சண்டவா யுவின்பேர் வாளி தானவ ரவன்மேலவ**
**அண்டமுந் துளங்க வோங்கு மருவரைப் பகழி விட்டான்**
**எண்டிசை முழுதுந் தன்பே ரெழுதுபோர் விசய னென்பான்.**

[மண்டிமேல் எழுந்து இங்கு எல்லா உலகையும் மடிக்கும் மாயம் சண்டம் வாயுவின் பேர் வாளி தானவர் அவன் மேல் ஏவ, அண்டமும் துளங்க ஓங்கும் அரு வரை பகழி விட்டான், எண் திசை முழுதும் தன் பேர் எழுது போர் விசயன் என்பான்.]

**விளக்கம் :-** மண்டி - நெருங்கி. மாயம் சண்டம் வாயு -மாய முடையதும் உக்கிரமானதும் ஆன வாயுவாத்திரம். அண்டமும் துளங்க - அண்டகோளத்தில் உள்ளவர் யாவரும் நடுங்க. அருவரை பகழி - சைலாத்திரம் (சைலம் - மலை). திசைகள் எட்டிலும் உள் ளார் தன் பேரைக் கொண்டாடும் கீர்த்தியுடைய போரில் வல்ல

விசயன் என்று அழைக்கப்படுவன், என்பது ஈற்றடியின் பொருள். அசுரர் வாயுவாஸ்திரத்தைப் பிரயோகிக்க, அருச்சுனன், அதை சைலாஸ்திரத்தால், மாற்றினான், என்பதாம். காற்றைத் தடுக்கும் வல்லமை மலைக்கு இருத்தலின், வாயுவின் கணைக்கு சைலக் கணை மாறாகின்றது.

**82. காற்றும்வெங் கனலுங் காரு மிடியுங்கன் மழையு மெங்கும்**
**தோற்றிய விருளு மின்னுந் திசைதொறுஞ் சூழ்ந்து பொங்கக்**
**கூற்றும்வாய் குழறி யஞ்சக் கொடியமா மாய வாளி**
**ஆற்றல்சா லரியன் னான்மே லெறிந்தட லவுண ரார்த்தார்.**

[காற்றும் வெம் கனலும் காரும் இடியும் கல் மழையும் எங்கும் தோற்றிய இருளும் மின்னும் திசைதொறும் சூழ்ந்து பொங்க, கூற்றும் வாய் குழறி அஞ்ச கொடிய மா மாயம் வாளி, ஆற்றல் சால் அரி அன்னான் மேல் எறிந்து அடல் அவுணர் ஆர்த்தார்.]

**விளக்கம் :-** காற்றும், கனலும், மேகமும், இடியும், கல்மழையும், எங்கும் தோன்றிப் பரவிய இருளும், எல்லாத் திக்குகளிலும் சூழ்ந்து நிறையவும், யமனும் பயந்து வாய் குழறவும், (மாயம் வல்ல) வலிய அசுரர், மோகாஸ்திரத்தை விண்ணில் இருந்து கொண்டு, ஆற்றல் மிகுந்த சிங்கத்தை ஒத்த விசயன் மேல் செலுத்தி, ஆரவாரம் செய்தார்கள் என்பது பொருள். மாய வாளி-மோகக்கணை. வாய் குழறி அஞ்ச, என்பதை அஞ்சி வாய் குழற, என்று கூட்டுக.

**83. கன்மழை சொரிந்து வேகக் கனன்மழை வீசி யெங்கும்**
**மின்மழை சிந்தி மிக்க வசனியின் மழைகள் வீழ்த்திச்**
**சென்மழை சிதறி யெல்லாத் திசைதொறும் பரந்து கொற்ற**
**வின்மழை பொழிவான் றன்னை வளைந்தது வெய்ய மாயை.**

[கல் மழை சொரிந்து, வேகம் கனல் மழை வீசி, எங்கும் மின் மழை சிந்தி, மிக்க அசனியின் மழைகள் வீழ்த்தி, செல் மழை சிதறி எல்லாத் திசை தொறும் பரந்து, கொற்றம் வில் மழை பொழிவான் தன்னை வளைந்தது வெய்ய மாயை.]

**விளக்கம் :-** வேகக் கனல் மழை - உக்கிரமான நெருப்பு மழை. மின் மழை - மின்னல் மழை. அசனியின் மழைகள் - இடிகளின் மழை. செல் மழை - (செல் - மேகம்) நீர் மழை. கொற்ற வில் மழை பொழிவான் - வெற்றி வில்லினின்றும் சரமழை பொழியும் விசயன், அவுணர் விடுத்த கொடிய மோகனக்கணை, கல் நெருப்பு இடி மின்னல் முதலியவற்றை எங்கும் சொரிந்துகொண்டு விசயனைச் சூழ்ந்துகொண்டது, என்பதாம்.

**84. கோதிலா விரதம் பூண்ட குரகதக் குழாமு முட்கிச்**
**சூதனுந் தடந்தே ரூருந் தொழின்மறந் துயங்கி வீழத்**
**தாதவி ழலங்க லானு மற்றவன் றன்னைத் தேற்றித்**
**தீதிலா யோக பாணஞ் சிந்தையாற் றொழுது விட்டான்.**

[கோது இலா இரதம் பூண்ட குரகதம் குழாமும் உட்கி, சூதனும் தடந்தேர் ஊரும் தொழில் மறந்து உயங்கி வீழ, தாது அவிழ் அலங்கலானும் (மற்று) அவன் தன்னை தேற்றி, தீது இலா யோகபாணம் சிந்தையால் (அதற்குரிய தேவதையை) தொழுது விட்டான்.]

**விளக்கம் :-** கோது இலா இரதம் - குற்றமில்லாத இந்திரத் தேர். குரகதம் - குதிரை. உட்கி - பயந்து. சூதன் - தேர்ப் பாகன் (மாதலி). தாது அவிழ் அலங்கலான் - விசயன் (மற்று - அசை) தீது இலா யோக பாணம் - குற்றம் இல்லாத யோக பாணம். அதாவது மோகனாத்திரத்தை மாற்றவல்ல யோகாஸ் திரம். சிந்தையால் தொழுது - (அக் கணைக் குரிய கடவுளை) மனத்தினால் தியானித்து. மோகக்கணைக்கு எதிராக விசயன் யோகக் கணையை ஏவினான், என்க. பல குதிரைகள் பூட்டப் பெற்ற தேராதலின், **குரகதக்குழாம்** எனப்பட்டது. குரகதக் குலாம், என்றும் பாடமுளது. அப்பொழுது, **குலாம்** என்பது குலம் என்பதின் விகாரமாகும். யோக பாணம், என்பதற்குப் பதிலாக **அமோக பாணம்** என்றும் பாடமுளது. மோகத்திற்கு எதிரானது அமோகம்.

**85. மாயவல் லிருளை யெல்லாம் வான்கதிர்ச் செல்வ னென்னச்**
**சேயவப் பகுவாய் வாளி திசைதொறுங் கடிந்த வெல்லை**
**ஆயவம் முறைமை தப்பா வறம்பொரு ளின்ப முற்றும்**
**தூயவ ரிதய மென்னத் தொலைந்தது சூழ்ந்த மாயை.**

[மாயம் வல் இருளை எல்லாம் வான் கதிர் செல்வன் என்ன, சேய அ பகுவாய் வாளி திசை தொறும் கடிந்த எல்லை, ஆய அ முறைமை தப்பா, அறம் பொருள் இன்பம் முற்றும் தூயவர் இதயம் என்ன தொலைந்தது சூழ்ந்த மாயை.]

**விளக்கம் :-** சேய அ பகுவாய் வாளி, வான் கதிர் செல்வன் என்ன, மாயவல் இருளை எல்லாம் திசைதொறும் கடிந்த எல்லை, ...தூயவர் இதயம் என்ன சூழ்ந்த மாயை தொலைந்தது, என்பது அன்வயம். மாய வல் இருள் - மோகாத்திரத்தின் மாயையால் எழுந்த அழித்தற்கரிய இருள். வான்கதிர்ச் செல்வன் - சூரியன், சேய அப் பகுவாய் வாளி - சிவந்த பிளந்த வாயை உடைய அந்த யோகாத்திரம். கடிந்த எல்லை - மாற்றிய அளவில். நூல்களில் கூறப்பட்டதாகிய அந்த முறை தவறாமல், அறம் பொருள் இன்பம் என்ற புருஷார்த்தங்கள் கைவரந்னி வாழ்ந்து மோட்சத்தின் பொருட்டு அம் மூன்றையும் விட்டுத் துறவில் முதிர்ந்த தூயவர் களின் உள்ளத்தில் மாயை (விபரீத ஞானம்) ஒழிதல் போல, விசயனைச் சூழ்ந்த மாயை மறைந்தகன்றது,—என்பது ஈற்றடி

களின் பொருள். சூரியன் இருளைத் தன் வரவினால் அகற்றல் போல் யோகக் கணை மோகக் கணையின் மாயத்தை எளிதே அகற்றியது, என்பதாம்.

**86. வஞ்சவா ளவுணர் வெம்போர் மறந்து மெய்ம் மயங்கி மீண்டும்**
**நெஞ்சினி லறிவு தூண்ட நிரைநிரை தடந்தேர் தூண்டிச்**
**செஞ்சரஞ் சூலம் விட்டே றெழுமழுத் திகிரி வாளம்**
**அஞ்சனக் குன்றன் னான்மே லெறிந்துட னார்த்த காலை**

[வஞ்சம் வாள் அவுணர் வெம் போர் மறந்து மெய் மயங்கி, மீண்டும் நெஞ்சினில் அறிவு தூண்ட நிரை நிரை தட தேர் தூண்டி, செம் சரம், சூலம், விட்டேறு, எழு, மழு, திகிரி, வாளம் (ஆகியவற்றை) அஞ்சனம் குன்று அன்னான் மேல் எறிந்து, உடன் ஆர்த்த காலை, - அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** வஞ்சம் வாள் அவுணர் - வஞ்சனையையும் வாள் போன்ற கொடிய தன்மையையும் உடைய அசுரர். மெய் மயங்கி - விசயன் கணையால் மாற்றப்பட்ட மோகாத்திரம் தாக்கியதினால் மெய் மயங்கி, (போரையும் மறந்து), மீண்டும் நெஞ்சினில் அறிவு தூண்ட - மறுபடியும் மனத்தில் எழுந்த அறிவு போர்மேல் உந்த. நிரை நிரை - வரிசை வரிசையா, அதாவது இடையறாத வரிசையில். தேர் தூண்டி - தேர்களைச் செலுத்தி. அம்பு, சூலம் முதலிய ஆயுதங்களை விசயன் மேல் செலுத்தி ஆரவாரம் செய்தபொழுது, - அடுத்த செய்யுளில் முடியும். விட்டேறு - ஈட்டி, வாளம் - வாள். அஞ்சனம் - பெண்கள் கண்ணுக்கு இடும் மை.

**87. கடுஞ்சிலை விரைவு சூரன் கைத்தொழில் விரைவு மேன்மேல்**
**விடுங்கணை விரைவு மெண்ணில் விபுதர்க்குங் காணொ ணாதால்**
**கொடுந்தொழி லசுரர் மெய்யிற் குளித்தசெஞ் சரமு மன்னோர்**
**படும்படுந் துயரு மெங்குங் காணலாம் பாரு ளோர்க்கும்**

[கடு சிலை விரைவும் வீரன் கை தொழில் விரைவும், மேல் மேல் விடும் கணை விரைவும், எண்ணில் விபுதர்க்கும் காண ஒணாது. ஆல், கொடு தொழில் அசுரர் மெய்யில் குளித்த செம் சரமும், அன்னோர் படும் படும் துயரும் எங்கும் காணலாம், பார் உளோர்க்கும் ]

**விளக்கம் :-** கடுஞ்சிலை விரைவு - கொடிய வில்லினின்று விடப்படும் அம்புகளின் வேகம்: கை தொழில் விரைவு - அம்பை எடுத்தல் தொடுத்தலாகிய தொழிலின் வேகம். விடுங்கணை விரைவு - விடப்படும் கணைகள் செல்லும் வேகம். எண்ணில் - எண்ணுங்கால். விபுதர் - விசேஷமான அறிவை உடைய தேவர்.

படும் படும் துயர் - மிகுதியாக அனுபவிக்கும் துன்பம், (அடுக்கு மிகுதி பற்றியது). பார் உளோர் - மனிதர். விசயனது வில் தொழி லின் வேகம் தேவர்களாலும் காண முடியாததாயிற்று. மற்று, அவுணர்கள் படுகின்ற துன்பமோ, மனிதர்களாலும் காணக் கூடியதாயிற்று என்றபடி.

**88. ஆய்ந்தநூ லறிஞர்க் கீந்த வரும்பொரு ளென்ன மேன்மேல்**
**வேந்தர்கோன் பகழி யொன்று கோடியாய் விளைந்த தெங்கும்**
**மாந்தர்கைக் கொடாத புல்லர் வனப்பிலாச் செல்வம் போலத்**
**தேய்ந்தது வஞ்ச நெஞ்சத் திறலுடைத் தனுசர் சேனை.**

[ஆய்ந்த நூல் அறிஞர்க்கு ஈந்த அரு பொருள் என்ன மேல் மேல் வேந்தர் கோன் பகழி ஒன்று கோடி ஆய் விளைந்தது எங்கும், மாந்தர் கை கொடாத புல்லர் வனப்பு இலா செல்வம் போல, தேய்ந்தது வஞ்சம் நெஞ்சம் திறல் உடை தனுசர் சேனை.]

**விளக்கம் :-** அறிஞர்க்கு ஈந்த பொருள்போல், அருச்சுனன் செலுத்திய ஒரு கணை கோடியாய் (மிகப் பலவாய்) யுத்த பூமி முழு வதும் பெருகிப் பரவிற்று, என்பது முதலிரண்டடிகளின் பொருள். 'மாந்தர்',-பன்மையில் வழங்கும் ஒரு சொல். இல்லாதாரான எந்த மனிதர் கையிலும் ஈயாத கீழ் மக்களின் நலம் இழந்த செல்வம் தேய்வது போல், வஞ்சகமுடைய நெஞ்சையும், உடல் வலியையும் உடைய தனுசர் (அசுரர்) சேனை தேய்ந்து குறைந்தது, என்பது ஈற்றடிகளின் பொருள். உயர்ந்தோர்க்கு ஈந்த பொருள் பயனாற் பெருகும் என்பர் பெரியோர், "ஞான முன்னிய நான்மறையாளர் கைத்தான மென்னத் தழைத்தது நீத்தமே", என்றார் கம்பரும்.

**89. படாதொழி யவுணர் மீண்டும் பரிபவப் படுத்தா யெம்மை**
**அடாயினி யுன்னை யின்னே யாருயிர் குடித்து மென்னாக்**
**கடாமலை வயவன் மீது கடும்படை பலவும் விட்டார்**
**தொடாநெடும் பகழி தன்னாற் சூரனுந் துணித்து வீழ்த்தி.**

[படாது ஒழி அவுணர் மீண்டும் பரிபவப்படுத்தாய் எம்மை, அடா இனி உன்னை இன்னே ஆர் உயிர் குடித்தும் என்னா, கடாம் மலை வயவன் மீது கடுபடை பலவும் விட்டார்; தொடா நெடு பகழி தன்னால் சூரனும் துணித்து வீழ்த்தி,—அடுத்த கவி யோடு முடியும்.]

**விளக்கம் :-** படாது ஒழி அவுணர் - சாகாது தப்பிய அசுரர். பரிபவப் படுத்தாய் - அவமானப்படுத்தினாய், அடா,—முன்னிலை இடைச்சொல், இகழும் கருத்தினது. கடாம் மலை வயவன் - மத யானை போன்ற வலிமையுடைய விசயன் (மலை - யானை) தொடா நெடும் பகழி தன்னால் - இதுவரையில் பிரயோகிக்காத

நெடிய சரத்தினால். சூரன் - விசயன். துணித்து வீழ்த்தி - அசுரர் ஏவிய படைகளை துண்டுபடச் செய்து தள்ளி. அசுரர் ஏவிய ஆயுதங்களைச் சூரனும், இதுவரையில் எடுக்காத நெடிய கணை களால் துண்டுபடச் செய்தான், என்க. வயம் - வெற்றி, வயவன்- வெற்றியை உடையவன். தொடா - தொடாத, ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரச்சம். மீண்டும், என்பதை விட்டார் என்ப தோடும், இயைக்கலாம்.

**90.** **உரங்களுத் தோளுங் கண்ணு முதரமு மதரத் தோடு**
**சிரங்களுத் தாளு நாளுஞ் செய்தவ முயன்று பெற்ற**
**வரங்களு மறையு மேன்மேல் வான்படைக் கலங்கள் வீசும்**
**கரங்களுஞ் சரங்கள் கொண்டு கணத்திடைக் கண்டங்**
**கண்டான்.**

[உரங்களும், தோளும், கண்ணும், உதரமும், அதரத்தோடு சிரங்களும், தாளும், நாளும் செய்தவம் முயன்று பெற்ற வரங் களும், மறையும், மேல் மேல் வான் படைக்கலங்கள் வீசும் கரங் களும், சரங்கள் கொண்டு கணத்திடை கண்டம் கண்டான்.]

**விளக்கம் :-** உரம் - மார்பு. உதரம் - வயிறு. நாள் - ஆயுள் நாள். மறை - மாயம் செய்வதற்குரிய மந்திரங்கள், அல்லது அத்திரங்களுக்குரிய மந்திரங்கள். வான் படை - சிறந்த ஆயுதங் கள். அசுரரது கண், தலை, அவர் பெற்ற வரம் முதலியவற்றை (விசயன்) கணப் பொழுதில் துண்டுபடச் செய்தான், அதாவது, பயன் அற அழித்தான், என்றபடி.

**91.** **அற்றன குறைக ளெல்லா மவயவம் பொருந்தி மீண்டும்**
**உற்றன மூன்று கோடி சேனையு முருத்தெ ழுந்த**
**வெற்றிவேற் குமர னன்ன விசயனுங் கைசலித்து**
**மற்றிதற் கென்செய் வேனென் றினைவுடன் மதிக்கு மேல்வை.**

[அற்றன குறைகள் எல்லாம் அவயவம் பொருந்தி மீண்டும் உற்றன மூன்று கோடி சேனையும் உருத்து எழுந்த; வெற்றி வேல் குமரன் அன்ன விசயனும் கை சலித்து மற்று இதற்கு என் செய் வேன், என்று இனைவுடன் மதிக்கும் ஏல்வை,—அடுத்த செய்யு ளோடு முடியும்.]

**விளக்கம் :-** அற்றன குறைகள் - அவயவங்கள் அற்றன வாகிய குறை உடல்கள். அறுபட்ட அவ்வவயவங்கள் மீண்டும் உடல்களோடு உற்றனவாய் (பொருந்தினவாய்) மூன்று கோடி அசுரச்சேனையும் கோபித்துப் போர் செய்ய எழுந்தன; அந்நிலை யில், வெற்றிவேல் குமரனை ஒத்த விசயனும் கை ஓய்ந்துபோய், "இனி, இதற்கு என் செய்வேன்?" என்று இனைவுடன் (மனத் தளர்ச்சியுடன்) யோசிக்கும் காலை,—என்பது பொருள். மற்று - இனிமேல்.

**92. வென்றிகொள் வீர வாகை வீரவில் விசய கேளாய்
தென்றிசை மறலி பாலித் தீயவஞ் சகர்முன் பெற்ற
வன்றிறற் படையு மிக்க வரமுமெய் வலியு முண்டால்
என்றச ரீரி பின்னு மின்னவை யுரைத்த தம்மா.**

[வென்றி கொள் வீரம் வாகை வீரம் வில் விசய, கேளாய்,— தென் திசை மறலி பால் இ தீய வஞ்சகர் முன் பெற்ற வன் திறல் படையும், மிக்க வரமும், மெய் வலியும், உண்டு, (ஆல்), என்று அசரீரி பின்னும் இன்னவை உரைத்தது, அம்மா.]

**விளக்கம் :-** வெற்றி கொள்வதற்கு ஆதாரமான வீரத்தின் அடையாளமான வாகை மாலையையும், வலிய வில்லையும் உடைய விசயனே! கேள், என்று அசரீரி விசயனை நோக்கிக் கூறியதைக் கூறும் செய்யுள். தென் திசை மறலி - யமன். அவனிடம் பெற்ற படைகளும், வர பலமும், உடல் வலியும் உடையவர்கள் என்று அசரீரி கூறி, மேலும் அவர்களை வதைப் பதற்குரிய உபாயத்தையும் கூறுவதாயிற்று,—என்பதாம். அசரீரி- சரீரம் இல்லாதது, ஆகாசவாணி. ஆல், தேற்றப் பொருளது. அம்மா, வியப்பிடைச் சொல்.

**93. வெய்யவெம் படைகட் கெல்லாம் விளிகிலர் மெய்ந்நூ றாகக்
கொய்யினு முருவ மீண்டுங் கூடுவர் குறிப்பி னின்று
கையினா வுடன்வாய் சென்று கலந்திடுங் கணத்தி னம்பால்
எய்திடு கென்று வீரற் குறுதியு மிசைத்த தன்றே.**

[வெய்ய வெம் படைகட்கு எல்லாம் விளிகிலர், மெய் நூறு ஆக கொய்யினும் உருவம் மீண்டும் கூடுவர்; குறிப்பில் நின்று, கையில் நாவுடன் வாய் சென்று கலந்திடும் கணத்தில் அம்பால் எய்திடுக, என்று வீரற்கு உறுதியும் இசைத்தது, அன்றே.]

**விளக்கம் :-** விளிகிலர்-(அசுரர்) அழிய மாட்டார். (உடலை நூறு நூறாய்த் துண்டு செய்தாலும்) மீண்டும் உருவம் கூடுவர் - மறுபடியும் அவயவங்களோடு உருவம் கூடப்பெறுவர். குறிப்பில் நின்று - கவனக் குறைவு இல்லாமல் இருந்து. 'கையில் நாவுடன் வாய் சென்று' என்பதை 'நாவுடன் வாயில் கை சென்று' என்று கூட்டுக. நாவோடு கூடிய வாயில் கை சென்று, என்பது பொருள் கலந்திடும் கணத்தில் - (வாயில் கை) சேரும் சமயத்தில். உறுதி - உபாயம். கை வாயில் கூடுங் காலத்தில் அம்பு எய்தால், அழிவர். அவரை ஒழிக்கும் உபாயம் இதுவே, என்று அசரீரி கூறிற்று, என்ப தாம். வெய்யவெம் - மிகவும் கொடிய (ஒருபொருட் பன்மொழி) விளிதல் - இறத்தல். உருவம் - வடிவம். அன்றே : ஈற்றசை.

**94. வானிடத் தரூபி சொன்ன வாசக மனத்திற் கொள்ளாத்**
**தேனுடைத் தெரியல் வீரன் றேரினைத் திரிய வோட்டிக்**
**கானிடைக் கடவுள் வேடன் றருங்கணை கரத்திற் கொண்டு**
**தானுடைத் தனுவிற் பூட்டி யனுப்பட சமைந்த தோரார்.**

[வானிடத்து அரூபி சொன்ன வாசகம் மனத்தில் கொள்ளா, தேன் உடை தெரியல் வீரன் தேரினை திரிய ஓட்டி, கானிடை கடவுள் வேடன் தரும் கணை கரத்தில் கொண்டு, தான் உடை தனுவில் பூட்டி அனு பட சமைந்தது ஓரார்,—அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** அரூபி - அசரீரி, கொள்ளா - ( மனத்தில் ) கொண்டு, அதாவது செய்யக் கூடியது என்று கொண்டு. தேனு டைத் தெரியல் வீரன் - விசயன். திரிய ஓட்டி - திருப்பி ஓட்டி. கானிடைக் கடவுள் வேடன் - சிவபெருமான். தருங்கணை - தந் தருளிய பாசுபதக்கணை. அனுப்படுதல் - பின் போதல். (அனு, பின் என்ற பொருளுடைய வட சொல்). அனுப்படச் சமைந்தது ஓரார் - போர் செய்யும் ஆட்டுக்கடா பகைமேல் பாயும் பொருட்டுப் பின் செல்லுதல் போல், பகை கடக்கப் பின்வாங்கிப் போர் செய் வதற்கு (அருச்சுனன்) அமைந்திருந்ததை (அசுரர்கள்) அறியாதவர் களாய், – (அவன் தோற்று ஓடினான் எனக் கொண்டு சிரித்தார்கள், என்க)

**95. தானவர் சமுகத் தோடு சமர்புரிந் தாற்றா தஞ்சி**
**மானவன் முதுகு தந்தா னென்றுவா ளசுர ரெல்லாம்**
**வேனில்வே ளனையான் றன்மேல் வெகுண்டுவெங் கனலிற் பொங்கி**
**ஆனதங் கைவாய் சேர்த்தி யாவலங் கொட்டி யார்த்தார்.**

[தானவர் சமுகத்தோடு சமர் புரிந்து ஆற்றாது அஞ்சி மான வன் முதுகு தந்தான் என்று வாள் அசுரர் எல்லாம், வேனில் வேள் அனையான் தன்மேல் வெகுண்டு வெம் கனலின் பொங்கி, ஆன தம் கை வாய் சேர்த்தி ஆவலம் கொட்டி ஆர்த்தார்.]

**விளக்கம் :-** தானவர் சமுகம் - அசுர இனத்தைச் சேர்ந்த கூட்டம். மானவன் - மனிதன். வேனில் வேள் அனையான் - அழகி னால் மன்மதனை ஒத்த விசயன். கனலின் பொங்கி, - நெருப்பைப் போல் பொங்கி எழுந்து, ஆன தம் கைவாய் சேர்த்தி - பொருந்திய தமது கையை வாயினிடம் சேர்த்து ஆவலம் கொட்டி ஆர்த்தார் - இகழ்ச்சி தோன்ற ஒலி செய்து ஆரவாரித்தார்கள். ஆவலம் - சீழ்க்கை போல்வதான ஓர் ஒலி. (தோற்றவரை இகழும் கருத்தில் செய்யப்படும் ஒலி). அருச்சுனன் அனுப்பட்டதைத் தோல்வியென்று கருதி அசுரர் சீழ்க்கை அடித்து ஆரவரித்தனர், என்க,

**96. உரம்பட்ட வஞ்சர் சேனை யொருப்பட்ட வுறுதி நோக்கித்
திரம்பட்ட சிலைக்கை வீரன் சிலீமுகந் தெறித்த போதச்
சரம்பட்ட தனுச ரங்கஞ் சங்கரன் செங்கை யம்பால்
புரம்பட்ட பரிசு பட்டுப் பொடித்தன பொடியாய் மன்னோ.**

[உரம் பட்ட வஞ்சர் சேனை ஒருப்பட்ட உறுதி நோக்கி, திரம் பட்ட சிலை கை வீரன் சிலீமுகம் தெறித்தபோது, அ சரம் பட்ட தனுசர் அங்கம், சங்கரன் செம் கை அம்பால் புரம் பட்ட பரிசு பட்டு பொடித்தன பொடியாய், மன்னோ.]

**விளக்கம் :-** உரம் பட்ட - வலிமை சேர்ந்த. ஒருப்பட்ட - (வாயிலே கை வைத்து சீழ்க்கை அடித்தலில்) ஒருமைப்பட்ட. உறுதி - நன்மை (தன் மனப்படி யாதலாகிய நல்ல செயல்). திரம் பட்ட - உறுதி பொருந்திய. சிலீமுகம் - அம்பு. தெறித்தல் - பிரயோகித்தல். தனுசர் - அசுரர். அங்கம் - உடல்கள். விசயனது பாசுபதக்கணையால், சிவபெருமான் செலுத்திய சரத்தினால் திரிபுரம் உற்ற தன்மையை, அசுரர் அடைந்து, அவர் அங்கங்கள் பொடியாய்ப் போயின, அதாவது பொடிபட்டு அழிந்தன, என் பதாம். ஒருப்படுதல் - எல்லோரும் ஒருங்கே தன்மனத்தின்படியா தல்; அதாவது வாயில் கை வைத்தல், சிலீமுகம் - (ஸிலீ முகம்) - கூரிய முனையுடையது என்ற பொருளுடைய வடமொழிச் சொல்,

**97. உருத்தது மிகவு மண்ட முடைந்திட வுடன்று பொங்கிச்
சிரித்தது தனுசர் மெய்யுஞ் சிந்தையுஞ் சேரப் பற்றி
எரித்தது தூநீ ராடி யிவனிடந் தன்னில் வந்து
தரித்தது மீண்டு மந்தச் சங்கரன் செங்கை வாளி.**

[உருத்தது மிகவும், அண்டம் உடைந்திட உடன்று பொங்கி சிரித்தது, தனுசர் மெய்யும் சிந்தையும் சேரப் பற்றி எரித்தது, தூ நீர் ஆடி இவனிடம் தன்னில் வந்து தரித்தது மீண்டும், அந்த சங்கரன் செம் கை வாளி.]

**விளக்கம் :-** சிவபெருமான் செங்கையின் பெற்ற அந்தப் பாசு பதக்கணை, மிகவும் வெகுண்டு எழுந்தது, பகைத்துக் கொதித்து அண்டம் உடைந்திடும்படி சிரித்தது, தனுசரின் உடலையும் மனத்தையும் ஒரு சேரப் பற்றி எரித்தது, (அதன் பின்) தூய நீரில் குளித்து அருச்சுனனிடம் திரும்பவும் வந்து தங்குவதாயது.— என்பது பொருள்.

கலித்துறை

**98. துவசத் தொடுதேர் களம் வீழச்சு டர்நி வாத
கவசத் தொடுமெய் கடல்வீழக் கடுகி யற்றைத்
திவசத் திவறா வரமங்கையர் வீழச் சென்றார்
அவசத் துடனந் தகனூரி லசுர ரெல்லாம்.**

[துவசத்தோடு தேர் களம் வீழ, சுடர் நிவாத கவசத்தொடு மெய் கடல் வீழ, கடுகி அற்றை திவசத்து இவறா அரமங்கையர் வீழ சென்றார், அவசத்துடன் அந்தகன் ஊரில் அசுரர் எல்லாம்,]

**விளக்கம் :-** துவசம் - கொடி. சுடர் நிவாத கவசம் - விளங்குகின்ற துளைக்க முடியாத கவசம். அற்றை திவசம் - அன்றைய தினம், அரமங்கையர் இவறா வீழ - தெய்வப் பெண்கள் விருப்பத்தோடு தங்கள் மேல் விழவும், அதாவது அழைத்துச் செல்லவும். அவசம் - தன் வசம் இன்மை, பரவச நிலை. கொடிகளோடு தேர்கள் விழவும், பிளக்க முடியாத கவசங்களோடு அசுரர் உடல்கள் கடலில் விழவும், வீர சுவர்க்கத்திற்கு உரிய ஆவி வடிவினரான, அந்த அசுரர்களைத் தேவ மாதர் விருப்பத்துடன் அழைக்க. அந்த சந்தோஷத்தினால் வசமிழந்த அவர்கள் எல்லோரும், அன்றைய தினம் எமலோகத்தின் வழியே வீர சுவர்க்கம் நோக்கிக் கடுகிச் சென்றனர், — என்பது பொருள். போரில் புறங்கொடாது நின்று இறந்தவர் வீர சுவர்க்கம் செல்வர், என்பதும். அவர்களைத் தேவமாதர் அழைத்துச் செல்வர் என்பதும் நூற் கொள்கை. இவறல் - ஆசை கொள்ளல். திவசம் - (திவஸம்) நாள்.

**99. ஆர்த்தா ரணிகூ ரலர்மாமழை யால்வி சும்பைத்**
**தூர்த்தார் துதித்தார் மதித்தார்நனி துள்ளு கின்றார்**
**போர்த்தா னவர்தஞ் செருக்காற்படு புன்மை யெல்லாம்**
**தீர்த்தா னிவனென் றகல்வானுறை தேவ ரெல்லாம்.**

[ஆர்த்தார். அணிகூர் அலர் மா மழையால் விசும்பை தூர்த்தார், துதித்தார், மதித்தார், நனி துள்ளுகின்றார், போர் தானவர் தம் செருக்கால் படு புன்மை எல்லாம் தீர்த்தான் இவன், என்று அகல்வான் உறை தேவர் எல்லாம்.]

**விளக்கம் :-** போர் செய்தலைத் தொழிலாக உடைய தானவர்களின் வலிச் செருக்கால் பட்ட சிறுமை எல்லாவற்றையும் இவன் தீர்த்தான் என்று தேவர்கள் எல்லோரும் சந்தோஷ ஆரவாரம் செய்தனர்; ஆகாயத்தைப் புஷ்ப மாரியால் நிறையச் செய்தனர், அவனைப் புகழ்ந்தனர், மதிப்போடு நினைத்தனர், ஆனந்தக் கூத்தாடினர், — என்பது பொருள். அணி கூர் அலர் - அழகு மிகுந்த தேவ லோகத்துக் கற்பக மலர். மதித்தல் - சிறப்பினை எண்ணிக் கொண்டாடுதல்.

**100. கூரும் படையுங் குடையுங்கொடி யுங்கொ ழித்துத்**
**தேருங் கரியும் பரியுந்திசை தோறு முந்தி**
**ஊருங் குருதிக் கடல்பொங்கி யுவர்க்க டன்மேல்**
**போரும் பொரப்போ யணியோடு புகுவ போலும்.**

[கூரும் படையும் குடையும் கொடியும் கொழித்து, தேரும் கரியும் பரியும் திசை தொறும் உந்தி, ஊரும் குருதி கடல் பொங்கி உவர் கடல் மேல் போரும் பொர போய் அணியோடு புகுவ போலும்.]

**விளக்கம் :-** ஊரும் குருதிக் கடல் பொங்கி, கூரும் படையும்... உந்தி, உவர்க்கடல் மேல் போரும் புகுவது போலும்,—என்று அன்வயிக்க. கூரும் படை - மிகுதியான ஆயுதங்கள். கொழித்து - முன்னே ஒதுக்கி. உந்தி - தள்ளி. ஊரும் - செல்லும். பொங்கி - சீறி, விசயனால் அழிக்கப்பெற்ற அசுரர்களின் உடல்களிலிருந்து பெருகிய குருதிக்கடல், படை, குடை, கொடி முதலியவற்றைத் தள்ளிக்கொண்டும், தேர், கரி (யானை), பரி ஆகியவற்றை அடித்துத் தள்ளிக்கொண்டும் ஓடுதலால், அது, உவர்க் கடல்மேல் போர் செய்யச் (அணியோடு சேனையுடன்) செல்வது போன்று இருந்தது,—என்பதாம். இது தற்குறிப்பேற்றம்.

**101. தத்திக் குருதிக் கடல்பொங்கத் தனித்த னிநின்று**
**எத்திக் கினும்வெம் பிணக்குன்ற மெழிலொ டோங்கப்**
**பத்திப் படமேற் பருந்தின்குலம் பந்தர் செய்யக்**
**கொத்துற் றதண்டார்த் திறற்கோதண்ட வீர னின்றான்.**

[தத்தி குருதி கடல் பொங்க தனிதனி நின்று எ திக்கினும் வெம் பிணம் குன்றம் எழிலொடு ஓங்க, பத்தி பட மேல் பருந்தின் குலம் பந்தர் செய்ய, கொத்து உற்ற தண் தார் திறல் கோதண்டம் வீரன் நின்றான்,]

**விளக்கம் ;-** வெற்றி கொண்ட யுத்த பூமியிலே விசயன் வெற்றிப் பெருமிதத்தோடு நின்றதைக் கூறும் இது. குருதிக் கடல் தத்திப் பொங்க - குருதிக் கடல் பாய்ந்து பெருக. எத்திக்கினும் வெம் பிணக் குன்றம் தனித்தனி எழிலொடு ஓங்க - எல்லாத் திசை களிலும் கொடிய பிண மலைகள் தனித்தனியாக (வேறு வேறாக) நின்று எழுச்சியோடு உயர்ந்து நிற்க. பருந்தின் குலம் மேல் பத்தி பட பந்தர் செய்ய - பருந்துக் கூட்டம் ஆகாயத்தில் வரிசைப்பட பந்தல் இட்டதுபோல் பரவிச் செல்ல. கொத்து - பூங்கொத்து. கோதண்டம் - வில். வீரன் - விசயன்.

**102. மின்போ னுடங்க விடைவேல் விழி நீர்த தும்ப**
**பொன்போ லுருவங் கருகும்படி பூழி போர்ப்ப**
**அன்போ டவுணர் மடமாத ரரற்று மோதை**
**என்போ லுமென்னி னிடிபோல்வந் திசைத்த தெங்கும்**

[மின்போல் நுடங்க இடை, வேல் விழி நீர் ததும்ப, பொன் போல் உருவம் கருகும்படி பூழி போர்ப்ப, அன்போடு அவுணர் மடம் மாதர் அரற்றும் ஓதை என் போலும் என்னின், இடிபோல வந்து இசைத்தது எங்கும்.]

**விளக்கம் :-** அழிந்த அசுரர்களின் மனைவியர் போர்க்களம் வந்து அழுது அரற்றலைக் கூறும் செய்யுள் இது. இடை மின் போல் நுடங்க - (அசுர மாதர்களது) இடுப்பு கொடி மின்னல் போல் துவள. பூழி - புழுதி, ஓதை - (அவர்களது அழுகை) ஒலி, என் போலும் என்னின் - எதை ஒத்திருக்கும் என்றால், (அது இடியைப்போல் எங்கும் ஒலித்தது, என்னலாம்). மூன்றாவது அடியிலுள்ள, **அன்போடு** என்பதை **வன்போடு** என்றும் பிரித்துக் கொள்ளலாம். வலிய துன்பத்தோடு என்பது பொருளாகும்.

**103. இவ்வா றவுணர் மடமாதரி ரங்கி யேங்க**
**மைவாள் விழியின் வழியஞ்சன வாரி பாயத்**
**தெவ்வா றியபின் னருந்தீர்ந்தில தீர்ந்த வன்றே**
**கைவார் சிலையான் கடுங்கோபமுங் கண்சி வப்பும்.**

[இ ஆறு அவுணர் மடமாதர் இரங்கி ஏங்க, மை வாள் விழியின் வழி அஞ்சனம் வாரி பாய, தெவ் ஆறிய பின்னரும் தீர்ந்தில, தீர்ந்த அன்றே, கை வார் சிலையான் கடு கோபமும் **கண்** சிவப்பும்.]

**விளக்கம் :-** தெவ் ஆறிய பின்னரும் தீர்ந்தில (ஆகிய) கடும் கோபமும் கண் சிவப்பும். இவ்வாறு அவுணர் மடமாதர்...... அன்றே தீர்ந்தது, என்பது அன்வயம். அஞ்சனம் வாரி பாய - கண்ணில் இட்ட மையைக் கரைத்துக்கொண்டு நீர் பெருக. தெவ் - பகைவர். அசுரர்களாகிய பகைவர் அழிந்த பின்னும் ஆறாத கோபம், அசுரப் பெண்களின் அழு குரலைக் கேட்ட அக்கணமே ஆறுவ தாயிற்று, என்பதாம். இதனால் விசயனது அருளுடைமை கூறப்பட்டது.

## தேவலோகம் திரும்பல்

**104. அன்னார் நகரத் தழகுந்தொல் லரணு நோக்கி**
**மின்னாரும் வேலன் விறன் மாதலி தன்னை மீண்டு**
**நன்னாக ரூரிற் றடந்தேரை நடாத்து கென்னச்**
**சொன்னா னவனுந் துனைத்தேர் நனி தூண்டு மெல்லை.**

[அன்னார் நகரத்து அழகும் தொல் அரணும் நோக்கி மின் ஆரும் வேலன், விறல் மாதலி தன்னை மீண்டு நல் நாகர் ஊரில் தட தேரை நடத்துக என்ன சொன்னான், அவனும் துனை தேர் நனி தூண்டும் எல்லை.]

**விளக்கம் :-** அன்னார் - அசுரர்கள். மின் ஆரும் வேலன் - விசயன். நாகர் ஊர் - தேவர் உலகம், துனை தேர் - விரைந்து செல்லும் இயல்பினை உடைய தேர். தேரைத் திரும்பத் தேவ லோகம் செலுத்துக, என்று விசயன் கூற, மாதலியும் தேரைச் செலுத்தினான், என்பதாம். தூண்டும் எல்லை-தேரைச் செலுத்தச் சொன்ன அளவில், - அடுத்த செய்யுளோடு இயையும்.

**105. செம்பொற் புரிசை திகழ்கோபுரச் செம்பொன் மாடத்(து)
அம்பொற் கொடிசேர் நகரந்தரத் தொன்று காணா
வம்பிற் பொலிதார் தடந்தேர்விடு மாட்சி யானை
விம்பத் திறல்வார் சிலைவீரன் வினவ வன்னான்.**

[செம் பொன் புரிசை திகழ் கோபுரம் செம் பொன் மாடத்து அம் பொன் கொடி சேர் நகர் அந்தரத்து ஒன்று காணா, வம்பின் பொலிதார் தடதேர் விடு மாட்சியானை, விம்பல் திறல் வார் சிலை வீரன் வினவ, அன்னான்,—கூறலுற்றான், என்று முடிக்க]

**விளக்கம் -:** புரிசை - மதில், அந்தரம் - ஆகாயம். **காணா** - கண்டு. வம்பு - வாசனை. தேர் விடு மாட்சியான் - தேர் நடத்தும் சிறப்பினால் பெருமை உடைய மாதலி, விம்பத் திறல் வார் சிலை வீரன் - வட்டமாய் வளைதலை உடைய வலிய நீண்ட காண்டீபம் என்னும் வில்லையுடைய விசயன். தேவருலகம் நோக்கிச் செல்லு கையில் வானவெளியில் அழகிய ஒரு நகரத்தைக் கண்டு, ''இது யாது?'' என்று விசயன் வினவ, மாதலி இரண்ணியபுரம் என்ற பேரு டைய நகரந்தைப்பற்றிக் கூறலானான். அம் பொன் கொடி. என்பதிலுள்ள பொன், ''பொன்னால் ஆன கொடிக் கம்பத்தைக் குறிக்கும்.

## இரணியபுர வரலாறு

**106. மன்னுந் தனுச குலமாதரில் வஞ்ச நெஞ்சக்
கன்னங் கரிய குழற்காலகை காமர் சோதிப்
பொன்னங் கொடிபோ லெழில்கூர்நுண் ணிடைப் புலோமை,
என்னும் பெயரா ரிருவோருள ரென்று முள்ளார்.**

[மன்னும் தனுச குல மாதரில் வஞ்சம் நெஞ்சம், கன்னங்கரிய குழல் காலகை, காமர் சோதி பொன் (அம்) கொடிபோல் எழில் கூர் நுண் இடை புலோமை என்னும் பெயரார் இருவோர் உளர், என்றும் உள்ளார்.]

**விளக்கம் :-** மன்னும் தனுச குலம் - நிலையுடைய அசுர குலம். கன்னங்கரிய - கருமை மிகுந்த (காலகை). காலகை என்னும் பெயர் உடைய மாது. காமர் சோதி...புலோமை · விரும்புதற்குரிய விளக்க முடைய அழகிய கொடி போன்ற அழகின் மிகுதியைக் கொண்ட மிகச் சிறிய இடையையுடைய புலோமை என்னும் பெயருடைய மாது. இப்பெயருடைய இருவர் சாகாமை உடையவராய் (இந் நகரில்) உளர். அசுரகுல மாதர்களில், **காலகை, புலோமை** என்ற இரு மாதர்கள் உள்ர் ; அவர் சாகாமையை உடையவர் ;அல்லது புகழால் என்றும் நிலைத்த வாழ்வை உடையவர், என்க.

**107.** **அம்மா தர்தந் தைதனைநோக்கி யனந்த காலம்**
**செம்மால் வரையிற் றவஞ்செய்தனர் செய்த நாளில்**
**மைம்மான் விழியார் தமக்கந்த வனச வாணன்**
**எம்மா லிசைத்தற் கிசையாத வரங்க ளீந்தான்.**

[அ மாதர் தந்தை தனை நோக்கி அனந்த காலம் செம் மால் வரையில் தவம் செய்தனர் ; செய்த நாளில் மை மான் விழியார் தமக்கு அந்த வனசம் வாணன் எம்மால் இசைத்தற்கு இசையாத வரங்கள் ஈந்தான்.]

**விளக்கம் :-** தந்தை - பிரும்மதேவன். அனந்த காலம் - நீண்ட (அளவு கடந்த) காலம். செம்மால் வரை - மகாமேரு பர்வதம். வனச வாணன் - தாமரையில் வாழும் பிரும்மதேவன். காலகை, புலோமை என்ற இரு பெண்களும் மேரு மலையில் பிரும்மாவைக் குறித்து நெடுங் காலம் தவம்புரிய, அவர்களது தவம் மகிழ்ந்த பிரும்மா என் போன்றவரால் சொல்லுவதற்கு இயலாத பல வரங்களைக் கொடுத்தான்,— என்பதாம். வனசம் - (வநஜம் - நீரில் உண்டாவது) தாமரை, (வநம் - நீர்).

**108.** **தம்மக் களாய வசுரேச ரதிதி தந்த**
**அம்மக் கடம்மா லழியாமையு மாட கத்தான்**
**மும்மைப்புரம் போல் விசும்பூர்தரு மொய்ம்பி னிந்தச்**
**செம்மைப் புரமுங் கொடுத்தானத் திசைமு கத்தோன்.**

[தம் மக்கள் ஆய அசுர ஈசர் அதிதி தந்த அ மக்கள் தம்மால் அழியாமையும், ஆடகத்தால் மும்மை புரம் போல் விசும்பு ஊர் தரும் மொய்ம்பின் இந்த செம்மை புரமும் கொடுத்தான் திசை முகத்தோன்.]

**விளக்கம் :-**அதிதி தந்த மக்கள் - தேவர். ஆடகம் - பொன். மும்மை புரம் - திரிபுரம். மொய்ம்பு - வலிமை. செம்மை புரம் - சிறந்த அல்லது அழகிய இரணியபுரம். திசை முகன் - நான்கு முகங்களை உடைய பிரும்மதேவன். இப் பெண்களின் மக்களுக்குத் தேவரால் அழிவு உண்டாகாமையும், திரிபுரத்தைப்போல் வானில் பறந்து செல்லக்கூடிய செம்மைப் புரத்தையும் பிரும்மதேவன் கொடுத்தருளினான்,—என்பதாம்.

**109.** **பொன்கா லுமெய்யர் பொறிகால்பொலங் குண்ட லத்தார்**
**முன்கா லனையுஞ் சமர்மோதி முருக்கு மொய்ம்பர்**
**மின்கால் படையர் விடங்காலும் விழியர் வெம்போர்**
**வன்கா லகேய ரெனும்பேர்திசை வைத்த வீரர்.**

[பொன் காலும் மெய்யர், பொறி கால் பொலம் குண்டலத் தார், முன் காலனையும் சமர் மோதி முருக்கும் மொய்ம்பர், மின் கால் படையர், விடம் காலும் விழியர், வெம் போர் வல் காலகேயர் எனும் பேர் திசை (எங்கும் பரவ) வைத்த வீரர்.]

**விளக்கம் :-** (காலகை, புலோமை என்பாரின் மக்களாகிய காலகேயர்) பொன் போன்ற ஒளி வீசும் மேனியர், தீப்பொறி போன்ற ஒளி வீசும் பொன் குண்டலங்களை அணிந்தவர், முன் சென்று எமனையும் போரில் தாக்கி வலி அழிக்க வல்ல வலியுடையவர், மின்னலைப்போல் ஒளிவிடும் ஆயுதங்களை உடையவர், விஷத்தை வெளிப்படுத்தும் கண்களை உடையவர், கொடிய போரில் பகை கடக்க வல்ல காலகேயர் என்னும் பெயரைத் திசை எங்கும் பரவச் செய்த வீரர், - என்பது பொருள். போர் வல் காலகேயர் - போரில் வெற்றி கொள்ளும் காலகேயர்.

**110. வருமுப் பொழுது மறையந்தண ரங்கை வாரி
உருமுப் புயல்போற் கவர்வோர்முன் னுகாந்த நாதன்
பொருமுப் புரத்தி லுறைதானவர் போலும் வீரர்
இருமுப் பதினா யிரம்வஞ்சக ரிங்கு முண்டால்.**

[வரு முப்பொழுதும் மறை அந்தணர் அம் கை வாரி உருமு புயல் போல் கவர்வோர், முன் உகாந்த நாதன் (உக அந்தம் நாதன்) பொரு முப்புரத்தில் உறை தானவர் போலும் வீரர், இரு முப்பதினாயிரம் வஞ்சகர் இங்கும் உண்டு, ஆல்.]

**விளக்கம் :-** வரு முப்பொழுது - காலை, நடுப்பகல், மாலை என்று முறையே வருகின்ற மூன்று காலங்கள். மறை அந்தணர் அம்கை வாரி - வேத வித்தகரான அந்தணர்கள் (சந்தியாவந்தனம் செய்யும் பொழுது) அழகிய கைகளால் விடும் (அர்க்கியப் பிரதான) ஜலம். உருமு புயல் போல் கவர்வோர் - இடியோடு கூடிய மேகம் கடல் நீரைக் கவர்வதுபோல், தேவர்களுக்கான அரக்கியப் பிரதான ஜலத்தைக் கவர்ந்து கொள்பவர். உகாந்த நாதன் - (யுக முடிவுக்கு அதிபதியான) சிவபெருமான். பொரு முப்புரம் - சிவபெருமான் போர் செய்து அழித்த திரிபுரம். அம் முப்புரத்தில் வாழ்ந்த அசுரர்களைப் போன்ற வீரர்களான காலகேயர் இரு பதினாயிரவர் இங்கும் இருக்கின்றனர், என்று கூறியபடி. ஆல்: அசை, தேற்றமுமாம். யுகமுடிவில் அழித்தலைச் செய்யுங் கடவுளாதலால், சிவபெருமானை, **உகாந்த நாதன்**, என்றார்.

### விசயன் அவர்களோடு பொரத் துணிதல்

**111. தன்றேர் வலவன் மொழிகேட்டுத் தயங்கு நீலக்
குன்றே யனையான் கொடும்போர்வஞ் சினங்கள் கூறி
இன்றே யிவரா வியுந்தென்புலத் தேற்றிய பின்னர்
அன்றே யினிநா னமராவதி செல்வ தென்றான்.**

[தன் தேர் வலவன் மொழி கேட்டு தயங்கு நீலம் குன்றே அனையான் கொடும் போர் வஞ்சினம் கூறி, இன்றே இவர் ஆவியும் தென் புலத்து ஏற்றிய பின்னர் அன்றே, இனி நான்

அமராவதி செல்வது என்றான்.]

**விளக்கம் :-** வலவன் - சாரதியாகிய மாதலி. வஞ்சினம் - சபதச் சொற்கள், தென்புலம் - எமலோகம். பின்னர் அன்றே - (அவர்களை எமனுலகம் செலுத்திய) பிறகு அன்றோ, (நான் அமராவதி செல்வது என்று, தனது உறுதியைத் தெரிவித்தான்). அமராவதி, இந்திரனுடைய தலைநகர்.

**112.** **இந்தப் புறத்தின் மிசைத்தேரினை யேவு கென்னாக்**
**கந்தற் குவமை தகுதிண்டிறற் காளை கூறச்**
**சிந்தைக் குமுந்துந் தடந்தேரைத் தனுசர் வைகும்**
**அந்தப் புரத்தில் விடுத்தான்மற் றவனு மாதோ.**

[இந்த புரத்தின் மிசை தேரினை ஏவுக என்னா, கந்தற்கு உவமை தகு திண் திறல் காளை கூற, சிந்தைக்கும் முந்தும் தட தேரை தனுசர் வைகும் அந்த புரத்தில் விடுத்தான், மற்று அவனும் மாதோ.]

**விளக்கம் :-** புரம் - காலகேயர் வாழும் இரணியபுரம். கந்தற்கும் உவமை தகு திண் திறல் காளை - முருகக் கடவுளுக்கும் உவமையாகத் தக்க அருச்சுனன். சிந்தைக்கும் முந்தும் தடந்தேர் - மனத்தினும் வேகமாகச் செல்லக்கூடிய விசாலமான (இந்திரனுடைய) தேர். இந்த நகரத்தின் மேல் தேரை விடுக, என்று விசயன் கூற, அவனும் (மாதலியும்) இரணியபுரத்தின் மேல் தேரைச் செலுத்தினான்,— என்பதாம். மற்று : அசை. மாதோ : ஈற்றசை.

**113.** **தேரா ரவாரத் துடனேதிண் சிலைவ லான்றன்**
**போரா ரவாரச் சிலைநாணொலி மீது போக**
**ஆரா ரவாரத் திடிகேட்ட வரவ மொத்தார்**
**காரார வார மெனப்பொங்குமக் கால கேயர்..**

[தேர் ஆரவாரத்துடனே திண் சிலை வ்லான் தன் போர் ஆரவாரம் சிலை நாண் ஒலிமீது போக, ஆர் ஆரவாரம் என பொங்கும் அ காலகேயர்.]

**விளக்கம் :-** தேர் ஆரவாரம் - தேரின் ஒலி. போர் ஆரவாரச் சிலை-போரில் கொண்டாட்டங்கொள்ளும் வில். ஆர் ஆரவாரத்து இடி - மிகுதியான, அல்லது நிறைந்த ஒலியை உடைய இடி. கார் ஆரவாரம்-மேகத்தின் கிளர்ச்சி, எழுச்சி. தேரின் ஒலியும், நாணொலியும் அந்த புரத்தின் மேல் செல்ல, (அதாவது அங்கே உள்ளாரான காலகேயர் செவி சேர), மேகம் கிளர்ந்து எழுவதுபோல் பொங்கித் திரளும் அக் காலகேயர், இடி ஒலி கேட்ட நாகம் போன்றனர், அதாவது திடுக்குறலாயினர்,— என்பது பொருள்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**114. இந்த வோதை யெழிலி யேழு மூழி நாளி டித்தெழும்**
**அந்த வோதை யோவதன்றி யாழி பொங்கு மோதையோ**
**கந்தன் வானின் மீது தேர்க டாவு கின்ற வோதையோ**
**எந்த வோதை யென்ற யிர்த்த யிர்த்து வஞ்சர் யாவரும்.**

[இந்த ஓதை எழிலி ஏழும் ஊழி நாள் இடிக்கும் அந்த ஓதையோ, அது அன்றி ஆழி பொங்கும் ஓதையோ, கந்தன் வானின் மீது தேர் கடாவுகின்ற ஓதையோ, எந்த ஓதை என்று அயிர்த்து அயிர்த்து வஞ்சர் யாவரும், – அடுத்த கவியோடு தொடரும். இதுவும் இதைத் தொடரும் மூன்று கவிகளும் குளகம்.]

**விளக்கம் :-** ஓதை - ஓசை. எழிலி ஏழு - சப்த மேகங்கள். ஊழி நாள் - யுகாந்த காலம். ஆழி - சமுத்திரம். கந்தன் - முருகக் கடவுள். அயிர்த்து அயிர்த்து, என்ற அடுக்கு மிகுதி பற்றியது. ஒலி கேட்ட காலகேயர், அது யாதோ என்று பலவாறு சங்கித்தலைக் கூறும் இது.

**115. தெழித்து ரப்பி யெயிறு தின்று வைது செய்ய கண்கள்தீ**
**விழித்து மீசை நுனிமு றுக்கி வெய்ய வீர வாளுறை**
**கழித்தெ ழுந்து பொங்கு கின்ற காள கூட மென்னவே**
**கொதித்த ழன்று மண்ணும் விண்ணு மின்று கோறு**
**நாமெனா.**

[தெழித்து உரப்பி எயிறு தின்று வைது செய்ய கண்கள் தீவிழித்து, மீசை நுனி முறுக்கி வெய்ய வீரம் வாள் உறை கழித்து எழுந்து, பொங்குகின்ற காளகூடம் என்னவே, கொதித்து அழன்று மண்ணும் விண்ணும் இன்று கோறும் நாம் எனா, - என அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** தெழித்து - வெகுண்டு. உரப்பி - அதட்டி, ஒலி செய்து. எயிறு தின்று - பல்லைக் கடித்து. வைது (ஏசி) பொங்கு கின்ற காளகூடம் என்ன - பாற்கடலினின்று கொதித்து மேலே யெழுந்த **காளகூடம்** என்னும் கொடிய விஷம்போல. கொதித்து-கோபக் கனலை வெளிப்படுத்தி. அழன்று - சீறி எழுந்து. இன்று கோறும் - இன்றே கொன்று அழிப்போம். எனா-என்று சொல்லிக் கொண்டு, – அடுத்த செய்யுளோடு தொடரும்.

தெழித்தல், உரப்பல், எயிறு தின்றல், வைதல், கண் தீ விழித்தல், முதலியன கோபத்தின் மெய்ப்பாடு. மீசை முறுக்குதல், வாள் உறை கழித்தல் வீரத்தின் மெய்ப்பாடு. விசயனின் தேரொலியும் அவனது நாணொலியும் கேட்டுச் சினந்து கிளர்ந்த காலகேயர் விண்ணையும் மண்ணையும் இன்று அழித்து விடுவோம், என்று சீறிப் போரெழுந்தனர், என்ற கருத்தது செய்யுள்.

**116. ஓடு வாரு மந்த வோதை யெதிறு டன்று றுக்கியே**
**நாடு வாரு நமர்க ளாண்மை நன்று நன்றெ னாநகைத்(து)**
**ஆடு வாரு மமரர் வாழ்வு பாழ்ப டுத்து மாயுதம்**
**தேடு வாரு மெண்ணி றந்த தேர்க ளேறு வாருமே.**

[ஓடுவாரும் அந்த ஓதை எதிர் உடன்று உறுக்கியே நாடு வாரும், நமர்கள் ஆண்மை நன்று நன்று எனா நகைத்து ஆடு வாரும், அமரர் வாழ்வு பாழ் படுத்தும் ஆயுதம் தேடுவாரும், எண் இறந்த தேர்கள் ஏறுவாரும், ஏ.]

**விளக்கம் :-** தங்கள் நகர்மேல் வந்த ஓசைக்கு எதிர் உடன்றும் உறுக்கியும் (வெகுண்டும்) ஓடுவாரும், அந்த ஓசை எழுந்ததற்குக் காரணத்தை நாடுவாரும். நமர்கள் (நம்மவர்களது) ஆண்மை நன்று நன்று எனா நகைத்து ஆடுவாரும், அமரர்களின் வாழ்வு பாழ்படுத்த வல்ல ஆயுதங்களை ஆய்ந்து (அல்லது தேடி) எடுப்பவர் களும், எண்ணிக்கை இல்லாத தேர்களில் ஏறுகின்றவர்களும்,— என்பது பொருள். நம்மை ஒருவர் எதிர்க்கும்படி ஆயிற்றே, மிக நன்றாயிருக்கின்றது நமது ஆண்மை, என்று கூறி நகைக்கும் கருத்தில் 'நன்று நன்று', என்றா ராயிற்று.

**117. கூளி கோடி யுய்ப்பக் குஞ்ச ரங்கள் கோடி யுய்ப்பபேர்**
**ஆளி கோடி யுய்ப்ப வாயு கதிகொ டந்த ரத்தின்மேல்**
**வாளி போதும் வாசி கோடி கோடி யுய்ப்ப வாவுதேர்**
**ஒளி யாக வானி னெல்லை மறைய வுந்தி முந்தினார்.**

[கூளி கோடி உய்ப்ப, குஞ்சரங்கள் கோடி உய்ப்ப, பேர் ஆளி கோடி உய்ப்ப, வாயு கதிகொடு அந்தரத்தின் மேல் வாளி போதும் வாசி கோடி உய்ப்ப, வாவு தேர் ஒளி ஆக, வானின் எல்லை மறைய உந்தி முந்தினார்.]

**விளக்கம் :-** கூளி - பேய், பூதம். குஞ்சரம் - யானை. ஆளி- சிங்கம். வாயுகதி - காற்றின் வேகம். அந்தரம் - ஆகாசம். வாளி போதல் - வட்டமாய்ச் சுற்றல், அல்லது அம்பு போல் விரைதல். வாசி - குதிரை. ஒளி - வரிசை. வரிசையாக வான வெளியின் எல்லை மறையும்படி தேரைச் செலுத்தி முற்பட்டு வந்தனர் என்பது ஈற்றடியின் பொருள். அவர்கள் ஏறி வந்த தேர்கள், கூளிகளும், யானைகளும், ஆளிகளும், (சிங்கங்களும்) ஆகாயத்தில் செல்லவல்ல குதிரைகளும், பூட்டப்பெற்றவை. உய்ப்ப - இழுத்துச் செல்ல. வாவு தேர், தாவிச் செல்லும் தேர். ஆயதேர், என்றும் பாடம் உளது. கோடி, என்றது மிகப்பல, என்ற பொருளது.

**118. அந்த கன்பொ ரற்கு நம்மை வல்ல னல்ல னபயமுன்**
**தந்த விந்தி ரன்ற னக்கு மொக்கு மன்ன தன்மைதான்**
**கந்த னென்னி லாறி ரண்டு கண்கள் கைக ளில்லைமேல்**
**எந்த வீர னம்மொ டின்றெ திர்க்கு மிந்த வீரனே**

[அந்தகன் பொரற்கு நம்மை வல்லன் அல்லன், அபயம் முன் தந்த இந்திரன் தனக்கும் ஒக்கும் அன்ன தன்மைதான்; கந்தன் என்னில் ஆறு இரண்டு கண்கள் கைகள் இல்லை, மேல் எந்த வீரன் நம்மொடு இன்று எதிர்க்கும் இந்த வீரன், ஏ.]

**விளக்கம் :-** அந்தகன் - யமன். நம்மை - (உருபு மயக்கம்) நம்மோடு. யமன் நம்மோடு போர் செய்யும் வல்லமை இல்லாதவன். நம்மால் முன்னே அபயம் அளிக்கப்பெற்ற இந்திரனும் அத் தன்மையனே. முருகக் கடவுளோ எனின், அவனுக்குப் பன்னிரண்டு கண்களும் கைகளும் உண்டு, எனவே அவனும் அல்லன். எனின், இப்பொழுது நம்மை எதிர்க்க வந்த இந்த வீரன் வேறு எந்த வீரன் ஆவான்? என்று அவுணர் அயிர்ப்பவ ரானார்,— என்பதாம். மேல், என்பது, வேறு என்ற பொருளது.

**119. எண்ட யங்கு மெயிறு வெண்ணி லாவெ றிப்ப வெயின்மணிக்**
**குண்ட லங்க ளழகெ றிப்ப மகுட கோடி குலவிமேல்**
**மண்டி யெங்கும் வெயி லெறிப்ப வஞ்சர் தம்வ னப்பெலாம்**
**கண்டு கண்ட ருச்சு னன்க ருத்து நொந்து கூறுவான்.**

[எண் தயங்கும் எயிறு வெண் நிலா எறிப்ப, வெயில் மணி குண்டலங்கள் அழகு எறிப்ப, மகுடம் கோடி குலவி மேல் மண்டி எங்கும் வெயில் எறிப்ப, வஞ்சர் தம் வனப்பு எலாம் கண்டு கண்டு அருச்சுனன் கருத்து நொந்து கூறுவான்.]

**விளக்கம் :-** எண் தயங்கும் எயிறு - வலிமை சார்ந்த, அல்லது வலியின் விளக்கமுடைய பற்கள். வெயில் மணி குண்டலம் - வெயில் எறிக்கும் மணிகளால் இழைக்கப்பெற்ற குண்டலம் (காதணி). குலவி - ஒளிவிட்டு. மேல் மண்டி - மேலே பொருந்தி. கண்டு கண்டு - நன்றாகப் பார்த்து. அசுரர்களின் அழகைக் கண்டு விசயன் மனம் வருந்திச் சில கூறுவானாயினான், என்க, எண் - (ஏண்) வலிமை.

**120. கன்னல் வேளை வென்ற விக்க வின்ப டைத்த காட்சியும்**
**மின்னு பூண்வி ளங்கு மார்பும் விபுத ருக்கு மில்லையால்**
**என்ன பாவ மிவரை யாவி யீட ழிப்ப தென்றுபோர்**
**மன்னர் மன்னன் முன்னு ரைத்த வாய்மை யுங்கு றிப்புறா.**

[கன்னல் வேளை வென்ற இ கவின் படைத்த காட்சியும், மின்னு பூண் விளங்கும் மார்பும் விபுதருக்கும் இல்லை, (ஆல்), என்ன பாவம் இவரை ஆவி ஈடு அழிப்பது என்று, போர் மன்னர் மன்னன் முன் உரைத்த வாய்மையும் குறிப்புறா.]

**விளக்கம் :-** கன்னல்வேள் - மன்மதன். விபுதர் - தேவர். ஆவி ஈடு - உயிரின் வலிமை. முன் உரைத்த வாய்மையும்

குறிப்புறா - இவர்களைக் கொல்வேன், என்று முன் கூறிய சபதத்தையும் மனத்திற் கொண்டு. தேவர்க்கும் இல்லாத அழகையும், அலங்காரத்தையும் உடைய, இவ்வசுரர்களைத் தான் கூறிய சபத மொழியின்படி கொல்ல வேண்டி யிருக்கின்றதே என்று விசயன் மனம் வருந்தினான், என்க. முன்னுரைத்த வாய்மை, இவர்களை அழிக்காமல் அமராவதி செல்லேன் என்று கூறிய மொழி.

## அவுணரும் விசயனும் பொரல்

**121. வில்வ ளைத்து நின்ற நீல வெற்ப ரொன்றை விண்ணிடைச்**
**செல்வ ளைத்த தென்ன வந்து தீய வஞ்சர் யாவரும்**
**மல்வ ளைத்த சிகர வாகு கிரியின் மீது மார்பிலும்**
**கொல்வ ளைத்த பகழி தூவி யின்ன நின்று கூறுவார்.**

[வில் வளைத்து நின்ற நீலம் வெற்பர் ஒன்றை விண்ணிடை செல் வளைத்தது என்ன, வந்து, தீய வஞ்சர் யாவரும் மல் வளைத்த சிகரம் வாகு கிரியின்மீதும் மார்பினும் கொல் வளைத்த பகழி தூவி இன்ன நின்று கூறுவார்.]

**விளக்கம் :-** வெற்பர் - (வெற்பு - ஆர் - சாரியை) - மலை. செல் - மேகம். மல் வளைத்த சிகரம் கிரியின் வாகு - மற்போர் பயின்ற விசயனது சிகரத்தை உடைய மலைபோன்ற தோள்கள். கொல் வளைத்த பகழி - கொல்லனால் காய்ச்சி வளைத்துச் செய்யப்பட்ட அம்பு. வில் வளைத்து நின்ற நீல மலையை மேகம் வளைத்துக்கொண்டது போல், விசயனை அவுணர் சூழ்ந்து கொண்டு, அவன் தோள்கள்மீதும் மார்பிலும் அம்புகளைச் செலுத்திப் பின்பு, வார்த்தை சில கூறுவாராயினர்,—என்பதாம். கொல், என்பது இரும்பைக் காய்ச்சி அடித்துச் செய்யும் வேலை, என்ற பொருளது. அது, இங்கே ஆகு பெயராய்க் கொல்லனை உணர்த்திற்று.

**122. உழுவை கண்ட வுழைகள் போல வோடி யோடி மேருவின்**
**முழைதொ றும்பு குந்த தேவ ரேவல் கொண்டு மொய்ம்புடன்**
**இழியில் சந்த னங்க டாவி யிங்கு வந்த தென்னடா**
**புழுவி லொன்று மொன்று பூத லத்து ளானொ ருத்தனீ.**

[உழுவை கண்ட உழைகள் போல ஓடி ஓடி மேருவின் முழை தொறும் புகுந்த தேவர் ஏவல் கொண்டு மொய்ம்புடன், இழிவு இல் சந்தனம் கடாவி, இங்கு வந்தது என் அடா? புழுவில் ஒன்றும் ஒன்று பூதலத்து உளான் ஒருத்தன் நீ.]

**விளக்கம் ;-** ஈற்றடியை முதலில் வைத்துப் படித்தால் செய்யுள் அன்வயமாய் விடும். உழுவை - புலி - உழை - மான். சந்

தனம் - தேர். புழுக்களில் சேரும். அதாவது புழுக்களில் ஒன்றாக எங்களால் மதிக்கப்படும். ஒன்றிய பூதலத்து உள்ள மனிதனாகிய ஒருத்தன் நீ, என்பது ஈற்றடியின் பொருள். ஒன்று பூதலம் - பொருந்திய மண் உலகம், அதாவது பூதங்களின் பொருந்திய சேர்க்கையால் தோன்றிய பூவுலகம். புழுக்களில் ஒன்றாக எங்களால் மதிக்கப்படும் மனிதனாகிய நீ தேவர்தம் ஏவலால் தேர் கடாவி இங்கு வந்தது என்னடா?—என்று விசயனை அவுணர் இகழ்ந்தபடி.

**123. என்று கால கேயர் நின்றி சைத்த சொற்செ விக்கொளா**
**நன்று கால கேயர் சொன்ன வாய்மை நன்றெ னாநகைத்(து)**
**ஒன்று காலம் வந்த திங்கு ருத்து நானு டன்றுமைக்**
**கொன்று கால னூரி லுங்க ளாவி யுங்கொ டுக்கவே.**

[என்று காலகேயர் நின்று இசைத்த சொல் செவி கொளா, 'நன்று, காலகேயர் சொன்ன வாய்மை நன்று' எனா நகைத்து, ஒன்று காலம் வந்தது, இங்கு உருத்து நான் உடன்று உமை கொன்று காலன் ஊரில் உங்கள் ஆவியும் கொடுக்கவே.]

**விளக்கம் ;-** நின்று - (விசயன் காலகேயர்) எதிர் நின்று. வாய்மை - வார்த்தை. ஒன்று காலம் - பொருந்திய காலம், அதாவது, காலன் ஊரினிடம் உங்கள் ஆவியை அனுப்புதற்குப் பொருந்திய காலம். தன்னை இகழ்ந்து பேசிய காலகேயருக்கு விசயன் கூறிய பதில் இது.

**124. கால கேயர் விசய னின்று கட்டு ரைத்த வுறுதி கேட்(டு)**
**ஆல கால மெனவு ருத்த ழன்று பொங்கி யயின்முனைச்**
**சூல நேமி பாலம் வெய்ய சுடுச ரந்து ரத்தினார்**
**நீல மேனி செம்பு ணீரி னாணி றஞ்சி வக்கவே.**

[காலகேயர் விசயன் நின்று கட்டுரைத்த உறுதி கேட்டு, ஆலகாலம் என உருத்து அழன்று பொங்கி, அயில், முனை சூலம், நேமி, பாலம், வெய்ய சுடுசரம் துரத்தினார், நீல மேனி செம் புண் நீரினால் நிறம் சிவக்கவே,]

விளக்கம் :- அயில் - வேல். முனை சூலம் - கூரிய முனையை உடைய சூலம். நேமி - சக்கரம். பாலம் - மழு. துரத்தல் - விடுதல். விசயன் எதிர்மொழிந்ததைக் கேட்ட காலகேயர் கொதித்தெழுந்து, அவனது நீலமேனி இரத்தத்தால் சிவக்கும்படி பலவித ஆயுதங்களையும் பிரயோகித்தார், -- என்பதாம்.]

**125 விண்சு ழன்று திசை சு ழன்று வேலையுஞ் சுழன்றுசூழ்**
**மண்சு ழன்று வரைசு ழன்று வானி னின்ற வானுளோர்**
**கண்சு ழன்று யாதி னுங்க லங்கு றாத கலைவலோர்**
**எண்சு ழன்று மற்று முள்ள யாவை யுஞ்சு ழன்றவே.**

[விண் சுழன்று திசை சுழன்று வேலையும் சுழன்று, சூழ் மண் சுழன்று, வரை சுழன்று, வானில் நின்ற வான் உளோர் கண் சுழன்று, யாதினும் கலங்குறாத கலைவலோர் எண் சுழன்று, மற்றும் உள்ள யாவையும் சுழன்றவே.]

**விளக்கம் :-** விசயன்பால் அவுணர் செலுத்திய பலவிதப் படைகளின் வேகத்தால் விண்ணும் மண்ணும், மலையும், வானுளோர் கண்ணும் கடலும், எந்தக் காரணத்தாலும் கலங்குறாத ஞானியர் மனமும், மற்றும் உள்ள எல்லாப் பொருள்களும் சுழன்றன, என்பதாம். சுழன்று, என்பது ஒரே பொருளில் பலமுறை வந்துளதால், இது சொற்பொருட் பின் வருநிலை அணி.

**126. அவர்வி டுத்த படைகள் யாவு மழிய வானி டைக்கணைக்**
**கவர்தொ டுத்து விலகி மீள வவர்கள் காய மெங்கணும்**
**துவர் நி றத்த குருதி சோர்த ரச்ச ரந்து ரத்தினான்**
**தவரி னுக்கி ராக வன்கொ லெனவ ருந்த னஞ்சயன்.**

[அவர் விடுத்த படைகள் யாவும் அழிய வானிடை கணை கவர்தொடுத்து விலக்கி, மீள அவர்கள் காயம் எங்கணும் துவர் நிறத்த குருதி சோர்தர சரம் துரத்தினான், தவரினுக்கு இராகவன் கொல், என வரும் தனஞ்சயன்.]

**விளக்கம் :-** கணைக்கவர் - இரட்டை முக அம்பு. விலகி - அசுரர் விடுத்த படைகள் தன்மேல் படாதபடி ஒதுங்கி. காயம் - உடல். துவர் நிறம் - பவழ நிறம், சிவந்த நிறம். தவரினுக்கு இராகவன் கொல் - வில்தொழிலில் ஸ்ரீராமன்தானோ இவன், என வரும் தனஞ்செயன், என்று எல்லோரும் புகழ்ந்து பேசும்படி தோன்றிய தனஞ்செயன் (தவர் - வில்). அவுணர் ஏவிய படைகள் தன்மேல் படாது விலகி நின்று, அவர்களது படைகளை விண்ணிலேயே அழித்து, மேலும் அவர்களது உடல்களையும் அம்பு மாரியால் துளைத்தான்,—என்பதாம்.

**127. பார்த்த னெய்த வாளு மெய் படப்ப டப்ப தைத்(து)**
**ஆர்த்தெ ழுந்து நகரி னோடு மந்த ரத்தி னெல்லைபோய்**
**வார்த்த ரங்க வேலை யூடு மண்ணி னூடு மறையவத்**
**தூர்த்தர் செய்த வஞ்ச மாயை சொல்ல லாகு மளவதோ.**

[பார்த்தன் எய்த வாளி மெய் படப்பட பதைத்து. மீது ஆர்த்து எழுந்து நகரினோடும் அந்தரத்தின் எல்லை போய், வார் தரங்கம் வேலையூடும் மண்ணினூடும் மறைய, அ தூர்த்தர் செய்த வஞ்சம் மாயை சொல்லல் ஆகும் அளவதோ.]

**விளக்கம் :-** பார்த்தன் - பிரதையின் (குந்தியின்) மகனான அருச்சுனன், பார்த்தனது அம்புகள் தைத்ததால் வருந்திய அத் தூர்த்தர் (தீய அசுரர்) ஆர்த்தெழுந்து தங்கள் நகரோடு வானி

டத்தே சென்று, கடலினிடத்தும் மண்ணினிடத்தும் மறைந்து (அவர்கள்) செய்த வஞ்சனையுடைய மாயை சொல்லக்கூடிய அளவினது அன்று,—என்பது பொருள்.

**128.** **அண்ண றேரின் முன்ன தாகு மளவி றந்த தேரொடும்**
**விண்ணின் மீது திசைய ளக்கும் வெற்பின் மீது பொலியுமெக்**
**கண்ணு மாகு மக்க ணத்தின் மீள வுங்க ரந்திடும்**
**எண்ணலாவ தன்றதன்றி யியற்று மிந்த்ர சாலமே.**

[அண்ணல் தேரின் முன்னது ஆகும், அளவு இறந்த தேரொடும் விண்ணின்மீது திசை அளக்கும், வெற்பின்மீது பொலியும், எ கண்ணும் ஆகும், அ கணத்தின் மீளவும் கரந்திடும், எண்ணல்ஆவது அன்று, அது அன்று இயற்றும் இந்திர சாலம், ஏ.]

**விளக்கம் :-** (அசுரர்களைக்கொண்ட இரணியபுரம்) அருச்சுனன் தேரின் முன் தோன்றும், உடனே, கணக்கைக் கடந்த (அளவிலாத) தேர்களோடும் வானிடம் சென்று எங்கும் பரவித் திசைகளை அளக்கும், பிறகு, மலையின்மீது பொலிந்து தோன்றும், எங்கு உளதாகும். உடனே மறுபடியும் மறையும். (இவ்வாறு) அது அன்று இயற்றும் இந்திரசாலம் மனத்தில் அடங்காத தன்மையதாகும்—என்பது பொருள். அண்ணல் - விசயன். எக்கணும்- எங்கும். மாயம் - தெளிந்துகொள்ள முடியாத அற்புதச் செயல், எண்ணல் ஆவது அன்று - நினைக்கக்கூடிய தன்மையது அன்று.

**129.** **அந்த வஞ்சர் புரியு மாயை வகைய றிந்த ருச்சுனன்**
**சிந்தை கன்றி விழிசி வந்து தெய்வ வாகை வில்லையும்**
**மைந்து டன்கு னித்து வாளி வாயு வேக முடன்விடுத்(து)**
**எந்த வெந்த வுலகு மப்பு மாரி யாகி யற்றினான்.**

[அந்த வஞ்சர் புரியும் மாயை வகை அறிந்து அருச்சுனன், சிந்தை கன்றி, விழி சிவந்து தெய்வம் வாகை வில்லையும் மைந்துடன் குனித்து, வாளி வாயு வேகமுடன் விடுத்து எந்த எந்த உலகும் அப்புமாரி ஆ(க) இயற்றினான்.]

**விளக்கம் :-** மைந்து - வலிமை, பலம். எந்த எந்த உலகும் - அந்த நகரம் செல்லும் எல்லா இடமும். அப்பு - அம்பு, மாரி ஆக இயற்றினான் - (அம்பு) மழையாகச் சொரிந்தான். அசுரர்களின் மாயையின் விதத்தை அறிந்து, அந்நகரம் செல்லும் இடங்கள் எங்கும் விசயன் சரமாரி பொழிந்தான், என்க.

**130.** **தனித மேக மன்ன தேரு மொன்று தாவில் குன்றுபோல்**
**குனித ருங்க டுப்பின் மிக்க கொடிய வில்லு மொன்றுமேல்**
**கனிவு றுஞ்ச ரக்கு ழாம்வி சும்பி னெல்லை காட்டுமோர்**
**மனிதன் வின்மை நன்றுநன் றொனா மதித்து வஞ்சரே.**

[தனிதம் மேகம் அன்ன தேரும் ஒன்று, தா இல் குன்றுபோல் குனிதரும் கடுப்பில் மிக்க கொடிய வில்லும் ஒன்று, மேல் கனிவு உறும் சரம் குழாம் விசும்பின் எல்லை காட்டும் ஓர் மனிதன் வின்மை நன்று நன்று, எனா மதித்து வஞ்சரே,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** தனிதம் - இடி. தாஇல் - குற்றம் இல்லாத. குனிதரும் - வளையும் தன்மையுள்ள. கடுப்பு - வேகம். கடுப்பின் மிக்க கொடிய குனிதரும் வில் என்று இயைக்க. வில் - விசயனது காண்டீபம். மேல் கனிவு உறும் சரக்குழாம் - மிகவும் (கடுமையின்) முதிர்ச்சி பெற்ற அம்பு ராசிகள். விசும்பின் எல்லை காட்டும் - ஆகாயம் முழுவதும் பரவச்செய்யும். வின்மை - வில் தொழில். தேர் ஒன்று, மனிதனும் ஒருத்தன், அவன் வில் தொழில் நன்று நன்று என்று வஞ்சர் எண்ணிப் பாராட்டிப் பின்னர், சரமாரி பொழிந்து ஆரவாரித்தனர். இதுவும் அடுத்த கவியும் குளகம். தாவில் குன்றுபோல் என்றது, சிவபிரான் திரிபுரம் எரித்த காலத்தில் கையாண்ட மேரு மலையாகிய வில் வளைந்ததைக் குறிக்கும். விசயனது காண்டீபம் இன்று அதைப்போல் வளைந்து தொழில் செய்தது, என்பது பொருள்,

கலிவிருத்தம்

**131.** **புருவவில் வளைவுற விழிகனல் பொதுளக்**
**கருமுகி லனையவர் கடுகினர் முடுகிச்**
**சரமழை யிடிமழை தழன் மழை சொரியாப்**
**பெருமழை யெனநனி பிளிறின ரெவரும்.**

[புருவம் வில் வளைவு உற, விழி கனல் பொதுள, கருமுகில் அனையவர் கடுகினர், முடுகி சரம் மழை, இடிமழை, தழல் மழை சொரியா, பெரு மழை என நனி பிளிறினர் எவரும்.]

**விளக்கம் :-** புருவவில் வளைவு உற-புருவமாகிய வில்கோபத்தால் வளைந்து நெற்றி ஏற. கனல் பொதுள - தீ நிறைந்து நிற்க. பிளிறினர் - (சரம், இடி, தீ மழைகளை அசுரர் எல்லோரும் விசயன் மேல் பொழிந்து) கர்ச்சனை செய்தனர்,—என்பதாம்.

**132.** **இவருயிர் கவர்தர விடமிது வெனவே**
**நவையறு திறலுடை நகுசர முதையா**
**அவரவ ரகலமு மணிகிளர் கரமும்**
**தவருடன் விழவிழ வொருதனி பொருதான்.**

[இவர் உயிர் கவர்தர இடம் இது எனவே, நவை அறு திறல் உடை நகு சரம் உதையா, அவர் அவர் அகலமும் மணிகிளர் கரமும் தவருடன் விழ விழ ஒரு தனி பொருதான்.]

**விளக்கம் :-** கவர்தர - பறிக்க, அழிக்க. இடம் இது எனவே- இடம் இதுவே (மார்பே) என்று கொண்டு. நவை அறு - குற்ற

மற்ற. நகு சரம் - விளங்கும் சரம், அல்லது அசுரர்களைப் பார்த்து நகைக்கும் சரம். உதையா - செலுத்தி. அகலம் - மார்பு. தவர் - வில். ஒரு தனி பொருதான் - தன்னந்தனியே (துணையில்லாமல் விசயன்) போர் செய்தான். இடம், என்பதற்கு, இதுவே தக்க சமயம், என்றும் பொருள் கொள்ளலாம். விழ விழ,—(மிகுதி பற்றிய அடுக்கு) மிகுதியாக அறுந்து விழ. விசயன், அசுரர்களின் மார்பு பிளந்து விழவும், அவர்களது கைகள் பற்றிய வில்லுடனே அறுந்து விழவும், தனியே நின்று போர் செய்தான்,—என்பதாம்.

**133.** **அவன்விடு மடுகணை யடையவு நொடியில்**
**பவனன தெதிர்சரு கென நனி பறியக்**
**கவனமொ டெழுபரி ரதகதி குலையத்**
**துவனியொ டெறிபடை யெதிரெதிர் தொடவே.**

[அவன் விடும் அடு கணை அடையவும் நொடியில் பவனனது எதிர் சருகு என நனி பறிய, கவனமொடு எழு பரி ரதம் கதி குலைய துவனியொடு எறி படை எதிர் எதிர் தொடவே.]

**விளக்கம் :-** அவன் விடுகணை அடையவும் - விசயன் விட்ட கொல்லவல்ல அம்புகள் எல்லாம். பவனன் - வாயு, காற்றின் எதிரே பட்ட சருகு என மிக விரைந்து ஓட என்பது இரண்டாவது அடியின் பொருள். பறிய - ஓட. கவனம் - விரைவுடைய, நடை. விரைவுடைய கதியுடன் செல்லும் குதிரைகள் பூட்டிய இந்திர ரதத்தின் செல்லுகை கெடும்படி, என்பது மூன்றாவது அடியின் பொருள். துவனி - ஆர்ப்பு. எதிர் எதிர் தொட - விசயனது அம்புகளுக்கு எதிராக, அசுரர்கள் அம்புகளைப் பிரயோகிக்க. இதுவும், தொடரும் மூன்று கவிகளும் குளகம். எதிர் எதிர், என்றது ''விசயனது கணைகளை அடக்க, அல்லது மாற்ற வல்ல'', என்ற பொருளது. பவனன், அசுரர்கள் போக்கும் அம்புகளுக்கும், சருகு விசயனது அம்புகளுக்கும் உவமையாகும். அசுரர்கள் விசயனோடு கடும்போர் புரிந்தனர், என்பதாம். விசயனது கணைகள் திரும்பியோடவும், தேர் கதி குலையவும் அவர் சரம் செலுத்தினர், என்க.

**134.** **வரிசிலை விறலுடை மகபதி மகனும்**
**எரிவிதி யவுணரு முறைமுறை யிகலிப்**
**பொருதனர் ரகுகுல புதல்வனு மடுபோர்**
**நிருதரு மெதிர்பொரு மமர்நிக ரெனவே.**

[வரிசிலை விறல் உடை மகபதி மகனும், எரிவிழி அவுணரும் முறை முறை இகலி பொருதனர், ரகு குல புதல்வனும் அடுபோர் நிருதரும் பொரும் அமர் நிகர் எனவே.]

**விளக்கம் :-** ரகுகுல புதல்வன் - இராமன். அடுபோர் நிருதர்-இராவணாதி அரக்கர். இராமனும் இராவணாதி அரக்கர்

களும் செய்த போரை, மகபதி மகனாகிய விசயனும் எரிவிழி அவுணரும் செய்த போர் நிகர்க்கும் என்று சொல்லும்படி இரு திறத்தோரும் போர் புரிந்தனர், என்றபடி.

## அவுணர் அழிதல்

**135. இப்படை களினுயி ரழிகில ரிவரென்(று)**
**அப்படை களையொழி தரவட லுடையார்**
**மெய்ப்புகும் விறலது விடையவ னருளும்**
**கைப்பக ழியைமன னுறநனி கருதா.**

*[இ படைகளின் உயிர் அழிகிலர் இவர், என்று அ படைகளை ஒழிதர, அடல் உடையார் மெய் புகும் விறலது விடையவன் அருளும் கை பகழியை மனன் உற நனி கருதா.]*

**விளக்கம் :-** ஒழிதரல் - ஒழிதல், தவிர்தல், நீங்கல், அதாவது (சாதாரணமான படைகளால் இவர் அழியாரென்று, அப் படைகளை) எய்தல் தவிர்த்து. அடல் - வலிமை. விடையவன் - சிவ பெருமான். மனம் உற நனி கருதா - மனம் பொருந்த நன்கு தியானித்து,—அடுத்த செய்யுளோடு தொடரும். விசயன் அசுரர் களை அழித்தற்குப் பாசுபதக் கணையே ஏற்றது என்று எண்ணி, அவ் வத்திரத்தைத் தியானித்தான்,—என்க. கை பகழி - கையில் வர சித்தமாகவுள்ள பாசுபதக்கணை.

**136. முச்சிர முடையது மூவிரு திரடோள்**
**அச்சிர முடனெதி ரழல்பொழி தறுகண்**
**நச்சர வனையது நகமிறு முனைவாய்**
**வச்சிர மனையது வருதலு மகிழா.**

*[மு சிரம் உடையது, மூ இரு திரள் தோள் அசிரமுடன் எதிர் அழல் பொழி தறுகண் நச்சு அரவு அனையது, நகம் இறும் முனை வாய் வச்சிரம் அனையது வருதலும் மகிழா.]*

**விளக்கம் :-** சிரம்-தலை. மூ இரு திரள் தோள்-ஆறு திரண்ட தோள்கள். அச்சிரம் - (அசிரம்) தலையில்லாதது, உடல். எதிர் அழல் பொழி தறுகண் நச்சு (நஞ்சு) அரவு - காண்போர் எதிரில் நெருப்பைக் கொட்டுவதும், அஞ்சாமை தோன்றுவதுமான விஷத்தையுடைய பாம்பு. நகம் - மலை. வச்சிரம் - இந்திரனது ஆயுதமான வச்சிரப் படை. தியானித்த அளவில் வந்த பாசுபதாத்திரம், மூன்று தலைகளையும், ஆறு தோள்களுடன் கூடிய உடலையும் தீயைக் கக்குகின்ற அஞ்சாமை தோன்றும் கண் களையும் கொண்ட விஷ நாகம் போன்றதும், மலையைப் பிளப்பதற் குரிய கூரிய முனையை உடைய வச்சிராயுதம் போன்றதும் ஆகும். அது தன்னிடம் வருதலும் விசயன் மகிழ்ந்தான்,—என்க. அசிரம், என்பது எதுகை நோக்கி அச்சிரம் என வலி மிகுந்து நின்றது. நாகம்- மலை.

**137. பசுபதி யருளிய பகழிமுன் வரலும்
விசயனு நறைவிரி மலர்கொடு பரவித்
திசைதொறு மமர்புரி திறலுடை வடிவேல்
அசுரர்த முடலுக வடலுடன் விடவே**

*[பசுபதி அருளிய பகழி முன் வரலும், விசயனும் நறை விரி மலர் கொடு பரவி, திசை தொறும் அமர் புரி திறல் உடை வடிவேல் அசுரர் தம் உடல் உக அடலுடன் விடவே.]*

**விளக்கம் :-** பசுபதி - ஜீவன்களுக்குத் தலைவனான சிவ பெருமான். நறை-தேன். பரவி - அருச்சனை செய்து. எல்லாத் திசைகளில் இருந்தும் போர் செய்யும் திறல் உடைய கூரிய வேல் ஏந்திய அசுரர்களின் உடல் அழியும்படி பாசுபதக்கணையை வலிமையோடு செலுத்த, என்பது ஈற்றடிகளின் பொருள். தியானித்த அளவில், தன்னிடம் வந்த அத்திரத்தை மலர்கொண்டு அருச்சித்து வணங்கி, அசுரர்களின்மேல் விசயன் ஏவினான், என்க.

**138. அக்கணை விசையுட னகல்வெளி மிசைபோய்
நக்கது பிறையெயி றிளநில வெழவே
முக்கணு மழலுக முரணொடு முடுகிப்
புக்கது தனுசர்த முடல்பொடி படவே.**

*[அ கணை விசையுடன் அகல் வெளி மிசை போய் நக்கது, பிறை எயிறு இள நிலவு எழவே, முக்கணும் அழல் உக முரணொடு முடுகி, புக்கது தனுசர் தம் உடல் பொடி படவே.]*

**விளக்கம் :-** அகல் வெளி - பரந்த ஆகாயம். நக்கது - சிரித்தது. பிறை எயிறு - அர்த்த சந்திரன் போன்ற பற்கள். முக்கண் - முகந்தோறும் மூன்று கண்கள். விசயன் பிரயோகித்த அத்திரம், வான் அடைந்து, தனது பிறை எயிற்றினின்று இளநிலா வெளிப்படச் சிரித்து, தலை தோறும் உள்ள மூன்று கண்களி லிருந்தும் நெருப்பு வெளிப்பட வலிமையோடு விரைந்து அசுரர்தம் உடல் பொடியாகும்படி (அவர்களது உடலினுள்) புகுந்தது, என்பதாம்.

**139. மாருதம் விசையுடன் வடவனல் கொளுவிக்
கார்தொறு நிரைநிரை கடிகுவ ததுபோல்
தேர்தொறு மமர்புரி யவுணர்க டேகத்(து)
ஓரொரு கணையொரு நொடியினி லுறவே.**

*[மாருதம் விசையுடன் வட அனல் கொளுவி, கார்தொறும் நிரை நிரை கடிகுவது அதுபோல், தேர்தொறும் அமர்புரி அவுணர்கள் தேகத்து ஓர் ஒரு கணை ஒரு நொடியினில் உறவே,— இதுவும் அடுத்த கவியும் குளகம்.]*

**விளக்கம் :-** மாருதம் - காற்று. வட அனல் - வடவா முகாக்னி. கொளுவி - துணைகொண்டு. கார் - மேகம். நிரை நிரை - வரிசை. கடிகுவது - (கடிவது) அழிப்பதாகிய. அது போல் - அத்தன்மைபோல். உற - (அசுரர்களின் உடலில்) பொருந்த. அக்கினியின் துணை கொண்டு காற்று, வரிசை கொண்ட மேகங்களை எல்லாம் அழியச் செய்தல்போல், தேர் அமர்ந்து போர் செய்யும் அசுரர்களின் உடல் தோறும் ஒவ்வோர் அம்பு தைத்துப் பொருந்த,—அடுத்த கவியோடு சேர்ந்து முடியும். கொளுவி - கூட்டிக் கொள்ளுதல். கடிகுவது என்பதிலுள்ள கு சாரியை.

**140** **மகபதி யரிசிறை வரைநிக ரெனவே**
**திசைதொறு மவுணர்கள் சிரநனி சிதறிப்**
**புகையொடு தெறுகன லகல்வெளி பொதுளக்**
**ககபட லமுமுறை கஞலின கனமே.**

[மகபதி அரி சிறை வரை நிகர் எனவே, திசைதொறும் அவுணர்கள் சிரம் நனி சிதறி, புகையொடு தெறு கனல் அகல் வெளி பொதுள, கக படலமும் முறை கஞலின கனமே.]

**விளக்கம் :-** இந்திரனால் அரியப்பெற்ற இறகுகளை உடைய மலைகளே நிகர் என்று சொல்லும்படி, திசைகள் எங்கும் அவுணர் களின் தலைகளை மிகவும் சிந்தி, அழிக்கும் கனல் புகையோடுகூட விரிந்த வானவெளியில் பரவி நிறைய, கக படலமும் (கழுகு முதலிய பறவைக் கூட்டமும்) யுத்த பூமியில் முறையே நெருங்கின,-என்பது பொருள். பொதுள - பரவ. ககம் - ஆகாயத்திற் செல்வது. எனவே, கழுகு முதலிய புலால் உண்ணும் பறவைகள் (வட மொழித் தொடர்). கஞலின - நெருங்கின.

**141.** **ஆடின வறுகுறை யலகைக ளுடனின்(று)**
**ஓடின திசைதொறு முகுகுரு தியினீர்**
**நீடின பிணமலை நிரைநிரை நெறிபோய்த்**
**தேடின கதிர்களு மிசைவழி செலவே.**

[ஆடின அறு குறை அலகைகளுடன் நின்று, ஓடின திசை தொறும் உகு குருதியின் நீர், நீடின பிணமலை நிரை நிரை, நெறி போய் தேடின கதிர்களும் மிசை வழி செலவே.]

**விளக்கம் :-** அறு குறை - தலை அறுபட்ட உடல்கள், அலகை - பேய். பிணமலை நீடின - மலை போன்ற பிணக் குவியல்கள் வானளாவி நீண்டன. கதிர்கள் - சந்திர சூரியர்கள். மிசை - வானம். பேய்களோடு அவுணர்களின் குறை உடல்கள் கூத்தாடின, சிந்திப் பெருகிய இரத்தம் திக்குகள் எங்கும் பெருகி ஓடின. பிணக் குவியல்கள் மலைபோல் வானில் வரிசை வரிசை யாக நீண்டன. வானவெளியில் செல்வதற்குக் கதிர்களும் வழியை மேலே சென்று தேடின,—என்பதாம். ஈற்றடிகள் உயர்வு நவிற்சி

யின் பாற்படும். இது, படுகளச் சிறப்பின் வர்ணனை. கதிர்கள் - சந்திர சூர்யர்கள்.

**142. மாதவ மிகுதிற லசுரரை மறலிக்கு**
**ஓதன மிடுமவ னொருசிலை வலிகண்டு**
**ஆதப னருணணி லணிகிள ருயர் தேர்ச்**
**சூதனும் விசயன் றிணையடி தொழுதான்.**

[மாதவம் மிகு திறல் அசுரரை மறலிக்கு ஓதனம் இடும் அவன் ஒரு சிலை வலி கண்டு, ஆதபன் அருணனில் அணிகிளர் உயர் தேர் சூதனும், விசயனது இணை அடி தொழுதான்.]

ஓதனம் - சோறு, உணவு. ஆதபன் - சூரியன், அருணன் - சூரியனது தேர்ப்பாகன். அணி கிளர் - அழகின் மிக்கதான. சூதன் - இந்திர சாரதியாகிய மாதலி. தவ பலத்தோடு தேகபலமும் மிகவுடைய அவுணர்களை யமனுக்கு விருந்திட்ட விசயனது வின்மை கண்டு வியந்த, சூரிய சாரதியான அருணனை ஒத்த, அழகு மிகுந்த சிறந்த இந்திரசாரதியாகிய மாதலி, அவனை (விசயனை) வணங்கினான்,—என்பதாம்.

**143. தள்ளினர் தமதுயர் சலமினி யிலதென்(று)**
**உள்ளினர் விசயன துறுதியு முரனும்**
**அள்ளின ரமுதென வகநனி மகிழாத்**
**துள்ளின ரிமையவர் சுரபதி முதலோர்.**

[தள்ளினர் தம துயர் சலம் இனி இலது என்று, உள்ளினர் விசயனது உறுதியும் உரனும், அள்ளினர் அமுது என அகம் நனி மகிழா, துள்ளினர் இமையவர் சுரபதி முதலோர்.]

**விளக்கம் :-** சுரபதி முதலோர் (ஆகிய) இமையவர், இனி சலம் இலது என்று தமது துயர் தள்ளினர், விசயனது உறுதியும் உரனும் உள்ளினர், அமுது அள்ளினர் என அகம் நனி மகிழா துள்ளனர்,—என்பது அன்வயம். அமுது அள்ளினர் என-அமிர்தத்தை அள்ளி அருந்தினர் போல (அகம் மகிழ்ந்தார்) சலம் - பகை.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**144. தேனமர் கமலத் தோங்குந் திசைமுகன் வரத்தி னாலோ**
**மானவன் விசய னுய்த்த வடிநெடுஞ் சரத்தி னாலோ**
**தானவர் தானை யெல்லா மடிந்தவத் தளர்வி னாலோ**
**போனது கரந்து வஞ்ச ரிரணிய புரமு மன்னோ.**

[தேன் அமர் கமலத்து ஓங்கும் திசைமுகன் வரத்தினாலோ, மானவன் விசயன் உய்த்த வடி நெடு சரத்தினாலோ, தானவர்

தானை எல்லாம் மடிந்த அ தளர்வினாலோ, போனது கரந்து வஞ்சர் இரணியபுரம், மன், ஓ.]

**விளக்கம் :-** மானவன் - மனிதன்; அல்லது மானத்தை உடையவன். 'திசை முகன் வரத்தினாலோ' என்பது, 'பிரும்ம தேவன் கொடுத்த வரம் முடிந்ததனாலோ', என்ற பொருளது. தானவர் அழிந்ததனால் ஏற்பட்ட தளர்ச்சியால் (மன வருத்தத் தால்) அழிந்தவர்களோடு அவர்கள் வசித்த இரணியபுரமும் கரந்து போனது (மறைந்தது), என்க. இது, ஐயத்தின் அடியதான தற்குறிப்பேற்ற அணி. மடிந்த காரணத்தால் உண்டானது தளர்ச்சி.

**145. வாணகை தவளம் வாங்கு மவுணர்தம் மகளிர் தெய்வப்**
**பூணொடு குழைகள் வாங்கப் புனைவய வாகை வாங்கும்**
**நாணுயர் தனுவின் வாங்கி நயந்திளைப் பாறி நின்றான்**
**தூணொடு பறம்பு வாங்குஞ் சுடர்மணிக் கடகத் தோளான்.**

[வாள் நகை தவளம் வாங்கும் அவுணர் தம் மகளிர் தெய்வம் பூணொடு குழைகள் வாங்க, புனை வயம் வாகை வாங்கும் நாண் உயர் தனுவின் வாங்கி, நயந்து இளைப்பு ஆறி நின்றான், தூணொடு பறம்பு வாங்கும் சுடர் மணி கடகம் தோளான்.]

**விளக்கம் :-** தூணொடு பறம்புகளை (மலைகளை) வாங்கும் (ஒக்கும்) சுடர் மணி கடகம் (அணிந்த) தோள்களை உடைய விசயன், வில்லினின்று நாண் கயிற்றை இறக்கி இளைப்பாறி னான்,— என்றபடி. வாள் நகை தவளம் வாங்கும் அவுணர் தம் மகளிர் - ஒளி விளக்கமுடைய பற்களுக்கு முல்லை அரும்பும் வெட்கிப் பின் வாங்கும்படியான அவுணர் மகளிர். பூணொடு குழைகள் வாங்க - ஆபரணங்களோடு காதணிகளையும் கழற்ற, தெய்வப் பூண் - தாலி (திருமங்கல்யம்). புனைவயம் வாகை வாங்கும் உயர்தனு - அணிதற்குரிய வெற்றிச் சின்னமான வாகைப் பூமாலை சூடிய சிறந்த காண்டீபம் என்ற வில். நாண் வாங்கி - வில்லினின்று நாணை அகற்றி. நயந்து - விரும்பி, மகிழ்ந்து.

வாங்கல், என்பது தோல்வியால் பின்னிடல், கழற்றல், சூடல், இறக்கல் அல்லது அகற்றல், ஒத்தல் என்ற பொருள்களில் வந்துளது, இது, சொல் பின்வருநிலை அணி, ஆகும்.

**146 பார்கொண்ட தசுரர் மெய்யிற் பரந்தசெங் குருதி வெள்ளம்**
**கார்கொண்ட விசும்பு கொண்ட தவர்பிணக் காயம் வானோர்**
**ஊர்கொண்ட துரிமை யோடு மவருயிர் மீண்டு மென்றால்**
**தார்கொண்ட வமரர்க் கெவ்வா றிவன்பகை தடிந்த தம்மா.**

[பார் கொண்டது அசுரர் மெய்யின் பரந்த செம் குருதி வெள்ளம், கார் கொண்ட விசும்பு கொண்டது அவர் பிணம் காயம்,

வானோர் ஊர் கொண்டது உரிமையோடும் அவர் உயிர் மீண்டும் என்றால், தார் கொண்ட அமரர்க்கு எவ்வாறு இவன் பகை தடிந்தது, அம்மா.]

**விளக்கம் :-** அசுரர் மெய்யின் பரந்த செம் குருதி வெள்ளம் பார் கொண்டது, அவர் பிணக்காயம் கார் கொண்ட விசும்பு கொண்டது, அவர் உயிர் மீண்டும் உரிமையோடு வானோர் ஊர் கொண்டது, என்றால், தார் கொண்ட அமரர்க்கு இவன் பகை தடிந்தது எவ்வாறு? அம்மா,—என்பது அன்வயம். அசுரர் மெய்யினின்று பெருகிய இரத்த வெள்ளம் பூமியைத் தனதாகக் கொண்டு பரவிற்று, அவரது உயிரற்ற உடற் குவியல்கள் வானத்தைத் தமக்குரிய இடமாகக் கொண்டன, அவர்களது ஆவிகளோ தேவ லோகத்தை உரிமையாக்கிக்கொண்டன; எனின், விசயன், அமரர் பகைவர்களாகிய அசுரரை அழித்தான், என்பது எவ்வாறு அமையும்? - என்பது பொருள். அம்மா, வியப்புப் பொருளது. ''இறந்தவர் இரத்தம் பூழியிலும், உடல்கள் வானத்தளவு மேடு கொண்டும், ஆவி வீரசுவர்க்கத்திலும் வியாபித்தன பற்றி விசயன் அசுரரை அழித்தான், என்பது எவ்வாறு?'' என்றார். இது வஞ்சப் புகழ்ச்சியாகும். பிணக்காயம் - இரு பெயரொட்டுப் பண்புத் தொகை, உயிர் நீங்கியதாகிய உடல்.

## விசயன் வானுலகம் செல்லல்

**147. இவ்வகை யசுர சேனை யாவையு மிரிய நூறிக்**
**கொய்வரும் வரிவில் வீரன் குரகதத் தேர்மேற்கொண்டான்**
**வைவரு முனைவேற் சித்ரசே னன்வா சவனுக் கோடி**
**நைவரு துயர நீங்க நவின் றனன் புரிந்த வெல்லாம்.**

[இ வகை அசுர சேனை யாவையும் இரிய நூறி கொய் வரும் வரிவில் வீரன் குரகதம் தேர் மேல் கொண்டான், வை வரு முனை வேல் சித்ர சேனன் வாசவனுக்கு ஓடி, நைவரு துயரம் நீங்க நவின்றனன் புரிந்த எல்லாம்.]

**விளக்கம் :-** (அசுரர்தலை) அறுத்து வருதல் உடைய வரி வில் வீரனாகிய விசயன், இவ்விதம் அசுர சேனையை வலிகெடும்படி அழித்துத் தேர்மேல் ஏறிக் கொண்டான் என்பது, முதல் இரண்டடிகளின் பொருள். வை வருமுனை மேல் சித்ரசேனன் - கூரிய முனையை உடைய வேலைத் தாங்கிய சித்ரசேனன். நைவரு துயரம் - வருத்தி வந்த துன்பம். சித்ரசேனன் என்ற கந்தருவன் இந்திரனிடம் விரைந்து சென்று அருச்சுனன் அசுரரை அழித்த செய்தியைக் கூறினான், என்பதாம். கொய்வு அரும்வில், என்று பகைவரால் அறுத்தற்கு அரிய வில், என்பது பொருளாகும். கொய்வு அரும் வில், என்று பிரித்துக்கொண்டால், அறுத்தற்கு அரிய வில், என்பது பொருளாகும்.

**148. சித்திர சேனன் மாற்றஞ் செவிக்கமு தாகக் கேட்டுப்
பத்திகொள் விமானச் சோதிப் பைம்பொன்மா நகரி
கோடித்து
எத்திசை யவரு மேனை யிமையவர் குழாமுஞ் சூழ
வித்தக விசயன் றன்னை விபுதர்கோ னெதிர்கொண்
டானே.**

[சித்திரசேனன் மாற்றம் செவிக்கு அமுது ஆக கேட்டு பத்தி கொள் விமானம் சோதி பைம்பொன் மா நகரி கோடித்து, எ திசையவரும் ஏனை இமையவர் குழாமும் சூழ, வித்தகம் விசயன் தன்னை விபுதர்கோன் எதிர் கொண்டான், ஏ.]

**விளக்கம் :-** பத்தி கொள் - வரிசை கொண்ட, விமானம் - ஸ்தூபி. கோடித்து - அலங்கரித்து, எத்திசையவர் - எல்லாத்திக்கு களிலும் உள்ள திக் பாலகர்கள். ஏனை தேவர் - மற்றையவரான தேவர். விபுதர் கோன் - இந்திரன். சித்திரசேனன் கூறியது கேட்ட இந்திரன், நகரை அலங்கரித்துத் திக்பாலர்கர்களோடும், தேவர் கூட்டத்துடனும், வித்தக விசயனை எதிர் கொண்டான்,—என்ப தாம். வித்தகம் - அறிவு.

**149. கின்னர மிதுன மின்சொற் கீதங்க ளினிது பாடத்
துன்னியெங் கெங்குஞ் சேரத் துந்துபிக் குழாநின் றார்ப்பப்
பன்னரு மறைக டெய்வ முனிவரர் பகர்ந்து வாழ்த்த
மன்னவர் மன்னன் றன்னை வாசவன் தழுவிக் கொள்ளா.**

[கின்னரமிதுனம் இன் சொல் கீதங்கள் இனிது பாட, துன்னி எங்கு எங்கும் சேர துந்துபி குழாம் நின்று ஆர்ப்ப, பன்ன அரு மறைகள் தெய்வம் முனிவரர் பகர்ந்து வாழ்த்த, மன்னவர் மன்னன் தன்னை வாசவன் தழுவிக்கொள்ளா,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** கின்னர மிதுனம் - ஒருவகைத் தேவ இனத்தைச் சேர்ந்ததும், ஆணும் பெண்ணுமாய்ப் பாடித்திரிவதுமான இரட்டை. துந்துபி குழாம் சேர எங்கெங்கும் துன்னி நின்று ஆர்ப்ப - துந்துபி என்னும் தேவ முரசங்கள் ஒன்றுபட்டு எங்கெங் கும் நெருங்கி இருந்து முழங்க. கின்னர மீதுனம் பாடவும், துந்துபி முழங்கவும், முனிவர் வேதவாக்கியங்களால் (விசயனை) வாழ்த் தவும், மன்னர் மன்னனாகிய விசயனை வாசவன் தழுவிக்கொள்ள, —அடுத்த செய்யுளோடு சேரும்.

**150. கையுடைக் கயிலை யன்ன கடகரிப் பிடரின் வைத்து
மையுடைக் கொண்டல் வாக னகர்வலஞ் செய்த போதில்
மெய்யுடைக் கலைகள் வல்லான் விஞ்சைய னொருவன்
கண்டு
பொய்யுடைத் தலத்தோர்க் கின்ன பொறுக்குமோ புனித
வென்றான்.**

[கை உடை கயிலை அன்ன கடம் கரி பிடரின், மை உடை கொண்டல் வாகன் நகர் வலம் செய்த போதில், மெய் உடை கலைகள் வல்லான் விஞ்சையன் ஒருவன் கண்டு, பொய் உடை தலத்தோர்க்கு இன்ன பொறுக்குமோ புதனித, என்றான்.]

**விளக்கம் :-** கையுடை கயிலை அன்ன கடகரி - துதிக்கையை உடைய கயிலாச மலையைப் போன்ற தோற்றமுடைய மதயானை யாகிய ஐராவதம். மையுடைக் கொண்டல் வாகன் - கரிய மேகத்தை வாகனமாக உடைய இந்திரன். மெய்யுடைக் கலைகள் வல்லான் விஞ்சையன் - உண்மையான பொருள்களைக் கொண்ட கலைகளில் வல்லவனாகிய வித்யாதரன். பொய்யுடைத் தலம் - அழிதலையுடைய, அதாவது நிலைத்திருத்தல் இல்லாத மண் ணுலகம். அழியும் மண்ணுலகத்தினனான விசயனுக்கு இத்தகைய வரவேற்புத் தக்கதாகுமோ என்று விஞ்சயன் ஒருவன் விபுதர் தலைவனான இந்திரனைக் கேட்டான்,—என்பதாம். ஐராவதம் வெண்ணிற முடையதாதல்பற்றி 'கயிலை அன்ன' என்றார். பொறுக்குமோ - தகுதியுடையதாகுமோ.

**151. விஞ்சைய னுரைத்த மாற்றம் விபுதர்கோன் செவியிற் சென்று**
**நஞ்செனப் புகுத லோடு நயனங்கள் செந்தீக் கால**
**நெஞ்சினி லறிவி லாதாய் நீயிது கேட்டி யென்னா**
**மஞ்செனக் கரிய மெய்யான் மனங்கனன் றினைய சொல்வான்.**

[விஞ்சையன் உரைத்த மாற்றம் விபுதர்கோன் செவியில்சென்று நஞ்சு என புகுதலோடும், நயனங்கள் செம் தீ கால, நெஞ்சினில் அறிவு இலாதாய், நீ இது கேட்டி என்னா, மஞ்சு என கரிய மெய்யான் மனம் கனன்று இனைய சொல்வான்.]

**விளக்கம் :-** பூலோகவாசியான விசயனுக்கு இவ்விதச் சிறப்பு அமையுமோ, என்று கூறிய விஞ்சையனுக்கு இந்திரன் மனக் கொதிப்புடன் பதில் மொழிந்தான்,—என்க. நயனங்கள் - இந்திர னுடைய ஆயிரங் கண்கள்.

**152. ஆதிநா யகன்மா மாய னமரர்தந் துயரு மேனைப்**
**பூதல மடந்தைக் குற்ற புன்மையுந் தீர்ப்பா னெண்ணிச்**
**சீதைதன் கொழுந னான திண்டிற லிராமன் போல**
**ஓதநீ ருலகின் மீண்டு மருச்சுன னுருவங் கொண்டான்.**

[ஆதி நாயகன் மா மாயன் அமரர் தம் துயரும் ஏனை பூதலம் மடந்தைக்கு உற்ற புன்மையும் தீர்ப்பான், சீதை தன் கொழுநன் ஆன; திண் திறல் இராமன் பொல, ஓதம் நீர் உலகில் மீண்டும் அருச்சுனன் உருவம் கொண்டான்.]

**விளக்கம் :-** ஆதி நாயகன் - முழுமுதற் கடவுள். தேவர்களின் துயரத்தையும் பூமிதேவியின் துன்பத்தையும் தீர்க்கும் பொருட்டுச் சீதையின் கணவனாய்த் தோன்றிய இராமன் போல, அவனே, இப்பொழுது அருச்சுனன் உருவங் கொண்டு பூமியில் தோன்றியுள்ளான், என்று இந்திரன் விஞ்சையனுக்குக் கூறினான், என்பதாம்.

துவாபர யுகத்தில் அசுரர்கள் விண்ணுலகத்தாருக்கும் மண்ணுலகத்தாருக்கும் துன்பங்களைச் செய்து அதர்மத்தைப் பெருக்கி வரவும், பூமிதேவியின் பிரார்த்தனைக்கு இசைந்து திருமால், கிருஷ்ண பலராமர்களாகவும், அருச்சுனனாகவும் அவதாரம் செய்தான், என்பது வரலாறு.

**153. ஆதலான் மனித னென்றிவ் வருச்சுனன் றன்னை யின்னே**
**நீதியா லமரர் யாரு நெஞ்சினி லிகழ லென்று**
**மாதர்கள் வீதி தோறு மலர்மழை சொரிந்து வாழ்த்தக்**
**கோதிலா வமரர் கோமான் கொண்டுதன் கோயில்**
**சேர்ந்தான்.**

[ஆதலால் மனிதன் என்று இ அருச்சுனன் தன்னை இன்னே நீதியால் அமரர் யாரும் நெஞ்சினில் இகழல், என்று (சொல்லி), மாதர்கள் வீதி தோறும் மலர்மழை சொரிந்து வாழ்த்த, கோது இலா அமரர் கோமான், கொண்டு தன் கோயில் புக்கான்.]

**விளக்கம் :-** அருச்சுனனை மனிதன் என்று இகழல் வேண்டா, என்று அமர்களுக்குச் சொல்லி, தேவமாதர் மலர் தூவி வாழ்த்த, இந்திரன் அவனை அழைத்துக்கொண்டு தனது மாளிகை சேர்ந்தான்,—என்பதாம். நீதி - முறை. மனிதருக்குரிய முறையால் விசயனை மதித்து இகழ வேண்டா, என்று இந்திரன் கூறினான், என்க.

**154. அரிமுகக் கனக பீடத் தண்ணலை யிருத்தி யண்டர்**
**இருபுடை மருங்கு நிற்ப விந்திர னிருந்த பின்னர்**
**மருவுபொற் றடந்தே ரூரு மாதலி தன்னை நோக்கிப்**
**புரிசிலை விசயற் குற்ற போர்த்தொழில் புகனீ யென்றான்.**

[அரிமுகம் கனகம் பீடத்து அண்ணலை இருத்தி, அண்டர் இருபுடை மருங்கு நிற்ப, இந்திரன் இருந்த பின்னர், மருவு பொன் தடதேர் ஊரும் மாதலி தன்னை நோக்கி, புரி சிலை விசயற்கு உற்ற போர் தொழில் புகல் நீ என்றான்.]

**விளக்கம் :-** அரிமுகப் பீடம் - சிம்மாசனம். அண்ணல் - விசயன். அண்டர் - தேவர். மருவு - விரும்புதற்குரிய, அருச்சுனனுக்கு நிவாத கவசர் காலகேயர் என்பாரோடு நிகழ்ந்த போரைப் பற்றி விரித்துரைப்பாயாக, என்று இந்திரன் மாதலியைக் கேட்டான், என்க.

**155. மற்றவன் றொழுது போற்றி வானவர் குழுவுக் கெல்லாம்
கொற்றவ வென்னா லின்று கூறலாந் தகைமைத் தன்றால்
உற்றெதிர் மூன்று கோடி யசுரரு முடனே சேர
இற்றது கண்டேன் பின்னர் வில்லினா ணிடியுங் கேட்டேன்.**

[மற்று அவன் தொழுது போற்றி வானவர் குழுவுக்கு எல்லாம் கொற்றவ, என்னால் இன்று கூறலாம் தகைமைத்து அன்று, (ஆல்); உற்று எதிர் மூன்று கோடி அசுரரும் உடன்சேர இற்றது கண்டேன். பின்னர் வில்லின் நாண் இடியும் கேட்டேன்.]

**விளக்கம் :-** தோயமாபுரத்தாரை அழித்த அருச்சுனனது வில் தொழிலை மாதலி வியந்து கூறுவானாயினான். ஆல், மற்று, அசைகள். இடி - இடியை ஒத்த ஒலி. வில்லின் நாணொலியைப் பின்னும், அசுரர் அழிந்ததை முன்னும் கூறிய இது, மிகையுயர்வு நவிற்சியின் பாற்படும். காரண காரியத்தை முறை மாற்றி, நிகழ்ச்சியின் விரைவினைத் தோற்றுவிக்கும் அழகில் அமைவது இவ்வணி.

**156. ஆயது நிகழ்ந்த பின்ன ரயனருள் வரத்தி னாலே
ஏயவாள் வலியின் மிக்க விரணிய புரத்துள் ளோரை
தீயவெம் பகழி யொன்றாற் செற்றன னிமைப்பின் முற்றும்
மாயமோ மனிதன் வில்லின் வன்மையோ தெரிந்த தில்லை.**

[ஆயது நிகழ்ந்த பின்னர், அயன் அருள் ஏய வாள்வலியின் மிக்க இரணிய புரத்து உள்ளோரை தீய வெம் பகழி ஒன்றால் செற்றனன் இமைப்பின் முற்றும், மாயமோ மனிதன் வில்லின் வன்மையோ தெரிந்தது இல்லை.]

**விளக்கம் ;-** தோயமாபுரத்து அசுரர்களை அழித்த செயல் நிகழ்ந்த பின்னர், பிரும்ம தேவரின் வரத்தினால் பொருந்திய, வாள் வலியினால் மிக்காரான இரணியபுரத்து அசுரர்களைப் பகழி ஒன்றால் மாய வித்தைபோல் ஒரு கணப் பொழுதில், முற்றும், (மிச்சமில்லாமல்) அழித்து ஒழித்தான்; இது வில்லின் வன்மையா, அல்லது மாயவித்தையா! என்று எனக்கு விளங்கவில்லை,—என்று மாதலி கூறினான், என்பதாம். தீய வெம் - ஒரு பொருட் பன்மொழி. ஏய - பொருந்திய.

**157. என்றுகொண் டுயர்தேர்ப் பாக னிசைத்தன யாவுங் கேட்டு
வன்றிற லமரர் கோமான் மனமகிழ்ந் திருந்த போதில்
துன்றிய வமரர் யாருந் தனித்தனி சுருதி யோடும்
வென்றிடு படையு மற்றும் வேண்டுவ பலவு மீந்தார்.**

[என்று (கொண்டு) உயர் தேர் பாகன் இசைத்தன யாவும் கேட்டு, வன்திறல் அமரர் கோமான் மனம் மகிழ்ந்து இருந்த போதில், துன்றிய அமரர் யாரும் தனி தனி சுருதியோடும் வென்றிடு படையும் மற்றும் வேண்டுவ பலவும் ஈந்தார்,]

**விளக்கம் :-** மாதலி கூறியன கேட்டு இந்திரன் மகிழ்ந்திருக்க, மற்றைத் தேவர்கள் எல்லோரும் உரிய வேத மந்திரங்களுடன் ஆயுதங்களையும், மற்றும் விசயனுக்கு வேண்டுவன பலவும் ஈந்தார்கள். என்பதாம், 'என்று கொண்டு' என்பதிலுள்ள **கொண்டு** அசை; அல்லது, என்று மாதலி கூறியவற்றை **மனத்தில் கொண்டு** என்றும் உரை கொள்ளலாம்.

விசயன் விடை பெறல்

**158. தேவர்பால் வரமு மெல்லாச் சிறப்புமின் னருளும் பெற்ற**
**காவலன் கடவுள் வேந்தன் கழலிணை பணிந்து போற்றித்**
**தாவரும் புரவித் தானைத் தருமன்மா மதலை பொற்றாள்**
**மேவர வேண்டு மின்னே விடையெனக் கருளு மென்றான்.**

[தேவர்பால் வரமும் எல்லாச் சிறப்பும் இன் அருளும் பெற்ற காவலன், கடவுள் வேந்தன் கழல் இணை பணிந்து போற்றி, தாவரும் புரவி தானை தருமன் மா மதலை பொன் தாள் மேவர வேண்டும், இன்னே விடை எனக்கு அருளும், என்றான்.]

**விளக்கம் :-** காவலன் - அருச்சுனன், கடவுள் வேந்தன்- இந்திரன். தாவரும் புரவிதானை தருமன் மா மதலை - தாவும் கதியை உடைய குதிரைப் படையைக் கொண்ட தருமபுத்திரன்; தேவர்களிடம் வரங்களும் சிறப்பும் பெற்ற விசயன் தன் தமையனான தருமனிடம் செல்ல இப்பொழுதே அனுமதி தருமாறு இந்திரனை வேண்டினான்,—என்பதாம். மேவர - அடைய.

**159. மைந்தனங் குரைத்த மாற்ற மனனுற மகிழ்ந்து கேட்டுத்**
**தந்தையு மின்னஞ் சின்னாட் டங்குக விங்கென் றேத்திச்**
**செந்திரு வனைய தோற்றத் தெய்வ மென்போக மாதர்**
**ஐந்தொடா யிரரும் வேறோ ரம்பொன்மா ளிகையு மீந்தான்.**

[மைந்தன் அங்கு உரைத்த மாற்றம் மனன் உற மகிழ்ந்து கேட்டு தந்தையும் இன்னம் சில நாள் தங்குக என்று ஏத்தி, செந்திரு அனைய தோற்றம் தெய்வம் மென் போகம் மாதர் ஐந்தொரு ஆயிரரும், வேறு ஓர் பொன்மாளிகையும் ஈந்தான்.]

**விளக்கம் :-** ஏத்தி - புகழ்ந்து கூறி. ஐந்தொடு ஆயிரம்— ஐயாயிரம். தருமனிடம் செல்ல விடை வேண்டிய விசயனை இந்திரன் இன்னும் சில நாள் தங்கிப்பின் போகலாம் என்று கூறி, அவனுக்கு ஒரு மாளிகையையும் போகமாதர் ஐயாயிரரையும் ஈந்தான், என்பதாம்.

**160. வரோதய மான தெய்வ வான்படை மறைகள் பின்னும்
புரோசனப் பகைவற் கீந்து புரந்தர னிருந்த பின்னர்
சரோருக ரண்டம் விண்டா லொருமயிர் சலிக்குஞ் செங்கை
உரோமச முனியை நோக்கி யுரைத்தன னுற்ற வெல்லாம்.**

[வர உதயம் ஆன தெய்வம் வான் படை மறைகள் பின்னும் புரோசனன் பகைவற்கு ஈந்து புரந்தரன் இருந்த பின்னர், சரோருகர் அண்டம் விண்டால் ஒரு மயிர் சலிக்கும், செம் கை உரோமசமுனியை நோக்கி உரைத்தனன் உற்ற எல்லாம்.]

**விளக்கம் :-** வரோதயம் - (வர - உதயம்) சிறந்த உற்பத்தி முறைமை உடைய, தெய்வம் வான் படை - தெய்வத்தன்மை உடைய உயர்ந்த ஆயுதங்களாகிய அஸ்திரங்களையும், மறையும் - அவற்றிற்குரிய மந்திரங்களையும்; புரோசனன் பகைவற்கு - புரோசனன் என்ற பெயரையுடைய திருதராட்டிரனது மந்திரியும், துரியோதனனது கையாளுமாகிய தீயனது பகைவனான விசயனுக்கு (இந்திரன் அளித்தான், என்க) சரோருகர் - பிரும்மா. அந்த அண்டம் அழிந்தால் ஒரு மயிர் சலிக்கும் - ஒரு மயிர் உதிரும், செங்கை உரோமசர் - செங்கையினரான உரோமச முனி. அவரிடம் இந்திரன், விசயனது வீரச் செயல்களை எல்லாம் கூறினான், - என்பதாம். சரோருகர் - தாமரையில் வாழ்பவர், எனவே பிரும்மா. உரோமசர் என்பவர் உடம்பில் அதிகமான மயிரை உடையவர். ''பிரும்ம பிரளந்தோறும், அவரது உடம்பிலிருந்து ஒரு மயிர் உதிரும். ரோமம் முழுதும் உதிரும் வரை அவருக்கு சாதல் இல்லை,'' என்றும் கூறுவர். எனவே, அவர் பல பிரும்ம பிரளயங்களைக் கண்டவர். இம் முனிவர் விஷ்ணுவின் அமிசம் என்பர்.

**161. வரிசிலை விசயன் வந்து வான்றவம் புரிந்த வாறும்
அரிவையோர் பாக னன்பா லவற்கருள் புரிந்த வாறும்
இரியவென் பகையை யெல்லா மிவன்றனித் தடிந்த வாறும்
தருமனுக் குரைத்தி யென்னத் தபோதன முனியும்
போனான்.**

[வரிசிலை விசயன் வந்து வான் தவம் புரிந்த ஆறும், அரிவை ஓர் பாகன் அன்பால் அவற்கு அருள் புரிந்த ஆறும், இரிய என் பகையை எல்லாம் இவன் தனி தடிந்த ஆறும், தருமனுக்கு உரைத்தி என்ன, தபோதனம் முனியும் போனான்.]

**விளக்கம் :-** அரிவை ஓர் பாகன் - உமையை வாமபாகத்தில் கொண்ட சிவபிரான். அருச்சுனன், அரியதவம் செய்து சிவ பெருமானது அருளைப் பெற்றதையும், நிவாத கவசர் காலகேயர் என்ற அசுர கணங்களைத் தான் ஒருவனாக எதிர் நின்று அழித்ததை

யும் தருமபுத்திரனுக்குச் சொல்லும்படி உரோமச முனிவனை முந்த இந்திரன் போக்கினான்,—என்பதாம்.

**நிவாதகவசர் காலகேயர் வதைச்சருக்கம் முற்றும்.**

## 3. புட்பயாத்திரைச் சருக்கம்

*புஷ்பத்தின் பொருட்டு வீமன் பிரயாணம் செய்ததைக் கூறும் சருக்கம், என்பது பொருள். 139 செய்யுட்களைக் கொண்டது இச் சருக்கம்.*

### கடவுள் வணக்கம்

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**1. மற்கொண்டு வகுத்தனைய சிகரத் திண்டோள்**
**வாளரக்கன் குலத்தோடு மடிய முன்னம்**
**விற்கொண்டு சரந்தொடுத்துப் புரையில் கேள்வி**
**விண்ணவர்தந் துயர்தீர்த்த வீரராமன்**
**கற்கொண்ட வகலியைதன் னுருவ மீளக்**
**கவின்கொள்ளக் கொடுத்ததிருக் கமல பாதம்**
**சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளி நாளுந்**
**தொழுமவரே யெழுபிறவித் துவக்கற் றாரே.**

[மல்கொண்டு வகுத்தது அனைய சிகரம் திண் தோள் வாள் அரக்கன் குலத்தோடும் மடிய முன்னம் வில் கொண்டு சரம் தொடுத்து புரை இல் கேள்வி விண்ணவர்தம் துயர் தீர்த்த வீர ராமன், கல் கொண்ட அகலியை தன் உருவம் மீள கவின்கொள்ள கொடுத்த திரு கமலம் பாதம் சொல் கொண்டு துதித்து எழுந்து துள்ளி நாளும் தொழும் அவரே எழு பிறவி துவக்கு அற்றார். ஏ.]

**விளக்கம் :-** மல் கொண்டு வகுத்தனைய சிகரம் திண் தோள் வாள் அரக்கன் - வலிமை என்பதைக் கொண்டு செய்யப்பட்டது போன்ற மலையை ஒத்த திண்ணிய வாள் ஏந்திய அரக்கனான இராவணன். புரை இல் கேள்வி விண்ணவர் - குற்றமில்லாத கேள்விச் செல்வத்தை உடைய தேவர்கள். கல் கொண்ட அகலியை - கௌதம சாபத்தால் கல் உருக்கொண்ட அகலிகை. பிறவி துவக்கு - இறந்து பிறத்தலின் தொடர்பு, அல்லது சம்பந்தம். இராவணாதி அரக்கர்களை அழித்துத் தேவர்களின் துயர் தீர்த்த இராமனது, அகலிகைக்கு முன்னையுருக் கொடுத்த தாமரை போன்ற திருவடிகளைத் துதித்தும் தொழுதும் வாழ்வோரே பிறவித்துயர் நீங்கப் பெற்றவராவர்,—என்பது பொருள். ஸ்ரீ இராமனது கமல பாதத்திற்கு, ''அகலிகை தன் உருவம் மீளக் கவின் கொடுத்த,'' என்ற அடை, அகலிகையின் சாபம் நீக்கியது போல்

நமது பிறவித்துயரையும் போக்கும், என்று தெரிவிக்கும் கருத்தது. தேவர், மக்கள், விலங்கு,பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம், என்பன எழுவகைப் பிறவிகள்.

**2. இப்பால்வெஞ் சிலைவிசயன் றுறக்க மீதி**
**லிந்திரன்ற னருகிருப்ப விமையோ ரூரில்**
**அப்பானற் றவம்புரியுந் தழல்கூர் வேள்வி**
**யந்தணர்தங் குழாஞ்சூழ வழகார் மண்ணில்**
**ஒப்பாரு மிலாதமட மயிலி னோடு**
**முயர்வனத்தி னிடைநாளு மொருநாள் போலத்**
**தப்பாம லறம்வளர்க்கும் நீதி வேந்துந்**
**தம்பியரும் புரிந்ததினிச் சாற்று கிற்பாம்.**

[இப்பால் வெம் சிலை விசயன் துறக்கம் மீதில் இந்திரன் தன் அருகு இருப்ப இமையோர் ஊரில், அப்பால் நல் தவம் புரியும் தழல் கூர் வேள்வி அந்தணர் தம் குழாம் சூழ, அழகு ஆர் மண்ணில் ஒப்பாரும் இலாத மட மயிலினோடும் உயர் வனத்தினிடை நாளும் ஒரு நாள் போல தப்பாமல் அறம் வளர்க்கும் நீதி வேந்தும், தம்பி யரும் புரிந்தது இனி சாற்றுகிற்பாம்.]

**விளக்கம் :-** இப்பால் - இங்கு, தேவலோகம். அப்பால் - அங்கு, தருமன் வதியும் கானகம். தவம்புரியும் தழல்கூர் வேள்வி அந்தணர் - தவம் செய்பவர்களாய் அக்னி கார்யங்களைச் செய்யும் வேதியர், அழகு ஆர் மண் - அழகுநிறைந்த பூமி. மயில் - திரௌ பதி. ஒரு நாள் போல் நாளும் - ஒரு நாள் போல் ஒவ்வொருநாளும். நீதிவேந்து - தருமன். இந்திரலோகத்தில் விசயன் இருக்கப் பூலோகத்தில் வன வாசம் செய்யும் தருமனும் தம்பியரும் திரௌபதியோடு செய்ததை இனிக் கூறுவோம், என்று கவி கூறியபடி.

**3. விறல்விசயன் றனைப் பிரிந்த வருத்த மேன்மேல்**
**விஞ்சவொரு தஞ்சமற வெம்பி யம்பொன்**
**சிறகிழந்த பறவையெனத் துணைவ ரோடுந்**
**திறல்வேந்தன் சிந்தனையுற் றிருந்த காலைப்**
**பொறையறிவு நிறைதரும முடைய வாய்மைப்**
**போர்வேந்தே யஞ்சலெனப் புகழ்ந்து வாழ்த்தி**
**மறையொருபொன் வடிவுகொடு வந்த தென்ன**
**மாமுனியு மிமைப்பினிடை வந்துற் றானே.**

[விறல் விசயன்தனை பிரிந்த வருத்தம் மேல்மேல் விஞ்ச ஒரு தஞ்சம் அற வெம்பி, அம்பொன் சிறகு இழந்த பறவை என துணைவரோடும் திறல் வேந்தன் சிந்தனை உற்று இருந்த காலை, ''பொறை அறிவு நிறை தருமம் உடைய வாய்மை போர்வேந்தே, அஞ்சல்,'' என புகழ்ந்து வாழ்த்தி, மறை ஒரு பொன் வடிவுகொடு வந்தது என்ன, மாமுனியும் இமைப்பினிடை வந்து உற்றான், ஏ.]

**விளக்கம் :-** தஞ்சம் அற - பற்றுக்கோடு இல்லாமல். வெம்பி - மனம் கன்றி. திறல்வேந்தன் - தருமன். சிந்தனை உற்று இருந்த காலை - விசயன் திரும்பாமைபற்றி நினைத்து வருந்திக் கொண்டிருந்த சமயத்தில், ''பொறை, அறிவு, நிறை தருமம் ஆகியவற்றை உடைமையாகக் கொண்ட சத்திய நெறி கடவாத போர் வேந்தே'' என்று வேதமே ஒரு அழகிய உருவங்கொண்டு வந்தது போன்று வந்த உரோமசமுனிவன், தருமனைப் புகழ்ந்து கொண்டும் வாழ்த்திக் கொண்டும் தருமனிடம் வந்தான்; அல்லது, ''அம் முனிவன் வந்துற்றுப் புகழ்ந்து வாழ்த்தினான்,'' என்றும் கொள்ளலாம். வாழ்த்தல்-ஆசிர்வதித்தல். பொறை - பொறுமை. நிறை தருமம் - நிறைவுடைய தருமம். விசயன் வாராமைபற்றித் தருமன் வருந்தி யிருந்தபொழுது உரோமச முனி வந்தான் என்க.

**4. வந்தபெருங் கடவுண் முனி வரவு நோக்கி**
**வாள்வேந்துந் தம்பியரு மகிழ்ச்சி கூர்ந்து**
**சிந்தைவிழி மலரொடுபே ருவகை பொங்கச்**
**சென்றெதிர்போய் வணங்குதலுஞ் சிதைவி லாத**
**அந்தமுனி வரனுமவர்க் கன்பாற் றுன்ப**
**மணுகாத வந்தமிலா வாசி கூறிப்**
**புந்தியுட னளித்தசெழும் புனிதக் கோலப்**
**புலித்தவிசி னிருந்தடைவே புகன்றா னெல்லாம்.**

[வந்த பெருங் கடவுள் முனி வரவு நோக்கி வாள் வேந்தும் தம்பியரும் மகிழ்ச்சி கூர்ந்து, சிந்தை விழிமலரொடு பேர் உவகை பொங்க, சென்று எதிர்போய் வணங்குதலும், சிதைவு இலாத அந்த முனிவரனும் அவர்க்கு அன்பால் துன்பம் அணுகாத, அந்தம் இலா ஆசி கூறி, புந்தியுடன் அளித்த செழும் புனிதம் கோலம் புலி தவிசின் இருந்து அடைவே புகன்றான் எல்லாம். புந்தியுடன் - மனப்பூர்வமாய்.

**விளக்கம் :-** சிந்தை விழிமலரொடு உவகை பொங்க-மனத்திலும் விழியாகிய மலர்களிலும் (மலர் போன்ற கண்களிலும்) அளவு கடந்த மகிழ்ச்சி பொங்கி எழ. சிதைவு இலாத முனி - அழிவு இல்லாத ரோமசமுனி. அந்தம் இலா - அளவு இறந்த. மனத்தோடு பொருந்திய பக்தியுடன் (பாண்டவர்) அளித்த சிறந்த புனிதமான அழகிய-புலித்தோல் ஆசனத்தில் அமர்ந்து, அடைவே (முறையே) நிகழ்ந்தன எல்லாவற்றையும் கூறினான்; அதாவது, விசயன் பாசுபதம் பெற்றதையும், நிவாதகவசர் காலகேயரின் வதையையும் கூறினான், - என்க. இந்திரன் வேண்டிக்கொண்டபடி உரோமச முனிவன் பாண்டவர் உறையும் காமியவனம் வந்து விசயன் பாசுபதம் பெற்றதையும், அசுரர்களை அழித்ததையும் முறையே கூறினார், -என்பதாம்.

**5. வாள்விசயன் புரவிசயன் றன்னை நோக்கி**
**மன்னுதவம் புரிந்ததுவு மகிழ்ச்சி கூர்ந்தவ்**
**வேள்விசயந் தவிர்த்தபிரா னருளால் வேண்டும்**
**விறற்படைக ளளித்ததுவும் விபுதர் கோமான்**
**நாள்விசயம் பெறக்கொடுபோ யும்பரூரி**
**னளிமகுடம் புனைந்ததுவு நாளுந் தன்பொன்**
**தோள்விசயந் தொலைத்ததிற லவுணர் சேனை**
**சுடுசரத்தாற் றொலைத்ததுவுஞ் சூழ்ந்த யாவும்.**

[வாள் விசயன், புரம் விசயன் தன்னை நோக்கி மன்னு தவம் புரிந்ததுவும், மகிழ்ச்சி கூர்ந்து, அ வேள் விசயம் தவிர்த்த பிரான் அருளால் வேண்டும் விறல் படைகள் அளித்ததுவும், விபுதர் கோமான் நாள் விசயம் பெற கொடுபோய் உம்பர் ஊரின் நளி மகுடம் புனைந்ததுவும், நாளும் தன் பொன் தோள் விசயம் தொலைத்த திறல் அவுணர் சேனை சுடு சரத்தால் தொலைத்தது வும் சூழ்ந்த யாவும்,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** வாள் விசயன் - அருச்சுனன். புரம் விசயன் - திரிபுரம் எரித்து வெற்றி கொண்ட சிவபெருமான். மன்னுதவம்- நிலைபெற்ற தவம். வேள் விசயம் தவிர்த்த பிரான் - மன்மத னுடைய வெற்றியை விலக்கிய சிவபெருமான். விறல் படைகள் - பாசுபதம் முதலிய வலிய ஆயுதங்கள். விபுதர் கோமான் உம்பர் ஊரின் (நல்லதோர்) நாள் கொடுபோய் விசயம் பெற நளி மகுடம் புனைந்ததுவும் - இந்திரன் (விசயனை) தேவலோகத்திற்கு நல்ல நாள் ஒன்றில் அழைத்துச் சென்று வெற்றி பெறும்படி சிறந்த கிரீடத்தை அணியச் செய்ததையும். நாளும் தன் பொன் தோள் விசயம் தொலைத்த திறல் அவுணர் சேனை சுடு சரத்தால் தொலைத்ததுவும் - பல தடவைகளில் தன்னுடைய (இந்திர னுடைய) பொன் தோளின் வெற்றியை ஒழித்த வலிய அரக்கர் களின் சேனையை (தனது) சுடு சரத்தால் அழித்ததுவும். சூழ்ந்த யாவும் - மற்றும் அங்கே நிகழ்ந்த எல்லாவற்றையும்,—அடுத்த கவியோடு தொடரும். சூழ்ந்த யாவும், என்றது ஊர்வசி சாபத் தையும், அதன் விமோசனத்தையும் குறிக்கும்.

**6. தன்னருகே யமரரெலா மினிது போற்றத்**
**தனஞ்சயனங் கிருந்ததற்பின் றயங்குஞ் சோதி**
**மன்னுமெழிற் கந்தர்ப்ப மென்னு நாம**
**வரைவழியே வருவதுவு மருவு காதல்**
**உன்னுடைய பெருந்துயரந் தணியு மாறு**
**முரைத்தருள்க வெனவும்பர் கோமா னுன்பால்**
**என்னைவிடுத் தனன்வந்தே னென்றா னெல்லா**
**வுலகுமுடிந் திடுநாளு மீறி லாதான்.**

[தன் அருகே அமரர் எலாம் இனிது போற்ற தனஞ்சயன் அங்கு இருந்ததன் பின், தயங்கு சோதி மன்னும் எழில் கந்தர்ப்பம்

என்னும் நாமம் வரை வழியே வருவதுவும், மருவு காதல் உன்னுடைய பெருந்துயரம் தணியும் ஆறும், உரைத்தருள்க என உம்பர் கோமான் உன்பால் என்னை விடுத்தனன், வந்தேன் என்றான், எல்லா உலகும் முடிந்திடும் நாளும் ஈறு இலாதான்.]

**விளக்கம் :-** தன் அருகே - தனது அருகிலே இருந்து. (தேவர்கள் போற்ற.) கந்தர்ப்பம் என்னும் நாமம் வரை வழியே வருவதுவும் - கந்தர்ப்பம் என்னும் பெயரை உடைய மலை வழியாக (விசயன் பூமி) திரும்பி வரப் போவதையும். இந்திரன் அனுப்ப, விசயன் திரும்பப் போவதைக் கூறித் தம்பியிடம் பொருந்திய அன்புடைய உனது துயரைத் தணிவிக்க வந்ததாக உரோமச முனிவன் தருமனுக்குச் சொன்னான்,—என்க. உலகம் எல்லாம் அழிவுறும் பிரளய காலத்திலும் அழியாமையை உடையவனாதல் பற்றி, ''எல்லா **உலகும் முடிந்திடு நாளும் ஈறு** இலாதான்'' என்றார். தணியுமாறும், என்பதிலுள்ள **உம்மை**, இசை நிறை.

## பாண்டவர் கந்தர்ப்பமலை சேரல்

**7. மாமுனிதன் மொழிகேட்டுப் புரையில் கேள்வி**
**மன்னவனுந் தம்பியரும் வருத்த மாறிக்**
**காமியமென் றுரைபெறுசீர் வனத்தை நீங்கிக்**
**கடவுண்முனி தன்னோடுங் கணத்தி னேகி**
**நாமமது கரதீர்த்த முதலா வுள்ள**
**நற்றீர்த்த மெவற்றினும்போய் நான மாடித்**
**தாமமதி தவழ்சிகரத் திந்த்ர நீல**
**சயிலத்தின் சுனைகெழுதண் சாரல் சார்ந்தார்.**

[மாமுனி தன் மொழி கேட்டு புரை இல் கேள்வி மன்னவனும் தம்பியரும் வருத்தம் மாறி, காமியம் என்று உரை பெறு சீர் வனத்தை நீங்கி, கடவுள் முனி தன்னோடும் கணத்தின் ஏகி, நாமம் மதுகர தீர்த்தம் முதலா உள்ள நல் தீர்த்தம் எவற்றினும் போய் (ஸ்)நானம் ஆடி, தாமம் மதி தவழ் சிகரத்து இந்த்ரநீல சயிலத்தின் சுனை கெழு தண் சாரல் சார்ந்தார்.]

**விளக்கம் :-** கணத்தின் - உடனே, தாமதமின்றி. மதுகர தீர்த்தம் - மதுகரதீர்த்தம் என்ற பெயருடைய புண்ணிய தீர்த்தம். நானம் ஆடி - ஸ்நானம் செய்து. நாமம் - கீர்த்தி, பிரசித்தி. தாம மதி தவழ் சிகரத்து இந்திர நீல சயிலம் - ஒளியுடைய, அல்லது பெருமையுடைய சந்திரன் செல்லுகின்ற சிகரத்தை உடைய இந்திர நீலமலை. சுனை கெழு தண் சாரல் சார்ந்தார் - அந்த மலையின் சுனைகள் பொருந்திய தண்ணிய சாரலை அடைந்தார். பாண்டவர் உரோமச முனிவனுடன் சென்று, பல புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடி இறுதியில் இந்திர நீல மலையின் சாரலை அடைந்தனர் என்பதாம்.

**8. அக்கிரியின் புதுமையெலா மடைவே நோக்கி**
**யாங்குள்ள வருவிநறும் புனலு மாடித்**
**தக்கபுகழ் விசயனருந் தவம் புரிந்த**
**சாரலிது வென்றுதவ முனிவன் சாற்ற**
**மிக்ககளி யுவகைதிகழ் நெஞ்ச ராகி**
**விசயனைக்கண் டனர்போல விரும்பிக் கண்டு**
**தொக்கமுனி கணத்தொடும்போய்த் தசாங்க னென்னுந்**
**தொல்லைமுனி தபோவனத்தின் சூழல் சேர்ந்தார்.**

*[அ கிரியின் புதுமை எலாம் அடைவே நோக்கி அங்கு உள்ள அருவி நறும் புனலும் ஆடி, தக்க புகழ் விசயன் அருந்தவம் புரிந்த சாரல் இது, என்று தவம் முனிவன் சாற்ற, மிக்க களி உவகை திகழ் நெஞ்சர் ஆகி, விசயனை கண்டனர் போல விரும்பி கண்டு, தொக்க முனி கணத்தொடும் போய் தசாங்கன் என்னும் தொல்லை முனி தபோவனத்தின் சூழல் சேர்ந்தார்.]*

**விளக்கம் :-** இந்திர நீலமலையின் அதிசயங்களை எல்லாம் கண்டு, நல்ல நீரருவிகளில் நீராடி, 'விசயன் தவம் புரிந்த இடம் இது', என உரோமச முனிவன் சொல்ல, அதை அருச்சுனனைக் கண்டது போன்ற மகிழ்ச்சியோடு கண்டு, தங்களோடு இருக்கும் முனிவர் கணத்துடன், தசாங்கன் என்ற பெயருடைய முனிவனது தபோவனமாகிய சூழலை (இடத்தை) பாண்டவர் அடைந்தனர் - என்பது பொருள். களிஉவகை, ஒரு பொருட் பன்மொழி. மிகுந்த களிப்பு, என்பது பொருள். தொக்க - (தங்களோடு வனத்தில்) கூடியிருந்த. தொல்லை முனி - பழமையான முனிவன்.

**9. அங்குள்ள தபோதனர்தம் பாதம் போற்றி**
**யவருரைக்கு மாசியும்பெற் றப்பா லேகி**
**எங்குள்ள கடவுணெடும் புனலும் யாறு**
**மெப்புனலுந் தப்பாம லினிதி னாடி**
**வங்கமெறி கடல்கடைந்து வானோர்க் கெல்லா**
**மருந்துவிருந் தருளியமந் தரமுங் காட்டிக்**
**கங்கைநதி குதிபாயுஞ் சிகரச் சாரற்**
**கந்தர்ப்ப மெனும்வரையுங் காட்டி னானே.**

*[அங்கு உள்ள தபோதனர் தம் பாதம் போற்றி, அவர் உரைக்கும் ஆசியும் பெற்று, அப்பால் ஏகி, எங்கு உள்ள கடவுள் நெடும் புனலும் யாறும் எப்புனலும் தப்பாமல் இனிதின் ஆடி, வங்கம் எறிகடல் கடைந்து வானோர்க்கு எல்லாம் மருந்து விருந்து அருளிய மந்தரமும் காட்டி, கங்கை நதி பாயும் சிகரம் சாரல் கந்தர்ப்பம் எனும் வரையும் காட்டினான், ஏ.]*

**விளக்கம் :-** எங்குள்ள - சென்ற இடங்கள் எங்கும் உள்ள. கடவுள் நெடும் புனலும் யாறும் எப்புனலும் - தெய்வத்தன்மை

பொருந்திய பெரிய அருவிகளிலும், நதிகளிலும், மற்றுமுள்ள எல்லாத் தீர்த்தங்களிலும். தப்பாமல் ஆடி - தவறாமல் ஸ்நானம் செய்து. வங்கம் எறிகடல் - அலை எறியும் சமுத்திரம். மருந்து விருந்து அருளிய மந்தரம் - கடல் கடைந்து வானவர்க்கு அமிர்தத்தை விருந்தாக உதவிய மந்தரமலை. சிகரம் சாரல் கந்தர்ப்பம் - சிகரங்களையும் தாழ்வரைகளையும் உடைய கந்தர்ப்பமலை. உரோமச முனிவனோடு சென்று பல தீர்த்தங் களிலும் நீராடிய பாண்டவர், மந்தரமலையைக் கண்டு அதன்பின் கந்தர்ப்ப மலையையும் உரோமச முனிவன் காட்டக் கண்டனர், -- என்க.

**10.** **அந்தவுயர் கிரியினெடுஞ் சார றோறு**
**மருந்தவஞ்செய் முனிவரரை அடைவே காட்டி**
**இந்தவனந் தனக்கெமையா ளுடையான் குன்ற**
**மீரைம்ப தியோசனையென் றெடுத்துக் காட்டிக்**
**கந்தனென வெக்கலையும் வல்ல ஞானக்**
**கடவுண்முனி விசாலயனா லயமுங் காட்டி**
**உந்துநெறிச் செங்கோலா யிதனி லோராண்**
**டிருத்தியென வுரோமசனு முரைத்திட் டானே.**

[அந்த உயர் கிரியின் நெடும் சாரல் தோறும் அருந்தவம் செய் முனிவரரையும் அடைவே காட்டி, இந்த வனம் தனக்கு எமை ஆள் உடையான் குன்றம் ஈர் ஐம்பது யோசனை என்று எடுத்துக் காட்டி, கந்தன் என எ கலையும் வல்ல ஞானம் கடவுள் முனி விசாலயன் ஆலயமும் காட்டி, உந்து நெறி செங்கோலாய், இதனில் ஓராண்டு இருத்தி என, உரோமசனும் உரைத்திட்டான், ஏ.]

**விளக்கம் :-** இந்த வனத்திற்கு, எமை யாளுடையவனான சிவபிரானது கயிலைமலை நூறு யோசனை தூரத்தில் உளது, என்று எடுத்துக் காட்டி - என்பது இரண்டாவது அடியின் பொருள். கந்தன் - முருகக் கடவுள். கந்தனே இவன், என்று சொல்லும்படி சகலகலா வல்லவனான பேரறிவு பெற்ற தெய்வத் தன்மை பொருந்திய விசாலயன் என்னும் முனிவனது இருப்பிடமும் காட்டி, — என்பது மூன்றாவது அடியின் பொருள். நெறி உந்து செங்கோலாய் - தரும நெறியில் செலுத்தும் செங்கோலை உடைய தருமனே. இந்தக் கந்தர்ப்ப கிரியில் ஓராண்டு வசிக்குமாறு முனிவன் தருமனுக்குக் கூறினான், — என்பதாம். அடைவே - முறையே.

### வீமனது புட்ப யாத்திரை

**11.** **அம்முனிவன் மொழிப்படியே வரம்பில் கேள்வி**
**யறன்மகனுந் தம்பியரு மரிவை யோடும்**
**எம்முகமுந் தம்முகமா விலையுங் காயு**
**மினியகனி யுடனருந்தி யிருக்கு நாளில்**

**மைம்முகில்வா கனன் கனக முடிமே லம்பொன்**
**வன சமல ரொன்றுதழன் மயின்முன் வீழச்**
**செம்மலரைச் செங்கண்மலர் தன்னா னோக்கிச்**
**செய்யமலர்க் கரத்தேந்திச் சிந்தித் தாளே.**

[அ முனிவன் மொழிப்படியே வரம்பு இல் கேள்வி அறன் மசனும் தம்பியரும் அரிவையோடும் எ முகமும் தம் முகமா, இலை யும் காயும் இனிய கனியுடன் அருந்தி இருக்கும் நாளில், மை முகில் வாகனன் கனகம் முடிமேல் அம்பொன் வனச மலர் ஒன்று தழல் மயில்முன் வீழ, செம் மலரை செங்கண் மலர் தன்னால் நோக்கி, செய்ய மலர் கரத்து ஏந்தி சிந்தித்தாள், ஏ.]

**விளக்கம் :-** எம் முகமும் தம் முகமா - (அக் காட்டிலுள்ள) எல்லாவிடத்தையும் தம்முடைய சொந்த இடமாகக் கொண்டு. மை முகில் வாகனன் - இந்திரன். (அவனது) கனக முடிமேல் அம்பொன் வனச மலர் ஒன்று - (இந்திரனது) அழகிய கிரீடத்தின் மேல் அலங்காரமாய் இருத்தற்குரிய அழகிய பொன்மயமான தாமரை மலர் ஒன்று. அம் மலர் தழல் மயில் (திரௌபதி) முன்னே விழ, அதை எடுத்துப் பார்த்துச் சிந்திப்பவளாயினாள்,— என்க.

**12. இந்தமல ருலகனைத்து மீன்ற கோல**
**வெழின்மலரோ விரவிதிருக் கரத்தில் வைகும்**
**அந்தமல ரோவமுதிற் பிறந்த பாவை**
**யமர்ந்துறையு மணிமலரோ வவனி தன்னில்**
**எந்தமல ருங்கருகக் கமழா நின்ற**
**தெங்கெங்கு மிதன்மணமே யென்று போற்றிக்**
**கந்தவகன் மைந்தனுக்குக் கனலோ னல்குங்**
**கனங்குழைசென றுவகையுடன் காட்டிச் சொல்வாள்.**

[இந்த மலர் உலகு அனைத்தும் ஈன்ற கோலம் எழில் மலரோ, இரவி திரு கரத்தில் வைகும் அந்த மலரோ, அமுதின் பிறந்த பாவை அமர்ந்து உறையும் அணி மலரோ, அவனி தன்னில் எந்த மலரும் கருக கமழா நின்றது எங்கு எங்கும் இதன் மணமே என்று போற்றி, கந்தவகன் மைந்தனுக்கு கனலோன் நல்கும் கனம் குழை சென்று உவகையுடன் காட்டி சொல்வாள்.]

**விளக்கம் :-** இந்த மலர், உலகத்தைத் தோற்றுவித்த திரு மாலின் நாபியில் உண்டாகிய சிறந்த அழகுடைய தாமரையோ? அல்லது சூரியன் கையிலிருக்கும் அழகிய மலர்தானோ? அல்லது, திருமகள் அமர்ந்து வாழும் அழகிய மலரோ? பூமியில் உள்ள எந்த மலரும் நலம் கெடும்படி எங்கெங்கும் நறுமணத்தை வீசுகின்றது, என்று (மலரின் மணத்தை) வியந்து கொண்டாடி, வாயு மைந்த னான வீமனுக்குத் திரௌபதி மகிழ்ச்சியுடன் (மலரைக்) காட்டிச்

சொல்லலானாள்,—என்பது பொருள். கந்தவகன் - வாயுதேவன். கனலோன் நல்கும் கனங்குழை - அக்கினிதேவன் தந்த திரௌபதி.

**13.** **இம்மலருக் கொருமலரு மவனி தன்னி**
**லெதிரில்லை யென்றிதழா யிரத்தின் மிக்க**
**அம்மலரைக் கைம்மலரிற் கொடுத்தீ தொக்கு**
**மணிமலர்நீ யெனக்கருள வேண்டு மென்னச்**
**செம்மலையிற் றிகழ்சிகரத் திண்டோள் வீமன்**
**தெய்வமுனி புங்கவன்றன் றிருத்தாள் போற்றி**
**மெய்ம்மலரைத் திருமுன்பு வைத்து நின்று**
**வினவினா னவனுமெதிர் விளம்பு வானே.**

[இ மலருக்கு ஒரு மலரும் அவனி தன்னில் எதிர் இல்லை என்று இதழ் ஆயிரத்தின் மிக்க அ மலரை கை மலரில் கொடுத்து ஈது ஒக்கும் அணி மலர் நீ எனக்கு அருளவேண்டும் என்ன, செம்மலையின் திகழ் சிகரம் திண் தோள் வீமன் தெய்வம் முனி புங்கவன் தன் திரு தாள் போற்றி, மெய் மலரை திருமுன்பு வைத்து நின்று, வினவினான், அவனும் எதிர் விளம்பு வானே.]

**விளக்கம் :-** செம்மலையின் திகழ் சிகரத் திண் தோள் வீமன்- சிறந்த மலையினிடத்தே விளங்குகின்ற சிகரம் போன்ற வலிய தோள்களை உடைய வீமன். திரௌபதி தன்முன் விழுந்த மலரை வீமனுக்குக் காட்டி, இதுபோன்ற மலரை எனக்கு நீ தேடித் தர வேண்டும் என்று வேண்ட, அவனும் அம் மலரை உரோமச முனிவன் முன்னே வைத்து, இம் மலரைப்பற்றிய வரலாற்றைக் கூறியருள வேண்டும் என்று பிரார்த்தித்தான்,—என்பதாம். திடீரென்று பாஞ்சாலியின் முன் மலர் விழுந்த தாதலால், 'இது மாயையின் நிகழ்வாகுமோ!' என்று அயிர்த்தற்கு இடமுள தாதலின், 'அது அன்று', என்ற கருத்துப்பட **மெய்ம் மலர்** என்றார், என்க. புங்கவன் - காளை. இதுவும், புலி, சிங்கம், யானை என்ற சொற்களும் மனிதனோடு சாரும் பொழுது, சிறப்புப் பொருளைத் தரும் மரபினவாகும்.

**14.** **என்பலவு மியாமுரைப்ப திந்தப் பூவி**
**னியல்பினையும் பெருமையையு மியக்கர் தங்கள்**
**மன்பதியி லுள தன்றி வரம்பி லாத**
**வானுலகி லுளதென்னின் மற்று முண்டோ**
**உன்பிறருக் கிதுகோடற் கெளிதோ மாய**
**னும்பர்பதி புகுந்தொருபைங் தோகைக் கீந்த**
**பின்பிதனைக் கண்டறிவா ரில்லை யென்று**
**பேசினான் யாவரொடும் பேச்சி லாதான்.**

[என் பலவும் யாம் உரைப்பது இந்த பூவின் இயல்பினையும் பெருமையையும், இயக்கர் தங்கள் மன்பதியில் உளது, அன்றி வரம்பு இலாத வான் உலகில் உளது, என்னின் மற்றும் உண்டோ?

உன் பிறருக்கு இது கோடற்கு எளிதோ! மாயன் உம்பர் பதி புகுந்து ஒரு பைந் தோகைக்கு ஈந்த பின்பு, இதனைக் கண்டார் இல்லை, என்று பேசினான் யாவரோடும் பேச்சு இலாதான்.]

**விளக்கம் :-** இந்தப் பூவின் இயல்பினையும் பெருமையையும், பலபடியாக நான் என்ன சொல்வேன்? இயக்கர் தலைவனான குபேரனது அளகாபுரியில் இது உளது. அன்றியும், எல்லை யில்லாத படி எல்லா அரிய பொருள்களையும் தன்னிடத்தேகொண்ட தேவ லோகத்திலும், இது போன்ற மலர் இருக்கலாம். எனின், இதைப் பற்றி நான் சொல்ல வேண்டுவது வேறு உண்டோ? உன்னை அல்லாத பிறர்க்கு இது கொள்ளற்கு எளிய தாகுமோ? கிருஷ்ணன் தேவலோகம் சென்று சத்தியபாமைக்கு உதவிய பிறகு இது போன்ற சிறந்த மலரைக் கண்டார் இல்லை என்று, யாரோடும் பேசுதல் இல்லாத உரோமச முனிவன், வீமனுக்குச் சொன்னான், —என்பது பொருள். இந்த மலர் குபேரன் பதியில் உளது; தேவ ருலகிலும் இது போன்ற சிறந்த மலர்கள் இருக்கலாம். இது உன் னால் கொள்ளக் கூடியதே. கண்ணன் சத்தியபாமைக்கு அளித்த பாரிசாத மலரைக் கண்ட பிறகு, எவரும் இதுபோன்ற மலரைக் கண்டதில்லை, என்று முனிவன் கூறினான், என்க.

**15. இயக்கர்பதி தனிலுளதென் றிசைத்த மாற்ற**
**மின்புறக்கேட் டொருகாலு மீறிலாத**
**வயக்கொடுவெஞ் சராசனமும் வன்போர் வாகை**
**மறத்தண்டுங் கரத்தேந்தி மடத்தை நெஞ்சில்**
**துயக்கமற விக்கணத்திற் றெய்வ போக**
**சுரபிமல ரளித்திடுவ னென்று சொல்லிச்**
**சயக்கரட முறுதறுகட் சயில மன்ன**
**சதாகதிமைந் தனுமிமைப்பிற் றனிச்சென் றானே.**

[இயக்கர் பதிதனில் உளது என்று இசைத்த மாற்றம் இன்பு உற கேட்டு, ஒருகாலும் ஈறு இலாத வயகொடு வெம் சராசனமும் வல்போர் வாகை மறம் தண்டும் கரத்து ஏந்தி, மடந்தை நெஞ்சில் துயக்கம் அற இ கணத்தில் தெய்வம் போகம் சுரபி மலர் அளித்திடு வன் என்று சொல்லி, சயம் கரடம் உறு தறுகண் சயிலம் அன்ன சதாகதி மைந்தனும் இமைப்பின் தனி சென்றான், ஏ.]

**விளக்கம் :-** ஒருகாலும் ஈறு இல்லாத வயக்கொடு வெம் சராசனம் - ஒருபொழுதும் ஒழிவு இல்லாத வலிய கொடிய வில். வன்போர் வாகை மறத்தண்டு - வெற்றி மாலை சூடுதற்குரிய வலிய கதை. துயக்கம் அற - திரௌபதியின் மனத்தளர்ச்சி ஒழிய. தெய்வ போக சுரபி மலர் - தேவர்களின் அனுபவத்திற்குரிய மண முள்ள மலர், (சுரபி - நறுமணம்). சயக்கரடம் உறு தறுகண்

சயிலம் அன்ன சதாகதி மைந்தன் - வெற்றியும், மதமும், பொருந்திய அஞ்சாமையும் உடைய மலை போன்ற வாயு பகவானின் மைந்தனான வீமன், (சதாகதி - வாயு). அளகையில் உளது இம் மலர், என்று சொன்னதை மகிழ்ச்சியோடு கேட்ட வீமன், அம் மலரைக் கொணர வில்லோடும் கதையோடும், தனியே புறப்பட்டான்,—என்பதாம். வாயுவைப்போல் வீமன் விரைந்து செல்லக்கூடியவன், என்ற குறிப்பில் சதாகதி மைந்தன், என்றார். இவன் அசகாய சூரன், என்பது தோன்ற தனிச் சென்றான், என்றார்.

**16. கைக்காற்றுந் தொடைக்காற்று மூச்சுக் காற்றுங்**
**கனகமணி வரைபோலக் கவின்கொள் சோதி**
**மெய்க்காற்றும் பரந்தெழுந்து வனத்தி லுள்ள**
**வெற்புநெடுந் தருவனைத்து மொடிந்து வீழ**
**எக்காற்று முடன்றெழுந்த வுகாந்த கால**
**மெனச்சென்றா னினவளைக ளெண்ணில் கோடி**
**செய்க்காற்றுஞ் செழுந்தரள நிலவு வீசச்**
**சேதாம்பல் பகன்மலருஞ் செல்வ நாடன்.**

[கை காற்றும் தொடை காற்றும் மூச்சு காற்றும், கனகம் மணி வரைபோல கவின்கொள் சோதி மெய் காற்றும் பரந்து எழுந்து வனத்தில் உள்ள வெற்பு நெடுந் தரு அனைத்தும் ஒடிந்து வீழ, எ காற்றும் உடன்று எழுந்த உகாந்த காலம் என சென்றான், இனம் வளைகள் எண் இல் கோடி செய்க்கு ஆற்றும் செழு தரளம் நிலவு வீச, சேதாம்பல் பகல் மலரும் செல்வம் நாடன்.]

**விளக்கம்** :- கனகமணி வரை - பொன் மயமான அழகிய மேரு மலை. (அம் மலை போன்ற அழகு பொருந்திய வீமனது) மெய் - உடல். எக்காற்றும் உடன்று எழுந்த உகாந்த காலம் - எல்லாத் திசைகளினின்றும் காற்று மோதியெழும் பிரளய காலம். செய் - கழனி. எண்ணில் கோடி இனவளைகள் செய்க்கு ஆற்றும் செழுந்தரளம் - மிகப் பலவான சங்குகளின் கூட்டம் கழனிகளில் அளித்தல் செய்த சிறந்த முத்துக்கள். சேதாம்பல் - பகலில் கூம்பு வதும், இரவில் மலர்வதுமாகிய **செவ்வாம்பல் மலர்**. முத்துக் களின் ஒளியை நிலவென மயங்கிப் பகலில் ஆம்பல் மலரும் செல்வ நாடனாகிய வீமன். அவனது கை, தொடை, மூச்சு ஆகியவற்றின் காற்றும், உடல் அசைவினால் உண்டாகும் காற்றும், மலைகளி லுள்ள மரங்கள் எல்லாவற்றையும் விழச்செய்ய, பல திசைக் காற்றுக்களும் மோதி எழும் பிரளயக்காற்றோ என்று கண்டோர் சொல்லும்படி அளகையை நோக்கிச் சென்றான், என்பதாம். முத்தின் ஒளியை நிலவென மயங்கி ஆம்பல் மலர்ந்தது **மயக்க அணி**. சங்குகளின் மிகுதி நீர்வளத்தைக் குறிக்கும். செல்வ நாடன், என்றது, இவன் குரு நாட்டிற் குரியவனாகப் போவதைக் குறிக்கும்.

**17. இலங்கைநகர் தன்னில்விற லிராம தூத**
**னிகலரக்கன் சோலையெலா மிறுத்த வாபோல்**
**நிலங்குலுங்க வரைகுலுங்க வனத்தி லுள்ள**
**நெடுந்தருக்கள் யாவையும்வே ருடனே ராக்கி**
**விலங்கினொடு புள்ளினமு முடையத் தாக்கி**
**மெய்நடுங்கித் தடுமாறி வெம்பி யுள்ளம்**
**கலங்கிவிழக் கனமதிர்வ போல வார்த்துக்**
**காஞ்சனப்பே ரெழில்வனமுங் கடந்திட் டானே.**

[இலங்கை நகர் தன்னில் விறல் இராமதூதன் இகல் அரக்கன் சோலை எலாம் இறுத்த ஆ போல், நிலம் குலுங்க வரை குலுங்க, வனத்தில் உள்ள நெடுந்தருக்கள் யாவையும் வேருடன் நேர் ஆக்கி, விலங்கினொடு புள் இனமும் உடைய தாக்கி, மெய் நடுங்கி தடு மாறி வெம்பி உள்ளம் கலங்கி விழ, கனம் அதிர்வபோல் ஆர்த்து காஞ்சனம் பேர் எழில் வனமும் கடந்திட்டான், ஏ.]

**விளக்கம் ;-** இராம தூதனாகிய அநுமான் இலங்கையில் அசோக வனம் அழித்ததுபோல், வீமன், நிலமும் மலைகளும் அசையவும், மரங்கள் வேருடன் அழியவும், விலங்குகளோடு புள்ளினங்களும் நிலைகெட்டுத் தவிக்கும்படி மோதிக்கொண்டு, உடல் நடுங்கி, நிலை தடுமாறி வெம்மை யுற்று மனங்கலங்கி விழும் படி, மேகம் இடிப்பது போல், ஆரவாரம் செய்துகொண்டு, காஞ் சனம் என்ற பெயருடைய வனத்தைக் கடந்தான்,—என்பதாம். வேருடன் நேராக்கி - வேருடன் அழித்து. உடைய - நிலை கெட, அல்லது அழிய. கனம் - மேகம். வீமனது கதியின் வேகத்தினால் பூமி, மலை, அசைதல், தருக்கள் அழிதல் முதலியன நிகழலாயின, என்க.

**18. அவ்வனத்தை யிகந்தனந்த காத மேகி**
**யங்கிடைவிட் டுத்தரத்தி னப்பா லேகி**
**மெய்வனப்பு மடல்வலியு மிகுத்த வாகை**
**வீமனெனும் பேர்திசையின் விளங்கும் வீரன்**
**மைவனப்பி னுடன்படியுஞ் சினைக்கை வாச**
**மலர்ப்பொழிலி னொருமருங்கே மத்த மாவின்**
**கைவனப்புத் தழைசெவியு மருப்புஞ் சேரக்**
**கவினளிக்குங் குலைக்கதலிக் காடு கண்டான்.**

[அ வனத்தை இகந்து அனந்தம் காதம் ஏகி, அங்கு இடை விட்டு உத்தரத்தின் அப்பால் ஏகி, மெய் வனப்பும் அடல் வலியும் மிகுந்த வாகை வீமன் எனும் பேர் திசையின் விளங்கும் வீரன், மை வனப்பின் உடன் படியும் சினை கை வாசம் மலர் பொழிலின் ஒருமருங்கே மத்த மாவின் கை வனப்பும் தழை செவியும் மருப்பும் சேர, கவின் அளிக்கும் குலை கதலி காடு கண்டான்.]

**விளக்கம் :-** இகந்து - கடந்து. அனந்தகாதம் - பலகாத தூரம், (காதம் - பத்து மைல்). அடல் வலி - பகை அழிக்கவல்ல வலிமை. வாகை - வெற்றி. திசையின் விளங்கும் - எல்லாத் திசை களிலும் விளங்கச் செய்யும். மை - மேகம். சினை - கிளை. கை - பக்கம். மத்த மா - மத யானை. (அந்த யானையின்) துதிக்கை அழகும், தழைதலுற்ற காதுகளும் தந்தங்களும் ஒன்றுபடலான், ஏற்படும் தோற்றத்தைப் போன்று அழகைத் தரும் குலைகளோல் கூடிய கதலீ வனத்தை (வீமன்) கண்டான்,—என்பது ஈற்றடியிடு பொருள். ஈற்றடிகள் கதலீ வனத்தின் வர்ணனை ஆகும். தூரத்தி லிருந்து காணுங்கால் வாழையின் தழைந்த இலைகள் யானையின் காதுகளையும், அடி மரம் துதிக்கையையும், வாழைக்குலைகள் தந்தங்களையும் ஒத்திருந்தமையின், மத்த மாவின்...கவின் அளிக்குங் குலைக்கதலி வனம், என்றார். அந்த வனத்தில் இதர மரங்களோடு, ஒருபுறம் கதலி மிகுதியாக இருந்தமையின், **கதலிக் காடு** எனப்பட்டது.

**19. அக்கதலி வனந்தனக்குக் காவ லாய**
**வடலரக்க ரனேகருட னடுபோர் செய்து**
**மிக்கதலங் குருதியினால் வெள்ள மாக்கி**
**வெகுண்டவர்தம் மாவியையும் விண்ணி லேற்றித்**
**திக்கதல முதலாமெவ் வுலகு மேங்க**
**சிங்கநாத முஞ்செய்தான் செய்த காலை**
**உக்கதலை மணியுரக ராசற் கென்றா**
**லும்பர்படுந் துயரமெம்மா லுரைக்க லாமோ.**

[அ கதலி வனம் தனக்கு காவல் ஆய அடல் அரக்கர் அனேக ருடன் அடுபோர் செய்து, மிக்க தலம் குருதியினால் வெள்ளம் ஆக்கி வெகுண்டவர் தம் ஆவியையும் விண்ணில் ஏற்றி, திக்கு அதலம் எ உலகும் ஏங்க சிங்கநாதம் செய்தான்; செய்த காலை உக்க தலை மணி உரக ராசற்கு என்றால், உம்பர் படும் துயரம் எம்மால் உரைக்கல் ஆமோ.]

**விளக்கம் :-** கதலி வனத்தைக் காவல் செய்த அரக்கர் பலருடன் போர் செய்து அவரை அழித்துப் பூமியின் பெரும் பகுதியை இரத்த வெள்ளமாக்கி, அதலம் முதலான எல்லா உலக மும் ஏங்கும்படி (வீமன்) சிங்கநாதம் செய்தான். அப்பொழுது அந்த ஒலியால் நாகர் தலைவனான ஆதிசேஷனது தலையி லிருக்கும் நாகரத்னம் உதிர்ந்தன என்றால், தேவர்படும் துன்பம் எம்மால் உரைக்கக் கூடியதாமோ—, என்பதாம். மிக்க தலம் - பூமியின் பெரும் பகுதி. அதலம் - கீழ் ஏழு லோகங்களில் ஒன்று. திக்கு அதலம் - கிழக்குத் திக்கில் உள்ள கீழ் உலகங்களில் ஒன்று. சிங்கநாதம் செய்தல் - வெற்றிப் பெருமிதத்தால் கர்ச்சித்தல். சிங்கநாதத்து அதிர்ச்சியால் பூமண்டலத்தைத் தாங்கும் ஆற்ற லுடைய ஆதிசேஷனது சிகாமணிகள் உதிர்ந்தன, என்றால்,

சுகபோகத்தில் ஆழ்ந்திருக்கும் மெல்லியரான தேவர்களின் நிலை நான் சொல்லக்கூடிய தாமோ,—என்று கூறும் கருத்தது ஈற்றடி.

**20. வரைகலங்க வனங்கலங்கக் கலங்கு றாத**
**மண்கலங்க விண்கலங்க மகர முந்நீர்த்**
**திரைகலங்கத் திசைகலங்க வீறி லாத**
**செகங்கலங்க வுகங்கலங்கச் சிந்தை தூயோர்**
**உரைகலங்க வுளங்கலங்கத் துளங்கி மெய்யி**
**லூன்கலங்க விலங்கொடுபுள் ளினங்கள் யாவும்**
**நிரைகலங்க வுலகினுயிர் படைத்த தம்மி**
**னிலைகலங்கா தனவுண்டோ நிகழ்த்தி னம்மா.**

*[வரை கலங்க, வனம் கலங்க, கலங்குறாத மண் கலங்க, விண் கலங்க, மகரம் முந்நீர் திரை கலங்க, திசை கலங்க, ஈறு இலாத செகம் கலங்க, உகம் கலங்க, சிந்தை தூயோர் உரை கலங்க, உளம் கலங்க, துளங்கி மெய்யில் ஊன் கலங்க, விலங்கொடு புள் இனங்கள் யாவும் நிரை கலங்க, உலகின் உயிர் படைத்த தம்மில் நிலை கலங்காதன உண்டோ, நிகழ்த்தின் அம்மா!]*

**விளக்கம் :-** வீமனது சிங்கநாதத்தைக் கேட்டு உலகப் பொருள்கள் எல்லாம் கலங்கின, என்க. மகர முந்நீர் திரை - சுறா மீன்களைத் தன்னிடத்தே கொண்ட கடலின் அலைகள். ஈறு இலாத செகம் - முடிவு இலாத உலகங்கள். துளங்கி - அசைதல் உற்று. ஊன் - தசை. நிரை - கூட்டம். உலகில் உயிர் படைத்த பொருள்கள் தம்மில், கலங்காதன, இல்லை, என்றபடி. அம்மா : வியப்பிடைச் சொல். பேரும் உருவமும் உடைய பொருள்களுக் கெல்லாம் உயிர் உண்டு, என்பது அறிஞர் கொள்கை. கலங்க என்ற ஒரே பொருளில் பலவிடங்களில் வந்துளதால், **சொல் பொருள் பின்வருநிலையணி**. உகம் - காலம்.

## கலித்துறை

### வீமன் அனுமனைக் காணல்

**21 அந்த வோதையப் பொழிலிடைத் தவம்புரிந் தருளும்**
**மந்த ராசல மனையதோள் மாருதி கேட்டு**
**விந்த மன்னதிண் புயாசல வீமனுக் கெதிர்போய்**
**முந்த மற்றவன் வருநெறி யதனிடை முன்னி.**

*[அந்த ஓதை அ பொழிலிடை தவம் புரிந்தருளும் மந்தராசலம் (மந்தர - அசலம்) அனைய தோள் மாருதி கேட்டு, விந்தம் அன்ன திண் புயா சலம் (புய - அசலம்) வீமனுக்கு எதிர்போய், முந்த மற்று அவன்வரும் நெறியதனிடை முன்னி, அடுத்த கவியோடு தொடரும்.]*

**விளக்கம் :-** மந்தராசலம் - மந்தர மலை. விந்தம் - விந்திய மலை. புயாசலம் - தோள்களாகிய மலைகள். முந்த - முந்தி;

அல்லது முதலில், முன்னி - நெருங்கி. வீமனது கர்ச்சனையைக் கேட்ட அனுமான், அவன் வரும் வழியில் முந்திப்போய் நெருங்கினான்,—என்பதாம். பாற் கடலை மந்தர மலை கலக்கியது போல், அனுமானது தோள்கள் அரக்கர் கடலைக் கலக்கினமையின், மந்தரசயிலம் அனைய தோள், என்றார். அகத்திய முனிவரின் முன் விந்திய மலை அடங்கியதுபோல். அனுமானின் முன் வீமனது வலியடங்கியதால், விந்தமன்ன புயாசல வீமன், என்றார். மற்று : அசை.

**22.** **வெற்பி ரண்டினில் வேலைமுன் கடந்தா ணீட்டிப்**
**பொற்பு யாசல மிரண்டையு மிருவரை போக்கி**
**அற்ப வாழ்வுடை யரக்கன்மா நகரழ லூட்டும்**
**சிற்ப வாலதி திசையெலாஞ் சென்றுநின் றோங்க.**

[வெற்பு இரண்டினில் வேலை முன் கடந்த தாள் நீட்டி, பொன் புயாசலம் இரண்டையும் இருவரை போக்கி, அற்ப வாழ்வு உடை அரக்கன் மாநகர் அழல் ஊட்டும் சிற்பம் வாலதி திசை எலாம் சென்று நின்று ஓங்க.]

**விளக்கம் :-** வேலை - சமுத்திரம். பொன்புயா சலம் - அழகிய கைகளாகிய மலைகள். இருவரை போக்கி - இரண்டு மலைகளில் செலுத்தி. சிற்பம் வாலதி - அழகிய வால், அல்லது போர்த் தொழில் செய்ய வல்ல சிறந்த வால். வீமனது வழியில் முன் வந்த மாருதி பேருருக் கொண்டு, இரண்டு கால்களையும் இரண்டு மலைகளில் நீட்டி, இரண்டு கைகளையும் இரண்டு மலைகளில் செலுத்தித் திக்கு எங்கும் வாலைப் போக்கி நின்றுகொண்டிருந்தான்,—என்பதாம். ஓங்கா நிற்க, என்பது அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்.

**23.** **எம்பி ரான்றனக் கொழியவேறி யர்வர்க்குந் தெரியாச்**
**செம்பொன் மாமணிக் குண்டல மிருபுறந் திகழ**
**விம்ப மால்வரை மீதொரு மேருவே யொக்கும்**
**அம்பொன் மால்வரை யிருந்தென விருந்தன னனுமான்.**

[எம்பிரான் தனக்கு ஒழிய வேறு யாவர்க்கும் தெரியா செம்பொன் மாமணி குண்டலம் இருபுறம் திகழ, விம்பம் மால்வரை மீது ஒரு மேருவே ஒக்கும் அம் பொன் மால்வரை இருந்தென இருந்தனன் அனுமான்.]

**விளக்கம் :-** எம்பிரான் - திருமால். நமக்கெல்லாம் தலைவரான திருமாலின் ஏழாவது அவதாரமான திருவிக்கிரமன் அல்லால் மற்றெவர்க்கும் கட்புலனாகாத சிவந்த அழகிய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற குண்டலங்கள் இரு பக்கத்திலும் விளங்க,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். விம்ப மால்வரை - வட்ட வடிவமான பெரிய மலை. ஒரு பெரிய மலைமீது மேருமலையை ஒத்த அழகிய மலை இருந்ததுபோல் அனுமான் இருந்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். இது, **இல்பொருள் உவமை அணி** ஆகும்.

**24.** **குகைத்த டங்கிரி யனையதோள் கொட்டியார்த் துரப்பி**
**நகைத்து நாகமு நாகமு நடுங்கிட நடந்து**
**மிகைத்த வாளரி போல்வரும் வீமன்முன் கண்டு**
**திகைத்து நின்றனன் மறமையுந் திறமையு முடையான்.**

*[குகை தடகிரி அனைய தோள் கொட்டி ஆர்த்து உரப்பி, நகைத்து நாகமும் நாகமும் நடுங்கிட நடந்து, மிகைத்த வாள் அரிபோல் வரும் வீமன் முன் கண்டு திகைத்து நின்றனன், மறமையும் திறமையும் உடையான்.]*

**விளக்கம் :-** குகை தடங்கிரி - குகைகளையுடைய பெரிய மலை. நாகம் - நாகலோகம், தேவலோகம். வாள் அரி - சிங்கம். மறைமை - வீரப்பண்பு. மறைமையும் திறமையும் உடையவனாகிய வீமன், தனது மலை போன்ற தோள்களைக் கொட்டிக் கொண்டும், ஆரவாரம் செய்துகொண்டும், அதட்டிக்கொண்டும், சிரித்துக்கொண்டும், நாகர் உலகமும் தேவர் உலகமும் நடுங்கும் படி சிங்கம்போல் நடந்து செல்லலும், அவன் தனது வழியின் முன் தடையாய் (மாருதி) நிற்பதைப் பார்த்துத் திகைத்து நின்றான்,—என்பது பொருள். குகை தடங்கிரி, என்பதில் குகை இயற்கை அடை, அவன் நகைத்துச் சென்றது வீரப் பெருமிதத்தின் மெய்ப்பாடு. மிகைத்த - வலிமிகுத்த.

**25.** **அண்டர் தானவ ரரக்கரு மணுகுறா வனத்தில்**
**எண்டி சாமுக மெங்கணு மிரிந்திட வார்த்து**
**மண்டி மேல்வரு மானுட னரடா வென்றான்**
**சண்ட வாயுவின் தனையனை மற்றவன் றமையன்.**

*[அண்டர் தானவர் அரக்கரும் அணுகுறா வனத்தில் எண் திசா முகம் எங்கணும் இரிந்திட ஆர்த்து, மண்டி மேல் வரும் மானுடன் ஆர் அடா என்றான், சண்டம் வாயுவின் தனையனை (மற்று) அவன் தமையன்.]*

**விளக்கம் :-** எண்திசாமுகம் - எட்டான திக்குக்களின் இடம். இரிந்திட ஆர்த்து - அஞ்சி ஓடும்படி ஆரவாரம் செய்துகொண்டு. மண்டி - விரைந்து நெருங்கி. சண்டம் வாயு - கடுமை உடைய வாயு. ஆர்த்துக்கொண்டு விரைந்து வரும் வீமனைக் கண்டு மாருதி, 'நீ யார்?' என்று உசாவினான்,—என்பதாம்.

**26.** **தம்மு னாகிய வானரஞ் சாற்றிய வுரைகேட்(டு)**
**எம்மு னாகிவந் திருந்தநீ யார்கொலென் றிசைத்தான்**
**தெம்மு னாயினுஞ் செவ்விமென் போகமா மகளிர்**
**தம்மு னாயினு நாத்தவ றாவடல் வீமன்.**

[தம் முன் ஆகிய வானரம் சாற்றிய உரை கேட்டு எம் முன் ஆகி வந்து இருந்த நீ யார் கொல், என்று இசைத்தான், தெம் முன் (தெவ்முன்) ஆயினும், செவ்வி மெல் போகம் மா மகளிர் தம் முன் ஆயினும் நா தவறா அடல் வீமன்.]

**விளக்கம் :-** தம் முன் - வீமன் தனக்கு முன்னவன் (தமையன் ஆகிய அனுமான்). எம்முன் - எனக்கு எதிரில். தெவ் முன் (தெம்முன்)—பகைவர் முன். அனுமான் கூறிய உரைகேட்டு, வீமன், ''என் முன்னே வந்து குறுக்கிடும் நீ யார்?'' என்று கேட்டான், என்பதாம். பகைவர் முன்னாயினும், செவ்விய மென்மையான சரீரமுடைய போக மகளிர் முன்னாயினும் வாய்மை தவறாத அடல் வீமன், என்பது ஈற்றடிகளின் பொருள். ஊடிய பெண்களிடத்திலும், பகைவரிடத்திலும், உயிர் காத்தற் பொருட்டும், கல்யாணம் கூட்டி வைக்குங் கருமத்திலும் பொய் யுரைத்தல் அமையும் என்று நீதி நூல்கள் கூறும். அந் நூல்கள் அனுமதிக்கும் பொய்யும் வீமனுக்கு அயலானது, என்று கூறும் கருத்தின ஈற்றடிகள். சத்தியத்தின்பால் வீமனுக்குள்ள உறுதிப் பாட்டை **அடல்** என்ற அடை குறிக்கும்.

**27.** **துன்னும் வெஞ்சிலை வலிகொலோ தோளிணை வலியோ**
**என்னை நீபுக லாரடா வென்பதிங் கெவனோ**
**உன்னை நீயறி யாநெறி யுணர்விலா மனிதா**
**மன்னும்வா லதனைக் கடந்துபோ வல்லையே லென்றான்.**

[துன்னும் வெம் சிலை வலி கொல் (ஓ), தோள் இணை வலியோ? என்னை நீ புகல் ஆர் அடா, என்பது இங்கு எவனோ? உன்னை அறியா நெறி உணர்வு இலா மனிதா, மன்னும் வால் அதனை கடந்து போ, வல்லையேல், என்றான்.]

**விளக்கம் :-** துன்னும் - நெருங்கிய, மிகுதியுற்ற. இங்கு ஆர் அடா நீ புகல் என்பது - இங்கே ''ஆரடா, நீ சொல்,'' என்று என்னைக் கேட்பது. எவனோ - எதனாலோ. உன்னை நீ அறியா நெறி உணர்வு இலா மனிதா - உன்னை நீ அறிந்து கொள்ளாதவனாய், (கேட்டதற்கு நேரே விடைகூற வேண்டும் என்ற) முறையை உணராத மனிதா. மன்னும் வால் - வலிமை மிகுந்த வால், (மன்னும், மிகுதிப்பொருளது) ''நான் கேட்டதற்குப் பதிலாக உன்னை இன்னான் என்று தெரிவிக்காமல், என்னை எதிர் வினவியது, 'வலியவன் நான்' என்ற செருக்கினாலா, அல்லது வேறு எதனால்? முடியுமானால் என் வாலைக் கடந்து செல்'', என்று மாருதி கூறினான், என்க.

**28.** **உரங்கொள் வீரனம் மாருதி யுரைத்தசொற் கேளா**
**வரங்கொள் வார்சிலை யிராகவன் மாப்பெருந் தூதன்**
**தரங்க வாரிதி தாவுமென் றம்முன்வா லன்றிக்**
**குரங்கின் வாலிது கடப்பதிங் கரியதோ கூறாய்.**

[உரம் கொள் வீமன் அ மாருதி உரைத்த சொல் கேளா, வரம் கொள் வார்சிலை இராகவன் மாபெரும் தூதன் தரங்கம் வாரிதி தாவும் என் தம் முன் வால் அன்றி, குரங்கின் வால் இது கடப்பது இங்கு அரியதோ கூறாய்.]

**விளக்கம் :-** வரம் கொள் வார்சிலை - சிறப்பைக் கொண்ட கோதண்டம் என்னும் நீண்ட வில். தரங்கம் வாரிதி - அலைகளை உடைய கடல். ''எனது முன்னவனும் இராமதூதனுமாகிய அநுமானது வால் அன்றி மற்றக் குரங்குகளின் வாலைக் கடப்பது, எனக்கு அரியதன்று'', என்று வீமன் எதிர் மொழிந்தபடி.

**29. என்று தன்றிருத் துணைவனின் றிசைத்தது கேட்டு**
**நன்று நன்றுநீ நவின்றது நன்றென நகையாத்**
**துன்று வார்சிலை மனிதனைச் சுமந்துதோள் வருந்தும்**
**புன்றொ ழிற்சிறு குரங்கையோ வென்னொடும் புகல்வாய்.**

[என்று தன் திரு துணைவன் நின்று இசைத்தது கேட்டு, ''நன்று, நன்று நீ நவின்றது நன்று'', என நகையா, துன்று வார் சிலை மனிதனை சுமந்து தோள் வருந்தும் புன்தொழில் (புல் - தொழில்) குரங்கையோ என்னொடும் புகல்வாய், - அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** துணைவன் - தம்பி. நின்று - எதிர் நின்று. நீ கூறுவது மிக நன்றாக இருக்கின்றது, என்று (மாருதி) பரிகாச மாகச் சிரித்து, என்பது இரண்டாவது அடியின் பொருள். துன்று வார் சிலை - நெருங்கிய, அதாவது வலிமை மிகுந்த நீண்ட வில். தோள் வருந்த - மனிதனைச் சுமந்த பரிபவத்தால் தோள்கள் வருந்த. என்னொடும் புகல்வாய் - என்னிடத்திலே பாராட்டிக் கூறுவாய். மனிதனைச் சுமந்த புன் தொழிற் குரங்கையோ என் முன் பாராட்ட முற்பட்டாய், என்று அனுமான் கூறியபடி.

**30. குரக்கு நாயக னவ்வுரை கூறலுங் கேட்டுத்**
**தரைக்கு நாயகன் றடம்புயங் குலுங்கிட நகையா**
**அரக்கர் நாயக னூரழ லூட்டியிவ் வகிலம்**
**புரக்கு நாயகன் றன்னையோ விழித்துநீ புகல்வாய்.**

[குரக்கு நாயகன் அ உரை கூறலும் கேட்டு தரைக்கு நாயகன் தட புயம் குலுங்கிட நகையா, அரக்கர் நாயகன் ஊர் அழல் ஊட்டி இ அகிலம் புரக்கும் நாயகன் தன்னையோ இழித்து நீ புகல்வாய்.]

**விளக்கம் :-** குரக்கு நாயகன்-அனுமான். தரைக்கு நாயகன்-வீமன். அகிலம் புரக்கும் நாயகன் - திருமாலின் அவதாரமான இராமன். இந்த உலகத்தை இரட்சிப்பவனான இராமனையோ மனிதன் என்று இழித்துக் கூறினாய்? என்று கூறி, வீமன் சிரித்தான்,—என்பதாம். குரங்கினது அறியாமையை நோக்கிச் சிரித்தான், என்க.

**31. பின்னும் வார்சிலை யிராகவன் பெருமையு மனுமான்**
**மன்னு தோளிணை வலிமையு மாருதி சாற்ற**
**அன்ன போழ்தினி லகமகிழ்ந் தருளுட னோக்கி**
**என்ன காரியம் வந்ததிங் கியார்கொனீ யென்றான்.**

[பின்னும் வார்சிலை இராகவன் பெருமையும் அனுமான் மன்னு தோள் இணை வலிமையும் மாருதி சாற்ற, அன்ன போழ்தினில் அகம் மகிழ்ந்து அருளுடன் நோக்கி, என்ன காரியம் வந்தது இங்கு, யார் கொல் நீ? என்றான்.]

**விளக்கம் :-** மாருதி - வாயுபுத்திரனான வீமன், மேலும், வீமன் இராமனது பெருமையையும் அனுமானது தோளின் வலிமையையும் கூற, அது கேட்டு அகம் மகிழ்ந்த அனுமான், ''நீ யார்? இங்கே வந்த காரியம் யாது?'' என்று வினவினான், — என்பதாம்.

**32. தாம மாருதி யுரைத்தசொற் றம்பியுங் கேட்டு**
**நேமி மாநிலம் புரக்கும்நன் னீதிவேற் றருமன்**
**நாம நாயகற் கிளையவ னரனுக்கு மூத்தோன்**
**வீமன் வாயுவின் புதல்வன்யா னென்றனன் விறலோன்.**

[தாமம் மாருதி உரைத்த சொல் தம்பியும் கேட்டு, நேமி மா நிலம் புரக்கும் நல் நீதி வேல் தருமன் நாமம் நாயகற்கு இளையவன், நரனுக்கு மூத்தோன், வீமன், வாயுவின் புதல்வன் யான் என்றனன் விறலோன்.]

**விளக்கம் :-** தாமம் - மாலை. ஒளி என்று பொருள் கொண்டால், ஒளி வீசும் திருமேனியை உடைய அநுமான், என்று பொருள்படும். நேமி மா நிலம் - வட்ட வடிவினதான பெரிய பூமி. நரன் - அருச்சுனன். ''தருமனுக்கு இளையவன், அருச்சுனனுக்கு மூத்தவன், வாயுவின் குமாரன்'', என்று வீமன் தன்னைத் தெரிவித்துக்கொண்டதைக் கூறும் செய்யுள்.

**33. அன்ன வாசக மவனுரைத் தலுமிக லனுமான்**
**கன்ன பாகமுஞ் சிந்தையு முந்துறக் களித்து**
**மின்னு வார்சிலை யிராகவன் மெய்ப்பெருஞ் சீர்த்தி**
**சொன்ன வாறுநன் றுனக்கிதார் சொற்றவ ரென்றான்.**

[அன்ன வாசகம் அவன் உரைத்தலும் இகல் அனுமான் கன்ன பாகமும் சிந்தையும் முந்துற களித்து, மின்னு வார்சிலை இராகவன் மெய் பெருஞ் சீர்த்தி சொன்ன ஆறு நன்று, உனக்கு இது ஆர் சொற்றவர் என்றான்.]

**விளக்கம் :-** கன்னபாகம் - (கர்ணபாகம்) காதின் பகுதி யாகிய இடம். முந்துற - (வீமன் சொல்லி முடிக்கும்) முன்னே. சீர்த்தி - மிகுந்த கீர்த்தி. சொற்றவர் - சொன்னவர். ''ஸ்ரீ

இராமபிரானது சீர்த்தியை உனக்கு யார் சொன்னது?'' என்று அனுமான் வீமனைக் கேட்டான், —என்பதாம்.

**34. வரத்தி னாலரு மறையினால் வார்சிலை பயிற்றும்**
**பரத்து வாசன்முன் பகர்தரக் கேட்டனன் பலகால்**
**திரத்தி னாலுய ரிராகவன் சிலைவலி யென்றான்**
**உரத்தி னாலொரு வீரரு மொப்பிலா வுரவோன்.**

[வரத்தினால் அரு மறையினால் வார்சிலை பயிற்றும் பரத்து வாசன், முன் பகர்தர கேட்டனன் பல கால் திரத்தினால் உயர் இராகவன் சிலை வலி என்றான், உரத்தினால் ஒரு வீரரும் ஒப்பிலா உரவோன்.]

**விளக்கம் :-** வரம் - மேன்மை, ஆசிர்வாதம். மறை - வேத வித்தகம், சிலைக்கலைக்குரிய வேத மந்திரங்கள். பரத்துவாசன் - பரத்துவாச முனிவனது குமாரனான துரோணன், திரம் - வலிமை, உறுதிப்பாடு. வலிமையினால் தனக்கு ஒப்பிலாதவனான வீமன், வரத்தினாலும், மறையின் மந்திரங்களோடும் வில்தொழில் பயிற்றுவித்த துரோணன் சொல்ல இராமனது சிலைவலிப் பெருமையை நான் பலகால் கேட்டுள்ளேன், என்று சொன்னான், என்பதாம். வரத்தினால், என்பது பெரியோர்களின், அல்லது தந்தையின் ஆசீர்வாதம் பெற்ற மேன்மையினால், என்ற பொருளதாகும்.

அனுமான் தன்னைத் தெரிவித்தல்

**35. குந்தி கான்முளை கூறிய வாசகங் கேட்டுப்**
**புந்தி யாலுய ரஞ்சனை புதல்வனும் புகல்வான்**
**சிந்து சீகரச் சிந்துமுன் கடந்துசெந் தீயால்**
**உந்து வாள்வலி நிருதரு ரொருங்குசுட் டவனும்.**

[குந்தி கான் முளை கூறிய வாசகம் கேட்டு, புந்தியால் உயர் அஞ்சனை புதல்வனும் புகல்வான், சிந்து சீகரம் சிந்து முன் கடந்து செந்தீயால் உந்து வாள் வலி நிருதர் ஊர் ஒருங்கு சுட்டவனும், — அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** குந்தி கான் முளை - வீமன். புந்தி - அறிவு. சிந்துகின்ற சீகரம் சிந்து - சிந்துகின்ற நீர்த்திவலைகளை உடைய சமுத்திரம். செந்தீயால் சுட்டவன்அனுமான். வீமனும் அனுமனும் வாயு புத்திரர்களாயினும், இரு வேறு தாயினிடம் உண்டானவர், என்பது தோன்றக் குந்தி கான் முளை, என்றும், அஞ்சனை புதல்வன் என்றும் கூறினார் என்க.

**36. அந்த வார்சிலை யிராமனுக் கடிமையா யென்றும்**
**சிந்தை யாலவன் றிருப்பதஞ் சிந்தை செய்பவனும்**
**உந்தை யாகிய வாயுவுக் குற்பவித் தவனும்**
**இந்த வாழ்வுடை யனுமனே யென்றன னிகலோன்.**

[அந்த வார்சிலை இராமனுக்கு அடிமை ஆய் சிந்தையால் அவன் திரு பதம் சிந்தை செய்பவனும், உந்தை ஆகிய வாயுவுக்கு உற்பவித்தவனும இந்த வாழ்வு உடை அனுமனே என்றனன் இகலோன்.]

**விளக்கம் :-** பதம் - பாதம், உத்பவித்தவன் - பிறந்தவன், உந்தை - உன் தந்தை (மரூஉ), இந்த வாழ்வு உடைய - இந்த வாழ்க்கையை உடைய, அல்லது உன் முன் காணப்படும் இந்த யாக்கையின் தோற்றத்தை உடைய. இகலோன் - பராக்ரமசாலி யான அனுமான், இதனால், மாருதி, தன்னை வீமனுக்குத் தெரிவித்துக்கொண்டான், ஆயிற்று.

**37. என்ற வாசக மிருசெவிக் கமுதெனக் கேட்டுத்
துன்று நெஞ்சினி லுவகையன் றுதித்தனன் றுள்ளி
என்றும் யாமுய றவப்பய னிருந்தவா வென்னாச்
சென்றி றைஞ்சினன் றிரைகடல் கடந்தசே வடிமேல்.**

[என்ற வாசகம் இரு செவிக்கு அமுது என கேட்டு, துன்று நெஞ்சினில் உவகையன் துதித்தனன் துள்ளி, என்றும் யாம் முயல் தவம் பயன் இருந்த ஆறு என்னா, சென்று இறைஞ்சினன் திரை கடல் கடந்த சேவடி (சே - அடி) மேல்.]

**விளக்கம் :-** நெஞ்சினில் துன்று உவகையன் - நெஞ்சினில் மிகுந்து பொருந்திய மகிழ்ச்சியினனான வீமன். துள்ளுதல், மகிழ்ச்சியின் மெய்ப்பாடு. நானும் என் சகோதரர்களும் பல பிறப்புக்களில் செய்த பெருந்தவத்தின் பயன் போலும், இராம தூதனாகிய உன்னை எனது இக் கண்களால் காண நேர்ந்தது, என்று வீமன் வியந்தான், என்க.

**38. தம்பி யைத்துணைத் தாழ்தடக் கைகளா லெடுத்து
வம்பு சேர்மணி மால்வரை மார்புற வணைத்துப்
பம்பு செந்தழற் கானிடைப் பதமலர் சிவப்ப
எம்பி நீதனி நடந்தவா றென்கொலென் றிசைத்தான்.**

[தம்பியை துணை தாழ் தட கைகளால் எடுத்து வம்பு சேர் மணி மால் வரை மார்பு உற அணைத்து, பம்பு செம் தழல் கானிடை பதம் மலர் சிவப்ப, எம்பி, நீ தனி நடந்த ஆறு என் கொல், என்று இசைத்தான்.]

**விளக்கம் :-** தாழ் தடக்கை - முழங்கால்வரை நீண்டுள்ள விசாலமான இணைக் கைகள். வம்பு சேர் மணி மால்வரை - திருத்துழாய் மாலையின் வாசனை கொண்ட மலைபோன்ற (அனுமனது) அழகிய மார்பு. தம்பியை அனுமான் இரு கைகளாலும் வாரி எடுத்து மார்புறத் தழுவிக்கொண்டு இக் கானிடம் வந்த காரணம் என்? என்று கேட்டான், —என்பதாம்.

**39. தாயத் தாரும் வெவ்வஞ்சனைச் சகுனியுங் கூடி**
**மாயத் தாலொரு கவறுகொண் டெங்கண்மண் கொண்(டு)**
**நேயத் தானெடுங் கானக நேர்ந்தன ரென்றான்**
**சீயத் தாலர சிழந்திடுஞ் சிம்புளே றனையான்.**

[தாயத்தாரும் வெவ் வஞ்சனை சகுனியும் கூடி, மாயத்தால் ஒரு கவறு கொண்டு எங்கள் மண் கொண்டு, நேயத்தால் நெடுங் கானகம் நேர்ந்தனர், என்றான், சீயத்தால் அரசு இழந்திடும் சிம்புள் ஏறு அனையான்.]

**விளக்கம் :-** தாயத்தார் - தாயாதிகளாகிய துரியோதனாதியர். கவறு கொண்டு - சூதாட்டத்தைக் கருவியாகக்கொண்டு. நேயத்தால் - (அனுமானிடம் அவனுக்கு உளதான) உறவின் உரிமையினால், அனுமானிடம், தாயத்தார் மாயச் சூதினால் கான் அடையச் செய்தனர், என்றான், என்க. சிங்கத்தால் தலைமை இழந்த ஆண் சரபத்தை ஒத்தவனான வீமன்,—என்பது ஈற்றடியின் பொருள். சரபம் என்பது சிங்கத்தையும் அழிக்கவல்ல தான ஒரு மிருக விசேஷம். இதைப் பறவை என்றும் கூறுவர். சிம்புள் ஏறு - ஆண் சரபம். வலிமையில் மிக்கதான "சிம்புள் சிங்கத்தால் தலைமை ஒழியப் பெற்றது போல்"—என்றது, "விதி வசத்தால் தங்களுக்கு இந்த எளிய நிலை வந்தது, என்று கூறும் குறிப்பினது." "தம்பி, இங்கே தனியே வந்ததன் காரணம் யாது?" என்று அனுமன் வினவியதற்குப் பதிலாக வீமன், தானும் உடன் பிறந்தோரும் கானகம் அடைய நேர்ந்த காரணத்தை இச் செய்யுளால் கூறி, அடுத்த செய்யுளால், தான் தனியே இவண் வந்த காரியத்தைக் கூறுவானாயினான்.

**40. திகந்த மெட்டினுந் தன்மண மொல்லெனச் செல்லச்**
**சுகந்த புட்பமொன் றியாமுறை வனத்தினிற் றோன்றத்**
**தகைந்த வப்புது மலர்தனைத் தழன்மகள் காணா**
**அகைந்த வித்துணை மலரெனக் கருளுதி யென்றாள்.**

[திக் அந்தம் எட்டினும் தன் மணம் ஒல்லென செல்ல, சுகந்தம் புட்பம் ஒன்று யாம் உறை வனத்தினில் தோன்ற, தகைந்த அ புது மலர்தனை தழல் மகள் காணா, அகைந்த இ துணை மலர் எனக்கு அருளுதி, என்றாள்.]

**விளக்கம் :-** திக் அந்தம் எட்டினும் - எட்டுத் திக்குகளின் எல்லை வரையிலும், (அந்தம் - எல்லை). ஒல்லென - விரைவாக. செல்ல - சென்று பரவும்படி. சுகந்தம் - நல்ல வாசனை. தகைந்த - பெருமை பொருந்திய. தழல் மகள் - திரௌபதி. காணா - கண்டு. அகைந்த இத்துணை மலர் - (இதழ்) தழைத்த இத்தன்மையதான மலர். புது மலர் - மண்ணுலகில் இல்லாததும், அதிசயிக்கத்தக்கதுமான மலர். பூலோகத்தில் காணப் படாத மலர் ஒன்று நாங்கள் வசிக்குங் கானில், திரௌபதி கண்டு,

இத்தன்மையதான மலரைத் தனக்குத் தேடித் தருமாறு வேண்ட, இங்கே, நான் தனியே வர நேர்ந்தது என்று வீமன், அனுமானுக்குச் சொன்னான், — என்க.

**41. ஆத லாலிவண் யானுமின் றணுகின னென்று**
**நீதி யாலுயர் தம்முனை நெடுந்தகை போற்றக்**
**கோதி லாதவக் குரிசிலுங் குமரனை நோக்கித்**
**தீதி லாயிது கேட்கெனச் செப்புவன் மாதோ.**

[ஆதலால் இவண் யானும் இன்று அணுகினன் என்று, நீதியால் உயர்தம் முனை நெடுந்தகை போற்ற, கோது இலாத அ குரிசிலும் குமரனை நோக்கி, தீது இலாய் இது கேட்க, என, செப்புவன், மாதோ.]

**விளக்கம்:** - நீதியால் உயர் தம்முனை நெடுந்தகை போற்ற - நன்னெறி கடவா ஒழுக்கத்தினால் உயர்ந்த தன் தமையனான அனுமனை நெடுந்தகை (வீமன்) போற்ற, அதாவது தனக்குத் துணை புரிய வேண்டும் என்று துதிக்க. நெடுந்தகை - பெருமைக் குணம் வாய்ந்த வீமன். கோது - குற்றம். குரிசில் - அனுமான், (பெருமையில் சிறந்தவன்). குமரன் - இளையவன், தம்பியாகிய வீமன். தீது இலாய் — (விளி) குற்றமில்லாத தம்பியே. மாதோ : ஈற்றசை. வீமன், தான் வந்த காரியத்தைக் கூற, அனுமான், அவனுக்குச் சில வார்த்தை கூறலானான், என்க. அதை, அடுத்த மூன்று செய்யுள்களில் காண்க.

**42. அருநி திக்கிழ வன்றன தளகைமா நகரில்**
**மருமி குத்தநீண் மஞ்சன வாவியின் கரையில்**
**தரும லர்ப்பெருஞ் சோலையிற் றங்குமம் மலர்சென்(று)**
**உரிமை யுற்றது கோடன்மற் றும்பர்க்கு மரிதால்.**

[அருநிதி கிழவன் தனது அளகை மாநகரில் மரு மிகுத்த நீள் மஞ்சனம் வாவியின் கரையில் தரு மலர் பெரு சோலையில் தங்கும் அம் மலர், சென்று உரிமை உற்று அது கோடல் மற்று உம்பர்க்கும் அரிது, ஆல்.]

**விளச்கம் :-** அருநிதிக் கிழவன் - குபேரன். மரு மிகுத்த நீள் மஞ்சன வாவி - வாசனை மிகுந்த நீராட்டத்திற்குரிய குளம். தரு மலர் — (மலர் தரு) மலர் மரங்கள். தங்கும் - (அச் சோலையில் இம் மலர்) பொருந்தி உளது. சென்று உரிமை உற்று கோடல் உம்பர்க்கும் அரிது - அங்கே சென்று சுதந்திரமாக அதைக் கொள்ளல் தேவர்களுக்கும் அரியது. இதனால் அனுமான், மலர் இருக்கும் இடத்தையும், அதை எளிதில் கொள்ள முடியாத தன்மையையும் கூறியபடி. மற்று. ஆல் : அசைகள்.

**43.** **ஈறி லாவிக லரக்கரோ டியக்கர்தங் காவல்**
**கூறும் வாசகம் பொய்ப்பவர் கூர்தவ முயலும்**
**பேறி லாதவர் பேரரு ளிலாதவர் பிறிதும்**
**ஆறி லாதவர் தமக்கு மங் கணுகுத லரிதால்.**

[ஈறு இலா அரக்கரோடு இயக்கர் தம் காவல், கூறும் வாசகம் பொய்ப்பவர் கூர் தவம் முயலும் பேறு இலாதவர், பேர் அருள் இலாதவர், பிறிதும் ஆறு இலாதவர் தமக்கு அங்கு அணுகு தல் அறிது ஆல்.]

**விளக்கம் :-** ஈறு இலா - முடிவு இலாத, அதாவது மிகப் பல. இயக்கர் - தேவ சாதியில் ஒரு வகையினர். கூர் தவம் - பெரிய தவம். ஆறு இலாதவர் - நல் நெறியில் ஒழுகுதல் இல்லாதவர். வலிமையுடைய மிகப் பலரான அரக்கர்களும் இயக்கர்களும் காவல் புரியும் அந்த இடத்தை, சொன்ன சொல் தவறும் பொய்ய ரும், தவம் முயலும் பாக்கியம் இல்லாதவர்களும், கண்ணோட்டம் இல்லாதவர்களும் நெருங்குதல் அரிது என்று அனுமான் தம்பிக்குச் சொன்னான், என்பதாம். ஆல் : அசை,

**44.** **அறிவும் வாய்மையுந் தூய்மையு மன்புமின் னருளும்**
**பொறையு ஞானமுங் கல்வியும் புரிபெருந் தவமும்**
**நெறியு மானமும் வீரமு நின்னவா தலினால்**
**பெறவு னக்கரி தாயதே தென்றனன் பெரியோன்.**

[அறிவும் வாய்மையும் தூய்மையும் அன்பும் இன் அருளும், பொறையும், ஞானமும், கல்வியும், புரி பெருந் தவமும், நெறியும் மானமும் வீரமும் நின்ன ஆதலினால் பெற உனக்கு அரிது ஆயது ஏது? என்றனன் பெரியோன்.]

**விளக்கம் :-** தூய்மை - சித்த சுத்தி. ஞானம் - இயற்கை யாய் அமைந்த மெய்யறிவு. கல்வி - செயற்கையால் பெற்ற கல்வி அறிவு. நெறி - நன்னெறி கடவாத ஒழுக்கம், (அறிவு முதலிய எல்லா நலங்களும்). நின்ன - உன்னுடைய வாயின. உயர்ந் தோன் ஒருவன் பெற்றிருக்க வேண்டிய எல்லா நற்பண்புகளும் உன்னிடம் குறைவின்றி இருப்பதால், உனக்குப் பெறுவதற்கு அருமையாவது எது, அதாவது, உன்னால் பெற முடியாதது ஒன்றுமில்லை. அந்த மலர் நீ பெறுவதற்கு எளியதே ஆகும், என்று பெரியோனான அனுமான் கூறினான், என்பதாம்.

**45.** **முன்ன வன்புக லுறுதிகூர் மொழியெலாங் கேட்டுப்**
**பின்ன வன்றொழு திவையிவை பேசினன் பின்னும்**
**மன்னர் மன்னவ னறமுண்டு மறமுண்டு வழக்கே**
**உன்னி னுன்னரு ளுண்டுதிண் டோளுர முண்டால்,**

[முன்னவன் புகல் உறுதி கூர் மொழி எலாம் கேட்டு, பின்ன வன் தொழுது இவை இவை பேசினன் பின்னும்; மன்னர் மன்ன வன் அறம் உண்டு, மறம் உண்டு, வழக்கே உன்னின் உன் அருள் உண்டு, திண் தோளும் உண்டு, ஆல்.]

**விளக்கம் :-** முன்னவன் - தமையனான அநுமான். பின்ன வன் - தம்பியாகிய வீமன் - இவை இவை - இந்த வார்த்தைகளை. மன்னர் மன்னவன் - தருமன். மறம் - போர் ஆற்றல். வழக்கே உன்னின் - முறையாக யோசிக்குங்கால். தருமபுத்திரனது தர்ம மும், உனது அருளும், தோள் வலியும் எனக்கு உள; எனவே அம் மலரைக் கவர்தல் எளியதே, என்று வீமன் கூறும் கருத்தது செய்யுள்.

**46. தேவர் காக்கினுந் தெயித்தியர் காக்கினுஞ் சிறந்த**
**மூவர் காக்கினு முறைமுறை மொழிந்த மூ வுலகில்**
**யவார்காக்கினு மிக்கணத் தியக்கரூ ரெய்திக்**
**காவின் மேற்பயில் கடிமலர் கவருவே னென்றான்.**

[தேவர் காக்கினும் தெயித்தியர் காக்கினும், சிறந்த மூவர் காக்கினும், முறை முறை மொழிந்த மூ உலகில் யாவர் காக்கி னும் இ கணத்து இயக்கர் ஊர் எய்தி, காவின் மேல் பயில் கடி மலர் கவருவேன் என்றான்.]

**விளக்கம் :-** சிறந்த மூவர் - தேவர்களில் சிறந்தவர்களான திரிமூர்த்திகள். (பிரும்மா, விஷ்ணு. சிவன்). முறை முறை மொழிந்த மூ உலகில் யாவர் காக்கினும் - (வானுலகம், மண்ணுல கம், பாதாளம் என்று) முறை செய்து மொழியப்பெற்ற மூன்று உலகங்களிலும் உள்ள யாவர் காக்கினும், (அதாவது எப்படிப் பட்ட மறப் பெருமை உடையவர் காக்கினும்.) காவின்மேல் பயில் - சோலையினிடத்தே இருக்கின்ற. மலரைக் காப்பவர் யாவராயினும், உனது அருளும், தருமனது அறமும், எனது தோள் வலியும் துணை நிற்பதால், அதைக் கொணர்வேன், என்று வீமன் கூறினான், என்க.

வீமன் வரம் பெறல்

**47. ஆண்ட வன்புக லுறுதியு மாண்மையுங் கேட்டு**
**நீண்ட தோள்வய மாருதி நெடிதுவந் தருளிப்**
**பாண்ட வன்தனைப் பண்புறப் பரிவினா னோக்கி**
**வேண்டு நல்வரம் வேண்டுக வீண்டைநீ யென்றான்.**

[ஆண்டு அவன் புகல் உறுதியும் ஆண்மையும் கேட்டு, நீண்ட தோள் வயம் மாருதி நெடிது உவந்தருளி, பாண்டவன்தனை பண்பு உற பரிவினால் நோக்கி, வேண்டும் நல்வரம் வேண்டுக ஈண்டை நீ என்றான்.]

**விளக்கம்:-** பண்பு உற பரிவினால் நோக்கி - கருணை பொருந்திய அன்போடு (வீமனை) நோக்கி, அதாவது அன்பினால் குளிர நோக்கி. வீமனது மன உறுதியோடு ஆண்மை தோன்றும்

வாய்மொழியையும் கேட்டு உவந்த அனுமான், அவனைக் குளிர நோக்கி, ''இப்பொழுது, நீ வேண்டும் வரத்தைக் கேள்'', என்றான், என்பதாம்.

**48. நெடிய கானக நீங்கியா நெறியினே ரலரைக்**
**கடிய வெஞ்செருப் புரிபெருங் குருதிவெங் களத்தில்**
**அடிக ளாங்கெழுந் தருளிவந் தருச்சுனன் றடந்தேர்க்**
**கொடியின் மீதுநின் றுவந்துகூத் தாடுதி ரென்றான்.**

[நெடிய கானம் நீங்கி யாம் நெறியில் நேரலரை கடிய வெம் செரு புரி பெருங் குருதி வெம் களத்தில், அடிகள் ஆங்கு எழுந்தருளி வந்து அருச்சுனன் தடந்தேர் கொடியின்மீது நின்று உவந்து கூத்தாடுதிர் என்றான்.]

**விளக்கம் :-** நெறியில் நேரலர் - நன்னெறி கடந்த பகைவர் (துரியோதனாதியர்). கடிய - அவர் மறம் அடக்க. வெம் செரு புரி பெருங் குருதி வெம் களம் - கொடிய போர் புரிதற்கு இடமாகும் பெரிய இரத்தம் பெருக்கிடும் கொடிய போர்க்களம். நாங்கள் கடவ நாள் கழித்துக் கானகம் அகன்று சென்று பகைவரோடு போர் செய்யுங் களத்தில், அடிகள் விசயனது கொடியில் எழுந்தருளி நின்று மகிழ்ச்சியோடு பகைவர் நிலை குலையும்படி வீர நர்த்தனம் செய்தருள வேண்டும், என்று வீமன் வரம் வேண்டினான், — என்பதாம்.

**49. நீட்டு மவ்வர மவனுக்கு நேர்ந்தன னனுமான்**
**மீட்டு நல்வர மொன்றுமுன் வேண்டினன் வீமன்**
**ஈட்டு மாநிதி யிலங்கைதீ யிட்டநா ளிசைந்த**
**மோட்டு ருத்தனைக் காட்டுகென் றிறைஞ்சினன் முதல்வன்.**

[நீட்டும் அ வரம் அவனுக்கு நேர்ந்தனன் அனுமான், மீட்டும் நல்வரம் ஒன்று (முன்) வேண்டினன் வீமன்; ஈட்டும் மாநிதி இலங்கை தீ இட்ட நாள் இசைந்த மோடு உரு தனை காட்டுக, என்று இறைஞ்சினான், முதல்வன்.]

**விளக்கம் :-** நீட்டும் - கேட்ட. வீமன் கேட்ட வரத்தை அநுமான் அளித்தான்; மறுபடியும், அவன் நல்ல வரம் ஒன்றை வேண்டினான். அதாவது, செல்வப் பெருக்கத்தை உடைய இலங்கையைத் தீயால் சுட்ட நாள், நீ கொண்ட பேருருவத்தை எனக்குக் காட்டியருள்க, என்று வணங்கிக் கேட்டுக்கொண்டான்,- என்பது பொருள். இரண்டாவது அடியிலுள்ள முன், அசை. காட்டுக என்பது காட்டு என்று தொகையாய் நின்றது. முதல்வன் - வீரரில் உயர்ந்தவனான வீமன்.

கலிவிருத்தம்

**அனுமான் பேருருக் கொள்ளல்**

**50. என்றடல் வீம னிசைத்திடு முன்னம்**
**ஒன்றியிவ் வேழுல கங்களு மொன்றாம்**
**மன்றுள தார்புனை வாமன னைப்போல்**
**நின்றுநி மிர்ந்தன னித்தமு முள்ளான்.**

[என்று அடல் வீமன் இசைத்திடும் முன்னம், ஒன்றி இ ஏழ் உலகங்களும் ஒன்று ஆம், மன்று உளதார் புனை வாமனனை போல் நின்று நிமிர்ந்தனன் நித்தமும் உள்ளான்.]

**விளக்கம் :-** இந்த ஏழு உலகங்களிலும் ஒன்றி, அவற்றோடு ஒன்றாகும்படி இணைந்த (அதாவது ஏழு உலகங்களையும் தனது சரீரமாகக் கொண்ட),—என்பது இரண்டாவது அடியின் பொருள். வீமன் கேட்கு முன் நித்தமும் உள்ளான் (சிரஞ்சீவி) ஆகிய அனுமான் வாமன வடிவங்கொண்ட திருமாலைப்போல் எழுந்து நின்று மேல் நோக்கி வளர்பவன் ஆனான்,—என்பது பொருள். மன்று உளதார் - வாசனை உடைய துளசி மாலை.

**51. படியின தெல்லை பதத்தின தெல்லை**
**மடியின தெல்லையவ் வானின தெல்லை**
**அடியின தெல்லை யளப்பரி தென்றால்**
**முடியின தெல்லை மொழிந்திட லாமோ.**

[படியினது எல்லை பதத்தினது எல்லை, மடியினது எல்லை அ வானினது எல்லை, அடியினது எல்லை அளப்பு அரிது, என்றால் முடியினது எல்லை மொழிந்திடல் ஆமோ.]

**விளக்கம் :-** பாதத்தின் அளவு, (அதாவது அடி வைப்பின் அளவு) பூமியினது அளவினதாகும். மடி-அடிவயிறு. மடியின் அளவு வானை எட்டும் அளவினதாகும். அடி - (பாதத்திற்கும் முழங் காலுக்கும் இடையுள்ள பகுதி) கால், காலினது அளவோ அளந்து சொல்வதற்கு (அதாவது கண்ணால் கண்டு சொல்வதற்கு) முடியாததாகும், என்றால் தலையின் அளவைச் சொல்லுதல் கூடுமோ, — என்பது பொருள். வாமன வடிவங்கொண்ட திருமால் திரிவிக்ரமனாய் வளர்ந்து அண்டம் எங்கும் வியா பித்தது போன்று அனுமான் பேருருவங் கொண்டான், என்க

**52. அந்தர மெங்கு மடங்கிய மெய்யில்**
**சுந்தர வாலதி சுற்றிய தோற்றம்**
**முந்திய நீளுடல் வாசுகி முன்னாள்**
**மந்தர வெற்பை வளைத்தது மானும்.**

[அந்தரம் எங்கும் அடங்கிய மெய்யில் சுந்தரம் வாலதி சுற்றிய தோற்றம், முந்திய நீள் உடல் வாசுகி முன் நாள் மந்தரம் வெற்பை வளைத்தது மானும்.]

**விளக்கம் :-** அந்தரம் - ஆகாயம். வாலதி - வால். முந்திய வாசுகி நீள் உடல் - விரைந்து செல்லுதலையுடைய வாசுகியின் நீண்ட உடல். ஆகாயத்தின் இடம் முழுவதையும் தன்னிலே அடங்கச் செய்த அநுமனது உடலினிடத்தே சுற்றிக்கொண்டிருந்த வாலினது தோற்றம், பாற்கடல் கடைந்த காலத்தில் மந்தர மலையை வாசுகி சுற்றிக் கொண்டிருந்ததை ஒத்திருந்தது,— என்பது பொருள். அனுமான், மந்தர மலை; வால், வாசுகி.

**53 நீளகல் வான நெருங்க மருங்கே**
**தோள்புறம் வாலதி சூழ்தர நிற்போன்**
**நாளொடு தாரகை ஞாயிறு முதலாம்**
**கோளணி சூழ்வரு குன்றமு மொத்தான்.**

[நீள் அகல் வானம் நெருங்க மருங்கே தோள் புறம் வாலதி சூழ்தர நிற்போன், நாளொடு தாரகை ஞாயிறு முதல் ஆம் கோள், அணி சூழ்வரு குன்றமும் ஒத்தான்.]

**விளக்கம் :-** அநுமானின் உடல் வர்ணனையாகும் இது. நீண்டு விரிந்த வானத்தின் மருங்கு (அனுமானது) சிரம் நெருங்க, தோளின் புறம் வால் சுற்றியிருக்க நின்றவனாகிய அனுமான், அசுவினி பரணி முதலிய நட்சத்திரங்களுடன், அவை யல்லாத மற்ற நட்சத்திரங்களும் சூரியன் முதலிய கிரகங்களும் வலம் வரு கின்ற மகா மேரு பருவதத்தை ஒத்தவன் ஆனான்.—என்பது பொருள். நாள் - அசுவினி பரணி முதலிய நட்சத்திரங்கள். தாரகை - அவை அல்லாத மற்ற நட்சத்திரங்கள். ஞாயிறு முதலாம் கோள் - சூரியன் சந்திரன் முதலிய நவக்கிரகங்கள். அநுமானது தலை வானை நெருங்க அவனது தோள் பகுதி, நவக் கிரகங்களும் நட்சத்திரங்களும் பிரதட்சிணம் செய்யும் மகாமேரு மலையைப் போன்றதாயிற்று, என்றபடி.

**54. இவ்வகை முன்ன மிலங்கை யெரித்தான்**
**பைவரு நாகர் பணஞ்சுளி யத்திண்**
**மெய்வகை கொண்டது கண்டுவி யந்தார்**
**மைவகை சேரகல் வானவ ரெல்லாம்.**

[இ வகை முன்னம் இலங்கை எரித்தான் பைவரு நாகர் பணம் சுளிய திண் மெய் வகை கொண்டது கண்டு வியந்தார், மை வகை சேர் அகல் வானவர் எல்லாம்.]

**விளக்கம் :-** முன் யுகத்தில் இலங்கையைச் சுட்டவனான அநுமான் இவ்வாறு, படம் பொருந்திய அஷ்ட மகா நாகங்களு

டைய படங்கள் சுருங்கும்படி, வலிய உடலின் உருவத்தைக் கொண்டது கண்டு, வானவர் வியந்தார், — என்பதாம். அனுமானின் பேருருவத்தின் சுமை தாங்க மாட்டாது அஷ்ட மகாநாகங்கள் பணம் சுளித்தன, என்க. மெய்வகை - அண்டம் அளாவும்படியான உடலின் தோற்றம், மேகம் ஏழு வகைப் படு மாதலால், மை வகை என்றார். ஆதிசேஷனோடு அஷ்டமா நாகங்களும் பூமியைத் தாங்கும் என்பர். அவை சுமை பொறுக்க மாட்டாமையால் பணம் சுளித்தன என்க. பணங்கள் சலிக்க, என்றும் பாடம் உளது.

**55. மேலள வாது விளங்கிய சொன்மெய்**
**நூலள வாகிய நுண்ணறி வோர்போல்**
**மாலள வன்றி வணங்குத லில்லான்**
**காலள வல்லது கண்டிலன் வீமன்.**

[மேல் அளவாது விளங்கிய சொல் மெய் நூல் அளவு ஆகிய நுண் அறிவோர் போல், மால் அளவு அன்றி வணங்குதல் இல் லான், கால் அளவு அல்லது கண்டிலன்.]

**விளக்கம் :-** மேலெழுந்தபடி பார்த்தலோடு நில்லலாமல் (ஆழ்ந்து நோக்கி), விளக்கத் தெளிவுடைய அரிய விஷயங்களைச் சொல்கின்ற தத்துவ நூல்களின் அளவில் மனம் பொருந்திய நுண்ணிய அறிவுடைய மேலோர் போல், திருமாலின் அவதார மான இராமபிரானை யன்றி வணங்குதல் இல்லாதவனாகிய அனுமானின் காலின் அளவை அல்லாது மற்றப் பகுதிகளை வீமன் காணமுடியாதவனானான், என்பது பொருள். நூல் அளவு - நூலின் இடத்திலே. மால் அளவு - திருமானிடத்திலே. கால் அளவு - காலாகிய இடம். இதனால், அனுமானது விச்வ வடிவப் பெருமை கூறப்பட்டது.

**56. அருக்கனின் மும்மடி யாரொளி வீசும்**
**உருக்கிளர் மேனியை யூடுற நோக்கா**
**வெருக்கொடு தாண்மிசை வீழ்ந்தனன் மீண்டும்**
**சுருக்குக வென்று துதித்தனன் வீமன்.**

[அருக்கனின் மும்மடி ஆர் ஒளி வீசும்உரு கிளர் மேனியை ஊடு உற (நன்றாக) நோக்கா, வெருக்கொடு தாள்மிசை வீழ்ந் தனன் மீண்டும், சுருக்குக என்று துதித்தனன் வீமன்.]

**விளக்கம் :-** அருக்கன் - சூரியன். மும்மடி - மூன்று மடங்கு. ஆர் ஒளிவீசும் உருகிளர் மேனி - மிகுந்த ஒளியை வீசும் உருவத் தோடு விளங்கும் திருமேனி. ஊடுற நோக்கா - ஆழ்ந்து நோக்கி. வெருக் கொடு - (கண்ணைக் கூசச் செய்யும் பிரகாசத்தைக் காண முடியாமல்) பயந்து. அனுமானது ஒளி மயமான திருமேனியைக் கண்களால் காண முடியாமல். வீமன், அவனது திருவடிகளில்

விழுந்து வணங்கி, உருவத்தைச் சுருக்கிக்கொள்ளுமாறு வேண்டிக் கொண்டான்,-என்பதாம். இலங்கையை எரித்த பேருருவத்தைக் காட்டுமாறு முன்னர் வணங்கி வேண்டினான் ஆதலால், இப் பொழுது அவ்வுருவத்தைத் சுருக்கிக் கொள்ளுமாறு மீண்டும் வணங்கி வேண்டினான், என்றார்.

**57. அந்தமு மாதியு மற்றவ ருக்கம்**
**செந்தமிழ் செய்து திரட்டின ரைப்போல்**
**அந்தரம் வானு மகண்டமு மொன்றா**
**உந்திய மேனி யொடுக்கின னம்மா.**

[அந்தமும் ஆதியும் அற்றவருக்கு அம் செந்தமிழ் செய்து திரட்டினரைப் போல், அந்தரம் வானும் அகண்டமும் ஒன்றா உந்திய மேனி ஒடுக்கினன், அம்மா.]

**விளக்கம் :-** அந்தமும் ஆதியும் அற்றவன் - இறைவன். செந் தமிழ் - பிரபந்தம். செய்து திரட்டினர் - பாடித் தொகுத்த மேன் மக்கள். அந்தரம் - ஆகாசம். அகண்டம் - மண்ணுலகம் ஒன்றா உந்திய மேனி - (அந்தரம் என்று அழைக்கப்படும் வானமும் மண்ணுலகமும்) ஒன்றாகும்படி விரிந்து ஓங்கிய திருமேனி. இறைவன் விஷயமாகப் பிரபந்தம் செய்து உயர்ந்த மேன்மக்கள் அடக்கி நிற்பது போல், அனுமான் விண்ணும் மண்ணும் ஒன்றா கும்படி வளர்ந்து ஓங்கிய திருமேனியை அடக்கிக்கொண்டான், என்றபடி. இறைவனிடம் ஈடுபாடுடைய ஞானவித்தகர், யாதும் அறியாதவர்போல் அடங்கி நிற்கும் இயல்பினர் ஆவர். அம் தமிழ் செய்து திரட்டினர், என்பது நம்மாழ்வாரைக் குறிக்கலாம். முதலாழ்வார்களைக் குறிக்கும் என்பாரும் ஆழ்வார் பதின்மரை யும் குறிக்கும் என்பாரும் உளர். அம்மா : வியப்பிடைச் சொல். வீமன் வேண்டியபடி உருவத்தைச் சுருக்கினமை நோக்கிப் புலவர் வியந்தபடி.

**58. இந்திர சால மியற்றின ரைப்போல்**
**மைந்தொடு தொல்லை வடிவுகொள் பொழுதத்து**
**அந்தமி லாயடி யேன்பிழை யெல்லாம்**
**புந்தியு றாது பொறுத்தரு ளென்றான்.**

[இந்திரசாலம் இயற்றினரைப் போல் மைந்தொடு தொல்லை வடிவு கொள் பொழுதத்து, அந்தம் இலாய் அடியேன் பிழை எல்லாம் புந்தி உறாது பொறுத்தருள் என்றான்.]

**விளக்கம் :-** இந்திரசாலம் - மாயவித்தை. மைந்து - வலிமை. தொல்லை வடிவு-பழமையான உருவம். பொழுதத்து - பொழுது, (அத்து - சாரியை) புந்தி உறாது - மனத்தில் கொள்ளாமல், அனு மானை முதலில் சாதாரணக் குரங்காக மதித்து அலக்ஷியமாகப் பேசியதை எண்ணி, வீமன் தன் பிழை பொறுக்குமாறு வேண்டி னான்,—என்க.

**59. திருவடி தன்னிரு சேவடி யிற்போய்
மருவடி தார்புனை மாருதி தொழவே
அருள்வடி வாகி யகண்டமு மெங்கும்
ஒருவடி வானவ னுற்றுரை செய்வான்.**

[திருவடி தன் இரு சேவடியில் போய், மரு வடி தார்புனை மாருதி (வீமன்) தொழவே, அருள் வடிவு ஆகி, அகண்டமும் எங்கும் ஒரு வடிவு ஆனவன் உற்று உரை செய்வான்.]

**விளக்கம் :-** திருவடி - சிறிய திருவடி என்று வைணவர்களால் போற்றப்படும் அனுமான். மரு வடி தார் புனை மாருதி - மணத்தை வடிக்கும் (வீசும்) மாலை அணிந்த வாயு புத்திரனான வீமன். நல்லருளின் வடிவம் ஆகி, பூமியும், மற்ற எல்லாவிடத்தும் நிறைந்து அமையும் ஒப்பற்ற பேருருவங் கொண்ட அனுமான் உள்ளத்தோடு பொருந்திய, சில வார்த்தை கூறுவானாயினான்,— என்பது ஈற்றடிகளின் பொருள். வீமன் அநுமானது திருவடி தொழுழம், அவன் தம்பிக்குச் சில கூறுவானாயினான், என்பதாம்.

**60. உன்னரு கேபயி லும்பிய ரோடும்
மின்னரு கேபயில் வேந்தொடும் வாழ்வுற்று
என்னரு கேவரு கென்றன னென்றும்
தன்னரு கேத முறாத தவத்தோன்.**

[உன் அருகே பயில் உம்பியரோடும், மின் அருகே பயில் வேந்தொடும் வாழ்வு உற்று, என் அருகே வருக என்றனன், என்றும் தன் அருகு ஏதம் உறாத தவத்தோன்.]

**விளக்கம் :-** மின் - மின்னற்கொடி போன்ற திரௌபதி (உவமை ஆகுபெயர்). (அவளோடு) பயில் வேந்து - அக்கினி காரியங்களில் அவளோடு பொருந்தப்பெற்றிருக்கும் தருமன். தம்பியரோடும், தமையனோடும் இனிதே வாழ்ந்திருந்து, உலக வாழ்வு முடியும் நாளில், என்னருகே வருக, என்று, கூறினன் அனுமான். தன் அருகே என்றும் குற்றம் என்பது பொருந்தப் பெறாத தவத்தை உடையவனான அனுமான்,—என்பது ஈற்றடியின் பொருள். தன் அருகே - தன்னிடத்தே.

**61. அங்கவ னம்மொழி கூறலு மையா
எங்கணு நின்னுய ரின்னரு ளுண்டே
பங்கய மாநிதி வாழ்பதி யெய்தச்
சங்கையி னன்னெறி சாற்றுக வென்றான்.**

[அங்கு அவன் அ மொழி கூறலும், ஐயா, எங்கணும் நின் உயர் இன் அருள் உண்டே; பங்கயம் மா நிதி வாழ் பதி எய்த, சங்கை இல் நல் நெறி சாற்றுக, என்றான்.]

**விளக்கம் :-** எங்கணும் நின் உயர் இன் அருள் உண்டே - எந்த நிலையிலும், உனது உயர்ந்த இனிய அருள் என்பால் உளது

அல்லவா. பங்கயம் மாநிதி - சிறந்த பதுமநிதி. சங்கை இல் நல் நெறி—(அந் நிதியுடைய குபேரனது அளகை செல்ல) சந்தேகத்திற்கு இடமிலாத நல்ல பாதை. அளகைக்கு எளிதே செல்வதற்குரிய நல்ல வழியைக் கூறியருள்க, என்று வீமன், தமையனை வேண்டினான்,—என்க. பதும நிதி - நவநிதிகளில் ஒன்று. குபேரன் நவநிதிகளின் நாயகன். பதும நிதி இலக்கணையாய் மற்ற நிதிகளையும் குறிக்கும்.

அனுமான் வழியும் உபாயமும் கூறல்

**62. என்றலு மிந்த வனத்தின தெல்லை**
**ஒன்றிய யோசனை யோரிரு நூறு**
**சென்றபின் யோசனை சிற்சில சென்றால்**
**மன்றன்ம லர்ப்பொழில் வாவியின் மன்னும்.**

[என்றலும் இந்த வனத்தினது எல்லை ஒன்றிய யோசனை ஓர் இரு நூறு சென்றபின், யோசனை சிற்சில (சில் - சில) சென்றால் மன்றல் மலர் பொழில் வாவியின் மன்னும்.]

**விளக்கம் :-** இந்த வனத்தின் எல்லை கடந்து இரு நூறு யோசனை சென்றபின் சில யோசனை தூரம் சென்றால். வாசனை உடைய இந்த மலர், (அங்குள்ள) சோலையின் இடத்ததான தடாகத்தில் பொருந்தியிருத்தலைக் காணலாம், என்று அனுமான் கூறினான்,—என்பதாம்.

**63. அப்பொழில் காவ லரக்கர னேகர்**
**எப்பொழி லுந்திறை கொள்ளுமெ யிற்றார்**
**துப்புட னேயவ ராவிதொ லைத்தால்**
**செப்பிய மாமலர் சென்றுற லாகும்.**

[அ பொழில் காவல் அரக்கர் அனேகர் எ பொழிலும் திறை கொள்ளும் எயிற்றார், துப்புடனே அவர் ஆவி தொலைத்தால், செப்பிய மாமலர் சென்று உறல் ஆகும்.]

**விளக்கம் :-** எப் பொழிலும் திறை கொள்ளும் எயிற்றார் - எந்த உலகத்தையும் திறை கொள்ளும் (அதாவது வென்று அழித்து தின்னும்) கூரிய பற்களை உடையவர். துப்பு - வலிமை. சென்று உறல் ஆகும் - போய் (மலரைப்) பெற்று வரல் இயல்வ தாகும். பொழில் - சோலை, இரண்டாவது அடியில் உலகம், அது ஆகுபெயராய் உலகத்தில் உள்ளாரை உணர்த்தும். அம் மலருள்ள சோலையைக் காவல் செய்யும் ஆற்றல் மிகுந்த கொடிய அரக்கர்களைக் கொன்று அழித்தால், மலர் கொணர்தல் எளியதாகும், என்று அனுமான், உபாயம் கூறினான்,—என்பதாம். திறை - அரசனுக்கு உரியதாகும் இறைப்பொருள். திறை கொள்ளல் - வெல்லுதல்.

**64. அல்லது நீடள காபதி தானும்**
**மெல்லிய லும்பொழின் மேவிய போது**
**நல்லுற வாகி நயத்தொடு சென்றால்**
**மல்லன் மலர்தரு வோடு வழங்கும்.**

[அல்லது நீடு அளகாபதி தானும் மெல் இயலும் பொழில் மேவிய போது, நல் உறவாகி நயத்தொடு சென்றால், மல்லல் மலர் தருவொடு வழங்கும்.]

**விளக்கம் :-** அல்லது - மறத்தால் மலரைக் கொள்ளற்கு இல்லை என்றால். அளகாபதி - குபேரன். மெல்லியல் - அவன் மனைவி. நயத்தொடு சென்றால் - அடக்கத்தோடு, அல்லது வணக்கத்தோடு அவனைத் தொடர்ந்தால். மல்லல் மலர் - வளம் மிக்கதான மலர். தரு-(இங்கே) மலர்க்கொடி. குபேரனுடன் உறவு கொண்டு, தாழ்மையுடன் அவனை வேண்டினால், சமாதான வழி யில் அம் மலரைப் பெறலாம், என்று அனுமான் உபாயங் கூறி னான்,—என்பதாம்.

**65. உறுதியு மொன்னல ரூக்கமு மேகும்**
**நெறியின தெல்லையி னீர்மையு நெறியின்**
**குறிகளும் யாவையு மன்பொடு கூறி**
**அறிவுடை யான்விடை யன்பொட ளித்தான்.**

[உறுதியும் ஒன்னலர் ஊக்கமும், ஏகும் நெறியினது எல்லையின் நீர்மையும், நெறியின் குறிகளும் யாவையும் அன்பொடு கூறி, அறிவு உடையான் விடை அன்பொடு அளித்தான்.]

**விளக்கம் :-** உறுதி - உபாயம். ஒன்னலர் ஊக்கம் - காவல் செய்யும் அரக்கரின் வலிமை, நீர்மை - தன்மை. நெறியின்குறி - வழியின் அடையாளங்கள். அனுமான், வழியும், உபாயமுங் கூறி வீமனுக்கு விடை கொடுத்தான், என்பதாம். ஒன்னலர் - ஒன்றாத வர், எனவே பகைவர், (ஒன்றலர், என்பதின் மரூஉ).

**66. மொய்ம்புடை மாருதி தாளிணை முன்னா**
**வெம்பிய கானிடை மேவிய பயனிங்(கு)**
**எம்பெரு மானுனை யெய்தின னென்னா**
**நம்பியு நாழிகை யொன்றின டந்தான்.**

[மொய்ம்பு உடை மாருதி தாள் இணை முன்னா, வெம்பிய கானிடை மேவிய பயன் இங்கு, எம் பெருமான், உனை எய்தினன் என்னா, நம்பியும் நாழிகை ஒன்றின் நடந்தான்.]

**விளக்கம் :-** முன்னா - தியானித்துக்கொண்டு, வெம்பிய கான் - வெம்மை பொருந்திய காடு. நம்பி - வீமன். நாழிகை ஒன்றின் அடைந்தான் - ஒரு நாழிகைப் பொழுதில் (வனத்தின் எல்லையை) நோக்கி நடந்தான். இக் கானிடை வந்ததினால் உன்னைக்காணும் பாக்கியத்தைப் பெற்றேன், என்று அனுமானுக்கு உபசார வார்த்தை கூறி, அவனது திருவடிகளை தியானித்துக்

கொண்டு போய், ஒரு நாழிகைப் பொழுதில் வீமன் வனத்தின் எல்லையை நோக்கி நடந்தான்.

**67. அக்கண மாசுவி னாசுகன் மைந்தன்**
**மிக்குயர் விஞ்சையர் நாட்டிடை விட்டுத்**
**திக்குறை நாகர்தி ரண்டுது திக்கும்**
**சக்கர நாகம தன்புடை சார்ந்தான்.**

[அ கணம் ஆசுவின் ஆசுகன் மைந்தன் மிக்கு உயர் விஞ்சையர் நாடு இடை விட்டு, திக்கு உறை நாகர் திரண்டு துதிக்கும் சக்கர நாகம் அதன் புடை சார்ந்தான்.]

**விளக்கம் :-** ஆசுவின் ஆசுகன் மைந்தன் - விரைவான கதியை உடைய வாயுவின் மைந்தனான வீமன். விஞ்சையர் நாடு - வித்யா தரர் உறைவிடம். இடை விட்டு - கடந்து சென்று. திக்கு உறை நாகர் - திக்குக்களில் உறைபவரான தேவர் (திக் பாலகர்கள்). திரண்டு துதிக்கும் சக்கரநாகம் - ஒன்று கூடித் துதிக்கின்ற சக்கர மலை. அதன் புடை - அச் சக்கர நாகத்தின் பக்கம். அனுமானைப் பிரிந்து நடந்த வீமன், சக்கரநாகம், என்ற மலையின் புறத்தை அடைந்தான், என்பதாம்.

**68 தவாமறை வாணர் தவம்புரி யுந்தண்**
**கவானுடை நீள்குக ரத்துயர் கலைசேர்**
**உவாமதி சூழ்வரு மோங்கலொ டொக்கும்**
**திவாகர மால்வரை சேர்ந்திடு மெல்லை.**

[தவாமறை வாணர் தவம் புரியும் தண் கவான் உடை நீள் குகரத்து, உயர் கலைசேர் உவாமதி சூழ்வரும் ஓங்கலொடு ஒக்கும் திவாகரம் மால்வரை சேர்ந்திடும் எல்லை,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** தவாமறை - அழிவில்லாத (என்று முளதான) வேதம். மறைவாணர் - வேதத்திலே தோய்ந்து வாழ்பவரான மேன்மக்கள். கவான்-பக்கம். குகரம்-குகை. கலைசேர் உவாமதி-பதினாறு கலைகளோடு கூடிய பூர்ண சந்திரன். சூழ்வரும் ஓங்கல் - வலம் வரும் மேருமலை, (அந்த மேரு மலையை ஒத்த) திவாகரம் மால் வரை - திவாகரம் என்ற பெயருடைய பெரிய மலை,— அதை வீமன் அடைந்த பொழுது,—73, ஆம் செய்யுளில் முடியும். வேத வித்தகரான முனிவர் தவம் புரியும் தண்ணிய சரிந்த பக்கங் களை உடையதும், நீண்ட குகைகளை உடையதும், சிறந்த கலை கள் கூடி நிறையப் பெற்றதுமான பூர்ண சந்திரன் சுற்றிவரப்பெற்ற மகாமேருவை ஒத்ததான திவாகர மலையை வீமன் அடைந்த பொழுது,—என்பது பொருள். சூரியன் சந்திரன் முதலிய கிரகங்கள் மேருமலையைச் சுற்றும், என்பது, நூற் கொள்கை.

## புண்டரீகன் என்னும் அரக்கன்

**69. அஞ்சன மேகமோ டாலம ளாவி**
**வஞ்சனை கொண்டு வகுத்தன மெய்யான்**
**குஞ்சிகள் வானி னிடைக்கொடி யோடிச்**
**செஞ்சுடர் காறரு கின்றசி ரத்தான்.**

[அஞ்சனம் மேகமோடு ஆலம் அளாவி வஞ்சனை கொண்டு வகுத்து அன மெய்யான், குஞ்சிகள் வானின் இடை கொடி ஓடி செஞ்சுடர் கால் தருகின்ற சிரத்தான்.]

**விளக்கம்** :- அஞ்சனம் மேகம் - கருமேகம். ஆலம் - விஷம். கருமேகத்தோடு விஷத்தைக் கலந்து, அதனுடன் வஞ்சனை என்னும் குணத்தையும் ஒன்றாகச் சேர்த்துச் செய்யப்பட்டது போன்ற உடலை உடையவன், என்பது முதல் இரண்டடிகளின் பொருள். குஞ்சி - தலைமயிர். குஞ்சிகள் மின்னற் கொடிபோல் ஆகாயத்திலே ஓடி (படர்ந்து) சிவந்த ஒளியை கால் தருகின்ற (வீசுகின்ற) தலையை உடையவன், என்பது ஈற்றடிகளின் பொருள். (புண்டரீகப் பெயருடைய அரக்கன்) கருநிறமும், வஞ்சனைக் குணமும், செம்பட்டை மயிரை உடைய தலையும், உடையவன் என்றபடி.

**70. குளிர்வரை யொன்றிய நீள்குக ரம்போல்**
**அளவில் பெரும்பகு வாயதின் மதியின்**
**பிளவென லாவளை யும்பிற ழுந்தண்**
**இளநில வென்ன விலங்கு மெயிற்றான்.**

[குளிர் வரை ஒன்றிய நீள் குகரம் போல் அளவு இல் பெரும் பகுவாய் அதில், மதியின் பிளவு எனல் ஆ வளையும் பிறழும் தண் இள நிலவு என்ன இலங்கும் எயிற்றான்.]

**விளக்கம்** :- குகரம் - குகை. (பிளவுபட்ட வாய் அதில்) சந்திரனின் பிளவுபோய் வளைந்துள்ள, விளங்கும் தண்ணிய பிறைச் சந்திரன்போல் ஒளிவிடும் பற்களை உடையவன், என்பது பொருள். இளநிலவு - பிறைச்சந்திரன். வளையும், பிறழும், இள நிலவு என்ன இலங்கும் எயிறு, என்று கொள்க. இதனால், அவனது பற்கள் வருணிக்கப் பட்டன. பிறழ்தல் - விளங்கல்.

**71. ஆறிரு காத மகன்றுயர் தோளான்**
**நூறிரு காத நொடிக்குண டப்பான்**
**ஏறுடை யான்முதல் யாவர்க ளெனினும்**
**மாறொடு காதி மலைந்திட வல்லான்.**

[ஆறு இரு காதம் அகன்று உயர் தோளான், நூறு இரு காதம் நொடிக்குள் நடப்பான், ஏறு உடையான் முதல் யாவர்கள் எனினும் மாறொரு காதி மலைந்திட வல்லான்.]

**விளக்கம் :-** பன்னிரண்டு காததூரம் அகன்று உயர்ந்த தோள்களை உடையான், இருநூறு காத தூரம் ஒரு நொடி நேரத்திற்குள் நடந்து கடக்கும் ஆற்றலான், ஏறுடையான் (சிவபெருமான்) முதல் எவர் எதிர்த்து வந்தாலும், அவரோடு மாறுபாடு கொண்டு எதிர்த்துப் போர் செய்யும் வல்லமை உடையவன் (அந்த புண்டரீகன்), என்பது,—பொருள். காதி - தாக்கி, மோதி. சிவபிரான் அழித்தற் கடவுள் ஆதல்பற்றி அவனை **ஏறுடையான்**, என்றார்,

**72. எண்டிசை யுந்திறை கொண்டிகை லோடும்**
**புண்டரி கப்பெயர் நாடு பொறித்தோன்**
**திண்டிறன் மாருதி சேய்வரு வானைக்**
**கண்டன னங்கழல் கான்றிடு கண்ணான்.**

*[எண் திசையும் திறை கொண்டு இகலோடும் புண்டரிகப் பெயர் நாடு பொறித்தோன், திண்திறல் மாருதி சேய் வருவானை கண்டனன் அங்கு அழல் கான்றிடு கண்ணான்.]*

**விளக்கம் :-** இகல் - வலிமை, புண்டரிகன் என்ற தன் பெயரை நாட்டில் பொறித்தவன், அதாவது அழியாமல் இருக்கச் செய்தவன், என்பது இரண்டாவது அடியின் பொருள். மாருதி சேய் - வாயு குமாரனான வீமன். நெருப்பைக் கக்கும் கண்களை உடைய புண்டரீகன், அவனது வனத்திடை வருவானாகிய வீமனைக் கண்டான்,—என்பதாம். மாருதி என்பதற்கு வீமன் என்று பொருள் கொண்டு, சேய் வருவானை - தூரத்தில் வருவானை, என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது, தனது வனத்தில் சேய்மையில் வருவானாகிய வீமன், என்பது பொருளாகும்.

## புண்டரீகன் கூறல்

**73. உருத்துமு கிற்குல முருமுடன் மட்கச்**
**சிரித்திதழ் கவ்வியெ யிற்றிணை தின்றாங்(கு)**
**அரித்துவ சன்றனை நோக்கிய ரக்கன்**
**கருத்துட னின்றிவை கட்டுரை செய்வான்.**

*[உருத்து முகில் குலம் உருமுடன் மட்க, சிரித்து, அதழ் கவ்வி எயிறு இனண தின்று, ஆங்கு. அரி துவசனை நோக்கி அரக்கன் கருத்துடன் நின்று இவை கட்டுரை செய்வான்.]*

**விளக்கம் :-** அரக்கன் முகில் குலம் உருமுடன் மட்க உருத்து சிரித்து, இதழ் கவ்வி, எயிறு இணை தின்று, ஆங்கு நின்று, அரி துவசனை நோக்கி கருத்துடன் இவை கட்டுரை செய்வான்,— என்பது அன்வயம். மட்க - மங்க, பின்னிட. அரிதுவசன் - சிங்கத்தைக் கொடியில் கொண்ட வீமன், கருத்துடள் - பொருந்திய மனத்தோடு அரக்கனான புண்டரீகன் வீமனை நோக்கிச் சில கூறு

வானாயினான், என்பதாம். உருத்தல், சிரித்தல், இதழ் கடித்தல், பற்களை மெல்லல், சினத்தின் மெய்ப்பாடுகள். வீமன், தனது பராக்கிரமம் தோன்றச் சிம்மக் கொடி தூக்கிக்கொண்டு சென்றான்,—என்க.

**74. யானுறை கானக மென்றிமை யோரும்**
**தானவர் தாமுமி தற்கிடை சாரார்**
**மானுட நீயிவண் வந்தது சுவையாம்**
**ஊனிட வோவி∴து ரைத்திடு கென்றான்.**

[யான் உறை கானகம் என்று இமையோரும் தானவர் தாமும் இதற்கு இடை சாரார்; மானுடன் நீ இவண் வந்தது சுவை ஆம் ஊன் இடவோ, இஃது உரைத்திடுக என்றான்.]

**விளக்கம் :-** நான் வாழும் கானகம் இது என்று தேவரும் அசுரரும் இதனிடை வாரார்; அவ்வாறாக, மனிதனாகிய நீ தனியே வந்தது சுவையுடைய மாமிசத்தை எனக்கு அளிக்கவோ, சொல் என்றான் புண்டரீகன்,—என்பது பொருள். வந்தது இஃது - வந்ததாகிய இது. உரைத்திடுகென்றான்-உரைத்திடுக என்றான்.

**75. வென்றிய ரக்கன் விளம்புதல் கேளா**
**குன்றன தோள்கள் குலுங்கந கைத்தாங்(கு)**
**உன்றன தாவியு முண்டிட வந்தேன்**
**என்றனன் முன்ன மிடிம்பனை வென்றோன்.**

[வென்றி அரக்கன் விளம்புதல் கேளா, குன்று அன தோள்கள் குலுங்க நகைத்து ஆங்கு, உன் தனது ஆவியும் உண்டிட வந்தேன் என்றனன் முன்னம் இடிம்பனை வென்றோன்.]

**விளக்கம் :-** உன்னைக் கொன்று அழிக்கவே வந்தேன், என்று வீமன் எதிர் விளம்பினான், என்பதாம். இடிம்பனை வென்றோன்-வீமன். ஆவியும், என்பதிலுள்ள உம்மை, உன் வலி அழிப்பதோடு உயிரையும் அழிப்பேன், என்ற பொருளான எச்சவும்மை. இதன் முன் இடிம்பாசுரனைக் கொன்றதுபோல் உன்னையும் கொல்வேன், என்றும் பொருள் காணலாம்,

## இருவரும் பொருதல்

**76. மற்றது கூற மறத்தொட ரக்கன்**
**உற்றெதி ரோடி யுறுக்கிய போதக்**
**கொற்றவ னுங்கதை கொண்டுடன் மண்டிப்**
**பற்றினன் வந்தவ னாவிப றிப்பான்.**

[மற்று அது கூற, மறத்தொடு அரக்கன் உற்று எதிர் ஓடி உறுக்கிய போது, அ கொற்றவனும் கதைகொண்டு உடன் மண்டி பற்றினன் வந்தவன் ஆவி பறிப்பான்.]

**விளக்கம் :-** வீமன் கூறியது கேட்டு அரக்கன் வலிமையோடு எதிரே சென்று பொருந்திச் சினத்துடன் தாக்கியபோது, வீமனும் கதையைக் கையிற்கொண்டு அவனது உயிரைப் பறிப்பதற்கு அவனோடு நெருங்கிப் பொருதலில் முனைந்தான், என்பது பொருள். உறுக்கல் - அதட்டல், குதித்தல், இங்கே சினந்து தாக்குதல். உடன் மண்டி - அவனுடன் ஒன்றுபடும்படி நெருங்கி. பற்றுதல் - தொடர்தல், கிளர்ந்து எழல், கலத்தல். மற்று, அசை ; வினை மாற்றுமாம்.

**77.** **குன்றொடு குன்றமர் கூடுவ தேபோல்**
**நின்றுநெ டும்பொழு தாகம லைந்தும்**
**வன்றிற லுந்தம வாகுவின் வலியும்**
**ஒன்றுமி ளைத்தில ரொத்தவு ரத்தார்.**

[குன்றொடு குன்று அமர் கூடுவதேபோல், நின்று நெடும் பொழுது ஆக மலைந்தும், வன் திறலும் தம வாகுவின் வலியும் ஒன்றும் இளைத்திலர் ஒத்த உரத்தார்.]

**விளக்கம் :-** குன்றொடு குன்று நெருங்கிப் போர் செய்வது போல் இருவரும் நெடுநேரம் போர் செய்தும், ஒத்த உரத்தை உடையவரான இருவரும் திறமையும் தோள்வலியும் சிறிதும் குன்றினார் அல்லர், என்பதாம். வாகு - தோள். ஒன்றும் - ஒரு சிறிதும். தம, ஆறாம் வேற்றுமை உருபு ஏற்ற சொல்.

**78.** **எல்லையி லாவம ரிங்கிவ ரிவ்வாறு**
**ஒல்லையின் மோதியு டன்றிடு போழ்தில்**
**தொல்லையி லோர்முனி சொல்லிய சாபம்**
**மல்லல ரூபிவ ழங்கிய தன்றே.**

[எல்லை இலா அமர் இங்கு இவர் இவ்வாறு ஒல்லையின் மோதி உடன்றிடு போழ்தில், தொல்லையில் ஓர் முனி சொல்லிய சாபம் மல்லல் அரூபி வழங்கியது, அன்றே.]

**விளக்கம் :-** வெற்றி தோல்வி என்ற முடிவு இல்லாமல் இருவோரும் பொருகின்றபொழுது, பழமையில் ஒரு முனிவன் கூறிய சாப மொழியை மல்லல் அரூபி (தவாத உறுதியுடைய ஆகாச வாணி) வீமனுக்குச் சொல்லியது, என்பது பொருள். அரூபி - உருவமில்லாதது, அசரீரி.

**79.** **ஒன்றினு மாவியு னக்கிவ னொல்கான்**
**துன்றிடு தோண்மிசை தோமர மேவிக்**
**கொன்றிடு வாயினி வாயுகு மாரா**
**என்றது வானினி டத்தச ரீரி**

[ஒன்றினும் ஆவி உனக்கு இவன் ஒல்கான், துன்றிடு தோள் மிசை தோமரம் ஏவி கொன்றிடுவாய் இனி, வாயு குமாரா, என்றது வானிடத்தே அசரீரி.]

**விளக்கம் :-** வேறு எந்த வழியினாலும் அவன் உன்னால் ஆவி அகலப்பெறான்; வலி நெருங்கிய அவனது தோளில் கதையைச் செலுத்திக் கொன்றிடுக, என்று, அசரீரி வீமனுக்குச் சொல்லியது,— என்பதாம். தோமரம் - இருப்பு உலக்கை, எறிவேல்; இங்கே கதை. உளக்கு - (உருபு மயக்கம்) உன்னால்.

**80. அங்கச ரீரிய ரற்றிய மாற்றம்**
**சங்கையு றாதுச மீரணி கேட்டுப்**
**பங்கைய நாமநி சாசர பதிதன்**
**துங்கவ யுப்புய மேற்கதை தொட்டான்.**

[அங்கு அசரீரி அரற்றிய மாற்றம் சங்கை உறாது சமீரணி கேட்டு, பங்கையநாமம் நிசாசரபதி தன் துங்கம் வயம் புயம் மேல் கதை தொட்டான்.]

**விளக்கம் :-** சமீரணி - வாயு புத்திரனான வீமன். பங்கைய நாம நிசாசரபதி தன் - புண்டரீகன் என்ற பெயரை உடைய அரக்கர் தலைவனுடைய. துங்கம் வயம் புயம் - மலை போல் உயர்ந்த வெற்றி பொருந்திய தோள்கள். கதை தொட்டான் - கதையை (வீமன்) செலுத்தினான், அல்லது கதையால் அடித்தான். அசரீரி கூறியபடி வீமன், அரக்கன் தோள்கள் மீது கதையை ஏவினான்,— என்க.

**81. தொட்டகொ டுங்கதை தோளுறு முன்னர்ப்**
**பட்டுள நொந்துப தைத்தடல் வஞ்சன்**
**வட்டநெ டுங்கட லூடும ருத்தன்று**
**இட்டபெ ருங்கிரி யென்னவி ழுந்தான்.**

[தொட்ட கொடுங்கதை தோள் உறும் முன்னர் பட்டு உளம் நொந்து பதைத்து அடல் வஞ்சன், வட்டம் நெடுங்கடலூடு மருத்து அன்று இட்ட பெருங்கிரி என்ன விழுந்தான்.]

**விளக்கம் :-** தொட்ட - ஏவிய. பட்டு - (கதையினால்) அடிபட்டு. வட்ட நெடுங்கடல் - வட்ட வடிவினதான பெரிய சமுத்திரம். மருத்து - வாயுதேவன். முன்னொரு காலத்தில் வாயு பகவான் கடலிலே இட்ட மேரு மலையின் சிகரங்கள் போல், அடல் அரக்கன் வீமனது கதையால் அடியுண்டு வீழ்ந்தான்,— என்பதாம். மேருவின் சிகரங்களை வாயு பகவான் முன்னொரு காலத்தில் தென் கடலில் வீழ்த்தியதுபோல், அவனது புதல்வனான வீமன் அரக்கனைக் கதையால் அடித்துத் தரையில் வீழ்த்தினான், —என்க. வாயுபகவான் கடலில் வீழ்த்திய சிகரங்களில் ஒன்றே இலங்கை ஆயிற்று; அதைத் திரிகூடம், என்றும் அழைப்பர்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**82. ஏற்றத்தோ டிகலி யிவ்வா றிடைவழி யதினில் வந்து**
**சீற்றத்தோ டெதிர்ந்த வெம்போர்த் திண்டிற லரக்கன்**
**றன்னைப்**

**பாற்றுக்கும் பகுவாய்ப் பேய்க்கும் பருந்துக்கும் வருந்துகின்ற**
**கூற்றுக்கும் விருந்து செய்தக் கொற்றவேற் குரிசில்**
**போனான்.**

[ஏற்றத்தோடு இகலி இ ஆறு இடைவழி சீற்றத்தோடு எதிர்ந்த வெம்போர் திண் திறல் அரக்கன் தன்னை பாற்றுக்கும் பகுவாய் பேய்க்கும் பருந்துக்கும் வருந்துகின்ற கூற்றுக்கும் விருந்து செய்து, அ கொற்றம் வேல் குரிசில் போனான்.]

**விளக்கம் :-** ஏற்றம் - பெருமை. இகலி - போர் செய்து. பாறு - கழுகு. கொற்றவேல் குரிசில் - வீமன். இடைவழி அதனில் வந்து சீற்றத்தோடு எதிர்ப்பட்ட வெம்போர் திண் திறல் அரக்கன் தன்னை, கொற்றவேல் குரிசிலான வீமன், எற்றத்தோடு போர் செய்து, கழுகுகளுக்கும், பகுவாய்ப் பேய்களுக்கும், (அரக்கனை நெருங்க முடியால்) வருந்துகின்ற எமனுக்கும் விருந்து செய்து, அவ்விடம் பெயர்ந்து சென்றான்,—என்பது பொருள். இடை வழி - வழியிடை (இலக்கணப் போலி).

அளகை சேரல்

**83. எண்டிசை யமரர் போற்று மிந்துமால் வரைசென் றெய்திப்**
**புண்டரீ கன்ற ஞடு பொருக்கென நோக்கி யப்பால்**
**தெண்டிரை யளித்த தெய்வச் செல்வமா நிதிக ளோங்கும்**
**அண்டர்மா நகரு மொவ்வா வளகைமா நகரங் கண்டான்**

[எண் திசை அமரர் போற்றும் இந்து மால்வரை சென்று எய்தி, புண்டரீகன் தன் நாடு பொருக்கென நோக்கி, அப்பால் தெள் திரை அளித்த தெய்வம் செல்வம் ஆம் நிதிகள் ஓங்கும் அண்டர் மாநகரும் கண்டான்.]

**விளக்கம் :-** இந்து மால்வரை - சந்திர சைலம் என்னும் பெரிய மலை. புண்டரீகன் - பிரும்மா. (அவனது நாடாகிய பிரும்ம லோகத்தை) பொருக்கென நோக்கி - விரைவாகப் பார்த்து. அண்டர் மாநகர் - தேவலோகம். ஒவ்வா அளகை - தேவலோகமும் ஒப்ப மாட்டாத அளகாபுரி. வீமன் சந்திர சைலத்தை அடைந்து, பிரும்ம லோகத்தைப் போகின்ற போக்கில் அவசரமாகப் பார்த்து, அதன்பின், பாற்கடல் தந்த நவநதிகளைத் தன்னகத்தே கொண்ட தேவலோகத்தினும் சிறந்ததான குபேர பட்டணமாகிய அளகாபுரியைக் கண்டான், என்பதாம். அண்டர் மாநகரும், என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்பு உம்மை.

**84. அந்தமா நகரின் றென்பா லகல்விசும் புறநின் றோங்கும்**
**விந்தமா மென்ன நின்று விளங்குதோள் வீமசேனன்**

**முந்தைமா ருதிநண் போடு மொழிவழி யெய்தி யந்தக்**
**கந்தவான் பொழிலு நன்னீர்க் கடிமலர்த் தடமுங் கண்டான்.**

[அந்த மாநகரின் தென்பால் அகல் விசும்பு உற நின்று ஓங்கும் விந்தம் ஆம் என்ன நின்று விளங்கும் தோள் வீமசேனன், முந்தை மாருதி நண்போடு மொழி வழி எய்தி அந்த கந்தம் வான் பொழிலும், நல்நீர் கடி மலர் தடமும் கண்டான்.]

**விளக்கம்** :- அகல் பிசும்பு உற நின்று ஓங்கும் விந்தம் ஆம் என்ன நின்று விளங்குதோள் வீமசேனன், அந்த மாநகரின் தென் பால், முந்தை மாருதி ...கண்டான், என்று அன்வயிக்க. முந்தை மாருதி - பழமையான மாருதி, அல்லது வீமனுக்கு முன்னவனான மாருதி. நண்பொடு மொழி வழி எய்தி - அன்போடு கூறிய வழியே சென்று சேர்ந்து. கந்தம் - வாசனை. முன்னொரு காலத்தில் (அகத்தியரால் அடக்கப்படுவதற்கு முன்) ஆகாயத்தில் பொருந்தும்படி உயர்ந்து நின்ற விந்திய மலை என்று சொல்லும் படி நிலைபெற்று விளங்குகின்ற தோள்களை உடைய வீமன், மாருதி கூறிய வழியிலே சென்று, அந்த நகரின் தென்புறத்தில், அந்த வாசனையோடு கூடிய சிறந்த சோலையையும், நல்ல நீரையும், அதனிடத்தே வாசனையுள்ள மலரைக் கொண்ட தடாகத்தையுங் கண்டான் என்பது பொருள். தென்பால் - (தெற்கு - பால்) தென்புறம். வீமன், தான் நாடிவந்த மலர்ப் பொழில் இருக்கும் இடத்தை அடைந்தான், என்க.

**85. ஆயிடைக் குறுகு மெல்லை யப்பொழில் துப்பிற் காப்போர்**
**சேயிடைப் பரந்த மார்பர் சேணிடைக் கடந்த தோளர்**
**வாயிடைப் பிறைக ளென்ன வளைந்தவா ளெயிற்றர் வஞ்சத்**
**தீயிடை சோரி தோய்ந்து திரண்டெனச் சுழல்செங் கண்ணர்**

[அ இடை குறுகும் எல்லை அ பொழில் துப்பின் காப்போர் சேய் இடை பரந்த மார்பர், சேண் இடை கடந்த தோளர், வாய் இடை பிறைகள் என்ன வளைந்த வாள் எயிற்றர், வஞ்சம் தீ இடை சோரி தோய்ந்து திரண்டு என சுழல் செம் கண்ணர்.]

**விளக்கம்** :- ஆயிடை (அ இடை) குறுகும் எல்லை - அந்த இடத்தை அடைந்தபொழுது, துப்பு - வலிமை. சேயிடை-நெடுந் தூரம். சேண் - ஆகாயம். வஞ்சத்தீ - வஞ்சனை உடைய தீ, அதாவது, தன்னைச் சார்ந்த பொருள்களைத் தன் மயமாக்கும் தீ. (அத் தீயிலே) சோரி சொரிந்து திரண்டன்ன - இரத்தம் தோய்ந்து உருக்கொண்டது போன்ற (கண்ணினர்). அக் கண்ணும் சுழல் கின்ற செங்கண். தீயிடைச் சோரி தோய்ந்து திரண்டு, என்றது, செந்நிறத்தின் மிகுதியையும் பயங்கரத் தோற்றத்தையும்

குறிக்கும். அம் மலர்ப் பொழிலைக் காப்போரின் வருணனை யாகும் இதுவும், இதைத் தொடரும் மூன்று செய்யுள்களும்.

**86. சூழிருட் பிழம்பு நஞ்சு தோய்ந்தன்ன துவக்க ருன்னின்**
**நாழிகை யொன்றி னெல்லா வுலகையு நலிவு மீட்டார்**
**வாழிமந் தரமத் தாக வாசுகி கயிறா மாயோன்**
**ஆழிநீர் கடைந்த நாளு மமுதெழக் கடைந்த வீரர்.**

[சூழ் இருள் பிழம்பு நஞ்சு தோய்ந்தன்ன துவக்கர், உன்னின் நாழிகை ஒன்றின் எல்லா உலகையும் நலியும் ஈட்டார், (வாழி), மந்தரம் மத்து ஆக, வாசுகி கயிறு ஆ(க) மாயோன் ஆழி நீர் கடைந்த நாளும் அமுது எழ கடைந்த வீரர்.]

**விளக்கம் :-** நிறைந்து சூழ்ந்த இருளின் குழம்பும் விஷமும் கலந்தது போன்ற கரிய யாக்கையை உடையவர்களும், உன்னின் (நோக்குமிடத்து) நாழிகை ஒன்றில் எல்லா உலகையும் துன்புறுத்த வல்ல வலியுடையவர்களும், மந்தர மலையை மத்தாகக் கொண்டும், வாசுகியைக் கடை கயிறாகக் கொண்டும், திருமால் பாற்கடல் கடைந்த காலத்து உடனிருந்து அமுது எழக் கடைந்த வர்களும் ஆகிய வீரர் (காவல் புரிவோர்)—என்பது பொருள். துவக்கர் - யாக்கையை உடையவர். துவக்கு-யாக்கை. தோலை உணர்த்தும் துவக்கு என்ற வடமொழிச் சொல், இங்கே ஆகு பெயராய் உடலை உணர்த்திற்று. உன்னின் - கருதுமிடத்து. ஈட்டார் - வலிமை உடையவர், (ஈடு - உடல் வலி). வாழி : அசை.

**87. மறத்தொடு வஞ்ச மான நண்பென வளர்த்து நாளும்**
**அறத்தொடு பகைக்கு நெஞ்சர் பிலத்தினு மகன்ற வாயர்**
**புறத்தினின் முகத்தர் மார்பிற் புழைமுழை மூக்க ரின்ன**
**திறத்தினர் குஞ்சிச் செந்தீச் சிரத்தினர் வரத்தின் மிக்கார்.**

[மறத்தொடு வஞ்சம் மானம் நண்பு என வளர்த்து நாளும் அறத்தொடு பகைக்கும் நெஞ்சர், பிலத்தினும் அகன்ற வாயர், புறத் தினில் முகத்தர், மார்பில் புழை முழை மூக்கர், இன்ன திறத்தினர், குஞ்சி செம் தீ சிரத்தினர், வரத்தின் மிக்கார்.]

**விளக்கம் :-** மறம் - அறத்தின் எதிர்ப் பதம், பாவம். மானம்-அகங்காரம். பாவத்தோடு வஞ்சனையையும், அகங்காரத் தையும் நட்பு உடையதாகக் கொண்டு வளர்த்து, எப்பொழுதும் அறத்தோடு பகைக்கின்ற நெஞ்சர். குகையினும் அகன்ற வாயர். புறத்தினில் (முதுகினில்) முகத்தை உடையவர். மார்பில் துவாரம் பொருந்திய மலைக்குகை போன்ற நாசி உடையவர். இப்படிப்பட்ட நலத்தினரான அவர், தலை முடியாகிய செந்தீயை உடைய சிரத்தினர், (அதாவது தீயைப்போல் விளங்கும் செம்

பட்டை மயிரை உடைய தலையினர்),—என்பது பொருள். குஞ்சி - ஆடவரின் தலை மயிர்.

**88. கரங்களா யிரத்தர் நண்ணுங் கால்களா யிரத்தர் குஞ்சிச்
சிரங்களா யிரத்தர் பூழைச் செவிகளா யிரத்தர் வென்றி
உரங்களா யிரத்த ரூழி தவமுயன் றுரிமை பெற்ற
வரங்களா யிரத்தர் மிக்க மறைகளா யிரத்தர் மன்னோ.**

[கரங்கள் ஆயிரத்தர், நண்ணும் கால்கள் ஆயிரத்தர், குஞ்சி சிகரங்கள் ஆயிரத்தர், பூழை செவிகள் ஆயிரத்தர், வென்றி உரங்கள் ஆயிரத்தர், ஊழி தவம் முயன்று உரிமை பெற்ற வரங்கள் ஆயிரத்தர், (அத்திரங்களுக்குரிய) மறைகள் ஆயிரத்தர், மன்னோ.]

**விளக்கம் :-** ஆயிரம், என்பது மிகப் பல, என்ற பொருளது, நண்ணும் - பொருந்திய, பூழை—(புழை என்பதின் நீட்டல் விகாரம்) துளை (உள்ள). உரம் - மார்பு, அல்லது பலவகைப் பட்ட வலிமைகள். ஊழி - யுகம் என்னும் காலத்தின் எல்லை. மறை - அஸ்திரங்களுக்குரிய மந்திரம், அல்லது மாயம் செய்வதற் குரிய மந்திரம். மன்னோ—(மன், ஓ) அசை. ஆயிரம் ஆயிர மான கால் கை தலை, செவிகளையும், பலவகைப்பட்ட வல்லமை களையும், வர பலங்களையும், மந்திர பலங்களையும், உடையவர் அவர்,—என்க.

**89. வைத்தாரை வாளம் வில்வேன் மழுவெழு திகிரி சூலம்
கைத்தாரை படக்கொண் டென்றுங் கண்ணிமை யாது காப்போர்
மைத்தாரை மாரி யொப்பார் மானுட நாற்றங் கேட்டு
மொய்த்தாரக் கடவுள் வாச மொய்ம்மலர்ச் சோலை யெல்லாம்.**

[வை தாரை வாளம், வில் மழு வேல் எழு திகிரி சூலம், கை தாரைபட கொண்டு என்றும் கண் இமையாது காப்போர், மை தாரை மாரி ஒப்பார், மானுடன் நாற்றம் கேட்டு மொய்த்தார் அ கடவுள் வாசம் மலர் சோலை எல்லாம்.]

**விளக்கம் :-** வைதாரை வாளம் - கூரிய முனையை உடைய வாள். மழு - பரசு என்னும் ஆயுதம். எழு-வளை தடி. திகிரி - சக்கரம். கை தாரை பட கொண்டு - கையில் ஒழுங்காக ஏந்திக் கொண்டு. தாரை மை மாரி - பெய்யும் நீரை மிகுதியாகக் கொண்ட கரிய மேகம். மானுடன் நாற்றம் கேட்டு - நர வாசனையை உணர்ந்து. மொய்த்தார் - (தெய்வத் தன்மை பொருந்திய வாசனையோடு கூடிய அந்த மலர்ச் சோலை எங்கும்) கூடினர். மூக்கின் காரியத்தைக் கேட்டு என்று செவியின் காரிய மாகக் கூறியது, ஒருவித மரபு வழுவின் பாற்படும். 'கடவுள் வாசம்', என்பதற்கு மண்ணுலகத்தார் அறிந்திராத சிறந்த

வாசனை, என்றும் பொருள் கொள்ளலாம். நரவாடை அறிந்து காவல் செய்வோர் ஈ மொய்ப்பதுபோல், சோலை எங்கும் கூடினர்,—என்க.

**90. மண்டியெங் கெங்கு மேன்மேன் மறிகடன் முகக்கு நீலக்**
**கொண்டலிற் குமுறி யார்த்துக் குறுகிய கொடிய நீசர்**
**சண்டவே கத்தி னெய்துஞ் சதாகதி தனையன் றன்னைக்**
**கண்டனர் சூல பாச காலனைக் கண்ட தன்னார்.**

[மண்டி எங்கு எங்கும் மேல் மேல் மறி கடல் முகக்கும் நீலம் கொண்டலின் குமுறி ஆர்த்து குறுகிய கொடிய நீசர், சண்டம் வேகத்தின் எய்தும் சதாகதி தனயன் தன்னை கண்டனர், சூல பாச காலனை கண்டது அன்னார்.]

**விளக்கம் :-** எங்கெங்கும் மண்டி (நெருங்கி) மேலும் மேலும் (அலைகள்) மடங்கும் கடல் நீரைப் பருகி நீலநிறங் கொண்ட காளமேகம் போல் கர்ச்சனை செய்துகொண்டும் ஆரவாரம் செய்து கொண்டும் (சோலையருகே) வந்து சேர்ந்த கொடிய தர்மங் கெட்ட அரக்கர்கள், கடுமையுடைய வேகத்துடன் வருகின்ற சதாகதியின் (வாயுவின்) மைந்தனான வீமனை, சூலத்தையும் பாசக் கயிற்றையும் உடைய எமனைக் கண்டது போன்றவராய்க் கண்டனர்,—என்பது பொருள். பாசம் - கயிறு. உயிர்களைக் கட்டி இழுத்துச் செல்வதற்கான கயிறு போன்ற எமனது ஓர் ஆயுதம். வீமன் இந் நீசர்களைக் கொல்லப் போகின்றா னாதலால், "காலனைக் கண்ட தன்னார்", என்றார். சண்டம் - கொடுமை, பெருமை, கடுமை, உக்கிரம், வேகம்.

**91. எற்றவென் பாருஞ் சூலத் தெறியவென் பாரு மெய்திப்**
**பற்றவென் பாரு மாவி பறிக்கவென் பாரும் யாக்கை**
**சுற்றவென் பாருஞ் சென்னி துணிக்கவென் பாரு மாகி**
**உற்றன ரரக்கர் நூறா யிரருருத் துரைக்க லுற்றார்.**

[எற்ற என்பாரும், சூலத்து எறிய என்பாரும், எய்தி பற்ற என்பாரும், ஆவி பறிக்க என்பாரும், யாக்கை சுற்ற என்பாரும், சென்னி துணிக்க என்பாரும், ஆகி, உற்றனர் அரக்கர் நூறு ஆயிரர் உருத்து உரைக்கல் உற்றார்.

**விளக்கம் :-** எற்ற, எறிய, பற்ற, சுற்ற, என்ற அகர ஈற்று வினைகள், எற்றுக, வீசுக, பற்றுக, கட்டுக, என்ற பொருளன. பறிக்க, துணிக்க, என்ற ககர ஈற்று வியங்கோள் வினைகள் (உயிரை) வாங்குக, (தலையை) வெட்டுக, என்ற பொருளன, உற்றனராகிய (வந்து கூடினராகிய) அரக்கர் நூறு ஆயிரவர். (வந்த வீமனை) எற்ற...என்பாரும் ஆகி உருத்து (கோபித்து) உரைப்பா ராயினர்,—என்பதாம்.

**92.** **இந்திரன் முதலா வுள்ள விமையவர் தாமு மிந்தக்**
**கந்தவான் சோலை கண்ணா னோக்கவுங் கருதி நைவார்**
**வந்ததென் மதியி லாத மானுடா வுந்த னாவி**
**சிந்துமுன் செப்பு கென்னாத் தெழித்தனர் தீயோ ரெல்லாம்.**

[இந்திரன் முதல் ஆ(க) உள்ள இமையவர் தாமும் இந்த கந்தம் வான் சோலை கண்ணால் நோக்கவும் கருதி நைவார், வந்தது என்? மதி இலாத மானுடா, உன் தன் ஆவி சிந்து முன் செப்புக என்ன, தெழித்தனர் தீயோர் எல்லாம்.]

**விளக்கம் :-** கண்ணால் நோக்க கருதினும் நைவார், என்று கூட்டுக. இந்திரன் முதலான தேவர்களும் இந்தக் கந்த வான் சோலையைக் கண்ணால் காண நினைத்தாலும் (எம்மால்) துன்பம் உறுவார்கள், என்பது முதல் இரண்டடிகளின் பொருள். தெழித்தல் - அதட்டல். ஆவி அழியப் பெறுமுன், 'இங்கு வந்தது ஏன்?' என்பதைச் சொல்லுக, என்று அரக்கர் அதட்டிக் கேட்டனர், என்பது ஈற்றடிகளின் பொருள்.

**93.** **அருளிலா வரக்க ரிவ்வா றகங்கரித் தரற்று மிந்தப்**
**பொருளிலா வுரைகட் கெல்லா முத்தரம் புகலா னாகி**
**இருளிலா முத்த மன்ன வெயிற்றரும் பிலங்க நக்கான்**
**தெருளிலா மதனை முன்ன மெரித்திடுஞ் சிவனைப்**
**போல்வான்.**

[அருள் இலா அரக்கர் இவ்வாறு (இ - ஆறு) அகங்கரித்து அரற்றும் இந்த பொருள் இலா உரைகட்கு எல்லாம் உத்தரம் புகலான் ஆகி, இருள் இலா முத்தம் அன்ன எயிறு அரும்பு இலங்க நக்கான், தெருள் இலா மதனை முன்னம் எரித்திடும் சிவனை போல்வான்.]

**விளக்கம் :-** அரக்கர் உருத்துக் கூறியதற்குப் பதில் மொழியாதவனாய் வீமன், மன்மதனை முன்னம் எரித்த சிவபிரானைப் போல், அவர்களைப் பார்த்துச் சிரித்தான், என்பதாம். இருள் இலா முத்தம் - மறு (குற்றம்) இல்லாத முத்து. அம் முத்துப் போன்ற பற்களாகிய அரும்புகள் வெளியே தோன்ற, அவன் அரக்கர்களை அவமதிப்பவனாய்ச் சிரித்தான், என்க.

**94.** **தனிதமே கம்போ லார்க்கும் நுமதுயிர் சரத்திற் சாய்த்துப்**
**புனிதவான் பொழிலில் வாசப் புதுமலர் கொய்ய வந்தேன்**
**குனிதவர் கொண்டு முன்னுங் குலங்கரி சறுத்த வீரன்**
**மனிதனோ வானு ளானோ மறத்திரோ வஞ்ச ரென்றான்.**

[தனிதம் மேகம் போல் ஆர்க்கும் நுமது உயிர் சரத்தின் சாய்த்து புனிதம் வான் பொழிலில் வாசம் புதுமலர் கொய்ய

வந்தேன், குனிதவர் கொண்டு முன் உம் குலம் கரிசு (குற்றம்) அறுத்த வீரன், மனிதனோ, வான் உளானோ, மறத்திரோ வஞ்சர் என்றான்.]

**விளக்கம் :-** தனிதம் - இடி. குனி தவர் - வளைந்த வில். கரிசு - குற்றம், பாவம். கரிசு அறுத்த வீரன் - பாவத் தொழில் நீங்கும்படி (இராவணாதியரைக்) கொன்று அழித்த இராமபிரான். இராவணாதி அரக்கர் கூட்டத்தைக் குலத்தோடு கொன்றழித்த தசரத இராமனே போல், மனிதனாகிய நானும் உங்களை அழிப் பேன்; நீங்கள் காவல் புரியும் சோலை மலரையும் பறித்துச் செல் வேன், என்று வீமன் கூறினான், என்க.

## போரில் அரக்கர் அழிதல்

**95. மாவிந்த மனைய பெற்றோண் மாருதி வாய்மை கேட்டுப்
பூவிந்த வனத்தி னீயோ பறித்தியென் றழன்று பொங்கி
நாவிந்த வுரைதந் தின்னு மிருப்பதோ நரனுக் கென்னாக்
கோவிந்த னெடுத்த குன்றிற் கொண்டலின் குழாத்திற்
சூழ்ந்தார்.**

[மா விந்தம் அனைய பொன் தோள் மாருதி வாய்மை கேட்டு, பூ இந்த வனத்தில் நீயோ பறித்தி என்று அழன்று பொங்கி, நா இந்த உரை தந்து இன்னும் இருப்பதோ நரனுக்கு என்னா, கோவிந்தன் எடுத்த குன்றில் கொண்டலின் குழாத்தின் சூழ்ந்தார்.]

**விளக்கம் :-** விந்தம் - விந்தியமலை. மாருதி - வீமன். வாய்மை - வாய் மொழி. கண்ணபிரான் குடையாய்க் கவிழ்த்த கோவர்த்தன கிரியின் மேல் சப்தமேகங்களும் சூழ்ந்தபோல், (வீமனை அரக்கர்) சுற்றிக்கொண்டனர்,—என்பது, ஈற்றடியின் பொருள். நீயோ, என்பதிலுள்ள ஓகாரம் இகழ்ச்சியின் பாற்படும்.

**96. வானக மறைய வீசி வான்படைக் கலங்கள் வால
சேனனே முதலா வுள்ள சேனையின் றலைவ ரார்த்தார்
கானுடைத் தொடைய லானுங் காலனுக் காவி யன்ன
தானுடைத் தண்ட மேந்திப் புகுந்தனன் சலிப்பி லாதான்.**

[வானகம் மறைய வீசி வான் படைக்கலங்கள் வாலசேனன் முதல் ஆ உள்ள சேனையின் தலைவர் ஆர்த்தார், கான் உடை தொடையலானும் காலனுக்கு ஆவி அன்ன தான் உடை தண்டம் ஏந்தி புகுந்தனன் சலிப்பு இலாதான்.]

**விளக்கம் :-** வாலசேனன் - (பாலசேனன்) இளைஞர்களைச் சேனையாகக் கொண்ட படைத் தலைவன். அவனை ஆதியாக உடைய படைத் தலைவர்கள் வானம் மறையும்படி ஆயுதங்களை (வீமன் மேல்) ஏவி ஆரவாரம் செய்தனர், என்பது முதலிரண்டடி களின் பொருள். கான் - பரிமளம். தொடையலான் - மாலையை

உடைய வீமன். சலிப்பு - இளைப்பு, சோர்வு. காலனுக்கு ஆவி அன்ன தான் உடை தண்டம் - எமனுக்கு உயிர்போல் இன்றியமையாத் துணைக்கருவியான (கதைபோல்), தான் உரிமையாகக் கொண்ட கதை. அக் கதையைக் கையில் ஏந்திக்கொண்டு சோர்வு சிறிதும் இல்லாத வீமன் (அரக்கர்கூட்டத்தினுள்) புகுந்தான், என்பது, ஈற்றடிகளின் பொருள்.

**97. தண்டினா லவர்கள் விட்ட படையெலாந் தகர்த்து மீள**
**மண்டினா னுழுவை கண்ட வாளுகிர் மடங்க லொப்பான்**
**மிண்டினாருடலம் யாவு மெய்தலை தம்மி னொன்றக்**
**கிண்டினான் மூளைச் சேற்றிற் கிடத்தினான் படுத்து மன்னோ.**

[தண்டினால் அவர்கள் விட்ட படை எலாம் தகர்த்து, மீள மண்டினான் உழுவை கண்ட வாள் உகிர் மடங்கல் ஒப்பான், மிண்டினர் உடலம் யாவும் மெய்தலை தம்மின் ஒன்ற கிண்டினான், மூளை சேற்றில் கிடத்தினான் படுத்து, மன்னோ.]

**விளக்கம் :-** உழுவை - புலி. புலியைக் கண்ட சிங்கம் போன்றவனான வீமன், அவர்கள் ஏவிய ஆயுதங்களைக் கதையினால் தகர்த்து, மீளவும் அவர்களை நெருங்கினான்; (நெருங்கி) தன்னைச் சூழ்ந்து நெருங்கினாரின் உடல்கள் எல்லாவற்றையும் தலையும் உடலும் தமக்குள் ஒன்றுபடும்படி துணித்தான்; (துணித்து, துண்டிக்கப்பட்ட அவ் உடல்களை) மூளையிலிருந்து வழியும் நிணத்தில் படுத்துக் கிடத்தினான் (விழுந்து கிடக்கச் செய்தான்). மூளைச் சேறு - மூளையிலிருந்து, அல்லது தலையிலிருந்து வழியும் நிணக் குழம்பு. கிண்டல் - பிளத்தல், துணித்தல். மன்னோ : ஈற்றசை.

**98. தாக்கினான் சிலரைத் தண்டாற் றடக்கையாற் சிலரை வானில்**
**தூக்கினான் கறங்கி னின்று சுழற்றினான் சிலரை யெற்றி**
**நூக்கினான் சிலரைத் தாளா னொறுக்கினான் சிலரை வாளால்**
**வீக்கினான் சிலரை யாவி வேறிட்டான் சிலரை வீமன்.**

[தாக்கினான் சிலரை தண்டால், தட கையால் சிலரை வானில் தூக்கினான். கறங்கின் நின்று சுழற்றினான் சிலரை, எற்றி நூக்கினான் சிலரை, தாளால் நொறுக்கினான் சிலரை, வாளால் வீக்கினான் சிலரை, ஆவி வேறு இட்டான் சிலரை வீமன்.]

**விளக்கம் :-** கறங்கு - பம்பரம். நின்று கறங்கின் சுழற்றினான். நூக்கினான் - (கையால்) தள்ளினான். நொறுக்கினான் - மிதித்து உருச் சிதையச் செய்தான். வீக்கினான் - வெட்டினான். ஆவி வேறு இட்டான் - உயிர் உடலினின்று வேறாகும்படி செய்தான். வீமன் அரக்கர்களைத் தண்டாலும், கையாலும் காலாலும், வாளாலும் தாக்கிக் கொன்றான், — என்க.

**99. பிடித்தனன் சிலரை யள்ளிப் பிசைந்தனன் சிலரை மண்ணில்**
**அ . த்தனன் சிலரை யங்க மசைத்தனன் சிலரை யெண்ணம்**
**முடித்தனன் சிலரைப் போக முகிழ்த்தனன் சிலரைக் கண்டம்**
**ஒடித்தனன் சிலரை யஞ்ச வுறுக்கினன் சில்ரை மன்னோ.**

[பிடித்தனன் சிலரை, அள்ளி பிசைந்தனன் சிலரை, மண்ணில் அடித்தனன் சிலரை, அங்கம் அசைத்தனன் சிலரை, எண்ணம் முடித்தனன் சிலரை, போகம் முகிழ்த்தனன் சிலரை, கண்டம் ஒடித் தனன் சிலரை, அஞ்ச உறுக்கினன் சிலரை, மன்னோ]

**விளக்கம் :-** அங்கம் அசைத்தனன் - அவயவங்களை ஒடித் தான். எண்ணம் முடித்தான் - (தன்னை வெல்லவேண்டும் என்ற அவர்களது) எண்ணத்தைப் பாழ்படச் செய்தான். போகம் முகிழ்த் தான் - (வீர சுவர்க்கம் தரும்) இன்பம் அரும்பச் செய்தான். கண்டம் ஒடித்தான் - கழுத்தைத் திருகி ஒடித்தான். அஞ்ச உறுக் கினான் - பயப்படும்படி அதட்டினன், அல்லது ஒலி எழுப்பினான். மன்னோ : அசை. இந்தச் செய்யுளிலும் முந்திய செய்யுளிலும் சிலரை என்பது ஒரே பொருளில் பலமுறை வந்தது, **சொல் பொருள் பின்வரு நிலை அணி** ஆகும்.

**100. கரக்கழுந் ததனி னானுங் கனவரைத் தோளி னானும்**
**வரக்கொடுங் கதையி னானு மராமரப் பணையி னானும்**
**உரக்கடுங் காலி னானு மொருக்கினா னுரைப்ப தென்னோ**
**அரக்கரை யென்றாற் பின்னை விடுங்கொலோ வனுமன் பின்னோன்.**

[கரம் கழுந்து அதனினானும், கனம் வரை தோளினானும், வரம் கொடு கதையினானும், மராமரம் பணையினானும், உரம் கடு காலினானும் ஒருக்கினான்; உரைப்பது என்னோ! அரக்கர் (ஐ) என்றால் பின்னை விடும் கொலோ அனுமன் பின்னோன்.]

**விளக்கம் :-** கரக்கழுந்து - கைகளாகிய தடிகள். கனம்வரைத் தோள் - பெரியமலை போன்ற தோள்கள். வரம் - சிறந்த. பணை- கிளை. உரம் கடுங்கால் - வலிய கடுமையான கால்கள். அனுமன் பின்னோன் - வீமன். அனுமான் இலங்கை அரக்கர்களைத் தான் ஒருவனாக இருந்துகொண்டு அழித்ததுபோல், அவன் தம்பியான வீமன், தன்னை எதிர்த்த அரக்கர்களை அழித்தான்,—என்றபடி. அரக்கரை, ஐ, சாரியை.

### இலட்சம் அரக்கர் வீமனைச் சூழ்தல்

**101. இப்படிக் கெதிர்த்த சேனை யாவையு மிமைக்கு முன்னம்**
**துப்புடன் றொலைத்து வாயு சுதனின்ற வுறுதி நோக்கி**
**மைப்படி வரைகள் போல்வார் வாளெயிற் றரக்கர் பின்னும்**
**கைப்படை கொண்டு நூறா யிரரொரு கணத்திற் சூழ்ந்தார்.**

[இப்படிக்கு எதிர்த்த சேனை யாவையும் இமைக்கும் முன்னம் துப்புடன் தொலைத்து வாயு சுதன் நின்ற உறுதி நோக்கி, மை படி வரைகள் போல்வார் வாள் எயிறு அரக்கர், பின்னும் கை படை கொண்டு நூறு ஆயிரர் ஒரு கணத்தில் சூழ்ந்தார்.]

**விளக்கம் :-** மை படி வரை - மேகம் படிந்த மலை. பின்னும் - மறுபடியும். நூறாயிரர் - ஒரு லட்சம் அரக்கர். கை படை கொண்டு - கைகளில் ஆயுதங்களைத் தாங்கி. வேறான நூறு லட்சம் அரக்கர், சோலை காப்போர் நரனால் அழிந்தமை கேட்டு, அங்கே வந்து வீமனை வளைத்துக்கொண்டார்கள், என்பதாம்.

**102. அவர்வெகுண் டழன்று மேன்மே லலைகடல் போல**
**வார்த்துப்**
**பவர்கொண்ட பனக மென்னச் சூழ்வரும் பரிசு பாராக்**
**கவர்கொண்ட தொடைய லானுங் கதையொழித் திலங்கு**
**செங்கைத்**
**தவர்கொண்டு நெடுநா ணண்டத் தகர்தரத் தழங்க**
**வார்த்தான்.**

[அவர் வெகுண்டு அழன்று மேல்மேல் அலை கடல் போல ஆர்த்து, பவர் கொண்ட பனகம் என்ன சூழ்வரும் பரிசு பாரா, கவர் கொண்ட தொடையலானும் கதை ஒழித்து, இலங்கு செம் கை தவர் கொண்டு நெடு நாண் அண்டம் தகர்தர தழங்க ஆர்த்தான்.]

**விளக்கம் :-** பவர் - நெருங்குதல். பவர் கொண்ட பனகம் (பந்நகம்) - நெருங்குதலைக் கொண்ட நாகங்கள். பரிசு - விதம். கவர் கொண்ட - கவருந் தன்மையுடைய, அழகிய. தவர் - வில். நாண் - (வில்லின்) நாண் கயிறு. அண்டம் தகர்தர தழங்க - அண்டம் பிளவு படுமாறு ஒலி செய்யும்படி. ஆர்த்தான் - (வில்லின் நாணியைத் தெறித்து) வீர கர்ச்சனை செய்தான். பெருந் தொகையினரான அரக்கர் தன்னைச் சூழ்ந்துகொண்டதைக் கண்ட வீமன், கதையை ஒழித்து, வில்லைக் கைக்கொண்டு, நாணொலி எழுப்பி ஆர்த்தான், என்பதாம். பனகம், என்பதை (பல் - நகம்) பன்னகம், என்பதின் விகாரமாகக் கொண்டால், பல மலைகள் வந்து சூழ்ந்தது போல் அரக்கர் வீமனைச் சூழ்ந்தனர், என்பது பொருளாகும்.

**103. அன்னநா ணோதை யெங்கு மண்டமும் பொதுளத் தாக்க**
**மன்னுநா கங்க ளெட்டு மதம்புலர்ந் துயங்கி வீழத்**
**துன்னும்வாய் நஞ்சு கக்கிச் சுழன்றுமண் சுமக்குங் கொற்றப்**
**பன்னகா திபனு முள்ளம் பதைத்துவெம் படங்கள்**
**சோர்ந்தான்.**

[அன்ன நாண் ஓதை எங்கும் அண்டமும் பொதுள தாக்க, மன்னும் நாகங்கள் எட்டும் மதம் புலர்ந்து உயங்கி, வீழ, துன்னும் வாய் நஞ்சு கக்கி சுழன்று மண் சுமக்கும் கொற்றம் பன்னகாதி பனும் (பன்னக - அதிபனும்) உள்ளம் பதைத்து வெம் படங்கள் சோர்ந்தான்.]

**விளக்கம் :-** பொதுளல் - நிறைதல். பொதுளத் தாக்க - அண்ட மெங்கும் (அந்த ஒலி) நிறைந்து பரவும்படி தாக்க. மன்னும் நாகங்கள் எட்டும் - நிலை பெற்ற அஷ்டதிக் கஜங்களும். மதம் புலர்ந்து - மதஜலம் வறளப் பெற்று. உயங்கி - மயங்கி, மண் சுமக்கும் கொற்றம். பன்னகாதிபனும் உள்ளம் பதைத்து, துன்னும் வாய் நஞ்சு கக்கி அழன்று வெம்படங்கள் சோர்ந்தான், என்று ஈற்றடிகளை அன்வயிக்க. பூமியைத் தாங்கும் நாகங்களின் அரசனான ஆதிசேஷனும் உள்ளம் பதைத்து நெருங்கிய வாய்களி னின்று நஞ்சைக் கக்கி, தலைசுழல வெவ்விய படங்கள் சாய்ந்து விழப்பெற்றான், என்பது பொருள். வீமனது நாணொலியானது அண்டத்தைத் தாக்க, திசையானைகளும் ஆதிசேஷனும், அஞ்சித் தளர்ந்தான், — என்க.

**104. உரம்படச் சரங்கண் மேன்மே லுறுக்கிவெல் வீம னுந்தச்**
**சிரங்களிற் றோளின் மார்பிற் கண்களிற் செருகச் சென்று**
**கரன்படைக் குழாத்து முன்னங் காகுத்தன் கதிர்கொள் கூர்வாய்ச்**
**சரம்படத் தளர்ந்த தென்னத் தளர்ந்ததத் தளர்வில் சேனை.**

[உரம்பட சரங்கள் மேல் மேல் உறுக்கி வெல் வீமன் உந்த, சிரங்களில் தோளில் மார்பில் கண்களில் செருக சென்று, கரன் படை குழாத்து முன்னம் காகுத்தன் கதிர்கொள் கூர்வாய் சரம் பட தளர்ந்தது என்ன, தளர்ந்தது அ தளர்வு இல் சேனை,]

**விளக்கம் :-** உரம்பட-வலிமை பொருந்த. உறுக்கி - சினந்து. உந்த - செலுத்த. சென்று செருக - பாய்ந்து தைக்க. கரன் - இராவணனுக்குத் தம்பிமுறை கொண்ட வீரன், தண்டகாரண்யத் தில், சூர்ப்பணைக்குக் காவலாய் இருந்த அரக்கன். கழிந்த யுகத் தில் இராமபிரானது சரம்பட்டு என்றுந் தளராத கரனது சேனை தளர்ந்தது போல், வீமனது சரங்கள் பட்டு அரக்கர் சேனை தளர லாயிற்று, — என்க.

**105. சக்கரஞ் சூலம் பாசந் தண்டம்வேல் கப்ப ணம்வாள்**
**முக்கரங் கணையம் விட்டே றெழுக்கொழு முசுண்டி குந்தம்**
**எக்கரங் களினு மேந்தி யாவரு மிவன்மே லேவி**
**அக்கணந் தன்னின் மீண்டு மகங்கரித் தார்த்த காலை,**

]சக்கரம் சூலம் பாசம் தண்டம் வேல் கப்பணம் வாள் முக்கரம் (முற்கரம்) கணையம் விட்டேறு எழு கொழு முசுண்டி குந்தம் முதலிய ஆயுதங்களை எக்கரங்களினும் ஏந்தி, யாவரும் இவன்மேல் ஏவி, அ கணம் தன்னில் மீண்டும் அகங்கரித்து ஆர்த்த காலை, - அடுத்த கவியோடு முடியும்.]

**விளக்கம் ;-** முதல் இரண்டடிகள் ஆயுத வகைகளைக் கூறும். தளர்ந்த அந்தக் கணத்திலேயே யாவரும் மீண்டும் அகங்காரங் கொண்டு பலதிறப்பட்ட ஆயுதங்களை வீமன்மேல் ஏவி ஆரவாரம் செய்தனர்,— என்க. முற்கரம் என்பது எதுகை நோக்கி முக்கரம் என நின்றது ; இருப்புலக்கை, என்பது பொருள்.

**106. அப்படைத் தொகைக ளெல்லா மறுத்தறுத் தவர்க டத்தம்**
**மெய்ப்படச் சரங்கள் சிந்திச் சிரங்கள்வெவ் வேற தாக்கி**
**இப்படிக் கரக்கர் சேனை யாவையுந் துணித்து மீண்டும்**
**செப்படிப் பவரி னின்று சிரித்தனன் சிங்கம் போல்வான்.**

[அ படை தொகைகள் எல்லாம் அறுத்து அறுத்து அவர்கள் தத்தம் மெய் பட சரங்கள் சிந்தி சிரங்கள் வெவ்வேறது ஆக்கி, இப்படிக்கு அரக்கர்சேனை யாவையும் துணித்து, மீண்டும் செப்படிப்பவரின் நின்று சிரித்தனன் சிங்கம் போல்வான்.]

**விளக்கம் :-** படைதொகை - ஆயுதங்களின் கூட்டம். செப் படிப்பவர் - செப்படிவித்தை செய்பவர். சிங்கம் போல்வானான வீமன், அரக்கர் செலுத்திய ஆயுதங்களை எல்லாம் கணைகளால் அறுத்தும், அவர்களது உடல்களில் தைக்கும்படி கூரிய சரங்களைச் செலுத்தி சிரங்களை வேறு வேறு ஆகத் துண்டித்தும் இந்தவிதமாக அரக்கர் சேனை முழுவதையும் அழித்து, மீண்டும் செப்படிவித்தை செய்பவரைப் போல் சிரமம் இல்லாமல் இருந்து சிரித்தான்,— என்பதாம்.

கலித்துறை

**107. அந்த வயப்படை யவ்வா றாதல் கண்டு**
**கந்த மலர்ப்பொழில் காக்குங் காவ லாளர்**
**புந்தி மயக்குற நொந்து புகுந்த வெல்லாம்**
**முந்தி வியக்கர்பி ரானுக் கோடிமொழிந்தார்.**

[அந்த வய படை அவ்வாறு (அ - ஆறு) ஆதல் கண்டு கந்தம் மலர் பொழில் காக்கும் காவலாளர், புந்தி மயக்கு உற நொந்து புகுந்த எல்லாம் முந்தி இயக்கர் பிரானுக்கு ஓடி மொழிந்தார்.]

**விளக்கம் :-** வயப்படை - வலிமை மிக்க அரக்கர்சேனை. அவ்வாறு ஆதல் கண்டு - அப்படி எளிதில் ஒரு நாளால் அழிக்கப் பட்டது கண்டு. புகுந்த எலாம் - நிகழ்ந்தனவற்றை எல்லாம். இயக்கர் பிரான் - குபேரன். சோலைக் காவலாளர், முந்தி ஓடி இயக்கர் பிரானுக்குப் புகுந்த எலாம் மொழிந்தார், - என்பதாம்.

வெலற்கு அரிய அர்க்கர் லட்சக்கணக்கில் ஒரு மனிதனால் கொல்லப்பட்டதால், பொழில் காவலர் புந்தி (புத்தி) மயக்கங் கொண்டனர், என்க, மயக்கம், என்ற தொழிற் பெயர், மயக்கு என்று திரிந்து நின்றது.

**108. எம்பெரு மானிது கேட்டி யென்றி றைஞ்சி**
**வம்பவிழ் சோலையி டத்தோர் மனிதன் வந்து**
**பம்பிய சேனையி டத்தேழ் மதமும் பாயும்**
**உம்பலின் வாவிபு குந்து ழக்கு கின்றான்.**

[எம் பெருமான் இது கேட்டி, என்று இறைஞ்சி, வம்பு அவிழ் சோலை இடத்து ஓர் மனிதன் வந்து பம்பிய சேனை இடத்து ஏழ் மதமும் பாயும் உம்பலின் வாவி புகுந்து உழக்குகின்றான்.]

**விளக்கம் :-** வம்பு - வாசனை. வாவி புகுந்து ஏழ் மதமும் பாயும் உம்பலின், (நமது) பம்பிய சேனை இடத்து உழக்குகின்றான், — என்பது கடை அடிகளின் அன்வயம். வாவி (நீர்நிலை) புகுந்து, ஏழு வகைப்பட்ட மதங்களும் பாய்தலை உடைய ஆண் யானைபோல் (அதாவது ஆண்யானை கலக்குவதுபோல்) பரவி நெருங்கிய நம் சேனையிடத்தே புகுந்து (ஒரு மனிதன்) கலக்குகின்றான், என்பது பொருள். உம்பல் - ஆண்யானை. கண்கள், கன்னங்கள், நாசித் துவாரங்கள், பீஜம், என்ற ஏழு இடங்கள் மதம் பெருகும் இடங்கள்.

**109. என்றவர் வாய்கைபு தைத்தி சைத்தல் கேட்டுக்**
**குன்றுட னொன்றுபு யங்கு லுங்க நக்குக்**
**கன்றிய சிந்தைய னங்கி கால்செங் கண்ணான்**
**ஒன்றிய மங்குலி னீடு ருத்து ரைத்தான்.**

[என்று அவர் வாய் புதைத்து இசைத்தல் கேட்டு, குன்றுடன் ஒன்று புயம் குலுங்க நக்கு, கன்றிய சிந்தையன், அங்கி கால் செம் கண்ணான், ஒன்றிய மங்குலின் நீடு உருத்து உரைத்தான்.]

**விளக்கம் :-** கன்றிய சிந்தையன் - வெம்மையுற்ற மனத்தினனான குபேரன். அங்கி - நெருப்பு. மங்குல் - மேகம். நீரொடு கூடிய கரிய மேகம் இடிப்பதுபோல் மிகக் கோபங்கொண்டவனாய் எதிர் உரைப்பானாயினான், — என்க. பெரியோர்களிடத்தில் பேசும்போது வாய் பொத்தியும் கைகளைக் கட்டிக்கொண்டும் பேசுதல் முறை.

குபேரன் சங்கோடணனை ஏவல்

**110. தன்றுணை நின்ற சங்கோ டணனை நோக்கி**
**வன்றிறல் கூரடல் வேக மனிதன் றன்னைச்**
**சென்றவ னாவி செகுத்தல் செய்யா தின்னே**
**துன்றுபு யங்கடு வக்கி யெய்தச் சொன்னான்.**

[தன் துணை நின்ற சங்கோடணனை நோக்கி, வன்திறல் கூர் அடல் வேகம் மனிதன் தன்னை சென்று, அவன் ஆவி செகுத்தல் செய்யாது, இன்னே துன்று புயங்கள் துவக்கி எய்த சொன்னான்.]

**விளக்கம் :-** தன் துணை நின்ற - தனக்குத் துணையாய் அமைந்த, அல்லது தன் அருகில் இருந்த. துன்று புயம் துவக்கி - வலிமைமிகுந்த புயங்களைக் கட்டி, எய்தச் சொன்னான் - கொண்டு வரும்படி பணித்தான். குபேரன், தனக்குத் துணை அமைந்த சங்கோடணன் என்ற இயக்கனை நோக்கி, அந்த வன் திறல் மனிதனைக் கொல்லாது கட்டிக் கொணருமாறு கட்டளை யிட்டான், — என்க.

**111. அந்தவி யக்கர்பி ரானு மக்க ணத்தில்**
**வந்துநி திக்கிழ வன்றன் பாத மன்னித்**
**துந்துபி கொட்டவ ளப்பில் சேனை சூழ**
**உந்தியி மைப்பின்ம லர்த்தண் சோலை யுற்றான்.**

[அந்த இயக்கர் பிரானும் அ கணத்தில் வந்து நிதிக்கிழவன் தன் பாதம் மன்னி, துந்துபி கொட்ட, அளப்பு இல் சேனை சூழ உந்தி இமைப்பின் மலர் தண் சோலை உற்றான்.]

**விளக்கம் :-** இயக்கர் பிரான் - இயக்கர் படையின் தலைவனான சங்கோடணன், துந்துபி கொட்ட - துந்துபி வாத்தியங்கள் முழங்க. உந்தி - சேனையை நடத்திக்கொண்டு. சங்கோடணன் என்ற இயக்கர் படைத் தலைவன், நிதிக்கிழவனை (குபேரனை) வணங்கி, அளவிறந்த பெரிய சேனையுடன், மலர்ச் சோலையை அடைந்தான்,—என்பதாம்.

**112. மன்னுகு ருக்கள்கு லத்து மன்னர் மன்னன்**
**தன்னையி யக்கர்கு லத்தி லெண்ணுந் தலைவர்**
**துன்னுப டைக்கட லோடும் பொங்கிச் சூழ்ந்தார்**
**மின்னிமு ழக்கியி டிக்கு மேகம் போல்வார்.**

[மன்னு குருக்கள் குலத்து மன்னர் மன்னன் தன்னை, இயக்கர் குலத்தில் எண்ணும் தலைவர் துன்னு படை கடலோடும் பொங்கி சூழ்ந்தார், மின்னி முழக்கி இடிக்கும் மேகம் போல்வார்.]

**விளக்கம் :-** மன்னு குருக்கள் குலம் - நிலைபெற்ற குரு என்பானுடைய வம்சம். மன்னர் மன்னர் - வீமன். எண்ணும் தலைவர் - சிறந்த வீரர் என்று மதிக்கப்படும் படைத்தலைவர். துன்னு படை - வலிமை மிகுந்த படை. மின்னிக்கொண்டும் குமுறிக்கொண்டும் இடிக்கும் மேகம் போன்ற இயக்கர்,—என்பது ஈற்றடியின் பொருள். இடிக்கும் மேகம் போன்றாரான இயக்கர் குலத்து எண்ணுந் தலைவர் சேனா சமுத்திரத்துடன், குருகுலத்தவனான வீமனைச் சூழ்ந்து கொண்டார்கள்,—என்பதாம். சந்திர குலத்து அரசர்களில் பிரசித்தி மிகப் பெற்றவன் குரு.

**113. மானவ ரக்கர்கு லத்தை வானி லேற்றி
ஊனொடி ரத்தமு குக்குஞ் சோலை யூடே
தானைவ ளைத்திட நின்ற சாப வீரன்
யானையி னங்கள்வ ளைக்கும் யாளி போன்றான்.**

[மானம் அரக்கர் குலத்தை வானில் ஏற்றி ஊனொடு இரத்தம் உகுக்கும் சோலையூடே தானை வளைத்திட நின்ற சாபம் வீரன், யானை இனங்கள் வளைக்கும் யாளி போன்றான்.]

**விளக்கம் :-** மானம் - (வீரப்) பெருமை, அகங்காரம். ஊன்-தசை. சாபம்-வில். யாளி - சிங்கம் போன்றதும் துதிக்கை உடையதும் ஆகிய ஒரு மிருக விசேஷம்; சிங்கமும் ஆம். ஆற்றல் மிகுந்த அரக்கர்களை வானுலகம் அனுப்பிவிட்டு, ஊனும் குருதியும் சிந்திக் கிடக்கும் சோலையிடத்தே, இயக்கர் சேனையால் சூழப்பெற்ற வில் வீரனான வீமன், யானைக் கூட்டங்களால் சூழப் பெற்ற யாளியைப் போன்றவனாய் இருந்தான், என்பதாம்.

**114. விண்ணிலி யக்கர்ப டைக்க லங்கள் வீசி
எண்ணிலர் சுற்றும்வ ளைத்தெ திர்ந்த போதில்
வண்ணவ ரிச்சிலை கோலி வாயு மைந்தன்
துண்ணென வுட்கவ டிச்ச ரங்க டொட்டான்.**

[விண்ணில் இயக்கர் படைக்கலங்கள் வீசி எண் இலர் சுற்றும் வளைத்து எதிர்ந்த போதில், வண்ணம் வரிசிலை கோலி வாயு மைந்தன் துண்ணென உட்க வடி சரங்கள் தொட்டான்.]

**விளக்கம் :-** விண்ணில் இயக்கர் எண் இலர் படைக்கலங்கள் வீசி சுற்றும் வளைத்து எதிர்ந்த போதில், வாயுமைந்தன் வண்ண வரிசிலை கோலி துண்ணென உட்க வடி சரங்கள் தொட்டான்,— என்பது அன்வயம். சுற்றும் - சுற்றிலும். எதிர்ந்தபோது - எதிர்த்து வந்தபோது. கோலி - வளைத்து. துண்ணென உட்க - பயந்து நடுங்க. வடி சரங்கள் தொட்டான் - கூரிய கணைகளை பிரயோகித்தான். துண்ணென - அச்சத்தைக் குறிக்கும் இடைச் சொல். தன்னை வளைத்துக்கொண்டு எதிர்த்த இயக்கர், அஞ்சி நடுங்கும்படி வீமன் பாணப்பிரயோகம் செய்தான்,— என்பதாம்.

**115. தொட்டச ரங்கடு ளைத்து மார்புந் தோளும்
முட்டவி சும்பின தெல்லை யெங்கு மூடப்
பட்டதொ ழிந்துப டாத சேனை யெல்லாம்
கெட்டன பட்டது ரைக்க வுண்டோ கேட்கின்.**

[தொட்ட சரங்கள் துளைத்து மார்பும் தோளும் முட்ட விசும்பினது எல்லை எங்கும் மூட, பட்டது ஒழிந்து படாத சேனை எல்லாம் கெட்டன, பட்டது உரைக்க உண்டோ கேட்கின்.]

**விளக்கம் :-** (வீமன்) தொட்ட சரங்கள் (இயக்கர்களது) மார்பும் தோளும் துளைத்து விசும்பின் எல்லை எங்கும் முட்டும்படி பரவி மறைக்க, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். பட்டது ஒழிந்து படாத சேனை - அழிந்ததுபோக, அழியாது எஞ்சிய சேனை. கெட்டன - நிலை குலைந்து ஓடின. பட்டது கேட்கின் உரைக்க உண்டோ - இயக்கர் படை அடைந்த நிலைமையை, கேட்கின், நம்மால் சொல்லல் கூடுமோ, (முடியாது என்றபடி). ஒழிந்து —(எச்சத்திரிபு) ஒழிய (தவிர). வீமனது சரத்தின் முன் நிற்க முடியாது அழிந்தது போக, எஞ்சிய இயக்கர் சேனை அஞ்சி முதுகிட்டு ஓடின, என்க.

**116. மன்னள காபதி சேனை நாதன் மார்பில்**
**தன்னடை யாளமு றத்தண் டாலே தாக்க**
**மின்னிடை நாகம்வெ ருக்கொண் டென்ன மீண்டான்**
**தன்னெதிர் வீரரி லாத சங்கோ டணன்றான்.**

[மன் அளகாபதி சேனை நாதன் மார்பில் தன் அடையாளம் உற தண்டாலே தாக்க, மின்னிடை நாகம் வெரு கொண்டென்ன மீண்டான், தன் எதிர் வீரர் இலாத சங்கோடணன் தான்.]

**விளக்கம் :-** மன்-நிலையுடைய, அல்லது சிறந்த. அளகாபதி சேனைநாதன் - அளகையின் தலைவனான குபேரனது சேனைத் தலைவனாகிய சங்கோடணன். தான் வைத்த அடையாளமாகக் காயம் உண்டாகும்படி கதையால் (வீமன்) தாக்க, என்பது இரண்டாவது அடியின் பொருள். தனக்கு நேரான வீரர் எவரை யும் பெறாத சங்கோடணன், மின்னலிடை நாகம் அச்சங் கொண் டதுபோல், (வீமனுக்கு அஞ்சித்) திரும்பிச் சென்றான்,— என்பது ஈற்றடிகளின் பொருள். மின், என்பது இலக்கணையால் இடியை உணர்த்தும், தான் : ஈற்றசை. இயக்கர் படைத் தலைவனான சங்கோடணன், புறங்கொடுத்து ஓடினான், என்பதாம்.

**117. கருத்தொடு சென்றள கேசன் பாத கமலம்**
**சிரத்தினில் வைத்திவை நின்று செப்ப லுற்றான்**
**உருத்திரன் மானுட வுருவங் கொண்ட தன்றேல்**
**வரத்திவன் மானுட னல்லன் மன்ன வென்றே.**

[கருத்தொடு சென்று அளகேசன் பாத கமலம் சிரத்தினில் வைத்து இவை நின்று செப்பல் உற்றான், உருத்திரன் மானுட உருவம் கொண்டது, அன்றேல் வரத்து இவன் மானுடன் அல்லன், மன்ன என்றே,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்க :-** கருத்தொடு - தன் தலைவனான குபேரனிடம் அன்போடு. வரத்து இவன்-(தொழிற் பெயர்) இங்கே வருதலைச் செய்த இவன். இவன், சங்காரக் கடவுளாகிய ருத்திர மூர்த்தி

மனித உருவம் கொண்டதே ஆதல் வேண்டும், அன்றேல் இவன் மனிதன் அல்லன், என்று சங்கோடணன், கூறினான்,—என்பது கடையடிகளின் பொருள். அளகா + ஈசன் - அளகேசன் - குபேரன்.

**118. பண்புட னிக்கணம் வேண்டு நிதிகள் பலவும்**
**நண்பொட வற்கெதிர் சென்று நல்கா யென்னின்**
**விண்புகு மிப்புரம் வேந்த வென்றான் மெய்யில்**
**புண்புக வுட்கியி ளைக்கும் வேழம் போல்வான்**

[பண்புடன் இ கணம் வேண்டும் நிதிகள் பலவும் நண்பொடு அவற்கு எதிர் சென்று நல்காய் என்னின், விண் புகும் இ புரம் வேந்த, என்றான் மெய்யில் புண்புக உட்கி இளைக்கும் வேழம் போல்வான்.]

**விளக்கம் :-** பண்புடன் - சினேகத்திற்கு உரிய முறையோடு. சரீரத்தில் புண் உண்டாக நடுங்கித் தளரும் யானை போன்றவனான சங்கோடணன், குபேரனை நோக்கி, ''வேந்தனே, அவனை எதிர் கொண்டு அழைத்து சினேகப் பான்மையில் அவன் விரும்பிய நிதிகளை வழங்காயாயின், இவ்வளகாபுரியை விண்புகச் செய்வான், அதாவது அழித்துவிடுவான்,—என்று கூறியபடி.

## குபேரன் மகன் வரல்

**119. கோதிலி யக்கனி யாவுங் கூறக் கேட்டுத்**
**தாதையு ருத்திர சேனன் றன்னை நோக்கி**
**மாதர்ம லர்ப்பொழி லூடு வந்த மனித்தன்**
**ஏதில ருத்திய னென்னக் கெட்டி யென்றான்,**

[கோது இல் இயக்கன் யாவும் கூற கேட்டு, தாதை, உருத்திர சேனன் தன்னை நோக்கி, மாதர் மலர் பொழிலூடு வந்த மனித்தன் ஏதில் அருத்தியன், என்ன கேட்டி என்றான்.]

**விளக்கம் :-** சங்கோடணன் கூறியது கேட்ட தந்தையாகிய குபேரன், மனங் கவரும் எழிலுடைய பொழிலிடத்தே வந்துள்ள மனிதனது விருப்பம் யாது, என்று அறிந்து வருமாறு தன் மகனாகிய உருத்திரசேனனை, அனுப்பினான், – என்பதாம். அருத்தி - விருப்பம். மனித்தன், மனிதன் என்பதின் மெய் விரிந்தது.

**120. தந்தையு ரைத்தருள் வாய்மை தலைமேற் கொள்ளா**
**மைந்தனு மப்பொழி லூடு சென்று மன்னிச்**
**சிந்திய ரக்கர்சி ரங்கள் குன்றஞ் செய்து**
**கந்தனி னிற்கும றத்தி னானைக் கண்டான்.**

[தந்தை உரைத்தருள் வாய்மை தலைமேல் கொள்ளா, மைந்தனும் அ பொழிலூடு சென்று மன்னி, சிந்தி அரக்கர் சிரங்கள் குன்றம் செய்து, கந்தனின் நிற்கும் மறத்தினானை கண்டான்.]

**விளக்கம் :-** வாய்மை தலைமேல் கொள்ளா - (தந்தை சொல்லியருளிய) வாய்மொழியை வணக்கத்துடன் ஏற்று. பொழி லூடு சென்று மன்னி - பொழிலிடத்தே போய்ச் சேர்ந்து- அரக்கர் தலைகளை அறுத்து மலைபோல் குவியச் செய்து முருகக் கடவுளைப் போல் நிற்கும் வீரனான வீமனைக் கண்டான்,—என்பது ஈற்றடி களின் பொருள். உருத்திரசேனன் தந்தை பணித்தபடி வீமனைக் கண்டான், என்பதாம்.

**121. கண்டு மருத்தருள் காளை தன்னை நோக்கி**
**வண்டு மிடைப்பயி லாத காவில் வந்து**
**மிண்டு மரக்கர்கு லத்தை வீணே யாவி**
**கொண்டு படுத்தனை யார்நீ கூறு கென்றான்**

*[கண்டு மருத்து அருள் காளை தன்னை நோக்கி வண்டும் இடை பயிலாத காவில் வந்து, மிண்டும் அரக்கர் குலத்தை வீணே ஆவி கொண்டு படுத்தனை, 'யார் நீ ?' கூறுக என்றான்.]*

**விளக்கம் :-** மருத்து அருள் காளை - வாயு பகவான் தந்த வீமன். வண்டும் இடை பயிலாத கா - மலரை விரும்பும் வண்டும் நெருங்கப் பெறாத சோலை. மிண்டும்-காவல் செய்யும் பொருட்டுக் கூடியுள்ள. ஆவிகொண்டு படுத்தாய் - உயிரைப் பறித்து அழித் தாய். உருத்திரசேனன் வீமனை 'நீ யார் ?' என்று வினவினான், என்பதாம்.

**122. நின்னள காபதி மைந்தர் சாப நீக்க**
**முன்மரு தூடுத வழ்ந்த வாகை மொய்ம்பற்(கு)**
**இன்னருண் மைத்துனன் மண்ணில் யாரும் போற்றும்**
**மன்னவன் வீமன்ம ருத்தின் மைந்த னென்றான்.**

*[நின் அளகாபதி மைந்தர் சாபம் நீக்க முன் மருது ஊடு தவழ்ந்த வாகை மொய்ம்பற்கு இன் அருள் மைத்துனன்; மண்ணில் யாரும் போற்றும் மன்னவன், வீமன், மருத்தின் மைந்தன், என்றான்.]*

**விளக்கம் :-** அளகையின் அரசனான உன் தந்தையின் மைந்தர் இருவர் எய்திய நாரத சாப விமோசனம் செய்ய முன்னம் ஆயர்பாடியில் மருத மரங்களின் இடையே தவழ்ந்த வாகை சூடிய தோள்களை உடைய கண்ணபிரானுக்கு, அவனது இனிய அருளுக்குப் பாத்திரமான மைத்துனன் (அத்தை மகன்). மண்ணில் எல்லோரும் போற்றும் குரு வம்சத்தைச் சேர்ந்தவன். மருத்தின் (வாயுவின்) மைந்தன், என்று வீமன் பதில் மொழிந்தான்,— என்பது பொருள். கண்ணனது தந்தையான வசுதேவருக்குக் குந்தி உடன் பிறந்த முறையுடையாளாதலால், வீமன் அத்தை மகன் ஆகின்றான். பண்டையில் அத்தை மகனை மைத்துனன், என்பது வழக்கம்,

**123. மாயவ னற்புத னாதன் கண்ணன் வையம்
தாயவன் மைத்துன னாகி னைய தனிநீ
ஏயவ னத்தினில் வந்த தென்கொ லென்றான்
தூயவ னுற்றன யாவுந் தோன்றச் சொன்னான்.**

*[மாயவன் அற்புதன் நாதன் கண்ணன் வையம் தாயவன் மைத்துனன் ஆகின், ஐய, தனி நீ ஏய வனத்தினில் வந்தது என் கொல்? என்றான், தூயவன் உற்றன யாவும் தோன்ற சொன்னான்.]*

**விளக்கம் :-** மாயை உடையவனும், அற்புதச் செயல்களை உடையவனும், உலகத்தைத் தாவி அளந்தவனும் ஆகிய கண்ணனது மைத்துனன் ஆகில், ஐய, நீ தனியே காவல் பொருந்திய இந்த வனத்தினிடம் வந்தது ஏன், என்று உருத்திரசேனன் கேட்டான். அதற்குப் பதிலாக, தூயவனான வீமனும் தான் வந்த காரியத்தையும் நிகழ்ந்தவற்றையும், விளக்கமாய்ச் சொன்னான்,—என்பது பொருள். ஏய, என்பது ஏய், என்பதினடியாய்ப் பிறந்த பெயரெச்சம்.

**124. மற்றவ னவ்வுரை கூற மகிழ்வொ டந்தண்
பொற்றரு நண்பின் வழங்கிப் போகென் றருளி
வெற்றி யுருத்திர சேனன் மீண்டு வந்தாங்(கு)
உற்றது தாதை தனக்கு ரைத்தி ருந்தான்.**

*[மற்று, அவன் அ உரை கூற மகிழ்வொடு அம் தண் பொன் தரு நண்பின் வழங்கி, போகென்று அருளி, வெற்றி உருத்திர சேனன் மீண்டு வந்து ஆங்கு உற்றது தாதை தனக்கு உரைத்து, இருந்தான்.]*

**விளக்கம் :-** பொன்தரு - அழகிய கொடியோடு கூடிய மலர். போகென்று அருளி - திரும்பிச் செல்லுமாறு அன்போடு விடை கொடுத்து. உரைத்து இருந்தான் - தந்தைக்குக் கூறி, அதன் பின் இருக்கை ஒன்றில் அமர்ந்தான். மற்று : அசை. உருத்திரசேனன் வீமனுக்கு அவன் விரும்பி வந்த மலரை வழங்கி அவனை அனுப்பி விட்டுத் தந்தையிடம் நிகழ்ந்த செய்தியைக் கூறினான்,—என்பதாம்.

## கலித்துறை

**125. அண்ணற்ற ருப்பெற்ற பின்னந்த வயமீளி யக்காவினில்
தண்ணத்தி லப்பொய்கை படிவுற்றின் னமுதன்ன
தண்ணீர்குடித்(து)
எண்ணற்ற கழுதாட லதுகண்டி ருந்தங்கி ளைப்பாறினான்
மண்ணுக்கும் விண்ணுக்கும் மறலிக்கு முறவான
வடிவாளினான்.**

*[அண்ணல் தரு பெற்ற பின் அந்த வயம் மீளி, அ காவினில் தண் நித்திலம் பொய்கை படிவுற்று, இன் அமுது அன்ன தண் நீர் குடித்து, எண் அற்ற கழுது ஆடல் அது கண்டு இருந்து அங்கு*

இளைப்பு ஆறினான், மண்ணுக்கும் விண்ணுக்கும் மறலிக்கும் உறவு ஆன வடிவாளினான்.]

**விளக்கம் :-** அண்ணல் தரு - பெருமையுடைய (கொடியோடு கூடிய) மலர். மீளி - வீரனான வீமன். படிவுற்று - நீராடி. கழுது - பேய். அங்கு இருந்து - அங்கே தங்கி. மறலி - எமன். உறவு ஆன - துணையான. வடிவாளினனான...மீளி, என்று இயைக்க. மண்ணுக்கும் விண்ணுக்கும் தீங்கிழைக்கும் அரக்கரை அழித்தமையின், அவற்றிற்கு உறவுடையான் ஆகின்றான். எமனது ஆவி பறிக்குங் காரியத்தைச் செய்தமையின், மறலிக்கு உறவின்ன் ஆகின்றான்.

**126. இவ்வாறி வன்செய்கை யிவன்வந்த தறியாம**
**லெழிர்கூர்வனத்(து)**
**அவ்வாறு பயில்கின்ற வருள்வாரி தானுற்ற வதுகூறுவாம்**
**கைவார்க ளதக்காளை யைக்கண்ணு றச்சூழல்**
**காணாதுமுன்**
**செவ்வாய்ம டப்பாவை நின்றாளை நீகூறெ னச்செப்பினான்.**

[இ ஆறு இவன் செய்கை, இவன் வந்தது அறியாமல் எழில் கூர் வனத்து அ ஆறு பயில்கின்ற அருள் வாரி தான் உற்ற அது கூறுவாம்; கைவார் கதை காளையை கண் உற சூழல் காணாது, முன் செம் வாய் மடம் பாவை நின்றாளை, நீ கூறு, என செப்பினான்,]

**விளக்கம் :-** இவன் செய்கை இவ்வாறு - இந்த வீமனது செய்தி இந்த விதம் (ஆக). இவன் வந்தது அறியாமல் - இவ் வீமன் மலர் கொணரச் சென்றது அறியாமல். எழில்கூர் வனம் - இயற்கை வளம் நிறைந்த கானம், அதாவது கந்தர்ப்ப மலையைச் சேர்ந்த கானம். அவ்வாறு பயில்கின்ற அருள் வாரி - அந்த விதமாக, அதாவது கந்தர்ப்பகிரிச் சாரலில் காய்கனிகளைப் புசித்துக் கொண்டு தம்பியரோடும் தையலோடும், அமைந்து வாழ்கின்ற தருமபுத்திரன். தானுற்ற அது கூறுவாம் - அவன் (வீமனைக் காணாததால்) அடைந்த அந்த நிலையைக் கூறுவோம். சூழல் கண்ணுற காணாது - வசிக்கும் இடத்தில் கண்ணில் படும்படி (வீமனை) காணாமல், திரௌபதியைக் கேட்டான்,—என்பதாம். அருள் வாரி - கருணைக் கடலான தருமன், (வாரி - வடமொழிச் சொல்). மடப்பாவை - மடம் முதலிய பெண்மைக் குணங்களைப் பெற்ற திரௌபதி. வீமனைக் காணாது தளர்வுற்ற தருமன் திரௌபதியை வினவினான்,—என்பதாம்.

**127. வானின்று மலரொன்று தன்முன்பு மின்போல வந்துற்றதும்**
**தானின்றிம் மலர்போலு மலர்தேடி நீயின்று தருகென்றதும்**
**தேனின்ற தொடையானு மளகேச னகர்மீது தனிசென்றதும்**
**கானின்ற குழலாளு மன்னற்கு முன்கட்டு ரைத்தாளரோ.**

[வான் நின்று மலர் ஒன்று தன் முன்பு மின் போல வந்து உற்றதும், தான் நின்று இ மலர் போலும் மலர் தேடி நீ இன்று தரு கென்றதும், தேன் நின்ற தொடையானும் அளகேசன் நகர்மீது தனி சென்றதும், கான் நின்ற குழலாளும் மன்னற்கு முன் கட்டுரைத்தாள், அரோ.]

**விளக்கம் :-** தன் முன் ஓரரிய மலர் வீழ்ந்ததும், அது போலும் மலரொன்றைத் தேடித் தருமாறு தான் வீமனைக் கேட்டதும், அவனும், அம் மலர் கொணர அளகை சென்றது மாகியவற்றைத் தருமனுக்குக் கூறினாள், — என்பதாம். தான் நின்று - தான் வீமனிடம் போய் நின்று. தேன் நின்ற தொடையலான் - வீமன். கான் நின்ற குழலாள் - வாசனை தங்கிய கூந்தலையுடைய திரௌபதி. உத்தம சாதிப் பெண்களின் கூந்தல் இயற்கை மணம் உடையது என்பது மரபு. மன்னன் - தருமன்.

**128. கருமத்தின் வடிவான மடமங்கை யிவ்வாறு கழறாதமுன்**
**உருமுத்து வசன்மைந்தன் முன்போக வன்போடு**
**முளநொந்துளான்**
**மருமத்து வேல்வைத்த புண்மீது கனலுற்ற தெனமாழ்கினான்**
**தருமத்தி னுருவாகி யெழுபாரு நிலையிட்ட**
**தனியாண்மையான்.**

[கருமத்தின் வடிவு ஆன மடமங்கை இ ஆறு கழறாத முன், உருமுதுவசன் மைந்தன் முன் போக, அன்போடும் உளம் நொந்து உளான், மருமத்து வேல் தைத்த புண்மீது கனல் உற்றது என மாழ்கினான், தருமத்தின் உருவாகி எழு பாரும் நிலை இட்ட தனி ஆண்மையான்.]

**விளக்கம் :-** கருமத்தின் வடிவான மடமங்கை - (அழியப் போகும் துரியோதனாதியரது) ஊழ்வினை போன்ற திரௌபதி. கழறாத முன் - சொன்னவுடனே. உருமுதுவசன் மைந்தன் - இடியைக் கொடியிலே கொண்ட இந்திரன் மைந்தனான அருச்சுனன். முன்னமே பாசுபதம் பெறும் பொருட்டுப் பிரிந்து சென்ற விசயன் திரும்பாமையினால் வருந்தும் தருமன், இப்போது வீமனும் காணப்படாமையின் வேல் தைத்த புண்ணில் கனல் சேர்ந்தது போல் மேலும் வருந்தினான், — என்பது மூன்றாவது அடியின் பொருள்; எழு பார் - ஏழு தீவுகளை உடைய பூமி. சம்பு, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம், என்பவை, எழு பார். தர்மத்தின் உருவமாய் அமைந்து எழுபாரை அழியாது தர்மத்தில் நிலைக்கச் செய்த ஒப்பற்ற ஆண்மையினனான தரும புத்திரன், என்பது ஈற்றடியின் பொருள். கருமத்தின் வடிவான மடங்கை :- வேள்வி செய்ததன் பயனாய், வேள்வித் தீயினின்று தோன்றிய மடப்பாவை, அல்லது, மனைவாழ்க்கையின் நற்கருமங்கள் வடிவு கொண்டு வந்தாற் போன்ற மடப்பாவை, அல்லது

துரியோதனாதியரும், அவரைச் சேர்ந்த தீயவரும் அழிவதற்கு அவர் செய்த தீவினைபோல் தோன்றிய மடப்பாவை, என்க.

**129. வாளிப்ப ரித்தேர்ம னிவ்வாறு துயரெய்திமன னஞ்செயக்**
**கூளிக்கு ழாம்வானின் மிசையுய்த்த தென்னக்கொ டித்தேரின்மேல்**
**காளக்க ருங்கொண்டல் போல்வந்து வீமன்ற ருங்காளைமுன்**
**ஆளிப்பெ ருங்கொற்ற வெற்றித்தி ருத்தாதை யடிமன்னினான்.**

[வாளி பரி தேர் மன் இ ஆறு துயர் எய்தி மனனம் செய, கூளி குழாம் வானின் மிசை உய்த்தது என்ன கொடி தேரின் மேல், காளம் கரு கொண்டல்போல் வந்து, வீமன் தரும் காளை, முன் ஆளி பெரு கொற்றம் வெற்றி திருதாதை அடி மன்னினான்.]

**விளக்கம் :-** வாளிப்பரி - அம்புபோல் பாய்ந்து செல்லும் குதிரை. மனனம் செய - கடோற்கசனை நினைக்க. கூளி - பேய். பேய்க் கூட்டங்கள் வானிடைச் செலுத்தியது என்று சொல்லும்படி (கொடி பொருந்திய தேரின் மேல் கடோற்கசன் வந்தான்.) காளக் கருங்கொண்டல் - மிகக் கரிய மேகம், அல்லது, காளத்தைக் காலத்தின் போலியாகக் கொண்டால், கார் காலத்துக்கரிய மேகம் என்பது பொருளாகும், (ளகரத்திற்கு லகரம் போலி.) ஆளி - சிங்கம். வீமன் அளகை சென்றது அறிந்து கலங்கிய தருமன் நினைக்க, வீமனது மகனான கடோற்கசன், விரைந்து வந்து முதலில் பெரிய தந்தையை வணங்கினான், என்பதாம். முன் - முதலில்.

**130. மின்றாரை படவெண்ணி லாவீசு மேகங்கொ லெனவந்துமுன்**
**நின்றானை முகநோக்கி நீதிக்கோர் வடிவாம னிவைகூ றுவான்**
**உன்றாதை தமியேனொ டுரையாம லொருவாச மலர்கொண்டிடச்**
**சென்றானெ னச்சிந்தை நொந்தன்பு டன்பின்னு மிவைசெப்புவான்.**

[மின் தாரைபட வெள் நிலா வீசும் மேகம் கொல் என வந்து முன் நின்றானை முகம் நோக்கி, நீதிக்கு ஓர் வடிவான மன்(னன்) இவை கூறுவான்; உன் தாதை தமியேனொடு உரையாமல் ஒரு வாசம் மலர் கொண்டிட சென்றான், என சிந்தை நொந்து, அன்புடன் பின்னும் இவை செப்புவான்.]

**விளக்கம் :-** தாரை - ஒழுங்கு. மழைத்தாரை - ஒழுங்குபட ஒழுகும் நீர்த்தொகுதி. மின் தாரை - மழைபோல் தாரையிட்டு விளங்கும் மின்னல். நீதியின் சிறந்த உருவம் ஆனவனான தருமன்,

தாரைபட்ட மின்னலோடும் (மின்போன்ற செம்பட்டை மயிரோடும்) வெள்ளிய நிலவோடும், (கோரப் பற்கள் வீசும் நிலவொளியோடும்) மேகமோ இவன் என்று சொல்லும்படி, தன் முன் நின்ற கரிய திருமேனியனான கடோற்கசனை நோக்கிக் கூறுவானாயினன், —என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். உன் தந்தை என்னிடம் கூறாமல் மலர் கொணர (அளகை) சென்றனனென, நொந்த மனத்துடன் அன்பு தோன்றப் பின்னும் கூறுவானாயினான்,— என்பது ஈற்றடிகளின் பொருள். தனக்கு இரு கரங்கள் போன்றாரான வீமார்ச்சுனர் பிரிந்தமையின், தமியன், என்றான், என்க.

## தருமன் மகனோடு அளகை செல்லல்

**131. எம்பிக்கொ ரிடையூறு வந்தெய்து முன்யாமி யக்கேசனூர்**
**வம்புற்ற மலர்வாவி சென்றெய்தி விரைவோடு**
**வருவோமெனா**
**வெம்புற்ற பைங்கானி னிடைமின்னு மிளையோரு**
**முடன்மேவவே**
**கம்பிக்கு நெஞ்சோட வன்றேரின் மீதக்க ணத்தேறினான்.**

[எம்பிக்கு இடையூறு வந்து எய்தும் முன் யாம் இயக்கேசன் ஊர், வம்பு உற்ற மலர் வாவி சென்று எய்தி விரைவோடும் வருவோம் எனா, வெம்பு உற்ற பைங்கானின் இடை மின்னும் இளையோரும் உடன் மேவ (ஏ), கம்பிக்கும் நெஞ்சோடு அவன் தேரின் மீது அ கணத்து ஏறினான்.]

**விளக்கம் :-** வம்பு - பரிமளம். வெம்பு உற்ற கான்–வெம்மை பொருந்திய கானம். மின் - திரௌபதி. இளையோர் - நகுல சகதேவர். உடன் மேவ - பிரியாது காட்டில் இருக்கச் செய்து, தம்பியரையும் தையலையும் கானிடை விட்டுவிட்டுத் தருமன் கடோற்கசனுடன் அளகை சென்றான், என்பதாம். கம்பித்தல் - நடுங்கல்.

**132. கரக்கும்ப கம்பக்க டாயானை மன்னன் கருத்தோடு**
**சென்(று)**
**அரக்கன்ற டந்தேரி லவனோடு நீடந்த ரத்தேகினான்**
**பரக்கும்பெ ரும்புண்ய மும்பாவ முந்தாவில் பகிரண்டமும்**
**புரக்கும்ப ரஞ்சோதி யும்பொங்கு மாமாயை யும்போலவே.**

[கரம் கும்பம் கம்பம் கடாம் யானை மன்னன் கருத்தோடு சென்று, அரக்கன் தன் தேரில் அவனோடு நீடு அந்தரத்து ஏகினான், பரக்கும் பெரும் புண்ணியமும் பாவமும் (போல) தா இல் பகிர் அண்டமும் புரக்கும் பரஞ்சோதியும், பொங்கும் மாயையும் போல(ஏ).]

**விளக்கம் :-** பரந்து விரியும் பெரிய புண்ணியமும் பாவமும் போலவும், அழிதலில்லாத எல்லாப் பெரிய அண்டங்களையும் காத்தளிக்கும் பரம்பொருளும், பலவிதமாகப் பரிணமிக்கும் தன்மையதான பெரிய மாயையும் போலவும், துதிக்கையையும்

குடம் போன்ற மத்தகத்தையும் அசையும் தன்மையையும் உடைய மதம் பொருந்திய யானையைப் போன்ற மன்னனாகிய தருமனும், (வீமனைக்காணும்) விருப்பத்தோடு, கடோற்கசனது விசாலமான தேரில் அவனோடு நீண்ட பெரிய ஆகாச வழியிலே சென்றான்,— என்பது பொருள். பரஞ்சோதியும், புண்ணியமும் தருமனுக்கு உவமை. வீமனது மகனும், நற்குண நற்செயல்களை யுடையவனுமான கடோற்கசனை, அவன் அரக்கிமகனேனும், பாவத்தை அவனுக்கு உவமையாக்குவது ரசக் குறைவே ஆகும். கம்பயானை - எப்பொழுதும் அசைதலை இயல்பாகக் கொண்ட யானை ; அல்லது கட்டுத்தறியை முறிக்கும் யானை. பாவமும், மாயையும் கரு நிறமுடையவை என்பது நூல் மரபு.

**133. கானெல்லை செல்லாது கதிரோனெ டுந்தேரெ னக்கங்கைசேர்**
**வானெல்லை யுறவோடி யொருநாலு கடிகைக்குள் வயமன்னுதேர்**
**ஊனெல்லை யில்லாது புகமண்டி மிகமண்டு முதிரத்துடன்**
**தேனெல்லை யில்லாது குக்கும்பெ ருஞ்சூழல் சென்றுற்றதே**

[கான் எல்லை செல்லாது கதிரோன் நெடு தேர் என கங்கை சேர் வான் எல்லை உற ஓடி ஒரு நாலு கடிகைக்குள் வய மன்னு தேர், ஊன் எல்லை இல்லாது புக மண்டி, மிக மண்டும் உதிரத்துடனே, தேன் எல்லை இல்லாது உகுக்கும் பெரும் சூழல் சென்று உற்றது, ஏ.]

**விளக்கம் :-** கானின் இடமான பூமியில் செல்லாது. சூரியனது பெரிய தேர் போல் ஆகாச கங்கை பொருந்திய வானிடத்தே பொருந்தச் சென்று நான்கு நாழிகை நேரத்தில், வலிய (கடோற்கசனது) தேர், (வீமனால் கொல்லப்பெற்ற அரக்கர்களின்) ஊன் (உடல்கள்) அளவு இல்லாது நெருங்கிக் கிடக்க, அவைகளினின்று மிகுதியாகப் பெருகும் குருதியோடு, அளவிலாது தேன் சிந்தும் பெரிய (அளகையிலுள்ள) மலர்ச் சூழல் சென்றடைந்தது,—என்பது பொருள். எல்லை இல்லாது ஊன் மண்டி புக, என்று இயைக்க, கடிகை - இருபத்து நான்கு நிமிஷம். சூழல் - சோலை.

**134. ஆனைக்கு ழா நூறு மரியேறெ னப்பொங்கி யளகேசன்வெம்**
**சேனைக்கு ழா நூறி யதனூடு பயில்வாயு சிறுவன்தனைத்**
**தானைப்பெ ருங்கொற்ற மன்கண்டு தானுற்ற தளர்வாறினான்**
**ஏனைத்தி ருத்தாதை யைக்கண்டு தேர்நின்றி ழிந்தின்புறா.**

[ஆனை குழாம் நூறும் அரி ஏறு என பொங்கி அளகேசன் வெம்சேனை குழாம் நூறி, அதனூடு பயில் வாயு சிறுவன் தனை, தானை பெரு கொற்றம் மன் கண்டு தான் உற்ற தளர்வு ஆறினான்; (மகன்) ஏனை, திருதாதையை கண்டு தேர் நின்று இழிந்து இன்பு உறா,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** நூறும் - அழிக்கும். பொங்கி - வெகுண்டு. நூறி - அழித்து. அதனூடு பயில் - அந்தச் சோலையில் தங்கியிருந்த. வாயு சிறுவன் - வீமன். தானை பெருங்கொற்றம் மன் - சேனைகளையும், சிறந்த படையையும் உடைய அரசனான தருமன், ஏனை : வினைமாற்றுப் பொருளதான இடைச்சொல். தருமன் தம்பியைக் கண்டு தளர்ச்சி தீரப்பெற, மகன் தந்தையைக் கண்டு மகிழ்ந்தான், என்பதாம்.

**135.** **மைக்காள முகிலன்ன மகனுந்த னடிமன்ன வயவீமனும்**
**கைக்கானி னறைவாச மலர்கொண்ட றன்காளை**
**கழனல்கியே**
**முக்காலும் வலம்வந்து முறையோடு தொழுவானை**
**முகநோக்கிநின்(று)**
**எக்காலு நாவந்த திசையாத விசையோனு மிவைகூறுவான்.**

[மை காளம் முகில் அன்ன மகனும் தன் அடி மன்ன, வயம் வீமனும், கை கானில் நறை வாசம் மலர் கொண்டு அறன் காளை கழல் நல்கியே, முக்காலும் வலம் வந்து முறையோடு தொழுவானை முகம் நோக்கி, நின்று எக்காலும் நா வந்தது இசையாத இசையோனும் இவை கூறுவான்.]

**விளக்கம் :-** மை காள முகில் அன்ன மகன் - கரிய கார்கால மேகம் போன்ற கடோற்கசன். அடிமன்ன - பாதங்களில் பொருந்தும்படி வணங்க. அந்தச் சோலையிலுள்ள தேனின் நிறைவையும் மணத்தையுங் கொண்ட மலர்களைக் கையில் கொண்டு வீமன், தருமனது பாதங்களில் இட்டு, என்பது இரண்டாவது அடியின் பொருள். (மலரை பாதங்களில் இட்டு) மூன்று முறை பிரதட்சணம் செய்து முறையோடு (விதிப்படி) தொழுது நிற்பவன் முகம் நோக்கி நின்று, எந்தக் காலத்திலும் வாயில் வரும் கடுஞ் சொற்களைப் பேசி அறியாத கீர்த்தியை உடைய தருமனும், இவை கூறுவானாயினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

**136.** **என்னேவ லாலன்றி யிமையோரு மெய்தாத விக்காவி நீ**
**மின்னேவ லால்வந்து விரகாக வினைசெய்த**
**விதுமேன்மையோ**
**உன்னேவல் புரிவாரு முளரும்பி மாரென்று ருத்தானரோ**
**தன்னேவ லாலிந்த வுலகேழும் வலம்வந்த தனியாழியான்.**

[என் ஏவலால் அன்றி இமையோரும் எய்தாத இ காவில் நீ, மின் ஏவலால் வந்து விரகு ஆக வினை செய்த இது, மேன்மையோ?

உன் ஏவல் புரிவாரும் உளர் உம்பிமார் என்று, உருத்தான், (அரோ), தன் ஏவலால் இந்த உலகு ஏழும் வலம் வந்த தனி ஆழியான்.]

**விளக்கம் :-** தனது ஏவலால் ஏழு தீவுகளை உடைய இப் பூமண்டலம் முழுவதும் சுற்றிவரும் தன்மையுடைய ஒப்பற்ற ஆக்ஞா சக்கரத்தையுடைய தருமன்,— என்பது ஈற்றடியின் பொருள். அதாவது, உலகம் முழுதும் தனது ஆணை செல்லக் கூடிய தருமன், என்க. உனது ஏவல் கடவாது நடக்க அருச்சுனன் முதலிய தம்பியர் இருக்க, என் தம்பியாகிய நீ எனது ஏவலின்றி ஒரு பெண்ணின் சொல்லை ஏற்று ஒரு கருமத்தில் பொருந்துதல் முறையோ, என்று தருமன், கடிந்து கூறும் கருத்தது. விரகு - தந்திரம், கபடம். விரகாக வந்து - கபடமாக இங்கே என் அனுமதி யின்றி வந்து. அரோ : அசை.

**137. என்றிந்த வுரைகூறி முனிவாறி யிறையோனு மிகலோனுடன்**
**சென்றந்தண் மலர்வாவி படிவுற்று வாசத்தி**
**ருத்தார்புனைந்(து)**
**ஆன்றந்த விடம்விட்டி மைப்போதி லத்தேரின் மிசையேறியே**
**மின்றந்த விடையாளு மிளையோரு முறைகானி**
**னிடைமேவினான்.**

[என்று இந்த உரை கூறி முனிவு ஆறி, இறையோனும் இகலோனுடன் சென்று, அம் தண் மலர் வாவி படிவுற்று, வாசம் திரு தார் புனைந்து, அன்று அந்த இடம் விட்டு இமைப்போதில் அ தேரின் மிசை ஏறி (ஏ), மின் தந்த இடையாளும் இளையோரும் உறை கானின் இடை மேவினான்.]

**விளக்கம் :-** இறையோன் - தருமன். இகலோன் - கடோற்கசன். தார் புனைந்து - மலரை அணிந்துகொண்டு (தார், மலர் என்ற பொருளது). மின் தந்த இடை - மின்னலைப் போன்ற இடை (தந்த, உவம உருபு). தருமன் கோபந்தணிந்து, தம்பியோடும் தனையனோடும், தமது வாழுமிடமான கானை அடைந்தான் என்பதாம்.

**138. மேவிப்பெ ருந்தெய்வ முனிபாத மலர்சென்னி**
**மிசைவைத்துமென்**
**காவிக்க யற்கண்ணி னணைச்சேயி தழ்ப்பாவை களிகூரவே**
**வாவிச்செ ழுந்தாம மலர்நல்கி யொல்கார்து வலிகூருநல்**
**ஆவிக்கின் னமுதான நிருதற்கு விடையன்ற ளித்தானரோ.**

[மேவி பெரு தெய்வம் முனி பாதம் மலர் சென்னி வைத்து, மெல் காவி கயல் கண் இணை சேய் இதழ் பாவை களிகூர (ஏ),

வாவி செழு தாமம் மலர் நல்கி, ஒல்காது வலி கூரும் நல் ஆவிக்கு இன் அமுதான நிருதற்கு விடை அன்று அளித்தான், அரோ.]

**விளக்கம் :-** தாம் வாழும் கானம் வந்து சேர்ந்த தருமன், உரோமச முனியை வணங்கி, திரௌபதிக்கு மலரை அளித்து, அதன் பின் கடோற்கசனுக்கு அவனது வாழுமிடம் செல்ல அனுமதி கொடுத்தான், என்பதாம். காவி கயல் இணை கண் சேய் இதழ் பாவை - திரௌபதி. தாமம் மலர் - மாலை கட்டுவதற்குரிய மலர். ஒல்காது - தளர்ச்சியுறாது. ஒல்காது வலிகூரும் ஆவிக்கு இன்னமுதான நிருதற்கு, என்று கூட்டுக. தருமனுடைய நல் ஆவி - வீமன். அவனது நலத்தை அறியவும், அழைத்து வரவும் கடோற்கசன் உதவினமையின், அந்த 'நல்லாவிக்கு (வீமனுக்கு) இன்னமுதான நிருதன்', எனப்பட்டது. நிருதன் - கடோற்கசன்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**139.** **மின்புரை மருங்குன் மின்னும் வேந்தரு மந்தக் கானில்**
**அன்புடை முனிவன் கூற வவன்மலர்ப் பாதம் போற்றித்**
**துன்பமுந் துனியு மாறி நாடொறுந் தோகை மார்பன்**
**றன்பெருங் கதையுங் கேட்டுத் தங்கின ரென்ப மாதோ.**

[மின்புரை மருங்குல் மின்னும் வேந்தரும் அந்த கானில், அன்பு உடை முனிவன் கூற அவன் மலர் பாதம் போற்றி, துன்பமும் துனியும் மாறி, நாள் தொறும் தோகை மார்பன் தன் பெரு கதையும் கேட்டு தங்கினர், என்ப, மாதோ.]

**விளக்கம் -:** மின் புரை மருங்குல் மின் - மின்னலை ஒத்த இடையை உடைய திரௌபதி. வேந்தர் - விசயன் ஒழிந்த பாண்டவர் நால்வர். முனிவன் கூற - உரோமசமுனிவன் தர்மோபதேசம் செய்ய. துன்பமும் துனியும் - துன்பங்களும் கவலைகளும். தோகை மார்பன் - லட்சுமியை மார்பிலே உடைய திருமால். கதை - திருமாலுடைய அவதார சரித்திரம். என்ப, மாதோ, அசைகள். தருமனும் தம்பியர் மூவரும் தையலுடன் உரோமச முனிவனது உபதேசங்களையும், திருமாலின் திவ்விய சரித்திரங்களையும் கேட்டுக்கொண்டு அக் கானிடத்தே வசித்து வந்தனர்,—என்பதாம்,

**புட்ப யாத்திரைச் சருக்கம் முற்றும்.**

## 4. சடாசுரன் வதைச் சருக்கம்

சடாசுரன், என்ற அசுரனை வீமன் வதம் செய்ததைக் கூறும் சருக்கம் இது. சடாசுரன், சடா-அசுரன்-எனப் பிரிந்து சடை முடியை உடைய அசுரன், என்ற பொருள் தரும். இவன், திரௌபதியைத் தூக்கிச் சென்றது காரணமாக, வீமனால் கொல்லப் பட்டவன்.

## கடவுள் வாழ்த்து

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அழுதும்வாண் முறுவ லரும்பியுங் களித்து**
**மாடியு பாடியு மகிழ்ந்தும்**
**தொழுதுமா தரித்தும் விழுந்துமே லெழுந்துந்**
**துதித்திடத் தன்பதந் தருவான்**
**முழுதுமா யெங்கு முச்சுட ராகி**
**மூலமாய் ஞாலமாய் விண்ணாய்**
**எழுதொணா மறைக்கு மெட்டொணா வடிவத்**
**தெம்பிரா னும்பர்நா யகனே.**

[அழுதும், வாள் முறுவல் அரும்பியும், களித்தும், ஆடியும் பாடியும், மகிழ்ந்தும், தொழுதும், ஆதரித்தும், விழுந்தும் மேல் எழுந்தும் துதித்திட தன் பதம் தருவான், முழுதும் ஆய், எங்கும் முச்சுடர் ஆகி, மூலம் ஆய், ஞாலம் ஆய், விண் ஆய், எழுது ஒணா மறைக்கும் எட்டு ஒணா வடிவத்து எம்பிரான் உம்பர் நாயகனே.]

**விளக்கம் :-** முச்சுடர் ஆகி, ஞாலம் ஆய், விண்ணாய், எங்கும் முழுதும் ஆய், மூலம் ஆய் எழுதொணாத மறைக்கும் எட்டொணா வடிவத்து எம்பிரான் உம்பர் நாயகன், அழுதும் வாள் முறுவல் அரும்பியும் களித்தும்....துதித்திட தன்பதம் தருவான்,—என்பது அன்வயம்.

சூரியன் சந்திரன் அக்கினி என்ற மூன்று சுடராகி, இந்த நில உலகமாய், வானமாய், எங்கும் உள்ள எல்லாப் பொருள்களுமாய், இவற்றிற்கு ஆதி காரணமாய், எழுதமுடியாத வேதங்களுக்கும் எட்ட முடியாத தன்மையை உடைய எமது தலைவனான தேவாதி தேவன், அழுதும் சிரித்தும் களித்தும், ஆடியும் பாடியும் மகிழ்ந்தும் தொழுதும் விரும்பியும் விழுந்து வணங்கியும் எழுந்து நின்றும் துதித்திடத் தன் இடமாகிய பரமபதத்தை அல்லது தனது திருவடிகளை உதவி அருள்வான்,—என்பது பொருள். இதனால் அன்பர்க்கு எளியதாகும் அவனது தன்மை கூறப்பட்டது. களிப்பு - அளவிறந்த மகிழ்ச்சி. எழுத ஒணாத, எட்டு ஒணாத என்ற எச்சங்களின் அகர ஈறு தொகையாக, எழுது ஒணாத, எட்டு ஒணாத, என நின்றன. ஒணா, என்பது ஒன்றாத, என்பதின் மரூஉ மறைக்கும், என்பதிலுள்ள உம்மை, சிறப்பும்மை.

**2. இந்தநீள் வனத்தின் மன்னவ ரிவ்வா**
**றின்பமுற் றிருந்தவந் நாளில்**
**அந்தமா வனத்தின் சூழலிற் பயிலு**
**மருந்த முனிவரர் பலரும்**

**தந்திபே ருழுவை யாளியெண் கிவற்றாற்**
**றாமிட ருழந்துமெய் தளர்ந்து**
**வந்துமா மகிபர்க் கபயமென் றவர்வாழ்**
**வனத்திடைப் புகுந்துமன் னினரால்.**

[இந்த நீள் வனத்தில் மன்னவர் இ ஆறு இன்பம் உற்று இருந்த அ நாளில், அந்த வனத்தின் சூழலில் பயிலும் தவம் முனிவரர் பலரும், தந்தி பேர் உழுவை ஆளி எண்கு இவற்றால் தாம் இடர் உழந்து மெய் தளர்ந்து வந்து மா மகிபர்க்கு அபயம் என்று, அவர் வாழ் வனத்திடை புகுந்து மன்னினர் ஆல்.]

**விளக்கம் :-** தந்தி - யானை. உழுவை - புலி. ஆளி - சிங்கம். எண்கு - கரடி. அந்த வனத்தில் அருந்தவம் இயற்றும் இருடியர் பலர் வனவிலங்குகளால் துன்பங்களை அனுபவித்துத் தளர்ந்து, அபயம் என்று தருமன் வாழும் வனத்திடை போய்ச் சேர்ந்தனர்,— என்பதாம். மஹி - பூமி. மஹிபர் - பூமியை ரட்சிப்பவர். தந்தங் களை உடையது தந்தி; அதாவது யானை.

**3. அருந்தவ முனிவ ரெனைப்பல ரிவ்வா**
**றபயமென் றழுங்குசொற் கேட்டு**
**பெருந்திற லரச னவர்பதம்வ ணங்கிப்**
**பேசுக நுங்குறை யென்னப்**
**பொருந்திய கொடிய விலங்கினாற் றமக்குத்**
**புகுந்துள யாவையும் புகன்றே**
**வருந்திய துயரந் தவிர்த்திநீ யென்றார்**
**மன்னனு மக்குறை நேர்ந்தான்.**

[அரு தவம் முனிவர் எனை பலர் இ ஆறு அபயம் என்று அழுங்கு சொல் கேட்டு, பெரு திறல் அரசன் அவர்தம் பதம் வணங்கி, 'பேசுக நும் குறை!' என்ன, பொருந்திய கொடிய விலங் கினால் தமக்கு புகுந்து உள யாவையும் புகன்று (ஏ), 'வருந்திய துயரம் தவிர்த்தி நீ', என்றார் மன்னனும் அ குறை நேர்ந்தான்.]

**விளக்கம் :-** முனிவர் தங்களது துயரைச் சொல்லக் கேட்ட தருமன், அபயம் அளித்தான்,—என்பதாம். அழுங்கு சொல் - வருத்தத்தைத் தெரிவிக்கும் சொல். மன்னனும் குறைநேர்ந்தான்- அரசனான தருமனும், அவர்களது குறையகற்ற உடன்பட்டான். எனைப் பலர் - மிகப் பலர்.

**4. மறத்துடன் றொழுது வணங்கிமுன் னின்ற**
**வாயுவின் மதலையை நோக்கித்**
**திறத்தகு முனிவ ரிடுக்கணீ யைய**
**சென்றுதீர்த் திடுகவென் றேவி**

**அறத்தின துருவா யகண்டமும் புரக்கு**
**மரசனாங் கிருந்துழி வந்து**
**புறத்தொரு நிருதன் புகுந்தவஞ் சனையும்**
**புரிந்ததும் புகலலா மளவோ.**

[மறத்துடன் தொழுது வணங்கி முன் நின்ற வாயுவின் மதலையை நோக்கி, ''திறம் தகு முனிவர் இடுக்கண் நீ ஐய சென்று தீர்த்திடுக'', என்று ஏவி, அறத்தினது உருவாய் அகண்டமும் புரக்கும் அரசன் ஆங்கு இருந்துழி, வந்து புறத்து ஒரு நிருதன் புரிந்த வஞ்சனையும், புரிந்ததும் புகலலாம் அளவோ.]

**விளக்கம் :-** தொழுது வணங்கி மறத்துடன் நின்ற வாயுவின் மதலை - (தமயனைத்) தாழ்ந்து வணங்கி வீரந்தோன்ற நின்ற வீமன். திறம் தகு முனிவர் - பெருமையின் தகுதி பொருந்திய முனிவர். அறத்தினது உரு ஆய் அகண்டம் புரக்கும் - தரும தேவதையின் உருவமாய் அமைந்து உலகம் முழுதையும் காக்கும் தருமன். (முனிவர்களது இடுக்கண் தீர்க்குமாறு வீமனை அனுப்பி விட்டுத் தருமன் இருக்கையில்) வெளியிலிருந்து ஓர் அரக்கன் வந்து உட்புகுந்த வஞ்சனையும், அவன் புரிந்த செயலும், சொல்லும் அளவினவாமோ,— என்பது ஈற்றடியின் பொருள். சொல்லற்குரிய அளவினவன்றாயினும், முடிந்தபடி சொல்கின்றேன், என்றார், என்க.

**5. தோளிரண் டினுநா டொறுமிரண் டந்தண்**
**சுரும்பிணை விரும்பினன் சுமந்து**
**தாளிரண் டுடைய தொருகருங் குன்றஞ்**
**சரிப்பபோ லகண்டமுஞ் சரிப்பான்**
**கோளிரண் டஞ்சிப் பிறையிரண் டகல்வான்**
**குகையிடைப் புகுவதே போல**
**வாளிரண் டன்ன வெயிறிரண் டொளிகூர்**
**வானிலா வழங்கிய வாயான்.**

[தோள் இரண்டினும் நாள் தொறும் இரண்டு அம் தண் சுரும்பு இணை விரும்பினன் சுமந்து, தாள் இரண்டு உடையது ஒரு கரு குன்றம் சரிப்பபோல் அகண்டமும் சரிப்பான், கோள் இரண்டு அஞ்சி பிறை இரண்டு அகல்வான் குகையிடை புகுவதே போல, வாள் இரண்டு அன்ன எயிறு இரண்டு ஒளி கூர் வான் நிலா வழங்கிய வாயான்.]

**விளக்கம் :-** சுரும்பு - மலை. நாள்தோறும் (அவனது) இரண்டு அழகிய தண்ணிய இரண்டு மலைகளை விருப்பத்தோடு சுமந்துகொண்டு இரண்டு கால்களை உடைய ஒரு கரிய மலை சஞ்சரிப்பது போல உலகம் எங்கும் சஞ்சாரம் செய்பவன்,-என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். இரண்டாவது அடி இல் பொருள் உவமை. இராகு கேது என்னும் இரண்டு கிரகங்களுக்கு

அஞ்சி இரண்டு பிறைச் சந்திரர்கள் வானிடத்தை அளாவிய மலைக் குகையினிடத்தே புகுவதுபோல், இரண்டு வாள்களைப் போன்ற கோரப்பற்கள் இரண்டு ஒளி மிகுந்த சிறந்த நிலவொளியை வழங்கும் வாயை உடையவன், என்பது ஈற்றடிகளின் பொருள். இதுவும் இதைத் தொடரும் இரண்டு செய்யுள்களும் குளகம், ''கோளிரண்டு...புகுவதே போன்ற, வாயான்'', என்றது இல்பொருள் உவமை. சரிப்பது, என்பது சரிப்ப என நின்றது. சரித்தல் - சஞ்சரித்தல்.

**6 முருக்கினாண் மலருங் கறுத்திடச் சிவக்கு**
**மொய்யழல் பெய்செழுங் கண்ணன்**
**அரக்கினா லுருக்கிக் கம்பிசெய் தென்ன**
**வவிர்பொலங் குஞ்சியன் வஞ்சத்**
**திருக்கினா லறங்கள் யாவையுஞ் செகுக்குந்**
**தீயவன் தீமையே புரிந்து**
**தருக்கினா லமரர் யாரையுஞ் செகுக்குஞ்**
**சடாசுர னெனும்பெயர்ச் சழக்கன்.**

[முருக்கின் நாள் மலரும் கறுத்திட சிவக்கும் மொய் அழல் பெய் செழு கண்ணன், அரக்கினால் உருக்கி கம்பி செய்தென்ன (செய்தது என்ன) அவிர் பொலம் குஞ்சியன், வஞ்சம் திருக்கினால் அறங்கள் யாவையும் செகுக்கும் தீயன், தீமையே புரிந்து தருக்கினால் அமரர் யாரையும் செகுக்கும் சடாசுரன் என்னும் பெயர் சழக்கன்.]

**விளக்கம் :-** முருக்கு - முருங்கை மரம் ; புலாச மரம். அம்மரத்தின் அன்றலர்ந்த சிவந்த பூவும் கருமையுறும்படி சிவந்த மிகுதியான நெருப்பைக் கொட்டும் செழுமையுடைய கண்களை உடையவன்,—என்பது முதலடியின் பொருள். அரக்கினால்.. குஞ்சியன் - அரக்கை உருக்கிக் கம்பிகள் செய்தாற்போன்ற விளங்குகின்ற பொன்னிறமான செம்பட்டை மயிரை உடையவன். வஞ்சத்திருக்கினால் . செகுக்கும் தீயவன் - வஞ்சனையாகிய குற்றத்தினால் தருமங்களை எல்லாம் அழிக்கும் கொடிய குணம் உடையவன். தருக்கினால் தீமையே புரிந்து அமரர் யாரையும்...சழக்கன் - செருக்கினால் தீயன புரிந்து தேவரானோரை எல்லாம் அழிக்கும் சடாசுரன் என்ற பெயர்கொண்ட நெறிகடந்த துஷ்டன். நெறியோடு மாறுகொண்டு நடப்பவன் சழக்கன். இரண்டாவது அடி தற்குறிப்பேற்றத்தின் பாற்படும்.

**7. அந்தணர் வடிவங் கொண்டிலங் கையில்வா**
**ழாதிவா ளரக்கனைப் போலச்**
**செந்தழ லளித்த மடமயி லிருந்த**
**சிற்பவண் சாலையி னெய்திக்**
**கொந்தவி ழலங்கற் கொற்றவ ரறியா**
**வகையொரு கோண்மறை பிதற்றிப்**
**பைந்தொடி தனைக்கொண் டந்தரந் தன்னிற்**
**பறந்தனன் பழியுண ராதான்.**

[அந்தணர் வடிவம் கொண்டு, இலங்கையில் வாழ் ஆதி வாள் அரக்கனைப்போல, செம் தழல் அளித்த மடமயில் இருந்த சிற்பம் வண் சாலையின் எய்தி, கொந்து அவிழ் அலங்கல் கொற்றவர் அறியா வகை ஒரு கோள் மறை பிதற்றி, பைந்தொடிதனை கொண்டு அந்தரம் தன்னில் பறந்தனன் பழி உணராதான்.]

**விளக்கம் :-** சிற்பவண் சாலை - கைவண்ணச் சிறப்புடைய பர்ண சாலை ; அதாவது அழகாக அமைக்கப்பெற்ற விடுதி. கொந்து - (கொத்து) பூங்கொத்து, கொற்றவர் - நகுல சகா தேவர். கோள் மறை பிதற்றி - வஞ்சிப்பதற்குரிய மந்திரத்தை ஜபித்து, (கோள் - பொய், மோசம்). பழி உணராதான் - செய்யும் தீய தொழிலால் தனக்கு உண்டாகும் பழியை அறியதானாகிய சடாசுரன். முந்திய யுகத்தில் இராவணன் இராமனது தேவியைத் தூக்கிச் சென்றது போல், சடாசுரன் அந்தணர் வடிவங்கொண்டு, திரௌபதியிருக்கும் சாலையை அடைந்து, தனது காரியத்தை ஒருவரும் அறிந்துகொள்ளாதிருக்கும் பொருட்டு ஒரு மந்திரத்தை ஜபித்து, அவளைத் தூக்கிக்கொண்டு வானவழியில் வேகமாய்ச் சென்றான், என்பது பொருள். வண், மிகுதிப் பொருளது. தீய காரியத்திற்கு மந்திரத்தை உபயோகித்தல்பற்றி, மறை பிதற்றி, என்றார்.

**8. அபயமென் றவளந் தரத்தின்மீ தரற்று**
**மவ்வுரை கேட்டுமாத் திரிதன்**
**உபயமைந் தரும்வார் சிலைகரத் தேந்தி**
**யுருத்தெழுந் துருமென வோடி**
**இபநடுங் கிடமுன் வளைத்திடுங் கொற்றத்**
**தியாளிபோ லிருபுறஞ் சூழ்ந்து**
**நபமுகி லென்ன மின்னொடும் பெயர்வான்**
**றனக்கெதிர் நின்றிவை நவில்வார்.**

[அபயம் என்று அவள் அந்தரத்தின்மீது அரற்றும் அ உரை கேட்டு, மாத்திரிதன் உபயமைந்தரும் வார் சிலை கரத்து ஏந்தி, உருத்து எழுந்து உரும் என ஓடி, இபம் நடுங்கிட முன் வளைத்திடும் கொற்றத்து யாளிபோல் இரு புறம் சூழ்ந்து, நபம் முகில் என்ன மின்னொடும் பெயர்வான் தனக்கு எதிர் நின்று இவை நவில்வார்.]

**விளக்கம் :-** மாத்திரி தன் உபயமைந்தர் - பாண்டுவின் இளைய மனைவியான மாத்திரியின் மைந்தர்களான நகுல சக தேவர். உரும் என உருத்து ஓடி - இடியெனச் சினந்தெழுந்து வீர கர்ச்சனை செய்துகொண்டு ஓடிச் சென்று. இபம் - யானை. நபம் முகில் -கார் காலத்து நீர் கொண்ட மேகம். இது நபா என்ற வட சொல்லின் திரிபு. ஆவணி மாசத்தைக் குறிக்கும் இச்சொல் இலக்கணையாய்க் கார்காலத்தைக் குறித்தது. நபம், என்பதற்கு வானம் என்ற பொருளும் உளது ; அப்பொழுது, வானிடை செல்லும் மேகம் என்பது பொருளாகும். மின் - திரௌபதி. கார் காலத்துக்

கரியமேகம் மின்னலொடு வானிடை செல்வது போல், திரௌபதி யோடு ஆகாயத்தில் செல்லும் அரக்கனுக்கு முன்னே நின்று, நகுல சகதேவர் இவ் வார்த்தைகளைக் கூறுவாறாயினர்,-என்பது ஈற்றடி யின் பொருள். இபம் - சடாசுரன். யாளி - நகுல சகதேவர். திரௌபதியின் அபயக் குரல் கேட்டு நகுல சகதேவர் சடாசுரனை நெருங்கினர்,—என்பதாம்,

**9. மறையவர் வடிவங் கொண்டுவந் தருளில்**
**வஞ்சநீ வஞ்சனை யாகப்**
**பிறர்பெருந் தாரம் வௌவியந் தரத்திற்**
**பெயர்வது பெருமையோ பித்தா**
**நெறியலா நெறிசெய் துன்குலத் தொருபோர்**
**நிருதன்முன் பட்டது நினையாய்**
**முறையலா தியன்றுன் னுயிரினை முடிக்கு**
**முரணுடைத் தறுகண்மா மூர்க்கா.**

[மறையவர் வடிவம் கொண்டு வந்து அருள் இல் வஞ்ச, நீ வஞ்சனை ஆக, பிறர் பெரு தாரம் வௌவி அந்தரத்தில் பெயர் வது பெருமையோ, பித்தா! அலா நெறி செய்து உன் குலத்து ஒரு போர் நிருதன் முன்பட்டது நினையாய்; முறை அலாது இயன்று (பொருந்தி) உயிரினை முடிக்கும் முரண் உடை தறுகண் மா மூர்க்கா.]

**விளக்கம் :-** வஞ்ச—(விளி) வஞ்சனே, முறை அலாத நெறி யில் பொருந்தி உன் உயிரை முடித்துக்கொள்ள இருக்கின்ற, வலிமையும் அஞ்சாமையும் உடைய துஷ்டா, நெறி அலா நெறி செய்து, (அதாவது சீதையைக் கவர்ந்து) உன் குலத்தில் இராவண னாகிய ஒரு போரில் வல்லனான அரக்கன் அழிந்ததை நினைத்துப் பார்,—என்பது ஈற்றடிகளின் பொருள். நினையாய், என்பதற்கு நினையாதவனாகின்றாய், என்றும் பொருள் கொள்ள லாம்.

**10. என்றிவா றுரைத்துச் சரத்தின்மா மாரி**
**யிருவரும் விரைவுட னேவக்**
**கன்றிவா ளரக்கன் கனமென வதிர்ந்து**
**கண்சிவந் துருத்தெழு மெல்லை**
**ஒன்றிவாழ் மறையோ ரருந்துய ரொழித்தாங்**
**கொருநொடிப் போழ்தினின் மீளும்**
**வென்றிவாள் வீம னுற்றதும் நிருதன்**
**வெருள்வதும் விசும்பிடைக் கண்டான்.**

[என்று இ ஆறு உரைத்து சரத்தின் மா மாரி இருவரும் விரை வுடன் ஏவ, கன்றி வாள் அரக்கன் கனம் என அதிர்ந்து, கண் சிவந்து உருத்து எழும் எல்லை, ஒன்றி வாழ் மறையோர் அரு துயர் ஒழித்து ஆங்கு ஒரு நொடி போழ்தினில் மீளும் வென்றி வாள் வீமன், உற்றதும் நிருதன் வெருள்வதும் விசும்பிடை கண்டான்.]

**விளக்கம் :-** கன்றி - மனம் கொதித்து, கனம் - மேகம். அதிர்ந்து - உருமிக்கொண்டு. உருத்து எழும் எல்லை - (அரக்கன்) சினந்து போர் எழும் சமயம். உற்றதும் - நிகழ்ந்ததும். வெகுள்வதும் —(வானிடத்து அரக்கன்) சீறுவதும். அந்த சமயம் முனிவர் குறை தீர்த்து அவண் வந்த வீமன், விஷயத்தை அறிந்தான், என்பதாம்.

**11. கண்டன னிரண்டு கண்களுங் கருத்துங்**
**கனன்றுசெந் தீச்சுடர் காலக்**
**கொண்டவெஞ் சினத்தீக் கதுவியெண் டிசையுங்**
**குலைகுலைந் துடன்வெரூஉக் கொள்ள**
**அண்டமுங் குலுங்க நகைத்தெதிர்ந் துரப்பி**
**யாத்தன னழன்றுதோள் கொட்டி**
**மண்டிமே னடந்தா னுகாந்தகா லத்து**
**மருத்தென மருத்தின்மா மைந்தன்.**

[கண்டனன் இரண்டு கண்களும் கருத்தும் கனன்று செம் தீ சுடர் கால, கொண்ட வெம் சினம் தீ கதுவி எண் திசையும் குலை குலைந்து உடன் வெரூஉ கொள்ள, அண்டமும் குலுங்க நகைத்து எதிர்ந்து உரப்பி ஆர்த்தனன் அழன்று தோள் கொட்டி, மண்டி மேல் நடந்தான், உகாந்த காலத்து மருத்து', என மருத்தின் மைந்தன்.]

**விளக்கம் :-** கண்களும் கருத்தும் - கண்களும் மனமும். குலை குலைந்து வெரூஉ கொள்ள - நடு நடுங்கிப் பயம் கொள்ள. உரப்பி ஆர்த்தனன்—(பகைவனை) அதட்டி போர் முழக்கஞ் செய்தனன். மருத்துவின் (வாயுவின்) சிறந்த மைந்தனான வீமன் யுகாந்த காலத்துக் காற்றுப்போல், அரக்கன் மேல் நெருங்கினான்,- என்பது ஈற்றடியின் பொருள். திசை - எட்டுத் திக்கிலும் உள்ள மக்களும், பிராணிகளும். வெரூஉ, அளபெடை.

## சடாசுரன் வதம்

**12. பகன்விற லிடிம்பன் பண்பில்புண் டரீக**
**னிவருயிர் பறித்தள கேசன்**
**நகரிடை யரக்கர் யாரையுஞ் சேர**
**நல்லுயி ரொல்லையிற் செகுத்து**
**வகைபட மறலி யுடனுற வாக்கி**
**வானுல களித்தன னின்ற**
**சிகையுன துயிரு மிக்கணத் தளிப்பன்**
**றென்புலக் கிழவனுக் கென்றான்.**

[பகன், விறல் இடிம்பன், பண்பு இல் புண்டரீகன், இவர் உயிர் பறித்து அளகேசன் நகரிடை அரக்கர் யாவரையும் சேர நல் உயிர் ஒல்லையில் செகுத்து, வகைபட மறலியுடன் உறவு ஆக்கி, வான் உலகு அளித்தனன்; நின்ற சிகை உனது உயிரும் இ கணத்து அளிப்பன், தென்புலம் கிழவனுக்கு, என்றான்.]

**விளக்கம் :-** பகன் - பகாசுரன். சேர ஒல்லையில் - ஒரு சேர விரைவில். வகைபட - முறையாக. வானுலகு அளித்தல் - வீர சுவர்க்கம் அளித்தல். நின்ற - பாக்கியாய் நின்ற. சிகை - பிசிர். ஒன்று வாங்குகையில் விலைக்குரிய பொருள் கொண்டபின், சிறிது பொருளை இனாமாகப் பெறுவதை **பிசிர்**, என்பர். அந்தப் பிசிர் போன்ற (உனது உயிர்) என்று சிகைக்குப் பொருள் கொள்ளலாம். அல்லது அரக்கர் கூட்டத்தின் சிகை (நுனி) போன்ற உனது உயிர் என்றும் பொருள் கொள்ளலாம். சடாசுரனை நோக்கி, அரக்கர் கூட்டத்தின் பிசிர் அல்லது நுனி போன்ற உன் உயிரை அழிப்பேன். என்று வீமன் கூறினான், என்க. தென்புலக் கிழவன் - எமன்.

**13. நெடும்பணைப் பொருவின் மராமர மொன்று**
**நெறியிடை நேர்ந்ததங் கதனைப்**
**பிடுங்கினன் விசும்பி லெறிந்தவன் றன்னைப்**
**பிளந்தனன் பிளந்தவப் பொழுதில்**
**அடும்படைத் தடக்கை யரக்கனுந் திருகி**
**யணங்கைவிட் டக்கணத்த ழன்று**
**படும்பணைக் குன்ற மொன்றுவே ரோடும்**
**பறித்தவன் மேற்பட வெறிந்தான்.**

[நெடு பணை பொருவு இல் மராமரம் ஒன்று நெறியிடை நேர்ந்தது, அங்கு அதனை பிடுங்கினன் விசும்பில் எறிந்து அவன் தன்னை பிளந்தனன், பிளந்த அ பொழுதில் அடும் படை தடக்கை அரக்கனும் திருகி, அணங்கை விட்டு அ கணத்து அழன்று படும் பணை குன்றம் ஒன்று வேரொடும் பறித்து அவன் மேல் பட எறிந்தான்.]

**விளக்கம் :-** பணை - கிளை. நெறியிடை நேர்ந்தது - பாதையில் எதிர்ப்பட்டதாக. வீமன் அம் மரத்தைப் பிடுங்கி வானிடத்தே எறிந்து அரக்கனைத் தாக்கினான்; அடியுண்ட அரக்கன் மனம் மாறிப் பாஞ்சாலியை விட்டுவிட்டு, எதிரிலே பட்ட பெரிய குன்றை வேரோடு பறித்து வீமன் மேல் எறிந்தான்,—என்பதாம். திருகி - மனம் மாறி. படும் பணைக்குன்று - (அங்கே கண்ணில்) பட்ட பெரிய குன்று. அணங்கு - தெய்வப்பெண், திரௌபதை.

**14. விட்டகுன் றினைத்தன் மேற்படா வண்ணம்**
**விசும்பிடைப் பொடிபடக் கதையால்**
**தொட்டனன் பின்னும் விசும்பினின் றவன்றன்**
**றோளிணை யொசிதரத் தாவிக்**
**கட்டினன் குறங்கைக் குறங்கினால் வீசிக்**
**கம்பமுற் றகிலமுங் கலங்கக்**
**கிட்டினன் றலத்தின் மிசையட லரக்கன்**
**கீழ்ப்பட மேற்பட விழுந்தான்.**

[விட்ட குன்றினை தன்மேல் படாவண்ணம் விசும்பிடை பொடிபட கதையால் தொட்டனன், பின்னும் விசும்பில் நின்றவன் தன் தோள் இணை ஒசிதர தாவி கட்டினன், குறங்கை குறங்கினால் வீசி கம்பமுற்று அகிலமும் கலங்க கிட்டினன், தலத்தின் மிசை அடல் அரக்கன் கீழ் பட (தான்) மேல் பட விழுந்தான்.]

**விளக்கம் :-** அரக்கன் ஏவிய குன்றை வீமன் கதையால் பொடி செய்து, விசும்பின் நின்ற அவன்மேல் தாவிப் பிடித்து, குறங்கினை (தொடையை) குறங்கினால் தாக்கி மண்மேல் அவனை வீழ்த்தி, அவன்மேல் வீமன் விழுந்தான், என்பதாம். ஒசிதர - ஒடிய. வீசி - தாக்கி. போரின் அதிர்ச்சியால் அகிலம் நடுங்கிக் கலங்கியது, என்க.

**15.** **முன்னம்வா ளெயிற்றோ ரரக்கனை வெள்ளி**
**மால்வரை முனிந்ததென் றதற்குப்**
**பொன்னின்மால் வரையோ ரரக்கனைத் தானும்**
**புவிப்படுத் தரைப்பதே போலக்**
**கன்னம்வாய் நெரியக் கரங்களான் மலக்கிக்**
**கழுத்தையும் புறத்தினிற் றிருப்பித்**
**துன்னுதோ ளிணையுந் தாளும்வன் னெஞ்சுஞ்**
**சுளிதரத் தாளினாற் றுகைத்தான்.**

[முன்னம் வாள் எயிற்று அரக்கனை வெள்ளி மால் வரை முனிந்தது என்று, அதற்கு பொன்னின் மால் வரை ஓர் அரக்கனை தானும் புவி படுத்து அரைப்பதே போல, கன்னம் வாய் நெரிய கரங்களால் மலக்கி, கழுத்தையும் புறத்தினில் திருப்பி, துன்னு தோள் இணையும் தாளும் வல்நெஞ்சும் சுளிதர தாளினால் துகைத்தான்.]

**விளக்கம் :-** முன்னொரு காலத்தில் கோர கூரிய தந்தங்களை உடைய அரக்கனாகிய இராவணனைக் கயிலையங்கிரி அழுத்தியது, என்று, அதற்குப் போட்டியாகப் பொன்மயமான மேருமலை ஓர் அரக்கனை, தானும் பூமியில் கிடத்தி அரைப்பதுபோல, வீமன், சடாசுரனது கன்னமும் வாயும் நெரியலுறும்படி தனது கைகளால் தாக்கி வருத்தி, கழுத்தையும் பின் புறமாய்த் திருப்பி, வலிமை பொருந்திய தோள்களும், தாள்களும், வலிய மார்பும் ஒடியும்படி, தனது கால்களினால் மிதித்துத் துகைத்தான்,—என்பது பொருள். வீமன் செந்நிறமுடையவன். எனவே, மேருமலை உவமையாயிற்று. நெஞ்சு - (ஆகுபெயர்) மார்பு.

**16.** **விழுந்தவா ளரக்கன் றருக்குநெஞ் சொடிந்து**
**வெகுண்டிவன் தனைத்தளி மீண்டும்**
**எழுந்துதோள் கொட்டி யார்த்தழன் றுருமே**
**றெனக்கொதித் திடுதலும் வீமன்**

**அழுந்தவெவ் விரலாற் பிடித்தவ னகலத்**
**தடிகொடு மிதித்துவெண் பிறையின்**
**கொழுந்துபோ லெயிறோ ரிரண்டையுங் கஞ்சன்**
**குஞ்சர மெனப்பிடுங் கினனால்.**

*[விழுந்த வாள் அரக்கன் தருக்கு நெஞ்சு ஒடிந்து வெகுண்டு இவன் தனை த(ள்)ளி மீண்டும் எழுந்து தோள் கொட்டி ஆர்த்து அழன்று உரும் ஏறு என கொதித்திடுதலும், வீமன், அழுந்த வெவ் விரலால் பிடித்து அவன் அகலத்து அடிகொடு மிதித்து, வெள்பிறையின் கொழுந்து போல் எயிறு ஓர் இரண்டையும், கஞ்சன் குஞ்சரம் என பிடுங்கினான்.]*

**விளக்கம் :-** வீமனால் கீழே தள்ளப் பெற்றதால் செருக்கு அழிந்த அரக்கன், வீமனைக் கீழே தள்ளி எழுந்து நின்று தோள் கொட்டி வீரமுழக்கம் செய்து, உள்ளக் கொதிப்புடன் நின்ற அளவில், வீமன் அவனைக் கொடிய கை விரல்களால் உடல் அழுந்தலுறும்படி பற்றி, மார்பில் அடி கொண்டு துகைத்து, பிறைச்சந்திரனது கொழுந்து போன்ற அவனது கோரப் பற்களை, கம்சனால் ஏவப்பெற்ற குவலயா பீடம் என்னும் யானையின் தந்தங்களைக் கண்ணன் பறித்ததுபோல், பிடுங்கினான்,—என்பது பொருள். உரும் ஏறு - பேரிடி. அகலம் - மார்பு. அடிகொடு - கால்களைக் கொண்டு. குஞ்சரம் - யானை.

**17. புலவுகால் வயிர வாளெயி றிரண்டு**
**முதலொடும் போனவா ணிருதன்**
**நிலவிலா நிசியு மின்னிலா விடிகொ**
**ணீலமா முகிலையு நிகர்த்தான்**
**குலவுதோள் வாயு குமரன்மேன் மீளக்**
**கொதித்தெழுந் திருகரங் கொண்டு**
**மலையின்மே லுருமுற் றென்னமற் றவன்றன்**
**மார்பகஞ் சுழிதரப் புடைத்தான்.**

*[புலவு கால் வயிரம் வாள் எயிறு இரண்டு முதலோடும் போன வாள் நிருதன், நிலவு இலா நிசியும், மின் இலா இடி கொள் நீலம் மா முகிலையும் நிகர்த்தான் ; குலவு தோள் வாயு குமரன் மேல் மீள கொதித்து எழுந்து இரு கரம் கொண்டு, மலையின்மேல் உரும் உற்றென்ன, மற்று அவன் தன் மார்பகம் சுழிதர புடைத்தான்.]*

**விளக்கம் :-** புலவு கால் வயிரம் வாள் எயிறு - புலால் நாற்றம் வீசும் வயிரம் பாய்ந்த (உறுதியான) கூரிய கோரப் பற்கள். (கோரப் பற்கள் பறிக்கப்பெற்ற நிருதன்) நிலவு இல்லாத இரவையும், மின்னல் இல்லாது இடிக்கும் நீல நிறமான மேகத்தையும் ஒத்தான் (ஆகி),—என்பது இரண்டாவது அடியின் பொருள். (அத்தகையனான சடாசுரன்) மறுபடியும் கொதித்து எழுந்து, (அவனது) இரு கரங்களையுங் கொண்டு மலையின்மேல் இடி விழுந்தாற்போல், வலிமையின் விளக்கமுடைய தோள்களைக் கொண்ட

வீமன் மேல், அவனது மார்பு சுழி படும்படி அடித்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். மற்று அசை. நிசியும் முகிலும் அரக்கனது கருமை நிறத்திற்கும், நிலவும் மின்னலும், அவனது கோரப் பற்களுக்கும் உவமையாயின. பற்களை இழந்த அரக்கனது வீர கர்ச்சனை, மின்னல் இல்லாத இடி எனப்பட்டது.

**18.** **முட்டியால் வஞ்ச மூர்க்கனுஞ் சமர**
**மொய்ம்பனு முறைமுறை யாக**
**மட்டியே முதலா வுள்ளமற் றொழிலின்**
**வல்லன வல்லன புரிந்து**
**கட்டியே குறங்கு குறங்குடன் பகைப்பக்**
**கரங்கரத் தொடுநனி பிணங்க**
**ஒட்டியே முடுகி யொருவருக் கொருவ**
**ருரத்துடன் மோதினா ருரவோர்.**

[முட்டியால் (முஷ்டியால்) வஞ்சம் மூர்க்கனும் சமரம் மொய்ம்பனும் முறை முறை ஆக, மட்டியே முதல் ஆ உள்ள மல் தொழிலின் வல்லன வல்லன புரிந்து, கட்டியே குறங்கு குறங்குடன் பகைப்ப, கரம் கரத்தொடு நனி பிணங்க, ஒட்டியே முடுகி ஒருவருக்கு ஒருவர் உரத்துடன் மோதினார் உரவோர்.]

**விளக்கம் :-** சமர மொய்ம்பன் - போராற்றல் மிக்க வீமன், முறை முறை - மாறிமாறி. மட்டி - மண்டலிக்கை. அதாவது சாரி சுற்றல். இது மல்யுத்த வகைகளில் ஒன்று. வல்லன வல்லன புரிந்து - தாங்கள் சிறப்பாகச் செய்யவல்ல போர்த் தொழிலின் விதங்களைச் செய்து. பிணங்க - மாறுபட, நெருங்க. ஒட்டி - வீரவாதம் செய்து, அல்லது நெருங்கி, ஒருவரும் சலியாமல் மாறி மாறி மல் யுத்தம் செய்தார்கள்,—என்க.

**19.** **முருக்கிவெஞ் சமர மிவ்வகை வெம்போர்**
**மொய்ம்பனீ டுயர்முழந் தாளால்**
**அரக்கனை யகலத் தழுக்கியிட் டவன்ற**
**னவயவ மியாவையு மொன்றாச்**
**சுருக்கியந் தரத்திற் சுழற்றின னெறிந்தான்**
**றொடுகழ லிராகவன் முன்னம்**
**குரக்குநா யகன்முன் விரலினாற் றெறித்த**
**குன்றெனச் சிந்திவீழ்ந் திடவே.**

[முருக்கி வெம் சமரம் இ வகை வெம்போர் மொய்ம்பன் நீடு உயர் முழந்தாளால் அரக்கனை அகலத்து அமுக்கியிட்டு, அவன் தன் அவயவம் யாவையும் ஒன்றா சுருக்கி அந்தரத்தில் சுழற்றினன் எறிந்தான் ; தொடு கழல் இராகவன் முன்னம் குரக்கு நாயகன் முன் விரலினால் தெறித்த குன்று என சிந்தி வீழ்ந்திடவே.]

**விளக்கம் :-** இவ்வகை வெம் சமரம் முருக்கி - இந்த விதமாகக் கொடிய போரை அரக்கனுக்கு வலி அழிவு உண்டாகும்படி செய்து. வெம் போர் மொய்ம்பன் - வீமன். அவன், அரக்கனது மார்பைத் தனது நீண்டு வலியால் மிகுந்த முழந்தாளால் அழுத்தி, தலையும் காலுமாகிய யாவையும் ஒன்றாகும்படி சுருக்கி (வளைத்து), இராமபிரானது வலிமையைச் சோதிக்க நினைத்த குரங்கின் தலைவனான சுக்ரீவன் பொருட்டுத் துந்துபி என்ற அசுரனது மலை போன்ற எலும்புக் கூட்டை, கால் விரலால் எற்றிச் சிதறச் செய்ததுபோல், சிதறி விழுந்திட ஆகாசத்தில் சுழற்றி வீசினான், — என்பதாம்.

**20. எறிந்தவா ளரக்கன் விசும்பின தெல்லை**
**யெவ்வள வவ்வள வும் போய்**
**மறிந்தமால் வரைபோன் மீளவும் புவிமேன்**
**மாசுண நடுங்குற வீழ்ந்து**
**செறிந்தபே ருடலு மாவியுஞ் சிந்தத்**
**தென்புலத் திமைப்பினிற் சென்றான்**
**அறந்துறந் தென்று மடாதன செய்தா**
**லார்கொலோ படாதன படாதார்.**

[எறிந்த வாள் அரக்கன் விசும்பினது எல்லை எவ்வளவு அ அளவும் போய், மறிந்த மால்வரைபோல், மீளவும் புவிமேல் மாசுணம் நடுங்குற வீழ்ந்து, செறிந்த பேர் உடலும் ஆவியும் சிந்த தென் புலத்து இமைப்பினில் சென்றான்; அறம் துறந்து என்றும் அடாதன செய்தால் ஆர் கொல் (ஓ) படாதான படாதார்.]

**விளக்கம் :-** மறிந்த மால்வரை - இந்திரனால் சிறகு அறுக்கப்பெற்று விழுந்த பெரிய மலை. மாசுணம் - பாம்பு, இங்கே ஆதி சேஷன். வான் நோக்கி வீசப்பட்ட அரக்கன் வானின் எல்லை அளவு சென்று ஆதிசேஷன் நடுங்கும்படி தரை வீழ்ந்து, ஆவியும் உடலும் சிதறி அழிந்து எமன் உலகம் சொன்றான்;— என்பது முதல் மூன்று அடிகளின் பொருள். தகாதன செய்தால் தாங்க முடியாத கஷ்டங்களை அடையாதவர் ஆர், எவரும் இல்லை என்றபடி. அடாதன செய்பவர் படாதன படுவர் என்ற முதுமொழிக்கு ஏற்ப, அரக்கன் அழிதலை உற்றான், என்ற கருத்துடைய இச் செய்யுள் வேற்றுப் பொருள் வைப்பின்பாற்படும்.

கலி விருத்தம்

**21. வாளரவ முண்டுமிழும் வாண்மதியும் வஞ்சக்**
**கோளுழுவை கொள்ளவிடர் கொண்டுகுலை குலையா**
**நாள்வலியி னுய்ந்தமட நவ்வியுநி கர்த்தாள்**
**காளவிட முண்டமுத டக்குமிரு கண்ணாள்.**

[வாள் அரவம் உண்டு உமிழும் வாள் மதியும், வஞ்சம் கோள் உழுவை கொள்ள இடர் கொண்டு குலை குலையா, நாள் வலியின்

உய்ந்த மடம் நவ்வியும் நிகர்த்தாள், காளவிடம் உண்டு அமுது அடக்கும் இரு கண்ணாள்.]

**விளக்கம் :-** அரக்கனிடமிருந்து மீண்ட திரௌபதியின் வருணனை ஆகும் இது. கேது என்னும் பாம்பினால் உண்டு உமிழப்பெற்ற சந்திரனையும், வஞ்சனையை உடைய கொல்லும் தன்மையுள்ள புலியால் பற்றப்பெற்றதால் துன்பம் அடைந்து மிக நடுங்கி, ஆயுள் பலத்தால் உயிர் தப்பிய இளமானையும் திரௌபதி நிகர்த்தாள், என்பதாம். காளவிடம் - காலகூட விஷம். விஷத்தை உட்கொண்டு, அதோடு அமிர்தத்தையும் தன்னிடத்தே கொண்ட இரு கண்களை உடைய திரௌபதி, என்பது ஈற்றடியின் பொருள். அரக்கனுக்கு அரவமும் கோள் உழுவையும், திரௌபதிக்குச் சந்திரனும், மானும் உவமை. கோள் என்பது, உயிர் கொள்ளும் தன்மை, என்ற பொருளது. கருவிழி, விஷம்; அதைச் சுற்றியுள்ள வெண்ணிறப் பகுதி அமுதம். கோள் உழுவை - கொல்லுந் தன்மையுடைய புலி.

**22. அடாதுசெய்ச டாசுரன தாவியையு மம்பொற்**
**படாமுலைக டாமுடைய பைந்தொடியை யும்போய்த்**
**தடாவமர்வி டாதுடைய தம்பியரை யுங்கொண்(டு)**
**இடாவிறல்கொண் மாருதி யிருக்கும்வன முற்றான்.**

[அடாது செய் சடாசுரனது ஆவியையும், அம் பொன் படாம் முலைகள் தாம் உடைய பைந்தொடியையும், போய் தடா அமர் விடாது உடைய தம்பியரையும் கொண்டிடா, விறல் கொள் மாருதி இருக்கும் வனம் உற்றான்.]

**விளக்கம் :-** அடாது - (சாதியொருமை) அடாதன, தகாதன. அதாவது பிறர் மனை விழைதல் முதலிய தீமைகள். அம் பொன் படா முலை (தாம்) உடைய பைங்கொடி - அழகிய பொன் அணிகளையும் கச்சையும் அணிந்த முலைகளை உடைய திரௌபதி. போய் - அரக்கனை எதிர்த்துச் சென்று. தடா அமர் விடாது உடைய தம்பியர் - பிறரால் தடுக்க ஒண்ணாத போரைத் தொடர்ந்து செய்த நகுல சகதேவர். கொண்டிடா - அழைத்துக் கொண்டு. விறல் கொள் மாருதி - ஆற்றல் கொண்ட வீமன். வீமன், திரௌபதியையும், அரக்கனை எதிர்த்துப் போர் செய்த தம்பியரிருவரையும் அழைத்துக்கொண்டு தாம் வசிக்கும் கானகத்தை அடைந்தான்,— என்பதாம், தாம் : அசை.

## பாண்டவர் இடம் பெயர்தல்

**23. உற்றபடி தம்முனிரு தாடொழுது ரைத்தான்**
**மற்றவனு மங்குறையு மாமுனிவ ரேரடும்**
**கொற்றமிகு தம்பிய ரொடுங்குழுமி யன்றே**
**நற்றபதி நாரணன தாச்சிரம நண்ணி.**

[உற்றபடி தம் முன் இரு தாள் தொழுது உரைத்தான், மற்று அவனும் அங்கு உறையும் மா முனிவரோடும் கொற்றம் மிகு தம்பியரொடும் குழுமி, அன்றே, நல் தபதி நாரணனது ஆச்சிரமம் நண்ணி, —அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** தபதி - தபஸ்வி (வடமொழித் திரிபு), நிகழ்ந்ததை வீமன் தன் தமையனான தருமனுக்குச் சொல்ல, அவனும் (தருமனும்) அன்றே தம்பியரோடும், தன்னொடு இருந்த முனிவர்களோடும் கூடி நல்ல தபஸ்வியான நாராயண முனிவரது இருப்பிடமான பதரிகாசிரமத்தை அடைந்தான்,— என்பதாம். மற்று : வினை மாற்று, அசையுமாம்.

**24. அங்கவன் மலர்ப்பதம் வணங்கியருள் பெற்றுக்**
**கங்கைவள நாடர்கலை தேர்முனிவ ரோடும்**
**தங்கினர்கள் சிற்சில்பக றங்கியபி னப்பால்**
**சிங்கமென வெண்ணில்வரை சேர்நெறிகள் சென்றார்,**

[அங்கு அவன் மலர் பதம் வணங்கி அருள் பெற்று, கங்கை வளம் நாடர் கலை தேர் முனிவரோடும் தங்கினர்கள் சிற்சில் பகல் (சில சில பகல்) ; தங்கிய பின், அப்பால் சிங்கம் என எண் இல் வரை சேர் நெறிகள் சென்றனர்.]

**விளக்கம் :-** கங்கை வளநாடர் - பாண்டவர். கலைதேர் முனிவர் - வேதாதி நூல்களை அறிந்த முனிவர். எண் இல் வரை சேர் நெறி - மிகப் பல மலைகளைக்கொண்ட பாதை. பாண்டவர் நாராயண முனிவனை வணங்கி, அவனது ஆசி பெற்று, அங்கே சில தினங்கள் தங்களோடு இருந்து வாழும் கலை தெரி முனி கணங்களோடு தங்கியிருந்து, அதன் பின் மலை வழியே சிங்கம் என சென்றார்கள், என்பது பொருள். தங்கினர்கள், விகுதிமேல் விகுதி.

**25. ஏணில்வரை மார்பரிமை யோர்புகழு மெட்டுக்**
**கோணுடைய மாமுனிவ னங்குறுகி யன்னான்**
**மாணுடைம லர்ப்பதம்வ ணங்கினர்து தித்தார்**
**தாணுவனை யானுமவர் தம்மையெதிர் கொண்டான்.**

[ஏண் இல் வரை மார்பர் இமையோர் புகழும் எட்டு கோண் உடை முனி வனம் குறுகி, அன்னான் மாண் உடை மலர் பதம் வணங்கினர் துதித்தார், தாணு அனையானும் அவர் தம்மை எதிர் கொண்டான்.]

**விளக்கம் :-** ஏண் - வலிமை. இல் - இருப்பிடம். எட்டு கோண் உடை மா முனி - உடம்பில் எட்டுக் கோணல்களை உடைய சிறந்த அஷ்டகோண முனிவன். மாண் உடை மலர் பதம் - மகிமை உடைய மலர் போன்ற திருவடிகள். தாணு - சிவபெருமான். பாண்டவர், சிவபெருமானை ஒத்த அஷ்ட

கோண முனிவனது வனம் சென்று, அவனை வணங்க, அவனும் அவர்களை எதிர்கொண்டு ஏற்று உபசரித்தான்,—என்பதாம்.

**26. அன்பொடொரு நாளென வனந்தநெடு நாளங்(கு)**
**இன்பமொடி ருந்தனர்க ளெக்கதையுங் கேட்டாண்(டு)**
**ஒன்பதுக ழித்தனர்க ளிவ்வகையொ ருங்கே**
**பின்பவணி கழிந்ததொரு பெற்றியுரை செய்வார்.**

[அன்பொடு ஒருநாள் என அனந்தம் நெடு நாள் அங்கு இன்பமொடு இருந்தனர்கள் எ கதையும் கேட்டு ஆண்டு ஒன்பது கழித்தனர்கள் இ வகை ஒருங்கே, பின்பு அவண் நிகழ்ந்தது ஒரு பெற்றி உரை செய்வாம்.]

**விளக்கம் :-** அனந்தம் -எல்லையற்ற, மிக நீண்ட. அஷ்டகோண முனிவரது வனத்திலே பாண்டவர் நால்வரும் பலவிதமான புண்ணிய சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டு ஒன்பது வருஷங்களை அங்கே ஒரு நாளேபோல் இன்பமாகக் கழித்தனர். இவ்வாறு பாண்டவர் வாழ்ந்து வருகையில், அங்கே நடந்த ஒரு நிகழ்ச்சியின் வரலாற்றைக் கூறுவோம்,—என்பது பொருள்.

**சடாசுரன் வதைச் சருக்கம் முற்றும்.**

## 5. மணிமான் வதைச் சருக்கம்

மணிமான் என்ற விஞ்சயனை வீமன் வதைத்ததைக் கூறும் சருக்கம் இது. அவன் குபேரனது படைத்தலைவர்களில் சிறந்த ஒருவன்.

### கலிவிருத்தம்

**1. அங்கிவர மர்ந்துறையு நாளிலணி யோடும்**
**பொங்கியொரு மாநதிபு துப்புனல்வ ரப்போய்**
**மங்கைமுனி மங்கையர்க டங்களொடு வாசப்**
**பங்கயநெ டுந்துறைந றும்புனல்ப டிந்தாள்.**

[அங்கு இவர் அமர்ந்து உறையும் நாளில் அணியோடும், பொங்கி ஒரு மா நதி புது புனல் வர, போய் மங்கை முனி மங்கையர்கள் தங்களொடு வாசம் பங்கயம் நெடு துறை நறும் புனல் படிந்தாள்.]

**விளக்கம் ;-** அங்கு இவர் அமர்ந்து உறையும் நாளில், ஒரு மா நதி புது புனல் வர, போய் மங்கை முனி மங்கையர்கள் தங்களோடு போய், வாசம் பங்கயம்....படிந்தாள்,—என்பது அன்வயம். அணியோடும் பொங்கிவர-(புதுப்புனல்) அழகிய தோற்றத்தோடு பெருகிவர. வாசப் பங்கய நெடுந்துறை - வாசனையோடு கூடிய தாமரை மலர்களைக் கொண்ட நீர்த்துறை, அஷ்டகோண

முனிவரது வனத்திலே வாழ்ந்து வருகையில் ஒருநாள், நதியில் புதுப்புனல் வர, திரௌபதி முனி பத்தினிகளோடு அந்நதி சென்று நீராடினாள், என்பதாம். அமர்ந்து உறைதல் - பொருந்திய அமைதியோடு வசித்தல்.

**2. அப்புனலி லார்தரும ணங்கமழ வந்தண்**
**மெய்ப்பதும நாண்மலர்மி தந்துவர மீதே**
**மைப்பதும வாள் விழிம டந்தையது காணாக்**
**கைப்பதும நாண்மலரு றக்கடிதெ டுத்தாள்.**

*[அ புனலில் ஆர் தரு மணம் கமழ அம் தண் மெய் பதுமம் நாள் மலர் மிதந்துவர மீதே, மை பதுமம் வாள் விழி மடந்தை அது காணா, கை பதுமம் நாள் மலர் உற கடிது எடுத்தாள்.]*

**விளக்கம் :-** ஆர் தரு மணம் - நிறைந்த மணம். அம் தண் மெய் நாள் பதுமம் மலர் - அழகிய குளிர்ச்சி பொருந்திய உரு வத்தையுடைய புதிய தாமரை மலர். மீதே மிதந்துவர, எனக் கூட்டுக. மை பதுமம் வாள் விழி மடந்தை - மை தீட்டப்பெற்ற தாமரை போன்ற ஒளிவிளக்கத்தோடு கூடிய கண்களை உடைய திரௌபதி. கை நாள் பதுமம் மலர் உற கடிது எடுத்தாள் - கையாகிய புதிய தாமரை மலரில் பொருந்தும்படி விரைந்து (அம் மலரை) எடுத்தாள். காண - கண்டு, உடன்பாட்டுப் பொருளது. புதுப் புனலில் மிதந்து வந்த பதும மலரைத் திரௌ பதி எடுத்தாள், என்பதாம்.

**3. எடுத்தமலர் கைக்கொடொ ரிமைப்பின்ம யிலன்னாள்**
**அடுத்துவய மாருதியை யம்மலர வன்கைக்**
**கொடுத்திம்ம லரெங்குளது கூறுகென வமரில்**
**தொடுத்தவய வாகைபுனை தோன்றலிவை சொல்வான்.**

*[எடுத்த மலர் கை கொடு ஓர் இமைப்பின் மயில் அன்னாள் அடுத்து வய மாருதியை, அ மலர் அவன் கை கொடுத்து இ மலர் எங்கு உளது கூறுக என, அமரில் தொடுத்த வயம் வாகை புனை தோன்றல் இவை சொல்வான்.]*

**விளக்கம் :-** வய மாருதியை அடுத்து - வலிமையுடைய வீமனை அடைந்து. தொடுத்த...தோன்றல்—தொடுக்கப்பெற்ற வெற்றியின் அடையாளமான வாகை மலர்மாலை அணிந்த வீமன். எடுத்த மலரை வீமனிடம் கொடுத்து இம் மலர் எங்குளது, என்று வினவ, வீமன் பதில் மொழிவானாயினான்,—என்பதாம்.

**4. முன்புமுன்ம லர்க்குழற னக்கிமலர் முன்பால்**
**அன்புடனி யக்கர்பதி நின்றுமருள் செய்தேன்**
**இன்புறவி மைப்பொழுதி னின்றுமித ளிப்பேன்**
**துன்புறல ழற்கடவு டந்தொரு தோகாய்,**

[முன்பும் உன் மலர் குழல் தனக்கு இ மலர் முன்பால் அன்புடன் இயக்கர் பதி நின்றும் அருள் செய்தேன், இன்பு உற இமைப் பொழுதின் இன்றும் இது அளிப்பேன், துன்பு உறல், அழல் கடவுள் தந்தது ஒரு தோகாய்.]

**விளக்கம் :-** முன்பால் - வலிமையால். இயக்கர் பதிநின்றும்- இயக்கர் நகரமாகிய அளகையினின்றும். அருள் செய்தேன் - அன்போடு மலரைக் கொணர்ந்து கொடுத்தேன். அழல் கடவுள் தந்தது ஒரு தோகாய் - அக்கினிபகவான் தந்ததாகிய ஒரு மயில் போன்ற திரௌபதியே. முன்னொரு மலர் கொணர்ந்தது போல் இன்றும் இம்மலரை இப் பொழுதே கொணர்ந்து தருவேன்; துன்பம் உற வேண்டா, என்று வீமன், திரௌபதிக்குக் கூறினான், என்பதாம்.

**5. இந்தமல ரிந்திர புரத்தெனினு மின்றுன்**
**அந்தமில் கருங்குழ றனக்கருள் கிலனேல்**
**முந்தர வுயர்த்தவன் முதற்பகை முடிக்கும்**
**மைந்துடை யதன்றெனது வாகுகிரி யென்றான்.**

[இந்த மலர் இந்திரபுரத்து எனினும் இன்று உன் அந்தம் இல் கருங்குழல் தனக்கு அருள்கிலனேல், முந்து அரவு உயர்த்தவன் முதல் பகை முடிக்கும் மைந்து உடையது அன்று எனது வாகு கிரி என்றான்.]

**விளக்கம் :-** முந்து அரவு உயர்த்தவன் முதல் பகை - பழமையான பாம்பைக் கொடியிலே கொண்ட துரியோதனன் முதலான பகைவர். மைந்து - வலிமை. வாகுகிரி - புஜங்களாகிய மலைகள். இந்த மலரை, அது எங்கு இருப்பினும், உனக்குக் கொண்டுவந்து கொடுக்காமற் போவேனாயின், எனது இத் தோள்கள், துரியோதனாதியரை அழிக்கும் வலிமையுடையன அல்ல வாகும், என்று வீமன் சபதம் செய்தான், என்க.

**6. என்றினைய வாசக முரைத்திகலி னென்றும்**
**வென்றிதரு தண்டுசிலை கொண்டுவிற லோடும்**
**தன்துணைவ ரொன்றுமுண ராதபடி தானே**
**சென்றனனி டிம்பனை யடுந்திறலின் மிக்கான்.**

[என்று இனைய வாசகம் உரைத்து இகலின் என்றும் வெற்றி தரு தண்டு சிலை கொண்டு விறலோடும் தன் துணைவர் என்றும் உணராதபடி தானே சென்றனன், இடிம்பனை அடும் திறலில் மிக்கான்.]

**விளக்கம் :-** இகலின் - (இன் ஏழாம் வேற்றுமை உருபு) போரில். விறலோடும் - தனது ஆற்றலில் உள்ள நம்பிக்கையோடும். வீமன், தனது சகோதரர் அறியாதபடி மலர் கொணரத் தனியே சென்றான், என்பதாம். அடும், என்ற எதிர்காலம் குறிக்கும் பெயரெச்சம் கொன்ற, என்ற இறந்த காலப்பொருளது.

## வீமன் இரத்தினகிரி அடைதல்

**7. குன்றமொரி ரண்டவை யெனக்குலவு தோளான்
மன்றன்மலர் கொண்டுவரு மாநதியின் வழியே
சென்றுபல யோசனைக டிங்களொடு நாளும்
என்றும்வலம் வந்தரு ளிரத்நகிரி யெய்தி.**

[குன்றம் ஓர் இரண்டு (அவை) என குலவு தோளான் மன்றல் மலர் கொண்டு வரும் மா நதியின் வழியே சென்று பல யோசனைகள், திங்களோடு நாளும் என்றும் வலம் வந்தருள் இரத்நகிரி எய்தி,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** ஓர் குன்றம் இரண்டு என குலவு தோளான் - ஒப்பற்ற குன்றுகள் இரண்டு என்று சொல்லும்படியான வலிமை விளங்கும் தோள்களை உடைய வீமன். மன்றல் மலர் - வாசனை உடைய மலர். திங்கள் - சந்திரன். நாள் - சூரியன். வீமன், மலரை ஏந்தி வந்த ஆற்றின் வழியே பல யோசனை தூரம் நடந்து சென்று, சந்திர சூரியர்கள் வலம் வரும் இரத்நகிரி என்ற மலையை அடைந்து - என்பது பொருள். அவை, என்பது அசை; அல்லது சந்தம் நோக்கிய முதல் வேற்றுமைச் சொல் உருபு,

**8. மரகதம ணிப்பணிசெய் மாளிகைக ளொருசார்
அரிமணிய ழுத்தியன வாலயம தொருசார்
எரிமணிய ழுத்தியன வில்லின்வித மொருசார்
தருண மணி முத்தினிய லுஞ்சதன மொருசார்.**

[மரகதம் மணி பணி செய் மாளிகைகள் ஒருசார், அரிமணி அழுத்தியன ஆலயமது ஒரு சார், எரிமணி அழுத்தியன இல்லின் விதம் ஒரு சார், தருணம் மணி முத்தின் இயலும் சதனம் ஒரு சார்.]

**விளக்கம் :-** மரகதம் - பச்சை, அரிமணி - இந்திர நீலம். எரிமணி - நெருப்பைப் போன்ற செந்நிறமுள்ள இரத்தினம். தருணம் - புதுமை, இளமை. தருண மணி முத்து - ஒளி விசேஷ முடைய அழகிய முத்து. சதனம் - வீடு. இரத்தினகிரியை அடைந்த வீமன், அங்கே கண்ட புதுமைகளை, இதுவும் இதைத் தொடரும் நான்கு செய்யுள்களும் கூறும். மரகத மணிகளால் தொழில் செய்யப் பெற்ற மாளிகைகளையும், நீலமணியால் இழைக்கப்பெற்ற ஆலயங்களையும் மாணிக்கமணிகளால் இழைக்கப்பெற்ற பல்வேறு விதமான வீடுகளையும், சிறந்த அழகிய முத்துக்களால் அமைந்த பெரிய வீடுகளையும் (கண்டான்) என்பது பொருள். ஒரு சார் - ஒரு புறம். ஆலயம் - அது, பகுதிப் பொருள் விகுதி.

**9. கின்னரர்ப யிற்றுமெழு கீ தமெழு மொருசார்**
**மின்னனைய பாவையரும் விஞ்சையரு மொருசார்**
**அன்னநடை மங்கையரு மாரணரு மொருசார்**
**மன்னுமலி யக்கரும டந்தையரு மொருசார்.**

[கின்னரர் பயிற்றும் எழு கீதம் எழும் ஒரு சார், மின் அனைய பாவையரும் விஞ்சையரும் ஒரு சார், அன்னம் நடை மங்கையரும் ஆரணரும் ஒரு சார், மன்னும் மல் இயக்கரும் மடந்தையரும் ஒரு சார்.]

**விளக்கம் :-** கின்னரர் - தேவ சாதியரில் ஒருவகையினர்; கின்னரம் என்னும் வாத்தியத்தைக் கையிற் கொண்டு பாடுபவர் ஆதலால், கின்னரர் எனப்பட்டனர். எழு கீதம் - சப்த சுவரங்களோடு கூடிய இசை (ஒருபுறம் எழும்). விஞ்சையர் - வித்தியாதரர் (மாய வித்தையில் வல்லவர் அவர்). ஆரணர் - வேத வித்தகரான முனிவர். மன்னும் மல் இயக்கர் - பொருந்திய வலிமையுடைய இயக்கர். ஒரு புறம் கின்னரர் இசைக்கும் கீதம்; ஒரு புறம் விஞ்சையரும், அழகிய மங்கையரும் தேவ முனிவர்களும், இயக்கரும் அங்கே குழுமி இருந்தனர்,—என்பதாம்.

**10. சூலுடைய மந்தியயர் வுற்றதுயர் தீரக்**
**காலுடைநெ டுங்கடுவன் வார்கழைந றைத்தேன்**
**மாலைவரி வண்டிரிய மோதிவழை யிலையிற்**
**கோலியதன் வாயிடைகொ டுத்திடுவ தொருசார்.**

[சூல் உடைய மந்தி அயர்வுற்ற துயர் தீர, கால் உடை நெடு கடுவன் வார் கழை நறை தேன், மாலை வண்டு இரிய மோதி, வழை இலையில் கோலி, அதன் வாயிடை கொடுத்திடுவது ஒரு சார்.]

**விளக்கம் :-** சூல் உடைய மந்தி - கருக் கொண்ட பெண் குரங்கு. கால் உடைய நெடுங்கடுவன் - காலின் வலிமையுடைய பெரிய ஆண் குரங்கு. கழை - மூங்கில். மாலை - வரிசை. இரிய - கலைந்து ஓட, மோதி - தாக்கி, விரட்டி. வழை - சுரபுன்னை. கோலி - (தேனைப்) பிழிந்து எடுத்து. கொடுத்திடுவது - பருகக் கொடுப்பதாகும். சூல்கொண்ட பெண் குரங்கின் தளர்ச்சியால் எழுந்த துன்பம் தீரும் பொருட்டு ஆண் குரங்கு மூங்கிலிடத்தே கட்டப்பெற்ற தேன் கூட்டில் வரிசையாய் மொய்த்துக்கொண்டிருக்கும் வண்டுகளை விரட்டித் தேனைச் சுரபுன்னை இலையில் வடித்தெடுத்து, அப் பெண் குரங்கின் வாயில் பருகுமாறு கொடுத்திடும் காட்சி ஒரு புறம் (நிகழக் கண்டான்),—என்பதாம். நறை தேன் - நறுமணமுள்ள தேன்.

**11. கடக்கலுழி பாய்மத கதக்களிறு மந்தண்**
**மடப்பிடிக ளூர்ந்தமின் மணந்திடுவ தொருசார்**
**அடர்த்தறுகு மாளியு மதிர்ந்துமுழை தோறும்**
**புடைத்தெதிர்ம லைந்துமிகு போர்புரிவ தொருசார்.**

[கடம் கலுழி பாய் மதம் கதம் களிறு அம் தண் மட பிடிகளும் த(ம்)மில் மணந்திடுவது ஒரு சார், அடர்த்து அறுகும் ஆளியும் அதிர்ந்து முழை தோறும் புடைத்து எதிர் மலைந்து மிகுபோர் புரிவது ஒரு சார்.]

**விளக்கம் :-** கடம் - கன்னம். கலுழி - கலங்கல் நீர், கன்னத்திலிருந்து கலங்கலாய்ப் பெருகி வழிகின்ற மதத்தையும் சினத்தையும் உடைய ஆண் யானைகளும், அழகிய பொறுமையும் இளமையும் உடைய பெண் யானைகளும் தங்களுக்குள் மணம் புகுவது ஒரு புறமும், அறுகும் (புலியும்) ஆளியும் முழை தொறும் நெருங்கி ஒலி முழக்கம் செய்து தாக்கி எதிர்த்துப் போர் செய்வது ஒரு புறமும் (நிகழக் கண்டான்), என்பது பொருள். தண்மை - பொறுமை.

**12. தண்டரள மாதிநவ ரத்நவொளி தானே**
**எண்டிசைவி ளக்கும்வரை யின்புதுமை யெல்லாம்**
**கண்டுவகை கொண்டுநனி கண்ணிணைக ளித்தான்**
**புண்டரிக வாணிருத னைப்பொருத ழித்தான்.**

[தண் தரளம் ஆதி நவரத்ந ஒளி தானே எண் திசை விளக்கும் வரையின் புதுமை எல்லாம் கண்டு, உவகை கொண்டு நனி கண் இணை களித்தான், புண்டரிக(ன்) வாள் நிருதனை பொருது அழித்தான்]

**விளக்கம் :-** முத்து முதலிய நவரத்தினங்களின் ஒளியே எட்டுத் திக்குகளையும் விளங்கச் செய்யும் இரத்னகிரியின் புதுமைகளை எல்லாம், புண்டரிகன் என்னும் கொடிய அரக்கனைப் பொருது அழித்தவனான வீமன், கண்டு, மகிழ்ந்து, கண்கள் இரண்டும் களிக்கப்பெற்றான்,—என்பது பொருள்.

## வீமன் அளகை அடைதல்

**13. அக்கிரியி னின்றுமிழி வுற்றளவில் செல்வம்**
**மிக்கவள கேசனகர் வெய்தின்விரை வெய்தி**
**தொக்கமணி வாயிலொரு நாலுமொரு தானே**
**புக்குவட மேற்றிசையி னின்றிதுபு ரிந்தான்.**

[அ கிரியினின்றும் இழிவுற்று அளவு இல் செல்வம் மிக்க அளகேசன் நகர் வெய்தின் விரைவு எய்தி, தொக்க மணிவாயில் ஒரு நாலும் ஒரு தானே புக்கு வடமேல் திசையில் நின்று இது புரிந்தான்.]

**விளக்கம் :-** வீமன் அந்த இரத்னகிரியினின்று இறங்கி, அளவற்ற செல்வத்தை மிக உடைய குபேரனது நகரை அடைந்து, நெருங்கிய மணிகள் பதிக்கப்பெற்ற கோபுர வாயில்கள் நான்கிலும் தான் ஒருவனே புகுந்து அவற்றைக் கடந்து, வடமேற்குத் திசையில் நின்று, (இனிக் கூறப் போவதாகிய) இதனைச் செய்தான்,—என்பது பொருள்.

**14. சீர்த்தாரைக ளுதிரத்திசை மருவுங்கரி சிதறக்**
**கார்த்தாரைகள் கற்றாரைக ளுருமேறொடு கக்க**
**வார்த்தாழ்கட லுலையக்கதிர் மணிவெள்வளை வாய்வைத்(து)**
**ஆர்த்தானுக வந்தத்தெழு மடன்மாருத மனையான்.**

*[சீர் தாரைகள் உதிர, திசை மருவும் கரி சிதற, கார் தாரைகள் கல்தாரைகள் உரும் ஏறொடு கக்க, வார்தாழ் கடல் உலைய, கதிர் மணி வெள்வளை வாய் வைத்து ஆர்த்தான், உக அந்தத்து எழும் அடல் மாருதம் அனையான்.]*

**விளக்கம் :-** சீர் - சிறப்பு. தாரை - நட்சத்திரம். சிறப்பை உடைய நட்சத்திரங்கள் உதிரவும், திசைகளில் பொருந்திய யானைகள் நிலை குலையவும். மேக வரிசைகள், (நீரோடு) கல் மாரியைப் பேரிடியோடு பொழியவும், நீண்டதும் ஆழமுடையது மான கடல் கலங்கவும், ஒளிவிடும் அழகிய வெண்ணிறச் சங்கை வாயில் வைத்து (வீமன்) ஒலி எழுப்பினான், என்பது பொருள். உக அந்தத்து எழும் அடல் மாருதம் அனையான் - யுகமுடிவில் எழுந்து வீசும் வலிய காற்றை ஒத்தவனான வீமன்.

**5. அந்தத்தம ரஞ்சென்றுய ரளகாபுரி யுறைவோர்**
**சிந்தைத்துய ருறமற்றவர் செவியிற்செறி வுறலும்**
**இந்தத்தொனி புரிவானிவ னெவனோவென வெவரும்**
**முந்திக்கரி பரிதேரிவை கொண்டேயுடன் மொய்த்தார்.**

*[அந்த தமரம் சென்று உயர் அளகாபுரி உறைவோர் சிந்தை துயர் உற (மற்று) அவர் செவியில் செறிவுறலும். இந்த தொனி புரிவான் இவன் எவனோ என எவரும், முந்தி கரி பரி தேர் இவை கொண்டே உடன் மொய்த்தார்.]*

**விளக்கம் :-** தமரம் - (சங்கின்) ஒலி. செறிவுறல் - சேர்தல். முந்தி - ஒருவருக்குமுன் ஒருவராய் முற்பட்டு. வீமனது சங்கொலி அளகை வாழ்வோர் துன்பம் அடையும்படி அவர் செவி சேரலும், ''இத் தொனி செய்பவன் யாவனோ ?'' என்று அயிர்த்து, நால் வகைப் படைகளுடனும் வந்து கூடினர்,—என்பது பொருள். மற்று அசை.

**16. அவ்வேலையி னொருவிஞ்சைய னஞ்சாவலி நெஞ்சன்**
**வெவ்வேலையின் மிகவோதைசெய் மீளிக்கெதிர் செல்லாக்**
**கைவேலின னிவனாமெனக் கண்டான்வெருக் கொண்டான்**
**வைவேனிரு தரின்வஞ்சமு மாமாயையும் வல்லான்.**

*[அ வேலையின் ஒரு விஞ்சையன் அஞ்சாவலி நெஞ்சன், வெவ் வேலையின் மிக ஓதை செய் மீளிக்கு எதிர் செல்லா, கை வேலினன் இவன் ஆம் என கண்டான், வெரு கொண்டான், வை வேல் நிருதரின் வஞ்சமும், மா மாயையும் வல்லான்.]*

**விளக்கம் :-** அவ்வேலை - அப்பொழுது. வெவ்வேலை - கொடிய சமுத்திரம். மீளி - வீரனான வீமன். எதிர் செல்லா (சென்று) கண்டான், கைவேலினன் இவன் ஆம் என வெருக் கொண்டான், என்று இயைக்க. கைவேலினன் - வேலைக் கையிலே உடைய முருகக் கடவுள். கூரிய வேலை உடைய அரக்கரின் வஞ்சனையிலும், பெரிய மாயத்தொழிலிலும் வல்லவன், என்பது ஈற்றடியின் பொருள். இத்தகையனான ஒரு விஞ்சையன், வீமனைக் கண்டு, இவன் முருகக் கடவுளோ, என்று அஞ்சினான், என்க.

**17. இம்மானவ னெழில்கூர்ரதி பதியைப்பொரு மெரிகண்**
**கைம்மானவ னருளுங்களி மயிலோனென முதனாள்**
**மைம்மான்விழி மொழியப்பொழில் வந்தோனெனக் கருதா**
**விம்மாதமர்க் குரையாடுது மெனவெய்தினின் மீண்டான்.**

[மானவன் எழில் கூர் ரதி பதியை பொரும் எரிகண் கை மான் அவன் அருளும் களிமயிலோன் என, முதல் நாள் மை மான் விழி மொழிய பொழில் வந்தோன் என கருதா, விம்மா, தமர்க்கு உரையாடுதும் என, வெய்தினின் மீண்டான்.]

**விளக்கம் :-** மானவன் - மனிதன் (வீமன்). எழில் கூர் ரதி பதி - அழகின் மிகுந்த ரதியின் கணவனான மன்மதன். பொரும் - அழித்த. எரிகண் - நெற்றிக்கண். கை மான் அவன் - இடக்கையில் மானை ஏந்திய சிவபிரான், அருளும் களி மயிலோன் - (சிவபிரான்) தந்த களிக்கும் மயிலை வாகனமாகக் கொண்ட முருகன். முதல் நாள் - இதன் முன் ஒரு நாள். மை மான் விழி - திரௌபதி. விம்மா - அஞ்சி நடுங்கி. தமர் - தன்னைச் சேர்ந்தவர். உரையாடுதும் - தெரிவிப்போம். வெய்தினின் - விரைவின். மனைவி விரும்ப, மலர் கொண்டு செல்வதற்கு முருகக் கடவுளைப்போல், இதன் முன் வந்து காவல் அரக்கரை அழித்தவன் என்று அறிந்து, தமரிடம் தெரிவிக்க, அவ் விஞ்சையன் விரைந்து சென்றான், என்க.

## மணிமான் என்பான் விஷயம் அறிதல்

**18. மேனாளொரு மலர்க்காரணம் விறல்வாணிரு தரைமேல்**
**வானாடர்த முலகத்துடன் மறலிக்கிடு மறவோன்**
**ஆனாமுனி வினன்மீளவு மணுகுற்றன னென்னச்**
**சேனாபதி மணிமானுழை வந்தேயுரை செய்தான்.**

[மேல் நாள் ஒரு மலர் காரணம் (ஆக) விறல் வாள் நிருதரை மேல் வானாடர்தம் உலகத்து அடல் மறலிக்கு இடும் மறவோன், ஆனா முனிவினன் மீளவும் அணுகுற்றனன், என்ன, சேனாபதி மணிமான் உழை வந்து (ஏ) உரை செய்தான்.]

**விளக்கம் :-** மேல் வானாடர் தம் உலகத்து - மேலேயுள்ள தேவலோகம் (வீர சுவர்க்கம்) சேரும்படி. ஆனாமுனிவினன் - தீராத கோபத்தை உடையவன். ''முன்னொரு நாள், ஒரு மலர் காரணமாக வந்து அரக்கர்களை அழித்த வீரன், நீங்காத கோபத்தையுடையவனாய் மீண்டும் இங்கே வந்துள்ளான்,'' என்று அவ் விஞ்சையன், குபேரனது சேனைத் தலைவனான மணிமான், என்பவனிடம் கூறினான்,—என்பதாம். ஆனாமை - தீராமை; நீங்காமை. அணுகுற்றான், என்பதிலுள்ள **உறு** துணை வினை.

**19.** **அவன்வந்திது பகராதமு னதிவேகமொ டழலாச்**
**சிவனண்பன துயிர்நண்பனும் விழிசெந்தழல் பொழிய**
**பவனன்றரு சிறுமானுட னவனோபடி முதலாம்**
**புவனந்தொழு பெருமானக ரிடைவந்திவை புரிவான்.**

[அவன் வந்து இது பகராத முன் அதிவேகமொடு அழலா, சிவன் நண்பனது உயிர் நண்பனும் விழி செம் தழல் பொழிய, பவனன் தரு சிறு மானுடன் அவனோ படி முதலாம் புவனம் தொழு பெருமான் நகரிடை வந்து இவை புரிவான்.]

**விளக்கம் :-** அவன் வந்து இது பகரா முன் சிவன் நண்பனது உயிர் நண்பனும், அதி வேகமொடு அழலா விழி செம்தழல் பொழிய, என்று கூட்டுக. அவ் விஞ்சையன் வந்து சொன்ன உடனே சிவபெருமான் நண்பனான குபேரனது உயிர் நண்பனாகிய மணி மான், அதிக உக்கிரத்துடன் மனம் கொதித்துக் கண்கள் நெருப் பைக் கக்க,—என்பது பொருள். பவனன்தரு சிறுமானுடன் - வாயு பகவான் தந்த சிறு மனிதன். படி - பூமி. படிமுதலாம் புவனம் - பூமி முதலிய எல்லா உலகங்கள். சிவபெருமானது நண்பனும் உலகங்கள் எல்லாம் தொழுகின்ற பெருமானுமாகிய குபேரனது நகர்வந்து ஒரு சிறு மானுடன், சங்கநாதம் செய்து போராரவாரம் செய்தலாகிய காரியங்களைச் செய்வதோ? என்று குபேரனது உயிர் நண்பனும் சேனைத் தலைவனுமான மணிமான் வியப்பதோடு மனங் கொதிப்பவனுமானான்,—என்க. முன்னொரு காலத்தில் குபேரன் கயிலையின் சாரலில் கடுந்தவம் புரிந்து சிவபெருமானது அருளையும் நட்பையும் பெற்றான், என்பது கதை.

**20.** **தும்பிக்குல மிரதத்தொகை துரகத்திரள் காலாள்**
**பம்பிப்பணை விதமோலிடப் பணியோலிட நடவா**
**நம்பிக்கினி யுரையாடல நாமேயவ னுடலம்**
**கம்பித்திடப் பொருதாவியுங் கவர்வோமெனக் கழறா.**

[தும்பி குலம், இரதம் தொகை, துரகம் திரள், காலாள் பம்பி, பணைவிதம் ஒலிட, பணி ஒலிட நடவா, நம்பிக்கு இனி உரை யாடலம், நாமே அவன் உடலம் கம்பித்திட பொருது ஆவியும் கவர்வோம், என கழறா,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம்** :- நம்பிக்கு இனி உரையாடலம், தும்பிக்குலம்... நாமே நடவா, அவன் உடலம் எனக் கழறா, என்று அன்வயிக்க. தும்பிக் குலம் - யானைக் கூட்டம். இரதத் தொகை - தேர்களின் கூட்டம். துரகத்திரள் - குதிரைக் கூட்டம், (காலாள் படை) பம்பி - நெருங்கி. பணைவிதம் ஒலிட - பலவித வாத்தியங்கள் முழங்க. பணி ஒலிட - பூமியைத் தாங்கும் நாகம் (பாரந் தாங் காமல்) ஒலியோடு பெருமுச்சுவிட. அவன் உடலம் கம்பித்திட - அவனது தேகம் நடுங்குதலைச் செய்ய. குபேரனுக்குத் தெரிவிக்கா மல் நாமே நால்வகைப் படையுடன் சென்று, அவனது உயிரைக் கவர்வோம், என்று மணிமான் சொல்ல,—என்க. ஒல் - ஒலி. உரையாடலம், தன்மை எதிர் மறைப் பொருளதான முற்றெச்சம்.

**21. பண்ணார்படை நஞ்சேனையின் பரவைக்கதி பதியர்**
**எண்ணாயிர மியக்கேசரு மிவன்மேலெழு கென்னத்**
**தண்ணார்மதிக் கவிகைத்திறற் சாலேந்திரன் முதலோர்**
**விண்ணாடரும் வெருவச்செருப் புரிவான்விரை வுற்றார்.**

[பண் ஆர் படை தம் சேனையின் பரவைக்கு அதிபதியர் எண்ணாயிரம் இயக்கேசரும் இவன்மேல் எழுக என்ன, தண் ஆர் மதி கவிகை திறல் சாலேந்திரன் முதலோர், விண் நாடரும் வெருவ, செரு புரிவான் விரைவுற்றார்.]

**விளக்கம்** :- பண் ஆர் படை - தகுதி நிறைந்த ஆயுதங்கள். பரவை - கடல். அதிபர் எண்ணாயிரம் இயக்கேசர் - படைத் தலைவர்களாகிய எண்ணாயிரம் இயக்க வீரர். தண் ஆர் மதி கவிகை திறல் சாலேந்திரன் - தண்மை பொருந்திய சந்திரன் போன்ற வெண் கொற்றக் குடையும் வலிமையும் உடைய சாலேந் திரன். இங்கே வந்த மனிதன் மேல் போரெழுக, என்று மணிமான் ஏவவும், சாலேந்திரன் முதலான இயக்கத்தலைவர்கள் நால்வகைப் படையோடும் தேவரும் அஞ்சும்படி போர் புரிவதற்கு விரைந்தார், என்பதாம். சாலேந்திரன் - மாயாஜாலங்களில் வல்லவனான இயக்கன்.

### இயக்கரோடு வீமன் பொரல்

**22 தாமப்புரி சையின்வாயிலெ ழுந்தானையின் வெள்ளம்**
**நேமிக்கிரி நெரியப்புரி நெடுவெள்ளநி கர்ப்பத்**
**தூமக்கனல் சொரிகண்ணின ரெண்ணாயிரர் தொலையாச்**
**சேமக்கவ சியர்வீமனைத் திரையாழியிற் சூழ்ந்தார்.**

[தாமம் புரிசையின் வாயில் எழும் தானையின் வெள்ளம் நேமி கிரி நெரிய புரி நெடு வெள்ளம் நிகர்ப்ப, தூமம் கனல் சொரி கண்ணினர் எண்ணாயிரர், தொலையா சேமம் கவசியர் வீமனை திரை ஆழியின் சூழ்ந்தார்.]

**விளக்கம் :-** தாமம் புரிசை - அலங்கார விளக்கமுடைய மதில், தானையின் வெள்ளம் - சேனையின் கூட்டம்- நேமிக்கிரி - சக்ரவாள மலை. நெரியபுரி - அழியச் செய்யும். நெடுவெள்ளம் - பிரளய காலக் கடல் வெள்ளம். தூமம் - புகை. தொலையா சேமக் கவசியர் - அழியாத கவசத்தைப் பூண்டவர். திரை ஆழி - சமுத்திரம். சக்ரவாள கிரியையும் அழிக்கும் பிரளயக்கடல் போன்ற சேனையோடு, புகையோடு கூடிய கனல் சொரியும் கண்ணினரும், அழியாத கவசம் பூண்டவருமான இயக்கத்தலைவர் எண்ணாயிரவர், சமுத்திரம் போல் வீமனை வளைத்துக்கொண்டனர்,— என்பதாம்.

**23. உதிக்குஞ்சுட ரோராயிர முருக்கொண்டென வொளிகூர்**
**விதிக்குஞ்சமர் தொலையாவிறல் விச்சாதரர் வெள்ளக்**
**கொதிக்குங்கட லிடைநின்றிடு குமரன்குரை கடன்முன்**
**மதிக்கும்படி நெடுமாலிடு மாமந்தர மொத்தான்.**

[உதிக்கும் சுடர் ஓர் ஆயிரம் உரு கொண்டென ஒளி கூர் விதிக்கும் சமர் தொலையா விறல் விச்சாதரர் வெள்ளம், கொதிக்கும் கடல் இடை நின்றிடு குமரன், குரை கடல் முன் மதிக்கும்படி நெடுமால் இடும் மந்தரம் ஒத்தான்.]

**விளக்கம் :-** உதிக்கும் சுடர் ஓராயிரம் உரு கொண்டென விதிக்கும் (பிரும்மனுக்கும்) சமர் தொலையாத ஒளிகூர் விச்சாதரர் (வித்யாதரர்) வெள்ளம், எனக் கூட்டுக. உதிக்கும் ஆயிரம் சூரியர்கள் வடிவம் கொண்டாற் போன்ற, பிரும்மனுக்கும் போரில் அழிதல் இல்லாத, தேக காந்தியை மிகுதியாக உடைய வித்யாதர வீரர்வெள்ளம் என்பது பொருள். (வித்யாதரர் சேனையாகிய) பொங்கி எழும் கடலின் மத்தியில் நின்ற வீமன், முன்னொரு காலத்தில், பாற்கடல் மதிக்கும்படி (கடையும்படி) நெடுமால் (திருமால்) இட்ட பெரிய மந்தர மலையை ஒத்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். மதித்தல் - கடைதல். முன், என்பதை ஏழாம் வேற்றுமை உருபாகவும் கொள்ளலாம்.

**24. ஊழ்வந்துத னெதிருந்தலு முயர்வானுல குறுவான்**
**சூழ்வந்தபெ ருஞ்சேனையைத் தொலையாவமர் பொருவான்**
**காழ்வந்தக தாபாணியுங் காணார்முனைக் கென்றும்**
**வீழ்வந்தகொ டுஞ்சாயகம் வின்னாணில் விசித்தான்.**

[ஊழ் வந்து தன் எதிர் உந்தலும், உயர் வான் உலகு உறுவான் சூழ்வந்த பெரு சேனையை தொலையா அமர் பொருவான் காழ் வந்த கதா பாணியும், காணார் முனைக்கு என்றும் வீழ்வந்த கொடு சாயகம் வில் நாணில் விசித்தான்.]

**விளக்கம் :-** ஊழ் - ஊழ்வினை. உறுவான் - சேரும் பொருட்டு. சூழ்வந்த - வளைத்துக்கொண்ட. தொலையா -

அழியும்படி (உடன் பாட்டுப் பொருளது) பொருவான் - பொரும் பொருட்டு. காழ்வந்த கதாபாணி - வயிரம் பாய்ந்த (உறுதி யுடைய) கதாபாணியான வீமன். காணார் - பகைவர் (நட்புடன் காணாதவர்). முனைக்கு - போர் முனைக்கு அல்லது போருக்கு. என்றும் - எப்பொழுதும். வீழ்வந்த சாயகம் - பகைவரின் வீழ்ச்சியை விளைத்தலைச் செய்து வந்த அம்புகள். விசித்தான் - செலுத்தினான். தன்னை வளைத்துக்கொண்ட பகைப் படையை அழிக்க வீமன் சரங்களை வில்லின் நாணிலிருந்து செலுத்தினான் என்பதாம். பகைவர் அழியப் போவதால், 'ஊழ் வந்து உந்த', என்றார்.

**25 அக்காலையில் விறலோனிலை யறிவானுய ரறிவால்**
**தக்கார்புகழ் சாலேந்திரன் றன்சேனையைத் தகையாக்**
**கைக்கார்முக வயமாருதி திருமுன்கடி தோடிப்**
**புக்கானொரு தேர்மேனனி யிவைநின்றுபு கன்றான்.**

[அ காலையில் விறலோன் நிலை அறிவான் உயர் அறிவால், தக்கார் புகழ் சாலேந்திரன் தன் சேனையை தகையா, கை கார்முகம் வய மாருதி திருமுன் கடிது ஓடி, புக்கான் ஒரு தேர் மேல் நனி இவை நின்று புகன்றான்.]

**விளக்கம்** :- அ காலையில், தக்கார் புகழ் சாலேந்திரன், விறலோன் நிலை உயர் அறிவால் அறிவான், தன் சேனையை தகையா, கை கார்முகம் வயமாருதி திருமுன், ஒரு தேர் மேல் கடிது ஓடி புக்கான், நின்று இவை நனி புகன்றான்,— என்பது அன்வயம். விறலோன் - வீமன். நிலை - அவனது மனநிலை, உயர் அறிவால் அறிவான் - தனது சிறந்த அறிவினால் அறியும் பொருட்டு. தகையா—(போர் செய்யாமல்) தடுத்து. மாருதி - வீமன், கடிது ஓடிப்புக்கான் - விரைந்து சென்று சேர்ந்தானாகி. நின்று - தேரில் இருந்துகொண்டு. இவை நனி புகன்றான்—(இனி வரும்) வார்த்தைகளை நன்றாகக் கூறினான். நனி, என்பதை நின்று என்பதோடும் கூட்டலாம். போருக்கு வந்த வீமனது மனநிலையை அறியும் பொருட்டுச் சாலேந்திரன், அவன் முன் வந்து இவ் வார்த்தைகளைக் கூறலானான்,—என்க.

**26. சிவனோதிசை முகனோவதிர் திரையாழியிற் றுயில்கூர்**
**பவனோபரு வரைமார்புறப் பகிருஞ்சுடர் வடிவேல்**
**அவனோதிற னரவாகன னளகாபுரி வருவோன்**
**எவனோவுன துயிர்சிந்துமுன் யார்நீயுரை என்றான்.**

[சிவனோ, திசைமுகனோ, அதிர் திரை ஆழியில் துயில் கூர்பவனோ, பருவரை மார்பு உற பகிரும் சுடர்வேல் அவனோ (வேலவனோ), திறல் நரவாகனன் அளகாபுரி வருவோன் எவனோ, உனது உயிர் சிந்தும் முன் யார் நீ? உரை என்றான்.]

**விளக்கம் :-** திசை முகன் - பிரும்மா. அதிர் திரை ஆழியில் துயில் கூர்பவன் - திருமால். பருவரை மார்புற பகிரும் சுடர் வடிவேலவன்-பருத்த கிரௌஞ்சகிரியின் நடுவிடத்தே பொருந்தும் படி வேல் ஏவிப் பிளக்கக் கூடிய வேலையுடைய முருகக் கடவுள். திறல் - ஆற்றல், பராக்ரமம். நரவாகனன் - நரனை வாகனமாக உடைய குபேரன், (குபேரனது வாகனம் **நரன்** என்ற பெயரினது.) நீ உயிரை இழக்குமுன், குபேரனது அளகை வந்த நீ யார்? என்று கூறுக, என்று சாலேந்திரன் வீமனை வினவினான், —என்பதாம்.

**27.** **என்னாவவ னுரையாடலு மிவனின்புற நகையா**
**முன்னாளொரு மலர்க்காரண முனைவோருயி ரெல்லாம்**
**பொன்னாடர்த முலகிற்புகப் பொருதோனிக லடுபோர்**
**மன்னாகவ மதியாவிறல் வயமாருதி யென்றான்.**

*[என்னா அவன் உரை ஆடலும் இவன் இன்பு உற நகையா, முன் நாள் ஒரு மலர் காரணம் (ஆக) முனைவோர் உயிர் எல்லாம் பொன் நாடர்தம் உலகில் புக பொருதோன், இகல் அடு போர் மன், ஆகவம் மதியா விறல் வய மாருதி என்றான்.]*

**விளக்கம் :-** முனைவோர் - எதிர்த்து வந்து போர் செய்தவர். பொன் நாடர் உலகு - வீர சுவர்க்கம். இகல் அடு போர் மன் - வலிய அழிக்கும் போரில் வல்ல அரசன். மன்ஆகவம்-பொருந்திய போர்க் களம், (பகைவர் தரும்) பொருந்திய போர். விறல் - வலிமை. மாருதி - வாயு குமாரனான வீமன். தன்னை இகழ்ந்து பேசிய சாலேந்திரனை அவமதித்தும், தன் திறமை தோன்றவும் வீமன் கூறிய பதில் இது. தன்னை அறியாத பகைவரிடத்திலும், போர் வென்றபோதும், தன்னைப் பழித்த காலையிலும், தன்னைப் புகழ்ந்து பேசல் வீரற்கு அமையும், என்பது மேலோர் கூற்று.

**28.** **மருவீசுபொ லந்தாமரை மலரின்னமு மொருகால்**
**தருவீரெனி லுமதாருயிர் யானுந்தரு குவனால்**
**பொருவீதெனில் யமனார்பதி புகுவீரினி யென்றான்**
**ஒருவீரரு முவமைக்கெதி ரில்லாவிற லுரவோன்.**

*[மரு வீசு பொலம் தாமரை மலர் இன்னம் ஒரு கால் தருவீர் எனில் உமது ஆருயிர் யானும் தருகுவன், (ஆல்), பொருவீர் எனில் யமனார் பதி புகுவீர் இனி என்றான், ஒரு வீரரும் உவமைக்கு எதிர் இல்லா விறல் உரவோன்.]*

**விளக்கம் :-** வாசனை வீசும் அழகிய தாமரை மலரை மீண்டும் தருவீராயின், நானும் உங்கள் உயிர் தருவேன்; மற்று, நீங்கள் பொருவீராயின், எமனுலகம் உங்களை அனுப்பி வைப்பேன், என்று வீமன் கூறினான்,—என்பதாம். தனக்கு

உவமை யாமாறு தனக்கு எதிர் நிற்கக்கூடிய ஒரு வீரரையும் பெறாத ஆற்றலினனான விமன், என்பது ஈற்றடியின் பொருள்.

**29. என்றுவய மாருதியி சைத்தமொழி கேளா**
**வென்றி திகழ் வாகைபுனை விஞ்சையர்பி ரானும்**
**குன் றனைய தோளிணைகு லுங்கநகை செய்யாக்**
**கன்றினன்வெ குண்டுகனல் காலுமிரு கண்ணான்.**

*[என்று வய மாருதி இசைத்த மொழி கேளா, வென்றி திகழ் வாகை புனை விஞ்சையர் பிரானும், குன்று அனைய தோள் இணை குலுங்க நகை செய்யா, கன்றினன் வெகுண்டு, கனல் காலும் இரு கண்ணான்.]*

**விளக்கம் :-** வெற்றியின் அடையாளமான வாகை மலர் மாலை அணிந்த வித்யாதரர் தலைவனான சாலேந்திரன், என்பது இரண்டாவது அடியின் பொருள். (மாருதியின் மொழி கேட்டு அவமதிப்புந் தோன்றச் சிரித்தவன்) மனங் கொதித்தவனாய் வெகுண்டு நெருப்பை வெளிப்படுத்தும் இரு கண்களை உடைய வனாய்,—என்பது ஈற்றடியின் பொருள். இதுவும் அடுத்து வரும் இரு செய்யுள்களும் குளகம். வீமன் கூறியது கேட்டுச் சாலேந்திரன் வெகுண்டவனானான், என்பதாம்.

**30. தேனிடறு வாசமிகு தெய்வமல ரென்னே**
**மானுடர்கள் சூடவரு வார்கண்மதி யற்றோய்**
**கானுடைய வாழ்க்கைபுரி நின்னுயிர்க ணத்தின்**
**ஊனிடறு வாளிகட மக்குணவ ளிப்பேன்.**

*[தேன் இடறு வாசம் மிகு தெய்வம் மலர் என்னே, மானுடர்கள் சூட வருவார்கள்! மதி அற்றோய், கான் உடைய வாழ்க்கை புரி நின் உயிர் கணத்தின் ஊன் இடறு வாளிகள் தமக்கு உணவு அளிப்பேன்.]*

**விளக்கம் :-** தேன் இடறு வாசமலர் - தேன் நிறைந்த வாச மலர். தேவர்களுக்கே உரிய இந்தத் தெய்வ மலரை மானுடர்கள் சூடுவார்கள், என்பது, என்னே, (என்ன ஆச்சரியம்), ஊன் இடறு வாளி - தசையைத் தைத்து வருத்தும் அம்புகள். தெய்வ மலரை மனிதருக்கென்று நாடி வந்த அறிவிலியே, என் கணைகளால் உன்னைக் கொல்வேன், என்று சாலேந்திரன், கூறினான், என்க.

**31. மற்றிவன்வெ குண்டிவையு ரைத்துவரு சேனைக்**
**கொற்றவரை நின்றுநனி கூவியெதி ரேவிச்**
**சுற்றுமிகல் வெம்படைக டூவியிக லோனைப்**
**பற்றுமின் விரைந்தினி யெனப்பகர லுற்றான்.**

*[மற்று இவன் வெகுண்டு இவை உரைத்து, வரு சேனை கொற்ற வரை நின்று நனி கூவி, எதிர் ஏவி, சுற்றும் இகல் வெம் படைகள் தூவி இகலோனை, பற்றுமின் விரைந்து என பகரல் உற்றான்.]*

**விளக்கம் :-** இவன் (சாலேந்திரன்) வெகுண்டு இவை உரைத்து, நனிநின்று, (தன்னுடன்) வருசேனை கொற்றவரை கூவி, (வீமனுக்கு) எதிர் ஏவி, இனி இகலோனை (வீமனை) சுற்றும், இகல் வெம் படைகள் தூவி விரைந்து பற்றுமின் என பகரல் உற்றான்,—என்பது அன்வயம். வீமனைச் சுற்றிலும் ஆயுதங் களை ஏவி, அவனை விரைவில் பற்றுங்கள், என்று சாலேந்திரன், தன்னுடன் வந்த படைத் தலைவர்களுக்குக் கட்டளை இட்டான்,- என்பதாம். மற்று : அசை.

**32. பற்றுமென வந்தபடை வீரருயி ரெல்லாம்**
**கொற்றமிகு வெங்கணைகு ளிக்குவகை தொட்டே**
**செற்றமிக நின்றெதிர்சி ரித்தனனு ருத்தான்**
**பற்றலர்பு ரம்பொடிப டுத்தவனை யன்னான்.**

[பற்றும் என, வந்த படை வீரர் உயிர் எல்லாம் கொற்றம் மிகு வெம் கணை குளிக்கும் வகை தொட்டு, செற்றம் மிக நின்று எதிர் சிரித்தனன் உருத்தான், பற்றலர் புரம் பொடி படுத்தவனை அன்னான்.]

**விளக்கம் :-** பற்றலர் - பகைவர். பகைவர்களது திரிபுரத் தைச் சுட்டுப் பொடியாக்கிய சிவபிரானைப் போன்ற வீமன், இயக்கர் படைகளைத் தனது சரங்களால் அழித்துச் சிரித்துச் சினந்தவனானான்; என்பதாம்.

**33. இவ்வகைபொ ழிந்தவடி வாளியினி யக்கர்**
**மெய்வழிசெ ழுங்குருதி வேலையிடை வீழ்ந்தார்**
**அவ்வளவில் விஞ்சையர நேகரது காணாக்**
**கைவரிவில் கொண்டவன்மி சைக்கணைதொ டுத்தார்.**

[இ வகை பொழிந்தவடி வாளியின் இயக்கர் மெய்வழி செழு குருதி வேலையிடை வீழ்ந்தார், அ அளவில் விஞ்சையர் அநேகர் அது காணா, கை வரி வில் கொண்டு அவன் மிசை கணை தொடுத் தார்.]

**விளக்கம் :-** இவ்வாறு வீமன் பொழிந்த கூரிய அம்புகளால் இயக்கர், அவர்களது உடம்பிலிருந்து வழிந்த இரத்த வெள்ளத்தில் வீழ்ந்து அழிந்தனர்; இயக்கர் பட்ட அளவில், அதைக் கண்டு விஞ்சையர் பலர், கையில் பிடித்த வில்லைக் கொண்டு அவன்மேல் கணைகளைப் பிரயோகித்தார்கள், என்பது பொருள். கைவரிவில் கொண்டவன், என்று கொண்டு கையில் கட்டமைந்த வில்லை ஏந்திய வீமன், என்றும் பொருள் செய்யலாம்.

**34. தொடுத்தசர வார்சிலைது ணிந்துநனி மேன்மேல்**
**விடுத்தபடை யும்பொரவெ குண்டுமுனை வாய்வந்து**
**அடுத்தவர்க டோளுமணி மார்புமிரு தாளும்**
**நடுத்தறிய வெங்கணையு கைத்தனன கைத்தான்.**

*[தொடுத்து சரம் வார்சிலை துணிந்து நனி மேல்மேல் விடுத்த படையும் பொர, வெகுண்டு முனைவாய் வந்து அடுத்தவர்கள் தோளும் மணி மார்பும் இரு தாளும் நடு தறிய வெம் கணை உகைத்தனன் நகைத்தான்.]*

**விளக்கம் :-** (விஞ்சையர்) சரம் தொடுத்த வார்சிலை துணி பட்டு (துண்டு பட்டு), மிகுதியாக, (அவர்கள் தன்மேல்) மேலும் மேலும் தொடர்ந்து விடுத்த ஆயுதங்களும் மீண்டு போய் அவர் களையே தாக்க, (அதனால்) வெகுண்டு களத்தில் எதிர்த்து வந்து நெருங்கிய அவ் விஞ்சையர்களுடைய தோள்களும் அழகிய மார்பும் இரு கால்களும் இடை யொடிய வெங்கணைகளை வீமன் செலுத் தினனாய்ச் சிரித்தான்,—என்பது பொருள். முனைவாய், வாய், ஏழாம், வேற்றுமை உருபு.

**35. மண்டுதிறல் விஞ்சையர்ம டிந்தசெயல் யாவும்
கண்டுசில சாரணர்க றங்கனைய தேர்மேல்
கொண்டுகட லென்னவுரு மென்னநனி கொதியாத்
தண்டுகொடெ திர்ந்தனர்க டண்டதர னோடும்.**

*[மண்டு திறல் விஞ்சையர் மடிந்த செயல் யாவும் கண்டு சில சாரணர் கறங்கு அனைய தேர்மேல் கொண்டு, கடல் என்ன, உரும் என்ன நனி கொதியா, தண்டு கொடு எதிர்ந்தனர்கள் தண்ட தரனோடும்.]*

**விளக்கம் :-** மண்டு திறல் - மிகுந்த வலிமை. சாரணர் - தேவ சாதியாரில் ஒரு வகையினர். கறங்கு - பம்பரம், காற்றாடி. நனி கொதியா - மிகக் கொதித்து. தண்டு - கதை. தண்டதரன் - சத்ரு காதினி என்ற கதையைத் தரிப்பவனாகிய வீமன். விஞ்சை யர் கொல்லப்பட்டதைக் கண்ட சாரணர் கறங்கனைய தேர் மேல் ஏறிக்கொண்டு கடல் போலவும் இடிபோலவும் கொதித்து, (தேரினின்று இழிந்து) கதையைக் கையில் கொண்டு வீமனை எதிர்த்தார்கள்,—என்பது பொருள்.

**36. வார்சிலையொ ழிந்துவிறன் மன்னுவய வாகைப்
போர்செய்கதை கொண்டெதிர்பு குந்துபொர லுற்றான்
பார்செய்ப யனன்னநிரு பற்கிளவல் பார்மேல்
கார்செய்புரு மேறுருமு டன்கனல்வ தேபோல்.**

*[வார்சிலை ஒழிந்து விறல் மன்னு வய வாகை போர் செய் கதை கொண்டு எதிர் புகுந்து பொரல் உற்றான், பார்செய் பயன் அன்ன நிருபற்கு இளவல் பார்மேல் கார் செய் உரும் ஏறு உருமுடன் கனல்வதே போல்.]*

**விளக்கம் :-** பார் செய் பயன் அன்ன நிருபற்கு இளவல் (வீமன்) வார்சிலை ஒழிந்து......கதை கொண்டு, பார்மேல் கார் செய் உரும் ஏறு உருமுடன் கனல்வதேபோல், எதிர் புகுந்து பொரல் உற்றான்,—என்று அன்வயிக்க. சிலை ஒழிந்து - வில்லை விட்டுவிட்டு. மன்னு விறல் ..... எதிர் புகுந்து-வெற்றி பொருந்திய வலிய வாகைமாலை சூடுதற்குரிய போர் செய்யும் கதையைக் கையிற் கொண்டு பகைவர்மேல் எதிர்த்துச் சென்று. பார் செய் பயன் அன்ன நிருபற்கு இளவல் - பூமி செய்த நல்வினையின் பயன் போன்ற தருமபுத்திரனது தம்பியான வீமன். பார் மேல் - பூமியினிடத்தே. மேகம் இடிக்கும் பேரிடியானது இடிகளுடன் கனன்று பொருவதேபோல், (வீமன் சாரணர்களுடன் கதா யுத்தம் செய்தான்),என்பது ஈற்றடியின் பொருள். ஈற்றடி, இல் பொருள் உவமை அணி.

**37.** **தண்டினொடு தண்டெதிர்த கர்ப்பவெழு பொறியும்**
**மண்டுமுடி யோடுமுடி மன்னவெழு பொறியும்**
**திண்டி றல்வ யப்பொருநர் செங்கணுமிழ் பொறியும்**
**அண்டமுழு தும்பொதுளி மீதுபுகு மப்பால்.**

[தண்டினொடு தண்டு எதிர் தகர்ப்ப எழு பொறியும், மண்டு முடியோடு முடி மன்ன எழுபொறியும், திண்திறல் வயம் பொருநர் செங்கண் உமிழ் பொறியும், அண்டம் முழுதும் பொதுளி மீது புகும் அப்பால்.]

**விளக்கம் :-** தகர்ப்ப - மோத, தாக்க. பொறி - தீப்பொறி. முடி - கிரீடம். மன்ன - பொருந்த. பொருநர் - போர் செய்யும் வீரர். (மேலே கூறிய மூவகைப் பொறிகளும்) அண்ட கோளம் முழுதும் பரவி, அப்பால் (அதன் பின்) அதற்கு மேலும் எழுந்து செல்லும், - என்பது ஈற்றடியின் பொருள். வீமனும், சாரணரும் மிகக் கடுமையாகக் கதை கொண்டு போர், செய்தனர்,—என்பதாம்.

**38.** **மட்டவிழ லங்கன்மற வோனுடன்வ யப்போர்**
**தட்டமர்பு ரிந்துதனு வுஞ்சிரமும் வேறாப்**
**பட்டவரெ னைப்பலர்ப டாதவர்வி டாதன்(று)**
**இட்டனர்பு றந்திறலி யக்கர்குல மெல்லாம்.**

[மட்டு அவிழ் அலங்கல் மறவோனுடன் வயம் போர் தட்டு (தண்டு) அமர் புரிந்து, தனுவும் சிரமும் வேறு (வேறு - ஆ) பட்டவர் எனை பலர், படாதவர் விடாது அன்று இட்டனர் புறம், திறல் இயக்கர் குலம் எல்லாம்.]

**விளக்கம் -:** மட்டு அவிழ் அலங்கல் மறவோன் - மணம் கமழும் மாலை அணிந்த வீரனான வீமன், வயப்போர் - வெற்றிக் குரிய போர்க்களம். தண்டு அமர் புரிந்து தனுவும் (உடலும்) சிரமும்

வேறு ஆக, பட்டவர் திறல் இயக்கர் குலம் எனை பலர், படாதவர் எல்லாம் அன்று விடாது புறம் இட்டனர்,—என்று அன்வயிக்க. பட்டவர் - இறந்தவர். எனைப் பலர் - எத்தனையோ பலர், (அநேகர்), விடாது - தவறாமல். படாதவர் அப்பொழுதே விடாது (அங்கே நிற்றலைச் செய்யாது) புறம் காட்டி ஓடினர். கதை கொண்டு வீமனை எதிர்த்த சாரணர்களில் இறந்தவர் போக எஞ்சியவர், புறங்கொடுத்து ஓடினர்,—என்பதாம்.

**39. தொடிக்கரமி ழந்திருது ணைப்புயமி ழந்தாங்(கு)**
**அடிப்பதமி ழந்தவய வங்களடை வேபோய்**
**இடிக்குரலின் விஞ்சயரெ திர்ந்தயர வாங்கே**
**கொடிக்குடரி ழந்தனர்ம ருத்துதவு கூற்றால்.**

[தொடி கரம் இழந்து இரு துணை புயம் இழந்து, ஆங்கு அடி பதம் இழந்து அவயவங்கள் அடைவே போய், இடி குரலின் விஞ்சயர் எதிர்ந்து அயர, ஆங்கே கொடி குடர் இழந்தனர் மருத்து உதவு கூற்றால்.]

**விளக்கம் :-** இடி குரலின் விஞ்சையர் ஆங்கு எதிர்ந்து, மருத்து உதவும் கூற்றால் ஆங்கே தொடி கரம் இழந்து, இரு துணை புயம் இழந்து, அடி பதம் இழந்து, அவயவங்கள் அடைவே போய், அயர, கொடி குடர் இழந்தனர்,—என்பது அன்வயம். தொடிக் கரம் - தொடி என்னும் ஆபரணம் அணிந்த கை. அடிப்பதம் - கால். அவயவங்கள் அடைவே போய் - மற்றை அவ்வயவங்களும் முறையே ஒழியப்பெற்று. எதிர்ந்து - எதிர்த்துச் சென்று. அயர - மடிய. கொடிக் குடர் - கொடி போன்ற குடல். மருத்து உதவு கூற்று - வாயுதேவன் தந்த எமனை யொத்த வீமன். ஆங்கு, என்பது, அப்பொழுது, என்ற பொருளது. குடர்-(போலி) குடல். விஞ்சையர் வீமனால் தோற்கடிக்கப்பெற்ற விதம், கூறியபடி.

**40. அன்னநிலை கண்டடல ரக்கரொடி யக்கர்**
**பின்னருமெ னைப்பலர்பி றங்கலைநி கர்க்கும்**
**கன்னமத மாவிரத கற்கியிகல் காலாள்**
**மன்னுதிறன் மானுடம டங்கலைவ ளைத்தார்.**

[அன்ன நிலை கண்டு அடல் அரக்கரொடு இயக்கர் பின்னரும் எனை பலர் பிறங்கலை நிகர்க்கும் கன்னம் மதம் மா இரதம் கற்கி இகல் காலாள், மன்னு திறல் மானுட மடங்கலை வளைத்தார்.]

**விளக்கம் :-** அன்ன நிலை கண்டு - (வித்யாதரர் அழிந்ததும் தோற்று ஓடியதுமாகிய) அந்த நிலையைக் கண்டு. பின்னரும் - மறு படியும். எனைப் பலர் - மிகவும் பலர். பிறங்கல் - மலை. மா - யானை. கற்கி - குதிரை. மன்னுதிறல் மானுட மடங்கல் - பொருந்திய வலிமை உடைய மனித சிம்மம் ஆகிய வீமன்; அல்லது,

நரசிங்கப்பிரான் போன்ற ஆற்றலையுடைய வீமன்; அல்லது, பிறப்பால் மனிதனும், ஆற்றலால் சிங்கமும் ஆயவன்.

**41. வளைத்துவய வெம்படைகள் வீசிமறி கடல்போல்**
**உளைத்தொருவர் போலெவரு முருமெனவு ருத்துப்**
**புளைத்தரத மாபுரவி போதகமி சைப்போய்**
**விளைத்தனர்பெ ருஞ்சமரம் விஞ்சையர்க ளெல்லாம்.**

[வளைத்து வயம் வெம் படைகள் வீசி, மறிகடல்போல் உளைத்து ஒருவர்போல் எவரும் உரும் என உருத்து, புளைத்த ரதம், மா, புரவி, போதகம் மிசை போய் விளைத்தனர் பெருஞ் சமரம் விஞ்சையர்கள் எல்லாம்.]

**விளக்கம் :-** வித்யாதரர் எல்லோரும் புளைத்த மா ரதம் புரவி போதகம் (என்ற இவற்றின்) மிசை மறிகடல்போல் வளைத்து, உளைத்து, உரும் என உருத்து, வயவெம் படைகள் வீசி ஒருவர்போல் எவரும் பெருஞ் சமரம் விளைத்தனர்,—என்பது அன்வயம். உளைத்து-ஒலி செய்துகொண்டு. புளைத்த-இடையிலே உள் துளை உடைய. மா ரதம் - பெரிய தேர். போதகம்-யானைக் குட்டிகள். விஞ்சையர் நால்வகைப் படைகளுடன் மறி கடல்போல் வீமனை வளைத்துக்கொண்டு, வெம் படை வீசினர், என்பதாம். புழை, என்பதின் போலி புளை; துவாரம் என்பது பொருள். இருபத்தைந்து வயதுடைய யானைக் குட்டி, போதகம்.

**42. தேரணியும் வெம்பொறியெ னச்செறிபு கர்க்கைக்**
**காரணியும் வாயுநிகர் கற்கியணி யும்போர்ப்**
**பேரணிக லன்றனிபி றங்குமணி மார்பன்**
**தாரணியெ னத்தனது தண்டுகொடு டைத்தான்.**

[தேர் அணியும் வெம் பொறி என செறி புகர் கைகார் அணியும், வாயு நிகர் கற்கி அணியும், போர் பேர் அணிகலன் தனி பிறங்கும் மணி மார்பன் தார் அணி என தனது தண்டு கொடு உடைத்தான்.

**விளக்கம் :-** போர் பேர் அணிகலன் தனி மணிமார்பன், தேரணியும்...கற்கி அணியும், தாரணி என, தனது தண்டு கொடு உடைத்தான்,—என்று அன்வயிக்க. தேர் அணி - தேர்ப்படையின் அணி வகுப்பு. வெம் பொறி என செறி புகர் கை கார் அணி - வெவ்விய தீப்பொறி என, செறிந்த புள்ளிகளை உடைய துதிக்கையை உடைய மேகத்தை ஒத்த யானைப் படையின் அணி வகுப்பு. வாயு நிகர் கற்கி அணி - காற்றைப்போன்ற கதியை உடைய குதிரைப் படையின் அணி வகுப்பு. போர் பேர் அணிகலன் தனி பிறங்கும் மணி மார்பன் - போரையே பெரிய பூஷணமாக வுடைய, ஒப்பற்றதாய் விளங்கும் அழகிய மார்பை உடைய வீமன். தாரணி - சூரிய குமாரனான எமன். (தரணி-சூரியன்). பகைவர்து பெரிய அணி வகுப்பை வீமன், தனது கதைகொண்டு எமனைப் போல் தாக்கி அழித்தான்,—என்பதாம்.

**43. நெரிந்தனர தந்துனையு நேமியுடன் வேழமும்**
**சரிந்தனநெ டுங்குடர ரிந்துதலை தாள்போய்**
**முரிந்தனபெ ரும்புரவி வெள்ளமுனை தோறும்**
**விரிந்தனரு ரங்கடவுள் விஞ்சையர்கண் மன்னோ.**

[நெறிந்தன ரதம் துனையும் நேமியுடன், வேழமும் சரிந்தன நெடு குடர் அரிந்து, தலை தாள் போய் முரிந்தன பெரு புரவி வெள்ளம், முனைதொறும் விரிந்தனர் உரம் கடவுள் விஞ்சையர்கள் மன்னோ.]

**விளக்கம் :-** ரதம் துனையும் நேமியுடன் நெறிந்தன - தேர்கள் விரைந்து செல்லும் சக்கரங்களுடன் சிதைந்தன. வேழம் நெடுங் குடர் அரிந்து சரிந்தன - யானைகள் நீண்ட குடல்கள் அறுபட்டு விழுந்தன. பெரும் புரவி வெள்ளம் தலை தாள் போய் முரிந்தன - பெரிய குதிரைகளின் கூட்டம் தலையும் கால்களும் துணிக்கப்பட்டு அழிந்தன. முனைதொறும் கடவுள் விஞ்சையர்கள் உரம் விரிந்தனர் - போர்க்களம் எங்கும் தெய்வத் தன்மையுடைய வித்யாதர வீரர் மார்பு பிளக்கப்பட்டவர் ஆயினர். மன், ஓ : அசைகள்.

**44 மீளியொரு தண்டுகொடு மீண்டெதிர்வெ குண்டோர்**
**மூளைநிணம் வாயுகமு ருக்குதலு மொய்ம்பின்**
**தாளுடைம ருத்தெதிர்ச ரிக்கும்வகை யெய்தும்**
**பூளைவன மொத்தனர்பொ ரும்பொருந ரெல்லாம்.**

[மீளி ஒரு தண்டு கொடு மீண்டு, எதிர் வெகுண்டோர் மூளை நிணம் வாய் உக முருக்குதலும் மொய்ம்பின், தாள் உடை மருத்து எதிர் சரிக்கும் வகை எய்தும் பூளைவனம் ஒத்தனர், பொரும் பொருநர் எல்லாம்.]

**விளக்கம் :-** மீளி - வீமன். மீண்டு - மறுபடியும். எதிர் வெகுண்டோர் - கோபத்தோடு எதிர்த்து வந்த பகைவர், (வித்யாதரர்). முறுக்கல் - அழித்தல். தாள் உடை மருத்து - முயற்சி (கிளர்ச்சி) உடைய காற்று. (அந்தக் காற்றுக்கு) எதிர் சரிக்கும் வகை எய்தும் பூளை வனம் - எதிர் சஞ்சரிக்கும் தன்மை எய்திய இலவம் பஞ்சின் தொகுதி. வேகமாய் வீசும் காற்றுக்கு முன்னே பட்ட இலவம் பஞ்சு சிதறுவதேபோல், வீமனுக்கு முன் வித்யாதரர் எல்லோரும் சிதறுவாராயினர், என்றபடி. மூளை நிணம் - மூளையும் கொழுப்பும்.

**45. சிந்துரம ணிக்கொடிகொ டேர்புரவி காலாள்**
**அந்தகபு ரத்தணுக லுற்றவொழி யப்போய்த்**
**தந்தமபு ரத்தணுக லுற்றனச யப்போர்**
**மந்தரவ ரைப்புயனு நின்றனன் மறத்தால்.**

[சிந்துரம் மணி கொடிகொள் தேர் புரவி காலாள் அந்தக புரத்து அணுகல் உற்ற; ஒழிய, போய் தம் தம் புரத்து அணுகல் உற்றன, சயம் போர் மந்தரம் வரை புயனும் நின்றனன் மறத்தால்.]

**விளக்கம் :-** சிந்துரம்-யானை. அந்தகபுரத்து அணுகலுற்ற-எமலோகம் போய்ச் சேர்ந்தன. ஒழிய - சாகாமல் எஞ்சியவை. சயப் போர் மந்தரவரைப் புயனும் - வெற்றியோடு போர் செய்த மந்தர மலையைப்போன்ற புஜங்களை உடைய வீமனும். மறத்தால் நின்றான் - பராக்ரமம் தோன்ற நின்றான். பகைவர் அழியவும், எஞ்சியவர் அஞ்சி ஓடவும், வீமன் வெற்றிப் பெருமிதத் துடன் நின்றான், என்க.

**46. இருவரொரு நீணெறியி யங்கலர்தி யங்கா**
**வரியுழுவை கண்டுடையு மானினம தேபோல்**
**வெறுவியுள நொந்துதிறல் விஞ்சையர்க ளெல்லாம்**
**பொருவிலள காபுரிபு குந்தனர்வி ரைந்தே.**

[இருவர் ஒருநீள் நெறி இயங்கலர், தியங்கா வரி உழுவை கண்டு உடையும் மான் இனம் அதேபோல், வெருவி உளம் நொந்து திறல் விஞ்சையர்கள் எல்லாம் பொருவு இல் அளகாபுரி புகுந்தனர் விரைந்தே.]

**விளக்கம் :-** திறல் விஞ்சையர்கள் எல்லாம், வரி உழுவை கண்டு உடையும் மான் இனம் அதேபோல் வெருவி தியங்கா (கலங்கி), உளம் நொந்து இருவர் ஒரு நீள் நெறி இயங்கலர்,— என்பது அன்வயம். புலியைக் கண்டு சிதறி ஓடும் மானேபோல் (வீமன் முன் நிற்க மாட்டாமல்) அஞ்சி, மனம் கலங்கி, உள்ளம் நொந்து, இரண்டு பேர் ஒரு நீண்ட வழியில் சேர்ந்து செல்லாமல், சிதறுண்டு ஓடிச் சென்று, விஞ்சையர் ஒப்பற்ற அளகாபுரியை அடைந்தனர், என்பதாம். வீமனுக்கு உழுவையும், விஞ்சையருக்கு மான் கூட்டங்களும் உவமை.

**47. இஞ்சிமதில் வாயரணம் யாவுமிகல் புரிவான்**
**அஞ்சினர்கள் விஞ்சையர டைந்தனர்க ளழகார்**
**மஞ்சனைய மேனிமணி மான்முனம டைந்தே**
**துஞ்சினரொ ழிந்தவர வற்றொழுது சொன்னார்.**

[இஞ்சி மதில்வாய் அரணம் யாவும் இகல் புரிவான் அஞ்சினர் கள் விஞ்சையர் அடைந்தனர்கள், அழகு ஆர் மஞ்சு அனைய மேனி மணிமான் முனம் அடைந்தே, துஞ்சினர் ஒழிந்தவர், அவன் தொழுது சொன்னார்.]

**விளக்கம் :-** இஞ்சி - மதில். மதில் வாய் - மதிலினிடத்தே உள்ள கோபுர வாயில். அரணம் - காப்பிடம். அழகு ஆர் மஞ்சு அனைய மேனி மணிமான் - அழகு நிறைந்த மேகம் போன்ற நீல நிறமான உடலையுடைய மணிமான். துஞ்சினர் ஒழிந்தவர் - இறந்தவர்கள் போக ஓடித் தப்பியவர். இகல் செய்வதற்கு அஞ்சினரும், இறந்தவர் போக மிஞ்சியவர்களும் ஆகியவர்களாகிய விஞ்சையர்கள், புற மதிலிலும், கோபுர வாயில்களிலும், உள் ளிடத்தே உள்ள காப்பிடங்களிலும் ஒதுங்கி உயிர் பிழைத்தவர் களாய், மணிமான் என்பவனிடம் சென்று விஷயத்தைத் தெரிவித் தார்கள்,—என்பதாம்.

## மணிமான் போரெழல்

**48. அந்நிலையு ணர்ந்துமணி மானுமவிர் சோதிப்**
**பொன்னசல மொத்துயர்பு யத்துணைது டிப்ப**
**மன்னுபுரு வச்சிலை வளைத்துமழை முகில்போல்**
**மின்னிலக நக்குருமெ னத்தனிவெ குண்டான்.**

[அ நிலை உணர்ந்து மணிமானும் அவிர் சோதி பொன் அசலம் ஒத்து முகில் புயம் துணை துடிப்ப, மன்னு புருவம் சிலை வளைத்து மழை போல் மின் இலக நக்கு, உரும் என தனி வெகுண்டான்.]

**விளக்கம் :-** அவிர் சோதி பொன் அசலம் - விளங்கும் சோதியை உடைய மகாமேரு பர்வதம். மன்னு புருவச் சிலை - பொருந்திய புருவங்களாகிய வில், மின் இலக - மின்னல் போன்ற பற்கள் வெளிப்பட. நக்கு - சிரித்து. மலைகளில் பெரியதும், சிறந்ததுமாகிய மேரு, மணிமானின் தோளுக்கு உவமையாயிற்று. முகில் என்பதற்கு ஏற்ப மலையும், மின்னலும், இடியும் என்றார். விஞ்சையர் தோற்றமை கேட்டு மணிமான் வெகுண்டான், என்க.

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

**49. வானி லவுணரை மோதி முனைதொறும்**
**வாகை புனைமணி மானுமச்**
**சேனை முதல்வரை வேக முறநனி**
**சீறி யுரைபல கூறினான்**
**ஆனி லனதுடல் வீழ வமரிடை**
**யாவி கவர்தர வஞ்சிநம்**
**தானை யரியெதி ரேகு கரியின**
**மாகி வெருவொடு சாய்வதே.**

[வானில் அவுணரை மோதி முனைதொறும் வாகை புனை மணி மானும், அ சேனை முதல்வரை வேகம் உற நனி சீறி உரை பல கூறினான்; ஆனிலனது உடல் வீழ அமரிடை ஆவி கவர்தர அஞ்சி, நம் தானை அரி எதிர் ஏகு கரி இனம் ஆகி வெருவொடு சாய்வதே.]

**விளக்கம் :-** வானுலகத்தில் அவுணரைப் போர் முனையெங்கும் தாக்கி வெற்றிகொண்ட மணிமான் என்பான், சேனைத் தலைவர் களை நோக்கி மிகவும் கடுமையாகக் கோபித்துப் பல வார்த்தை

களைக் கூறினான்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஆனிலன் - வாயு குமாரனான வீமன், (அநிலன் - வாயு). வீமனை வீழ்த்தி அழிக்காமல், சிங்கத்தைக் கண்டு பயந்து ஓடும் யானைக் கூட்டம்போல் நமது படை இப்படித் தோற்றுப் புறங்கொடுத்து ஓடுவதா! என்று மணிமான் வருந்திக் கூறினான், என்ற பொருளது ஈற்றடிகள்.

50. என்று தனதெதிர் நின்ற வரையிகழ்
வுற்று மொழிபல சொற்றுமல்
குன்ற மெனவமர் வென்றி தருவதோர்
கும்ப மதகரி மேற்கொளா
ஒன்று படவுல கின்று பொடிபட
வுந்து கரிரத முந்தெனச்
சென்று புடைவரு கின்ற படையொடு
தெண்ட தரனெதிர் மண்டினான்.

[என்று தனது எதிர் நின்றவரை இகழ்வுற்று, மொழி பல சொற்று மல் குன்றம் என அமர் வென்றி தருவது ஓர் கும்பம் மதம் கரிமேல் கொளா, ஒன்று படஉலகு இன்று பொடிபட, வந்து கரி ரதம் முந்து என சென்று புடைவருகின்ற படையொடு தெண்ட தரன் எதிர் மண்டினான்.]

**விளக்கம் :-** கும்பம் - மத்தகம். உலகு ஒன்றுபட இன்று பொடி பட கரி ரதம் உந்து முந்து என,—என்று மூன்றாமடியை அன்வயிக்க. முன்னே ரதம் கரிகளை செலுத்துக, என்று சொல்லிப் புடை வருகின்ற படையோடு சென்று தண்டதரனான வீமன் முன் நெருங்கினான்,—என்பது ஈற்றடியின் பொருள். தண்டதரன் - கதையைக் கையிலே கொண்ட வீமன். மண்டினான் - நெருங் கினான்.

## மணிமான் வதம்

51. மண்டி யெதிர்வரு கின்ற பொருநரை
வன்பு பெறுபுய முன்பனும்
கண்டு முகிழ்நகை கொண்டு தனதிரு
கண்கள் கனலுக நின்றபின்
எண்டி சையும்வளை கின்ற விமையவ
ரென்றி னொளிதிகழ் குன்றினீர்
மொண்டு முகிலென வொன்று படமிசை
மூசி யெறிபடை வீசவே.

[மண்டி எதிர் வருகின்ற பொருநரை வன்பு பெறு புயம் முன்பனும், கண்டு முகிழ் நகை கொண்டு, தனது இரு கண்கள் கனல் உக நின்ற பின், எண் திசையும் வளைகின்ற இமையவர் என்றின் ஒளி திகழ் குன்றில் நீர் மொண்டு (பொழி) முகில் என, ஒன்றுபட மிசை மூசி எறி படை வீசவே.]

**விளக்கம் :-** பொருநர் - (போர் செய்ய வருகின்ற) மணி மான் முதலிய போர் வீரர்கள். வன்பு பெறு புயம் முன்பனும் - வலிமை பொருந்திய தோள்களை உடைய போர்த் திறமையுடைய வீமனும், (முன்பு - திறமை), அல்லது தன்னை நெருங்குபவருக்கு எதிரில் நிற்கும் வீமனும், என்றும் பொருள் கொள்ளலாம். இமையவர் - வித்யாதரர். என்றின் ஒளி திகழ் குன்று - சூரியனைப் போல் ஒளிகொண்டு திகழும் மேரு மலை. (அக் குன்றின் மேல்) நீரை உட்கொண்டு பொழியும் மேகம்போல், (வித்யாதரர் எல்லோரும்) ஒன்றுபட்டு (வீமன்) மிசை, மூசி (நெருங்கி வந்து) எறிபடை வீச, என்பது ஈற்றடியின் பொருள். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். எறிபடை - வீசி எறிவதற்குரிய ஆயுதங்கள். வீமன் - மேரு மலை. வித்யாதரர் படை, முகில். வீமன் கொண்ட நகை இகழ்ச்சியின் பாற்படும். எண் திசையும் வளைகின்ற இமைய வர்—எட்டுத்திசைகளிலும் (எல்லாப் பக்கத்திலும்) அவனை சூழ்ந்து வரும் தேவகணத்தார்.

**52. வீசு படையொரு கோடி விசைபட**
**வோடி மிசைவர வீமனும்**
**பாச தரனெதிர் நீல மயிலொடு**
**பாக னிகரென வேகியா**
**ஆசை தொறுமுகில் போல வளைபவ**
**ராக மிருபிள வாவுளம்**
**கூசி யலமரு மாறு தருவளர்**
**கோடு கொடுநனி சாடினான்.**

[வீசு படை ஒரு கோடி விசைபட ஓடி மிசைவர வீமனும், பாசதரன் எதிர் நீலம் மயிலொடு பாகன் நிகர் என வேகியா, ஆசை தொறும் முகில் போல வளைபவர் ஆகம் இரு பிளவு ஆ(க), உளம் கூசி அலமரும் ஆறு தருவளர் கோடு கொடு நனி சாடினான்.]

**விளக்கம் :-** வித்யாதரர் வீசிய கோடிக்கணக்கான ஆயுதங்கள் வேகமாய்ப் பாய்ந்து தன்மேல் வர, வீமனும்,—என்பது முதலடி யின் பொருள். பாசதரன் - காலபாசத்தை ஏந்தியுள்ள எமன். நீல மயிலொடு பாகன் - நீல மயில் போன்ற உமையைத் தனது இடப்பாகத்தில் கொண்ட சிவபெருமான், (மார்க்கண்டேயன் பொருட்டு) எமன் எதிரில் தோன்றிய சிவபிரானே நிகராவான் என்னும்படி கொதிக்கும் கோபங்கொண்டு,—என்பது இரண்டா வது அடியின் பொருள். ஆசை - திசை. எல்லாத் திசைகளிலும் மேகக் கூட்டம்போல் தன்னைச் சுற்றிக்கொண்ட வித்யாதரர் உடல் பிளவுபடவும், மனம் நடுங்கிச் சுழலும்படியும், மரக்கிளை கொண்டு (வீமன்) நன்றாகப் புடைத்தான், என்பது ஈற்றடிகளின் பொருள். அலமரல் - சுழல்தல். தருவளர் கோடு - மரத்தில் வளரும் கிளை. சாடினான் - புடைத்தான்; மோதினான்.

**53 ஆய பொழுதள காதி பதியுயி ராய வணிமணி மான்விறல்
சீய மெனவவன் மீது பலபடை சிந்தி யமர்செய்து முந்தினான்
வாயு குமரனும் வேக முடனவன் மார்பு கிழிதர மோதினான்
காய பலமொடு தாய முறவொரு காய மிருகட கக்கையால்.**

[ஆய பொழுது அளகா அதிபதி உயிர் ஆய அணி மணிமான், விறல் சீயம் என அவன் மீது பலபடை சிந்தி அமர் செய்து முந்தினான்; வாயு குமரனும் வேகமுடன் அவன் மார்பு கிழிதர மோதினான், காயம் பலமொடு தாயம் உற, ஒரு காயம் இரு கடகம் கையால்.]

**விளக்கம் :-** அப்பொழுது அளகாதிபதியான குபேரனின் உயிர் நண்பனான அழகிய மணிமான் ஆற்றல் உடைய சிங்கம் என வீமன் மீது பல ஆயுதங்களைப் பிரயோகித்துப் போர் செய்து (வீமனுக்கு) முன்னே வந்தான், என்பது முதல் இரண்டடிகளின் பொருள். (அவன் எதிர் வரலும்) வாயு குமரனும், வேகத்துடன் மணிமானது மார்பு கிழிபடும்படி தனது தேக பலம் முழுதையும் கொண்டு, ஒப்பற்ற (மணிமானது) காயது (உடல்) தளர்ச்சி உறும் படி, தனது கடகம் அணிந்த இரு கைகளாலும் தாக்கினான்,— என்பது ஈற்றடிகளின் பொருள். காயபலம் - தேகபலம். தாயம் - துன்பம், சோர்வு.

**54. முன்பு பெறுபுய மொய்ம்ப னவன்மரு மத்தின் விசைபட
மொத்தலும்
என்பு தசைநிண மிந்தி ரியம்வலி யென்ப விவைநிலை சிந்தியே
துன்ப முறமன நொந்து தளர்வொடு துத்தி மணியுர
கத்தின்மேல்
வன்பி னுடனுரு முற்ற தெனவொளி மட்கி வெருவுட
னுட்கினான்.**

[முன்பு பெறு புயம் மொய்ம்பன், அவன் மருமத்தின் விசைபட மொத்தலும், என்பு தசை நிணம் இந்திரியம் வலி என்ப இவை நிலை சிந்தி (ஏ), துன்பம் உற மனம் நொந்து தளர்வொடு துத்தி மணி உரகத்தின்மேல் வன்பினுடன் உரும் உற்றது என ஒளி மட்கி, வெருவுடன் உட்கினான்.]

**விளக்கம் :-** முன்பு - வலிமை. அவன் - மணிமான். என்பு - எலும்பு. தசை - சதை, நிணம் - கொழுப்பு. இந்திரியம் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற பொறிகள். வலி - வலிமை. என்ப - எனப்படுவன. நிலைசிந்தி - நிலை குலைந்து. துத்தி மணி உரக்கத்தின்மேல் வன்பினுடன் உரும் உற்றதென - (படத்தில்) புள்ளிகளையும், மாணிக்கத்தையும் உடைய பாம்பின் மேல் வன்பினுடன் (வலிமையோடு) இடி விழுந்ததுபோல். ஒளி மட்கி வெருவுடன் உட்கினான் - மணிமான் ஒளி கெட்டு அச்சத்தோடு நடுங்குவானாயினான். மணிமான் வீமனுக்கு முன் நிற்கமாட்டா மல் தளர்ந்து நடுங்கினான்,—என்பதாம்.

கலிவிருத்தம்

**55. வஞ்சனை புரியுமா மாயப் போர்க்கலால்**
**துஞ்சல னிவனெனத் துணிந்து சூழ்ச்சியால்**
**நஞ்சென வெகுண்டுதன் னயனந் தீயுக**
**விஞ்சையன் கதுமென விசும்பி லேறினான்.**

*[வஞ்சனை புரியும் மா மாயம் போர்க்கு அலால் துஞ்சலன் இவன் என துணிந்து, சூழ்ச்சியால், நஞ்சு என வெகுண்டு தன் நயனம் தீ உக விஞ்சையன் கதுமென விசும்பில் ஏறினான்.]*

**விளக்கம் :-** வஞ்சனை புரியும் மா மாயம் போர்க்கு அலால் இவன் துஞ்சலன் என துணிந்து, நஞ்சு என வெகுண்டு, நயனம் தீ உக விஞ்சையன் கதுமென விசும்பில் ஏறினான்,—என்பது அன்வயம். சூழ்ச்சியால்-மாயா சக்தியினால். மாயத்தால் அன்றி இவனை வெல்லுதல் அரிது என்று முடிவு செய்து மணிமான் வானில் மறைந்தான், என்பதாம். சாதலைத் துஞ்சுதல், என்ற சொல்லால் குறிப்பது மங்கல வழக்கு. கதுமென, என்பது விரைவைக் குறிக்கும் சொல்.

**56. புகையொடு கலந்துகால் பொங்க மங்குல்கள்**
**வகைபட வெழுந்துமா மாரி சிந்திடச்**
**சிகையனல் விண்ணெலாஞ் செகுக்க மண்ணெலாம்**
**துகள்படத் திசையெலாஞ் சூழ்ந்து தோன்றினான்.**

*[புகையொடு கலந்து கால் பொங்க, மங்குல்கள் வகைபட எழுந்து மா மாரி சிந்திட, சிகை அனல் விண் எலாம் செகுக்க மண் எலாம் தூள்பட திசை எலாம் சூழ்ந்து தோன்றினான்.]*

**விளக்கம் :-** கால் - காற்று. மங்குல் - மேகம். சிகை அனல் விண் எலாம் செகுக்க - சுவாலையுடைய நெருப்பு, அதாவது கொழுந்து விட்டு எரியும் நெருப்பு வானை அழிக்க. திசை எலாம் சூழ்ந்து தோன்றினான் - எல்லாத் திக்குக்களிலும் மாயையால் பரவித் தோன்றினான். மணிமான் மாயையின் துணையால் வான் அழியவும், மண் தூள்படவும் எங்குந் தோன்றுபவனானான், என்க.

**57. அப்பொழு தினிலிக லரிப்ப தாகனும்**
**முப்புரஞ் சுடுமுகி னிறத்து வாளிமுன்**
**ஒப்பற வருளுட னுதவுஞ் சோரிவாய்**
**வைப்பெரும் பகழியொன் றேவி மாற்றினான்.**

*[அ பொழுதினில் இகல் அரி பதாகனும் முப்புரம் சுடும் முகில் நிறத்து வாளி, முன் ஒப்பு அற அருளுடன் உதவும் சோரி வாய், வை பெரு பகழி ஒன்று ஏவி மாற்றினான்.]*

**விளக்கம் :-** இகல் அரி பதாகன் - வலிய சிங்கத்தின் வடிவத்தைக் கொடியில் கொண்ட வீமன். முப்புரம் சுடும் முகில்

வாளி - திரிபுரத்தைச் சுட்டழித்த மேகம் போன்று கரிய அம்பாகிய திருமால். முன் ஒப்பு அற அருளுடன் உதவும் சோரி வாய் வை பெரும் பகழி - முன்னொரு காலத்தில், ஒப்பில்லாத, அருளுடன் தனக்கு அளித்த ரத்தம் தோய்ந்த முனையை உடைய கூரிய பெரிய அம்பு. மணிமானது மாயையைத் திருமால் உதவிய பகழியால் மாற்றினான், என்பதாம். சிவபெருமான் திரிபுர தகனம் செய்த காலத்தில், திருமால் அவனது அம்பாய் அமைந்து உதவினான், என்பது புராணம். வீமன் ஏவியது திருமால் உதவிய வைணவாத்திரம்.

**58. அசைமணிக் கொடிகொடே ரருக்க றன்னெதிர்**
**நிசியெனப் பறந்தது நீல மேனியான்**
**வசையறக் குரிசிலுக் கருளும் வாளியால்**
**திசையுறப் பரந்தமர் செய்த மாயையே.**

*[அசை மணி கொடி கொள் தேர் அருக்கன் தன் எதிர் நிசி என பறந்தது, நீல மேனியான் வசை அற அ குரிசிலுக்கு அருளும் வாளி யால் திசையுற பரந்து அமர் செய்த மாயையே.]*

**விளக்கம் :-** அசை மணி கொடி கொள் தேர் அருக்கன் - அசைகின்ற அழகிய கொடியைத் தன்னிடத்தே கொண்ட தேரை யுடைய சூரியன். நிசி - இரவு. நீலமேனியான் - கண்ணன். வசை அறு அ குரிசில் - குற்றமற்ற அந்த வீமன். சூரியனின் முன் இருள் அகல்வது போல், வைணவவாளி முன், திசை எங்கும் பரந்து அமர் செய்த மணிமானது மாயை அகன்றது.—என்க.

**59. விறல்புனை வீமனும் விஞ்சை வேந்தனும்**
**நிறைபுவி விசும்பின்மே னின்று போர்செய்தார்**
**எறுழ்வலி யிராகவற் கிளைய வார்சிலைச்**
**சிறுவனு மிந்திர சித்து மென்னவே.**

*[விறல் புனை வீமனும் விஞ்சை வேந்தனும் நிறை புவி விசும் பின் மேல் நின்று போர் செய்தார், எறுழ் வலி இராகவற்கு இளைய வார் சிலை சிறுவனும் இந்திரசித்தும் என்னவே.]*

**விளக்கம் :-** சென்ற யுகத்தில் இராவணன் மைந்தனான இந்திரசித்தும் இளைய பெருமாளும் யுத்தம் செய்ததுபோல், மணிமானும் வீமனும் போர் செய்தார்கள்,—என்பதாம். வீமன் பூமியிலிருந்தும், மணிமான் வானிலிருந்தும் போர் செய்தா ராதலின் ''நிறை புவி விசும்பின்மேல் நின்று'', என்றார். அணி, உவமை. எறுழ், வலிமை என்ற பொருளுடைய உரிச்சொல்.

**60. அந்தவஞ் சனையெலா மகன்று போனபின்**
**விந்தமொத் துயர்ந்ததோள் வீம சேனன்மேல்**
**சந்திரன் மிசைவரு தழல ராவெனச்**
**சுந்தரன் வெகுண்டொரு சூலம் வீசினான்.**

[அந்த வஞ்சனை எலாம் அகன்று போனபின், விந்தம் ஒத்து உயர்ந்த தோள் வீமசேனன்மேல், சந்திரன் மிசை வரு தழல் அரா என சுந்தரன் வெகுண்டு ஒரு சூலம் வீசினான்.]

**விளக்கம் :-** விந்தம் - விந்திய மலை. தழல் அரா - நெருப்னபப் போன்ற கொடிய ராகு கேது. சுந்தரன்-மணிமான். மாயை விலகவே மணிமான் வெகுண்டு வீமன்மேல் ஒரு சூலத்தைப் பிரயோகித்தான்,—என்க. வீமன் சந்திரகுலத்தவன். மணிமானது சூலம், தழல் அரா, சந்திரன்மேல் வரும் அரவு போல், சந்திரகுலத்தினனான வீமன்மேல் சூலம் வந்தது, என்றது, பாம்பினால் சந்திரன் அழிக்கப்படாதது போல் சூலத்தால் வீமன் அழிக்கப்பட மாட்டான் என்ற குறிப்பினது.

**61. சூலமுந் தனதுமேற் சூல மேவினோன்**
**கோலமும் பொடிபடக் கொதித்து மீளியும்**
**மூலபங் கயமறை முனிவன் வாளியை**
**ஆலமுங் குளிர்வுற வழல வீசினான்.**

[சூலமும், தனது மேல் சூலம் ஏவினான் கோலமும் பொடிபட, கொதித்து மீளியும், மூலபங்கயம் மறை முனிவன் வாளியை, ஆலமும் குளிர்வு உற அழல வீசினான்.]

**விளக்கம் :-** கோலம் - வடிவம். மீளி - வீமன். மூல பங்கய மறை முனிவன் - பிரும்மா. வாளி - பிரும்மாத்திரம். ஆலமும் குளிர்வுற அழல - கொடிய விஷமும் தண்மையுறும்படி கொதிக்க (வாளியைச் செலுத்தினான்). வீமன் ஏவிய பிரும்மாத்திரத்தின் முன், கொடிய விஷமும் தனது கொடிய தன்மையை இழந்து குளிர்ச்சியுற, என்ற பொருளது, ஈற்றடி.

**62 பிரமன்வெஞ் சரம்வலி பெற்ற விஞ்சையன்**
**மருமமெங் கணுஞ்செறிந் துருவ மாழ்கியே**
**உருமின்வெங் குரலுட னொடுங்கி மண்மிசைக்**
**கருமுகில் வீழ்ந்தெனக் கலங்கி வீழவே.**

[பிரமன் வெம் சரம், வலி பெற்ற விஞ்சையன் மருமம் எங்கணும் செறிந்து உருவ, மாழ்கியே உருமின் வெம் குரலுடன் ஒடுங்கி மண் மிசை கருமுகில் விழுந்தென (விழுந்தது என), கலங்கி வீழவே, .. இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** வலிபெற்ற விஞ்சையன் மருமம் எங்கணும் பிரமன் வெம் சரம் செறிந்து உருவ, என்று அன்வயிக்க. மருமம் - மார்பு. உருவ - (மார்பு முழுதும்) பரந்து துளைக்க. மாழ்கி - மயங்கி. பிரமன் வாளி உருவவும், மணிமான், இடிபோல் முழங்கிக் கொண்டு, மேகம் வீழ்ந்ததுபோல் மண்மேல் விழலும் (அடுத்த செய்யுளோடு முடியும்),- என்பது பொருள்.

**63. அந்தரந் தரம்புக வனந்த ரம்படைத்**
**தந்திரத் தலைவருந் தளர்ந்து சாய்ந்தனர்**
**உந்தினர் கரிபரி யிரத மூர்புக**
**முந்தின தமதுயிர் கொண்டு முந்தினர்.**

[அந்தரம் தரம் புக அனந்தரம் படை தந்திரம் தலைவரும் தளர்ந்து சாய்ந்தனர், உந்தினர் கரி பரி இரதம் ஊர்புக, முந்தின தமது உயிர் கொண்டு முந்தினர்.]

**விளக்கம் :-** அனந்தரம் அந்தரம் தரம் புக - அதன்பின்பு வானுலகம் அச்சம் அடைய. படை - ஆயுதம். இங்கே வீமனது அத்திரம். தந்திரத்தலைவர் - சேனைத் தலைவர். சாய்ந்தனர் - தோல்வியுற்றனர். கரி பரி இரதம் உந்தினர் - யானை குதிரை தேர்களையும் நடத்திக்கொண்டு. முந்தின தமது உயிர் - மிகச் சிறந்ததான தங்களுடைய உயிர். மணிமான் மாண்டபின், தேவ லோகமும் அச்சம் அடையும்படி, சேனைத் தலைவர்கள் வீமனது அத்திரங்களால் நிலை தளர்ந்து, தோற்றவர்களாய் நால்வகைச் சேனையையும் செலுத்திக்கொண்டு, தமது சிறந்த உயிரோடு ஒருவரை ஒருவர் முந்தினராய்ப் புறங் கொடுத்து ஓடினார், என்பதாம். தரம் - (வடசொல்) பயம். (வீமனது) படை (ஆல்) தந்திரத் தலைவர் தளர்ந்து சாய்ந்தனர், என்க.

**64. விரிதிரை யுவரிநீ ரென்ன வெஞ்சினக்**
**கரிபரி யாளெலாங் கலந்து குத்தமெய்ச்**
**சுரிபெருங் குருதியின் சுழலி யாற்றினின்(று)**
**அரிமக னடலரி நாதம் செய்யவே.**

[விரிதிரை உவரி நீர் என்ன வெம் சினம் கரி பரி ஆள் எலாம் கலந்து உகுத்த மெய் சுரி பெரு குருதியின் சுழல் யாற்றில் நின்று, அரி மகன் அடல் அரி நாதம் செய்யவே,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** விரி திரை உவரி நீர் - கடல் நீர். கரி பரி ஆள் - யானை குதிரை காலாள். கலந்து மெய் உகுத்த - ஒன்றுபட்டு உடலிலிருந்து பொழிந்த. சுரி பெருங் குருதி - சுழியிடும் பெரிய இரத்தப் பெருக்கு. சுழல் யாறு - சுழித்து ஓடுகின்ற குருதி ஆறு. அரி மகன் - வாயு குமாரனான வீமன். அரி நாதம் - சிங்கநாதம். கடல் போன்ற விரிவுடைய நால்வகைச் சேனைகளும் ஒரு சேர அழிந்து பொழிந்த இரத்த வெள்ளத்தில் நின்றுகொண்டு வீமன், வெற்றிப் பெருமிதத்தால் சிங்கநாதம் செய்தான், என்பதாம். சுழல் யாறு - சுழலியாறு, என்று புணரும்.

### வேறு

### தருமன் வீமனைக் காணாது வினவல்

**65. இத்தலை வயவீம னிகல்பொரு திவணின்றான்
அத்தலை யுயிர்போலு மனுசனை யெதிர்காணான்
மொய்த்தலை தொறுமேறு முழுமணி முரல்சங்கம்
செய்த்தலை துயினாடன் தேவியை வினவுற்றான்.**

[இ தலை வயவீமன் இகல் பொருது இவண் (ணம்) நின்றான், அ தலை உயிர் போலும் அனுசனை எதிர் காணான், மொய்த்து அலை தொறும் ஏறும் முழு மணி முரல் சங்கம் செய்தலை துயில் நாடன் தேவியை வினவுற்றான்,]

**விளக்கம் :-** இத்தலை - இவ்விடத்தில், (அளகையில்). அத் தலை - பாண்டவர் வசிக்கும் காடாகிய அவ்விடத்தில். மொய்த்து அலை தொறும்... துயில் நாடன் - நெருங்கி அலைகள் தோறும் வெளிப்படும் பெரிய முத்துக்களை உடைய ஒலித்தலைச் செய் கின்ற சங்குகள் செய் (வயல்) தலை (வயல்களினிடத்தே) துயில் (தங்கியிருக்கும்) குருநாட்டை உடைய தருமன். வீமன் அங்கே போரில் வெற்றிகொண்டு சிங்க நாதம் செய்தவனாயிருக்க. இங்கே, தருமன், உயிரனைய தம்பியைக் காணாது திரௌபதியை வினவினான்,—என்பதாம். இவண் இவ்வண்ணம். அநுசன் - தம்பி. சங்குகளின் மிகுதி நீர் வளத்தைக் குறிக்கும்.

**66. மன்னவன் மொழிகேளா மான்மதர் விழியாளும்
நன்னதி தனிலின்றோர் நறைமல ரதுகாணா
இன்னமு மொருகானீ யிம்மலர் கொணாகென்றேன்
அன்னவன் விசைசென்றா னளகைநன் நகரென்றாள்.**

[மன்னவன் மொழி கேளா மான் மதர் விழியாளும், நல் நதி தனில் இன்று ஓர் நறை மலர் அது காணா, இன்னமும் ஒரு கால் நீ இ மலர் கொணர்க என்றேன், அன்னவன் விசை சென்றான் அளகை நல் நகர் என்றாள்.

**விளக்கம் :-** இன்று நதியில் கண்ட மலரை இன்னொரு முறை கொணர்ந்து தருக என்னலும், அவன் விரைந்து அளகை சென்றான், என்று பாஞ்சாலி தெரிவித்தலைக் கூறும் செய்யுள். மான் மதர் விழியாள் - மானின் விழி போன்ற களித்த விழிகளை உடைய பாஞ்சாலி. விசை சென்றான் - விரைந்து சென்றான்.

### தருமன் வருந்தல்

**67. மன்றலில் குழலாடன் வாசக மெனுநஞ்சால்
பொன்றின னெனமன்னன் புலம்பிய பொழு தன்பால்
ஒன்றிய முனிரோம னுரையெனு மமுதாலே
துன்றிய துனிதீராச் சோகமொ டுரைசெய்தான்.**

[மன்றல் (இல்) குழலாள் தன் வாசகம் எனும் நஞ்சால் பொன்றினன் என மன்னன் புலம்பிய பொழுது, அன்பால் ஒன்றிய முனி ரோமன் உரை எனும் அமுதாலே துன்றிய துனி தீரா, சோகமொடு உரை செய்தான்.]

**விளக்கம் :-** மன்றல் குழலாள் - இயற்கை மணம் உடைய கூந்தலை உடைய திரௌபதி. பொன்றினன் என - இறந்தான் என்று சொல்லும்படி. அன்பால் ஒன்றிய முனிரோமன் - அன்பு பொருந்திய ரோமச முனிவன், துனிதீரா - துன்பம் சிறிது தீரப் பெற்று. திரௌபதி கூறியது கேட்டுத் தளர்ந்து வருந்திய தருமன், ரோமச முனிவனது வார்த்தைகளால் சிறிது துன்பம் தீரப்பெற்றுச் சில கூறுவானாயினான்,—என்பதாம். மன்றலில், இல் சாரியை. மரண வேதனைக்கு ஒப்பானதான தருமனது துயரம் தீர்த்தபடியால், முனிவனது வார்த்தை **அமுதம்** எனப்பட்டது.

**68. கூற்றுவ னிகர்நாகக் கொடியவன் முதலாயோர்**
**நூற்றுவ ரையும்நானே நூறிவிண் ணுலகின்மேல்**
**ஏற்றுமவ் வளவும்யா னின்பய நுகரேனென்(று)**
**ஆற்றுதி யுயிரையா வம்மொழி பழுதாமோ.**

[கூற்றுவன் நிகர் நாகம் கொடியவன் முதல் ஆயோர் நூற்றுவரையும் நானே நூறி விண் உலகின்மேல் ஏற்றும் அ அளவும், யான் இன் பயம் நுகரேன் என்று, ஆற்றுதி உயிர் ஐயா, அ மொழி பழுதாமோ.]

**விளக்கம் :-** நாகம் கொடியவன் - பாம்புக் கொடியனான துரியோதனன், அல்லது நாகம்போல் கொடியவன். நூறி - அழித்து. ('துஷ்டர்களான துரியோதனாதியரை நானே கொன்று விண்) ஏறச் செய்யும் காலம் வரையிலும், இனிய பயம் (நீர்) கையால் எடுத்துப் பருகேன் என்று விரதம் பூண்டு, ஐயனே, உயிரைக் காத்து வருகின்றாய்; (அவ்வாறாக நீ தேவருலகம் சென்று போர் செய்தலால்) அபாயம் ஏற்பட்டுச் சபதமொழி பழுதுறுமோ, என்று எண்ணித் தளர்கின்றேன்,'' என்று தருமன் கூறி வருந்தும் கருத்தின ஈற்றடிகள். பயம் - (பயஸ்) தண்ணீர்.

**69. துனைவரு கடலாடை சூழ்வரு மெழுபூவோ**
**நனைகெழு மொருபூவோ நன்றென நகைசெய்யா**
**உனையொரு வனையும்யா னுளனெனி னொருவேனுக்(கு)**
**அனைவரு முளர்யானு மாருயி ருளனம்மா.**

[துனைவரு கடல் ஆடை சூழ்வரும் எழு பூவோ, நனைகெழும் ஒரு பூவோ, நன்று என நகை செய்யா, உனை ஒருவனையும் யான் உளன் எனின், ஒருவேனுக்கு அனைவரும் உளர், யானும் ஆர் உயிர் உளன், அம்மா.]

**விளக்கம் :-** (அலைகள்) நெருங்குகின்ற கடலை ஆடையாக உடைய ஏழு தீவுகளை உடைய பூமியோ? (அல்லது) மலர்ந்து விளங்குகின்ற ஒரு மலரோ? (அவற்றில் எது) சிறப்புடையது? என்று நகைத்து, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். உன்னை ஒருவனையும் நான் உடையேன் எனில், தமியனான எனக்கு, எல் லோரும் துணை இருக்கின்றவர் ஆவார், நானும் அரிய உயிரை உடையவன் ஆவேன்,—என்பது ஈற்றடிகளின் பொருள். ''பெண் சொல் கேட்டு மலர்ந்து அழியும் ஒரு பூவுக்காக வலியவரோடு போர் செய்கையில் உயிரழிவு ஏற்படுமேல், பகை கடந்து பூமியைப் பெறுகின்றதாகிய நலம் கெடுமே! இவ்வாறு செய்தல் முறை யாமோ!'' என்று தருமன் புலம்பி வருந்தும் கருத்தது செய்யுள். ''நீ ஒருத்தன் இல்லையாயின், நானும் தம்பியரும் இல்லாதவர்களே ஆவோம்'', என்று கூறுங் கருத்தின ஈற்றடிகள். அம்மா : அசை.

**70 முன்செய்வெவ் வினையாலோ முடிவினல் வினையாலோ
மின்செய்த கழலானவ் விசயனு மகல்வுற்றான்
பொன்செய்த முடியானும் போயின னினிநானிங்(கு)
என்செய்வ தெனமன்னன் முனியடி யிணைவீழ்ந்தான்.**

[முன் செய் வெவ் வினையாலோ, முடிவு இல் நல் வினை யாலோ, மின் செய்த கழலான் அ விசயனும் அகல்வுற்றான், பொன் செய்த முடியானும் போயினன், இனி நான் இங்கு என் செய்வது? என மன்னன் முனி அடி இணை வீழ்ந்தான்.]

**விளக்கம் :-** முன்னைய பிறவியல் செய்த கொடிய வினையி னாலோ, அல்லது முடிவில்லாத (பயன் நல்கக்கூடிய) நல் வினையினாலோ, மின்போல் ஒளிவிடும் வீரக்கழல் அணிந்த அருச் சுனன், என்னை நீங்கிச் சென்றான், என்பது முதலிரண்டடிகளின் பொருள். முடிவில் வெவ் வினையாலோ, அல்லது, முன்செய் நல் வினையாலோ, என்று இயைத்தும் பொருள் கொள்ளலாம். விசயன் அகன்றது, நல்வினையாலோ, என்றது, அவன் பாசுபதம் பெற்றது கருதி, என்க. பொன் செய்த முடியான் - வீமன்; கிரீடம் தரித்து ஆட்சி புரியும் தகுதியுடையவன், என்பது கருத்து. விசயன் நீங்கியதோடு, வீமனும் நீங்கிச் சென்றதால், துன்பமுற்ற தருமன், இனி என் செய்வேன்? என்று ரோமசமுனிவன் பாதங்களில் விழுந்து வருந்தினான், என்பதாம்.

**71. அஞ்சலை யுரவோனு மாருயி ரழிவில்லான்
விஞ்சைய ரொடும்வெம்போர் விளைந்ததங் கொருகோடி
வஞ்சனை மணிமானம் மாருதி விடுமம்பால்
துஞ்சின னவன்மேலுந் துனிவரு மினிமாதோ.**

[அஞ்சலை, உரவோனும் ஆர் உயிர் உழிவு இல்லான், விஞ்சையரொடும் வெம்போர் விளைந்தது அங்கு ஒரு கோடி;

வஞ்சனை மணிமான் நம் மாருதி விடும் அம்பால் துஞ்சினன், அவன் மேலும் துனி வரும் இனி, மாதோ.]

**விளக்கம் :-** உரவோன் - வீமன். ஒரு கோடி வெம்போர் - மிகப் பல கொடிய போர். மேலும், என்பதிலுள்ள உம்மையை **துனி** என்பதோடு கூட்டுக. அவன் (வீமன்) மேல் இனி (குபேரனுக்கு) துனியும் (கோபமும்) வரும்,—என்க. அல்லது துனி என்பனதத் துன்னி என்பதின் இடைக்குறையாகக்கொண்டு, அவன் இனி மேலும் துனிவரும், என்பதற்கு, வீமன், இதற்கு மேலும், போர் கருதி நெருங்குவான் என்றும் பொருள் கொள்ள லாம். மாதோ : அசை.

### கடோற்கசனோடு அளகை செல்லல்

**72. இவன்மிசை யிடையூறொன் றெய்துறு வதன்முன்யாம்**
**நவநிதி களினாத னன்னக ருறவேண்டும்**
**கவரெயி றுளபேழ்வாய்க் கடோற்கசன் வருமாறிங்கு**
**அவனிப நினையென்றா னரசனு நினைவுற்றான்.**

[இவன் மிசை இடையூறு ஒன்று எய்துவதன்முன் யாம் நவநிதி களின் நாதன் நல் நகர் உற வேண்டும்; கவர் எயிறு உள பேழ்வாய் கடோற்கசன் வருமாறு இங்கு, அவனிப, நினை என்றான், அரச னும் நினைவுற்றான்.]

**விளக்கம் :-** நவநிதிகளின் நாதன் - குபேரன். கவர் எயிறு உள பேழ்வாய் - கிளை போன்ற கோரப் பற்களை உடைய பெரிய வாய். அவனிப - (விளி) அரசனாகிய தருமனே, ''குபேரனது பகை ஏற்படு முன் நாம் அளகை செல்லுதல் அவசியம், கடோற் கசனை இங்கு அழைக்கவும்,'' என்று ரோமச முனிவன் சொல்லத், தருமனும், மகனை நினைத்தான், என்பது பொருள்.

**73. புந்திசெய் வதன்முன்னம் புதல்வனு மொருதேர்மேல்**
**வந்தனன் விரைவோடும் வணங்கின னிருதாண்மேல்**
**எந்தைசொல் லடிநாயேன் பணிவிடை யெதுவென்றான்**
**தந்தையு நிருதன்றன் றாதைத னிலைசொன்னான்.**

[புந்தி செய்வதன் முன்னம் புதல்வனும் ஒரு தேர் மேல் வந்தனன் விரைவோடும், வணங்கினன் இரு தாள்மேல், ''எந்தை சொல், அடி நாயேன் பணிவிடை எது?'' என்றான்; தந்தையும் நிருதன் தன் தாதை தன் நிலை சொன்னான்.]

**விளக்கம் :-** புந்தி செய்வதன் முன்னம் - நினைக்கு முன், அதாவது நினைத்த மாத்திரத்திலே. பணிவிடை எது - நீ ஏவும் பணி யாது. நினைத்த அளவில் விரைந்து வந்து வணங்கி நின்ற நிருதனுக்குத் தருமன், அவனது தந்தையின் நிலையைக் கூறி னான்,—என்பதாம்.

**74. அக்கண மதுகேளா வவரனை வரையுங்கொண்(டு)**
**இக்கண மிடையூறா மெழுமெழு மெழுமென்னா**
**முக்கண னுயிர்நண்பன் வாழ்தரு மூதூர்வாய்**
**திக்குற நெடுவானிற் சென்றன னொருதேர்மேல்.**

[அ கணம் அது கேளா அவர் அனைவரையும் கொண்டு, இ கணம் இடையூறு ஆம் எழும் எழும் எழும் என்னா, முக்கணன் உயிர் நண்பன் வாழ்தரும் முது ஊர்வாய் திக்கு உற நெடுவானில் சென்றனன் ஒரு தேர் மேல்.]

**விளக்கம் :-** அது கேளா, இக்கணம் இடையூறு ஆம், எழும் எழும் எழும் என்னா, அவர் அனைவரையும் ஒரு தேர்மேல் கொண்டு முக்கணன் உயிர் நண்பன் வாழ்தரு மூதூர் வாய், திக்கு உற நெடு வானில் அ கணம் சென்றனன்,-என்பது அன்வயம். அது கேளா - தருமன் கூறியதைக் கேட்டு. இக்கணம் இடையூறு ஆம் - இப்பொழுது துன்பம் உண்டாகக்கூடும். எழும் என்ற அடுக்கு விரைவு பற்றியது. முக்கணான் உயிர் நண்பன் - சிவபெருமானது உயிர் நண்பனாகிய குபேரன், மூதூர் வாய் திக்கு உற - (குபேரன் வாழும்) பழமையான அளகாபுரி பொருந்தியிருக்கின்ற வடதிசை அடைய. ஒரு தேர் - நிருதனது ஒப்பற்ற தேர். விஷயம் அறிந்த கடோற்கசன், தந்தையர், தாயான திரௌபதி ஆகிய அனைவரையும் தன் தேரில் ஏற்றிக்கொண்டு வடதிசையில் பொருந்தியுள்ள அளகையை நோக்கி வானில் விரைந்தான்,—என்க. வாய் திக்கு - பொருந்தியுள்ள (வட) திசை.

**75. சென்றொரு நொடிவேலைச் சிறுவனு மறவீமன்**
**நின்றமர் புரிவெம்போர் நிலமணு குறுமுன்னம்**
**வென்றிகொ ளுரவோனும் வேந்தனை யெதிர்கொள்ளா**
**மன்றல்கொள் மலர்தூவி வணங்கின னிருதாண்மேல்.**

[சென்று ஒரு நொடி வேலை சிறுவனும் மறம் வீரன் நின்று அமர்புரி வெம் போர் நிலம் அணுகுறும் முன்னம், வென்றிகொள் உரவோனும் வேந்தனை எதிர் கொள்ளா, மன்றல் கொள் மலர் தூவி வணங்கினன் இரு தாள்மேல்.]

**விளக்கம் :-** சிறுவன் - வீமனது மகனான கடோற்கசன். உரவோன் - வீமன். வேந்தன் - தருமன். கடோற்கசனும் மற்றவர்களும் போர்க்களம் சேர்ந்ததும், வீமன், எதிர் சென்று தருமனை மலர் தூவி வணங்கினான்,—என்பதாம்.

**76. சதித்தனை சதிசெய்தாய் தம்பியு மலைவாளா**
**வதைத்தனை மணிமான்றன் மன்னுயிர் தனைமன்னோ**
**நிதித்தலை வனுநீடுஞ் சேனையு மினிநின்மேல்**
**கொதித்தெழு முதனாளிற் கோபமு முளதந்தோ.**

[சதித்தனை, சதி செய்தாய் தம்பியும் அலை ; வாளா வதைத் தனை மணிமான் தன் மன் உயிர் தன்னை மன்னோ! நிதி தலை வனும் நீடும் சேனையும் இனி நின்மேல் கொதித்து எழும், முதல் நாளின் கோபமும் உளது, அந்தோ,]

**விளக்கம் :-** சதித்தனை - வஞ்சனை செய்தாய், அதாவது எனக்குத் தெரிவிக்காமல் இங்கே வந்து பொருதலை மேற்கொண் டாய். சதித்தாய் தம்பியும் அல்லை - இவ்வாறு மோசம் செய்த நீ தம்பியும் ஆக மாட்டாய். நிதித் தலைவன் - குபேரன். முதல் நாளின் கோபமும் உளது - இதன் முன் இங்கே வந்து காவல் படையைக் கொன்ற கோபமும் அவனுக்கு உளது. அந்தோ : இரக்கப் பொருளது. மன்னோ : அசை. வீமனைத் தருமன் சினந்து கூறினான், என்க.

**77. பொற்றொடி மொழியாலிப் போதொரு பொருளாக்கிச்**
**செற்றனை சிவனண்பன் சேனையை நீயென்னாக்**
**கொற்றவ னிளையான்மேற் கொதித்தன மொழிபோதங்(கு)**
**உற்றதை யுரைசெய்வா னோடின னொருதூதன்.**

[பொன் தொடி மொழியால், இ போது ஒரு பொருள் ஆக்கி செற்றனை சிவன் நண்பன் சேனையை நீ என்னா, கொற்றவன் இளையான் மேல் கொதித்தன மொழிபோது, அங்கு உற்றதை உரை செய்வான் ஓடினன் ஒரு தூதன்.]

**விளக்கம் :-** பொன் தொடி - திரௌபதி. ஒரு பெண்ணின் பேச்சைக் கேட்டுக்கொண்டு, ஒரு மலரைப் பொருளாகக் கருதி, குபேரனது சேனையை அழித்தது அமைவதாமோ, என்று கொதிப் புடைய (கோபமுள்ள) வார்த்தைகளைக் கூறிக்கொண்டிருக்கை யில், இங்கே நிகழ்ந்தன கூறக் குபேரனிடம் ஒரு தூதன் ஓடினான்,- என்பதாம். மொழிபோது - மொழிந்தபோது.

**78. அழுதறல் குதிபாயுங் கண்ணின னயிலம்பால்**
**உழுதுடன் முழுதெல்லா முடனுகு செம்புண்ணீர்**
**வழிதர மனமெல்லா மறுகுற விறைபொற்றாள்**
**தொழுதன னியல்பெல்லாந் துணிவுறும் வகைசொன்னான்.**

[அழுது அறல் குதி பாயும் கண்ணினன், அயில் அம்பால் உழுது உடல் முழுது எல்லாம் உடன் உகு செம்புண் நீர் வழிதர, மனம் எல்லாம் துணிவு உறும் வகை சொன்னான்.]

**விளக்கம் :-** அறல் - நீர். குதி பாய்தல் - பெருகுதல். அயில் அம்பு - வீமனது கூர்மையான அம்பு. உழுது - தைக்கப்பெற்று. உடல் முழுது எல்லாம் - உடல் முழுவதும் ஆகிய எல்லா இடங்களி லும். உடன் உகு செம்புண் நீர் - மாமிசத்தோடு சிந்துகின்ற இரத்தம். மனம் மறுகுற-மனம் கலங்க, அல்லது துன்பங்கொள்ள.

இயல்பு எல்லாம் - முறையே நிகழ்ந்தவற்றை எல்லாம். துணிவு உறும் வகை கூறினான் - நம்பிக்கை உண்டாகும் வகை கூறினான். போர்க்களத்தில் நிகழ்ந்தவற்றை எல்லாம், அடிபட்டு உயிர் தப்பிய ஒரு தூதன் அழுதுகொண்டு, அறல் (நீர்) பெருகுகின்ற கண்ணி னனாய்க் குபேரனிடம் விரிவாய்க் கூறினான், என்க.

வேறு

**79. அழுங்கினான் மன்னனல் லறிவு மாவியும்**
**மழுங்கினான் வடிவமு முடியும் வல்விடம்**
**விழுங்கினா னெனநனி வெகுண்டு நெஞ்சுறப்**
**புழுங்கினா னிவையிவை புகறன் மேயினான்.**

[அழுங்கினான் மன்னன் நல் அறிவும் ஆவியும் மழுங்கினான், வடிவமும் முடியும் (முகமும்) வல்விடம் விழுங்கினான் என நனி வெகுண்டு நெஞ்சு உற புழுங்கினான், இவை இவை புகறல் மேயினான்.]

**விளக்கம் :-** மன்னன் (தூதன் சொல்லியது கேட்டு) வல்விடம் விழுங்கினான் என அறிவும் ஆவியும் அழுங்கினான், வடிவமும் முடியும் மழுங்கினான், நனி வெகுண்டு நெஞ்சு உற புழுங்கினான் (ஆய்) இவை இவை புகறல் மேயினான்,—என்பது அன்வயம். மன்னன் - குபேரன். அறிவும் ஆவியும் அழுங்கினான் - (கொடிய விஷத்தை உட்கொண்டவன்போல்) அறிவும் உயிரும் சோர்வுறப் பெற்றான். வடிவமும் முடியும் மழுங்கினான் - தனது யாக்கையும் முகமும் ஒளி குன்றப்பெற்றான், முடி - (ஆகுபெயர்) முகம். நெஞ்சு உற புழுங்கினான் - மிகுதியா மனக் கொதிப்புக் கொண்டான். நிகழ்ந்தன கேட்ட குபேரன், விஷம் உண்டவனைப்போல், அறிவும் ஆவியும் நிலை கெடவும், யாக்கையும் முகமும் ஒளி மழுங்கவும், சினம் தூண்டப்பெற்றவனாய் மனக் கொதிப்புடன் இவை இவை கூறுவானாயினான்,—என்பதாம்.

**80. ஒருவனா மானுட னோதை மாநகர்**
**வருவனாம் விறல்மணி மானொ டுஞ்சமர்**
**பொருவனா மவனுயிர் பொன்ற வென்றிடர்**
**தருவனா மென்பெயர் தனத னாகுமாம்.**

[ஒருவன் ஆம் மானுடன், ஓதை மாநகர் வருவன் ஆம், விறல் மணிமானொடும் சமர் பொருவன் ஆம், அவன் உயிர் பொன்ற வென்று இடர் தருவன் ஆம், என் பெயர் தனதன் ஆகும் ஆம்.]

**விளக்கம் :-** ஓதை - மதில். இங்கே கடத்தற்கு அரிய மதில். பொன்ற - அழிய, ஒழிய. இடர் - துன்பம். தனதன் - (தநதன்) செல்வத்தை அளிப்பவன். ஒருவனாம், வருவனாம், பொருவனாம், தருவனாம், ஆகுமாம், என்பவற்றிலுள்ள **ஆம்** என்பது, வியப்பொடு ஒரு மனிதனால் நேர்ந்த பரிபவத்தை நினைத்துச் சினப்பதைக் குறிக்கும்.

**81. அடுப்பனா மளகையை யறிவின் மானுடன்**
**தொடுப்பனாம் பொருசரஞ் சூழ்ந்த சேனையைப்**
**படுப்பனா மதுகொடு பதுமந் தன்னைவந்(து)**
**எடுப்பனா மென்பெய ரிராச ராசனாம்.**

[அடுப்பன் ஆம் அளகையை அறிவு இல் மானுடன், தொடுப்பன் ஆம் பொரு சரம், சூழ்ந்த சேனையை படுப்பன் ஆம் அது கொடு, பதுமம் தன்னை வந்து எடுப்பன் ஆம், என் பெயர் இராசராசன் ஆம்.]

**விளக்கம் :-** அறிவு இல் மானுடன் அளகையை அடுப்பனாம், பொரு சரம் தொடுப்பனாம், அதுகொடு - (அந்த அம்பைக் கொண்டு) சூழ்ந்த சேனையைப் படுப்பனாம், பதுமம் தன்னை வந்து எடுப்பனாம், என் பெயர் இராசராசனாம்,—என்பது அன்வயம். அடுத்தல் - அடைதல், நெருங்குதல். படுத்தல் - அழித்தல். பதுமம் - தாமரை மலர். ராசர் - இயக்கர். இராசராசன் - இயக்கர் தலைவன். நிகழ்ந்த காரியம் இராசராசன் என்ற பெயருக்கு ஒரு மறு உண்டாக்கிவிட்டதே என்ற வருத்தத்தோடு சினமும் கொண்டான், என்பது கருத்து.

**82. இந்திர னல்லனா மீச னல்லனாம்**
**சந்திர னல்லனாந் தபன னல்லனாம்**
**வந்தொரு வலியிலா மானு டன்கொலாம்**
**கந்தரு வரையெலாங் களத்தி னூறுவான்.**

[இந்திரன் அல்லன் ஆம், ஈசன் அல்லனாம், சந்திரன் அல்லன் ஆம், தபனன் அல்லனாம்; வந்து, ஒரு வலி இலா மானுடன் கொல் ஆம் கந்தருவரை எலாம் களத்தில் நூறுவான்.]

**விளக்கம் :-** தபனன் - சூரியன். நூறுதல் - அழித்தல். இந்திரன், சிவபெருமான், சந்திரன், சூரியன் ஆகிய நால்வரே இக் குபேர பட்டணத்திற்கு வரத்தக்கவர். அவ்வாறாக, தேவரினும் தாழ்ந்தவனாகிய ஒரு மனிதன், இங்கே வந்ததுமல்லாமல், இயக்கர்களையும் அழித்தானே, என்று குபேரன், நாணி வருந்திய படி. கொல் : அசை.

## குபேரன் போரெழல்

**83. வென்றகோச் சித்தரும் விஞ்சை வேந்தரும்**
**நின்றகின் னரரும்வா ணிருத ரும்புடை**
**துன்றுசா ரணர்களுஞ் சூழ்மின் மொய்ம்பனை**
**என்றுகொண் டெழுந்தன னியக்கர் தம்பிரான்.**

[வென்ற கோ சித்தரும் விஞ்சை வேந்தரும், நின்ற கின்னரரும் வாள் நிருதரும் புடை துன்று சாரணர்களும் சூழ்மின் மொய்ம்பனை, என்று கொண்டு எழுந்தனன் இயக்கர் தம்பிரான்.]

**விளக்கம் :-** வென்ற கோ சித்தர் - வெற்றி அன்றித் தோல்வி அறியாத சிறந்த சித்தர். விஞ்சை வேந்தர் - வித்யாதரத் தலைவர். நின்ற கின்னரர் - மேன்மையில் நிலைத்து நின்ற கின்னரர். நிருதர்-

அசுரர். புடை துன்று சாரணர் - நமது நகர்ப்புறங்களில் நெருங்கியுள்ள சாரணர். மொய்ம்பனை சூழ்மின் - வலிமை மிக்க அம் மனிதனை வளைந்து கொள்ளுங்கள். இயக்கர் தம்பிரான்-இயக்கர் தலைவனான குபேரன், சித்தர் முதல் சாரணர் ஈறாகக் கூறப்பட்டவர் பதினெட்டு வகையான தேவ கணத்தைச் சேர்ந்தவர். குபேரன் தேவ கணங்களின் துணைகொண்டு போரெழுந்தான், என்பதாம். சூழ்மின், என்று படர்க்கையில் வந்த முன்னிலை முடிவு, இடவழுவாகும்.

**84.** **உருத்திர சேனனப் பொழுது ணர்ந்துதன்**
**கருத்தொடு தாதைபொற் கழல்வ ணங்கியே**
**மருத்தருள் பவன்வர லாறு மற்றவன்**
**திருத்தகு துணைவர்தஞ் செயலுங் கூறுவான்.**

[உருத்திர சேனன் அப்பொழுது உணர்ந்து, தன் கருத்தொடு தாதை பொன் கழல் வணங்கியே, மருத்து அருள்பவன் வரலாறும் (மற்று) அவன், திரு தகு துணைவர் தம் செயலும் கூறுவான்.]

**விளக்கம் :-** உருத்திர சேனன் - குபேரனது குமாரன். உணர்ந்து - தந்தையின் கருத்தை அறிந்து. கருத்தொடு - மனப் பூர்வமாய், அல்லது அன்போடு. மருத்து - வாயு. போரெழுந்த தந்தையிடம் தனயன், வீமனது வரலாற்றையும், அவனது மேன்மையுற்ற உடன் பிறந்தவர்களின் செயல்களையும் கூறலுற்றான்.— என்பதாம்.

**85.** **எந்தைகே ளிவனைமா னுடனென் றெண்ணலை**
**முந்தைமுப் புரம்பொடி படுத்த மூர்த்திதன்**
**சிந்தையா லைவரிந் திரரைச் சென்மென**
**வந்தனர் நிலமகள் வருத்தம் மாற்றுவான்.**

[எந்தை கேள், இவனை மானுடன் என்று எண்ணலை, முந்தை முப்புரம் பொடி படுத்த மூர்த்தி தன் சிந்தையால் ஐவர் இந்திரரை சென்ம் என, வந்தனர் நிலமகள் வருத்தம் மாற்றவே.]

**விளக்கம் :-** எண்ணலை - எண்ணாதே. (சிவபெருமான்) தனது திருவுளக் கருத்தின் முடிவால், தாம் செருக்கு அடக்கிய இந்திரர் ஐவரைப் பூலோகம் சென்று பிறவுங்கள் என்று விதிக்க, பூதேவியின் பாரத்தைக் குறைப்பதற்கு அவர்கள் மனிதராய் வந்து பிறந்தனர், - என்பது ஈற்றடியின் பொருள். இதன் விவரம் ஆதி பருவத்தில் கூறப்பட்டுள்ளது. செல்லும், என்ற ஏவற் பன்மை, சென்ம், என நின்றது.

**86.** **தருமனென் றவனிபன் தம்பி யுமிவன்**
**வரிசிலை விசயனென் றொருவன் மற்றவன்**
**புரிதிற லசுரரைப் பொருதங் கிந்திரன்**
**திருவம ருலகெலாந் திருத்தி வைகினான்.**

[தருமன் என்ற அவனிபன் தம்பியும் இவன், வரிசிலை விசயன் என்ற ஒருவன் மற்றவன்; புரிதிறல் அசுரரை பொருது அங்கு இந்திரன் திரு அமர் உலகு எலாம் திருத்தி வைகினான்.]

**விளக்கம் :-** இப்பொழுது இங்கே வந்தவன், தருமன் என்பானுடைய தம்பி. வரிசிலை விசயன் என்பான், அத் தருமனுக்கு மற்றொரு தம்பியாவான். அவன், திறல் புரி அசுரரை அழித்து, தேவருலகை அச்சம் நீங்குமாறு செய்து, அங்கே தங்கியுள்ளான், — என்பது பொருள். பொருது, என்பது கொன்று, என்ற பொருளது. திரு அமர் - செல்வம் அமர்ந்த, செல்வம் மிகுந்த.

**87. வேடமோ மானுடம் வெகுண்ட போதலால்**
**ஆடவர் பெருமையை யறிய லாகுமோ**
**நாடிய சிறுகுற ளொன்று நம்பகேள்**
**நீடிய முகடுற நிமிர்ந்த தில்லையோ.**

[வேடமோ மானுடம், வெகுண்டபோது அலால் ஆடவர் பெருமையை அறியல் ஆகுமோ! நாடிய சிறு குறள் ஒன்று, நம்ப, கேள், நீடிய முகடு உற நிமிர்ந்தது இல்லையோ.]

**விளக்கம் :-** வீமார்ச்சுரனர்களது வேஷமோ மனித வடிவம். இவ் வாண்மக்கள் வெகுண்ட போதல்லால், மற்ற சமயங்களில் பெருமையால் மிக்கவர். (மகாபலியை) நாடிச் சென்ற சிறு குறள் ஒன்று, உயர்ந்த வான் முகட்டை எட்டும்படி வளரவில்லையோ! ஆகவே, ஐயனே, கேள், இவனை மானுடன் என்று அலட்சியம் செய்யாதே,— என்று கூறும் கருத்தது.

**88. மற்றுள வரையெலா நடுங்க வார்பிறைக்**
**கற்றையஞ் சடையவன் கயிலை மாக்கிரி**
**உற்றுட னெடுத்தவ னுயிரும் வாழ்க்கையும்**
**செற்றவர் மனிதரோ தேவ ரோவையா.**

[மற்று உளவரை எலாம் நடுங்க, வார் பிறை கற்றை அம் சடையவன் கயிலை மா கிரி உற்று உடன் எடுத்தவன் உயிரும் வாழ்க்கையும் செற்றவர் மனிதரோ, தேவரோ, ஐயா.]

**விளக்கம் :-** மற்றுள வரை - கயிலை மலை ஒழிந்த மற்ற மலைகள். பிறை வார் கற்றை அம் சடையவன் - பிறை சூடிய நீண்ட கற்றையான அழகிய சடா முடியை உடைய சிவபெருமான். உற்று உடன் எடுத்தவன் - கயிலையிடம் வந்து உடனே அதைப் பெயர்த்து எடுத்த இராவணன். ஐயனே, கயிலையை எடுத்தவனது உயிரும் வாழ்க்கையும் அழித்தவர், மனிதரோ, அல்லது தேவரோ? அவ்வாறே, இவனும் தேவ கணத்தாரை அழிக்கும் ஆற்றலுடையவனே, ஆவான்,—என்று கூறியபடி.

**89. மட்டவிழ் தொடைமணி மானை யோர்முனி
ஒட்டிய வரிசிலை மனித னாலுயிர்
பட்டழி குவையெனப் பகர்ந்து சாபமன்(று)
இட்டது முணர்ந்தவற் கிரங்க லெந்தைநீ.**

[மட்டு அவிழ் தொடை மணிமானை ஓர் முனி, ஒட்டிய வரி சிலை மனிதனால் உயிர் பட்டு அழிகுவை என பகர்ந்து, சாபம் அன்று இட்டதும் உணர்ந்து, அவற்கு இரங்கல் எந்தை நீ.]

**விளக்கம் :-** மட்டு அவிழ் தொடை - மணங் கமழும் மாலை. ஓர் முனி - அகத்திய முனி. ஒட்டிய வரிசிலை மனிதன் - பொருந்திய கட்டமைந்த வில்லை ஏந்திய மனிதன். அவற்கு இரங்கல் - மணிமானுக்காக வருந்தாதே, (முனிவர் இட்ட சாபம் பலித்தது). ஒரு சமயம் **குசவதி** என்ற இடத்திற்குக் குபேரன் இயக்கர்களுடன் செல்லுகையில், மணிமான் என்ற சேனைத் தலைவன் உமிழ்ந்த எச்சில், யமுனையின் கரையில் நிஷ்டையிலிருந்த அகத்தியர் மேல் விழ, அவர், ''என் மேல் உமிழ்ந்தவன், ஒரு மனிதனால் அழிவான்'', என்று சாபம் இட்டார், என்பது, கதை.

**90. அருத்தியே தென்றவற் கருளி யையவிங்(கு)
இருத்தியேல் வாழ்வுமின் னுயிரு மெய்தலாம்
திருத்திய சேனையு நீயுஞ் சென்றுமேல்
உறுத்தியே லுறுபய னொன்று மில்லையால்.**

[அருத்தி எது என்று அவற்கு அருளி ஐய, இங்கு இருத்தியேல் வாழ்வும் இன் உயிரும் எய்தலாம்; திருத்திய சேனையும் நீயும் சென்று மேல் உறுத்தியேல் உறு பயன் ஒன்றும் இல்லை, ஆல்.]

**விளக்கம் :-** அருத்தி - விருப்பம். திருத்திய சேனை - நன்றாக அணி வகுக்கப்பெற்ற சேனை. உறுத்தியேல் - கோபிப்பாயானால், அதாவது பொருவாயானால். அவனது அருத்தி அறிந்து அளிப்பதே செய்வதற்குரியது, மற்றுப் பொருதலால் எப்பயனும் ஏற்படாது, என்று மகன் போர் விலக்கினர்ன், என்க.

**91. என்றிவை திருமக னியம்பி யேத்தவும்
நின்றில னெனதுயிர் நேய நண்பனைக்
கொன்றவன் றன்னுயிர் கொள்வன் யானெனாச்
சென்றனன் புட்பகத் தேரின் மீதரோ.**

[என்று இவை திருமகன் இயம்பி ஏத்தவும், நின்றிலன்; எனது உயிர் நேயம் நண்பனை கொன்றவன் தன் உயிர் கொள்வன் யான் எனா, சென்றனன் புட்பகம் தேரின்மீது அரோ.]

**விளக்கம் :-** (உக்ரசேனன் இவ்வாறு கூறிப் போர் செய்யாமை வேண்டித் துதிக்கவும்) நின்றிலன் - பொருதல் ஒழித்தலில் நில்லாதவனாய், (புஷ்பக விமானத்தில் ஏறிப் போருக்குச் சென்றான்).

**92. மண்ணெலா மிரதமுங் களிறும் வாசியும்**
**விண்ணெலாம் விமானமும் விபுத ரீட்டமும்**
**பண்ணெலா முரல்வன பணையின் குப்பையும்**
**எண்ணலா மாவதோ வியக்கர் சேனையே.**

[மண் எலாம் இரதமும் களிறும் வாசியும், விண் எலாம் விமானமும் விபுதர் ஈட்டமும், பண் எலாம் முரல்வன பணையின் குப்பையும், எண்ணல் ஆம் ஆவதோ இயக்கர் சேனையே.]

**விளக்கம் :-** வாசி - குதிரை. விபுதர் - தேவர். சப்த சுவரங்களை ஒலிப்பனவான வாத்திய விசேஷங்களின் மிகுதியும்,— என்பது மூன்றாவது அடியின் பொருள். விண்ணிலும் மண்ணிலும் எண்ணில் அடங்காத இயக்கர் படைகள் தேவ வாத்தியங்கள் முழங்க வீமனோடு பொரச் சென்றன,—என்க.

**93. விண்டல முறவரு சேனை வேலையும்**
**மண்டல முறவெழு மகர வாரிபோல்**
**எண்டிசை யுறப்பரந் தெழுந்த சேனையும்**
**கண்டனன் கண்ணுறக் கருணைக் கண்ணனே.**

[விண்தலம் உற வரு சேனை வேலையும், மண்தலம் உற எழும் மகரம் வாரிபோல் எண் திசை உற பரந்து எழுந்த சேனையும் கண்டனன் கண் உற கருணை கண்ணன், ஏ.]

**விளக்கம் :-** விண்தலம் - வானம். சேனை வேலை - சேனா சமுத்திரம். மண்தலம் - பூமி. மகரம் வாரி - சுறா மீன்களை உடைய சமுத்திரம். கருணைக் கண்ணன்-கண்ணோட்டமுடைய கண்களையுடைய தரும புத்திரன். வானிடத்தைத் தடவிக் கொண்டு வருகின்ற சேனா சமுத்திரத்தையும், பூமி முழுதும் பொருந்தும்படி எழும் பிரளயக் கடல்போல் எட்டுத் திக்கிலும் பொருந்தும்படி பரவி எழுந்த சேனை வெள்ளத்தையும், தருமன், கண்ணில் பொருந்தப் பார்த்தான்,—என்பது பொருள். நீர், என்ற பொருளுடைய வாரி, இலக்கணையாய்க் கடலை உணர்த்திற்று.

தருமன் குபேரனை வணங்குதல்

**94. உணங்கினா னுடலமு முணர்வு மாவியும்**
**பிணங்கினா னிளைஞனைப் பேதை பங்கனோ(டு)**
**இணங்கினான் புகழெலா மேத்தி நெஞ்சுற**
**வணங்கினான் மணிமுடி மன்னர் மன்னனே.**

[உணங்கினான் உடலமும் உணர்வும் ஆவியும், பிணங்கினான் இளைஞனை, பேதை பங்கனோடு இணங்கினான் புகழ் எலாம் ஏத்தி, நெஞ்சு உற வணங்கினான், மணிமுடி மன்னர் மன்னனே.]

**விளக்கம் :-** உணங்கினான் - ஒடுங்கினான். இளைஞனை பிணங்கினான் - தம்பியான வீமனைக் கோபித்துக்கொண்டான்.

பேதை பங்கன் - உமாதேவியை வாமபாகத்தில் கொண்ட சிவபெருமான். இணங்கினான் - அப் பெருமானோடு நட்பின் நெருக்கமுடைய குபேரன். உடலும் உயிரும் உணர்வும் ஒடுங்கி நின்று தம்பியைக் கடிந்து, பெருமையுடைய அக் குபேரனைப் போற்றி, மனப்பூர்வமான வணக்கத்தைச் செய்தான், என்பதாம்.

**95. அனகனே யமலனே யளகை வேந்தனே**
**தனதனே சங்கரன் றன்ச காயனே**
**புனிதனே குபேரனே புலத்தி யன்குல**
**செனகனே செல்வனே தேவ தேவனே.**

[அனகனே, அமலனே, அளகை வேந்தனே, தனதனே, சங்கரன் தன் சகாயனே, புனிதனே, குபேரனே, புலத்தியன் குலம் சனகனே, செல்வனே, தேவதேவனே.]

**விளக்கம் :-** அனகன் - பாவம் இல்லாதவன். அமலன் - குற்றம் இல்லாதவன். தனதன்-வேண்டினர் வேண்டியபடி வழங்கும் வள்ளல். புனிதன் - பரிசுத்தமானவன். புலத்தியன் குலசெனகன் - புலஸ்தியப் பிராஜபதியின் புத்திரனான விசிரவசுவினிடம் தோன்றினவன்.

**96. வெறுப்பதோர் விளைந்தது மிகைய தாயினும்**
**மறுப்பதோ வென்மொழி மாறு கொண்டெதிர்**
**செருப்பதோ விளையவர் செய்த தீமைகள்**
**பொறுப்பதே பெரும்புகழ் புனித மூர்த்தியே.**

[வெறுப்பதோ விளைந்தது மிகை அது ஆயினும் மறுப்பதோ என் மொழி, மாறுகொண்டு எதிர் செருப்பதோ, இளையவர் செய்த தீமைகள் பொறுப்பதே பெரும் புகழ் புனித மூர்த்தியே.]

**விளக்கம் :-** வெறுக்கத்தக்க காரியம் (என் தம்பியின் அறியாமையினால்) விளைந்துவிட்டது. நிகழ்ந்தது பெரிய குற்றமானாலும், எனது வேண்டுகோளைப் புனித மூர்த்தியான நீ மறுக்கக்கூடாது; இளையவர் செய்த குற்றங்களுக்காகப் பகை கொண்டு போர் செய்து அழிப்பது அமையாது; பொறுப்பதே பெரும் புகழ் தருவதாகும்,- என்று கூறித் தருமன் பிரார்த்தித்தான்,—என்பதாம்.

## சினந் தணிந்த குபேரன் தருமனை உபசரித்தல்

**97. எனவிவ னிவைபகர்ந் திசைய வேத்தலும்**
**முனிவொடு வயிரமு முரணு மாறியே**
**மனனுற மகிழ்ந்தெதிர் கொண்டு மார்புறத்**
**தனதனுந் தருமனைத் தழீஇக்கொண் டானரோ.**

[என இவன் இவை பகர்ந்து இசைய ஏத்தலும், முனிவொடு வயிரமும் முரணும் மாறியே, மனன் உற மகிழ்ந்து, எதிர்கொண்டு மார்பு உற தனதனும் தருமனை தழீஇக் கொண்டான், அரோ.]

**விளக்கம் :-** இசைய ஏத்தலும் - பொருத்தமுடன் துதித்தலும். வயிரம் - க்ஷாத்திரம். முரண் - பகை. தருமன் துதிக்கவே, குபேரன், சினம் மாறி, அவனை மகிழ்ச்சியோடு மார்புறத் தழுவிக் கொண்டான், என்பதாம்.

**98. நிலத்திய றண்ணளி நிருப நீமதி
குலத்திய லுடன்வரு குமர னாதலால்
சலத்திய றருமுரண் டணிந்தென் யானெனப்
புலத்தியன் மகன்மகன் புகன்று போற்றினான்.**

[நிலத்து இயல் தண்ணளி நிருப நீ மதிகுலத்து இயலுடன் வரு குமரன் ஆதலால், சலத்து இயல் தரும் முரண் தணிந்தென் யான், என புலத்தியன் மகன் மகன் புகன்று போற்றினான்.]

**விளக்கம் :-** பூலோகத்திலுள்ள ஜீவராசிகளினிடத்தே இயல்பாகப் பொருந்த வேண்டிய கருணை உடைய அரசனே, நீ சந்திரகுலத்திற்கு இயல்பாகும் பண்புடன் தோன்றிய குமரன் ஆகையால், நான் கோபத்தோடு இயல்பாக வரும் பகைமையும் தணிந்தவன் ஆயினேன், என்று, புலத்தியனது பேரனான குபேரன் சொல்லித் தருமனைக் கொண்டாடினான்,—என்பது பொருள். சந்திரன்முன் வெம்மை தணிவது போல், உனது சாந்த குணத்தின் முன் நான், பகையாகிய வெம்மை தணிந்தவ னானேன், என்று குபேரன் கூறினான், என்க.

## தருமன் முதலியோர் அளகை செல்லல்

**99. என்னகர் நின்னக ரென்று வேறிலை
நின்னக ரிதுமுத னீங்கள் வாழ்வுறும்
தொன்னக ரெனதெனத் துணைவர் தம்மொடு
மன்னனைத் தன்னகர் கொண்டு மன்னினான்.**

[என் நகர் நின் நகர் என்று வேறு இலை, நின் நகர் இது முதல், நீங்கள் வாழ்வு உறும் தொல் நகர் எனது என, துணைவர் தம்மொடு மன்னனை தன் நகர் கொண்டு மன்னினான்.]

**விளக்கம் ;-** என் நகர் வேறு, நின் நகர் வேறு என்று (என்பது) இலை; இது முதல் (என் நகர்) நின் நகர், நீங்கள் வாழ்வுறும் தொல் நகர் என்னது, என்று கூறி இயக்கர்கோன், தம்பியர் தம்மொடு மன்னனை (தருமனை) தன் நகர் அழைத்துக்கொண்டு சென்றான்,—என்பதாம். இப்பொழுது வனத்தில் வசிப்பவர்களாயினும், குருநாட்டுத் தலைவர்களாதலால், தொல் நகர், என்பது குருநாட்டைக் குறிக்கும்.

**100. திருத்தகு நகரியுஞ் சிறப்புஞ் செல்வமும்
மருத்தகு கற்பக வனமும் வாவியும்
குருத்தகு மணிகளின் குழாமுங் கோயிலும்
கருத்துற மகிழ்ந்துகண் களிப்பக் காணவே.**

[திருதகு நகரியும் சிறப்பும் செல்வமும், மரு தகு கற்பகவன மும் வாவியும், குரு தகு மணிகளின் குழாமும், கோயிலும், கருத்து உற மகிழ்ந்து கண் களிப்ப காணவே,—காட்டினான், என்று அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** தகு - பொருந்தின. மரு - வாசனை, வாவி- நீர் நிலை. குரு - சிறந்த, உயர்ந்த. குழாம் - குவியல்கள். கோயில் - குபேரனது மாளிகை. கருத்து உற மகிழ்ந்து - மனம் மிக மகிழ்ந்து, காண(ஏ) - காணும்படி, (காட்டினான் என்க). கற்பகவனம், என்பது கற்பகத்தை ஒத்த **சைத்ராதம்** என்னும் மரங்களைக் கொண்ட சோலை, என்ற பொருளது.

**101. காட்டினான் றன்மனக் கருணை வெள்ளநீர்**
**ஆட்டினா னன்கலத் தமுத மன்புடன்**
**ஊட்டினா னுகர்ந்துப சரித்துச் செங்கையால்**
**நீட்டினா னாடையு நிதிகள் யாவுமே.**

[காட்டினான், தன் மனம் கருணை வெள்ளம் நீர் ஆட்டி னான், நல் கலத்து அமுதம் அன்புடன் ஊட்டினான், உகந்து உபசரித்து செம் கையால் நீட்டினான் ஆடையும் நிதிகள் யாவுமே.]

**விளக்கம் :-** மனக் கருணை வெள்ளம் நீர் ஆட்டினான் - தனது உள்ளம் எழுந்த அன்பின் மிகுதியால் தருமன் முதலியோரை நீராடச் செய்தான். நன்கலத்து அமுது அன்புடன் ஊட்டினான் - உயர்ந்த பாத்திரங்களில் அமுதம் போன்ற இனிய உணவு வகை களை உண்ணச் செய்தான். உகந்து உபசரித்து - மனமகிழ்ச்சி யோடு பலவிதமான உபசாரங்களைச் செய்து. ஆடைகளையும், பலவகைப்பட்ட செல்வங்களையும் (தனது சிவந்த கைகளால்) மிகுதியாக அளித்தான், என்பது,—ஈற்றடியின் பொருள்.

**102. அத்தின புரிதனக் கதிப நீவர**
**இத்தின மென்றவப் பயனி ருந்தவா**
**நித்தனை யெனதுயிர் நேய நண்பினால்**
**ஒத்தனை யெனவிவை யுரைசெய் தானரோ.**

[அத்தினபுரி தனக்கு அதிப, நீ வர, இ தினம் என் தவம் பயன் இருந்த ஆ(று)! நித்தனை எனது உயிர் நேயம் நண்பினால் ஒத்தனை, என இவை உரை செய்தான், அரோ.]

**விளக்கம் :-** அத்தினபுரிக்கு அதிபனே, இத்தினம் நீ (இங்கே) வருதற்கு, என் தவப்பயன் இருந்த விதம் வியக்கத்தக்கதாகும்; எனது உயிரோடு ஒத்த அன்புடைய நட்பினால், நித்தனை (சிவ பிரானை) ஒத்தனை, எனக் குபேரன் இவ் வார்த்தைகளைத் தரு மனை நோக்கி முகமனாகக் கூறினான், என்பதாம். நித்தன் - சிவபிரான்.

## எழுசீர் ஆசிரிய விருத்தம்

**103. நெருந லிந்திரபு ரத்தி லிந்திரனும் யாமு நீடவைவயி ருந்தபின்பு**
**உருந லந்திகழு மதன ராசனென வொருவ னெய்தலு மவனையித்**
**திருந லம்புதிய செம்மல் யாவனென மற்ற வன்செயலும் வெற்றியும்**
**குருகு லம்பெறுகு லேச னென்பதுவு நின்ற வானவர்கள் கூறினார்.**

[நெருநல் இந்திர புரத்தில் இந்திரனும் யாமும் நீடு அவை இருந்த பின்பு, உரு நலம் திகழும் மதன ராசனென, ஒருவன் எய்தலும், திரு நலம் புதிய செம்மல் யாவன் என, மற்று அவன் செயலும் வெற்றியும், குருகுலம் பெறு குல ஈசன் என்பதுவும் நின்ற வானவர்கள் கூறினார்.]

**விளக்கம் :-** நெருநல் - நேற்று, இறந்தகாலம் குறிக்கும் ஓரிடைச் சொல். நீடு அவை - நீண்ட, அல்லது பெரிய சுதர்மை என்னும் இந்திரசபை. செம்மல் - ஆண்பால் சிறப்புப் பெயர். நேற்று இந்திர சபையில் இந்திரனோடு யாம் இருக்கையில் வடி வழகின் நலம் விளங்குகின்ற மன்மதன் என்று சொல்லும்படி ஒருவன் வரலும், அழகின் சிறப்பினையுடைய புதியவனாகிய இச் செம்மல் யாவன், என்று நான் கேட்க, அங்கே இருந்த தேவர் கள், அவனது அரிய வில் தொழிலையும், வெற்றியையும், அவன் சிறப்புடைய குருகுலத்து மன்னவன் என்பதையும் கூறினார்கள்,— என்பது பொருள். இவ்வாறு குபேரன் கூறியபடி.

**104. அந்த விண்ணுலகி னின்று நின்றுணைவ னமரர் சூழ்வர நாளையே**
**இந்த மண்ணுலகு நீயும் வாழ்வுபெற விந்தி ரன்றனுட னெய்துமால்**
**எந்த மண்ணுலகு நின்ன தாகுமிட ருற்றி ரங்கலென மகிழ்வினின்**
**கந்த வண்ணமல ருங்கொ டுத்துவிடை நல்கி னானளகை காவலன்.**

[அந்த விண் உலகினின்று நின் துணைவன் அமரர் சூழ்வர நாளையே இந்த மண் உலகும் நீயும் வாழ்பெற இந்திரன் தனுடன் எய்தும் (ஆல்), எந்த மண் உலகும் நின்னதாகும், இடர் உற்று இரங்கல் என, மகிழ்வினின் கந்தம் வண்ணம் மலருங் கொடுத்து விடை நல்கினான், அளகை காவலன்.]

**விளக்கம் :-** அந்த விண்ணுலகிலிருந்து உன் தம்பி தேவர் சூழ இந்திரனோடு நாளையே, இந்த மண்ணுலகமும் நீயும் வாழ்ச்சி

பெற வந்து சேர்வான், என்பது முதலிரண்டடிகளின் பொருள். இந்த மண்ணுலகம் முழுதும் உனதாகும், வருந்த வேண்டா, என்று கூறி, மலரையும் மகிழ்வுடன் கொடுத்துக் குபேரன், மண்ணுலகம் திரும்பிச் செல்ல விடையும் கொடுத்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

## தருமன் கானகம் மீளல்

**105.** **ஐய நின்னையறி யாம னின்னகரி**
**லணுகி னன்சிறுவ னாதலின்**
**செய்த தீமைகள்பொ றுத்தி யொன்றுநனி**
**திருவு ளத்திடைகொ ளேலெனா**
**மொய்கொ டாமமுடி யுறவ ணங்கிமுடி**
**மன்னர் மன்னனிளை யோரொடும்**
**மைத வழ்ந்துலவு மாட நீள்புரிசை**
**ஞாயில் வாயிறனி லெய்தினான்.**

[ஐய, நின்னை அறியாமல் நின் நகரில் அணுகினன் சிறுவன் ஆதலின், செய்த தீமைகள் பொறுத்தி, ஒன்றும் நனி திரு உளத்திடை கொளேல், எனா மொய் கொள் தாமம் முடி உற வணங்கி முடிமன்னர் மன்னன் இளையோரொடும் மை தவழ்ந்து உலவும் மாடம் நீள் புரிசை ஞாயில் வாயில் தனில் எய்தினான்.]

**விளக்கம் :-** (ஐய, சிறுவனாதலின், உனது மேன்மை அறியாமல் உன் நகர் அணுகினான், அவன் செய்த தீமைகளைப் பொறுத்தருள்க). திரு உளத்திடை ஒன்றும் நனி கொளேல் - உனது திருவுளத்திடை அவன் செய்த ஒரு பிழையையும் மிகுதியானதாக நினைக்கவேண்டா. (இவ்வாறு பிரார்த்தித்து) முடிமன்னர் மன்னன் இளையோரொடும், மொய் கொள் தாமம் முடி உற வணங்கி, தவழ்ந்து உலவும்... எய்தினான், என்று அன்வயிக்க. மொய்கொள் தாமம் முடி உற வணங்கி - அடர்ந்த மலர்களை உடைய மாலை சூடிய தலை குபேரனது பாதங்களில் பொருந்தும் படி வணங்கி. முடிமன்னர் மன்னன் - அரசர்க்கு அரசனான தருமன். மை - மேகம். ஞாயில் - மதில் உறுப்புக்களில் ஒன்று. குபேரனைத் தருமன் தம்பியரோடு வணங்கி விடை கொண்டு மதில் வாயிலை அடைந்தான், என்பதாம். ஞாயில் நீள் புரிசை வாயில் - ஞாயில் என்ற உறுப்பினை உடைய நீண்ட மதிலின் வாசல்.

**106.** **மாசி லாதமுடி மன்னர் மன்னனுடன்**
**வந்த மாமுனிவ ரர்க்கெலாம்**
**ஏசி லாவகையி னெண்ணி ரண்டுவகை**
**யாய பூசைகளி யற்றியே**

**காசி லாமணியு மாடை யுங்கலனு**
**நல்க மல்கவளர் செல்வனுக்(கு)**
**ஆசி கூறியுட னேதபோவ னமடங்**
**கினாரவர டங்கவே.**

[மாசு இலாத முடி மன்னர் மன்னனுடன் வந்த மா முனிவரர்க்கு எலாம், ஏசு இலா வகையின் எண் இரண்டு வகை ஆய பூசைகள் இயற்றியே, காசு இலாமணியும் ஆடையும் கலனும் நல்க, மல்க வளர் செல்வனுக்கு ஆசி கூறி, உடனே தபோவனம் மடங்கினார் அவர் அடங்கவே.]

**விளக்கம் :-** மாசு - குற்றம். ஏசு இலா வகை - பழிப்புக்கு இடம் இலாத விதம். எண் இரண்டு வகை ஆய பூசை - பதினாறு வகைப்பட்ட உபசாரம். காசு - குற்றம், தோஷம். கலன் - ஆபரணம். மல்க வளர் செல்வன்-நிறைவுற வளர்ந்த செல்வத்தை உடைய குபேரன். (தருமனோடு வந்த முனிவர்களுக்குக் குபேரன் சோடசோப சாரங்களைச் செய்து, ஆடை அணிகலன்கள் வழங்க) அவர் அடங்க (அவனுக்கு) ஆசிகள் கூறி உடனே தபோவனம் மடங்கினார், என்று கூட்டுக. அம் முனிவர்கள் எல்லோரும் ஆசீர்வாதங்களைச் செய்து. உடனே தாங்கள் வாழும் தபோ வனம் மீண்டனர், என்பது பொருள். அவர் அடங்கவே-அவர்கள் எல்லோரும்.

## நந்திசேன முனிவர் ஆச்ரமம்

**107. குந்தி மைந்தரொரு நால்வ ரும்புதிய**
**கொடிம ருங்குன்ம டவல்லியும்**
**சிந்தை யன்புடைய முனியும் வாணிருத**
**சேக ரன்றனது தேரின்மேல்**
**பந்தி பந்திபதி னாயி ரம்பதின்**
**மடங்கு கூளிகள்ப ரிக்கவான்**
**உந்தி முன்பயிலு நந்தி சேனன்வன**
**மொருநொ டிப்பொழுதி லெய்தினார்.**

[குந்தி மைந்தர் ஒரு நால்வரும் புதிய கொடி மருங்குல் மட வல்லியும், சிந்தை அன்புடைய முனியும் வாள் நிருதர் சேகரன் தனது தேரின்மேல், பந்தி பந்தி பதினாயிரம் மதின் மடங்கு கூளி கள் பரிக்க, வான் உந்தி முன் பயிலும் நந்திசேனன் வனம் ஒரு நொடி பொழுதில் எய்தினார்.]

**விளக்கம் :-** புதிய கொடி மருங்குல் மடவல்லி - இளமை யுடைய பூங்கொடி போன்ற இடையை உடைய இளம் பெண் ணான திரௌபதி. அன்புடை சிந்தை முனி - ரோமச முனிவன். வாள் நிருதர் சேகரன் - கடோற்கசன். பந்தி - வரிசை. பதினா யிரம் பதின் மடங்கு - பத்து லட்சம் (மிகப்பல). கூளி - பேய். கூளிகள் பரிக்க - கூளிகள் தேரைத் தாங்கிச் செல்ல. வான் உந்தி-

வானில் தேரைச் செலுத்தி. முன் பயிலும் - முன்னே தாங்கள் வசித்த. பாண்டவர் நால்வரும், பாஞ்சாலியும், ரோமச முனிவனும் கடோற்கசனது தேரில் ஏறி, மிக சீக்கிரமான காலத்தில் நந்திசேன முனிவனது ஆச்ரமத்தை அடைந்தனர், என்பதாம். பாண்டவர் வசித்த கந்தர்ப்பமலைச் சாரலில் உள்ள தபோவனங்களில், ஒன்றாகும் நந்திசேன முனிவன் வாழும் வனம். மாத்திரியின் புதல்வர்களான நகுல சகதேவரை வளர்த்தவள் குந்தியாதலின், குந்தி மைந்தர் நால்வர், என்றார்.

**108.** **எய்தி யந்தமுனி செய்ய தாண்மலர்ம**
**னஞ்செய் தன்புடனி றைஞ்சியே**
**செய்தி யாவுமவ னுக்கு நண்பொடுரை**
**செய்து சூழ்வரவி ருந்தபின்**
**வெய்தின் வந்தடல ரக்கர் நாயகன்வி**
**பத்தி னுக்குதவி யானதும்**
**கொய்தி லங்குவடி வாளி னான் விறலும்**
**யாயு மேன்மையொடு கூறினான்.**

[எய்தி அந்த முனி செய்ய தாள் மலர் மனம் செய்து அன்புடன் இறைஞ்சி (ஏ), செய்தி யாவும் அவனுக்கு நண்பொடு உரை செய்து, சூழ்வர இருந்தபின், வெய்தின் வந்து அடல் அரக்கர் நாயகன் விபத்தினுக்கு உதவி ஆனதும், கொய்து இலங்கு வடி வாளினான் விறலும் யாவும் மேன்மையொடு கூறினான்.]

**விளக்கம்** :- மனம் செய்து - மனனம் செய்து அதாவது தியானித்து. சூழ்வர - தம்பியரும் மற்றவரும் தன்னைச் சூழ்ந்து இருக்க. இருந்தபின் - முனிவனுக்கு அருகிலே வீற்றிருந்த பின்பு. வெய்தின் - விரைவாக. அடல் அரக்கர் நாயகன் - கடோற்கசன். கொய்து இலங்கு வடிவாள் - பகைவர் தலைகளைக் கொய்து விளங்குகின்ற கூரிய வாள். கடோற்கசனது சிறப்பும், வீரமும் தோன்றும்படி அவனைத் தருமன் பாராட்டிக் கூறினான், என்க. சூழ்வர, என்பதற்கு முனிவனைப் பிரதக்ஷிணம் செய்து, என்றும் பொருள் கொள்ளலாம்.

### தருமன் மகனை உபசரித்தல்

**109.** **வெங்க ராவின்மு ழை வாய்பு குந்தலறி**
**வேழ மூலமென விரைவினிற்**
**பொங்க ராவணைது றந்து வந்தெதிர்**
**புரந்த புண்ணியனை யொக்கவே**
**தங்க ராபதநெ ருங்கு தொங்கலணி**
**தாம வேலடல ரக்கநீ**
**அங்க ராகமணி யார மார்பநின**
**தைய னாருயிர ளித்தியே.**

[வெம் கராவின் முழைவாய் புகுந்து அலறி வேழம் மூலம் என, விரைவினில் பொங்கு அரா அணை துறந்து வந்து எதிர் புரந்த புண்ணியனை ஒக்க, தங்கு அராபதம் நெருங்கு தொங்கல் அணி தாமம் வேல் அடல் அரக்க நீ, அங்கராகம் அணி ஆர மார்ப, நினது ஐயன் ஆர் உயிர் அளித்தியே.]

**விளக்கம் :-** தங்கு அராபதம் நெருங்கு தொங்கல் அணி தாமம் வேல் அடல் அரக்க நீ, அங்கராகம் அணி ஆர மார்ப, வெம் கராவின் முழைவாய் புகுந்து அலறி வேழம் மூலம் என, விரைவினில் பொங்கு அரா அணை துறந்து வந்து எதிர் புரந்த புண்ணியனை ஒக்க, நினது ஐயன் ஆர் உயிர் அளித்தி(ஏ) – என்பது அன்வயம். கரா - முதலை. முழை வாய் - குகை போன்ற வாய். புரந்த - இரட்சித்த. புண்ணியன் - திருமால். அராபம் - வண்டு. தாமம் - ஒளி. தங்கு அராபம் நெருங்கு தொங்கல் அணி தாமம் வேல் அடல் அரக்க - மொய்க்கின்ற வண்டுகள் நெருங்கிய மாலை அணிந்த, ஒளிவிடும் வேல் தாங்கிய வலிய அரக்கனாகிய கடோற்கசனே. அங்கராகம் - சந்தனப் பூச்சு. ஆரம் - முத்து மாலை. ஐயன் - தந்தை (வீமன்). முதலை வாய்ப்பட்ட யானை அழைக்க விரைந்து வந்து காத்த திருமாலைப்போல், ஆபத்துக் குள்ளாகவிருந்த உன் தந்தையைக் காப்பாற்றினாய், என்று தருமன் மகனுக்குக் கூறிய உபசார வார்த்தையாகும் இது.

**110. தொடைகொ டுத்தளகை நாத னன்றுதவு**
**துகில் கொடுத்துமதி முத்தவெண்**
**குடைகொ டுத்துநவ மணிகொ டுத்தமரி**
**லென்றும் வென்றிதரு கொற்றவெம்**
**படைகொ டுத்தடல ரக்க னுக்குயர்ப**
**தங்கொ டுத்துமிகு பரிவுடன்**
**விடைகொ டுத்தனன னந்த ரஞ்சமர**
**வீர வாகைபுனை வேலினான்.**

[தொடை கொடுத்து அளகை நாதன் அன்று உதவு துகில் கொடுத்து, மதி முத்த வெண் குடை கொடுத்து, நவமணி கொடுத்து, அமரில் என்றும் வென்றி தரும் கொற்றம் வெம் படை கொடுத்து, அடல் அரக்கனுக்கு உயர் பதம் கொடுத்து, மிகு பரிவு டன் விடை கொடுத்தனன் அனந்தரம் சமரம் வீரம் வாகை புனை வேலினான்.]

**விளக்கம் :-** தொடை - மாலை. துகில் - ஆடைகள். படை - ஆயுதங்கள். பதம் - அந்தஸ்து, பதவி. அனந்தரம் - பிறகு. சமர வீரவாகை புனை வேலினான் - போரில் வீரத்தின் அடையாளமாய் வாகை மாலை சூடும் வேலையுடைய தருமன். தருமன், கடோற் கசனுக்கு மாலை, வஸ்திரம், படை, குடை முதலியன கொடுத்து விடை கொடுத்தான்,—என்பதாம்.

**111.** **வணங்கி யன்புடன்ம கிழ்ந்து மன்னரைவ**
**லம்பு ரிந்துமன னஞ்செயா**
**நிணங்க மழ்ந்தொழுகி வழிய வாளெயிறு**
**நிலவெ ழும்புழைகொள் வாயினான்**
**துணங்கை கொண்டலகை கோடி வானின் மிசை**
**துள்ளி யூருமிர தத்தின்மேல்**
**இணங்கி மீளவும்வி நாழி கைப்பொழுதி**
**னில்லி டிம்பவன மெய்தினான்.**

[வணங்கி அன்புடன் மகிழ்ந்து மன்னரை வலம் புரிந்து மனனம் செயா, நிணம் கமழ்ந்து ஒழுகி வழிய வாள் எயிறு நிலவு எழும் புழை வாயினன், துணங்கை கொண்டு அலகை கோடி வானின் மிசை துள்ளி ஊரும் இரதத்தின்மேல் இணங்கி, மீளவும் விநாழிகைப் பொழுதினில் இடிம்பவனம் எய்தினான்.]

**விளக்கம் :-** நிணம் கமழ்ந்து ஒழுகி வழிய, வாள் எயிறு நிலவு எழும் புகை கொள்வாயினான், மகிழ்ந்து அன்புடன் மன்னரை வலம் புரிந்து வணங்கி மனனம் செயா, துணங்கை கொண்டு அலகை...எய்தினான்,—என்பது அன்வயம். மன்னர் - பாண்டவர் நால்வர். (உண்ணப்படும்) மாமிச வாடை வீசி ஒழுகி வழிய, ஒளிவிடும் கோர தந்தங்கள் நிலவுபோல் ஒளி செய்யும் புழை போன்ற பெரிய வாயை உடைய கடோற்கசன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். துணங்கை - பேய்கள் ஆடும் கூத்து. அலகை - பேய். தேரின் மேல் இணங்கி - தேரில் பொருந்த அமர்ந்து. தருமன் முதலிய தந்தையர் நால்வரையும் அன்போடு வணங்கி விடைகொண்டு கடோற்கசன் இடிம்பவனம் சென்றான், என்பதாம்.

### கலிவிருத்தம்

**112.** **அப்பொழுது வானுலக மதனினிடை நின்று**
**மைப்பொலியு மேனிவிச யன்வனம டைந்தான்**
**செப்பரிய வைவர்களுந் தேவியுட னேயவ்**
**ஒப்பரிய தெய்வவன மொன்றினரு றைந்தார்.**

[அப்பொழுது வான் உலகம் அதனிடை நின்று, மை பொலியும் மேனி விசயன் வனம் அடைந்தான், செப்பு அரிய ஐவர்களும் தேவியுடனே அவ் ஒப்பு அரிய தெய்வம் வனம் ஒன்றினர் உறைந்தார்.]

**விளக்கம் :-** மை - மேகம். செப்பரிய ஐவர் - சொல்வதற்கு அரிய சிறப்பினர்களான பாண்டவர். ஒப்பு அரிய - நேரில்லாத. தெய்வவனம் - தெய்வத் தன்மை பொருந்திய வனம். நந்திசேன முனிவனது தபோவனத்திற்கு அருச்சுனன் வந்து சேர, ஐவரும் தேவியுடன் அங்கே ஒன்று சேர்ந்தனராய் வசித்தனர், என்பதாம்.

**மணிமான் வதைச் சருக்கம் முற்றும்.**

# 6. துருவாசமுனிச் சருக்கம்

துருவாச முனிவனது வருகையைப்பற்றிக் கூறும் சருக்கம். பாண்டவர்க்குத் தீங்கு இழைத்தலையே கருமமாகக் கொண்ட துரியோதனன் வேண்டவே, அதற்கு இசைந்து துருவாச முனிவன் பாண்டவரிடம் பிட்சை கொள்ள வந்து, கிருஷ்ணனது அநுக்கிரகத்தால், அறுசுவை உண்டது போன்ற திருப்தி அடைந்து, தான் இங்கே வர நேர்ந்த காரணத்தைக் கூறி, முனிவன் மீண்டதைக் கூறும் பகுதி இது.

### துருவாசன் வரல்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. சாபத் தாலுஞ் சாபமொழி தன்னால் வளருந் தவத்தாலும்**
**கோபத் தாலும் பேர்படைத்த கொடிய முனிவன் றுருவாசன்**
**தீபத் தான்மெய் வகுத்தனையான் றிகழ்பன் முனிவர் புடைசூழ**
**ஆபத் தால்வந் தடைந்தவர்போ லடைந்தா னந்த**
**வடவியின் வாய்.**

[சாபத்தாலும், சாபமொழி தன்னால் வளரும் தவத்தாலும், கோபத்தாலும் பேர் படைத்த கொடிய முனிவன் துருவாசன், தீபத்தால் மெய் வகுத்தனையான், திகழ் பல் முனிவர் புடை சூழ, ஆபத்தால் வந்து அடைந்தவர்போல் அடைந்தான் அந்த அடவியின் வாய்.]

**விளக்கம் :-** சாபத்தால் - சபிப்பதால். சபித்தலால் தவம் குறையும், என்பர். துருவாசனுக்கு மாத்திரம் சாபத்தால் தவம் வளருமாம். இது, அவன் பெற்ற வரத்தின் பயனாகும். தீபத்தால் மெய் வகுத்(த)து அனையான் - தீபத்தைக் கொண்டு (ஒளியைக்கொண்டு) செய்யப்பட்டது போன்ற உடலை உடையான்; அதாவது ஓங்கிய தவத்தின் பயனாய் சுவலிக்கின்ற திருமேனியை உடையான். முனிவர் புடை சூழ - அவனது சீடர்களான முனிவர்கள் சூழ்ந்துவர. நேர்ந்தவோர் ஆபத்தினால் வந்து சேர்ந்தவர்கள்போல், பாண்டவர் வாழும் கானம் வந்து சேர்ந்தான்,—என்பது ஈற்றடியின் பொருள். பசியினால் உணவு வேண்டி வந்தான், என்று முதல் நூல் கூறும்.

**2. அருமா தவப்பே றானதெமக் கம்மா வென்னச் செம்மாந்து**
**குருமா மரபோ ரைவருந்தங் குஞ்சித் தலைமே லடிவைத்தெம்**
**பெருமா னிங்கே யெழுந்தருளப் பெற்றே மென்னப்**
**பெரிதுவந்தங்(கு)**
**அருமா முனியைப் பூசித்தா ரவனும் புகன்றா னாசியரோ.**

[அரு மாதவம் பேறு ஆனது எமக்கு அம்மா என்ன செம்மாந்து, குரு மரபோர் ஐவரும் தம் குஞ்சி தலை(மேல்) அடி வைத்து எம் பெருமான் இங்கே எழுந்தருளப் பெற்றேம், என்ன, பெரிது உவந்து அங்கு அரு மா முனியை பூசித்தார், அவனும் புகன்றான் ஆசி அரோ.]

**விளக்கம் :-** ''அரிய பெரிய தவத்தின் பயன் (துருவாசன் வரவினால்) தமக்கு வாய்த்ததான பாக்கியம், என்ன ஆச்சரியம்'', என்று எண்ணி உள்ளங் களித்து, என்பது முதலடியின் பொருள். தலைமேல், என்பதிலுள்ள **மேல்** என்பதை அடியோடு கூட்டுக. குரு வம்சத்தினரான பாண்டவர் ஐவரும் தங்கள் சிகையோடு கூடிய தலையை அவனது பாதங்களின்மேல் வைத்து (அதாவது வணங்கி) ''எம்பெருமானே (யாம்) நீ இங்கே எழுந்தருளப் பெற்றோம்'' என்று வியந்து சொல்லி, (அவனது வரவினைக் குறித்து) மிக மகிழ்ந்து, (அங்கு) தவ சிரேஷ்டனான அந்த முனியைப் பூசித்தார்கள்; அவனும் ஆசி மொழிகளைக் கூறினான்,- என்பது மற்ற அடிகளின் பொருள். அரோ : ஈற்றசை. மூன்றாவது அடியிலுள்ள அங்கு, அசை. பெறப்படுவது, **பேறு;** பயன் என்பது பொருள்.

**3. இட்ட தவிசின் மிசையிருத்தி யெரிகான் வந்த விளைப்பாற்றித்**
**தொட்ட கழற்கா லுதிட்டிரன்கை தொழுது துதிப்பத் துருவாசன்**
**வட்ட மணித்தே ரவனுச்ச வானத் தடைந்தான் யாமருந்தப்**
**பட்ட வுணவிங் கமுதுசெயப் பருவ மிதுவென் றுரைசெய்தான்.**

[இட்ட தவசின் மிசை இருத்தி எரி கான் வந்த இளைப்பு ஆற்றி, தொட்ட கழல் கால் உதிட்டிரன் கை தொழுது துதிப்ப, துருவாசன், வட்டம் மணி தேரவன் உச்சம் வானத்து அடைந்தான், யாம் அருந்தப்பட்ட உணவு இங்கு அமுது செய பருவம் இது, என்று உரை செய்தான்.]

**விளக்கம் :-** வீரக்கழல் அணிந்த பாதங்களை உடைய உதிட்டிரன், போடப்பட்ட ஆசனத்தில், (துருவாச முனிவனையும், அவனோடு வந்தவர்களையும்) உட்காரச் செய்து, வெம்மை மிகுந்த காட்டு வழியிலே நடந்து வந்த களைப்பை ஆற்றி, கை கூப்பித் தொழுது துதித்து நிற்கையில், துருவாசன், ''வட்டமான அழகிய தேரினனான சூரியன் வானத்து உச்சியை அடைந்தான்; நாங்கள் புசிப்பதற்கு ஏற்ற உணவை இங்கே உண்ணுவதற்கான காலம் இது,'' என்று கூறினான், என்பது பொருள். (சூரியன்) வானத்து உச்சம் அடைந்தான். அமுது செயப் பருவம் இது - உண்பதற்கான வேளை இது.

**4. மூத்தோன் குளித்து வருகவென முனிவ ருடனம்
முனிதடத்துப்
போய்த்தோய் வதற்காங் கெழுந்தருளப் புரசைக் களிற்று
முரசுயர்த்தோன்
வாய்த்தோன் வரவுக் கென்புரிவோ மதியீ ரெனத்தன்
தம்பியர்க்கும்
வேய்த்தோள் வேள்வி மடந்தைக்கு முரைத்தாங் கவரை
வினவினனால்.**

[மூத்தோன், குளித்து வருக என, முனிவருடன் அ முனி தடத்து போய் தோய்வதற்கு ஆங்கு எழுந்தருள, புரசை களிறு முரசு உயர்த்தோன், வாய்த்தோன் வரவுக்கு என் புரிவோம், மதியீர் என, தன் தம்பியர்க்கும், வேய் தோள் வேள்வி மடந்தைக்கும், உரைத்து ஆங்கு அவரை வினவினன், ஆல்.]

**விளக்கம் :-** மூத்தோன் - தருமன். தடம் - நீர் நிலை. தோய்தல் - நீராடல். புரசை - யானையின் கழுத்தில் இடும் கயிறு. புரசை களிறு முரசு உயர்த்தோன் - புரசையையுடைய யானைப் படையையுடைய முரசைக் கொடியிலே தூக்கிய தருமன். வாய்த்தோன் - தவப்பயன் கைவரப்பெற்ற துருவாசன். மதியீர் - யோசிப்பீர். வேய் - மூங்கில். வேய்த்தோள் வேள்வி மடந்தை - திரௌபதி. நீராடித் திரும்பி வரப்போகும் முனிவனுக்கும் அவனைச் சேர்ந்தார்க்கும் உணவு அளிக்க என்ன செய்வது, என்று தருமன் தம்பியரையும் தையலையும் வினவினான், என்க.

**5. மேவா ருரைக்க விவன்வந்த தல்லாற் பிறிது வேறில்லை
ஆவா விதற்கின் றென்செய்வே மாமாறாக நாமெழுந்து
கோவா னவனும் பல்படையுங் குன்றச் சென்று
பொருதிமைப்பில்
சாவா நிற்ப துறுதியினி யென்றான் வன்றாட் சமீரணியே.**

[மேவார் உரைக்க இவன் வந்தது அல்லால் பிறிது இல்லை, ஆ ஆ இதற்கு இன்று என் செய்வேம்? (ஆம்) மாறாக நாம் எழுந்து, கோ ஆனவனும் பல படையும் குன்ற சென்று பொருது இமைப்பில் சாவா நிற்பது உறுதி இனி என்றான் வன் தாள் சமீரணி, ஏ.]

**விளக்கம் :-** மேவார் - பகைவர்களாகிய துரியோதனாதியர். ஆ ஆ : இரக்கம் குறிக்கும் இடைச் சொல். ஆம் - அசை, அல்லது பொருந்தியதாகும். மாறாக - பகைத்து. கோ ஆனவன் - துரியோதனன். குன்ற - அழியும்படி, (சென்று குன்ற, என இயைக்க). சாவா நிற்பது உறுதி - சாவது நலமுடையதாகும். வன்தாள் சமீரணி - வன்மையுடைய முயற்சியினனான வாயு குமாரன் (வீமன்). சமீரணன் - வாயு. சமீரணி - வாயுவின் புதல்வன். பகைவரது ஏவலில் முனி வந்துள்ளானாதலால், அவனுக்கு உணவு அளிக்க முடியாமல், அவனது சாபத்திற்கு

ஆளாவதினும், பகைவர்பால் எழுந்து சென்று, அவர்களை அழித்து, நாமும் சாவதே செய்வதற்குரிய தாகும். என்று வீமன் கூறினான், என்பதாம்.

**6. சுருதிக் கடவு ளனையானைச் சுனை நீர் படிந்து வரச்சொல்லிச்**
**சுருதிப் பிறநாம் புரியுமது கடனோ வென்றான் கழல்விசயன்**
**மருதிற் கிடைபோம் பரம்பொருளை வருமா றழைமி**
**னெனமொழிந்தான்**
**ஒருதிக் கினும்வெம் பரியேற்றுக் கொத்தோ ரில்லா**
**வுரவோனே.**

[சுருதி கடவுள் அனையானை சுனைநீர் படிந்து வரச் சொல்லி, சருதி பிற நாம் புரியுமது கடனோ, என்றான் கழல் விசயன்; மருதிற்கு இடை போம் பரம்பொருளை வரும் ஆறு அழைமின் என மொழிந்தான், ஒரு திக்கினும் வெம் பரி ஏற்றுக்கு ஒத்தோர் இல்லா உரவோன், ஏ.]

**விளக்கம் :-** சுருதி கடவுள் அனையான் - வேத புருஷனான கடவுளைப்போன்ற பெருமையினனான துருவாச முனிவன். மருதிற்கு இடைபோம் பரம்பொருள் - மருத மரங்களுக்கு இடையே சென்று குபேர புத்திரர்களின் சாபம் தீர்த்த கண்ணன். பரி ஏற்றுக்கு - குதிரை ஏற்றத்திற்கு, அதாவது குதிரை ஏறி நடத்து வதற்கு. ஒத்தோர் இல்லா உரவோன் - நிகராவார் இல்லாத வலிமை உடைய நகுலன். பகைவர் பால் சென்று அவர்களைக் கொன்றழித்தப் பின்னர் சாவதே தக்கதாகும் என்ற வீமனது கூற்றை முறையுடைய தாகாது என்று விசயன் கூற, நகுலன், கண்ணனை அழைப்பதே இந்நிலையில் உபாயமாகும், என்றான் என்பதாம். கடனோ - முறையாமோ, (ஆகாது, என்றபடி).

**7. யாதே யாக யிந்தவிபத் தேகும் பொழுதைக் கிசையளிகள்**
**தேதே யென்னும் பசுந்துளவத் திருமா றன்னை சிந்தியுமிப்**
**போதே வருமிங் கவன்வந்தாற் போமிக் கவலை யெனப்**
**புகன்றான்**
**சாதே வனுமங் கவனிசைத்த சொல்லுக் கிசைந்தான்**
**றருமனுமே.**

[யாதே ஆக இந்த விபத்து, ஏகும் பொழுதைக்கு அசை அளி கள் தேதே என்னும் பசுந் துளவம் திருமால் தன்னை சிந்தியும், இப்போதே வரும்; இங்கு அவன் வந்தால் போம் இ கவலை, என புகன்றான் சாதேவனும், அங்கு அவன் இசைத்த சொல்லுக்கு இசைந்தான் தருமனும், ஏ.]

**விளக்கம் :-** (இப்பொழுது நேர்ந்துள்ள) இந்த விபத்து யாவதாயினும் இருக்கட்டும், அது ஏகும் பொழுதைக்கு (அதாவது அது அகலுதற்கு) இசை யெடுக்கும் வண்டுகள் தே தே என்று

ரீங்கரிக்கும் பசுந்துளப மாலை அணிந்த திருமாலாகிய கண்ணனைத் தியானம் செய்யுங்கள்; சிந்தித்த அளவிலேயே அவன் இங்கு வரும்; அவன் வந்தால் இக் கவலை அகலும், என்று சகாதேவனும் (நகுலனைப் போல்) கூறினான், (அங்கு) அவன் சொன்ன சொல்லுக்குத் தருமனும் சம்மதித்தான்,—என்பது பொருள், ஈற்றடியிலுள்ள அங்கு, அசை.

**8. என்னே யென்னே யாதவன்வா னிடையுங் கடந்தான்**
**முனிவன்வரும்**
**முன்னே நுகர்ந்தாஞ் சாகபல மூலம் பலபேர் முனிவரொடும்**
**கொன்னே முனியு முனிக்கினியென் கொல்லோ புரிவ**
**தெனநின்ற**
**மின்னே ரிடையா ணடுநடுங்கி விளைவ தென்னோ**
**வெனப்பயந்தாள்**

[என்னே என்னே, ஆதவன் வான் இடையும் கடந்தான். முனிவன் வரும்; முன்னே நுகர்ந்தாம் சாக பல மூலம் பலபேர் முனிவ ரொடும், கொன்னே முனியும் முனிக்கு இனி என்கொலோ புரிவது? என நின்ற மின் நேர் இடையாள் நடுநடுங்கி விளைவது என்னோ என பயந்தாள்.]

**விளக்கம் :-** ஆதவன் வான், இடையும் கடந்தான், முனிவர் பலரோடும் சாக பல மூலம் (துருவாச) முனிவன் வரும் முன்னே நுகர்ந்தோம்; என்னே, என்னே! கொன்னே முனியும் முனிக்கு இனி என் கொலோ புரிவது? என, (அயல்) நின்ற மின் நேர் இடையாள் என்னோ விளைவது என நடுநடுங்கி பயந்தாள், என்பது அன்வயம். ஆதவன் - சூரியன். வான் இடையும் கடந்தான், என்பது உச்சிப் பொழுதும் கழிந்தது, என்ற பொருளது. சாகபல மூலம் - இலை பழம் கிழங்கு. முனிவரோடும், என்பதிலுள்ள **ஓடும்** என்பதைப் **பலபே ரோடும்** என்று கூட்டுக. நுகர்ந்தோம் - உண்டுவிட்டோம். என்னே, என்னே - என்ன செய்தோம், இன்னும் சிறிது காத்திருந் தோம் இல்லையே! கொன்னே முனியும்-வீணா கோபங்கொள்ளும், அதாவது சிறு விஷயங்களிலும் கோபங்கொள்ளும் இயற்கை உடைய (முனிவன்). இனி என் செய்வது? என, அயல் நின்ற பாஞ் சாலி, விளையப் போவது யாவதாகுமோ, என்று நடுநடுங்கி அஞ்சினாள். சூரியனது அருளால் தருமன் பெற்ற அட்சய பாத் திரம் ஒரு நாளுக்கு ஒரு முறைதான் வேண்டும் உணவைத் தர வல்லது. மறுமுறை அது உணவு உதவாதாதலால், பாஞ்சாலி அஞ்சி நடுங்கினாள், என்க.

**9. தப்போ தாமற் றம்பியர்க்குந் தருமக் கொடிக்கு மிதமாக**
**அப்போ துணரும் படியுணர்ந்தா னசோதை மகனை**
**யறத்தின்மகன்**
**எப்போ தியாவ ரெவ்விடத்தி லெம்மை நினைப் பாரெனநின்ற**
**ஒப்போ தரியா னுதிட்டிரன்ற னுளப்போ திடைவந்**
**துதித்தானே.**

[தப்பு ஓதாமல் தம்பியருக்கும் தருமம் தொடிக்கும் இதம் ஆக அப்போது உணரும்படி உணர்ந்தான் அசோதை மகனை அறன் மகன், எ போது யாவர் எ இடத்தில் எம்மை நினைப்பார் என நின்ற ஒப்பு ஓது அரியான், உதிட்டிரன் தன் உளம் போதிடை வந்து உதித்தான்.]

**விளக்கம் :-** தப்பு ஓதாமல் - யார் மீதும் குற்றம் சுமத்தாமல். இதமாக - நன்மை உண்டாகும்படி, அதாவது மனக்கிலேசம் நீங்கும்படி. அப்போது, அறத்தின் மகன் (தருமபுத்திரன்), எசோதை மகனாகிய கண்ணனை (அவன் தங்களை) உணரும்படி உணர்ந்தான், (அதாவது உள்ளம் நெகிழத் தியானித்தான்). (எந்த வேளையில் எவர் எந்த இடத்தில் எம்மை நினைப்பார் என்று எதிர்பார்த்து நிற்கும்) ஒப்பு ஓது அறியாதவன் - ஒப்பாக ஒன்றைக் கூற முடியாத மேன்மையினனான கண்ணன். உதிட்டிரன் உளப்போதிடை வந்து உதித்தான் - தருமனது இதயத் தாமரையி னிடத்திருந்து வெளிப்பட்டுத் தோன்றினான். தருமன் கண்ணனை நினைக்க, அடியார்க்கு ஒன்று செய்தலையே முதல் வேலையாகக் கொண்ட கண்ணன், அவனது உள்ளத்தினின்று வெளிப்பட்டான், என்பதாம்.

**10. திருக்கண் கருணை பொழியவருந் திருமா லவரைத் தேற்றிமுதல்**
**அருக்க னுதவும் பாண்டத்தி னன்ன முளதோ வெனவினவ**
**முருக்கி னிதழைக் கறுவிக்கு முறுவற் செவ்வாய்த் திரௌபதியும்**
**இருக்கு முறையோ ரன்னங்கண் டெடுத்தாள் கொடுத்தா ளிறைவன்கை.**

[திரு கண் கருணை பொழிய வரும் திருமால் அவரை தேற்றி, முதல் (முன்னே) அருக்கன் உதவும் பாண்டத்தின் அன்னம் உளதோ என வினவ, முருக்கின் இதழை கறுவிக்கும் முறுவல் செவ் வாய் திரௌபதியும் இருக்கும் முறை ஓர் அன்னம் கண்டு எடுத் தாள், கொடுத்தாள் இறைவன் கை.]

**விளக்கம் :-** கருணை பொழியும் முகத்தோடு பாண்டவர் முன் தோன்றிய கண்ணன், அட்சயபாத்திரத்தில் அன்னம் உளதோ என்று வினவ, திரௌபதியும், அப் பாண்டத்தில் ஒட்டிக் கொண்டிருக்கும் முறையில் சோற்றுப் பருக்கை ஒன்றை எடுத்து வந்து கண்ணன் கையில் கொடுத்தாள்,—என்பது பொருள்.

**11. அந்த வன்னஞ் சதுர்மறையு மன்ன மாகி யருள்செய்தோன்**
**முந்த வுலக முழுதுண்ட முளரி யிதழி னிடை வைத்தான்**
**வந்து சுனையில் வந்தனைசெய் மறையோ ரெவரும் வாரிதிமுன்**
**தந்த வமுதுண் டவர்போலத் தாபந் தணிந்து தண்ணென்றார்.**

[அந்த அன்னம், சதுர் மறையும் அன்னம் ஆகி பிரம்மனுக்கு அருள் செய்தோன், முந்த உலகம் முழுது உண்ட முளரி இதழின் இடை வைத்தான்; வந்து சுனையில் வந்தனை செய் மறையோர் எவரும் வாரிதி முன் தந்த அமுது உண்டவர்போல் தாபம் தணிந்து தண்ணென்றார்.]

**விளக்கம் :-** அன்னம் - சோற்றுப் பருக்கை. அன்னத்தின் வடிவில் திருமால் பிரும்மனுக்கு வேதத்தை அருளினான், என்பர். முந்த உலகு முழுதுண்ட முளரி இதழ் - யுகப்பிரளய காலத்தில் உலகம் முழுதையும் உண்ட தாமரை மலர் போன்ற திருவாய். மறையோர் - துருவாசன் முதலிய முனிவர். வாரிதி - திருப்பாற் கடல். அந்த அன்னப் பருக்கை கண்ணனது திருவாயில் சேரலும், துருவாசன் முதலியோர் அமுது உண்டவர்போல் திருப்தி அடைந்தனர், என்பதாம். பசித்திருக்கையில் சாடராக்னியால் தேகம் வெம்மை உறுதல் இயல்பு. இப்பொழுது அம் முனிவர் தாபம் தீர்ந்து தண்ணென்றார் (யாக்கை குளிரப்பெற்றார்.]

**12. உதரங் குளிர்ந்து வடிவுகுளிர்ந்**
**துள்ளங் குளிர்ந்து மறைநாறும்**
**அதரங் குளிர்ந்து கண்குளிர்ந்தாங்**
**கருமா முனிவ னதிசயித்து**
**மதரஞ் சனக்கட் டிருவாழு**
**மார்போன் மாயா வல்லபத்தால்**
**இதரங் கடந்தா னுதிட்டிரனென்**
**றிவன்பான் மீண்டு மெய்தினான்.**

[உதரம் குளிர்ந்து, வடிவு குளிர்ந்து, உள்ளங் குளிர்ந்து, மறை நாறும் அதரம் குளிர்ந்து, கண் குளிர்ந்து ஆங்கு அருமா முனிவன் அதிசயித்து, மதர் அஞ்சனம் கண் திருவாழும் மார்போன் மாயா வல்லபத்தால், இதரம் கடந்தான் உதிட்டிரன் என்று, இவன்பால் மீண்டும் எய்தினான்.]

**விளக்கம் :-** உதரம் - வயிறு. வடிவம் - உடல், மறை நாறும் அதரம் - வேதம் ஓதும் வாய். மதர் அஞ்சனம் கண் திரு - மதர்ப்புடைய அஞ்சனம் எழுதப்பெற்ற கண்களை உடைய இலக்குமி. மாயா வல்லபம் - மாயையின் திறமை. இதரம் - நன்மையினின்று வேறுபட்டது, எனவே தீங்கு. கண்ணனது மாயா சக்தியால் தருமன் தீமையினின்று தப்பினான், என்று தெளிந்து துருவாசன், அவனிடம் மீண்டும் வந்தான், என்பதாம். குளிர்ந்து என்ற சொல் ஒரே பொருளில் பல முறை வந்திருப்பதால், இது, **சொல்பொருள் பின்வருநிலை அணி** ஆகும். குளிர்ந்தாங்கு - குளிர்ந்த பொழுது.

**13.** **உண்டோ முண்டோ மும்பருக்கு**
**முதவா வோதக் கடலமுதம்**
**கண்டோ முன்னா லெவ்வுலகுங்**
**காணா முகுந்தன் கழலிணைகள்**
**வண்டோ லிடுந்தார்ப் பேரறத்தின்**
**மகனே யுன்னை யரசென்று**
**கொண்டோ ரல்லா லெதிர்த்தோரில்**
**யாரே வாழ்வார் குவலயத்தில்.**

[உண்டோம் உண்டோம் உம்பருக்கும் உவதா ஓதம் கடல் அமுதம், கண்டோம் உன்னால் எ உலகும் காணா முகுந்தன் கழல் இணைகள், வண்டு ஒலிடும் தார் பேர் அறத்தின் மகனே, உன்னை அரசு என்று கொண்டோர் அல்லால் எதிர்த்தோரில் யாரே வாழ் வார் குவலயத்தில்.]

**விளக்கம் :-** உம்பருக்கும் உதவா - தேவர்களுக்கும் கிடைத்த தற்கு இல்லாத, ஓதம் - நீர்பெருக்கு. தேவர்களும் அடையப் பெறாத கடல் அமுதம் போன்ற உணவை உண்டோம்,—என்பது முதலடியின் பொருள். வண்டு ஒலிடும் தார் பேர் அறத்தின் மகன் - வண்டுகள் (தேன் உண்டு) ரீங்காரம் செய்யும் மாலை அணிந்த யமதர்மராசனுடைய மகனான தருமன். உன்னை அரசென்று கொள்ளாது மாறுபட்டவர் எவரும் வாழ்வுடையவ ராகார்,— என்பது ஈற்றடியின் பொருள். உன்னோடு மாறு கொண்டு தீங்கு இழைக்கும் துரியோதனாதியர் வாழார், என்ற பொருளைத் தருவ தால், செய்யுள் **பிறிதின் நவிற்சி அணி** ஆகும்.

**14.** **நென்னற் புயங்க கேதனன்றன்**
**னிலயந் தன்னிற் றீம்பாலும்**
**கன்னற் கட்டி முதற்பல தீங்**
**கனிநெய் யுடனே யினி தருந்தி**
**இன்னற் பசிதீர் பொழுதத்தி**
**லென் பால் வரங்கொள் கெனவுரைப்ப**
**முன்னர்ப் பலவு முரையாம**
**லொன்றே மொழிந்தான் முடிவேந்தன்.**

[நென்னல் புயங்கேதனன் தன் நிலயம் தன்னில் தீம் பாலும் கன்னல் கட்டி முதல் பல தீங்கனி நெய்யுடனே இனிது அருந்தி இன்னல் பசிதீர் பொழுதத்தில், என்பால் வரம் கொள்கென (கொள்க என) உரைப்ப, (முதலில்) முன்னர் பலவும் உரையாமல் ஒன்றே மொழிந்தான் முடிவேந்தன்.]

**விளக்கம் :-** நென்னல் - நேற்று. புயங்க கேதனன் - அரவக் கொடியனான துரியோதனன். கன்னல் கட்டி - கற்கண்டு. பசி இன்னல் தீர் பொழுதத்தில் - பசிக் கொடுமை தீர்ந்த பொழுதில், கிரீடாதிபதியான துரியோதனன், முன்னமேயே தான் கேட்க

வேண்டிய வரம் இன்னது என்று முடிவு செய்திருந்தமையின், வேறு பல விஷயங்களையும் உரைக்காமல் ஒன்றே மொழிந்தான்,— என்பது ஈற்றடியின் பொருள். அவன் மொழிந்த அந்த ஒன்றை அடுத்த செய்யுள் கூறும்.

**15. எம்மிற் றுய்த்த ஓதனம்போ லெம்மோ டிகலி வனம் புகுந்தோர்**
**தம்மிற் சென்று நாளைநுக ரிதுவே யெனக்குத்**
**தரும்வரமென்(று)**
**உம்மிற் செல்வ முடையான்போ லுரைத்தா னதனா**
**லுயர்ந்தோர்கள்**
**தம்மிற் சிறந்தோய் வந்தனம்யா மென்றா னந்தத் தவமுனியே.**

*[எம்மில் துய்த்த ஓதனம் போல் எம்மோடு இகலி வனம் புகுந்தோர் தம்மில் சென்று நாளை நுகர், இதுவே எனக்கு தரும் வரம் என்று, உம்மில் செல்வம் உடையான் போல் உரைத்தான்; அதனால், உயர்ந்தோர்கள் தம்மில் சிறந்தோய், வந்தனம் யாம், என்றான் அந்த தவம் முனி, ஏ.]*

**விளக்கம் :-** எம்மில் துய்த்த...நுகர் - எம்மிடத்திலே உண்ட உணவு போலவே, எம்மோடு மாறு கொண்டு வனம் புகுந்து வாழும் பாண்டவர் தம்மிடத்தே சென்று உணவு கொள்க. ''உயர்ந்தோர்கள் தம்மில் சிறந்தவர்களான பாண்டவர்களே, எல்லாச் செல்வத்தையுந் தரவல்ல கண்ணனது அருளைப் பெற்ற உம்மைக் காட்டிலும் செல்வம் உடையான்போல் (துரியோதனன் இவ்வாறு) கூறினான். அதனால் நாங்கள் உங்களிடம் வந்தனம்,'' என்று தவமுனி துருவாசன், தான் வந்த காரணத்தைத் தெரிவித்தான், என்பதாம். முனி கணங்களோடு வந்த துருவாசனை உணவு தந்து தாங்கள் உபசரித்தது போல் கான் வாழும் பாண்டவர்களால் உபசரிக்க முடியாதாகையால் 'இம் முனியின் சாபத்திற்கு இலக்காகாகிக் கெடுவர்' என்ற கருத்தில், துரியோதனாதியர் செய்த சூழ்ச்சி இது.

**16. பரங்கொண் டுலக முழுதுமி சைபரப்பிப் புரப்பான்**
**பாண்டுவெனும்**
**உரங்கொண் டுயர்ந்தோ னளித்தருளு முரவோய்**
**நீயிங் குனக்கான**
**வரங்கொண் டிடுக வெனமுனியை வணங்கிப் பகைத்தோர்**
**மாற்றங்கள்**
**திரங்கொண் டென்றுங் கொள்ளாதி யென்றான் வளையாச்**
**செங்கோலான்.**

*[பரம் கொண்டு உலகம் முழுதும் இசை பரப்பி புரப்பான் பாண்டு எனும் உரங்கொண்டு உயர்ந்தோன் அளித்தருளும்*

உரவோய், நீ, இங்கு உனக்கு ஆன வரம் கொண்டிடுக என, முனியை வணங்கி, பகைத்தோர் மாற்றங்கள் திரம் கொண்டு என்றும் கொள்ளாதி, என்றான், வளையா செங்கோலான்.]

**விளக்கம் :-** பரம் - பாரம். உலகம் முழுதையும் தாங்கு தலை மேற்கொண்டு, கீர்த்தியை எங்கும் பரவச் செய்து பாது காத்தலைச் செய்தவனான பாண்டு என்ற பெயருடைய, வலிமை யினால் உயர்ந்தோனாகிய மன்னன் பெற்ற வலிமையுடைய தருமனே, நீ இப்பொழுது உனக்கு வேண்டியதான வரத்தை (என்னிடமிருந்து) பெற்றுக் கொள்க, என்று கூறலும், வளையாச் செங்கோலினனான தருமன், முனிவனை வணங்கி, ''எம்மோடு பகை கொண்டவரான துரியோதனாதியரின் வார்த்தைகளை (செய்ய வேண்டியனவாகக் கொண்டு) என்றும் எம்பால் விரோதம் கொள்ளாதிருக்கவும்,'' என்று வேண்டிக்கொண்டான்,—என்பது பொருள். திரம் - உறுதி. திரங்கொண்டு - கட்டாயம் செய்ய வேண்டியதாகக் கொண்டு. தமக்குக் கேடு நினைத்த துரியோத னாதியரானோர்க்குக் கேடு சூழும் வரம் கேளாச் செம்மை யனாதலின், வளையாச் செங்கோலான், எனப்பட்டான்.

**17. அன்னோன் மொழிகேட் டம்முனியு மடைந்தான் றன்பே ரருந்தவக்கான்**
**முன்னோ னான முகுந்தனுந்தன் முந்நீர்த் துவரை நகர்புக்கான்**
**பின்னோர் வணங்கப் பேரழலிற் பிறந்தாண் மகிழப் பேரருட்குத்**
**தன்னோ டொருவர் நிகரில்லா னிருந்தா னந்தத் தனிவனத்தே.**

[அன்னோன் மொழி கேட்டு அ முனியும் அடைந்தான் தன் பேர் அருந்தவம் கான், முன்னோன் ஆன முகுந்தனும் தன் முந்நீர் துவரை நகர் புக்கான்; பின்னோர் வணங்க, பேர் அழலில் பிறந்தாள் மகிழ, பேர் அருட்கு தன்னோடு ஒருவர் நிகர் இல்லான் இருந்தான், அந்த தனி வனத்தே.]

**விளக்கம் :-** முன்னோன்-எப்பொருட்கும் முற்பட்டவனான கண்ணன். முந்நீர் - சமுத்திரம். துவரை - துவாரகை. பேர் அருட்கு தன்னோடு ஒருவர் நிகர் இல்லான் - நேரில்லாக் கருணைக் கடலான தருமன். கண்ணனும் முனிவனும் விடை கொள்ள, அந்த வனத்தில் தம்பியரோடும் தேவியோடும் தருமன் தனியே வசிப்பவனானான், என்பதாம்.

**துருவாசமுனிச் சருக்கம் முற்றும்.**

# 7. பழம் பொருந்து சருக்கம்

விசயனால் வீழ்த்தப்பட்ட பழம் பொருந்தியதைப் பற்றிய வரலாறு கூறும் சருக்கம், என்க. அமித்ர முனிவருக்காக ஒதுக்கப் பெற்ற நெல்லிக்கனி ஒன்றை வனத்திடத்தே கண்ட பாஞ்சாலி, அதைத் தருமாறு வேண்ட, பார்த்தன் அதை ஓரம்பால் வீழ்த்தலும், அருகிருந்தோர், அந்தக் கனியைப் பற்றிய வரலாற்றைக் கூற, அஞ்சிய தம்பி அதைத் தருமன் முன் வைக்க, அவன் கண்ணனை அழைத்தான். அழைத்தவுடன் எதிரில் தோன்றிய கண்ணன், ''நீங்கள் உங்கள் உள்ளத்தில் கரந்து கிடக்கும் விஷயங்களை ஒளிக்காமல் சொல்வீர்களேயானால், அந்தக் கனி மீண்டும் அம் மரத்தில் ஒட்டிக்கொள்ளும்'', என்றான். அங்ஙனமே அவர் செய்ய, அந்தக் கனி மரத்தில் ஒட்டிக்கொண்டது. அந்த வரலாற்றைக் கூறும் பகுதி இது.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அங்நெடு வனத்திற் சின்னா ளகன்றபி னமித்தி ரன்பேர்**
**என்னுமா முனிவற் கென்றே யாவரு மருகு செல்லா**
**நன்னல மிகுந்த நெல்லி நறுங்கனி யொன்று கண்டாள்**
**கன்னலும் புளிக்கு மின்சொற் கயிரவ மனைய வாயாள்.**

[அ நெடுவனத்தில் சில நாள் அகன்றபின், அமித்திர முனிவற்கு என்றே யாவரும் அருகு செல்லா நல் நலம் மிகுந்த நெல்லி நறுங்கனி ஒன்று கண்டாள், கன்னலும் புளிக்கும் இன் சொல் கயிரவம் வாயாள்.]

**விளக்கம் :-** கன்னல் - கருப்பஞ் சாறு. அமித்ர முனிவர்க் கென்று ஏற்பட்டதும், எவராலும் அணுகப் பெறாததுமான நன்னலம் மிகுந்த நெல்லிக்கனி ஒன்றைத் திரௌபதி அப் பெரிய வனத்தினிடத்தே கண்டாள் என்பதாம். சின்னாள் அகன்ற பின்- கண்ணனும் துருவாச முனிவனும் விடை கொண்டபின் சில தினங்கள் கழிந்த பிறகு. கயிரவம் கறுகும் வாயாள் என்றும் பாடம் உளது.

**2. இக்கனி யெனக்கு நீநல் கென்று வில் எடுத்துக் கொண்ட**
**மைக்கனிக் களவு மானும் வடிவுடை விசய னோடும்**
**மெய்க்கனி வுடைமை தோன்ற விளம்பினாள் வீசு தென்றல்**
**முக்கனி கமழுஞ் சோலை முகிறவழ் நாடன் பாவை.**

[இ கனி எனக்கு நீ நல்க, என்று வில் எடுத்துக்கொண்ட மைகனி களவு (களவுக்கனி) மானும், வடிவு உடை விசயனோடும், மெய் கனிவு உடைமை தோன்ற விளம்பினாள், வீசு தென்றல் முக்கனி கமழும் சோலை முகில் தவழ் நாடன் பாவை,]

**விளக்கம் :-** வீசுதென்றல் முக்கனி... . பாவை, வில் எடுத்துக் கொண்ட மை களவுக்கனி மானும் வடிவு உடை விசயனோடும் மெய் கனிவு உடைமை தோன்ற நீ இ கனி எனக்கு நல்கென்று (நல்க என்று) விளம்பினாள்,— என்பது அன்வயம். வில் எடுத்துக் கொண்ட - வில்லைக் கையிலே தாங்கியுள்ள. மை களவுக் கனி மானும் வடிவுடைய விசயன் - கார் மேகத்தையும் களாப் பழத்தையும் ஒத்த கரிய வடிவத்தை உடைய விசயன், (மானும் - ஒத்த). மெய் கனிவு தோன்ற - உண்மையான (மிகுந்த) விருப்பம் தோன்ற. தென்றல் காற்று மா பலா வாழைப் பழங்களின் மணத்தை பரவச் செய்யும் சோலைகளில் மேகம் தவழும் பாஞ்சால நாட்டிற்குரிய துருபதன் தந்த திரௌபதி, அந்த நெல்லிக்கனிமேல் உண்மையான விருப்பங் கொண்டு, அதைத் தனக்குத் தருமாறு விசயனைக் கேட்டாள், என்பதாம்.

**3. சோமகர்க் கரசன் பாவை சொல்லுமுன் வில்லு வாங்கி**
**மாமுனிக் குணவாய் நின்ற மதுரவா மலகந் தன்னை**
**ஏமுறை தொடுத்து வீழ்த்தி யீதலு மாங்கட் கண்டோர்**
**ஏமுறக் காணி லிப்போ தென்படு மிறுத்தோ னென்றார்.**

[சோமகர்க்கு அரசன் பாவை சொல்லுமுன் வில்லு வாங்கி, மாமுனிக்கு உணவாய் நின்ற மதுரம் ஆமலகந்தன்னை, ஏ முறை தொடுத்து வீழ்த்தி ஈதலும் ஆங்கண் கண்டோர், ஏமுற காணில் இப்போது என்படும் இறுத்தோன் என்றார்.]

**விளக்கம் :-** சோமகர்க்கு அரசன் - பாஞ்சாலன் (அவன், சோமக வம்சத்தைச் சேர்ந்தவன்). மதுரம் ஆமலகம் - இனிய நெல்லிக் கனி. வில்லு வாங்கி - வில்லை வளைத்து. ஏ - அம்பு. ஆங்கண் - அங்கே. ஏமுற என்படும் - வருத்தம் உண்டாகும்படி என்ன தீங்கிற்கு உள்ளாவானோ. அமித்திர முனிவன் இதைக் கண்டால், இதை வீழ்த்தியவனுக்கு என்ன தீங்கு நேரிடுமோ, என்று நிகழ்ந்ததைக் கண்டவர், கூறினார்கள், என்பதாம். ஏமுறல்- வருத்தமுறல், தன்மை திரிதல்.

**4. கண்டவம் முனிவர் சொல்லக் கடவுளர் கோமான் மைந்தன்**
**கொண்டவக் கனியை மூத்த கொற்றவன் றிருமுன் வைத்து**
**மண்டழற் பாவை சொல்லான் மதியிலே னெய்தே னென்றான்**
**திண்டிறற் றேவர்க் காகத் திதிமைந்த ராவி கொண்டான்.**

[கண்ட அ முனிவர் சொல்ல, கடவுளர் கோமான் மைந்தன், கொண்ட அ கனியை மூத்த கொற்றவன் திருமுன் வைத்து, மண்டு அழல் பாவை சொல்லால், மதி இலேன் எய்தேன் என்றான், திண் திறல் தேவர்க்காக திதி மைந்தர் ஆவி கொண்டான்.]

**விளக்கம் :-** திண் திறல் தேவர்க்காக......கொண்டான் (ஆன) கடவுளர் கோமான் மைந்தன், கண்ட அ முனிவர் (தீங்கு நேரிடும் என்று) சொல்ல, கொண்ட அ கனியை மூத்த கொற்றவன் திருமுன் வைத்து, மண்டு அழல் பாவை சொல்லால் மதியிலேன் எய்தேன் என்றான். திதி மைந்தர் - நிவாத கவசர் காலகேயர் முதலிய அசுரர். திரௌபதி பேச்சைக் கேட்டு ஆராயாது கனியைப் பறித்துவிட்டேன், என்று விசயன் தருமனிடம் கூறினான், என்பதாம்.

## தருமன் துயருறல்

**5. காடுறை வாழ்க்கை யெய்திக் காய்கனி மூலந் தின்று**
**நீடுறு காலம் போக்கி நீங்கலா திருக்கு நம்மை**
**நாடொறு மிடையூ றன்றி நண்ணுவ தில்லை யாயின்**
**ஏடுறு தாராய் செய்வ தென்கொலென் றியம்பி னானே.**

[காடு உறை வாழ்க்கை எய்தி காய்கனி மூலம் தின்று நீடு உறு காலம் போக்கி (காட்டை விட்டு) நீங்கலாது இருக்கும் நம்மை, நாள்தொறும் இடையூறு அன்றி நண்ணுவது இல்லை ஆயின், ஏடு உறு தாராய், செய்வது என்கொல் என்று இயம்பினான், ஏ.]

**விளக்கம் :-** ஏடு உறு தாராய் - மலர் இதழ் மிகுந்த மாலையை அணிந்த விசயனே, நாள் தொறும் இடையூறு அன்றி (நல்ல தொன்றும்) வந்து பொருந்துவது இல்லையாயின், — என்பது மூன்றாம் அடியின் பொருள். காட்டிலேனும் இடையூறின்றி இனிதே வாழலாம் என்றால், இங்கும் இடையூறு ஒன்றன்பின் ஒன்றாய் வந்துகொண்டிருக்கின்றதே, என்று தருமன் வருந்தினான், என்பதாம்.

## வீமன் கூறும் உபாயம்

**6. அவ்வுரை வீமன் கேட்டாங் கமித்திரன் வந்த போதே**
**இவ்வுரை கேட்கி னம்மை யெரியெழச் சபித்த றிண்ணம்**
**வெவ்வுரை யுரையா முன்ன மெய்ம்முனி தன்னைப் போற்றிச்**
**செவ்வுரை கூறி னம்மைச் சீறுமோ சீறல் செய்யான்**

[(தருமன் கூறிய) அ உரை வீமன் கேட்டு, ஆங்கு அமித்திரன் வந்தபோதே இ உரை கேட்கின் நம்மை எரி எழ சபித்தல் திண்ணம், வெவ் உரை உரையா முன்னம் மெய் முனி தன்னை போற்றி செவ் உரை கூறின் நம்மை சீறுமோ, சீறல் செய்யான்.]

**விளக்கம் :-** (ஒருவன் கனியைப் பறித்து எடுத்துச் சென்றான் என்ற) இவ்வுரையை முனிவன் கேட்கின், நம்மை அவன் வெகுண்டு சபித்தல் நிச்சயம், - என்பது இரண்டாவது அடியின் பொருள். வெவ்வுரை உரையாமுன் - (முனிவன்) கொடிய சாப மொழியைக் கூறுமுன். சைவ்வுரை கூறின் - எம்மைப் பொறுத்து அநுக்கிரகிக்க

வேண்டும் என்று வேண்டிக்கொண்டாள். சீறிச் சபிக்கமாட்டான், என்று வீமன் கூறியபடி. அங்கு வந்தபோதே—கனிக்காக அவ்விடம் வந்தபோது.

7. **பொறுத்திடு மேலி டாவைம் புலத்தின னாத லாலே**
**மறுத்திடா னைய நின்றன் மாசிலா வாய்மை யென்ன**
**நிறுத்திடுந் துலையோ டொப்பா னினைவினுக் கிசையத்**
**தெவ்வைச்**
**செறுத்திடு விசயன் மீளச் செப்பினன் செப்ப மாக.**

[பொறுத்திடும் மேலிடா ஐம்புலத்தினன் ஆதலாலே, மறுத்திடான் ஐய, நின்தன் மாசு இலா வாய்மை என்ன, நிறுத்திடும் துலையோடு ஒப்பான் நினைவினுக்கு இசைய, தெவ்வை செறுத்திடு விசயன், மீள செப்பினன் செப்பமாக.]

**விளக்கம் :-** (முனிவன்) மேலிடா ஐம்புலத்தினன் ஆதலால் பொறுத்திடும் - தன்னை மீறுதல் அன்றி அடங்கியுள்ள ஐம்புலன்களை உடையவன் ஆதலால் பொறுத்திடுவான். ஐய, நின்தன் மாசிலா வாய்மையை மறுத்திடான் - ஐயனே, உன்னுடைய குற்ற மற்ற வாய்மொழியை (முனிவன்) மறுக்கமாட்டான். என்ன - என்று வீமன் தருமனுக்குச் சொல்ல. நிறுத்திடும் துலையோடு ஒப்பான்நினைவினுக்கு இசைய-நிறுக்கின்ற திராசின் முள்ளை ஒத்தவனான (அதாவது நடுநிலை நிற்பவனாகிய) தருமன் வீமனது கூற்றிற்கு உடன்பாடுடையவனாயிருக்க. தெவ் - பகை. செப்பம்- செம்மை, நேர்மை. வீமனது யோசனைக்குத் தருமன் உடன்பட்ட நிலையில், விசயன் தன் கருத்தைத் தெரிவிக்கலானான், என்பதாம். மீள - வீமனைத் தொடர்ந்து, அதாவது மறுபடியும்.

8. **செய்தவ னினிது மாந்தத் தேவர்நா ளொன்றுக் கொன்றாம்**
**கைதவ மில்லா நெல்லிக் கனியினைக் கருது றாமல்**
**எய்தவன் றன்னை யன்றி யாரையு மிடான்வெஞ் சாபம்**
**மெய்தவ றாத சொல்லாய் வெருவுத லென்கொ லென்றான்.**

[செய்தவன் இனிது மாந்த தேவர் நாள் ஒன்றுக்கு ஒன்று ஆம் கைதவம் இல்லா நெல்லி கனியினை கருதுறாமல், எய்தவன் தன்னை அன்றி யாரையும் இடான் வெம் சாபம், மெய் தவறாத சொல்லாய் வெருவுதல் என்கொல்? என்றான்.]

**விளக்கம் :-** செய்தவன் - அமித்திர முனிவன். மாந்த - உண்ண. தேவர் நாளுக்கு ஒன்றாம் - தேவர்களின் ஒருநாளாகிய ஒரு வருஷத்திற்கு ஒரு கனி வீதம் காய்க்கும். கைதவம் - பொய், துன்பம். கைதவம் இல்லா நெல்லிக்கனி - உண்டவர்க்குத் துன்பம் இல்லாமல் இன்பத்தைச் செய்கின்ற நெல்லிக்கனி. கருதுறாமல் -

ஆலோசிக்காமல். மெய் தவறாத சொல்லாய் - சத்தியம் கடவாத சொல்லை உடைய ஐயனே, எய்தவனாகிய என்னையன்றி வேறு எவரையும் முனிவன் சபியானாதலால், நீங்கள் ஏன் அஞ்ச வேண்டும்? என்று விசயன், கூறினான், என்பதாம். வருஷத்திற்கு ஒரு முறை காய்க்கும் இக் கனியை உண்டு, பசிப்பிணி ஒன்றும் இல்லாமல் ஒரு வருஷ காலம் தவத்துறை படிந்திருக்கும் இயல் பினன் அமித்திரமுனிவன். மனிதருக்கு ஓராண்டு தேவருக்கு ஒரு நாள்.

**9. வேந்தனம் மாற்றங் கேட்டு வில்வலான் றன்னை நோக்கி**
**ஏந்திழை சொல்ல வோரா தினியவிக் கனியின் றீர்ந்தாய்**
**மாந்தரின் மடங்க லொப்பாய் வருத்த நீ யுழக்க யாமோ**
**பேர்ந்துபோய் பிழைப்போ மென்றான் பிதாவினுங்**
**கருணை மிக்கான்.**

[வேந்தன் அ மாற்றம் கேட்டு வில் வலான் தன்னை நோக்கி, ஏந்து இழை சொல்ல, ஓராது இனிய இ கனி இன்று ஈர்ந்தாய்; மாந்தரின் மடங்கல் ஒப்பாய் வருத்தம் நீ உழக்க யாமோ பேர்ந்து போய் பிழைப்போம், என்றான் பிதாவினும் கருணை மிக்கான்.]

**விளக்கம் :-** பிதாவினும் கருணை மிக்கான் (ஆன) வேந்தன், அ மாற்றம் கேட்டு, வில் வலான் தன்னை நோக்கி ''மாந்தரின் மடங்கல் ஒப்பாய், ஏந்திழை சொல்ல ஓராது இன்று இனிய இக் கனியை ஈர்ந்தாய், வருத்தம் நீ உழக்க, பேர்ந்து போய் யாமோ பிழைப்போம்'', என்றான்,—என்பது அன்வயம். மாற்றம் - வார்த்தை. ஈர்ந்தாய் - அறுத்தாய், வீழ்த்தினாய். முனி சாபத் தால் நீ துன்பம் அனுபவிக்க, உன்னை விட்டுப் பிரிந்து சென்று யாமோ பிழைத்திருப்போம், என்று தருமன் தளர்ந்து கூறியபடி.

கண்ணனை அழைக்குமாறு நகுலன் கூறல்

**10. அம்முனி வந்த வாபத் ததினினுங் கொடிதிக் கானத் (து)**
**இம்முனி யுணவு கொண்ட தெனவெரீஇ நகுலன் றானும்**
**வெம்முனி வகற்றி நாமும் மேம்பட வேண்டி னின்னம்**
**தெம்முனி திகிரி யானைச் சிந்தனை செய்தி யென்றான்.**

[அ முனி வந்த ஆபத்து அதனினும் கொடிது இ கானத்து இ முனி உணவு கொண்டறு, என வெரீஇ நகுலன் தானும், வெம் முனிவு அகற்றி நாமும் மேம்பட வேண்டின், இன்னம் தெம்முனி (தெவ் - முனி) திகிரியானை சிந்தனை செய்தி, என்றான்.]

**விளக்கம் :-** அ முனி வந்த ஆபத்து - துருவாச முனிவனது வரவால் வரவிருந்த ஆபத்து. அமித்திர முனிவனது உணவைக் கவர்ந்து கொண்டதாகிய இது, அதனினும் கொடியதாகும். முனி வனது கோபத்தை அகற்றி நாமும் மேன்மையுற வேண்டுமானால்

கண்ணனைத் தியானித்து அழைப்பதே, வழி, என்று நகுலன் கூறினான், என்பதாம். துருவாசனது கோபத்தைக் கடக்கக் கண்ணன் இதன் முன் அழைக்கப்பட்டான் ஆதலால், 'இன்னம் திகிரியானைச் சிந்தி', என்றான்.

சகாதேவன் கூற்று

**11. விளைதவ முனிவன் கண்டு வெகுளுமு னவன்றாள் போற்றிக்**
**கிளைபடு நெல்லி வாசக் கேழுறு கனிமுன் வைத்தால்**
**உளைவுற முனியா னம்மை யுறுதிமற் றிதுவே யென்னா**
**இளையவன் றானுந் தம்மு னினைவினுக் கேற்பச்**
**சொன்னான்.**

*[விளைதவம் முனிவன் கண்டு வெகுளும் முன், அவன் தாள் போற்றி, கிளை படு நெல்லி வாசம் கேழ் உறு கனி முன் வைத்தால், உளைவு உற முனியான் நம்மை, உறுதி மற்று இதுவே என்னா, இளையவன் தானும் தம் முன் நினைவினுக்கு ஏற்ப சொன்னான்.]*

**விளக்கம் :-** விளைதவம்-பயனால் முதிர்ந்த தவம். அவன் தாள் போற்றி - அம் முனிவனது திருவடி துதித்துத் தொழுது, கிளைபடு நெல்லி - கிளையில் உண்டான (காய்த்த) நெல்லிக் கனி. கேழுறு - நிறங்கொண்ட, அதாவது முதிர்ந்த. உளைவு உற - வருத்தம் உண்டாக. மற்று உறுதி இதுவே - இனி நற்பயன் தரக் கூடியது இதுவே. இளையவன் - சகாதேவன். தம்முன் - தமது தமையன். இது, ''முனிவனது அடிபோற்றிப் பிழை பொறுத்து அநுக்கிரகிக்குமாறு பிரார்த்திப்பது வழி'', என்று முதலில் சொன்ன வீமனைக் குறிக்கலாம். அல்லது வீமன் வார்த்தையை ஏற்ற தருமனையும் குறிக்கலாம். அல்லது, **அவன்** என்பதைக் கண்ணனாகக் கொண்டு, ''கண்ணனை மீண்டும் அழைத்து அவனது திருவடி போற்றினால், முனிவனது வெகுளியைக் கடக்க வும், நாம் மேன்மையுறவும் வழி செய்வான்'', என்று கூறிய நகுலனையும் குறிக்கலாம். முனிவனை வணங்கி வேண்டியோ, அல்லது கண்ணனை அழைத்தோ, உற்ற இடர் நீங்கப் பெறலாம், என்று சகாதேவன் கூறியதாகக் கொள்ளல் அமையும்.

திரௌபதி கூறல்

**12. பெண்மொழி கேளா ரென்றும் பெரியவ ரெனக்கொண் டிந்த**
**மண்மொழி வார்த்தை பொய்யோ வருத்தநீ ருற்ற வெல்லாம்**
**எண்மிக வெண்ணின் முன்ன மென்பொருட் டன்றோவென்று**
**கண்மல ரருவி சோரக் கனற்பிறந் தாளுஞ் சொன்னாள்.**

[பெண் மொழி கேளார் என்றும் பெரியவர் என கொண்டு இந்த மண் மொழி வார்த்தை பொய்யோ! வருத்தம் நீர் உற்ற எல்லாம் எண் மிக எண்ணின், முன்னம் என் பொருட்டு அன்றோ? என்று கண்மலர் அருவி சோர கனல் பிறந்தாளும் சொன்னாள்.]

**விளக்கம் :-** பெரியவர் என்றும் பெண்மொழி கேளார் என (கொண்டு), இந்த மண்மொழி(யும்) வார்த்தை பொய்யோ! முன்னர் நீர் உற்ற வருத்தம் எல்லாம் எண்மிக எண்ணின் என் பொருட்டு அன்றோ? என்று கண் மலர் அருவி சோர கனல் பிறந்தாள் சொன்னாள், என்பது அன்வயம். மண் - மண்ணுலகத் தோர். எண் - மனம். எண்மிக எண்ணின் - மனத்தால் நன்கு எண்ணிப் பார்த்தால். தன் பொருட்டால் அல்லவா, பாண்டவர் துன்பத்திற் குள்ளாக நேர்ந்தது, என்று பாஞ்சாலி வருந்தியபடி.

### கண்ணன் வரல்

**13. தம்பியர் தாமும் வேள்வித் தையலு முரைத்த மாற்றம்
கிம்புரி நெடுங்கோட் டம்பொற் கிரிவலோன் கேட்ட பின்னர்
வெம்பரி நகுலன் சொல்லே விதியெனக் கருதி யப்போ(து)
எம்பெரு மானை யுன்ன விவனெதி ரவனும் வந்தான்.**

[தம்பியர் தாமும் வேள்வி தையலும் உரைத்த மாற்றம் கிம்புரி நெடுங்கோடு அம் பொன் கிரி வலோன் கேட்ட பின்னர், வெம்பரி நகுலன் சொல்லே விதி என கருதி அப்போது எம் பெருமானை உன்ன, இவன் எதிர் அவனும் வந்தான்.]

**விளக்கம் :-** கிம்பரி - பூண். தந்தங்களில் அலங்காரமாகப் பூண் கட்டிய நீண்ட தந்தங்களையும் அழகிய பொன்னால் செய்த அணிகலன்களையும் உடைய மலையை ஒத்த யானையை நடத்துவதில் வல்லவனான தருமன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வெம்பரி நகுலன் - வெவ்விய வேகமுடைய குதிரைகளை நடத்து வதில் வல்லவனான நகுலன். விதி என - (நகுலன் சொன்னபடி செய்வதே) தக்கது என. எம்பெருமானை நினைக்க, அப் பெருமானும் எதிர் தோன்றினான், என்க. கிரி - யானை.

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

**14. கண்டிரு கண்ணு மிதயமுங் களிப்ப
கட்செவி பேரணை மறந்து
வண்டுவ ரையின்வாழ் தண்டுழாய் மாலை
மாதவன் வருதலு மெதிர்கொண்(டு)
அண்டரு மிறைஞ்சற் கரியதா ளிறைஞ்சி
யாங்குறு விடரினை யவற்குத்
திண்டிற லறத்தின் திருமக னுரைப்பத்
திருச்செவி சாத்தினான் செப்பும்.**

[கண்டு இரு கண்ணும் இதயமும் களிப்ப, கட்செவி பேர் அணை மறந்து, வள்துவரையின் வாழ் தண் துழாய் மாலை மாதவன் வருதலும் எதிர்கொண்டு, அண்டரும் இறைஞ்சற்கு அரிய தாள் இறைஞ்சி, ஆங்கு உறு இடரினை அவற்கு திண் திறல் அறத்தின் திருமகன் உரைப்ப, திரு செவி சாத்தினான், செப்பும்.]

**விளக்கம் :-** கட்செவி பேர் அணை மறந்து, வள் துவரையின் வாழ் தண் துழாய் மாலை மாதவன் வருதலும், திண் திறல் அறத்தின் திருமகன், இரு கண்ணும் இதயமும் களிப்ப கண்டு, எதிர் கொண்டு, அண்டரும் இறைஞ்சற்கு அரிய தாள் இறைஞ்சி, ஆங்கு உறு இடரினை அவற்கு உரைப்ப, திரு செவி சாத்தினான், செப்பும், என்பது அன்வயம். கட்செவிப் பேரணை - ஆதி சேஷனாகிய சிறந்த படுக்கை, அண்டர் - தேவர். சிந்தித்த தருமன் முன் கண்ணன் வரலும், அவனை எதிர்கொண்டு வணங்கி இப்பொழுது தாங்கள் உற்ற இடரைத் தெரிவித்தலும், அப் பெருமான் கூறுவான், - என்பதாம்.

**15. திண்மையா லுயர்ந்த நீவிரை வருமித்**
**தீயிடைப் பிறந்தசே யிழையும்**
**உண்மையா னெஞ்சி னிகழ்ந்தபட் டாங்கீண்**
**டுரைத்திடக் கோட்டின் மீண் டொன்றும்**
**வண்மையா லுயர்ந்தீ ரென்றுசெம் பவள**
**வாய்மலர்ந் தருளினான் மாயோன்**
**தண்மையார் கருணைத் தராபதி முதலோர்**
**சாற்றுவார் தம்மனத் தியல்பே.**

[திண்மையால் உயர்ந்த நீவீர் ஐவரும் இ தீ இடை பிறந்த சேய் இழையும், உண்மையால் நெஞ்சில் நிகழ்ந்த பட்டாங்கு ஈண்டு உரைத்திட கோட்டில் மீண்டு ஒன்றும் வண்மையால் உயர்ந்தீர், என்று செம் பவளவாய் மலர்ந்தருளினான் மாயோன், தண்மை ஆர் கருணை தராபதி முதலோர் சாற்றுவார் தம் மனத்து இயல்பு, ஏ.]

**விளக்கம் :-** பட்டாங்கு - உள்ளதான உண்மை நிலை. நெஞ்சில் நிகழ்ந்த பட்டாங்கு உண்மையால் உரைத்திட - உள்ளத் தில் நிகழ்ந்தவற்றை ஒளிக்காமல் உள்ளபடியே உண்மை கடவாமல் கூற, [கனி கோட்டில் (கிளையில்) மீண்டும் ஒன்றும்]. தராபதி-தருமன். வண்மையால் உயர்ந்தவர்களே திண்மையால் உயர்ந்த நீங்களும் திரௌபதியும் உங்கள் நெஞ்சின் உண்மை நிலையை ஒளிக்காமல் கூறினால், நெல்லிக்கனி மரக்கிளையில் மீண்டும் பொருந்திவிடும், என்று கண்ணன் கூற, தராபதி முதலோர் தம் உள்ளக் கிடக்கையை வெளியிடலாயினர்,— என்பதாம்.

**16.** **வெல்லுக வறமு மெய்ம்மையும் பொறையும்**
**மேகமே னியனும்வெல் லாமல்**
**செல்லுக பாவம் பொய்மொழி கோபம்**
**தெயித்தியர் குலமெனத் தெளிவுற்(று)**
**அல்லும்வெம் பகலு மென்மன நிகழு**
**மலகையா மன்னையை முன்னம்**
**கொல்லுதல் புரிந்தோ யென்றனன் முரசங்**
**கோட்டிய கொற்றவெங் கொடியோன்.**

[வெல்லுக அறமும் மெய்ம்மையும் பொறையும் மேகம் மேனியனும், வெல்லாமல் செல்லுக பாவம் பொய் மொழி கோபம் தெயித்தியர் குலம் என, தெளிவு உற்று, அல்லும் வெம் பகலும் என் மனம் நிகழும், அலகை ஆம் அன்னையை முன்னம் கொல்லுதல் புரிந்தோய், என்றனன், முரசம் கோட்டிய கொற்றம் வெம் கொடியோன்.]

**விளக்கம் :-** மேக மேனியான் - சர்வ ரட்சகனான திருமால். தெயித்தியர் குலம் - அசுர குலம். அல்லும் பகலும் - இரவும் பகலும். அலகை-பூதனை. முரசம் கோட்டிய-முரசம் (கொடியில்) எழுதப்பெற்ற. முரசக் கொடியோனான தருமன், அலகையாம் அன்னையை முன் கொல்லுதல் புரிந்தோய் என்று கண்ணனை விளித்து, அறம் முதலியவைகளும் திருமாலும் வெல்ல வேண்டும் என்றும், பாபம் முதலியவைகளும் அசுரர்களும் அகன்றொழிய வேண்டும் என்றும், உள்ளத் தெளிவோடு, இரவும் பகலும் (விழைதல்) என் மனத் தகத்தே எப்பொழுதும் நிலைத்திருக்கும், என்று கூறினான், என்பது பொருள். அலகையாம் சழக்கியைக் கொலை புரிந்தோய் என்று விளிக்காமல், அலகையாம் அன்னை யைக் கொலை புரிந்தோய், என்று தருமன் விளித்ததின் கருத்து விளங்கவில்லை.

**17.** **பிறர்மனை யவரைப் பெற்றதா யெனவும்**
**பிறர்பொரு ளெட்டியே யெனவும்**
**பிறர்வசை யுரைத்தல் பெருமையன் றெனவும்**
**பிறர்துய ரென்றுய ரெனவும்**
**இறுதியே வரினு மென்மனக் கிடக்கை**
**யெம்பிரா னிவையென வுரைத்தான்**
**மறலியு மடிய மாறுமல் லியற்கை**
**வலிமைகூர் வாயுவின் மைந்தன்.**

[பிறர் மனை யவரை பெற்ற தாய் எனவும், பிறர் பொருள் எட்டியே எனவும், பிறர் வசை உரைத்தல் பெருமை அன்று எனவும், பிறர் துயர் என் துயர் எனவும், இறுதியே வரினும் என் மனக்கிடக்கை எம்பிரானே இவை என உரைத்தான், மறலியும் மடியும் ஆறு மல் இயற்கை வலிமை கூர் வாயுவின் மைந்தன்.]

**விளக்கம் :-** மல் (போரில்) மறலியும் மடியுமாறு இயற்கை வலிமை கூர் வாயுவின் மைந்தன், எம்பிரானே, இறுதியே வரினும், பிறர் மனையவரை...(ஆகிய) இவை. என் மனக்கிடக்கை என உரைத்தான்,-என்பது அன்வயம். மரண பயம் நேர்வதாயினும், பிறர் மனை விழையாமை, பிறர் பொருள் இச்சியாமை, பிறரைப் பழியாமை, அல்லது பிறர் பழி கூறாமை, பிறர் துயரைத் தன் துயராகக் கொள்ளுதல் ஒழியாமை, ஆகியவை என் மனக் கிடக்கை என்று வீமன், கூறினான், என்பதாம். எட்டி - எட்டிக்காய். உண்ணுதற்கு உதவாத காய். மற்போரில் எமனையும் மடியுமாறு போர் புரியவல்ல இயற்கை வலிமை மிகுந்த வாயு குமாரன்,— என்பது ஈற்றடியின் பொருள்.

**18. ஊனமே யான வூனிடை யிருக்கு**
**முயிரினைத் துறந்துமொண் பூணா**
**மானமே புரப்ப தவனிமே லெவர்க்கும்**
**வரிசையுந் தோற்றமு மரபும்**
**ஞானமே யான திருவடி வுடையாய்**
**ஞாலமுள் ளளவுநிற் றலினால்**
**ஈனமே யுயிருக் கியற்கையா தலினா**
**லென்றனன் வீமனுக் கிளையோன்.**

*[ஊனமே ஆன ஊனிடை இருக்கும் உயிரினை துறந்தும், ஒண் பூண் ஆம் மானமே புரப்பது அவனிமேல் எவர்க்கும் வரிசையும் தோற்றமும் மரபும், ஞானமே ஆன திரு வடிவு உடையாய், ஞாலம் உள்ள அளவும் நிற்றலினால், ஈனமே உயிருக்கு இயற்கை ஆதலினால், என்றனன் வீமனுக்கு இளையோன்.]*

**விளக்கம் :-** வீமனுக்கு இளையோன், ஈனமே உயிருக்கு இயற்கை ஆதலினால், மானமே ஞாலம் உள்ள அளவும் நிற்றலி னால், ஞானமே ஆன திருவடிவு உடையாய், ஊனமே ஆன ஊனிடை இருக்கும் உயிருக்கு (அம் மானத்தை) புரப்பது அவனி மேல் எவர்க்கும் வரிசையும் தோற்றமும் மரபும், என்றனன், என்பது அன்வயம். ஊனம் - குறைபாடு, அதாவது அழியும் தன்மை உடைமை. ஊன் - உடல். ஒண் பூண் - ஒள்ளிய ஆபர ணம். வரிசை - சிறப்பு. தோற்றம் - புகழ்ச்சி, பிராபல்யம். மரபு - குலம். மேன்மை. இறைவனை ஞான ஸ்வரூபி என்று வேதம் கூறும்; எனவே, விசயன், கண்ணனை "ஞானமேயான திருவடிவு உடையாய்". என்றான். பிரகிரு சம்பந்தத்தால் உயிருக்கு ஈனம் ஏற்படுதல் இயல்பாகின்றது. விசயன் கண்ணனை நோக்கி, "ஈனமே உயிரின் இயற்கையாய் இருத்தலினாலும், மானம் என்பது உலகம் உள்ளவரை அழியாது நிலை நிற்பதினாலும், உயிரினைக் கொடுத்தேனும், நற்சீரையும் புகழையும், குலமுடைமை யையும் தரவல்லதான, அந்த மானத்தைப் பாதுகாத்தலே வேண் டப்படுவது, என்ற எண்ணத்தினன் நான்",-என்றான் என்க.

**19.** **குலமிக வுடைய ரெழின்மிக வுடையர்**
**குறைவில்செல் வமுமிக வுடையர்**
**நலமிக வுடைய ரென்னினுங் கல்வி**
**ஞானமற் பமுமிலா தவரை**
**வலமிகு திகிரிச் செங்கையாய் முருக்கின்**
**மணமிலா மலரென மதிப்பேன்**
**சலமிகு புவியி லென்றனன் வாகைத்**
**தார்புனை தாரைமா வல்லான்.**

[குலம் மிக உடையர், எழில் மிக உடையர், குறைவு இல் செல்வமும் மிக உடையர், நலம் மிக உடையர் என்னினும், கல்வி ஞானம் அற்பமும் இலாதவரை, வலம் மிகு திகிரி செம் கையாய், முருக்கின் மணம் இலா மலர் என மதிப்பேன், சலம் மிகு புவியில் என்றனன், வாகை தார் புனை தாரை மா வல்லான்.]

**விளக்கம் :-** நலம் - வாழ்க்கைச் சிறப்பு. சலம் மிகு புவி - அசையும் தன்மை மிக உடைய, அதாவது நிலையாமை மிக உடைய உலகம். தாரை - குதிரை நடை. மா - குதிரை. நகுலன், வலம் (வெற்றி) மிகு திகிரிச் செங்கையாய் என்று கண்ணனை அழைத்து, ''மலருக்குச் சிறப்பு மணம்; அம் மணம் இல்லாத முருக்கின் பூவைப்போன்று, குலம், செல்வம் முதலிய நலங்களைப் பெற்று இருந்தும், கல்வியும், அதன் பயனாய ஞானமும் கொஞ்சமும் இல்லாதவரை என் மனம் மதியாது'', என்றான், என்க. வாகை தார்புனை தாரை மா வல்லான் - வெற்றியின் அடையாளமான வாகை மாலை சூடிய நல்ல நடையை உடைய குதிரை நடத்தலில் வல்லவனான நகுலன்,

**20.** **ஒருமொழி யன்னை வரம்பிலா ஞான**
**முற்பவ காரண னென்றும்**
**தருமமே துணைவன் கருணையே தோழன்**
**சாந்தமே நலனுறு தாரம்**
**அரியதிண் பொறையே மைந்தன்மற் றிந்த**
**வறுவரு மல்லதா ருறவென்(று)**
**இருவரி லிளையோன் மொழிந்தனன் றன்பே**
**ரிதயமா மலர்க்கிடை யெடுத்தே.**

[ஒரு மொழி அன்னை, வரம்பு இலா ஞானம் உற்பவ காரணன், என்றும் தருமமே துணை, கருணையே தோழன், சாந்தமே நலன் உறு தாரம், அரிய திண் பொறையே மைந்தன், மற்று இந்த அறுவரும் அல்லது ஆர் உறவு என்று, இருவரில் இளையோன் மொழிந்தனன், தன் பேர் இதயம் மா மலர் கிடை எடுத்தே.]

**விளக்கம் :-** இருவரில் இளையோன், (கண்ணனை நோக்கி) ஒரு மொழி அன்னை...உறவு என்று, தன் பேர் இதய மா மலர்க் கிடை(யை) எடுத்து மொழிந்தனன்,—என்பது அன்வயம். ஒரு மொழி - சத்தியம். உற்பவகாரணன் - பிதா. தாரம் - மனைவி.

''சத்தியம் - தாய், ஞானம் - பிதா, தருமம் - துணைவன், கருணை நண்பன், சாந்தம் - மனைவி, பொறுமை - புத்திரன் இந்த அறு வரும் அல்லாது வேறு யாவர் உறவினர்'', என்று சகாதேவன், தன் உள்ளக் கிடக்கையைத் தெரிவித்தான், என்க. மற்று - வேறு.

**21. ஐம்புலன் களும்போ லைவரும் பதிக**
**ளாகவும் இன்னம்வே றொருவன்**
**எம்பெருங் கொழுந னாவதற் குருகு**
**மிறைவனே எனதுபே ரிதயம்**
**அம்புவி தனிற்பெண் பிறந்தவ ரெவர்க்கு**
**மாடவ ரிலாமையி னல்லால்**
**நம்புதற் குளரோ வென்றனள் வசிட்ட**
**னல்லற மனைவியே யனையாள்.**

[ஐம்புலன்களும்போல் ஐவரும் பதிகளாகவும் இன்னம் வேறு ஒருவன் எம்பெருங் கொழுநன் ஆவதற்கு உருகும் இறைவனே, எனது பேர் இதயம்; அம் புவிதனில் பிறந்தவர் எவர்க்கும் ஆடவர் இலாமையால், நம்புதற்கு உளரோ? என்றனள், வசிட்டன் நல் அறம் மனைவியே அனையாள்.]

**விளக்கம் :-** இறைவனே, ஐவர் எனக்குப் பதிகளாயிருந்தும் ஆறாவது ஒருவனைப் பதியாகக் கொள்ள என் இதயம் விரும் புவதாகும், என்று திரௌபதி கூறும் கருத்தது, முதலிரண்டடிகள். வசிட்டன் நல்லற மனைவி - அருந்ததி. பெண் பிறந்தார்க்கு அவர் களது விருப்பத்தின்படி ஆடவர் கிடைக்காமையால் அல்லாமல், அவர்களைப் பதிவிரதை என்று நம்பிச் சொல்லுவதற்கு இல்லை, என்ற பொருளது ஈற்றடிகள். அதாவது, பெண்கள் தங்கள் கணவர் அல்லாத பிறரை விரும்புபவரே ஆவர்; தாம் விரும்பியபடி ஆடவர் கிடைக்கப் பெறாமையினால்தான் ஒரு கணவனோடு வாழ்கின்ற னர், என்பது கருத்து. இது **வேற்றுப்பொருள் வைப்பணியின்** பாற் படும். இந்த அணியின் இலக்கணம் இதன் முன் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளது. நம்புவதற்கு உளரோ-பதிவிரதை என்று நம்பு வதற்கு இருக்கின்றனரோ, இல்லையென்றபடி.

**22. அறுவரு மிவ்வா றுரைத்தன ருண்மை**
**யவரவர் நினைவினின் படியே**
**மறுவணி துளப மார்பனுங் கேட்டான்**
**மா முனிக் கோதன மான**
**நிறைசுவை யமுத நெல்லியின் கனியு**
**நின்றகொம் பணைந்ததா லென்றும்**
**பெறுமுறை பெறுமே யுள்ளவா றுரைத்தாற்**
**பெரியவர் பேசும்வா சகமே.**

[அறுவரும் இ ஆறு உரைத்தனர் உண்மை அவர் அவர் நினை வினின் படியே, மறு அணி துளபம் மார்பனும் கேட்டான்; மா முனிக்கு ஓதனம் ஆன நிறை சுவை அமுதம் நெல்லியின் கனியும் நின்ற கொம்பு அணைந்தது, (ஆல்); என்றும் பெறும் முறை பெறுமே உள்ள ஆறு உரைத்தால் பெரியவர் பேசும் வாசகம், ஏ.]

**விளக்கம் :-** மறு அணி துளபம் மார்பன் - ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவை அணிந்த துளசி மாலை சூடிய மார்பையுடைய திருமால் (கண்ணன்). நின்ற கொம்பு அணைந்தது - அவ் வனத்திலே நின்ற நெல்லி மரத்தின் கிளையில் பொருந்தியது. என்றும் பெரியவர் பேசும் வாசகம் பெறும் முறை பெறும் - எப்பொழுதும் பெரியோர் வாக்கு உண்மை கடவாது கூறப்படுமாயின் பாராட்டப் பெறுவதற்குரிய முறைமையை (தன்மையை) அடையும். இதுவும், வேற்றுப் பொருள் வைப்பு அணியாகும்.

## கண்ணன் துவாரகை திரும்பல்

**23.** **முளைத்தெழு கமலத் தரும்பென வரும்பு**
**முகிழ்முலைப் பொதுவியர் மலர்க்கை**
**வளைத்தழும் பகலா மரகத மலைபோல்**
**வடிவழ குடையவெம் மாயோன்**
**உளைத்தெழு தரங்கப் பாற்கடன் மறந்தே**
**யுறையும்வண் டுவரையை நோக்கி**
**இளைத்தவ ரின்ன லொழித்து மீண் டகன்றா**
**னிவருமீண் டிறைஞ்சியாங் கிருந்தார்.**

[முளைத்து எழு கமலத்து அரும்பு என அரும்பும் முகிழ்முலை பொதுவியர் மலர்கை வளை தழும்பு அகலா மரகத மலைபோல் வடிவு அழகு உடைய எம் மாயோன், உளைத்து எழு தரங்கம் பாற்கடல் மறந்தே உறையும் வள் துவரையை நோக்கி, இளைத்தவர் இன்னல் ஒழித்து மீண்டு அகன்றான்; இவரும் மீண்டு இறைஞ்சி ஆங்கு இருந்தார்.]

**விளக்கம் :-** அரும்பித் தோன்றும் தாமரை மலர்போல் அரும்புகின்ற குவிந்த முலைகளை உடைய ஆய்ச்சியரின் மலர்க்கைகளில் அணிந்த வளைகளின் தழும்பு அகலப்பெறாத மரகதமலைபோல் வடிவழகு உடைய எமது பிரானான கண்ணன்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். அப் பெருமான், முனி சாபத்திற்கு அஞ்சி இளைத்தவரான பாண்டவரின் இன்னல் களைந்து, ஒலி செய்து எழும் அலைகளை உடைய பாற்கடல் மறந்து,(இப்பொழுது தான்) வசிக்கின்ற வளம் மிகுந்த துவாரகையை நோக்கி மீண்டு அகன்றான். இவரும் (பாண்டவரும்) மறுபடியும் அப் பெருமானை) வணங்கி ஆங்கு இருந்தனர், என்பது ஈற்றடிகளின் பொருள். ஆய்ச்சியர் கட்டித் தழுவுவதனால், அவர்களது வளைத் தழும்பு அவனது திருமேனியில் இடங்கொண்டதாயிற்று.

# 8. நச்சுப் பொய்கைச் சருக்கம்

நச்சுப் பொய்கையின் நீர் உண்டு உயிரிழந்த பாண்டவர், மீண்டும் உயிர்பெற்று எழுந்ததைக் கூறும் சருக்கம் இது. பாண்டவர் விண்டு சித்த முனிவனது வனத்தில் வசிக்கையில், துரியோதனனது தூண்டுதலால் அபிசார வேள்வி செய்த காளமா முனிவன், வேள்வித் தீயினின்று தோன்றிய பூதத்தைப் பாண்டவரை அழித்து வருமாறு ஏவினான். அந்தச் சமயம் ஓர் அந்தணச் சிறுவனது கிருஷ்ணாஜினத்தைக் கவர்ந்து சென்ற மானை, அச் சிறுவனது வேண்டுகோளுக்கு இணங்கிப் பாண்டவர், தொடர்ந்து சென்று அயர்ந்தனர். அவ்வேளை நீர் வேட்கை மிகுந்த தருமன் ஏவ, நால்வரும் ஒருவர் பின் ஒருவராய் ஒரு பொய்கையை அடைந்து நீரைப் பருகி உயிர் இழந்தவராயினர். நீண்ட நேரம் தம்பியர் திரும்பாமையால் எழுந்த சோகத்தாலும் தாகத்தாலும் தருமன் உயிர் ஒடுங்கினவனைப்போல் ஒரு மரத்தடியில் கிடந்தான். அந்நிலையில் முனிவன் ஏவிய பூதம் பாண்டவர் உயிரற்றுக் கிடத்தலைக் கண்டு, சினத்தொடு மீண்டு சென்று தன்னைப் பிணத்தின் மேல் ஏவிய முனிவனைக் கொன்று அகன்றது. நிற்க, அயர்ச்சி தெளிந்த தருமன் தம்பியரைத் தேடிச்சென்று, பொய்கைக் கரையில் அவர் மாண்டு கிடப்பதைக் கண்டான். கண்டவன், தானும் நீரைப்பருகி மடிதலே செய்தற்குரியது என்று முடிவு செய்து பொய்கையில் இறங்குகையில், ஓர் அசரீரி, ''என் கேள்விகளுக்கு விடை கூறியபின் நீ நீர் அருந்துக'', என்றது. தருமன், அவ்வாறே செய்ய, அறக்கடவுள் தோன்றித் தம்பியரையும் உயிர்ப்பித்து, வேண்டிய வரங்களையும் உதவி மறைந்த செய்தியைக் கூறுதலை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

### கடவுள் வாழ்த்து

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. சேய பங்கயச் சிறுவிர லங்கையிற் றிரட்டிய நறுவெண்ணெய்**
**ஆயர் மங்கைய ரிடவிட வமுதுசெய் தாடிய திருக்கூத்தும்**
**நேய முங்குறு முறுவலும் புரிந்துபார்த் தருளிய நெடுங்கண்ணும்**
**மாய வன்றிரு வடிவமு மழகுமென் மனத்தைவிட் டகலாவே.**

[சேய பங்கயம் சிறு விரல் அம் கையில் திரட்டிய நறு வெண்ணெய் ஆயர் மங்கையர் இட இட அமுது செய்து ஆடிய திருக்கூத்தும், நேயமும் குறுமுறுவலும் புரிந்து பார்த்தருளிய நெடுங் கண்ணும், மாயவன் திரு வடிவமும், அழகும் என் மனத்தைவிட்டு அகலாவே.]

**விளக்கம் :-** ஆய மங்கையர் திரட்டிய நறு வெண்ணெய் சேய பங்கயம் சிறு விரல் அம் கையில் இட இட அமுது செய்து ஆடிய மாயவன் திருக்கூத்தும், நேயமும் குறுமுறுவலும் புரிந்து பார்த்தருளிய நெடுங்கண்ணும், திருவடிவமும், அழகும் என் மனத்தை விட்டு அகலா, ஏ, — என்பது அன்வயம். பார்த்தருளிய - ஆயரைக் கடாட்சித்து அருளிய. மாயவன் ஆயர் பாடியில் ஆடியருளிய திருக்கூத்தும், ஆயச்சிறுமியரைக் கடாட்சித்தருளிய கண்ணும், திருமேனி அழகும் என் மனத்தை விட்டு அகலா,— என்பதாம். அதாவது, அவனது சௌலப்பிய குணங்களை எப்பொழுதும் தியானிப்பேன், என்று புலவர் கூறும் கருத்தது.

பாண்டவர் விஷ்ணு சித்தரின் இருக்கை அடைதல்

**2. வண்டு சிந்திய மதுத்துளி முகில்பொழி மழைத்துளி யொடுசேர்ந்து**
**கண்டு சிந்தையு நயனமு முருகுபைங் கானிடைக் கழிகேள்வி**
**விண்டு சித்தனென் றொருமுனி யருந்தவ விபனமே வினராகிக்**
**கொண்டு சிந்தனை யறவிருந் தனர்குலக் குந்திமுன் பயந்தோரே.**

[வண்டு சிந்திய மது துளி முகில் பொழி மழை துளியொடு சேர்ந்து, கண்டு சிந்தையும் நயனமும் உருகு பைங்கானிடை கழி கேள்வி விண்டு சித்தன் என்று ஒரு முனி அருந்தவம் விபினம் மேவினர் ஆகி. (கொண்டு) சிந்தனை அற இருந்தனர், குலம் குந்தி முன் பயந்தோர், ஏ.]

**விளக்கம் :-** சேர்ந்து - சேர்ந்திருக்க, (சேர, எச்சத்திரிபு). கழி கேள்வி - கல்வியோடு மிகுதியான கேள்வி (உடைய)- தவ விபனம் - தபோவனம், (கொண்டு : அசை). சிந்தனை அற - கவலை இல்லாமல். குந்தியின் மக்களான பாண்டவர் விஷ்ணு சித்தன் என்ற பெயருடைய முனிவனது கானை அடைந்து, கவலை அற வாழ்ந்தனர், என்பதாம்.

**3. ஆண்டு மற்றவ ருறைதரு காலையி லரவவெங் கொடியோனும்**
**மூண்ட ழற்பொறி கன்றிய மனத்தினர் மூவரு முடன்முன்னி**
**மீண்டு மிப்புவி வேண்டுவ ரிருக்கினாம் விரகுடன் முற்கோலிப்**
**பாண்டு புத்திரர் கோறுமென் றருளிலாப் பாவியர் துணிந்தாரே.**

[ஆண்டு மற்று அவர் உறைதரு காலையில் அரவம் வெங்கொடியோனும், மூண்டு அழல் பொறி கன்றிய மனத்தினர் மூவரும் உடன் முன்னி, மீண்டும் இ புவி வேண்டுவர் இருக்கின், நாம் விரகுடன் முன் கோலி பாண்டு புத்திரர் கோறும் என்று அருள் இலா பாவியர் துணிந்தார், ஏ.]

**விளக்கம் :-** ஆண்டு (மற்று) அவர் உரைதரு காலை வெம் அரவம் கொடியோனும், அழல் பொறி மூண்டு சன்றிய மனத்தினர் மூவரும் உடன் முன்னி, பாண்டு புத்திரர் இருக்கின் மீண்டும் இ புவி வேண்டுவர், நாம் விரகுடன் முன் கோலி (அவர்களை) கோறும் என்று அருள் இலா பாவியர் துணிந்தார்,- என்று அன்வயிக்க. அழல் பொறி வெளிப்படும்படி பற்றி எரிகின்ற மனத்தினரான துச்சாதனன் சகுனி கர்ணன் ஆகிய மூவர். உடன் முன்னி - ஒன்று சேர்ந்து ஆலோசித்து. விரகுடன் முன் கோலி - தந்திரமாக, அஜ்ஞாதவாசம் முடித்து நாடு கேட்க வருமுன் ஒருவழி செய்து. கோறும் - கொல்வோம்- பாண்டவர் வனவாசம் செய்து கொண்டிருக்கும் இப்பொழுதே, விரகினால் அவர்களைக் கொல்ல வேண்டும் என்று துரியோதனாதியர் முடிவு செய்தனர், என்பதாம். மற்று : அசை.

காளமாமுனியைப் பகை களையுமாறு வேண்டல்

**4. காள மாமுனி தனைக்கொடு வருகென கலந்தணிந்**
**தொளிகூரும்**
**தூள மாமுனி யொருவனோ டறிவிலாச் சுயோதன**
**னுரைசெய்ய**
**வாள மாநில முழுதுடை மன்னனில் வந்தனன்**
**விரைவிற்போய்**
**மீள மாமறை வேள்விகூர் முனியொடும் விடுத்தமா**
**முனியம்மா.**

[காளமாமுனி தனை கொடு வருக என, (விபூதியை) கலந்து அணிந்து ஒளிகூரும் தூளமாமுனி ஒருவனோடு அறிவு இலா சுயோதனன் உரை செய்ய, வாளம் மா நிலம் முழுதுடை மன்னன் இல் வந்தனன், விரைவில் போய் மீள, மாமறை வேள்வி கூர் முனியொடும் விடுத்த மாமுனி அம்மா.]

**விளக்கம் :-** காளமா முனிவனை கொடு வருகென (வருக என) அறிவு இலா சுயோதனன், (விபூதியை நீரில்) கலந்து அணிந்து ஒளிகூரும் தூளமாமுனி ஒருவனோடு உரை செய்ய, விடுத்த மா முனி விரைவில் போய், வாளம் மாநிலம் முழுதுடை மன்னன் இல், மாமறை வேள்வி கூர் முனியொடும் மீள வந்தனன், அம்மா,— என்பதுஅன்வயம்.

காளமாமுனி - முனிவன் பெயர். கலந்து அணிந்து ஒளி கூரும் தூளமாமுனி - சாம்பலை நீரில் கலந்து அணிந்து பிரகாசிக்கும் தூளமாமுனிவன். வாளம் - வட்டவடிவம். மாமறை வேள்வி கூர் முனி, சிறந்த வேதம் விதிக்கும் வேள்விகளைச் செய்வதில் திறமை மிகுந்த காளமாமுனிவன். விடுத்த மாமுனி - துரியோதனன் அனுப்பிய தூளமாமுனி. அம்மா : அசை. கலந்த நீற்றொளி கூரும், என்றும் ஒரு பாடம் உளது. துரியோதனன், அபிசார வேள்வி செய்வதில் சிறந்தவனான காளமா முனியைத் தூளமா முனிவனைக் கொண்டு அழைப்பித்தான், என்க.

**5. ஒருமு னிக்கணங் களுக்குமுன் செய்கலா வுயர்வுடை**
**யுபசாரம்**
**பெருமு னிக்களித் திறைஞ்சிநீ புரிதவப் பெருமையால்**
**வளர்கின் ற(து)**
**இருநி லப்பரப் பெங்குமென் னாணையே யென்னைநீ**
**யீடேற்றத்**
**திருவு ளத்தருள் செய்குக வெனவவன் சேவடி**
**களில்வீழ்ந்தான்.**

[ஒரு முனி கணங்களுக்கும் ... முன் செய்கலா உயர்வு உடை உபசாரம்பெருமுனிக்கு அளித்து இறைஞ்சி, ''நீ புரி தவம் பெருமையால், வளர்கின்றது இரு நிலம் பரப்பு எங்கும் என் ஆணையே, என்னை நீ ஈடு ஏற்ற திருவுளத்து அருள் செய்குக'' என அவன் சே அடிகளில் வீழ்ந்தனன்,]

**விளக்கம்** :- ஒரு முனி கணங்களுக்கும் இறைஞ்சி, இரு நிலப் பரப்பு எங்கும் என் ஆணை நீ புரிதவப் பெருமையால், வளர்கின்றது ; என்னை நீ வீழ்ந்தனன்,—என்பது அன்வயம். என்னை நீ ஈடேற்ற திருவுளத்து அருள் செய்குக - (சம்பவிக்க இருக்கும் இடையூற்றினின்று என்னை, நீ கரையேற்றி) வைக்கத் திருவுளம் கொள்க. இது வரை எந்த முனிவர்க்கும் செய்திராத உபசாரங்களைக் காளமாமுனிவருக்குச் செய்து, அவர் திருவடிகளில் விழுந்து, என் இடர் அகற்றி என்னைக் கரை ஏற்றத் திருவுளம் கொள்ளவேண்டும் என்று முனிவனைத் துரியோதனன் பிரார்த்தித்தான், என்க.

**6. நன்க லாவித மனைத்தையுந் தெரிக்குநன் னாவுடைய**
**முனியென்னை**
**என்கொ லாமிவ னழைத்ததின் றெனவவ னிருந்தமா**
**மனைநோக்கத்**
**தன்க லாமனந் தோன்றவச் சகுனியத் தவமுனி**
**வனைப்போற்றி**
**மின்கு லாவரு வேணியாய் நீயிவன் வெம்பகை**
**களைகென்றான்.**

[நல் கலாவிதம் அனைத்தையும் தெரிக்கும் நல் நா உடை முனி, ''என்னை என் (கொலாம்) இவன் அழைத்தது இன்று?'' என, அவன் இருந்த மாமனை நோக்க, தன் கல் ஆம் மனம் தோன்ற, அ சகுனி அ தவம் முனிவனை போற்றி, ''மின் குலாவரு வேணியாய் நீ இவன் வெம் பகை களைக'' என்றான்.]

**விளக்கம் :-** நல்கலா விதம் அனைத்தையும் தெரிவிக்கும் நல் நாவுடைமுனி - நல்ல சாத்திர வகைகள் எல்லாவற்றையும் ஓதுவிக்கவல்ல நல்ல நாவினை உடைய முனி. அவன். ''என்னை இவண் அழைத்தது என்?'' என்று கேட்டலும், துரியோதனன் மாமனான சகுனியை நோக்க, அச் சகுனியும், ''நீ இவனது கொடிய பகையை அழிக்கவேண்டும்'', என்று வேண்டினான், என்பதாம். தன் கலாம் மனம் தோன்ற, என்பதற்கு, ''தனது கல் போன்ற நெஞ்சின் தன்மை தோன்ற'', என்றும், அல்லது ''தனது (கலாமனம்) கல்லாத குருட்டு மனத்தின் புன்மை தோன்ற'', என்றும் பொருள் செய்யலாம். மின் குலாவரு வேணியாய் - மின்னல்போல் ஒளிவிடும் சடைமுடியை உடைய முனிவனே. கொலாம் (கொல், ஆம்) அசை.

7. **கொடுத்து மாநிலத் தின்னிசை வளர்க்குங் கொடியபா**
**வியுமைவர்**
**விடுத்த பாரினம் வேண்டுவ ரிருக்கினவ் வேந்தரை**
**விண்ணேற்றற்(கு)**
**அடுத்த வோமம்வஞ் சகங்களா லியற்றுதி யாயினிவ்**
**வெழுபாரும்**
**கொடுத்தி நீநிலை பெறவர வெழுதிய கொடியவன்**
**றனக்கென்றான்.**

[கொடுத்து மா நிலத்து இன் இசை வளர்க்கும் அ கொடிய பாவியும், ஐவர் விடுத்த பார் இனம் வேண்டுவர் இருக்கின், அ வேந்தரை விண் ஏற்றற்கு அடுத்த ஓமம் வஞ்சகங்களால் இயற்றுதி ஆயின், இ எழு பாரும் கொடுத்தி நிலைபெற அரவு எழுதிய கொடியவன் தனக்கு என்றான்.]

**விளக்கம் :-** வண்மையால் உயர்ந்தோனாயினும், பாண்டவர் பக்கல் தீமை நினைத்தல் பற்றிக் கர்ணன், பாவி எனப்பட்டான். வஞ்சகங்களால் - பகைவரோ, பிறரோ அறியாதபடி. அடுத்த ஓமம் - (பாண்டவர்களை அழிப்பதற்கு) ஏற்றதான அபிசார வேள்வி. அபிசார வேள்வி செய்யுமாறு முனிவனைக் கர்ணன் வேண்டினான், என்க. கொடியோன், என்றது, கொடியை உடையவன் என்பதோடு கொடுமை மிக்க தீயன், என்ற தொனியது மாகும்.

## அஞ்சிய முனிவனை இசைவித்தல்

**8. கன்னன் வாசகங் கேட்டபோ திரண்டுதன் கன்னமு**
**நெருப்புற்ற(து)**
**என்ன வேவவைம் புலன்களும் நெஞ்சமு யிடியின்வா**
**யரவொத்தான்**
**பின்னை யாதவ னுரைப்பது தவங்களும் பெருந்தகை**
**மையும்பொன்றி**
**முன்ன ரேழெழு பிறப்பினில் வினைகளு முடிந்தவின்**
**றெனமுன்னி.**

*[கன்னன் வாசகம் கேட்டபோது இரண்டு தன் கன்னமும் நெருப்பு உற்றது என்ன, வேவ, ஐம்புலன்களும் நெஞ்சமும் இடியின் வாய் அரவு ஒத்தான்; பின்னை யாது அவன் உரைப்பது? தவங்களும், பெருந்தகைமையும் பொன்றி முன்னர் ஏழ் எழு பிறப்பினில் வினைகளும் முடிந்த இன்று, என முன்னி,—அடுத்த கவியோடு தொடரும்.]*

**விளக்கம் :-** கன்னம் - காது. நெருப்பு உற்றது என்ன வேவ - (காதுகள்) நெருப்புப் புகுந்ததுபோல் வேக. பஞ்ச இந்திரியங்களும் மனமும் இடியொலி கேட்ட பாம்பைப்போல் நடுங்கப் பெற்றவனானான், முனிவன். பின்னையாவது அவன் உரைப்பது - இனி அவன் சொல்லப் போவதைத் தவிர வேறு என்ன அவன் சொல்வதற்கு உளது. அவனது தவங்களும், பெருமையும் அழிந்து, அதோடு நில்லாமல், ஏழு வகைப்பட்ட ஏழு பிறவிகளிலும் செய்துள்ள நல்வினைகளும் இன்றோடு ஒழிந்தன, என்று முனி நினைத்து,—மேலும் கூறுவான்.

**9. எண்வ கைப்பெருந் திசையினும் நினதுபே ரிசையிலாத்**
**திசையில்லை**
**மண்ண னைத்துநின் றனிக்குடை நிழலிலே மனுமுறை**
**மையின்வாழும்**
**கண்ண லுற்றதிக் கருமநீ யெக்குறை கண்டுவெங்**
**கழற்காலாய்**
**விண்ண கத்துநா னேற்றுதல் புரியினும் வீவரோ வீவில்லார்.**

*[எண்வகை பெருந்திசையினும் நினது பேர் இசை இலா திசை இல்லை, மண் அனைத்தும் நின் தனி குடை நிழலிலே மனு முறைமையின் வாழும், கண்ணல் உற்றது இ கருமம் நீ எ குறை கண்டு? வெம் கழல் காலாய், விண் அகத்து நான் ஏற்றுதல் புரியினும் வீவரோ வீவு இல்லார்?]*

**விளக்கம் :-** எட்டுத் திக்கிலும் உனது இசை பரவாத திசை இல்லை, பூமி முழுவதும் உனது ஒப்பற்ற குடை நிழலில் ஒதுங்கி மனுமுறை வழுவாமல் இனிதே வாழ்கின்றது,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். வெம் கழல் காலாய் - விரும்பத்தக்க

வீரக்கழல் அணிந்த கர்ணனே. பாண்டவர் உயிரோடு இருக்கின்ற பொழுதே ஒரு குறையும் இல்லாமல் பூமியை இனிதே ஆண்டுவரும் நீங்கள், எக்குறை தீர்த்துக்கொள்ள, இந்தக் கொடிய கருமத்தை எண்ணலுற்றீர், என்று முனிவன் கேட்டான், என்பது மூன்றாவது அடியின் பொருள். கண்ணல் - நினைத்தல். வீவில்லார் வீவரோ- அழிவில்லாத பாண்டவர், (நான் விண் ஏற்றுதற்குரிய யாகத்தைச் செய்யினும்) அழிவரோ, அழியமாட்டார், என்றபடி. ''மண் அனைத்தும் நின் குடை நிழலில் வாழும்'', என்றது, கர்ண னுடைய போராற்றலின் துணை கொண்டு துரியோதனன் உல காள்வது பற்றி, என்க. அபிசார யாகம் செய்தால், அழிவு எனக்கு ஏற்படுமேயன்றி, உத்தமர்களான பாண்டவர்க்கு அழிவு ஏற்படாது, என்று முனிவன் கர்ணனுக்குத் தெரிவிக்கும் கருத்தது இது.

**10. தொடங்கி யான்புரி தீவி னை யென்னையே சுடுவதல்**
**லதுகொற்றம்**
**மடங்கல் போல்பவர் தங்கண்மேற் செல்லுமோ மாயவ**
**னிருக்கின்றான்**
**இடங்கொள் பாரகம் பெறுவதற் கெண்ணுநின்**
**னிச்சையின் படியேகி**
**விடங்க ளாலுயி ரொழிபவ ரொத்துநான் வீவதே**
**மெய்யென்றான்.**

[தொடங்கி யான் புரி தீவினை என்னையே சுடுவது அல்லது கொற்றம் மடங்கல் போல்பவர் தங்கள் மேல் செல்லுமோ! மாய வன் இருக்கின்றான்: இடம் கொள் பார் அகம் பெறுவதற்கு எண்ணும் நின் இச்சையின்படி ஏகி, விடங்களால் உயிர் ஒழிபவர் ஒத்து, நான் வீவதே மெய் என்றான்.]

**விளக்கம் :-** உங்கள் சொல் கேட்டு ஆரம்பித்துச் செய்யும் அபிசாரமாகிய தீவினை, என்னை அழிப்பதல்லால், கொற்ற மடங்கல் போன்றவரான பாண்டவர்மேல் பயனளவில் செல்வ தாமோ! கண்ணனும் அவர்களை இரட்சிக்க இருக்கின்றான். இடமகன்ற பூமி முழுவதையும் உங்களுக்கே உரியதாக்கிக்கொள்ள எண்ணுகின்ற உனது இச்சையின்படி சென்று, வேள்வி செய்து, விஷங்களால் உயிர் மாய்வாரை ஒத்து நான் அழிவதே நிச்சயம், என்று காளமா முனிவன் கூறினான்,—என்பது பொருள்,

**11. அசைவி லரமனத் தருந்தவ முனிவனை யனைவரும்**
**பணிந்தேத்தி**
**இசையு மாறுசெய் தோமவான் பொருள்களுக் கியாவும்**
**வேண் டுவநல்கத்**
**திசையெ லாமுக முடையவ னிகர்தவச் செல்வனுஞ்**
**சென்றான்வெவ்**
**வசையி னான்மிகு கொடியகோ லரசனு மகிழ்ந்துதன்**
**மனைபுக்கான்.**

[அசைவு இலா மனத்து அருந்தவ முனிவனை அனைவரும் பணிந்து ஏத்தி இசையுறுமாறு செய்து, ஓமம் வான் பொருள் களுக்கு யாவும் வேண்டுவ நல்கி, திசை எலாம் முகம் உடையவன் நிகர் தவம் செல்வனும் சென்றான், வெவ் வசையினால் மிகு கொடிய கோல் அரசனும் மகிழ்ந்து தன் மனை புக்கான்.]

**விளக்கம் :-** எந்த நிலையிலும் அசைதலில்லா மனத்திட் பத்தை உடைய முனிவன், துஷ்டர்களின் வேண்டுகோளுக்கு இசைந்து, மனம் அசையப்பெற்றவனாய் அழிவைத் தேடிக் கொள்ளப் போகின்றானே, என்று புலவர் இரங்கியவராய், ''அசை விலா மனத்து அருந்தவமுனி'', என்றார். இரண்டாவது அடியில் பொருள்களுக்கு என்பதிலுள்ள நான்கன் உருபை ஓமத்தோடு கூட்டி, ஓமத்துக்கு வான் பொருள்கள் யாவும், என்று கொண்டு, பொருள் செய்க. திசை எலாம் முகம் உடையவன்,—நான்முகன், அந் நான்முகனை ஒத்த தவச் செல்வன் காளமாமுனிவன். வசை யினால் மிகு கொடிய கோல் அரசன் - உலகத்தாரின் வசைச் சொல்லினால் மிகுகின்ற கொடிய கோலை உடைய துரியோதனன் அவன் தன் கருத்து நிறைவேறிற்று என்ற மகிழ்ச்சியோடு தன் மனை சென்றான், என்பதாம்.

### முனிவன் ஓமம் செய்தல்

**12. போன மாமுனி தன்றபோ வனத்தொரு புடைமிடை**
**நெடுங்கள்ளிக்**
**கான மானது புகுந்துபா ரிடங்களுங் கழுகினங் களுந்துன்றி**
**யானை யோடிட நரிதுரத் திடுநிலத் தெரிவெயிற் கழை முத்தம்**
**வானெ லாநெடுந் தாரகை போலெழு மால்வரைப்**
**புறஞ்சார்ந்தான்.**

[போன மாமுனி தன் தபோவனத்து ஒரு புடை மிடை நெடுங்கள்ளிக் கானம் ஆனது புகுந்து, பாரிடங்களும் கழுகு இனங் களும் துன்றி, யானை ஓடிட நரி துரத்திடு நிலத்து, எரி வெயில் கழை முத்தம் வான் எலாம் நெடுந் தாரகை போல் எழும், மால் வரை புறம் சார்ந்தான்.]

**விளக்கம் :-** புடை மிடை நெடுங்கள்ளிக் கானம் - பக்கத்திலே நெருங்கியுள்ள பெரிய கள்ளிகள் நிறைந்த காடு. பாரிடம் - பூதம், பூதகணம். யானை ஓடிட நரி துரத்திடு நிலம் - யானை ஓடும்படி நரிகள் துரத்தவல்ல பாலை நிலம். பாலையில் யானை வலி குன்றும், என்பர்; ஆதலால் நரி துரத்திடும், எனப்பட்டது. எரி வெயில் கழை முத்தம் வான் எலாம் நெடுந் தாரகைபோல் எழும் மால்வரை - எரிகின்ற வெயிலினால் மூங்கில்களிலிருந்து வெளிப்

படும் முத்துக்கள் வானமெங்கும் நட்சத்திரங்களைப்போல் எழுந்து பரவுகின்ற பெரிய மலை. கள்ளிக்காட்டில் பூதங்களும் கழுகுகளும் வாழ்கின்றதும், மூங்கில் வெப்பத்தால் பிளந்து முத்துக்களைச் சிந்துகின்றதுமான பெரிய மலையின் பக்கத்தில் உள்ள இடத்தை ஓமம் செய்வதற்காக முனிவன் அடைந்தான், என்பதாம்.

**3. அண்டர் யாவரு மானுட முனிவரு மகலிடந் தனின்மற்றும்**
**கண்ட கண்டவர் யாவரும் வெருவரக் கடும்பலி பலநல்கி**
**உண்டி யால்வளர்ந் தாரழல் கோளகை யூடுறும் படியோமம்**
**குண்ட மெவ்வள வவ்வள விந்தனங் கொடுந்தருக்**
**களிற்சேர்த்தான்.**

[அண்டர் யாவரும் மானுட முனிவரும் அகலிடந்தனில் மற்றும் கண்ட கண்டவர் யாவரும் வெருவர கடும்பலி பல நல்கி, உண்டியால் வளர்ந்து ஆர் அழல் கோளகையூடு உறும்படி ஓம குண்டம் எவ்வளவு அவ்வளவு இந்தனம் கொடுந் தருக்களில் சேர்த்தான்.]

**விளக்கம் :-** அண்டர்-தேவர். மானுட முனிவர்-துறவியர். அகலிடம் - பூமி. மற்றும் - பூமியில் பிறந்த மற்றுமுள்ளவர் களும். கண்ட கண்டவர் யாவரும் - பார்த்தவர் யாவரும். வெருவர - பயப்படும்படி. உண்டியால் வளர்ந்து ஆர் அழல் - இடப்படும் விறகு நெய் முதலிய (அக்கினிக்கு உணவாகும்) பொருள்களால் மிகும் அக்கினி. கோளகையூடு உறும்படி - வானிடத்தே சென்று பரவும்படி. இந்தனம் - விறகு. கொடு - வளைவு. கொடுந்தரு - வளைந்து வளர்ந்துள்ள மரம். பலி பல கொடுத்து அக்கினி வானை எட்டும்படி செய்ய, ஓம குண்டம் எவ்வளவோ அவ்வளவுக்கும் வளைந்த மரங்களிலிருந்து விறகு களைச் சேகரித்து, (ஓம குண்டங்களில்) சேர்த்தான், என்பது பொருள்.

**14. மிக்க மந்திர யாமள முதலிய வேதமந் திரந்தம்மில்**
**தக்க மந்திரந் தெரிந்துகொண் டாசறு சடங்கமுந் தப்பாமல்**
**தொக்க மந்திர மொன்றினுக் கோரெழு சுருவையி**
**னறுநெய்வார்த்(து)**
**ஒக்க மந்திர மனைத்தினுங் கொடுமைகூ ரோமமும்**
**புரிந்தானே.**

[மிக்க மந்திரம் யாமளம் முதலிய வேதம் மந்திரம் தம்மில் தக்க மந்திரம் தெரிந்துகொண்டு, ஆசு அறு சடங்கமும் தப்பாமல், தொக்க மந்திரம் ஒன்றினுக்கு ஓர் எழு சுருவையின் நறு நெய் வார்த்து, ஒக்க மந்திரம் அனைத்தினும் கொடுமை கூர் ஓமமும் புரிந்தான், ஏ.]

**விளக்கம் :-** வேத மந்திரம் தம்மில் தக்க மந்திரம் மிக்க யாமளம் முதலிய மந்திரம் தெரிந்து கொண்டு, ஆசு அறு சடங்க

மும் தப்பாமல் (செய்து) தொக்க மந்திரம் ஒன்றினுக்கு ஓர் எழு சுருவையின் நறு நெய் வார்த்து, ஒக்க மந்திரம் அனைத்தினும் கொடுமை கூர் ஓர் ஓமத்தையும் புரிந்தான். யாமளம்-அபிசாரம் முதலிய வேள்விச் சடங்குகளுக்கு ஏற்றதான, அதர்வணவேதத்தின் பகுதி. வேத மந்திரம் தம்மில் தக்க மந்திரம் மிக்க யாமளம் முதலிய மந்திரம் - வேத மந்திரங்களில் பயன் தரும் தகுதி வாய்ந்த மந்திரமாகிச் சிறந்த யாமளம் முதலிய மந்திரங்கள். தெரிந்து கொண்டு - இப்பொழுது செய்யப்படும் வேள்விக்குரிய மந்திரங்களைத் தேர்ந்துகொண்டு. ஆசு - குற்றம். சடங்கம் - சடங்குகள். தொக்க மந்திரம் - மந்திரத் தொகுதி. சுருவை - அத்திக் கட்டையால் செய்யப்பட்ட நெய்த்துடுப்பு, (கரண்டி). மந்திரத் தொகுதி ஒன்றிற்கு ஏழு தரம் ஓம குண்டத்தில் நெய்யை ஓமஞ் செய்து, அபிசாரத்திற்கு ஒக்க (ஏற்றதான) மந்திரங்கள் எல்லாவற்றிலும் கொடுமை மிகுந்த மந்திரங்களோடு (முனிவன்), ஓமம் செய்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

**15. தன்ற னிச்சையி னன்றியேழ் கடலுடைத் தரா தலந்**
**தனையாளும்**
**மன்ற னிச்சையிற் புரியுமவ் வேள்வியின் வந்துறு பெரும்பூதம்**
**சென்றெ யிற்றிள நிலவெழத் துணைவிழித் தீயெழ**
**வெயில்வாய்கார்க்**
**குன்றெ னப்பொலிந் தெழுந்தது முனிவனுங் கூசி மெய்**
**குலைந்திட்டான்.**

[தன் தன் இச்சையின் அன்றி ஏழ்கடல் உடை தராதலந்தனை ஆளும் மன் தன் இச்சையின் புரியும் அவ்வேள்வியின் வந்து உறு பெரும்பூதம், சென்று எயிறு இள நிலவு எழ, துணை விழி தீ எழ வெயில் வாய் கார் குன்று என பொலிந்து எழுந்தது, முனிவனும் கூசி மெய் குலைந்திட்டான்.]

**விளக்கம் :-** தன்னுடைய இச்சையின் வழியல்லாமல் வேறு வழி எதையும் தொடராது, ஏழு கடலையும் ஆடையாகக் கொண்ட இப் பூமியை ஆளும் மன்னனாகிய துரியோதனன் விருப்பத்தின்படி செய்த அவ் வேள்வியின் (யாக குண்டத்தின்) இடத்திருந்து வந்துற்ற பெரிய உருவமுடைய பூதம்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். சென்று எயிறு இளநிலவு எழ, என்பதை, எயிறு சென்று இளநிலவு எழ, என்று இயைக்க. கோரப் பற்களிலிருந்து வெளிப்பட்டு இளநிலவு வீச, என்பது பொருள்.. (எயிறு இளநிலவு வீச),இரண்டு கண்களிலிருந்தும் தீ எழ,வெயிலினிடத்தே பொருந்திய கரிய குன்றுபோல் விளங்கியதாய் (ஒரு பெரிய பூதம்) எழுந்தது; ஓமம் செய்த காளமா முனிவனும் அஞ்சி நிலை குலைந்து நடுங்கினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். கரிய பூதம், மலை. தீயைக் கொட்டும் கண்கள், வெயில்.

**பாண்டவரைக் காக்க யமதர்மன் சூழல்**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**16. இப்பா லிவ்வா றோமஞ்செய் திவனிப் பூத மினிதெழுப்ப**
**அப்பா லிருந்த வனசரித ரைவர்க் கமைந்த வாறுரைப்பாம்**
**முப்பா லினுக்கு முதன்மாலாம் முகுந்த னருளான்**
**முறைகாக்கும்**
**தப்பா வாய்மை யறக்கடவு ளறிந்தா னெண்ணம்**
**தப்புவிப்பான் .**

[இ பால் இ ஆறு ஓமம் செய்து இவன் இ பூதம் இனிது எழுப்ப, அ பால் இருந்த வனசரிதர் ஐவர்க்கு அமைந்த ஆறு உரைப்பாம்; முப்பாலினுக்கும் முதல் மாலாம் முகுந்தன் அருளால், தப்பா வாய்மை அறக்கடவுள் அறிந்தான், எண்ணம் தப்பு விப்பான்.]

**விளக்கம் :-** இப்பால் - துரியோதனன் இருக்கும் இடத்தே. அப்பால் - பாண்டவர் உறையும் வனத்தே. வனசரிதர் - வனத்தில் சஞ்சரிப்பவர். அறம் பொருள் இன்பம், என்ற புருஷார்த்தங் களுக்கு முதல்வனாகிய முகுந்தனது (திருமாலினது) அருளினால் முறையே தர்ம பரிபாலனம் செய்கின்ற தவறாத சத்தியத்தை உடையவனான யமதர்மராஜன் (அபிசார ஓமம் செய்வதை) அறிந்தான்; அத் துரியோதனனின் தீய எண்ணத்தினின்றும் பாண்டவர்களைத் தப்புவிக்கும் உபாயத்தை நாடினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். ஓமம் - அக்கினியில் அவிசை இடல், இங்கே ஆகுபெயராய் வேள்வியை உணர்த்தும்.

**17. தன்மைந் தனுமத் தம்பியருஞ் சரியா நின்ற தபோவனத்து**
**நன்மைந் தரிலோர் முனிமைந்த னன்னூ லுடன்பூ ணசினத்தை**
**வின்மைந் தரையு மதியாமல் விரைந்துள் புகுந்து**
**விசைத்தகல்வான்**
**தொன்மைந் தனைப்போ லோருழைகொண் டோடிற்**
**றென்னாற் சொலவுண்டோ.**

[தன் மைந்தனும் தம்பியரும் சரியா நின்ற தபோவனத்து நல் மைந்தரில் ஓர் முனி மைந்தன் நல் நூலுடன் பூண் அசினத்தை, வில் மைந்தரையும் மதியாமல் விரைந்து உள் புகுந்து விசைத்து, அகல்வான் தொல் மைந்தனைப்போல் ஓர் உழை கொண்டு ஓடிற்று, என்னால் சொல உண்டோ.]

**விளக்கம் :-** தன் மைந்தன் - எமதர்மனின் மகனான தருமன் சரியா நின்ற - சஞ்சாரம் செய்துகொண்டிருந்த. நல் மைந்தரில் ஓர் முனி மைந்தன் - வனத்தில் வாழும் நல்ல (ஒழுக்க

முடைய) மைந்தரில் ஒருவனான ஒரு முனிவனது குமாரன்-அவன், பூணூலுடன் அதில் கட்டப்பட்டிருந்த மான் தோலை ஓர் உழை (ஒரு மான்) வில் வீரரான பாண்டவரையும் மதியாமல் விரைந்து ஆச்ரமத்துள்ளே புகுந்து கவர்ந்து கொண்டு, இடமகன்ற வானத்தின் பழமையான மைந்தனைப் போல (காற்றைப்போல) விசைத்து ஓடிற்று (விரைந்து ஓடிற்று). (இந்த விசித்திரமான நிகழ்ச்சியை) என்னால் சொல உண்டோ, அதாவது சொல்ல முடியுமோ,—என்பது ஈற்றடிகளின் பொருள். காற்றின் பிறப்பிடம் ஆகாயம் என்று கூறும் வேதம். எனவே, வாயு, அகல்வான் மைந்தன் ஆகின்றான். ''வில் வீரர்களாகிய பாண்டவர் வனத்தில் இருக்க, மானொன்று அஞ்சாது ஒரு முனிவனது இல் புகுந்து முனி குமாரனது கிருஷ்ணாஜினம் (மான் தோல்) கட்டப்பட்டிருந்த பூணூலைக் கவர்ந்து காற்றினுங் கடுகிச் சென்ற இவ் விநோத நிகழ்ச்சியை நான் எங்ஙனம் கூறுவேன்?'' என்று புலவர் கூறியபடி.

## பாண்டவர் மானைத் தொடர்தல்

**18. மறைவாய்ச் சிறுவன் கலைத்தோலை மான்கொண் டோடி**
**வானிடையில்**
**பொறைவாய்ப் புகுந்த தபயமெனப் புகுந்தாங்**
**கழுது புலம்புதலும்**
**நறைவாய்த் தொடைய லறமகனு மிளைய வீரர் நால்வருந்தம்**
**துறைவாய்ச் சிலையோ டம்பேந்தித் தொடர்ந்தா ரதனைச்**
**சூழ்புலிபோல்.**

*[மறைவாய் சிறுவன், ''கலை தோலை மான் கொண்டு ஓடி வானிடையில் பொறைவாய் புகுந்தது அபயம்'' என, புகுந்து அழுது புலம்புதலும். நறைவாய் தொடையல் அறன் மகனும் இளைய வீரர் நால்வரும் தம் துறைவாய் சிலையோடு அம்பு ஏந்தி தொடர்ந்தார் அதனை, சூழ் புலிபோல்.]*

**விளக்கம் :-** மறைவாய் சிறுவன் - வேதம் ஓதும் வாயையுடைய சிறுவன். கலைத்தோல் - மான் தோல். வானிடையில் பொறைவாய் புகுந்தது - நெடுந்தூரத்திலுள்ள மலையினிடத்தே புகுந்து மறைந்தது. நறைவாய் தொடையல் - தேனைத் தன்னிடத்தே கொண்ட மாலை, (அல்: சாரியை). துறை - நூல், வழி. துறைவாய் சிலை - தநுர் வேதம் கூறும் வழியில் அமைதலையுடைய வில், அதாவது நன்றாகத் தொழில் செய்யவல்ல நூல் முறை கடவாத வில். முனிவர் சிறுவன் அபயம் வேண்டி அழுது புலம்பத் தருமனும் தம்பியரும் வில்லேந்தி, மானைச் சூழ்ந்து கொள்ளச் செல்லும் புலி போல், மானைத் தொடர்ந்தனர், என்க.

19. அகப்பட் டதுபோன் முன்னிற்கு மருகெய் தலுங்கூ
ராசுகம்போல்
மிகப்பட் டோடுந் தோன்றாமல் வெளிக்கே யொளிக்கும்
விழியிணைக்கும்
முகப்பட் டிடுமீண் டைவருந்தம் முரண்டோள் வன்மை
தளர்வளவும்
தகைப்பட் டொழிந்தா ரதிலாசை யொழிந்தா
ரிந்த்ர சாலமெனா.

[அகப்பட்டதுபோய் முன் நிற்கும், அருகு எய்தலும் கூர் ஆசுகம்போல் மிக பட்டு ஒடும், தோன்றாமல் வெளிக்கே ஒளிக்கும், விழி இணைக்கும் முகம் பட்டிடும், மீண்டும், ஐவரும் தம் முரண் தோள் வன்மை தளர்வு அளவும் தகைப்பட்டு ஒழிந்தார், அதில் ஆசை ஒழிந்தார் இந்த்ரசாலம் எனா,]

**விளக்கம் :-** ஆசுகம் - அம்பு. மிகபட்டு ஒடும் - விரைவு மிகுதி கொண்டு ஓடும். தோன்றாமல் வெளிக்கே ஒளிக்கும் - கண்ணிற்குத் தெரியாமல் வெளியிடத்திலேயே மறைந்துவிடும். விழி இணைக்கு முகம் பட்டிடும் - (மீண்டும்) இரு கண்களுக்கும் எதிரில் தோன்றி நிற்கும். முரண் - வலிமை. வன்மை தளர்வு அளவும் தகைப்பட்டு ஒழிந்தார் - பலம் தளர்வுறும் வரையில் (முயன்றும் முடியாமல்) தடுக்கப்பட்டுத் தொடர்தல் ஒழிந்தார். இந்த்ரசாலம் எனா அதில் ஆசை ஒழிந்தார் - இது மாயச் செய்கை என எண்ணி, மானைப் பிடிப்பதில் ஆசை நீங்கினார்,

20. தடங்கா னகமும் வானகமுஞ் சாரற் பொருப்பும் தாழ்வரையும்
மடங்கா வரும்போஞ் சூழ்போது மப்போ தந்த மான்கன்று
தொடங்கா விவரை யிளைப்பித்த தொழிலைச் சொல்லி
னொருநாவுக்(கு)
அடங்கா தின்னு மாயிரமுண் டானா லதற்கு மடங்காதே.

[தட கானகமும், வானகமும், சாரல் பொருப்பும், தாழ்வரையும், மடங்காவரும், போம், சூழ்போதும், அப்போது அந்த மான் கன்று, தொடங்கா இவரை இளைப்பித்த தொழிலை சொல்லின் ஒரு நாவுக்கு அடங்காது,இன்னும் ஆயிரம் உண்டானால் அதற்கும் அடங்காதே.]

**விளக்கம் :-** தடங்கானமும், வானகமும், (மேகம்) சார்தலை யுடைய மலையும். தாழ்வரையும் (ஆகிய இடங்களில்) அப்போது அந்த மான்கன்று மடங்காவரும்; (உடனே) போம், சூழ் போதும் தொடங்கா இவரை இளைப்பித்த தொழிலைச் சொல்லின், ஒரு நாவுக்கு அடங்காது, இன்னும் ஆயிரம் உண்டானால் அதற்கும் அடங்காது.—என்பது அன்வயம். இது கவிக்கூற்று. பாண்டவர்

தொடர்ந்த மான் அவர்களை இளைக்கச் செய்ததை எம்மால் வருணித்துக் கூற இயலாது, என்று கூறியபடி, மடங்கா வரும் - திரும்பி வரும். போம் - வந்ததும் அகன்றுபோம். சூழ்போதும் - இடம் வலமாகச் சுற்றிப் பாண்டவர்களை அலைக்கழிக்கும். தொடங்கா இவரை - மானைப் பிடிக்கத் தொடங்கிய பாண்டவரை. பாண்டவரை அந்த மான் இளைக்கச் செய்த தொழிலைச் சொல்ல, ஆயிரம் நாக்கும் போதாது, என்று கவி கூறினார், என்க.

**21. கானீ திவர்க்குத் தலைதெரியாக் கானங் கருத்து மிகக் கலங்கிப்**
**பானீ யத்துக் கைவருமெய் பதையா நிற்ப ரெனவறிந்து**
**தூநீர் நச்சுச் சுனையாயச் சுனைசூழ் வரவோர் தொன்மரமாய்**
**யானீ யவனென் றெண்ணாம லெல்லா மானோ னிருந்தானே.**

[கான் ஈது இவர்க்கு தலை தெரியா கானம், கருத்தும் மிக கலங்கி பானீயத்துக்கு ஐவரும் மெய் பதையா நிற்பர், என அறிந்து தூநீர் நச்சு (நஞ்சு) சுனை ஆய், அ சுனை சூழ்வர ஓர் தொல் மரமாய், யான் நீ அவன் என்று எண்ணாமல் எல்லாம் ஆனோன் இருந்தான், ஏ.]

**விளக்கம் :-** யான் நீ அவன் என்று எண்ணாமல் எல்லாம் ஆனோன்,—"கான் ஈது இவர்க்கு தலை தெரியா கானம் ஐவரும் கருத்து மிகக் கலங்கி, பானீயத்துக்கு மெய் பதையா நிற்பர்" என அறிந்து தூநீர் நச்சு சுனையாய், அ சுனை சூழ்தர ஓர் தொல் மரமாய் இருந்தான், (ஏ)—என்பது அன்வயம். நான், நீ. அவன் என்று வேறுபடுத்தி எண்ணுதற்கு இயலாதபடி எல்லாம் தானே ஆயினோன் ஆன எமதர்மராசன்,—"காடாகிய இது இப் பாண்டவர்க்கு இடம் தெரியாத காடாகும். (ஆகவே) ஐவரும். (இடம் வழி தெரியாமல் அலைந்ததால்) மனம் கலங்கியும். குடி நீருக்காக மெய் பதைத்தும் நிற்பர்",என்று எண்ணித் தூய நீரைக் கொண்டதாக் காணப்படும் விஷத்தைக் கொண்ட நீர் நிலையாகவும், அச் சுனையைச் சுற்றியுள்ள இடத்தே, தங்குவதற்கு ஒரு பழமையான மரமாகவும், இருந்தான்.— என்பது பொருள். பருகுவதற்குரியது பானீயம், வடமொழித் தொடர். எனவே, பானீயத்துக்கு என்பது பருகுவதற்குரிய நீருக்காக. என்ற பொருளதாகின்றது. துரியோதனனது சூழ்ச்சியிலிருந்து பாண்டவரைக் காக்கும் கருத்துடைய எமன்,தலை (இடம்) தெரியாத காட்டில் நச்சுப் பொய்கையாகவும் அதன் கரையருகில் ஓர் ஆலமரமாகவும் நின்றான், என்க.

வேறு

**22. தருமனுந் தம்பி மாருந் தாலுவும் புலர்த்து தாகத்(து)**
**உருகிய மனத்த ராகி யுடல்தளர்ந் தயரு மாங்கண்**
**எரியுறு கானம் போல்வா னிளவலை நோக்கி யின்னே**
**மருவரும் புனல்கொண் டோடி வருதிநீ விரைவி னென்றான்.**

[தருமனும் தம்பிமாரும் தாலுவும் புலர்ந்து தாகத்து உருகிய மனத்தராகி, உடல் தளர்ந்து அயரும் ஆங்கண், எரி உறு கானம் போல்வான். இளவலை நோக்கி. இன்னே மருவு அரு புனல் கொண்டு ஓடிவருதி நீ விரைவின், என்றான்.]

**விளக்கம் :-** தாலு - நாக்கு. புலர்ந்து - வரண்டு. தாகத்து- தாகத்தினால், உருகிய மனத்தர் ஆகி - வலி அடங்கிய மனத்த ராகி. அயரும் ஆங்கண் - தளர்ந்து வருந்தும் சமயத்திலே. எரியுறு கானம் போல்வான் - தீ பற்றி எரியும் காடுபோல் வெம்மையுற்ற தருமன். இளவல் - சகாதேவன். மருவு அரும்புனல் - பெறுவ தற்கு அரிய நீர். நீர் வேட்கை மிகக்கொண்ட தருமன் இப் பொழுதே நீர் கொணரு வருமாறு சகாதேவனைப் போக்கினான், என்பதாம்.

**23. அக்கணத் தினிற்சா தேவ னடவிக டோறுந் தேடி**
**எக்கணுங் காணா னாகி யென்றுதோய் குன்றொன் றேறி**
**மிக்கவண் சீத வாச விரிசுனை யொன்று காணாப்**
**புக்கனன் பருக லுற்றான் பொலிவறப் புலர்ந்த நாவான்.**

[அ கணத்தினில் சகாதேவன் அடவிகள் தோறும் தேடி, எக் கணும் காணான் ஆகி, என்று தோய் குன்று ஒன்று ஏறி, மிக்கு அவண் சீதம் வாசம் விரிசுனை ஒன்று காணா, புக்கனன் பருகல் உற்றான் பொலிவு அற புலர்ந்த நாவான்.]

**விளக்கம் :-** எக்கணும் - எந்த இடத்திலும். என்று-சூரியன். அவண் சீதவாசம் மிக்கு விரிசுனை ஒன்று காணா-அங்கே குளிர்ச்சி யோடு பரிமளமும் மிக்கதான விரிந்து பரந்த பொய்கை ஒன்றைக் கண்டு, பொலிவு அற புலர்ந்த நாவான் - ஈரப் பசையற்று வறண்ட நாவினனான சகாதேவன், நீர் கொணரச் சென்ற இளவல், நாக்கு வரண்டு போனவனாய் நீரைப் பருகினான், என்பதம். நாக் கிற்குப் பொலிவு ஈரம்.

**24. செழும்புன லுதரந் தன்னிற் சேருமு னாவி பொன்றி**
**விழுந்தமை யறிவு றாது மீளவு நகுலன் றன்னை**
**அழுங்கின னேவச் சென்றா னவனுமப் பரிசின் மாய்ந்தான்**
**எழும்படை விசயன் றன்னை யேவின னவனும் போனான்.**

[செழும் புனல் உதரம் தன்னில் சேருமுன் ஆவி பொன்றி விழுந்தமை அறிவுறாது, மீளவும் நகுலன் தன்னை அழுங்கினன் ஏவ சென்றான். அவனும் அ பரிசின் மாய்ந்தான், எழும் படை விசயன் தன்னை ஏவினன், அவனும் போனான்.]

**விளக்கம் :-** உதரம்-வயிறு. அழுங்கினன் - நீர் வேட்கையால் வருந்திய தருமன். அப் பரிசு-அந்த விதமாய். எழும் படை விசயன்- பகைமேல் சீறி எழும் வில்லை உடைய அருச்சுனன். சகாதேவன்

உற்றதை அறியாது. நீர் வேட்கையால் வருந்திய தருமன் நகுலனை அனுப்ப, அவனும் அவ்விதமே உயிர் அடங்கப்பெற, அதன் பின் விசயனை அனுப்பினான், என்பதாம்,

**25. தம்பியர் கிடந்த தன்மை கண்டுமத் தலைவன் மேன்மேல்
வெம்புறு கொடிய தாக மிகுதியால் விரைந்து வாரிப்
பைப்புன லருந்த யவ்வா றிறந்தனன் பரிதா பத்தோ(டு)
எம்பிய ரென்செய் தாரென் றிறைவனு மினைந்து சோர்ந்தான்.**

[தம்பியர் கிடந்த தன்மை கண்டும் அ தலைவன் மேன்மேல் வெம்புறு கொடிய தாகம் மிகுதியால் விரைந்து வாரி பைம்புனல் அருந்தி அவ்வாறு இறந்தனன், பரிதாபத்தோடு எம்பியர் என் செய்தார் என்று இறைவனும் இனைந்து சோர்ந்தான்.]

**விளக்கம்:-** தலைவன் - பார்த்தன். வெம்புறு - தபித்தலைச் செய்கின்ற. பரிதாபம் - வருத்தம். இறைவன் - தருமன். இனைந்து துன்பத்தால் வருத்தமுற்று, (சோர்வு அடைந்தான்). தம்பியர் சுனை நீரைப் பருகி உயிரொழிந்து கிடப்பதைக் கண்டும் தாக மிகுதியால் நீரைக் குடித்து, விசயனும் உயிரொடுங்கப் பெற்றான், தருமனும் திரும்பாத தம்பியரை நினைத்து வருந்தித் தளர்ந்தான், என்க.

**26. வீமனங் கவனைத் தேற்றி மெலிவுறு சோகத் தோடும்
ஈமமொத் தெரியுங் கான மெங்கணுந் திரிந்தங் கெய்திச்
சாமுறைத் தம்பி மாரைக் கண்டருந் தடத்து நீரை
ஆமெனக் கருதா தால மாகுமென் றகத்திற் கொண்டான்.**

[வீமன் அங்கு அவனைத் தேற்றி, மெலிவுறு சோகத்தோடு, ஈமம் எரியும் கானம் எங்கணும் திரிந்து அங்கு எய்தி, சாம் முறை தம்பிமாரை கண்டு, அருந்தடத்து நீரை ஆம் என கருதாது, ஆலம் ஆகும் என்று அகத்தில் கொண்டான்.]

**விளக்கம் :-** அங்கு வீமன் அவனைத் தேற்றி ஈமம் ஒத்து எரியும் கானம்....கண்டு, சோகத்தோடும், அருந்தடத்துநீரை... அகத்தில் கொண்டான்,—என்று அன்வயிக்க. மெலிவுறு சோகம் - மனத்தளர்ச்சிக்குக் காரணமான சோகம். சாம் முறை தம்பிமார் - உயிர் அகன்ற நிலையுற்ற தம்பியர். ஆம் என - நல்ல நீர் என்று (கருதாது). ஆலம் - விஷம். வருந்திச் சோர்ந்த தமையனைத் தேற்றி, நீர் கொணரச் சென்ற வீமன், பொய்கையை அடைந்து, அங்கே தம்பியர் மாய்ந்து கிடப்பதைக் கண்டு, அதன் நீரை விஷம், என அறிந்தான்.

**27. பின்னவர் மூவர் சேரப் பிணங்களாய்க் கிடத்தல் கண்ட
மன்னவன் றனக்குத் தாக மாறுமோ வளர்ந்து மேன்மேல்
என்னவன் பட்டா னென்ப தியம்புதற் கெட்டு மோமுன்
சொன்னவன் றானு மிந்தச் சோகமோ தொகுக்க மாட்டான்.**

[பின்னவர் மூவர் சேர பிணங்களாய் கிடத்தல் கண்ட மன்னவன் தனக்கு தாகம் ஆறுமோ, வளர்ந்து மேல் மேல், என் அவன் பட்டான் என்பது இயம்புதற்கு எட்டுமோ! முன் சொன்னவன் தானும் இந்த சோகமோ தொகுக்க மாட்டான்.]

**விளக்கம்** :- தம்பியர் மூவரும் ஒருசேர மாண்டு கிடத்தலைக் கண்ட வீமனுக்கு, (அவர் இப் பொய்கை நீரைக் குடித்ததால் மாண்டனர் என்பது தெரிந்ததனால்)தாகம் அடங்குமோ!(தாகம்) மேலும் மேலும் வளர்ந்து வருத்தியதால் (தாகத்தோடு சோகமும் சேர) அவன், என்ன பாடுபட்டான், என்பதைச் சொல்லுதற்குச் சொற்கள் கிடைக்குமோ! (கிடைக்காது என்றபடி). முன்னம் மகாபாரதத்தைச் சொன்னவனாகிய வியாச முனிவனும் இந்தச் சோகத்தை அடக்க மாட்டாமல் விரிவாகவே சொல்லுவான்; நானும் இயன்றபடி சிறிது கூறுவேன், என்பது குறிப்பு. தாகம் மாறுமோ (நீங்குமோ) என்றும் பிரித்துக் கொள்ளலாம். முன் சொன்னவன், மூவர்க்கும் முன்னவன் என்று சொல்லப்பட்ட வீமனும், என்றும் பொருள் கொள்ளலாம். அப்பொழுது வீமன் பொறுக்கமாட்டாதவனாய், என்பது பொருளாகும். தொகுக்க மாட்டாதவனாய் (பொறுக்க மாட்டாதவளாய்);—கண்ணீரால் குளிப்பாட்டினான், என்று அடுத்த செய்யுளோடு முடியும்.

**28. குசையுடைப் புரவித் திண்டேர்க் குரக்குவெம் பதாகை யானை
அசைவில்பொற் சயில மன்ன வாண்டகை மனத்தி னானைத்
திசையனைத் தினுந்தன் னாமந் தீட்டிய சிலையின் வெம்போர்
விசயனைத் தன்கண் ணீரான் மெய்குளிப் பாட்டி னானே.**

[குசை உடை புரவி திண் தேர், குரக்கு வெம் பதாகையானை, அசைவு இல் பொன் சயிலம் அன்ன ஆண் தகை மனத்தினானை, திசை அனைத்தினும் தன் நாமம் தீட்டிய சிலையின் வெம் போர் விசயனை தன் கண் நீரால் மெய் குளிப்பாட்டினான்,ஏ.]

**விளக்கம்** :- குசை - கடிவாளம். குரக்கு வெம் பதாகை - அநுமானது உருவத்தைக் கொண்ட கொடி. சயிலம் - மலை. ஆண் தகை மனத்தினன் - ஆண்மைக்கு உரிய தகுதியையுடைய மனத்தினனான விசயன். திசை அனைத்தினும் நாமம் தீட்டிய - திசை எங்கும் பரவிய கீர்த்தியை உடைய. சிலையின் வெம் போர் விசயன்- வில்லினால் கொடிய போரில் வெற்றி கொள்ளும் விசயன். அவனை வீமன் கண்ணீர்ப் பெருக்கினால் குளிப்பாட்டினான், என்பதாம்.

**29. நற்றுணைச் சிறுவ னோடு நகுலனை நோக்கி யந்தோ
எற்றுணை யிழந்தே னென்னு மென்செய்வ தினிநா னென்னும்
முற்றுணை வனுமக் கானின் முடிந்திடு மொழிய வேறோர்
பிற்றுணை காண்க லாதேன் யாரொடு பேசு வேனே.**

[நல் துணை சிறுவனோடு நகுலனை நோக்கி அந்தோ, என் துணை இழந்தேன் என்னும், என் செய்வது இனி நான் என்னும், முன் துணைவனும் அ கானில் முடிந்திடும், மொழிய வேறோர் பின் துணை காண்கலாதேன் யாரொடு பேசுவேன், ஏ,]

**விளக்கம் :-** சிறுவன் - சகாதேவன். முன் துணைவன் - தருமன். பின் மொழிய வேறு ஓர் துணை காண்கலாதேன் யாரொடும் பேசுவேன் (என்னும்) - எல்லோரையும் இழந்த பிறகு, பேசுவதற்கு வேறு ஒருவரையும் காணாத நான் (இனி யாரோடு பேசுவேன், என்று சொல்லி வருந்துவான்). அதாவது வீமன், இனி உயிர் வாழ்ந்து பயனில்லை என்று முடிவு செய்தபடி.

**30. மணிமுர சுயர்த்தோ னீண்டு வருதலுங் கூடும் வந்தால்**
**அணிதரு நச்சுத் தோய மருந்தவுங் கூடு மென்னா**
**பணியுடன் செய்வான் போலப் பருமண லேட்டிற் கையால்**
**துணிவுற யெழுதி யந்தத் தோயமே தானுந் துய்த்தான்.**

[மணி முரசு உயர்த்தோன் ஈண்டு வருதலும் கூடும், வந்தால் அணிதரு நஞ்சு தோயம் அருந்தவும் கூடும், என்னா. பணியுடன் செய்வான் போல பருமணல் ஏட்டில் கையால் துணிவு உற எழுதி, அந்த தோயமே தானும் துய்த்தான்.]

**விளக்கம் :-** அணிதரு நச்சு தோயம் - அழகிய நல்ல நீரைப் போன்ற தோற்றம் தருகின்ற விஷ நீர். பணியுடன் செய்வான் போல - (தருமனது) கட்டளையினால் நீர் குடித்தலாகிய தொழிலைச் செய்வான்போல. பருமணல் ஏட்டில் கையால் துணிவு உற எழுதி - பருத்த மணலாகிய ஏட்டில், கையால் அதாவது மணல் தரையில். தனது தீர்மானம் விளங்கும்படி எழுதி வைத்து,— (தானும் நீரைப் பருகினான்). பொய்கை நீரைத் தான் பருகத் துணிந்த காரணத்தை மணல் தரையில் எழுதிவிட்டு, உயிர்த் துணைவர்களை இழந்து, தான் மாத்திரம் உயிர் வாழ்தலை விரும்பாது, நீரைக் குடித்தான், என்க.

**31. பொருப்பினும் வலிய கொற்றப் புயமுடை வீம னென்றால்**
**அருப்புடை யறலி னஞ்ச மஞ்சுமோ வால மென்னும்**
**உருப்பினை யறிந்தும் வாரி யுண்டுதன் னுயிரும் வீந்தான்**
**நெருப்பினுஞ் சொல்லி னாவேம் நினைப்பினும் நெஞ்சம்**
**வேமால்.**

[பொருப்பினும் வலிய கொற்றம் புயம் உடை வீமன் என்றால் அருப்பு (அரும்பு) உடை அறலின் நஞ்சம் அஞ்சுமோ! ஆலம் என்னும் உருப்பினை அறிந்தும் வாரி உண்டு தன் உயிரும் வீந்தான், நெருப்பினும் சொல்லின் நாவேம், நினைப்பினும் நெஞ்சம் வேம், ஆல்.]

**விளக்கம் :-** இது கவிக் கூற்று. பொருப்பு - மலை. அரும்பு உடை அறலின் நஞ்சம் - சுரத்தலையுடைய சுனை நீரின் விஷம், (அறல் - நீர்). ஆலம் என்னும் உருப்பினை அறிந்தும் - விஷம் என்ற பொருளைப் (பொய்கை நீரில் இருப்பதாக) அறிந்தும். நெருப்பினும், என்பதிலுள்ள உம்மையைச் சொல்லோடு கூட்டுக. சொல்லினும் நெருப்பின் நாவேம் - (வீமன் நீரைக் குடித்து இறந்த விஷயத்தைச்) சொன்னாலும் நாக்கு நெருப்பினால் வேவதுபோல் வெந்து போகும், நினைப்பினும் நெஞ்சமும் வெந்து போகும். திக்குத்திசை தெரியாத காட்டில் பாண்டவர் அலைந்து நீர் வேட்கை கொண்ட, தருமன் ஒழிந்த நால்வரும் நச்சு நீரை உட்கொண்டு மாய்ந்த செய்தியைச் சொல்லுதலும் நினைத்தலும் துயரை விளைக்கவல்லது, என்று புலவர் கூறி, இரங்கும் கருத்தது,

**32. ஆருயிர் பொன்றுங் காலை யமுதமும் விடமா மென்று**
**பாருளோ ருரைக்கு மாற்றம் பழுதறப் பலித்த காலை**
**மாருதி முதலா வுள்ள மன்னவர் நால்வர் தம்மோ(டு)**
**ஒருயி ரான மற்றை யொருவனே யொருவ னானான்.**

[ஆர் உயிர் பொன்றும் காலை அமுதமும் விடம் ஆம் என்று பார் உளோர் உரைக்கும் மாற்றம் பழுது அற பலித்த காலை, மாருதி முதலா(க) உள்ள மன்னவர் நால்வர் தம்மோடு ஓர் உயிர் ஆன மற்றை ஒருவனே ஒருவன் ஆனான்.]

**விளக்கம் :-** பழுதற - தவறாமல். மற்றை ஒருவன்-சாகாமல் எஞ்சியிருந்த தருமன். ஒருவன் ஆனான் - துணையில்லாதவனானான். ஆருயிர் பொன்றுங்காலை அமுதமும் விடமாம் என்பது போல, பொய்கை நீர் பாண்டவர் திறத்தில் விஷமாயது, என்பதாம்.

**33. கட்புல னாக வேறோ ருயிரையுங் காண்க லாத**
**வெட்புலந் தன்னிற் சோக மிஞ்சவே தாகம் விஞ்சி**
**உட்புல னழிந்து பின்போ முள்ளமோ டுயங்கி வீழ்ந்தான்**
**நட்புலந் தவரான் முன்னங் கானக நண்ணி னானே.**

[கண்புலனாக வேறு ஓர் உயிரையும் காண்கலாத வெள் புலம் தன்னில் சோகம் மிஞ்சவே, தாகம் விஞ்சி, உள் புலன் அழிந்து பின்போம் உள்ளமோடு உயங்கி வீழ்ந்தான், நட்பு உலந்தவரால் முன்னம் கானகம் நண்ணினான்(ஏ)]

**விளக்கம் :-** நட்பு ஒழிந்தவரான துரியோதனனாதியரால் முன்னம் கானம் அடைந்த தருமன், கண்ணுக்கு விஷயமாக வேறு ஒரு பிராணியையும் காணவியலாத வெளியிடத்தில், சோகம் மிக, அதோடு தாகமும் அதிகரித்து உட்புலன் (அறிவு) அழிந்து, பின் போம், அதாவது இனி அழியப்போகும் உள்ளத்தோடு மெலிந்து

தரையில் வீழ்ந்தான்,—என்பது பொருள். சோகத்தோடு தாகமும் மிக, உள்ளமும் உணர்வு அழிந்தவனாய்த் தருமன் அக் காட்டில் வீழ்ந்தான் என்க. உலந்தவர் - நட்பு ஒழிந்தவர்.

## தோன்றிய பூதத்தை முனிவன் ஏவல்

**34. ஈங்கிவ ருயங்கி வீந்த வெல்லையி லெரிசெய் யோமத்து**
**ஆங்கவ ணெழுந்த பூத மம்முனி தன்னை நோக்கிப்**
**பாங்குடன் புரியு மேவல் பணித்தரு ளென்ன நெஞ்சில்**
**தீங்கிலா முனியும் பூத வரசுடன் செப்பு வானே.**

[ஈங்கு இவர் உயங்கி வீந்த எல்லையில், எரி செய் ஓமத்து ஆங்கு அவன் எழுந்த பூதம், அ முனி தன்னை நோக்கி, பாங்குடன் புரியும் ஏவல் பணித்தருள் என்ன, நெஞ்சில் தீங்கு இலா முனியும் பூத அரசுடன் செப்புவான், ஏ.]

**விளக்கம் :-** (இங்கே பாண்டவர் உயிர் சோர்ந்து விழுந்து கிடக்கையில்) ஆங்கு - முனிவன் ஓமம் செய்த இடத்தில். பாங்குடன் - முறையே, (ஓமத்தீயினின்று தோன்றிய பூதம் தான் புரிய வேண்டிய காரியத்தைப் பணித்தருள்க, என்று கேட்க) நெஞ்சில் தீங்கு இலா முனியும்-நெஞ்சில் குற்றம் இல்லாத முனியும், (சொல்வானாயினான்). நெஞ்சில் தீங்கிலா முனிவன், என்றது, பாண்டவர் நிலையை அறியாத முனிவன் என்ற கருத்தது.

**35. நின்றிடா திமைப்பிற் குந்தி மைந்தராய் நெடிய கானில்**
**துன்றிடா வைகும் வேந்துந் துணைவரு மிருந்த சூழல்**
**சென்றிடா வொன்றா யைந்து செயற்கையா முடலைச் சேரக்**
**கொன்றிடா வருதி யென்று கூறிய வுறுதி கேளா.**

[நின்றிடாது இமைப்பில் குந்தி மைந்தராய் நெடிய கானில் துன்றிடா வைகும் வேந்தும் துணைவரு மிருந்த சூழல் சென்றிடா, ஒன்றாய் ஐந்து செயற்கை ஆம் உடலை சேர, கொன்றிடா, வருதி என்று கூறிய உறுதி கேளா,—அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** நின்றிடா - தாமதிக்காமல். துன்றி - ஒன்றுபட்டு. வேந்து - தருமன். துணைவர் - தம்பியரான நால்வர். சென்றிடா - சென்று. ஒன்றாய் ஐந்து செயற்கை ஆம் உடல்-உயிரினால் ஒன்றி ஆனால் செயற்கையால் ஐந்து பட்ட (அவரது) உடல்கள். சேர - ஒரு சேர, கொன்றிடா வருதி - கொன்று திரும்புவாயாக. உறுதி-கட்டளை. 'ஒன்றாய் ஐந்து செயற்கை,உடல்', என்பது, உடல் ஐந்தாயினும், பாண்டவர் உயிரால் ஒன்றானவர், என்ற கருத்தது. முனிவனது கட்டளையை ஏற்ற பூதம் கூறியதை அடுத்த செய்யுள் கூறும். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

**36. ஐம்பெரும் பூத மொக்கு மப்பெரும் பூ தஞ் சாதிச்
செம்பொனி னொளிரு மேனித் தெய்வமா முனியை நோக்கி
வெம்புகா னுறைவோ ரின்றென் விழிக்கிலக் கல்லா ரானால்
எம்பிரா னினையே கொல்வ னெனத்தொழு தேகிற் றன்றே.**

*[ஐ பெருபூதம் ஒக்கும் அ பெருபூதம், சாதி செம்பொனின் ஒளிரும் மேனி தெய்வம் மாமுனியை நோக்கி, வெம்பு கான் உறை வோர் இன்று என் விழிக்கு இலக்கு அல்லார் ஆனால், எம்பிரான், நினையே கொல்வன் என தொழுது ஏகிற்று அன்றே.]*

**விளக்கம் :-** ஐம்பெரும் பூதத்தைப் போன்ற வலிய பெரிய தேகத்தைக் கொண்ட பூதம். சிறந்த செம்பொன் போல் பொலி யும் தேகத்தையுடைய முனிவனை நோக்கி, ''வெதும்பும் கானில் உறையும் பாண்டவர், இன்று என் கண்ணில் படாராயின், எம் தலைவனே, உன்னையே கொல்வேன்'', என்று சொல்லி முனி வனைத் தொழுது சென்றது, (அனறே: அசை) - என்பது பொருள். வேள்வியினின்று வந்த பூதம், தன் வருகை வீணாகக் கூடாதா தலால், ''அவர் கண்ணில் படாராயின், உன்னைக் கொல்வேன்'', என்று முனிவனுக்குக் கூறி விடைகொண்டது, என்க.

பூதம் பாண்டவரைக் கண்டது

**37. காட்டுறு கோடை வெப்பங் களைகுவான் கரிய மேகம்
மோட்டுருக் கொண்டு மின்னான் முளைத்தெழு மெயிறு தாங்கித்
தோட்டுணைப் புடைகொண் டெங்குஞ் சூறைபோல் மரங்கள் வீழ்த்திக்
காட்டுறை வாழ்க்கை யானைக் கண்ணுறக் கண்ட தன்றே.**

*[காடு உறு கோடை வெப்பம் களைகுவான் கரிய மேகம் மோடு உரு கொண்டு, மின்னால் முளைத்து எழும் எயிறு தாங்கி, தோள் துணை புடைகொண்டு எங்கும் சூறைபோல் மரங்கள் வீழ்த்தி, காடு உறை வாழ்க்கை யானை கண் உற கண்டது, அன்றே.]*

**விளக்கம் :-** காட்டில் பொருந்திய கோடைகால வெப்பத் தைத் தணிக்கும் பொருட்டுக் கரியமேகம், பருத்த உருவத்தைக் கொண்டு, மின்னலால் செய்யப்பட்டதுபோல் முளைத்துத் தோன்றும் கோரப் பற்களைத் தன்னிடத்தே கொண்டு, இரண்டு தோள்களிலும் புடைத்துக்கொண்டு, அதாவது தோள்களைத் தட்டிக்கொண்டு, சூறைக் காற்றைப் போல் எங்கும் மரங்களை வீழ்த்திக்கொண்டு, காட்டில் வாழும் வாழ்க்கையினனான தருமனை நன்றாகக் கண்களால் கண்டது,—என்பது பொருள். அன்றே : அசை. மேகமாகப் பூதம் உருவகம் செய்யப்பட்டது. உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணியின் பாற்படும் இது. பூதத்தை மேகமாக்கிய புலவர், அதற்குக் காரணம்

கூறுவார்போல், ''காட்டுறு கோடை வெப்பம் களைகுவான்'', என்றார். துரியோதனனது சூழ்ச்சியால் பாண்டவருக்கு நேர விருந்த தீமை நேராது காக்கப்பட்டமையின், இவ்வுருவகம் கருத்துடையதாகின்றது.

**38. அந்தணன் சொன்ன வேந்த ரைவரி லறனால் வந்த**
**மைந்தன்மற் றிவனே யாவி மாய்ந்ததோர் வடிவ னாகிச்**
**சந்தன தருவிற் சார்ந்து சாய்முடித் தலைய னாகி**
**மந்திர மறந்த விஞ்சை மாக்களின் வடிவு சோர்ந்தான்.**

[அந்தணன் சொன்ன வேந்தர் ஐவரில் அறனால் வந்த மைந்தன் (மற்று) இவனே, ஆவி மாய்ந்தது ஓர் வடிவன் ஆகி, சந்தனம் தருவில் சார்ந்து சாய் முடி தலையன் ஆகி, மந்திரம் மறந்த விஞ்சை மாக்களின் வடிவு சோர்ந்தான்.]

**விளக்கம் :-** அறன் - யமதர்மராசன். சாய்முடி தலையன் - சாய்ந்த கிரீடம் அணிந்த தலையன். பலவித மாய வித்தைகளையும் செய்வதற்கான மந்திரத்தை மறந்து சோர்ந்திருக்கும் வித்யாதரர்களைப் போல் சோர்ந்து கிடந்தான்,—எனபது ஈற்றடியின் பொருள். இறந்தவனைப் போல் தருமன் சந்தன மரத்தில், சாய்ந்து, உணர்வு அற்றுக் கிடப்பதைக் கண்ட பூதம் எண்ணியதை இது கூறும். தலை சாய்தல், உயிர் அடங்கினமைக்கு அடையாளம்.

**39. சிறந்தமெய்ந் நிழல்போற் சூழுந் துணைவருஞ் சேர விட்டுத்**
**துறந்தனர் போலும் யாண்டுந் துப்பிலா வெப்பந் தன்னால்**
**இறந்தன னிவனு மற்றிங் கென்செய்வே னென்றென்**
**றெண்ணி**
**நிறைந்தநீர்ச் சுனையின் மற்றை நிருபர்நால் வரையுங் காணா**

[சிறந்த மெய் நிழல்போல் சூழும் துணைவரும் சேரவிட்டு துறந்தனர் போலும், யாண்டும் துப்பு இலா வெப்பம் தன்னால் இறந்தனன் இவனும்; (மற்று), இங்கு என் செய்வேன், என்று என்று எண்ணி, நிறைந்த சுனையின் மற்றை நால்வரையும் காணா,—என்று அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** ''விட்டு நீங்காத சிறந்த உடலின் நிழல்போல் விடாமல் சுற்றிக்கொண்டிருக்கும் தம்பியரும் ஒருசேர (இவனை) பிரிந்து அப்பால் சென்றனர் போலும்! எங்கும் தீயுண்ட அரக்கைப் போன்ற வெப்பத்தினால் இவனும் (தருமனும்) இறந்தனன் போலும்; இப்பொழுது நான் என்ன செய்வேன்?'' என்று, அந்த பூதம் பலமுறை எண்ணி, (அதன்பின்) நிறைந்த நீரைக் கொண்ட பொய்கைக் கரையில் மற்றவர்களான தம்பியர் நால்வரையும் கண்டு. துப்பு - அரக்கு, துணை. துணை என்று பொருள் கொண்டால் 'இணையில்லாத வெப்பம்' என்பது பொருளாகும். மற்று:

அசை. காணா - கண்டு. தருமன் உயிரொடுங்கியிருக்கக் கண்ட பூதம், ''தம்பியர் இவனைப் பிரிந்து சென்றனர் போலும்,'' என்றும், ''வெம்மையின் கொடுமையினால் இவனும் உயிரொடுங் கினன் போலும்'', என்றும் எண்ணிய பூதம், அவனது தம்பியரை யாவது கொல்லலாம் என்றால், அவர்களையும் காணோமே,' என்று குழம்பித் திரிகையில், பொய்கைக் கரையில் தம்பியர் நால் வரும் இறந்து கிடப்பதைக் கண்டது, என்க.

**40. பச்செனும் புனலான் மிக்க பங்கயச் சுனையுங் கொல்லும்**
**நச்சுவெஞ் சுனையே போலும் நால்வருஞ் சேர மாண்டார்**
**இச்சுனை யருந்திப் போலு மென்னினைந் தேது செய்தார்**
**நிச்சயங் கொடிது கெட்டே னிந்தநெட் டூர மென்னோ.**

[பச்செனும் புனலால் மிக்க பங்கயம் சுனையும் கொல்லும் நச்சு வெம் சுனையே போலும் ; நால்வரும் சேர மாண்டார் இச் சுனை அருந்திப் போலும் ; என நினைந்து ஏது செய்தார்? நிச்சயம் கொடிது, கெட்டேன், இந்த நெட்டூரம் என்னோ ?]

**விளக்கம் :-** பச்செனும் புனல் - குளிர்ச்சி பொருந்திய நல்ல நீர். பச்செனும் நீரால் மிகுந்த தாமரைப் பொய்கையும் விஷ நீரைக் கொண்ட பொய்கை போலும்! நால்வரும் ஒருசேர இப் பொய்கை நீரைக் குடித்து மாண்டனர்போலும்! என்ன நினைத்து, ஏது செய்தார்கள்? நிச்சயமாய் இக் காட்சி கொடியது, கெட்டேன்; இக் கொடிய நிகழ்ச்சி நிகழ்ந்தது எதனாலோ,—என்பது பொருள். பாண்டவர் நால்வரும் இச் சுனை நீரை அருந்தி மாண்டிருக்க வேண்டும், என்று எண்ணிய பூதத்திற்கு இதற்குக் காரணம் தோன்றாமையின், ''என் நினைந்து ஏது செய்தார்?'' என்றது, என்க. விரும்பத்தகாத செயலைக் கண்ட விடத்து, கெட்டேன், என்னல் ஒரு சொல் வழக்கு. நிட்டூரம் - (நிஷ்டூரம்) கொடுமை.

## பூதம் முனிவனைக் கொல்லுதல்

**41. காவலன் வார்த்தை கேட்டுக் காளமா முனிவ னென்னும்**
**நாவல னோமத் தீயி னம்மையுற் பவித்து விட்டான்**
**மேவலர் கொல்லு முன்னே வீந்தன ரிந்தப் பாவம்**
**கேவல மல்ல வென்று கிளர்சின மூண்டு மீண்டே.**

[காவலன் வார்த்தை கேட்டு காளமா முனிவன் என்னும் நாவலன் தீயின் நம்மை உற்பவித்து விட்டான் ; மேவலர் கொல்லும் முன்னே, வீந்தனர் ; இந்த பாவம் கேவலம் அல்ல, என்று கிளர் சினம் மூண்டு மீண்டே.]

**விளக்கம் :-** காவலன் - துரியோதனன். நாவலன் - மந்திர வித்தையில் வல்லவன். தீயின் உற்பவித்து விட்டான் - தீயிலிருந்து உண்டாக்கி (பகைவரைக் கொல்ல) அனுப்பினான். மேவலர் -

பகைவர். வீந்தனர் - (பகைவர் கொல்லுமுன் பாண்டவர்) இறந்தனர். இந்தப் பாவம் கேவலம் அல்ல - (நால்வரைக் கொல்லச் செய்த அபிசாரமாகிய) இந்தப் பாவச் செயல் ஒழுங்கின்பாற் பட்டது அன்று, என்று கிளர்சினம் மூண்டு மீண்டு, (ஏ) - என்று எண்ணிப் பொங்கும் சினம் மூளப் பெற்றதாய்த் திரும்பிச் சென்று, —தொடரும். அதர்வண வேத வித்தகனான படியால், முனிவன் நாவலன் எனப்பட்டான். ஒருவனது சொல் கேட்டு நல்லவர் களைக் கொல்லுவதற்குச் செய்த இந்த வேள்வி கொடியதாகும் ஆதலால், 'இந்தப் பாவம் கேவல மல்ல', என்றார். இத் தீய செயலைச் செய்த முனிவன்மேல் சினம் மூளப்பெற்றதாய்ப் பூதம் அவனிடம் சென்றது, என்பதாம்.

**42.** **காலங்கண் மூன்று மெண்ணுங் கடவுணீ கலக்க மெய்தி**
**ஞாலங்கொ ணசையி னில்லா நயனிதன் மகன்சொற் கேட்டுச்**
**சீலங்கொள் வாய்மை யாய்செந் தீயெழு கானிற் சின்னீர்**
**ஆலங்கொல் பான்மை யாரை யார்கொல்வா னருளிச்**
**செய்தாய்.**

[காலங்கள் மூன்றும் எண்ணும் கடவுள் நீ கலக்கம் எய்தி, ஞாலம் கொள் நசையின் இல்லா நயனிதன் மகன் சொல் கேட்டு, சீலம் கொள் வாய்மையாய், செம் தீ எழு கானில் சில் நீர் ஆலம் கொல் பான்மையாரை, யார் கொல்வான், அருளிச் செய்தாய்.]

**விளக்கம் :-** சீலம் கொள் வாய்மையாய்-என்று அழைத்தது, நல்லொழுக்கமுடைய சத்ய விரதியாயிருந்தும், இத் தீய கருமத்தில் இறங்கினையே, என்று இகழும் கருத்தது. காலங்கள் மூன்றும் எண்ணும் கடவுள்நீ, என்றது முக்காலங்களையும் உணரவல்ல தெய்வத்தன்மை வாய்ந்த நீ, இறந்தவரைக் கொல்லுமாறு ஏவி னாயே, என்று பூதம் கடிந்தபடி. இல்லா நயனி - இல்லாத கண் களை உடையவன், அதாவது குருடனான திருதராட்டினன். சில் நீர் ஆலம் கொல் பான்மையரை, யார் கொல்வான் அருளிச் செய் தாய் - அற்பமான நீரில் கலந்துள்ள விஷநீரால் கொல்லப்பட்ட தன்மையரானவரை (அல்லால் வேறு) யாரை நீ கொல்லுமாறு ஏவினாய்? அதாவது செத்த பிணங்களின்மீது என்னை ஏவினாய், என்று கூறியபடி.

**43.** **பூண்டவெள் ளரவத் தோடு புனைமதி வேணி யார்க்குத்**
**தாண்டவ நடனஞ் செய்யத் தக்கதோர் தழல்வெங் கானில்**
**பாண்டவா தம்மைக் கொல்லப் பணித்தனை யொருகா லாவி**
**மாண்டவர் பின்னும் பின்னும் மாள்வரோ மதியி லாதாய்.**

[பூண்ட வெள் அரவத்தோடு புனைமதி வேணியார்க்கு, தாண்டவ நடனம் செய்ய தக்கது ஓர் தழல் வெம் கானில்,

பாண்டவர் தம்மை கொல்ல பணித்தனை, ஒருகால் ஆவி மாண்டவர் பின்னும் பின்னும் மாள்வரோ, மதியிலாதாய்.]

**விளக்கம் :-** அணிகலனாய் அணிந்த வெள்ளிய அரவத்தோடு பிறைச் சந்திரனையும் புனைந்த சடை முடியை உடைய சிவபிரான் தாண்டவம் என்னும் பயங்கரமான கூத்தை ஆடத்தக்கதான ஒரு நெருப்பைப்போல் வெதுப்பும் கானில்,—என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். இறந்த பாண்டவர் தம்மைக் கொல்ல ஏவினாய், மதி இலாதவனே, ஒரு முறை மாண்டவர் மறுபடியும் மாள்வரோ,— என்பது ஈற்றடிகளின் பொருள். சிவபெருமான் தாண்டவம் செய்வதற்குத் தக்கது, என்றது, சுடுகாட்டைப்போல் வெம்மை கொண்ட காடு, என்ற பொருளதாகும். தாண்டவம், என்பது, பயம் விளைக்கும் உக்ரமான நடனம்.

**44. நீயிதற் கிலக்க மாகி நின்றனை யென்று கோபத்**
**தீயழெப் பொடிக்குங் கண்ணுஞ் சிரிப்பெழு மெயிறு மாகி**
**மூவிலைச் சூலந் தன்னான் முனிதலை துணிந்து வீழ**
**ஏவலிற் பழுதில் பூத மிவனையே யெறிந்த தன்றே.**

[நீ இதற்கு இலக்கம் ஆகி நின்றனை, என்று கோபம் தீ எழ பொடிக்கும் கண்ணும் சிரிப்பு எழும் எயிறும் ஆகி, மூ(ன்று) இலை சூலம் தன்னால் முனி தலை துணிந்து வீழ, ஏவலில் பழுது இல் பூதம் இவனையே எறிந்தது, அன்றே.]

**விளக்கம் :-** இலக்கம் - இலக்கு, குறி. தீ எழ பொடிக்கும் கண் - தீ எழுமாறு தோன்றும் கண். பொடித்தல் - விளங்கல், தோற்றுவித்தல். முனிதலை துணிந்து வீழ - முனிவனுடைய தலை துண்டாகி விழ, (சூலத்தை எறிந்து பூதம் கொன்றது). ஏவலில் பழுது இல்பூதம் — ஏவியதைச் செய்வதில் தவறுதல் இல்லாத பூதம். கொல்லுந் தொழிலைச் செய்வதற்கு ஏவப் பெற்ற பூதம், பாண்டவர் மாண்டவராயினரானபடியால் அத் தொழிலை முனிமேல் செய்தது,—என்க.

**45. எறிந்தது மீண்டு மோம வெரியிடை யொளிக்கக் கானில்**
**செறிந்தமா முனிவர் யாருந் தேவரோ டிரங்கி யார்ப்ப**
**அறிந்தவ ரவனி யாளு மரசனை வெறுக்கத் தம்மில்**
**பிறிந்தவர் மீண்டு மாவி பெற்றவா பேசக் கேண்மோர்.**

[எறிந்தது மீண்டும் ஓமம் எரி இடை ஒளிக்க, கானில் செறிந்த மா முனிவர் யாரும் தேவரோடு இரங்கி ஆர்ப்ப, அறிந்தவர் அவனி ஆளும் அரசனை வெறுக்க, தம்மில் பிறிந்தவர் மீண்டும் ஆவி பெற்ற ஆ பேச கேண்மோ.]

**விளக்கம் :-** எறிந்தது - முனிவன் தலையைத் துண்டாடிய பூதம். அது ஓமத்தீயிடை மறைய, கானில் கூட்டமாக வாழ்ந்த முனிவர்கள் எல்லோரும் தேவர்களோடு முனிவன் கதியை

நினைத்து இரங்கிப் புலம்பவும், விஷயம் அறிந்தவர் முனிவனை இக் கருமத்தில் அமர்த்திய துரியோதனனை வெறுக்கவும், தமது உடம்பினின்று உயிர் நீங்கப்பெற்ற பாண்டவர் மீண்டும் உயிர் பெற்ற விதத்தையுங் கேளுங்கள், என்று புலவர் கூறியபடி. கேண்மோ - (கேண்ம் - ஓ) கேளுங்கள், ஓ, அசை).

கலித்துறை

**பாண்டவர் உயிர்பெறல்**

**46. மூச்ச றப்புலர்ந் துயங்கிய முரசவெங் கொடியோன்**
**மாச்சி னைத்தடஞ் சந்தன மகீருக நிழலில்**
**வீச்சு றப்பயி றென்றலான் மெய்யுயி ரெய்தி**
**நாச்சு வைப்படு ஞானநன் மந்திர நவிலா.**

[மூச்சு அற புலர்ந்து உயங்கிய முரசம் வெம் கொடியோன், மா சினை தட சந்தனம் மகீருகம் நிழலில் வீச உற பயில் தென்றலால் மெய் உயிர் எய்தி, நா சுவை படும் ஞானம் நல் மந்திரம் நவிலா,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** உயங்கி - வருந்தி. முரச வெங் கொடியோன் - முரசக் கொடியனான தருமன். மா சினை - பெரிய கிளைகள். மகீருகம் - மரம். வீசு உற பயில் தென்றல் - வீசுவதால் உடலில் பட்ட தென்றல் காற்று. மெய் - உடல். நாவிற்குச் சுவை தரும் ஞானத்தை அளிக்கும் நல்ல மந்திரமாகிய அஷ்டாக்ஷரத்தை நவின்று, என்பது, ஈற்றடியின் பொருள். மூச்சு அற்று வருந்திய தருமன், சந்தனமர நிழலில், தென்றல் வீசலால் உணர்வு பெற்று, மகாமந்திரமான ஞானம் தரவல்ல எட்டெழுத்தை உச்சரித்தான், என்பதாம். வீச்சு - வீசு, செய்யுள் விகாரம்.

**47. தனைப்ப யந்தநற் றருமதே வதைதிரு வருளால்**
**வினைப்ப யன்களா லுறுதுயர் யாவையும் வீட்டிச்**
**சுனைப்பெ ரும்புனற் றாகமு மடிக்கடி தோன்ற**
**நினைப்பு மெய்தியத் தம்பியர் தம்மையு நினைந்தான்.**

[தனை பயந்த நல் தரும தேவதை திரு அருளால் வினை பயன்களால் உறு துயர் யாவையும் வீட்டி, சுனை பெருபுனல் தாகமும் அடிக்கடி தோன்ற, நினைப்பும் எய்தி, அ தம்பியர் தம்மையும் நினைந்தான்.]

**விளக்கம் :-** தன்னை ஈன்ற எமதர்ம ராசனது அருளால் தீவினைகளின் பயனாய் வந்தடையும் துன்பங்களை ஒழித்து, தாகம் உண்டாக, ஞாபக சக்தியையும் பெற்று, நீர் கொணரச் சென்ற தம்பியரை நினைத்தான்,—என்பதாம்.

**48. ஆன தன்மன வலியுட னாண்டுநின் றெழுந்து
கான கத்திடை நீங்கிய வறன்றரு காளை
போன தம்பியர் சேவடிச் சுவட்டினிற் போயத்
தூநி றப்புன லுண்டுவீழ் துணைவரைக் கண்டான்.**

[ஆன தன் மன வலியுடன் ஆண்டு நின்று எழுந்து கானகத்திடை நீங்கிய அறன் தரு காளை, போன தம்பியர் சே அடி சுவட்டினில் போய், அ தூநிறம் புனல் உண்டு வீழ் துணைவரை கண்டான்.]

**விளக்கம் :-** இயற்கையாய் அமைந்த தனது மனவலிமையுடன், கானகத்தில் வாசம் செய்ய (நாட்டினின்று) நீங்கிய, தர்மராசன் தந்த தருமபுத்திரன், அங்கிருந்து எழுந்து நீர் கொணரச் சென்ற தம்பியரின் செய்ய பாதச் சுவட்டினில் போய், அத் தூய நிறமுடைய நீரைப் பருகி விழுந்து கிடக்குந் தம்பியரைக் கண்டான்,—என்பது பொருள். தூ நிறப் புனல் - தோற்றத்தின் அளவில் சுத்தமாய்க் காணப்பட்ட பொய்கை நீர்.

**49. ஊறி லாமைகண் டுடற்றின ரில்லென வுணர்ந்து
மாறி லாதவ ரெங்ஙன மாருயிர் மாய்ந்தார்
சேறி லாதவெஞ் சுரத்திடைச் செழும்புன னுகரும்
பேறி லாமையி னிறந்தனர் போலுமிப் பெரியோர்.**

[ஊறு இலாமை கண்டு உடற்றினர் இல் என உணர்ந்து மாறு இலாதவர் எங்ஙனம் ஆர் உயிர் மாய்ந்தார்? சேறு இலாத வெம் சுரத்திடை செழு புனல் நுகரும் பேறு இலாமையின் இறந்தனர் போலும் இ பெரியோர்.]

**விளக்கம் :-** தம்பியர் உடலில் புண்கள் இல்லாமை கண்டு, போர் செய்து இவர்களை அழித்தவர் இல்லை என உணர்ந்து,— என்பது முதலடியின் பொருள். மாறு இலாதவர் - ஆற்றலில் நிகர் இல்லாதவர். சேறு இலாத - ஈரப்பசை இல்லாத. சுரம் - பாலைவனம். (இந்தக் கொடிய பாலையில் தாகம் தீருமாறு செய்ய) நறும் புனல் பருகும் பாக்கியம் வாய்க்காமையின் இப் பெரியோர் இறந்தனர் போலும்,—என்று தருமன் எண்ணினான், என்பதாம். பெரியோர் - வீரம், பண்பு ஆகிய நற்குணங்களால் உயர்ந்தோர். ''தேகத்தில் புண் இல்லாமையின் போரால் மாண்டார் அல்லர், இவருக்கு நேரான வீரரும் இலர், அவ்வாறாக இவர் இறந்தது எவ்வாறு'', என்று சங்கித்த தருமன், ''பருகும் நீர் கிடைக்காமையின் நீர் வேட்கையால் இறந்தனர் போலும்,'' என்று எண்ணினான், என்க.

**50. அண்ட கோளகை யனையதோ ராதபத் திரத்தான்
மண்ட லங்களீ ரொன்பதும் புரந்திட வல்லான்
சண்ட மாருதி யெழுதிய தாழ்மண லெழுத்தைக்
கண்டு நஞ்சமிக் கயத்தற லென்பது கண்டான்.**

[அண்ட கோளகை அனையது ஓர் ஆதபத்திரத்தால் மண்டலங்கள் ஈர் ஒன்பதும் புரந்திட வல்லான், சண்டம் மாருதி எழுதிய தாழ் மணல் எழுத்தை கண்டு, நஞ்சம் இ கயத்து அறல் என்பது கண்டான்.]

**விளக்கம் :-** அண்ட கோளகை - வட்டமான அண்டம். ஆதபத்திரம் - கொற்ற வெண்குடை. மண்டலம் ஈர் ஒன்பது - ஆள்வோராலும், பாஷையாலும் வேறுபட்ட பதினெட்டு நாடு. புரந்திட வல்லான் - இந்தப் பதினெட்டு மண்டலங்களையும் தன் ஒப்பற்ற குடையின்கீழ் பாதுகாக்க வல்லவனான தருமன். சண்ட மாருதி - உக்ரம் உடையவனான வீமன். அவன் மணலில் எழுதியிருந்ததைப் பார்த்துத் தருமன், இப் பொய்கை நீர் விஷமாகும் என்பதை அறிந்தான். கயம் - நீர்நிலை. அறல் - நீர். நஞ்சம், **அம்** சாரியை. மண்டலங்கள் பதினெட்டு :—சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், கோசலம், திராவிடம், என்பன.

**51. வெஞ்ச மஞ்செய வருவர்கொன் மீண்டுமென் றருளில்
வஞ்ச கன்செய்த வஞ்சனை யிதுவென மதித்து
நஞ்ச நீர்கொடு தானுந்தன் னாவினை நனைக்கும்
நெஞ்ச னாகியந் நிறைபுனற் கயத்திடை நேர்ந்தான்.**

[வெம் சமம் செய வருவர்கொல் மீண்டும் என்று அருள் இல் வஞ்சகன் செய்த வஞ்சனை இது என மதித்து, நஞ்சம் நீர் கொடு தானும் தன் நாவினை நனைக்கும் நெஞ்சன் ஆகி, அ நிறை புனல் கயத்திடை நேர்ந்தான்.]

**விளக்கம் :-** சமம் - போர். அருள் இல் வஞ்சகன் - துரியோதனன். நேர்ந்தான் - போய்ச் சேர்ந்தான். பாண்டவர் வனவாசம் முடித்துப் போருக்கு மீண்டும் வரக்கூடும் என்றும், வனத்திலேயே அவர்களை அழித்துவிடவேண்டும் என்றும் எண்ணி, காட்டில் திரியும் அவர் இங்கே நீர் பருக வரல் கூடுமாதலால், நீரில் விஷத்தைக் கலந்து வைத்தால், நீரைப் பருகி மடிவர் என்று வஞ்சனான துரியோதனன் இக் காரியத்தைச் செய்திருக்கவேண்டும் என்று எண்ணித், தம்பியர் இல்லாது வாழ விரும்பாத தருமன், தானும் நீரைப் பருகி மடிய நீர்நிலையை அடைந்தான், என்க.

அசரீரி கூற்று

**52. திருந்து நல்வரைச் செங்கையா லள்ளிய நீரை**
**அருந்து மவ்வயி னகல்விசும் பிடையச ரீரி**
**கருந்த டம்புன னஞ்சிது நுகர்வது கருதேல்**
**விருந்தர் நால்வரு மென்மொழி கேட்டிலர் வெய்யோர்.**

*[திருந்து நல் வரை செம் கையால் அள்ளிய நீரை அருந்தும் அவயின் அகல் விசும்பிடை அசரீரி, கரு தடம் புனல் நஞ்சு இது, நுகர்வது கருதேல், விருந்தர் நால்வரும் என்மொழி கேட்டிலர் வெய்யோர்.]*

**விளக்கம் ;-** வரை - இரேகை. திருந்து நல் வரை செங்கை- அழகிய இரேகை ஓடப்பெற்ற செங்கை. அசரீரி-சரீரம் இல்லாதது; ஆகாசவாணி. கருந்தடம் புனல் - கரிய நிறமுள்ள இப் பொய்கை நீர். இது நஞ்சு - (நீராகிய) இது விஷம். விருந்தர் - புதியவர். வெய்யோர் - கொடிய விதியினர். தன் வார்த்தையைக் கேளாமை யின், நால்வரையும் அசரீரி, வெய்யோர், என்றது போலும். உயிர் வாழ விரும்பாது தருமன் நீரைப் புசிக்கு முன், அசரீரி தடுத்தது, என்பதாம்.

**53. உன்னை யான்வின வுரைதனக் குத்தர முரைத்துப்**
**பின்னை நீநுகர் பெறாதுபெற் றனையவிப் புனலை**
**அன்னை போலுயி ரனைத்தையும் புரந்திடு மரசே**
**என்னை யோபெருந் தாகம்விஞ் சிடினுமின் றெனவே.**

*[உன்னை யான் வினவு உரை தனக்கு உத்தரம் உரைத்து பின்னை நீ நுகர் பெறாது பெற்று அனைய இ புனலை, அன்னை போல் உயிர் அனைத்தையும் புரந்திடும் அரசே, என்னையோ பெரு தாகம் விஞ்சிடினும் இன்று, என, ஏ.]*

**விளக்கம் :-** பெறாது பெற்று அனைய இ புனல் - எளிதில் அடையப்படாததைப் பெற்றால் போன்ற இந்த நீர். பெற்று - (எச்சத் திரிபு) பெற்றால். இன்று பெருந்தாகம் விஞ்சிடினும் என்னை(ஓ) - பெரிய தாகம் அதிகப்படினும் அதனால் என்ன? என - என்று அசரீரி கூற. அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும். அசரீரி தருமனை நோக்கி, தாய்போல் உயிர்கள் எல்லாவற்றையும் ரட்சிக்கின்ற அரசனே, தாகம் இப்பொழுது அதிகரிப்பினும், அதனால் என்? என் கேள்விகளுக்குப் பதில் கூறிவிட்டு, அதன் பின், பெறாது பெற்றனைய இப் புனலைப் பருகுவாய்'', என்று கூறிற்று, என்பதாம்.

**54. பெருந லம்பெறு மகனையப் பேரறக் கடவுள்**
**இருவி சும்பினி லருவமா யியம்பிய மாற்றம்**
**திருவு ளந்தனிற் கொண்டுதன் செங்கைநீர் வீழ்த்திப்**
**பொருவி லாமகன் புகலுவ புகறிநீ யென்றான்.**

[பெரு நலம் பெறு மகனை அ பேர் அறம் கடவுள் இரு விசும்பினில் அருவமாய் இயம்பிய மாற்றம் திருவுளம் தனில் கொண்டு, தன் செங்கை நீர் வீழ்த்தி, பொரு இலா மகன் புகலுவ புகறி நீ என்றான்.]

**விளக்கம் :-** பெரு நலம் பெறு மகன் - சிறந்த குணங்களை மிகுதியாகப் பெற்ற (அறனின்) மகனான தருமன். அருவமாய் இயம்பிய மாற்றம் - அசரீரியாய் இருந்து கூறிய சொல். புகலுவ புகறீ - சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுக. அசரீரியாய் இருந்து கூறியது எமதர்மராசன். அருவம், அரூபம், என்ற வட சொல்லின் திரிபு. புகலுவ, பலவின்பால் வினையாலணையும் பெயர். புகறீ, முன்னிலை ஏவல் ஒருமை.

**55.** **சொல்லு நூல்களிற் பெரியதே தரியமெய்ச் கருதி**
**இல்ல றத்தினுக் குரியதே தெண்ணுடை யில்லாள்**
**மல்லன் மாலையின் மணமுள தேதுவண் சாதி**
**நல்ல மாதவ மேதுதங் குலம்புரி நடையே.**

[சொல்லும் நூல்களில் பெரியது ஏது? (என்பது அசரீரியின் கேள்வி). அரிய மெய் சுருதி, (தருமன் விடை). இல்லறத்திற்கு உரியது ஏது? (கேள்வி). எண் உடை இல்லாள், (விடை). மல்லல் மாலையில் மணம் உளது ஏது? (கேள்வி) வண் சாதி, (விடை). நல்ல மா தவம் ஏது? (கேள்வி). தம் குலம் புரிநடையே, (விடை).]

**விளக்கம் :-** சுருதி - வேதம். எண்ணுடை இல்லாள் - நல்ல குணங்களால் சிறந்து பாராட்டற்குரிய மனைவி. மல்லல் மா மாலை - செழிப்புடைய சிறந்த மாலை. வண் சாதி - வளப்பமுடைய சாதிப் பூவினால் கட்டப்பெற்ற மாலை. குலம் புரி நடை - குலத்திற்குரிய ஒழுக்கங்கடவா நடத்தை. இல்லறம் - விருந்தோம்பல், சுற்றம் பேணல் முதலிய தர்மம்.

**56.** **முனிகு லந்தொழு கடவுள்யார் மொய்துழாய் முகுந்தன்**
**நனைம ணங்கமழ் குழலினர்க் கியற்கையா ததுநாண்**
**தனமி குந்தவர்க் கேதரண் டகைபெறு தானம்**
**இனிய தேதிரு செவிக்கிளங் குதலைய ரின்சொல்.**

[முனிகுலம் தொழு கடவுள் யார்? மொய் துழாய் முகுந்தன். நனை மணம் கமழ் குழலினர்க்கு இயற்கை யாது? அது நாண். தனம் மிகுந்தவர்க்கு ஏது அரண்? தகை பெறு தானம். இனியது ஏது செவிக்கு? இளங்குதலையர் இன்சொல்.]

**விளக்கம் :-** முகுந்தன் - மோக்ஷம் தருபவன். அரண் - பாதுகாப்பு. தகை பெறு தானம் - தகுதி பொருந்திய உபகாரம். குதலையர் - குழந்தைகள். இயற்கை யாது அது, என்பதை, இயற்கை அது யாது, என்று கொள்க; இயற்கையாய் அமைய வேண்டிய அந்தக் குணம் யாது, என்பது பொருள்.

**57. நிற்ப தேதுகொ ணீடிசை யொன்றுமே நிற்கும்**
**கற்ப தேதுகொல் கசடறக் கற்பதே கல்வி**
**அற்ப மாவதே தனைத்தினு மயற்கரத்தேற்றல்**
**சிற்ப மாமிவை செப்பெனச் செப்பினன் சிறுவன்.**

[நிற்பது ஏது கொல்? நீடு இசை ஒன்றுமே நிற்கும். கற்பது ஏது கொல்? கசடு அற கற்பதே கல்வி. அற்பம் ஆவது ஏது அனைத்தினும்? அயல் கரத்து ஏற்றல். சிற்பம் ஆம் இவை செப்பு என, செப்பினன் சிறுவன்.]

**விளக்கம் :-** நிற்பது - அழியாமல் நிலை நிற்பது. இசை கீர்த்தி. கற்பது - கற்க வேண்டியது. கசடறக் கற்பது(ஏ) கல்வி-குற்றமில்லாமல் கற்க வேண்டிய மெய்க் கல்வி.சிற்பம் ஆம் இவை-அருமை உடையதாகும் இக் கேள்விகள். சிறுவன் - அறன் மகனாகிய தர்ம புத்திரன். கல்விக்குக் குற்றம், ஐயம் திரிபு. ஐயம் -சந்தேகம். திரிபு - ஒன்றை மற்றொன்றாக மயங்கல்.

எமன் வெளிப்படல்

**58. இவ்வ கைப்பல வினவலு மியம்பிய மகனை**
**அவ்வ யிற்பெரி துவந்துகண் ணினுக்கிலக் காகிச்**
**செவ்வ யிற்பொலஞ் சிலம்பெனச் சேர்ந்துமெய் தழுவி**
**வெவ்வ யிற்புரி விரகெலாம் விளம்பினன் மாதோ.**

[இ வகை பல வினவலும் இயம்பிய மகனை, அ வயின் பெரிது உவந்து, கண்ணினுக்கு இலக்கு ஆகி, செவ்வயின் பொலம் சிலம்பு என சேர்த்து மெய் தழுவி, வெவ்வயின் புரி விரகு எலாம் விளம்பினன், மாதோ.]

**விளக்கம் :-** அவ்வயின் - அப்போது. கண்ணினுக்கு இலக்காகி - பிரத்யட்சப்பட்டு,தோன்றி. செவ்வயின் பொலம் சிலம்பு என - எழிலைத் தன்னிடத்தே கொண்ட பொன் மயமான மகா மேரு பர்வதம் என்று சொல்லும்படி,வெவ்வயின் - வெம்மையைத் தன்னிடம் கொண்ட வனத்தில். விரகு - உபாயம். தன் வினாக்களுக்குத் தக்க விடையளித்த மகனை மகிழ்ந்து, அவனை மார்புடன் இறுகத் தழுவிக்கொண்டு, வனவாசத்தில் இடரிலாது வாழ்வதற்கான உபாயங்களைக் கூறினான்,—என்க.செவ்வயின் பொலம் சிலம்பு என சேர்ந்து, என்பது, யமன் கோரமான தனது வடிவில் தோன்றாமல், 'அழகிய உருவத்தில் வந்து - என்ற பொருளது.

கலிவிருத்தம்

**59. அறப்பெருங் கடவுளென் றறிந்துதன் தாதையைச்**
**சிறப்புடன் சேவடி சென்னி சேர்த்திய**
**மறப்பெரும் புதல்வனை மகிழ்ந்து தம்பியர்**
**இறப்பினை யொழிப்பதற் கேது வுண்டெனா.**

[அறம் பெரு கடவுள் என்று அறிந்து தன் தாதையை சிறப்புடன் சே அடி சென்னி சேர்த்திய மறம் பெரு புதல்வனை மகிழ்ந்து தம்பியர் இறப்பினை ஒழிப்பதற்கு ஏது உண்டு, எனா,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** அறப் பெருங்கடவுள் - யமதர்மராஜன். மறப் பெரும் புதல்வன் - வீரப் பெருமையுடைய மகனான தருமன்.ஏது-வழி. வந்து தோன்றிய அறப்பெருங் கடவுளைத் தருமன் வணங்க, அவன், தம்பியர் பிழைக்க வழி உண்டு,என்று கூறினான் என்பதாம்.

**60. நச்சுநீர் குடித்துயிர் நீத்த நால்வரின்**
**உச்சமா மன்புடை யொருவன் றன்னைநீ**
**இச்சையா னிம்மறை யியம்பி யெண்ணியோர்**
**அச்சமற் றழையென வருள்செய் தானரோ.**

[நச்சு நீர் குடித்து உயிர் நீத்த நால்வரின், உச்சம் ஆம் அன்புடை ஒருவன் தன்னை நீ,இச்சையான் இ மறை இயம்பி,எண்ணி ஓர் அச்சம் அற்று அழை என, அருள் செய்தான்; அரோ.]

**விளக்கம்;-** உச்சமாம் அன்புடை ஒருவன் - மிகுதியான அன்பு உடைய ஒரு தம்பி.மறை-மந்திரம்.இச்சையான் இம்மறை இயம்பி எண்ணி அச்சம் அற்று அழை - விருப்பத்தோடு இந்த மந்திரத்தை ஜபித்து, தியானித்து பயம் இல்லாமல் அழைப்பாய். யமன், ஒரு மந்திரத்தை உபதேசித்து, இதைச் சொல்லி, உன் அன்பிற்குரிய ஒரு தம்பியை அழைக்க், என்று கூறினான்,— என்க.

தம்பியர் உயிர் பெறல்

**61. தாதைகூ றியமறை தனைக்கொண் டேசுதன்**
**ஏதமுற் றிடாவகை யிளைய தம்பியை**
**ஊதைவந் துள்புக வுணர்ச்சி நல்கினான்**
**வேதமு நிகரிலா விரத வாய்மையான்.**

[தாதை கூறிய மறைதனைக் கொண்டு (ஏ), சுதன் ஏதம் உற்றிடாவகை இளைய தம்பியை, ஊதை வந்து உள்புக உணர்ச்சி நல்கினான், வேதமும் நிகர் இலா விரதம் வாய்மையான்.]

**விளக்கம் :-** வேதமும் நிகரிலா விரதம் வாய்மையான்(ஆகிய) சுதன், தாதை கூறிய...உணர்ச்சி நல்கினான், என்று அன்வயிக்க. சுதன் - யமதர்மனின் மகனாகிய தருமன். ஏதம் - நஷ்டம், நாசம். ஊதை உள் புக - பிராணவாயுவை (மந்திரத்தினால்) உள்ளே பிரவேசிக்கச் செய்து. (உணர்ச்சி நல்கினான்,) இளைய தம்பி -

எல்லோருக்கும் இளையவனான சகாதேவன். வேதமும் ஒப்பாக மாட்டாதபடி, சத்தியத்தை விரதமாகக் கொண்டவன். விரத வாய்மையான், என்பதை வாய்மை விரதத்தான், என்று கூட்டுக. புக, என்பதற்குப் புகச் செய்து என்று பொருள் கொள்க.

**62. கண்டுநின் றறப்பெருங் கடவுள் வாயுவின்**
**திண்டி றன் மாமகன் தேவர் கோன்மகன்**
**மண்டழல் விடத்தினான் மடிய மாமருத்து**
**அண்டர்நல் கிளவலை யழைத்த தென்னென் றான்.**

[கண்டு நின்று அறம் பெரு கடவுள் வாயுவின் திண் திறல் மாமகன், தேவர்கோன் மகன், மண்டு அழல் விடத்தினால் மடிய, மாமருத்து அண்டர் நல்கு இளவலை அழைத்தது என், என்றான்.]

**விளக்கம் :-** இளைய தாயான மாத்திரி என்பாளின் புதல்வனான சகதேவனை உயிர்ப்பித்தது கண்டு, வாயுவின் புதல்வனான திண்திறல் வீமனும், இந்திரனது புதல்வனான வில் விசயனும் இருக்க, அசுவினி தேவர்கள் தந்த சகாதேவனை, அழைத்தது, ஏன்? என்று அறக் கடவுள் கேட்டான், என்பதாம். மா மருத்து அண்டர் - சிறந்த மருத்துவ வித்தகர்களான அசுவினி தேவர்கள். திண்திறல் - ஒரு பொருளை உடைய இரு சொற்கள்.

**63. குத்திர மிலாமொழிக் குந்திக் கியானொரு**
**புத்திர னுளனெனப் புரிந்து நல்கினாய்**
**மத்திரிக் கொருமக வில்லை வல்லவர்**
**சித்திரம் வகுத்தெனத் திகழு மேனியாய்.**

[குத்திரம் இலா மொழி குந்திக்கு யான் ஒரு புத்திரன் உளன் என புரிந்து நல்கினாய், மத்திரிக்கு ஒரு மகவு இல்லை, வல்லவர் சித்திரம் வகுத்தது என திகழும் மேனியாய்.]

**விளக்கம் :-** ஓவிய வல்லுநர் சித்திரம் தீட்டினாற் போன்று விளங்கும் திருமேனியை உடையவனே, குற்றமிலா வாய்மொழியை உடைய குந்திதேவிக்கு ''நான் ஒரு மகன் இருக்கின்றேன்'', என்று சொல்லும்படி அன்போடு (என் உயிரை) அளித்தாய். மற்று, என் இளைய தாயாகிய மாத்திரி தேவிக்கோ (இவனை நான் அழைக்கா விட்டால்) ஒரு மகனும் இல்லாமற் போகின்றது, என்றான்,— என்று முடிக்க. க்ஷுத்திரம் என்ற வடசொல் சிதைந்து குத்திரம் என நின்றது; இழிவு அல்லது குற்றம், என்பது பொருள்.

**64. என்றுதன் தந்தையோ டியம்பத் தந்தையும்**
**மன்றலந் தொடைமுடி மைந்த னுக்கமர்**
**வென்றிடு மறைகளும் வில்லொ டேவுவேல்**
**என்றபல் படைகளும் யாவும் நல்கினான்.**

[என்று தன் தந்தையோடு இயம்ப, தந்தையும் மன்றல் அம் தொடை முடி மைந்தனுக்கு அமர் வென்றிடும் மறைகளும், வில்லொடு ஏவுவேல் என்ற பல் படைகளும் யாவும் நல்கினான்.]

**விளக்கம் :-** யாவும் நல்கினான், என்றது தம்பிமாரைப் பிழைப்பித்ததோடு தந்தையாகிய யமன், தருமன் விரும்பிய மற்ற வரங்களையும் கொடுத்தான், என்ற பொருளது.

**65. கருதல னழைத்ததுங் காள மாமுனி**
**புரிதழல் வளர்த்ததும் பூதம் வந்ததும்**
**அருகிவர் நச்சு நீ ரருந்தி மாய்ந்ததும்**
**விரிசினத் துடனது மீண்டு போனதும்.**

[கருதலன் அழைத்ததும், காளமாமுனி புரிதழல் வளர்த்ததும், பூதம் வந்ததும் அருகு, இவர் நச்சு நீர் அருந்தி மாய்ந்ததும், விரி சினத்துடன் அது மீண்டு போனதும்,—தொடரும்.]

**விளக்கம் :-** கருதலன் - துரியோதனன். புரிதழல் - ஓமம் செய்வதற்கான அக்கினி. விரிசினம் - மிகுந்த சினம், அதாவது இறந்தவர்கள்மேல் ஏவியதனால் எழுந்த பெருங்கோபம். பூதம் இவர் அருகு வந்ததும், என்று இயைக்க. அல்லது, இவர் அருகு (கண்ட) நச்சு நீர், என்றும் பொருள் கொள்ளலாம்.

**66. முனிவனைக் கொன்றது முனிவன் வாய்மையில்**
**துனிவனத் துழையினைத் தொடர்ந்து போயதும்**
**தனிவனத் திடைவிடத் தடாகஞ் செய்ததும்**
**இனிமையிற் புத்திரற் கியாவுங் கூறினான்.**

[முனிவனை கொன்றதும், முனிவன் வாய்மையில் துனி வனத்து உழையினை தொடர்ந்து போயதும், தனி வனத்திடை விடம் தடாகம் செய்ததும், இனிமையின் புத்திரற்கு யாவும் கூறினான்.]

**விளக்கம் :-** முனிவன் வாய்மையில் - (கிருஷ்ணாஜினம் கட்டிய பூணூலை ஒருமான் கவர்ந்து சென்றது என்று) முனி குமாரன் கூறிய வார்த்தையால். துனிவனம் - துன்பம் தரக்கூடிய காடு. உழை - மான். தனிவனம் - கொடுமை மிக்க தனித்த வனம். விடத் தடாகம் செய்ததும்-விஷப் பொய்கையைத் தான் தோன்றச் செய்ததும், - ஆகிய எல்லாவற்றையும் யமன் தன் மகனுக்கு இனிதே கூறினான், என்க.

**67. நன்பெரு வனஞ்செறி நாள கன்றது**
**பின்பிற ரறிவுறாப் பெற்றி பெற்றுநீர்**
**துன்புறா திருமெனச் சொல்லி யேகினான்**
**அன்பினா லருள்புரிந் தரிய தாதையே.**

[நல் பெருவனம் செறி நாள் அகன்றது; பின், பிறர் அறிவுறா பெற்றி பெற்று, நீர் துன்பு உறாது இரும் என சொல்லி ஏகினான், அன்பினால் அருள் புரிந்து அரிய தாதை, ஏ.]

**விளக்கம் :-** நல் வனம், என்பதில் நல் என்பது நல்ல பாம்பு என்பது போன்ற அடை. செறி நாள் - பொருந்தி வாழ்ந்து கழிக்க வேண்டிய காலம், பின் - வனவாசத்தின் பின்பு, (அதாவது அஜ்ஞாத வாச காலத்தில்). பிறர் அறிவுறாப் பெற்றி பெற்று - பிறர் உங்களைத் தெரிந்துகொள்ள முடியாத தன்மை பெற்று. துன்பு உறாது இரும் - இடர் உறாமல் இனிதே வாழ்வீர்களாக, (என்று வாழ்த்தியபடி). அரிய தாதை அன்பினால் அருள் புரிந்து ஏகினான் - தருமனது அரிய தந்தையாகிய எமன், அன்பினால் பாண்டவர்களுக்கு அருள் புரிந்து, அவ்விடம் பெயர்ந்து அகன்றான். என்க.

பாண்டவர் தம் வாழிடம் சேர்தல்

**68. தம்பிய ரனைவருந் தந்த மாவிபெற்(று)**
**உம்பரிற் றலைவனா முரிய தந்தையை**
**வம்பவிழ் மலரடி வணங்கி நெஞ்சுடன்**
**அம்பக மலர்ந்துதம் மடவி யெய்தினார்.**

[தம்பியர் அனைவரும் தம் தம் ஆவி பெற்று, உம்பரில் தலைவன் ஆம் உரிய தந்தையை, வம்பு அவிழ் மலர் அடி வணங்கி நெஞ்சுடன், அம்பகம் மலர்ந்து தம் அடவி எய்தினார்.]

**விளக்கம் :-** உம்பரில் தலைவன் - தேவர்களில் தலைமை பெற்றவர்களில் ஒருவனான எமன். வம்பு - வாசனை. அம்பகம்- கண்கள். மலர்ந்து - மலரப்பெற்று. பாண்டவர் எமதர்மனை மனப்பூர்வமாய் வணங்கி, வாழிடமான காட்டை அடைந்தனர், என்பதாம்.

**69. தீதறக் கானிடைச் செறிந்த வைவரும்**
**பேதுறத் தொடர்ந்தொரு பிணைபின் போனதும்**
**ஏதமுற் றிறந்தது மெழுந்து மீண்டதும்**
**ஆழ்துயர்த் திரௌபதிக் கறியக் கூறினார்.**

[தீது அற கானிடை செறிந்த ஐவரும் பேது உற தொடர்ந்து ஒரு பிணைபின் போனதும், ஏதம் உற்று இறந்ததும், எழுந்து மீண்டதும், ஆழ்துயர் திரௌபதிக்கு அறிய கூறினார்.]

**விளக்கம் :-** தீது அற - வந்த தீங்கு விலக. செறிந்த ஐவரும்- நெருங்கிய அன்புடைய ஐவரும். பேதுறல் - மனக்கலக்கங் கொள்ளல். பிணை-பெண்மான். ஏதம் உற்று - கேடு அடைந்து. நச்சுநீர் குடித்து இறந்ததும், அறக்கடவுளால் உயிர் பிழைத்தது மாகிய எல்லாவற்றையும் துயர்கொண்டு வாடிய திரௌபதிக்கு விளக்கமாய்க் கூறினர்,—என்க.

**நச்சுப் பொய்கைச் சருக்கம் முற்றும்.**

**ஆரணிய பருவம் முற்றும்.**

# 4. விராட பருவம்

விராடனது சம்பந்தங் கொண்ட பருவம். அதாவது, விராட நாட்டு அரசனது நகரில், பாண்டவர்கள், அஜ்ஞாதவாசம் செய் ததைக் கூறும் பருவம் இது. காடு கரந்துறைச் சருக்கம், மற்போர்ச் சருக்கம், கீசகன் வதைச் சருக்கம், நிரை மீட்சிச் சருக்கம், வெளிப் பாட்டுச் சருக்கம், என்ற ஐந்து பகுதிகளைக் கொண்டது இப் பருவம்.

## 1. நாடுகரந்துறைச் சருக்கம்

பாண்டவர் விராடனது நகரில், உருமாறினவர்களாய், அரசனைச் சார்ந்து ஓராண்டைக் கழித்ததை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

### கடவுள் வாழ்த்து

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அங்கையி னேமி சங்குவா டண்டோ**
**டடற்சரா சனந்தரித் தருள்வோன்**
**சங்கையின் மறைக ளாயிரங் களுக்குஞ்**
**சாற்றுதற் கரியதத் துவத்தோன்**
**கங்கையி னறலும் காளியன் முடியுங்**
**காளிந்திக் கரையுமே கமழும்**
**பங்கய மலர்க ளிரவுநன் பகலும்**
**பணிந்துபா டுதுமவன் புகழே.**

[அம் கையில் நேமி சங்கு வாள் தண்டோடு அடல் சராசனம் தரித்தருள்வோன், சங்கை இல் மறைகள் ஆயிரங்களுக்கும் சாற்றுதற்கு அரிய தத்துவத்தோன், கங்கையின் அறலும், காளி யன் முடியும், காளிந்தி கரையுமே கமழும், பங்கயம் மலர்கள் இரவும் நல் பகலும் பணிந்து பாடுதும் அவன் புகழே.]

**விளக்கம் :-** நேமி - சக்கரம். சராசனம் - வில். சங்கை - கணக்கு. கணக்கில்லாத மிகப் பலவான வேதங்களுக்கும் 'இது, இது' என்று அறுதியிட்டுக் கூறுவதற்கு முடியாத தத்துவத்தின னான திருமால், என்பது இரண்டாவது அடியின் பொருள். ஆயிரம், என்பது, மிகப் பல, என்ற பொருளது. கங்கையின் நீரும், காளியன் என்ற பாம்பின் முடியும், யமுனா நதியின் கரையுமே மணம் கமழப் பெற்ற திருவடி மலர்களை வணங்கி, அவற்றின் புகழைப் பாடுவோம், என்பது, ஈற்றடிகளின் பொருள். திருமாலினது திருவடி கங்கை தோன்றிய திருவடியாதலால், அந்

நீரின் மணத்தைக் கொண்டதாகின்றது, அத்திருவடி. கிருஷ்ணாவதாரத்தில் காளியன் என்ற நாகத்தின் தலைமேல் நின்று ஆடிய திருவடியாதலால், அப் பாம்பின் மணத்தைக் கொண்டதாகின்றது அத் திருவடி. கண்ணன் இளமையில் யமுனைக்கரையில் பல லீலைகள் புரிந்தானாதலால், அந்நதிக் கரையின் மணத்தைக் கொண்டதாகின்றது அவனது திருவடி. அத்தகைய திருவடித் தாமரைகளைத் தியானித்தும், தொழுதும், துதித்தும் திரிகரணங்களும் பயன்பெறுமாறு செய்வோம், என்று புலவர் கூறியபடி.

**2. அரவவெங் கொடியோ னேவலின் படியே**
**ஐவரு மாறிரண் டாண்டு**
**துருபத னளித்த பாவையுந் தாமுஞ்**
**சுருதிமா முனிகணம் பலவும்**
**பரிவுடன் மலரும் பலங்களுங் கிழங்கும்**
**பாசடை களுமினி தருந்தி**
**ஒருபகல் போலக் கழித்தன ரறிவு**
**மொடுங்கிய புலன்களு முடையார்.**

[அரவம் வெம் கொடியோன் ஏவலின்படியே ஐவரும் ஆறு இரண்டு ஆண்டு, துருபதன் அளித்த பாவையும் தாமும், சுருதி மா முனி கணம் பலவும் பரிவுடன் (இருந்து), மலரும் பழங்களும் பாசடைகளும் இனிது அருந்தி ஒரு பகல்போல கழிந்தனர், அறிவும், ஒடுங்கிய புலன்களும் உடையார்.]

**விளக்கம் :-** துரியோதனன் ஏவலின்படியே பாண்டவரும் திரௌபதியும், முனிவர் கணமும் மனம் பொருந்திய அன்போடு கானிடத்தே இருந்து, மலரும், பழமும் கிழங்கும், பாசடை (பசுமை - அடை) களும் இனிதே அருந்தி, அறிவும், அடங்கிய இந்திரியங்களும் உடையவர்களாய்ப் பன்னிரண்டு வருஷ காலத்தை ஒரு பகல்போல் கழித்து வனவாசத்தை முடித்தனர்,— என்பது பொருள். பாசடை - பசிய இலைகள், கீரை வகைகள். பாண்டவர் அறிவோடு அடங்கிய புலன்களையும் உடையராதலால், காட்டில் கிடைத்தவற்றைத் திருப்தியோடு உண்டு, வருத்தமின்றிக் கடவநாள் கழித்தார்கள்,—என்க.

## அஜ்ஞாத வாசம் பற்றி ஆலோசித்தல்

**3. தொல்லறக் கடவு ளருளுட னளித்த**
**தோன்றறன் றுணைவரை நோக்கிக்**
**கல்லமர் கிரியுங் கானமு மிடமாக்**
**கழித்தன மொழிந்தன காலம்**
**எல்லையோ ராண்டு மியாவரு முணரா**
**திருப்பதற் காமிடம் யாதோ**
**சொல்லுமி னென்றா னென்றலுந் தொழுது**
**சுரபதி மகனிவை சொல்வான்.**

[தொல் அறம் கடவுள் அருளுடன் அளித்த தோன்றல் தன் துணைவரை நோக்கி, கல் அமர் கிரியும் கானமும் இடமா கழித்தனம், ஒழிந்தன காலம்; எல்லை ஓர் ஆண்டும் யாவரும் உணராது இருப்பதற்கு ஆம் இடம் யாதோ? சொல்லுமின் என்றான், என்றலும் தொழுது சுரபதி மகன் இவை சொல்வான்.]

**விளக்கம்** :- தொல் அறக்கடவுள் - எமதர்மராசன். (அவன்) அளித்த தோன்றல் - தருமன், கல் அமர் கிரி-கற்கள் பொருந்திய மலைகள். காலம் ஒழிந்தன - இனி கால எல்லையான ஒரு வருஷம் யாரும் நம்மை அறியாதபடி வசிப்பதற்குரியதாகும் இடம் யாது, — என்பது மூன்றாவது அடியின் பொருள். சுரபதி மகன் - இந்திர குமாரனான விசயன். அஜ்ஞாதவாசம் எங்கே செய்யலாம் என்று தருமன் கேட்க, விசயன் தன்கருத்தைக் கூறினான், என்பதாம்.

**4.** **நீதியும் விளைவுந் தருமமு நிறைந்து**
**நிதிகண்மற் றியாவையு நெருங்கி**
**ஆதியின் மனுநூல் வழியினில் புரப்பா**
**னவனியை மனுகுலத் தரசன்**
**மாதிர முழுது மவன்பெரும் புகழே**
**வழங்குவ தமரரும் வேள்வி**
**வேதியர் பலரு முறைவது மவணே**
**விராடர்கோன் மச்சநா டையா.**

[நீதியும், விளைவும், தருமமும் நிறைந்து, நிதிகள் மற்று யாவையும் நெருங்கி, ஆதியின் மனு நூல் வழியினில் புரப்பான் அவனியை மனு குலத்து அரசன், மாதிரம் முழுதும் அவன் பெரும் புகழே வழங்குவது, அமரரும் வேள்வி வேதியர் பலரும் உறைவதும் அவணே, விராடர் கோன் மச்சநாடு, ஐயா.]

**விளக்கம்** :- நெருங்கி - (எச்சத்திரிபு) நெருங்க. நீதியும், விளைபொருள்களும் தருமமும் நிறைந்து, மற்றுமுள்ள எல்லா நிதிகளும் நெருங்க, மனு குலத்து அரசன், பழமையான பூமியை மனு நூல் வழியில் காப்பான்; எட்டுத் திக்குக்களிலும் அவன் புகழே பேசப்படுவதாகும்; தேவரும், வேள்வி செய்யும் வேதியரும் உறைவதும் அங்கேதான்; (அது) ஐயனே, விராடர் கோனது மச்சதேசம், (என்று விசயன், கூறினான்), — என்பது பொருள்.

**5.** **ஆங்கவ னகரி யெய்திமற் றின்றே**
**யையவரு மணியுருக் கரந்து**
**தீங்கற வுறைவ தல்லது வேறோர்**
**சேர்விட மிலதெனச் செப்பத்**

**தேங்கிய வருளுக் கிருப்பிட மான**
**சிந்தையான் சிந்தையாற் றுணிந்து**
**பாங்குறை யரசர் யாரையுந் தத்தம்**
**பதிகளே செல்கெனப் பகர்ந்தான்.**

[ஆங்கு அவன் நகரி எய்தி (மற்று) இன்றே ஐவரும் அணி உரு கரந்து தீங்கு அற உறைவது அல்லது, வேறு ஓர் சேர்வு இடம் இலது என (விசயன்) செப்ப, தேங்கிய அருளுக்கு இருப்பு இடம் ஆன சிந்தையான் சிந்தையால் துணிந்து, பாங்கு உறை அரசர் யாரையும் தம் தம் பதிகளே செல்கென (செல்க - என) பகர்ந்தான்.]

**விளக்கம் :-** அணி உரு கரந்து - அழகிய நமது உருவத்தை மறைத்துக்கொண்டு. உறைவது அல்லது - அங்கே வசிப்பது அல்லாமல், (வேறோர் சேர்வதற்குரிய இடம் இலது, என்று விசயன் கூற). தங்கிய அருளுக்கு இருப்பிடமான சிந்தையான்- தங்கியதான அருளுக்கு இருப்பிடமான மனத்தை உடைய தருமன். சிந்தையால் துணிந்து - (அவ்வாறு செய்யத்) தீர்மானம் செய்து. தங்களோடு வசித்த அரச குலத்தவரை அவர் தம் பதி செல்லுமாறு கூறினான். —என்க. மற்று: அசை.

6. **முனிவரா யுள்ள தபோவனத் தவரை**
**முடியுறத் தனித்தனி வணங்கிக்**
**கனிவுறு மன்பா லென்றுநா னும்மைக்**
**காண்பதென் றவர்மனங் களிப்ப**
**இனியன வுரைகள் பயிற்றியா வரையு**
**மேகுவித் திற்றைநா ளிரவில்**
**தினகர னெழுமுன் செல்வமச் செல்வந்**
**திகழ்தரு நகர்க்கெனச் செப்பா.**

[முனிவர் ஆய் உள்ள தபோவனத்தவரை முடி உற தனி தனி வணங்கி, கனிவு உறும் அன்பால், ''என்று நான் உம்மைக் காண்பது?'' என்று அவர் மனம் களிப்ப இனியன உரைகள் பயிற்றி, யாவரையும் ஏகுவித்து, இற்றை நாள் இரவில் தினகரன் எழும் முன் செல்வம், அ செல்வம் திகழ் தரு நகர்க்கு என செப்பா,— அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** இனியன உரைகள் பயிற்றி - செவிக்கு இனிய உபசார வார்த்தைகளைக் கூறி. யாவரையும் ஏகுவித்து - முனிவர் அனைவருக்கும் விடை கொடுத்து அனுப்பிவிட்டு. இற்றை நாள் இரவில் - அதே இரவில். அந்தச் செல்வ விளக்கமுடைய விராட ராஜன் திருநகருக்குச் செல்வோம், என்று தருமன் கூறி,—தொட ரும். தினகரன் - சூரியன்.

## பாண்டவர் மச்சநாடு அடைதல்

**7. கல்கெழு குறும்புஞ் சாரலங் கிரியுங்**
**கடிகமழ் முல்லையும் புறவும்**
**மல்குநீர்ப் பண்ணை மருதமுங் கடந்து**
**வன்னியிற் பிறந்தமா மயிலும்**
**வில்கெழு தடக்கை யிளைஞருந் தானும்**
**விராடர்கோன் தனிக்குடை நிழலில்**
**பல்குல மாக்கள் வாழ்வுகூர் வளநா**
**டடைந்தனன் பாண்டவர் தலைவன்.**

[கல்கெழு குறும்பும், சாரல் அம் கிரியும், கடிகமழ் முல்லையும் புறவும், மல்கு நீர் பண்ணை மருதமும் கடந்து, வன்னியில் பிறந்த மா மயிலும், வில் கெழு தட கை இளைஞரும் தானும் விராடர் கோன் தனி குடை நிழலில் பல் குலம் மாக்கள் வாழ்வு கூர் வளம் நாடு அடைந்தனன் பாண்டவர் தலைவன்.]

**விளக்கம் :-** கல்கெழு குறும்பு - கற்கள் நிறைந்த காடு. சாரல் அம் கிரி - தாழ்வரைகள் பொருந்திய அழகிய மலை. முல்லை - முல்லை நிலம். புறவு - புஞ்செய்ப் பயிர் செய்யும் கொல்லை. மல்கு நீர் பண்ணை மருதம் - நீர்வளம் மிகுந்த வயல் களைக் கொண்ட மருத நிலம். ஆகிய நிலங்களைக் கடந்து, தருமன், தேவி தம்பியர்களோடு தானும், விராடனது ஒப்பற்ற குடை நிழலின்கண் பல குலங்களைச் சேர்ந்த மக்களும் இனிதே வாழ்கின்ற வளநாட்டை அடைந்தான், என்பதாம். பாண்டவர் தலைவன்-தருமன். கல் கெழு குறும்பு, என்பது பாலை நிலமாகும். வன்னி - அக்கினி. வன்னியில் பிறந்த மாமயில் - யாகத் தீயினின்று தோன்றிய திரௌபதி.

**8. தராதல முழுது முடையகோ மகனுந்**
**தம்பியர் நால்வருந் திருவும்**
**இராவிடை விரைவி னாறிடைக் கடந்தோ**
**ரெண்ணமு மிருக்கையும் வாய்ப்பக்**
**கராமுலா வருபைந் தடமும்வண் காவுங்**
**கனகவான் புரிசையுஞ் சூழ்ந்த**
**விராடன்மா நகரி யெல்லைபுக் கொருபான்**
**மயானபூ மியினிடை விரவா.**

[தராதலம் முழுதும் உடைய கோமகனும் தம்பியர் நால்வரும் திருவும், இராவிடை விரைவின் ஆறு இடை கடந்து, ஓர் எண்ண மும் இருக்கையும் வாய்ப்ப, கராம் உலாவரு பைந்தடமும் வண் காவும், கனகம் வான் புரிசையும் சூழ்ந்த விராடன் மா நகரி எல்லை புக்கு, ஒருபால் மயான பூமியினிடை விரவா, —அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** தராதலம் - பூமி. ஓர் எண்ணம் - யாரும் அறியாமல் ஓராண்டைக் கழிக்க வேண்டுமென்ற அந்த ஓர் எண்ணம். இருக்கை - ஏற்ற உறைவிடம். வாய்ப்ப - சித்திக்க, கிடைக்க, நிறைவேற. கரா உலாவரு பைந்தடம் - முதலைகள் சஞ்சரிக்கின்ற புதிய நீருடைய தடாகம். வண்கா - வளம்பொருந்திய சோலை. கனகவான் புரிசை - பொன்மயமான மதில். விராடனது நகரின் எல்லையில், ஒரு பகுதியான மயான பூமியை அடைந்து,—தொடரும். பாண்டவர் தேவியோடு,விராட நகரின் எல்லையில் புகுந்து தங்கள் எண்ணமும், அது நிறைவேறுவதற்கான இருப்பிடமும் சித்திக்கும் பொருட்டு, ஒரு பாலுள்ள மயானத்தை அணுகினர்,— என்க, வான் புரிசை - பெரிய மதில்.

**9. யாமள மறையால் யாவரும் பணிவா**
**ளெழுவகைத் தாயரி லொருத்தி**
**சாமள வடிவோ டந்நகர் வாழ்வாள்**
**சங்குதண் டங்கையிற் றரிப்பாள்**
**கோமள வல்லிக் கொடிநிகர் காளி**
**கோயிலின் முன்னரோர் வன்னி**
**நாமள விடுதற் கரியபல் கிளையா**
**னலம்பெறு பாதவ நண்ணா.**

[யாமளம் மறையால் யாவரும் பணிவாள், எழுவகை தாயரில் ஒருத்தி சாமளம் வடிவொடு அ நகர் வாழ்வாள், சங்கு தண்டு அம் கையில் தரிப்பாள், கோமளம் வல்லி கொடி நிகர் காளி கோயிலின் முன்னர் ஓர் வன்னி,நாம் அளவிடுதற்கு அரிய பல்கிளையால் நலம் பெறு பாதவம் நண்ணா,— தொடரும்.]

**விளக்கம் :-** யாமளம் - அதர்வண வேதத்தின் ஒரு பகுதி; காளி வழிபாட்டிற்கான தோத்திரங்களைக் கொண்டது. யாமள மறையால் யாவரும் பணிவாள் - யாமள மந்திரத்தால் எல்லோராலும் வணங்கப்படுபவள். எழுவகை தாயரில் ஒருத்தி - ஏழுவகைப்பட்ட தாய்மார்களில் ஒருத்தி. சாமளம்-கருமை, அல்லது கருநீலம். கோமளம்-அழகு. வல்லிக்கொடி - (ஒருபொருட் பன்மொழி) வல்லிக்கொடி போன்ற (காளி). (அப் பெருமாட்டியின் கோயிலுக்கு முன் இருந்த)அளவிடுதற்கு அரிய பல்கிளையால் நலம் பெறு வன்னி பாதவம் - மிகப் பலவான கிளைகளால் எழில் கொண்ட வன்னிமரம். அம் மரத்தைப் பாண்டவர், அடைந்து,— தொடரும். எழுவகைத் தாயர் - பராஹ்மீ, மஹேச்வரி, கௌளமாரி, வைஷ்ணவி, மாஹேந்திரீ, வராசி, மஹாகாளி, ஆயவர்.

**10. தத்தம படையுங் கவசமு மனைத்துந்**
**தனித்தனி யைவருந் தரித்த**
**மெய்த்திற லுடைய யாவுமத் தருவின்**
**கோடரத் தொளித்தொரு விரகால்**

**வைத்தன ராகி யாவரு முணரா**
**வகையரு மறைகளும் பயிற்றி**
**முத்தலை வடிவேற் காளியை வணங்கி**
**முன்னினார் புரிதொழின் முற்றும்.**

[தம் தம் படையும் கவசமும் அனைத்தும் தனிதனி ஐவரும் தரித்த மெய் திறல் உடைய யாவும் அ தருவின் கோடரத்து ஒளித்து, ஒரு விரகால் வைத்தனர் ஆகி, யாவரும் உணரா வகை அருமறைகளும் பயிற்றி, முத்தலை வடிவேல் காளியை வணங்கி, முன்னினர் புரிதொழில் முற்றும்.]

**விளக்கம் :-** ஐவரும் தனித்தனி பூண்டிருந்த தம் தம் ஆயுதங் களையும் கவசங்களையும், மற்றை ஆடை முதலிய பொருள்களை யும், – என்பது முதலடியின் பொருள். மெய்திறல் உடை யாவும்- உண்மையான சக்தியுடைய அட்சய பாத்திரம் முதலிய பொருள் களையும். தருவின் கோடரம் - வன்னிமரத்தின் பொந்து. ஒரு விரகால் ஒளித்து வைத்தனர் - தமது பொருள்கள் ஓராண்டு வரை கெடாதிருக்கும்படி ஒருபாயத்தால் செய்து ஒளித்து வைத்தனர். யாவரும் உணரா வண்ணம் மறைகளும் பயிற்றி - ஆயுதம் முதலிய வற்றை வன்னிமரத்தில் வைத்திருப்பதை எவரும் அறியாதிருக்கும் படி மந்திரத்தால் ரட்சை செய்து, (இவ்வாறு செய்து, காளிகா தேவியை வணங்கி) புரிதொழில் முற்றும் முன்னினார் - (இனித் தாம்) செய்ய வேண்டிய தொழில் முழுதையும் ஆலோசிப்பவரா யினர்.

**11. தம்பியர் வணங்கித் தனதுதா ளிணையிற்**
**றங்கவோர் தாபத வடிவும்**
**உம்பரும் வியப்பக் கங்கனென் றுரைக்கு**
**மொருதிரு நாமமுந் தரித்து**
**வெம்பரி தியினுஞ் செம்மைகூர் வடிவம்**
**வெண்புரி நூலொடு விளங்க**
**ஐம்புலன் மகிழச் சென்றுகண்டி றைவந்**
**தடிதொழ வாசியு முரைத்தான்.**

[தம்பியர் வணங்கி தனது தாள் இணையில் தங்க ஓர் தாபதம் வடிவும் உம்பரும் வியப்ப கங்கன் என்று உரைக்கும் ஒரு திரு நாம மும் தரித்து, வெம் பரிதியினும் செம்மை கூர் வடிவம் வெண் புரி நூலொடு விளங்க, ஐம்புலன் மகிழ சென்று கண்டு, இறை (வந்து) அடி தொழ ஆசியும் உரைத்தான்.]

**விளக்கம் :-** தம்பியர் தனது தாள் இணையில் வணங்கி நிற்க வும், தேவர்களும் வியக்கும்படி ஒரு துறவியின் உருவமும், கங்கன் என்று சொல்லப்படும் பெயரும் பூண்டு, வெம்மையுடைய சூரியனை காட்டிலும் தேசின் செம்மையுடைய உருவமானது வெள்ளிய பூணூலோடு பொலிய (விராடனது அவை சேர), விராடர் அரசன்

ஐம்புலன்களும் மகிழ எதிர் சென்று தொழ, துறவியும் ஆசிமொழி கூறினான்,—என்பது பொருள். வந்து: அசை. துறவி வேடங் கொண்ட தருமன் விராடன் அவை செல்ல, அவன் துறவியை மகிழ்ச்சியோடு வரவேற்று வணங்கினான், என்க.

விராடன் துறவியை ஏற்றல்

**12. யாரையா நீவி ரெங்குநின் றிவண்மற்**
**றெழுந்தரு ளியதென வினவப்**
**பாரையா ளுடைய வுதிட்டிரன் பாங்காய்ப்**
**பயின்றன னவன்பெரு வனத்தில்**
**சேருநா ளுடன்போய்த் திரிந்தன னின்பாற்**
**சில்பகல் வைகுமா றெண்ணி**
**வீரவார் கழலாய் வந்தனெ னென்றான்**
**வேள்வியாற் கேள்வியான் மிக்கோன்.**

*[யார் ஐயா நீவிர்? எங்கு நின்று இவண் (மற்று) எழுந்தருளியது? என வினவ, பாரை ஆளுடை உதிட்டிரன் பாங்காய் பயின்றனன், அவன் பெரு வனத்தில் சேரும் நாள் உடன் போய் திரிந்தனன், நின் பால் சில் பகல் வைகுமாறு எண்ணி, வீர வார் கழலாய் வந்தனென், என்றான், வேள்வியால் கேள்வியால் மிக்கோன்.]*

**விளக்கம் :-** ''நீவிர் யார் ஐயா, எங்கு நின்று இவண் எழுந்தருளியது?'' என்று விராடன் வினவ, வேள்வியாலும் கேள்வியாலும் சிறந்தவனான தருமன், ''வீர வார் கழலாய்!'' என்று விராடனை விளித்து, ''பூமி ஆளுதலை உடைய உதிட்டிரனுக்குத் தோழனாய்ப் பழகி வந்தேன்; அவன் பெரிய கானகம் அடைந்த நாள் அவனுடன் இருந்து திரிந்தேன், உன்னிடம் சில காலம் தங்குமாறு எண்ணி வந்தனென்'', என்றான்,—என்பது பொருள். மற்று: அசை. இச் செய்யுள் பொய்யில்லாமை தோன்றுமாறும் அமைந்துளது. ''உதிட்டிரன் என்பான் பாங்காய் (சௌக்கியமாய்) நாட்டில் இருந்தவன், காடு சேர நேர்ந்த காலத்தில் தம்பியருடன் காடு சென்று திரிந்தனன், அவன், இப்பொழுது உன்னிடம் சில காலம் தங்கியிருக்கும் எண்ணத்தில் (இவண்) வந்தான்,'' என்ற பொருளையும் செய்யுள் தரவல்லது.

**13. மன்முனி மொழிந்த வாய்மைகேட் டந்த**
**மனுகுல மன்னனு மகிழ்ந்து**
**தன்மன நெகிழ்ந்த நெகிழ்ச்சியு முணர்வுந்**
**தகைமையு முவகையிற் றோன்ற**
**என்மனை வயினின் றெய்திய பயன்யா**
**னேழெழு பிறப்பினும் புரிந்த**
**நன்மையின் விளைவே வேண்டுநா ளீண்டு**
**நண்ணிதி ரெனநனி நவின்றான்.**

[மன் முனி மொழிந்த வாயமை கேட்டு அந்த மனுகுல மன்ன னும் மகிழ்ந்து, தன் மனம் நெகிழ்ச்சியும் நெகிழ்ந்த உணர்வும் தகைமையும் உவகையில் தோன்ற, என் மனையின் இன்று எய்திய பயன் யான் ஏழ் எழு பிறப்பினும் புரிந்த நன்மையின் விளைவே; வேண்டும் நாள் ஈண்டு நண்ணுதிர் என நனி நவின்றான்.]

**விளக்கம் :-** மன் முனி - குருநாட்டு மன்னனாகிய முனி, (தருமன்). வாய்மை - வாய்மொழி. மனுகுல மன்னன் -விராடன். மனம் நெகிழ்ந்த நெகிழ்ச்சி - முனிவன் விஷயத்தில் விராடன் மனம் இளகலுற்ற நல்ல நிலை. உணர்ச்சி - நல்ல எண்ணம். தகைமை- அன்பின் தன்மை. உவகையில் தோன்ற - மன இளக்கம், மதிப்பு, அன்பு ஆகியவை விராடன் கொண்ட மகிழ்ச்சியில் தோற்றமளிக்க. ''இன்று நீ என் மனை வந்தெய்தியதாகிய விளைவு, நான் எழுவகைப்பட்டதான பிறப்புக்களிலும் புரிந்த நல்வினைகளின் பயனே ஆகவேண்டும், இங்கே நீ வசித்தற்கு விரும்புங்காலம் வசித்தருள்க'', என்று விராட மன்னன் இனிதே கூறினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். அகத்தினழகு முகத்தில் தோன்றும் என்பதற்கு ஏற்ப விராடன் கொண்ட முக மலர்ச்சியில், மன நெகிழ்ச்சியும், மதிப்புணர்ச்சியும், அன்பின் தன்மையும் தோன்றின என்க. ஒருயிரின் புண்ய பாவங்களுக்கு ஏற்ப உண்டாகும், ஏழு வகைப்பட்ட ஏழு பிறவிகள்.

மன்னன் மற்றவரையும் ஏற்றல்

**14. தண்டினுக் கொருவன் புயவலிக் கொருவன்**
**றனுவினுக் கொருவனென் றுரைக்கும்**
**திண்டிறற் பவன குமரனுஞ் சின்னாள்**
**சென்றபின் றெள்ளமு தனைய**
**உண்டியைக் குறித்துக் கற்றதன் கல்வி**
**யுரிமையைக் குறித்தடு தொழிற்கு**
**மண்டலத் தரசே யொருவன்யான் வீமன்**
**மடையனென் றரசவை வந்தான்.**

[தண்டினுக்கு ஒருவன், புயவலிக்கு ஒருவன் தனுவினுக்கு ஒருவன் என்று உரைக்கும் திண்திறல் பவனகுமரனும், சில நாள் சென்றபின், தெள் அமுது அனைய உண்டியை குறித்து கற்ற தன் கல்வி உரிமையை குறித்து அடு தொழிற்கு, மண்டலத்து அரசே, ஒருவன் யான், வீமன் மடையன், என்று அரசு அவை வந்தான்.]

**விளக்கம் :-** புயவலியோடு கதைக்கும் வில்லுக்கும் ஒருவன் என்று உலகம் பேசும் வலிய வாயு குமாரன் தருமன் அரசனை அடைந்து சில நாள் சென்றபின், சிறந்த அமுதம் அனைய உணவு களைப் பாகம் செய்வதில் தனக்குரிய கல்வி திறமையைத் தெரி வித்துக்கொண்டு அவை சேர்ந்து, ''மண்டலாதி பதியே, சமயல்

தொழிலில் நிகரில்லாதவன், வீமராஜனது சமையற்காரன்,'' என்று தன்னைத் தெரிவித்துக்கொண்டு, அரசனது அவை வந்தான், என்பது பொருள். குறித்து, என்பது, 'விஷயமாகக் கொண்டு,' என்ற பொருளிலும், 'குறிப்பித்து' (தெரிவித்து) என்ற பொருளிலும் வந்துளது. அடு தொழில் - சமைக்கும் தொழில். மடையன் - சமையற்காரன். வீமன் மடையன் - வீமனது சமையற்காரன். வீமனாகிய சமயற்காரன் என்ற பொருளையும் இத்தொடர் தரும்.

**15. வந்துதன் றம்முன் மலரடி முன்னி**
**மலர்க்கையான் முடியின்மேல் வணங்கி**
**ஐந்துபல் வகையிற் கறிகளும் வெவ்வே**
**றறுசுவை மாறுமா றமைப்பேன்**
**வெந்திறன் மல்லும் புரிதொழி லுடையேன்**
**விருதுடைப் பலாயன னென்பேர்**
**இந்திர னுலகு தன்னிலு மெண்ணி**
**லென்றொழிற் கெதிரிலை யென்றான்.**

*[வந்து தன் தம்முன் மலர் அடி முன்னி மலர் கையால் முடியின் மேல் வணங்கி, ஐந்து பல் வகையில் கறிகளும் வேவ்வேறு அறு சுவை மாறுமாறு அமைப்பேன்; வெந்திறல் மல்லும் புரி தொழில் உடையேன், விருதுடை பலாயனன் என் பேர், இந்திரன் உலகு தன்னிலும் எண்ணில் என் தொழிற்கு எதிர் இலை, என்றான்.]*

**விளக்கம்** :- அவை வந்து, தன் தமயனது மலர் அடியை தியானித்து விராடனை இரு கை கூப்பி வணங்கி, என்பது முதலடியின் பொருள். பலவிதமான கறிகளையும் ஐந்து வகையில், ஆறு சுவைகளும் வேறு வேறாக மாறும்படி சமைப்பேன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வெந்திறல் மற்போரும் செய்யும் தொழில் உடையேன், விருதுடை (புகழ் பெற்ற) பலாயனன், என்பது என் பேர், தேவர் உலகிலும் எண்ணுங்கால் எனன்னுடைய தொழிலில் எனக்கு ஒப்பாவார் இல்லை, என்றான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். ஐவகை கறி,—உண்பன, கடிப்பன, குடிப்பன, மெல்லுவன, நக்குவன. அறுசுவை,—கைப்பு, புளிப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு. தன்னை அறியாதாரிடம் தம் மேம்பாடு உரைத்தல், அமைவதே. வீமனை, முதல் நூல் வல்லன், என்று கூறும்.

**16. என்றபோ தவனை விராடனு மகிழ்வுற்**
**றிருகையுஞ் சென்னிமே லிருத்திப்**
**பொன்றிகழ் மணிப்பூண் மென்றுகில் பலவும்**
**புரவிபோ தகங்களும் வழங்கி**

**இன்றுதொட் டெமக்கு மெய்ப்பெருஞ் சுற்றத்**
**தொருவனீ யென்றடு தொழிற்கு**
**நின்றவ ரெவர்க்குந் தலைவனா முரிமை**
**நிலைபெற வழங்கினன் மாதோ.**

[என்ற போது அவனை விராடனும் மகிழ்வு உற்று, இருகையும் (அவன்) சென்னிமேல் இருத்தி, பொன் திகழ் மணி பூண், மென்துகில் பலவும், புரவி போதகங்களும் வழங்கி, இன்று தொட்டு எமக்கு மெய் பெருஞ் சுற்றத்து ஒருவன் நீ என்று, அடு தொழிற்கு நின்றவர் எவர்க்கும் தலைவன் ஆம் உரிமை நிலைபெற வழங்கினன் மாதோ.]

**விளக்கம் :-** என் தொழில் யாவரும் எனக்கு எதிரில்லை என்று சொன்னபோது, விராடன் மகிழ்ச்சியுடன், அவன் (வீமன்) தலையில் இருகையும் வைத்து,—என்பது முதலடியின் பொருள். சென்னிமேல் கைவத்தது, வீமனை ஏற்றுக்கொண்டதற்கு அடையாளம். விளங்குகின்ற பொன்னாலும் நவரத்தினங்களாலும் ஆன பலவகை ஆபரணங்களையும், குதிரைகளையும் யானைக் கன்றுகளையும் அவனுக்கு அளித்து, ''இன்று முதல் எம்பெருஞ் சுற்றத்தாரில் ஒருவன்நீ,'' என்று கூறி, சமையல் தொழில் செய்பவர்க்கெல்லாம் தலைமை பூணும் உரிமையும் நிலையாக இருக்கும்படி வழங்கினான்,—என்பது மற்ற அடிகளின் பொருள். வீமனையும் விராட மன்னன் ஏற்றுக்கொண்டான்,—என்க. மாதோ : ஈற்றசை.

**17. நீடிய சிலைக்கைத் தேவர்கோன் மதலை**
**திருத்தநல் லரங்கினின் முன்னாள்**
**வாடிய மருங்குல் பணைத்தபூண் கொங்கை**
**வாட்டடங் கண்கள்வார் குழைமேல்**
**ஓடிய வதனத் துருப்பசி பணியா**
**லுறுவதற் கோரியாண் டமைந்த**
**பேடியின் வடிவந் தரித்தன னாண்மைக்**
**கிமையவ ரெவரினும் பெரியோன்.**

[நீடிய சிலை கை தேவர் கோன் மதலை, திருத்தம் நல் அரங்கினில் முன் நாள், வாடிய மருங்குல் பணைத்த பூண் கொங்கை, வாள் தடம் கண்கள், வார் குழைமேல் ஓடிய வதனத்து உருப்பசி பணியால் உறுவதற்கு ஓர் யாண்டு அமைந்த பேடியின் வடிவம் தரித்தனன், ஆண்மைக்கு இமையவர் எவரினும் பெரியோன்.]

**விளக்கம் :-** நீடிய சிலைக்கை தேவர்கோன் மதலை, ஆண்மைக்குத் தேவர் எவரினும் பெரியோனான விசயன்,—திருத்தமாக அமைந்த ஆடரங்கினில் முன் நாள் (ஆடித் தனது பாராட்டைப் பெற்ற)...ஊர்வசியின் பணியால் (சாபத்தால்) ஓராண்டு காலம் வந்து பொருந்துவதற்கு இருந்த பேடியின் வடிவத்தை மேற்கொண்

டான்,—என்பதாம். ஆண்மையில் தேவரின் மிக்கோன் பேடி வடிவங்கொண்டான், என்று வியப்புத் தோன்றக் கூறியது நயமுடையது.

**18.** **வாயுவின் மதலை சென்றுகண் டதற்பின்**
**மற்றைநா ளொற்றைவெண் கவிகைச்**
**சேயொளி மகுடச் சென்னியா னிருந்த**
**பேரவை சிறப்புறச் சென்று**
**தூயவெண் புரிநூன் முனிதிருக் கழலி**
**லொருபுடை தோய்தரத் தலைசாய்த்(து)**
**ஏயவெஞ் சிலைக்கை யருச்சுனன் கோயி**
**லிருப்பதோர் பேடிநா னென்றான்.**

[வாயுவின் மதலை சென்று கண்டதன் பின், மற்றை நாள் ஒற்றை வெண் கவிகை சேய் ஒளிமகுடம் சென்னியான் இருந்த பேர் அவை சிறப்பு உற சென்று, தூய வெள் புரி நூல் முனி திரு கழலில் ஒரு புடை தோய்தர தலை சாய்த்து, ஏய வெம் சிலை கை அருச்சுனன் கோயில் இருப்பது ஓர் பேடி நான் என்றான்.]

**விளக்கம் :-** வீமன் சென்று மடைத்தொழிலில் அமர்ந்த பின், மறுநாள், கிரீடாதிபதியான விராடனது பெரிய சபை சிறப்புறும்படி சென்று, தூய வெள்ளிய பூணூல் அணிந்த (தருமனாகிய) முனிவனது பாதங்களின் ஒருபுறத்தில் தோயும்படி தலைசாய்த்து வணங்கி, (அரசனைப் பார்த்து) ''எய்வதற்குரிய வில்லை ஏந்திய கையினனான அருச்சுனனின் திருமாளிகையில் இருத்தலை உடைய ஒரு பேடி நான்'', என்று தன்னைத் தெரிவித்துக்கொண்டான், என்பதாம். இப்போது அரச மாளிகையில் தங்கியிருப்பதற்குரிய ஒரு பேடி வடிவம் கொண்டவன் நான், என்ற பொருளையும் தரவல்லது ஈற்றடி.

**19.** **நாதமு மியலு மேதகு நடநூ**
**னவிறரு மரங்கினுக் குரியேன்**
**பேதையர் தமக்கு நடம்பயிற் றுவிப்பேன்**
**பெயர்பிரு கந்நளை யென்ப(து)**
**ஆதிப நினது செல்வமா நகரி**
**லிருப்பதற் கெண்ணிவந் தடைந்தேன்**
**வேதமு முலகு முள்ளநா ளளவும்**
**விளங்குக நின்மர பென்றான்.**

[நாதமும் இயலும் மேதகு நடம் நூல் நவில்தரும் அரங்கினுக்கு உரியேன், பேதையர் தமக்கு நடம் பயிற்றுவிப்பேன்; பெயர் பிருகந்நளை என்பது, ஆதிப, நினது செல்வம் மாநகரில் இருப்பதற்கு எண்ணி வந்து அடைந்தேன்; வேதமும் உலகும் உள்ள நாள் அளவும் விளங்குக நின் மரபு என்றான்.]

**விளக்கம் :-** ஒலியின் பிராதான்யத்தை உடைய இசையும், பாடலும் மேன்மையுறுகின்ற நடனநூல் கூறும் விதம் அமைந்த ஆடரங்கினுக்கு உரியேன், அதாவது நடனம் ஆடுதற்குரியேன்,— என்பது முதலடியின் பொருள். இளம்பெண்களுக்கு நடனம் பயிற்றுவிக்கும் திறம் உடையேன், பிருகந்நளை என்பது என் பெயர்,-என்பது இரண்டாவது அடியின் பொருள். அதிபனே,உனது நகரில் வசிக்க எண்ணி, இவண் வந்தேன்; வேதமும் இவ்வுலகமும் உள்ள வரையில் உனது குலம் சிறப்புற்று விளங்குவதாக,—என்பது ஈற்றடிகளின் பொருள். நடனக் கலைக்கு அவசியமான இசையும் பாடலும், அக் கலையால் மேன்மை அடைவதால், ''நாதமும் இயலும் மேதகு நடம்'' எனப்பட்டது.

**20. வித்தக னெனவெக் கலைகளும் பயின்ற**
**விராடனும் பேடிதன் மொழிகேட்(டு)**
**இத்திற முடையார் வேலைசூ ழுலகி**
**னில்லையென் றினிதுரைத் தருளி**
**அத்தக வுடையாண் மகிழ்வுறக் கலனு**
**மாடையு வேண்டுவ வழங்கி**
**உத்தரை தனக்குப் பாங்கிநீ யென்றாங்**
**குரியதன் மகளுழை விடுத்தான்.**

*[வித்தகன் என எ கலைகளும் பயின்ற விராடனும் பேடி தன் மொழிகேட்டு, இ திறம் உடையார் வேலை சூழ் உலகில் இல்லை என்று இனிது உரைத்தருளி, அ தகவு (திறமை) உடையாள் மகிழ்வு உற கலனும் ஆடையும் வேண்டுவ வழங்கி, ''உத்தரை தனக்கு பாங்கி நீ'', என்று ஆங்கு உரிய தன் மகளுழை விடுத் தான்.]*

**விளக்கம் :-** வித்தகன் என்று எல்லோராலும் பாராட்டப் படும்படி எல்லாக் கலைகளையும் நன்கு கற்ற விராடன், பேடியைத் தன் மகள் உத்தரையின் தோழியாக ஏற்றான், என்பதாம். வேலை சூழ் உலகில் இத்திறம் இல்லை யென்றதால், அவன் பேடியைப் பரிட்சித்தான், என்பது ஏற்படுகின்றது. ஆடையும் அணிகலன்களும் அளித்தது, பேடியின் ஆடல்திறமையைக் கண்டு மகிழ்ந்ததின் பயன், என்க. வேண்டுவ வழங்கினான் - அவள் விரும்பியவற்றை எல்லாம் வழங்கினான், உரியதன் மகள் - பெற்ற தால் தனக்கு உரியளான மகள்.

**21. பின்னருஞ் சின்னா ளகன்றபி னகுலன்**
**பேரழ கினுக்குவே ளனையான்**
**மின்னுடை வடிவேல் வேந்தர்கோன் விராடன்**
**வெம்பரி யேறுமுன் றிலின்வாய்**
**மன்னிய தொழில்கூர் கம்பியுங் கயிறு**
**மத்திகை யுடன்கரத் தேந்தி**
**உன்னய முதலாம் புரவிநூ லறிவோ**
**னுளநிகழ் தருக்கொடு சென்றான்.**

[பின்னரும் சில நாள் அகன்ற பின் நகுலன், பேர் அழகினுக்கு வேள் அனையான், மின் உடை வடிவேல் வேந்தர்கோன் விராடன் வெம்பரி ஏறும் முன்றிலின் வாய், மன்னிய தொழில் கூர் கம்பியும் கயிறும் மத்திகையுடன் கரத்து ஏந்தி, உன்னயம் முதல் ஆம் புரவி நூல் அறிவோன், உளம் நிகழ் தருக்கொடு சென்றான்.]

**விளக்கம் :-** அருச்சுனன் இராஜக் கிரகம் சேர்ந்து சில நாட்கள் கழிந்தபின், மன்மதனை ஒத்த அழகினனான நகுலன், அச்வ சாத்திர நிபுணத்துவத்தால் உளம் எழும் செருக்குடன், குதிரை நடத்துவதற்கான மத்திகையுடன் (சாட்டையுடன்) கடிவாளமும் கயிறும் கையிற் கொண்டு அரசனது குதிரை லாயம் சென்றான்—என்பது பொருள். வெம்பரி ஏறும் முன்றில் - அரசனது குதிரை லாயம். மன்னிய தொழில் கூர் - தொழிலோடு சிறந்து பொருந்திய, அல்லது தொழிலிற்கு ஏற்ற. உன்னயம் - அசுவசாத்திர நூல்களில் ஒன்று.

**22. சென்றவன் றன்மேற் புரவிமே லிருந்தோன்**
**செழுந்தடங் கண்மலர் பரப்பி**
**வன்றொழிற் புரவி வான்றொழிற் குரியோ**
**யெவ்வயி னின்றுவந் தனைநீ**
**என்றலு மவனு மியம்பினன் விசயற்**
**கிளையவ னகுலனென் றெல்லாக்**
**குன்றினுந் தன்பே ரெழுதினோ னவன்றன்**
**கொற்றம்யார் கூறுதற் குரியார்.**

[சென்றவன் தன் மேல், புரவிமேல் இருந்தோன் செழும் தட கண் மலர் பரப்பி, ''வன் தொழின் புரவி வான் தொழிற்கு, உரியோய். எவ்வயின் நின்று வந்தனை நீ?'' என்றலும், அவனும் இயம்பினன், விசயற்கு இளையவன், நகுலன் என்று எல்லாக் குன்றினும் தன்பேர் எழுதினோன்; அவன் தன் கொற்றம் யார் கூறுதற்கு உரியார்?]

**விளக்கம் :-** பரித்தொழிலுக்குரிய சின்னங்களோடு அரசனது லாயம் சென்றவன்மேல், குதிரை மேல் இருந்த விராடன் கண்களைப் பரப்பி, (அதாவது பார்த்து) ''வலிய தொழிலாகிய குதிரை நடத்தும் தொழிலுக்கு உரியவனே, எங்கிருந்து வந்தாய் நீ?'' என்று வினவலும், ''அருச்சுனனுக்கு இளையவனாகிய, நகுலன் என்று பிரசித்தி பெற்றவன் ஒருவன் இருக்கின்றான்; அவனது வெற்றியைக் கூறுதற்கு உரியர் யார் உளர்?'' என்று அவனும் பதில் மொழிந்தான்,—என்பது பொருள். குன்றின் மேல் தன் பெயர் எழுதினான், என்றது, பிரசித்தி மிகப் பெற்றவன், என்ற பொருளது.

**23. மற்றவன் றனது வாசிமந் துரைக்குத்**
**தலைவராய் வாழுமாக் களில்யான்**
**உற்றவ னொருவன் வாம்பரி வடிவு**
**முரைதகு சுழிகளு மொளியும்**

**பற்றிய நிறனுங் கந்தமும் குரலும்**
**பல்வகைக் கதிகளும் பிறந்த**
**சொற்றகு நிலனு மாயுவு முணர்வேன்**
**றுயருறு பிணிகளுந் தவிர்ப்பேன்.**

[மற்று, அவன் தனது வாசிமந்துரைக்கு தலைவராய் வாழும் மாக்களில், யான் உற்றவன் ஒருவன்; வாம்பரி வடிவும், உரைதகு சுழிகளும், ஒளியும், பற்றிய நிறனும், கந்தமும், குரலும், பல்வகை கதிகளும், பிறந்த சொல் தகு நிலனும். ஆய்வும் உணர்வேன்; துயர் உறு பிணிகளும் தவிர்ப்பேன்.]

**விளக்கம் :-** வாசிமந்துரை - குதிரை கட்டும் லாயம். உற்ற வன் ஒருவன் - லாயத் தலைவர்களில் சேர்ந்தவனாகிய ஒருவன். வாம்பரி வடிவு - தாவும் குதிரைகளின் தோற்றம் (உருவம்). உரைதகு சுழிகள் - சிறப்பித்துப் பேசத் தகுந்த சுழிகள். ஒளி - தேசு. பற்றிய நிறன் - பொருந்திய நிறம். கந்தம் - உடலின் மணம். பலவகை கதி - பல திறப்பட்ட நடை. சொல் தகு நிலன் - (பிறந்த) சிறப்பித்துச் சொல்லப்படும் பூமி (நாடு). ஆயு - ஆயுள் காலம். துயர் உறு பிணி - துன்பத்தை மிகுதியாகத் தரும் நோய்கள். குதிரைத் தொழிலில் தனக்குரிய புலமையையும், நோய் தீர்க்கும் திறமையையுங் கூறினான், என்க.

**24. மண்டலம் வீதி கோணமே முதலாம்**
**வாசிக ளூர்தொழில் வல்லேன்**
**திண்டிறற் றடந்தேர் பூண்பதற் குரிய**
**செயலுடைப் பரிகளுந் தெரிவேன்**
**வண்டிமி ரலங்கன் மாலையாய் பாண்டு**
**மைந்தர்போய் வனம்புகுந் ததற்பின்**
**உண்டியு மிழந்தே னுறுதியு மிழந்தே**
**னுன்புகழ் கேட்டுவந் துற்றேன்.**

[மண்டலம் வீதி கோணம் (ஏ) முதல் ஆம் வாசிகள் ஊர் தொழில் வல்லேன், திண்திறல் தட தேர் பூண்பதற்கு உரிய செயல் உடை பரிகளும் தெரிவேன்; வண்டு இமிர் அலங்கல் மாலையாய், பாண்டு மைந்தர் போய் வனம் புகுந்ததன் பின் உண்டியும் இழந் தேன், உறுதியும் இழந்தேன், உன் புகழ் கேட்டு வந்து உற்றேன்.]

**விளக்கம் :-** வட்டமாகவும் நேராகவும், வளைந்தும் செல்லல் முதலாகிய வாசிகளை (குதிரைகளை) நன்றாகச் செலுத்துகின்ற தொழிலில் வல்லவன்.—என்பது முதலடியின் பொருள். வலிய பெரிய தேர்களில் பூட்டுதற்குரிய தன்மை அல்லது சக்தி உடைய குதிரைகளைத் தேர்ந்து அறிய வல்லவன், என்பது இரண்டாவது அடியின் பொருள். அலங்கல் மாலை - (வண்டுகள் ஒலிக்கும்) அசையுந் தன்மையுடைய மாலை, அல்லது ஒரு பொருட்

பன்மொழி. பாண்டுவின் மைந்தர்களான பாண்டவர் வனம் சேர்ந்த பின், உணவோடு மனவுறுதியையும் இழந்த நான், உனது புகழைக் கேட்டு இங்கே வந்தேன், என்றான்,—என்பதாம். குதிரைகளில் சில ஏறி நடத்துவதற்கும், சில தேரில் பூட்டுவதற் கும் ஏற்றனவாகும், என்பது காண்க.

**25.** **என்னவப் புரவி யேறுநா யகன்**
**வந்தியம்பிய வின்மொழி கேட்டு**
**மன்னவர்க் கெல்லா மொதுங்குநீ ணிழலாய்**
**மும்மடங் காகவே வழங்கி**
**முன்னவர்க் குள்ள வரிசைகள் யாவும்**
**வயங்குமா மதிக்குடை மன்னன்**
**அந்நகர்த் துரங்க மவையனைத் தினுக்கு**
**மதிபதி யெனும்பதங் கொடுத்தான்.**

[என்ன அ புரவி ஏறு நாயகன் வந்து இயம்பிய இன்மொழி கேட்டு, மன்னவர்க்கு எல்லாம் ஒதுங்கும் நீள் நிழலாய் வயங்கும் மா மதி குடை மன்னன், முன்னவர்க்கு உள்ள வரிசைகள் யாவும் மும்மடங்கு ஆக (ஏ) வழங்கி, அ நகர் துரங்கம் அவை அனைத்தி னுக்கும் அதிபதி எனும் பதம் கொடுத்தான்.]

**விளக்கம் :-** புரவி ஏறு - சிறந்த குதிரை. நாயகன்-தலைவன். மன்னவர்களுக்கு எல்லாம் உற்றவிடத்து வந்து ஒதுங்குவதற்கு உரிய நீண்ட நிழலை உடையதாய் விளங்கும் சிறந்த சந்திரன் போன்ற குடையை உடைய மன்னனான விராடன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். முன்னமேயே குதிரை நாயகர் களாக இருப்பவர்க்கு உரிய சிறப்புக்களை எல்லாம் மும்மடங்காக அளித்து, அந்நகரத்துத் துரங்கங்கள் (குதிரைகள்) அனைத்திற்கும் தலைவன் என்ற பதவியையும் வழங்கினான்,—என்பது, ஈற்றடி களின் பொருள்,

**26.** **கிளைபடு புரவி புரந்திடுந் தாமக்**
**கிரந்தியாம் பெயர்புனை நகுலற்(கு)**
**இளையவ னந்த கோபன்மைந் தனைப்போ**
**லிடையர்தங் கோலம தெய்தித்**
**துளைபடு குழையி லொருகுழை யணிந்து**
**தோளிலோர் தொடித்தடி தழுவி**
**விளைபுகழ் விராடன் வேத்தவை யதனை**
**வேறொரு நாளையி னடைந்தான்.**

[கிளைபடு புரவி புரந்திடும் தாமகிரந்தி ஆம் பெயர் புனை நகுலற்கு இளையவன், நந்தகோபன் மைந்தனைப்போல், இடையர் தம் கோலம் அது எய்தி, துளைபடு குழையில் ஒரு குழை அணிந்து, தோளில் ஓர் தொடிதடி தழுவி, விளை புகழ் விராடன் வேத்தவை (வேந்து - அவை) அதனை வேறு ஒரு நாளையின் அடைந்தான்.]

**விளக்கம் :-** கிளைபடு புரவி - பலதிறப்பட்ட சாதிப் பகுப்புடைய குதிரை. புரத்தல் - பரிபாலித்தல். தாமக்கிரந்தி - நகுலன் பூண்ட பெயர். அவனுக்கு இளையவனான சகாதேவன், நந்த கோபன் மகனான கண்ணனைப்போல் இடையர் வேடம் கொண்டு, துளை உடைய ஒரு காதில் குழை என்னும் காதணி அணிந்து, தோளில் ஒரு வளைதடி தாங்கி, (நகுலன் வந்ததன் பின்) மற்றோர் தினம் அரசவை வந்தடைந்தான்.—என்பதாம், குழை - காது, காதணியான குண்டலம்.

**27. ஆர்கொனீ யென்ன வறன்மக னுடனோ**
**ராசனத் திருந்தபூ பதியைச்**
**சீருற வேறோர் விரகினால் வணங்கிச்**
**செப்பின னன்னசா தேவன்**
**பார்கொள நினைந்து சுயோதனன் விடுப்பப்**
**படர்வனம் புகுந்தபாண் டவரில்**
**தார்கொள்வே லிளையோன் றனதுகோ பாலன்**
**றந்திரி பாலன்யா னென்றான்.**

['ஆர் கொல் நீ', என்ன, அறன் மகனுடன், ஓர் ஆசனத்து இருந்த பூபதியை, சீர் உற வேறு ஓர் விரகினால் வணங்கி, செப்பினன் அன்ன சாதேவன், பார்கொள நினைந்து சுயோதனன் விடுப்ப, படர் வனம் புகுந்த பாண்டவரில் தார் கொள் வேல் இளையோன் தனது கோபாலன், தந்திரிபாலன் யான் என்றான்.]

**விளக்கம் :-** (தன் அவை வந்த) அந்த சகாதேவனை, நீ யார், என்று (விராடன்) கேட்க, தமையனான தருமனுடன் ஓர் ஆசனத்து இருந்த அரசனை வேறோர் உபாயத்தினால் சீர் உற வணங்கி, கூறுவானாயினான்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். தார் கொள் வேல் இளையோன் - மாலை அணிந்த வேல் தாங்கிய சகாதேவன். கோபாலன் - பசுக்களைக் காப்பவன். தந்திரிபாலன் - சகாதேவன் புனைந்துகொண்ட பெயர். வேறொரு விரகினால் சீருற வணங்கி, என்றது, அரசனை வணங்குவதுபோல் முனி வேடங்கொண்ட தருமனைத் தந்திரமாய் வணங்கினான், என்ற பொருளது. யார், என்று வினவிய அரசனுக்கு இடைய வேடம் கொண்ட சகாதேவன், தன்னை, ஆ நிரை காக்கும் கோபாலன், என்று தெரிவித்துக்கொண்டான், என்க.

**28. ஆங்கவ னிவ்வா றுரைத்தலு மவனை**
**யருகுற வருகென வழைத்துப்**
**பாங்குறத் தக்க வழக்கமும் வழங்கிப்**
**பல்வகை நிரைகளு நீயே**

**ஈங்குமப் படியே புரத்தியென் றுரைத்தா**
**னிவனுமவ் வரசனே வலினால்**
**தீங்கறக் கைக்கொண் டவ்வவர்க் கெல்லாந்**
**தகைபெறுஞ் செம்மலா யினனே.**

[ஆங்கு அவன் இ ஆறு உரைத்தலும், அவனை அருகு உற வருகென (வருக-என) அழைத்து, பாங்கு உற தக்க வழக்கமும் வழங்கி, பல் வகை நிரைகளும் நீயே ஈங்கும் அப்படியே புரத்தி என்று உரைத்தான்; இவனும் அ அரசன் ஏவலினால் தீங்கு அற கைக்கொண்டு, அ அவர்க்கு எல்லாம் தகை பெறும் செம்மல் ஆயினான்.]

**விளக்கம் :-** அருகுற வருகென அழைத்து - தன்னருகே வருமாறு அழைத்து. பாங்குறத் தக்க வழக்கம் - தகுதி பொருந்தத் தக்கதான முறையில் வரிசைகள். நிரை - பசுக்கூட்டம். தீங்கற கைக்கொண்டு - இனிதே (நிரை காத்தல்) தொழிலை ஏற்று. அவ் வவர்க்கெல்லாம் தகைபெறு செம்மல் ஆயினான் - முன்னரே இத் தொழிலை மேற்கொண்டிருந்த கோபாலர்களுக்கு எல்லாம் பெருமை பொருந்திய தலைவன் ஆனான். அரசன், தந்திரிபாலன் என்ற பெயரில் தன் அவை வந்த சகாதேவனை,வரிசைகள் வழங்கி இடையர் தலைவனாய் இருக்கச் செய்தான்,—என்பதாம்.

## கலிவிருத்தம்

### திரௌபதி வண்ணமகளாய் வரல்

**29. ஓமமக வாரழலி னூடுருவு யிர்க்கும்**
**மாமயிறி ரௌபதியும் வண்ணமக ளாகித்**
**தேமருவு தார்முடிவி ராடனிரு தோள்சேர்**
**கோமகளை நாடியவள் கோயிலிடை புக்காள்.**

[ஓமம் மகம் ஆர் அழலினூடு உரு உயிர்க்கும் மா மயில் திரௌபதியும் வண்ணம் மகள் ஆகி, தேன் மருவு தார் முடி விராடன் இரு தோள் சேர் கோமகளை நாடி, அவள் கோயிலிடைப் புக்காள்,]

**விளக்கம் :-** ஓமம் செய்த வேள்வியில் பொருந்திய தீயிலே உருவங்கொண்டு தோன்றிய,—என்பது முதலடியின் பொருள். தே மருவு தார் முடி விராடன் - தேன் பொருந்திய மாலை அணிந்த கிரீடத்தையுடைய விராடன். அவனது தேவியை நாடி, திரௌபதி அவளது அரண்மனையை அடைந்தாள்,—என்பதாம். அரசமாதேவி **சுதேட்டிணை**, என்ற பெயரினள். வண்ண மகள் - மகளிர்க்கு அலங்காரம் செய்தலை மேற்கொண்ட பணிப்பெண்.

**30. மதுமலரின் வாழ்திருவும் வந்துதொழ வுரியாள்**
**நொதுமலின ளாகியொரு நுண்ணிடைந டந்தாள்**
**பதுமவிழி யாயெனலும் வாயிலவர் பால்போல்**
**மதுரமொழி யாளழைமின் வாணுதலை யென்றாள்.**

[மது மலரின் வாழ் திருவும் வந்து தொழ உரியாள், நொதுமலினள் ஆகி ஒரு நுண் இடை நடந்தாள், பதுமம் விழியாய், என்லும் வாயிலவர்; பால்போல் மதுரம் மொழியாள், அழைமின் வாள் நுதலை, என்றாள்.]

**விளக்கம் :-** வாயில் காவலர், ''பதும விழியாய், மதுமலரின் வாழ்திருவும்...நடந்தாள் எனலும், பால்போல் மதுர மொழியாள் வாள் நுதலை அழைமின், என்றாள், என்பது அன்வயம். தேனைக் கொண்ட தாமரை மலரில் வாழும் இலக்குமியும் வந்து வணங்குதற் குரிய அழகை உடையவள்,—என்பது முதலடியின் பொருள். ஒரு நுண் இடையாள், யாருமில்லாத ஏழைப் பெண்ணைப்போல் உன் தலைவாயில் வந்துள்ளாள்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். பதும விழியாய் - தாமரை மலர் போன்ற கண்களை உடைய அரசியே. மதுர மொழியாள் - (பால் போன்ற) இனிய மொழி பேசும் அரசி. வாள் நுதல் - வண்ணப் பெண்ணாக வந்துள்ள திரௌபதி. வண்ண மகளாய் வாயில் வந்த திரௌபதியை அரசமாதேவி, அழைத்து வருமாறு ஏவினாள்,—என்க. நொதுமலினள் - சாதாரணப் பெண்.

**31. வந்தவளி ருந்தவண்ம ருங்கணையும் வேலை**
**அந்தணுப சாரமுட னருகுறவி ருத்திச்**
**சந்தொடகில் பூவிலைக டகவு டன்வ ழங்கி**
**எந்தநக ரீருரைமின் யாமுணர வென்றாள்.**

[வந்தவள் இருந்தவள் மருங்கு அணையும் வேலை, அம் தண் உபசாரமுடன் அருகு உற இருத்தி, சந்தொடு அகில் பூ இலைகள் தகவுடன் வழங்கி, ''எந்த நகரீர் உரைமின் யாம் உணர'', என்றாள்,)

**விளக்கம் :-** வந்தவள்: வண்ண மகளாய் வந்த திரௌபதி. இருந்தவள் - அரசி. இனிய குளிர்ந்த உபசார வார்த்தைகளுடன் அருகில் இருக்கச் செய்து, சந்தனத்தொடு அகில் புகையும், பூவும், வெற்றிலையும் சிறப்பாக அளித்து, எந்த நாட்டிலிருந்து வந்தீர், நாங்கள் அறியும்படி கூறுவீர், என்றாள் அரசி,—என்பதாம். நொதுமலினளாய் வந்தவளை அரசி உபசரித்தது, அரசியின் நற்பண்பைக் காட்டும்.

**32. தான்விரத மாயைபுரி சகுனிபொரு சூதால்**
**கான்விரத மாகவுறை காவலர்கள் கோயில்**
**மான்விரத நோக்கியர்ம ருங்குறவி ருந்தேன்**
**யான்விரத சாரணியெ னும்பெயரி னாளே.**

[தான் விரதம் மாயை புரி சகுனி பொரு சூதால், கான் விரதம் ஆக உரை காவலர்கள் கோயில், மான் விரத நோக்கியர் மருங்கு உற இருந்தேன், யான் விரதசாரணி எனும் பெயரினாள், ஏ.]

**விளக்கம் :-** விரதம், என்பது முதலடியில், விரசம் என்ற வட சொல்லின் திரிபு. விரும்பத்தகாதது, வெறுக்கத் தக்கது, என்பது அதன் பொருள். தான் - தானாகவே, சுயமாகவே: தனது இயற்கையாகப் பெற்ற வெறுக்கத்தக்க மோசத்தைச் செய்யும் சகுனி என்பான் ஆடிய சூதால்,—என்பது முதலடியின் பொருள். இரண்டாவது அடியில், விரதம், என்பது வருதம் என்ற வட சொல்லின் திரிபு. செய்ய வேண்டுவது, நோன்பு, என்று பொருள்படும். கானில் வசித்தலை நோன்பாகக் கொண்டு வாழலுற்ற அரசர்களாகிய பாண்டவர்களின் திருமனையில்,—என்பது இரண்டாவது அடியின் பொருள், மூன்றாவது அடியில், விரதம் என்பது, ஒழிதல், அல்லது அகலுதல் என்ற பொருளுடைய வட சொல். மான்கள் நாணி அகன்று செல்லுதற்கு ஏதுவான அழகிய கண்களை உடைய ராச பத்நியரின் அருகே பொருந்த இருந்தேன். நான் விரதசாரணி என்ற பெயர் உடையேன் என்பது நான்காவது அடியின் பொருள்.

**33 பூசுவன சுற்றுவன பூண்பனமு டிப்ப**
**தேசொடுவ னப்புநனி திகழும்வகை யணிவேன்**
**வாசவனொ டொத்தமனு குலவரசன் மனைவி**
**ஏசறவு னக்கெலுவை யாகுவதென் னெண்ணம்.**

[பூசுவன, சுற்றுவன, பூண்பன, முடிப்ப தேசொடு வனப்பு நனி திகழும் வகை அணிவேன், வாசவனொடு ஒத்த மனுகுலம் அரசன் மனைவி, ஏசு அற உனக்கு எலுவை ஆகுவது என் எண்ணம்.]

**விளக்கம் :-** பூசுவன - தேகத்தில் பூசிக்கொள்ளும் சந்தனம் முதலியன. சுற்றுவன - சுற்றிக் கட்டவேண்டிய சிகழிகை முதலியன. (இவற்றைக் கொண்டு) பிரகாசத்தோடு அழகு விளங்குவிதம் அலங்காரம் செய்வேன். வாசவன் - இந்திரன். இந்திரனோடு ஒத்தவனும், மனு குலம் வந்தவனுமான விராடனது மனைவியே, குற்றங்குறை இலாத வழி உனக்குத் தோழியாய் இருக்கவேண்டும் என்பது என் எண்ணம்,—(என்றாள்) என்பது ஈற்றடியின் பொருள். எலுவை - தோழி. முடிப்ப - முடிக்க வேண்டிய கூந்தல்.

**34. எந்தைமனை யிற்பயிலி ளம்பருவ நாளில்**
**கந்தருவர் காவல்புரி கற்புடைய ளானேன்**
**இந்துநுத லாய்மனிதர் யார்முகமு நோக்கேன்**
**வந்தனெனின் மாளிகையின் வைகும்வகை யென்றாள்.**

[எந்தை மனையில் பயில் இளம்பருவ நாளில் கந்தருவர் காவல்புரி கற்பு உடையள் ஆனேன்; இந்து நுதலாய், மனிதர் யார் முகமும் நோக்கேன், வந்தனென் நின் மாளிகையின் வைகும் வகை, என்றாள்.]

**விளக்கம்:-** இந்து - சந்திரன். முந்திய செய்யுளால் தான் இன்னாள் என்பதையும், தான் அறிந்த தொழிலையும், இங்கு சிலகாலம் வசிக்கவேண்டும் என்ற தனது எண்ணத்தையும் தெரிவித்தவள், இந்தச் செய்யுளால், வண்ணமகளேனும், கந்தர்வரால் காக்கப்படும் கற்பினளான என்னை யாரும் தகாத நோக்கத்தோடு நெருங்குதல் முடியாது, என்று கூறினாள், என்க.

அரசி அவளை வண்ணமகளாக ஏற்றல்

**35. வண்ணமகள் கூறியவை மகிழ்வினொடு கேட்டுத்
துண்ணெனவெ ரீஇயினள் சுதேட்டிணைவி ரும்பி
விண்ணவர்கள் பாவையரின் மேவுதியெ னக்குக்
கண்ணிணையு நீயுனது காவலென துயிரும்.**

[வண்ணமகள் கூறியவை மகிழ்வினொடு கேட்டு, துண்ணென வெரீஇயினள் சுதேட்டிணை விரும்பி, விண்ணவர்கள் பாவையரின் மேவுதி, எனக்கு கண் இணையும் நீ, உனது காவல் எனது உயிரும்,— அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** துண்ணென வெரீஇயினள், வண்ணமகள் கூறியவை மகிழ்வினொடு கேட்டு, சுதேட்டிணை விரும்பி,—என்று அன்வயிக்க. துண்ணெனப் பயந்தவளான அரசமகிஷி, வண்ணமகள் கூறியவற்றை மகிழ்ச்சியுடன் கேட்டு, அவளிடம் விருப்பங்கொண்டு, என்பது முதல் இரண்டடிகளின் பொருள். "தேவமாதர்போல் என்னயல் இனிதே இருப்பாயாக; எனக்கு இரு கண்களும் நீயே, எனது உயிரின் காவலும் நீ", என்றாள்,—என்பது ஈற்றடிகளின் பொருள். கட்டழகி ஆனதால், மன்னவன் வண்ணமகள் பால் நேயங் கொள்ளல் தேருமோ, என்று சுதேட்டிணை, அவளைக் கண்டதும் அஞ்சினாள்,—என்க. கந்தருவர் காவல்புரி கற்பினேன், என்றாளாதலால், தான் கருதிய பயம் நீங்கி, மகிழ்ந்து அரசி அவளை விரும்பினாள்,—என்பது கருத்து. கட்டழகியானதால், கீசகன் முதலியோர், அவள் பால் தீங்கு இழைக்க நேரின், என் செய்வது, என்றும் அரசி பயந்திருக்கலாம்.

**36. அன்னையெனு மாறுநெறி யானமுறை கூறி
என்னருகி ருத்தியென வெரியின்வரு மின்னும்
மின்னனைய நுண்ணிடை விராடபதி தேவிக்கு
எந்நலமு நாடொறுமி யற்றினளி ருந்தாள்.**

[அன்னை எனும் ஆறு நெறியான முறை கூறி, என் அருகு இருத்தி என, எரியின் வரு மின்னும், மின் அனைய நுண் இடை விராடபதி தேவிக்கு, எ நலமும் நாள்தொறும் இயற்றினள், இருந்தாள்.]

**விளக்கம் :-** அன்னை என்று சொல்லும்படி, அவ்வுறவின் நெறிக்கு ஏற்றதான முறையில் உபசார வார்த்தைகள் கூறி, என் அருகாமையில் (தாய்போல்) இருப்பாயாக, என்று அரசி கூற, தீயிடைத் தோன்றிய மின்னற்கொடி போன்ற திரௌபதியும், மின்னலைப்போன்ற நுண்ணிய இடையை உடைய அரசமா தேவிக்கு, நாள்தோறும், எல்லாவிதமான அலங்காரங்களையுஞ் செய்தவளாய் இருப்பவளானாள்,—என்பது பொருள். வண்ண மகள் வேடங் கொண்ட திரௌபதி, அரசியை அலங்கரிக்கும் தொழிலைச் செய்துகொண்டு, அங்கே வசிப்பவளானாள்,—என்ப தாம். இயற்றினள் - (முற்றெச்சம்) செய்தவளாய்.

## பாண்டவர் வருகையால் நாடு செழித்தல்

**37. மைவருத டங்கண் மட மானுமதி மரபோர்**
**ஐவருமறைந்தனர்க ளாயுறையு நாளின்**
**மெய்வருவ ழாமொழிவி ராடபதி திருநா(டு)**
**உய்வருபெ ருந்திருவொ டோங்கியதை யன்றே.**

[மைவரு தட கண் மடம் மானும், மதி மரபோர் ஐவரும் மறைந்தனர்கள் ஆய் உறையும் நாளில், மெய்வரு வழா மொழி விராடபதி திருநாடு உய்வு அரு பெருந்திருவொடு ஓங்கியது (ஐ) அன்றே.]

**விளக்கம் :-** கருமை பொருந்திய விசாலமான கண்களை உடைய இளமானாகிய திரௌபதியும், சந்திரகுலத்தவரான பாண்டவர் ஐவரும் உருக்கரந்தவர்களாய் வசிக்கையில், தவறாத சத்தியமே வெளிப்படும் சொல்லையுடைய விராட மன்னனின் அழகிய நாடு நீங்குதல் இல்லாத செல்வ மிகுதியோடு ஓங்கியது. ஐ, சாரியை. அன்றே : ஈற்றசை. பாண்டவர் வாழ்தலால் மச்ச நாடு வளம் மிக்க தாயிற்று,—என்பதாம்.

**38. குருக்களவ னூரினிடை குருநிலனொ டொப்புற்(று)**
**இருக்கும்வழி மாமழையு மெவ்விளைவு விஞ்சித்**
**தருக்கினுடன் யானைமுத றானைகளும் விஞ்சிச்**
**செருக்குமுடன் விஞ்சியது செப்பவரி தம்மா.**

[குருக்கள் அவன் ஊரினிடை குருநிலனொடு ஒப்பு உற்று இருக்கும் வழி மாமழையும் எ விளைவும் விஞ்சி, தருக்கினுடன் யானை முதல் தானைகளும் விஞ்சி, செருக்கும் உடன் விஞ்சியது; செப்ப அரிது, அம்மா!]

**விளக்கம் :-** குருக்கள் - குரு குலத்தவரான பாண்டவர். குரு நிலனொடு ஒப்பு உற்று - தங்கள் குருநாட்டில் வசிப்பதை ஒத்து. விஞ்சி - மிகுந்து. தருக்கு-செருக்கு, வளமை. அம்மா: வியப்பிடைச்

சொல். இதுவும் பாண்டவர் உறைதலால் நாடு எய்திய வளத்தைக் கூறும்.

**நாடு கரந்துறைச் சருக்கம் முற்றும்**

## 2. மற்போர்ச் சருக்கம்

வேற்று நாட்டினின்று வந்த மகாமல்லன் ஒருவன், விராடன் நகர் வந்து, மற்போரில் தன்னினும் மிக்கார் இல்லையென்று செருக்கிய மல்லனுடன், வீமன் போர் செய்து வென்றதைக் கூறும் சருக்கம் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அல்லினுக் கிந்து வென்ன வாங்கவ ருறையு நாளில்**
**வில்லினுக் கிராம னென்ன வேலினுக் கிளையோ னென்னச்**
**சொல்லினுக் குததி தோய்கைத் தொன்முனி யென்ன வன்போர்**
**மல்லினுக் கொருவன் யானே வாசவ னென்று வந்தான்.**

[அல்லினுக்கு இந்து என்ன, ஆங்கு அவர் உறையும் நாளில், வில்லினுக்கு இராமன் என்ன, வேலினுக்கு இளையோன் என்ன, சொல்லினுக்கு உததி தோய் கை தொல் முனி என்ன, வல்போர் மல்லினுக்கு ஒருவன் யானே, வாசவன் என்று வந்தான்.]

**விளக்கம் :-** இரவுக்குச் சந்திரன் போல் அந்த விராடநகரில் பாண்டவர் வாழ்ந்துவரும் நாளில், வில்லுக்கு இராமன்போல், வேலுக்கு முருகக் கடவுள்போல், சொல்லுக்கு (தமிழ்ச் சொல்லுக்கு) கடல்நீர் தோய்ந்த கையையுடைய அகத்திய முனிவன் போல், வலிய மல் போருக்கு இந்திரன் நான் ஒருவனே. என்று சொல்லிக்கொண்டு வேற்று நாட்டு மல்வீரன் ஒருவன் (இவண்) வந்தான்,—என்பது பொருள். உததி - சமுத்திரம். சமுத்திர ஜலத்தை அகத்தியன் குடித்தான், என்பது பிரசித்தம். சொல் - தமிழ்மொழி. இந்திரன் - மிகவுயர்ந்தவள். மல்லுக்கு இந்திரன் - மற்போரில் நேரில்லாதவன்.

**2. அண்டமா முகடோ டொத்த சென்னிய னவனி முற்றும்**
**கொண்டமா மேரு வொத்த குங்குமக் கடகத் தோளான்**
**சண்டமா ருதத்தோ டொத்த வலியினன் றந்தி யெட்டின்**
**கண்டமார் முகத்தி னீண்ட கையெனத் திரண்ட காலான்.**

[அண்டம் மா முகடோடு ஒத்த சென்னியன், அவனி முற்றும் கொண்ட மா மேரு ஒத்த குங்குமம் கடகம் தோளான், சண்ட மாருதத்தோடு ஒத்த வலியினன், தந்தி எட்டின் கண்டம் ஆர் முகத்தின் நீண்ட கை என திரண்ட காலான்.]

**விளக்கம் :-** அண்டத்தின் பெரிய உச்சியை ஒத்த தலையினன், பூமி முழுதையும் தாங்குதலைக் கொண்ட மகாமேரு மலையை ஒத்த குங்குமம் பூசிய கடகம் என்ற தோளணி அணிந்த புஜங்களை உடையவன், பெருங்காற்றை ஒத்த உடல் வலிமை உடையன், திசை யானைகளின் கழுத்தைச் சார்ந்துள்ள முகத்தினின்று நீண்டு தொங்கும் துதிக்கை போன்ற நீண்ட காலினன், என்பது பொருள்.

அந்த மல்லன் அரசவை அடைதல்

3. **ஆயிர மல்லர் தன்னை யணிநிழ லென்னச் சூழப்**
**பாயிரும் புரவித் திண்டேர் மிசைவரும் பரிதி போல**
**மாயிரு ஞாலந் தன்னின் மற்றிவற் கெதிரின் றென்னச்**
**சேயிருந் தடக்கை வேந்தன் றிருந்தவை யதனைச் சேர்ந்தான்.**

[ஆயிரம் மல்லர் தன்னை அணி நிழல் என்ன சூழ, பாய் இரு புரவி திண் தேர்மிசை வரும் பரிதிபோல மா இரு ஞாலம் தன்னில் மற்று இவற்கு எதிர் இன்று என்ன, சேய் இரு தட கை வேந்தன் திருந்து அவை அதனை சேர்ந்தான்.]

**விளக்கம் :-** ஆகாயத்தில் சூரியனுக்கு நிகரான கிரகங்கள் இல்லாமைபோல், பூமியில் தனக்கு நிகரான மல் வீரர் இல்லாமை தோன்ற, ஆயிரம் மல்லர் சூழ்ந்துவர, செய்ய பெரிய கைகளை உடைய விராடனது அவை அடைந்தான், — என்க, வித்தகர் பலரை ராஜ சபை கொண்டிருத்தலால் திருந்து அவை, எனப் பட்டது. பாய் இரும் புரவித் திண்தேர் - பாய்கின்ற பெரிய அல்லது குதிரை பூட்டிய சூரியனது வலிய ஒற்றைச் சக்கரத் தேர். மா இரு ஞாலம் - அதி விசாலமான பூமி.

௪. **மன்னனை வணங்கி நின்று வலியுடை மல்லின் போருக்கு**
**என்னல தில்லை யிந்த வெழுகடல் வட்டத் தென்றான்**
**கொன்னவில் வேலி னானுங் கொடுப்பன கொடுத்து முன்னம்**
**தன்னுழை வைகு மல்லர் தங்களை நோக்கி னானே.**

[மன்னனை வணங்கி நின்று வலிஉடை மல்லின் போருக்கு, என் அலது இல்லை இந்த எழு கடல் வட்டத்து என்றான்; கொல் நவில் வேலினாலும் கொடுப்பன கொடுத்து, முன்னம் தன்னுழை வைகும் மல்லர் தங்களை நோக்கினான், ஏ]

**விளக்கம் :-** என் அலது இல்லை - (மற்போரில் சிறந்தவர்) என்னை அல்லாமல் வேறு எவரும் இல்லை. எழுகடல் வட்டம் - ஏழு கடல்களால் சூழப்பட்ட பூவுலகம். கொல் நவில் வேலினான்-

கொல்லுந் தொழில் பயின்ற வேல் ஏந்திய விராடன். கொடுப்பன கொடுத்து - கொடுக்கவேண்டிய வரிசைகளைக் கொடுத்து. மற்போரில் நேர் இல்லாதவன், என்று சொல்லிக்கொண்டு வந்த மல்லனை வென்று, அவன் செருக்கை அடக்கவேண்டும், என்ற கருத்தில், அரசன், முன்னமே தன்னிடத்தேயுள்ள மல்லரை நோக்கினான். என்க.

**5. அந்தமற் றொழிலின் மிக்கோ ரநேகர்நீ டசனி யொப்பார்**
**வந்தமற் றலைவன் றன்னை வருதிநீ யெம்மோ டென்று**
**முந்தமற் கலைநூல் சொன்ன முறைமையி னரசன் காணச்**
**சந்தமற் சமரஞ் செய்தார் தனித்தனி யொருவ ராக.**

[அந்த மல் தொழிலில் மிக்கோர் அநேகர் நீடு அசனி ஒப்பார் வந்த மல் தலைவன் தன்னை வருதி நீ எம்மோடு என்று, முந்த, மல் கலை நூல் சொன்ன முறைமையின் அரசன் காண, சந்தம் மல் சமரம் செய்தார் தனி தனி ஒருவர் ஆக.]

**விளக்கம் :-** அசனி - இடி, முந்த - விரைந்து. அரசனிடம் இருந்த மல்லர் ஒவ்வொருவரும் வந்த மல்லனோடு, தனித்தனி மல் போர் நூல் முறை கடவாது பொருதார்,—என்பதாம். மற் போர் செய்வோர் தோள் தொடைகளைத் தட்டிக்கொண்டும், வீர முழக்கம் செய்துகொண்டும் களம் வரல் இயல்பாதல் பற்றி, அசனியோடு ஒப்பார், எனப்பட்டது.

வந்த மல்லன் வெல்லல்

**6. தத்தியுந் தோளுந் தோளுந் தாக்கியுஞ் சென்னி கொண்டு**
**மொத்தியும் பற்பல் சாரி முடுகியும் வயிரக் கையால்**
**குத்தியுங் காலுங் காலுங் கோத்து மற்கூறு தோன்ற**
**ஒத்தியும் பாறை யென்ன வுரனுட னுரங்கள் சேர்த்தும்.**

]தத்தியும், தோளும் தோளும் தாக்கியும், சென்னி கொண்டு மொத்தியும், பல்பல் சாரி முடுகியும், வயிரம் கையால் குத்தியும், காலும் காலும் கோத்து மல் கூறு தோன்ற ஒத்தியும், பாறை (மலை) என்ன உரனுடன் உரங்கள் சேர்த்தும்,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் ;-** தத்தல் - தாவுதல், சென்னி-தலை. மோதல்-இடித்தல். சாரி முடுகல் - இடம் வலமாகச் சுற்றல். மல்கூறு - மல்யுத்த வகைகள். ஒத்தல் - ஒதுங்கல், தாக்குவதற்காகப் பின்னிடல். வந்த மல்லனும் மன்னன் அவை இருந்த மல்லரும் செய்த மற்போர் வர்ணனை இது. உரனுடன் உரங்கள் சேர்த்து-மார்போடு மார்பைச் சேர்த்து.

**7. ஓரொரு மல்ல ராக வொருதனி மல்லன் றன்னோ(டு)**
**ஆரம ருடற்றி மல்ல ரனைவரு மழிந்த பின்னர்**
**வீரரில் வீர னான வென்றிவேல் விராடன் மெச்சித்**
**தேரின்மேல் வந்த மல்லன் றனக்கெலாச் சிறப்புஞ் செய்தான்.**

*[ஓர் ஒரு மல்லர் ஆக, ஒரு தனி மல்லன் தன்னோடு ஆர் அமர் உடற்றி, மல்லர் அனைவரும் அழிந்த பின்னர், வீரரில் வீரன் ஆன வென்றிவேல் விராடன் மெச்சி, தேரின் மேல் வந்த மல்லன் தனக்கு எலாம் சிறப்பும் செய்தான்.]*

**விளக்கம் :-** *அழிந்த, என்பது தோற்ற, அல்லது வலியழிந்த, என்ற பொருளது. வீரனே, வீரத்தின் சிறப்பை அறிவானாதலால் பெரு வீரனான விராடன் வந்த மல்லனது வீரத்தைப் பாராட்டி, அவனுக்கு எல்லாவிதச் சிறப்புக்களையும் செய்தான், என்பதாம்,*

வந்த மல்லனைப் பலாயன் வெல்லல்

**8. அன்றுபோய் மற்றை நாளி னரசனோ டறத்தின் மைந்தன்**
**வென் றமா மல்லன் றன்னை வெல்லுதற் குரிய மல்லன்**
**இன்றுநின் மடையர் தம்மிற் பலாயன னென்போன் றன்னை**
**அன்றிவே றில்லை யென்றா னரசனு மழைமி னென்றான்.**

*[அன்று போய் மற்றை நாளின் அரசனோடு அறத்தின் மைந்தன், வென்ற மா மல்லன் தன்னை வெல்லுதற்கு உரிய மல்லன், இன்று நின் மடையர் தம்மில் பலாயனன் என்போன் தன்னை அன்றி வேறு இல்லை என்றான்; அரசனும் அழைமின், என்றான்.]*

**விளக்கம் :.** *அறத்தின் மைந்தன் - தருமன். பலாயனன் - வீமன். வென்ற மாமல்லனை வெல்ல வல்லவன், உனது சமையற் காரர்களில் ஒருவனான பலாயனன், என்பானே அன்றி, வேறு எவரும்இல்லை, என்று தருமன், மறுநாள் அரசனுக்குச் சொல்ல, அரசனும், அவனை அழைத்து வாருங்கள் என்று ஏவினான்,— என்பதாம்.*

**9. பைம்பொன்மா மேரு வெற்பின் பராரையைச் சோதி நேமி**
**விம்பமாய் வளைந்த தென்ன விளங்குபொற் கச்சை சேர்த்தித்**
**தம்பமா மென்னத் தக்க தண்டொடு தரணி வீழா**
**உம்பரா ரமுத முண்ட வுரவினான் விரைந்து வந்தான்.**

*[பைம்பொன் மாமேரு வெற்பின் பரு அரையை சோதி நேமி விம்பமாய் வளைந்தது என்ன விளங்கும் பொன் கச்சை சேர்த்தி, தம்பம்ஆம் என்ன தக்க தண்டொடு, தரணி வீழா உம்பர் ஆர் அமுதம் உண்ட உரவினான் விரைந்து வந்தான்.]*

**விளக்கம் :-** தரணி வீழா உம்பர் ஆர் அமுதம் உண்ட உரவினான், பைம்பொன் மாமேரு....தண்டொடு விரைவின் வந்தான், என்று அன்வயிக்க; பசிய பொன்மயமான மேரு மலையின் நடு இடத்தை ஒளிமிகுந்த சக்கரம் ஒன்று வட்டமாய்ச் சுற்றிக்கொண்டது போல், வீமன் தன் பராரையில் (பருத்த இடுப்பில்) விளங்குகின்ற பொன் கச்சையைக் கட்டிக்கொண்டு, இது ஒரு ஸ்தம்பமே (தூணே) என்று சொல்லும்படி கதையுடன் விரைந்து வந்தான், என்பது பொருள். முதலிரண்டடிகள் **தற்குறிப்பேற்றம்**. தரணிவீழா உம்பர் ஆர் அமுது உண்ட உரவினான் - மண்ணுலகில் கிடைக்காத அரிய தேவாமிருதத்தை உண்ட, வலிமை படைத்தவனான வீமன். துரியோதனாதியரால் கங்கையில் வீழ்த்தப்பட, அவன் நாகருலகம் சென்று நாகர் தந்த அமுதம் உண்டு வந்த கதை, வாரணாவதைச் சருக்கத்தில் கூறப்பட்டுளது. உரவு - வலிமை. பருமை அரை - பராரை; பருமை என்ற பண்புப் பெயரின் ஈறுபோய், வருமொழி முதல் அகரம் நீண்டு, நிலை மொழி ஈறும் கெட்டுப் பராரை, என்றாயிற்று. அரை - நடுவிடம், இடுப்பு.

**10. கதையுடைக் காளை வந்து கடுந்திறன் மல்லன் றன்னோ(டு)**
**உதயமோ டத்த மென்னு மோங்கலோ ரிரண்டு சேர்ந்து**
**துதைவுறப் பொருவ தேபோற் றோள்புடைத் துருமி னார்த்துப்**
**பதயுகத் தாலுந் தத்தம் பாணிக ளாலுஞ் சேர்ந்தார்.**

[கதை உடை காளை வந்து கடுந்திறல் மல்லன் தன்னோடு, உதயமோடு அத்தம் என்னும் ஓங்கல் ஓர் இரண்டு சேர்ந்து, துதைவு உற பொருவதேபோல், தோள் புடைத்து உருமின் ஆர்த்து, பதம் யுகத்தாலும் தம்தம் பாணிகளாலும் சேர்ந்தார்.]

**விளக்கம் :-** உதயமோடு அத்தம்...பொருவதேபோல், கதையுடை காளை வந்து கடுந்திறல் மல்லனோடு தோள்புடைத்து சேர்ந்தார். கதை உடை காளை- பலாயனன் என்ற வீமன். உதயம் - சூர்யோதயம். அத்தம் - சூர்யாஸ்தமனம், ஓங்கல் - மலை. துதைவுற - நெருங்குதல் உற. பதயுகம் - இரண்டு பாதம். உதய கிரியோடு அத்தமன கிரி போர் செய்வதேபோல் வீமனும் மாமல்லனும் தோள் தட்டியும் ஆர்த்தும் போர் செய்தனர், என்பதாம்.

**11. உதைத்தனர் வீசி வன்போ டுரங்கொடு கரங்க ளெற்றிப்**
**புதைத்தனர் விரல்கண் மெய்யிற் புருவமு மூக்கும் வாயிற்**
**சிதைத்தனர் புயங்க ளென்னுஞ் சிலம்பு கடாக்கத் தாக்கப்**
**பதைத்தன ரோடி யோடிப் பற்றினர் மீள மீள.**

[உதைத்தனர் வீசி வன்போடு, உரங்கொடு கரங்கள் எற்றி புதைத்தனர் விரல்கள் மெய்யில், புருவமும் மூக்கும் வாயில்

சிதைத்தனர், புயங்கள் என்னும் சிலம்புகள் தாக்க தாக்க பதைத்தனர், ஓடி ஓடி பற்றினர் மீள, மீள.]

**விளக்கம் :-** வன்பு - வலிமை. வன்போடு (ஒருவரை) ஒருவர் வீசி உதைத்தனர். உரம் - வலிமை. உரத்தோடு கைகளால் எற்றி மெய்யில் விரல்களைப் பதியும்படி செய்தனர். புருவம் மூக்கு வாய் ஆகியவற்றை (மோதி) பழுதடையச் செய்தனர், புயங்கள் என்னும் சிலம்பு (மலை) தாக்கத் தாக்கத் துடித்தனர், ஓடி ஓடி, மீண்டும் மீண்டும் (ஒருவரை ஒருவர்) பற்றினர்,—என்பது பொருள்.

**12. கற்றன காய மெல்லாங் கண்டுகண் களிக்கக் காட்டி**
**உற்றனர் நின்ற போதி லூதையின் புதல்வ னூரு**
**மற்றவன் மருங்கு பற்ற வன்கர மிடறு பற்றச்**
**செற்றன னிடிம்பன் றன்னைச் செற்றவெங் கொற்றத்**
**தோளான்.**

[கற்றன காயம் எல்லாம் கண்டு கண் களிக்க காட்டி உற்றனர் நின்றபோதில், ஊதையின் புதல்வன் ஊரு மற்றவன் மருங்கு பற்ற வல் கரம் மிடறு பற்ற, செற்றனன் இடிம்பன் தன்னை செற்ற வெம் கொற்றம் தோளான்.]

**விளக்கம் :-** காயம் - மற்போரில் எதிரியைத் தாக்குவதற்குரிய இடம், அல்லது இலக்கு. கற்றன காயம் - தாம் கற்ற வித்தையின் நுணுக்கங்களை எல்லாம், உற்றனர் நின்ற போதில் - நெருங்கினராய் நின்று பொரும் சமயத்தில். ஊதையின் புதல்வன் - வாயு குமாரனான வீமன். ஊரு - தொடை. மருங்கு - இடுப்பு. மிடறு - கழுத்து. இருவரும் தாம் கற்ற போர் நுணுக்கங்களைக் கண்டவர் கண்டு களிக்கும்படி போர் செய்கையில், வீமன் தனது தொடையால் மற்றவனது இடுப்பைச் சுற்றிக் கையால் கழுத்தைப் பற்றி, மல்லனைக் கொன்றான்,—என்க.

### வென்றவனை அரசன் பாராட்டல்

**3. தேர்மிசை வந்த மல்லன் சிதைந்தபே ருறுப்பி னோடும்**
**பார்மிசைக் கிடக்க நின்று பணைப்புயங் கொட்டி யார்த்தான்**
**சீர்மிகு மல்லன் றன்னைச் சிறப்புறத் தழுவி யெல்லாப்**
**போர்முகங் களுக்கு நின்னைப் போல்பவ ரில்லை யென்றான்.**

[தேர்மிசை வந்த மல்லன் சிதைந்த பேர் உறுப்பினோடும் பார்மிசை கிடக்க,(வெற்றியுடன் அங்கே) நின்று (வீமன்) பணைப் புயம் கொட்டி ஆர்த்தான், சீர்மிகு மல்லன் (வீமன்) தன்னை (அரசன்) நன்றாகத் தழுவிக்கொண்டு, போர் முகங்கள் எல்லாவற்றிலும் உன்னைப்போல்பவர் இல்லை, என்று பாராட்டினான், என்பதாம்.]

14. மன்னவர்க் களிக்கத் தக்க வரிசைக ளனைத்து நல்கி
முன்னவ னாகி வைகு முனிமனங் களிக்கு மாறு
தன்னரு கணுக வைத்தித் தலத்தெதி ரில்லை யிந்த
இன்னமு தடுவோற் கென்றா னியற்றிறல் விரா டன்றானே.

[மன்னவர்க்கு அளிக்கத்தக்க வரிசைகள் அனைத்தும் நல்கி, முன்னவன் ஆகி வைகும் முனி மனம் களிக்கும் ஆறு, தன் அருகு அணுகவைத்து, இ தலத்தில் எதிர் இல்லை இந்த இன் அமுது அடுவோற்கு என்றான், இயல் திறல் விராடன் தானே.]

**விளக்கம் :-** முன்னவன் ஆகிவைகும் முனி - ராஜசனபயில் முன்னிடத்தில் இருப்பவனாகி அமர்ந்துள்ள துறவி (தருமன்). இன் அமுது அடுவோன்-சமயற்காரன் (வீமன்). இயல்திறல் விராடன்- தகுதியான திறமையுடைய விராடன். அரசன், கங்கபட்டன் என்ற பெயர் கொண்ட முனிவன் மனங் களிக்குமாறு, மன்னவர்க்குரிய சிறப்புக்களைச் செய்து வீமனைத் தன்னருகு அமரச் செய்து பாராட்டினான்,—என்க. தான், ஏ: அசைகள்.

**மற்போர்ச் சருக்கம் முற்றும்.**

## 3. கீசகன் வதைச் சருக்கம்

விரத சாரணி என்ற பெயர் கொண்டு வண்ணமகளாய்த் தொழில் புரிந்து வாழும் திரௌபதியின்மேல் இச்சை கொண்ட கீசகனையும், அவனது சகோதரர்களான உபகீசர்களையும் வீமன் வதைத்ததைக் கூறும் சருக்கம் இது.

### தேவியைக் காணக் கீசகன் வரல்

எண்சீர் ஆசிரிய விருத்தம்

1. அன்ன நாளினின் மன்னவன் தேவியா
மன்ன மென்னடை யாரமு தன்னசொல்
சொன்ன சாயற் சுதேட்டிணை தன்திருத்
துணைவர் நூற்றொரு நால்வரிற் றோற்றமும்
மன்னு மாண்மையுந் தேசுஞ்சி றந்துளான்
வருதி னிக்குத்த லைவன்முன் றோன்றிய
கன்னல் வேளனை யான்றன் துணைவியைக்
காண வந்தனன் காண்டகு மேனியான்.

[அன்ன நாளினில் மன்னவன் தேவி ஆம் அன்னம் மெல்நடை, ஆர் அமுது அன்னசொல், சொன்னம் சாயல் சுதேட்டிணை தன் திரு துணைவர் நூற்றொரு நால்வரில், தோற்றமும் மன்னும்

ஆண்மையும் தேசும் சிறந்துளான், வருதினிக்குத் தலைவன், முன் தோன்றிய கன்னல் வேள் அனையான், தன் துணைவியை காண வந்தனன், காண் தகு மேனியான்.]

**விளக்கம் :-** சொன்னம் - ஸ்வர்ணம், (பொன்). சாயல் - பிரகாசம். துணைவர் - உடன் பிறந்தோர். மன்னும் ஆண்மை - நிலையுடை பராக்கிரமம். வருதினிக்கு தலைவன் - சேனைக்குத் தலைவன். முன் தோன்றிய கன்னல் வேள் அனையான் - சிவ பிரானால் எரிக்கப்படுவதன் முன் உருவத்தோடு காணப்பட்ட கரும்பு வில் ஏந்திய மன்மதனை ஒத்தவனான கீசகன். அரசமா தேவி சுதேட்டிணையின் தம்பியர் நூற்று நால்வர். அவர்களில் மூத்தவனும், ஆண்மை அழகு ஆகிய பண்புகள் சிறக்கப் பெற்ற வனும். விராடனது சேனைத் தலைவனும் ஆவான் அவன். அவன் பெயர் கீசகன்- அவன் ஒரு நாள் தன் தமக்கையைக் காண அந்தப் புரம் வந்தான்,—என்பதாம்.

**2. தம்பி யப்பெருந் தையலை நூபுரத**
**தாளின் வீழ்ந்து தகவுடன் மீடலும்**
**அம்ப ரத்தவர் கற்பகக் காநிக**
**ரந்த வந்தப் புரத்தகன் காவினில்**
**வெம்பு கர்க்களிற் றைவர்தந் தேவியாம்**
**விரத சாரணி மென்மலர் கொய்திளம்**
**கொம்ப டொத்திடை சோரப்ப ணைத்தபொற்**
**கொங்கை யாளிவன் முன்னர்க் குறுகினாள்.**

[தம்பி அ பெருந் தையலை நூபுரம் தாளின் வீழ்ந்து தகவுடன் மீடலும், அம்பரத்தவர் கற்பகம் கா நிகர் அந்த அந்தப்புரத்து அகல் காவினில் வெம் புகர் களிறு ஐவர்தம் தேவி ஆம் விரத சாரணி மெல் மலர் கொய்து, இளம் கொம்பொடு ஒத்து இடை சோர, பணைத்த போன் கொங்கையாள் இவன் முன்னர் குறுகி னாள்.]

**விளக்கம் :-** தம்பி - கீசகன். தையல் - சுதேக்ஷணை. நூபுரம்- காலணி. தகவுடன் மீடலும் -(தமக்கையை வணங்கி) பெருமை யுடன் திரும்புகையில். அம்பரத்தவர் - தேவலோகத்தவர். வெம் புகர் களிறு ஐவர் - கொடிய முகத்தில் புள்ளிகளை உடைய ஆண் யானையை ஒத்த பாண்டவர். (அவர்கள் தேவியான) விரத சாரணி - திரௌபதி. கொம்பு - பூங்கொம்பு. தமக்கையைப் பார்த்துவிட்டுக் கீசகன் திரும்புகையில், அந்தப்புரத்துச் சோலையில் மலர் கொய்துகொண்டு திரும்பிய விரதசாரணி (திரௌபதி), அவன் கண்ணில் படல் நேர்ந்தது, என்க, குறுகல் - நெருங்கல்.

## வண்ணமகள்மீது கீசகன் மோகங் கொள்ளல்

**3. இயற்கை யான கவினுடைப் பாவையை**
**யிறைவன் தேவிக் கிளையவன் கண்டனன்**
**செயற்கை யாநலன் கண்டிலன் யார்கொலித்**
**தெரிவை யென்றுதன் சிந்தையி னோக்கினான்**
**மயற்கை யாலழிந் தானைம் புலன்களும்**
**வழக் கொழிந்து மதிமருண் டானிணைக்**
**கயற்கை யானக் கயற்றடங் கண்ணியைக்**
**கண்ட காட்சியிற் காமுக னாகியே.**

[இயற்கை ஆன கவின் உடை பாவையை, இறைவன் தேவிக்கு இளையவன் கண்டனன், செயற்கை ஆம் நலன் கண்டிலன், யார் கொல் இ தெரிவை? என்று தன் சிந்தையின் நோக்கினான்; மயற்கையால் அழிந்தான், ஐம்புலன்களும் வழக்கு ஒழிந்து மதி மருண்டான், இணை கயல் கையான், கயல் தடங்கண்ணியை கண்ட காட்சியில் காமுகன் ஆகியே.]

**விளக்கம் :** இறைவன் தேவிக்கு இளையவன், இணை கயல் கையான் இயற்கையான கவின் உடை பாவையை கண்டனன்: செயற்கை ஆம் நலன் கண்டிலன், யார்கொல் இத் தெரிவை? என்று சிந்தையான் நோக்கினான்; இணை கயல் கையான் அ கயல் தடங் கண்ணியைக் கண்ட காட்சியில் காமுகன் ஆகி,மயற்கையால் அழிந்தான், ஐம்புலன்களும் வழக்கு ஒழிந்து மதி மருண்டான்,— என்பது அன்வயம். விராடனது தேவிக்கு இளையவனும், கையில் கயல்மீன் போன்ற இரட்டையான ரேகை ஓடப் பெற்றவனுமான கீசகன். இயற்கை அழகுடைய வண்ணமகளைக் கண்டான்; ஆடை அணிகலன்களால் உண்டாகும் செயற்கை அழகை (அவள்பால்) கண்டிலன்; இத் தெரிவை யார்? என்று மனத்தினால் தெளிய முயன்றான்;கயலை ஒத்த விசாலமான கண்களை உடைய வண்ண மகளைக் கண்ட காட்சி அளவிலேயே காமுகன் ஆகிக் காம மயக் கத்தால் உள்ளம் அழிந்தவனாய், ஐம்புலன்களும் அவற்றிற்குரிய செயல் புரிதல் ஒழிந்து மதிமயங்கினவன் ஆனான்,—என்பது பொருள். கையில் கயல் இரேகை ஓடுதல், உத்தம லட்சணமாகும்.

**4. இந்தி ரன்னகர்ப் பாவைகொ லோமட**
**லேந்து பங்கயத் தேவிகொ லோவியல்**
**சந்த மாருந் தடவரைத் தையலோ**
**தார ணிக்குள் வருந்தனித் தெய்வமோ**
**முந்த ராவுரை பாதலந் தன்னில்வாழ்**
**மோகி னிக்குயி லோமுரல் கின்றிடு**
**முந்து நீரர மங்கைகொ லோவெழி**
**லோவி யத்தொளி யோவென வுன்னினான்.**

[இந்திரன் நகர் பாவை கொலோ? மடல் ஏந்து பங்கயம் தேவி கொலோ? இயல் சந்தம் ஆரும் தட வரை தையலோ? தாரணிக்குள் வரும் தனி தெய்வமோ? முந்து அரா உறை பாதலம் தன்னில் வாழ் மோகினி குயிலோ? முரல் கின்றிடு முந்து நீர் அரமங்கை கொலோ, எழில் ஓவியத்து ஒளியோ? என உன்னினான்.]

**விளக்கம் :-** தேவர் உலகப் பெண்ணோ? இதழ்களைக் கொண்ட தாமரையில் வாழும் இலக்குமியோ? இயற்கை அழகு பொருந்திய பெரிய மலையின் மகளான பார்வதியோ? பூமியினிடத்தே வந்து பிறவி எடுத்த ஒப்பற்ற தெய்வமோ? சிறந்த நாகங்கள் வாழும் பாதாள லோகத்தில் உறையும் மோகினிபோன்ற நாககன்னியோ? ஒலி செய்து பெருகும் நீரில் வாழும் தெய்வப் பெண்ணோ? அழகிய ஓவியத்தின் ஒளி வடிவோ? என்று புலபட எண்ணினான்,—என்பது பொருள்.

**5. அருகு நின்ற மகளிரை மற்றிவ**
**ளார்கொ லென்ன வறியான் வினவினான்**
**வரிநெ டுங்கண் மகளிரு மாதரார்**
**வண்ண மாமக ளென்றனர் மையலால்**
**உருகு கின்ற வக்காளை நாணமுற்**
**றொடுங்கி நின்றவு யர்தவப் பாவைதன்**
**இருப தங்களில் வீழ்ந்தென தாவிநீ**
**யென்று மீளவு மெத்தனை கூறினான்.**

[அருகு நின்ற மகளிரை (மற்று) 'இவள் ஆர்கொல்?' என்ன, அறியான் வினவினான்; வரிநெடுங் கண் மகளிரும் மாதரார் வண்ண மாமகள் என்றனர்; மையலால் உருகுகின்ற அ காளையும், நாணம் உற்று ஒடுங்கி நின்ற உயர் தவம் பாவைதன் இரு பதங்களில் வீழ்ந்து, 'எனது ஆவி நீ?' என்று மீளவும் எத்தனை கூறினான்.]

**விளக்கம் :-** மாதரார் - அரசமாதேவி. காளை - கீசகன். நாணம் உற்று ஒடுங்கி நின்ற உயர்தவப் பாவை - நாணம் உற்று அஞ்சி உடல் குன்றி நின்ற சிறந்த தவம் உடைய திரௌபதி. கீசகன், அவள் காலில் விழுந்து, 'என் ஆவி நீ', என்று சொல்லி, மீண்டும் காதல் வசனங்கள் பல கூறினான்,—என்க. காம விகாரத்தால் நாணம் இலாது அவன் கூறிய விரச மொழிகளைக் கூற விரும்பாத புலவர், 'மீளவும் எத்தனை கூறினான்', என்றார்.

வண்ண மகளின் எதிர்மொழி

**6. கூறு கின்ற மொழிகளுக் குத்தரங்**
**கொடாது நின்றதோர் கொம்பரின் வாய்மறைந்து**
**ஏறு கின்ற பழிகளும் பாவமு**
**மிம்மை தானு மறுமையும் பார்த்திலை**

**மாறு கின்றிலை சொல்லத் தகாதபுன்**
**மாற்ற மின்னமு மன்னுயிர் யாவும்வந்(து)**
**ஆறு கின்ற குடைநிழல் வேந்தனுக்**
**கழிவு செய்தி யறிவிலி போலுநீ.**

[கூறுகின்ற மொழிகளுக்கு உத்தரம் கொடாது, நின்றது ஓர் கொம்பரின்வாய் மறைந்து, ஏறுகின்ற பழிகளும் பாவமும் இம்மை தானும் மறுமையும் பார்த்திலை, மாறுகின்றிலை சொல்ல தகாத புல் மாற்றம் இன்னமும், மன் உயிர் யாவும் வந்து ஆறுகின்ற குடைநிழல் வேந்தனுக்கு அழிவு செய்தி, அறிவிலி போலும் நீ.]

**விளக்கம் ;-** (கீசகன்) கூறுகின்ற மொழிகளுக்கு உத்தரம் கொடாது, (அருகே) நின்றதான ஓர் கொம்பரின் வாய் மறைந்து (நின்று வண்ணமகளான பாஞ்சாலி, அவனைநோக்கி) ''ஏறுகின்ற பழிகளும் பாவமும், இம்மை தானும் மறுமையும் பார்த்திலை; சொல்ல தகாத புல் மாற்றம் இன்னமும் மாறுகின்றிலை; மன்னுயிர் யாவும் வந்து ஆறுகின்ற குடை நிழல் வேந்தனுக்கு அழிவு செய்தி, அறிவிலி போலும் நீ'', (என்று எதிர் மொழிந் தாள்),—என்பது அன்வயம். கொம்பரின் வாய் மறைந்து - ஒரு மரக்கிளையினிடத்தே மறைந்து நின்று, மிகுகின்றதான பழிகளும் பாவமும், இம்மையும் மறுமையும் எண்ணினாய் இல்லை,—என்பது இரண்டாவது அடியின் பொருள். பேசத்தகாத பழியுடைய சொற் களைப் (பேசுவதினின்று) இன்னமும் மாறுகின்றாய் இல்லை; மன்னுயிர் யாவும் வந்து தாபம் தணியப் பெறுவதற்கு இடமான குடை நிழலையுடைய விராட மன்னனுக்கு நாசத்தை விளைக் கின்றாய்; அறிவு கெட்டவன் போலும் நீ,—என்பது ஈற்றடிகளின் பொருள். என்னை இச்சிப்பதனால், ''இம்மையோடு மறுமையும் பார்த்திலை'', என்றது ''இம்மையில் என் கணவனால் அழியப் போவதையும், மறுமையில் வருவதாகும் தீவினைக்குரிய பாபத்தை யும் நினைத்தாயில்லை'', என்று கூறும் தொனியதும் ஆகும்.

**7. மார சாயகத் தாலுயிர் மாளினும்**
**வரிசையி லாதம ரபின்வந் தோர்பிறர்**
**தார மானவர் தம்முகம் பார்ப்பரோ**
**தக்க வர்க்குத் தகவிவை யேகொலாம்**
**சோர னாதலிற் சொற்றா யினித்தவிர்**
**சுரேச ரைவர்தங் காவலென் றோளிணை**
**வீர போவென் னருகுறி லாவிபோம்**
**விழித்தி மைக்குமு னென்றுவி ளம்பினாள்.**

[மார(ன்) சாயகத்தால் உயிர் மாளினும் வசை இலாத மரபின் வந்தோர் பிறர் தாரம் ஆனவர்தம் முகம் பார்ப்பரோ! தக்கவர்க்கு தகவு இவையே கொல் (ஆம்)? சோரன் ஆதலின் சொற்றாய், (சொன்னாய்); இனி தவிர், சுரேசர் ஐவர் தம் காவல் என்

தோள்இணை; வீர, போ; என் அருகு உறில் ஆவிபோம் விழித்து இமைக்கும்முன், என்று விளம்பினாள்.]

**விளக்கம்** :- மாரசாயகம்-மன்மத பாணம். மன்மத பாணத்தால் உயிர் போவதாயினும், குற்றம் அற்ற குலத்தில் வந்த பெரியோர், பிறர் மனை ஆனவர் தம் முகம் பார்ப்பரோ? சீலமுடையோர்க்கு, தகவு (நற்குணங்கள்) பிறர்மனை விழைதல் முதலியன ஆமோ? சோரன் - கள்ளத்தனம் உடையவன். நீ சோரனானபடியால் இவ்வாறு சொன்னாய்; இனி, இவ்வாறு முறைகேடாகப் பேசுதலை விடுக; என் தோள்கள் கந்தருவர் ஐவரின் காவலை உடையன; வீரனே, மீண்டுபோ, என்னை நெருங்கினால் இமைப்பொழிதில் உன் உயிர் அழிந்துபோம், என்று கூறினாள்.—என்பது பொருள். கந்தருவரும் தேவசாதியைச் சேர்ந்தவ ராதலின், சுரேசர், எனப்பட்டது.

**8. பேதை யிப்படிக் கூறவுங் காதனோய்**
**பெருகு சிந்தையன் பின்னையு முன்புறா**
**ஆத ரத்தென தாருயிர் போகினு**
**மமையு மென்றவ ளம்புயச் சீறடி**
**மீது நெற்றி படத்தொழு தான்வடி**
**வேற் கணாளும்வெ குண்டுவி ரைவினில்**
**தூது ளங்கனி வாய்முத்த வாணகைச்**
**சுதேட் டிணைப்பெய ராளுழைத் துன்னினாள்.**

[பேதை இப்படி கூறவும் காதல் நோய் பெருகு சிந்தையன் பின்னையும் முன்பு உறா, ஆதரத்து எனது ஆர் உயிர் போகினும் அமையும், என்று, அவள் அம்புயம் சிறு அடிமீது நெற்றி பட தொழுதான்: வடிவேல் கணாளும் வெகுண்டு விரைவினில், தூதுளங் கனிவாய், முத்தம் வாள் நகை சுதேட்டிணை பெயராளுழை துன்னினாள்.]

**விளக்கம்** :- முன்பு உறா ஆதரத்து - இதன்முன் கொண்டிராத பெருங்காதலால். அம்புயம் சிறு அடி - தாமரை மலர் போன்ற சிறுஅடி. வடிவேல் கணாள்-கூரிய வேலை ஒத்த கண்களை உடைய திரௌபதி. தூதுளங்கனி - செந்நிறமுடைய தூதுளம் பழம். ''இதுவரையில் நான் அறிந்திராத எனது இக் காதல் நோயால் சாதல் நேரினும் தக்கதே,'' என்று கூறி அவள் காலில் விழ, அவள் விரைந்து சுதேக்ஷணையினிடம் சென்றாள், என்பதாம்.

அரசிக்கு விரதசாரணி நிகழ்ந்தன கூறல்

**9. நடுங்கு மெய்யினள் பேதுறு நெஞ்சின**
**ளானு நீர்மைய ளாவினு ணீரிலாது**
**ஒடுங்கு மென்மைய டன்மையி னாற்புன**
**லுகுத்த கண்ணின ளோவியம் போன்றுளாள்**

**கடுங்கண் யானைப்பி டரிருந் திந்நிலங்**
**காக்கும் வெண்குடைக் காவலன் றேவிகேள்**
**தொடுங்க ழற்கழ லானின் றுணைவனெற்**
**சுட்டி யாயிரஞ் சொல்லல சொல்லினான்.**

[நடுங்கும் மெய்யினள், பேதுறு நெஞ்சினள், நாணும், நீர்மையள் நாவினுள் நீர் இலாது ஒடுங்கும் மென்மையள், தன்மையினால் புனல் உகுத்த கண்ணினாள், ஓவியம் போன்று உளாள், கடுங்கண் யானைபிடர் இருந்து இ நிலம் காக்கும் வெள் குடை காவலன் தேவி, கேள்; தொடும் கழல் கழலான் நின் துணை வன், எற்சுட்டி (என் - சுட்டி) ஆயிரம் சொல் அல சொல்லி னான்.]

**விளக்கம் :-** பேதுறல் - கலங்கல். தன்மையினாள் - துணை யில்லாத மெல்லியலான தன்மைக்கு ஏற்ப, (நீர் உகுத்த கண்ணை உடையவள்) ஓவியம் போன்றுளாள் - ஓவியப் பாவை போன்ற வண்ணமகள். கொடிய கண்களை உடைய யானையின் பிடர் அமர்ந்து இந்நாட்டைப் பரிபாலனம் செய்யும் வெண்கொற்றக் குடையை உடைய அரசனது தேவியே, கேள்; வீரக்கழல் அணிந்த கால்களை உடைய உன் சகோதரன், என்னைக் குறித்து சொல்லத் தகாதனவான மிகப் பல ஈன வார்த்தைகளைச் சொன்னான்,— என்பது ஈற்றடிகளின் பொருள். அச்சத்தினால் திரௌபதியின் பால் தோன்றிய மெய்ப்பாடுகளைக் கூறும் முதலிரண்டடிகள். மனுவழி முயலும் மன்னவன் மனைவியான நீ, நான் தீங்குறா வண்ணம் காக்கும் கடன் உடையவள், என்று கூறும் குறிப்பினது மூன்றாவது அடி. உனது சகோதரன் என்பால் நடந்துகொண்ட விதம், மெய்யான வீரத்தோடு பொருந்துவதாகாது, என்று குறிக்குங் கருத்தில், 'தொடு கழல் கழலான்', என்றாள்.

**10. விரத சாரணி யென்பதுந் தேவரென்**
**மெய்பு ரக்கும் விரதமு மிங்குனக்(கு)**
**இரத மாக வரமனைக் கெய்துமு**
**னியம்பி னேனெனை யாவரு மிச்சியார்**
**சுரத மாடு மகளிரைத் தேடிநின்**
**றுணைவன் வேட்கையுஞ் சோகமு மாற்றிடு**
**சரத மாக நினையா தொழிநெறி**
**தப்பி லாருயிர் தப்புமென் றோதினாள்.**

[விரதசாரணி என்பதும் தேவர் என் மெய் புரக்கும் விரதமும் இங்கு உனக்கு இரதம் ஆக வரம் மனைக்கு எய்துமுன் இயம்பி னேன், எனை யாவரும் இச்சியார், சுரதம் ஆடும் மகளிரை தேடி நின் துணைவன் வேட்கையும் சோகமும் மாற்றிடு, சரதம் ஆக நினையாது ஒழி, நெறி தப்பில் ஆர் உயிர் தப்பும் என்று ஓதி னாள்.]

**விளக்கம் :-** விரதசாரணி - நல்லொழுக்கமாகிய விரதம் பூண்டவள். இரதமாக - ரஸமாக, இனிமையாக, நன்றாக

விளங்கும்படி.. சுரதம் ஆடும் மகளிர் - கணிகையர். சரதமாக - நிச்சயமாக. நினையாது ஒழி - என்னைக் கொண்டு அவன் தாபத்தைத் தீர்க்கலாம் என்ற நினைவை (சரதமாக) ஒழிப்பாய். நெறிதப்பில் ஆர் உயிர் தப்பும் - முறை தவறின் அவனது அரிய உயிர் கெடும். முறை தவறி அவன் நடப்பானாயின் அவன் அழிதல் நேரும், என்பதை அறிவாய்,—என்று எச்சரிக்கை செய்யும் கருத்தது இது.

**11. கேக யங்க ளெனுமெழிற் சாயலாள்**
**கிளந்த வாசகங் கேட்டிடி யேறுறும்**
**நாக மென்ன நடுங்கியப் பூங்கொடி**
**நயன நீர்துடைத் துற்றது நன்றெனா**
**வேக முற்ற மனத்தொடு தம்பியை**
**மிகமு னிந்துதன் வீடணு காவகை**
**ஏகு கென்ற ளென்றலுஞ் சோகமோ**
**டேகி னானறம் பாவமென் றெண்ணலான்.**

[கேகயங்கள் எனும் எழில் சாயலாள் கிளந்த வாசகம் கேட்டு இடி ஏறு உறும் நாகம் என்ன நடுங்கிய பூங்கொடி, நயனம் நீர் துடைத்து, உற்றது நன்று எனா, வேகம் உற்ற மனத்தொடு தம்பியை மிக முனிந்து தன் வீடு அணுகாவகை ஏகுக என்றனள், என்றலும் சோகமோடு ஏகினான், அறம் பாவம் என்று எண்ண லான்.]

**விளக்கம் :-** கேகயம் - மயில், கேகயப்புள். இடி ஏறு உறும் - பேரிடியின் ஒலியைக் கேட்கலுற்ற. பூங்கொடி - அரசி. நயனம் நீர் துடைத்து - வண்ணமகளின் கண்ணீர் துடைத்து; (அல்லது, தம்பி துணிந்த தீங்கினை நினைத்து வருந்தியதால் தன் கண் வழிந்த நீரை அரசி துடைத்துக்கொண்டு, என்னலும் அமையும்). வேகம் உற்ற மனம் - சினத்தின் வேகம் கொண்ட மனம். வண்ணமகள் கூறியது கேட்ட அரசி, சினந்து, தம்பியை, ''இனி இங்கே நில்லாது அகல்வாய்'', என்று கூறப் புண்ய பாபங்களை நினையாத வனாகிய கீசகனும் சோகத்தோடு தன் மனை சென்றான்,—என்ப தாம். நன்று எனா - நிகழ்ந்தது மிக நன்றாகவிருக்கின்றது, அதா வது தகாதது நிகழ்ந்ததற்கு வருந்தி.

கீசகன் உற்ற விரகவேதனை

**12. சென்று தன்மனை புக்கபின் மன்மதன்**
**செருவி னொந்தழி சிந்தைய னாய்மலர்**
**மன்றன் மெல்லணை வீழும்வெம் பாலையால்**
**வகுத்த தோவிம் மலரணை தானெனும்**
**தென்ற றன்னையுந் தீயெனுந் திங்களைத்**
**தினக ரன்கொலென் றேங்குஞ் செயலழிந்**
**தன்ற வன்கருங் கங்குலிற் பட்டபா**
**டவனை யல்லதை யார்படு வார்களே.**

[சென்று தன் மனை புக்கபின் மன்மதன் செருவில் நொந்து அழி சிந்தையன் ஆய், மலர் மன்றல் மெல் அணை வீழும், வெம் பாலையால் வகுத்ததோ இ மலர் அணைதான் என்னும், தென்றல் தன்னையும் தீ எனும், திங்களை தினகரன் கொல் என்று ஏங்கும், செயல் அழிந்து அன்று அவன் கருங் கங்குலில் பட்டபாடு அவனை அல்லது (ஐ) யார் படுவார்கள், ஏ.]

**விளக்கம் :-** மன்மதன் செரு - விரகவேதனை. விழும் - (மலர் அணையில்) படுப்பான். அந்த மலரணை கொடிய பாலையின் வெம்மையைக் கொண்டு செய்ததோ, என்று தளர்வான். தென்றலை நெருப்பு என்பான். சந்திரனைச் சூரியனோ, என்று எண்ணி ஏங்குவான். தன் துயரம் அகலச் செய்வினை தோன்றாத வனாய், அந்த இரவில், அதன் பட்ட பாட்டை, அவனை அல்லால் வேறு யார் படுவார்கள்; (அளவு கடந்த துன்பத்திற்குள்ளானான்), என்க. அல்லதை, என்பதிலுள்ள ஐ சாரியை. கருங் கங்குல் - கரிய இரவு.

**13. பாவி தன்மனைச் சேடிய ரானவர்**
**பலரும் வந்து படியுடை மன்னவன்**
**தேவி தன்னைவ ணங்கியக் காமுகன்**
**சிந்தை நோயுஞ் செயலும் புகன்றெழில்**
**காவி யங்கண் ணவளைத் தனதுகண்**
**காணி னுந்தணி யுங்கடுங் காதலும்**
**ஆவி யும்பெறு மெய்யணு கானின**
**தாணை யென்ற னராதர மாற்றுவார்.**

[பாவி தன் மனை சேடியர் ஆனவர் பலரும் வந்து, படி உடை மன்னவன் தேவி தன்னை வணங்கி, அ காமுகன் சிந்தை நோயும் செயலும் புகன்று, எழில் காவி அம் கண் அவளை தனது கண் காணினும் தணியும் கடுங்காதலும், ஆவியும் பெறும், மெய் அணு கான், நினது ஆணை, என்றனர் ஆதரம் மாற்றுவார்.]

**விளக்கம் :-** பாவி - கீசகன். அவனது தாபத்தை மாற்ற முயலும் சேடியர் அரசியிடம் வந்து, அவன் உற்ற நிலையைக் கூறி, "வண்ணமகளைக் கண்டாலன்றித் தாபம் தணியப்பெறான், ஆவியும் அழியாது இருக்கும், அவள் மெய் தீண்டான்; இந்நிலையில் உனது கட்டளையை எதிர்பார்க்கின்றோம்", என்றார்—என்பதாம். ஆதரம் ஆற்றுவார் (தணிவிப்பார்) என்றும் பிரித்துக் கொள்ளலாம். மெய் அணுகான், நின் ஆணை, என்பதற்கு, "உன்மேல் ஆணையிட்டுச் சொல்கின்றோம், அவன் அவளது மெய் அணுகான்", என்று சேடியர் கூறியதாகவும் கொள்ளலாம். "நீ வண்ண மகளை அனுப்புதல் அவசியம்", என்று அவர் வற்புறுத்தும் குறிப்பினதாகும்.

14. பாச காரிக ளாமைம் புலன்களும்
பரிவு கூரப் பரிந்துயர்ந் தோர்புகல்
வாச காதிகள் கற்றுந் தெளிந்திலை
மதன வேதத்தின் மார்க்கமும் பார்த்திலை
நாச காலம் வரும்பொழு தாண்மையும்
ஞான முங்கெடு மோநறுந் தார்முடிக்
கீச காவென் றழுதன ளம்மொழி
கேட்ட போதக் கிளிநிகர் மென்சொலாள்.

[பாசகாரிகள் ஆம் ஐம்புலன்களும் பரிவு கூர, பரிந்து உயர்ந்தோர் புகல் வாசகாதிகள் (வாசக ஆதிகள்) கற்றும் தெளிந்திலை, மதனவேதத்தின் மார்க்கமும் பார்த்திலை, நாசகாலம் வரும்பொழுதுஆண்மையும் ஞானமும் கெடுமோ? நறும் தார்முடி கீசகா,என்றுஅழுதனள் அ மொழி கேட்டபோது, அ கிளிநிகர் மென் சொலாள்.]

**விளக்கம் :-** பாச காரிகள் ஆம் ஐம்புலன்கள் - மனத்தைப் பிணித்து நோயை உண்டாக்கும் இந்திரியங்கள். பரிவு - துன்பம். பரிந்து - வருந்தி.பெரியோர் புகல் வாசகாதிகள் - பெரியோர் கூறியுள்ள நீதி வாக்கியங்கள். மதன வேதத்தின் மார்க்கம் - வாத்ஸ்யாயனம் என்ற காம நூலின் மார்க்கம். சேடியின் மொழிகேட்ட அரசி, ''கீசகனே, காமவயப்பட்டு, மேன் மக்களின் அறமொழிகளைக் கற்றும் மனத் தெளிவு பெறாமல்,காம நூலின் வழியையும் பற்றாமல் நீ இப்படி வருந்தலாமோ? நாசகாலம் வரும்பொழுது, இப்படித்தான் அறிவும் ஆண்மையும் கெடும்போலும்'', என்று புலம்பி வருந்தினாள்,—என்பதாம். பாசம் - பற்று, இந்திரிய விகாரம். தன்னை விரும்பாத பெண்களோடு சேரலாகாது,என்பது மதன வேத மார்க்கம்.

அரசியின் வேண்டுகோள்

15. ஆகு லத்தொடு நெஞ்சந் தளர்ந்துதன்
னருகி னின்ற வருந்ததி யேநிகர்
மீகு லக்கொடி தன்னிரு தாள்மிசை
வீழ்ந்து நின்றன் விழியரு ளுண்டெனில்
கோகு லத்தினு யர்ந்தவென் காதலன்
கோலு நீதியுங் குன்றா வெனதுரை
நீகு லைக்கில னைத்துமின் றேகெடும்
நேரி ழையாயிது நெஞ்சுறக் கேட்டியால்.

[ஆகுலத்தொடு நெஞ்சம் தளர்ந்து தன் அருகில் நின்ற அருந்ததியே நிகர் மீ குலம் கொடி தன் இரு தாள் மிசை வீழ்ந்து, நின் தன் விழி அருள் உண்டு எனில், கோ குலத்தில் எயர்ந்த என் காதலன் கோலும் நீதியும் குன்றா. எனது உரை நீ குலைக்கில்

அனைத்தும் இன்றே கெடும்,நேர் இழாய்,இது நெஞ்சு உற கேட்டி, ஆல்.]

**விளக்கம் :-** ஆகுலம் - துன்பம். கோ குலத்தில் உயர்ந்த என் காதலன் - அரச குலங்களில் உயர்ந்த என் கணவன். குலைக்கில் - என் சொல்லிற்கு இசைய மறுத்தால், (எங்கள் நலம் கெடும்). ''நான் சொல்வதை நீ தட்டாமற் செய்தால், எம் குலம் சிறக்கும்; இல்லையேல் எல்லாம் கெடும்''—என்றாள் அரசி, அதாவது ''தம்பியிடம் நீ சென்று வரவேண்டும்'', என்று நேரே சொல்லக் கூசி, இவ்வாறு அரசி கூறினாள், என்க. கீசகனது பராக்கிரமத்தின் துணைகொண்டு மன்னனது ஆட்சி நடப்பதால், அவன் அரசனது நலத்திற்கு இன்றியமையாதவன் ஆகின்றான். எனவேதான், ''நீ குலைக்கில், அனைத்தும் கெடும்'', என்றாள் அரசி. என்மீது உனக்கு அன்பு உளதெனில் என் சொல்லைத் தட்டாமல் செய்ய வேண்டும், என்று வேண்டும் கருத்தது, ''விழி அருள் உண்டெனில்'', என்று கூறியது.

**16. இளைய னாதலி னென்னிளை யோன்மனத்**
**தெண்ண மின்றி யிகன்மத னம்பினால்**
**அளையு மேனிய னாகிநின் மெய்ந்நல**
**மாத ரித்தின் றாடாதுசெய் நீர்மையால்**
**விளையு மேகொ டுவெம்பழி யிப்பழி**
**விளைவு றாமல் விரகினக் காதனோய்**
**களையு மாறெண் ணினாங்கவ னாவியுங்**
**காத்து நின்பெருங் கற்பையுங் காக்குமால்.**

[இளையன் ஆதலின் என் இளையோன் மனத்து எண்ணம் இன்றி இகல் மதன் அம்பினால் அளையும் மேனியன் ஆகி, நின் மெய் நலம் ஆதரித்து இன்று அடா(த)து செய் நீர்மையால் விளையுமே கொடு வெம் பழி! இ பழி விளைவு உறாமல் விரகின் அ காதல் நோய் களையும் ஆறு எண்ணின், ஆங்கு அவன் ஆவியும் காத்து, நின் பெருங் கற்பையும் காக்கும், ஆல்.]

**விளக்கம் :-** எண்ணம் இன்றி - ஆலோசனை இல்லாமல். மதன் அம்பினால் அளையும் மேனியன் - மன்மத பாணத்தால் துளைக்கப் பெற்ற உடலினன். அடாதது செய் நீர்மையால்-தகாததைச் செய்ய முற்பட்ட தன்மையால். கொடு வெம்பழி விளையுமே - மிகக் கொடிய பழி உண்டாகுமே. விரகின் - தந்திரமான வழியினால். அவனது காதல் நோயை அகற்ற எண்ணின், (அது அவனது ஆவியும் காத்து, நின் கற்பையும் காக்கும், என்று அரசி கூறினாள்). ஆங்கு: அசை. ஆல்: தேற்றப்பொருளது. ''கீசகன் நினைத்த காரியத்தைத் தொடர்ந்தால், ஒரு பெண்ணின் கற்பை அழித்த பழியும்,அவன் காரியம் கைகூடப் பெறாமல் இறந்தால், பிறர் மனை விழைந்து அதனால் உயிர் மாண்டான், என்ற பழியும், அவனுக்கு உண்டாகாமல், அவனது விரக நோயைப்

போக்க எண்ணினால், அவனது உயிரும், உனது கற்பும் காக்கப் பெற வழி உளது'', என்று அரசி வண்ண மகளுக்குக் கூறியபடி.

**17. எண்ணு கின்றனன் யானொன்று நீமறா**
**தெனது வாய்மை யெதிர்கொண் டிளையவன்**
**நண்ணு மில்லிடைச் சென்றிந்த நாண்மலர்**
**நறைகொண் மாலையை நல்கினை மீள்வாய்**
**கண்ணி னின்னுருக் காணினு மற்றவன்**
**கன்ன மின்புறக் கட்டுரை கேட்பினும்**
**வண்ண மாமக ளேயுயிர் நிற்குநீ**
**வாழி யேகி வருகென வாழ்த்தினாள்.**

[எண்ணுகின்றனன் யான் ஒன்று, நீ மறாது எனது வாய்மை எதிர்கொண்டு, இளையவன் நண்ணும் இல்லிடை சென்று, இந்த நாள் மலர் நறை கொள் மாலையை நல்கினை மீள்வாய்; கண்ணின் நின் உரு காணினும் (மற்று) அவன் கன்னம் இன்பு உற கட்டுரை கேட்பினும், வண்ணம் மாமகளே, உயிர் நிற்கும், நீ வாழி, ஏகி வருகென (வருக - என) வாழ்த்தினாள்.]

**விளக்கம் :-** வாய்மொழி எதிர்கொண்டு - என் சொல்லை ஏற்று. இளையவன் நண்ணும் இல் - தம்பி வாழும் மனை. அவன் கண்ணினால் உன் உருவம் காணினும், காதால் உன் வார்த்தையை இன்புறக் கேட்பினும், அழியும் உயிர் நிலைபெறும், செல்வாய், என்று கூறி அரசி வாழ்த்தினாள்,—என்பது ஈற்றடி களின் பொருள். சீசகனிடம் செல்லும் வண்ணமகளின் கற்புக் கெடாது இருக்க வேண்டும் என்ற விழைவினால், 'நீ வாழி',— என்று அரசி வாழ்த்தியபடி. மற்று: அசை.

வண்ணமகள் கீசகன் மனைபோதல்

**18. மொழிய லாத மொழியைச் சுதேட்டிணை**
**மொழிந்த போது முதுக்குறை வுள்ளவப்**
**பழியி லாமொழிப் பாவைவெம் பாதகம்**
**பகர்தி யென்னை வெறாதொழி பாவைநீ**
**அழிவி லாத பெருங்கிளைக் கல்லல்கூ**
**ரழிவு வந்த தறிந்திலை யென்றுதன்**
**விழிக ளாரஞ் சொரியக் கொடுத்தபூ**
**வேரி மாலைகொண் டேகினன் மின்னனாள்.**

[மொழி அலாத மொழியை சுதேட்டிணை மொழிந்தபோது முதுக் குறைவு உள்ள, அ பழி இலா மொழி பாவை வெம் பாதகம் பகர்தி, என்னை வெறாது ஒழி; பாவை நீ, அழிவு இலாத பெருங் கிளைக்கு அல்லல் கூர் அழிவு வந்தது அறிகிலை, என்று தன் விழிகள் ஆரம் சொரிய கொடுத்த பூ வேரி மாலை கொண்டு ஏகினள் மின் அனாள்.]

**விளக்கம்;**- முதுக் குறைவு - பேரறிவு. பழியிலா மொழிப் பாவை - திரௌபதி. (அவள் தன்னைத் தம்பி மனை போகப் பணித்த அரசியை நோக்கி) ''பாவை நீ கொடிய பாவமான காரியத்தைச் செய்யச் சொல்கின்றாய், அழிவு இலாத, அதாவது நன்கு வாழ்கின்ற உன் சுற்றத்திற்கு மிகுந்த துன்பத்திற்கு ஏது வான, அழிவு ஏற்படப் போவதை நீ அறியவில்லை. நான் இவ் வாறு கூறுவதற்காக, என்னை வெறுக்காதே'', என்று கூறி, விழிகள் முத்தைப்போன்ற நீரைப் பொழிய, அவள் கொடுத்த வேரி மாலையை எடுத்துக்கொண்டு, கீசகன்மனை சென்றாள்,— என்பதாம், வேரி மாலை - மணமுடைய மாலை. ஆரம் - முத்துப் போன்ற கண்ணீர்.

**19. ஆண்டு வந்த துருபதன் மாமக**
**ளடைந்த நாட்டொட் டமரரோ ரைவரே**
**தீண்ட லன்றி யொருவரு மென்னைமெய்**
**தீண்டு வாரிலை யென்றென்று செப்பவும்**
**நீண்ட செங்கைத் தரணிபன் காதலி**
**நினைவி லாம னெறியற்ற தம்பிபால்**
**மீண்டு மவ்வழி யேகென் றுரைப்பதே**
**விதியை யாவர் விலக்கவல் லார்களே.**

*[ஆண்டு வந்த துருபதன் மா மகள் அடைந்த நாள்தொட்டு அமரர் ஓர் ஐவரே தீண்டல் அன்றி ஒருவரும் என்னை மெய் தீண்டுவார் இலை, என்று என்று செப்பவும், நீண்ட செங்கை தரணிபன் காதலி நினைவு இலாமல் நெறி அற்ற தம்பிபால் மீண்டும் அ வழி ஏகு என்று உரைப்பதே! விதியை யாவர் விலக்க வல்லார்கள், ஏ.]*

**விளக்கம் :-** கந்தருவர் ஐவரன்றி என் மெய் தீண்டுவார் இல்லை என்று பல முறை சொல்லி யிருக்கவும், அரசி நன்கு ஆலோசித்தல் இல்லாமல் அவ்வழி (தம்பி வாழும் மனை) செல்க, என்று திரௌபதியை நோக்கிக் கூறலாயிற்றே! விதியை யார் வெல்ல வல்லவர், என்று கவி கூறியபடி. 'விதியை யாவர் விலக்கவல்லார்', என்ற பொதுப் பொருளால், அரசி திரௌபதி யைத் தம்பியின் மனை செலுத்தியதாகிய சிறப்புப் பொருளை விளக்கலின், இது **வேற்றுப் பொருள் வைப்பு அணி** ஆகும்.

கலிவிருத்தம்

**20. மாதவள் கீசகன் மனையி லேகவல்**
**போதக லவுமவன் புலம்பல் போகவும்**
**பாதமில் வன்றிறற் பாக னூர்ந்ததேர்**
**ஆதப னுதயவெற் பணுகி னானரோ.**

[மாது அவள் கீசகன் மனையில் ஏக, அப்போது அகலவும், அவன் புலம்பல் போகவும், பாதம் இல் வல் திறல் பாகன் ஊர்ந்த தேர் ஆதபன் உதய வெற்பு அணுகினான், அரோ,]

**விளக்கம் :-** சூர்யோதய காலத்தில் வண்ணமகள் கீசகன் மனை அடைந்தாள், என்பதாம். அல் போது - இரவு. பாதம் இல் வல்திறல் பாகன் - கால் இல்லாதவனான சூரிய சாரதியாகிய வலிய ஆற்றலை உடைய அருணன், ஊர்ந்த - செலுத்திய. தேர் ஆதபன் - தேரையுடைய சூரியன். உதய வெற்பு - உதயகிரி. அருணன், கால் இல்லாதவன், என்பது நூற் கொள்கை.

**21. தருக்கிய காமுகன் றகாது சொல்லவே
உருக்கிளர் சாயலோ டுளம ழிந்துபோய்
முருக்கிதழ் வல்லிதன் முளரிச் செங்கையால்
அருக்கனை யிறைஞ்சினா ளழிவில் கற்பினாள்.**

[தருக்கிய காமுகன் தகாது (தகாதது) சொல்லவே, உரு கிளர் சாயலோடு உளம் அழிந்துபோய், முருக்கு இதழ் வல்லி தன் முளரி செங்கையால் அருக்கனை இறைஞ்சினாள், அழிவு இல் கற்பினாள்.]

**விளக்கம் :-** (திரௌபதி தன் மனை வரக் கண்டு) தருக்கிய காமுகன் தகாதன சொல்லவே, அழிவில் கற்பினளான, முருக்கம் பூவைப்போன்ற சிவந்த இதழ்களை உடைய திரௌபதி, தனது திருமேனியில் விளங்குகின்ற ஒளி விசேஷத்தோடு ஒருபுறம் சென்று, தனது தாமரை மலர் போன்ற சிவந்த கைகளால் அருக்கனை (சூரியனை) வணங்கினாள்,—என்பது பொருள், தருக்கு - வீரச் செருக்கு.

**22. துரங்கமோ ரேழுடன் சோதி கூர்மணிக்
கரங்களோ ராயிரங் கவினத் தோன்றினாய்
வரங்கொள்வே னின்னையான் மரபு பொன்றுமென்(று)
இரங்குறு மென்னகத் திடரை நீக்குவாய்.**

[துரங்கம் ஓர் ஏழுடன் சோதி கூர் மணி கரங்கள் ஓர் ஆயிரம் கவின தோன்றுவாய், வரம் கொள்வேன் நின்னை யான், மரபு பொன்றும் என்று இரங்குறும் என் அகத்து இடரை நீக்குவாய்.]

**விளக்கம் :-** துரங்கம் - குதிரை. ஏழு குதிரைகள் பூட்டப் பெற்ற தேரினன் சூரியன், என்பர். மணி கரங்கள் ஓராயிரம் - மிகப் பலவான கிரணங்கள். கவின - விளங்க. மரபு - குலப் பெருமை; இங்கே கற்பு நிலை. பொன்றும் - கெடல் நேரும். (மரபு பொன்றும் என்று) வருந்தும் என் மனத்து இடரை நீக்கியருள்வாய், என்று சூரியனை வேண்டினாள், என்பது ஈற்றடியின் பொருள்.[

**23. என்றுகொண் டென் றினைப் பணிந்து மன்றலால்
கன்றிய கீசகக் கலகன் முன்பு போய்
மன்றலந் தொடையலும் வழங்கி மெய்வெரீஇ
நின்றன ளானிலை நின்ற கற்பினாள்.**

[என்று (கொண்டு) என்றினை பணிந்து, மன்றலால் கன்றிய கீசகன் கலகன் முன்பு போய், மன்றல் அம் தொடையலும் வழங்கி மெய் வெரீஇ நின்றனள் (ஆல்) நிலை நின்ற கற்பினாள்.]

**விளக்கம் :-** என்று - சூரியன். என்று சொல்லி சூரியனை வணங்கி விட்டு, (அதன் பின்) புணர்ச்சி விருப்பத்தால் தளர்ச்சி யுற்ற கீசகன் என்ற துஷ்டன் முன் சென்று, மணம் உடைய அழகிய மாலையையும் கொடுத்து உடல் நடுங்கினவளாய், நிலை நின்ற கற்பினளாகிய திரௌபதி நின்றாள்,—என்பது பொருள். மன்றல் - மணம்; புணர்ச்சி வேட்கை. கொண்டு, ஆல்: அசைகள்.

**24. காமரு குளிரிபைங் கதலி மெல்லடை
தாமரை வளையம் வண்டா தறாமலர்
ஆமுறை யனைத்துமெல் லமளி மேல்விரித்(து)
ஈமவல் லெரியின்மே லென்ன வைகினான்.**

[காமரு குளிரி பைங்கதலி மெல் அடை, தாமரை வளையம், வண் தாது அறா மலர் ஆம் முறை அனைத்தும் மெல் அமளிமேல் விரித்து, ஈமம் வல் எரியின் மேல் என்ன வைகினான்.]

**விளக்கம் :-** அழகிய குளிர்ச்சி பொருந்திய இளவாழையின் மெல்லிய இலை,--என்பது முதலடியின் பொருள். தாமரை வளையம் - தாமரைச் சுருள். தாது - மகரந்தப்பொடி. (வாழை யின் தளிரான இலை, தாமரை, தாது அறாத மலர்) முதலிய யாவும் முறையே விரிக்கப் பெற்றதாகிய மென்மையான படுக்கை யில், ஈமத்தீயில் இருப்பது போல் (கீசகன்) படுத்துக் கிடந்தான்,— என்பதாம். காமரு குளிரி - அழகிய குளிர்ச்சி பொருந்திய.

**25. சாந்தொடு தண்பனி நீருந் தாமமும்
ஏந்திய கரத்தின ரேழை மார்பலர்
காந்திய கனல்மிசைக் காட்டு நெய்யென
வேந்தன துடலகம் வெதும்ப வீசினார்.**

[சாந்தொடு தண் பனி நீரும் தாமமும் ஏந்திய கரத்தினர் ஏழையர் பலர், காந்திய கனல்மிசை காட்டும் நெய் என, வேந்தனது உடல் அகம் வெதும்ப வீசினார்.]

**விளக்கம் :-** தாமம் - மாலை, ஏழையர் - பணிப் பெண்கள். காட்டும் - சொரியும். பணிப் பெண்கள், சந்தனம், பனிநீர், மலர் மாலை கொண்டு சீதளோபசாரம் செய்தது, அவனுக்கு எரியும்

தீயில் நெய் பொழிந்தது போலாயிற்று,—என்க. அப்பினார், பூசினார், தெளித்தார், என்னாமல், வீசினார் என்றது, அருகே நெருங்க முடியாதபடி மிக்க வெப்பங்கொண்டவனாய் இருந்தான், என்று கூறுங் கருத்தது.

நின்ற திரௌபதியைக் கீசகன் காணல்

**26. தாக்கிய காமநோய் தழைக்க வன்புற**
**நோக்கிய திசையெலாங் காணு நோக்கினான்**
**பாக்கிய நெஞ்சுறப் பலித்த தென்னவே**
**நீக்கிய மடந்தைமு னிற்றல் கண்டுளான்.**

[தாக்கிய காமம் நோய் தழைக்க, அன்பு உற நோக்கிய திசை எலாம் காணும் நோக்கினான், பாக்கியம் நெஞ்சு உற பலித்தது என்னவே, நீக்கிய மடந்தை முன் நிற்றல் கண்டுளான்.]

**விளக்கம்;-** நெஞ்சு உற கண்டுளான், என்று முடிக்க; மனம் பொருந்தக் காண்பானாயினான், என்பது பொருள். வன்புறத் தழைக்க, என்று கொண்டும் பொருள் செய்யலாம்; கடுமை மிக, என்பது பொருளாகும். முன் நீக்கிய, (இதன்முன் விலக்கிய), என்றும் கூட்டலாம். கண்ணுக்கு எட்டிய திசை எங்கும் பார்க்கின்ற பார்வையான், என்பது இரண்டாவது அடியின் பொருள். (திரௌபதி) எதிரில் இப்பொழுது நிற்பதால், தனது புண்ணியம் பயன் தந்தது, என்று, அவன் எண்ணினான், என்க.

**27. வந்தன ளென்னுடை மாத வப்பயன்**
**வந்தன ளென்னுடை வழிப டுந்தெய்வம்**
**வந்தன ளென்னுடை யாவி வாழ்வுற**
**வந்தன ளென்னுடை வண்ண மங்கையே**

[வந்தனள் என்னுடைய மாதவம் பயன், வந்தனள் என்னுடை வழிபடும் தெய்வம், வந்தனள் என்னுடை ஆவி வாழ்வு உற, வந்தனள் என்னுடை வண்ண மங்கை, ஏ.]

**விளக்கம் :-** தவப்பயன் - எனது செய்தவத்தின் நற்பயன் போன்றவளான வண்ண மகள். ஆவி-உயிர் போன்றவள்.வாழ்வுற- நான் வாழ்வு பெறும்படி(வந்தனள்).வழிபடும் தெய்வம் ஒருவனது விருப்பத்தை நிறைவேற்றி வைக்கும் என்பராதலால்,இப்பொழுது, அவன் தனது புணர்ச்சி இச்சையை நிறைவேற்றி வைக்க வந்த தெய்வமாகத் தன் முன் நிற்கும் வண்ணமகளை எண்ணினான், என்பதாம்.

**28. வருகநீ அருகுற மதுர வாசகம்**
**தருகநீ யிருசெவி தழைக்க வுள்ளநின்(று)**
**உருகநீ தழுவுக வுடலந் தேமுறப்**
**பருகநீ வழங்குக பவள வாயெனா.**

[வருக நீ அருகு உற, மதுரம் வாசகம் தருக நீ இரு செவி தழைக்க, உள்ளம் நின்று உருக; நீ தழுவுக உடலம் தேம் உற பருக நீ வழங்குக பவளம் வாய்,என,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** அருகு உற வருக நீ, இரு செவி தழைக்கவும் உள்ளத்தில் நிலை நின்று அதை உருகச் செய்யவும் மதுர வாசகம் தருக; உடலம் தேம் உற தழுவுக, பவளவாய் பருக நீ வழங்குக,— என்பது அன்வயம். தேம்உற - இன்பம் எய்த.

## திரௌபதி அஞ்சி ஓடல்

**29. கிடந்தவ னெழுந்தொரு கேடு வந்துறா**
**மடந்தையைத் தழுவுவான் வந்து சார்தலும்**
**விடந்திகழ் விழியினா ளோட வேட்கையால்**
**தொடர்ந்தன னறிவிலாச் சோரன் றானுமே.**

[கிடந்தவன் எழுந்து ஒரு கேடு வந்து உறா மடந்தையை தழுவுவான் வந்து சார்தலும் விடம் திகழ் விழியினாள் ஓட. வேட்கையால் தொடர்ந்தனன் அறிவு இலா சோரன் தானும்,ஏ.]

**விளக்கம் :-** ஒரு கேடும் வந்து உறா மடந்தை - ஒரு தீங்கும் வரப் பெறாதவளான திரௌபதி.விடம் திகழ் விழியினாள்-கீசகன் திறத்து விஷம் போன்ற கொடிய கண்ணின் பார்வையை உடைய வள். சோரன்-கள்ளன், (பிறர் பொருளைக் கவர நினைக்கும் கள் ளன்). கீசகன் தழுவ வரலும் நங்கை ஓடக் கள்ளனாகிய கீசகனும் வேட்கையினால் அவளைத் தொடர்ந்தான்,—என்பதாம். கேடு வந்துறா மடந்தை,என்றது,அவளது தெய்வக் கற்பை யாவராலும் களவாட முடியாது, என்று கூறுங்கருத்தது.

## நங்கை அரசனது அவை சேரல்

**30. ஓடிய மடக்கொடி யுலகு காவலன்**
**சூடிய மணிமுடி துலங்கு கோயிலின்**
**வாடிய கொடியென வந்து வீழ்ந்தனள்**
**நீடிய வேத்தவை நிருபர் காணவே.**

[ஓடிய மடம் கொடி உலகு காவலன் சூடிய மணிமுடி துலங்கு கோயிலின் வாடிய கொடி என வந்து வீழ்ந்தனள், நீடிய வேந்து அவை நிருபர் காண, ஏ.]

**விளக்கம் :-** விராடன் அணிந்துள்ள கிரீடத்தோடு விளங்கு கின்ற ராஜசபையில், அவண் இருக்கும் அரசர்கள் காண, நங்கை ஓடி வந்து விழுந்தாள்,—என்பதாம். வேத்தவையில் நீடிய (பெருமை மிக்க) நிருபர் எல்லோரும் (காண ஓடிவந்து விழுந்தாள்.)

**31. தொழுந்தகை மனுகுலத் தோன்றல் கண்ணெதிர்
விழுந்தழுந் தெரிவையை வேட்கை நோயினால்
அழுந்திய காமுக னச்ச மின்றியே
செழுந்துணைக் கைத்தலந் தீண்ட வுன்னினான்.**

[தொழும் தகை மனு குலம் தோன்றல் கண் எதிர் விழுந்து அழும் தெரிவையை வேட்கை நோயினால் அழுந்திய காமுகன், அச்சம் இன்றியே செழுந் துணை கைத்தலம் தீண்ட உன்னினான்.]

**விளக்கம் :-** தொழும் தகை மனுகுலம் - தொழுதற்குரிய சிறப்பு வாய்ந்த மறு வம்சம். அழுந்திய காமுகன் - காமத்தின் வசமான கீசகன். அரச அவையில் மனு குலம் வந்த விராடன் கண்ணெதிரில், அபயம் வேண்டி விழுந்து புலம்பும் தெரிவையைத் தீண்ட நினைத்தான்,—என்பதாம்.

**32. உன்னுமவ் வளவையி னுருளை யொன்றுடை
பொன்னெடுந் தேரவன் புகல மற்றொரு
வன்னெடுங் கிங்கரன் சூறை மாருதம்
என்னவந் தடுத்தய லெடுத்து வீசினான்.**

[உன்னும் அ அளவையின் உருளை ஒன்று உடை பொன் நெடு தேரவன் புகல, மற்று ஒரு வல் நெடுங் கிங்கரன், சூறை மாருதம் என்ன வந்து அடுத்து அயல் எடுத்து வீசினான்.]

**விளக்கம் :-** உருளை ஒன்று உடை பொன் நெடுந்தேரவன் - ஒற்றைச் சக்கரத்தை உடைய அழகிய பெரிய தேரை உடையவனான சூரியன். சிங்கரன் - ஏவல் பூண்டு ஒழுகுபவன். சூறை மாருதம் - சுழல் காற்று. கீசகன் அவனைத் தீண்ட எண்ணிய அளவில், சூர்ய கிங்கரன் அங்கே விரைந்து வந்து, அவனை எடுத்து அப்பால் வீசினான்,—என்பதாம்.

**33. கண்டன னிருந்தமண் காவல் வேந்தனும்
எண்டகு நெறிமுறை யிடறு கீசகன்
திண்டிறல் வலிமையுஞ் செயலுஞ் சிந்தையில்
கொண்டொரு வாய்மையுங் கூற வஞ்சினான்.**

[கண்டனன் இருந்த மண் காவல் வேந்தனும், எண் தகு நெறி முறை இடறு கீசகன் திண் திறல் வலிமையும், செயலும் சிந்தையில் கொண்டு ஒரு வாய்மையும் கூற அஞ்சினான்.]

**விளக்கம் :-** எண் தகு நெறி முறை இடறு கீசகன் - மதிக்கத் தகுந்த தர்ம மார்க்கத்தினின்று விலகிய கீசகன், வாய்மை கூறவும் அஞ்சினான், என்று கூட்டுக. வாய்மை - வார்த்தை, தர்மங் கடந்து நடப்பாரைத் தண்டிக்க வேண்டியவனான அரசன், கீசகனது நடத்தையைக் கண்ணால் கண்டும், கண்டித்துக் கூறவும்

செய்திலன், என்பதாம். கூறவும் என்றதிலுள்ள உம்மை எச்சப் பொருளது; அதாவது, கீசகனை, அவனது பிழையுடைய செயலைக் கண்டுந் தண்டிக்காததோடு, ''தகாத செயல் செய்தனை'', என்று கூறிக் கண்டித்தலையும் செய்திலன், என்பது பொருள். அவனிடம் கொண்ட அச்சத்தினால் அரசன், வாளாவிருந்தான், என்க.

**34. அடுதொழிற் பலாயன னழுத மின்னையும்**
**கடுமையிற் பின்றொடர் காளை தன்னையும்**
**படருறக் கண்டுதன் பாங்கர் நின்றதோர்**
**விடவியைப் பிடுங்குவான் வெகுண்டு நோக்கினான்.**

*[அடு தொழில் பலாயனன் அழுத மின்னையும், கடுமையில் பின் தொடர் காளை தன்னையும் படர் உற கண்டு, தன் பாங்கர் நின்றது ஓர் விடவியை பிடுங்குவான் வெகுண்டு நோக்கினான்.]*

**விளக்கம் :-** படர் - துன்பம். பாங்கர் - பக்கம். விடவி - மரம். கண்பனிக்க நிற்கும் திரௌபதியையும், அவள்பால் தீங்கு நினைத்த கீசகனையும் கண்டு துயர்கொண்ட பலாயனன் (வீமன்), அவனை அழிக்கும் கருத்தில், பக்கத்தில் இருந்த ஒரு மரத்தைப் பிடுங்கக் கோபக் குறிப்புடன், அம் மரத்தை நோக்கினான்,— என்பதாம்.

**35. கனிட்டன தெண்ணமக் கங்க னாகிய**
**முனித்தகை யுணர்ந்தவன் முகத்தை நோக்கியித்**
**தனிப்பெரு மராமரந் தழல்கொ ளுந்திடாது**
**உனக்கடு மிந்தன மன்றென் றோதினான்.**

*[கனிட்டனது எண்ணம் அ கங்கன் ஆகிய முனிதகை உணர்ந்து, அவன் முகத்தை நோக்கி, இ தனி பெரு மராமரம் தழல் கொளுந் திடாது, உனக்கு அடும் இந்தனம் அன்று என்று ஓதினான்.]*

**விளக்கம் :-** கனிட்டன் - (கனிஷ்டன்) இளையவன். கங்க னாகிய முனித்தகை - கங்கன் என்ற பெயர் பூண்ட முனிபுங்கவன் (தருமன்). இந்தனம் - விறகு. வீமனது கருத்தை அறிந்த தருமன், இந்த மரம் விறகிற்கு ஏற்றதாகாது என்று கூறி, அவனது சீற்றம் தணிவித்து, எதிரியை ஒழித்தற்கு இது சமயம் அன்று என்று. குறிப்பின் கூறி, அவனை அடங்கச் செய்தான், என்க.

## திரௌபதியின் முறையீடு

**36. சீரிய கங்கனன் றுரைத்த செம்மொழி**
**பாரிய தாமெனப் பலாய னன்கொளா**
**வீரிய மகத்துளே நிறுத்தும் வேலையில்**
**கூரிய விழியினா ளழுது கூறுவாள்.**

[சீரிய கங்கன் அன்று உரைத்த செம்மொழி பாரியது ஆம் என பலாயனன் கொளா, வீரியம் அகத்துளே நிறுத்தும் வேலையில், கூரிய விழியினாள் அழுது கூறுவாள்.]

**விளக்கம் :-** பாரியது - தக்கது. வீரியம் - ஆண்மை. நிறுத்தும் வேலை - அடக்கிய சமயம். தமையன் கூறியது தக்கதே என்று கொண்டு வீமன் சினத்தை வெளிக்காட்டாது அடக்க, திரௌபதி அரசனிடம் முறையிடலானாள், —என்பதாம்.

**37. தீண்டுத றகாதெனச் செம்மை யொன்றிலான்**
**வேண்டிய செய்வது வேத்து நீதியோ**
**ஆண்டகை யிதற்குநீ யல்ல வாமெனா**
**ஈண்டொரு மொழிகொடா திருப்ப தென்கொலோ.**

[தீண்டுதல் தகாது என செம்மை ஒன்று இலான் வேண்டியது செய்வது வேந்து நீதியோ? ஆண்தகை, இதற்கு நீ, அல்ல ஆம் எனா, ஈண்டு ஒரு மொழி கொடாது இருப்பது என் கொல், ஓ.]

**விளக்கம் :-** பிறர்க்குரியாளைத் தீண்டுதல் தகாத செயல் என்று எண்ணும் செம்மை சிறிதும் இல்லாதவனான கீசகன், அவன் விரும்பியதை உன்முன் செய்வது, ராஜதர்மம் ஆகுமோ? இந்த அவனது செயல் செய்யத்தக்கதன்று என்று கண்டித்தாவது, அல்லது செய்தற்குரிய செயலே என்று ஆதரித்தாவது இப்போது நீ ஒன்றும் சொல்லாமல் இருப்பது ஏனோ? என்றாள், —என்பதாம். ''தீமையைக் கண்டிப்பது செங்கோன்மை; கண்டியாமை கொடுங்கோன்மை,'' அவ்வாறாக நீ வாய் திறவாமல் வாளா இருப்பது எனக்கு விளங்கவில்லையே, என்று இடித்து உரைத்தாள், —என்க.

**38. அன்புடைத் தேவிதன் னருகு தோழியாய்**
**நின்பெருங் கோயிலி னீடு வைகினேன்**
**என்பெரு வினையினா லின்றுன் மைத்துனன்**
**தன்புய வலியினாற் றழுவ வுன்னினான்.**

[அன்புடைதேவீ தன் அருகு தோழியாய் நின் பெருங்கோயிலின் நீடு வைகினேன், என் பெரு வினையினால் இன்று உன் மைத்துனன் தன் புயம் வலியினால் தழுவ உன்னினான்.]

**விளக்கம் :-** புயவலி படைத்த தன்னை, என்ன அநியாயங்களைச் செய்தாலும் அரசன் இடையிட்டுக் கண்டிக்க மாட்டான், என்ற எண்ணத்தினால் போலும், உன் மைத்துனன், என்னைத் தழுவ நினைத்தான்! என்று அவள் அரசனை இகழ்ந்தாள், என்பதாம்.

**39. பெருந்தகை யன்றிது பேச லன்றிநீ
இருந்தனை யுனக்கர செங்ஙன் செல்வது
வருந்தினர் வருத்தநீ மாற்ற லாயெனின்
அருந்திற லரசநின் னாணை பொன்றுமே.**

[பெருந்தகை அன்று இது, பேசல் அன்றி நீ இருந்தனை, உனக்கு அரசு எங்ஙன் செல்வது? வருந்தினர் வருத்தம் நீ மாற்றலாய் எனின் அருந் திறல் அரச, நின் ஆணை பொன்றுமே.]

**விளக்கம் :-** பேசல் அன்றி இருந்தனை, இது பெருந்தகை அன்று; (அநீதியைக் கண்டித்தல் செய்யாத) உனக்கு அரசாளுகை எங்ஙன் செல்வது? (எனக்குத் தீங்கு நினைத்த அந்தக் கீசகனைக் கண்டித்து) ஒரு சொல் வழங்காமல் இருந்தனை, உனது இச் செயல் பெருந்தன்மையின் பாற்படாது; ஆகவே, உனக்கு அரசாளுகை எங்ஙனம் நடப்பதாகும்? வருந்தினர் வருத்தம் களையும் சக்தி யற்றவனாயின், உனது ஆட்சி அழியுமே!—என்று பாஞ்சாலி மேலும் இடித்துரைத்தாள்,— என்பதாம். அருந் திறல் அரச என்றது, அவனை இகழும் குறிப்பினது.

**40. எனவிவள் புலம்பிமெய் யேய்ந்த பூழியும்
கனதன நனைந்திடுங் கண்ணி னீருமாய்
மனமிக மறுகிட மன்னன் தேவிபால்
இனைவுட னெய்திவீழ்ந் தேங்கி விம்மினாள்.**

[என இவள் புலம்பி மெய் ஏய்ந்த பூழியும் கனம் தனம் நனைந்திடும் கண்ணின் நீருமாய், மனம் மிக மறுகிட மன்னன் தேவிபால், இனைவுடன் எய்தி வீழ்ந்து ஏங்கி விம்மினாள்.]

**விளக்கம் :-** மெய் ஏய்ந்த பூழி - உடலிலே படிந்த புழுதி. மனம் மிக மறுகிட - மனம் மிகவும் கலக்கமுற. இனைவு - வருத்தம், துன்பம். ஏங்குதல் - அரசன் நீதி வழங்காமையால் எழுந்த உள்ளத் தளர்ச்சி, கனம் தனம் நனைந்திட - பருத்த முலைகள் (கண்ணீரால்) நனைந்திட.

## தருமன் இடித்துரைத்தல்

**41. பூதல மாண்மையாற் புரக்கு மன்னவர்
தீதொழில் புரிஞரைத் தெண்டி யாரெனின்
நீதியுஞ் செல்வமு நிலைபெ றுங்கொலோ
ஏதிலர் தமரென விரண்டு பார்ப்பரோ.**

]பூதலம் ஆண்மையால் புரக்கும் மன்னவர் தீ தொழில் புரிஞரை தெண்டியார் எனின், நீதியும் செல்வமும் நிலைபெறும் கொல் (ஓ)? ஏதிலர், தமர் என இரண்டு பார்ப்பரோ?]

**விளக்கம் :-** ஏதிலர் - அயலார், தொடர்பு இல்லாதவர். தமர் - சுற்றத்தார். ஏதிலர் என்றும் தமர் என்றும் பார்க்காமல் தீமையைக் கடிதலே செங்கோன்மை ஆதலால், தீங்கு இழைத்த

கீசகனைத் தெண்டியாமை, பிழையே, என்று தருமன் விராடனுக்குக் கூறினான், என்பதாம். தீத்தொழில், செய்யுளின் ஓசை நோக்கி தீ தொழில், என வலிமிகாது நின்றது.

**42. யாருமில் லொருத்திநி னில்லில் வைகினால்**
**ஆர்வமுற் றவள்வயி னன்பு கூர்வது**
**வீரமோ தருமமோ விருப்ப மோவிவை**
**பூரிய ரலாதவர் புரிதல் போதுமோ.**

*[யாரும் இல் ஒருத்தி நின் இல்லில் வைகினால், ஆர்வம் உற்று அவள் வயின் அன்பு கூர்வது வீரமோ! தருமமோ! விருப்பமோ! இவை, பூரியர் அலாதவர் புரிதல் போதுமோ!]*

**விளக்கம் :-** விருப்பமோ-உண்மையான காதலின் காரியமோ, (அன்று என்றபடி). பூரியர் - கீழ்மக்கள். கதியற்ற ஒரு பெண், உன் மனை வாழ்கையில், அவளுக்கு எத்தீங்கும் நேராதபடி காத்தலன்றோ வீரமும் தர்மமும் ஆகும். அவளைப் பலாத்காரம் செய்வது காதலும் தக்கதுமாகாதே. இவ்வாறு செய்தலைக் கீழ்மக்கள் அல்லவோ மேற்கொள்வர், என்று தருமன் கூறினான், என்பதாம்.

**43. கீசக னாயினுங் கேடு செய்தனன்**
**ஆசைநோய் மன்பதை யனைத்தி னுக்குமுண் (டு)**
**ஏசிது நினக்குமென் றிருந்த வேந்தொடும்**
**வாசகம் பலசொனான் மறைவ லானுமே.**

*[கீசகன் ஆயினும் கேடு செய்தனன், ஆசை நோய் மன்பதை அனைத்தினுக்கும் உண்டு; ஏசு இது நினக்கு என்று, இருந்த வேந்தொடும் வாசகம் பல சொனான் மறைவலானும், ஏ.]*

**விளக்கம் :-** வீரனும் உனது சுற்றத்தானும் ஆகிய கீசகன் ஆயினும் அவன் செய்யத் தகாத காரியத்தைச் செய்தான். காம மயக்கம் என்பது மனித வர்க்கத்திற்கு உண்டு என்பது உண்மையே, (மனித வர்க்கத்தில் அவன் ஒருவன் ஆதலால் பிழையுடைய இச் செயலைச் செய்தான்). ஆனால், ''தீமையை ஒறுத்து நீதியை நிலை நிறுத்த வேண்டிய மன்னனான உனக்கு, அது செய்யாமை பழி விளைப்பதே ஆகும்'', என்று அவையிருந்த விராடனுக்கு முனிவனது வடிவங்கொண்ட தருமன் நீதி வாசகங்கள் பல கூறினான்,—என்பதாம். நினக்கும், என்பதிலுள்ள எச்ச உம்மை, கீசகனுக்குப் பழியை உண்டாக்குவதுபோல், அவனைக் கண்டியாமை மன்னனாகிய உனக்கும் பழியை உண்டாக்கும் என்ற பொருளது.

**44. முன்னுற முனிவரன் மொழிந்த வாய்மையும்**
**இன்னலோ டழுதவ ளிசைத்த வாய்மையும்**
**கன்னமூ டுறச்சுடக் கருத்த ழிந்துபோய்**
**மன்னனுந் தன்றிரு மனையி லெய்தினான்.**

[முன் உற முனிவரன் மொழிந்த வாய்மையும், இன்னலோடு அழுதவள் இசைத்த வாய்மையும் கன்னம் ஊடு உற சுட, கருத்து அழிந்துபோய் மன்னனும் தன் திருமனையில் எய்தினான்.]

**விளக்கம் :-** முன் உற - தன் எதிரிலே. முனிவரன் - முனி வேடங் கொண்ட தருமன். இன்னல் - துன்பம். கன்னம் ஊடுற சுட - காதைத் துளைத்துக்கொண்டு போய்ச் சுட. தருமனும் தையலும் கூறிய மொழிகள் தன் காதினுட் சென்று சுடலும், விராடன் மனம் அழிந்தவனாய்த் தன் மனை சென்றான், என்ப தாம்.

**45.** **கண்ணெருப் பெழவிரு கைந்நெ ருப்பெழ**
**உண்ணெருப் பெழத்தன துடனெ ருப்பெழ**
**மண்ணெருப் பெழவெழ மடையி லெய்தினான்**
**திண்ணெருப் பினுமிகு சினங்கொள் வீமனே.**

[கண் நெருப்பு எழ இரு கை நெருப்பு எழ, உள் நெருப்பு எழ, உடல் நெருப்பு எழ, மண் நெருப்பு எழ எழ, மடையில் எய்தி னான், திண் நெருப்பினும் மிகு சினம் கொள் வீமன், ஏ.]

**விளக்கம் :-** திண் நெருப்பு - எந்தப் பொருளையும் எரித்து அழிக்க வல்ல கொடிய நெருப்பு. திரௌபதிக்கு இழைத்த தீங்கைக் கண்ட கண்களிலிருந்தும், பகை அழிக்கவல்ல கைகளிலிருந்தும், கோபமிகுதியினால் உள்ளத்தினின்றும், உடலினின்றும் தீ எழவும், கோபத்தோடு நடத்தலால் நடக்கும் பூமி வெம்மை கொள்ளவும், திண் நெருப்பைக் காட்டினும் மிகுந்த கோபமுடையவனான வீமன் சமையல் அறை, சென்றான்,—என்பது பொருள். செய்யுள், உயர்வு நவிற்சியின்பாற்படும். எழ, என்ற சொல் ஒரே பொருளில் பல முறை வந்திருப்பதால், **சொற் பொருட்பின் வரு நிலை அணி.**

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**சூரியாஸ்தமனம்**

**46.** **பன்னிரு வரினு நாடொறுங் கனக**
**பருப்பதம் வலம்வருந் தேரோன்**
**மின்னிகர் மருங்குல் விரதசா ரணிபால்**
**விளைவுறு துயரம துணர்ந்து**
**தன்னொரு மரபிற் றோன்றலை வெறுத்துத்**
**தனிப்பெருந் தேர்குட பொருப்பின்**
**சென்னியி னுருள வுருட்டியத் திசையுஞ்**
**சிவப்புறத் தானுமெய் சிவந்தான்.**

[பன்னிருவரினும் நாள் தொறும் கனகம் பருப்பதம் வலம் வரும் தேரோன், மின் நிகர் மருங்குல் விரதசாரணிபால் விளைவுறு துயரம் அது உணர்ந்து, தன் ஒரு மரபில் தோன்றலை வெறுத்து,

தனி பெருந்தேர் குட பொருப்பின் சென்னியின் உருள உருட்டி அ திசையும் சிவப்பு உற தானும் மெய் சிவந்தான்.]

**விளக்கம் :-** இது சூர்யாத்தமன வருணனை யாகும். சூர்யர்கள் பன்னிருவர் என்று நூல்கள் கூறும். அவர்களுள் நாள்தோறும் பொன் மயமான மேரு மலையை வலம் வரும் தேரை உடையவனான சூரியன், மின்னலை ஒத்த, துவளும் இடையை உடைய விரத சாரணியிடம் உண்டான துயரத்தை அறிந்து, தனது ஒப்பற்ற குலத்தில் தோன்றிய விராட மன்னனை வெறுத்து, தனது ஒப்பற்ற பெரிய தேரை மேற்கு மலையின் சிகரத்தில் உருளச் செலுத்தி, அத் திசையும் தானும் சிவந்தான்,—என்பது பொருள். திரௌபதிக்குத் தீங்கு இழைத்த கீசகனைக் கண்டிக்காத, தன் வம்சம் வந்த விராடனை வெறுத்து, அங்கே இருப்பதற்கு விரும்பாமல், குடதிசையும் தானும் சிவப்புறச் சூரியன் அத்தமன மலையை அடைந்தான், என்ற இந்த வர்ணனை, தற்குறிப்பேற்ற அணி ஆகும். சிவத்தல், கோபத்தின் மெய்ப்பாடு. விராடன் நீதி நடத்தாமையால், அவனது குல முதல்வனான சூரியன் கோபங் கொண்டான் என்று கூறியபடி.

**47. குந்திதன் புதல்வ ரைவரும் சோக**
**முதிர்ந்திட விதயமுங் கொதித்தார்**
**வெந்திறல் வடிவேல் விராடனுந் தனது**
**வேத்தியல் பொன்றலின் வெறுத்தான்**
**செந்திரு வனைய சுதேட்டிணை யென்னுந்**
**தெரிவையுந் தெருமர லுழந்தாள்**
**அந்தமா நகரி லனைவரு நைந்தா**
**ரார்கொலோ வாகுல முறாதார்.**

[குந்தி தன் புதல்வர் ஐவரும் சோகம் முதிர்ந்திட இதயமும் கொதித்தார், வெந்திறல் வடிவேல் விராடனும் தனது வேந்து இயல் பொன்றலின் வெறுத்தான், செந்திரு அனைய சுதேட்டிணை என்னும் தெரிவையும் தெருமரல் உழந்தாள், அந்த மா நகரில் அனைவரும் நைந்தார், ஆர் கொல் ஓ ஆகுலம் உறாதார்?]

**விளக்கம் :-** தெருமரல் - மனச் சுழற்சி. ஆகுலம் - துன்பம். கீசகனது அக்கிரமச் செயல், பாண்டவர், அரசன், அரசமாதேவியோடு, அந்நகர் உள்ளார் அனைவரையும் வருந்தச் செய்தது, என்பதாம்.

## இரவில் திரௌபதி வீமனைச் சந்தித்தல்

**48. அனைவருந் துயின்று கங்குலும் பானா**
**ளானபி னழுதகண் ணீரோடு**
**இனைவரு தையல் கண்கணீர் மல்க**
**விறைமகன் மடைப்பளி யெய்தி**

**நினைவரு செற்ற முடித்திட வல்லார்**
**நீயல தில்லையிக் கங்குல்**
**கனைவரு கழலாய் புரிவதியா தென்றாள்**
**காளையுங் கனன்றிவை சொல்வான்.**

[அனைவரும் துயின்று கங்குலும் பால் நாள் ஆனபின், அமுத கண்ணீரோடு இனைவரு தையல் கண்கள் நீர் மல்க, இறை மகன் மடைப்பளி எய்தி நினைவரு செற்றம் முடித்திட வல்லார் நீ அலது இல்லை, இ கங்குல் கனைவரு கழலாய் புரிவது யாது? என்றாள்; காளையும் கனன்று இவை சொல்வான்.]

**விளக்கம் ;-** பால்நாள் - பாதிப் பொழுது. இனைதல் - வருந்தல். இனைவரு-(வரு, துணைவினை) வருந்துகின்ற. கண்கள் நீர் மல்க கண்களில் நீர் பெருக. இறை மகன்-அரச குமாரனான வீமன். நினைவரு செற்றம் - நினைக்கத்தக்க, அதாவது பெரிய பகை, (வரு, துணைவினை). இப்போது நமக்குப் பெரிய பகைவனான கீசகனை ஒழிக்கத்தக்கவன், நீயே; இந்த இரவில் நீ செய்யப்போவது யாது? என்று திரௌபதி கேட்க, வீமனும் மனக் கொதிப்புடன் பேசுவானாயினான். கீசகனால் தனக்கு அவமானம் ஏற்பட்டது முதல் திரௌபதி கண்ணீர் விட்ட வண்ணம் இருந்ததால் ''கண்ணீரோடு இனைவரு தையல்'' என்றார்.

**49. பொறையெனப் படுவ தாடவர் தமக்குப்**
**பூணெனப் புகலினும் பொருந்தார்**
**முறையறப் புரிந்தா லக்கணத் தவர்தம்**
**முடித்தலை துணிப்பதே முழுப்பூண்**
**நறைமலர் குழலார் தமக்குமெய் யகலா**
**நாணமே நலஞ் செய்பூ ணெனினும்**
**நிறையுடைப் பெரும்பூ ணமளிவாய் நாண**
**நிகழ்வுறா நிகழ்ச்சியே யன்றோ.**

[பொறை எனப்படுவது ஆடவர் தமக்கு பூண் என புகலினும், பொருந்தார் முறை அற புரிந்தால் அ கணத்து அவர்தம் முடிதலை முடிப்பதே முழு பூண்; நறை மலர் குழலார் தமக்கு மெய் அகலா நாணமே நலம் செய் பூண் எனினும், நிறை உடை பெரும் பூண் அமளிவாய் நாணம் நிகழ்வு உறா நிகழ்ச்சியே அன்றோ?.]

**விளக்கம் :-** பொறை-பொறுமை. பூண் - ஆபரணம், முடித் தலை - கிரீடம் அணிந்த தலை. துணித்தல் - துண்டுபடச் செய்தல். முழுப் பூண் - முழுமை யுற்ற, அதாவது சிறந்த ஆபரணம். நறை மலர்க் குழலார் - பெண்கள். அமளி - படுக்கை. மங்கையர்க்கு நாணம் சிறந்த ஆபரணமாயினும், கணவனோடு கலவி நிகழ்த்தும் படுக்கையில், நாணம் இல்லாமையே அவர் களுக்கு மிகச் சிறந்த ஆபரணமாகும், அதுபோல், பொறை ஆடவர்க்குப் பூஷணம் எனினும், பகைவர் முறை கெடச் செய்யுங் காலை, அவர் முடி துணித்தலே மிகச் சிறந்த பூஷணமாகும்,

என்று வீமன் கூறியபடி. இது எடுத்துக்காட்டு உவமை அணி ஆகும்.

**50. அரசவைப் புறத்திற் சௌபலன் சூதி**
**லழிந்தநா ளினுமெமை யடக்கி**
**முரசவெங் கொடியோன் றேசழித் தனனா**
**லின்றுமம் முறைமையே மொழிந்தான்**
**புரசைவெங் களிற்றின் மத்தகம் பிளக்கும்**
**போருகிர் மடங்கல்போ லின்னே**
**துரிசறப் பொருது கீசக னுடலந்**
**துணிப்பன்யான் றுணைவரோ டென்றான்.**

[அரசு அவை புறத்தில் சௌபலன் சூதில் அழிந்த நாளினும் எமை அடக்கி, முரசம் வெம் கொடியோன் தேசு அழித்தனன் (ஆல்), இன்றும் அ முறைமையே மொழிந்தான்; புரசை வெம் களிற்றின் மத்தகம் பிளக்கும் போர் உகிர் மடங்கல் போல் இன்னே, துரிசு அற பொருது கீசகன் உடலம் துணிப்பன் யான் துணைவரோடு என்றான்.]

**விளக்கம் :-** சௌபலன் - சுபலனின் மகனான சகுனி. தேசு - பராக்கிரமத்தின் பிரகாசம். துரிசு - குற்றம், இக் கங்குல் புரிவது யாது? எனக் கேட்ட திரௌபதிக்கு, இப்பொழுதே கீசகனையும், அவனது துணைவரையும் அழிப்பேன், என்று வீமன் பதில் அளித்தான், என்பதாம். தேசு - (தேஜஸ்) பிரகாசம், இங்கே வீரத்தின் பிரகாசம். தமையனது பொறுமையால் தங்களுக்கு நேர்ந்த தேசழிவை வீமன் கசந்த மனத்துடன் கூறினான் என்க.

திரௌபதியின் கூற்று

**51. மருத்தின்மா மதலை வார்த்தைகேட் டந்த**
**மருச்சகன் மடக்கொடி யுரைப்பாள்**
**உரைத்தநா ளெல்லாஞ் சில்பக லொழிய**
**வொழிந்தன வொழிவிலா வுரவோய்**
**அருத்தியோ டொருவ ரறிவுறா வண்ண**
**மிருந்தசீ ரழிவுறு மென்னும்**
**கருத்துநின் றம்முற் குண்மையிற் றடுத்தான்**
**காலமுந் தேயமு முணர்வான்.**

[மருத்தின் மா மதலை வார்த்தை கேட்டு அந்த மருச்சகன் மடம் கொடி உரைப்பாள்: உரைத்த நாள் எல்லாம் சில் பகல் ஒழிய ஒழிந்தன, ஒழிவு இலா உரவோய், அருத்தியோடு ஒருவர் அறிவுறா வண்ணம் இருந்த சீர் அழிவுறும் என்னும் கருத்து நின் தம் முற்கு உண்மையின் தடுத்தான், காலமும் தேயமும் உணர் வான்.]

**விளக்கம் :-** மருத்தின் மாமதலை - வாயுவின் சிறந்த புத்திரனான வீமன். மருச்சகன் - அக்சினி. உரைத்தநாள் - பன்னிரண்டு

வருட வனவாசம், ஓராண்டு அஜ்ஞாத வாசம், என்ற காலம். சில் பகல் ஒழிய ஒழிந்தன - சில நாட்கள் போல் நீங்க, அக்கால எல்லையின் பெரும்பகுதி கழிந்துவிட்டன. அருத்தியோடு - (எஞ்சியுள்ள சில நாட்களும் இனி ஒருவரும் அறியாவண்ணம் கழிய வேண்டுமே என்ற) விருப்பத்தோடு. ஒருவரும் அறியா வண்ணம் இருந்த சீர் - எவரும் அறியாதபடி நாம் கடவநாள் கழித்த நேர்மை, நின் தம் முற்கு - உனது முன்னவனாகிய தருமனுக்கு, உண்மையின் - இருத்தலால் (தடுத்தான்). காலமும் தேயமும் உணர்வான் - எந்தக் காலத்தில் எந்த இடத்தில் அடங்கியிருத்தல் நலம் என்பதை அறிந்தவனான உன் தமையன் (கீசக வதத்தைத் தடுத்தான்). கீசகனை இராச சபையில் வதைத்தலைத் தருமன் தடுத்ததற்குத் திரௌபதி காரணங் காட்டினாள்,—என்க. பாண்டவர் உருக்கரந்தவராய் விராடனிடம் வந்து பத்து மாதங்கள் கழிந்தபின். கீசக வதம் நடந்தது என்று, முதல் நூல் கூறும். ஆகவே இன்னும் கழியவேண்டிய காலம் இரண்டு மாதங்களே.

**52.** **பாயும்வெஞ் சிறகர்க் கலுழன்முன் பட்ட**
**பாந்தள்போற் கீசகன் பதைப்பக்**
**காயும தி்ந்தக் கங்குலிற் கடனன்**
**றொருபக லிருபகல் கழிந்தால்**
**நேயமோ டின்று வந்துகந் தருவர்**
**நேர்பட மலைந்தன ரென்னும்**
**தூயசொல் விளையப் பொருவதே யுறுதி**
**யென்னவத் திரௌபதி சொன்னாள்.**

[பாயும் வெம் சிறகர் கலுழன் முன் பட்ட பாந்தளேபோல், கீசகன் பதைப்ப காயுமது இந்த கங்குலில் கடன் அன்று; ஒரு பகல் இரு பகல் கழிந்தால் நேயமோடு இன்று வந்து கந்தருவர் நேர்பட மலைந்தனர் என்னும் தூய சொல் விளைய பொருவதே உறுதி, என்ன அ திரௌபதி சொன்னாள்.]

**விளக்கம் :-** கலுழன் - கருடன். பாந்தன் - பாம்பு. காயுமது- சினந்து அழிப்பது. நேர்பட - எதிரில் நின்று. தூய சொல் - நல்ல சொல். உறுதி - நன்மை. இன்றே கீசகனைக் கொல் வேன், என்று கூறிய வீமனுக்கு, "அது தக்கது அன்று; இரண் டொரு பகல் கழிந்தபின் கொன்றால், அன்புடைய கந்தருவர் வந்து கொன்றார், என்ற பேச்சு ஏற்படும். அதுவே நமக்கு நன்மை", என்று திரௌபதி கூறினாள், என்பதாம்.

**53.** **ஐயென விவனுந் தன்னைமுன் பயந்த**
**வாரழ லனையகற் புடைய**
**தையறன் மொழியைத் தானுமுட் கொண்டு**
**தகுசெயல் விரகுடன் சாற்றி**

**வெய்யதன் சினமுந் தன்புய வலிபோன்**
**மேலுற மேலுற வளர**
**நெய்யுறு கனலிற் பொங்கிய கங்கு**
**னீந்தினான் வேந்தனுக் கிளையோன்.**

[ஐ என இவனும், தன்னை முன் பயந்த ஆர் அழல் அனைய கற்பு உடைய தையல் தன் மொழியைத் தானும் உட்கொண்டு, தகு செயல் விரகுடன் சாற்றி, வெய்ய தன் சினமும் தன் புயம் வலிபோல் மேல் உற மேல் உற வளர, நெய் உறு கனலின் பொங்கி, அ கங்குல் நீந்தினான் வேந்தனுக்கு இளையோன்.]

**விளக்கம் :-** வேந்தனுக்கு இளையோனாகிய வீமனும், தன்னை முன்னே பயந்த ஆர் அழல் அனைய தையல் தன் மொழியை ஐ என தானும் உட்கொண்டு, தகு செயல் விரகுடன் சாற்றி, தன் புயம் வலி போல் வெய்ய தன் சினமும் மேலுற மேலுற வளர, நெய்யுறு கனலின் பொங்கி அக் கங்குல் நீந்தினான்,—என்பது அன்வயம். ஐ என தானும் உட்கொண்டு - நன்று என்று தானும் ஏற்று. தகு செயல் - (கந்தருவர் வந்து கொன்றார் என்று தோன்றுவதற்குத்) தக்கதான செயல். விரகு- தந்திரம். மேலுற மேலுற வளர - மேலோங்கி வளர. கங்குல் நீந்தினான் - இரவை சிரமத்துடன் கழித்தான். ஐ என்பது அங்கீகாரக் குறிப்பு. அஜ்ஞாதவாச காலம் இன்னும் இரண்டு மாதம் இருப்பதால், அதுவரையில் வெளிப்படாமல், இருப் பதற்குக் கீசகவதம் கந்தருவரால் நிகழ்ந்ததாகப் பேச்சுப் படும்படி நிகழ்தல் அவசியம் என்று திரௌபதி சொன்னதை ஏற்று, அதற்குத் தக்கதான உபாயத்தையும் சொல்லி அவளை அனுப்பிவிட்டுப் பொங்கி எழும் சினம் அடங்கப்பெறாதவனாய், அன்றை இரவைக் கழித்தான்,—என்க. ஆர் அழல் அனைய கற்பு - பெரிய தீயைப் போல் பிறரைத் தன்பால் அணுக வொட்டாத கற்பு.

**54. அற்றைநா ளிரவிற் றன்பரி தாப**
**மாறிய வறிவுடைக் கொடியும்**
**மற்றைநா ளந்தச் சுதேட்டிணை கோயின்**
**மன்னவன் மைத்துனன் வரலும்**
**கற்றைவார் குழலிற் பூழியுங் கண்ணீர்**
**கலந்தவான் கொங்கையு சுமந்தாங்(கு)**
**ஒற்றைமென் கொடிபோ னின்றன ளவனு**
**முளங்கவ ரவணிலை கண்டான்.**

[அற்றை நாள் இரவில் தன் பரிதாபம் ஆறிய அறிவு உடை கொடியும், மற்றை நாள் அந்த சுதேட்டிணை கோயில் மன்னவன் மைத்துனன் வரலும், கற்றை வார் குழலில் பூழியும் கண்நீர் கலந்த வான் கொங்கையும் சுமந்து, ஆங்கு ஒற்றை மெல் கொடி போல் நின்றனள், அவனும் உளம் கவர் அவள் நிலை கண்டான்.]

**விளக்கம் :-** பரிதாபம் - வருத்தம். கீசகனை அழித்தற்கு வீமனோடு சூழ்ந்து திரும்பிய திரௌபதி வருத்தம் மாறினவளானாள். இரண்டொரு தினங்கள் சென்ற பிறகு, கீசகன் அரசியின் மனை வந்த பொழுது, ஒரு தனியிடத்தில் திரௌபதி புழுதி படிந்த கூந்தலுடனும், கண்ணீரால் நனைந்த கொங்கையுடனும் ஒரு மெல்லிய கொடிபோல் வாடி நின்றது, கீசகனோடு பேச வேண்டும், என்ற கருத்தில், என்க. அவனும் இந்நிலையில் அவளைக் கண்டான்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

### கீசகனுக்கு நங்கை குறிப்பிடம் கூறல்

**55. கலைமதி கண்ட காந்தக் கல்லென வுருகிச் சிந்தை
தலைமக னல்லான் வஞ்சந் தனக்கொரு வடிவ மானோன்
நிலைபெறு கற்பி னாளை நேருற நோக்கிப் பின்னும்
உலைவுறு காதன் மிஞ்ச வுரனழிந் துரைக்க லுற்றான்.**

[கலைமதி கண்ட (சந்திர) காந்தம் கல் என உருகி சிந்தை; தலைமகன் அல்லான், வஞ்சம் தனக்கு ஒரு வடிவம் ஆனோன், நிலை பெறு கற்பினாளை நேர் உற நோக்கி, பின்னும் உலைவு உறு காதல் மிஞ்ச, உரன் அழிந்து உரைக்கல் உற்றான்.]

**விளக்கம் :-** கலைமதி - பதினாறு கலைகளை உடைய சந்திரன். சந்திரனைக் கண்டதும் சந்திரகாந்தக் கல் உருகும், என்பர். (அதுபோல் கீசகன்) சிந்தை உருகி - மனம் உருகி. நற்குணங்களால் தலைமையிடம் பெறாதவனும் வஞ்சனையின் ஒரு வடிவம் ஆனவனுமான கீசகன்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். உலைவுறு காதல் - வருத்தி அழிக்கவல்ல ஆசை. திரௌபதியைக் கண்டதும், குணக்கேடனான கீசகன், காதல் மிகவே, சில கூறுவானானான், என்பதாம். தலைமகன் - குணங்களால் சிறந்தவன்.

**56. மன்னவன் வாழ்வு மிந்த வளநகர் வாழ்வு மெல்லாம்
என்னது வலிகொண் டென்ப தின்றுனக் கேற்பக் கண்டாய்
உன்னைமெய் காக்குந் தேவ ருறுதியு முரனுங் கண்டாய்
என்னைகொல் லினியுன் னெண்ணென் றிருகரங் கூப்பி
னானே.**

[மன்னவன் வாழ்வும் இந்த வளநகர் வாழ்வும் எல்லாம் என்னது வலிமை கொண்டு என்பது இன்று உனக்கு ஏற்ப கண்டாய், உன்னை மெய் காக்கும் தேவர் உறுதியும் உரனும் கண்டாய், என்னை கொல் இனி உன் எண்? என்று இரு கரம் கூப்பினான், ஏ.]

**விளக்கம் :-** விராடனது நல்வாழ்க்கைக்கும் நாட்டின் வளத்திற்கும் எனது தோள் வலியே காரணம் என்பதை இன்று அறிந்

தாய், உனது மெய்காக்கும் தேவரின் காவல் தொழிலின் உறுதியும், அவரது வலியும், எத்தன்மைத்து என்பதை, அவர் உன்னைக் கை விட்டதைக் கொண்டு அறிந்தாய்; இனி, உன் எண்ணம் யாது? என்று கூறி, இரு கரங்களையும் கூப்பி அவளை வணங்கினான்,— என்பது பொருள்.

**57. கருத்தினி முடியு மென்று கடுங்கனன் முகத்திற் றோன்றும்**
**திருத்தகு பாவை யந்தத் தீயவன் றன்னை நோக்கி**
**வருத்தநீ யுறவு முன்னர் மறுத்தனன் மரபி னாலும்**
**சரித்திரத் தாலுங் கொண்ட தவவிர தத்தி னாலும்**

[கருத்து இனி முடியும் என்று கடுங்கனல் முகத்தில் தோன்றும் திரு தகு பாவை அந்த தீயவன் தன்னை நோக்கி, ''வருத்தம் நீ உறவும் முன்னர் மறுத்தனன், மரபினாலும், சரித்திரத்தாலும், கொண்ட தவ விரதத்தினாலும்'', — அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** மரபு - பிறந்த குலம். சரித்திரம் - குலத்திற்கு ஏற்ற நல்லொழுக்கம். தவ விரதம் - பூண்ட சிறந்த விரதம். கனலில் தோன்றிய திரௌபதி, இனித் தன் கருத்து நிறைவேறும் என்று எண்ணி, தீயனான கீசகனைப் பார்த்து, ''பிறந்த குலம், அக் குலத்திற்கு ஏற்ற ஒழுக்கம், மேற்கொண்ட கற்பு நெறி வழுவா விரதம் ஆகியவற்றால் நீ வருத்தம் உறும்படி முன்னர் மறுத்தேன்''—என்று கூறியவள், மேலும் தொடர்ந்து கூறுவாள்.

**58. கந்தரு வருமற் றென்னைக் காப்பது மறந்தார் போலும்**
**இந்திர னெனினு மாத ரெளிமையி னொருப்பட் டெய்தார்**
**புந்தியி லொன்றுங் கொள்ளே லாரிருட் பொழுதி லின்று**
**சந்தணி குவவு தோளாய் தனித்துநீ வருதி என்றாள்.**

[கந்தருவரும் மற்று என்னை காப்பது மறந்தார் போலும், இந்திரன் எனினும் மாதர் எளிமையில் ஒருப்பட்டு எய்தார்; புந்தியில் ஒன்றும் கொள்ளேல், ஆர் இருள் பொழுதில் இன்று, சந்து அணி குவவு தோளாய், தனித்து நீ வருதி, என்றாள்.]

**விளக்கம் :-** இந்தச் செய்யுளாலும், முன்னைய செய்யுளாலும், தான் கீசகனை மறுத்ததற்குத் திரௌபதி காரணங் கூறுகின்றாள். குலம், குலத்திற்கு ஏற்ற ஒழுக்கம், கற்புநெறி கடவாமையாகிய விரதம், கந்தருவர் காவாமை, இந்திரனே எனினும் எளிதில் உடன்படாமையாகிய பெண்மைக்குணம், ஆகிய ஐந்தும் அவள் கூறிய காரணங்கள். இவற்றில், இவள் இப்பொழுது கீசகனது இச்சைக்கு இசைந்ததற்கு முக்கியமான காரணம் கந்தருவர் தன்னைக் காவாமையாகும். இது அவனை வஞ்சிப்பதற்காக நங்கை கற்பித்துக்கொண்ட காரணம் ஆகும். காரணங் காட்டிய படியினாலேயே, அவள் வஞ்சிக்கும் கருத்துடையாள், என்பதை உணர்ந்து கொள்ளும் வித்தகம் அவனுக்கு இல்லை போலும்! அல்லது அவளது வஞ்சனையைத் தெரிந்து

கொள்ளாமைக்கு அவனது வரம்பு கடந்த காமமும் காரணம் ஆகலாம். 'இரவில் தனித்து வா', என்று கூறியவள் வந்து சேர வேண்டிய இடத்தையும் அடுத்த செய்யுளில் கூறுகின்றாள். சந்து அணி குவவுத் தோளாய் - சந்தனம் பூசிய திரண்ட தோள்களை உடையவனே. மற்று : வினை மாற்று.

**59. அக்கொடி யுரைத்த மாற்ற மவன்செவிக் கமுத மாகிப்**
**புக்குயிர் நிறுத்தி மெய்யும் புளகெழ விளகி நெஞ்சம்**
**மிக்கதோர் வேட்கை கூர விடுத்தலின் வேந்தன் கோயில்**
**கொக்கின்மேற் குயில்கள் கூவுங் குளிர்பொழிற் குறியுஞ்**
**சொன்னாள்.**

[அ கொடி உரைத்த மாற்றம் அவன் செவிக்கு அமுதம் ஆகி புக்கு, உயிர் நிறுத்தி மெய்யும் புளகு எழ, இளகி நெஞ்சம் மிக்கது ஓர் வேட்கை கூர விடுத்தலின், வேந்தன் கோயில் கொக்கின் மேல் குயில்கள் கூவும் குளிர் பொழில் குறியும் சொன்னாள்.]

**விளக்கம் :-** திரௌபதி சொன்ன சொல் அவனது செவிக்கு அமுதம் ஆகி, உட்புகுந்து, அழியும் உயிரை நிலைக்கச் செய்து, உடல் புளகம் கொள்ளவும், நெஞ்சம் இளகி மிக்கதான ஒப்பற்ற வேட்கை வரம்பு கடக்கவும் செய்தலின், (இதுதான் அவனை வஞ்சிக்க ஏற்ற சமயம் என்று கொண்டு திரௌபதி) அரசனது அரண்மனையின் அருகிலுள்ள மாமரத்தின்மேல் குயில்கள் கூவும் குளிர்ந்த பொழிலாகிய குறியிடத்தையும் கூறினாள்,—என்பது பொருள். மெய் புளகு எழவும், என்று உம்மையைப் பிரித்துக் கூட்டுக. கொக்கு - மாமரம். பொழில் என்று சொன்னவள், அடுத்த செய்யுளில் பொழிலிடத்தே உள்ள இன்ப மண்டபம், என்றாள். முதல் நூல் 'நடன சாலை' என்று கூறும்.

**60. குருட்டியன் மதியி னானைக் கோதிலா வறிவின் மிக்காள்**
**மருட்டின ளாகி யந்த வளர்தடம் பொழிலி னோர்சார்**
**இருட்டிடை நிலவு காட்டு மின்பமண் டபத்தின் வம்மின்**
**உருட்டடத் தேரோ யென்றா ளவனுமஃ தொருப்பட் டானே.**

[குருடு இயல் மதியினானை கோது இலா அறிவின் மிக்காள் மருட்டினாள் ஆகி, அந்த வளர் தடம் பொழிலின் ஓர் சார் இருட்டு இடை நிலவு காட்டும் இன்பம் மண்டபத்தில் வம்மின், உருள் தடம் தேரோய், என்றாள், அவனும் அஃது ஒருப்பட்டான், ஏ.]

**விளக்கம் :-** குருட்டு இயல் மதியினான்-புத்தி கெட்டவனான கீசகன். கோது இலா அறிவு - குற்றமிலாத சிறந்த அறிவு. மருட்டினாள் - மதிமயங்கச் செய்தாள். இருட்டிடை நிலவு காட்டும் இன்ப மண்டபம் - இருட்டிலும் நிலவைப் போன்ற பிரகாசத்தைத் தரும் இன்ப மண்டபம். கீசகன் குறியிடம் வர ஒவ்வினான்,—என்பதாம்.

**61.** **குறியவன் றனக்கு நேர்ந்த கொடியவெங் கொலைவேற் கண்ணாள்**
**தறிபொரு களிற்றி னன்ன சமீரணன் மகனை யெய்திச்**
**செறிவொடக் காளை யோடு செப்பிய யாவுஞ் செப்பிப்**
**பிறிதொரு கருத்து மின்றிப் பெரும்பகல் போக்கி னாளே.**

[குறி அவன் தனக்கு நேர்ந்த கொடிய வெம் கொலை வேல் கண்ணாள், தறி பொரு களிற்றின் அன்ன சமீரணன் மகனை எய்தி, செறிவொடு, அ காளையோடு செப்பிய யாவும் செப்பி, பிறிது ஒரு கருத்தும் இன்றி பெரும் பகல் போக்கினாள். ஏ.]

**விளக்கம் :-** தறி பொரு களிறு - கட்டுத்தறியைத் தாக்கி முறிக்கும் மதயானை. சமீரணன் - வாயு. செறிவொடு - விளக்கமாக. காளையோடு-சீசகனிடத்தே. பிறிது ஒரு கருத்தும் இன்றி - சீசகனை அழித்தல் என்ற எண்ணந் தவிர வேறு எந்த எண்ணமும் இல்லாமல். பெரும் பகல் போக்கினாள் - விரைவில் கழியாமல் நீள்கின்ற பகல் பொழுதைக் கழித்தாள். ஒரு காரியத்தில் கருத் தூன்றியவர்க்கு, அந்தக் காரியம் நிகழ்வதற்கு முற்பட்டதான காலம், நீள்வதாகத் தோன்றல் இயற்கை.

**62.** **எல்லையெண் டிசையும் போன விருளெலா மீண்டு துன்ற**
**எல்லையின் றலைவ னான விரவியுங் குடவெற் பெய்த**
**எல்லையில் காத லோனு மிடையிரு ளிடையே யந்த**
**எல்லையை நோக்கிச் சென்றான் யமன்றிசை யென்ன மன்னோ.**

[எல்லை எண் திசையும் போன இருள் எலாம் மீண்டு துன்ற, எல்லையின் தலைவனான இரவியும் குடவெற்பு எய்த, எல்லை இல் காதலோனும் இடையிருள் இடையே அந்த எல்லையை நோக்கி சென்றான், யமன் திசை என்ன மன்னோ.]

**விளக்கம் :-** எட்டுத்திசையின் எல்லை வரை சென்று ஒதுங்கிய இருள் எல்லாம் மீண்டும் நெருங்க,— என்பது முதலடியின் பொருள். எல்லையின் தலைவன் - (எல்லின் தலைவன், ஐ சாரியை) பகற்பொழுதின் தலைவன், (அந்த எல்லின் தலைவனான சூரியன்) குடவெற்பு எய்த -அத்தமனகிரியை அடைய. எல்லையில் காதலோன் - அளவுகடந்த காதலையுடைய சீசகன். இடை இருள் - நடு இரவு. எமன் திசை போவதேபோல் சீசகன் அந்த இன்ப மண்டபம் இருக்கும் திசையை நோக்கிச் சென்றான்,— என்பது ஈற்றடியின் பொருள். மன், ஓ: அசைகள்.

வீமன் பெண் வேடத்தில் குறியிடம் சேரல்

**63.** **வடுவறத் தெவ்வர் போரு மன்னவ னுணவுங் கையால்**
**அடுதொழிற் குரிய செம்பொன் வரையிரண் டனைய தோளான்**
**உடுமுகத் திண்மை வான மொளியற விருண்ட கங்குல்**
**நடுவுறு பொழுதிற் செவ்வி நவ்வியர் கோலங்கொண்டான்.**

[வடு அற தெவ்வர் போரும் மன்னவன் உணவும் கையால் அடு தொழிற்கு உரிய செம்பொன் வரை இரண்டு அனைய தோளான், உடு முகத்தின் மை வானம் ஒளிஅற இருண்ட கங்குல் நடுஉறு பொழுதில், செவ்வி நவ்வியர் கோலம் கொண்டான்.]

**விளக்கம் :-** வடு - குற்றம். தெவ்வர் - பகைவர். பகைவர் போரையும் அரசனது உணவையும் கையால் செய்யும் தொழிலின் உரிமை பூண்ட பொன்மயமான மேருமலை இரண்டை ஒத்த தோள்களை உடைய வீமன்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். அடுதல் - சமைத்தல், கொல்லுதல். உடு - நட்சத்திரம். உடு முகத்தின் மை வானம் - நட்சத்திரங்களைத் தன்னிடத்தே கொண்ட கரிய வானம். ஒளி அற இருண்ட கங்குல் - ஒளி இல்லாமல் இருண்டு கிடக்கும் இரவு. நடுவுறு பொழுது - நடு இரவு. செவ்வி நவ்வியர் கோலம் கொண்டான் - அழகிய மான் போன்ற கண்களை உடைய பெண்ணின் வேடங் கொண்டான்.

**64. அங்கியிற் றோன்று நாளா யணியுட னள்ளிக் கொள்ளப்**
**பொங்கிய விருளின் முன்னம் புகன்றவப் பொங்க ரூடு**
**தங்கிய தவள மாடந் தன்னிடைப் புகுந்து சான்ற**
**இங்கிதத் துடனே நோக்கி யிருந்தன னிமைப்பி லாதான்.**

[அங்கியில் தோன்றும் நாளாயணியுடன், அள்ளிக்கொள்ள பொங்கிய இருளின், முன்னம் புகன்ற அ பொங்கரூடு தங்கிய தவளம் மாடம் தன்னிடை புகுந்து, சான்ற இங்கிதத்துடனே நோக்கி இருந்தனன் இமைப்பு இலாதான்.]

**விளக்கம் :-** அங்கி - அக்கினி. நாளாயணி - மௌத்கல்ய முனிவனின் மனைவியும், திரௌபதியாக மறுபிறவி எடுத்தவளு மான நளாயணி, (திரௌபதி). அள்ளிக் கொள்ளப் பொங்கிய இருள் - கையினால் வாரிக் கொள்ளலாம்படியான செறிந்த இருள், (காரிருள்). பொங்கர் - சோலை. தங்கிய - பொருந்தி யுள்ள. தவளமாடம் - முத்துப் போன்ற வெள்ளிய மண்டபம், (இன்ப மண்டபம்). சான்ற இங்கிதத்துடன் - மிகுந்த கவனத் தோடு, அதாவது கீசகன் வருகையில் மனம் வைத்தவனாய். பெண்கோலங் கொண்ட வீமன், திரௌபதியுடன் குறியிடம் சென்று, இமை கொட்டாமல் கீசகன் வருகையை எதிர்நோக்கின வனாய் இருந்தான், என்பதாம்.

## கீசகன் குறியிடம் சேர்தல்

**65. அணங்கனை சாய லாளை யப்புறங் கரந்து வைத்து**
**மணங்கம ழலங்கன் மார்பன் மண்டபத் திருந்த காலைப்**
**பிணங்கல ணணிந்த தன்ன பேரெழிற் பெற்றி யானெஞ்(சு)**
**உணங்காப் புலர வந்தவ் வுயர்பொழி லூடு சேர்ந்தான்.**

[அணங்கு அன சாயலாளை அப்புறம் கரந்துவைத்து மணம் கமழ் அலங்கல் மார்பன் மண்டபத்து இருந்த காலை, பிணம் கலன் அணிந்தது அன்ன பேர் எழில் பெற்றியான் நெஞ்சு உணங்க, நா புலர அ உயர் பொழிலூடு சேர்ந்தான்.]

**விளக்கம் :-** அணங்கு அனைய சாயலாள் - திரௌபதி. கரந்து வைத்து - மறைவிடத்தில் இருக்க வைத்து, மணம் கமழ் அலங்கல் மார்பன் - வீமன். பிணம் கலன் அணிந்தது அன்ன பேர் எழில் பெற்றியான் - பிணம் ஆபரணங்கள் அணிந்ததைப் போன்று அலங்காரத்தால் தன் எழிலை மிகுவித்துக் கொண்ட தன்மையனான கீசகன். அவன் காமத்தால் உள்ளம் வாடவும், நாக்கு வறட்சியடையவும் மரங்கள் உயர்ந்து வளர்ந்துள்ள சோலையினிடத்தே வந்து சேர்ந்தான். புலவர், கீசகன்பால் கொண்ட வெறுப்பினால், ''பிணம் கலன் அணிந்தது அன்ன, பேரெழில் பெற்றியான்'', என்றார்.

கலிவிருத்தம்

**66. சாந்தினான் மெழுகிய தவள மாளிகை**
**ஏய்ந்தபொற் றூணிடை யிலங்கு மின்னெனச்**
**சேர்ந்துறை பெண்ணுருக் கண்டு சிந்தையில்**
**கூர்ந்தபே ரார்வமோ டிறைஞ்சிக் கூறுவான்.**

[சாந்தினால் மெழுகிய தவளம் மாளிகை ஏய்ந்த பொன் தூணிடை இலங்கும் மின் சேர்ந்து உறை பெண் உரு கண்டு, சிந்தையில் கூர்ந்து பேர் ஆர்வமோடு இறைஞ்சி கூறுவான்.]

**விளக்கம் :-** சாந்து - சுண்ணாம்பு. தவளம் - வெண்மை. மாளிகை ஏய்ந்த - மாளிகையில் பொருந்திய. பொன் தூணிடை இலங்கும் மின் என சேர்ந்து உறை பெண் உரு - பொன்னாலான தூணினிடத்தே, விளங்குகின்ற மின்னலைப்போல் (அத் தூணோடு) நெருக்கி, (அங்கே) தங்கியுள்ள பெண் உருவம். அவ்வுருவத்தைக் கண்டு காமுகனான கீசகன் மனத்தினிடம் மிகுந்து பொங்கும் காதலோடு வணங்கிக் கூறுவானாயினான், என்க. பெண் என்னாமல் பெண் உரு என்றதினால், பெண் வேடம் கொண்ட ஆடவன். என்பதைப் புலவர் குறித்தபடி.

**67. என்பெருந் தவப்பய னென்ற றிந்திலேன்**
**மின்புரை மருங்குலாய் வேட்கை விஞ்சலால்**
**புன்பிழை செய்தனன் பொறுத்தி நீயென**
**அன்புடன் சிலம்பணி யடியில் வீழ்ந்துமேல்.**

[என் பெரும் தவம் பயன் என்று அறிந்திலேன், மின் புரை மருங்குலாய், வேட்கை விஞ்சலால் புல் பிழை செய்தனன்,

பொறுத்தி நீ, என அன்புடன் சிலம்பு அணி அடியில் வீழ்ந்து, மேல்,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** என் பெரும் தவத்தின் பயனாய் வந்தவள் நீ என்று (முன்னர்) அறிந்திலேன்,-என்பது முதலடியின் பொருள். மின்புரை மருங்குலாய் - மின்னலை ஒத்த இடையை உடைய வளே. ''என் தவப்பயன், என்று அறியாமல், வேட்கையால் சிறு பிழை செய்துவிட்டேன்; பொறுத்தி நீ'' என்று கூறிப் பெண் கோலங் கொண்ட வீமனின் காலில் விழுந்து வணங்கி மேலும் கூறுவானாயினான், என்க.

**68. பைங்குலைக் குரும்பையைப் பழித்த கொங்கையாய்**
**மங்குலைப் புழுகளை வைத்த கூந்தலாய்**
**கங்குலிற் கால்வழி காட்ட வந்ததின்(று)**
**இங்குலப் புறுமென தாவி யீயவோ.**

[பைங்குலை குரும்பையை பழித்த கொங்கையாய், மங்குலை புழுகு அளை வைத்த கூந்தலாய், கங்குலில் கால்வழி காட்ட வந்தது இன்று இங்கு, உலப்பு உறும் எனது ஆவி ஈயவோ.]

**விளக்கம் :-** ''பசிய குலை குலையாயுள்ள தெங்கின் குரும்பையைப் பழித்த முலைகளை உடையவளே, மங்குலை (இரவுப் பொழுதை) புழுகு எண்ணெய் கொண்டு தடவி வைத்தது போன்ற கூந்தலை உடையவளே'', என்று விளித்து, இந்த (கண்ணால் வழி காண முடியாத) இரவில், காலே வழிகாட்ட இங்கு இன்று நீ வந்தது அழிதலுறும் எனது ஆவியைக் காத்து அளிக்கத்தானோ, என்றான்,—என்பதாம். உலப்பு உறும் - அழிதலை அடையும். கால் வழி காட்ட வந்தது - கண்ணைக் கொண்டு வழி காண முடியாதபடி இருண்டுள்ள நள்ளிரவில் காலின் துணை கொண்டு நீ வந்தது.

**69. கிஞ்சுக மலர்ந்து நின் கிள்ளை வாய்மையால்**
**அஞ்சலென் றோருரை யளித்தல் காண்கிலேன்**
**நஞ்சன விழிக்கடை நயந்த பார்வைகொண்(டு)**
**எஞ்சுமென் னுயிரினை யெடுப்ப தென்று நீ.**

[கிஞ்சுகம் மலர்ந்து நின் கிள்ளை வாய்மையால் அஞ்சல் என்று ஓர் உரை அளித்தல் காண்கிலேன், நஞ்சு அன விழிக்கடை நயந்த பார்வை கொண்டு எஞ்சும் என் உயிரினை எடுப்பது என்று நீ.]

**விளக்கம் -:** கிஞ்சுகம் - முருக்க மலர். கிஞ்சுகம் மலர்ந்து - முருக்க மலர்போல் சிவந்த வாய் திறந்து. வாய்மை - வாய் மொழி. விழிக்கடை - கடைக்கண். நயந்த - விருப்பத்தோடு கூடிய. எஞ்சும் - அழியும். எடுப்பது - தாங்குவது அதாவது காப்பது. உயிரினை எடுப்பது, என்பது உயிரினைக் காப்பது,

என்பதோடு, உயிரினை அழிப்பது என்ற பொருளையும் தரல் காண்க. எனவே, இனி நிகழப் போவதைக் கீசகன் ஓராது உரைத்த நயத்ததாகும். நிறத்தாலும், ஆடவர் உயிரை வாங்கும் தன்மையாலும் நஞ்சு, விழிக்கு உவமை.

**70. வழிபடு தெய்வமு மற்று முற்று நீ**
**இழிபடு பிறர்முக மென்று நோக்கலென்**
**கழிபட ருற்றதென் காம நோயெனா**
**மொழிபல கூறினான் முகம்பு குந்துளான்.**

[வழிபடு தெய்வமும் மற்றும் முற்றும் நீ, (இனி) இழிபடு பிறர் முகம் என்றும் நோக்கலென், கழிபடர் உற்றது என் காம நோய் எனா, மொழி பல கூறினான் முகம் புகுந்துளான்.]

**விளக்கம் :-** இழிபடு பிறர் - உனக்கு முன் அழகில் இழிதல் உறும் பிற பெண்கள். கழி - மிகுதிப் பொருளதான உரிச்சொல். முகம் - இடம், குறியிடம். படர் - படர்தல், படர், என்பதற்குத் துன்பம் என்று பொருள்கொண்டு, மிகுந்த துன்பத்திற்கு ஆதார மாய் அமைந்த, என்றும் பொருள் கொள்ளலாம். தூணருகு நிற்பது திரௌபதியே என்று கொண்டு காமுகனான கீசகன் இவ்வாறு காதல் வாசகங்கள் பல கூறினான், என்க.

## வேடங்கொண்ட வீமன் வெளிப்படல்

**71. கீசக னிம்முறை கிளந்த பற்பல**
**வாசகங் கேட்டலு மலங்கொ ணெஞ்சுடைப்**
**பூசகர் பூசைகொள் ளாத புன்பவ**
**நாசகக் கடவுள்போ னகைத்து நோக்கியே.**

[கீசகன் இ முறை கிளந்த பல்பல வாசகம் கேட்டலும், மலம் கொள் நெஞ்சு உடை பூசகர் பூசை கொள்ளாத புல் பவம் நாசகம் கடவுள்போல், நகைத்து நோக்கியே,—அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** மலம் கொள் நெஞ்சு உடை பூசகர் பூசை கொள்ளாத - பரிசுத்தம் இல்லாத நெஞ்சை உடைய பூசகரின் பூசையை ஏற்காத. புல் பவம் நாசகம் கடவுள்போல் - (தன்னை உண்மையான அன்போடு அடைந்தவரின்) இழிவுடைய பிறவித் துன்பத்தைப் போக்கவல்ல கடவுளைப்போல். (கீசகனை வீமன் நோக்கி நகைத்து). சிரித்தே திரிபுரம் அழித்தவன் சிவபிரான் ஆதலால், இங்கே கடவுள், என்றது அப் பெருமானைக் குறிப்ப தாகும். மலம் - ஆணவம், மாயை, கன்மம் என்ற, மூன்று மலங்கள்.

**72. பெண்ணுடை யுருக்கொளும் பெற்ற மாமகன்**
**கண்ணுடைப் பொறியெழுங் கனலின் வந்திட**
**மண்ணுடைக் காவலன் மைத்து னன்றனை**
**எண்ணுடைக் கைகளா லிருகை பற்றினான்.**

[பெண் உடை உரு கொளும் பெற்றம் மாமகன் கண் உடை பொறி எழும் கனலின் வந்திட, மண் உடை காவலன் மைத்துனன் தனை, எண் உடை கைகளால் இருகை பற்றினான்.]

**விளக்கம் :-** பெற்றம் மாமகன் - வாயுவின் சிறந்த புதல்வனான வீமன். கண் உடை பொறி எழும் கனலின் வந்திட - கண்களிடையே உள்ளதான கோபத் தீ, எரியும் தீயினின்று வெளிப்படுவது போல் வெளிப்பட. மண் உடை காவலன் - விராடன். மைத்துனன் - கீசகன். எண் உடை கைகளால் இரு கை பற்றினான் - உரங்கொண்ட கை என்று மதிக்கப்படும் தனது கைகளால் (வீமன்) கீசகனது இரண்டு கைகளையும் பற்றினான். எண் என்பதை ஏண் என்பதின் விகாரமாகக் கொள்ளின், **வலிமை** என்பது பொருளாகும். பற்றியது வண்ணமகளின் கரம் என்று கீசகன் நினையா திருக்கும்படி, வீமன் வலிமையுடைய தனது இரு கரங்களாலும் கீசகனது கரங்களை இறுகப் பற்றினான், என்க.

**73. பற்றினான் பற்றிய பாணி யாலெழச்**
**சுற்றினான் கறங்கெனத் தூண மொன்றினோ(டு)**
**எற்றினான் சென்னியை யெடுத்த தன்வினை**
**முற்றினா னெடும்பெரு மூச்ச னாகியே.**

[பற்றினான் பற்றிய பாணியால் எழ சுற்றினான் கறங்கு என, தூணம் ஒன்றினோடு எற்றினான் சென்னியை, எடுத்த தன்வினை முற்றினான் நெடும் பெரு மூச்சன் ஆகியே.]

**விளக்கம் :-** பாணியால் எழ (தூக்கி) கறங்கு என சுற்றினான் - கைகளால் மேல் எழும்படி எடுத்துப் பம்பரம் சுழல்வது போல், அவனைச் சுழலச் செய்தான். நெடும் பெருமூச்சன் ஆகி எடுத்த தன்வினை முற்றினான் - பெருமூச்சு உடையவன் ஆகி (வீமன்) தான் மேற்கொண்ட காரியத்தை நிறைவேற்றுபவனானான். எடுத்த வினை, தன் தேவிக்குப் பரிபவம் விளைத்த கீசகனின் வதம்,

## இருவரும் பொருதல்

**74. வீமனைப் பிடித்தகை விலக்கி மற்றவன்**
**மாமுகத் திருகையு மாறி மோதினான்**
**தீமுகத் தவனையச் செம்மன் மீளவும்**
**சாமுகத் தவனெனத் தள்ளி வீழ்த்தினான்.**

[வீமனை, பிடித்த கை விலக்கி மற்றவன் மாமுகத்து இரு கையும் மாறி மோதினான்; தீ முகத்தவனை அ செம்மல் மீளவும் சா முகத்தவன் என தள்ளி வீழ்த்தினான்.]

**விளக்கம் :-** (வீமன்) பிடித்த கையை மற்றவன் (கீசகன்) விலக்கி, (நிலை) மாறி (வீமனது) சிறந்த முகத்து (தனது) இரு கையுங்கொண்டு மோதினான். தீ முகத்தவனை மீளவும் செம்மல்,

சா முகத்தவன் என தள்ளி வீழ்த்தினான்,—என்று அன்வயிக்க. தீமுகத்தவன் - தீமைகளின் உறைவிடமான கீசசன். செம்மல் - செம்மைக் குணமுடைய வீமன். வீரப் பொலிவு அழிந்து சவத் தோற்றம் எய்திய கீசகனை வீமன் தள்ளித் தரையில் விழச் செய்தான், என்பது ஈற்றடியின் பொருள்.

**75. ஓரொரு குத்தொரு வுருமு வீழ்ந்தென**
**மேருவோ டொத்ததோள் வீமன் குத்தலும்**
**ஈரிடத் தினும்விலா வெலும்பு நெக்கன**
**கூருகிர்த் தலங்களாற் குருதி கக்கவே.**

[ஓர் ஒரு குத்தும் ஒரு உருமு வீழ்ந்தென மேருவோடு ஒத்த தோள் வீமன் குத்தலும், ஈர் இடத்தினும் விலா எலும்பு நெக்கன, கூர் உகிர் தலங்களால் குருதி கக்கவே.]

**விளக்கம்** ;- கூர் உகிர் தலங்களால் குருதி கக்கவே, ஓர் ஒரு குத்து ஒரு உருமு வீழ்ந்(த) து என, மேருவோடு ஒத்த தோள் வீமன் குத்தலும், (கீசகனது) ஈர் இடத்தும் விலா எலும்பு நெக்கன, என்ப தாம். உகிர்தலம் - நகங்களை உடைய வீமனது கை. உருமு - இடி. ஈர் இடத்தும் - இரு புறத்திலும். நெக்கன - (எலும்புகள்) பிளந்து போயின.

**76. கேளொடு கெடுதரு கீச கன்கழல்**
**தாளொடு தாளுறத் தாக்கி மற்கெழு**
**தோளொடு தோளுறத் தோய்ந்து கன்னல்வில்**
**வேளொடு வருநலம் விஞ்ச மேவினான்.**

[கேளொடு கெடு தரு கீசகன் கழல் தாளொடு தாள் உற தாக்கி, மல் கெழு தோளொடு தோள் உற தோய்ந்து, கன்னல் வில் வேளொடு வருநலம் விஞ்ச மேவினான்.]

**விளக்கம்** :- கேள் - சுற்றம். கெடுதரு கீசகன் - அழிதலுறும் கீசகன். கழல் தாளொடு - வீரக்கழல் அணிந்த பாதங்களோடு. தாள் உற தாக்கி - வீமனது பாதங்கள் பொருந்தத் தாக்கி. மல்கெழு - வலி மிகுந்த, தோளொடு தோள் உற தோய்ந்து - தோள்களோடு (வீமனது) தோள்கள் நன்கு படிந்து. கன்னல் வில் வேளொடு வரு நலம் விஞ்ச மேவினான் - கரும்பு வில்லையுடைய மன்மதனால் வரும் இன்பமாகிய நலனையும் கடக்கும்படி, (போரில் பகைவனை வீமன் நெருங்கிக் கலந்தான்.) புணர்ச்சியில் தாளும் தோளும் நெருங்கிக் கலத்தல் நிகழ்தல்போல், மற்போரி லும் அச்செயல் மிகுந்து நிகழ்தல் பற்றி, வேளொடு வருநலம் விஞ்ச மேவினான், என்றார். வேளொடு வருநலம் - புணர்ச்சி இன்பம். புணர்ச்சி இன்பத்தையும் கடந்த வெற்றி இன்பம் எய்தும் பொருட்டு வீமன், கீசகனைத் தழுவினான், என்க. இதைக் கீசகன் செயலாகக் கொண்டும் பொருள் செய்யலாம்.

**77. தாழ்வரைத் தடக்கையாற் றையலாளெதிர்**
**காழ்வரப் பொருதிறற் காளை தன்னையும்**
**சூழ்வரச் சூறையிற் சுற்றிப் பார்மிசை**
**வீழ்வரப் புடைத்தனன் மிடலில் விஞ்சினான்.**

[தாழ் வரை தட கையால் தையலாள் எதிர் காழ்வர பொரு திறல் காளை தன்னையும் சூழ்வர சூறையின் சுற்றி பார்மிசை வீழ்வர புடைத்தனன் மிடலில் விஞ்சினான்.]

**விளக்கம் :-** தாழ்வரை தடக்கை-முழந்தாள் வரை தாழ்ந்து தொங்குவனவும், மலைபோல் பருத்தனவுமான பெரிய கை. காழ்வர பொருதிறல் காளை - உறுதி பொருந்தப் போர் செய்யும் வல்லமையுடைய வீமன். சூறையின் சூழ்வர சுற்றி - சூறைக் காற்றில் பட்ட பொருள் சுழல்வதுபோல் சுழலும்படி சுற்றி, மிடலில் விஞ்சினான் - வலிமையில் மிகுந்தவனாகிய கீசகன். சூறையின் சூழ்வரச் சுற்றிப் பூமியில் விழும்படி மோதினான்,— என்பதாம். அல்லது, வீமன், தன்னையும் சூறையின் சுழல்வரச் சுற்றிய மிடலில் விஞ்சியவனான கீசகனைப் பார்மிசை விழும்படி தாக்கி மோதினான், என்றும் பொருள் கொள்ளலாம்.

**78. விழுந்தவன் மீளவும் வெய்து யிர்த்தனன்**
**எழுந்துதன் பகைவன திருண்ட குஞ்சியை**
**அழுந்தவல் விரல்களாற் சுற்றி யாய்மரக்**
**கழுந்தெனப் புடைத்தனன் கைகள் சேப்பவே.**

[விழுந்தவன் மீளவும் வெய்து உயிர்த்தனன், எழுந்து தன் பகைவனது இருண்ட குஞ்சியை அழுந்த வல் விரல்களால் சுற்றி, ஆய்மரம் கழுந்து என புடைத்தனன் கைகள் சேப்பவே.]

**விளக்கம் :-** விழுந்தவன் - வீமன். வெய்து உயிர்த்தனன் எழுந்து - வெப்பமாக மூச்சு விட்டவனாய் எழுந்து. அழுந்த - கெட்டியாக, உறுதியாக. கழுந்து - மரக்கட்டை. சேப்ப - சிவக்க. விழுந்த வீமன் எழுந்து பகைவனது தலை மயிரைப் பற்றி விரல் களால் சுற்றி, கைகள் சிவக்க மரக்கட்டையைப் புடைப்பதுபோல் அடித்தனன், என்பதாம். ஆய் மரக் கழுந்து எனப் புடைத்தான், என்பதின் பொருள் விளங்கவில்லை. ஆய் மரக்கழுந்து - ஆராயப் பெற்ற மரக்கட்டை.

**79. புடைத்தன னிவனவன் புடைத்த கைகளை**
**விடைத்தன னகற்றிமெய் மேவு பூதியும்**
**துடைத்தன னாகியத் தோன்றல் வாயினை**
**உடைத்தன னொருகையா லொருகை பற்றியே.**

[புடைத்தனன் இவன் அவன் புடைத்த கைகளை விடைத்தனன் அகற்றி, மெய் மேவு பூதியும் துடைத்தனன் ஆகி, அத் தோன்றல் வாயினை உடைத்தனன் ஒரு கையால் ஒரு கை பற்றியே.]

**விளக்கம் :-** (முன் சொல்லியபடி) இவன் (வீமன்) புடைத்தனன்; புடைத்த கைகளை அவன் (கீசகன்) விடைத்தனன் (ஆய்) அகற்றி, மெய் மேவு பூதியும் துடைத்தனன் ஆகி, ஒரு கையால் ஒரு கை பற்றி, அத் தோன்றல் (வீமன்) வாயினை உடைத்தனன், என்று அன்வயிக்க. விடைத்தல் - சினத்தல், தடுத்தல். பூதி - புழுதி. தன்னைப் புடைத்த வீமனது வாயைக் கீசகன் உடைத்தான்,— என்பதாம்.

**80. வீரமும் வலிமையும் விரகு மொத்தவர்**
**தீரமுந் தெளிவுநாஞ் செப்பற் பாலவோ**
**நேரமுஞ் சென்றது நிசையெ னாமிகு**
**சூரமுஞ் செற்றமு முடைய தோன்றலே.**

[வீரமும் வலிமையும் விரகும் ஒத்தவர் தீரமும் தெளிவும் நாம் செப்பற்பாலவோ! நேரமும் சென்றது நிசை எனா, மிகு சூரமும் செற்றமும் உடைய தோன்றல், ஏ.]

**விளக்கம் :-** வீரமும் வலிமையும் சூழ்ச்சித் திறமையும் ஆகியவற்றால் ஒத்தவர்களான வீம கீசகர்களின் தீரமும் போர் பற்றிய தெளிந்த அறிவும் நம்மால் சொல்லத்தக்கவாமோ! —என்பது முதல் இரண்டடிகளின் பொருள். சூரமும் பகைமையும் உடைய தோன்றல் (வீமன்) நிசை(யின்) நேரமும் பெரும்பகுதி கழிந்தது, என்று எண்ணி—அடுத்த செய்யுளோடு முடியும். தெளிவு - மனக்கிளர்ச்சி, போர் பற்றிய ஞானம். தீரம் - மனோ தைரியம். நிசை- இரவு.

## வீமன் கீசகனை வதைத்தல்

**81. மன்னவன் மைத்துனன் மார்பொ டிந்திடச்**
**சென்னியுந் தாள்களுஞ் சேர வொன்றிடத்**
**தன்னிரு செங்கையாற் றாக்கி வான்றசை**
**துன்னிய மலையெனச் சுருக்கி னானரோ.**

[மன்னவன் மைத்துனன் மார்பு ஒடிந்திட, சென்னியும் தாள்களும் சேர ஒன்றிட, தன் இரு செங்கையால் தாக்கி, வான் தசை துன்னிய மலை என சுருக்கினான், அரோ.]

**விளக்கம் :-** கீசகனது மார்பு ஒடியும்படியும், காலும் தலையும் ஒன்றுபடும்படியும் வீமன் தனது இரு கரங்களாலும் பற்றி மோதி, சதையின் மிகுதி நெருங்கிய ஒரு குன்றுபோல் தோன்றும்படி அவனது நீண்டு விரிந்த உடலைச் சிதைத்து வைத்தான்,— என்பதாம். அரோ : அசை. கைகால் தலை முதலிய அவயவங்கள்

உருத்தெரியாமல், அவனது உடலை வீமன் ஒரு மாமிசக் குன்றாகத் தோன்றும்படி சிதைத்தமையின், **சுருக்கினான்,** என்றார்.

**82. மாற்றினா னவன்பெரு மைய லாவியைக்**
**கூற்றினார் கைகொளக் கொடுத்துத் தன்சினம்**
**மாற்றினா னத்திற லார்கொல் வல்லவர்**
**காற்றினால் வருதிறற் காளை யல்லதே.**

[மாற்றினான் அவன் பெரு மையல் ஆவியை கூற்றினார் கைக் கொள கொடுத்து, தன் சினம் ஆற்றினான்; அ திறல் ஆர் கொல் வல்லவர், காற்றினால் வரு திறல் காளை அல்லது, ஏ.]

**விளக்கம் :-** அவன் - கீசகன். அவனது பெரிய காமத்தின் வசமான உயிரை, உடலிலிருந்து அகற்றி, (அதை) எமன் கைக் கொள்ளும்படி கொடுத்து (வீமன்) தனது சினத்தை நீங்கச் செய்தான். காற்றினிடமிருந்து தோன்றிய வலிய ரிஷபம் போன்ற வீமன் அல்லாமல், இவ் வீரச்செயலை வேறு யாவர் செய்ய வல்லவர்,—என்பது பொருள்.

**83. பண்ணிய வினைகளின் பயன லாதுதாம்**
**எண்ணிய கருமமற் றியாவ ரெய்தினார்**
**திண்ணிய கீசகன் செய்த தீங்கிவன்**
**புண்ணிய மானதாற் புகல்வ தென்கொலாம்.**

[பண்ணிய வினைகளின் பயன் அலாது, தாம் எண்ணிய கருமம் (மற்று) யாவர் எய்தினார்? திண்ணிய கீசகன் செய்த தீங்கு இவன் புண்ணியம் ஆனது, ஆல், புகல்வது என் கொல், ஆம்.]

**விளக்கம் :-** செய்த பாவ புண்ணியங்களின் பயனை அல்லாமல், எண்ணிய காரியங்களை யாவர் அடைந்தார்கள்? (இல்லை என்றபடி). வலிய கீசகன் செய்த தீங்கு, இந்த வீமனுக்கு, (வெற்றி தரும்) நல்வினை ஆயிற்று. இது பற்றி வேறு என்ன சொல்வதற்கு உளது?—என்பது பொருள். இது கவிக்கூற்று. ஆல் : தேற்றம். ஆம் : அசை.

### வீமன் திரௌபதியை அழைத்தல்

**84. செங்கைகா லுடலொடு சென்னி துன்றிட**
**அங்கையா லடக்கிநின் றநேக மாயிரம்**
**வெங்கையா னையின்மிடல் வீமன் வெற்பன**
**கொங்கையா டன்னையுங் கூவி னானரோ.**

[செம் கை, கால் உடலொடு சென்னி (என்ற எல்லா அவயவங்களும்) துன்றிட, அம் கையால் அடக்கி நின்று, அநேகம் ஆயிரம் வெம் கை யானையின் மிடல் வீமன், வெற்பு அன கொங்கையாள் தன்னையும் கூவினான், அரோ.]

**விளக்கம் :-** துன்றிட - ஒன்றுபட. அடக்கி - சுருக்கி, மடக்கி. மிடல் - வலிமை. வெற்பு அன கொங்கையாள் - மலையை ஒத்த முலைகளை உடைய திரௌபதி. அநேகம் ஆயிரம் யானையின் வலிமை கொண்ட வீமன், கால் தலை முதலிய அவயவங்களை ஒன்றுபடும்படி மடக்கித் திரௌபதியை மறைவிடத்திலிருந்து வரும்படி அழைத்தான்,—என்பதாம்.

**85. பூங்கொடி யனையவள் புறவ டிப்புறத்(து)**
**ஓங்கிய கீசக னுடற்பி ழம்பினை**
**நீங்கிய வாய்மைக ணிகழ்ந்த தென்னவே**
**பாங்கினில் வைத்தடற் பவனன் மைந்தனே.**

[பூங்கொடி அனையவள் புறம் அடிப்புறத்து ஓங்கிய கீசகன் உடல் பிழம்பினை, நீங்கிய வாய்மைகள் நிகழ்ந்தது என்னவே, பாங்கினில் வைத்து, அடல் பவனன் மைந்தன், ஏ—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** வீமன், சுருக்கிப் பிண்டம் ஆக்கிய கீசகனது உடலை திரௌபதியின் பாதங்களில் வைத்தான், என்பதாம். நீங்கிய வாய்மைகள் நிகழ்ந்தது என்ன - நெறி நீங்கிய புல்லிய வார்த்தைகளால் இது நிகழ்ந்தது என்று (அவன் உடற் பிழம்பைக் கண்டவர்) எண்ணும்படி,—என்பது பொருள்.

**86. விடுங்குழை மராமர மொன்று வேருடன்**
**பிடுங்கினன் கைகளாற் பிசைந்து தீயெழச்**
**சுடுங்கொலென் றஞ்சிலன் சுவாலை செய்தனன்**
**நெடுங்கணாள் கண்டுதன் றுயர நீங்கவே.**

[விடும் குழை மராமரம் ஒன்று வேருடன் பிடுங்கினன், கைகளால் பிசைந்து, தீ எழ, சுடுங்கொல் என்று அஞ்சிலன், சுவாலை செய்தனன், நெடுங்கணாள் கண்டு தன் துயரம் நீங்க, ஏ.]

**விளக்கம் :-** நெடுங்கணாள் - திரௌபதி. அவள், கீசகனது உடல் சிதைவைக் கண்களாற் கண்டு தன் துயரம் நீங்கும்பொருட்டு, (வீமன்) தளிர்விடும் ஒரு மராமரத்தை வேரோடு பிடுங்கி, (அதை அவனது வலிய) கைகளால் பிசைந்து, அதனால் தீ எழவும், சுடுமே என்று அஞ்சாதவனாய், (எழுந்த அந்தத் தீயை) கொழுந்து விட்டு எரியுமாறு செய்தான்,—என்பது பொருள், பிடுங்கினன், அஞ்சலன், முற்றெச்சங்கள்.

**87. வாச மென்குழன் மாதுநல் லாயுனை**
**ஆசை கொண்டவ ரிப்படி யாவர்காண்**
**ஏசின் மங்கைநல் லாயினி யேகென**
**மாசி லானும டைப்பளி யேகினான்.**

[வாசம் நல் குழல் மாது நல்லாய் உனை ஆசை கொண்டவர் இப்படி ஆவர் காண், ஏசு இல் மங்கை நல்லாய் இனி ஏகு என, மாசு இலானும் மடை பளி ஏகினான்.]

**விளக்கம் :-** வாசம் - நறுமணம். ஏசு இல் மங்கை - குற்றம் இல்லாத திரௌபதி. மாசிலான் - குற்றம் நீங்கிய மனத்தினனான வீமன். உன்மீது ஆசை கொண்டார் இந்தக் கதியையே அடைவர், என்று திரௌபதிக்குச் சொல்லி, அவளை அனுப்பிவிட்டு வீமன் தனது இருப்பிடமான சமையல்சாலை சென்றான்,—என்பதாம்.

உபகீசகர் துயிலெழல்

**88. தோட்டு மென்மலர்ச் சோலையி னோதையும்**
**மோட்டு வன்கர முட்டியி னோதையும்**
**மாட்டு வண்சுதை மண்டபத் தோதையும்**
**கேட்டு ணர்ந்தனர் கீசகன் றம்பியர்.**

[தோடு மெல் மலர் சோலையின் ஓதையும், மோடு வல் கரம் முட்டியின் ஓதையும், மாடு வள் சுதை மண்டபத்து ஓதையும், கேட்டு உணர்ந்தனர் கீசகன் தம்பியர்.]

**விளக்கம் :-** தோடு - இதழ். ஓதை - ஒலி. மோடு வல் கரம்-பெரிய வலிய கை. முட்டி - கை முஷ்டி. மாடு வள் சுதை மண்டபம் - அருகாமையிலுள்ள செழித்த சுண்ணாம்பு பூசிய இன்ப மண்டபம். (ஆகிய ஓசைகளைக்) கேட்டுக் கீசகன் தம்பியர் (துயில்) உணர்ந்தனர், அதாவது விழிப்புக் கொண்டனர். சோலையின் ஓதை - சோலையில் நிசிப் பொழுதிலே மனித நடமாட்டத்தால் உண்டான ஓசை. முட்டியின் ஓதை - கை முஷ்டியால் மோதும் ஓசை. மண்டபத்து ஓதை - இன்ப மண்டபத்திலேயே உண்டான ஓசை.

**89. தொய்யி லாதி சுதேட்டிணைக் கொப்பனை**
**கையி லாரழ கேறக் கவின்செயும்**
**தைய லாள்பொருட் டாகத் தனக்குறு**
**மைய லான்மிக வாடி வருந்தினான்.**

[தொய்யில் ஆதி சுதேட்டிணைக்கு ஒப்பனை கையில் ஆர் அழகு ஏற கவின் செயும் தையலாள் பொருட்டாக, தனக்கு உறு மையலால் மிக வாடி வருந்தினான்.]

**விளக்கம் :-** தொய்யில் - கஸ்தூரிச் சாந்து கொண்டு மார்பிலும் தோளிலும் கொடி முதலியவற்றை அலங்காரமாக எழுதல். ஒப்பனை - அலங்காரம். கையினால் பொருந்திய அழகு மிகும்படி அலங்கரிக்கும் எழில் பாவை, என்பது இரண்டாவது அடியின் பொருள். அந்தப் பெண்ணின்பால் தனக்கு உண்டான காமத்தால் (அண்ணன்) மிக வாடி வருந்தினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். கையில் - கையினால்.

**90. வண்ட றாத மலர்க்குழல் வல்லியைக்**
**கண்ட காவிலிக் கங்குற் பொழுதிடைச்**
**சண்ட வேகக் களிறன்ன தன்மையான்**
**கொண்ட மாலிற் குறுகினன் போலுமால்.**

[வண்டு அறாத மலர் குழல் வல்லியை கண்ட காவில் இ கங்குல் பொழுதிடை, சண்டம் வேகம் களிறு அன்ன தன்மையான், கொண்ட மாலின் குறுகினன் போலும் ஆல்.]

**விளக்கம் :-** வண்ண மகளைக் கண்ட சோலையிடத்தே, இந்த நடு இரவில் அண்ணன், கொண்ட காம மயக்கத்தினால் சென்றான் போலும், என்று உபகீசகர் எண்ணினார்,—என்பதாம். சண்ட வேகக் களிறு அன்ன தன்மையான் - கொடிய வேகமுடைய ஆண் யானையை ஒத்த தன்மையினனான கீசகன். வண்டு அறாத மலர் குழல் வல்லி - திரௌபதி.

**91. தூவி வாசந் துளிமதுச் சோலையில்**
**ஏவ லாலியற் றும்மெழிற் பாவைமெய்க்**
**காவ லாகிய கந்தரு வப்பெயர்த்**
**தேவ ரால்வெஞ் செருவுள தானதோ.**

[தூவி வாசம் துளி மது சோலையில், ஏவலால் இயற்றும் எழில் பாவை மெய் காவல் ஆகிய கந்தருவப் பெயர் தேவரால், வெம் செரு உளது ஆனதோ.]

**விளக்கம் :-** வாசம் தூவி மது துளிக்கும் சோலை. அங்கே, (அரசியின்) ஏவலால் தொழில் புரியும் எழில் பாவையின் மெய் காவல் பூண்ட கந்தருவப் பெயருடைய தேவரோடு (அண்ணனுக்கு) கொடிய போர் நேரிடலானதோ, என்று தம்பியர், அயிர்த்தபடி. வாசனை பரவும்படி செய்து தேன் துளிக்கும் சோலை,—என்பது முதலடியின் பொருள்.

உபகீசகர் சோலை சேர்தல்

**92. அழிந்த கீசக னன்றிமற் றுண்டென**
**மொழிந்த தம்பியர் நூற்றொரு மூவரும்**
**கழிந்த தீயுமிழ் கண்ணின ராயுயிர்**
**ஒழிந்து போதுமென் றுன்னின ரோடினர்.**

[அழிந்த கீசகன் அன்றி மற்று உண்டு என மொழிந்த தம்பியர் நூற்றொரு மூவரும், கழிந்த தீ உமிழ் கண்ணினராய், உயிர் ஒழிந்து போதும் என்று, உன்னினர் ஓடினர்.]

**விளக்கம் :-** உயிர் அழிந்த கீசகன் அல்லாமல், வேறானவர் உள்ளார் என்று மொழியப்படும் தம்பியர் நூற்றொரு மூவரும், கழிந்த (மிகுந்த) தீயை வெளிவிடும் கண்ணை உடையவர்களாய்,

உயிர் போனாலும் போகட்டும் என்று எண்ணினராய், (சோலை நோக்கி) ஓடினர், என்பது பொருள். கந்தருவரோடு நேர்ந்த போரில் அண்ணன் உயிரிழத்தல் நேருமேல், நமக்கும் அந்தக் கதிதான் ஏற்படும்; எனினும் நாம் சென்று, கந்தருவர்களை எதிர்ப்பதே முறை என்று எண்ணி, உபகீசகர் நூற்று மூன்று பேரும் சோலையை நோக்கி விரைந்தனர், என்க.

**93. நகரி யெங்கும் வெருவர நள்ளிருள்**
**நுகரு மாறுபன் னூறொளித் தீபமோ(டு)**
**அகரு நாறுதண் காவில ரும்பகல்**
**நிகரு மென்ன நெருங்கினர் நேடினார்.**

[நகரி எங்கும் வெருவர, நள் இருள் நுகரும் ஆறு பல் நூறு ஒளி தீபமோடு அகரு நாறு தண் காவில், அரும் பகல் நிகரும் என்ன நெருங்கினர் நேடினர்.]

**விளக்கம் :-** (உபகீசகர்கள் எழுப்பிய ஆரவார ஒலியால்) நகரம் முழுவதும் அச்சங் கொள்ள, அரும் பகல் நிகரும் என்ன, நள் இருள் நுகரும் ஆறு, பல் நூறு ஒளிகொண்ட தீபங்களோடு அகரு நாறும் தண் காவில் நெருங்கினர் (ஆய்) நேடினர்,—என்பது அன்வயம். அரும் பகல் - அருமையான (விரும்பத்தக்க) பகல். இருள் நுகருமாறு - இருளை விழுங்குமாறு, அதாவது இருள் அகலும்படி. அகரு நாறும் தண்கா - அகில் மரத்தின் மணம் வீசும் குளிர்ந்த சோலை. நேடினர் - தேடினர்- பல நூறு தீபங்களோடு அண்ணனைத் தம்பியர் தேடினர்,—என்பதாம்.

**94. சுதைநி லாவொளி சூழ்மண்ட பத்திடைச்**
**சிதையு மெய்யொடுஞ் செம்பொற் சிலம்பெனக்**
**கதைவ லான்வெங் கடுங்கொடுங் கைகளால்**
**வதைசெய் தம்முன் வடிவுகண் டார்களே.**

[சுதை நிலா ஒளி சூழ் மண்டபத்திடை சிதையும் மெய் யொடும் செம் பொன் சிலம்பு என, கதை வலான் வெம் கடுங் கொடுங் கைகளால் வதை செய் தம்முன் வடிவு கண்டார்கள், ஏ.]

**விளக்கம் :-** சுதை நிலா ஒளி சூழ் மண்டபம் - சுண்ணாம்பின் நிலவு போன்ற வெள்ளிய ஒளி சூழ்ந்த மண்டபம். சிதையும் மெய் - சிதையப்பெற்ற மெய் (உடல்). செம்பொன் சிலம்பு - மேரு பர்வதம். கதைவலான் - வீமன். வெங்கடுங் கொடுங் கை - வெவ்விய மிகக் கொடியதான கை. வீமன் கையால் வதைக்கப்பட்ட அண்ணனது உடலைத் தம்பியர் மண்டபத்திடை கண்டார், என்பதாம்.

**95. பழுது டைப்பெரும் பாதகன் மாண்டமை**
**தொழுது ரைத்துச் சுதேட்டிணை தன்னொடும்**
**அழுத ரற்றி யயலறி யாவகை**
**எழுத ழற்க ணிடுவதற் கெண்ணினார்.**

*[பழுது உடை பெரும் பாதகன் மாண்டமை தொழுது உரைத்து சுதேட்டிணை தன்னொடும் அழுது அரற்றி, அயல் அறியாவகை, எழு தழல்கண் இடுவதற்கு எண்ணினார்,]*

**விளக்கம் :-** *பழுது - குற்றம். பழுதுடைப் பெரும் பாதகன், என்றது கவியின் வாக்கு. அவன் (கீசகன்) மாண்டதை தம்பியர் சுதேட்டிணையிடம் (அவளை) வணங்கிக் கூறி, நிகழ்ந்ததைப் பிறர் அறியாதபடி மேலோங்கி எரியும் தீயில் இட்டு (அவ்வுடலை) அழிப்பதற்கு எண்ணினார், என்பது பொருள்.*

**96. எண்ணி லாமனத் தெம்முனை யெண்ணுடை**
**விண்ணு ளார்சிலர் வீத்ததற் கேதுவாம்**
**வண்ண மாமக டன்னையும் வன்னியால்**
**அண்ண லோடு மடுதுமென் றார்களே.**

*[எண் இலா மனத்து எம்முனை எண் உடை விண் உளார் சிலர் வீத்ததற்கு ஏது ஆம், வண்ண மா மகள் தன்னையும் வன்னியால் அண்ணலோடும் அடுதும் என்றார்கள், ஏ.]*

**விளக்கம் :-** *எண் இரா மனத்து எம்முன் - (வீரர் எவரையும்) மதித்தல் இல்லாத மனத்தை உடைய எம் முன்னவன். எண்ணுடை விண் உளார்-மதிக்கப்படுதலை உடைய தேவர். வீத்தல் - அழித்தல். வன்னி - நெருப்பு. தம் தமையன் தேவர் சிலரால் அழிவுறுதற்குக் காரணமான வண்ண மகளையும், அவன் உடலோடு சுட்டு அழிக்க எண்ணினார்கள்,—என்பதாம்.*

## காவற் கடவுளரை வண்ணமகள் அழைத்தல்

**97. சொல்லு மாடவர் சொல்லின ராயினும்**
**கொல்லு மோகன றான்பெற்ற கோதையை**
**மல்லன் மாலையி னார்வந்து பற்றலும்**
**அல்லல் கூர வரற்றின ளாலவள்.**

*[சொல்லும் ஆடவர் சொல்லினர் ஆயினும் கொல்லுமோ கனல் தான் பெற்ற கோதையை! மல்லல் மாலையினார் வந்து பற்றலும், அல்லல் கூர அரற்றினள் (ஆல்) அவள்.]*

**விளக்கம் :-** *மல்லல் மாலையினார் . உபகீசகர்கள். அல்லல் கூர - துன்பம் மிக. தீயில் தோன்றியவள் ஆதலால், தீ அவளை எரிக்காது ; ஆகவே, அப் புல்லர்களின் எண்ணம் பலிக்காது, என்று புலவர் கூறியதாகும் முதலிரண்டடிகள்.*

**98. வெருவ ருங்கருங் கங்குலில் வெங்கொலை**
**நிருப ரென்னை நெருப்பிடை வீழ்த்துவான்**
**கருதி னார்கண் மெய்காக்குங் கடவுள்காள்**
**வருதி ரென்றுகண் வார்புனல் சோரவே.**

[வெருவரும் கருங் கங்குலில் வெங்கொலை நிருபர் என்னை நெருப்பிடை வீழ்த்துவான் கருதினார்கள், மெய் காக்கும் கடவுள் காள் வருதிர் என்று கண் வார் புனல் சோரவே,—அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** வெருவரும் கருங் கங்குல் - அஞ்சத்தக்கதான கரிய இருளையுடைய இரவு. ''என்னை ஈமத்தீயில் இட்டு எரிக்கத் தீயர் கருதுகின்றனர்; எனவே, என் மெய்காக்குங் கடவுளர்காள், விரைந்து வாருங்கள்'', என்று திரௌபதி அழைத்தாள், என்பதாம்.

**99. மடைப்பெ ரும்பள்ளி யெய்திய மாருதி**
**கிடைப்ப தன்றிக் கிளர்பெரும் போரெனாத்**
**துடைப்ப ரும்ப வனத்தனல் சோர்தரப்**
**புடைப்ப வோடினன் போர்மத மாவனான்.**

[மடை பெரும் பள்ளி எய்திய மாருதி, கிடைப்பது அன்று இ கிளர் பெரும் போர் எனா, துடைப்பு அரும் புவனத்து அனல் சோர்தர, புடைப்ப ஓடினன் போர் மதம் மா அனான்.]

**விளக்கம் :-** மாருதி - வீமன். இந்த ஓங்கிய உற்சாகம் தரவல்ல பெரிய போர் கிடைக்கக்கூடியது அன்று, என்று மகிழ்ந்து, என்பது இரண்டாவது அடியின் பொருள். துடைப்பு அரும் பவனம் - அழித்தற்கு அரிய மனை, அதாவது நிலையான உறுதியை உடைய மடைப்பள்ளி. அனல் சோர்தர புடைப்ப ஓடினான் - ஓடும் விசையினால் நெருப்புத் தோன்றும்படி பாதங்கள் பூமியில் மோத ஓடினான். போர் மத மா அனான் - போராவேசங்கொண்ட மதயானை போன்ற வீமன். போர் மத மா அனான் ஆகிய மடைப்பெரும் பள்ளி எய்திய வீமன், என்று கூட்டுக.

## உபகீசகர் அழிதல்

**100. அகப்பொ ழிற்கண்ட வம்மரம் யாவையும்**
**மிகப்பி டுங்கினன் வேரொடுங் கோட்டொடும்**
**உகப்பு டைத்தன னோடத்தொ டங்கினார்**
**தகச்செ யாமதிக் கீ சகன் றம்பிமார்.**

[அகப்பொழில் கண்ட அ மரம் யாவையும் மிக பிடுங்கினன் வேரொடும் கோட்டொடும், உக புடைத்தனன் ஓட தொடங்கினார், தக செயா மதி கீசகன் தம்பிமார்.]

**விளக்கம் :-** அகப் பொழில் - சோலையின் உள்புறம். கோடு - கிளை. உக புடைத்தனன் - உயிர் அழிய அடித்தான். தகுதி பொருந்தக் காரியங்களைச் செய்தலில்லா மதியையுடைய கீசகன் தம்பியர் ஓட ஆரம்பித்தனர். வண்ண மகளை உயிரோடு எரிக்க முற்பட்டவராதலின், ''தகச் செயாமதி கீசகன் தம்பிமார்'', என்றார். பிடுங்கினன் - பிடுங்கினனாய் (உகப் புடைத்தான்), முற்றெச்சம்.

**101. போன போன திசைதொறும் போய்த்தொடர்ந்து**
**ஆன மானவ னக்கொடுங் கோட்டினால்**
**மான மும்மவ ராவியும் வாங்கினான்**
**ஏனை யோர்களுந் தம்முனொ டெய்தினார்.**

[போன போன திசை தொறும் போய் தொடர்ந்து ஆன மானவன் அ கொடுங் கோட்டினால், மானமும் அவர் ஆவியும் வாங்கினான், ஏனையோர்களும் தம்முனொடு எய்தினார்.]

**விளக்கம் :-** ஆன மானவன் - பொருந்திய பெருமையுடைய வீரனான வீமன். மானம் - அகங்காரம். ஏனையோர் - மற்றவர் களாகிய உபகீசகர். வீமன், அவர் சென்ற திசை எல்லாம் தொடர்ந்து சென்று, அவர்களது கர்வத்தைவும் ஆவியையும் மரக் கிளை கொண்டு தாக்கிப் பறித்தான் ; கீசகன் அல்லாத மற்றவர் களும் தமையனை அடைந்தார், என்பது பொருள்.

ஊரார் வருந்தல்

**102. துவன்ற கற்புடைத் தோகையை விட்டுமுன்**
**நுவன்ற கீசகர் நூற்றொரு மூவரும்**
**அவன்றன் வாகுவி னாலழி வுண்டபின்**
**கவன்ற தாலக் கடிநக ரெங்குமே.**

[துவன்ற கற்பு உடை தோகையை விட்டு, முன் நுவன்ற கீசகர் நூற்றொரு மூவரும், அவன் தன் வாகுவினால் அழிவு உண்டபின், கவன்றது (ஆல்) அ கடி நகர்.]

**விளக்கம் :-** துவன்ற கற்பு - நெருங்கிய கற்பு, விட்டு நீங்காத சிறந்த கற்பு. விட்டு - ஈமத்தீயில் திரௌபதியை இட்டு எரிக்கவேண்டும் என்ற செயலை விட்டுவிட்டு. அவன் வாகு வினால் - வீமனது கரங்களால். காவலுடைய அந்த நகரம் முழுவதும் வருந்திற்று, என்பது ஈற்றடியின் பொருள். அரசியின் தம்பியர் அனைவரும் பாக்கி இல்லாமல் மாண்டது குறித்து அந் நகரம் வருந்திய தாகலாம் ; அல்லது, அவர்கள் மாண்டதால் காவல் குறைந்தமை குறித்தும் நகரம் வருந்தி இருக்கலாம், முன்னே நுவன்ற கீசகர் - முன்னே சொன்ன உபகீசகர்.

**103. கற்கும் யாழுடை கந்தரு வர்க்கெதிர்
நிற்ப ரோவுட னேர்பொர மானவர்
கிற்கு மைந்துடைக் கீசகர் யாவரும்
தற்கி னான்மடிந் தார்தக வொன்றிலார்.**

[கற்கும் யாழ் உடை கந்தருவர்க்கு எதிர் நிற்பரோ உடன் நேர் பொர மானவர், கிற்கும் மைந்து உடை கீசகர் யாவரும் தற்கினால் மடிந்தார் தகவு ஒன்று இலார்.]

**விள்க்கம் :-** கற்கும் - பயின்றுள்ள. நேர் பொர மானவர் உடன் நிற்பரோ - (கந்தவருக்கு எதிரே) நேர் நின்று போர் செய்ய மனிதர் அவருடன் நிற்கக் கூடியவர் ஆவரோ. கிற்கும் மைந்து - செய்து முடிக்கக்கூடிய வலிமை, ஆற்றல் மிக்க வலிமை. தற்கு - மமதை, செருக்கு. தகவு - நற்குணம். கந்தருவரோடு மனிதர் போர் செய்ய வல்லவர் ஆவரோ.] கர்வத்தால் கீசகர் அனைவரும் அழிந்தனர்,—என்பதாம்.

**104. என்று மாநகர் யாவு நடுங்கிடத்
துன்று கங்குலிற் சோரர்த மாருயிர்
பொன்று வித்த பொருநனும் பூவையும்
சென்று தத்தம் சேர்விட நண்ணினார்.**

[என்று மாநகர் யாவும் நடுங்கிட, துன்று கங்குலில் சோரர் தம் ஆர் உயிர் பொன்றுவித்த பொருநனும் பூவையும் சென்று தத்தம் சேர்விடம் நண்ணினார்.]

**விளக்கம் :-** தருக்கினால் குணக் கேடர் அழிந்தனர் என்று கூறி நகரத்தவர் நடுங்க, இருள் நெருங்கிய இரவில் சோரரான கீசகர் தம் உயிரை அழியச் செய்த வீரனான வீமனும் திரௌபதியும், அவ்விடம் பெயர்ந்து சென்று தங்களுக்குரிய இடங்களை அடைந்தனர், என்பது பொருள். பொருநன் - வீரன்.

## மன்னன் தளர்ந்து வருந்தல்

**105. கரிய கங்குல் கனையிருட் போர்வையோ(டு)
இரிய வந்த விருள்வலி தன்னினும்
புரியி னன்று புரிந்தவப் போரும்வன்
கிரியின் மன்னுங் கிளர்விளக் கானதே.**

[கரிய கங்குல் கனை இருள் போர்வையோடு இரிய வந்த இருள் வலி தன்னினும் புரியின் அன்று புரிந்த அ போரும், வல் கிரியின் மன்னும் கிளர் விளக்கு ஆனது, ஏ.]

**விளக்கம் :-** இரிய - அகல, தோற்று ஓட. இருள்வலி - இருளை விரட்டும் வலியுடைய சூரியன், (அன்மொழித்தொகை). புரியின் அன்று புரிந்த அப்போர் - விராட புரியில் அன்று செய்யப்

பெற்ற அந்தப் போர். கிரி - மலை. கிரியின் மன்னும் கிளர் விளக்கு - குன்றின்மேல் இட்ட எரிகின்ற விளக்கு. கரிய இரவு, அதன் நெருங்கிய இருளாகிய போர்வையோடு, எதிர் நிற்க மாட்டாமல் ஓடும்படி உதயமான சூரியனைக் காட்டிலும், விராட புரியில் அன்றைய இரவு நிகழ்ந்த போர் வியாபிப்பதில், குன்றின் மேல் இட்ட விளக்கானது; அதாவது, கந்தருவர் கீசகர்களை அழித்தார்கள் என்ற செய்தி உலகத்திலுள்ள நாடுகள் எங்கும் பரவியது, என்பதாம்.

**106. புலியி னும்பெரும் போரிற் றனித்தனி**
**வலிய ராகிய மைத்துனர் யாரையும்**
**பலியி டுங்கந் தருவரைப் பார்க்கவே**
**மெலிவு ழந்தனன் விற்கை விராடனே.**

[புலியினும் பெரும் போரில் தனி தனி வலியர் ஆகிய மைத்துனர் யாரையும் பலி இடும் கந்தருவரை பார்க்கவே, மெலிவு உழந்தனன் வில் கை விராடன், ஏ.]

**விளக்கம் :-** பலி இடும்-பலி இட்ட, அல்லது பலி கொண்ட. யாரைவும் - எல்லோரையும். பார்க்க - மனத்தால் பார்க்க, அதாவது நினைக்க. மெலிவு உழந்தான் - மனந் தளர்ந்து மிக வருந்தினான். மைத்துனர் அனைவரும் கந்தருவரால் அழிந்தனர் என்பது அறிய மன்னன் வருந்தினான், என்க.

**107. காண்ட குந்தம வேடங் கரந்துறை**
**யாண்டு சென்ற தினிச்சில நாளென**
**மீண்டு தோன்றுது மென்று விரதராம்**
**பாண்டு மைந்தரும் பான்மையி னண்ணினார்.**

[காண் தகும் தம வேடம் கரந்து உறை யாண்டு சென்றது இனி சில நாள் என, மீண்டு தோன்றுதும் என்று விரதராம் பாண்டு மைந்தரும் பான்மையின் நண்ணினார்.]

**விளக்கம் :-** (அஜ்ஞாதவாச) விரதங் கொண்ட பாண்டு மைந்தரும், காண்தகு தமது வேடம் கரந்து உறை யாண்டு சென்றது, இனிக் (கழிய வேண்டிய காலம்) சில நாட்களே என்றும், மீண்டும் (விரைவில்) தோன்றுதும் என்றும் எண்ணி மகிழ்ந்து, அதற்கு ஏற்ற மனப்பான்மையோடு இனிதே இருந்தனர். காண் தகு வேடம் - கண்டு பாண்டவர் என்று அறியத்தக்க உண்மையான உருவம். கரந்து - உருவம் மறைந்து. மீண்டும் தோன்றுதும் - மறுபடியும், வெளிப்படுவோம். ''அஜ்ஞாதவாசம் கழியச் சில பகல்களே உள, இனி மிக விரைவில் வெளிப்படலாம்'', என்ற மனப்பான்மையோடு பொருந்தியிருந்தனர், என்பதாம்.

**கீசகன் வதைச் சருக்கம் முற்றும்.**

# 4. நிரைமீட்சிச் சருக்கம்

பகைவரால் கவரப்பெற்ற பசுக்களை மீட்டல் என்பது பொருள். பாண்டவர் விராடனது நகரில் அஜ்ஞாதவாசம் செய்கையில் துரியோதனாதியர் விராடனது ஆநிரை கவர்ந்து செல்லப் பாண்டவர் அவர்களை வென்று பசுக் கூட்டங்களை மீட்டுவந்த செய்தியைக் கூறும் பகுதி இது. புறப்பொருளின்படி இது, வெட்சித்திணைச் செய்தியாகும். பின் வந்த புலவர்கள், நிரை கவர்தலை வெட்சித் திணையாகவும், நிரை மீட்டலைக் கரந்தைத் திணையாகவும் கொள்கின்றனர்.

### கடவுள் வணக்கம்

கலித்துறை

**1. தொழுவார்தம் வினைதீர முற்கோல மாய்வேலை**
**சூழ்பாரெயிற்(று)**
**உழுவானை நன்னாம மொன்றாயி னுங்கற்றொ**
**ருருவோதினார்**
**வழுவாத சுரராக நரராக புள்ளாக மாவாகபுன்**
**புழுவாக வொன்றிற்பி றந்தாலு நரகிற்பு கார்காணுமே.**

[தொழுவார் தம் வினை தீர, முன் கோலம் ஆய் வேலை சூழ்பார் எயிறு உழுவானை நல் நாமம் ஒன்றாயினும் கற்று ஓர் உரு ஓதினார், வழுவாத சுரர் ஆக, நரர் ஆக, புள் ஆக, மா ஆக, புல் புழு ஆக ஒன்றில் பிறந்தாலும் நரகில் புகார், காணும், ஏ.]

**விளக்கம் :-** வினை - தீவினை. கோலம் ஆய் - வராகாவதாரம் கொண்டு. எயிறு உழுவானை - கோட்டினால் (கடலில் அமிழ்த்தப்பட்ட பூமியை) குத்தி எடுத்த திருமாலின். ஓர் உரு - ஒரு முறை. வழுவாத - (ஊழ்வினையின் பயனாய்) நேர்தல் தவறாத. ஒன்றில் பிறந்தாலும் - (ஒருவேளை பாக்கியாகவுள்ள பிராரப்த கர்ம வசத்தால் தவறாமல் உண்டாகும் சுரர், நரர், புள், விலங்கு, புழு முதலிய பிறவிகளில்) எந்த ஒன்றில் பிறந்தாலும். காணும், முன்னிலை இடைச் சொல், தேற்றப் பொருளது. ஏ, அசை. கடலிடை இரணியாக்ஷனால் கொண்டு போகப்பெற்ற பூமியை வராகமாய்க் கோலங் கொண்டு மீட்டு வந்த திருமாலின் ஆயிரம் நல்ல நாமங்களில் ஒன்றையாயினும் அறிந்து ஒருமுறை மனம் பொருந்த ஓதுவார், பிராரப்த கர்மத்தின் பயனாய், எவ்வகைப் பிறவி எடுப்பினும், அவர் நரகம் புகார்: இது நிச்சயம்,—என்று கூறியபடி. நம்மனோரைக் கடவுள் பால் புலவர் செலுத்தும் கருத்தது செய்யுள்.

**2. மூதார ழற்பாலை வனமுந்த டஞ்சாரன் முதுகுன்றமும்**
**சூதாடி யழிவுற்ற டைந்தோர்கள் சரிதங்கள்**
**சொன்னோமினிப்**
**பாதார விந்தத்து மருவார்வி ழக்கொண்டு பாராளும்வெம்**
**கோதார்ம னத்தோன்வி ராடன்ற னிரைகொண்ட**
**கோள்கூறுவாம்.**

[மூது ஆர் அழல் பாலைவனமும் தட சாரல் மூது குன்றமும் சூது ஆடி அழிவு உற்று அடைந்தோர்கள் சரிதங்கள் சொன்னோம், இனி பாதார விந்தத்து (பாதம் - அரவிந்தத்து) மருவார் விழ, (கொண்டு) பார் ஆளும் வெம் கோது ஆர் மனத்தோன், விராடன் தன் நிரை கொண்ட கோள் கூறுவாம்.]

**விளக்கம் :-** சூது ஆடி அழிவு உற்று, மூது ஆர் அழல் பாலை வனமும் தடஞ் சாரல் முது குன்றமும் அடைந்தார்கள் சரிதங்கள் சொன்னோம்; இனி, பாதாரவிந்தத்து மருவார் (சரணம்) விழ, பார் ஆளும் வெம் கோது ஆர் மனத்தான், விராடன் தன் நிரை கொண்ட கோள் கூறுவாம்,—என்பது அன்வயம். விழக் கொண்டு, என்பதிலுள்ள **கொண்டு,** அசை. பாண்டவர் சூதாடி நாடிழந்து கான் அடைந்த வரலாற்றைக் கூறினோம். இனி, பகைவர் சரணம் புகும்படி பாராளும் கொடியனான துரியோதனன், விராடனது நிரை கவர்ந்த செய்தியைக் கூறுவோம்,—என்று புலவர் கூறியபடி. கோள் - சரித்திரம், கதை. மருவார் - பகைவர்.

**3. ஈராறு மொன்றுஞ்சு ரர்க்குள்ள நாள்சென்ற வினிநம்முடன்**
**பாராள வருமுன்ன ரடலைவ ருறைநாடு பார்மின்**
**களென்(று)**
**ஓராயி ரங்கோடி யொற்றாள்வி டுத்தானவ் வொற்றாள்களும்**
**வாராழி சூழெல்லை யுறவோடி விரைவின்கண் வந்தார்களே.**

[ஈர் ஆறும் ஒன்றும் சுரர்க்கு உள்ள நாள் சென்ற, இனி நம்முடன் பார்ஆள வரும் முன்னர், அடல் ஐவரும் உறை நாடு பார்மின்கள், என்று, ஓர் ஆயிரம் கோடி ஒற்று ஆள் விடுத்தான்: அவ் ஒற்று ஆள்களும் வார் ஆழி சூழ் எல்லை உற ஓடி விரைவின் கண் வந்தார்கள், ஏ.]

**விளக்கம் :-** தேவர்க்கு உள்ள ஈர் ஆறும் ஒன்றும் - தேவ மானத்தால் பதின் மூன்று நாட்கள். சென்ற - கடவநாள் அநேகமாகக் கழிந்தன. எனவே, ''ஐவரும் நம்முடன் பார் ஆள்வதற்கு வரும் முன்னரே, அவர்கள் வாழும் நாட்டைக் கண்டறியுங்கள்'', என்று ஓராயிரங் கோடி ஒற்றர்களைத் துரியோதனன் அனுப்பினான்; அவர்களும், நீண்ட கடல் சூழ்ந்த பூமியின் எல்லை எங்கும் ஓடிச்சென்று, அவரது உறைவிடம் காண முடியாமல் சீக்கிரமாகத் திரும்பினார்கள், - என்பது பொருள். ''ஓராறும் ஒன்றும்'', என்றது, வனவாசம் பன்னிரண்டும்

அஜ்ஞாதவாசம் ஒன்றும் என்று பகுத்துக் கூறியதாகும். தேவருக்கு ஒரு நாள் மனிதருக்கு ஒரு வருஷம்.

**4. காடென்று மலையென்று நதியென்று கடலென்று**
**கடலாடைசூழ்**
**நாடென்று நகரென்று நாடாத திசையில்லை**
**நாடோறும்யாம்**
**தோடென்று தாதென்று தெரியாது மதுமாரி**
**சொரிமாலையாய்**
**நீடென்று வலமேவு மவனிக்கு ளவரில்லை நின்பாதமே.**

[காடு என்று, மலை என்று, நதி என்று, கடல் என்று, கடல் ஆடை சூழ் நாடு என்று, நகர் என்று, நாடாத திசை இல்லை நாள்தோறும் யாம், தோடு என்று தாது என்று தெரியாது மதுமாரி சொரி மாலையாய், நீடு என்று வலம் மேவும் அவனிக்குள் அவர் இல்லை, நின் பாதமே.]

**விளக்கம் :-** "இது இதழ், இது பூந்தாது", என்று அறிய முடியாதபடி தேனை மழைபோல் கொட்டுகின்ற மாலையை அணிந்தவனே,—என்று, ஒற்றர்கள் துரியோதனனை விளித்து, சூரிய சஞ்சாரம் நிகழும் இடங்கள் எங்கும் சென்று தேடினோம்; எங்கும் அவர்கள் காணப்படவில்லை; இது சத்தியம்", என்று கூறினர்,—என்பதாம். நின்பாதம்-நின் பாதத்தின்மேல் ஆணை. (அதாவது நாங்கள் கூறுவது உண்மை, என்று கூறியபடி). என்று - சூரியன். என்று வலம் மேவும் நீடு அவனி, என்று இயைக்க. முதல் இரண்டு அடிகளிலும் உள்ள **என்று** என்ற சொல், எண் இடைச்சொல்; நான்காவது அடியில், சூரியன்,

வீடுமன் கூற்று

**5. முன்னொற்றை யிருசங்க முடனூத வெதிர்சென்று**
**முனைவெல்லுமா**
**மன்னொற்ற ரிதுகூற மந்தாகி னீமைந்தன்**
**மகன்மைந்தனுக்(கு)**
**உன்னொற்ற ருணர்தற்கு வருமோவ றன்காளை**
**யுறைநாடுகார்**
**மின்னொற்று மழையுண்டு விளைவுண்டெ னத்தேடும்**
**விரகோதினான்.**

[முன் ஒற்றை இரு சங்கம் உடன் ஊத எதிர் சென்று முனை வெல்லும் மா மன் ஒற்றர் இது கூற, மந்தாகினீ மைந்தன், மகன் மைந்தனுக்கு, "உன் ஒற்றர் உணர்தற்கு வருமோ? அறன் காளை உறை நாடு கார் மின் ஒற்றும் மழை உண்டு, விளைவு உண்டு", என தேடும் விரகு ஓதினான்.]

**விளக்கம் :-** ஒற்றை - ஊது கொம்பு. இரு சங்கம் - இடம் புரி, வலம்புரி என்ற சங்குகள். முனை எதிர் சென்று வெல்லும் மா மன் - போர் முனையில் பகைவரை எதிர்த்துச் சென்று வெல்லுகின்ற மா மன்னனாகிய துரியோதனன். (அவனது ஒற்றர் பாண்டவர் உறையும் இடம் தெரியவில்லை என்று கூற) கங்கை மைந்தனான வீடுமன், தனது பேரனான துரியோதன னுக்கு, ''அவர் உறையும் நாடு, உன் ஒற்றர் அறியக் கூடியது ஆகுமோ? அறன் காளை (தருமன்) இருக்கும் நாடு, மின் ஒற்றும் கார் மழை உளதாகும், நல்ல விளைவு உடையது ஆகும்'', என்று, அவர் இருக்கும் இடம் அறிவதற்கான அடையாளத்தை (அல்லது உபாயத்தை) ஓதினான்,—என்பதாம். ஒற்றை - ஊது கருவி. உணர்தற்கு வருமோ, என்பதிலுள்ள ஓகாரம், எதிர்மறைப் பொருளது, கார், என்பது ஆகு பெயராய் மேகத்தைக் குறித்தது. மின் ஒற்றும் - மின்னல் பொருந்திய.

**6. ஒற்றாளி லொருவன்ப ணிந்தென்று மெவ்வாழ்வு**
**முண்டாகியே**
**விற்றானை வெம்போர்வி ராடன்றன் வளநாடு**
**மேம்பட்டதால்**
**மற்றாழ்பு யக்கீ சகன்றானு மொருவண்ண மகள் காரணத்(து)**
**இற்றானெ னுஞ்சொல்லு முண்டென்று நிருபற்கெ**
**டுத்தோதினான்.**

[ஒற்று ஆளில் ஒருவன் பணிந்து, என்றும் எ வாழ்வும் உண்டு ஆகி [ஏ], வில் தானை வெம் போர் விராடன் தன் வளநாடு மேம் பட்டது, (ஆல்), மல் தாழ்புயம் கீசகன் தானும் ஒரு வண்ணம் மகள் காரணத்து, இற்றான் எனும் சொல்லும் உண்டு, என்று நிருபற்கு எடுத்து ஓதினான்.]

**விளக்கம் :-** வெம் போர் வில் தானை விராடன் வளநாடே எவ் வாழ்வும் உண்டாகி மேம்பட்டது - கொடிய போரிற்குரிய வில் படையைக் கொண்ட விராடனது நாடு ஒன்றே, எல்லா வாழ்க்கைக்குரிய நலங்களையும் பெற்றுள்ளதாய் (மற்ற நாடு களினும்) மேம்பட்டதாய் இருக்கின்றது. உண்டாகியே, என்பதி லுள்ள ஏகாரம் நாடு என்பதோடு கூட்டப்பெற்றது. மல் தாழ் புயக் கீசகன் - வலிய நீண்டு தொங்கும் கைகளை உடைய கீசகன். அவன் வண்ணமகள் காரணமாக அழிந்தான் என்னும் சொல்லும் உளது, என்று ஒற்றாளில் ஒருவன், நிருபற்கு (துரியோதன னுக்குக்) கூறினான். விராட நாடே வளம் மிக்கதாய் உளது என்றும், ஒரு பெண் காரணமாகக் கீசகன் கொல்லப்பட்டான் என்றும், ஒற்றன் ஒருத்தன் கூறினான், என்பதாம் ஆல்: அசை.

**7. வண்டார்வி ராடன்றன் வளநாடு தண்டான்ம**
**லைந்தேதொறுக்**
**கொண்டால வன்சூழ லிற்சூழும் வினயங்கு றிப்போரிருப்(பு)**
**உண்டாகி னிரைமீளு மின்றாகின் மீளாதென்**
**னுட்கோளிதென்(று)**
**எண்டாழு மிதயத்து நிருபற்கு ரைத்தானி ரவிமைந்தனே.**

[வள்தார் விராடன் தன் வளம் நாடு தண்டால் மலைந்து (ஏ) தொறு கொண்டால், அவன் சூழலில் சூழும் வில் நயம் குறிப்போர் இருப்பு உண்டு ஆகில் நிரை மீளும், இன்று ஆகில் மீளாது, என் உள் கோள் இது, என்று, எண் தாழும் இதயத்து நிருபற்கு உரைத்தான் இரவி மைந்தன், ஏ]

**விளக்கம் :-** தண்டு - சேனை. தொறு - பசுக்கூட்டம், சூழல் - நாடு. சூழும் வில் நயம் குறிப்போர் - வளைவுடை வில்லின் தொழிலில் வல்லமையுடைய பாண்டவர். இருப்பு - (அவர், விராடன் நகரில்) இருத்தல். உட்கோள் - உள்ளக் கருத்து, எண்ணம். எண் தாழும் இதயத்து நிருபன் - எண்ணங்களின் தாழ்மையை உடைய உள்ளத்தைக் கொண்ட வேந்தன் (துரியோதனன்). இரவி மைந்தன் - கர்ணன். ''விராடன் மேல் தண்டெழுந்து சென்று நிரை கவர்ந்தால், பராக்கிரமசாலியான கீசகனும் இறந்துவிட்டானாதலால், அங்கே பாண்டவர் இருந்தாலன்றி நிரை மீளாது. இதுவே, அவர் அங்கே இருக்கின்றார்களா?'' என்பதை அறிய வழி, என்று கர்ணன் துரியோதனனுக்குக் கூறினான், என்க.

**8. தக்கோர்த குஞ்சொற்கள் கேளாத துரியோத**
**னன்சொல்லினால்**
**மிக்கோர்மி லைச்சுஞ்செ ழுத்தாம விறல்வெட்சி**
**மிலைதோளினான்**
**திக்கோதை யெழவிம்ம முரசங்க ளரசான திரிகர்த்தர்கோன்**
**அக்குரோணி படையோடு போயான டித்தான**
**வன்சார்பிலே.**

[தக்கோர் தகும் சொற்கள் கேளாத துரியோதனன் சொல்லினால், மிக்கோர் மிலைச்சும் செழு தாம விறல் வெட்சி மிலை தோளினான், திக்கு ஓதை எழ விம்ம முரசங்கள், அரசு ஆன திரிகர்த்தர்கோன், அக்குரோணி படையோடு போய் ஆன் அடித்தான் அவன் சார்பில், ஏ.]

**விளக்கம் :-** தக்கோர் தகும் சொற்கள் கேளாத துரியோதனன் சொல்லினால், அரசு ஆன திரிகர்த்தர்கோன், மிக்கோர் மிலைச்சும் செழுவிறல் வெட்சி தாமம் மிலை (அணிந்த) தோளினான், திக்கு ஓதை எழ முரசங்கள் விம்ம அக்குரோணி படையொடு, அவன் சார்பிலே போய். ஆன் அடித்தான்,— என்பது அன்வயம். தக்கோர் - மேலோர். தகும் சொல்-நன்மையின் தகுதி

வாய்ந்த சொல். மிக்கோர் - மேன்மை உடைய வீரர். மிலைச்சும்- அணியும். செழு விறல் வெட்சி தாமம் - செழிப்பு உடைய வலிமையின் அடையாளமான வெட்சிமாலை. அரசு ஆன திரிகர்த்தர்கோன் - பல அரசர்களின் தலைவனான திரிகர்த்தன். அக்குரோணி படை - பெரிய தொகையுடைய சேனை. ஆன் அடித்தான் - பசுக்களைக் கவர்ந்தான். சார்பு - இடம், நாடு. அவன் சார்பில் - விராடன் நாட்டில், தீயனான துரியோதனனது ஏவலினால் திரிகர்த்தராஜன், வெட்சிப் பூமாலை அணிந்து ஒரு அக்குரோணி கொண்ட நால்வகைப் படையுடன் விராட நகரம் சென்று நிரை கவர்ந்தான், என்பதாம். ஆரிய வர்த்தம் என்ற பூமியின் வடமேற்கில் உளது, திரிகர்த்தம், என்பர். அந்நாட்டின் அரசன் திரிகர்த்தன், பல அரசர்களைத் தன் ஆட்சியின் கீழே கொண்டவன். 21870 தேர்களையும், 21870 யானைகளையும், 65110 குதிரைகளையும், 109350 காலாட்களையும் கொண்ட படைவகுப்பு ஒரு அக்குரோணி.

**9. கரைகாண வரிதான கடலொத்த வெஞ்சேனை கைசூழவும்**
**தரைகாவல் பெறுதோளி னாண்மைப்பெ ருங்கேளிர்**
**தற்சூழவும்**
**விரைகாலு மலரோடை யெனுமாறி ருக்கும்வி ராடற்குநல்**
**நிரைகாவ னின்றோர்ப ணிந்தோதி னார்தெவ்வர்**
**நிரைகொண்டதே.**

[கரை காண அரிது ஆன கடல் ஒத்த வெம் சேனை கை சூழவும், தரைகாவல் பெறு தோளின் ஆண்மை பெருங்கேளிர் தன் சூழவும், விரைகாலும் மலர் ஓடை எனும் ஆறு இருக்கும் விராடற்கு நல் நிரை காவல் நின்றோர், பணிந்து ஓதினார் தெவ்வர் நிரை கொண்டது, ஏ.]

**விளக்கம் :** கைசூழல் - பக்கத்தில் இருத்தல். பூமிகாக்கும் தொழிலைப் பெற்ற தோளாண்மை உடைய சிறந்த சுற்றத் தாரோடு நண்பர்களும் தன்னைச் சூழ்ந்து இருக்கவும், மணம் கமழும் மலர்களை உடைய நீர் ஓடை என்று சொல்லும்படி இருக்கும் விராட மன்னனுக்கு,-- என்பது இரண்டு மூன்றாவது அடிகளின் பொருள். பசுக்கூட்டங்களுக்கு நல்ல காவல் அமைந்த இடையர், (அவனுக்கு) பகைவர் நிரை கவர்ந்து சென்ற செய்தியைக் கூறினார், என்பது ஈற்றடியின் பொருள். மலர்களின் மலர்ச்சியோடு தண்மையுங் கொண்ட நீரோடை போல், தன் குடிமக்களுக்கு மலர்ந்த முகத்தையும், குளிர்ந்த கருணையையும் தருபவன், என்ற கருத்தது மூன்றாவது அடி. சுற்றத்தார், நண்பர், என்ற இருபொருள்களையும் கொண்டது **கேளிர்** என்ற சொல். ஓடும் நீரைக் கொண்டது, ஓடை.

## விராடன் போர் எழல்

**10. செருமிக்க படையோடு சதியாக மதியாது**
**திரிகர்த்தர்கோன்**
**நிருமிக்க வொட்டாத வென்பூமி தனில்வந்து**
**நிரைகொள்வதே**
**பருமிக்க மதயானை தேர்வாசி யாளின்ன பண்செய்யு**
**மென்(று)**
**உருமிக்க முகில்போலு ரைத்தானொ ரக்குரோணி**
**யுளதானையான்.**

[செருமிக்க படையோடு சதியாக மதியாது திரிகர்த்தர் கோன், நிருமிக்க ஒட்டாத என் பூமி தனில் வந்த நிரைகொள் வதே, பருமிக்க மதம் யானை தேர் வாசி ஆள் இன்ன பண் செய்யும், என்று, உரும் மிக்க முகில்போல் உரைத்தான் ஓர் அக்குரோணி உள தானையான்.]

**விளக்கம் :-** ஒரு அக்குரோணி அதாவது இரண்டு லட்சத்து பதினெண்ணாயிரத்து எழுநூறு என்ற தொகை கொண்ட நால் வகைப் படையை உடைய விராடன், (தன் தானைத் தலைவர் களை நோக்கி) ''திரிகர்த்தன் என்பான், நம்மை மதியாது, போர் வல்லமை உடைய படையுடனே. பிறர் ஆணை செல்ல ஒண்ணாத நமது மண்ணில் சதியாக (வஞ்சனையாக) வந்து நமது நிரையைக் கவர்தல் நிகழ்வதாயிற்றே? (நிரைமீட்சிக்கு உடனே) மிகப் பருத்த யானை, தேர், குதிரை, காலாள் என்னும் சதுரங்க சேனைகளை யும் அணிவகுத்துப் போரெழுச்சிக்குச் சித்தம் செய்யுங்கள்'', என்று இடிமிகுந்த மேகம்போல் கட்டளையிட்டான்,—என்பது பொருள். நிருமித்தல் - நியமித்தல், ஏவல், ஆணையிடல். பருமிக்க - மிகப் பருத்த. வாசி - குதிரை. பண்செய்தல் - அணிவகுத்தல்.

**11. ஒண்டூளி வானம்பு தைக்கப்பல் லியசால மொலிபட்டிடத்**
**திண்டுசி யணியாக நிரைகொண்ட வெஞ்சேனை**
**சென்றெய்தினான்**
**ஞெண்டூரும் வயறோறும் வளைநித்தி லஞ்சிந்தி நிலவூரவே**
**வண்டூத மலருந்த டம்பொய்கை சூழ்மச்ச வளநாடனே.**

[ஒள் தூளி வானம் புதைக்க, பல் இயம் சாலம் ஒலி பட்டிட, திண் தூசி அணியாக நிரைகொண்ட வெம் சேனை சென்று எய்தினான், ஞெண்டு ஊரும் வயல்தோறும் வளை நித்திலம் சிந்தி நிலவு ஊரவே, வண்டு ஊத மலரும் தட பொய்கை சூழ் மச்சம் வளநாடன்.]

**விளக்கம் :-** ஈற்றடி இரண்டையும் முன்னே வைத்துப் படித்தால், செய்யுள் அன்வயமாய் விடும். ஒள் தூளி - மிகுதி

யான புழுதி. பல் இயம் சாலம் - பலவித வாத்தியங்களின் கூட்டம். ஒலி கொட்டிட - ஒலிக்க. திண் தூசி - வலிய சேனை. ஞெண்டு - நண்டுகள். வளை - சங்கு. நித்திலம் - முத்து. சிந்தி - சிந்த, ஈன. நிலவு ஊரும் - (சங்குகள் ஈன்ற முத்துக்களின் ஒளி) நிலவுபோல் பரவ. வண்டு ஊத - வண்டுகள் ஊதும்படி. பொய்கை - இயற்கையாய் அமைந்த நீர்நிலை. மச்சவளநாடன் - மச்சதேசம் என்ற வளம் நீறைந்த நாட்டை உடைய விராடன். விராடன், தனது சேனையுடன், நிரை கவர்ந்த திரிகர்த்தனது சேனையை நெருங்கினான், என்க. நண்டுகள் ஊரும் வயல்கள் சிந்திய முத்துக்களால் நிலவு போன்ற வெளிச்சம் உண்டாக, ஆம்பல் முதலிய மலர்கள், அதைச் சந்திரன் என்று மயங்கி, வண்டுகள் ஊதும்படி மலரும், என்றது, மயக்க அணியின் பாற் படும். இவ் வருணனை நீர்வளத்தைக் குறிக்கும். நண்டு, என்பதின் போலியான ஞண்டு, **ஞெண்டு** எனத் திரிந்து நின்றது.

## திரிகர்த்தன் தோல்வியுறல்

**12. உட்பேடி யாய்வைகும் விற்காளை யல்லாத வொருநால்வரும்**
**நட்பேறு பூபால னுடனேகி னார்போர்ந லங்காணவே**
**கொட்பேறி நிரைகொண்ட வெஞ்சேனை யுஞ்செல்கொ**
**டுஞ்சேனையும்**
**பெட்பேறி யமர்செய்ய முன்னிட்ட குருசேனை**
**பின்னிட்டதே.**

[உள் பேடி ஆல் வைகும் வில் காளை அல்லாத ஒரு நால்வரும், நட்பு ஏறு பூ பாலனுடன் ஏகினார் போர் நலம் காணவே ; கொட்பு ஏறி நிரை கொண்ட வெம் சேனையும், செல் கொடுஞ் சேனையும் பெட்பு ஏறி அமர் செய்ய முன்னிட்டு குருசேனை பின்னிட்டது, ஏ]

**விளக்கம் :-** உத்தரை என்பாளின் கன்னிமாடத்தில் பேடி வடிவங் கொண்டவனாய் வசிக்கும் விசயன் ஒழிந்த மற்றை நால்வரும் போரின் நலங்காணத் தங்களிடம் நட்பு மிகக் கொண்ட விராட மன்னனுடன் சென்றனர்; பசுக்களை வளைத்துக் கவர்ந்து கொண்ட கொடிய சேனையும்' நிரை மீட்கச் சென்ற கொடிய சேனையும் வெற்றியில் இச்சை கொண்டு போர் செய்ய, முன்னே வந்து நிரை கவர்ந்த கௌரவ சேனை பின்னிட்டது ; அதாவது தோற்று ஓடியது,—என்பது பொருள். கொட்பு - வளைவு. கொட்பு ஏறி - (நிரையை) வளைத்து. பெட்பு - ஆசை, இச்சை. குரு சேனை - குருவம்சத்தினனான துரியோதனனது சேனை. குரு வம்சத்தார், கௌரவர், என்று அழைக்கப்படுவர்.

**13. மெய்க்கொண்ட புண்ணோடு தன்சேனை நில்லாமல்**
**வென்னிட்டபின்**
**கைக்கொண்ட நிரையைக்க டத்திப்பொ லம்பொற்க**
**ழற்காலினான்**
**செய்க்கொண்ட கழுநீர லங்கற்க ரந்தைத்தி**
**ருத்தாமன்மேல்**
**மைக்கொண்ட லெனவில்வ ளைத்தாறு பத்தம்பு**
**மழைசிந்தினான்.**

[மெய் கொண்ட புண்ணோடு தன் சேனை நில்லாமல் வென் (வெந்) இட்டபின், கைக்கொண்ட நிரையை கடத்தி, பொலம் பொன் கழலினான், செய்கொண்ட கழுநீர் அலங்கல், கரந்தை திருதாமன் மேல், மை கொண்டல் என வில் வளைத்து ஆறு பத்து அம்பு மழை சிந்தினான்,]

**விளக்கம் :-** வென் - முதுகு. வென் இட்டபின் - முதுகு காட்டி ஓடியபின். கடத்தி - அப்பால் நடத்திச் செல்லச் செய்து. பொலம் (அழகிய) பொன் கழல் காலினான் - திரிகர்த்தன். செய் - வயல். வயல்கள் கொண்டுள்ள செங்கழு நீர் மாலையோடு (நிரை மீட்பவர் சூடும்) கரந்தையின் அழகிய மாலையையும் அணிந்துள்ள விராடன் மேல்,—என்பது மூன்றாவது அடியின் பொருள். (திரிகர்த்தன்) கரிய மேகம்போல் வில்லை வளைத்து அறுபது பாணங்களை (விராடன் மேல்) மழையெனப் பொழிந் தான், என்பது ஈற்றடியின் பொருள். தன் சேனை பின்னிடவே, திரிகர்த்தன் வெகுண்டு கவர்ந்த நிரையை அப்பால் ஒட்டிச் செல்லக் கட்டளையிட்டு, அதன்பின், விராடன்மேல் சரமாரி பொழிந்தான்,—என்க. கழுநீர் மலர் - விராடனது அடையாள மாலை. கரந்தை, நிரை மீட்சிக்குரிய மாலை. இரண்டையும் அணிந்து விராடன் போர் முகம் புகுந்தான்,—என்பதாம். மேகம் திரிகர்த்தனுக்கும், மழைத்தாரை அம்புகளுக்கும், வானவில் வில்லுக்கும், உவமை.

**14. மாமச்ச வுடல்புன்பு லான்மாறி வண்காவி மணநாறுமக்**
**கோமச்ச வளநாட னுங்கொற்ற வரிவிற்கு னித்தைந்துசெம்**
**தாமச்ச ரங்கொண்டு தேர்பாகு கொடிவாசி**
**தனுவுந்துணித்(து)**
**ஆமச்ச முறமற்ற வன்கோல மார்பத்து மம்பேவினான்.**

[மா மச்சம் உடல் புல் புலால் மாறி வள் காவி மணம் நாறும் அ கோ மச்சம் வள நாடனும் கொற்றம் வரிவில் குனித்து, ஐந்து செம் தாமம் சரம் கொண்டு, தேர், பாகு, கொடி, வாசி தனுவும் துணித்து, ஆம் அச்சம் உற மற்று அவன் கோலம் மார்பத்தும் அம்பு ஏவினான்.]

**விளக்கம் :-** பெரிய மீன்கள் இழிந்த புலால் நாற்றம் நீங்கப் பெற்று, செழுமை மிக்க செங்கழு நீர் மலர்களின் மணம் கமழப் பெற்ற சிறந்த மச்சவள நாடனான விராடனும் தனது வரி வில்லை வளைத்து, சிவந்த ஒளி உடைய பாணங்களைச் செலுத்தித் (திரிகர்த்தனுடைய) தேர், பாகன், கொடி, குதிரை, வில் ஆகியவற்றை அறுத்து, மற்றும் (மேலும்) மிகுந்த பயம் ஏற்படும்படி அவனது அலங்காரங் கொண்ட மார்பிலும், சரங் களைச் செலுத்தினான், என்பது பொருள். மீன், புலால் நாற்றம் மாறி மலர் மணம் கொண்டதாகக் கூறியது, **பிறிதின் குணம் பெறல் அணி.** தாமம் - ஒளி. பாகு - தேரோட்டுந் தொழில், இங்கே, ஆகுபெயராய்ப் பாகனை உணர்த்திற்று.

**15. தனைத்தேர ழித்தோனை நிரைகொண்டு போகின்ற**
**தனுவீரனும்**
**துனைத்தேரும் வேறொன்று மேல்கொண்டு நாலைந்து**
**தொடையேவியே**
**வினைத்தேரும் வயமாவும் வெம்பாகும் விழவெய்து**
**வின்னாணினான்**
**முனைத்தேர்மு கத்திற்பி ணித்தான வன்சேனை முகமாறவே**

[தனை தேர் அழித்தோனை, நிரை கொண்டு போகின்ற தனு வீரனும், துனை தேரும் வேறு ஒன்று மேல் கொண்டு நால் ஐந்து தொடை ஏவி(ஏ), வினை தேரும் வயம் மாவும் வெம்பாகும் விழ எய்து, வில் நாணினால் முனை தேர் முகத்தில் பிணித்தான், அவன் சேனை முகம் மாற, ஏ.]

**விளக்கம் :-** நிரை கொண்டு போகின்ற தனுவீரனும் வேறு துனை தேரும் ஒன்று மேல் கொண்டு, (விராடனது) வினை தேரும் வயம் மாவும் வெம் பாகும் விழ, தொடை ஏவி எய்து, தனை தேர் அழித்தோனை, அவன் சேனை முகம் மாற, வில் நாணினால் முனை தேர்முகத்தில் பிணிதான், என்பது அன்வயம். தனைதேர் ஒழித்தோன் - விராடன். நிரைகொண்டு போகின்ற தனுவீரன் - திரிகர்த்தன். துனையும் வேறு தேர் - விரைந்து செல்லக்கூடிய வேறு தேர் ; (தேரும் என்பதிலுள்ள உம்மையை துனையோடு கூட்டுக). ஒன்று மேல் கொண்டு - (தேர்) ஒன்றின் மேல் ஏறிக்கொண்டு. நால் ஐந்து தொடை - இருபது பாணங்கள்; அல்லது சில பாணங்கள். ஏவியே எய்து - பிரயோகம் செய்து. முனை - போர்முனை. தேர்முகம் - தேரின் முன்னிடம் : அதாவது தேர்க்கால். திரிகர்த்தன் வேறோர் தேரில் ஏறித் தன் தேரை அழித்த விராடனது தேரை அழித்து, அவனையும் தேர்க்காலில் கட்டினான், என்பதாம். முகம் மாற - பின்னிட. வினைத்தேர்- போர்த்தொழிலுக் குரிய தேர்.

வேறு

**பலாயனன் திரிகர்த்தனைப் பிணித்தல்**

**16. திண்டி றற்சிலை விராடனைத் தேரொடும் பிணித்துக்**
**கொண்டு போதலுங் குருகுலக் கோமக முனிவன்**
**கண்டு தன்திருத் தம்பியைக் கடைக்கணித் தருள**
**மண்டு தீயென வெழுந்தனன் மடைத்தொழில் வல்லான்.**

[திண் திறல் சிலை விராடனை தேரொடும் பிணித்து கொண்டு போதலும், குருகுலம் கோமகன் முனிவன் கண்டு, தன் திரு தம்பியை கடைக்கணிந்தருள, மண்டு தீ என எழுந்தனன் மடை தொழில் வல்லான்.]

**விளக்கம் :-** குருகுலக் கோமகன் (ஆகிய) முனிவன் - குரு குலத்து அரசனாகிய முனிவேடங்கொண்ட தருமன். மண்டுதீ - கொழுந்து விட்டு எரியும் தீ. தமையனது ஏவலால் வீமன், போரெழுந்தான், என்பதாம்.

**17. உகத்தி னீறுதோ றோதையோ டூதையாந் தாதை**
**நகத்தி னாலுயர் நகங்களை நறுக்குமா போலத்**
**திகத்த பூபதி தேரினை வேறொரு தேரால்**
**தகர்த்து வில்லொடு மகப்படுத் தினனவன் றனையும்.**

[உகத்தின் ஈறுதேறு ஓதையோடு ஊதை ஆம் தாதை, நகத்தினால் உயர் நகங்களை நறுக்குமா போல, திகத்த பூபதி தேரினை வேறு ஒரு தேரால் தகர்த்து, வில்லொடும் அகப்படுத்தி னன் அவன் தனையும்.]

**விளக்கம் :-** உகத்தின் ஈறு தோறு - யுகமுடிவுதோறும். ஓதை - பேரொலி. ஊதை ஆம் தாதை - பெருங்காற்றாகிய தந்தை (வாயு பகவான்). நகம் - மலை. திகத்த பூபதி - திரிகர்த்த ராஜன். அகப்படுத்தினான் - கைப்பற்றினான்.

கற்பாந்த காலந்தோறும் வாயுபகவனாகிய தந்தை மலை களை மலைகளால் நொருக்குவதுபோல், வீமன். திரிகர்த்தனது தேரை வேறொரு தேரால் மோதி அழித்து, அவனையும் கைப் பற்றிக் கொண்டான், என்பதாம்.

**18. வீரி யந்தனக் கொருவனாம் விராடனை யொருபொன்**
**தேரி லேறுகென் றேற்றியத் தேரினிற் றிகத்தன்**
**சோறி பாய்தடந் தோள்களை வடத்தினாற் றுவக்கி**
**மூரி யேறென மீண்டனன் முறிந்ததச் சேனை.**

[வீரியந்தனக்கு ஒருவன் ஆம் விராடனை ஒரு பொன் தேரில் ஏறுக என்று ஏற்றி, அ தேரினில் திரிகர்த்தன் சோரி பாய் தடந்

தோள்களை வடத்தினால் துவக்கி (கட்டி), மூரி ஏறு என மீண்டனன், முறிந்தது அ சேனை.]

**விளக்கம் :-** வீரியம் - ஆண்மை, வீரத்தன்மை. சோரி - இரத்தம். வடம் - கயிறு. துவக்கி - பிணித்து. மூரி ஏறு - வலிமை பொருந்திய இரஷபம். சேனை முறிந்தது - திரிகர்த்தன் சேனை அழிந்தது. வீமன், விராடனை விடுவித்து, ஓரழகிய தேரின் மேல் அவனை ஏறச் செய்து. அத் தேரின் காலில் திரிகர்த்தனைப் பிணித்தான் என்பதாம்.

**19. பொருமு கத்தினிற் பகைவனைப் புயமுறப் பிணித்து**
**வெருமு கத்தினில் வீடுகொள் வீமனை விராடன்**
**செருமு கத்தினி லெனக்குநீ செய்தபே ருதவிக்(கு)**
**ஒருமு கத்தினு மில்லைகைம் மாறென வுரைத்தான்.**

[பொரு முகத்தினில் பகைவனை புயம் உற பிணித்து வெரு முகத்தினில் வீடு கொள் வீமனை, விராடன், செரு முகத்தினில் எனக்கு நீ செய்த பேர் உதவிக்கு ஒரு முகத்தினும் இல்லை கைம்மாறு என உரைத்தான்.]

**விளக்கம் :-** பொருமுகம் - போர்முனை. வெரு முகத்தினில் வீடு கொள் வீமன் - கண்டார் அஞ்சுதற்கான தோற்றத்துடன் திரும்பிய வீமன்; அல்லது (தன்னை) விடுவித்த வீமன். ஒரு முகத்தினும் - ஒரு வகையிலும். தன்னை விடுவித்துப் பகைவனையும் தேரில் கட்டிய வீமனுக்கு எவ்வகையிலும் கைம்மாறு செய்வதற்கு இல்லை, என்று விராடன் உபசார வார்த்தை கூறிய படி. வெரு - அச்சம்.

**20. சேவ லானெனத் தயித்திய னனையவத் திகத்தர்**
**காவ லானையக் கான்மகன் பிணித்தமை கண்டு**
**மாவ லான்வய மாப்பதி னாயிரம் வௌவக்**
**கோவ லானவன் கொண்டகோ மீளவுங் கொண்டான்.**

[சேவலான் என தயித்தியன் அனைய திகத்தர் காவலானை அ கால் மகன் பிணித்தமை கண்டு, மாவலான் வயமா பதினாயிரம் வௌவ, கோவலான் அவன் கொண்ட கோ மீளவும் கொண்டான்.]

**விளக்கம் ;-** கால் மகன் - வாயுவின் மகனான வீமன். சேவலான் என, அதாவது கோழிக் கொடியைக் கொண்ட முருகக் கடவுளைப் போன்ற ஆற்றலுடைய, அசுரரை ஒத்த திரிகர்த்தர் தலைவனைப் பிணித்தமை கண்டு,—என்பது முதல் இரண்டடி களின் பொருள். மாவலான் - குதிரைத் தொழிலில் வல்லவனான தாமக்கிரந்தி (நகுலன்). கோவலான் - பசுப் பாதுகாப்புத் தொழிலில் வல்லவனான தந்திரிபாலன் (சகாதேவன்). வீமன் பகைவர் தலைவனைப் பிணித்தமை கண்டு, நகுலன் பகைவர் குதிரைகளில் பதினாயிரம் கவர்ந்தான்; சகாதேவன், பகைவனால் கவரப்பெற்ற நிரையைத் திருப்பி நகர் நோக்கிச் செலுத்தினான்,—என்பதாம்.

**21. துன்ன லன்றனைத் தோளுறத் துவக்கிமுன் றந்த**
**பன்னு நூன்மடைப் பலாயனற் கண்டுபா வித்தாங்(கு)**
**அன்ன காலையி லருக்கனைத் தேரொடு மணைத்து**
**மன்னு தன்றிசை வன்சிறைப் படுத்தினன் வருணன்.**

[துன்னலன் தனை தோள் உற துவக்கி முன் தந்த பன்னும் நூல் மடை பலாயனன் கண்டு, பாவித்து ஆங்கு, அன்ன காலையில் அருக்கனை தேரொடும் அணைத்து மன்னு தன் திசை வல் சிறை படுத்தினான், வருணன்.]

**விளக்கம் :-** துன்னலன் - பகைவன். பன்னும் நூல் பலாயனன் - சிறப்பித்துப் பேசப்படும் பாகசாத்திரம் பயின்று, அச் சாத்திர முறையில் சமைக்கும் பலாயனான் (வீமன்). ஆங்கு பாவித்து - அவ்வாறே தானும் செய்வதாக (வருணன்) பாவித்து. அருக்கன் - சூரியன். தேரோடு அணைத்து - தேரோடு சேர்த்துக் கொண்டு சென்று. மன்னு தன் திசை - நிலையுடைய தனது திசையான மேற்கில். வருணன்-திக்பாலர்களில் ஒருவன்; மேற்கு அவனது திசை. சூர்யாத்தமன காலத்திற்குச் சிறிது முன்னர், வீமன், திரிகர்த்தனைப் பிடித்துத் தேரில் கட்டினான். இந்த சிறந்த செயலைக் கண்ட வருணன், தானும் அவ்வாறே ஒன்று செய்வதாகப் பாவித்துச் சூரியனைத் தன் திசையான மேலைத் திசையில் அவனது தேரோடு சிறைப்படுத்தினான்,—என்றார். வருணன் சூரியனைத் தன் திசையில் சிறையிட்டான், என்ற வருணனை, **தற்குறிப்பேற்றம்.**

**22. கங்க னென்றுதன் னருகிருந் தருளிய கடவுள்**
**துங்க மாமுனி சொற்படி தோள்வட நெகிழ்த்துச்**
**சிங்க மன்னவத் திகத்தனைச் செல்கென விடுத்தான்**
**அங்க மாமதி லயோத்திமன் றேருமொன் றளித்தே.**

[கங்கன் என்று தன் அருகு இருந்தருளிய கடவுள் துங்கம் மாமுனி சொற்படி தோள் வடம் நெகிழ்த்து, சிங்கம் அன்ன அ திகத்தனை செல்கென (செல்க - என) விடுத்தான், அங்கம் மாமதில் அயோத்திமன் தேரும் ஒன்று அளித்து.]

**விளக்கம் :-** கடவுள் துங்கம் மாமுனி - தெய்வத் தன்மை யுடைய பெருமை பொருந்திய சிறந்த முனிவன் (தருமன்). நெகிழ்த்து - அவிழ்த்து. அங்கம் மாமதில் அயோத்திமன் - அரணாகும் மதிலுக்குரிய அங்கங்களைக் கொண்ட பெரிய மதலை யுடைய அயோத்தி மன்னனான விராடன். கங்கன் என்ற பெயர் பூண்ட தருமன் சொல்ல, விராடன், திரிகர்த்தனை, தேர் ஒன்றும் அளித்துத் தனது நாடு செல்ல அனுமதித்தான், என்பதாம். விராடன், சூரிய குலத்தா னாதல் பற்றி அயோத்திமன், எனப் பட்டான்.

**23. போர ணிப்படை யொடுமவன் போனபின் றனது
தேர ணிப்பெருஞ் சேனையை ரவிகுல திலகன்
பேர ணிப்பட வகுத்துமற் றியாரினும் பெரியோன்
ஈர ணிப்படை வருமெனக் கங்குலங் கிருந்தான்.**

*[போர் அணி படையோடும் அவன் போனபின், தனது தேர் அணி பெரும் சேனையை ரவிகுல திலகன், பேர் அணி பட வகுத்து மற்று யாரினும் பெரியோன் ஈர் அணி படை வரும் என கங்குல் அங்கு இருந்தான்.]*

**விளக்கம் :-** போருக்கு அணியாகும் படையுடன் திரிகர்த்தன் போனபின், இரவிகுல திலகனான விராடன், மற்றை எல்லா அரசர்களினும் பெரியோனான துரியோதனனது இரண்டாவது அணி வகுப்புப் படை வருமென்று எண்ணி, தனது தேர் முதலிய அணியை உடைய பெருஞ்சேனையை அரணுடைய வியூகமாக அணிவகுத்து, அன்றைய இரவில் அங்கே தங்கியிருந்தான், என்பது பொருள். போருக்கு அலங்கார மாகும் படை என்று தோல்வியுற்ற திரிகர்த்தன் படையைக் கூறியது, இகழ்ச்சியின் பாற்படும். ஈர் அணி படை, என்பதற்குப் பகைவர் அணி வகுப்பைப் பிளக்கவல்ல படை, என்றும் பொருள் கொள்ளலாம்.

பகைவர் வடபுறம் நிரை கவர்தல்

**24. கெட்ட வெம்படை கெட்டமை சுயோதனன் கேளா
முட்ட வெண்டிசா முகங்களும் பேரிகை முழங்க
தொட்ட பைங்கடற் சூரியன் றோன்றுமுன் றோன்றி
வட்ட மாமதில் விராடனூர் வடதிசை வளைத்தான்.**

*[கெட்ட வெம் படை கெட்டமை சுயோதனன் கேளா, முட்ட எண் திசா முகங்களும் பேரிகை முழங்க, தொட்ட பைங்கடல் சூரியன் தோன்றுமுன் தோன்றி, வட்டம் மாமதில் விராடன் ஊர் வடதிசை வளைத்தான்.]*

**விளக்கம் :-** மிகவும் கொடிய (திரிகர்த்தன்) படை கெட்டமை சுயோதனன் கேளா, எண் திசா முகங்களும் முட்ட பேரிகை முழங்க, தொட்ட பைங்கடல் சூரியன் தோன்றுமுன், வட்டம் மாமதில் விராடன் ஊர் தோன்றி, வடதிசை வளைத்தான். கெட்டவெம்-மிகவும் கொடிய. கெட்டமை-தோற்றமை. கேளா - கேட்டு. எட்டுத் திசைகள் எங்கும் பேரிகையின் ஒலி முட்டும்படி பேரிகைகள் முழங்க, (சகரனின் மைந்தர்) தோண்டிய பைங்கடலில் (கீழ்த்திசையில்) சூரியன் உதிக்கும்முன், வட்டவடிவ மான பெரிய மதிலையுடைய விராடனது நகரில் தோன்றி, (நகரை அடைந்து) நகரின் வடபுறத்தைத் (துரியோதனன்) வளைத்துக்

கொண்டான், என்பதாம். தொட்ட - தோண்டிய. இதனால், திரிகர்த்தன் நிரைகவர்ந்தது நகரின் தென்புறம், என்க.

**25. வளைய நாடெலா மன்னவன் வருதினி பரப்பி**
**விளையு நன்பெரு விளைவெலாம் வெங்கனல் கொளுத்தி**
**அளையு மாமணி யானிரை கவர்தலு மாயர்**
**உளைய வோடிவந் தூர்புகுந் துத்தரற் குரைப்பார்.**

[வளைய நாடு எலாம் மன்னவன் வருதினி பரப்பி, விளையும் நல் பெரு விளைவு எலாம் வெம் கனல் கொளுத்தி, அளையும் மா மணி ஆ நிரை கவர்தலும், ஆயர் உளைய ஓடிவந்து ஊர் புகுந்து உத்தரற்கு உரைப்பார்.]

**விளக்கம் :-** விராடனது நாடு முழுதையும் சுற்றிப் படையைப் பரவச் செய்து, விளைகின்ற நல்ல பெரிய பயிர்களை எல்லாம் தீயினால் எரித்து அழித்து, அசைந்து ஒலிக்கும் பெரிய மணிகளை உடைய பசுக்களை, (துரியோதனனது படை) கவர்ந்து கொள்ளலும், (பசுக் காத்தலை மேற்கொண்ட) இடையர் மெய் வருந்த ஓடிவந்து நகரை அடைந்து, (விஷயத்தை) உத்தர குமாரனுக்குச் சொல்வாராயினர்,—என்பது பொருள். உத்தரன்-விராடன் மகன்.

**26. குடநி றைப்பன குவிமுலைக் கோநிரை மீட்பான்**
**திடனு டைப்புய மன்னவன் றென்றிசைச் சென்றான்**
**வடதி சைப்புல முழுவது மாசுணக் கொடியோன்**
**அடல்வ யப்படை யாழியிற் பரந்ததை யன்றே.**

[குடம் நிறைப்பன குவிமுலை கோ நிரை மீட்பான் திடன் உடை புயம் மன்னவன் தென்திசை சென்றான், வடதிசை புலம் முழுவதும் மாசுணம் கொடியோன் அடல் வயம் படை ஆழியின் பரந்தது; ஐ, அன்றே.]

**விளக்கம் :-** நகரின் தென்புறத்தில் திரிகர்த்தனால் கவரப் பெற்ற பசுக்களை மீட்பதற்கு விராடன் சென்ற சமயத்தில், பாம்புக் கொடியோனாகிய துரியோதனனின் படை எங்கும் பரவியது, (என்பதை ஆயர் உத்தரனுக்குச் சொன்னார்) என்பது பொருள். பரந்ததை, என்பதிலுள்ள ஐ சாரியை. அன்றே : ஈற்றசை. குடங்குடமாய்ப் பால் சொரியும் மடியை உடைய பசுக்கள், என்று பசுக்களின் சிறப்பை முதலடி கூறும். திடன் உடை புயம் மன்னவன்-விராடன், (திடன்-வலிமை). மாசுணம்-பாம்பு. அடல் வயப்படை - வலிமையோடு வெற்றியையும் உடைய (பகைப்) படை.

**27. நாட்டி லுள்ளன பலன்களுங் கவர்ந்தனர் நறுந்தண்**
**காட்டி லுள்ளன சுரபியின் கணங்களுங் கவர்ந்தார்**
**கூட்டி லுள்ளுறை கலுழனின் குஞ்சுபோ லினிநீ**
**வீட்டி லுள்ளுறை கின்றதென் வேந்தன்மா மதலாய்.**

[நாட்டில் உள்ளன பலன்களும் கவர்ந்தனர், காட்டில் உள்ளன சுரபியின் கணங்களும் கவர்ந்தார். கூட்டில் உள் உறை கலுழனின் குஞ்சுபோல் இனி நீ, வீட்டில் உள் உறைகின்றது என்? வேந்தன் மா மதலாய்.]

**விளக்கம் :-** வேந்தன் மா மதலாய், என்று உத்திரனை விளித்து, ஆயர் கூறுகின்றனர்: நாட்டில் உள்ளனவான விளை பொருள்களை எல்லாம் கவர்ந்தார், அதாவது தீயிட்டு அழித்தார்; காட்டில் உள்ளனவான பசுக் கூட்டங்களை எல்லாம் கைப்பற்றிக் கொண்டார்; இனி நீ, (பகையாகிய பாம்புகளை எல்லாம் வெளிப்பட்டு வெல்ல நினையாமல்) கூட்டினுள்ளே அடங்கிக் கிடக்கும் கருடனின் இளங் குஞ்சுபோல், நீ வீட்டினுள்ளே செயற் படாமல் இருப்பது ஏன்? (என்று ஆயர் கூறினர்) என்பது பொருள். பறவைகளின் அரசன் கருடன். ''கருடன் பாம்புகளை அடக்குவது போல், மன்னவன் மைந்தனாகிய நீ பகை கடந்து நிரைமீட்க வேண்டியவனாகியிருக்கக் கருடனின் இளங்குஞ்சு கூட்டினுள் அடங்கிக் கிடப்பதுபோல், இளமைப் பருவங் கடந்த நீ வீட்டினுள் அடங்கிக் கிடத்தல் அமையாது. எனவே, அடாதன செய்த பாம்புக் கொடியோனை எதிர்த்து நிரை மீட்டலுக்குரிய வழியில் தொழிற்படுக,'' என்று ஆயர் கூறியபடி.

**28. என்ற போதிலப் புதல்வனைப் பரிவுட னீன்றாள்**
**நின்ற மங்கையர் தங்களை நிரைநிரை நோக்கிச்**
**சென்ற காவலன் வருந்துணை செங்கையிற் படைகொண்(டு)**
**ஒன்ற வேகிநம் மெயிற்புறங் காமினென் றுரைத்தாள்.**

[என்ற போதில் அ புதல்வனை பரிவுடன் ஈன்றாள் நின்ற மங்கையர் தங்களை நிரை நிரை நோக்கி, சென்ற காவலன் வருந்துணை செங்கையில் படைகொண்டு ஒன்ற ஏகி நம் எயில் புறம் காமின், என்று உரைத்தாள்.]

**விளக்கம் :-** என்ற போதில் - (பகைவர் நிரை கவர்ந்தனர்) என்று ஆயர் கூறியபொழுது. புதல்வனைப் பரிவுடன் ஈன்றாள் - உத்தரனைப் பெற்று அன்போடு வளர்த்தவளான சுதேட்டிணை. நின்ற மங்கையர் - பணிப் பெண்கள் நிரைநிரை - வரிசை வரிசை யாக. ஒன்ற ஏகி - ஒன்றாக, (கூட்டமாகச்) சென்று. போர்முனை சென்ற அரசன் திரும்பும் வரை, மதில் புறத்தை ஆயுதங்களோடு சென்று காவல் செய்யுமாறு பணிப்பெண்களுக்கு அரசி கூறினாள்,—என்பதாம்.

## உத்தரன் போரெழல்

**29. உரைத்த வன்னையைக் கதுமென வுத்தரன் வணங்கி**
**நரைத்த வோதிநின் றிருமொழி நன்றென நகையா**
**அரைத்த வாரமு மாரமு மாலையு மணிந்தென்**
**வரைத்த டம்புயம் வளர்த்தது மகளிர்போர் பொரவே.**

*[உரைத்த அன்னையை கதுமென உத்தரன் வணங்கி, நரைத்த ஓதி நின் திருமொழி நன்று என நகையா, அரைத்த ஆரமும் ஆரமும் மாலையும் அணிந்து என் வரை தடம் புயம் வளர்த்தது மகளிர் போர் பொரவோ.]*

**விளக்கம் :-** கதுமென - விரைந்து. நரைத்த ஓதி - நரை கொண்ட கூந்தலை உடைய தாயே. நன்று - மிக நன்றாய் இருக்கின்றது, இகழ்ச்சிக் குறிப்பு. நகையா - நகைத்து. ஆரம் - சந்தனம். ஆரம் - முத்துமாலை. மாலை - மலர்மாலை. உற்றவிடத்துப் பெண்கள் போர் செய்யவோ, என் தோள்களைச் சந்தனம் பூசியும், முத்துமாலையும் மலர்மாலையும் அணிவித்தும் வளர்த்தது?'' என்று உத்தரன், தன் தாய்க்குக் கூறினான், என்பதாம்.

**30. கனைக டற்படை யுடனிரைக் கணங்கவர்ந் தவரை**
**முனைப்ப டப்பொரு திமைக்குமுன் முதுகுகண் டிடுவேன்**
**வினைமு கத்தினை யறிந்துதேர் விசையுடன் விடவென்**
**நினைவொ டொப்பதோர் சாரதி நேர்ந்தில னென்றான்.**

*[கனை கடல் படையுடன் நிரை கணம் கவர்ந்தவரை முனை பட பொருது இமைக்கு முன் முதுகு கண்டிடுவேன்; வினை முகத்தினை அறிந்து தேர் விசையுடன் விட என் நினைவொடு ஒப்பது ஓர் சாரதி நேர்ந்திலன் என்றான்.]*

**விளக்கம் :-** போரின் நிலைமையையும், என் மனத்தையும் அறிந்து வேகமாகத் தேர் நடத்தவல்ல சாரதி கிடைக்கப் பெற்றிலேன்: கிடைப்பின். நிரை கவர்ந்த பகைவரை இமைப்பொழுதில் புறங் காண்பேன், என்று உத்தரன் கூறினான், என்பதாம். நேர்ந்திலேன் - கிடைக்கப்பெற்றிலேன் (தன்மை ஒருமை முற்று), நினைவொடு ஒப்பது ஓர் சாரதி - என் மனத்தொடு ஒத்த தன்மையுடைய ஒரு சாரதி.

**31. உத்த ரன்புக லுறுதிகேட் டொப்பனைக் குரியாள்**
**கொத்த ரம்பொரு கூரயிற் குமரனைக் குறுகி**
**வித்த ரம்பெரு தேர்விடும் விசயனுக் கிவளென்(று)**
**அத்த ரம்பெறு பேடியைக் காட்டின ளன்றே.**

*[உத்தரன் புகல் உறுதி கேட்டு ஒப்பனைக்கு உரியாள், கொத்து அரம் பொரு கூர் அயில் குமரனை குறுகி, வித்தரம் பெருதேர் விடும் விசயனுக்கு இவள் என்று, அ தரம் பெறு பேடியை காட்டினள் அன்றே.]*

**விளக்கம் :-** உறுதி - உறுதிமொழி. ஒப்பனைக்குரியாள் - வண்ணமகள் (திரௌபதி). கொத்து அரம் பொரு கூர் அயில் குமரன் - திரண்ட அரத்தால் அராவப்பெற்ற கூரிய வேலை யுடைய உத்தரன். வித்தரம் - (வித்தாரம், விஸ்தாரம்) விசால மான, இவள் விசயனுக்கு வித்தரம் பெரு தேர் விடும் - இந்தப் பேடி விசயனுக்கு இடமகன்ற பெரிய தேரைச் செலுத்துவாள். (விசயனுக்குத் தேர் நடத்துதற்கான) அந்த திறமையைப் பெற்ற பிருகந்தளை என்ற பேடி, தக்க சாரதியாவாள், என்று (வண்ண மகள்) அவளைச் சுட்டிக் காட்டினாள், என்பது ஈற்றடியின் பொருள். இங்கே, அருச்சுனனை **விசயன்** என்றது, அவனது தேர் நடத்தும் பேடி தேரோட்டிச் சென்றால் வெற்றி நிச்சயம், என்று குறிப்பிக்கும் கருத்ததாகலாம், தரம் - வலிமை.

**32. என்ற போதவன் பயந்தவட் கியம்பிய துரைப்ப**
**நின்ற பேடியை நிரைவளை தழுவிநீ தேரில்**
**வென்று போர்முனை யரசரை விடலைவெய் தீண்டும்**
**துன்று தாரினா யெனவியந் தின்னவை சொன்னாள்.**

[என்றபோது, அவன் பயந்தவட்கு இயம்பியது உரைப்ப, நின்ற பேடியை நிரைவளை தழுவி, நீ, தேரில், வென்று போர் முனை அரசரை விடலை வெய்து ஈண்டும், துன்று தாரினாய், என வியந்து இன்னவை சொன்னாள்.]

**விளக்கம் :-** என்றபோது - என்று வண்ணமகள் சொன்ன போது. நிரைவளை - சுதேட்டிணை, நேரில் - தேர் செலுத்த உடன்படின். விடலை போர் முனை அரசரை வென்று வெய்து ஈண்டும்-என் மகன் போர் முனையிலுள்ள பகை அரசரை வென்று விரைவில் திரும்புவான். துன்று தாரினாய் - நெருங்கிய மலர் களைக்கொண்ட மாலை அணிந்த பேடியே, பேடி விசயனது தேர் ஓட்டுபவள், என்று வண்ணமகள் சொல்ல, அதை உத்தரன் தன் தாய்க்குச் சொல்லலும், அரசி அவளைத் தழுவி, ''நீ தேர் செலுத்த உடன்படுவாயானால், என் மகன் பகை அரசை வென்று வெற்றியுடன் மீள்வான்,'' என்று பேடியை வியந்து இன்னபடி கூறினாள்,—என்பதாம். நிரைவளை, அன்மொழித் தொகை. விடலை - மகன்.

**33. நாடி வாசியி னல்லன நான்கவை பூட்டித்**
**தேடி யாயுதஞ் சிலைமுதற் றெரிந்தவை கொண்டு**
**கோடி கோடிபைங் கோதையர் குழீஇயினர் வாழ்த்தப்**
**பேடி தேர்விடச் சென்றனன் சுதேட்டிணை பிள்ளை.**

[நாடி வாசியில் நல்லன நான்கு அவை பூட்டி, தேடி ஆயுதம் சிலை முதல் தெரிந்து அவை கொண்டு, கோடி கோடி பைங்கோதையர் குழீஇயினர் வாழ்த்த, பேடி தேர் விட சென்ற னன் சுதேட்டிணை பிள்ளை.]

**விளக்கம் :-** குதிரைகளில் நல்லனவான நான்கைப் பொறுக்கி எடுத்து, அவற்றைத் தேரில் பூட்டி, வில் முதலிய ஆயுதங்களை ஆராய்ந்து அறிந்து அவற்றை எடுத்துக்கொண்டு, மிகப் பலரான பெண்கள் திரண்டு வாழ்த்த, சுதேட்டிணை மகனான உத்தரன், பேடி தேரை நடத்த (வடதிசை நோக்கிப்) புறப்பட்டுச் சென்றான்,—என்பது பொருள்.

**34. விலங்கன் மாமதில் களும்புற வீதியுங் கடந்தாங்(கு)**
**இலங்கு நேமியொன் றுடையதே ரென்னலாந் தேர்மேல்**
**துலங்கு பேரொளி யருக்கனி லுருத்தெழு தோற்றத்(து)**
**அலங்க லுத்தர னுத்தர திசையையவந் தடைந்தாள்.**

[விலங்கல் மா மதில்களும் புற வீதியும் கடந்து ஆங்கு, நேமி ஒன்று உடைய தேர் என்னல் ஆம் தேர்மேல் துலங்கு பேர் ஒளி அருக்கனில், உருத்து எழு தோற்றத்து, அலங்கல் உத்தரன் உத்தர திசையை வந்து அடைந்தான்.]

**விளக்கம் :-** துலங்கு பேர் ஒளி அருக்கனில் உருத்து எழு தோற்றத்தில், அலங்கல் உத்தரன், இலங்கு நேமி ஒன்று உடைய தேர் என்னல் ஆம் தேர்மேல் விலங்கல் மா மதில்களும் புற வீதியும் கடந்து வந்து (ஆங்கு) உத்தர திசையை அடைந்தான்;—என்பது அன்வயம். விளங்குகின்ற ஒளியின் மிகுதிகொண்ட சூரியனைப் போல் உருக்கொண்டு விளங்கும் தோற்றமும், கரந்தை மாலையும் உடைய உத்தரகுமாரன், விளங்கும் சக்கரம் ஒன்றுடைய (சூரியனது) தேர் என்று சொல்லத்தக்க சிறந்த தேரில், மலை போன்ற பெரிய மதில்களையும், நகரத்தின் புற வீதிகளையும் கடந்துபோய் வடதிசையை அடைந்தான், என்பது பொருள். உருத்து எழு தோற்றம் - தோற்றம் கொண்டு (உருக்கொண்டு) விளங்கும் காட்சி. ஆங்கு: அசை. உத்தரன் உத்தர திசை அடைந்தான், என்றது நயமுடையது. தென் திசை; எமன் திசை தோல்வி அல்லது சாவைக் குறிக்கும். அதற்கு எதிர்த் திசையான வடதிசை, வெற்றியைக் குறிக்கும். எனவே, உத்தரன் பகை வென்று திரும்பப் போவதைக் குறிக்கும் நலத்தது அத்தொடர்.

## உத்தரன் அஞ்சித் தளர்தல்

**34. விண்கொ ளாமதி மேன்மைகொண் மீனின மென்ன**
**மண்கொ ளாவிறன் மன்னுடை வரம்பில்வான் படையை**
**எண்கொ ளாமனத் திராகவன் றிருக்குலத் திளைஞன்**
**கண்கொ ளாவகை புகுந்துதன் கண்ணுறக் கண்டான்.**

[விண்கொளா மதி மேன்மை கொள் மீன் இனம் என்ன மண் கொளா மன் உடை வரம்பு இல் வான் படையை, எண் கொளா

மனத்து இராகவன் திரு குலத்து இளைஞன், கண் கொளா வகை புகுந்து தன் கண் உற கண்டான்.]

**விளக்கம் :-** எண்கொளா மனத்து இராகவன் திரு குலத்து இளைஞன் (போர் முனை) புகுந்து, விண்கொளா மதி...படையை, கண் கொளா வகை தன் கண் உறக் கண்டான்,—என்பது அன்வயம். விண்ணில் இடங்கொள்ளாது (மண்ணில் இடங்கொண்ட) சந்திரனையும், சிறந்த நட்சத்திரக் கூட்டங்களையும் போன்ற, நில உலகத்தில் எவரும் பெற்றிராத வலிமையை உடைய துரியோதனனது அளவு இறந்த பெரிய சேனைக் கடலை,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். எண்கொளா - மனத்தில் கொள்ளாத, அதாவது பகைப் படை எத்தன்மையதா யிருக்கும் என்பதை (போர்க்களத்தைக் கண்டறியாத இளைஞன் ஆனபடியால்) தெரிந்துகொள்ளாத. இராகவன் குலம் - சூர்ய குலம். (போர்க்களம் புகுந்து) கண் கொளா வகை கண் உற கண்டான் - பார்வைக்கு எட்டாதபடி படை பரந்து விரிந்து கிடப்பதைக் கண்களால் நன்றாகக் கண்டான். கண்ணுக்கு எட்டாதபடி விரிந்து கிடக்கும் துரியோதனனது பெரிய சேனையைப் போர் பயின்றறியாத இளைஞனான உத்தரன் கண்டான்,—என்க.

**36. கைந்ந டுங்கவுங் கானடுங் கவுங்கருத் தழிந்து**
**மெய்ந்ந டுங்கவு நாப்புலர்ந் துயிர்ப்புமேல் விஞ்சிச்**
**சொனன டுங்கவுஞ் சுடர்முடி நடுங்கவுஞ் சோர்ந்தான்**
**மைந்நெ டுங்களிற் றுரனுடை விராடர்கோன் மைந்தன்.**

[கை நடுங்கவும் கால் நடுங்கவும் கருத்து அழிந்து மெய் நடுங்கவும், நா புலர்ந்து உயிர்ப்பு மேல் விஞ்சி, சொல் நடுங்கவும் சுடர் முடி நடுங்கவும் சோர்ந்தான், மை நெடுங் களிறு உரன் உடை விராடர் கோன் மைந்தன்.]

**விளக்கம் :-** கரிய பெரிய ஆண் யானை போன்ற உரன் உடையவனான விராடனது இளமைந்தன், (பகைப் படையைக் கண்டதால் எழுந்த அச்சத்தினால்) மனம் அழிந்து, நாக்கு வறண்டுபோக, பெருமூச்சு மிக, கை நடுங்கவும், கால் நடுங்கவும், உடல் நடுங்கவும், சொல் தடுமாறவும், பிரகாசிக்கும் கிரீடம் ஆடவும், சோர்ந்து போனான் (மூர்ச்சித்தான்). இதுவரையிலும் கண்டறியாத போர்முனைக் காட்சியைக் கண்ட இளைஞன் நலங் குலைந்து மூர்ச்சையுற்றான் என்க.

### பிருகந்நளை இளைஞனைத் தேற்றுதல்

**37. அஞ்ச லஞ்சனீ பகைவரை யாருயி ரடுதல்**
**துஞ்ச லென்றிவை யிரண்டலாற் றுணிவுவே றுண்டோ**
**வெஞ்ச மந்தனில் வந்துபுண் படாதினி மீண்டால்**
**வஞ்ச நெஞ்சுடை வஞ்சிய ரென்சொலார் மறவோய்.**

[அஞ்சல், அஞ்சல் நீ, பகைவரை ஆர் உயிர் அடுதல், துஞ்சல் என்று இவை இரண்டு அலால் துணிவு வேறு உண்டோ ? வெம் சமம்தனில் வந்து புண்படாது இனி மீண்டால் வஞ்சம் நெஞ்சு உடை வஞ்சியர் என் சொலார் மறவோய் ?]

**விளக்கம் :-** வீரனே, அஞ்சாதே. பகைவர் அரிய உயிரை அழித்தல், அல்லது சாதல் என்ற இவையே அல்லாமல் வீரனுக்கு வேறு செய்வதற்குரியது உண்டோ! (இல்லை என்றபடி). கொடிய போர்க்களம் வந்து, புண்படாது இனி திரும்பினால், வஞ்சிக்கும் நெஞ்சுடைய வஞ்சியர் (மாதர்) என்ன சொல்லிச் சிரிக்கமாட்டார்கள் ? என்பது பொருள். சமம் - போர் முனை, போர். பெண்களின் முன் சாரதி கிடைத்தால் பகை வெல்வேன், என்றானாதலின், வஞ்சியர் என் சொலார்? எனப்பட்டது. அறிய முடியாத நெஞ்சின் ஆழம் உடைமை பற்றி, மகளிர், ''வஞ்ச நெஞ்சுடை வஞ்சியர்'', எனப்பட்டார்.

**38. நிலையு முட்டியு நிலைபெற நின்றுநேர் படத்திண்**
**சிலைவ ளைத்துவெஞ் சிலீமுகஞ் சிற்சில தொடுத்து**
**மலையி லக்கென யாரையு மலைந்திடு மலைந்தால்**
**அலைக டற்புவி யரசரி லாரெதிர் நிற்பார்.**

[நிலையும் முட்டியும் நிலைபெற நின்று நேர்பட திண் சிலை வுளைத்து வெம் சிலீமுகம் சில்சில தொடுத்து, மலை இலக்கு என யாரையும் மலைந்திடு; மலைந்தால் அலை கடல் புவி அரசரில் ஆர் (உனக்கு) எதிர் நிற்பார் ?]

**விளக்கம் :-** நிலை - அம்பு எய்வோர் நிற்க வேண்டிய நிலை. முட்டி - (முஷ்டி) கைப்பிடி ; வில்லைப் பிடிக்க வேண்டிய முறை. நிலைபெற - உறுதி பெற. சிலீமுகம் - அம்பு. நேர்பட தொடுத்து- பகைவரின் எதிர் நின்று தொடுத்து. மலை இலக்கு என - மலை போல் (சலியாது,) மலைதல் - போர் செய்தல். ''முறையே வில்லை ஏந்திச் சலியாது நின்று சரந் தொடுத்தால், உன் முன் எவரும் நிற்க மாட்டார்கள்'', என்று பிருகந்நளை, உத்தரனைத் தேற்றியபடி. இலக்கு - இடம். மலை இலக்கு - மலையாகிய இடம்.

**39. தூண்டு மாவிவை சொரிமதக் களிறிவை துரங்கம்**
**பூண்ட தேரிவை பதாதிமற் றிவையெனப் புகல**
**ஈண்டு நின்றவை யாவையு மியாவெனத் தெரியா**
**மீண்டு போவதே யுறுதியென் றனனிகல் வீரன்.**

[தூண்டும் மா இவை, சொரி மதம் களிறு இவை, துரங்கம் பூண்ட தேர் இவை, பதாதி (மற்று) இவை, என, (பிருகந்நளை) புகல, ஈண்டு நின்றவை யாவையும் யா என தெரியா, மீண்டு போவதே உறுதி என்றனன் இகல் வீரன்.]

**விளக்கம் :-** தூண்டும் மா - செலுத்தப்படும் குதிரை. சொரி மதம் களிறு - மதம் பொழியும் யானை. துரங்கம் பூண்ட தேர் -

குதிரை பூட்டிய தேர். பதாதி - காலாட்படை. ஈண்டு நின்றவை யா என தெரியா - (எதிரில்) திரண்டு நின்றவை (இவை இவை என்று பேடி சொல்லியும்) இன்னவை என்று தெரிந்து கொள்ளாமல்; அதாவது அணிவகுத்து நின்ற பகைவரின் நால்வகைப் படையும் இவை, இவை என்று பேடி தெரியச் சொல்லியும் செவியில் ஏற்காமல். இகல் வீரனான உத்தரன் திரும்பிச் செல்வதே நன்மையாகும், என்று கூறினான், என்பதாம். இகல் வீரன், என்றது இகழ்ச்சியின் பாற்படும். மற்று: அசை.

**40. வியர்த்த மேனியை நறும்பனி நீரினால் விளக்கி**
**அயர்த்து நீமுது கிடாதொழி யிமைப்பொழு தையா**
**உயர்த்த பல்கொடிப் பகைஞரைத் தனித்தனி யோட்டிப்**
**பெயர்த்து நல்குவே னிரையுமென் றுரைத்தனன் பேடி.**

[வியர்த்த மேனியை நறும் பனி நீரினால் விளக்கி, அயர்த்து நீ முதுகு இடாது ஒழி இமைப்பொழுது, ஐயா, உயர்த்த பல்கொடி பகைஞரை தனி தனி ஓட்டி பெயர்த்து நல்குவேன் நிரையும் என்று உரைத்தனன் பேடி.]

**விளக்கம் :-** அச்சத்தால் வியர்த்த உத்தரனது உடலை மணங்கமழும் பனி நீரைத் தெளித்துத் துடைத்து, மூர்ச்சை தெளிவித்து, 'ஐயனே. ஒரு கண நேரம், அஞ்சித் தளர்ந்து பின்னிடாது இரு; பல விதக் கொடிகளை உயர்த்திய பகைவரைத் தனித்தனி ஓடச் செய்து (சிதறி ஓடச் செய்து) பசுக்களையும் மீட்டுத் தருவேன்' என்று பேடி கூறினான்,—என்பது பொருள். பீஷ்மர், துரோணர், அசுவத்தாமன், கர்ணன் முதலியோர் தனித்தனியான கொடிகளை உடையவர், எனவே; பல்கொடிப் பகைவர், எனப்பட்டார்.

## உத்தரனைப் பேடி தேரில் பிணித்தல்

**41. கொடித்த டந்தனித் தேரினின் றுகைத்துமுன் குதியா**
**அடித்த லம்பிட ரடித்திட வோடலு மவனைத்**
**தொடித்த டம்புய மிரண்டையுந் தொடர்ந்துபோய்த் துவக்கிப்**
**பிடித்து வந்தொரு நொடியினிற் றேருடன் பிணித்தான்.**

[கொடி தட தனி தேரினின்று உகைத்து முன் குதியா, அடி தலம் பிடர் அடித்திட ஓடலும், அவனை தொடி தட புயம் இரண்டையும் தொடர்ந்து போய் துவக்கி, பிடித்து வந்து ஒரு நொடியினில் தேருடன் பிணித்தான்.]

**விளக்கம் :-** கொடித் தடந்தேரினின்று...ஓடலும், ஒரு நொடியினில் அவனைத் தொடர்ந்து போய், தொடி தடம் புயம் இரண்டையும் துவக்கி பிடித்து வந்து தேருடன் பிணித்தான்,

என்பது அன்வயம். உகைத்து - மேலெழுந்து. அடித்தலம் பிடர் அடித்திட - கால்கள் பின்புறத்தில் படும்படி (வேகமாய்). தொடி - தோள் அணி. உத்தரன் தேரினின்று குதித்து ஓடலும், பேடி அவனைப் பிடித்து வந்து தேரில் பிணித்தான் என்பதாம். உகைத்தல் - காலை அழுத்தி வேகமாய் மேல் எழல்.

**42. பிணித்த தேரினைப் பெற்றமும் பிற்படக் கடாவித்**
**திணித்த ரும்பெரும் பொதும்பரிற் சேர்த்திய சிலையும்**
**துணித்து மேவலர் முடியுகு சோரிதோய் தொடையும்**
**கணித்த வெல்லையிற் கொண்டுமீண் டமர்க்களங் கலந்தான்.**

[பிணித்த தேரினை பெற்றமும் பின்பட கடாவி, திணித்து அரும் பெரும் பொதும்பரில் சேர்த்திய சிலையும், துணித்து மேவலர் முடி உகு சோரி தோய் தொடையும், கணித்த எல்லை யின் கொண்டு மீண்டு அமர் களம் கலந்தான்.]

**விளக்கம் :-** பெற்றம் - காற்று. கடாவி - (தேரைச்) செலுத்தி. அரும் பெரும் பொதும்பரில் திணித்து சேர்த்திய - பிறர் காண முடியாத பெரிய மரப்பொந்தில் பத்திரப்படுத்தி மறைத்து வைத்த. மேவலர் முடி துணித்து உகு சோரி - பகைவர் முடி அறுத்துப் பெருகும் இரத்தம். தொடை - அம்பு. கணித்த எல்லையின் - நினைத்த அளவில், அதாவது மிக விரைவில். அஜ்ஞாதவாச காலத்திற்குக் குறிக்கப்பெற்ற கால எல்லையின் முடிவில் என்ற, பொருள் குறிப்பினதுமாகும். பேடி, (விசயன்) தேரைச் செலுத்திச் சென்று, தாங்கள் விராட நகரத்தின் புற எல்லையில் ஒரு காட்டினில், பெரிய வன்னி மரப் பொந்தில் மறைத்து வைத்த வில்லையும். அம்புகளையும் எடுத்துக்கொண்டு மிக விரைவில் திரும்பினான், என்க.

**43. எரிப்பு றத்தருத் தருபடை யாவென வினவக்**
**கிரிப்பு றப்பெருங் கானுறை கிரீடிய வென்னத்**
**தெரிப்பு றப்புக லெவ்வயிற் சேர்ந்தன னவனென்(று)**
**அரிப்பு றத்தடங் கண்ணியைக் கேட்டன னவனும்.**

[எரி புறம் தரு தரு படையா? என வினவ, கிரி புறம் பெருங்கான் உறை கிரீடிய என்ன, தெரிப்பு உற புகல். எ வயின் சேர்ந்தனன் அவன்? என்று, அரி புறம் தடங்கண்ணியை கேட்டனன், அவனும்.]

**விளக்கம் :-** எரிபுறம் தரு - நெருப்பைத் தன்னிடம் கொண்ட வன்னிமரம். தரு படை - தந்த ஆயுதங்கள், அதாவது எடுத்த ஆயுதங்கள். யா என வினவ - யாருடையவை என்று உத்தரன் கேட்க. மலைகளின் புறத்திலுள்ள கானில் வசிக்கும் கிரீடியினுடையவை, என்று பேடி பதில் உரைக்க,— என்பது இரண்டாவது அடியின் பொருள். செவ்வரிகளைத் தம்மிடங் கொண்ட விசாலமான கண்களை உடைய பேடியை, நோக்கி, ''அவன் எவ்விடம் சேர்ந்து வாழ்கின்றான்? தெரியும்படி

சொல்'', என்று உத்தரன் கேட்டான், என்பது ஈற்றடிகளின் பொருள். பேடியிடம், பெண் தன்மை மிகுந்து இருத்தல்பற்றி, ''அரிப் புறத் தடங்கண்ணி'', எனப்பட்டான். கிரீடி - அருச்சுன னது பெயர்களில் ஒன்று.

**44. கிரிடி யெங்குள னென்றெனைக் கேட்டநீ கேண்மோ**
**இருடி யாகிநின் றாதையோ ராசனத் திருக்கும்**
**புருட னிப்பதி புகுந்தநாள் வந்துடன் புகுந்தோர்**
**அரிட மானதன் விதியினாற் பேடியு மானான்.**

[கிரிடி எங்கு உளன் என்று எனை கேட்ட நீ கேண்மோ : இருடி ஆகி நின் தாதையோடு ஓர் ஆசனத்து இருக்கும் புருடன் இ பதி புகுந்த நாள், வந்து உடன் புகுந்து ஓர் அரிடம் ஆன தன் விதியினால் பேடியும் ஆனான்.]

**விளக்கம் :-** அரிடம் - தீமை (அரிஷ்டம்). கங்கன் என்ற முனிவன் உங்கள் பதி அடைந்தபோது கிரீடியும், தீயதான ஊழ் வினை ஒன்றால் பேடியாகி உங்கள் மனை புகுந்தான்,—என்று உத்தரனுக்குக் கூறியபடி. கேண்மோ, என்பதிலுள்ள மோ, முன்னிலை அசை ; கேட்பாயாக, என்பது பொருள். அரிடம் - ஊர்வசி கொடுத்த சாபம்.

### தேறுதலுற்ற உத்தரன் தேர் நடத்தல்

**45. யாண்டு சென்றில தின்னமு மீரிரு கடிகை**
**வேண்டு மாலினி யீண்டையவ் விசயனுந் தோன்றும்**
**மீண்டு போகலை விடுவிடு விரைபரித் தடந்தேர்**
**தூண்டு நீயெனத் தோளிலத் துவக்கையும் விடுத்தான்**

[யாண்டு சென்றிலது, இன்னமும் ஈர் இரு கடிகை வேண்டும் (ஆல்), ஈண்டை அ விசயனும் தோன்றும், மீண்டு போகலை விடு, விடு, விரை பரி தேர் தூண்டு நீ என, தோளில் அ துவக்கையும் விடுத்தான்.]

**விளக்கம் ;-** யாண்டு சென்றிலது - அஜ்ஞாத ;வாசத்திற்கென நியமிக்கப்பெற்ற ஓராண்டு இன்னும் கழிந்திலது. ஈர் இரு கடிகை வேண்டும் - இன்னும் நான்கு நாழிகைப் பொழுது கழியவேண்டும். இனி - இனிமேல், அதாவது நான்கு நாழிகை கழிந்தபின். மீண்டு போகலை விடுவிடு - திரும்பிச் செல்லுதலை விட்டுவிடு. விரை பரித்தேர் தூண்டு - விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேரை நடத்து. தோளில் அத் துவக்கையும் விடுத்தான் - தோள் களைத் தேரோடு சேர்த்துக் கட்டிய கட்டையும் அவிழ்த்து விட்டான். பேடி, உத்தரனை இவ்வாறு கூறித் தேற்றிக் கட்ட விழ்த்து விட்டுத் தேரைச் செலுத்துமாறு கூறினான், என்பதாம்.

**46. அறிந்து தாள்விழுந் தெழுந்துபின் னாங்கவ னருளால்
செறிந்த மால்பெருஞ் சிறப்பைபயச் சிறுவனும் பெற்றுப்
பிறிந்த பற்பல பேரணி நால்வகைப் படையும்
முறிந்து போகவத் தேர்விடு தொழிலினின் மூண்டான்.**

[அறிந்து, தாள் விழுந்து எழுந்து, பின் ஆங்கு அவன் அருளால் செறிந்த மால் பெரும் சிறப்பை அ சிறுவனும் பெற்று, பிறிந்த பல் பல பேர் அணி நால்வகை படையும் முறிந்து போக அ தேர் விடு தொழிலினில் மூண்டான்.]

**விளக்கம் :-** நெருங்கிய பெருமையுடைய பெரிய (அருச்சுன னுக்குத்) தேர்விடும் சிறப்பை ; அல்லது அருள் செறிந்த திருமா லின் அவதாரமான கண்ணனின் (பார்த்தசாரதியின்) பெருஞ் சிறப்பை, அதாவது தேர் ஓட்டலை, இளைஞனான உத்தரனும் பெற்று, என்பது இரண்டாவது அடியின் பொருள். பிரிக்கப்பட்ட பல பெரிய வரிசைகளை உடைய பகைவரது நால்வகைப் படையும் அழியும்படி தேர் செலுத்தும் தொழிலை மேற்கொண்டு முயன்றான், — என்பது ஈற்றடிகளின் பொருள். பேடியை விசயன் என்று அறிந்த உத்தரன் அவனை வணங்கி அவன் கட்டளைப்படி தேர் விடுதலில் பொருந்தினான், — என்க.

**47. ஓடி னானுமத் தேர்விரைந் தூர்பவ னென்றும்
பேடி நாமுத லையுறும் பெருந்தகை யென்றும்
நாடி னார்பலர் நந்தியா வர்த்தநாண் மாலை
சூடி னானெடுஞ் சேனையிற் றுரோணனே முதலோர்.**

[ஓடினானும் அ தேர் விரைந்து ஊர்பவன் என்றும், பேடி நாம் முதல் ஐயுறும் பெருந்தகை என்றும், நாடினார், பலர் நந்தியா வர்த்தம் நாள் மாலை சூடினான் நெடுஞ்சேனையில் துரோணன் (ஏ) முதலோர்.]

**விளக்கம் :-** நாள் (புதிய) நந்தியாவர்த்தம் மாலை சூடினான் நெடுஞ்சேனையில் பலர், ஓடினாலும் .. பெருந்தகை என்றும் நாடினார் — என்பது அன்வயம். நந்தியாவர்த்தம் - நந்தியாவட்ட மலர் ; அது துரியோதனனது அடையாள மாலை. அவனது சேனையைச் சேர்ந்த துரோணர் முதலிய பலர், "ஓடினவன் தேர் செலுத்துகின்றான். பேடியும் அருச்சுனன் என்று நாம் முதலில் சந்தேகிக்க லுற்ற பெருந்தகை ஆகவேண்டும்", என்று எண்ண மிட்டார், — என்பதாம்.

**48. பேடி யன்றுதன் பெண்மையை யாண்மையாய்ப்
பிறர்கொண்
டாட வந்தவெஞ் சாபமுந் தொடிக்கையி லாக்கிக்
கோடி யம்புக ளோரொரு தொடையினிற் கோத்து
வீடு விப்பனீ யஞ்சிடா விடுகதே ரென்றான்.**

[பேடி என்று தன் பெண்மையை ஆண்மையாய் பிறர் கொண்டாட, அந்த வெம் சாபமும் தொடிகையில் ஆக்கி, கோடி அம்புகள் ஓர் ஒரு தொடையினில் கோத்து வீடுவிப்பன், அஞ்சிடா(து) விடுக தேர் என்றான்.]

**விளக்கம் :-** சாபம்-வில், தொடிக்கையில் ஆக்கி-வளையல் அணிந்த கையில் உடையதாக்கி, ஏந்தி. ஓர் ஒரு தொடையினில் கோத்து - அம்பு தொடுக்கும் முறை ஒவ்வொன்றிலும் தொடுத்து, வீடுவிப்பன் - (பகை அழித்து நிரை) மீட்பேன்; பகைவர் உயிர் வீடுவிப்பேன், என்றும் பொருள்படும். உத்தரனை நோக்கிப் பேடி, ''பகைவென்று நிரை மீட்பேன்; அஞ்சாது தேரைச் செலுத்துக'' என்றான், என்க.

**49. என்ற போதவன் றேரினை யிமைப்பினிற் செலுத்தச்**
**சென்று போர்முனைச் சிலைவிடு சிலீமுகங் களினால்**
**கொன்ற போர்மன்ன ரீறிலர் குருகுலத் தவராய்**
**நின்ற போர்முடி மன்னருஞ் சுளித்துள நெளித்தார்.**

[என்றபோது அவன் தேரினை இமைப்பினில் செலுத்த, சென்று போர்முனை சிலை விடு சிலீமுகங் களினால் (அம்பு களினால்) கொன்ற போர் மன்னர் ஈறு இலர், குருகுலத்தவராய் நின்ற போர் முடி மன்னரும் சுளித்து உளம் நெளித்தார்.]

**விளக்கம் :-** சிலை விடு சிலீமுகங்கள் - வில்லினின்று செலுத்திய அம்புகள். ஈறு இலர் - முடிவு இலாதவர், மிகப் பலர். குருகுலத்தவராய் நின்ற போர் முடி மன்னர் - குரு குலத்தைச் சேர்ந்தவர்களாய்க் களம் நின்ற போர்த் தொழிலில் வல்லவரும் கிரீடாதிபதிகளுமான வீடுமன், விதுரன், துரியோதனன் முதலியோர். சுளித்து உளம் நெளித்தார் - வெகுண்டு மனம் சலித்தனர். மன்னர் உளம் நெளித்தார் : திணைவழு.

விதுரன் கூறல்

**50. அன்று போலல னருச்சுன னம்பிகா பதிபால்**
**துன்று போர்புரி தவத்தினாற் சுடுகணை பலபெற்(று)**
**அன்று போரினி லவுணரை யமரருக் காக**
**வென்று போனக நுகர்ந்துபொற் றருமலர் வேய்ந்தான்.**

[அன்றுபோல் அலன் அருச்சுனன், அம்பிகாபதிபால் துன்று போர் புரி தவத்தினால் அடு கணை பல பெற்று, அன்று போரினில் அவுணரை அமரருக்காக வென்று, போனகம் நுகர்ந்து, பொன்தரு மலர் வேய்ந்தான்.]

**விளக்கம் :-** (இன்று) அன்றுபோல் அல்லன் அருச்சுனன்; தவத்தினால், அம்பிகாபதிபால் துன்று போர் புரி சுடுகணை பல

பெற்று, அன்று போரினில் அவுணரை அமரருக்காக வென்று, (இந்திரனுடன்) போனகம் நுகர்ந்து, பொன் தரு மலர் வேய்ந்தான்,—என்பது அன்வயம். தவத்தினால் துன்றுபோர் சுடு கணை - தவத்தின் பயனாய் வலிய போர் செய்வதற்குரிய கொடிய ஆயுதங்கள். போனகம் - (போஜநம்) உணவு. பொன் தரு மலர் வேய்ந்தான் - பொன்மயமான கற்பக தருக்களின் மலர் மாலை அணிந்தான். ''முன்னையன், அல்லன் அருச்சுனன்; பாசுபதம் முதலிய அஸ்திர சஸ்திரங்களைச் சிவபெருமானிடமிருந்து பெற்றவன், நிவாதகவசர் காலகேயர் என்ற அசுரர்களை வென்றவன், தேவர்களால் நன்கு மதிக்கப்பட்டவன்'', என்று துரியோதனனுக்கு விதுரன் கூறியதாகும் இது. கவிக் கூற்றாகவும் கொள்ளலாம். அருச்சுனன் தவம் செய்கையில் சிவபெருமானோடு போர் புரிய நேர்ந்ததால், 'போர் புரி தவம்', என்பதற்குப் 'போர் செய்து இயற்றிய தவம்', என்றும் பொருள் கொள்ளலாம்.

**51. தன்னி லத்தினிற் குறுமுயல் தந்தியின் வலிதென்று**
**இந்நி லத்தினிற் பழமொழி யறிதிநீ யிறைவ**
**எந்நி லத்தினு முனக்கெளி தாயினு மிவர்நம்**
**நன்னி லத்தினில் வரவமர் தொடங்குத னன்றால்.**

[தன் நிலத்தினில் குறு முயல் தந்தியின் வலிது, என்று இ நிலத்தினில் பழமொழி அறிதி நீ இறைவ! எ நிலத்தினும் உனக்கு எளிதாயினும், இவர் நம் நல் நிலத்தினில் வர அமர் தொடங்குதல் நன்று, ஆல்.]

**விளக்கம் :-** தந்தி - யானை. இறைவ - துரியோதனனே. ''தனது நிலத்தில் சிறு முயலும் யானையினும் வலியதாகும், என்பர். நீ, நிலம் எதுவாயினும், போர் செய்யும் வல்லமை உள்ளவனே. இப்போது பொருதவர் பாண்டவராயின், நமது நல்ல நிலம் வருவர். அப்போது அவரோடு நாம் பொரல் நன்மை தருவதாகும்'', என்று விதுரன் தொடர்ந்து கூறினான், என்க.

## துரியோதனன் சினத்தல்

**52. என்று கூறினன் விதுரனு மேனையங் கருகு**
**நின்ற வீடுமன் றுரோணனு நினைவிது வென்றார்**
**அன்று நாகவெங் கொடியவன் கொடியநெஞ் சழன்றான்**
**குன்ற மாயினு நீறெழு மருகுறக் குறுகின்.**

[என்று கூறினன் விதுரன், ஏனை அங்கு அருகு நின்ற வீடுமன் துரோணனும் நினைவு இது என்றார்; அன்று நாகம் வெம் கொடியவன் கொடிய நெஞ்சு அழன்றான், குன்றம் ஆயினும் நீறு எழும் அருகு உற குறுகின்.]

**விளக்கம் :-** விதுரன் கூறியதை வீடுமனும் துரோணனும் 'தக்கதே' என்று கூறினர், துரியோதனன் மனம் கொதிக்க லுற்றான். அப்பொழுது அழன்ற துரியோதனன், "தான் அருகு நெருங்கினால், அது குன்றே ஆனாலும், நீறு பட்டுவிடும் (பொடி படும்)," என்றான் என்பது ஈற்றடியின் பொருள். தனது எண்ணத்திற்கு எதிராகப் பெரியோர் கூறியதைப் பொறாத நாகக் கொடியோன், கடுஞ்சினங் கொண்டவனாயினான், – என்பதாம்.

**53. தேரு மங்கொரு தேர்தனித் தேரின் மேனின்று**
**வீர வெஞ்சிலை வளைத்தகை வீரனும் பேடி**
**யாரு நெஞ்சழிந் தஞ்சுவ தென்கொலென் றிசைத்தான்.**
**சூரன மாமக னாகிய சூரரிற் சூரன்.**

[தேரும் அங்கு ஒரு தேர், தனி தேரின்மேல் நின்று வீர வெம் சிலை வளைத்த கை வீரனும் பேடி, யாரும் நெஞ்சு அழிந்து அஞ்சுவது என் (கொல்)? என்று இசைத்தான் சூரன் மாமகன் ஆகிய சூரரில் சூரன்.]

**விளக்கம் :-** சூரியனது சிறந்த குமாரனாகிய, வீரர்களில் சிறந்த விரனாகிய கர்ணன், "அங்கே, தேரும் ஒரு தேர், அந்த ஒற்றைத் தேரின்மேல் நின்று வீர வில் வளைத்த கையையுடைய வீரனும் பேடி ; இவ்வாறாக, (புகழ்பெற்ற பெரியோர்கள்) யாவரும், மனந்தளர்ந்து அஞ்சுவது ஏனோ ?" என்று கூறினான்,— என்பது பொருள். கொல் : அசை.

**54. கொண்ட கோநிரை கோவலர் கொண்டுமுன் போகத்**
**தண்டு நிற்கெனத் தம்பிய ரனைவருந் தானும்**
**திண்டி றற்பெரும் பேடியைத் தேர்மிசைக் கண்டு**
**மிண்டு வீரெனக் கூறியே சுயோதனன் மீண்டான்.**

[கொண்ட கோநிரை கோவலர் கொண்டு முன்போக, தண்டு நிற்க என, தம்பியர் அனைவரும் தானும் திண் திறல் பேடியை தேர்மிசை கண்டு, மிண்டுவீர் என கூறி (ஏ), சுயோதனன் மீண்டான்.]

**விளக்கம் :-** சுயோதனன், கொண்ட கோநிரை...தண்டு நிற்க, என (ஏவி) தம்பியர் அனைவரும் தானும்...கண்டு, மிண்டு வீர், என கூறி (களம்) திரும்பினான், என்பது அன்வயம். மிண்டல் - நெருங்கல், எதிர்த்தல். மிண்டுவீர் - நெருங்கித் தாக்குவீர். "கவர்ந்த நிரையை இடையர் ஓட்டிச் செல்லட்டும்; நமது சேனை, அவர்களுக்குத் துணை நிற்கட்டும்" என்று துரியோ தனன் ஏவி, தேரின்மேல் பேடியைத் தானும் தம்பியரும் கண்டு, அவனைத் தாக்குவீர்களாக, என்று தம்பியருக்குச் சொல்லித் (களம்) திரும்பினான், என்பதாம்,

## பேடி நிரை மீட்டல்

**55. மான மாமுடி மன்னரை விலக்கிவல் விரைந்து**
**கோநி ரைக்குலங் கொண்டுபோங் கோநிரை துரந்து**
**போன பேடிவெம் பூசலும் பொழுதுறப் பொருது**
**தூநி றத்திளங் கன்றுடைத் தொறுக்களு மீட்டான்.**

[மானம் மாமுடி மன்னரை விலக்கி வல்விரைந்து கோ நிரை குலம் கொண்டு போம் கோ நிரை துரந்து, போன பேடி வெம் பூசலும் பொழுது உற பொருது, தூ நிறத்து இளங்கன்று உடை தொறுக்களும் மீட்டான்.]

**விளக்கம் :-** மானம் மா முடிமன்னர் - பெருமையுடைய சிறந்த கிரீடாதிபதிகளான, வீடுமன், விதுரன் முதலியோர். விலக்கி - அவர்களைத் தனக்கு வழி விடுமாறு விலக்கி. வல் விரைந்து - மிக விரைவாகச் சென்று. (சிறந்த பசுக்களின் கூட்டங் களைக் கவர்ந்து செல்லும்) கோ நிரை துறந்து - அரச பரிவாரங் களாகிய வீரர்களை துரத்திச் சென்று. வெம் பூசலும் பொழுது உற பொருது - கொடிய போரையும் குறுகிய கால அளவில் பொருது (பகைவரை) வென்று. தொறுக்கள் - பசுக்கள், மன்னர் களான வீரக்களை விலக்கிக்கொண்டு, தொடர்ந்து சென்று, அரச பரிவாரங்களாகிய காவல் வீரர்களை வென்று, பசுக்களைக் கன்று களுடன் பேடி மீட்டான்,—என்க. பொழுது உற-காலம் நீளாமை பொருந்த ; (அதாவது சொற்பமான காலத்தில், என்றபடி.) பரதகண்டத்து வாழ்வோர், பசுவைப் புனிதமான பிராணியாகக் கொண்டாடுதல் பற்றி, தூ நிறத்து (பரிசுத்தமான தன்மை யுடைய), என்ற அடை தொறுக்களுக்குக் கொடுக்கப்பட்டது.

**56. முந்த வான்றொறு மீட்டலு முற்கவர் பொதுவர்**
**வெந்த நெய்யென வாரவ மடங்கினர் மிகவும்**
**அந்த நெய்யினிற் பாற்றுளி யுகுத்தென வார்த்தார்**
**வந்த மச்சர்கோ மகனொடும் வந்தகோ பாலர்,**

[முந்த ஆன் தொறு மீட்டலும் முன் கவர் பொதுவர் வெந்த நெய் என ஆரவம் அடங்கினர் மிகவும், அந்த நெய்யினில் பால் துளி உகுத்தென (உகுத்தது என) ஆர்த்தார், வந்த மச்சர் கோமக னொடும் வந்த கோபாலர்.]

**விளக்கம் :-** பொதுவர் - இடையர். வெந்த நெய் - நன்றாகக் காய்ந்த நெய். ஆரவம் - ஆரவாரம் ; உற்சாகம். வந்த மச்சர் கோமகன் - நிரை மீட்கவந்த உத்தரன். (அவனோடு வந்த) கோபாலர் - இடையர். காய்ந்த நெய் ஓசை அடங்கியதாகும். அந்த நெய்யில் பாலைத் துளித்தால் ஓசை எழும். முன்னே விராடநகர் வந்து முதலில் பசுக்களைக் கவர்ந்தவர், நிரை மீட்கப்

பட்டமையின், ஆரவாரம் அடங்கியவர் ஆயினர் ; விராடநாட்டு இடையர், நிரையைப் பெற்றமையின், ஆரவாரித்து மகிழ்ந்தனர், என்பதாம்.

**57. பாலெ டுத்தபொற் குடநிகர் மடியின பருவச்**
**சூலெ டுத்தநல் வயிற்றின மழவிடை தொடர்வ**
**கோலெ டுத்திளங் கோவலர் கூவினர் துரப்ப**
**வாலெ டுத்தன துள்ளிமீண் டோடின வனமே.**

*[பால் எடுத்த பொன் குடம் நிகர் மடியின, பருவம் சூல் எடுத்த நல் வயிற்றின, மழவிடை தொடர்வ, கோல் எடுத்து இளங் கோவலர் கூவினர் துரப்ப, வால் எடுத்தன, துள்ளி மீண்டு ஓடின வனமே.]*

**விளக்கம் :-** பால் நிரம்பிய பொன்குடம் போன்ற மடியை உடையன, பருவம் முதிர்ந்து சூல்கொண்ட அழகிய வயிற்றை உடையன, இளமையுடைய காளைகளால் தொடரப்படுவன; (விராடநாட்டு) இளைய இடைப்பிள்ளைகள் கோலை எடுத்துக் கொண்டு சத்தமிட்டு ஓட்ட, வாலை மேலே தூக்கிக்கொண்டு துள்ளிக் குதித்துத் திரும்பி வனம் நோக்கி ஓடின மீட்கப்பெற்ற பசுக்கள்,—என்பது பொருள். துரப்ப - ஓட்ட. கன்று ஈன்று பால் கறக்கும் பசுக்கள், சூல் கொண்ட பசுக்கள், சினைகொள்ளும் பருவத்தினவான பசுக்கள் முதலியவை, சந்தோஷத்தால் துள்ளிக் குதித்துக்கொண்டு கானை நோக்கி ஓடின - என்க. பசுக்களின் இயல்பு தோன்ற வருணித்த இச் செய்யுள் **தன்மை நவிற்சியின்** பாற்படும்.

**58. கடிகை நாலவண் சென்றபின் கடைசிவந் தகன்ற**
**நெடிய கண்ணியன் றிட்டவெஞ் சாபமு நீங்கக்**
**கொடியின் மீதெழு மனுமனைக் குறிக்கவக் கொடியும்**
**முடிகொ டன்றனி யிரதமு முன்வரக் கண்டான்.**

*[கடிகை நால் அவண் சென்றபின், கடை சிவந்து அகன்ற நெடிய கண்ணி அன்று இட்ட வெம் சாபமும் நீங்க, கொடியின் மீது எழும் அனுமனை குறிக்க (தியானிக்க) அ கொடியும், முடி கொள் தன் தனி இரதமும் முன் வர கண்டான்]*

**விளக்கம் :-** அவண் - போர் முனையிடத்தே. கடை சிவந்த நெடிய கண்ணி-ஊர்வசி. முடிகொள் தன் தனித்தேர்-சிகரத்தை யுடைய அக்கினி தேவன் கொடுத்த ஒப்பற்ற தனது தேர், அங்கே, நான்கு நாழிகை சென்றபின் ஊர்வசி கொடுத்த சாபம் நீங்கவும், பேடி (அருச்சுனன்) தன் கொடிமேல் எழுந்தருளும் அனுமனைத் தியானிக்க, கொடியும் ஒப்பற்ற தேரும் அவன் முன் வரக்கண்டான், என்பதாம். சாபம் நீங்கிய விசயன், தனது உண்மை வடிவத்தையும், தனது தேரையும் பெற்றான், என்க.

## விசயன் தன் வடிவில் நிற்றல்

**59. உரிய தேரினை மீதுகொண் டுத்தரன் செலுத்த
கரிய மேனியன் செய்யதா மரைத்தடங் கண்ணன்
புரிய வாங்கிய சிலையின னின்றனன் பொலம்பொன்
கிரியின் மீதெழு மரகத கிரியெனக் கிளர்ந்தே.**

[உரிய தேரின் (ஐ) மீது கொண்டு உத்தரன் செலுத்த, கரிய மேனியன், செய்ய தாமரை தடங்கண்ணன் (போர்) புரிய வாங்கிய சிலையினன் நின்றனன், பொலம் பொன் கிரியின்மீது மரகத கிரி என கிளர்ந்தே.]

**விளக்கம் :-** வாங்கிய சிலை - வளைத்த வில், அழகிய பொன் மலையின்மேல் மரகதமலை நின்றதுபோல், தனது தேரின்மேல், கரிய நிறத்தினனான அருச்சுனன், உத்தரன் தேரைச் செலுத்த, நின்றான், என்க. கிளர்ந்து - விளக்கத்தோடு ; அல்லது போரின் பால் கொண்ட உற்சாகத்தோடு. இரண்டாவது அடியில், 'கரிய, செய்ய', முரண் தொடை. ஈற்றடி இல்பொருள் உவமை.

**60. படுங்கு றும்பனி புதைத்தலிற் பரிதிதன் னுருவம்
ஒடுங்கு மாறென வொளித்ததன் பேட்டுரு வொழித்து
நெடுங்கொ டுங்கணை நிருபன்வெஞ் சேனையின் வேந்தர்
நடுங்கு மாறுமுன் றோன்றின னரனெனு நாமன்.**

[படும் குறும் பனி புதைத்தலின் பரிதி தன் உருவம் ஒடுங்கும் ஆறு என, ஒளித்த தன் பேடு உரு ஒழித்து, நெடுங் கொடுங்கணை நிருபன் வெம் சேனையின் வேந்தர் நடுங்கும் ஆறு முன் தோன்றி னன் நரன் எனும் நாமன்.]

**விளக்கம் -:** படும் குறும் பனி - அழியும் தன்மை உடைய அற்பமான பனி. புதைத்தல் - மறைத்தல், மூடிக்கொள்ளல். ஒடுங்குமாறு என—(சூரியன் உருவம்) மறைதல்போல. நெடிய கொடிய கண்களை உடைய வேந்தனான துரியோதனனது கொடிய சேனையில் உள்ள (வில் வீரர்களான) அரசர்கள் என்பது மூன்றா மடியின் பொருள். அவர்கள் அஞ்சி நடுங்குமாறு நரன் என்ற நாமம் பெற்ற விசயன் தோன்றினான், என்பது ஈற்றடியின் பொருள். விசயன், சாபம் நீங்கப் பெற்றதால், தனது உண்மை வடிவத்தோடு வெளிப்பட்டான், என்பதாம்.

**61. செருச்செய வான்வரு சேனைவெண் டிரையையுங் கடப்பான்
பருச்சி லம்பினின் றுகைதரு பாவனை போல
உருச்செ ழுஞ்சுட ரெறிப்பநின் றுலாவின னுண்மைக்(கு)
அருச்சு னன்றடந் தேர்க்கொடி யாடையி லனுமான்.**

[செரு செய்வான் வரு சேனை வெள் திரையையும் கடப்பான், பரு சிலம்பின் நின்று உகைதரு பாவனைபோல, உரு செழுஞ்சுடர் எறிப்ப நின்று உலாவினன் உண்மைக்கு, அருச்சுனன் தடந்தேர் கொடி ஆடையில் அனுமான்.]

**விளக்கம் :-** (முன்பு, இராம காரியமாக மகேந்திரமலையில் நின்று இலங்கை செல்லக் கடலைத் தாண்டியதுபோல்) விராட னோடு போர் செய்ய வந்துள்ள சேனையாகிய வெள்ளிய அலை களை உடைய சமுத்திரத்தைக் கடக்க, பருத்த மலையின்மேல் நின்று மேல் நோக்கி எழுவது போன்ற பாவனையில், அனுமான், அருச்சுனனது பெரிய (மலைபோன்ற) தேரின் கொடியில் உண்மை யில் ஆவேசித்து நின்று, தனது உருவம் ஒளியுடன் தோன்ற நின்று உலவினான்,—என்பது பொருள். வெள்ளைக்குடை, வெண் சாமரை, வெண்புரவி முதலியன நெருங்கிய பகைப்படை, சமுத்திரம். அருச்சுனனது தேர், மலை. முன்னர் மலையினின்று எழுந்து தென்கடல் கடந்ததுபோல், இப்பொழுது பகைக் கடலைக் கடக்கத், தேராகிய மலையினிடம் நின்று மேல் நோக்கி எழுவதுபோல், தேர்க்கொடியில் அனுமான் தோற்ற மளித்தான்,- என்றார். உகைதரல் - உதைத்து மேல் எழல். காற்றினால் கொடி ஆடுகையில், அதிலுள்ள அனுமானது வடிவம், உலவுவது போன்ற தோற்றம் அளிப்பதாயிற்று. இது தற்குறிப்பேற்றம்.

**62. மருமி குந்தொடைத் தடம்புய மகபதி மதலை**
**பெருமி தம்பட வளைத்தவிற் பிறங்குநா ணொலியால்**
**செருமி யெங்கணுங் கரிபரி தேர்மிசை நின்றோர்**
**உருமின் வெங்குரல் கேட்டகோ ளுரகரோ டொத்தார்.**

[மரு மிகும் தொடை தடபுயம் மகபதி மதலை பெருமிதம் பட வளைத்த வில் பிறங்கும் நாண் ஒலியால், செருமி எங்கணும் கரி, பரி, தேர்மிசை நின்றோர், உருமின் வெம் குரல் கேட்ட கோள் உரகரோடு ஒத்தார்.]

**விளக்கம் :-** மரு - மணம். மகபதி மதலை - இந்திர குமார னான விசயன். பெருமிதம் - வீரப்பெருமை, வில் பிறங்கும் நாண் - வில்லினிடத்தே விளங்குகின்ற நாண்கயிறு. செருமி - (அருச்சுனனைச் சுற்றி) நெருங்கி (யானை குதிரை தேர் ஆகிய வற்றில் நின்றோர்). கோள் உரகர் - வலிமையுடைய நாகர். விசயனது நாணொலி கேட்டு, இடியொலி கேட்டு நாகம் ஒடுங்குவதுபோல், துரியோதனனைச் சேர்ந்த வீரர்கள் அஞ்சினர், என்க. உரகரோடு, என்பது ஒப்புப் பொருளது; (உரகரைப் போல்).

## உத்தரன் மீண்டும் மூர்ச்சித்தல்

**63. குறித்த சங்கொலி சிங்கநா தத்தொலி குனிவில்**
**தெறித்த நாணொலி செவிப்படச் சிந்தனை கலங்கிப்**
**பொறித்த பாவையி னுத்தரன் பொறிமயக் குற்று**
**மறித்தும் வீழ்ந்தனன் மாவிடு தொழிலையும் மறந்தே.**

[குறித்த சங்கு ஒலி, சிங்கநாதத்து ஒலி, குனிவில் தெறித்த நாண் ஒலி செவி பட சிந்தனை கலங்கி, பொறித்த பாவையின் உத்தரன் பொறி மயக்கு உற்று மறித்தும் வீழ்ந்தனன், மா விடு தொழிலையும் மறந்தே,]

**விளக்கம் :-** குறித்த சங்கு ஒலி - அருச்சுனன் எழுப்பிய சங்கின் ஒலி. சிங்கநாதம் - வீரகர்ஜனை. அவன் தெறித்த நாணின் ஒலி, வீரகர்ஜனை ஆகியவற்றைக் கேட்டு உத்தரன் மனங்கலங்கி, அறிவு மயங்கித் தேரில் பூட்டிய குதிரைகளை ஓட்டுதலையும் மறந்து, சித்திரத்தில் எழுதப்பெற்ற பதுமைபோல் மீண்டும் மூர்ச்சையுற்று விழுந்தான்,—என்பதாம். பொறி - அறிவு. அந்தக் காரணங்களில் மனமும் அறிவும், வேறு வேறாதல் பற்றி, மனங் கலங்கி, என்றும், பொறி மயக்குற்று, என்றும் கூறினார்.

**64. தாழ்ந்த வாடையி னுயர்கொடித் தண்டுடைத் தேர்மேல்**
**வீழ்ந்த பாகனை மீளவும் விரகுறத் தேற்றிச்**
**சூழ்ந்த தன்பெருந் துணைவனைச் சூதினாற் றுரந்து**
**வாழ்ந்த மன்னன்மே லேவினான் வரிசிலை வல்லான்.**

[தாழ்ந்த ஆடையின் உயர் கொடி தண்டு உடை தேர்மேல் வீழ்ந்த பாகனை மீளவும் விரகு உற தேற்றி, சூழ்ந்த தன் பெருந் துணைவனை சூதினால் துரந்து, வாழ்ந்த மன்னன்மேல் ஏவினான் வரிசிலை வல்லான்.]

**விளக்கம் :-** தாழ்ந்த - தொங்கிய. ஆடை—(அலங்கார மாகும்) சீலை. உயர் கொடி தண்டு - உயர்ந்த துவஜஸ்தம்பம். வீழ்ந்த பாகன் - உத்தரன். விரகு உற - தக்க விதமாக. சூழ்ந்த தன் பெருந் துணைவன் - சூழ்ச்சியினால் அழிக்கப்பெற்ற தமையனாகிய தரும புத்திரன். சூதினால் துரந்து - மாயச் சூதினால் (கானம்) துரத்தி. வாழ்ந்த மன்னன் - துரியோதனன். வரிசிலை வல்லான் - விசயன். மீண்டும் அஞ்சி மூர்ச்சித்த உத்தரனைப் பக்குவமாய்த் தேற்றி, தருமனை வஞ்சித்து வாழ்கின்ற துரியோதனன் இருக்குமிடம், தேரைச் செலுத்து மாறு ஏவினான்,—என்பதாம். **தாழ்ந்த** ஆடையின் **உயர்** கொடித் தண்டு, முரண் தொடை.

**65. மச்ச நாடன்மா மதலையம் மன்னவன் மொழியால்**
**அச்ச மற்றிருந் துளவுகோ லருணனிற் கொள்ள**
**உச்ச வானிடைப் பகலவ னூர்ந்ததேர் பூண்ட**
**பச்சை வாசியி னோடின சுவேதவெம் பரிமா,**

[மச்ச நாடன் மாமதலை அ மன்னவன் மொழியால் அச்சம் அற்று இருந்து, உளவுகோல் அருக்கனில் கொள்ள, உச்சம் வானிடை பகலவன் ஊர்ந்த தேர் பூண்ட பச்சை வாசியின் ஓடின சுவேதம் வெம் பரிமா.]

**விளக்கம் :-** மச்ச நாடன் மாமதலை - விராடன் மகனான உத்தரகுமாரன். மன்னவன் - விசயன். இருந்து - தேரின்மேல் இருந்து. அருக்கன் - சூர்யசாரதியாகிய அருணன். உச்ச வான் பகலவன் ஊர்ந்த தேர்பூண்ட - உயர்ந்த வானில் சூரியன் ஏறிச் செல்லும் தேரில் பூட்டப்பெற்ற. சுவேதம் வெம் பரிமா பச்சை வாசியின் ஓடின-(அருச்சுனனது தேரில் பூட்டப்பெற்ற) வெண்மை நிறமுடைய வெவ்விய வேகமுடைய குதிரைகள், (சூர்யனது தேரின் குதிரையாகிய) பச்சை நிறக் குதிரையைப்போல் விரைந்து ஓடின. விசயனது வார்த்தையால் அச்சம் நீங்கிய உத்தரன், உளவுகோல் (குதிரை ஓட்டும் கருவி) கையில் கொண்டு, அருணனைப்போல் தேரைச் செலுத்த, அத் தேரில் பூட்டிய வெள்ளைக் குதிரைகள், சூரியனது பச்சைக் குதிரைபோல் விரைந்தன,—என்பது பொருள். நான்காம் அடியில், ''பச்சை வாசி, சுவேத வெம் பரிமா'', என்றது முரண் தொடை. சூரிய னுக்கு வெம்மை, விரைவு.

**68. உரவி னால்வட மேருவைக் கொடுமுடி யொடித்து**
**விரவி யென்பெருந் தாதைநின் றாதையை வென்றான்**
**பரிவி னின்னையான் வெல்வனென் றவனிபன் பதாகை**
**அரவை மற்றிவன் பதாகையி லனுமன்வந் தடுத்தான்.**

[உரவினால் வட மேருவை கொடுமுடி ஒடித்து விரவி என் பெருந் தாதை நின் தாதையை வென்றான், பரிவின் நின்னை யான் வெல்வன் என்று அவனிபன் பதாகை அரவை, மற்று இவன் பதாகையில் அனுமன் வந்து அடுத்தான்.]

**விளக்கம் :-** உரவு - உரம், வலிமை. விரவல் - பொருதல், கலத்தல்; எனவே, விரவி, என்பது பகைத்து என்ற பொருள தாகும். என் பெருந்தாதை நின் தாதையை வென்றான் - எனது (அனுமானது) பெருமை பொருந்திய தந்தையாகிய வாயு, உனது (பாம்புகளினது) தந்தையாகிய ஆதிசேஷனை வென்றான். பரிவின் - துன்பம் அடையும்படி. அவனிபன் பதாகை - துரியோ தனனது கொடி. (அவனது கொடியிலுள்ள) பாம்பை, இவன் (அருச்சுனன்) கொடியிலுள்ள அனுமான் நெருங்கினான், என்பது ஈற்றடியின் பொருள். அருச்சுனனது குரங்குக் கொடியை உடைய தேர் பாம்புக் கொடியை உடைய துரியோதனனது தேரை நெருங்கிற்று. அதைப் புலவர் தற்குறிப்பேற்றத்தினால் அழகாய் வருணிக்கின்றார். விசயனது கொடியிலுள்ள அனுமான், துரியோதனனது கொடியிலுள்ள பாம்பை நோக்கி, ''என் தாதை,

உன் தாதையோடு போட்டி கொண்டு, மேருவின் மூன்று சிகரங்களை முறித்துத் தள்ளி, வெற்றி கொண்டான்; அதுபோல் இப்பொழுது நானும் உன்னை வெல்வேன்'', என்று சொல்வது போல், விசயனது தேர்க் கொடியுள்ள அனுமான் துரியோதனனது தேர்க் கொடியின் பாம்பை நெருங்கினான், என்க. பரிவு என்பது, அன்பு, துன்பம், இன்பம், என்ற பொருள்களை உடையது.

**67. வட்ட மாகவில் வளைத்தெதிர் மண்டலநிலை யாய்த்**
**தொட்ட வாளியா னடிமுதல் முடியுறத் துணிப்புண்(டு)**
**இட்ட மாமணிக் கவசமும் பிளந்தெதிர்ந் துள்ளார்**
**பட்டொ ழிந்தன ரொழிந்தவர் யாவர்புண் படாதார்.**

[வட்டம் ஆக வில் வளைத்து, எதிர் மண்டலம் நிலை ஆய், தொட்ட வாளியான் அடிமுதல் முடிஉற துணிப்புண்டு, இட்ட மாமணி கவசமும் பிளந்து, எதிர்ந்து உள்ளார் பட்டு ஒழிந்தனர், ஒழிந்தவர் யாவர் புண் படாதவர்.]

**விளக்கம் :-** பகைவருக்கு எதிரில், (அருச்சுனன்) மண்டலித்து நின்று, வில்லை வட்டமாக வளைத்துச் செலுத்திய அம்புகளால், எதிர்ந்து வந்துள்ள பகை வீரர்கள், கால்முதல் தலைவரை துணிக்கப்பட்டும், கவசம் பிளக்கப்பட்டும் இறந்து ஒழிந்தனர்; ஒழிந்தவரில் (இறவாமல் எஞ்சியவர்களில்) புண்படாதவர் யாவர்? ஒருவரும் இல்லை என்றபடி. விசயன் பகைப் படையை அழித்தான்,—என்பதாம். சரம் செலுத்துவோர் நிற்கவேண்டிய நிலைகளில் ஒன்று மண்டலித்தல்.

## துரியோதனனின் தேர் அழிதல்

**68. வேகம் வற்றிய நதியன விதநடைப் புரவி**
**பாக வற்றினைத் தலையற மலைந்துபாழ் படுத்தி**
**மாக வற்றினிற் பொய்த்தசூ தாடிய வஞ்ச**
**நாக வற்றிய புன்மொழி நிருபனை நகைத்தான்.**

[வேகம் வற்றிய நதி அன விதம் நடை புரவி, பாகு அவற்றினை தலை அற மலைந்து பாழ்படுத்தி, மா கவற்றினில் பொய்த்த சூது ஆடிய வஞ்சம் நா கவற்றிய புல் மொழி நிருபனை நகைத்தான்.]

**விளக்கம் :-** நீரின் குறைவால் வேகம் குறைந்த ஓட்டமுடைய நதிபோல், (அருச்சுனன் செய்த போர்த் திறத்தால்) வேகங் குறைந்த நடைவிதம் கொண்ட (துரியோதனனது) குதிரைகளும் பாகும் ஆகிய அவற்றினைத் தலை அறும்படி மலைந்து நாசம் செய்து, (அதன்பின்) மோசம் மிகுந்த சூதாடும் கருவியைக் கொண்டு, பொய்க்கு இடமான சூது ஆடித் (தருமனை) வென்ற, வஞ்சனையையும், நாவினால் கூறிய தகாத சொற்களையும்

உடையவனான நிருபனை (துரியோதனனை) நோக்கி இகழ்ச்சி தோன்ற (அருச்சுனன்) சிரித்தான், என்பது பொருள். நடைவிதப் புரவி - நடைவிதத்தின் வேகம் குறைந்த குதிரை; அதாவது நடையில் தளர்ச்சி உடைய குதிரை. பாகு - பாகன். நா கவற்றிய புன்மொழி - திரௌபதியை மன்னவையில் துகிலுரியச் சொன்னபோது கூறிய இழிவுடைய வார்த்தைகள். போர் செய்து அடையவேண்டிய வெற்றியைச் சூது சுலபத்தில் அடையச் செய்த தால், மா கவறு எனப்பட்டது.

**69. பாகும் வாசியு மமைந்ததோர் தேர்மிசை பாய்ந்து**
**மாகு சூழவுந் தப்பிய வரிநிற மாபோல்**
**ஏகு கின்றபே ரிராசரா சனையெதிர் தகைந்து**
**கோகு தட்டிடு தனஞ்செய னிவையிவை கூறும்.**

[பாகும் வாசியும் அமைந்தது ஓர் தேர்மிசை பாய்ந்து, மாகு சூழவும் தப்பிய வரி நிற மாபோல், ஏகுகின்ற பேர் இராசராசனை எதிர் தகைந்து, கோகு தட்டிடு தனஞ்செயன் இவை இவை கூறும்.]

**விளக்கம் :-** மாகு - வலை. வரி நிற மா - புலி. கோகு - தோள். (தேர் அழியப் பெறலும்), தன்னைச் சூழ்ந்துகொண்ட வலையினின்று தப்ப முயலும் புலிபோல், பாகனையும் குதிரை களையும் உடைய ஒரு தேர்மேல் பாய்ந்து ஏறிக்கொண்டு தப்பிச் செல்லப் பார்க்கின்ற இராசராசனை (துரியோதனனை) தப்ப முடியாமல் எதிர் சென்று தடுத்து, தனது தோள்களைக் கொட்டி நகைக்கின்ற தனஞ்செயன் இந்த வார்த்தைகளைக் கூறுவானாயி னான்,—என்பது பொருள். இவை இவை என்ற அடுக்கு, பன்மைப் பொருளது. இராசராசன் என்றது, இகழ்ச்சி. தோள் கொட்டல், வீரத்தின் அடையாளம்.

### கலிவிருத்தம்

### விசயன் துரியோதனனை இகழ்தல்

**70. கார்முகங் கைத்தலத் திருப்பக் கைம்மிகு**
**போர்முகந் தன்னினீ புறந்தந் தேகினால்**
**ஊர்முகக் களிற்றின்மே லுலாவும் வீதியின்**
**வார்முகக் கனதன மாத ரென்சொலார்.**

[கார்முகம் கைத்தலத்து இருப்ப, கை மிகு போர் முகம் தன்னில் நீ புறம் தந்து ஏகினால், ஊர்முகம் களிற்றின்மேல் உலாவும் வீதியின் வார் முகம் கன தனம் மாதர் என் சொலார்,]

**விளக்கம் :-** கார்முகம் - வில். கைத்தலம் - கை. கை மிகு போர் முகம் - கையின் தொழில் மிகுதற்கு, (அதாவது போர் செய்வதற்கு) இடமான போர்க்களம். ஊர்முகம் (ஊரினிடம்) யானைமேல் ஏறி உலா வரும் வீதியில் உள்ள கச்சணிந்த பருத்த முலைகளை உடைய மாதர், என்ன சொல்லமாட்டார்கள்,

(அதாவது சிரிப்பார்கள்) என்பது ஈறறடிகளின் பொருள். ''நீ இப்படி ஓடப் பார்ப்பது ஆண்மைக்குரிய செயல் அன்று ; மகளிர், எள்ளி நகையாடாமாட்டாரா?'' என்று விசயன் கூறினான், என்க.

**71. இருபுறஞ் சாமர மிரட்டத் திங்கள்போல்
ஒருகுடை நிழற்றவிவ் வுலக நின்னதா
மருவலர் கைதொழ வாழு கின்றநீ
பொருமுனை காண்டலும் போதல் போதுமோ.**

[இருபுறம் சாமரம் இரட்ட, திங்கள்போல் ஒரு குடை நிழற்ற இ உலகம் நின்னது ஆக, மருவலர் கைதொழ வாழுகின்ற நீ, பொரு முனை கான்டலும் போதல் போதுமோ.]

**விளக்கம் :-** இருபுறம் சாமரைகள் வீசவும், சந்திரன் போன்ற வெள்ளிய குடை நிழல் செய்யவும், இந்த உலகம் உன் வசத்தது ஆக, மருவலர் (பகைவர்) வணங்கவும் வாழும் நீ, போர்க் களத்தைக் கண்டதும், இவ்வாறு புறங்காட்டி அஞ்சி ஓடுதல் தக்க தாமோ என்றான், —என்பது பொருள்.

**72. உன்பெருந் துணைவரோ டுன்னை யோர்கணத்து
என்பெருங் கணைகளுக் கிரைக ளாக்குவேன்
வன்பெருங் கொடிமிசை மடங்க லேற்றினான்
தன்பெரு வஞ்சினந் தப்பு மேகொலாம்.**

[உன் பெருந்துணைவரோடு உன்னை ஓர் கணத்து என் பெருங்கணைகளுக்கு இரைகள் ஆக்குவேன் ; வல் பெருங் கொடி மிசை மடங்கல் ஏற்றினான் தன் பெரு வஞ்சினம் தப்புமே கொல் ஆம்.]

**விளக்கம் :-** உன்னையும் உன் தம்பிமார்களையும் எனது பெரிய அம்புகளுக்கு இரையாக்கி அழித்து விடுவேன் ; (நான் அங்ஙனம் செய்யின்) தனது பெரிய கொடியில் சிங்கத்தின் வடி வத்தைக் கொண்ட என் தமையனான வீமன் (துகிலுரிந்த காலத் தில் கூறிய) அவனது பெரிய சபத மொழி பிழையுறுமே, என்ற எண்ணத்தால், நான் அது செய்திலன், என்று விசயன் கூறினான், —என்பது பொருள், கொல், ஆம் : அசைகள்.

**73. எங்களைக் கானில்விட் டிரவி யேகவெள்
திங்களைப் போனெடுந் திகிரி யோச் சினீர்
சங்களை பயில்வள நாடன் றண்டினால்
உங்களைக் களப்பலி யூட்டு நாளையே.**

[எங்களை கானில் விட்டு இரவி ஏக, வெள் திங்களைப்போல் நெடுந் திகிரி ஓச்சினீர், சங்கு அளைபயில் வளம் நாடன் தண்டி னால் உங்களை களம் பலி ஊட்டும் நாளையே.]

**விளக்கம் :-** எங்களை மோசத்தால் காட்டில் ஓட்டி, சூரியன் மறைய அற்ப ஒளியை உடைய சந்திரன் பிரகாசத்துடன் விளங்குவதுபோல், இப்பொழுது சக்கரம் உருட்டி வாழ்கின்றீர் ; சங்குகள் சேற்றில் நடமாடுகின்ற வளத்தையுடைய குரு நாட்டின் தலைவனான, என் தமையன் வெகு விரைவில் கதையினால் உங்களைப் போர் முனையில் களபலி கொள்வான்,—என்பதாம். நாளை, என்பது மிக விரைவில், என்ற பொருளது. இரவி முன் சந்திரன் ஒளி ஒடுங்குவதுபோல், வெளிப்பட்டு வந்துள்ள எங்கள் முன் நீங்கள் நலங்கெட்டு விரைவில் அழிவீர், என்று விசயன் கூறியபடி. அரசனது ஆணையைச் **சக்கரம், கோல்,** என்றல் மரபு.

**74. இரவல ரிளையவ ரேத்து நாவலர்**
**விரவிய தூதுவர் விருத்தர் வேதியர்**
**அரிவையர் வெஞ்சம ரஞ்சு வோர்பெருங்**
**குரவரென் றிவர்களைக் கோறல் பாவமே.**

[இரவலர், இளையவர் ஏத்தும் நாவலர், விரவிய தூதுவர், விருத்தர், வேதியர், அரிவையர், வெம் சமர் அஞ்சுவோர், பெருங் குரவர் என்ற இவர்களை கோறல் பாவம், ஏ]

**விளக்கம் :-** இரவலர் - கையேந்தி யாசிப்பவர். ஏத்தும் நாவலர் - துதி பாடகர். விரவிய தூதர் -(வேற்றாரிடமிருந்து) வந்த தூதர். விருத்தர் - வயது முதிர்ந்தவர். குரவர் - பெரியோர், (ஐம்பெருங்குரவர்). கோறல் - கொல்லல். போர் முனையில் நிற்கமாட்டாமல் ஓடுகின்றவரைக் கோறல் பாவமாதலால், உன்னைக் கொல்லாது விடுகின்றேன், என்று விசயன், கூறினான், என்க. கொல்லத்தகாதவர் இவர், இவர், என்று கூறி, அதனால் துரியோதனனைத் தான் கொல்லாமையாகிய சிறப்புப் பொருளைத் தெரிவிப்பதால், இது, **பிறிது மொழிதலணியின்** பாற்படும். இரவலர் முதல் குரவர் ஈறாகக் கூறப்பட்டவர் கொல்லத்தகாதவர், என்று கூறியது, **ஒப்புமைக் கூட்டணியின்** பாற்படும். அரசன், ஆசான், தாய், தந்தை, தமையன், ஆயவர் ஐம்பெருங் குரவர். விருத்தர் என்றது, ஞானவிருத்தர், வயோவிருத்தர், சீலவிருத்தர் என்ற மூவகைப்பட்ட பெரியோரைக் குறிக்கும்.

## துரோணர் முதலியோர் போரெழல்

**75. பற்பல யுரையிவன் பகரு மேல்வையில்**
**சொற்பயி னான்மறைத் துவசன் வீடுமன்**
**கற்பக நிகர்க்கொடைக் கன்ன னாதியோர்**
**மற்புய நிருபனை வந்து கூடினார்.**

[பல் பல உரை இவன் பகரும் ஏல்வையில், சொல் பயில் நால்மறை துவசன், வீடுமன், கற்பகம் நிகர் கொடை கன்னன் ஆதியோர் மல் புயம் நிருபனை வந்து கூடினார்.]

**விளக்கம் :-** ஏல்வையில் - பொழுதில், காலத்தில். சொல் பயில் நால் மறை - சுரத்தோடு ஓதப்படுதல் பொருந்திய நான்கு வகைப்பட்ட வேதம். மறை துவசன் - அந்த வேதத்தைக் கொடியில் கொண்ட துரோணன். மல் புயம் நிருபன் - அருச்சுனன். துரியோதனனை நோக்கி இவ்வாறு விசயன் பற்பல கூறிக்கொண்டிருக்கையில், துரோணன், வீடுமன், கர்ணன் முதலியோர், அவனை வளைத்துக்கொண்டனர்,—என்பதாம்.

**76. மின்னுடன் மின்மினி வெகுளு மாறுபோல்**
**தன்னுட னிகரிலாத் தடக்கை வண்மையான்**
**மன்னுட னிகல்வது வார்த்தை யன் றினி**
**என்னுடன் மலைதிநீ யென்று கூறினான்.**

*[மின்னுடன் மின்மினி வெகுளும் ஆறுபோல், தன்னுடன் நிகர் இலா தட கை வண்மையான், மன்னுடன் இகல்வது வார்த்தை அன்று, என்னுடன் மலைதி நீ என்று கூறினான்,]*

**விளக்கம் :-** தன்னோடு நேரில்லாத வண்மையினனான கர்ணன், (விசயனை நோக்கி), ''மின்னலுடன் மின்மினிப் பூச்சி வெகுண்டு எதிர்த்தாற்போல், துரியோதனனிடம் எதிர்த்து நீ வார்த்தையாடுவது வார்த்தை அன்று (செய்தற்குரியதன்று). வல்லையேல், என்னுடன் போர் செய்க'', என்று கூறினான்— என்பதாம். துரியோதனனிடம் தான் கொண்ட நட்பினால், அவனை மின்னலாகவும், விசயனை மின்மினியாகவும், கூறினான், என்க.

## கர்ணார்ச்சுனர் பொருதல்

**77. கரக்கவுண் மதம்பொழி காய்க ளிற்றை றவிட்(டு)**
**உரக்கொடு வரியின்மே லோடும் யாளிபோல்**
**நிரக்குமந் நிருபனு நிற்க வந்துபோர்**
**இரக்குமக் கன்னன்மே லிரத மேவினான்.**

*[கரம் கவுள் மதம் பொழி காய் களிற்றை விட்டு, உரம் கொடு வரியின்மேல் ஓடும் யாளிபோல், நிரக்கும் அ நிருபனும் நிற்க, வந்து போர் இரக்கும் அ கன்னன்மேல் இரதம் ஏவினான்.]*

**விளக்கம் :-** கரம் - துதிக்கை. கவுள் - கன்னம். களிறு - துரியோதனன். (மதயானை போன்ற துரியோதனனை விட்டு விட்டு) உரம் உடையதான ஒரு கொடுவரியின்மேல் (புலியின் மேல்) ஓடிப்பாயும் யாளிபோல், நிரக்கும் அந் நிருபன் (துரியோதனன்). நின்று கொண்டிருக்க. (அவனை விட்டுவிட்டுத்) தன்பால் வந்து போரை யாசிக்கின்ற கர்ணன் மேல் தேரைச் செலுத்துமாறு, (விசயன்) ஏவினான்,—என்பது பொருள். யாளி என்பது யானையைக் கொல்லவல்லதும், துதிக்கை உடையதுமான சிங்கம் போன்ற ஒரு மிருக விசேஷம். சிங்கம், என்ற

பொருளிலும் அது வழங்கிவரக் காண்கின்றோம். நிரக்கும், என்பதற்கு வை. மு. கோ. பொருந்திய, என்று உரை எழுதியுள்ளார். அகராதியில் பொருள் கிடைக்கவில்லை. தஞ்சை மாவட்டத்தில், ''**சபை நிரக்க**, அல்லது **நிரக்கும்படி** சீர் வரிசை செய்ய வேண்டும்'', என்று சொல்லக் கேட்டுள்ளோம். பரிமளிக்க, அல்லது பிறர் கொண்டாட அல்லது குறைவின்றி, என்பது அதன் பொருளாக வேண்டும். இங்கே எப்பொருளில் வந்துளது என்று தெரியவில்லை. அசையாகக் கொள்ளலும் அமையும். இரத்தலை அறியாத வள்ளலாகிய கர்ணனை, இரந்தான் என்றது நயமுடையது.

**78. இரதமு மிரதமு மெதிர்ந்த போதிரு**
**குரதுர கதங்களுங் குமுறி யார்த்தன**
**உரைதரு பாகரு முடன்று கூவினார்**
**விரைதனு வளைத்தனர் வீரர் தாமுமே.**

[இரதமும் இரதமும் எதிர்ந்தபோது இரு குரம் துரகதங்களும் குமுறி ஆர்த்தன, உரைதரு பாகரும் உடன்று கூவினார், விரை தனு வளைத்தனர் வீரர் தாமும், ஏ.]

**விளக்கம் :-** குரம் - குளம்பு. துரகதம் - குதிரை. குமுறி - கனைத்து. உரைதரு பாகர் - சிறப்பித்துப் பேசப்படுகின்ற தேர்ப் பாகர். உடன்று கூவினர் - கோபங்கொண்டு வீர முழக்கஞ் செய்தனர். விரை - (வினையெச்சம்) விரைந்து. விசயனும் கர்ணனும் கை கலந்தனர்,—என்பதாம்.

**79. இருவரு மெதிரெதி ரேவும் வாளியால்**
**வெருவரு மிருளுற விசும்பு தூர்த்தனர்**
**பொருவரு மமர்நெடும் போது தாக்கியும்**
**ஒருவரு மிளைத்தில ரொத்த வாண்மையார்.**

[இருவரும் எதிர் எதிர் ஏவும் வாளியால் வெருவரும் இருள் உற விசும்பு தூர்த்தனர்; பொருவு அரும் அமர் நெடும்போது தாக்கியும் ஒருவரும் இளைத்திலர், ஒத்த ஆண்மையார்.]

**விளக்கம் ;-** (அம்புகளால்) அஞ்சத்தக்க இருள் உண்டாகும் படி விண்ணை மறைத்தனர், என்பது இரண்டாவது அடியின் பொருள். பொருவு அரும் அமர் - ஒப்பு இல்லாத போர். வீரர் இருவரும் வெற்றி தோல்வி என்பதில்லாமல் நெடுநேரம் போர் செய்தனர், என்பதாம். வரிசை வரிசையாக இருதிறத்து வீரர் களும் செலுத்திய அம்புக் கூட்டங்கள் சூரியனை மறைக்கவே, இருள் உண்டாயிற்று, என்க.

**80. மற்றொரு தொடையினிற் சுவேத வாகனன்**
**முற்றொரு கணத்திடை மூன்று கோல்விட**
**இற்றொரு கணத்திடை யிவுளி பாகுதேர்**
**அற்றொரு வினனட லாண்மை யங்கர்கோன்.**

[(மற்று) ஒரு தொடையினில் சுவேத வாகனன் முற்று ஒரு கணத்திடை மூன்று கோல்விட, இற்று ஒரு கணத்திடை இவுளி பாகு தேர் அற்று, ஒருவினன் அடல் ஆண்மை அங்கர்கோன்.]

**விளக்கம் :-** தொடையினில் - ஒரு பிரயோகத்தில். சுவேத வாகனன் - வெள்ளைக் குதிரைகள் பூட்டப்பெற்ற தேரை வாகன மாக உடைய விசயன். முற்று ஒரு கணம் - ஒரு கண நேரம் முடியுமுன். கோல் - சரம். இற்று - இந்த விதமாக. (தேரோடு பாகும் பரியும் அழிய) ஒருவினன் - களம் அகன்று சென்றான். தேர் அழியக் கர்ணன் களம் நீங்கினான் என்பதாம். மற்று : அசை. ஒரு தொடை - சரப் பிரயோகம் ஒன்றில்.

**81. ஒருவியிட் டோடிமற் றோரொர் தேர்மிசை**
**மருவியிட் டெதிருற வந்து மோதியும்**
**உருவியிட் டனகணை யொன்று போற்பல**
**வெருவியிட் டனனவன் மீள மீளவே.**

[ஒருவியிட்டு ஓடி மற்று ஓர் ஓர் தேர்மிசை மருவியிட்டு எதிர் உற வந்து மோதியும், உருவியிட்டன கணை(கள்) ஒன்றுபோல் பல வெருவியிட்டனன் அவன் மீள மீள, ஏ.]

**விளக்கம் :-** ஒருவியிட்டு ஓடி - களம் விட்டு நீங்கிச் சென்று. மருவியிட்டு - (வேறோர் தேரின் மேல்) ஏறிக்கொண்டு. மோதல் - பொருதல். ஒன்றுபோல் பல கணைகள் உருவியிட்டன - ஒன்று போல் (விசயனது) பல கணைகளும் (கர்ணனது உடலில்) தைத்தன வாக. வெருவியிட்டனன் - அஞ்சிக் கர்ணன் களம் அகன்றனன். மீளமீள, என்ற அடுக்குப் பலமுறை, என்ற பொருளது. பலமுறை முயன்றும், கர்ணன் தோற்று ஓடுபவனானான், என்க.

அசுவத்தாமன் கர்ணனை இகழ்தல்

**82. இம்முறை வந்துவந் தெதிர்ந்து வெஞ்சமர்**
**மும்முறை முறிதலு முனிவன் மாமகன்**
**அம்முறை முதுகிடு மருக்கன் மைந்தனைத்**
**தெம்முறை மையிற்சில வார்த்தை செப்புவான்.**

[இ முறை வந்து வந்து எதிர்ந்து வெம் சமர் மும்முறை முறிதலும், முனிவன் மாமகன், அ முறை முதுகு இடும் அருக்கன் மைந்தனை, தெவ் முறைமையின் சில வார்த்தை செப்புவான்.]

**விளக்கம் :-** இந்த விதமாக வந்து வந்து எதிர்த்துப் போரில் மும்முறை தோற்று ஓடலும், முனிவனது சிறந்த மகனான அசுவத் தாமன், கர்ணனை நோக்கி, பகை தரும் தன்மையுடைய சில வார்த்தைகளைச் சொல்லலானான்,—என்பதாம். அவ்வாறு (வந்து வந்து) முதுகிடும் சூர்ய குமாரனாகிய கர்ணனை,—என்பது

மூன்றாவது அடியின் பொருள். தெம்முறையின் சில வார்த்தை என்பது, பரிகாச வார்த்தைகள், என்ற பொருளது.

**83. தேருமொன் றொருவனே தேரி லாளுமிங்கு
யாருமஞ் சுதிரென விகழ்ந்து ரைத்தநீ
போருடைந் தோடுதல் போது மோநறும்
தாருடன் பொலிதரு தாம மார்பனே.**

[தேரும் ஒன்று, ஒருவனே தேரில் ஆளும், இங்கு யாரும் அஞ்சுதிர் என இகழ்ந்து உரைத்த நீ, போர் உடைந்து ஓடுதல் போதுமோ! நறும் தாருடன் பொலி தரு தாம மார்பனே.]

**விளக்கம் :-** போதுமோ - தக்கதாமோ. **தார்,** என்றும் **தாமம்** என்றும் வருந்திருப்பதால், தாரைப் பூமாலையாகவும், **தாமம்** என்பதை முத்து மாலையாகவும் கொள்ளலாம். ''அஞ்சுவது ஏன்?'' என்று மற்றவர்களை இகழ்ந்த நீ, இப்படிப் போர் உடைந்து ஓடுதல், தக்கதாமோ! என்று அசுவத்தாமன், இகழ்ந்தபடி. தாருடன் பொலிதரு தாம மார்பன் - கர்ணன்.

**84. சொல்லலா மிருந்துழிச் சொன்ன சொற்படி
வெல்லலா மென்பது விதிக்குங் கூடுமோ
மல்லலா ளியைப்பல வளைந்து கொள்ளினும்
கொல்லலா யிருக்குமோ குஞ்ச ரங்களால்,**

[சொல்லல் ஆம் இருந்துழி, சொன்ன சொல்படி வெல்லல் ஆம் என்பது விதிக்கும் கூடுமோ! மல்லல் ஆளியை பல வளைந்து கொள்ளினும் கொல்லல் ஆய் இருக்குமோ குஞ்சரங்களால்.]

**விளக்கம் :-** இருந்த இடத்தில் இருந்துகொண்டு (எதையும் செய்து முடிப்பேன் என்று) சொல்லி விடலாம், (ஆனால்) சொன்ன சொல்லின்படி பகை வெல்லலாம் என்பது விதிக்கும் முடியாததாகும். வலிய சிங்கத்தை (யானைகள்) பல சூழ்ந்து கொள்ளினும், அந்த யானைகளால் (அச் சிங்கம்) கொல்லக்கூடியதாய் இருக்குமோ! (இராது என்றபடி)—என்பது பொருள். ஆளி - சிங்கம். குஞ்சரம் - யானை. ''எதையும் யாரும் சாதித்து விடுவதாக வாயால் கூறல் எளியதே. சொன்னபடி செய்ய முடியாமை வலியவர்க்கும் நேர்வதுண்டு'', என்பதை, ''விதிக்கும் கூடுமோ'', என்ற தொடர் தெரிவிக்கும். பல யானைகள் ஒன்று பட்டாலும் யாளியைக் கொல்ல முடியுமோ, என்ற வாசகம், ''யாளி போன்ற வீரனாகிய விசயனை, வெல்ல முடியாது','
என்று தெரிவிப்பதால், அது, பிறிது மொழிதலணியின் பாற்படும்.

### துரோணனும் வீடுமனும் களம் புகல்

**85. கொழுதுமம் பினுமிகக் கொடிய கூற்றிவை**
**பழுதறு நாவினான் பகரும் வேலையில்**
**முழுதுணர் முனியையு முந்தை தன்னையும்**
**தொழுதுபற் குனன்சில தொடைக ளேவினான்.**

[கொழுதும் அம்பினும் மிகக் கொடிய கூற்று இவை பழுது அறு நாவினான் பகரும் வேலையில், முழுது உணர் முனியையும் முந்தை தன்னையும் தொழுது பற்குனன் சில தொடைகள் ஏவினான்.]

**விளக்கம் :-** கொழுதும் - தைத்துத் துளைக்கும், பழுது அறு நாவினான் - குற்றமற்ற நாவை அடைய அசுவத்தாமன். முழுது உணர் முனி - துரோணன். முந்தை - பாட்டனாரான வீடுமன். பற்குனன் - அருச்சுனன். அசுவத்தாமன் கர்ணனை இகழ்ந்து கொண்டிருக்கையில், விசயன், துரோணன் மேலும், வீடுமன் மேலும் நமஸ்கார பாணத்தை விடுத்தான், என்பதாம். பொய் பேசல், புறங் கூறல், பயனில சொல்லல், வன்சொல் வழங்கல், நாவினிற்குரிய குற்றமாகும். எனவே, அசுவத்தாமன் இக் குற்றங்கள் இல்லாதவன், ஆகின்றான்.

**86. தாளிணை யிறைஞ்சிய தனஞ்செ யன்றொடும்**
**வாளிகண் டுளமிக மகிழ்ச்சி கூரவும்**
**மீளிமை யுடையவவ் வீரன் மீதெழும்**
**தூளிசெய் தேரினைத் துரோண னுந்தினான்.**

[தாள் இணை இறைஞ்சிய தனஞ்செயன் தொடும் வாளி கண்டு உளம் மிக மகிழ்ச்சி கூரவும், மீளிமை உடைய அ வீரன் மீது எழும் தூளிசெய் தேரினை துரோணன் உந்தினான்.]

**விளக்கம் :-** தொடும் - தொடுத்த, பிரயோகித்த. மீளிமை உடைய வீரன் - அருச்சுனன். தனது உபய பாதங்களையும் வணங்க, விசயன் விடுத்த கணைகளைக் கண்டு மகிழ்ந்து, துரோணன் அவன் மேல் தேரைச் செலுத்தினான்; அதாவது, அவனை எதிர்க்கும் பொருட்டு, அவன்மேல் தேரைச் செலுத்தி னான், என்பதாம். தூளி - புழுதி.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

#### அருச்சுனன் கூற்று

**87. உந்துதேர் முனியை யந்த யுதிட்டிர னிளவ னோக்கிச்**
**சிந்தையி லன்பு கூரச் சேவடி பணிந்து போற்றி**
**அந்தண ரரசே யுன்ற னருளினா லடவி நீங்கி**
**வந்தன மென்று சிற்சில வாசக மியம்பு வானே.**

[உந்து தேர் முனியை அந்த உதிட்டிரன் இளவல் நோக்கி, சிந்தையில் அன்பு கூர, சேவடி பணிந்து போற்றி, அந்தணர் அரசே உன் தன் அருளினால் அடவி நீங்கி வந்தனம் என்று, சில்சில வாசகம் இயம்புவான், ஏ.]

**விளக்கம் :-** தன்மேல் தேரைச் செலுத்தி வந்த துரோணனை விசயன் அன்போடு வணங்கி ''அந்தணோத்தமனே, உனது அருளினால் வனவாசத்தை முடித்து மீண்டு வந்தோம்'', என்று கூறி, மேலும் சில கூறலானான், என்பதாம்.

**88. யாதுமொன் றறியா வென்னை யிவனலா திலையென் றிந்த**
**மேதினி மதிக்கு மாறு வின் முதற் படைகள் யாவும்**
**தீதறத் தந்த வுண்மைத் தெய்வநீ யென்றாற் பஞ்ச**
**பாதகந் தன்னி லொன்றுன் பதயுகம் பிழைப்ப தையா**

[யாதும் ஒன்று அறியா என்னை இவன் அலாது இலை என்று இந்த மேதினி மதிக்கும் ஆறு வில் முதல் படைகள் யாவும் தீதுஅற தந்த உண்மை தெய்வம் நீ என்றால், பஞ்சபாதகம் தன்னில் ஒன்று உன் பதயுகம் பிழைப்பது ஐயா.]

**விளக்கம் :-** யாது என்றும், என்று கூட்டுக. ''யாதொன்றும் அறியாத என்னை, இவன் அலாது வில் வீரர் இப் பூமியில் இல்லை'', என்று எல்லோரும் மதிக்கும்படி, வித்தை கற்பித்த என் தெய்வம் நீ. உனக்கு எதிராக ஒன்று செய்தல் பஞ்சமாபாதகங்களில் ஒன்றாகும்'', என்று விசயன் கூறினான்,—என்பதாம்.

**89. மன்னொடு சூழ நின்ற மாசுண முயர்த்த கோவை**
**மின்னொடு முருமே றென்ன வெகுண்டமர் புரிவ தல்லால்**
**நின்னொடுங் கிருபனோடு நின்மக னோடு முந்தை**
**தன்னொடும் புரியேன் வெம்போர் தக்கதோ சரதம் பாவம்.**

[மன்னொடு சூழ நின்ற மாசுணம் உயர்த்த கோவை மின்னொடும் உரும் ஏறு என்ன வெகுண்டு அமர் புரிவது அல்லால், நின்னெடும் கிருபனோடும் நின் மகனோடும், முந்தை தன்னொடும் புரியேன் வெம் போர், தக்கதோ, சரதம் பாவம்.]

**விளக்கம் :-** மன்னர்களால் சூழப்பெற்று நிற்கும் அரவக் கொடியையுடைய துரியோதனனை, மின்னலோடு தோன்றும் இடியென வெகுண்டு போர் புரிவதல்லால், உன்னோடும், கிருபனோடும், உன் மகனோடும், முந்தை (பாட்டனார்) தன்னோடும் வெம் போர் புரியேன்; நான் உங்களோடு போர் புரிதல் தக்கதாமோ! நிச்சயமாக அது பாவமே ஆகும்,—என்று விசயன் கூறியபடி.

## துரோணன் பதில்

**90. அம்முனி தன்னோ டிவ்வா றருச்சுனன் புகல வல்வில்
கைம்முனி வனுஞ்செஞ் சோற்றுக் கடன்கழித் திடுதல்
வேண்டும்
தெம்முனை மதியா வீரா தேவர்தம் பகையை வென்ற
வெம்முனை காணு மாறுன் வில்வளைத் திடுக வென்றான்.**

[அ முனி தன்னோடு இ ஆறு அருச்சுனன் புகல, வல்வில் கை முனிவனும் செம் சோறு கடன் கழித்திடுதல் வேண்டும்; தெவ் முனை மதியா வீரா, தேவர்தம் பகையை வென்ற வெம் முனை காணும் ஆறு உன் வில் வளைத்திடுக என்றான்.]

**விளக்கம் :-** தெம் முனை - (தெவ்முனை) பகைவரது போர். வெம்முனை - (உனது) உக்கிரமான போர்ஆற்றல். வல் வில்லைக் கையில் உடைய முனிவனான துரோணன், விசயனை நோக்கி, ''சோற்றுக் மடன் கழித்தல் வேண்டும். மேலும், தேவர் பகைவ ராகிய நிவாதகவசர் காலகேயர் ஆகிய அசுரர்களை வென்ற உனது போர் ஆற்றலை நான் காணவேண்டும், எனவே, வில்லை வளைத்திடுக'', என்றான்,—என்க.

## இருவரும் பொருதல்

**91. வண்டுதான் முரலுங் கஞ்ச மாலையான் பயிற்று வித்துப்
பண்டுதான் கண்ட கூற்றிற் பதின்மடங் குயர்ந்த பண்பால்
மிண்டுதா னவரை வென்ற விறலுடை விசயன் வின்மை
கண்டுதா னவன்ற னோடு கற்பதற் குன்னி னானே.**

[வண்டு (தான்) முரலும் கஞ்சம் மாலையான் பண்டு தான் கண்ட கூற்றின் பதின்மடங்கு உயர்ந்த பண்பால், மிண்டு தான வரை வென்ற விறல் உடை விசயன் வின்மை கண்டு, தான் அவன் தனோடு கற்பதற்கு உன்னினான், ஏ.]

**விளக்கம் -:** வண்டு முரலும் கஞ்சம் மாலையான்-வண்டுகள் மொய்த்து ரீங்கரிக்கும் தாமரை மாலை அணிந்தவனான துரோ ணன். பண்டுதான் பயிற்றுவித்துக் கண்ட கூற்றின் பதின்மடங்கு உயர்ந்த பண்பால் - பழமையில் தான் வில்வித்தை கற்பித்துக் கொடுத்து, (அவனது) திறமையைக்கண்ட அளவினும் பதின் மடங்கு ஆற்றல் மிகுந்துள்ள தன்மையால். மிண்டு தானவர் - வலிமிகுந்த தானவர் (நிவாத கவசர், காலகேயர்.) வின்மை - வில் தொழில் வல்லமை. விசயனது தற்போதைய வின்மையைக் கண்டு, (துரோணன்) தான் அவனிடத்தே வில் வித்தை கற்க வேண்டும் என்று நினைத்தான்,—என்பது ஈற்றடியின் பொருள். விசயன் இப்பொழுது, வித்தை கற்பித்த தன்னையும் விஞ்சுபவ னானது கண்டு, துரோணன் மகிழ்ந்தான், என்ற கருத்தது செய்யுள். தாமரை மாலை அந்தணர்க்கு உரியது. அவனோடு- அவனிடத்து, உருபுமயக்கம். கூறு - அளவு.

**92. அதிரதர் தம்மை யெண்ணி லணிவிரன் முடக்க வொட்டா**
**முதிர்சிலை முனியும் வீர முனிவிலா முகனும் விட்ட**
**கதிர்முனைப் பவன வேகக் கடுங்கொடும் பகழி யாவும்**
**எதிரெதிர் கோத்த வல்லாற் பட்டில விருவர் மேலும்.**

*[அதிரதர் தம்மை எண்ணில் அணிவிரல் முடக்க ஒட்டா முதிர் சிலை முனியும், வீரம் முனிவு இலா முகனும் விட்ட கதிர் முனை பவனம் வேகம் கடுங்கொடும் பகழி யாவும், எதிர் எதிர் கோத்த அல்லால் பட்டில இருவர் மேலும்.]*

அதிரதர் - ஒரு தேரில் இருந்து, சாரதிக்கும் குதிரைகளுக்கும் அழிவு வராமல் காத்துப் பல ஆயிரம் தேர் வீரர்களைத் தனியே நின்று வெல்லும் வல்லமை வாய்ந்தவர். (அவர் தம்மை) எண்ணில் அணி விரல் முடக்க ஒட்டா முதிர் சிலைமுனி - அவர் களை விரல் விட்டு எண்ணினால், சிறு விரலுக்கு அடுத்ததான பவித்திரம் அணியும் விரலை இரண்டு என்று மடக்க முடியாத வில் தொழிலில் முதிர்ந்த முனிவனாகிய துரோணன் (அதாவது, ஒத்த தேர் வீரர் இல்லாத துரோணன்). வீர முனிவு இலா முகன்- வீரத்திற்குரிய கோபமில்லாத முகத்தை உடைய விசயன். கூறிய முனையையும் காற்றின் வேகத்தையும் உடைய மிகக் கொடிய கணைகள் எல்லாம் எதிர் எதிர் மோதிக் கொண்டு தரை வீழ்ந் தனவே அல்லாமல் இருவரில் எவர் மீதும் தைத்தில,—என்பது ஈற்றடிகளின் பொருள். விசயனும், அவனது குருவும் செய்த போரில் அம்புகளால் எவரும் பாதிக்கப்படவில்லை, சமப் போர் செய்தனர்,—என்க.

**93. குருவுமக் குருவைத் தப்பாக் குருகு லக்கோவுந் தங்கள்**
**அருவரைத் தோளி னாணி யறைதரப் பிறைவில் வாங்கி**
**கருவுயிர்த் தெழுந்த கால மழைமுகில் கால்கொண் டென்ன**
**ஒருவருக் கொருவர் வாளி யோரொரு கோடி யெய்தார்.**

*[குருவும், குருவை தப்பா குருகுலம் கோவும், தங்கள் அருவரை தோளில் நாணி அறைதர பிறைவில் வாங்கி, கரு உயிர்த்து எழுந்த காலம் மழை முகில் கால்கொண்டு என்ன, ஒருவருக்கு ஒருவர் வாளி ஓர் ஒரு கோடி எய்தார்.]*

**விளக்கம் :-** குரு - துரோணன். குருவைத் தப்பா குரு குலக்கோ - குருவின் வார்த்தையைத் தட்டாத குருவம்சத்தில் தோன்றிய விசயன். அருவரை தோள் - அழித்தற்கு அரிய வலிய மலை போன்ற தோள்கள். நாணி அறைதர - நாண் கயிறு தோளில் படும்படி. பிறைவில் வாங்கி - பிறைச்சந்திரன் போல வில்லை வளைத்து. சூல் கொண்டு எழுந்த கார்கால மேகங்கள் கால் கொண்டாற்போல் (இரு வீரர்களும்) ஒருவர்மேல் ஒருவர் கோடி கோடியாய் அம்புகளைப் பிரயோகித்தார்கள், என்பது ஈற்றடிகளின் பொருள். போர் புரியேன் என்று கூறிய விசயன், அவரது ஏவலின்படி போர் செய்தமை பற்றி, 'குருவைத் தப்பாக் குருகுலக்கோ', எனப்பட்டான்.

## துரோணன் தோற்கவே மகன் சீறல்

**94. ஏறுதேர் முரிய வேத மெழுதிய துவசம் வீழத்
தாறுபாய் புரவி நான்கு சாரதி தலையுஞ் சிந்தக்
கூறுபோர் நாணி யோடு குனிசிலை துணியப் பின்னர்
ஆறுகோ றொடுப்ப வெள்கி யாரியன் முதுகிட் டானே.**

[ஏறு தேர் முரிய, வேதம் எழுதிய துவசம் வீழ, தாறு பாய் புரவி நான்கும் சாரதி தலையும் சிந்த, கூறு போர் நாணியோடு குனிசிலை துணிய, ஆறு கோல் தொடுப்ப, வெள்கி ஆரியன் முதுகு இட்டான், ஏ.]

**விளக்கம் :-** ஏறுதேர் - ஏறியுள்ள தேர். தாறு பாய் புரவி - கூரிய முனையை உடைய உளவுகோல் பாயப்பெறும் குதிரைகள். கூறு போர் நாணி - சிறப்பித்துப் பேசப்படும் போருக்கு உரிய வில்லின் நாண். குனி சிலை - வளைந்த வில். (ஆகிய இவை) துணிய - துண்டுபட, அழிய. (விசயன்) ஆறு கோல் தொடுப்ப - ஆறு கணைகளைப் பிரயோகிக்க,—ஆரியன் (துரோணன்) நாணி முதுகிட்டுக் களம் நீங்கினான். தாறு - குதிரை ஓட்டுங் கோல், உளவுகோல். தேரும், கொடியும், குதிரைகளும், சாரதியும் அழியவும், தன் வில் துண்டு படவும், துரோணன், தோற்ற வனாய்க் களம் நீங்கினான்,—என்பதாம்.

**95. தந்தைபோ ரழிந்து போன சாபலங் கண்டு வெம்பி
இந்திரன் மதலை யோடு மெதிர்த்தன னிவுளித் தாமா
முந்துற விருவர் வில்லு முரண்படக் குனித்த போரின்
அந்தணன் கணையான் மன்னன் வில்லினா ணற்ற தன்றே.**

[தந்தை போர் அழிந்துபோன சாபலம் கண்டு வெம்பி, இந்திரன் மதலையோடும் எதிர்த்தனன் இவுளித்தாமா ; முந்துற, இருவர் வில்லும் முரண்பட குனித்த போரின், அந்தணன் கணை யால் மன்னன் வில்லின் நாண் அற்றது, அன்றே.]

**விளக்கம் :-** சாபலம் - எளியநிலை ; சபலத்தன்மை. இவுளித் தாமா - அசுவத்தாமன். இருவர் வில்லும் முரண்பட குனித்த போரின், அந்தணன் கணையால் முந்துற மன்னன் வில்நாண் அற்றது - இரு வீரர்களின் வில்லும் மாறுபடும்படி (வில்லை) வளைத்துச் செய்த போரில் அந்தணனாகிய அசுவத்தாமனது

கணையால் முதலில் மன்னனின் (விசயனின்) வில் நாண் அழிந்தது. அசுவத்தாமனை, பரித்தாமன், புரவித்தாமன், துரகத்தாமன், என்றும் அழைப்பர். அந்தணனுக்கும் விசயனுக்கும் இடையெழுந்த மாறுபாட்டை, வில்லின்மேல் ஏற்றி, **இருவர் வில்லும் முரண்பட**, என்றார்.

## அசுவத்தாமனும் மற்றவரும் தோற்றல்

**96. மந்தர மனைய தோளான் மற்றொரு வரிவில் வாங்கி**
**இந்தவெம் பகழிக் கொல்லா மீடறா னிவனென் றெண்ணிச்**
**சந்திர மௌலி தந்த சாயகந் தொடுத்த லோடும்**
**நொந்தினி யென்செய் வோமென் றூர்புக நோக்கி னானே.**

[மந்தரம் அனைய தோளான் மற்று ஒரு வரிவில் வாங்கி, இந்த வெம் பகழிக்கு எல்லாம் ஈடு அறான் இவன் என்று எண்ணி, சந்திரமௌலி தந்த சாயகம் தொடுத்தலோடும். நொந்து இனி என் செய்வோம் என்று ஊர் புக நோக்கினான், ஏ.]

**விளக்கம் :-** மந்தரம் - மந்தரமலை, ஈடு அறான் - வலி அழிய மாட்டான். சந்திரமௌலி - சிவபெருமான். சாயகம் - (அப் பெருமான் தந்த) பாசுபதக்கணை. விசயன், பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகித்தலும், அசுவத்தாமன், வலி அழிந்து, ஊர் நோக்கி நடக்கலானான், என்பதாம்.

**97. கிருபனு மவனைக் கண்டு கெட்டனன் கேடி லாத**
**நிருபர்கள் பலரு மோதி நேர்பொரு தாவி மாய்ந்தார்**
**பொருபடைச் சேனை யாவும் புக்குழி யாவர் கண்டார்**
**ஒருபரி யொற்றை யாழித் தேரவ னுச்ச மானான்.**

[கிருபனும் அவனை கண்டு கெட்டனன், கேடு இலாத நிருபர்கள் பலரும் மோதி நேர்பொருது, ஆவி மாய்ந்தார், பொரு படைசேனை யாவும் புக்குழி (புக்க உழி) யாவர் கண்டார்? ஒரு பரி ஒற்றை ஆழி தேரவன் உச்சம் ஆனான்.]

**விளக்கம் :** கிருபனும், (அசுவத்தாமன் வலி அழியும்படி போர் செய்த) விசயனைக் கண்டு, முன் நிற்கமாட்டாமல், நிலை கெட்டுக் களம் நீங்கினான்; ஓடாது களம் நின்ற நிருபர்களும், தாக்கி எதிர் நின்று போர் செய்து உயிர் ஒழிந்தார்கள்; போர் செய்த சேனை எல்லாம் (எதிர்நிற்கமாட்டாமல்) ஓடி ஒளிந்த இடத்தை யார் அறிவர்? (அந்த சமயம்,) ஒரு குதிரையையும் ஒற்றைச் சக்கரத்தையும் உடைய தேரினனான சூரியன் வானின் நடு இடத்தை அடைந்தான், என்பது பொருள். சூரியன் **ஸப்த** என்ற பெயரை உடைய ஒரு குதிரையை உடையவன், என்பர். ஏழு குதிரைகளை உடைய தேரன் சூரியன், என்பாரும் உளர்.

**98. வென்னிடு மளவி னின்ற வீடுமன் விதுரன் வண்டு
தென்னிடு மலங்கன் மாலைச் சுயோதனன் சிந்து ராயன்
துன்னிடு நிருபர் சூழச் சூழ்திசை நான்கும் வந்து
முன்னிடு தேரோன் றன்னை முனையுற வளைந்து
கொண்டார்.**

[வென் இடும் அளவில், நின்ற வீடுமன், விதுரன், வண்டு தென் இடும் அலங்கல் மாலை சுயோதனன், சிந்துராயன், துன்னிடு நிருபர் சூழ, சூழ் திசை நான்கும் வந்து முன்னிடு தேரோன் தன்னை முனை உற வளைந்து கொண்டார்.]

**விளக்கம் :-** வென் இடும் அளவில்-(துரோணன் முதலியோர்) முதுகிட்டு ஓடும் அளவில். நின்ற - அயல் நின்ற. வண்டு தென் இடும் அலங்கல் மாலை - வண்டுகள் மொய்த்து **தென்னதென** என்று ரீங்கரிக்கும் நீண்டு தொங்கும் மாலை. சிந்துராயன் - சிந்து தேசத்து அரசனான ஜயத்திரன். துன்னிடு நிருபர் சூழ - (வீடுமன் முதல் சிந்துராயன் ஈறாகவுள்ளாரான தங்களை) சேர்ந்த அரசர்கள் சூழ்ந்து நிற்க. சூழ்திசை நான்கும் - (விசயனைச்) சுற்றிலுமுள்ள நான்கு திசைகளிலும். வந்து - நெருங்கி. முன்னிடு தேரோன் - தங்கள் முன்னே நிற்கின்ற தேரினனான விசயன். முனைஉற வளைந்து கொண்டார் - போர்க்களத்தில் நன்றாக (அவனை) சுற்றிக்கொண்டனர். துரோணன், பரித்தாமன், கிருபன் முதலியோர் பின்னிட அயல் நின்ற வீடுமன் முதலியோர் அருச்சுனனை வளைந்தனர், என்பதாம். முனைஉற - களத்தி னின்று தப்ப முடியாதபடி, நெருக்கமாக; போரில் பொருந்தும் படி, என்றும் பொருள்படும்.

**99. இவர்பெருந் தேரின் மேலோ னொருவனே யிலக்க தாகத்
தவருடன் குனித்த நேக சாயகந் தொடுத்த காலைக்
கவுரிபங் காளன் றன்னைக் கண்ணுறக் கண்ட காளை
பவுரிவந் தொன்றுந் தன்மேற் படாமல்வெம் பகழி
கோத்தான்.**

[இவர், பெருந் தேரின் மேலோன் ஒருவனே இலக்கு அது ஆக, தவர் உடன் குனித்து அநேக சாயகம் தொடுத்த காலை, கவுரி பங்காளன் தன்னை கண்உற கண்ட காளை, பவுரி வந்து ஒன்றும் தன்மேல் படாமல் வெம் பகழி கோத்தான்.]

**விளக்கம் :-** இவர் - துரியோதனனைச் சார்ந்தவர். பெருந் தேரின் மேலோன் - விசயன். (அவன் ஒருவனையே இலக்காகக் கொண்டு) உடன் தவர் குனித்து - ஒன்றுபட்டு வில்லை வளைத்து. [அவர்கள் அநேக சாயகம் (விற்கள்) வளைத்தபொழுது]. கவுரி பங்காளனைக் கண்ணுறக் கண்ட காளை - சிவபெருமானைத் தன் கண்களால் நன்றாகக் கண்ட விசயன். பவுரி வந்து -(பம்பரம் போல்) சுழன்றுகொண்டே (தன்மேல் அம்புகள் படாமல் கொடிய

கணைகளைத் தொடுத்துத் தடுத்தான்). சுயோதனனைச் சேர்ந்தார் ஏகோபித்துத் தன்மேல் தொடுத்த சரங்களைத் தன்மீது அவை பாயாதபடி, தனது சரங்களால் தடுத்தான், என்பதாம்,

**100. குடதிசை மகவான் வாளி குணதிசை வருணன் வாளி**
**வடதிசை மறலி வாளி தென்திசை மதியின் வாளி**
**அடலுற விமைப்பி னேவி யவரவர் மார்புந் தோளும்**
**படருறப் படைக ணீறு படப்படப் பரப்பி னானே.**

[குடதிசை மகவான் வாளி, குணதிசை வருணன் வாளி, வட திசை மறலி வாளி, தென்திசை மதியின் வாளி, அடல் உற இமைப்பின் ஏவி, அவர் அவர் மார்பும் தோளும் படர் உற, படைகள் நீறு பட பட பரப்பினான், ஏ.]

**விளக்கம் :-** குடதிசை - மேற்கு. மகவான் வாளி - இந்திரனைத் தேவதையாக உடைய அம்பு. குணதிசை - கிழக்கு. அடல் உற - (எதிரிகளின் அத்திரத்தோடு) மாறுபடும்படி. படர் - துன்பம். படைகள் நீறு பட - எதிரிகளின் கணைகள் தூளாக. பரப்பினான் - (விசயன்) கணைகளை எங்கும் பரவச் செய்தான். விசயன் திசை நான்கிலும் சரங்களைச் செலுத்திப் பகை வீரர் களைத் துன்புறச் செய்தான்,—என்பதாம். இந்திரன் முதலிய திக்பாலகர்களின் அம்புகளை, அவர் திசைக்கு எதிர்த்திசைகளில் செலுத்தினான், என்க. மதி - குபேரன்,

**101. கோகன நாக வேகக் கொடியவன் சேனை யாவும்**
**மோகனக் கணையொன் றேவி முடியடி படிக்கண்**
**வீழ்த்தான்**
**மாகனற் கடவு டந்த மணிப்பொலந் தடந்தேர் வெள்ளை**
**வாகனக் குரிசில் வின்மை வல்லப மிருந்த வாறே.**

[கோகனம் நாகம் வேகம் கொடியவன் சேனை யாவும் மோகனம் கணை ஒன்று ஏவி, முடி அடி படிக்கண் வீழ்த்தான்; மா கனல் கடவுள் தந்த மணி பொலம் தட தேர், வெள்ளை வாகனம் குரிசில் வின்மை வல்லபம் இருந்த ஆறு, ஏ.]

**விளக்கம் :-** கோ - கண். கனம் - கன்னம், காது. கோகனம் நாகம் - கண்களைச் செவியாக உடைய பாம்பு. வேகம் கொடி யோன் - நாகம் எழுதப்பெற்ற கொடிச்சீலை வேகமாக ஆடுதலை உடைய கொடியோனான துரியோதனன். மோகனக் கணை - மயக்கமுறச் செய்யும் செவ்வியதான மோகனாஸ்திரம். முடி அடி பட வீழ்த்தான் - காலும் தலையும் தாறுமாறாக் கிடக்கும்படி மண்ணில் மயங்கி விழச் செய்தான். விசயன் மோகனக் கணையால் பகைப் படையை மயங்கி மண்ணில் விழுந்து கிடக்கச் செய்தான், என்பதாம். சிறந்த அக்னி தேவன் தந்த பெரிய அழகிய பொன்

மயமான தேரையும் வெள்ளைக் குதிரைகளையும் உடைய விசயன் வில் தொழில் இருந்த விதம் வியக்கத்தக்கதே,—என்பது ஈற்றடிகளின் பொருள்,

**102. இத்தரை யிடங்கொ ளாம லிறந்தனர் போல வீழ்ந்த**
**மத்தரை மயிர்கொய் தென்ன மணிக்கொடித் தூசுந் தூசும்**
**உத்தரை வண்டற் பாவைக் குடுத்துதற் கென்று**
**கொய்தான்**
**அத்தரை மவுலித் திங்க ளமுதுகப் புடைத்த வில்லான்.**

[இ தரை இடம் கொளாமல் இறந்தனர் போல வீழ்ந்த மத்தரை மயிர் கொய்தென்ன (கொய்தது என்ன) மணி கொடி தூசும் உத்தரை வண்டல் பாவைக்கு உடுத்துதற்கு என்று கொய்தான், அத்தரை மவுலி திங்கள் அமுது உக புடைத்த வில்லான்.]

**விளக்கம் :-** இ தரை - இந்தப் போர்க் களம். மத்தர் - மயக்கம் அடைந்த பகைவீரர். மயிர் கொய்தென்ன - தலையை மொட்டை அடித்தாற்போல. மணி கொடி தூசு - அழகிய கொடிச் சீலைகள். தூசு - வஸ்திரம், ஆடை. வண்டல் பாவை- (உத்தரை வைத்து விளையாடும்) விளையாட்டுப் பதுமை. அத்தர்- சிவபெருமான். சிவபெருமான் முடியில் வசிக்கும் சந்திரனிடத்தி லிருந்து அமுதம் சிந்தும்படி (வில்லால்) அடித்த வில்லையுடைய விசயன்,—என்பது ஈற்றடியின் பொருள். உத்தரை - விராட மகள் ; உத்தரனுக்குத் தங்கை. மயிர் கொய்தல் - அவமானப் படுத்தல் ; ஆடைகளைக் களைதலும், அன்னதே. சந்திரனை அமுத கிரணன் என்பர். இத்தரை இடங்கொளாமல் என்றது, பகைவரின் மிகுதியைக் குறிக்கும்.

## பகைவர் தம் ஊர் திரும்பல்

**103. விழுந்தவர் நெடும்போ தாக மெய்யுணர் வெய்தி மெல்ல**
**அழுந்திய பகழி யோடு மரிபடு கவசத் தோடும்**
**எழுந்துதம் மிரதம் யானை யிவுளியி னேறி யேறித்**
**தொழுந்தகு தெய்வ மன்ன சூரனைத் துதித்து மீண்டார்.**

[விழுந்தவர் நெடும்போது ஆக, மெய் உணர்வு எய்தி மெல்ல அழுந்திய பகழியோடும் அரிபடு கவசத்தோடும் எழுந்து, தம் இரதம் யானை இவுளியின் ஏறி ஏறி, தொழும் தகு தெய்வம் அன்ன சூரனை துதித்து மீண்டார்.]

**விளக்கம் :-** மயங்கி விழுந்த வீரர்கள், நெடும் பொழுது சென்றபின் இழந்த உணர்வை எய்தி, அதாவது மயக்கந்தெளிந்து, எழுந்து, அவரவர் தேர் யானை குதிரை முதலியவற்றின் மேல் ஏறிக்கொண்டு விசயனைப் பாராட்டினராய் ஊர் திரும்பினர்,—

என்பதாம். மெய் உணர்வு எய்தி - உடலில் உணர்வு வரப் பெற்று, மயக்கம் தெளிந்து. தொழுந்தகு தெய்வம் அன்ன சூரன்- செயற்கு அரியதைச் செய்து முடிக்கும் திறத்தில் தெய்வம் போன்ற சூரன். தோற்றவர் விசயனைத் துதித்தது, அவன் தங்களைக் கொல்லாது உயிரோடு விட்டமை பற்றி, என்க. அரித்தல் - துளைத்தல். அரிபடு கவசம் - துளைக்கப்பட்ட கவசம்.

**104. கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரவிக்**
**காலால்**
**வடதிசை யரசர் தங்கண் மாமணி மகுடம் போல**
**அடலுடை விசய னொற்றை யம்பினான் மீண்டுஞ் சென்று**
**படவர வுயர்த்த கோவைப் பண்ணினான் மகுட பங்கம்.**

[கொடி மதில் பாகை வேந்தன், கொங்கர் கோன் புரவி காலால், வடதிசை அரசர் தங்கள் மா மணிமகுடம் (பங்கம் செய்வது) போல, அடல் உடை விசயன் ஒற்றை அம்பினால் மீண்டும் சென்று, படம் அரவு உயர்த்த கோவை பண்ணினான் மகுடபங்கம்.]

**விளக்கம் :-** பாகை - (வரபதி ஆட்கொண்டான் என்ற அரசனது நகரம் ஆகிய) **வக்கபாகை.** கொங்கர்கோன் - கொங்கு நாட்டினரின் அரசனான வரபதி ஆட்கொண்டான். கொங்கு நாட்டின் தலைநகர், வக்கபாகை. இந்நூலாசிரியரை ஆதரித்த வள்ளல் அவன்; எனவே, நூலில் அவன் இடம் பெற்றுள்ளான். விழுந்த பகைவர் மயக்கந் தெளிந்து தம் பதி திரும்புகையில் விசயன், துரியோதனனை நெருங்கி, ஓர் அம்பினால் அவனது கிரீடத்தைத் தரை வீழ்த்தி அவனை அவமானப்படுத்தினான்,— என்பதாம். இச் செய்திக்கு, வரபதியாட் கொண்டான், தான் ஏறிச் செல்லும் குதிரையின் முன்னங் கால்களால் வடதிசை மன்னர்களை மகுட பங்கம் செய்தலை, உவமை ஆக்கினார்.

**105. வல்லினி லழிந்து நின்முன் மன்னவை தன்னி னன்று**
**சொல்லிய காலஞ் செல்லா முன்னிவர் தோற்றஞ்**
**செய்தார்**
**புல்லிய கானி னின்னம் போகநீ புகறி யென்று**
**வெல்படை வேந்தன் சொல்ல வீடுமன் மீண்டுஞ்**
**சொல்வான்.**

[வல்லினில் அழிந்து நின் முன் மன் அவை தன்னின் அன்று சொல்லிய காலம் செல்லாமுன் இவர் தோற்றம் செய்தார், புல்லிய கானின் இன்னம் போக நீ புகறி என்று, வெல் படை வேந்தன் சொல்ல, வீடுமன் மீண்டும் சொல்வான்.]

**விளக்கம் :-** வல் - சூது. வெல் படை வேந்தன் - வெல்லப் பட்ட படைகளை உடைய துரியோதனன், (வெல், என்பதைச்

செயப்பாட்டுப் பொருளில் வந்த செய்வினையாகக் கொள்க,). அல்லது, பின்னிட்ட படையை உடைய வேந்தனை, 'வெல்லும் படை வேந்தன்', என்று இகழ்ந்து கூறியதாகவும் பொருள் கொள்ளலாம். கடவநாள் கழிவதன் முன் விசயன் வெளிப் பட்டமையின், பாண்டவர்களை மீண்டும் காடு செல்லச் சொல்லுக, என்று துரியோதனன் கூற, வீடுமன் பதில் கூறுவான், என்பதாம். ஈற்றடியிலுள்ள மீண்டும் என்பதை மறுமொழி, என்ற பொருளதாகக் கொள்க.

**106. செந்நெலே கன்னல் காட்டச் சேர்ந்தயற் செறுவி னின்ற**
**கன்னலே கமுகு காட்டுங் கங்கைநீர் நாட கேண்மோ**
**இன்னலே யுழந்தோர் கால மிந்துவி னியக்கந் தன்னால்**
**நென்னலே சென் ற தென் றா னெஞ்சினி லழுக்கி லாதான்.**

[செந்நெல் (ஏ) கன்னல் காட்ட, சேர்ந்து அயல் செறுவில் நின்ற கன்னல் (ஏ) கமுகு காட்டும் கங்கை நீர் நாட, கேண்மோ: இன்னலே உழந்தோர் காலம் இந்துவின் இயக்கம் தன்னால் நென்னலே சென்றது என்றான், நெஞ்சினில் அழுக்கு இலாதான்,]

**விளக்கம் :-** செந்நெல் - நெல் பயிர்கள். கன்னல் - கரும்பு. செறு - வயல். நெற் பயிர்கள் கரும்பைப் போலவும், கரும்பு கமுகைப் போலவும் காணப்படும் கங்கை நீர் பாய்கின்ற குரு நாட்டின் தலைவனே, (நான் சொல்வதைக்) கேட்பாயாக,— என்பது முதல் இரண்டடிகளின் பொருள். இன்னலே உழந் தோர் - துன்பங்களையே அனுபவித்து வருந்திய பாண்டவர். காலம் - அவரது அஜ்ஞாதவாச காலம். இந்துவின் இயக்கந் தன்னால் - சந்திரமானக் கணக்கின்படி; அதாவது சந்திர சஞ்சாரத்தின் கணக்குப்படி. நென்னலே கழிந்தது - நேற்றே கழிந்துவிட்டது. நெஞ்சினில் அழுக்கு இலாதான் - களங்கம் இல்லாத நெஞ்சினனாகிய வீடுமன். நேற்றோடு பாண்டவரது அஜ்ஞாதவாச காலம் கழிந்துவிட்டது, என்று வீடுமன் துரியோதனனுக்குச் சொன்னான், என்பதாம். அமாவாசைக் கமாவாசையை மாதமாகக் கொண்டு கணக்கிடுதல் **சந்திரமானம்**. சூரிய சஞ்சாரத்தைக் கொண்டு, அதாவது, சூரியன் ஒரு ராசியி லிருந்து மற்றொரு ராசிக்குச் செல்லுதலை ஒரு மாதமாகக் கொண்டு காலக் கணக்கிடல் **சௌரமானம்**. வடவேங்கடத்திற்கு வடக்கே உள்ளவர், சந்திரமானத்தைப் பின்பற்றுபவர்.

**107. அரவினை யுயர்த்த கோமா னவ்வுரை கேட்ட போழ்தே**
**பரவையி னிரவி கண்ட பனிமதி போல மாழ்கி**
**வரவர வறிது மென்று மாபெருஞ் சேனை யோடும்**
**இரவிடை யாருந் துஞ்ச வெயில்வளை நகரி புக்கான்.**

[அரவினை உயர்த்த கோமான், அ வுரை கேட்ட போழ்தே பரவையின் இரவி கண்ட பனி மதி போல மாழ்கி, வர வர

அறிதும் என்று, மாபெருஞ் சேனையோடும் இரவிடை யாரும் துஞ்ச எயில்வளை நகரி புக்கான்.]

**விளக்கம்** :- சமுத்திரத்திலிருந்து தோன்றும் உதய சூரியனைக் கண்ட குளிர்ந்த சந்திரனைப்போல் பொலிவு இழந்து, அதாவது உள்ளத் தளர்ச்சி கொண்டு,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வர வர அறிதும் - போகப் போகப் பார்க்கலாம். வீடுமன் சொன்னது கேட்டு மனந்தளர்ந்த துரியோதனன், ''போகப் போகப் பார்க்கலாம்'' என்று எண்ணினனாய், இரவில், எல்லோரும் தூங்கும் வேளையில் மதிலால் சூழப்பெற்ற அத்தின புரம் போய்ச் சேர்ந்தான், என்பதாம்.

உத்தரனும் விசயனும் நகர் திரும்பல்

**108. வேந்தனை முதுகு கண்ட வெந்திறல் வீரன் மீண்டு**
**போந்துமுன் னெடுத்த வன்னிப் பொதும்பரின் புறத்து வந்து**
**வாய்ந்தவா யுதங்கள் யாவும் வைத்தெழில் வடிவ மாற்றி**
**ஆந்தக வெண்ணிப் பேடி யாயினா னென்ப மாதோ.**

[வேந்தனை முதுகு கண்ட வெம் திறல் வீரன் மீண்டு போந்து, முன் எடுத்த வன்னி பொதும்பரின் புறத்து வந்து, வாய்ந்த ஆயுதங்கள் யாவும் வைத்து. எழில் வடிவம் மாற்றி, ஆம் தகவு எண்ணி பேடி ஆயினான், என்ப, மாதோ.]

**விளக்கம்** :- முன் போந்து எடுத்த வன்னி பொதும்பரின் புறத்து வந்து - முன்னே சென்று ஆயுதங்களை எடுத்த வன்னி மரப் பொந்தின் பக்கம் வந்து. வாய்த்த ஆயுதங்கள் - ஏற்றதாய் அமைந்த, அல்லது பொருத்தமுடையதான ஆயுதங்கள். வைத்து - (அம் மரப்பொந்திலே) வைத்து. ஆம் தக எண்ணி - இனி ஆக வேண்டியதை எண்ணி; அதாவது தருமன் முதலிய வரோடு சேர்ந்து வெளிப்பட வேண்டியதை எண்ணி. அல்லது, உத்தரன் பகை கடந்தான் என்று தோற்றுவித்ததற்கு ஏற்றபடி எண்ணி, என்றும் பொருள் கொள்ளலாம். என்ப, மாதோ: அசைகள்.

**109. இவ்வெயி லெறிக்கும் பைம்பொ னிலங்குதேர் மீண்டு மேகக்**
**கைவெயி லெறிக்கும் பைம்பூட் காளைதன் தேரி லேறி**
**வெவ்வெயி லாறும் வண்ணம் விரைந்துபோய் விராடன் மூதூர்**
**அவ்வெயில் சூழ்ந்த கா வி னமர்ந்தன னரச ரேறே.**

[இ வெயில் எறிக்கும் பைம்பொன் இலங்கு தேர் மீண்டும் ஏக, கை வெயில் எறிக்கும் பைம்பூண் காளை தன் தேரில் ஏறி

வெவ் வெயில் ஆறும் வண்ணம் விரைந்துபோய், விராடன் மூதூர் அ எயில் சூழ்ந்த காவின் அமர்ந்தனன், அரசர் ஏறு, ஏ.]

**விளக்கம் :-** இந்த, வெயில் போன்ற ஒளிவிடும் பசும்பொன் மயமாய் விளங்கும் (அக்கினிதேவன் அருளிய) தேர் திரும்பிச் செல்ல,—என்பது முதலடியின் பொருள். கை வெயில் எறிக்கும் பைம் பூண் காளை - பக்கங்களில் வெயில் போன்ற பிரகாசத்தை வீசுகின்ற பசும் பொன்னாலான ஆபரணங்களை அணிந்த உத்தர குமாரன். வெவ்விய வெயிலின் வெப்பத்தால் எழுந்த தாபம் ஆறும்படி விரைந்து சென்று விராடனது பழமையான ஊரின் அழகிய மதிலின் புறத்தே அமைந்துள்ள சோலையில், அருச்சுனன் தங்கி இளைப்பாறினான், என்பது ஈற்றடிகளின் பொருள். அ எயில் - அழகிய மதில். அரசர் ஏறு - அரசர்களில் ரிஷபம் போன்றவனான அருச்சுனன்: அல்லது சிங்கம் போன்றவனான அருச்சுனன். அருச்சுனன் களைப்பாறும் பொருட்டு நகர்ப்புறத்தே யுள்ள ஓர் அழகிய சோலையில் தங்கினான், என்பதாம்.

**110. ஆறிய பசுந்தண் காவி னசைவொரீஇ யிருந்த வீரன்**
**ஏறிய கானிற் பல்யாண் டிருந்தபி னேனை யாண்டு**
**மாறிய வடிவத் தோடிவ் வளநகர் வைகி னோமென்(று)**
**ஊறிய வமுதச் சொல்லா லுத்தரற் குரைசெய் தானே.**

]ஆறிய பசுந்தண் காவின் அசைவு ஒரீஇ இருந்த வீரன், ஏறிய கானில் பல் யாண்டு இருந்த பின் ஏனை யாண்டு மாறிய வடிவத் தோடு இ வளநகர் வைகினோம், என்று, ஊறிய அமுதம் சொல்லால் உத்தரற்கு உரை செய்தான், ஏ.]

**விளக்கம் :-** ஆறிய பசுந்தண் கா - வெப்பம் தணிந்த பசிய குளிர்ந்த சோலை. அசைவு ஒரீஇ வீரன் - தளர்ச்சி நீங்கியிருந்த விசயன்,—உத்தரனுக்குத் தம் வரலாறு கூறலானான். ஏறிய கான் - (மரங்கள்) உயர்ந்து செறிந்த காடு. பல் யாண்டு - கழிக்க வேண்டிய பன்னிரண்டு வருஷம். ஏனையாண்டு - மற்றையதான ஒரு வருஷம், (அஜ்ஞாதவாச காலம்). உருமாறிய தோற்றத் தோடு உங்களது இந்த நகரில் தங்கினோம்,—என்பது மூன்றாவது அடியின் பொருள். ஊறிய அமுதச் சொல் - இனிய சொல். சோலையில் இளைப்பாறிக்கொண்டிருந்த விசயன், தங்களது துன்பஞ்செறிந்த சரித்திரத்தை உத்தரனுக்குச் சொன்னான்,— என்பதாம்.

**111. பேடிதேர் செலுத்தச் சென்ற பிள்ளையும் பெரும்போர் வென்று**
**கோடிதேர் முதுகு கண்டு கோநிரை மீட்டா னென்றென்(று)**
**ஓடிநீர் சொன்மி னென்று தூதரை யோட விட்டான்**
**நீடுநீர் பரக்குங் கங்கை நாடுடை நிருபர் கோமான்.**

[பேடி தேர் செலுத்த சென்ற பிள்ளையும் பெரும் போர் வென்று, கோடி தேர் முதுகு கண்டு கோ நிரை மீட்டான் என்று, ஓடி நீர் சொல்மின் என்று தூதரை ஓடவிட்டான், நீடு நீர் பரக்கும் கங்கை நாடு உடை நிருபர் கோமான்.]

**விளக்கம் :-** கோநிரை - பசுக்கூட்டம், மிகுதியான நீர் பரவிச் செல்லுகின்ற கங்கை பாய்ந்து வளம் செய்யும் குரு நாட்டை உடைய வேந்தர் வேந்தனான விசயன், என்பது ஈற்றடி யின் பொருள். தேர் - (ஆகுபெயர்) தேர் வீரர். தேர் கோடி, என்பது மிகப் பல தேர், என்ற பொருளது. தங்களை ஓராண்டு வைத்து இரட்சித்த விராடனும், அவனைச் சேர்ந்தாரும் மகிழ வேண்டும் என்ற எண்ணத்தில், விசயன் உத்தரன் போர் வென்ற தாகச் செய்தி சொல்லி அனுப்பினான், என்க.

**112. இங்கிவ னிவ்வா றுய்ப்ப முற்பக லேகி யாங்கண்**
**கங்குலிற் சேனை யோடுங் கண்படை யின்றி வைகிச்**
**செங்கதி ரெழுந்த பின்னர்த் தென்றிசைப் பூசல் வென்ற**
**வெங்கழல் விராடன் றானு மீண்டுதன் னகரி புக்கான்.**

[இங்கு இவன் இ ஆறு உய்ப்ப, முன்பகல் ஆங்கண் கங்குலில் சேனையோடும் கண்படை இன்றி வைகி, செம் கதிர் எழுந்த பின்னர் தென் திசை பூசல் வென்ற வெம் கழல் விராடன் தானும் மீண்டு தன் நகரி புக்கான்.]

**விளக்கம் :-** இங்கு இவன் இவ்வாறு உய்ப்ப, முன்பகல் தென் திசை ஏகி பூசல் வென்ற வெம் கழல் விராடன் தானும், ஆங்கண் கங்குலில் சேனையோடும் கண் படை இன்றி வைகி, செங்கதிர் எழுந்த பின்னர், மீண்டு தன் நகரி புக்கான்,— என்பது அன்வயம். இங்கு இவன் உய்ப்ப - நகர்ப்புறத்துச் சோலையில் தங்கி இளைப்பாறிய விசயன் இந்த விதமாகச் செய்தி சொல்லித் தூதரை அனுப்ப. கங்குல் - இரவு. கண் படை இன்றி - தூக்கம் இல்லாமல். செங்கதிர் - சூரியன். தென்திசை சென்று நிரை மீட்ட விராடன், சூர்யோதயத்தில் வெற்றியுடன் தனது பதி வந்து சேர்ந்தான், என்பதாம்.

மகன் களம் சென்றது கேட்டு விராடன் வருந்தல்

**113. தடம்பதி யடைந்த காலைத் தன்மனை யிருந்த பேடி**
**திடம்படு தடந்தே ரூரத் திருமகன் சென்ற செய்கை**
**விடம்படு வெகுளி வேற்கட் சுதேட்டிணை விளம்பக் கேட்டாங்(கு)**
**உடம்புயி ரின்றி வீழ்ந்த தென்னுமா றுருகி வீழ்ந்தான்.**

[தட பதிஅடைந்த் காலை தன் மனை இருந்த பேடி திடம் படு தட தேர் ஊர திருமகன் சென்ற செய்கை, விடம் படு வெகுளி

வேல் கண் சுதேட்டிணை விளம்ப, கேட்டு, ஆங்கு, உடம்பு உயிர் இன்றி வீழ்ந்தென்னும் (வீழ்ந்தது என்னும்) ஆறு உருகி வீழ்ந்தான்.]

**விளக்கம்;-** தடம் பதி - விராடனது நகர். திடம்படுதேர் - வலிய தேர். செய்கை - செய்த காரியம், செய்தி. விடம் படு வெகுளி வேல் கண் சுதேட்டிணை-விஷம் பூசியதும் (பகைவரைச்) சீறுவதுமான வேல் போன்ற கண்களை உடைய சுதேட்டிணை. மகன் போர்க்களம் சென்ற செய்தியை மனைவி கூற, உயிரற்ற உடல் வீழ்வதுபோல் விராடன் வீழ்ந்தான், —என்பதாம். மை தீட்டிய கண்ணுக்கு உவமையாதற் பொருட்டு ''விடம்படு வேல்'', என்றும், வேலை உடையவரின் வெகுளியை வேலின்மேல் ஏற்றி ''வெகுளிவேல்'', என்றும் கூறினார் என்க.

**114. சந்தன வளறும் வாசத் தண்பனி நீரும் வீசி**
**வெந்திறல் வேந்தன் றன்னை மெய்ம்மெலி விருந்து தேற்றி**
**மைந்தனிப் பொழுதே வென்று வருகுவன் பொற்றே ரூர்ந்தாள்**
**அந்தமெய்ப் பேடி யாகி லென்றன னந்த ணாளன்.**

[சந்தனம் அளறும் வாசம் தண் பனி நீரும் வீசி, வெம் திறல் வேந்தன் தன்னை மெய் மெலிவு (அயல்) இருந்து தேற்றி, மைந்தன் இப்பொழுதே வருகுவன் பொன் தேர் ஊர்ந்தாள் அந்த மெய் பேடி ஆகில் என்றனன் அந்தணாளன்.]

**விளக்கம் :-** சந்தன அளறு - சந்தனக் குழம்பு. வாசம் பனி நீர் - வாசனையுடைய மிகக் குளிர்ந்த நீர். வீசி - தெளித்து. மெய் மெலிவு - உடல் தளர்ச்சி. தேற்றி - தெளியச் செய்து. மெய்ப் பேடி - உடலில் பெண்மைத் தன்மை மிகுந்த பேடி. அந்தணாளன் - முனிவேடங் கொண்ட தருமன். முனிவன், சீதளோபசாரம் செய்து, மன்னனது மெலிவு போக்கி, ''தேர் ஊர்ந்து சென்றது பேடியாகில், மைந்தன் விரைவில் வெற்றியுடன் வருவான்'', என்று கூறினான், என்பதாம். இரண்டாவது அடியிலுள்ள **இருந்து** என்பதை, அந்தணாளன் (விராடனது அயல்) இருந்து, என்று கூட்டுக.

தூதர் வேந்தனிடம் செய்தி கூறல்

**115. அறன்மகன் வாய்மை தேறி யரசனாங் கிருந்த வெல்லை**
**மறனுடை யுரக கேது வன்சம ரழிந்த வாறும்**
**உறமலைந் தொருதன் றேர்கொண் டுத்தரன் வென்ற வாறும்**
**தொறுநிரை மீட்ட வாறுந் தூதர்போய்த் தொழுது சொன்னார்.**

[அறன் மகன் வாய்மை தேறி அரசன் ஆங்கு இருந்த எல்லை, மறன் உடை உரக கேது வன்சமர் அழிந்த ஆறும், உற மலைந்து ஒரு தன் தேர்கொண்டு உத்தரன் வென்ற ஆறும், தொறு நிரை மீட்ட ஆறும் தூதர் போய் தொழுது சொன்னார்.]

**விளக்கம் :-** வாய்மை தேறி-வாய் மொழியால் தேறலுற்று. மறன் உடை உரககேது - வலிமை உடைய பாம்புக் கொடியனான துரியோதனன். உத்தரன் ஒருதள் தேர் கொண்டு உற மலைந்து வென்ற ஆறும் - உத்தரன் தனது ஒரு தேர் கொண்டே நன்றாகப் போர் செய்து வென்ற விதமும். தொறு நிரை - பசுக் கூட்டம். அரசன் முனிவனது வார்த்தையால் தேறியிருந்த சமயம், தூதுவர் வந்து, உத்தரன் துரியோதனாதியரை வென்று நிரைமீட்ட செய்தியைக் கூறினார், என்பதாம்.

**116. சீதள வமுத வாரி செவிகளிற் செறிந்த தென்னத்**
**தூதர்வந் துரைத்த சொல்லாற் சோகமுந் துனியு மாறித்**
**தாதையன் றேது செய்தான் றனையொழிந் துள்ள சேனை**
**ஆதிப ரெவரு மெய்தி யண்ணலை யெதிர்கொள்**
**கென்றான்.**

[சீதளம் அமுதம் வாரி செவிகளில் செறிந்தது என்ன, தூதர் வந்து உரைத்த சொல்லால், சோகமும் துனியும் மாறி, தாதை அன்று ஏது செய்தான்? தனை ஒழிந்து உள்ள சேனை ஆதிபர் எவரும் எய்தி அண்ணலை எதிர் கொள்க என்றான்.]

**விளக்கம் :-** சீதளம் அமுத வாரி - குளிர்ச்சி பொருந்திய அமுத வெள்ளம். சோகம் - துயரம். துனி - (மகன் என்னுறு வானோ என்ற) பயம். துனியும் ஆறி, என்றும் பிரித்துக் கொள்ள லாம். தாதை அன்று (அப்பொழுது) என்ன செய்தான், என்றது மிக மிக மகிழ்ந்தான், என்ற பொருளது. சேனை ஆதிபர் - (அதிபர்) சேனைத் தலைவர். தூதரது கூற்றால் மனம் மகிழ்ந்த அரசன், தான் ஒழிந்த மற்றவர் அனைவரும் சென்று மகனை எதிர்கொள்ளுமாறு பணித்தான், என்பதாம்.

**117. சோரர்தங் கருவைத் தங்கள் கருவெனத் தோளி லேந்தி**
**ஆர்வமுற் றுருகு நெஞ்சி னறிவிலார் தம்மைப் போல**
**வீரன்வெஞ் சமரம் வெல்ல விராடனுத் தரன்வென் றானப்**
**போரினை யென்னா மேனி புளகெழப் பூரித்தானே.**

[சோரர் தம் கருவை தங்கள் கரு என தோளில் ஏந்தி, ஆர்வம் உற்று உருகும் நெஞ்சின் அறிவு இலார் தம்மை போல, வீரன் வெம் சமரம் வெல்ல, விராடன் உத்தரன் வென்றான் அ போரினை என்னா மேனி புளகு எழ பூரித்தான், ஏ.]

**விளக்கம் :-** கள்ள புருஷராகிய அன்னியர் தந்த குழந்தையைத் தங்கள் குழந்தை என்று கொண்டு தோளில் சுமந்து, அன்பு கொண்டு உருகும் நெஞ்சினை உடைய அறிவிலாதாரைப்போல, வீரனான விசயன் போர் வெல்ல, விராடன், அந்தப் போரினை உத்தரன் வென்றான் என்று உடல் புளகிக்கலானான், என்பது பொருள். கரு - கர்ப்பம் என்ற சொல்லின் சிதைவு, அது இங்கே குழந்தையை உணர்த்தி நின்றது.

**118. பூழிக ளடக்கிச் செம்பொற் பூரண கும்பம் வைத்து**
**வாழையுங் கமுகு நாட்டி மணியொளித் தீப மேற்றிச்**
**சூழவன் பதாகை கட்டித் தோரணம் பலவு நாட்டி**
**ஏழுயர் மாட மூதூ ரெங்கணுங் கோடித் தாரே.**

[பூழிகள் அடக்கி, செம் பொன் பூரண கும்பம் வைத்து, வாழையும் கமுகும் நாட்டி மணி ஒளி திபம் ஏற்றி, சூழ வல் பதாகை கட்டி தோரணம் பலவும் நாட்டி, ஏழ் உயர் மாடம் மூதூர் எங்கணும் கோடித்தார், ஏ.]

**விளக்கம் :-** வீதியில் புழுதி கிளம்பாதபடி நீர் தெளித்தும், வீட்டின் முன் புறத்தில் பூர்ணகும்பங்களை வரிசையாக வைத்தும், வாழை மரங்களையும் பாக்கு மரங்களையும் பந்தலின் கால்களில் கட்டியும், மணிவிளக்குகளை ஏற்றி வைத்தும், பெரிய கொடிகளை நகரத்தைச் சுற்றிலும் கட்டியும், மா இலைகளாலும் தெங்கின் இலைகளாலும் தோரணங்கள் கட்டியும, ஏழு மாடங்களைக் கொண்ட மாளிகைகளை உடைய நகரத்தை அரசனது கட்டளையின்படி மக்கள் அலங்கரித்தார்கள், — என்பதாம். பூரண கும்பம், தீபம், தோரணம், கொடி முதலியவை, அஷ்ட மங்கலங்களிற் சில, பதாகை - கொடி.

**119. மகன்வரு மளவும் வெஞ்சூ தாடுதும் வருக வென்றாங்(கு)**
**அகமிக மகிழ்ந்து வேந்த னந்தணன் றன்னோ டாட**
**மிகமுனி யடுத்து வெல்ல வென்றியுத் தரன்முன் மேவார்**
**இகலழிந் தென்ன விப்போ ரழிதிநீ யெந்தை யென்றான்.**

[மகன் வரும் அளவும் வெம் சூது ஆடுதும் வருக, என்று ஆங்கு அகம் மகிழ்ந்து வேந்தன் அந்தணன் தன்னோடு ஆட, மிக முனி அடுத்து வெல்ல, (அப்பொழுது அரசன்) வென்றி உத்தரன் முன் மேவார் இகல் அழிந்தென்ன (அழிந்தது என்ன) இ போர் அழிதி நீ எந்தை என்றான்.]

**விளக்கம் :-** ஆங்கு - அப்பொழுது. (சூதாட்டத்தில்) முனி அடுத்து மிக வெல்ல - முனிவன் அடுத்து அடுத்து ஒவ்வோராட்டத்திலும் நல்ல வெற்றி பெற. (தோல்வியுற்ற அரசன்) எந்தை, வென்றி உத்தரன் முன் மேவார் இகல் அழிந்தென்ன, இ போர் நீ அழிதி என்றான் - தந்தை போன்றவனே, வெற்றியுடைய

உத்தரன் முன் பகைவர் போர் உடைந்து பின்னிட்டதுபோல் (இனி நாம் புரியும்) இந்தச் சூதாட்டப் போரில் நீ அழிவாய், அதாவது தோல்வியுறுவாய் என்றான். சூதாடிய விராடன் முனிவனை வெல்ல வேண்டும் என்ற விருப்பத்தில், ''இனி ஆடும் ஆட்டத்தில் உத்தரன் முன் பகை அழிந்ததுபோல், நீ அழிவாய்'' என்று கூறினான், என்பதாம். சூதாட்டம், ஆடுவார்பால் மேலும் மேலும் ஆடும் விருப்பத்தைத் தருதலின் 'வெம் சூது'', எனப்பட்டது.

### முனிவனோடு மன்னவன் மாறுபடல்

**120. என்றவன் மொழிந்த போதி லெண்ணில்வெஞ் சேனையோடு**
**வன்றிற லுரக கேது வலியழிந் துடைந்து போக**
**வென்றவன் பேடி யேதன் மெய்ந்நடுங் காமற் போரில்**
**நின்றுநின் சிறுவன் வெல்ல வல்லனோ நிருப ரேறே.**

[என்று அவன் மொழிந்த போதில், எண் இல் வெம் சேனை யோடு வல் திறல் உரக கேது வலி அழிந்து உடைந்துபோக வென்றன் பேடியே; தன் மெய் நடுங்காமல் போரில் நின்று நின் சிறுவன் வெல்ல வல்லனோ நிருபர் ஏறே.]

**விளக்கம் :-** (உத்தரன் முன் பகைவர் வலி அழிந்ததுபோல் இச் சூதுபோரில் நீ அழிக) என்று அரசன் சொன்ன அளவில், (முனிவன் அவனை நோக்கி) நிருபர் ஏறே, வலிய போராற்றல் உடைய உரககேது (துரியோதனன்) எண் கடந்த கொடிய சேனை வெள்ளத்தோடு வலி கெட்டுப் போர் உடைந்து ஓடும்படி வென்றவன், பேடியே ஆவான்; உனது சிறுவன் தன் உடல் நடுக்கங் கொள்ளாமல் போர்க்களம் நின்று போர் வெல்லும் வல்லமை உடையவன் ஆவானோ? (ஆகான், என்றபடி)'', என்று கூறினான், — என்பது பொருள். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.

**121. பிருகந் நளையென் றோதும் பேடியைப் பேடி யென்று**
**கருதனீ யவனே முன்னங் காண்டவ மெரித்த காளை**
**ஒருதனித் தடம்பொற் றேரூர்ந் தும்பருக் காக வும்பர்**
**அரிகளை யரிதின் வென்றா னென்றன னந்த ணாளன்.**

[பிருகந்நளை என்று ஓதும் பேடியை பேடி என்று கருதல் நீ, அவனே முன்னம் காண்டவம் எரித்த காளை(பின்) ஒரு தனி தட பொன் தேர் ஊர்ந்து உம்பருக்காக, உம்பர் அரிகளை அரிதின் வென்றான், என்றனன், அந்தணாளன்.]

**விளக்கம் :-** அந்தணாளன் (அரசனை நோக்கி) ''பிருகந் நளை என்று அழைக்கப்படும் பேடியை பேடி என்று நீ எண்ணாதே; அவன்தான் முன்னம் (அக்கினிதேவனின் வேண்டு கோளுக்கு இசைந்து) காண்டவவனத்தை எரித்த மகா வீரனான

அருச்சுனனது, ஒரு தனித்த பெரிய பொன் தேர் செலுத்திச் சென்று தேவர்களுக்காக, அத் தேவர்களின் பகைவர்களாகிய அரிகளை (அசுரர்களை) அரிதின் வென்றான்'', என்று கூறினான். – என்பது பொருள். பேடியை ஆண்பாலால் கூறியது, ஆற்றலால் அவன் பேடி அல்லன், என்று குறிக்கும் கருத்தது.

**122. கோடியின் கோடி யான குருக்கள்வெஞ் சேனை தன்னை**
**ஓடியென் புதல்வன் றானே யொருதனிப் பொருது வென்று**
**நீடிய நிரையு மீட்டு மீண்டன னென்ன நீயப்**
**பேடியை விறல்கொண் டாடிப் பேசுதி பிரம மூர்த்தி.**

[கோடியின் கோடி ஆன குருக்கள் வெம் சேனை தன்னை ஓடி என் புதல்வன் தானே ஒரு தனி பொருது வென்று, நீடிய நிரையும் மீட்டு மீண்டனன் என்ன, நீ அ பேடியை விறல் கொண்டாடி பேசுதி, பிரம மூர்த்தி.]

**விளக்கம் :-** கோடியின் கோடி - கோடாகோடி, அதாவது மிகப்பல. ஓடி - (பகைவரை எதிர்க்க) ஓடிச் சென்று, விரைவாகச் சென்று, ஒரு தனி - துணை ஒன்றும் இல்லாமல், அதாவது தன்னந் தனியே. பிரமம்-ஞானம். பிரம மூர்த்தி-மெய்ஞானத்தின் வடிவம் போன்றவனே. (அறிவு மிக்கவனாக இருந்தும்) பேடியை விறல் கொண்டாடி பேசுதி-பேடியைப் பெருமையுடன் பாராட்டிப் பேசுகின்றாய்; இது தகுமோ! (என்றபடி). தானே, என்பதிலுள்ள **தான்,** தேற்றமும், ஏ பிரிநிலையும் ஆகும். தருமனோடு விராடன் மாறுபாடு கொண்டு பேசினான், என்க.

**123 புன்னவை யான மாற்றம் புகன்றன ரெனினுங் கேட்டாங்(கு)**
**இன்னவை நன்று நன்றென் றிதம்பட மொழிவ தல்லால்**
**மன்னவை யிருந்து நாளும் வழிபடு மாந்தர் மன்னர்**
**சொன்னவை மறுத்து மாறு சொல்வரோ சுருதி வல்லாய்.**

[புல் நவை ஆன மாற்றம் புகன்றனர் எனினும் கேட்டு ஆங்கு, இன்னவை நன்று நன்று என்று இதம் பட மொழிவது அல்லால், மன் அவை இருந்து நாளும் வழிபடும் மாந்தர், மன்னர் சொன்னவை மறுத்து மாறு சொல்வரோ, சுருதி வல்லாய்.]

**விளக்கம் :-** புல் நவை ஆன மாற்றம்-மிகவும் குற்றமுடைய சொற்கள். இதம் பட - மகிழ்ச்சி உண்டாகும்படி. மன்னனது சபையில் இருந்து பணிவுடன் நடக்கவேண்டிய மாந்தர், அவன் சொன்ன வார்த்தைகளை மறுத்து, அதற்கு மாறான வார்த்தை களைச் சொல்வரோ,—(சொல்ல மாட்டார்கள், என்றபடி) என்பது, ஈற்றடிகளின் பொருள். சுருதிவல்லாய், என்ற விளி, நீ வேத வித்தகனாய் இருந்தும், அரசரைச் சார்ந்து பிழைப்பவர்

நடந்துகொள்ளவேண்டிய முறை கடந்து பேசுகின்றாயே, என்று சடிந்து கூறியபடி. புல் நவை, ஒருபொருட் பன்மொழி. சொன்னவை நன்று, என்றது, பன்மையில் ஒருமை வந்த வழு.

**124. கன்னவு மிடங்கொ டாம லெதிருற விருடி மீண்டும்**
**கன்னன்விற் றுரோணன் மைந்தன் காங்கெயன் முதலி**
**னோரை**
**மன்னவ வெல்ல நின்சேய் வல்லனோ வந்து சொன்னால்**
**பின்னைநீ தெளிதி யென்றான் பீடுடைப் பேடி தன்னை.**

[என்னவும் இடம் கொடாமல் எதிர் உற இருடி மீண்டும், கன்னன், வில் துரோணன், மைந்தன், காங்கெயன் முதலி னோரை, மன்னவ, வெல்ல நின் சேய் வல்லனோ? வந்து சொன்னால், பின்னை நீ தெளிதி என்றான், பீடு உடை பேடி தன்னை.]

**விளக்கம் :-** மைந்தன் - அசுவத்தாமன். காங்கெயன் - கங்கையின் மகனான வீடுமன். வந்து சொன்னால் பின்னை பீடு உடை பேடி தன்னை நீ தெளிதி என்றான் - (உனது மகன்) வந்து சொன்னால், பின்னர் பெருமை உடைய பேடியை (அவன் எத்தகையான் என்பதை) நீ அறிந்துகொள்வாய், என்று இருடி (தருமன்) கூறினான். பேடி தன்னைத் தெளிதி, என்றது, பேடி யின் பெருமையையும், போர் வென்றவன் அவனே என்பதையும் சந்தேகமறத் தெளிந்துகொள்வாய், என்ற பொருளது.

**125. கொடுவிலாண் மையினா லின்றென் குமரன்வென்**
**றிடவுஞ் சற்றும்**
**நடுவிலா தவரிற் பல்கா லென்கொனீ நவில்வ தென்னாக்**
**கடுவிலா டரவிற் பொங்கிக் கவற்றினா லெறிந்து நக்கான்**
**வடுவிலா முனியை மன்னன் வடுப்படு மாறு மன்னோ.**

[கொடு வில் ஆண்மையினால் இன்று என் குமரன் வென்றிட வும், சற்றும் நடு இலாதவரின் பல்கால் என் கொல் நீ நவில்வது என்னா, கடு இல் ஆடு அரவின் பொங்கி, கவற்றினால் எறிந்து நக்கான், வடு இலா முனியை மன்னன் வடு படும் ஆறு மன்னோ.]

**விளக்கம் :-** நடுஇலாதவர் - பக்ஷபாதம் உடையவர், பல் கால் நவில்வது - பலமுறை (என் மகனை இகழ்ந்தும் பேடியைப் புகழ்ந்தும்) பேசுவது கடு இல் ஆடு அரவின் பொங்கி-விஷத்தின் இருப்பிடமான படம் எடுத்து ஆடும் பாம்பைப் போல் சீறி. கவறு- சூதாட்டக்காய். வடுஇலா முனி - குற்றம் இல்லாத முனிவன். வடு - காயத்தால் உண்டாகும் தழும்பு, பேடியைப் பாராட்டிப் பேசிய முனிவன் மேல் கோபங்கொண்டு, அரசன் கவற்றால் முனிவனை அடித்து அவனது நெற்றியில் காயம் உண்டாக்கி னான்,—என்பதாம். கடு இல் - கடுவுக்கு இல் (இடம்).

## முனிவன் நெற்றியில் குருதி கசிதல்

**126. எற்றிய கவறு நெற்றி யெதிருற விருந்த கங்கன்**
**நெற்றியிற் சென்று வாச நிறைத்தகுங் குமத்தின் சேற்றால்**
**பற்றிய திலகம் போலப் படுதலும் பாங்கர் நின்ற**
**வற்றிய வோடை யன்ன வனப்பினாள் மருண்டு கண்டாள்.**

[எற்றிய கவறு நெற்றி, எதிர் உற இருந்த கங்கன் நெற்றியில் சென்று நெற்றி (மோதி) வாசம் நிறைந்த குங்குமத்தின் சேற்றால் பற்றிய திலகம்போல படுதலும், பாங்கர் நின்ற வற்றிய ஓடை அன்ன வனப்பினாள் மருண்டு கண்டாள்.]

**விளக்கம் :-** எற்றிய கவறு எதிர்உற இருந்த கங்கன் நெற்றியில் சென்று நெற்றி (மோதி) வாசம் நிறைந்த குங்குமத்தின் சேற்றால் பற்றிய திலகம்போல படுதலும்...கண்டு மருண்டாள், என்பது அன்வயம். மோதி, அல்லது தாக்கி, என்ற பொருளுடைய நெற்றி, எச்ச வினையாகவும், நெற்றி என்ற உறுப்பைக் குறிக்கும் பெயர்ச்சொல்லாகவும் வந்துளது. படுதலும் - காயம்படுத்தலும், எற்றிய கவறு தருமனது நெற்றியில் பட்டு இரத்தம் கசியச் செய்தலும், அதை, அயலிருந்த வண்ணமகள் கண்டு மருண்டாள்,— என்பதாம். மருண்டு கண்டாள் என்பதை கண்டு மருண்டாள், என்று கூட்டுக. பெண்மைக்குரிய ஆபரணங்கள் இல்லாமை பற்றி, வற்றிய (நீர் வறண்ட) ஓடை அன்னாள், எனப்பட்டாள். வனப்பு - இயற்கை அழகு.

**127. பல்கிய கிளையுந் தேசும் பார்த்திவன் வாழ்வுந் தாங்கள்**
**அல்கிய நகரு மின்றே யழியுமென் றஞ்சி யேகொல்**
**நல்கிய நேய மேகொ னயனநீர் மல்க மல்க**
**மல்கிய குருதி தன்னை மாற்றினாள் வண்ண மாதே.**

[பல்கிய கிளையும் தேசும் பார்த்திவன் வாழ்வும், தாங்கள் அல்கிய நகரும் இன்றே அழியும் என்று அஞ்சியேகொல், நல்கிய நேயமே கொல், நயனம் நீர் மல்க மல்க, மல்கிய குருதி தன்னை மாற்றினாள் வண்ணமாது, ஏ.]

**விளக்கம் :-** பல்கிய கிளை-பெருகி விரிந்த சுற்றம். தேசு - பிரகாசம், புகழ். அல்கிய - தாங்கள் (அஜ்ஞாதவாசம் செய்யத்) தங்கியிருந்த. குணங்களால் உயர்ந்த தருமனது இரத்தம் விராடனது மண்ணில் விழுந்தால், அவன் கிளையோடு அழிய நேருமே எனறு அஞ்சியோ, அல்லது தருமன்மீது வைத்துள்ள அன்பினாலோ, வண்ணமகள் இரத்தம் மண்ணில் சிந்தாமல் தன் சேலையால் துடைத்தாள், — என்பதாம். யாராவது தன் தமையனது இரத்தம் சிந்தக் காரணமாயிருந்தால், அவரை வேரோடு களைவேன், என்ற சபதம் உடையவன் விசயன். மல்க மல்க—மிகுதியாகப் பெருக, (அடுக்கு'மிகு திப் பொருளது). நல்கிய நேயம் - உதவிய அன்பு, அதாவது தருமனிடம் வைத்த அன்பு,

**128. கண்ணினீர் மல்க வண்ணக் காரிகை கலையா லந்த**
**வண்ணமா முனிவன் சோரி மாற்றிய காலை யையுற்று**
**எண்ணமுஞ் செயலும் வேறா யென்செய்தோ மென் செய்**
**தோமென்(று)**
**அண்ணலுந் தன்னை நொந்தாங் கருஞ்சினம் பாவி**
**யென்றான்.**

[கண்ணின் நீர் மல்க வண்ணம் காரிகை கலையால் அந்த வண்ணம் மா முனிவன் சோரி மாற்றிய காலை ஐயுற்று, எண்ணமும் செயலும் வேறாய் என் செய்தோம், என் செய்தோம் என்று, அண்ணலும் தன்னை நொந்து, ஆங்கு அருஞ்சினம் பாவி என்றான்.]

**விளக்கம் :-** அந்த வண்ணம் - அவ்வாறாக. அண்ணல் - விராடன். முனிவனது நெற்றியில் வழிந்த இரத்தத்தை வண்ண மகள் கலையால் (சேலையால்) துடைத்ததை விராடன் கண்டு ஐயுற்று, என்ன தவறான காரியத்தைச் செய்துவிட்டோம், என்று தன்னை நொந்துகொண்டு, அடக்குதற்கு அரிய சினம் கேடுடைய தாகும், என்று கூறிக்கொண்டான், —என்பதாம். ''எண்ணமும் செயலும் வேறாய்'', என்றது, ''தான் முனிவனிடம் வைத்திருந்த மதிப்பும், இப்பொழுது கோபத்தினால் கவற்றுக் காயால் அடித்துக் காயம் உண்டாக்கிய செயலும் ஒன்றோடொன்று வேறு பட்டதாகி'', என்ற பொருளது. பொசிந்த குருதியை வண்ண மகள் துடைத்தது கண்டு, ''இவர்கள் உண்மையில் யாவரோ?'' என்று சங்கித்தான், என்க.

## உத்தரன் நகர் மீளல்

**129. ஆயிடை யத்தக் குன்றுக் காதப னணிய னாகச்**
**சேயிடை யெதிர்கொள் கொற்றச் சேனைமன் னர்கள் சூழ**
**வீயிடை வரிவண் டார்க்கும் வியன்பெருங் காவு நீங்கிப்**
**போயிடை நெருங்கி வேந்தன் புதல்வனப் புரத்தைச்**
**சேர்ந்தான்.**

[அ இடை அத்தம் குன்றுக்கு ஆதபன் அணியன் ஆக, சேய் இடை எதிர்கொள் கொற்றம் சேனை மன்னர்கள் சூழ, வீ இடை வரி வண்டு ஆர்க்கும் வியன் பெருங்காவு நீங்கி, போய் இடை நெருங்கி வேந்தன் புதல்வன் அ புரத்தை சேர்ந்தான்.]

**விளக்கம் :-** ஆயிடை ஆதபன் அத்தம் குன்றுக்கு அணியன் ஆக - அப்பொழுது சூரியன் அஸ்தமன கிரிக்குச் சமீபம் வந்தா னாக, அதாவது அஸ்தமன வேளையில். வெகு தூரம் வந்து தன்னை அழைத்துச் செல்லும் வெற்றியை உடைய சேனைத் தலைவர் தன்னைச் சூழ்ந்துவர,—என்பது இரண்டாவது அடியின் பொருள். வீ - புஷ்பம். இடை நெருங்கி (வேந்தன் புதல்வன்) அ புரத்தை சேர்ந்தான்-(நகரின்) இடத்தை நெருங்கி, (உத்தரன்)

அந்த விராட நகரை அடைந்தான். எதிர்கொள்ளச் சென்ற சேனை, தென்புறம் வந்த பகையை வென்று நிரை மீட்ட சேனை யாதல் பற்றிக் 'கொற்றச் சேனை', என்றார், வரிவண்டு, என்பதற்கு இசைபாடும் வண்டு, என்றும் பொருள் கொள்ளலாம், (வரி - பாட்டு).

**130.** **பரந்துவெம் படைகண் மின்னப் பல்லியம் பணில மார்ப்பச்**
**சுரந்துமும் மதமும் பாயுந் துதிக்கைவா ரணங்கள் சூழப்**
**புரந்தர னகரிற் காளப் புயல்வரு மாறு போல**
**உரந்தரு பேடி தன்றே ரூரவே வீதி யுற்றான்.**

[பரந்து வெம் படைகள் மின்ன, பல் இயம் பணிலம் ஆர்ப்ப, சுரந்து மும் மதமும் பாயும் துதிக்கை வாரணங்கள் சூழ, புரந்தரன் நகரில் காளம் புயல் வரும் ஆறுபோல், உரம் தரு பேடி தன் தேர் ஊரவே வீதி உற்றான்.]

**விளக்கம் :-** கொடிய ஆயுதங்கள் எங்கும் வியாபித்து மின்னவும், பல வாத்தியங்களும் சங்கமும் ஒலிக்கவும், மூன்று மதமும் பெருகப்பெற்ற யானைகள் சூழ்ந்து வரவும், தேவேந்திரனது புரியில் காள மேகம் போன்ற உபேந்திரன் (தேவர் பகை வென்று) வருவதுபோல், (உத்தரனுக்கு) வெற்றியை உதவிய பேடி தேர் செலுத்த நகரின் வீதியை (உத்தரன்) அடைந்தான், என்பது பொருள். உரம் - வெற்றி.

**131.** **வென்றுமீள் குமரன் றன்னை வீதிக டோறு மாதர்**
**அன்றெதிர் கொண்டு நன்னீ ராசன மெடுத்து வாழ்த்தக்**
**குன்றெறிந் தவனைக் கண்ட குன்றவில் லியைப்போன் முந்தச்**
**சென்றவன் பிதாவுந் தேர்மேற் சிக்கெனத் தழீஇக்கொண் டானே.**

[வென்று மீள் குமரன் தன்னை வீதிகள் தோறும் மாதர் அன்று எதிர்கொண்டு நல் நீராசனம் எடுத்து வாழ்த்த, குன்று எறிந்தவனை கண்ட குன்றம் வில்லியை போல், முந்த சென்று அவன் பிதாவும் தேர்மேல் சிக்கென தழீஇக் கொண்டான், ஏ,]

**விளக்கம் -:** (நீராசனம் - (நீராஜநம்) மங்கள ஆலத்தி. சுண்ணாம்பு கலந்த மஞ்சள் நீரை ஒரு தட்டில் இட்டு, மங்களகரமாகப் பெரியோர், வீரர் முன் சுழற்றுதல், ஆரத்தி எடுத்தல் ஆகும். குன்று எறிந்தவன் - கிரௌஞ்சகிரியை வேலால் பிளந்த முருகக் கடவுள். குன்ற வில்லி - திரிபுரதகனம் செய்கையில் மேருமலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான். அவன் பிதாவும் முந்த தேர்மேல் சென்று சிக்கென தழீஇக் கொண்டான் - விரைவாக உத்தரனது பிதாவும் தேர்மேல் சென்று (உத்தரனை) மார்போடு இறுகத் தழுவிக்கொண்டான்.

உத்தரனுக்கு முருகக் கடவுளும், விராடனுக்குச் சிவபெருமானும் உவமை. கிரௌஞ்சகிரியைப் பிளந்து சூரபத்மாதிகளை அழித்து வந்த முருகனைக் கண்ட சிவபெருமானைப் போல் விராடனும் நிரைமீட்டு வந்த மகனைக் கண்டு மகிழ்ந்து அவனை இறுகத் தழுவிக்கொண்டான், என்பதாம். முருகன் குன்று எறிந்த கதையைக் கந்தபுராணத்தில் காண்க,

**132. தழுவிய வரசன் றாளிற் றலையுற வீழ்ந்து வேந்தர்**
**குழுவிடைக் கொண்டு போகக் கோயிலிற் புகுந்த பின்னர்ப்**
**பழுதறு வாய்மை வேத பண்டிதன் பாதம் போற்றிச்**
**செழுமலர் வதன நோக்கித் திருநுதல் வடுவுங் கண்டான்.**

[தழுவிய அரசன் தாளில் தலை உற வீழ்ந்து, வேந்தர் குழு இடை கொண்டுபோக, கோயில் புகுந்த பின்னர், பழுது அறு வாய்மை வேத பண்டிதன் பாதம் போற்றி, செழு மலர் வதனம் நோக்கி திரு நுதல் வடுவும் கண்டான்.]

**விளக்கம் :-** வேந்தர் குழு இடைகொண்டு போக - அரசர்களின் கூட்டத்திற்கு இடையே (மகனை அரசன்) அழைத்துச் செல்ல. கோயில் - அரண்மனை. பழுதறு வாய்மை வேத பண்டிதன் - குற்றமில்லாத சத்ய வசனங்களைப் பேசுதலை உடைய வேத வித்தகனான முனிவன் (தருமன்). தன்னைத் தழுவிய அரசனை வணங்கி, அரசர் கூட்டங்களினிடையே தன்னைப் பிதா அழைத்துச் செல்லக் கோயிலை அடைந்த தனையன் முனிவனை வணங்கி, அவனது நெற்றியில் வடுவுங்கண்டான்,— என்பதாம். செழுமலர், என்றது மலர்களில் சிறந்ததான **தாமரையைக்** குறிக்கும். வதனம் - (தாமரை மலர் போன்ற) முகம்.

**133. திகழ்ந்தநின் னுதலி னூறு செய்தவர் யார்கொ லென்ன**
**நிகழ்ந்தமை தந்தை கூற நெஞ்சினாற் றந்தை தன்னை**
**இகழ்ந்தமை நுவலும் போதைக் கெல்லையின் றிவனைப் போல**
**அகழ்ந்தநீ ராடை ஞாலத் தார்கொலோ வமைவின் மிக்கோர்.**

[திகழ்ந்த நின் நுதலின் ஊறு செய்தவர் யார் கொல் ? என்ன, நிகழ்ந்தமை தந்தை கூற, நெஞ்சினால் தந்தை தன்னை இகழ்ந்தமை நுவலும் போதைக்கு எல்லை இன்று ; இவனை போல அகழ்ந்த நீர் ஆடை ஞாலத்து ஆர்கொலோ அமைவின் மிக்கோர்.]

**விளக்கம் :-** திகழ்ந்த நின் நுதலின் ஊறு - விளங்குகின்ற உனது நெற்றியினிடத்து வடு, (காயம்). நுவலும் போதைக்கு

இகழ்ந்தமை எல்லை இன்று - இகழ்ந்ததைச் சொல்லும் அளவிற்கு ஓர் எல்லை இல்லை ; (அதாவது மிகவும் தந்தையை நெஞ்சினால் வெறுத்தான் என்றபடி). அகழ்ந்த நீர் ஆடை ஞாலம் - சகர புத்திரர்களால் தோண்டப் பெற்ற கடலை ஆடை யாக உடைய இவ்வுலகம். அமைவு - பொறுமை. முனிவன் நெற்றியில் வடுவைத் தான் உண்டாக்கியதைத் தந்தை சொல்ல, உத்தரன் தந்தையை நெஞ்சினால் வெறுத்து, இவனைப் போல் பொறுமையுடையவர் இவ்வுலகத்தில் வேறு யார் இருப்பர்? என்றான், என்பதாம். தந்தையைச் சொல்லால் வெறுத்தல் கூடாமையின், நெஞ்சினால் வெறுத்தான், என்றார்.

**134. செறுப்பது பெருமை யன்று சிறியவர் செய்த தீமை**
**பொறுப்பதே பெருமை யென்று பூசுரன் பாதம் போற்றி**
**வெறுப்பது விளைத்த தாதை வீழ்ந்தபின் தானும் வீழ்ந்து**
**மறுப்பது புரியா ஞானி மனத்துனி யகற்றி னானே.**

[செறுப்பது பெருமை அன்று, சிறியவர் செய்த தீமை பொறுப்பதே பெருமை என்று பூசுரன் பாதம் போற்றி, வெறுப்பது விளைத்த தாதை வீழ்ந்தபின் தானும் வீழ்ந்து, மறுப்பது புரியா ஞானி மனம் துனி அகற்றினான், ஏ,]

**விளக்கம் :-** செறுப்பது - கோபிப்பது. சிறியவர் செய்த தீங்கை செறுப்பது பெருமை அன்று, பொறுப்பதே பெருமை, என்று சொல்லி, வெறுக்கத்தக்க காரியத்தைச் செய்த தந்தை முனிவனது பாதங்களைப் போற்றி வணங்கியபின், தானும் (உத்தரனும்) விழுந்து வணங்கி, (சரணம் அடைந்தார் பிழை பொறுத்தலை) மறுத்தல் செய்யாத ஞானியான முனிவனது மனத்து அடங்கிக் கிடந்த சிறு கோபத்தையும் போக்கினான,— என்பது பொருள்.

சுதேட்டிணை மகிழ்ச்சி

**135. ஆன்றமைந் தடங்கு கேள்வி யண்ணலு மவனைப் பெற்ற**
**தோன்றலும் பின்னர்ச் சென்று சுதேட்டிணை கோயி**
**லெய்த**
**ஈன்றவப் பொழுதி னோகை யெண்மடங் காக விஞ்சச்**
**சான்றதன் மகனைக் கண்டு மகிழ்ந்தன டவத்தின்**
**மிக்காள்.**

[ஆன்று அமைந்து அடங்கு கேள்வி அண்ணலும், அவனை பெற்ற தோன்றலும் பின்னர் சென்று சுதேட்டிணை கோயில் எய்த, ஈன்ற அ பொழுதின் ஓகை எண் மடங்கு ஆக விஞ்ச, சான்ற தன் மகனை கண்டு மகிழ்ந்தனள் தவத்தின் மிக்காள்.]

**விளக்கம் :-** ஆன்று அமைந்து அடங்கு கேள்வி அண்ணல் - நிறைவு பொருந்துகின்ற அடக்கம் உடைமைக்கு ஆதாரமாகும்

நூல் கேள்விகளை உடைய உத்தரன். பெற்ற தோன்றல் - விராடன். ஓகை - (மரூஉ) உவகை. எண் மடங்கு ஆக - மிக அதிகமாக. சான்ற தன் மகன் - சிறந்த தனது மகன். தவத்தின் மிக்காள் - நல்வினை மிக உடைய சுதேட்டிணை. மகனைக் கண்ட தாய் ஈன்றபொழுதினும் அவனை இப்பொழுது பெரிது உவந்தாள், என்க,

**136. ஓடியுத் தரன்றே ரூர வொருமுனை யாகத் தன்னை
நாடியுத் தரிக்க மாட்டா நராதிபர் பதாகைத் தூசும்
கோடியுத் தரியப் பட்டுங் குழமகன் றனக்கு நல்கிப்
பேடியுத் தரைதன் னோடும் பெற்றதாய் பின்பு நின்றாள்.**

[ஓடி, உத்தரன் தேர் ஊர ஒரு முனை ஆக தன்னை நாடி உத்தரிக்க மாட்டா நராதிபர் (நர அதிபர்) பதாகை தூசும், கோடி உத்தரியம் பட்டும் குழமகன் தனக்கு நல்கி, பேடி உத்தரை தன்னோடும் பெற்ற தாய் பின்பு நின்றாள்.]

**விளக்கம் :-** ஓடி-(முதலில் பகைவரைக் கண்டு பயந்து) ஓடி, தேர் ஊர - (அதன்பின் பேடியின் மொழிகளால் தேறி) தேரைச் செலுத்த. ஒரு முனை ஆக தன்னை நாடி - எல்லோரும் ஒருமுகமாகத் தன்னை (விசயனை) நோக்கி எதிர்த்து வந்து. உத்தரிக்க மாட்டாமல் - எதிர் நிற்க முடியாமல். நராதிபர் - துரியோதனாதியர். பதாகை தூசு - கொடிச்சீலை. உத்தரியம் பட்டு - பட்டுமேல் வஸ்திரம். கோடி, என்பது மிகப் பல என்ற பொருளது. குழமகன் - இளமைத் தோற்றமுடைய மரப்பாவை. உத்தரன் தேர் செலுத்தப் பகை வென்ற பேடிதான் களைந்த, தோல்வி யுற்ற அரசர்களின் கொடிச்சீலைகளையும் அங்கவஸ்திரங்களையும், மரப்பாவைக்கு உடுத்தி மகிழும் பொருட்டு உத்தரைக்குக் கொடுத்து, அரசியின் பின்புறத்தே ஒதுங்கி நின்றாள்,—என்பதாம்.

உத்தரன் தந்தைக்கு உண்மை உரைத்தல்

**137. தந்தையுந் தானு மாங்குத் தனித்திருந் தடைய லாரை
முந்திய வமரிற் சென்று முனைந்துபோர் விளைத்த வாறும்
வந்தவர் சாய்ந்த வாறு மணிநிரை மீட்ட வாறும்
சுந்தர கிரிகள் போலுந் தோளினான் தோன்றச்
சொல்வான்.**

[தந்தையும் தானும் ஆங்கு தனித்து இருந்து அடையலாரை முந்திய அமரில் சென்று முனைந்து போர் விளைத்த ஆறும், வந்தவர் சாய்ந்த ஆறும், மணி நிரை மீட்ட ஆறும், சுந்தர கிரிகள் போலும் தோளினான் தோன்ற சொல்வான்.]

**விளக்கம் :-** முந்திய - முற்பட்ட, முனைந்த. மணி நிரை - மணிகள் கட்டப்பெற்ற பசுக்கள். சுந்தர கிரிகள் போலும்

தோளினான்-உத்தரன். உத்தரன் ஏகாந்தத்தில் தந்தையினிடம் வடதிசையில் நிகழ்ந்தவற்றைக் கூறலானான், என்க, (தனித்து) இருந்து - இருக்க, இருக்கும்பொழுது (எச்சத்திரிபு).

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

**138.** **உருப்பசிவெஞ் சாபத்தாற் பேடி யான**
**வுருவமொழித் தருச்சுனன்ற னுருவங் கொண்டு**
**பொருப்பனைய கவித்துவசத் தேர்மேல் வண்ணப்**
**பொருசிலைதன் கரத்தேந்திப் புகுந்த போது**
**செருப்புரவி யிரவியெதிர் திமிரம் போலத்**
**திறலரியேற் றெதிர்கரியின் றிறங்கள் போல**
**நெருப்பெதிர்ந்த பதங்கமபோ லழிந்தா ரையா**
**நிரைபோக்கி யணியாகி நின்ற வேந்தர்.**

[உருப்பசி வெம் சாபத்தால் பேடி ஆன உருவம் ஒழித்து, அருச்சுனன் தன் உருவம் கொண்டு, பொருப்பு அனைய கவி துவசம் தேர்மேல் வண்ணம் பொரு சிலை தன் கரத்து ஏந்தி புகுந்தபோது, செரு புரவி இரவி எதிர் திமிரம் போல, திறல் அரி ஏறு எதிர் கரியின் திறங்கள் போல, நெருப்பு எதிர்ந்த பதங்கம் போல் அழிந்தார் ஐயா, நிரை போக்கி அணி ஆகி நின்ற வேந்தர்.]

**விளக்கம் :-** கவி-குரங்கு, அனுமான். தேர்மேல்-தேரின்மேல் ஏறிக்கொண்டு. செரு புரவி இரவி - போர் செய்ய வல்ல குதிரை பூட்டிய தேரை உடைய சூரியன். திமிரம் - இருள். அரி ஏறு - ஆண் சிங்கம். கரியின் திறங்கள் - யானைக் கூட்டங்கள். பதங்கம்- விட்டில் பூச்சி. அணியாக நின்ற வேந்தர், நிரை போக்கி அழிந் தார் ஐயா - அணி வகுத்து நின்ற பகை வேந்தர், பசுக்களைப் போக விட்டுவிட்டு அழிந்தார் ஐயா. ஊர்வசியின் சாபத்தால் பேடியான அருச்சுனன், அவ்வுருவத்தை ஒழித்து, தனது நிஜ வடிவங்கொண்டு, குரங்குக் கொடியைக்கொண்ட தனது தேரில் ஏறிக் களம் புகுந்தபோது, அணி வகுத்து நின்ற துரியோதனாதியர் அனைவரும் சூரியனைக் கண்ட இருள் போலவும், ஆண் சிங்கத்தைக் கண்ட யானைக் கூட்டங்கள் போலவும், தீபத்தை எதிர்ந்த விட்டில் பூச்சி போலவும், கவர்ந்த நிரையை விட்டுவிட்டு வலி அழிந்து ஓடினார்,—என்பதாம்,

**139.** **அருகுவிடா துனக்குயிர்நண் பாகி நீதி**
**யறமுரைப்போ னறத்தின்மக னாகவேண்டும்.**
**மருமலர்மான் மதமுந்து றந்த கூத்தல்**
**வண்ணமகள் பாஞ்சாலன் மகளே போலும்**

**வெருவருமற் போர்கடந்த மடையன் தன்னை**
**வீமனென வயிர்க்கின்றேன் வேந்தே மற்றை**
**இருவரினு மாவலா னகுலன் றானே**
**யின்னிரையின் காவலா னிளைய கோவே.**

[அருகு விடாது உனக்கு உயிர் நண்பு ஆகி நீதி அறம் உரைப் போன் அறத்தின் மகன் ஆகவேண்டும், மருமலர் மான்மதமும் துறந்த கூந்தல் வண்ணமகள் பாஞ்சாலன் மகளே போலும், வெருவரும் மல்போர் கடந்த மடையன் நன்னை வீமன் என்று அயிர்க்கின்றேன், வேந்தே, மற்றை இருவரினும் மாவலான் நகுலன் தானே, இன் நிரையின் காவலான் இளைய கோவே.]

**விளக்கம் :-** உனக்கு உயிர் நண்பனாய் அருகு இருந்து கொண்டு நீதியையும் தருமத்தையும் எடுத்துக்கூறி வருகின்ற முனிவன், தருமபுத்திரன் ஆகவேண்டும்; மணமுள்ள மலர்களை யும் கஸ்தூரிச் சாந்தையும் துறந்த கூந்தலை உடைய வண்ணமகள் பாஞ்சாலன் மகளான திரௌபதியே போலும்; அஞ்சுதற்குரிய மல்போரில் நம் நகர் வந்த மாமல்லனை வென்ற சமையற்காரனை வீமன் என்று நினைக்கின்றேன்; மற்றை இருவரிலும், துரகத் தொழில் வல்லான் நகுலனே ஆகவேண்டும், ஆநிரை காப்பவன் அவனுக்கு இளையவனான சகாதேவனே ஆகவேண்டும்,—என்பது பொருள். நண்பு - (ஆகுபெயர்) நண்பன். மான்மதம் - மயிர்ச் சாந்து. ஆக வேண்டும் என்றும், போலும் என்றும், அயிர்க் கின்றேன் என்றும், உத்தரன் கூறியது, அவன் ஊகித்துக் கூறிய தைக் குறிக்கும்.

**140. ஆளையே யடுங்களிற்றார் தம்மை யாரு**
**மறியாம லிந்நகர்க்க ணடங்கி நின்றார்**
**நாளையே வெளிப்படுவர் நெருந லேதந்**
**நாளுள்ள கழிந்தனவா னயந்து கேண்மோ**
**வேளையே யனையவெழிற் றோகை வாகை**
**வேளையேய யனையவிறல் விசய னென்னுங்**
**காளையே யடியேனுக் கிளைய காதற்**
**கன்னிகைக்கு வரனென்று கருது வாயே.**

[ஆளையே அடும் களிற்றார் தம்மை யாரும் அறியாமல் இ நகர்க்கண் அடங்கி நின்றார், நாளையே வெளிப்படுவர், நெருநலே தம் நாள் உள்ள கழிந்தன (ஆல்), நயந்து கேண்மோ: வேளையே அனைய எழில் தோகை வாகை வேளையே அனைய விறல் விசயன் என்னும் காளையே அடியேனுக்கு இளைய காதல் கன்னிகைக்கு வரன் என்று கருதுவாய் ஏ.]

**விளக்கம் :-** ஆளையே அடும் களிற்றார்-பாகனையே தாக்கும் மதயானை போன்ற ஆற்றலுடைய பாண்டவர். அடங்கி நின்றார் - தம்மை மறைத்துக்கொண்டு (நம் நகரில்) தங்கி

யிருந்தார். நென்னலே நாள் உள்ள கழிந்தன - நேற்றே அவர்கள் கழிக்கவேண்டியதாய் எஞ்சியிருந்த நாட்கள் கழிந்தன. மன்மத னையே ஒத்த, அழகிய மயிலை வாகனமாகவும் வெற்றி மாலை யையும் உடைய முருகக் கடவுளைப் போன்ற விறல் விசயன் என்னும் காளையே அடியேனது அன்பிற்குரிய தங்கையாகிய கன்னிக்குரிய கணவன், என்று கருதுவாயாக,—என்பது ஈற்றடி களின் பொருள். நயந்து கேண்மோ - விரும்பிக் கேட்பாயாக. ஆளையே, வேளையே, என்ற ஏகாரங்கள் தேற்றம். வாகை, இருமடி ஆகுபெயராய், வாகைப் பூமாலையை உணர்த்தும்.

**141. மகனிவைமற் றுரைத்தளவிற் றாதை கேட்டு**
**மன நடுங்கி நெகிழ்ச்சியுடன் மகிழ்ச்சி கூர்ந்தான்**
**பகலமரி லேறியமெய் பராக மாறப்**
**பகலோனும் புனல்படிவான் பரவை சேர்ந்தான்**
**தகவுடைய பாண்டவரும் வண்ண மாதுந்**
**தனித்தெண்ணிப் பரகாய சரிதர் போலப்**
**புகலரிய பழையதம வடிவங் கொண்டார்**
**போனபக லவனுதயப் பொருப்பின் மீண்டான்.**

[மகன் இவை மற்று உரைத்த அளவில் தாதை கேட்டு மனம் நடுங்கி நெகிழ்ச்சியுடன் மகிழ்ச்சி கூர்ந்தான், பகல் அமரில் ஏறிய மெய் பராகம் மாற பகலோனும் புனல் படிவான் பரவை சேர்ந்தான்; தகவு உடைய பாண்டவரும் வண்ணமாதும் தனித்து எண்ணி பரகாய சரிதர்போல, புகல் அரிய பழைய தம் வடிவம் கொண்டார்; போன பகலவன் உதயம் பொருப்பில் மீண்டான்.]

**விளக்கம் :-** மகன் சொன்னதை கேட்டுத் தாதை நடுங்கி, அதன்பின் மனங் குழைந்து மகிழ்ச்சி மிகப் பெற்றவனானான், என்பது முதலடியின் பொருள். பாண்டவரைத் தனது பரிவாரத் தினராகக் கொண்டதையும், தருமனைக் கவற்றால் அடித்து வடு உண்டாக்கியதையும் எண்ணியதின் பயன் நடுக்கம். பாண்டவர்பால் உள்ள நேயம் மன நெகிழ்ச்சிக்கு ஆதாரம். அம் மேன்மக்கள் தன்னாட்டில் ஓராண்டு தங்குவதற்கான தனது நல்வினையை எண்ணியதின் விளைவு மகிழ்ச்சி. பகலில் நிகழ்ந்த போரினால் எழுந்து தன் மேல் படிந்த புழுதியைப் போக்கிக் கொள்வதற்குப் பகலோன் (சூரியன்) நீராடும் பொருட்டுப் பரவை (மேலைக்கடலை) அடைந்தான், என்பது இரண்டாவது அடியின் பொருள். இது, தற்குறிப்பேற்ற அணியாகும். தகவுடைய பாண்டவர் - பெருமையால் சிறந்த பாண்டவர். தனித்து எண்ணி - ஒவ்வொருவரும் தனியே கடவநாள் கழிந்ததை நினைத்து, பரகாயப் பிரவேசர் - தமது சரீரத்தைவிட்டுப் பிறர் சரீரத்தில் புகுந்து இருந்து, பின் தமது சரீரத்தை மீண்டும் அடையும் வல்லமை உடையவர். (அவரைப்போல்) பாண்டவர் மேற்கொண்ட வேடத்தை விட்டுவிட்டு, அவர் தமது சிறந்த

பழைய உண்மை உருவத்தைப் பெற்றாராயினர். (அப்பொழுது) மறைந்த சூரியனும் உதயமானான், என்பது ஈற்றடிகளின் பொருள். பரகாயப் பிரவேசத்தைக் கூடுவிட்டுக் கூடு பாய்தல், என்பர். பராகம் - புழுதி,

**நிரைமீட்சிச் சருக்கம் முற்றும்.**

# 5. வெளிப்பாட்டுச் சருக்கம்

பாண்டவர் அஜ்ஞாதவாசம் செய்ய வேண்டிய ஓராண்டைக் கழித்து வெளிப்பட்டதைக் கூறும் சருக்கம் இது. வெளிப்பட்ட பாண்டவர் தமது வெளிப்பாட்டைத் தூதர் மூலம் தம்பால் நேய முடைய வேந்தர்களுக்குத் தெரிவிப்பதும், உத்தரையை விசயன் தன் மகனுக்கு மணங் கொள்வதும், கண்ணன் விராட நகரம் வருவதும், விராடன் தனது மூத்த குமாரனாகிய சிவேதன் என்ப வனைப் பெற்று மனம் மகிழ்வதும், பின்னர் **உபலாவியம்** என்ற நகரைப் பாண்டவர் அடைந்து இனிச் செய்யவேண்டியதைப்பற்றி ஆலோசிப்பதுமாகியவற்றை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

## கடவுள் வாழ்த்து

### கலிவிருத்தம்

**1. எக்கடலு மெக்கிரியு மெவ்வுலகு முலகில்
தக்கபல யோனிகள்ச ராசரம னைத்தும்
மிக்கவிதி யால்விதிசெய் விதியினைவி திக்கும்
செக்கமல நாபிமுகில் சேவடிது திப்பாம்.**

[எ கடலும், எ கிரியும், எ உலகும், உலகில் தக்க பல யோனி கள் சராசரம் அனைத்தும், மிக்க விதியால் விதி செய் விதியினை விதிக்கும் செக்கமலம் (செங்கமலம்) நாபி முகில் சேவடி துதிப்பாம்.]

**விளக்கம் :-** எல்லாக் கடல்களையும், எல்லா மலைகளையும், எல்லா உலகத்தையும், உலகில் நிலைத்திருக்கின்ற பலவகைப்பட்ட பிறவிகளைச் சேர்ந்த சர அசரப் பொருள்கள் எல்லாவற்றையும் மிகுந்த வலிமை உடைய விதிக்கு ஏற்ப விதிக்கும் (சிருஷ்டிக்கும்) விதியினை (பிரும்மதேவனை) விதிக்கும் (சிருஷ்டிக்கவல்ல) செந் தாமரையாகிய உந்தியை உடைய முகில் வண்ணனான திருமா லினது செய்ய திருவடிகளைப் போற்றுவோம், என்பது பொருள். தக்க - நிலைக்க, இருக்க ; எனவே நிலைத்திருக்கின்ற. யோனி - பிறவி, பிறப்பு. விதியால் - விதியின்படி, செய்யும் வினைகளின் படி. விதி செய்தல் - படைத்தல். விதி - பிரும்மா. செங்கமலம், எதுகை நோக்கி செக்கமலம் ஆயிற்று. சிருட்டித்தற் கடவுளைச்

சிருஷ்டிக்கும் கடவுளான திருமாலின் சேவடி வணங்குவோம், என்றபடி.

**2. அருக்கனடி கைதொழு தனந்தர மருக்கன்
உருக்கருக வேயருண வுருவழ கெறிப்பத்
திருக்கிளர் நலம்பெறு செழுந்தெரிவை யோடும்
குருக்குலம் விளங்கவரு கோமக னிருந்தான்.**

[அருக்கன் அடி கைதொழுது அனந்தரம் அருக்கன் உரு கருக (ஏ) அருணம் உரு அழகு எறிப்ப, திரு கிளர் நலம்பெறு செழுந் தெரிவையோடும் குருகுலம் விளங்க வரு கோமகன் இருந்தான்.]

**விளக்கம் :-** குருகுலம் விளக்கம் அடையும்படி தோன்றிய அரச குமாரனாகிய தருமன், (சூரியன் உதித்ததும்) அதன்பின் சூரியனது திவ்விய பாதங்களை நமஸ்கரித்து, அருக்கனது (சூரியனது) உருவம் கருமை உறும்படி (தனது) செந்நிற உருவம் அழகைப் புலப்படுத்த, அழகின் விளக்கத்தையும் நல்ல குணங்களையும் உடைய பாஞ்சாலியோடு இருந்தான், — என்பது பொருள். அருணம் - செந்நிறம். அனந்தரம் - பிறகு.

**3. காற்றின்ம கனுங்கடவு ளாதிதிரு மகனும்
மாற்றமுதி ராயுள்மறை வானவர்ம காரும்
ஏற்றமுறை யாலடியி றைஞ்சியிசை யோடும்
தோற்றமுறு மாறருகு சூழ்தரவி ருந்தார்.**

[காற்றின் மகனும், கடவுள் ஆதி திருமகனும், மாற்றம் முதிர் ஆயுள் மறை வானவர் மகாரும், ஏற்ற முறையால் அடி இறைஞ்சி இசையோடும் தோற்றம் உறும் ஆறு அருகு சூழ்தர இருந்தார்.]

**விளக்கம் :-** காற்றின் மகன் - வீமன். கடவுள் ஆதி திருமகன் - தேவர் தலைவனான இந்திரகுமாரன் (அருச்சுனன்). மாற்றம் முதிர் ஆயுள் மறை வானவர் மகார் - புகழ்ச்சியின் முதிர்ச்சியுடைய ஆயுள் வேத சாத்திரத்தில் (வைத்திய சாத்திரத்தில்) வல்லவரான அசுவினி தேவர்களின் புத்திரர்களான நகுல சகாதேவர். (இந் நால்வரும்) அவரவர் வயதிற்கு ஏற்ற முறைப்படி (தருமனை) வணங்கிக் கீர்த்தியோடு பொருந்திய தோற்றத்தோடு அவன் அருகில் அவனைச் சுற்றி நின்றனர், — என்பது ஈற்றடிகளின் பொருள். இதுவும் முந்திய செய்யுளும் தருமன் பாஞ்சாலியோடும், தம்பியரோடும், தனது பழைய வடிவத்தில் இருந்தான், என்பதைக் கூறும்.

**4. தன்னைநிகர் கிற்பவ ரிலாததனு வல்லோன்
என்னைதிரு நெற்றியி லிருந்தவடு வென்றான்
மின்னையும் வெறுத்தொளிரு மேதகுநி றந்தாள்
பின்னையவ னுக்குநிகழ் வ்பற்றியுரை செய்தாள்.**

[தன்னை நிகர்கிற்பவர் இலாத தனு வல்லோன், என்னை திரு நெற்றியில் இருந்த வடு என்றான், மின்னையும் வெறுத்து ஒளிரும் மேதகு நிறத்தாள் பின்னை அவனுக்கு நிகழ்ந்த பெற்றி உரை செய்தாள்.]

**விளக்கம் :-** மின்னலையும் தனக்கு ஒப்பாகாது என்று வெறுத்து ஒதுக்கி அதனினும் சிறப்பாக விளங்கும் மேன்மை பொருந்திய நிறத்தினளான திரௌபதி, என்பது மூன்றாவது அடியின் பொருள். நெற்றியில் வடு எவ்வாறு உண்டாயிற்று? என்று விசயன் கேட்க, அயலிருந்த பாஞ்சாலன் மகள் நிகழ்ந்ததை நிகழ்ந்தபடி கூறினாள், என்பதாம்.

## வெகுண்ட தம்பியரைத் தருமன் தணிவித்தல்

**5. உரைத்தபொழு திப்பொழுதிவ் வூரெரி கொளுத்தித்**
**தரைத்தலை வனைத்தலை தடிந்திடுவ லென்னா**
**விரைத்தட வரைப்புயன் வெகுண்டுவி லெடுத்தான்**
**இரைத்துவரு கான்மகனு மெரிவிழி சிவந்தான்.**

[உரைத்த பொழுது, இ பொழுது இ ஊர் எரி கொளுத்தி, தரை தலைவனை தலை தடிந்திடுவல் என்னா, விரை தட வரை புயன் வெகுண்டு வில் எடுத்தான்; இரைத்து வரு கால் மகனும் எரி விழி சிவந்தான்.]

**விளக்கம் :-** தரை தலைவன் - மச்ச நாட்டின் தலைவனான விராடன். விரை - விரைந்து. வரைப்புயன் - மலை போன்ற தோள்களை உடைய விசயன். இரைத்து வருகால் மகன் - ஒலி யோடு வீசிக்கொண்டுவரும் காற்றின் மகனான வீமன். விசயனும் வீமனும் பாஞ்சாலி சொன்னதைக் கேட்டுச் சினங்கொள்வா ராயினர்,—என்பதாம்.

**6. ஒன்றுதவி செய்யினுமவ் வுதவிமற வாமல்**
**பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர்**
**நன்றிபல வாகவொரு நவைபுரிவ ரேனும்**
**கன்றிடுவ தன்றிமுது கயவர்நினை யாரே.**

[ஒன்று உதவி செய்யினும் அ உதவி மறவாமல் பின்றை அவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர், நன்றி பல ஆக, ஒரு நவை புரிவரேனும் கன்றிடுவது அன்றி முதுகயவர் நினையார், ஏ.]

**விளக்கம் :-** ஒன்று உதவி - ஒரு உதவி. பின்றை - பிறகு. ஒரு உதவி செய்யினும், பெரியோர் அதை மறவாமல், அவர் பிறகு பல தீமை இழைப்பாரேனும், அவற்றை எல்லாம் பொறுத் துக் கொள்வார்கள்,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். முதுகயவர் - கயமையில் முதிர்ந்த கீழ்மக்கள். ஒருவர் செய்த நன்மை மிகப் பலவாக இருக்க, அவர் ஒரு குற்றம் செய்யினும்,

கயவர் சினத்தலையன்றி வேறு எதையும் நினையார்,—என்பது ஈற்றடிகளின் பொருள். கயவரது ஒழுக்கத்தை மேற்கொள்ளா மல், மன்னவன் நமக்குச் செய்த உபகாரங்களை எண்ணி, அவன் சினத்தினால் செய்த இந்த ஒரு பிழையைப் பொறுப்பதும் மறப்பதுமே பெருமை உடையது, என்று தருமன் வெகுண்ட தம்பியருக்குக் கூறினான், என்க. பெரியோரின் இலக்கணத்தைக் கூறி, ''நீங்கள் சினந்தணிதலே பெருமையுடையது'', என்ற சிறப்புப் பொருளைத் பெறவைத்தலின், இது **பிறிதுமொழிதல் அணியின்**பாற்படும்.

**7. அனலுமுது கானகம கன்றுநெடு நாணம்**
**நினைவுவழு வாமலிவ னீழலிலி ருந்தோம்**
**சினமிகுத லிற்றவறு செய்தனனெ னப்போய்**
**முனிதல்பழு தாகுமென முன்னவன்மொ ழிந்தான்.**

[அனலும் முது கானகம் அகன்று நெடு நாள் நம் நினைவு வழுவாமல் இவன் நீழலில் இருந்தோம், சினம் மிகுதலின் தவறு செய்தனன் என, போய் முனிதல் பழுது ஆகும் என முன்னவன் மொழிந்தான்.]

**விளக்கம் :-** அனலும் முது கானகம் - அனல் வீசும் பழமை யான காடு, நம் நினைவு - எவரும் அறியாமல் ஓராண்டைக் கழிக்க வேண்டும் என்ற நம் எண்ணம். (நமக்கு நிழல் தந்து ஆதரித்த அரசன்) தவறு செய்தான் என சினம் மிகுதலின் போய் முனிதல் பழுது ஆகும் - பிழை செய்தான் என்று எண்ணி, சின மிகுதியினால் அவனிடம் போய்க் கோபித்தலைச் செய்வது குற்ற முடையதாகும், எனத் தருமன் கூறினான்,—என்க.

பாண்டவரை விராடன் வணங்கல்

**8. குந்திவயின் வந்துதம குருகுலம்வி ளக்கும்**
**ஐந்தரசு மன்றுத னகன்கடை யிருக்கச்**
**சிந்தனையோ டுந்திறைகொள் செல்வநிதி யோடும்**
**மைந்தனொடு மெய்தியவர் மலரடியின் வீழ்ந்தான்.**

[குந்தி வயின் வந்து தம குருகுலம் விளக்கும் ஐந்து அரசும் அன்று தன் அகன் கடை இருக்க, சிந்தனையோடும், திறைகொள் செல்வம் நிதியோடும், மைந்தனொடும் எய்தி, அவர் மலர் அடி விழுந்தான்.]

**விளக்கம் :-** ஐந்து அரசும் - பாண்டவர் ஐவரும். தன் அகன் கடை இருக்க - தனது பரந்து விரிந்த மாளிகையின் இடத்தே இருக்க. (அவர்களுக்குப் பிழை இழைத்தோமே) என்ற நினைவோடும், தான் திறையாகக் கொண்ட மிகுந்த பொருள் களோடும், தன் மைந்தனோடும் விராடன் பாண்டவரை

அடைந்து, அவர் மலர் அடி விழுந்து வணங்கினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். விராடன் மிகுந்த பொருளைக் காணிக்கையாகப் பாண்டவர்க்கு அளித்து, மைந்தனோடு தானும் அவரை வணங்கினான், என்க.

**9. விராடனைநறுங்குவளை மாலைவியன் மார்பில்**
**தராபதியெ ழுந்தெதிர்த ழீஇயின னிருத்திப்**
**பராவரு பெரும்புகழ் படைத்தவ ருனைப்போல்**
**அராவின்முடி மேலுலகி லார்கொலுள ரென்றான்.**

[விராடனை நறுங்குவளை மாலை வியன் மார்பில் தராபதி எழுந்து எதிர் தழீஇயினன் இருத்தி, பராவரு பெரும் புகழ் படைத்தவர் உனைபோல், அராவின் முடிமேல் உலகில் யார் கொல் உளர்? என்றான்.]

**விளக்கம் :-** தராபதி - தருமன். தன்னை வணங்கிய விராடனைத் தருமன், எதிர் எழுந்து, தனது நறிய குவளை மலர் மாலை அணிந்த விசாலமான மார்போடு தழுவிக் கொண்டவனாய், அயல் இருக்கச் செய்து, (அவனை நோக்கி) ஆதிசேஷன் முடியில் இடங்கொண்ட இந்த நிலவுலகில் போற்றத் தக்கதான பெரிய புகழை உன்னைப்போல் அடைந்தவர் யார் உளர்?'' என்று உபசார வார்த்தை கூறினான், என்பது பொருள்.

**10. அறைமுரசு யர்த்தவனை யவனுநனி யையா**
**பொறையுடை யவர்க்கலது புகழ்புனைத லுண்டோ**
**இறையமுத நற்குணமி லாதவரி டத்தில்**
**குறைதிருவு ளத்தினிடை கொண்டருள லென்றான்.**

[அறை முரசு உயர்த்தவனை அவனும் நனி, ஐயா, பொறை உடையவர்க்கு அலது புகழ் புனைதல் உண்டோ! இறை அமுதம் நல் குணம் இலாதவரிடத்தில் குறை திரு உளத்தினிடை கொண்டருளல், என்றான்.]

**விளக்கம் :-** அறை முரசு உயர்த்தவன் - அடிக்கப்படுகின்ற முரசைக் கொடியிலே கொண்டவனான தருமன். பொறை நனி உடையவர்க்கு அல்லது புகழ் புனைதல் உண்டோ - பொறுமை மிக உடையவர்க்கு அல்லாமல் மற்றவர்க்குப் புகழை ஆபரணமாக அணிதல் உளதாகுமோ! இறையும் (ஒரு சிறிதும்) அமுதம் போன்ற இனிய நல்ல குணம் இல்லாதாரிடம் காணப்படும் குறையை உனது நல்ல மனத்தில் கொண்டருள வேண்டா (என்று விராடன் கூறினான்) என்பது ஈற்றடிகளின் பொருள். தன்னிடத்தே வாழுங்கால் நேரலான குற்றங் குறைகளைப் பொறுத்தருள வேண்டும் என்று விராடன் வேண்டினான், என்க.

**11.** **இந்நகரி லெய்தியபி னெத்துயரு மெய்தாது**
**எந்நகரி யென்னநெடு நாளினிதி ருந்தோம்**
**செந்நெல்வய லூடுமுது சேலுகளு நாடா**
**நின்னிலுமு யர்ந்ததமர் நீயறிய வுண்டோ.**

[இ நகரில் எய்தியபின் எ துயரும் எய்தாது எம் நகரி என்ன நெடு நாள் இனிது இருந்தோம், செந்நெல் வயலூடு முது சேல் உகளும் நாடா, நின்னிலும் உயர்ந்த தமர் நீ அறிய உண்டோ.]

**விளக்கம் :-** ''செந்நெல் வயல்களில் சேல் மீன்கள் திரியப் பெற்ற பழமையான விராட நாட்டை உடைய வேந்தனே'', என்று தருமன் விளித்து, ''உன் நகர் அடைந்தபின் ஒருவிதத் தீங்கும் இல்லாமல், எம்முடைய நகரில் இருப்பதுபோல் வாழ்ந் தோம்; எனவே, உன்னிலும் சிறந்த சுற்றத்தார், நீ அறிய உளர் ஆவாரோ?'' என்றான் என்பதாம். இதுவும் இதைத் தொடரும் இரு செய்யுள்களும் ஒரு தொடர். ஐயம் தோன்றியவிடத்து மேலோர் தம் நெஞ்சே சான்றாகத் தெளிவு கொள்வர், ஆதலால், 'நீ அறிய' எனப்பட்டது.

**12.** **நின்புதல் வரும்திறல் வருதினியு நீயும்**
**என்புய மெனச்சமரி லென்னருகு நின்றால்**
**வன்பினொடு வஞ்சனைசெய் மன்னர்படை யாவும்**
**தென்புல மடைந்திட மலைப்பலிது திண்ணம்**

[நின் புதல்வரும் திறல் வருதினியும் நீயும் என் புயம் என சமரில் என் அருகு நின்றால், வன்பினொடு வஞ்சனை செய் மன்னர் படை யாவும் தென்புலம் அடைந்திட மலைப்பல், இது திண்ணம்.]

**விளக்கம் :-** வருதினி - சேனை. வலிமையோடு வஞ்சனை செய்தலையும் உடைய துரியோதனாதியர் சேனை முழுதும். மலைப்பல் (போர் செய்வேன்) இது திண்ணம் - இது உறுதி. உன் துணை இருப்பின், நான் நிச்சயம் பகை வெல்வேன், என்று தருமன் கூறினான், என்பதாம்.

உத்தரன் கூற்று

**13.** **எனமுர சுயர்த்தவ னியம்புதலு மகிழா**
**மனனிட ரகற்றினனம் மச்சவள நாடன்**
**தனயனு நமக்குறுதி தக்கதென வெண்ணா**
**இனிமையொ டறத்தின்மக னுக்கிவையி சைப்பான்.**

[என முரசு உயர்த்தவன் இயம்புதலும் மகிழா, மனன் இடர் அகற்றினன் அ மச்சம் வளநாடன்; தனயனும் நமக்கு உறுதி தக்கது என எண்ணா, இனிமையொடு அறத்தின் மகனுக்கு இவை இசைப்பான்.]

**விளக்கம் :-** (இதன் முன், உனது உதவி கிடைக்கின் பகை கடப்பேன்) என்று தருமன் கூறலும், விராடனும் மனத் துயரத்தை அகற்றினான், என்பது முதல் இரண்டடிகளின் பொருள். மகனும், ''பாண்டவர்க்குத் துணை அமைவதே தக்கது; நமக்கும் நன்மை தரக் கூடியது'', என்று எண்ணித், தருமனுக்கு மகிழ்ச்சியோடு இனிவரும் வார்த்தைகளைக் கூறலா னான், என்பது, ஈற்றடிகளின் பொருள்.

**14. எத்தரையு நீழல்செய் தனிக்கவிகை யெந்தாய்**
**இத்தரையு நின்னதுநின் னேவலினர் யாமும்**
**பத்தரையொ டீரரைகொள் பல்படையு நினவே**
**உத்தரையும் வில்விசய னுக்குரிய ளென்றான்.**

[எ தரையும் நீழல் செய் தனி கவிகை எந்தாய், இ தரையும் நின்னது, நின் ஏவிலினர் யாமும், பத்தரையோடு ஈர் அரைகொள் பல் படையும் நினவே, உத்தரையும் வில் விசயனுக்கு உரியள், என்றான்.]

**விளக்கம் :-** எத்தரையும் - பூமி முழுவதும். நீழல் - நிழல். இத்தரை - மச்ச நாடு. பத்தரையோடு ஈர் அரை - ஆறு (பத்தில் அரை பாதி) ஐந்து; ஈர் அரை, ஒன்று; ஆக ஆறு). நால்வகைப் படையோடு, கூலிப்படை, துணைப்படை, அலலது காட்டுப் படை, ஆகியவற்றையுஞ் சேர்த்து அறுவகைப்படை. இந்நாடும் நாங்களும் உன் ஏவலின் அமைவோம்; எமது கன்னி உத்தரையும் விசயனுக்கு உரியள்,—என்று உத்தரன் கூறியபடி.

**15. வில்விசய னுத்தரன் விளம்புதலும் வீரம்**
**கல்விசெய் கலைத்திறன் வனப்புடைய காளாய்**
**இல்விசய மெய்க்குணனின் மிக்கவிளை யாளென்**
**தொல்விசய முற்றசுத னுக்குரிய ளென்றான்.**

[வில் விசயன், உத்தரன் விளம்புதலும், வீரம், கல்வி செய் கலைதிறன் வனப்பு உடைய காளாய், இல் விசய மெய் குணனில் மிக்க இளையாள், என் தொல் விசயம் உற்ற சுதனுக்கு உரியள் என்றான்.]

**விளக்கம் :-** கல்வி - ஞானத்திற்கு ஆதாரமான கல்வி. செய் கலை - செய்யப்படுகின்ற அறுபத்து நான்கு கலைகள். திறன் - அக் கலைத் தொழில் திறமை. வனப்பு - அழகு. வீரம், கல்வி, செய்கலைத் திறமையோடு, மேனி அழகும் உடைய இளங்காளை போன்ற வீரனே, (என்று உத்தரனை விசயன், அழைத்துக் கூறுவான்). இல் விசய மெய்குணனில் மிக்க இளையாள் - இல்வாழ்க்கைக்கு உரிய மேன்மையுடைய குணங் களில் சிறந்த இளைய சகோதரியான உத்தரை. தொல் விசயம் உற்ற சுதன் - பழமையான வெற்றி பெறுதலையே பொருந்தப்

பெற்ற, அதாவது வெற்றி யன்றி எதையும் அறியாத மகா வீரனான எனது குமாரன், (அபிமன்). உத்தரன் கூறியது கேட்ட விசயன், உனது தங்கை என் மகன் அபிமனுக்கு உரியள் ஆவாள், என்று கூறினான், என்பதாம்.

## கலித்துறை

### பாண்டவர் சுற்றத்தாருக்குச் செய்தி அனுப்புதல்

**16. விசயன் றொகுத்து நயமாக விராட னெஞ்சுக்(கு)**
**இசையும் படிசொற் றவரோடு மிருந்த பின்னர்**
**வசையின் றிவாழுந் தமராகிய மன்னர்க் கெல்லாத்**
**திசையுந் தமது செயறூதரிற் செப்பி விட்டார்.**

[விசயன் தொகுத்து நயமாக விராடன் நெஞ்சுக்கு இசையும் படி சொற்று, அவரோடும் இருந்த பின்னர், (பாண்டவர்) வசை இன்றி வாழும் தமராகிய மன்னர்க்கு எல்லாத் திசையும் தமது செயல் தூதரின் செப்பி விட்டார்.]

**விளக்கம் :-** தொகுத்து - சுருக்கமாக. சொற்று - சொல்லி. செயல் - வெளிப்பட்ட செய்தி. 'அபிமனுக்கு உத்தரை உரியாள்' என்று விசயன் விராடன் மனங் களிக்கும்படி நயமாகச் சொல்லி, விராடன் முதலியவரோடு இருந்த பின்னர், பாண்டவர், தமது நெருங்கிய சுற்றத்தாராகிய பழியின்றி வாழும் மன்னர்க்கு, தாங்கள் வெளிப்பட்ட செயலைத் தூதர் மூலம் சொல்லி அனுப்பினார்,—என்பது பொருள்.

## கண்ணன் வரல்

**17. வெளிநின் றமாற்றம் வெளியான பின்வெண் டயிர்த்தண்**
**துளிநின் றமேனித் துளவோன் றன் றுணைவ ரோடும்**
**அளிநின் றமாலை புனைதங் கை யபிம னோடும்**
**தெளிநின் றவேற்கைச் சிவேதனொடும் வந்து சேர்ந்தான்.**

[வெளி நின்ற மாற்றம் வெளி ஆனபின் வெண் தயிர் தண் துளி நின்ற மேனி துளவோன் தன் துணைவரோடும், அளி நின்ற மாலை புனை தங்கை, அபிமனோடும் தெளி நின்ற வேல் கை சிவேதனொடும் வந்து சேர்ந்தான்.]

**விளக்கம் :-** வெளி நின்ற மாற்றம் - அஞ்ஞாத வாசம் கழித்து வெளிப்பட்டிருக்கும் சொல். வெள் தயிர் தண் துளி நின்ற மேனி துளவோன் - வெண்மையான தயிரின் குளிர்ந்த துளி தங்கியிருந்த திருமேனியை (கோகுலத்தில்) உடையவனாயிருந்த திருத்துழாய் மாலை சூடிய கண்ணன். துணைவர் - பலராமனும் சாத்தகியும். அளிநின்ற மாலைபுனை தங்கை - வண்டுகள்

மொய்த்து நின்ற மாலை அணிந்த தங்கையாகிய சுபத்திரை. அபிமன் - அவள் மகனான அபிமன். தெளி நின்ற வேல்கை சிவேதன் - கூர்மையின் தெளிவை உடையதாய் விளங்கி நின்ற வேல் ஏந்திய கையை உடைய சிவேதன், (விராடனின் முதல் மைந்தன்). பாண்டவரின் வெளிப்பாட்டுச் செய்தி வெளிப்பட்ட பின், கண்ணன் தன் துணைவரோடும் உடன் பிறந்தாளான சுபத்திரை, அவளது மகனான அபிமனோடும், சிவேதனோடும் விராடநகர் வந்தான், — என்பதாம்.

**18. கண்டான் மகிழ்ந்தா னறன்மைந்த னைக்கை தழீ இயும்**
**கொண்டா னவன்ற னிளையோர்கை குவித்து வீழ்ந்தார்**
**எண்டா னவரோ டிசைந்தெண்ணிப் புவன மேழும்**
**உண்டா னுரைத்தா னுரைத்தக்க வுரைக ளெல்லாம்.**

[கண்டான், மகிழ்ந்தான், அறன் மைந்தனை கைதழீயும் கொண்டான், அவன் தன் இளையோர் கை குவித்து வீழ்ந்தார், எண் (தான்) அவரோடு இசைந்து எண்ணி புவனம் ஏழும் உண்டான் உரைத்தான், உரைத்தக்க உரைகள் எல்லாம்.]

**விளக்கம் :-** வந்தடைந்த கண்ணன், அறன் மகனைக் கண்டான், மகிழ்ந்தான், அவனைக் கைகளால் தழுவியுங்கொண்டான்; அவன் தம்பியர் நால்வரும் கை குவித்து அவனது திருவடிகளில் விழுந்து வணங்கினர்; புவனம் ஏழையும் ஒரு பகல் உண்டவனாகிய கண்ணன், எண்ண வேண்டியவற்றை அவரோடு மனவொருமைப்பாட்டுடன் இருந்து எண்ணி, (அவர்களுக்குச்) சொல்லத்தக்கவற்றை எல்லாம் உரைத்தான், — என்பது பொருள். தான்: அசை.

**19. சிவன்றன் னைநோக்கிச் சிவேதன் றவஞ் செய்த வாறும்**
**அவன்றன் னருளாற் பலவாயுதம் பெற்றவாறும்**
**இவன்றன் பகைசெற் றதும்யாவு மியம்பி யுள்ளம்**
**கவன்றன் புறாமன் விராடன்க வற்சி தீர்த்தான்.**

[சிவன் தன்னை நோக்கி சிவேதன் தவம் செய்த ஆறும், அவன்தன் அருளால் பல ஆயுதம் பெற்ற ஆறும், இவன் தன் பகை செற்றதும் யாவும் இயம்பி, உள்ளம் கவன்று அன்பு உறா மன் விராடன் கவற்சி தீர்த்தான்,]

**விளக்கம் ;-** தன் பகை-தனது பகைவர், அல்லது கண்ணனது பகைவர். உள்ளம் கவன்று - மனம் வருந்தி, (காணாமற்போன மகனுக்காக மனம் வருந்தி). அன்புறா மன் - மனக் குழைவு அதாவது அமைதி கொள்ளாமல் இருந்த மன்னன். கண்ணன் சிவேதனது வரலாற்றைக் கூறி, விராடனது மனத் துயரைப் போக்கினான், என்பதாம். சிவேதன், விராடனின் மூத்த மகன். அவன் ஒரு சமயம் தேவலோகம் சென்றிருந்தபொழுது, வசுக்கள்,

அவனை மயிலாகும்படி சபிக்க, அவன் மயில் வடிவில் தந்தையினிடம் வரலும், விஷயம் அறியாத தந்தை அவனைத் துரத்திவிடவே அவன் கயிலை சென்று கடுந்தவம் புரிந்து, சாபவிமோசனமும், அரிய ஆயுதங்கள் பலவும் சிவபெருமானிடமிருந்து பெற்றான், என்பது வரலாறு. சிவேதன், பகை அழித்த வரலாறு தெரியவில்லை.

**20. தெம்மைந் தரென்னுங் களபங்களைச் சிங்கசாபம்**
**வெம்மைந் தின்வே றற்கமைந்தா னொருவீ ரனான**
**தன்மைந் தனைக்கண் டுருகுந்திறற் றந்தை தாளில்**
**அம்மைந் தனும்வீழ்ந் துடன்வைகி னனார்வ மிக்கே.**

[தெவ் மைந்தர் என்னும் களபங்களை சிங்க சாபம் வெம் மைந்தின் வேறற்கு அமைந்தான் ஒரு வீரனான தன் மைந்தனை கண்டு, உருகும் திறல் தந்தை தாளில், அ மைந்தனும் வீழ்ந்து உடன் வைகினன் ஆர்வம் மிக்கு, ஏ.]

**விளக்கம் :-** மைந்து - வீரம். மைந்தர் - வீரத்தை உடையவர். தெவ் மைந்தர் என்னும் களபங்கள் - பகை வீரர்கள் என்னும் யானைக் குட்டிகள், (களபம் - யானை). சிங்க சாபம் - சிங்கக் குட்டி. வெம் மைந்து - வெவ்விய வீரம், ஆற்றல். வேறல் - வெல்லல், கொல்லல். ஆர்வம் மிக்கு - அன்பு மிகுந்து. பகை வீரர்களாகிய யானைக் குட்டிகளைச் சிங்கக்குட்டியின் ஆற்றல் போன்ற வலிமையினால் வெல்லுதற்கு அமைந்தவனாகி, ஈடில்லா வீரனான தன் மைந்தனைக் கண்டு உருகும் திறலுடைய தந்தையாகிய விராடனது பாதங்களில், மகனாகிய அந்த சிவேதனும் மிகுந்த அன்புடன் விழுந்து வணங்கித் தந்தையோடு இருந்தான்,—என்பது பொருள்.

### பாஞ்சாலர் முதலியோர் வரல்

**21. பாஞ்சாலர் போசகுல மன்னவர் பாண்டி வேந்தர்**
**வாஞ்சா மனத்தின் வயமத்திரர் மாக தேயர்**
**பூஞ்சாப வெற்றிக் கொடிக்கேரளர் பொன்னி நாடர்**
**தாஞ்சால் புடனப் பதிவந்தனர் தானையோடும்.**

[பாஞ்சாலர், போச குல மன்னர், பாண்டி வேந்தர், வாஞ்சா மனத்தின் வயமத்திரர், மாகதேயர், பூஞ்சாபம் வெற்றி கொடி கேரளர், பொன்னி நாடர், தாம் சால்புடன் பதி வந்தனர் தானையோடும்]

**விளக்கம் :-** வாஞ்சா மனத்தின் வய மத்திரர் - வாஞ்சையுடைய மனத்தினரான வலிய மத்திர நாட்டார். மாகதேயர் - மகத தேசத்தார். பூஞ்சாப வெற்றிக்கொடி கேரளர் - அழகிய வில்லைத் தாங்கிய வெற்றிக் கொடியை உடைய சேர நாட்டார். பொன்னி நாடர் - சோழர். தாம் - ஆகிய இத் தேசங்களின் மன்னர்கள். இவர்கள் சேனையோடும் மன நிறைவோடும் விராட

நகர் வந்து சேர்ந்தனர்,—என்க. சால்பு - நல்ல பண்பு, மன நிறைவு. (பாண்டவர் கடவநாள் கழித்து வெளிப்பட்டமை அறிந்ததால், எழுந்த மன நிறைவு). பொன்னி - காவேரி.

## வந்த மன்னருக்குத் தருமன் கூறியது

**22. வந்தோ கையொடு மிருபாதம் வணங்கி வைகும்**
**கந்தோ டடர்க்கை கடுங்கோபக் களிற்று வேந்தர்**
**அந்தோ நெடுநா ளகன்கானி லடைந்தி ரென்று**
**நொந்தோ ரையாற்றி நுவல்வானந் நுதிகொள் வேலான்.**

[வந்து ஓகையொடு இரு பாதம் வணங்கி வைகும், கந்தோடு அடர் கை கடுங் கோபம் களிறு வேந்தர், அந்தோ, நெடுநாள் அகல் கானில் அடைந்திர் என்று நொந்தோரை ஆற்றி, நுவல் வான் அ நுதி கொள் வேலான்.]

**விளக்கம் :-** ஓகை - உவகை. கட்டுத் தறியோடு அடர்க்கின்ற துதிக்கையோடு கடிய கோபத்தையும் உடைய யானைப் படையை உடைய வேந்தர்,—என்பது இரண்டாவது அடியின் பொருள். (தன்பால் வந்து) ஐயோ, நெடுங்காலம் அகன்ற காட்டை அடைந்து வசித்தலை மெற்கொண்டீரே, என்று மனம் வருந்திய மன்னர்களை ஆற்றுவித்து, நுதிகொள் (கூர்மை கொண்ட) வேலையுடையவனான தருமன் கூறுவானாயினான்,— என்பது ஈற்றடிகளின் பொருள்.

**23. தேனிற் குளித்த சிறையம்புயச் சேக்கை யன்னம்**
**வானிற் பறந்து புலர்த்தும்புனன் மச்ச நாடன்**
**வேனிற் சிலைவேள் விராடன்புர மேய வன்றே**
**கானிற் றிரிந்த பரிதாபங் கழிந்த தென்றான்.**

[தேனில் குளித்த சிறை அம்புயம் சேக்கை அன்னம் வானில் பறந்து புலர்த்தும் புனல் மச்ச நாடன் வேனில் சிலை வேள் விராடன் புரம் மேய அன்றே, கானில் திரிந்த பரிதாபம் கழிந்தது, என்றான்.]

**விளக்கம் :-** அம்புயம் சேக்கை அன்னம் தேனில் குளித்து (அதன்பின்) வானில் பறந்து (தேனால் நனைந்த) சிறகுகளைப் புலர்த்தும் புனல் மச்சநாடன், என்று அன்வயிக்க. தாமரையை இருப்பிடமாகக் கொண்ட அன்னம், அம் மலர் பெருக்கும் தேனில் ஆடி, பின்னர் மேலே பறந்து எழுந்து ஈரங்கொண்ட சிறகுகளை உலர்த்திக் கொள்வதற்குரிய நீர்வளப் பெருமை கொண்ட மச்ச நாட்டின் தலைவன்,— என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். சிலை வேனில் வேள் - மன்மதன். (அவனை ஒத்த) விராடனது நகரை அடைந்து அங்கே வசித்தலை மேற்கொண்ட அன்றே, கானில் திரிந்ததனால் உண்டான துன்பம் அகன்றது, என்று தருமன் கூறினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள், விராடனது திருநகர் அடைந்த அளவில் அல்லது அப்பொழுதே

கானக வாழ்க்கையால் உண்டான துன்பங்கள் எல்லாம் தீரப் பெற்றோம், என்று தருமன் தம்பால் அன்புகொண்ட மன்னர்களுக்குக் கூறியபடி.

**24. பண்ணுக் குருகிப் பறையாலகப் பட்டமான் போல்**
**மண்ணுக் கிறைவன் மொழிதேறி மகன்செய் வஞ்சம்**
**எண்ணுக் கழிந்தே னினிச்செய்வதென் யாரு நீவிர்**
**கண்ணுக் கிமைபோ லிருந்தீர்களை கண்க ளாக.**

[பண்ணுக்கு உருகி பறையால் அகம் பட்ட மான்போல், மண்ணுக்கு இறைவன் மொழி தேறி, மகன் செய் வஞ்சம் எண்ணுக்கு அழிந்தேன், இனி செய்வது என்? யாரும் நீவிர் கண்ணுக்கு இமை போல் இருந்தீர் களைகண்களாக.]

**விளக்கம் :-** இசைக்கு உருகி, அதன்பின் அடிக்கப்பட்ட பறையின் ஒலியால் இருந்த இடத்திலேயே உயிர்விட்ட அசுணமா என்னும் மிருகம்போல,—என்பது முதலடியின் பொருள். மண்ணுக்கு இறைவன் - திருதராட்டிரன். மொழி தேறி - (அவனது) சொல்லை நம்பி. மகன் செய் வஞ்சம் எண்ணுக்கு அழிந்தேன் - அவனது மகனாகிய துரியோதனன் செய்த வஞ்சனையுடைய எண்ணத்திற்கு, அதாவது (அவனது ஆலோசனையின்படி சூதாடியதால்) அழிந்து போனேன். நீவீர் யாவரும் கண்ணுக்கு இமைபோல் எமக்குக் களை கண்களாக இருந்தீர்,—என்று தருமன் கூறினான். களைகண் - துன்ப நீக்கத்திற்கு உரிய இடம், பற்றுக்கோடு. களைகண்களாக இருந்தீர் - எமது துன்பத்தில் எமக்கு ஆதரவு தருபவர்களாக இருந்தீர்கள். அசுணமாவை அசுணப் பறவை என்றும் கூறுவர். இதை இசையறி விலங்கு என்பர்; இது குறிஞ்சிக்கு உரியது. நிலவு வீசும் இரவில் குறிஞ்சிநிலமக்கள், இசையால் இதை அழைத்துப் பறை கொட்டி அழிப்பர், என்பர்.

## வஞ்சிக்கப்பெற்ற சல்லியன் கூற்று

**25. அரசர்க் கடைவே யவையின்க ணவைய னைத்தும்**
**முரசக் கொடியோ னயமாக மொழிந்த போது**
**விரைதுற் றுதார்சல் லியன்முன்பு விளைந்த வெல்லாம்**
**பரசுற் றகன்றான் பிழைகொன்ற பகடு போல்வான்.**

[அரசர்க்கு அடைவே அவையின்கண் அவை அனைத்தும் முரசம் கொடியோன் நயம் ஆக மொழிந்தபோது, விரை துற்று தார் சல்லியன் முன்பு விளைந்த எல்லாம் பரசுற்று அகன்றான், பிழை கொன்ற பகடு போல்வான்.]

**விளக்கம் :—**ராஜசபையில், அரசர்களுக்கு அடைவே (முறையாக) துரியோதனனின் வஞ்சனைச் செயல்கள் எல்லாவற்றையும்

முரசக் கொடியோனாகிய தருமன், நன்றாகச் சொல்லியபோது, நறுமணம் மிகுந்த மாலை அணிந்த சல்லியன், தீர ஆராயாத தன் பிழையினால் திங்குற்ற ஆண் யானை போல்வான், முன்னே நடந்தவை எல்லாம் பரசுற்று (சொல்லி) விடைபெற்றுச் சென்றான், —என்பது பொருள். முன்பு நடந்த எல்லாம் - தான் வஞ்சிக்கப் படுவதற்குக் காரணமான நிகழ்ச்சிகளை எல்லாம். துரியோதனன் தன்னை வஞ்சித்துத் தன் பக்கம் சேருமாறு செய்து விட்டான், என்று சல்லியன் பாண்டவர்க்கு வருத்தத்தோடு தெரிவித்துத் தன் பதி திரும்பினான்.—என்பதாம்.

**26. கரடக் கடவெங் களியானை கவன மான்றேர்**
**துரகப் பதாதிப் படைதம்மொடுஞ் சூழ்ச்சி யாக**
**விரகிற் புகுந்து நெறியின்கண் விருந்து செய்த**
**உரகக் கொடியோற் கரும்போரி லுதவி செய்வான்.**

[கரடம் கடம் வெம் களி யானை, கவனம் மான் தேர், துரகம் பதாதி படை தம்மொடும் சூழ்ச்சி ஆக, விரகின் புகுந்து நெறியின் கண் விருத்து செய்த உரகம் கொடியோற்கு அரும் போரில் உதவி செய்வான்.]

**விளக்கம்** :—கரடம் - மதநீர் பெருகும் கன்னம். கடம் - மதநீர். கவனம் - விரைவு. படை தம்மொடும் - (உருபு மயக்கம்) நால்வகைச் சேனைகளுக்கும். சூழ்ச்சியாக விரகின் புகுந்து - முன்னமே திட்டமிட்டபடி தந்திரமாக வந்து. நான் விராட நகரம் வரும் வழியில் எனக்கும் எனது படைகளுக்கும் விருந்து செய்து வஞ்சித்துவிட்ட துரியோதனனுக்கு (இனி நிகழவிருக்கும்) பெரும் போரில் உதவி செய்ய வேண்டியவனானேன்'', என்று சல்லியன் கூறினான் என்பதாம். சல்லியன் பாண்டவர்க்கு மாமன் முறையினன்.

**27. நஞ்சோ டுசாலு மமரின்க ணமர்க ளென்றும்**
**நெஞ்சோ டியைந்த துணையென்று நினைத்தல் செய்யார்**
**செஞ்சோ றுசால வலிதென்றுமண் செப்பும் வார்த்தை**
**வெஞ்சோ ரிவேலா னிலையிட்டன னீண்டு மீண்டும்.**

[நஞ்சோடு சாலும் அமரின்கண் நமர்கள் என்றும் நெஞ்சோடு இயைந்த துணை என்றும் நினைத்தல் செய்யார்; செம் சோறு சால வலிது என்று மண் செப்பும் வார்த்தை வெம் சோரி வேலான் நிலையிட்டனன் ஈண்டு மீண்டும்.]

**விளக்கம்** :—நஞ்சோடு சாலும் - விஷத்தை ஒத்த, (போரில்) நமர் - நம்மைச் சேர்த்தவர், சுற்றத்தார். நெஞ்சோடு இயைந்த - உள்ளத்தோடு பொருந்திய. செஞ்சோறு சால வலிது - செவ்விய சோறு கொண்டதனால் ஏற்படும் கடன் மிக வலியது. வெம் சோரி வேலான் - கொடிய குருதி தோய்ந்த வேலையுடையவனான சல்லியன். ஈண்டு மீண்டும் நிலையிட்டனன் - இப்

பொழுது மறுபடியும் (சோற்றுக் கடன் கழித்தலாகிய தர்மத்தை) நிலைநாட்டினான். சல்லியன் பாண்டவர்க்கு மாமனாய் இருந்தும், துரியோதனன் இட்ட சோற்றை உண்டதனால் அத் தீயவர்க்கே துணையானமையின், ''வீரர்க்கு நமரினும் செஞ்சோறே வலிது'', என்று உலகினர் கூறுவதை, இப்போது, மீண்டும் அவன் நிலைநாட்டினான், என்று புலவர் கூறியபடி.

## அபிமன் உத்தரை திருமணம்

**28.** **ஓமஞ் செய்தீயிற் பொரிசிந்த லினுற்ற வாசத்**
**தூமங் கமழப் பலவாசத் தொடையல் சூட்டிக்**
**காமன் றிருமைத் துனற்கன்போ டக்கன்னி தன்னை**
**மாமன் றலங்கே புரிவித்தனன் மச்சர் கோமான்.**

[ஓமம் செய் தீயில் பொரி சிந்தலின் உற்ற வாசம் தூமம் கமழ, பல வாசம் தொடையல் சூட்டி, காமன் திரு மைத்துணற்கு அன்போடு அ கன்னி தன்னை மா மன்றல் அங்கே புரிவித்தனன் மச்சர் கோமான்.]

**விளக்கம் :-** ஓமம் செய் தீயில் . தூமம் கமழ, காமன் திரு மைத்துனற்கு, அ கன்னி தன்னை, வாசம் பல தொடையல் சூட்டி, மா மன்றல் அங்கே, மச்சர் கோமான் புரிவித்தனன், என்பது அன்வயம். ஓமத்தீயில் பொரியை இடல் திருமணச் சடங்குகளில் ஒன்று. தூமம் - புகை. பொரியைத் தீயில் இட்டதனால் எழுந்த வாசனை உடைய புகை மணத்தைப் பரப்ப, மணப்பெண்ணிற்கு மாலைகள் பல சூட்டி, அவளை மன்மதனின் அவதாரமான பிரத்யும்நனின் மைத்துனனுக்கு (அபிமந்யுவுக்கு) அளித்தான், —என்பது பொருள். காமன் - கண்ணனின் குமாரனான பிரத்யும்நன்; அவனை மன்மதனது அவதாரம் என்பர். அபிமன், கண்ணனின் தங்கையாகிய சுபத்திரையின் மகன். எனவே, அபிமன், பிரத்யும்நனனுக்கு அத்தை மகன். அத்தை மகனை மைத்துனன், என்பது பண்டை வழக்கு.

## பாண்டவர் உபலாவியம் சேரல்

**29.** **முன்னிச் சமருக் கொருப்பட்ட முடிம கீபர்**
**கன்னிக் குவேண்டுங் கடனான பலிக ணல்கி**
**வன்னிப் பொதும்பர் வயின்வைத்த வயங்கு சோதி**
**மின்னிற் றிகழ்வெம் படையாவையு மீண்டு கொண்டார்.**

[முன்னி சமருக்கு ஒருப்பட்ட முடி மகீபர் கன்னிக்கு வேண்டும் கடனான பலிகள் நல்கி, வன்னி பொதும்பர்வயின் வைத்த வயங்கு சோதி மின்னின் திகழ் வெம் படை யாவையும் மீண்டு கொண்டார்.]

**விளக்கம் :-** முன்னி - ஆலோசனை செய்து. போருக்கு ஒருப்பட்ட முடிமகீபர் - (வேறு வழியில்லாமல்) கௌரவரோடு

போர் செய்வதற்கு மனங்கொண்ட கிரீடாதிபதிகளான பஞ்சபாண்டவர். விராடனது நகரின் புறத்திலுள்ள வன்னி மரத்தின் பொந்தில் முன்னர் வைத்த, விளங்கும் ஒளியோடு கூடிய மின்னலைப் போல் பிரகாசிக்கின்ற தமது கொடிய ஆயுதங்களை எல்லாம் காளிதேவிக்குச் செலுத்த வேண்டிய பலிகளைக் கொடுத்து, மீண்டும் கைப்பற்றினர்,—என்பது ஈற்றடிகளின் பொருள்.

**30. சேயோன் விழவு விழைவோடு சிறந்த பின்னர்**
**மாயோ னுமற்றக் குருமைந்தரு மன்னர் யாரும்**
**போயோ தைவீதி யுபலாவி புகுந்து தங்கள்**
**ஆயோ தனத்துக் குறு நீர்மைக ளாயலுற்றார்.**

*[சேயோன் விழவு விழைவோடு சிறந்த பின்னர், மாயோனும் மற்று அ குரு மைந்தரும், மன்னர் யாரும் போய், ஓதை வீதி உபலாவி புகுந்து, தங்கள் ஆயோதனத்துக்கு உறும் நீர்மைகள் ஆயல் உற்றார்.]*

**விளக்கம் :-** சேயோன் - (விசயன்) மகனான அபிமன். விழவு - திருமணம். விழைவின் சிறந்த பின்னர் - யாவரும் திருப்தி கொள்ளும்படி சிறக்க நடத்தியபின். உபலாவி - உபப்பிலாவியம் என்னும் நகரம். ஆயோதனம் - போர். உறும் நீர்மைகள்-வேண்டிய முறையுடைய ஏற்பாடுகள். உபப்பிலாவியம், விராடன் நகருக்கு அருகிலுள்ள சிறு நகரம். அபிமனது மணம் முடிந்தபின் பாண்டவர் கண்ணனுடனும், மற்ற நேயமுடைய மன்னர்களுடனும் உபப்பிலாவியம் சென்று, இனி நிகழவிருக்கும் போருக்குச் செய்ய வேண்டிய காரியங்களைப்பற்றி ஆலோசித்தனர்,—என்பதாம். மற்று: அசை.

**வெளிப்பாட்டுச் சருக்கம் முற்றும்.**

**விராடபருவம் முற்றும்.**

# 5. உத்தியோக பருவம்

கடவநாள் கழித்து வெளிப்பட்ட பாண்டவர், தங்களது தாய பாகத்தைக் கேட்க, அது தரத் துரியோதனன் மறுக்கவே, அவர்கள் போருக்கான முயற்சியில் ஈடுபட்டதைக்கூறும் பருவம் இது. உலூகன் தூது சருக்கம், கண்ணனைத் துணை அழைத்த சருக்கம், சஞ்சயன் தூது சருக்கம், கிருட்டினன் தூது சருக்கம், படையெழுச்சிச் சருக்கம், முகூர்த்தங் கேள்விச் சருக்கம், களபலியூட்டு சருக்கம், அணிவகுப்புச் சருக்கம், என்ற எட்டுச் சருக்கங்களைக் கொண்டது இப் பருவம்.

## 1. உலூகன் தூது சருக்கம்

அஜ்ஞாத வாசம் கழிந்தபின், கண்ணன் முதலானவர்களின் ஆலோசனையின்படி, பாண்டவர் தங்கள் சார்பில் புரோகிதனான உலூக மாமுனிவனைத் திருதராட்டிரனிடம் தூது போக்கியதையும், துரியோதனன் நாடு கொடுக்க மறுத்ததையும் விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

### கடவுள் வணக்கம்

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. மீன மாகியுங் கமடம தாகியு மேருவை யெடுக்குந்தாள்**
**ஏன மாகியு நரவரி யாகியு மெண்ணருங் குறளாயும்**
**கூனல் வாய்மழுத் தரித்தகோ வாகியு மரக்கரைக்**
**கொலைசெய்த**
**வான நாயக னாகியு நின்றமான் மலரடி மறவேனே.**

[மீனம் ஆகியும், கமடமது ஆகியும், மேருவை எடுக்கும் தாள் ஏனம் ஆகியும், நர அரி ஆகியும், எண் அரு குறளாயும், கூனல் வாய் மழு தரித்த கோ ஆகியும், அரக்கரை கொலை செய்த வானம் நாயகன் ஆகியும், நின்ற மால் மலர் அடி மறவேன், ஏ.]

**விளக்கம் :-** மீனம் - மீன், (மச்சாவதாரம்). கமடம் - ஆமை, (கூர்மாவதாரம்). மேருவை எடுக்கும் தாள் ஏனம் - மகாமேருவை ஒரு பரல்போல் குளம்பினிடத்தே கொள்ளவல்ல பாதங்களையுடைய வராகம், (வராகவதாரம்). நரஅரி-நரசிங்கம், (நரசிம்ம அவதாரம்). குறள் - வாமனன் (வாமனாவதாரம்). கூனல் வாய் மழு தரித்த கோ - வளைந்த நுனியை உடைய கோடரிப்படை கொண்ட பரசுராமன், (பரசுராமாவதாரம்). அரக்கரைக் கொலை செய்த வானம் நாயகன் - இராவணாதி

அரக்கர்களை அழித்த பரமபத நாதனான இராமன் (இராம வதாரம்). நின்ற மால் - இப்பொழுது கண்ணனாய் அவதரித்துப் பாண்டவர் அருகே இருந்த திருமால். அப் பிரானது மலரடி என்றும் மறக்கமாட்டேன, என்று புலவர் வணங்கினார், என்க. பரசுராமன் அந்தணனாய்ப் பிறந்தும் க்ஷத்திரிய தர்மத்தை மேற் கொண்டிருந்தானாதலால் **கோ**, எனப்பட்டார்.

### கண்ணன் கூற்று

**2.** **வில்லி னாலவன் கொண்டமன் மீளவும்**
**வல்லினாற் கொளலன்றி**
**வில்லி னாலமர் மலைந்துகொள் ளுதுமெனல்**
**வேத்துநீ தியதன்றால்**
**சொல்லி னாலொரு தூதினி லறியலாஞ்**
**சுயோதன னினைவென்று**
**கல்லி னால்வரு கன்முகில் விலக்கிய**
**கரியமா முகில்சொன்னான்.**

[வல்லினால் அவன் கொண்ட மண் மீளவும் வல்லினால் கொளல் அன்றி, வில்லினால் அமர் மலைந்து கொள்ளுதும் எனல் வேத்து நீதியது ஆன்று, (ஆல்); சொல்லினால் ஒரு தூதினில் அறியலாம் சுயோதனன் நினைவு என்று, கல்லினால் வரு கல் முகில் விலக்கிய கரிய மாமுகில் சொன்னான்.]

**விளக்கம் :-** வல் - சூதாட்டம். (இந்திரன் ஏவலால்) வரு கல் மழை கல்லினால் விலக்கிய கருமுகில் - வந்த கல் மழையைக் கோவர்த்தனகிரி என்ற மலையினால் விலக்கிய காளமேகம் போன்ற சிறந்த கண்ணன். ''சூதினால் கவர்ந்துகொண்ட பூமியை அந்தச் சூதாட்டத்தினால் அல்லாமல், வில்லினால் (போரினால்) திரும்பப் பெறுவோம் எனல் அரச நீதி ஆகாது; எனவே, துரியோதனனது கருத்தை அவனது வாய்மொழியால் ஒரு தூதன் மூலம் அறிந்துகொள்வோம்'', என்று கண்ணன் கூறினான் என்பதாம்.

**3.** **உரிய வம்புவி யுதிட்டிரன் றனையவண்**
**உற்றவர் பலர்காணப்**
**பரிய வன்பெருஞ் சூதினால் வென்றுபல்**
**லாண்டடிப் படவாண்டான்**
**திரிய வன்புடன் வாங்குதற் கெண்ணுமித்**
**தீமதி கொடிதென்று**
**கரிய வன்புகல் கட்டுரை கேட்டபின்**
**காமபா லனுஞ்சொன்னான்.**

[உரிய அம் புவி யுதிட்டிரன் தனை அவண் உற்றவர் பலர் காண, பரியவன் பெருஞ் சூதினால் வென்று பல் ஆண்டு அடிப்பட ஆண்டான், திரிய வன்புடன் வாங்குதற்கு எண்ணும் இ தீ மதி

கொடிது என்று, கரியவன் புகல் கட்டுரை கேட்டபின், காமபால னும் சொன்னான்.]

**விளக்கம் :-** கரியவன் புகல் கட்டுரை கேட்டபின், காமபால னும், பரியவன் அவண் உற்றவர் பலர் காண பெருஞ் சூதினால் (யுதிட்டிரனை) வென்று உரிய அம் புவி பல் ஆண்டு அடிப்பட ஆண்டான்; (அவ்வாறாக) திரிய வன்புடன் வாங்குதற்கு எண்ணும் இத் தீமதி கொடிது, என்று சொன்னான், என்பது அன்வயம். கரியவன் - கண்ணன். காமபாலன் - பலராமன். கண்ணன் கூறிய வார்த்தையைக் கேட்டபின், பலராமன், (செல்வம், சேனாபலம், துணைவர் பலம் ஆகியவற்றை உடைய) ''பெரியவனான துரியோதனன், ராஜசபையில் உற்றார் பலர் காணப் பெரிய சூதினால் தருமனை வென்று, அவனுக்குரியதா யிருந்த அழகிய பூமியைப் பல வருஷங்கள் தன் வசங்கொண்டு ஆண்டுள்ளான்; (அவ்வாறாக), மீண்டும் வலிகொண்டு, (அவன் பல வருஷங்கள் தனி ஆண்ட நாட்டை) பறித்துக்கொள்வதற்கு எண்ணும் இந்தத் தீய புத்தி கொடுமை உடையதாகும், என்று கூறினான், — என்பதாம். பரியவன் - பெரியவன்; அல்லது குதிரைப் படையை உடையவன். காமபாலன் - அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றுபவன், (காமம் - விருப்பம்). உற்றார் - வீடுமன், துரோணர், கிருபன், விதுரன் முதலியோர். பலராமனி டம் துரியோதனன் கதைப் போர் பயின்றவன்; எனவே, அவனுக் குத் துரியோதனனிடம் பிரியம் அதிகம். ''எவ்வகையிலோ நாட்டை வென்று பதின்மூன்று வருஷ காலம் துரியோதனன் ஆண்டு வந்தானாதலால், பாண்டவர் நாட்டின் பால் உரிமை இழந்தவராகின்றார். எனவே, மீண்டும் நாட்டைப் பெற முயலல் அநீதி'', என்பது பலராமன் கருத்து.

**4. இளைய சாத்தகி தமையனை மிகக்கரி திதயமா யினுநாவில்**
**விளையு மாற்றநின் திருவடி வினுமிக வெள்ளையா**
**கியதென்ன**
**உளைய வார்த்தைக ளுரைத்தன னுரைத்தலு முற்றவ**
**ரிடுக்கண்கள்**
**களையு மாப்புய லிருவரு மொழிமினுங் கட்டுரை**
**யினியென்றான்.**

[இளைய சாத்தகி தமையனை மிக கரிது இதயம் ஆயினும், நாவில் விளையும் மாற்றம் நின் திருவடிவினும் மிக வெள்ளை ஆகியது என்ன, உளைய வார்த்தைகள் உரைத்தனன்; உரைத்த லும், உற்றவர் இடுக்கண்கள் களையும் மா புயல், இருவரும் ஒழிமின் உம் கட்டுரை இனி என்றான்.]

**விளக்கம் :-** இளைய சாத்தகி - பலராமனுக்கும் கண்ணனுக் கும் தம்பியான சாத்தகி. உற்றவர் இடுக்கண்கள் களையும் மா

புயல் - அடியாரின் இன்னல்களைப் போக்கும் அருள் வள்ளலான சிறந்த மேகம் போன்ற கண்ணன். நெஞ்சம் கரியதாயினும், வாய்வரு சொல்லோ உன் திருமேனியினும் மிக வெள்ளியதாய் இருக்கின்றதே! என்று சாத்தகி கடிந்து கூறலும், கண்ணன், சாத்தகியையும் பலராமனையும் நோக்கி, ''நீங்கள் இருவரும் பேசுதலை ஒழியுங்கள்'', என்றான், என்பதாம். கரிய நெஞ்சு - பக்ஷபாதமுடைய மனம். வெண்மை - அறிவின் தெளிவு இன்மை. இனி - இனிமேல், இப்பொழுது. நடுநிலைமையில் நில்லாது ஒரஞ் சார்ந்து பேசப்பட்டதால், 'நாவில் விளையும் மாற்றம்' என்றார். வடிவிற்குத் திரு என்ற அடை, தம்பி தமையனிடம் காட்டவேண்டிய மரியாதை பற்றியது; அல்லது பரிகாசம் பற்றிய தாகவும் கொள்ளலாம்.

## உலூகனைத் தூது போக்கல்

**5. பேரு லூகமும் பிணையுநல் கியபெரும் பிறப்புடைப்**
**பரித்திண்டேர்க்**
**காரு லூகல நிகரடிக் களிறுடைக் கண்ணிலா வரசன்பால்**
**சீரு லூகனைத் தூதுசென் றிவர்மனஞ் செப்பிமீள்**
**கெனப்போக்கி**
**ஒரு லூகல முடன்றவழ்ந் தவன்றன தூர்புகுந்**
**தனனன்றே**

[பேர் உலூகமும் பிணையும் நல்கிய பெரு பிறப்புடை பரி திண் தேர், கார் உலூகலம் நிகர் அடி களிறு உடை கண் இலா அரசன்பால், சீர் உலூகனை தூது சென்று இவர் மனம் செப்பி மீள்க என போக்கி, ஓர் உலூகலமுடன் தவழ்ந்தவன் தனது ஊர் புகுந்தனன், அன்றே.]

**விளக்கம் :-** ஓர் உலூகலமுடன் தவழ்ந்தவன், சீர் உலூகனை, பேர் உலூகமும் பினையும் நல்கிய பெரு பிறப்பு உடை பரி திண்தேர், கார் உலூகலம் நிகர் அடி களிறு உடை கண் இலா அரசன்பால், தூது சென்று இவர் மனம் செப்பி மீள் கென போக்கி. தனது ஊர் புகுந்தனன், (அன்றே),—என்பது அன்வயம். உலூகம் - இலக்கணமுடைய சிறந்த ஆண் குதிரை. பிணை - அந்த இனத்தைச் சேர்ந்த பெண் குதிரை. நல்கிய பெரும் பிற பு டை பரி - அந்த உத்தம சாதிக் குதிரைகள் சேர்ந்து ஈன்ற குதிரை. கார் உலூகலம் - பெரிய உரல். நிகர் அடி களிறு - அந்த உரலை ஒத்த பெரிய கால்களை உடைய யானை. உத்தம சாதிக் குதிரைகள் இரண்டு சேர்ந்து பெற்ற குதிரைகள் பூட்டிய வலிய தேர்களையும், பெரிய உரல் போன்ற கால்களை உடைய யானைகளையும் உடைய, திருதராட்டிரனிடம் (சென்று), என்பது முதல் இரண்டடிகளின் பொருள். சீர்

உலூகன் - தவச் சிறப்புடைய உலூக மாமுனிவன். ஓர் உலூக முடன் தவழ்ந்தவன் - 'எசோதைப் பிராட்டி கட்டிவைத்த உரலுடன் தவழ்ந்து சென்ற கண்ணன். கண்ணன், உலூகமா முனிவனை, திருதராட்டிரனிடஞ் சென்று, பாண்டவர் கருத்தைச் சொல்லி, அவர் கருத்தை அறிந்து வருமாறு தூது போக்கிய பின், தன் திருநகரான துவாரகை சென்றான், என்ப தாம். வேத வித்தகத்தோடு, அன்பு, சொல் வன்மை, குடிப் பிறப்பு, ஏற்ற கருமத்தைத் திறமையுடன் ஆற்றல் முதலிய குணங்களை உடையவனாதல் பற்றிச் சீர் உலூகான், என்றார். கார் என்பதைக் களிற்றுக்கு அடையாகக் கொண்டு, கரிய யானை, என்றும் பொருள் கொள்ளலாம், அன்றே; ஈற்றசை.

**6. இந்த வந்தண னீயிசைத் தனவெலா மியல்புட னினிதாக**
**அந்த வந்தனோ டுரைத்தபி னவனின தவனிதந்**
**திலனாகில்**
**முந்த வந்தண்மா முரசகே தனதிரு முகம்வர விடுகென்று**
**வந்த வந்தமன் னவர்களுந் தத்தமா நகரடைந்**
**தனர்மன்னோ.**

[இந்த அந்தணன் நீ இசைத்தன எலாம் இயல்புடன் இனி தாக, அந்த அந்தனோடு உரைத்தபின், அவன் நினது அவனி தந்திலனாகில், முந்த, அம் தண் மாமுரசம் கேதன, திருமுகம் வர விடுக என்று, வந்த அந்த மன்னவர்களும் தம் தம் மா நகர் அடைந்தனர், மன்னோ.]

**விளக்கம் ;-** அம் தண் முரச கேதன - அழகிய இனிய ஒலியை உடைய முரசைக் கொடியிலே கொண்ட தருமனே. முந்த - விரைவாக, தாமதம் இல்லாமல். உலூகன் என்னும் இந்த அந்தணன் நீ கூறியவற்றை முறையாக இனிய மொழி களால் அந்த அந்தகனாகிய திருதராட்டிரனிடம் கூறியபின், அவன் உனது பூமியைத் தாரானாகில், முரசகேதன (தருமனே), உடனே, எங்களுக்குச் செய்தி அனுப்புக, என்று சொல்லி, நட்போடு பார்க்கவந்த அரசர்கள் எல்லோரும் தத்தம் நகரை அடைந்தனர்,—என்பது பொருள். திருமுகம் - ஓலை. மன், ஓ: அசைகள்.

இயல்புடன் - தூது இலக்கணம் வழுவாதபடி. தூது சொல் வோர், கேட்போர் கருத்தோடு மாறுபட்டவற்றைச் சொல்ல வேண்டியவராதலின், வெவ்விய சொற்களை விலக்கியும் இனிய சொற்களால் மனமகிழச் சொல்லியும் காரிய சாதனைக்குரிய வழியில் முயலல் அவசிய மாதலால், 'இனிதாக உரைத்தபின்', எனப்பட்டது.

7. அரசர் போனபின் மால்பணி தவறுறா தம்முனி
தனைநோக்கி
முரச கேதன னீயெழுந் தருள்கென முனிவனைத்
தொழுதேத்தி
விரைசெய் தார்புனை வீடும னெந்தைமெய் விதுரன்வே
தியர்கோவை
பரசி னோமடி யென்றுபின் னுரியசொற் பணித்தரு
ளெனப்போந்தான்.

[அரசர் போனபின் மால் பணி தவறுறாது அ முனிவனை நோக்கி, முரசகேதனன், நீ எழுந்தருள்க என, முனிவனை தொழுது ஏத்தி, விரைசெய் தார் புனை வீடுமன், எந்தை, மெய் விதுரன் வேதியர் கோவை பரசினோம் அடி என்று, பின்னும் உரிய சொல் பணித் தருள் என, போந்தான்.]

**விளக்கம் :-** மால் - கண்ணன். எந்தை - பெரிய தந்தை யாகிய திருதராட்டிரன். வேதியர் - துரோணன். அடி பரசி னோம் - அடி வணங்கினோம். உரிய சொல் - தூதின் காரியத் திற்கு உரிய சொற்கள். என - என்று வேண்டிக்கொள்ள. தருமன், உலூகனை நோக்கி, ''நீ அத்தினபுரம் சென்று பீஷ்மன் முதலிய பெரியோர்களுக்கு எமது வணக்கத்தைத் தெரிவித்துத் தூதினை உரியபடி செய்து வருக'', என்று பிரார்த்திக்க, அவனும் பிரயாணமானான், என்பதாம். கோவை, ஐ, அசை.

8. போன நான்மறைப் புரோகித னத்தினா புரிபுகுந்
தெரிபைம்பொன்
மான வார்கழற் றிருதராட் டிரனெனு மன்னவை தனிலெய்த
ஞான மாமுனி வரவுகண் டெதிர்கொளா நயந்திரு
பதம்போற்றி
ஆன மாமணி யாசனத் திருத்தினா னரவவெங்
கொடியோனே.

[போன நான்மறை புரோகிதன் அத்தினாபுரி புகுந்து எரி பைம் பொன் மானம் வார் கழல் திருதராட்டிரன் எனும் மன் அவை தனில் எய்த, ஞானம் மா முனிவன் வரவு கண்டு எதிர் கொளா நயந்து இருபதம் போற்றி, ஆன மாமணி ஆசனத்து இருத்தினான் அரவம் வெம் கொடியோன், ஏ.]

**விளக்கம் :-** மானம் வார்கழல் - பெருமையின் அடையாள மான நீண்ட வீரக்கழல். ஞானமாமுனி - மெய்யறிவுடைய மகா முனிவன். ஆன மா மணி ஆசனம் - சிறந்ததான பெரிய மணி ஆசனம். இருத்தினான் - இருக்கச் செய்தான். உலூக மாமுனி வனது வரவு அறிந்த துரியோதனன் அவரை எதிர் கொண்டு

உபசரித்து, அவரது உபய பாதங்களையும் வணங்கித் திவ்யாசனம் ஒன்றில் இருக்கச் செய்தான், —என்பதாம்.

**9. விந்த மன்னதோள் வீடுமன் முதலியோர் விழைவுடன்**
**றொழுதேத்தி**
**வந்த வாறுரைத் தருள்கென முனிவனும் வரன்முறை**
**யடைவாக**
**அந்த னாகிய கந்தடர் கடகளிற் றரசனு மவன்றந்த**
**மைந்தர் யாவருங் கன்னனுஞ் சகுனியு மனங்கனன்**
**றிடச்சொல்வான்.**

[விந்தம் அன்ன தோள் வீடுமன் முதலியோர் விழைவுடன் தொழுது ஏத்தி, வந்த ஆறு அருள்க என, முனிவனும் வரன்முறை அடைவு ஆக, அந்தன் ஆகிய கந்து அடர் கடம் களிறு அரசனும், அவன் தந்த மைந்தர் யாவரும், கன்னனும் சகுனியும் மனம் கன்றிட சொல்வான்.]

**விளக்கம் :-** விந்தம் - விந்தியமலை. விழைவுடன் தொழுது ஏத்தி - அன்புடன் வணங்கித் துதித்து. வரன்முறை - வரலாறு, விஷயம். அடைவுஆக - முறையாக. அந்தன் - அந்தகன், (திருதராட்டிரன்). கந்து - கட்டுத்தறி. வீடுமன் முதலியோர், வந்த முனிவனை அன்புடன் வணங்கி, வந்த காரியத்தை உரைத்தருள்க என, அவனும், திருதராட்டினும், மைந்தர்களான துரியோதனாதியரும், கர்ணன் சகுனியரும் மனங் கொதிக்கும்படி கூறினான், — என்பதாம். அந்தகனாய அரசனும், அவன் தந்த மைந்தரும், என்றது, ''ஊனக் குருடனான திருதராட்டிரனும், அவன் தந்த அறிவுக் குருடராகிய துரியோதனாதியரும்'', என்ற பொருளைக் குறிக்கவல்லது.

**10. ஆண்டு பன்னிரண் டடவியுற் றொருவரு மறிவுறா**
**வகைமற்றோர்**
**ஆண்டு மன்னிய பாண்டுவின் மதலைய ரைவரும்**
**வெளிப்பட்டார்**
**ஆண்டு மன்னர்முன் சூதுபோர் பொருதழிந் திடுதலி**
**னதுநீர்கொண்(டு)**
**ஆண்டு வந்தபார் நும்மொழிப் படியவர்க் களித்திரோ**
**யளியீரோ.**

[ஆண்டு பன்னிரண்டு அடவி உற்று, ஒருவரும் அறிவுறா வகை மற்று ஓர் ஆண்டு மன்னிய பாண்டுவின் மதலை ஐவரும் வெளிப்பட்டார், ஆண்டு மன்னர்முன் சூது போர் பொருது அழிந்திடுதலின் அது நீர் கொண்டு ஆண்டு வந்த பார், நும் மொழிப்படி அவர்க்கு அளித்திரோ, அளியீரோ.]

**விளக்கம் :-** பன்னிரண்டு வருஷ வனவாசமும், ஒரு வருஷ அஜ்ஞாதவாசமும் செய்து பாண்டவர் வெளிப்பட்டார்; சூதினால் கவர்ந்துகொண்டு அரசாண்டு வந்த பூமியை, உங்கள் வாய் மொழிப்படி தரப்போகின்றீர்களா ? இல்லையா ? என்று முனிவன் கேட்டான், என்றபடி. மூன்றாவது அடியிலுள்ள ஆண்டு, என்பது, சபாமண்டபத்தில், என்ற பொருளது, அதுகொண்டு - அது காரணமாக.

**11. முன்ன ரும்பொரு துளதுநீர் சூதுபோர் மோதுபோர்**
**கருதாமல்**
**இன்ன மும்பொர வேண்டுமேற் பொருதிடு மிலஞ்சியிற்**
**பொலஞ்செங்கால்**
**அன்ன முங்கிரி மயில்களு முடன்விளை யாடுநல் வளநாட்டீர்**
**பின்ன மும்பிற வாதினிப் பண்டுபோற் பீடுறும்**
**பெருவாழ்வும்.**

[முன்னரும் பொருது உளது நீர் சூது போர் மோதுபோர் கருதாமல், இன்னமும் பொர வேண்டுமேல் பொருதிடும் ; இலஞ்சியில் பொலம் செம் கால் அன்னமும் கிரி மயில்களும் உடன் விளையாடும் நல் வளம் நாட்டீர், பின்னமும் பிறவாது, இனி பண்டு போல் பீடு உறும் பெரு வாழ்வும்.]

**விளக்கம் :-** இலஞ்சியில் பொலம் செம் கால் அன்னமும் கிரி மயில்களும் உடன் விளையாடும் நல் வளம் நாட்டீர், மோது போர் கருதாமல் நீர் முன்னரும் பொருது உளது சூது போர் ; இன்னமும் பொரவேண்டுமேல் பொருதிடும் ; பின்னமும் இனி பிறவாது, பெரு வாழ்வும் பண்டு போல் பீடு உறும்,—என்பது அன்வயம். மோதுகின்ற போரைக் கருதாமல் (பாண்டவரது பூமியை அபகரித்துக்கொள்வதற்கு) நீங்கள் முன்னரும் செய்துளது சூதாட்டமாகிய போர் ; (உங்களது மொழிப்படி நாட்டைக் கொடாமல், அதை அவர்கள் பெறுவதற்கு) அவர்கள் (மோது போர் இல்லாமல்) சூது போர் செய்ய வேண்டுமென்றால், அந்தச் சூது போரையாவது செய்யுங்கள் ; (அவ்வாறு செய்து வெல்வீரானால்) வேறுபாடும் இனி உண்டாகாது, உங்களது பெரிய செல்வ வாழ்வும் முன்போல் பெருமையுறும்,—என்பது பொருள். ''சூதாடிய நாள் மன்னவையில் நீங்கள் கூறியபடி நாட்டைக் கொடுக்குங் கருத்து இலதாயின், மறுபடியும் சூதாடி அதன் முடிவின்படியாவது நடக்கத் தீர்மானம் செய்யுங்கள் ; அதுவே றக்கது'', என்று முனிவன் கூறினான், என்க.

இலஞ்சி - நீர் நிலை, ஏரி. அன்னம் மருத நிலப் பறவை. மயில்கள் குறிஞ்சி நிலப் பறவை. வேறுபட்ட இரு நிலங்களின் கருப் பொருள்களான அன்னமும் மயில்களும் ஒன்று சேர்ந்து விளையாடின, என்ற வருணனை திணை மயக்கம் ஆகும். வேறு வேறான நிலத்திலுள்ள அஃறிணை உயிர்கள் ஒன்றுபட்டு விளை

யாடும் நாட்டினை உடையவர்களே, என்றது, அறிவுடையவர் களாசிய நீங்கள் உங்களது தாயத்தாரான பாண்டவர்களோடு மாறு கொண்டிருப்பது அமைவது ஆகாது, என்று குறிக்கும் வபாருளது. துரியோதனன், அன்னம்; வனவாசிகளாயிருந்த பாண்டவர் மயில்கள்.

**12. அன்றி யேயவ ருடன் மலை குவமென வழிவினைக் கருதாமல்**
**வென்றி யேநினைந் தெதிர்த்திரே லுங்களால் வெல்லுத**
**லரிதம்மா**
**கன்றி யேயடல் வீமனும் விசயனுங் களம்புகி லனைவீரும்**
**பொன்றி யேவிடு கின்றினிர் முனிவர்சொற் பொய்க்குமோ**
**பொய்யாதே.**

[அன்றியே அவருடன் மலைகுவம் என அழிவினை கருதாமல், வென்றியே நினைந்து எதிர்த்திரேல் உங்களால் வெல்லுதல் அரிது, அம்மா! கன்றியே அடல் வீமனும் விசயனும் களம் புகில் அனைவீரும் பொன்றியே விடுகின்றினிர், முனிவர் சொல் பொய்க் குமோ, பொய்க்காது, ஏ.]

**விளக்கம் :-** கன்றியே - மனக் கொதிப்போடு, பொன்றியே விடுகின்றினிர் - நிச்சயமாய் அழிந்தே விடுவீர். மறுபடியும் சூதாடுதலாகிய வழியையும் பற்றாமல், தோல்வியுறுதலும் நிகழக் கூடியதே என்று எண்ணாமல், வெற்றியே உண்டாகும் என்று நினைத்து எதிர்ப்பீர்களேல், உங்களால் பாண்டவர்களை வெல்லு தல் முடியாது; கன்றிய மனத்தோடு அடல் வீமனும், அடல் விசயனும் களம் புகுந்த அளவில் நீங்கள் அனைவரும் அழிதல் நிச்சயம். சாபானுக் கிரக சக்தியுடைய முனிவர்களது சொல் பொய்க்குமோ! ஒருநாளும் தவறாது, என்பது பொருள். அம்மா : வியப்பு இடைச்சொல்; பாண்டவர் பராக்கிரமங்களைப் புலவர் வியந்தபடி வீமவிசயர், என்னாமல், வீமனும் விசயனும் என்று பிரித்துக்கூறியது, அவர்களில் ஒருவர் போதும், உங்களை அழிப்ப தற்கு, என்ற குறிப்பினதாகும். களம் புகில், என்றது, ''அவர்களில் ஒருத்தர் களம் புகுதலே போதும், போர் செய்ய வேண்டா உங்களை அழிக்க,'' என்று கூறும் கருத்தினதாகும். பொன்றிவிடு வீர், என்னாமல், பொன்றி விடுகின்றினிர், என்று நிகழ் காலமாகக் கூறியது, நிச்சயம் பற்றிய காலவழு. கர்ணனைக் கொல்வதாக விசயனும், துரியோதனாதியரைக் கொல்வதாக வீமனும், சபதம் செய்திருத்தல் பற்றியும், ஐவரிலும், இவ்விருவரும் ஆற்றல் மிக்க வராதல் பற்றியும், வீம, விசயர், என்றார், என்க. முனிவர் சொல் பொய்க்குமோ, பொய்க்காதே என்ற பொதுப்பொருளால், துரியோதனாதியர் அழிவர் என்ற, சிறப்புப் பொருளைத் தோற்று வித்தலால் ; இது **வேற்றுப் பொருள்வைப்பணி**, ஆகும்.

"உன்னை அரசென்று கொண்டோர் அல்லால், எதிர்த்தோரில் யாரே வாழ்வார்", என்ற துருவாச முனிவரது கூற்றை நினைத்தும், பல பெரியோர்க்குத் தீங்கு இழைத்துத் துரியோதனன் பெற்றுள்ள சாபங்களை நினைத்தும், புலவர் இவ்வாறு கூறியதாகக் கொள்ளலாம். வெல்லுதல் அரிது, என்பதில் **அரிது,** இன்மைப் பொருளது.

## துரியோதனன் எதிர்மொழி கூறல்

**13. என்று பூசுர னியம்பலுங் குங்கும மெழிலுறு மிணைமேருக்**
**குன்று பூசிய தனையபொற் றடம்புயக் குருகுல வயவேந்தன்**
**இன்று பூசைபோ லிருந்துழி யுரைக்குமீ திகலதன்**
**றிருவர்க்கும்**
**துன்று பூசலிற் காணலா மாண்மையுந் தோள்வலி**
**மையுமென் றான்.**

[என்று பூசுரன் இயம்பலும், குங்குமம் எழில் உறும் இணை மேரு குன்று பூசியது அனைய பொன் தட புயம் குருகுலம் வயவேந்தன், இன்று பூசை போல் இருந்துழி உரைக்கும் ஈது இகலது அன்று; இருவர்க்கும் துன்று பூசலில் காணலாம் ஆண்மையும் தோள் வலிமையும் என்றான்.]

**விளக்கம் :-** இரண்டாவது அடியிலுள்ள பூசிய, என்பதைக் **குங்குமம் பூசிய,** என்று கூட்டுக. என்று உலூகன் சொன்ன அளவில், குங்குமம் பூசப்பெற்ற, தோற்றமுடைய இணையான இரு மேருமலைகளை ஒத்த அழகிய பெரிய தோள்களை உடைய குருகுலம் வந்த வலிமையுடைய அரசனான துரியோதனன்,— என்பது முதல் இரண்டடிகளின் பொருள். (அவன்) இன்று, பூனையைப்போல (வெளிவராமல்) இருக்கின்ற இடத்திலேயே இருந்து பேசும் வீர மொழிகளாகிய இது, வலிமை ஆகாது; உங்கள் இரு திறத்தார்க்கும் நேரும் நெருங்கிய போரில், பௌருஷமும் தோள்வலியும் (உடையவர் யார் என்பதைக்) காணலாம், என்று எதிர் மொழி கூறினான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். குங்குமம் பூசிய மேருமலையை ஒத்ததான புஜங்கள், என்றது இல் பொருள் உவமை அணியின் பாற்படும். வய, என்பது வலிமைப் பொருளதான உரிச்சொல். வயம் (வெற்றி) என்றும் பிரிக்கலாம். உலூக முனிவனுக்கு அரவக் கொடியோன், "அன்று போரில் வலியர் யாரென்று சோதித்துக் கொள்ளலாம்", என்று பதில் மொழிந்தான், என்பதாம்.

## விதுரன் கூறிய நல்லுரை

**14. கல்வி தூயநெஞ் சிலாதவச் சுயோதனன் கழறிய**
**மொழிகேட்டு**
**வில்வி தூரனிவ் வேதியன் மொழிப்படி மேதினி வழங்காமல்**
**புல்வி தூடக ரினுமுணர் விலாதவர் புகலும்வா சகங்கேட்கில்**
**செல்வி தூரிய ளாய்விடுஞ் சுற்றமுஞ் சேனையுங்**
**கெடுமென் றான்.**

[கல்வி தூய நெஞ்சு இல்லாத சுயோதனன் கழறிய மொழி கேட்டு வில் விதூரன், இ வேதியன் மொழிப்படி மேதினி வழங்காமல், புல் விதூடகரினும் உணர்வு இலாதவர் புகலும் வாசகம் கேட்கில், செல்வி தூரியள் ஆய்விடும்; சுற்றமும் சேனையும் கெடும், என்றான்.]

**விளக்கம் :-** கல்வியும், அதன் பயனாகும் தூய நெஞ்சும் இல்லாத துரியோதனன் கூறிய வாசகங் கேட்டு, வில் தொழிலில் வல்லவனான விதுரன், இந்த வேதியன் சொல்லின்படி பாண்டவர்க்கு அவர் பாகமாகிய பூமியைக் கொடாமல், தாழ்ந்த விதூஷகனினும் இழிந்த அறிவிலிகள் சொல்லைக் கேட்டு (நாட்டைக் கொடுக்க) மறுப்பாயானால், திருமகள் உனக்குச் சேய்மையள் ஆய்விடுவாள், (அதாவது இலட்சுமிகடாட்சம் இல்லாதவனாவாய்); உனது சுற்றமும் சேனையும் அழிதலுறும், என்று கூறினான்,—என்பது பொருள். பிறரை மகிழ்விக்கும் கருத்தை உடையவராய் வாய் வந்தன பேசும் அவிவேகிகள், விதூஷகர்; அவர்களைப் போன்றவரான சகுனி கர்ணன் முதலியோர் பேச்சைக் கேட்டுக் கெடவேண்டா, என்று விதுரன், கூறும் கருத்தது செய்யுள்.

## துரோண கிருபரின் கூற்று

**15. திரத்து வாய்மைநீ தவறிமற் றவருடன் சேனையுந்**
**திறலுங்கொண்(டு)**
**உரத்து வாளம ருடற்றலோ பெரும்பிழை யுடன்றனை**
**யாமாகில்**
**சரத்து வாய்தொறுஞ் சோரிகக் கிடவிடுந் தனஞ்சயன்**
**றனுவென்று**
**பரத்து வாசனும் பகர்ந்தனன் கிருபனும் பகர்ந்ததே**
**பகிர்ந்திட்டான்.**

[திரத்து வாய்மை நீ தவறி மற்று அவருடன் சேனையும் திறலும் கொண்டு உரத்து வாள் அமர் உடற்றலோ பெரும் பிழை; உடன்றனை ஆம் ஆகில் சரத்துவாய் தொறும் சோரி கக்கிட விடும் தனஞ்சயன் தனு என்று பரத்துவாசனும் பகர்ந் தான்; கிருபனும், (அவன்) பகர்ந்ததை பகிர்ந்திட்டான்.]

**விளக்கம் :-** திரம் - உறுதி. திரம் திறத்து வாய்மை - உறுதியுடைய வாக்கு. உரம் - வலிமை. வாள் அமர் - ஆயுதங்களைக் கொண்டு செய்யும் போர். உடற்றல் - போர் செய்தல். உடன்றனையாம் ஆகில் - போர் செய்வாயேயானால். தனஞ்சயன் தனு சரத்துவாய்தொறும் சோரி கக்கிடவிடும் - அருச்சுனனது வில்,

னைத்த இடம் எங்கும் குருதி வெளிப்படும்படி சரங்களைச் செலுத்தும். பரத்துவாசன் - பரத்வாச முனிவனது குமாரனான துரோணன். ''நீ சொன்ன சொல் தவறிச் சேனையும் ஆண்மையுங் கொண்டு பொரல், பிழையாகும்; மேலும், போர் செய்யின், விசயனது வாளிகள் உன் திறத்து வீரர்களை, அழியச் செய்யும்'', என்று துரோணனும், கிருபனும் கூறினர், என்பதாம். மற்று: அசை.

### வீடுமன் திருதராட்டிரனுக்குக் கூறல்

**16. காடு மன்னுநின் புதல்வருக் கறுதிசெய் காலமோ கழிந்தன்று**
**நாடு மன்னவ கொடாமல்வெஞ் சமர்பொர நாடினை யெனினாளைக்**
**கோடு மன்னுவி லருச்சுனற் கெதிரெவர் குனிக்கவல் லவரென்று**
**வீடு மன்திருத் தனயனோ டுறுதிகள் வெகுண்டுரைத் தனனன்றே.**

[காடு மன்னும் நின் புதல்வருக்கு அறுதி செய்த காலமோ, கழிந்தன்று, நாடு மன்னவ, கொடாமல் வெம் சமர் பொர நாடினை எனின் நாளை, கோடு மன்னு வில் அருச்சுனற்கு எதிர் எவர் குனிக்க வல்லவர் என்று வீடுமன், திரு தனயனோடு உறுதிகள், வெகுண்டு உரைத்தனன், அன்றே.]

**விளக்கம் :-** (மகனோடு சேர்ந்துகொண்டு தந்தையும் பாண்டவர் பால் நீதி நடத்தாமல் இருக்கின்றானே என்று) மைந்தனான திருதராட்டிரனிடம் கோபங்கொண்டு, அவனை மன்னவ, என்று விளித்து, (நீங்கள் நியமித்தபடி) காட்டில் பொருந்தி வசித்து வந்த உன் மைந்தர்களான பாண்டவர்க்கு, வரையறை செய்யப்பட்ட பதின்மூன்று வருஷ காலமும் கழிந்துவிட்டது. இனியும் அவர்க்குரிய தாயத்தைக் கொடாமல் வெஞ்சமர் புரிய விரும்பினையாயின், நாளை (விரைவில்) வளைவு பொருந்திய வில்லை உடைய விசயனுக்கு எதிர் (வில்லை) வளைக்க வல்லவர் எவர்? என்று, நன்மை தரவல்ல வார்த்தைகளைக் கூறினான்,—என்பது பொருள். விதுரன், துரோணன், கிருபன் கூறியது போலவே, வீடுமனும், நாட்டைப் பாண்டவர்க்குக் கொடுத்து விடலே முறை என்று தன் கருத்தைத் தெரிவித்தான் என்க, வீடுமன், திருதராட்டிரனுக்குப் பெரிய தந்தை. தம்பியான விசித்ரவீரியன் இறந்த பிறகு, வீடுமன் அவனது வளர்ப்புத் தந்தையானான். நின் புதல்வர், என்று பாண்டவரைத் திருதராட்டிரனது குமாரராகக் கூறியது, அவர்கள்பால் அவனுக்கு அன்பும், இரக்கமும் ஏற்பட வேண்டும், என்ற கருத்தினதாகும்.

## கர்ணன் சினத்தல்

**17. முன்ன மேயுகி ரிழந்தவெம் புலியென முரணழி**
**முனிமைந்தன்**
**தன்னை மற்றவ னிடத்துநீ கற்றவெஞ் சரத்தின்வென்**
**றமையல்லால்**
**என்ன சேவகங் கொண்டுநீ யாரையு மிகழ்ந்துரைப்**
**பதுவென்று**
**கன்ன னுந்திறற் காங்கெயன் றன்னொடு கண்சிவந்**
**துரைசெய்தான்.**

[முன்னமே உகிர் இழந்த வெம்புலி என, முரண் அழிந்த முனி மைந்தன் தன்னை, மற்று அவனிடத்து நீ கற்ற வெம் சரத்தின் வென்றமை அல்லால், என்ன சேவகம் கொண்டு நீ யாரையும் இகழ்ந்து உரைப்பது? என்று, கன்னனும் திறல் காங்கெயன் தன்னொடு கண் சிவந்து உரை செய்தான்.]

**விளக்கம் :-** உகிர் - நகம். நகத்தை இழந்த கொடிய கிழப் புலியைப்போல், முன்னமேயே தசரதன் மகனால் வலி அழிக்கப் பெற்றுள்ள ஜமதக்னி முனிவனது குமாரனான பரசுராமன்,— என்பது முதலடியின் பொருள். அத்தகைய வலி அழிந்த அந்தணன் தன்னை, அதன் பின், அவனிடம் நீ கற்ற வெஞ்சரத்தி னால் அவனை வென்றது அல்லாமல், வேறு நீ செய்த எந்த வீரச் செயல் காரணமாக எல்லோரையும் நீ இகழ்ந்து பேசுகின்றாய்? என்று, கர்ணனும் கோபத்தால் கண் சிவந்து வீடுமனிடம் கூறினான்,—என்பது மற்ற அடிகளின் பொருள். காங்கெயன் - கங்கை மகனான வீடுமன். வில் தொழிலில் தனக்கு நிகரானவர் எவரும் இலர் என்ற செருக்குடைய கர்ணன், அருச்சுனனை வீடுமன் பாராட்டிப் பேசியதால், சினங்கொண்டான், என்க. மற்று - அதன் பின்; அல்லது அசை,

## வீடுமன் பதில்

**18. தூம வெங்கனற் றோன்றிய தோகையந் தொடையல்சூட்**
**டியநாளில்**
**நாம வெஞ்சிலை நாணெடுத் தனையடர் நரனொடும்**
**போர்செய்தாய்**
**தாம வெண்குடை நிருபனை யந்தர சரிதர்கொண் டேகாமல்**
**வீமன் வெஞ்சிறை மீட்டநா ளினுந்திறல் வினைபுரி**
**முனைவென் றாய்.**

[தூமம் வெம் கனல் தோன்றிய தோகை அம் தொடையல் சூட்டிய நாளில், நாமம் வெம் சிலை நாண் எடுத்தனை, அடர் நரனொடும் போர் செய்தாய்; தாமம் வெள் குடை நிருபனை அந்தர சரிதர் கொண்டு ஏகாமல் வீமன் வெம் சிறை மீட்ட நாளினும் திறல் வினை புரி முனை வென்றாய்.]

**விளக்கம் :-** தூமம்-புகை. தோகை-மயிலனைய திரௌபதி. நாம வெஞ்சிலை - அச்சந்தரத்தக்க கொடிய வில். தாமம் வெண் குடை - ஒளி விளக்கமுடைய வெண் குடை. அந்தர சரிதர் - வானத்தில் சஞ்சரிக்கும் கந்தருவர். மச்ச எந்திரத்தை அறுத்த அருச்சுனனுக்குத் திரௌபதி மாலையிட்ட நாளில், வில்லை நாண் ஏற்றினாய், நின்று அடர்க்கும் நரனொடும் (அருச்சுன னோடும்) போர் செய்தாய், துரியோதனனைக் கந்தருவர் சிறை கொண்டு செல்லாதபடி வீமன் சிறை மீட்ட காலத்திலும், போர்த் தொழில் புரியும் இடமான களத்தில் (கந்தருவரை) வென்றாய்,— என்று வீடுமன் கர்ணனை இகழ்ந்தான், என்பது பொருள். போர் செய்தாய், முனை வென்றாய், என்றது, போர் உடைந்து ஓடினாய், என்று இகழ்ந்தபடி. குரு சிஷ்யக் கிரமத்தை உலகத் திற்குக் காட்டுங் கருத்தில் விஷ்ணுவின் அம்சமாகப் பத்திரகாச் ரமத்தில் எழுந்தருளிய நரநாராயணர்களே, அருச்சுனனும், கண்ணனும் ஆவர். எனவே, நரன், என்பது அருச்சுனனது பெயர் களில் ஒன்று.

**19. ஒருநன் மாநெடுந் தேரினை யறிவுறா வுத்தரன் விரைந்தூர நெருந லானிரை கவர்தரு முகத்தினு நின்றனை**
**நெடும்போது**
**மருந றாவுமிழ் துழாயவன் றேர்விட மலையுநாள் வயவாளி வெருநர் மேல்விடா விசயனை நீயலால் வெல்லவல்**
**ல்வருண்டோ.**

[ஒரு நல் மா நெடுந் தேரினை அறிவுறா உத்தரன் விரைந்து ஊர, நெருநல் ஆன் நிரை கவர்தரு முகத்தினும் நின்றனை நெடும்போது, மரு நறா உமிழ் துழாயவன் தேர்விட மலையும் நாள் வயவாளி வெருநர் மேல் விடா(த) விசயனை நீ அலால் வெல்ல வல்லவர் உண்டோ ?

**விளக்கம் :-** ஒரு நல் மா நெடுந்தேர் - ஒப்பற்ற நல்லிலக்கண முடைய குதிரைகள் பூட்டிய பெரிய தேர். அறிவுறா உத்தரன் - சாரத்தியத் தொழிலில் போதிய பயிற்சி இல்லாத உத்தரன். நெரு நல் - நேற்று, அதாவது நிரை கவர்ந்த காலத்தில். ஆன் நிரை கவர்தரு முகத்தினும் நெடும்போது நின்றனை - விசயன் நிரை மீட்டுக்கொண்டு சென்ற போர் முனையிலும் நெடும்பொழுது பின்னிடாமல் நிலை நின்றாய். மணத்தையும் தேனையும் வெளிப்படுத்தும் துளசிமாலை தரித்த கண்ணன் தேர் செலுத்த (விசயன்) போர் செய்யும்போது வெருநர் மேல் (அஞ்சி ஓடுவார் மேல்) தனது வலிய சரங்களை விடாத விசயனை வெல்ல வல்ல வர், நீ அல்லாமல் வேறு யாரேனும் உளராவாரோ!—என்பது ஈற்றடிகளின் பொருள். விசயன் நிரை மீட்ட நாள் முனையில் ''நெடும்போது நின்றனை'', என்றது, விசயனது வில்லின் முன் நிற்கமாட்டாமல் ஓடினை, என்று இகழும் கருத்தது. தேரோட்டும் தொழிலில் போதிய பயிற்சியில்லா இளைஞனை வைத்துக்

கொண்டு துணையாவார் எவருமின்றி விசயன் போர் செய்த காலத்தில், பின்னிட்டுச் சென்ற நீயா, கண்ணன் தேரோட்ட, நால்வகைப் படையோடு வந்து எதிர்க்கும்பொழுது அவனை வெல்வாய்? என்று வீடுமன் பரிகசித்தபடி.

## உலூகன் கௌரவர் கருத்தைத் தெரிவித்தல்

**20. கங்கை மாமக னிவையிவை புகலவுங் கன்னனைக்**
**கசிந்துட்கொண்(டு)**
**அங்கை கொட்டிநக் கிருந்தவந் தணனையு மவமதித்**
**தெமதேபார்**
**தங்கள் கானகந் தமதெனப் புகன்றனன் சார்ப்பகே**
**தனனந்தப்**
**பங்க யாசன முனிவனு மீண்டுபோய்ப் பாண்டவர்க்**
**கவைசொன்னான்.**

[கங்கை மாமகன் இவை இவை புகலவும் கன்னனை கசிந்து உட்கொண்டு, அம் கை கொட்டி நக்கு இருந்த அந்தணனையும் அவமதித்து, ''எமதே பார், தங்கள் கான் அகம் தமது'', என புகன்றனன் சர்ப்பகேதனன்; அந்த பங்கயம் ஆசனம் முனிவனும் மீண்டுபோய் பாண்டவர்க்கு அவை சொன்னான்.]

**விளக்கம் :-** சர்ப்ப கேதனனான துரியோதனன், பீஷ்மன் கூறிய நல்லுரைகளைக் கேளாமல், கர்ணன் கூறியவற்றை அன்புடன் ஏற்று, அவையிருந்த முனிவனையும் கைகொட்டிப் பரிகசித்தும் அவமதித்தும், ''இந்த பூமி எங்களுடையது, பாண்டவர் வசித்த காடாகிய இடமும் எங்களுடையதே!'' என்று கூறினான்; அது கேட்ட பத்மாசனத்தை மேற்கொண்ட முனிவனான உலூகனும் உபப்பிலாவியம் திரும்பிச் சென்று, அத்தினபுரியில் நிகழ்ந்த வற்றைப் பாண்டவர்க்குத் தெரிவித்தான்,—என்பதாம். யோகா சனங்களில் ஒன்று பங்கயாசனம். அதாவது, இரு தொடைகளின் மேல் இரு பாதங்களையும் ஏற்றி அமரும் நிலை. அந்த ஆசனத்தை மேற்கொண்டவன், பாண்டவர் புரோகிதனான உலூகன். கசிவு - அன்பு, மனநெகிழ்ச்சி.

## விசயனைக் கண்ணன் அழைத்தல்

**21. ஆங்க வர்க்கிவ னவணிகழ்ந் தனவெலா மருந்தகை**
**யுடன்சொல்லி**
**ஈங்கு வந்தெழில் யாதவற் கியம்பலும் யாதவன் மகிழ்வுற்று**
**வாங்கு வெஞ்சிலை விசயனை விரைவினில் வரவிடு கெனமீள**
**ஓங்கு மாதவ வுலூகனைப் போக்கினா னவனும்வந்**
**துரைசெய்தான்.**

[ஆங்கு அவர்க்கு இவன் அவண் நிகழ்ந்தன எலாம் அருந்தகை யுடன் சொல்லி, ஈங்கு வந்து, எழில் யாதவர்க்கு இயம்பலும்

யாதவன் மகிழ்வு உற்று, வாங்கு வெம் சிலை விசயனை விரை வினில் விடுக என, மீள ஓங்கு மாதவம் உலூகனை போக்கினான்; அவனும் வந்து உரை செய்தான்.]

**விளக்கம்** :- ஆங்கு - (உபப்பிலாவியத்தில்) பாண்டவர் விஷயமாக அவண் (அத்தினபுரியில்) நிகழ்ந்தனவெல்லாம் அருந்தகையுடன் (தருமனிடம்) கூறி, (பிறகு) ஈங்கு வந்து (துவாரகை வந்து) எழிலின் சிறப்புடைய கண்ணனுக்கு (விஷயத்தை) இயம்பின அளவில், யாதவன் (கண்ணன்) மகிழ்ந்து, ''வளைந்த கொடிய வில்லையுடைய விசயனை விரைவினில் இங்கே அனுப்புக'', என்று கூறி, மீளவும் வளர்கின்ற பெரிய தவத்தை உடைய உலூகனை (பாண்டவர்பால்) அனுப்பினான்; அம் முனிவனும் (உபப்பிலாவியம்) வந்து, கண்ணன் கூறிய செய்தியைக் கூறினான்,—என்பது பொருள். அருந்தகை - பெறுத தற்கரிய நல்ல குணங்களை உடைய தருமன். யாதவன் - யது குலத்தில் தோன்றியவன் (கண்ணன்). பாண்டவர்க்கு நாடு ககாடுக்கத் துரியோதனன் மறுத்ததைக் கேட்டுக் கண்ணன் மகிழ்ந்தது, தான் வந்த பூபாரம் தீர்க்கும் காரியம் விரைவில் நடக்கும், என்ற கருத்தினால், என்க.

**உலூகன் தூது சருக்கம் முற்றும்.**

# 2. வாசுதேவனைப் படைத்துணை அழைத்த சருக்கம்

வசுதேவ குமாரனான கண்ணனை, இனி நிகழவிருக்கும் பாரதப் போரில் தமக்குத் துணையாகும்படி, துரியோதனனும், அருச்சுனனும் சென்று அழைத்ததை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம். படைத்துணை, என்பது, பகைப் படையை அழித் தற்குத் துணை, என்று பொருள்படும்.

**கடவுள் வணக்கம்**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. அராவணை துறந்து போந்தன் றசோதைகண் களிப்ப நீடு**
**தராதலம் விளங்க வெண்ணெய்த் தாழிசூழ் தரநின் றாடிக்**
**குராமணங் கமழுங் கூந்தற் கோவியர் குரவை கொண்ட**
**புராதனன் றனையே யேத்தும் புனிதர்தாள் போற்றி**
**செய்வாம்.**

[அரா அணை துறந்து போந்து அன்று அசோதை கண் களிப்ப நீடு தராதலம் விளங்க, வெண்ணெய் தாழி சூழ்தர நின்று ஆடி, குரா மணம் கமழும் கூந்தல் கோவியர் குரவைகொண்ட புராதனன் தனையே ஏத்தும், புனிதர் தாள் போற்றி செய்வாம்.]

**விளக்கம் ;-** அக்காலத்தில் சேஷ சயனத்தை விட்டுவிட்டு வடமதுரையில் வசுதேவன் மகனாக அவதரிந்து, திருவாய்ப்பாடியில் அசோதைப் பிராட்டி கண் களிக்கவும், பெரிய பூலோகம் தர்ம விளக்கம் பெறவும், வெண்ணெய்க் குடத்தைக் சூழ்ந்து நின்று,ஆயர் மகளிரொடு குரவைக் கூத்து ஆடியருளிய, பழைமையானவனான திருமாலை வணங்கித் துதிக்கும் புனிதரது திருவடிகளைப் போற்றுவோம்,—என்பது பொருள். குரா மணம் கமழும் கூந்தல் கோவியர் - குரவ மலரின் மணம் வீசும் கூந்தலை உடைய இடைப்பெண்கள், புனிதர் - பரிசுத்தமான பாகவதர். புராதனன் - ஆதி அந்தம் இல்லாதவன், அதாவது அநாதியான மூர்த்தி.

## துரியோதனன் மந்திராலோசனை

**2. புரோகிதன் தூது வந்து போனபின் புயங்க கேது**
**விரோசனன் சுதனைக் கங்கா சுதனொடும் வெகுளி மாற்றித்**
**துரோணனை முதலா மிக்க தொன்மதி யமைச்ச ரோடும்**
**சரோருக சதனமென்னத் தனித்திருந் தெண்ணி னானே.**

[புரோகிதன் தூது வந்து போனபின் புயங்ககேது, விரோசனன் சுதனை கங்கா சுதனொடும் வெகுளி மாற்றி, துரோணனை முதல் ஆம் மிக்க தொல் மதி அமைச்சரோடும் சரோருக சதனம் என்ன தனித்து இருந்து எண்ணினான், ஏ.]

**விளக்கம் :-** புரோகிதன் - உலூகமா முனிவன். புயங்க கேது - (அன்மொழித் தொகை) துரியோதனன், (பாம்பைக் கொடியிலே உடையவன்) விரோசனன் சுதன் - சூர்யபுத்திரனான கர்ணன். கங்காசுதன் - வீடுமன். சரோருக சதனம் - தாமரை இலை. தூது வந்த முனிவன் சென்றபின், துரியோதனன் கர்ணனும் வீடுமனும் கொண்ட மாறுபாட்டைத் தணிவித்து, துரோணனை முதலாக உடைய, பழமையான சிறந்த அறிவுடைய மந்திரிகளோடு தாமரை இலைபோல் தனித்து இருந்து இனிச் செய்ய வேண்டுவது பற்றி ஆலோசனை செய்தான்,—என்பதாம். தாமரை இலை தன்மேல் உள்ள நீர்த்துளிகளோடு கலவாது தனித்து இருத்தல்போல், வீடுமன், துரோணன் முதலிய பெரியோர்களுடன் கூடியிருந்தும், துரியோதணன் அவரது மேன்மைக் குணங்களுடன் சம்பந்தப்படாதவனாய்த் தனது துர்குணங்களோடு தனித்திருந்தமை பற்றி, ''சரோருக சதனம் என்னத் தனித்திருந்தான்'', என்றார்.

## துரியோதனன் துவாரகை செல்லல்

**3. தேயமெங் கெங்குஞ் செங்கோல் செலுத்துமத் திகிரிவேந்தர்**
**ஆயவர் தம்மைக் கூட்ட வடைவினிற் றூது போக்கிக்**
**காயமு முயிரு மாகிப் பொருடொறுங் கலந்து நின்ற**
**மாயவன் றன்னைக் கூட்ட வளர்மதிற் றுவரை சேர்ந்தான்.**

[தேயம் எங்கு எங்கும் செங்கோல் செலுத்தும் அ திகிரி வேந்தர் ஆயவர் தம்மை கூட்ட அடைவினில் தூது போக்கி, காயமும் உயிரும் ஆகி பொருள்தொறும் கலந்து நின்ற மாயவன் தன்னை கூட்ட வளர் மதில் துவரை புக்கான்.]

**விளக்கம் :-** மதி அமைச்சரோடு, ஆலோசனை செய்த பின்பு, துரியோதனன், பூமியின் பல பாகங்களிலும் உள்ள மன்னர்களைத் தனக்குப் படைத் துணையாகக் கொள்ள அடைவினில் (முறையாக) தூதர்களை அனுப்பியபின், எல்லாச் சீவராசிகளிடத்தும் உடலும் உயிருமாய், அவற்றொடு கலந்து நின்ற கண்ணனைத் தன் பக்கம் சேர்க்க, ஓங்கியுயர்ந்த மதில்களை உடைய துவாரகை போய்ச் சேர்ந்தான், என்பது பொருள். சர்வாந்தர்யாமியாய் எல்லாப் பொருள்களிலும் வியாபித்து நிற்பவன், என்ற பொருளது, மூன்றாவது அடி. ஆளுகையைக் **கோல்** என்றும், ஆணை, **திகிரி** என்றும், கூறல் மரபு.

துவாரகையின் வருணனை

**4. மாடநீள் வீதி மூதூர் வயங்குமா மதிலின் தோற்றம்**
**ஏடவிழ் துளப மாலங் கிருந்தன னென்று கேட்டுச்**
**சேடன்வந் தநந்த கோடி செங்கதிர் மணியின் பத்திச்**
**சூடிகா மகுடத் தோடுஞ் சூழ்ந்ததோர் தோற்றம் போலும்.**

[மாடம் நீள் வீதி மூதூர் வயங்கும் மா மதிலின் தோற்றம், ஏடு அவிழ் துளபம் மால் அங்கு இருந்தனன் என்று கேட்டு, சேடன் வந்து அநந்த கோடி செம் கதிர் மணியின் பத்தி சூடிகா மகுடத்தோடும் சூழ்ந்தது ஒரு தோற்றம் போலும்.]

**விளக்கம் -:** இது துவாரகையைச் சூழ்ந்துள்ள மதிலின் வருணனை. ஆதிசேஷன், மலர்ந்த துளசிமாலையை உடைய திருமால், அங்கே இருந்தனன் என்று கேள்விப்பட்டு, அநேக கோடி சிவந்த ஒளி கொண்ட மாணிக்கங்களின் வரிசையோடு கூடிய உச்சிக் கொண்டையை உடைய முடிகளுடனே, (துவாரகை) வந்து (அதைச்) சூழ்ந்ததாகிய ஒரு தோற்றத்தை (மதில்) ஒத்திருந்தது, —என்பதாம். மதிலுக்கு ஆதிசேஷனது உடலும், நாஞ்சில் முதலிய மதில் உறுப்புக்களுக்கு உச்சிக் கொண்டையோடு கூடிய முடிகளும், மதிலினிடம் இழைக்கப்பட்ட மாணிக்க மணிகளுக்கு, ஆதிசேஷன் முடிகளிலுள்ள நாகரத்தினங்களும் உவமை. திருமால் இங்கே இருந்தனன் என்று அறிந்து, ஆதிசேஷன் வந்து துவாரகையைச் சுற்றிக்கொண்டது போலிருந்தது மதிலின் தோற்றம், என்பது தற்குறிப்பேற்ற அணி. சேடன் - பிரளய காலத்திலும் அழியாது எஞ்சியிருப்பவன்; நித்தியன்.

5. கார்க்கடல் வண்ணன் றன்பாற் கண்டுயி லொழிந்து
போந்து
மேற்கடற் றுவரை மூதூர் மேவரும் விரகு நோக்கிப்
போர்க்கடற் பொறிகள் யாவும் பொறித்தவப் புரிசை
தன்னைப்
பாற்கடல் வளைத்த தொக்கும் பன்மல ரகழி யம்மா.

[கார் கடல் வண்ணன் தன்பால் கண் துயில் ஒழிந்து போந்து மேல் கடல் துவரை மூதூர் மேவரும் விரகு நோக்கி, போர் கடல் பொறிகள் யாவும் பொறித்த அ புரிசை தன்னை பால் கடல் வளைத்தது ஒக்கும் பல் மலர் அகழி, அம்மா.]

**விளக்கம் :-** பலவகைப்பட்ட மலர்களைக் கொண்ட (துவாரகையைச் சூழ்ந்துள்ள) அகழியானது, — பாற்கடலானது, கருங் கடல் போன்ற நிறத்தினனான திருமால் தன்னிடம் யோக நித்திரை செய்தலை ஒழித்து, மேலைக் கடலிலே உள்ள துவாரகையாகிய பழைமையான நகரில் எழுந்தருளியிருக்கும் மாயச் செயலை நோக்கி, போராகிய கடலைக் கடத்தற்கு உரிய பலவகைப்பட்ட யந்திரங்கள் எல்லாவற்றையும் தன்னிடத்தே கொண்ட மதிலை வளைத்துக் கொண்டதை ஒக்கும்,—என்பது பொருள். பாற்கடலை நீத்துத் திருமால் துவாரகையில் இருப்பது நோக்கி, அப் பாற்கடல், நகர மதிலைச் சூழ்ந்துகொண்டது போன்றது, அகழி, என்ற வருணனை தற்குறிப்பேற்ற அணி. விரகு - மாயம். அகழ்தல் - தோண்டுதல்; எனவே அகழப் பட்டது, அகழி ஆகின்றது.

6. ஈண்டுநீ வரினு மெங்க ளெழிலுடை யெழிலி வண்ணன்
பாண்டவர் தங்கட் கல்லாற் படைத்துணை யாக மாட்டான்
மீண்டுபோ கென்றென் றந்த வியன்மதிற் குடுமி தோறும்
காண்டகு பதாகை யாடை கைகளாற் றடுப்ப போன்ற.

[ஈண்டு நீ வரினும் எங்கள் எழில் உடை எழிலி வண்ணன் பாண்டவர் தங்கட்கு அல்லால் படை துணை ஆகமாட்டான்; மீண்டு போகு, என்று என்று அந்த வியன் மதில் குடுமி தோறும் காண்தகு பதாகை ஆடை கைகளால் தடுப்ப போன்ற.]

**விளக்கம் :-** துரியோதனன் துவாரகையை நெருங்கிய பொழுது மதில்களின் மேலுள்ள கொடிகள், காற்றினால் எற்றுண்டு ஆடுதலைப் புலவர், "பாண்டவர்க்கே கண்ணன் துணையாவான், நீ வாராதே, போய்விடு", என்று கொடிகள் தமது கைகளால் அவனது வருகை விலக்குவதாகக் கூறிய, இது, **தற்குறிப் பேற்ற அணி**யாகும். காண்தகு பதாகை ஆடை - காணத்தகுந்த, அதாவது அழகிய கொடிச் சீலை. என்று, என்று, என்ற அடுக்கு, பலமுறை கொடிகள் கைகளால் அவன் வருகையை விலக்கின, என்ற பொருளது.

**7. அருள்குடி யிருக்குங் கண்ணா னவதரித் தனனென்**
**றெண்ணித்**
**தரணியின் மீது வந்து தன்னுடைச் சோதி வைகும்**
**பரமமா ஞான போகப் பதிகுடி யிருந்த தன்ன**
**திருநகர் வீதி புக்கான் சித்தசித் துணர்வி லாதான்.**

[அருள் குடி இருக்கும் கண்ணான் அவதரித்தனன் என்று எண்ணி, தரணியின்மீது வந்து தன்னுடை சோதி வைகும் பரமம் மா ஞானம் போதம் பதி குடியிருந்தது அன்ன திரு நகர் வீதி புக்கான், சித்து அசித்து உணர்வு இலாதான்.]

**விளக்கம் :-** அருள் குடி இருக்கும் கண்ணான் அவதரித் தனன், என்று எண்ணி, தன்னுடை சோதி வைகும் பரமம் மா ஞானம் போகம் பதி தரணியின் மீது வந்து குடிஇருந்தது அன்ன திரு நகர் வீதி, சித்து அசித்து உணர்வு இலாதான், புக்கான்,— என்பது அன்வயம். அருள் குடியிருக்கும் கண்ணான் - அருளின் இருப்பிடமான திருமால். தன்னுடை சோதி வைகும் பரமஞான போகப்பதி - அவதாரங்களுக்கு எல்லாம் ஆதியான தன்னுடைய ஒளி வடிவம் நிலையாய்த் தங்கியிருக்கும் மேலான சிறந்த ஞானத் தின் பயனாய் வரும் நிரதிசயப் பேரின்பம் (துன்பக் கலப்பு இல்லா நிலையுடைய சிறந்த இன்பம்) தரும் வைகுந்த நாடு. திருமால் அவதரித்துத் துவாரகையில் வாழ்கின்றான் என்று. வைகுந்தம் வந்து இங்கே குடி புகுந்தது போன்ற துவாரகையின் வீதியி னிடத்தே, சித்து அசித்து என்ற அறிவு இலாத தீயனான துரியோ தனன் போய்ச் சேர்ந்தான், என்பதாம், இது, தற்குறிப் பேற்ற அணி ஆகும்; 'சித்து அசித்து, என்ற உணர்வு இலாதான்', என்பது, ''உயிருக்கு உறுதி தேடும் கருத்தின்றி, அசித்தாகிய உடலைப் போற்றுதலே பிறவியின் பயன் என்று கொண்டு தொழிற்படும் மூடன்'', என்ற பொருளது. சித்து - ஆத்மா. அசித்து - தேகம்.

கண்ணன் சயனித்துக்கொண்டிருத்தல்

**8. வந்தமை யறிந்து கொற்ற வாயிலோர் தம்மை நோக்கி**
**அந்தன்மா மதலை வந்தா லறிவியா தழைமி னென்று**
**சந்திர னொடுங்கி நிற்பத் தபனனே சரிக்கு மாறு**
**பந்தனை யிலாதான் யோகத் துயில்வரப் பள்ளி**
**கொண்டான்.**

[வந்தமை அறிந்து கொற்றம் வாயிலோர் தம்மை நோக்கி, அந்தன் மாமதலை வந்தால் அறிவியாது அழைமின் என்று, சந் திரன் ஒடுங்கி நிற்ப தபனனே சரிக்கும் ஆறு, பந்தனை இலாதான் யோகம் துயில் வர பள்ளி கொண்டான்.]

**விளக்கம் :-** அந்தன் - அந்தகன் (குருடனான திருதராட் டிரன்) அறிவியாது அழைமின் – எனக்குத் தெரிவிக்காமல் உள்ளே செல்ல விடுங்கள். பந்தனை இலாதான் - எந்தவிதமான பந்தங்

களும் இல்லாதவனான கண்ணன். யோகத்துயில்-யோக நித்திரை, அறி துயில். அந்தகன் மகனான துரியோதனன் விசயனுக்கு முன் துவாரகை வந்தது தெரிந்து, அவன் வரின், எனக்கு அறிவிக் காமலே அவனை உள்ளே வரவிடுங்கள், என்று வாயில் காப்போ ருக்குப் பணித்துக் கரும சம்பந்தம் இல்லாதவனான, கண்ணன் தனக்கு யோக நித்திரை வரவே பள்ளியில் கண் துயின்றான்,— என்பதாம். மூக்கின் இடப்புறத்துச் சுவாசம், சந்திரகலை; வலப் புறத்துச் சுவாசம், சூரியகலை. எனவே, சந்திரனும், தபனனும் (சூரியனும்), சந்திர கலையையும் சூரிய கலையையும் முறையே உணர்த்தும். வலப்புறம் சாய்ந்து படுத்தால், சூரிய கலையின் ஓட்டம் மிகுவதும், சந்திரகலை ஒடுங்குவதுமாகும். எனவே, கண்ணன் வலப்புறமாக ஒருக்கணித்துச் சந்திர கலை ஒடுங்கி, சூரிய கலை மிகுமாறு துயில் கொண்டிருந்தான் என்பது மூன்றாவது அடியின் பொருள். ஆற்றலில் குறைந்த துரியோதனன் ஒடுங்கவும், ஆற்றலில் சிறந்த பாண்டவர் வாழவும் திருவுளங் கொண்டு (சயனித்திருந்தான்), என்ற பொருளையும், மூன்றாவது அடி, பிறிது மொழிதல் என்ற அணிவகையால் உணர்த்தும். இறைவன் தன்வரையில் கரும சம்பந்தம் இல்லாதவனாய் இருத்தலோடு, தனக்குச் சரீரமாகக் கொண்டுள்ள சராசரப் பொருள்களின் கருமத்தின் தொடர்பும் இல்லாதவன் என்ற கருத்தில், 'பந்தம் இலாதான் என்று புலவர் கண்ணனைக் குறித்தார்,—என்க. உடலை இயக்கும் உயிருக்கு, உடலின் குணமான, நிறம், வளர்ச்சி தேய்வு, அழிவு முதலியவற்றின் சம்பந்தம் இல்லாததுபோல், ஆன் மாவினிடத்தே இடங்கொண்டு அதனை இயக்கும் பரமாத்மாவுக் கும், அந்த ஜீவனின் நல்வினை, தீவினை ஆகிய கருமங்களின் சம்பந்தமில்லை, என்பது அறிக.

**9. பொற்புடைப் புனிதன் கோயிற் புறத்தினி லனிக நிற்பச்**
**சற்பவெம் பதாகை வேந்தன் றடையறத் தனிச்சென்**
**றெய்தி**
**உற்பல வண்ணன் பள்ளி யுணர்தரு காறு மிட்ட**
**சிற்பவண் டவிசி னேறித் திருமுடிப் பக்கஞ் சேர்ந்தான்.**

[பொற்பு உடை புனிதன் கோயில் புறத்தினில் அனிகம் நிற்ப, சற்பம் (சர்ப்பம்) வெம் பதாகை வேந்தன், தடை அற சென்று எய்தி உற்பலம் வண்ணன் பள்ளி உணர்தரு காறும், இட்ட சிற்பம் வள் தவிசின் ஏறி திருமுடி பக்கம் சேர்ந்தான்.]

**விளக்கம் -:** பொற்புடை புனிதன் கோயில் - அழகுடைய பரிசுத்த மூர்த்தியான கண்ணபிரானது திருமாளிகை. அனிகம் - சேனை. சற்பம் வெம்பாதகை வேந்தன் - துரியோதனன், உற்பல வண்ணன் - நீலோற்பலம் (கருங்குவளை) போன்ற திரு நிறத்தின

னான கண்ணன். பள்ளி உணர்தரு காறும் - துயில் கலைந்து எழுந்திருக்கும் அளவும், சிற்பம் வள் தவிசு - சிற்ப வேலைப்பாடு அமைந்த சிறந்த ஆசனம்; கண்ணன் திருமாளிகையின் புறத்தில் சேனையை இருக்கச்செய்து, துரியோதனன் தடையொன்றும் இல்லாமல் திருமாளிகையின் உள்ளே சென்று, கண்ணனின் திரு முடிப் புறத்தே இருந்த அழகிய ஆசனத்தில், அவன் துயிலுணரும் அளவும் காத்திருந்தான்,—என்பதாம்.

**10. வந்திலன் விசய னென்று வான்றுயில் புரிந்த வண்ணல்**
**சிந்தனை செய்யும் வேளைச் சிந்தையிற் கடிய தேரோன்**
**பந்தனை யறுக்கும் பாத பங்கயம் பணிந்து நிற்ப**
**முந்துற விழித்து நோக்கி முகமலர்ந் தருள்செய் தானே.**

[வந்திலன் விசயன் என்று வான் துயில் புரிந்த அண்ணல் சிந்தனை செய்யும் வேளை, சிந்தையின் கடிய தேரோன், பந்தனை அறுக்கும் பாத பங்கயம் பணிந்து நிற்ப, முந்துற விழித்து நோக்கி, முகம் மலர்ந்து அருள் செய்தான், ஏ.]

**விளக்கம் :-** வான் துயில் - யோக நித்திரை. பந்தனை அறுக்கும் பாதபங்கயம் - அடியார்களின் வினையாகிய பந்தங் களை நீக்கியருளும் (கண்ணனது) திருவடித்தாமரை. (துரியோ தனன் திருமுடிப்புறம் வீற்றிருக்க) வந்திலனே விசயன் என்று அறிதுயில் அமர்ந்த கண்ணன் நினைத்த அளவில், அவனும் வந்து, கண்ணனது திருவடி மலரை வணங்கி நிற்க, முற்பட அவனைப் பார்த்து மலர்ந்த முகத்துடன் கடாட்சித்தான், என்பதாம். கண்ணன் துயில் கொண்டது விசயன் வாராமையால். அவனது துயில், நம்மது போலன்றி, அறிதுயிலாதல் பற்றி, வான் துயில், எனப்பட்டது. சிந்தையின் கடிய தேரோன் - மனோவேகத்தினும் வேகமாகச் செல்லக்கூடிய குதிரைகள் பூட்டப்பெற்ற தேரை உடைய விசயன்.

**11. நின்றவ னிருந்த வேந்தன் வரவினை நிகழ்த்த நேமி**
**பொன்றிகழ் படையோ னந்தப் பொய்த்துயிற் பாய னீங்கி**
**மன்றலந் தொடையன் மார்பா வரவெனக் குரைசெ யாதென்**
**என்றுர நெருங்கிப் புல்லி யின்சொலா லுவகை செய்தான்.**

[நின்றவன், இருந்த வேந்தன் வரவினை நிகழ்த்த நேமி பொன் திகழ் படையோன், அந்த பொய் துயில் பாயல் நீங்கி, மன்றல் அம் தொடையல் மார்பா, வரவு எமக்கு உரை செயாது என்? என்று, உரம் நெருங்க புல்லி, இன் சொலால் உவகை செய்தான்.]

**விளக்கம் :-** நின்றவன் - விசயன். இருந்த வேந்தன் - தலைப்புறம் வீற்றிருந்த துரியோதனன், நிகழ்த்த - சொல்ல, அறிவிக்க. நேமி பொன் திகழ் படையோன் - சுதர்சனம் என்னும்

சக்கரமாகிய அழகின் விளக்கமுடைய ஆயுதத்தை உடைய கண்ணன். பொய்த்துயில் பாயல் நீங்கி - பொய் யுறங்கிய படுக்கையினின்று எழுந்து. உரம் - மார்பு. நிள்றவனான விசயன் வீற்றிருந்த துரியோதனன் வரவைத் தெரிவிக்கக் கண்ணன் படுக்கைவிட்டு எழுந்து, (அவனை நோக்கி) ''உனது வரவை முன்னமே எனக்குத் தெரிவியாதது ஏன்?'' என்று கூறி, அவனை மார்போடு அணைத்துக்கொண்டு, உபசார வார்த்தை களால் அவனை மகிழ்வித்தான், என்பதாம். சக்கரம் அடியார்க்கு அழகிய ஆபரணம்; ''தூதர் மூலம் வரவைத் தெரிவிக்காமலும், வந்தபின் வாயில் காவலர் மூலம் அறிவிக்காமலும் உள்ளே புகுந்தபின், தன்னைத் துயிலெழுப்பாமை, ஏன்?'' என்று கேட்கும் கருத்தது, ''வரவு எமக்கு உரை செய்யாதது ஏன்?'' என்றது. அருச்சுனனுக்கு முகம் மலர்ந்து அருள் செய்த கண்ணன், வாய்ச் சொல்லால் துரியோதனனை மகிழ்வித்தான், என்றது, அத் தீயன் கண்ணனது அருளுக்கு உரியன் அல்லன், என்பதைக் காட்டும்.

## இருவரும் கண்ணனது துணை வேண்டல்

**12. இருவிரும் வந்த வாறென் னியம்புதி ரென்று வாச**
**மருவிரி துளப மாலை மரகத வண்ணன் கேட்பச்**
**செருவினீ யெமக்கு வெம்போர் செய்துணை யாக வேண்டும்**
**பொருவிலோ யென்று கொண்டவ் விருவரும் புகன்ற காலை.**

[இருவிரும் வந்த ஆறு என்? இயம்புதிர், என்று வாசம் மரு விரி துளபம் மாலை மரகதம் வண்ணன் கேட்ப, செருவில் நீ எமக்கு வெம் போர் செய் துணை ஆகவேண்டும், பொருவு இலோய் என்று (கொண்டு) புகன்ற காலை,—இதுவும் அடுத்த கவியும் குளகம்.]

**விளக்கம் :-** ''நீங்கள் இருவரும் இங்கே வந்த காரியம் யாது?'' என்று கண்ணன் கேட்க, இருவரும் இனி நிகழவிருக்கும் போரில், எங்களுக்குத் துணையாக வேண்டும், என்று கேட்டனர், என்பதாம். வாசம் மரு விரி துளப மாலை—மிகுந்த வாசனை உடைய துளசிமாலை. மரு, என்பதற்குத் தேன், என்றும் பொருள் கொள்ளலாம். மரகதம் - பச்சை. கருமை, பச்சை, நீலம் என்ற நிறங்களை வேறுபாடின்றிப் புலவர்கள் கையாளுதல் மரபு.

**13. உற்றம ருதவி செய்வா னுதிட்டிரன் தனக்கு முன்னே**
**சொற்றன மாங்க ணீங்குந் துயிலுணர் பொழுதத் தின்று**
**விற்றிறல் விசயன் முந்த விழிக்கிலக் கானா னென்று**
**பற்றறத் துணிந்து சொன்னான் பாண்டவர் சகாய னானான்.**

[உற்று அமர் உதவி செய்வான் உதிட்டிரன் தனக்கு முன்னே சொற்றனம் ஆங்கண், ஈங்கும் துயில் உணர்ந்த பொழுதத்து இன்று, வில் திறல் விசயன் முந்த விழிக்கு இலக்கு ஆனான் என்று, பற்று அற துணிந்து சொன்னான், பாண்டவர் சகாயன் ஆனான்.]

**விளக்கம் :-** (கண்ணனைத் தன்பக்கம் சேர்த்துக்கொள்ளலாம் என்று நினைத்த துரியோதனனை நோக்கி) ''போரில் உதவி செய்வதாகத் தருமனுக்கு முன்னரே சொல்லிவிட்டேன். மேலும் துயில் நீங்கி எழுந்த பொழுது விசயனே முதலில் என் விழிக்கு இலக்கு ஆனான்'', என்று கண்ணன், அவனுக்குத் தான் துணை அமைய முடியாமையைத் தெரிவித்தான், என்பதாம். பற்றுஅற- துரியோதனனுக்கு ஆசை நீங்கும்படி. அமர் உற்று - போரில் பொருந்தி.

**14. முடைகமழ் முல்லை மாலை முடியவன் றன்னைப் போரில்**
**படையெடா தொழிதி யென்று பன்னக துவசன் வேண்ட**
**நெடியமா முகிலு நேர்ந்து நினக்கினி விசய போரில்**
**அடுபடை யின்றிச் செய்யு மாண்மையென் னறைதி**
**என்றான்.**

[முடை கமழ் முல்லை மாலை முடியவன் தன்னை போரில் படை எடாது ஒழிதி என்று பன்னக துவசன் வேண்ட, நெடிய மா முகிலும் நேர்ந்து, ''நினக்கு இனி விசய, போரில் அடுபடை இன்றி செய்யும் ஆண்மை என், அறைதி'', என்றான்.]

**விளக்கம் :-** முடை - தயிர், வெண்ணெய் ஆயவற்றின் மணம். தனக்குத் துணையாக முடியாமையைக் கண்ணன் தெரிவிக்கவும், துர்ரியோதனன், ''போரில் ஆயுதங்களை எடாமையையாவது செய்க'', என்று வேண்ட; கண்ணன் அதற்குச் சம்மதித்து, விசயனை நோக்கி, படை எடாமல் போரில் நான் உனக்குச் செய்யத்தக்க உதவி யாது?'' என்றான், என்பதாம். இடையர்க்குரிய முடையை, அச்சேரியில் வளர்ந்த கண்ணன் மேல் ஏற்றிக் கூறியது, அப்பிரானது சௌலப்பிய குணத்தைப் பாராட்டும் கருத்தது.

**15. செருமலி யாழி யங்கை செழுஞ்சுடர் நின்றென் றேரில்**
**பொருபரி தூண்டி னிந்தப் பூதலத் தரச ரொன்றோ**
**வெருவரு மியக்கர் விண்ணோர் விஞ்சைய ரெனினு**
**மென்கை**
**வரிசிலை குழைய வாங்கி மணித்தலை துமிப்ப னனெறான்.**

[செருமலி ஆழி அங்கை செழுஞ்சுடர் நின்று என் தேரில் பொரு பரி தூண்டின் இந்த பூதலத்து அரசர் ஒன்றோ! வெரு வரும் இயக்கர் விண்ணோர் விஞ்சையர் எனினும் என் கை, வரி சிலை குழைய வாங்கி மணி தலை துமிப்பன், என்றான்,]

**விளக்கம் :-** செரு மலி ஆழி - போரில் ஆற்றல் மிகுந்து விளங்கும் சக்கரம். ''போரில் என் தேரைச் செலுத்துவாயாயின், பூதலத்தோர் கிடக்க, விண்ணில் உள்ளோரின் வலியையும் கடப்பேன்'', என்று விசயன் பதில் மொழிந்தான், என்பதாம். துமித்தல் - துண்டித்தல். செழுஞ் சுடர் ஒளி வடிவினனான

கண்ணன்; சூரியன், சந்திரன், அக்கினி என்ற முச்சுடரினும் மேம் பட்ட ஒளி விசேஷத்தை உடையவன், என்பது கருத்து. ஒன்றோ- உன் துணை உளதேல், விண்ணவர் வலியையும் கடக்கவல்ல எனக்கு, பூதலத்து அரசர் ஒரு பொருளோ. வரிசிலை - கட்ட மைந்த வில், அல்லது நீண்ட வில். குழைதல் - வளைதல். குழைய வாங்கி - நன்றாக வளைத்து. செழுஞ்சுடர் (விளி), முன்னிலைக்குப் படர்க்கை வந்த இடவழு.

கண்ணன் கூற்று

**16. அடர்சிலை விசய னிவ்வா றிசைத்தலு மமலன் வஞ்சப்**
**படவர வுயர்த்த வென்றிப் பார்த்திவன் றன்னை நோக்கி**
**நடையுடைப் புரவித் திண்டேர் நானிவர்க் கூர்வ தன்றி**
**மிடைபடை யேவி நும்மோ டமர்செயேன் வேந்த**
**வென்றான்.**

[அடர்சிலை விசயன் இ ஆறு இசைத்தலும் அமலன், வஞ்சம் படம் அரவு உயர்த்த வென்றி பார்த்திவன் தன்னை நோக்கி, ''நடை உடை புரவி திண் தேர் நான் இவற்கு ஊர்வது அன்றி, மிடை படை ஏவி நும்மோடு அமர் செயேன், வேந்த'', என்றான்.]

**விளக்கம் :-** பார்த்திவன் - பார்த்திபன், அரசன், (துரியோத னன்.) நடை உடை புரவி - பலவகைப்பட்ட கதிகளை உடைய குதிரை. மிடை படை - நெருங்கிய ஆயுதங்கள்; அதாவது ஆயுத மிகுதி. ''தேர்ஊர்தல் ஒன்று போதும்'', என்று விசயன் கூறியது கேட்ட கண்ணன் துரியோதனனை நோக்கி, ''வேந்தனே, விசயனுக்குத் தேர் செலுத்துதல் அன்றி, நான் போரில் படை கொண்டு உங்களோடு பொரேன் என்றான், என்பதாம்.

**17. எம்மையே யொழிய வுள்ள யாதவ குலத்து ளோர்கள்**
**தம்மையு மெம்மு னான தாலகே துவையுஞ் சேரச்**
**செம்மையோ டுதவி யாகக் கொண்டுநீ செல்க வென்று**
**மும்மையு முணர்ந்த நாதன் முன்னுறப் பின்னுஞ்**
**சொன்னான்.**

[எம்மையே ஒழிய உள்ள யாதவ குலத்து உளோர்கள் தம்மையும், எம் முன் ஆன தாலகேதுவையும் சேர செம்மையோடு உதவி ஆக கொண்டு நீ செல்க என்று, மும்மையும் உணர்ந்த நாதன் முன் உற பின்னும் சொன்னான்.]

**விளக்கம் :-** எம் முன் ஆன தாலகேது - எங்களது தமையனான பனைமரத்தைக் கொடியில் கொண்ட பலராமன். மும்மையும் உணர்ந்த நாதன் - முக்காலங்களையும் அறிந்த தலைவனான கண்ணன். **எம்மை** என்றதும், **எம்முன்** என்றதும், தன்னோடு சாத்தகியையும் உளப்படுத்துங் கருத்தது. ''எம்மை ஒழிய யதுகுல வீரர்கள் அனைவரையும் தமையனான பலராமனை யும் துணையாகக் கொள்க;', என்றுகண்ணன் துரியோதனனுக்குக் கூறி, மேலும் கூறுவானாயினான், என்பதாம்.

**18. கிருதவன் மாவக் குரோணி கிளர்படை யோடு நின்பால்**
**வருவனென் றுரைத்து வேண்டு மதுரவாய் மைகளுங் கூறி**
**மருதுபோழ்ந் திட்ட செங்கண் மாயவன் விடுப்ப வேகிக்**
**கருதலான் வினய மொன்றுங் கண்ணன்முன் னோனைக்**
**கண்டான்,**

[கிருதவன்மா (கிருதவர்மா) அக்குரோணி கிளர் படையோடு நின்பால் வருவன், என்று உரைத்து, வேண்டும் மதுரம் வாய்மைகளும் கூறி மருது போழ்ந்திட்ட செங்கண் மாயவன் விடுப்ப, ஏகி, கருதலான் வினயம் ஒன்றும் கண்ணன் முன்னோனை கண்டான்.]

**விளக்கம் :-** வர்மா, என்பது க்ஷத்திரியருக்குரிய சாதிப் பெயர். அக்குரோணி, ஒரு பேரெண்ணைக் குறிக்கும். யாதவ சேனையின் தலைவன் கிருதவர்மா. கிருதவர்மாவின் தலைமையில் யாதவ சேனை துணை வரும் என்று சொல்லி, மேலும் இனிய உபசார வார்த்தைகளைக் கூறித் துரியோதனனைக் கண்ணன் விடைகொடுத்து அனுப்ப, அவனும், வினயம் (பணிவு) ஒன்றுங் காட்டாதவனாய்ச் சென்று பலராமனைக் கண்டான்,—என்பதாம். விநயம் கருதலான், என்பதற்குக் கண்ணனது கபட நாடகத்தை அறியாதவனாய், என்றும் பொருள் கொள்ளலாம். விநயம் - சூது, வஞ்சனை.

**19. கண்ணனங் கருளிச் செய்த கட்டுரைப் படியே சங்க**
**வண்ணனுக் கிளவல் சொன்ன மாற்றமு மரசன் சாற்றி**
**எண்ணருந் தொகைகொள் சேனை யாதவ குமர ரோடே**
**அண்ணலே வருகென் றோதி யத்தினா புரிபுக் கானே.**

[கண்ணன் அங்கு அருளிச் செய்த கட்டுரை படியே சங்கம் வண்ணனுக்கு, இளவல் சொன்ன மாற்றமும் அரசன் சாற்றி, எண் அரு தொகை கொள் சேனை யாதவ குமரரோடே, அண்ணலே, வருக, என்று ஓதி, அத்தினாபுரி புக்கான், ஏ.]

**விளக்கம் :-** சங்க வண்ணன் - வெண்மை நிறத்தை உடைய பலராமன். இளவல் - கண்ணன். எண்ணி அளவிடுதற்கு அரிய தொகையுடைய யாதவ சேனையோடும், கோபிகாஸ்திரீகளிடம் கண்ணனுக்குப் பிறந்த நாராயண கோபாலர்களாகிய யாதவ குமாரர்களோடும்,—என்பது மூன்றாவது அடியின் பொருள். துணை வேண்டுதலின், பலராமனைத் துரியோதனன், அண்ணலே, என்று அழைத்தான், என்க. அண்ணல் - பெருமை மிக்கவன், உயர்ந்தவன். துரியோதனன் பலராமனை யாதவப் படையுடன் துணைவருமாறு பிரார்த்தித்து அழைத்துவிட்டு, அத்தினாபுரி சென்றான், என்பதாம்.

**20. கூறிய வேக நாகக் கொடியவ னகன்ற பின்னர்த்**
**தேறிய விசய னோடுஞ் செழும்புனற் றுவரை நீங்கி**
**ஆறிரு நாமத் தோனு மையிரு நாமத் தோனும்**
**ஊறிய கருணை நெஞ்சி னுதிட்டிர னிருக்கை புக்கார்.**

[கூறிய வேகம் நாகம் கொடியவன் அகன்ற பின்னர், தேறிய விசயனோடும் செழும் புனல் துவரை நீங்கி, ஆறு இரு நாமத் தோனும், ஐ இரு நாமத்தோனும் ஊறிய கருணை நெஞ்சின் உதிட்டிரன் இருக்கை புக்கார்.]

**விளக்கம :-** வேகம் நாகம் கொடியோன் - உக்கிரமான நாக வடிவத்தைக் கொடியிலே கொண்டவன்; அல்லது வேகமுடைய பாம்பைப் போன்ற கொடிய சுவபாவ முடையவன். திருமால், ஆறுஇரு (பன்னிரண்டு) திருநாமங்களை உடையவன். அவை யாவன :—கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன், இருஷிகேசன், பத்மநாபன், தாமோதரன். அருச்சுனன். பார்த்தன், விசயன், சவ்யசாசி. பற்குணன், தனஞ்சயன், கிரீடி, சுவேதவாகனன், என்ற ஐ இரு (பத்து) பெயர்களைக் கொண்டவன் விசயன். தேறிய விசயன் - கிருஷ்ண சகாயம் பெற்றதால் மனம் தேறிய விசயன், துரியோதனன் விடை கொண்டபின், விசயனோடு கண்ணன், தருமன் இருக்குமிடமான உபப்பிலாவியம் சென்றான், என்பதாம்.

**வாசுதேவனைப் படைத்துணை அழைத்த சருக்கம் முற்றும்**

## 3. சஞ்சயன் தூது சருக்கம்

கவல்கணன் என்ற முனிவனது குமாரனான சஞ்சய முனிவன், தனது நெருங்கிய நண்பனான திருதராட்டிரனது வேண்டுகோளுக் கிணங்கி உபலாவியத்திலிருக்கும் பாண்டவரிடம் தூது சென்ற செய்தியைக் கூறும் சருக்கம் இது. இச் சருக்கம் பத்தொன்பது செய்யுள்களைக் கொண்டது.

### கடவுள் வணக்கம்

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. ஒருத லத்திடை யவத ரித்தணி பொதுவர் சிற்குடி**
**லுறைவதோர்**
**மரக தப்புய றனையெ டுத்தொரு மகவெ னத்தன திறுதியால்**
**அரிது பற்றிய வலகை செற்றிட வணிமு லைப்பயன்**
**நுகர்வுறா**
**மருதி டைத்தவழ் பொருவில் வித்தகன் மலர டிக்கண்வ**
**ழுத்துவாம்,**

[ஒரு தலத்திடை அவதரித்து, அணி பொதுவர் சில் குடில் உறைவது ஓர் மரகதம் புயல் தனை எடுத்து ஒரு மகவு என, தனது இறுதியால் அரிது பற்றிய அலகை செற்றிட அணி முலை பயம் நுகர்வுறா, மருதிடை தவழ் பொருவு இல் வித்தகன் மலர் அடிக் கண் வழுத்துவாம்.]

**விளக்கம் :-** சில் - அற்பம். சில்குடில் - சிறு குடிசை. மரகதப் புயல் - பசிய மேகம் போன்ற கண்ணன். தனது இறுதியால் - தனது இறுதிக் காலம் நெருங்கியதால். அலகை - பேய்ச்சியான பூதனை. செற்றிட - அழித்திட, பயம் - பால். வித்தகன் - ஞானவடிவினன். வடமதுரையில் தேவகியிடத்து வாசுதேவ னுக்கு மகனாய்ப் பிறந்து, அழகிய ஆயரின் அற்பமான குடிசையில் வசித்தருளிய ஒப்பற்ற பசிய மேகம் போன்றவனும், தனது இறுதிக் காலம் வந்ததால் (கண்ணனை) ஒரு சாதாரணக் குழந்தை என நினைத்து, கையில் எடுத்து அருமையாகப் பற்றி அணைத்துக் கொண்ட அலகையை, அவள் அழியும்படி அவளது அழகிய முலை யின் பாலை அருந்தி, (அதன்பின்) இரட்டையாய் நின்ற மருத மரங்களிடையே தவழ்ந்து சென்று குபேரபுத்திரர்களின் சாபம் தீர்த்த ஒப்பில்லாத ஞான வித்தகனான கண்ணனது மலர்போன்ற திருவடிகளைத் துதிப்போம், என்பது பொருள். கண்ணன் வாழ்ந்து வளர்வதற்குரிய தவம் உடைமையின், ஆயர் சிறு குடில், அணிசிற்குடில் ஆயிற்று, முல்லை, குறிஞ்சிக்கும் மருதத்திற்கும் இடையேயுள்ள நிலமாதலால், அது பொதுநிலமாகின்றது. அந் நிலத்துள்ளார் பொதுவர் என்று அழைக்கப் பெறுகின்றனர். பொது - நடுவிடம். அணிமுலை என்பதிலுள்ள அணி என்ற அடையை வினைத் தொகையாகக் கொண்டால், ஆபரணங்கள் ‘அணிந்த முலை’ என்பது பொருளாகும். அலகை. கம்சனால் ஏவப்பெற்ற அசுரப் பெண்.

### திருதராட்டிரன் சஞ்சயனுக்குக் கூறியது

**2. தஞ்ச நாகமு யர்த்த மீளித னகர்பு குந்துழி நண்பறக்**
**கஞ்ச மாமனை வென்ற வன்செயல் கண்ணி**
**லானொடு ரைத்தபின்**
**வஞ்ச மைந்தரொ டுயவி மீளவு மண்கொ டாதகு றிப்பினன்**
**சஞ்ச யன்றனை வருக வென்றிரு தாள்ப ணிந்திவை**
**சாற்றுவான்.**

[நஞ்சம் நாகம் உயர்த்த மீளி தன் நகர் புகுந்துழி நண்பு அற கஞ்சமாமனை வென்றவன் செயல் கண் இலானொடு உரைத்தபின், வஞ்சம் மைந்தரொடு உயவி மீளவும் மண் கொடாத குறிப்பினன், சஞ்சயன் தனை வருக என்று, இரு தாள் பணிந்து இவை சாற்றுவான்.]

**விளக்கம் :-** நஞ்சம் நாகம் உயர்த்த மீளி - பாம்புக் கொடியைக் கொண்ட வீரனான துரியோதனன். நண்பு அற கஞ்ச மாமனை வென்றவன் - மாமன் என்ற உறவு அறும்படி (அதாவது உறவினைக் கருதாமல்) கம்சனைக் கொன்ற கண்ணன். (அவனது) செயல் - செய்தி, அதாவது இரு திறத்தாருக்கும் உதவ ஒப்புக் கொண்ட வகை. மண் கொடாத குறிப்பினன் - பாண்டவர்க்கு அவரது ராஜ்யத்தைக் கொடுக்கும் கருத்து இலாத திருதராட்டிரன் கண்ணனது செயலைத் தனயன் தந்தையிடம் கூற, அவன் மீண்டும் தன் மைந்தர்களோடு ஆலோசித்து அவர்களுக்கு மண் கொடாத கருத்தினனாய்ச் சஞ்சய முனிவனை அழைத்து, அவனது தாள் வணங்கித் தன் கருத்து நிறைவேறும் வழியில் இவை கூறு வானாயினான்.—என்பதாம்.

**3. குருகு லத்தர சர்க்கு றுந்தொழில் கூறு நற்குரு வாதலால்**
**இருகு லத்தினு முற்ப வித்தவ ரென்று நின்சொன் மறுத்திடார்**
**பெரு குலைக்கன லன்ன பிள்ளைகள் பேசு கின்றபி ணக்கறுத்(து)**
**ஒருகு லத்தவ ருததி சூழ்புவி யாளு மாறினி யுட்கொளாய்.**

*[குருகுலத்து அரசர்க்கு உறும் தொழில் கூறும் நல் குரு ஆதலால், இரு குலத்தினும் உற்பவித்தவர் என்றும் நின் சொல் மறுத்திடார்;பெருகு உலை கனல் அன்ன பிள்ளைகள் பேசுகின்ற பிணக்கு அறுத்து, ஒரு குலத்தவர் உததி சூழ் புவி ஆளும் ஆறு இனி உட்கொளாய்.]*

**விளக்கம் :-** குரு என்னும் பேரரசன் குலம் வந்த அரசர் களுக்குத் தகுதி பொருந்திய காரியங்களை ஆய்ந்து விதிக்கும் சிறந்த குரு நீ ஆதலால், எனது குலம், பாண்டுவின் குலம் ஆகிய இரு குலத்தினும் பிறந்தவர், என்றும் (எப்பொழுதும்) உன் சொல்லைத் தட்டமாட்டார்கள்; (ஆகவே, நீ இடையிட்டு) கொல்லனது உலைக்களத்தில் ஓங்கி எழும் நெருப்பைப் போன்ற தான வெம்மையுடைய இரு திறத்து இளம் பிள்ளைகளும் பேசி வரும் மாறுபாட்டை ஒழித்து, ஒரு குலத்தவரே கடல் சூழ்ந்த பூமியை ஆளும்படி செய்க, (என்று திருதராட்டிரன், முனிவனுக்கு சொன்னான்) என்பது பொருள்.)

**4. அறத்தின் மைந்தனு மிளைஞ ரும்புவி யாசை யற்றக லடவியின்**
**புறத்தி ருந்துத வம்செ யும்படி பரிவு ரைத்தருள் போயெனச்**
**செறுத்தி டுந்திரு தராட்டி ரன்தன சிந்தை யொப்பன செப்பினான்**
**மறுத்தி லன்பெரு முனியு மற்றவர் பாடி வீடுற மன்னினான்.**

*[அறத்தின் மைந்தனும் இளைஞரும் புவி ஆசை அற்று, அகல் அடவியின் புறத்து இருந்து தவம் செய்யும்படி பரிவு உரைத்*

தருள் போய் என, செறுத்திடும் திருதராட்டிரன் தன சிந்தை ஒப்பன செப்பினான்; மறுத்திலன் பெரு முனியும், மற்றவர் பாடி வீடு உற மன்னினான்.]

**விளக்கம் :-** பரிவு உரைத்தருள் - அன்புடைய இனிய சொற்களால் சொல்லி அருள்க. செறுத்திடும் திருதராட்டிரன் - பாண்டவர்களை அழிக்கும் நினைவினனான திருதராட்டிரன்; அல்லது நல்லோரால் பொறாமையுடையவன் என்று வெறுக்கப்படும் திருதராட்டிரன். தன சிந்தை ஒப்பன செப்பினான் - தனது தாழ்ந்த எண்ணங்களுக்கு ஒத்தனவான வார்த்தைகளைக் கூறினான், (சிந்தை, பன்மைப் பொருளது, எண்ணங்கள்), பெரு முனியும் மறுத்திலன் - பக்ஷபாதம் அற்றவனாய் இருக்கவேண்டிய பெருமையுடைய சஞ்சய முனிவனும் மறுத்தானல்லன்; பெருமுனி என்றது இகழ்ச்சி, அல்லது, நட்பும், சோற்றுக் கடனும் எண்ணி, மன்னவன் சொன்னவை தகாதனவேனும், மறுக்காமல் தூது சென்றான், என்றும் பொருள் கொள்ளலாம். மற்றவர் - எதிர் திறத்தவரான பாண்டவர். பாடி வீடு - படை வீடு. திருதராட்டிரன், ''மண்ணாசையை ஒழித்துக் கானில் தவ வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு பாண்டவர்க்குச் சொல்லுக'', என்று தகாதன சொல்ல, முனிவனும் எதிர்த்து ஒன்றுங் கூறாமல் பாண்டவரின் படை வீடு செல்லுதலில் பொருந்தினான், என்பதாம்.

### தூதுசென்ற சஞ்சயன் கூற்று

**5. சென்ற வம்முனி செலவ றிந்தெதிர் சென்று தத்தம சென்னிதாள்**
**ஒன்ற வைத்துவ ணங்கி யாசியு ரைக்கு மெய்ப்பய னுற்றபின்**
**மன்ற லந்துள வோனு நல்லறன் மைந்த னுந்திற லனுசரும்**
**துன்று பொற்றவி சினிலி ருத்தவி ருந்து சில்லுரை சொல்லுவான்.**

[சென்ற அ முனி செலவு அறிந்து எதிர் சென்று தத்தம் சென்னி தாள் ஒன்ற வைத்து வணங்கி, ஆசி உரைக்கும் மெய் பயன் உற்றபின், மன்றல் அம் துளவோனும் நல் அறன் மைந்தனும் திறல் அனுசரும் துன்று பொன் தவிசினில் இருத்த, இருந்து சில் உரை சொல்லுவான்.]

**விளக்கம் :-** சென்ற அ முனி செலவு அறிந்து - பாண்டவர் பாடி வீடு நோக்கிச் சென்ற அந்த சஞ்சய முனிவனின் வருகையை அறிந்து. தத்தம சென்னி - தங்கள் தங்கள் தலை. ஆசி உரைக்கும் மெய் பயன் உற்று - ஆசீர்வதித்தலாகிய மெய்யான பயனை அடைந்து. பொன் துன்று தவிசு - பொன் மயமான ஆசனம். முனிவன் வரவு அறிந்து கண்ணனும் பாண்டவரும் அவனை எதிர் சென்று வணங்கி அவனது ஆசீர்வாதமாகிய மெய்ப்பயனை

அடைந்து, அவனைப் பொன் பீடத்தில் அமரச் செய்ய, அவனும் ஆசனத்தில் அமர்ந்து சில கூறுவானயினான், என்பதாம். மெய்த் தவ முனிவரது வாய்ச்சொல் தவறாது பயன் தரும் நலத்ததாதல் பற்றி, ''ஆசி உரைக்கும் மெய்ப் பயன்'', என்றார்.

**6. புடவி யாளுதல் விட்டு நன்னெறி புரியு மாதவர் தம்மினீர்**
**அடவி யாளவும் வல்லி ராயினி ராத லானல மானதே**
**மடவி யார்நிலை யற்ற செல்வம கிழ்ந்து வாழ்தின மாறினால்**
**விடவி யாரழ லுற்றெ னப்பெரு நரகி லாழ்வுற வீழ்வரால்.**

[புடவி ஆளுதல் விட்டு நல்நெறி புரியும் மாதவர் தம்மின் நீர் அடவி ஆளவும் வல்லிர் ஆயினிர், ஆதலால் நலம் ஆனதே; மடவி யார் நிலை அற்ற செல்வம் மகிழ்ந்து வாழ் தினம் மாறினால், விடவி ஆர் அழல் உற்று என பெரு நரகில் ஆழ்வு உற வீழ்வர், ஆல்.]

**விளக்கம் :-** புடவி - பூலோகம். நீங்கள் புடவி ஆளுதல் ஒழித்து, நல்ல கதியை அடைய விரும்புவோர் செய்யும் சிறந்த தவத்தை உடைய முனிவர்களைப்போல, அடவி (காடு) ஆளவும் வல்லவர் ஆயினீர். ஆதலால் (காடாளுகை) நன்மை தரத் தக்கதே,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். மடவியார் - அறிவிலாத கீழ்மக்கள்; அல்லது, இளமையுடைய பெண்கள். வாழ்தினம் - உயிர் உடம்பினிடம் இடங்கொண்டு வாழும் நாள்; ஆயுள் காலம். மாறினால் - கழிந்தால். விடவி(விடபி) மரம். நாடு ஆளுதல் ஒழித்து முனிவர்களைப் போல் காடு ஆளவும். (காட்டில் வாசம் பண்ணவும்) வல்லவர் ஆனீர்கள், நல்லதே அது; இளம் பெண்களையும், நிலையில்லாத செல்வத்தையும் மகிழ்ச்சிக் குரிய பொருள்களாகக் கொண்டு ஆயுள் நாளைக் கழிப்பவர், பெரிய நெருப்பில் மரம் விழுந்தாற்போல், பெரிய நரகத்திலே ஆழ்ந்து வருந்துவர்,—என்பது பொருள். ஆல்: அசை, தேற்றமுமாம்.

**7. உற்ற யோனிக டம்மி லுற்பவி யாமன் மானுட வுற்பவம்**
**பெற்று வாழுத லரிது மற்றது பெறினு மாயைசெய்**
**பெருமயக்**
**கற்ற ஞானிய ராய்வி ளங்குத லரிது வீடுறு மறிவுபின்**
**பற்று மாறி்ஃ திங்கு னக்கிவை பண்பி னோடு பலித்தவே.**

[உற்ற யோனிகள் தம்மில் உற்பவியாமல் மானுட உற்பவம் பெற்று வாழுதல் அரிது, (மற்று) அது பெறினும் மாயை செய் பெரு மயக்கு அற்ற ஞானியராய் விளங்குதல் அரிது, வீடு உறும் அறிவு பின்பற்றும் ஆறு இஃது; இங்கு உனக்கு இவை பண்பினோடு பலித்த, ஏ,]

**விளக்கம் :-** ஏழு வகைப்பட்ட பிறவிகளில், வேறொரு பிறவியில் பிறவாமல் மனிதப்பிறவி உண்டாகப்பெற்று வாழ்தல் அரிது; அது பெறினும், மாயையால் உண்டாகும் பெரிய அறியாமையாகிய மயக்கம் நீங்கிய ஞானிகளாய் விளங்குதல் அதனினும் அரிது; ஆகவே, முக்தி பெறுவதற்கு ஆதாரமாகும் அறிவைப் பின்பற்றும் வழி தவமாகிய இஃதே: உனக்கு இவை இயற்கையாய் அமைந்துள்ளன,—என்பது பொருள். பலித்தவே, என்பதிலுள்ள ஏகாரத்தை, இஃதோடு கூட்டுக. மாயப் பெரு மயக்கு - அவித்தை, அதாவது விபரீத ஞானம்.

**8. திகந்த வெல்லையு றப்பெ ரும்புவி செல்ல நேமிசெ
லுத்தநும்
அகந்தை யோடர சாள வெண்ணிலவ் வரவ கேதன
னுங்களோ(டு)
உகந்து வாழவொ ருப்ப டானினி யுற்ற தாயமு முரிமையும்
இகந்து மாதவ முயற லேகட னீறி லாவுல கெய்தவே.**

*[திக் அந்தம் எல்லை உற பெரும் புவி செல்ல நேமி செலுத்த நும் அகந்தையோடு அரசுஆள எண்ணில், அ அரவ கேதனன் உங்களோடு உகந்து வாழ ஒருப்படான்; இனி, உற்ற தாயமும் உரிமையும் இகந்து மாதவம் முயறலே கடன், ஈறு இலா உலகு எய்த, ஏ.]*

**விளக்கம் :-** திக் அந்தம் எல்லை - திசைகளின் முடிவான எல்லை. பெரும்புவி செல்ல நேமி செலுத்த - பெரிய பூமி எங்கும் செல்லும்படி ஆணை செலுத்த (ஆள). அகந்தை - வீரச் செருக்கு, அதாவது அழியும் உடலை யான், என்றும். நிலையில்லாப் பொருளை எனது என்றும், அவற்றின் பால் கொள்ளும் அபிமானம். தாயமும் உரிமையும் இகந்து - உங்களது பூமியையும், அரசாட்சி உரிமையையும் துறந்து. ஈறு இலா உலகு - முக்தி உலகு. திக்குக்களின் எல்லையளவு உள்ள பூமி எங்கும் செல்லும்படி ஆட்சி செலுத்த நீங்கள், உங்களது வீரச் செருக்கால் எண்ணினால், அரவ கேதனன் உங்களோடு மகிழ்ந்து கலந்து வாழச் சம்மதப்படான்; ஆகவே, இனி உங்களது உற்ற தாயமும் உரிமையும் துறந்து, முக்தி உலகில் நாட்டங்கொண்டு தவம் முயலுதலே கடன் ஆகும், (என்று சஞ்சயன் கூறினான்), என்பது பொருள்.

**9. பராச ரன்குல மாகி னும்பெறு பயனி றுக்கிலர் பாரிலே
துராச ரன்பில ரென்சொ லின்றுசு யோத னாதியர்
கைக்கொளார்
சராச ரங்கள னைத்து மாகிய சுகனை யேநிகர் தன்மையாய்
நிராசர் நின்னள விற்கு றித்தவை யுறுதி யென்றினி
நீகொளாய்.**

[பராசரன் குலம் ஆகினும் பெறு பயன் இறுக்கிலர் பாரிலே, துராசர் அன்பு இலர், என் சொல் இன்று சுயோதனாதியர் கைக் கொளார்; சர அசரங்கள் அனைத்தும் ஆகிய சுகனையே நிகர் தன்மையாய், நிராசர் நின் அளவில் குறித்தவை உறுதி என்று இனி நீ கொளாய்.]

**விளக்கம் :-** பராசரன் குலம் ஆகினும் சுயோதனாதியர் பெறு பயன் பாரிலே இறுக்கிலர்; துராசர், அன்பிலர், என் சொல் இன்று கைக்கொளார்; சர அசரங்கள் அனைத்துமாகிய சுகனை நிகர்த்த தன்மையாய், நிராசர் குறித்தவை உறுதி என்று நின் அளவில் இனி நீ கொளாய், என்பது அன்வயம். பாண்டவரும் துரியோதனாதியரும் பராசர முனிவனது பெருங் குலத்திலே பிறந்தவர். பராசர முனிவனது குலத்திலே தோன்றியவரா யினும், துரியோதனாதியர், இந்த மனிதப் பிறவியால் பெற வேண்டிய புருஷார்த்தப் பயனை அடைதற்கான நற்கருமங்களை இப் பூமியிலே செய்தாரில்லை; கெட்ட ஆசையை உடையவர், அன்பு இயக்கம் இல்லாதவர், எனவே அவர், என் சொல் இப்பொழுது ஏற்றுக்கொள்ளார்,— என்பது முதலிரண்டு அடிகளின் பொருள். சர அசரப் பொருள்கள் எல்லாமும் தானே ஆகிய சுகப் பிரும்மத்தை ஒத்த தன்மை உடைய தருமனே, பற்று அறுத்த மேன் மக்கள், முக்தி வழி முயலலே பிறவியின் பயன் என்று அறுதி யிட்டுக் கூறிய தத்துவ உண்மைகளை உயிருக்கு நன்மை தரத் தக்கவை என்று, உன் அளவில் இனி நீ கொள்வாயாக,—என்பது ஈற்றடிகளின் பொருள். பராசரர் மரபில் தோன்றியும், நன்னெறி படராமையோடு, மெய்யுணர்ந்த பெரியோர் சொல்லையும் துரியோதனாதியர் ஏற்க மாட்டார்; அவர் கிடக்க. நீயாவது பெரியோர் குறித்தவை உறுதி எனக் கொண்டு நடப்பது அமையும், என்று முனிவன் தருமனுக்குக் கூறும் கருத்தது செய்யுள். சுக முனிவர் பிறந்த பொழுதே பற்று அறுத்தவராய்ப் பரம் பொருளை நோக்கிச் செல்ல, அவரது தந்தையான வியாச முனிவர், மகனது பிரிவு பொறாமல், மைந்தா, என்று அழைக்க வும், காட்டிடத்தே உள்ள சராசரப் பொருள்கள் எல்லாம், **ஏன்?** என்றன, என்பது வரலாறு. எனவே, சராசரமனைத்துமாகிய சுகன், என்றார். வியாச முனிவரின் தந்தை பராசரர். திருதராட்டிரனும் பாண்டுவும், வியாசரது அருளால் உற்பவித்த வர். எனவே, குரு குலத்தவர் பராசர குலத்தினர் ஆகின்றனர். தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன ஆகியவை, சரம். இயங்காப் பொருள், அசரம்.

**10. பாரி லர்சையு நின்னி ராசப தத்தி லாசையு மன்னுவெம்**
**போரி லாசையு நேய மங்கையர் போக மன்பொடு**
**புதிதுணும்**
**சீரி லாசையும் விட்டு நன்னெறி சேர வுன்னுதி நீயெனத்**
**தூரி லாசைய றத்து றந்தருள் சுருதி மாமுனி சொல்லவே.**

[பாரில் ஆசையும், நின் இராசபதத்தில் ஆசையும், மன்னு வெம் போரில் ஆசையும், நேயம் மங்கையர் போகம் அன்பொடு புதிது உணும் சீரில் ஆசையும் விட்டு, நல் நெறி சேர உன்னுதி நீ என, தூர் இல் ஆசை அற துறந்தருள் சுருதி மாமுனி சொல்ல, ஏ,— அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** போகம் அன்பொடு புதிது உணும் சீரில் ஆசையும் - மகளிர் இன்பம் அன்புடன் புதிது புதிதாய் அனுபவிக்கும் சிறப்பையுடைய ஆசையும் ; அல்லது, (சீர்-இல்) சிறப்பற்ற ஆசையும். நல் நெறி சேர உன்னுதி - நல்ல முக்தி மார்க்கத்தை அடைய எண்ணுவாய். தூரில் (தூர்-இல்) ஆசை - நிரம்புதல் ஆசை. மண், பொன், பெண் என்ற ஆசையோடு, அவற்றைப் பெறுதற்கு ஆதாரமான பேராசையும் துறந்து, முத்தி நெறி சேர நினைப்பாயாக, என்று, முற்றுந் துறந்த முனிவனான சஞ்சயன் தருமனுக்குச் சொல்லவும்,—(தருமன் கூறுவான்), என்பதாம்.

**11. செம்மை யல்லது விரகி லாதுதெ ரிந்த மேதகு சிந்தையான்**
**மும்மை யுந்தெரி முனியு ரைத்தசொன் முன்னி யொண்குறு முறுவல்செய்(து)**
**இம்மை யேவசை நிற்க வீடுற வெண்ணி நீபுகல் வென்னினும்**
**வெம்மை யேழ்நர குந்த னித்தனி வீழ்வ தேநல மிகவுமே.**

[செம்மை அல்லது விரகு இலாது தெரிந்த மேதகு சிந்தையால், மும்மையும் தெரி முனி உரைத்த சொல் முன்னி, ஒள்குறு முறுவல் செய்து, இம்மையே வசை நிற்க வீடு உற எண்ணி நீ புகல்வு என்னினும், வெம்மை ஏழ் நரகும் தனி தனி வீழ்வதே நலம் மிகவும், ஏ.]

**விளக்கம் :-** இது செம்மையானது, இது செம்மை அல்லாதது (தீயது) என்று மயக்கம் இன்றி ஆய்ந்து தெளிந்துகொண்ட சிறந்த மனத்தினால், மூன்று காலங்களையும் அறிந்த சஞ்சய முனிவன் சொன்னதை (அறன் மகன்) மனத்தில் கொண்டு, ஒளிவிடும் பற்கள் தோன்ற இள முறுவல் செய்து, "நீ சொல்லியது, இம்மையில் பழிச் சொல் நிற்க, முத்தியாகிய நலத்தைப் பெறுதல் கருதியே எனினும், (வசையை இங்கே நிலை நிற்குமாறு செய்துவிட்டு இன்பத்தைப் பெறுதலினும்) வெவ்விய ஏழு வகைப்பட்ட நரகங்களில் தனித்தனியே விழுந்து வருந்தலே நன்மை சான்றதாகும் ; (இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்),—என்பது பொருள். "எடுத்த இப் பிறவிக்கு ஏற்றதான க்ஷத்திரிய தர்மத்தைச் செய்யாமையாகிய வசையை நிலை நிற்கச் செய்து, முக்தி நெறி படர்தல் அமையாது", என்று தருமன் கூறும் கருத்தது இது. அள்ளல், கௌரவம், கும்பிபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி,

மாபூதி என்பவை ஏழு வகைப்பட்ட நரகங்கள், புகல்வு - சொல்லுதல்,

**12. நின்ன றத்தினி னீர்மை தன்னைவி ளங்கு மாறுநி கழ்த்தினும்**
**மன்ன றத்தினை விட்டு நல்லற மன்ன ரானவர் முயல்வரோ**
**என்ன றத்தினி னின்று தெவ்வரை யிருவி சும்பினி லேற்றினால்**
**பின்ன றத்தினி னினைவு கூருமெ னக்க னன்றிவை. பேசினான்.**

[நின் அறத்தின் இன் நீர்மை தன்னை விளங்கும் ஆறு நிகழ்த்தினும், மன் அறத்தினை விட்டு நல் அறம் மன்னர் ஆனவர் முயல்வரோ! என் அறத்தினில் நின்று தெவ்வரை இரு விசும்பினில் ஏற்றினால், பின் அறத்தினில் நினைவு கூரும், என கனன்று இவை பேசினான்.]

**விளக்கம் :-** உனக்கு உரியதான துறவறத்தின் தன்மையை நன்கு விளங்கும்படி நீ கூறினையாயினும். அரசரானவர் தங்களுக்கு உரியதான மன்னறத்தினைச் செய்யாமல் விட்டுவிட்டு, நீ கூறிய துறவறத்தை மேற்கொள்வரோ, (மேற்கொள்ளார்),—என்பது முதல் இரண்டு அடிகளின் பொருள். எனக்குரியதான க்ஷத்திரிய தர்மத்திலிருந்து தவறாமல் நின்று, பகைவரை வீரசுவர்க்கம் அனுப்பினால், அதன்பின், (நீ போற்றும்) துறவறத்தினில் எண்ணம் மிகுந்து பிரவேசிக்கும் என்று, சினங்கொண்டவனாய் (தருமன்) பதில் மொழிந்தான்,—என்பது ஈற்றடிகளின் பொருள். மன்னரானவர் தங்களுக்குரிய தர்மத்தைக் கைவிட்டார் என்ற பழிச் சொல்லுக்கு இடமில்லாமல் அத் தர்மத்தை நடத்தியபின், துறவறத்தை நினைத்து அதில் பிரவேசித்தலே முறையாகும் ; ஆதலால், இப்பொழுது நீ சொன்ன துறவறத்திற்கு இடம் இலது, என்று முனிவனுக்குத் தருமன் கூறியபடி. எல்லாம் அறிந்த முனிவன், பக்கஞ்சார்ந்து இவ்வாறு கூறினான், என்ற எண்ணம் தருமனது, சினத்திற்கு ஆதாரமாகும்.

### வீமன் கூறல்

**13. முனியு மப்பெரு முரசு யர்த்தவ னும்பு கன்றன முன்னிநாம்**
**இனியு ரைப்பது கடனெ னத்துணை விழிசி வப்பெழ வெழிலியின்**
**தனித முற்றன வுருமின் வெஞ்சின மூள மற்றிவை சாற்றுவான்**
**கனியெ னத்தின கரனை வவ்விய கடவுண் மாருதி துணைவனே.**

[முனியும் அ பெரு முரசு உயர்த்தவனும் புகன்றன முன்னி, நாம் இனி உரைப்பது கடன் என, துணை விழி சிவப்பு எழ, எழிலி யின் தனிதம் உற்றன உருமின் இவை சாற்றுவான், கனி என தினகரனை வவ்விய கடவுள் மாருதி துணைவன், ஏ.]

**விளக்கம் :-** எழிலி - மேகம். தனிதம் - இடி. எழிலியின் தனிதம் உற்றன உருமின் - மேகத்தின் முழக்கம் பொருந்தியன வான இடிகளைப் போல் (வீமன் பேசலுற்றான்). தினகரனை (சூரியனை) பழம் என்று கொண்டு அவனைக் கவர முற்பட்ட தெய்வத் தன்மையுடைய ஆஞ்சநேயனின் தம்பியான வீமன்,— என்பது ஈற்றடியின் பொருள். முனிவனும் தருமனும் புகன்றன கேட்டு, ஆலோசித்து, இனி, தான் பேசுவது கடமையாகும் என எண்ணித் துணைவிழிகள் சிவக்க இடிகளைப்போல் இவை கூறுவானானான், என்பதாம்.

**14. எமக்கு நீபிர மப்பெ ருங்குரு வெங்க ளோடெதி ராகுவார்**
**தமக்கு மொக்குமொ ருழையி லேயருள் சார வோதுத**
**றக்கதோ**
**அமர்க்கு நென்னலு லூக நாமனொ டறுதி யிட்டன**
**னரவினம்**
**சுமக்கு மேதினி யாளு வோர்வினை வேறு பட்டது**
**சொல்வரோ.**

[எமக்கு நீ பிரமம் பெருங்குரு, எங்களோடு எதிர் ஆகுவார் தமக்கும் ஒக்கும், ஓர் உழையிலே அருள் சார ஓதுதல் தக்கதோ! அமர்க்கு நென்னல் உலூக நாமனொடு அறுதி இட்டனன்; அரவு. இனம் சுமக்கும் மேதினி ஆளுவோர், வினை வேறுபட்டது சொல்வரோ.]

**விளக்கம் :-** பிரமப் பெருங்குரு - பிரும்ம வித்தை உபதேசிக் கும் சிறந்த குரு. அரவு இனம் சுமக்கும் மேதினி - அஷ்ட நாகங்களும் சுமக்கும் பூமி. எங்களுக்கு மேலான மெய்ப்பொருளை உபதேசிக்கும் பரமகுரு நீ, எங்களோடு எதிரிகளாகிய துரியோதனா தியர்களுக்கும் குரு ஆகின்றாய்; அவ்வாறாக, ஒரு பக்கம் அருள் சேரப்பெற்று இவ்வாறு நீ கூறல் தக்கது ஆகுமோ! நேற்று, உலூகன் என்னும் பெயருடைய முனிவனிடம் போர் செய்யும் முடிவினைத் துரியோதனன் கூறிவிட்டான். பூமி ஆளும் அரசர், தங்கள் கருத்தோடு வேறுபட்டதான காரியத்தைக் கூறுவார் களோ,—என்பது பொருள்.

**15. இடக்க ணாகவ லக்க ணாகவி ரண்டு மொக்குமெ னாமலே**
**பிடர்க்க ணேமதி யான கண்ணிலி பெற்றி யல்லன**
**பேசினான்**
**கடற்பெ ரும்படை கூடி நாளைய ணிந்த வெய்யக**
**ளத்தினான்**
**அடற்க டுங்கதை யால டித்திடு மதிச யந்தனை யையகேள்.**

[இடக்கண் ஆக வலக்கண் ஆக, இரண்டும் ஒக்கும் எனாமலே பிடர்க்கணே மதி ஆன கண்ணிலி, பெற்றி அல்லன பேசினான்; கடல் பெரும் படை கூடி நாளை அணிந்த வெய்ய களத்தில் நான் அடல் கடுங்கதையால் அடித்திடும் அதிசயந்தனை ஐய, கேள்.]

**விளக்கம் :** பிடர்க்கணே மதி ஆன கண்ணிலி - பின்புறத் திலே புத்தியுள்ளவனான பிறவிக்குருடன், (திருதராட்டிரன்). பெற்றி அல்லன - பெருமை சேராத. தந்தையாகிய திருதராட்டி ரன், இடக் கண்ணாயினும், வலக்கண்ணாயினும், இரண்டும் வேறுபாடின்றிச் சமமாகும் என்று நினையாமல், பெருமையல்லாத வார்த்தைகளைப் பேசினான்; நாளை கடல்போன்ற சேனை அணிவகுத்து நிற்கும் கொடிய போர்க்களத்தில், வலிய கொடிய கதையால் நான் அடிக்கப்போகும் அதிசயச் செயலை, ஐயனே, கேள், (என்று வீமன் கூறினான்) என்பதாம். எம்மைக் கானகம் போக்கிய நாள், ''கடவநாள் கழித்து வந்ததும் உங்களது உரிமை யாவையும் பெறுவீர்'', என்று கூறிய கண்ணிலி, இன்று, மண் பற்றை ஒழித்துத் தவ வாழ்க்கையை மேற்கொள்ளும்படி தூண்ட, உன்னை அனுப்பியது தர்ம நெறி ஆகாது, என்று முனிவனுக்கு வீமன் கூறினான், என்க.

**16. உவந்து நீமொழி தவம ருந்தவ மல்ல வொன்னல**
**ருடலுகும்**
**சிவந்த சோரியின் மூழ்கி மாழ்குசி ரங்கள் போய்நட**
**மாடுமக்**
**கவந்த கானக மேவி யூடுறு தீய வெவ்வினை களைவதே**
**தவந்த னிற்றலை யான வீடுறு தவமெ மக்கிது சாலுமே.**

[உவந்து நீ மொழி தவம் அருந்தவம் அல்ல, ஒன்னலர் உடல் உகும் சிவந்த சோரியில் மூழ்கி மாழ்கு சிரங்கள் போய் நடம் ஆடும் அ கவந்தம் கானகம் மேவி, ஊடு உறு தீய வெவ்வினை களைவதே, தவந்தனில் தலையான வீடு உறு தவம்; எமக்கு இது சாலும், ஏ.]

**விளக்கம் :-** மகிழ்ந்து நீ சொல்லிய தவம் அரிய சிறந்த தவம் அன்று; பகைவர் உடலினின்று பெருகும் சிவந்த குருதியில் மூழ்கி, அழியும் தலைகள் உடலிலிருந்து நீங்கிப்போய்க் கூத்திடும் கவந்தமாகிய (உடல் குறைகளாகிய) அந்தப் போர்க்களக் காட்டில் பொருந்தியிருந்து, இடையில் நேரலுற்ற கொடிய பகை யாகிய வினையை அகற்றலே தவந்தனில் சிறந்ததான வீடுபேறு பெறுதற்குரிய, அல்லது வினை நீக்கம் பெறுவதற்குரிய தவ மாகும். இத் தவமே எங்களுக்குப் போதியதாகும்,—என்பது பொருள். வீடு உறு தவம், என்பதற்கு, ஒன்னலரை வென்று அழித்தலே வீடாகிய நாட்டைப் பெறுவதற்குரிய தவம், என்றும் பொருள் கொள்ளலாம். முனிவர்களாகிய உங்களுக்குக் கானகம் சென்று வினை களைதலும், வீடு உறுதலும், தவம்; அரசர் களாகிய எங்களுக்குப் போர்க்களம் சென்று பகை களைந்து வினை

நீக்கம் பெற்று வீடு பெறல், (நாடு பெறல்) தவம். ஊடு உறு தீய வெவ்வினை—இடைடல் நேர்ந்த பகையாகிய வெவ்விய வினை.

**17. போர தாகிய பூமி சாலையின் வேலை சூழ்தரு பூமியின்**
**பார மானசு யோத னாதிய ரென்னு நூறுப சுப்படுத்(து)**
**ஈர மானத யாம னத்தொடி ராய சூயம கஞ்செயும்**
**வீர மாமுனி தன்னை யுங்கள வேள்வி யும்புரி விப்பனே.**

[போரது ஆகிய பூமி சாலையின் வேலை சூழ்தரு பூமியின் பாரம் ஆன சுயோதனாதியர் என்னும் நூறு பசு படுத்து, ஈரம் ஆன தயா மனத்தொடு இராயசூய மகம் செய்யும் வீரம் மாமுனி தன்னையும் கள வேள்வியும் புரிவிப்பன், ஏ.]

**விளக்கம் :-** போர் பூமியது ஆகிய சாலை-போர்க்களமாகிய வேள்விச்சாலை. போர்க்களமாகிய யாகசாலையில், கடல் சூழ்ந்த பூமிக்குப் பாரமாய் அமைந்த சுயோதனாதியர் என்னும் நூறு பசுக்களைக் கொன்று, தண்மையுடையதான அருளோடு பொருந்திய மனத்தோடு இராயசூயம் என்னும் வேள்வியைச் செய்த, வீரத்தோடு கூடிய சிறந்த ராஜரிஷியான தருமனை, இப்பொழுது களவேள்வியாகிய யாகத்தையும் புரியுமாறு செய்வேன்,—என்பது பொருள். இவ்வாறு வீமன் கூறினான், என்க. போரில் பகைவரைக் கொன்று, அதன்பின் செய்யப்படும் தானம் முதலியவை, வேள்வி எனப்படும். துரியோதனாதியரைப் **பசு** என்று அஃறிணையால் கூறியது, திணைவழு. மலை முதலிய பெருஞ்சுமைகளைத் தாங்கும் பூமிக்குப் பாவிகளைச் சுமத்தலே பாரம், என்பர், பெரியோர்.

கண்ணன் கூறல்

**18. நேமி யானிவை சொன்ன வீரனை நிற்க வென்றுநி**
**றுத்தியுள்**
**காமி யாதமு னிக்கு நல்லுரை கட்டு ரைத்தன னிவர்களிப்**
**பூமி யாளுத லவர்க ளுக்கம ருலக மேறுதல் புரிதவம்**
**யாமி யாதுமு ரைத்து மென்பய னீயெ ழுந்தரு ளென்னவே.**

[நேமியான் இவை சொன்ன வீரனை நிற்க என்று நிறுத்தி, உள் காமியாத முனிக்கு நல் உரை கட்டுரைத்தனன்; இவர்கள் இ பூமி ஆளுதல், அவர்களுக்கு அமர் உலகம் ஏறுதல் புரிதவம்; யாம் யாதும் உரைத்தும் என் பயன்? நீ எழுந்தருள் என்ன, ஏ.]

**விளக்கம் :-** இவை சொன்ன வீரனை நிற்க என்று நேமியான் நிறுத்தி, இவர்கள் இப் பூமி ஆளுதல், அவர்களுக்கு அமர் உலகம் ஏறுதல் புரிதவம்; (ஆதலால்) யாம் யாதும் உரைத்தும் என் பயன்? நீ எழுந்தருள், என்ன, உள் காமியாத முனிக்கு நல் உரை

கட்டுரைத்தனன்,—என்பது அன்வயம். உள் காமியாத முனி - எப்பொருள்களிடத்தும் பற்று இல்லாத பரிசுத்தமான மனத்தை உடைய முனிவன். சினமொழி கூறிய வீமனைக் கண்ணன் கையமர்த்தியபின் முனிவனை நோக்கி, ''பாண்டவர் பூமி ஆளுதலும், அவர் வீரசுவர்க்கம் சேரலும், அவர் புரியும் தவமாகும். எனவே, நாம் எது கூறியும் பயன் இல்லை. எழுந்தருள்க'', என்று கூறினான், என்பதாம். கண்ணன், எல்லாம் அறிந்த முழுமுதற் கடவுளாதலால், நடக்கப்போவதை முனிவனுக்குக் கூறினான், ஆயிற்று. யாம், என்றது தன்னை சஞ்சயனோடு உளப்படுத்தி அவனைச் சாந்தப்படுத்தும் கருத்தது. அமரருலகம், என்பது அமருலகம், என்று விகாரப்பட்டது. உள், ஆகுபெயராய் உள்ளத்தை (மனத்தை) உணர்த்தும்.

## திருதராட்டிரனுக்கு முனிவன் செய்தி கூறல்

**19. இருந்த பேரவை விட்டு மற்றவ ரிதய மிப்படி**
**யெனநினைந்(து)**
**அருந்த வக்கடன் மீள வத்தின புரிய டைந்தவ னிபனுடன்**
**பரிந்த றன்றரு காளை சொற்றதும் வீம னின்றுப கர்ந்ததும்**
**குருந்தொ சித்தருண் முகிலு ரைத்தது முண்மை யாம்வகை**
**கூறினான்.**

[இருந்த பேர் அவை விட்டு,மற்று, அவர் இதயம் இப்படி என நினைந்து, அருந் தவம் கடல் மீள அத்தினபுரி அடைந்து, அவனிபனுடன், பரிந்து அறன் தரு காளை சொற்றதும், வீமன் நின்று பகர்ந்ததும், குருந்து ஒசித்தருள் முகில் உரைத்ததும் உண்மை ஆம் வகை கூறினான்.]

**விளக்கம் :-** வந்த காரியம் கை கூடாமையின், மிகப் பெரிய தவத்தினனான முனிவன், தாமதிக்காமல் அத்தினபுரி சென்று, திருதராட்டிரனிடம், தருமனும், வீமனும் கண்ணனும் சொல்லிய வற்றைத் தெரிவித்தான்,—என்பதாம். கம்சனது ஏவலால் ஓரசுரன் கண்ணனைக் கொல்வதற்குக் குருந்த மரத்தின் வடிவு கொண்டிருக்க, அதனை அறிந்த கண்ணன், அம் மரத்தை முறித்தழித்தான், என்பது வரலாறு. பரிந்து - நாடு பெறுகையில் விருப்பங்கொண்டு.

**சஞ்சயன் தூது சருக்கம் முற்றும்.**

## 4. கிருட்டினன் தூது சருக்கம்

பாண்டவர் சார்பில் கண்ணன் துரியோதனாதியரிடம் தூது சென்றதை விஷயமாகக் கொண்ட சருக்கம் இது. இச் சருக்கம் 264 செய்யுள்களைக் கொண்டது.

## கடவுள் வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. பேர்படைத்த விசயனுடன் மும்மைநெடும்**
**பிறவியினும் பிரியா னாகிச்**
**சீர்படைத்த கேண்மையினாற் றேரூர்தற்**
**கிசைந்தருளுஞ் செங்கண் மாலைப்**
**பார்படைத்த சுயோ தனற்குப் படையெடே**
**னமரிலெனப் பணித்த கோவை**
**கார்படைத்த நிறத்தோனைக் கைதொழுவார்**
**பிறவாழிக் கரைக்கண் டாரே.**

[பேர் படைத்த விசயனுடன் மும்மை நெடும் பிறவியினும் பிரியான் ஆகி, சீர் படைத்த கேண்மையினால் தேர் ஊர்தற்கு இசைந்தருளும் செம் கண் மாலை, பார் படைத்த சுயோதனற்கு படை எடேன் அமரில் என பணித்த கோவை, கார்படைத்த நிறத்தோனை கை தொழுவார் பிற ஆழி கரை கண்டார், ஏ.]

**விளக்கம் :-** படைத்த - பெற்ற; நான்காவது அடியிலுள்ள, படைத்த, என்பதை போன்ற என்ற பொருளுடைய உவமச் சொல்லாகக் கொள்க. மும்மை நெடும் பிறவி: நரநாராயணர், இராமலக்ஷ்மணர், கிருஷ்ணார்ச்சுனர். இது, புலவரது வழிபடு கடவுளோடு, நூலுக்கு ஏற்புடைக் கடவுளுமான திருமால் வணக்கம். மூன்று பெரிய அவதாரங்களிலும் விசயனோடு பிரியா திருந்து, இந்த அவதாரத்தில் அவனுக்குத் தேர் செலுத்த இசைந்த வனும், போரில் ஆயுதம் எடேன் என்று துரியோதனனுக்குக் கூறியவனும், மேகம் போன்ற நிறத்தினனும் ஆன திருமாலைக் கை தொழுவோர், பிறவியாகிய கடலைக் கடப்பர்,—என்பதாம். பிற ஆழி, என்பதற்கு இறைவன் ஒழிந்த பிறவாகிய, அதாவது விஷயாந்தரங்களாகிய கடல் என்றும் பொருள் கொள்ளலாம்,

### கண்ணனுக்குத் தருமன் கூறல்

**2. ஞானமன்போ டினிதுரைத்து ஞானமுனி**
**யகன் றதற்பின் சாம பேத**
**தான தண்ட மெனநிருபர் தருமமுறை**
**யிற்புகலுந் தகுதி நோக்கித்**
**தூநறுந்தண் டுளவோனைத் தூதுவிடுவ**
**தற்கெண்ணிச் சுனைக மோறும்**
**ஏனலந்தண் கிரிப்பெருந்தே னிறைக்குமெழிற்**
**குருநாட னியம்பு வானே.**

[ஞானம் அன்போடு இனிது உரைத்து ஞானம் முனி அகன்ற தன்பின். சாமம் பேதம் தானம் தண்டம் என நிருபர் தருமம்

முறையில் புகலும் தகுதி நோக்கி, தூ நறும் தண் துளவோனை தூது விடுவதற்கு எண்ணி, சுனைகள் தோறும் ஏனல் அம் தண் கிரி பெருந்தேன் நிறைக்கும் எழில் குரு நாடன் இயம்புவான், ஏ.]

**விளக்கம் :-** ஞானம்.... அகன்றதன்பின், கிரி ஏனல் தண் பெருந்தேன் சுனைகள் தோறும் நிறைக்கின்ற எழில் குருநாடன், நிருபர் தரும முறையில் சாமபேத தான தண்டம் எனப் புகலும் தகுதி நோக்கி தூ நறும் தண் துளவோனை...எண்ணி இயம்பு வான்,—என்பது அன்வயம். ஞானமுனி - சஞ்சயன். சாமம் - சமாதான முறை. பேதம் - பகைவரது நண்பர்களைப் பிரித்தல். தானம் - பொருள் கொடுத்தல், அதாவது வழக்கிற்கு உரிய பொருளில் ஒரு பகுதியை விட்டுக் கொடுத்தல், தண்டம் - இறுதி உபாயமான போர். (நிருபர் தரும முறையில்) புகலும் தகுதி நோக்கி - ராஜதர்ம விதிகளில் வரிசைப்படுத்திக் கூறப்பட்டிருக் கின்ற தகுதியை எண்ணி. சுனை - மலைகளிலுள்ள நீர்நிலை. ஏனல் - தினைப்பயிர். சஞ்சய முனிவன் அகன்றபின், மலைகளி லுள்ள ஏனல் தண்ணிய மிகுந்த தேனைச் சுனைகள் தோறும் நிறைக்கும் அழகிய குருநாடனான தருமன், நிருபர் தரும முறையில் சாமபேத தான தண்டம் என்று வகுத்துக் கூறப்பட்டிருக்கும் தகுதியை எண்ணிப் பரிசுத்தமான நறிய துளசிமாலை அணிந்த கண்ணனைத் தூது விடுவதற்கு எண்ணி, இனி வரும் வாசகங் களைக் கூறுவானாயினான்,—என்பதாம். இனி, தருமன் குரு நாட்டை ஆளப்போகின்றானாதலால், புலவர், வருவது நோக்கிக் குரு நாடன், என்றார், என்க.

**3. செஞ்சொன்முனி சஞ்சயனுக் கியாமுரைத்த**
**கருமமுமுன் சென்ற காலை**
**அஞ்சொன்முனி புரோகிதனுக் கவனிசைத்த**
**கருமமு நீ யறிதி யன்றே**
**நஞ்சுதனை மிகவருந்தி நன்மருந்து**
**மந்திரமும் விரைந்து நாடா(து)**
**எஞ்சினர்தங் களைப்போல விருக்குமதோ**
**யார்மனத்து மிருக்குஞ் சோதி.**

[செம் சொல் முனி சஞ்சயனுக்கு யாம் உரைத்த கருமமும், முன் சென்ற காலை அம் சொல் முனி புரோகிதனுக்கு அவன் இசைத்த கருமமும் நீ அறிதி அன்றே! நஞ்சு தனை மிக அருந்தி, நல் மருந்தும் மந்திரமும் விரைந்து நாடாது எஞ்சினர் தங்களைப் போல் இருக்கும் அதோ, யார் மனத்தும் இருக்கும் சோதி.]

**விளக்கம் :-** நல்லோரானார் யாவர் மனத்திலும் இடங் கொண்டிருக்கின்ற ஒளி மயமான வடிவினனாகிய கண்ணனே, சஞ்சயனுக்கு யாம் சொல்லிய கருமமும் (செய்தியையும்), அவனுக்கு முன் நமது தூதாக (உலூகன்) சென்ற பொழுது அம்

முனிவனுக்குத் துரியோதனன் சொன்ன கருமமும் (செய்தியையும்) நீ அறிவாயன்றோ! விஷத்தை மிகுதியாக உண்டபின், (அதனைப் போக்க) சிறந்த மருந்தையும், மந்திரத்தையும், விரைந்து தேடாமல், உயிர் ஒடுங்குவோரைப்போல், நாங்கள் இருத்தல் தக்கதாமோ,—என்பது பொருள். பகை மூண்ட பின், அதை ஒழித்தற்குரிய உபாயங்களைத் தேடாமல் நாம் சும்மா இருப்பது அமையுமோ,—என்று தருமன் கண்ணனுக்குக் கூறும் கருத்தின் ஈற்றடிகள்.

## கண்ணன் கூறல்

**4. அருஞ்சமரம் புரியும்வகை யவருரைத்தா**
**ரானாலு மறமொன் றின்றிப்**
**பெருஞ்சமரம் விளைக்குமது கடனன்றென்**
**றருள்வெள்ளம் பெருகக் கூறும்**
**பொருஞ்சமர நெடுமுரசப் பூங்கொடியோன்**
**றனை நோக்கிப் புயப்போர் வாணன்**
**இருஞ்சமரந் தொலைத்தபிரா னிளைஞரையு**
**முடனிருத்தி யியம்பு வானே.**

[அருஞ்சமரம் புரியும் வகை அவர் உரைத்தார் ஆனாலும். அறம் ஒன்று இன்றி பெருஞ் சமரம் விளைக்கும் அது கடன் அன்று, என்று அருள்வெள்ளம் பெருக கூறும், பொரும் சமரம் நெடுமுரசம் பூங்கொடியோன் தனை நோக்கி, புயம் போர் வாணன் இருஞ் சமரம் தொலைத்த பிரான் இளைஞரையும் உடன் இருத்தி இயம்புவான், ஏ.]

**விளக்கம் :-** அருஞ்சமரம் - செய்வதற்கு அரிய போர். அறம் ஒன்று இன்றி - தர்மம் சிறிதும் இல்லாமல். கடன் அன்று- நீதி ஆகாது. பொருஞ்சமரம் நெடு முரசப் பூங்கொடியோன் - தாக்கிச் செய்யும் போருக்கு உரிய பெரிய முரசத்தைக் கொண்ட அழகிய கொடியை உடைய தருமன். புயப்போர் வாணன் - ஆயிரம் கைகளால் போர் செய்யும் பாணாசுரன். (அவனது) இருஞ்சமரம் தொலைத்த பிரான் - அவனது பெரிய போர் வலியை அழித்த கண்ணன். இளைஞர் - தம்பியர். துரியோதனன் போர் வேண்டினும் தருமம் சிறிதுமின்றிப் போர் செய்தல் முறையாகாது, என்று கூறிய தருமனோடு, இளைஞரையும் உடன் இருக்கச் செய்து, கண்ணன் சில கூறுவானாயினான். போரில் உயிர்க் கொலை நேருதலால், அது, தருமங்களில் சிறந்ததான கருணைக்கு அயலானதாகின்றது; எனவே, 'அறம் ஒன்று இன்றி', என்றான். ''மகாபலிச் சக்ரவர்த்தியின் மகன் பாணாசுரன். சிறந்த சிவபக்தன். அவனது மகள் உஷை. சோணிதபுரி அவனது நாடு. உஷை என்பாள் கனவிற் கண்ட கட்டழகன்பால் காதல் கொண்டு, அவன் கண்ணனது பேரனான அநிருத்தன் என்பது தெரிய வர, யோகவித்தையில் வல்லவளான சித்ரலேகை யின் துணையால், அவனைத் துவாரகையிலிருந்து தன் கன்னி

மாடம் கொணர்வித்து, அவனோடு மகிழ்ந்திருந்தாள். இவ் விஷயம் அறிந்த வாணாசுரன், சினந்து, அநிருத்தனை நாகபாசத் தால் கட்டிப் போட்டான். இதை நாரதர் மூலம் அறிந்த கண்ணன், போரெழுந்து வந்து, அவனை வலியழித்துச் சிவபிரானின் வேண்டுகோளுக்கு இணங்கி அவனை உயிரோடும் நான்கு கரங்களோடும் இருக்கச் செய்தான்'', என்பது கதை. கருணைக் கடலான தருமன், உயிரழிவிற்கு இடனாகும் போரிலா வழி துரியோதனாதியரோடு சந்து செய்துகொள்ளவேண்டும், என்ற எண்ணத்தில் கண்ணனது துணை நாடினான், என்க.

**5. செய்வரா லினமுகளுந் திருநாடு**
**பெறநினைவோ சென்று மீளப்**
**பைவரா யருங்கானிற் பயின்றுதிரி**
**தரநினைவோ பகைத்த போரில்**
**உய்வரா ரெனவிரைவி னுருத்தெழுந்து**
**பொரநினைவோ வுண்மை யாக**
**ஐவரா மவனிபர்க்கு நினைவேதென்**
**றருள்புரிந்தா னமரர் கோமான்.**

[செய் வரால் இனம் உகளும் திருநாடு பெற நினைவோ, சென்று மீள பைவராய் அருங்கானில் பயின்று திரிதர நினைவோ, பகைத்த போரில் உய்வர் ஆர் என விரைவின் உருத்து எழுந்து பொர நினைவோ, உண்மை ஆக ஐவர் ஆம் அவனிபர்க்கு நினைவு ஏது என்று அருள் புரிந்தான் அமரர் கோமான்.]

**விளக்கம்** :- செய் - வயல்; வயல்களில் மீன்கள் மிகுதியாக சஞ்சரிப்பது நீர் வளத்தின் அடையாளம். பைதல் - வருந்தல், அதைக் செய்பவர் பைவர். பயின்று திரிதல் - சஞ்சரித்து அலைதல். உய்வர் ஆர் என உருத்து விரைவின் எழுந்து - பிழைப்பவர் யார் பார்ப்போம், என்று சினந்து விரைந்து எழுந்து (போர் செய்தல் எண்ணமோ). ஐவர் ஆம் அவனிபர்க்கு - அரசர் களாகிய உங்கள் ஐவருக்கும். அமரர் கோமான் அருள் புரிந்தான் - தேவர் தலைவனான கண்ணன் பாண்டவரைக் கேட்டருளினான். போரிலாவழி தங்களுக்குள் ஒருடன்பாடு ஏற்பட வழி கூறுமாறு தருமன் வேண்டக் கபடனான கண்ணன், ''உங்கள் கருத்து யாது? போரா, அல்லது மீண்டும் வனவாசமா?'' என்று பாண்டவரைக் கேட்டான், என்பதாம்.

தருமன் பதில்

**6. வயிரமெனுங் கடுநெருப்பை மிகமூட்டி**
**வளர்க்கினுயர் வரைக் காடென்ன**
**செயிரமரில் வெகுளிபொரச் சேரவிரு**
**திறத்தேமுஞ் சென்று மாள்வேம்**

**கயிரவமுந் தாமரையுங் கமழ்பழனக்**
**குருநாட்டிற் கலந்து வாழ**
**உயிரனையாய் சந்துபட வுரைத்தருளென்**
**றானறத்தி னுருவம் போல்வான்.**

[வயிரம் எனும் கடு நெருப்பை முகமூட்டி வளர்க்கின், உயர் வரை காடு என்ன, செயிர் அமரில் வெகுளி பொர சேர இரு திறத்தேமும் சென்று மாள்வேம் ; கயிரவமும் தாமரையும் கமழ் பழனம் குருநாட்டில் கலந்து வாழ, உயிர் அனையாய் சந்துபட உரைத்தருள் என்றான், அறத்தின் உருவம் போல்வான்.]

**விளக்கம் :-** வயிரம் - தீராப் பகை. வீரனது இயல்பு வைரம் ; அது முதற் போலியாய் வயிரம் என நின்றது. வரை - மலை, அல்லது மூங்கில், (கணு என்ற பொருளுடைய வரை, சினை ஆகுபெயராய் மூங்கிலை உணர்த்திற்று). செயிர் அமர் - குற்றமுடைய போர். கயிரவம் - சந்திரனைக் கண்டு மலரும் ஆம்பல். தாமரை - சூரியனைக் கண்டு மலரும் மலர். சந்துபட - பிளவு நீங்க. தருமத்தின் வடிவம் போன்றவனான தருமன், கண்ணனை, உயிர் அனையாய் என்று விளித்து, ''போரில் சிறு தீயினால் மலையிலுள்ள மூங்கில் காடு முற்றிலும் பாக்கி இல்லாமல் அழிவதுபோல், இரு திறத்தவரும் ஒரு சேரச் சென்று மாள்வோம். ஆகையால், மாறுபட்ட தன்மையுள்ள ஆம்பலும் தாமரையும் ஒரு வயலில் இருப்பதுபோல் குருநாட்டில் இரு குலத்தவரும் கலந்து வாழும்படி (தூது சென்று) உதவியருள்க, என்று கூறினான்,—என்பதாம். வரைக்காடு என்ன - மூங்கில் உராய்தலால் உண்டாகும் தீ, மூங்கில் காட்டை அழித்தல்போல, அல்லது தீயினால் காடு தானும் தன்னைச் சுற்றியுள்ள பொருள் களும் அழிதல் போல், இரு குலத்தவரும் சுற்றத்தோடும், பக்கத் தோடும் அழிதலுக்குக் காரணமாகும் போரிலாத வழியில், காரியத்தை முடித்தருளவேண்டும், என்று தருமன் கண்ணனை வேண்டினாள், என்க.

### கண்ணன் கூறல்

7. **அரவுயர்த்தோ னுடன்மறுசூ தாடிநீர்வென்**
**றவந்நா ளவன்றான் சொன்ன**
**விரதமொழி தவிராமல் வெங்கானம்**
**போய்மீண்டீர் வெய்யோ னுங்கள்**
**குருநிலத்திற் பாதியினிக் கொடாதிருந்தா**
**லாங்கவனைக் கொன்று போரில்**
**இருநிலத்தை யாளவினித் துணிவதே**
**கடனென்றா னெம்பி ரானே.**

[அரவு உயர்த்தோனுடன் மறு சூது ஆடி நீர் வென்ற அந் நாள், அவன் தான் சொன்ன விரதம் மொழி தவிராமல் வெம் கானம் போய் மீண்டீர், வெய்யோன் உங்கள் குரு நிலத்தில் பாதி

இனி கொடாது இருந்தால், (ஆங்கு) அவனை கொன்று போரில், இரு நிலத்தை ஆள இனி துணிவதே கடன், என்றான், எம்பிரான், ஏ.]

**விளக்கம் :-** விரதமொழி - கட்டளையாகிய வார்த்தை. கடமை - இனி நீங்கள் செய்தற்குரிய கடமை. உங்களோடு கலந்து வாழ உடன்படாதவனைப் பகைத்துப் போரில் அழிப்பது, தர்மத்தோடு பொருந்தியதே,—என்று கண்ணன் கூறியபடி. ஆங்கு : அசை.

### போர் விரும்பாத தருமன் கூறல்

**8. குரவரையுங் கிளைஞரையுங் குலத்துரிய**
**துணைவரையுங் கொன்று போர்வென்(று)**
**அரவநெடுங் கடலாடை யவனியெலாந்**
**தனியாளு மரசு தன்னின்**
**கரவுறையு மனத்தாதை முனிக்குரைத்த**
**மொழிப்படியே கானந் தோறும்**
**இரவுபகற் பலமூல சாகநுகர்ந்**
**துயிர் வாழ்த லினிது நன்றே.**

[குரவரையும் கிளைஞரையும் குலத்து உரிய துணைவரையும் கொன்று போர் வென்று, அரவம் நெடுங்கடல் ஆடை அவனி எலாம் தனி ஆளும் அரசு தன்னின், கரவு உறையும் மனம் தாதை முனிக்கு உரைத்த மொழிப்படியே கானம் தோறும் இரவு பகல் பலம் மூலம் சாகம் நுகர்ந்து உயிர் வாழ்தல் இனிது நன்றே.]

**விளக்கம் :-** குரவர் - பாட்டனாராகிய பீஷ்மர், சிறிய தந்தையாகிய விதுரர், ஆசிரியர்களாகிய துரோணகிருபர், துரோணரது மகனாகிய அசுவத்தாமன். கிளைஞர் - ஒரு குலத்தவரான துரியோதனாதியர். துணைவர் - நண்பர். கிருபன், துரோணன், அசுவத்தாமன், என்பாரைத் துணைவராகவும் கொள்ளலாம். அரவம் - சப்தம். அவனி - பூமி. கரவு உறையும் மனத்தாதை - வஞ்சனை மனம் தங்கிய திருதராட்டிரன். முனி - சஞ்சயன். பலம் - கனி. மூலம் - கிழங்கு. சாகம் - இலை. சுற்றமும் பக்கமுமாகிய பெரியோர்களைப் போரில் கொன்று தனியேயிருந்து பூமியாளுதலினும், தந்தையார் உரைத்தபடி காட்டில் காய் கனி கிழங்குகளைத் தின்றுகொண்டு உயிர் வாழ்தலே இனியதும் நன்மையுடையதுமாகும், என்று தருமன் கூறினான், என்க.

### கண்ணனது எதிர் மொழி

**9. கோதிலா னிந்தமொழி கூறுதலு**
**மாமாயன் கூற லுற்றான்**
**மோதமருக் கிளைத்துநீர் மொய்த்தபெருங்**
**கானகத்தே முடுகிச் சென்றால்**

**பூதலத்தோ ரேசாரோ புகன்றபெரு**
**வஞ்சினமும் பொய்த்தி டாதோ**
**நீதியோ வெனவுரைத்தா னாங்கதற்கு**
**நிகழ்தரும னிகழ்த்த லுற்றான்.**

[கோது இலான் இந்த மொழி கூறுதலும், மா மாயன் கூறல் உற்றான்,—மோது அமருக்கு இளைத்து நீர் மொய்த்த பெரும் கான் அகத்தே முடுகி சென்றால், பூதலத்தோர் ஏசாரோ, புகன்ற பெரு வஞ்சினமும் பொய்த்திடாதோ, நீதியோ, என உரைத்தான்: ஆங்கு அதற்கு நிகழ் தருமன் நிகழ்த்தல் உற்றான்.]

**விளக்கம் :-** கோதிலான் - குற்றமற்றவனான தருமன். மாமாயன் - பெரிய மாயனான கண்ணன். இளைத்து - (போருக்குப்) பின்னிட்டு, பயந்து. வஞ்சினம் - (தருமன் ஒழிந்த மற்றவர் எடுத்துக்கொண்ட) சபதங்கள். நீதியோ - க்ஷத்திரியர்க் குரிய தர்மம் ஆகுமோ. ஆங்கு - அப்பொழுது. நிகழ் தருமன் நிகழ்த்தல் உற்றான் - விளங்குகின்ற தருமன் பதில் கூறுவானா னான். ''போருக்கு இளைத்து ஓடுதல் தக்கதன்று, க்ஷத்திரிய தர்மமும் ஆகாது,'' என்று கண்ணன் கூறத் தருமன், தன் கருத்தைத் தெரிவிக்கலானான், என்பதாம்.

## தருமன் தன் கருத்தைத் தெரிவித்தல்

10. **நீதூது நடந்தருளி யெமதுநினை**
**வவர்க்குரைத்தா னினைவின் வண்ணம்**
**தாதூதி யளிமுரலுந் தண்பதியுந்**
**தாயமுந் தான்றா ரானாகில்**
**மீதூது வளைக்குலமும் வலம்புரியு**
**மிகமுழங்க வெய்ய காலன்**
**மாதூதர் மனங்களிக்கப் பொருதெனினும்**
**பெறுவனிது வசையு மன்றே.**

[நீ தூது நடந்தருளி எமது நினைவு அவர்க்கு உரைத்தால், நினைவின் வண்ணம், தாது ஊதி அளி முரலும் தண்பதியும் தாயமும் தான் தாரான் ஆகில், மீது ஊது வளை குலமும் வலம் புரியும் மிக முழங்க. வெய்ய காலன் மாதூதர் மனம் களிக்க பொருது எனினும் பெறுவன், இது வசையும் அன்று, ஏ.]

**விளக்கம் :-** நினைவு - எண்ணம். தாது - மகரந்தப்பொடி. அளி - வண்டுகள். வளைக்குலம் - சங்க வாத்தியங்களின் கூட்டம் வலம்புரி - வலம்புரிச் சங்குகள். ''நீ தூது போய்க் கேட்ட பின்னும் அவன் நாடு கொடுக்க மறுத்தால், பின்னர் போர் செய்தல் பழிப்பிற்கு இடமான செயலாகாது'', என்று தருமன் கூறியபடி. எமது நினைவு - பதின்மூன்று ஆண்டுகளுக்குமுன் கூறியபடி கடவநாள் கழித்து வெளிப்பட்ட எங்களுக்கு உரிய

தான நாட்டைப் பெறும் எண்ணம். உயிர்களை எளிதில் கொண்டு போவதற்குப் போர் துணை புரிவதால், ''காலன் மாதூதர் மனங்களிக்க'', எனப்பட்டது. வசையும் அன்று, என்பதிலுள்ள உம்மை, ஒழியிசைப் பொருளது; புகழும் ஆகும், என்பது பொருள்.

**11. முந்தூர்வெம் பணிக்கொடியோன் மூதூரி
னடந்துழவர் முன்றி றோறும்
நந்தூரும் புனனாட்டின் றிறம்வேண்டு
நாடொன்று நல்கா னாகில்
ஐந்தூர்வேண் டவையிலெனி லைந்திலம்வேண்
டவைமறுத்தா லடுபோர் வேண்டு
சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின்
மருப்பொசித்த செங்கண் மாலே.**

[முந்து ஊர் வெம் பணி கொடியோன் முது ஊரின் நடந்து, உழவர் முன்றில் தோறும் நந்து ஊரும் புனல் நாட்டின் திறம் வேண்டு, நாடு ஒன்றும் நல்கான் ஆகில் ஐந்து ஊர் வேண்டு, அவை இல் எனில் ஐந்து இலம் வேண்டு, அவை மறுத்தால் அடு போர் வேண்டு, சிந்தூரம் திலகம் நுதல் சிந்துரத்தின் மருப்பு ஒசித்த செங்கண்மாலே.]

**விளக்கம் :-** முந்து ஊர் வெம் பணி கொடியோன் - முன்னே தூக்கிச் செல்லப்படும் கொடிய பாம்பினது வடிவத்தைக்கொண்ட கொடியை உடைய துரியோதனன். மூதூர் - பழைமையான அத்தினபுரி. நந்து ஊரும் - சங்குகள் தவழ்கின்ற. திறம் - தாய பாகம். சிந்தூரம் என்னும் செந்நிறப் பொடியாலாகிய திலகத்தை நெற்றியில் கொண்ட (கம்சனால் ஏவப்பெற்ற குவலயாபீடம் என்னும்) யானையின் தந்தங்களை ஒடித்துக் கொன்ற தாமரை போல் சிவந்த கண்களை உடைய கண்ணனே,—என்பது ஈற்றடியின் பொருள். ''எங்களுக்குரிய நாட்டைக் கொடுக்க அவன் மறுத்தால் ஐந்து ஊர் கேள், ஐந்து ஊரும் இல்லையெனில் ஐந்து வீடுகளாவது கேள், வீடு ஐந்தும் கொடானேல் அழித்தலைச் செய்யும் போரைக் கேள்'', என்று கண்ணனுக்குத் தருமன், கூறினான், என்பதாம். நாடோ, ஊரோ, வீடோ கொடுக்க மறுத்தலே போர் செய்யுங்குறிப்பினதாக, 'அடு போர் வேண்டு', என்று தருமன் கூறுவானேன்? என்று வாசகர் நினைக்கலாம். ''கடவநாள் கழித்து மீண்டால் நாடு கொடுப்பேன்'', என்று பெரியோர் முன்னிலையில் கூறியவன், இப்பொழுது அச் சொல்லை நிறைவேற்ற மறுப்பது போல், போர் செய்யவும் மறுத்தால், என் செய்வது, என்ற கருத்தில், போர் வேண்டுமாறு தருமன் கூறினான், என்க. அடியாரிடத்தில் அன்பும், திருமகளிடத்துக் காதலும் உடையவனாதல் பற்றி, மால், என அழைக்கப் படுகின்றான். அடியார்களை இடையறாது நோக்குவதாலும், கொடியவரைச் சினப்பதாலும் சிவக்குங் கண், செங்கண்.

## வீமன் சினந்து கூறல்

**12. மூத்தோன்மற் றிவையுரைப்ப விளையோன்வெஞ்
சினமனத்தின் மூள மூள
நாத்தோமி லுரைபதறக் கதுமெனவுற்
றெழுந்திறைஞ்சி ஞால மெலாம்
பூத்தோனே பூந்தவிசிற் பூவைபுணர்
மணிமார்பா புன்மை யாவும்
தீர்த்தோனே யூனமிலான் மானமிலா
துரைப்பதற்கென் செய்வ தென்றான்.**

[மூத்தோன் (மற்று) இவை உரைப்ப இளையோன் வெம் சினம் மூள, மூள, நா தோம் இல் உரை பதற, கதும் என உற்று எழுந்து இறைஞ்சி, ஞாலம் எலாம் பூத்தோனே, பூந்தவிசில் பூவை புணர் மணி மார்பா, புன்மை யாவும் தீர்த்தோனே, ஊனம் இலான் மானம் இலாது உரைப்பதற்கு என் செய்வது, என்றான்.]

**விளக்கம் :-** மூத்தோன் - தருமன். இளையோன் வீமன். மூள மூள - மேலும் மேலும் மிகுந்து வளர. தோம் இல் நா உரை பதற - குற்றமில்லாத நாக்கில் சொல் தடுமாற. கதும் என உற்று எழுந்து - விரைவாக எழுந்து நின்று. (கண்ணனை நோக்கி) ஞாலம் எலாம் பூத்தோனே - உலகத்தை எல்லாம் நாபிக் கமலத்தினின்று விரியச் செய்தவனே. பூந்தவிசில் பூவை - திருமகள். புணர் மணிமார்பா - சேர்ந்திருக்கின்ற அழகிய மார்பை உடையவனே. புன்மை யாவும் தீர்த்தோனே - அடியார் களாகிய எங்களது சிறுமைகளை எல்லாம் போக்கியருளியவனே, ஊனம் - குற்றம். மானம்-பெருமை. மற்று : அசை. தருமன் கூறியன கேட்டுச் சினந்து எழுந்த வீமன், கண்ணனை வணங்கி நின்று, ''ஊனமிலாத எங்கள் தமையன் மானம் இலாது இப்படிப் பேசுவதற்கு என் செய்வது நான்'', என்று வெறுத்துக் கூறினான்-. என்பதாம்.

பூவை புணர் மணி மார்பா, என்பதற்குத் திருமகளை மார்பின் வலப்புறத்திலும், கௌத்துபமணியை இடப்புறத்திலும் கொண்டிருக்கின்றவனே, என்றும் பொருள் கொள்ளலாம், (பூவை மணி புணர் மார்பா). வீமனைக் கழுவேற்ற நினைத்த காலத் திலும், திரௌபதியின் துகிலுரிந்த காலத்திலும், துர்வாச முனிவன் விருந்து வந்த காலத்திலும் தங்களைப் பாது காத்தமையை நினைத்து ''புன்மை யாவும் தீர்த்தோனே,'' என்று அழைத்தான், என்க. உடன் நிகழ்ச்சி, அல்லது புணர்நிலை அணி, என்ற அணி இச் செய்யுளின் ஈற்றடியில், ''ஊனமிலான் மானமிலாது உரைப்பதற்கு என் செய்வது'', என்ற வாசகத்தில் அமைந்துளது. இன்மை என்னும் பண்பைக் கொண்டு, **ஊனம். மானம்** என்ற இரண்டையும் தருமனோடு மிக அழகாகப் புலவர் இணைத்திருக்கின்றார். எனவே, இது பண்புப் புணர்நிலை அணி

ஆகும். ஊனம் இல்லாமை தக்கதே, இந்த ஊனத்திற்குப் பிராச மான, மானமும் இவனிடத்தில் இல்லாமற் போயிற்றே, என்று வீமன் வெறுத்துக் கூறும் இவ் வாசகம் நயம் மிக உடையது.

**13.** **விரிகுழற்பைந் தொடிநாணி வேந்தவையின்**
**முறையிடுநாள் வெகுளே லென்று**
**மரபினுக்கு நமக்குமுல குள்ளளவுந்**
**தீராத வசையே கண்டாய்**
**எரிதழற்கா னகமகன்று மின்னமும்வெம்**
**பகைமுடிக்க விளையா நின்றாய்**
**அரவுயர்த்தோன் கொடுமையினு முரசுயர்த்தோ**
**யுனதருளுக் கஞ்சி னேனே.**

[விரிகுழல் பைந்தொடி நாணி வேந்து அவையில் முறையிடும் நாள் 'வெகுளேல்' என்று மரபினுக்கும் நமக்கும் உலகு (உள்)ள அளவும் தீராத வசையே கண்டாய், எரிதழல் கானகம் அகன்றும் இன்னமும் வெம் பகை முடிக்க இளையா நின்றாய், அரவு உயர்த் தோன் கொடுமையினும் முரசு உயர்த்தோய் (நான்) உனது அருளுக்கு அஞ்சினேன், ஏ.]

**விளக்கம் :-** விரிகுழல் பைந்தொடி - திரௌபதி. மரபு - குலம். தீராத வசை கண்டாய் - நீங்காத பழியைக் கூட்டி வைத்தாய். இளையா நின்றாய், - தளர்ந்து பின்னிடுபவனாய் இருக்கின்றாய். ''மன்னவையில் திரௌபதியைத் துச்சாதனன் துகிலுரிந்த பொழுது 'வெகுளேல்' என்று எங்களை அடக்கி, நம் குலத்தையே பழியுறச் செய்தாய். அவர்களது நிபந்தனையின்படி வனவாசமும், அஜ்ஞாத வாசமும் செய்து முடித்து வந்துள்ள நமக்கு நாடு இல்லையென்றால், உடனே அவனைப் போரில் அழிப்பதை விடுத்து, நாடும், ஊரும், வீடும் கேட்பது ஏன்? துரியோதனனது கொடுமைக்கு நான் அஞ்சவில்லை. அதைக் கடத்தல் எளியதே. ஆனால் அவன்பால் நீ காட்டும் அருளோ, பழி தீர்த்துக்கொள்ள முடியாமல் இடை நிற்றலால், நான் அஞ்சுவது உனது அந்த வேண்டா வழியதான அருளுக்கே'', என்று வீமன் சினத்தோடும் மன வருத்தத்தோடும் கூறினான், என்பதாம்.

**14.** **கானாள வுனைவிடுத்த கண்ணிலா**
**வருளிலிதன் காதன் மைந்தன்**
**தானாளுந் தரணியெலா மொருகுடைக்கீழ்**
**நீயாளத் தருவ னின்றே**
**மேனாணம் முரிமையறக் கவர்ந்தபெருந்**
**துணைவனுனை வெறாத வண்ணம்**
**வானாள வானவர்கோன் றன்பதமற்**
**றவன்றனக்கே வழங்கு வேனே.**

[கான் ஆள உனை விடுத்த கண் இலா அருள் இலி தன் காதல் மைந்தன் தான் ஆளும் தரணி எலாம் ஒரு குடைக்கீழ் நீ ஆள தருவன் இன்றே ; மேல் நாள் நம் உரிமை அற கவர்ந்த பெரும் துணைவன், உனை வெறாத வண்ணம் வான் ஆள வானவர் கோன் தன் பதம் (மற்று) அவன் தனக்கே வழங்குவேன், ஏ.]

**விளக்கம் :-** அற கவர்ந்த - முழுமையாக அபகரித்துக் கொண்ட. பெருந்துணைவன்-பெரிய தம்பியாகிய துரியோதனன். வான் ஆள - வீரசுவர்க்கம் அடைந்து மகிழ்ந்து இருக்க ''நமது உரிமையை வஞ்சனையினால் கவர்ந்துகொண்ட பிறவிக் குருடனாகிய திருதராட்டிரன் மகனைக் கொன்று நாடு முழுவதை யும் நீ ஆளத் தருவேன்'', என்று வீமன் கூறியபடி. ''மண்ணை இழந்த துன்பம் விண்ணை அடைந்த இன்பத்தால் அகலும்படி'', என்ற நயம் தோன்ற, ''உனைவெறாத வண்ணம் வான் ஆள வானவர் கோன் பதம் தருவன்'', என்று கூறியது மகிழ்தற் குரியது. வெறாத வண்ணம், என்றது, ''சுவர்க்க பதம் கிடைத்தற்குக் காரணமான, உன்னை மகிழும்படி'', என்ற தொனியதும் ஆகும். துரியோதனனைக் கொல்வேன் என்றதை, ''வானாள வானவர் கோன் தன்பதம் அவன் தனக்கே வழங்குவேன்'', என்று வேறு விதமாகக் கூறிய இது, **பிறிதின் நவிற்சி** ஆகும். ''மண்ணை வாங்கிக்கொண்டு விண்ணை அவனுக்கு அளிப்பேன்'', என்றது **பண்டமாற் றணி**யாகும்.

**15. போர்முடித்தா னமர்பொருது புலம்புறுசொற்**
**பாஞ்சாலி பூந்தண் கூந்தல்**
**கார்முடித்தா னிளையோர்முன் கழறியவஞ்**
**சினமுடித்தான் கடவுட் கங்கை**
**நீர்முடித்தா னிரவொழித்த நீயறிய**
**வசையின்றி நிலைநின் றோங்கும்**
**பேர்முடித்தா னிப்படியே யார்முடித்தா**
**ரிவனுடனே பிறப்ப தேநான்.**

[போர் முடித்தான் அமர் பொருது, புலம்பு உறு சொல் பாஞ்சாலி பூந்தண் கூந்தல் கார் முடித்தான், இளையோர் முன் கழறிய வஞ்சினம் முடித்தான், கடவுள் கங்கை நீர் முடித்தான் இரவு ஒழித்த நீ அறிய வசை இன்றி நிலை நின்று ஓங்கும் பேர் முடித்தான் ; இப்படியே யார் முடித்தார் ? இவனுடனே பிறப்பதே நான்.]

**விளக்கம் :-** யுத்தத்தைச் செய்து பகையைத் தீர்த்து வைத்தான், புலம்புதல் மிகுந்த சொல்லையுடைய பாஞ்சாலியின் அழகிய தண்மை பொருந்திய விரிந்த கூந்தலாகிய கருமேகத்தை முடித்துக்கொள்ளச் செய்தான், துகிலுரிந்த காலை தம்பியர் எடுத்துக்கொண்ட சபதங்களை நிறைவேற்றி வைத்தான், பழிப் பிற்கு இடம் இல்லாமல் நிலைத்து நின்று வளரும் எங்கள் புகழைக் கூட்டிவைத்தான், தெய்வத்தன்மை பொருந்திய

கங்கையின் நீரை முடியில் தரித்த சிவபெருமானது பிச்சை எடுக்கும் தொழிலை நீக்கியருளிய, நீயே, சாட்சியாக, இப்படிச் செய்யவேண்டுவனவற்றை எல்லாம் செய்து முடித்தவர் வேறு யார் இருக்கின்றார்; இவனுக்குத் தம்பியாகப் பிறக்க நேர்ந்த என் பொல்லா விதியை யாரிடம் சொல்லிக்கொள்வது, என்று வீமன் நிஷ்டூர வார்த்தைகளைச் சொன்னான்,—என்பது பொருள். முடித்தான், என்பது எதிர்மறை இலக்கணையால், முடிக்கவில்லை, என்ற பொருளை உணர்த்தும். போர் முடித்தான், கார் முடித்தான், வஞ்சினம் முடித்தான், பேர் முடித்தான், என்ற இடங்களில் முடித்தான் வினைமுற்று நீர் முடித்தான், யார் முடித்தார், என்ற இரு இடங்களிலும் அது வினை யாலணையும் பெயர், பொருள் வேறுபட முடித்தான், என்பது பலமுறை வந்திருப்பதால், இது **சொற்பின் வருநிலையணி** ஆகும். ''கங்கை நீர் முடித்தான் இரவு ஒழித்த நீ அறிய'', என்று வீமன் கூறியது கருத்துடையது. ''சிவபெருமானது இரத்தலாகிய பரி பவத்தையும் துயரையும் நீக்கியருளிய நீ, மானமழிந்தும், வாழ்வு இழந்தும் நிற்கும் எங்கள் மானங் காத்துத் துயரத்தை அகற்றி யருள வேண்டாவோ'', என்று கேட்கும் கருத்தின் குறிப்பின தாகும். இவ்வாறு ஒரு கருத்தை வெளிப்படையாகச் சொல்லா மல் அடை மொழிகள் அமைத்துக் குறித்தல், **கருத்துடை அணி** ஆகும். இதை வடநூலார், **பரிகராலங்காரம்** என்பர்.

**16. அணிந்துவருஞ் சமரிலெ திர்ந் தரவுயர்த்தோ**
**னுடனரச ருடல மெல்லாம்**
**துணிந்திரண்டு படப்பொருதுதொல்லையுல**
**கரசாளத் துணிவ தல்லால்**
**தணிந்தறமுங் கிளையுறவுங் கொண்டாடித்**
**தானின்னந் தனித்தூ தேவிப்**
**பணிந்திரந்து புவிபெற்றுண் டிருப்பதற்கே**
**துணிகின்றான் பட்ட பாடே.**

[அணிந்து வரும் சமரில் எதிர்ந்து அரவு உயர்த்தோனுடன் அரசர் உடலம் எல்லாம் துணிந்து இரண்டு பட பொருது, தொல்லை உலகு அரசு ஆள துணிவது அல்லால், தணிந்து அறமும் கிளை உறவும் கொண்டாடி தான் இன்னம் தனி தூது ஏவி, பணிந்து இரந்து புவிபெற்று உண்டு இருப்பதற்கே துணிகின்றான்; பட்டபாடே.]

**விளக்கம் :-** அணிந்துவரும் சமர் - சேனைகள் அணி வகுத்து வரும் போர். துரியோதனனோடு, அவனைச் சார்ந்துவரும் அரசர் களும் உடல்கள் எல்லாம் துண்டாகும்படி போர் செய்து பழைமை யான இந்த பூமி முழுவதையும் அரசாளத் தீர்மானிப்பது அல்லா மல், பணிந்து அந்தணர்க்குரிய தர்மத்தையும், சுற்றமாகிய உறவையும் சிறந்ததாகக் கொண்டு தான் (தருமன், (உலூகமா முனிவன் தூது சென்று மீண்ட பின்னும்) இன்னமும் ஒரு

தூதனை அனுப்பித் தாழ்ந்து, இரந்து, அவன் இட்டபிச்சையாக நாடு பெற்று, உண்டு வாழ்வதற்கு நினைக்கின்றானே,—என்று வீமன் வருந்திக் கூறினான், என்பதாம். பட்டபாடு - அனுபவ வித்த துன்பம், அதாவது அனுபவித்த எல்லாவகைத் துன்பங் களினும், இது (தருமனது செயல்), மிக மிக இழிவையும் துன்பத்தையும் தருவதாகும், என்று வீமன் எண்ணினான், என்க, போர் வென்று நாடுபெறுதல் எளிதாயிருக்க, அதை விடுத்துப் பணிந்து இரந்து நாடுபெறல் இழிவின் மிக்கதாகும், என்றபடி.

## தருமனது சமாதான மொழி

**17. பரிவுடன்மற் றிவைகூறும் பவனகுமா**
**ரனைமலர்க்கை பணித்து நோக்கிக்**
**குருகுலத்தோர் போரேறே குற்றமது**
**பார்க்குங்காற் சுற்ற மில்லை**
**ஒருகுலத்திற் பிறந்தார்க ளுடன்வாழும்**
**வாழ்வினைப்போ லுறுதி யுண்டோ**
**இருவருக்கும் வசையன்றோ விருநிலங்கா**
**ரணமாக வெதிர்ப்ப தென்றான்.**

[பரிவுடன் இவை கூறும் பவனகுமாரனை மலர்க்கை பணித்து நோக்கி, குருகுலத்தோர் போர்ஏறே, குற்றமது பார்க்குங்கால் சுற்றம் இல்லை ; ஒரு குலத்தில் பிறந்தோர்கள் உடன் வாழும் வாழ்வினைப் போல் உறுதி உண்டோ ! இருவருக்கும் வசை அன்றோ இருநிலம் காரணம் ஆக எதிர்ப்பது என்றான்.]

**விளக்கம் :-** பரிவு - மனவருத்தம். பவனகுமாரன் - வாயு புத்ரனான வீமன். மலர்க்கை பணித்து - மலர் போன்ற கையால் மேலும் பேசாமல் உட்காருமாறு செய்து. போர் ஏறே - போரில் ஆண் சிங்கம் போன்றவனே. குற்றமது பார்க்குங்கால் சுற்றம் இல்லை - குற்றத்தையே நாடின், பிறகு நமக்குச் சுற்றம் என்பதே இல்லாமற் போய்விடும், ஒரு குலத்தில் பிறந்தவர்கள் ஒன்றுபட்டு வாழும் வாழ்வைப்போல் நன்மை தரத்தக்கது ஒன்று உண்டோ! பெரிய பூமி காரணமாகப் போர் செய்தல் இரு திறத்தார்க்கும் பழியையே கூட்டிவைக்கும், என்று தருமன் கூறினான், என்பது ; ஈற்றடிகளின் பொருள். சினந்தெழுந்த தம்பியைத் தருமன், சமாதானப்படுத்தும் கருத்தது இது. குற்றமது, அது, பகுதிப் பொருள் விகுதி. அன்றோ, தேற்றப் பொருளது. மற்று ; அசை. பார்க்குங்கால் என்பதிலுள்ள **கால்** என்பது காலம் என்பதின் விகாரம், பார்க்கும் பொழுது.

**18. உரிமையுடன் றம்பியரன் றுணர்வறியா**
**மையினவைக்க ணுரைத்த மாற்றம்**
**பரிபவமோ கேட்டார்க்குப் பரிபவமென்**
**பதுபிறராற் பட்டா லன்றோ**
**கருதிலது மற்றெவர்க்கு மொவ்வாதோ**
**கண்மலரிற் கைப டாதோ**
**பொருதொழிலுங் கடைநிலத்திற் கிடந்ததே**
**யெனமொழிந்தான் புகழே பூண்பான்.**

[உரிமையுடன் தம்பியர் அன்று உணர்வு அறியாமையின் அவைக்கண் உரைத்த மாற்றம் பரிபவமோ! கேட்டார்க்கு பரிபவம் என்பது பிறரால் பட்டால் அன்றோ! கருதில் அது (மற்று) எவர்க்கும் ஒவ்வாதோ! கண் மலரில் கை படாதோ! பொரு தொழிலும் கடை நிலத்தில் கிடந்ததே, என மொழிந்தான், புகழே பூண்பான்.]

**விளக்கம் :-** உரிமை - உடன் பிறப்பினால் உண்டான சுதந்திரம். உணர்வு அறியாமையின்-நல்லறிவு இல்லாமையினால். மாற்றம்-பழிப்பிற்கு இடமான வார்த்தை, (துகிலுரிந்த செயலும் இதில் அடங்கும்). பரிபவம் - அவமானம். கேட்டார்க்கு - அவமதிப்புச் சொற்களைக் கேட்ட நமக்கு. பிறரால்-அயலாரால். கருதில் - யோசிக்குமிடத்து. (பிறரால் பட்டால்தான் அவமானம் என்பது) எவர்க்கும் ஒவ்வாதோ - எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கது ஆகாதோ. பொரு தொழிலும் கடை நிலத்தில் கிடந்ததே-போர் செய்தலும் ராஜதர்மத்தில் கடையிடத்தில் கிடக்க வேண்டியதே ; அதாவது போருக்கு இறுதியிடமே கொடுக்கப்பட்டுளது. அல்லது, போர் என்பது குப்பை போல் கொல்லைப் புறத்தில் கிடக்க வேண்டியதே, என்றும் பொருள் கொள்ளலாம். தம்பியர், ஒரு குலத்தவர் என்ற உறவின் உரிமையினால், ஏதோ அறியாமையினால் கூறியது பரிபவம் ஆதற் கில்லை. நம்மோடு சம்பந்தமில்லாத அன்னியரால் நேர்வதே பரிபவம். இதை உலகத்தார் எவரும் ஒத்துக்கொள்வர். கண்ணில் கை பட்டால் கையை வெட்டியா விடுகின்றோம்? வேறு வழி யில்லாத பொழுது உபயோகிக்க வேண்டிய கடைசி உபாய மாகின்ற இடத்தையே போருக்கு ராஜதர்மம் அளித்துளது, என்று தருமன் கூறினான், என்பதாம்.

தருமனது குணநலப் பெருமையைத் தோற்றுவிக்கும் அரிய செய்யுள் இது. துரியோதனன் பாஞ்சாலியை அவையில் துகில் உரிந்ததைக் கொழுந்தி என்ற உறவின் முறையால், என்று தருமன் வீமனுக்கு எடுத்துக் காட்டுகின்றான். உரிமையால் துகில் உரிதல் முறையோ, என்பதற்கு, அவர்களது அறியாமையைக் காரண மாக்குகின்றான். ''உரிமையில் செய்தால் என், பகையில் செய்தால் என்? இதனால் ஏற்பட்ட அவமானத்தைத் தீர்த்துக் கொள்ளல் வேண்டப்படுவது அன்றோ?'' என்று வீமன்

நினைக்கலாம், என்று எண்ணித் தருமன், ''பிறரால் பட்டாலன்றி அவமானம் இலது. இதை யாவரும் ஒத்துக்கொள்வர்'', என்று கூறுகின்றான். ''எவரும் ஒத்துக் கொள்ளார். நமக்கு இழைத்த அவமானம் பொறுத்தற்குரியதன்று'', என்று வீமன் கூறுவானாயின், அதற்கு விடையாகத் தருமன், ''கண்ணில் கை பட்டது என்று, அதைத் துண்டித்தல் முறையாமோ? உடலின் உறுப் பொன்று மற்றோருறுப்புக்குத் தீங்கு இழைத்தது என்று, அதைத் துண்டித்தலால், உடலுக்கு நஷ்டமே அதிகமாகும். எனவே துரியோதனாதியரொடு சந்து செய்துகொள்ள முயல்வதே அமையும்'', என்று கூறி முடிக்கின்றான்.

முன் சூது போர்ச் சருக்கத்தில் அந்தகனான திருதராட்டிரன், ''உத்தம மாங்குயிலே, என் சிறுவர் அறியாமல் உனக்கு நேரே மைத்துனராம் முறையால், இவ் வழக்கலாதன செய்தார் மதியிலா மல்—'' என்று கூறியதை முற்றிலும் நம்பிய தருமன், ''உரிமையின் உணர்வு அறியாமையால்...''. அவ்வாறு செய்தனர், என்றானாயிற்று. இந்தக் குணப் பெருமையை நோக்கியே புலவர் தருமனைப் **'புகழே பூண்பான்'** என்கின்றார். இது வேறோர் கருத்தையும் தரவல்லது. போரினால் புகழ் செய்வதினும், பொறையால் எய்தும் புகழே சிறப்பின் மிக்கது, என்று புலவர் கூறும் கருத்ததும் ஆகும்.

### வீமன் மீண்டுங் கூறல்

**19. சூடுகின்ற துழாய்முடியோன் சுரருடனே**
**முனிவர்களுஞ் சுருதி நான்கும்**
**தேடுகின்ற பதமசிவப்பத் திருநாடு**
**பெறத்தூது செல்ல வேண்டா**
**வாடுகின்ற மடப்பாவை தன்வரமு**
**மெனவரமும் வழுவா வண்ணம்**
**கோடுகின்ற மொழியவன்பா லெனைத்தூது**
**விடுகவினிக் கொற்ற வேந்தே.**

[சூடுகின்ற துழாய் முடியோன் சுரருடனே முனிவர்களும் சுருதி நான்கும் தேடுகின்ற பதம் சிவப்ப, திரு நாடு பெற தூது செல்ல வேண்டா, வாடுகின்ற மடம் பாவை தன் வரமும் என் வரமும் வழுவா வண்ணம் கோடுகின்ற மொழியவன்பால் எனை தூது விடுக இனி கொற்றம் வேந்தே.]

**விளக்கம் :-** கொற்ற வேந்தே, என்று வீமன் தருமனை அழைத்துக் கூறுவான்: ''சூடுதற்குரிய துளபமாலை தரித்த திருமுடியை உடையவனான கண்ணபிரான், தேவர்களோடு முனிவர்களும் வேதங்கள் நான்கும் தேடிக்கொண்டிருக்கும் திருவடிகள் சிவக்கும்படி நமக்காகத் தூது செல்லவேண்டா; விரித்த கூந்தலோடு வாடிக்கொண்டிருக்கும் பாஞ்சாலியின் சபதமும், என் சபதமும் கெடாதபடி செய்துகொள்ள, மாறு கின்ற சொல்லையுடைய துரியோதனனிடம் இனி, என்னைத்

தூது விடுக'', என்று வேண்டினான், என்பது பொருள். ''பரம் பொருளான கண்ணன், தன் திருவடிகள் சிவக்க, நம் பொருட்டுத் தூதுசெல்ல வேண்டா'', என்று கூறியதில் உள்ள கபடத்தை, 'எனைத் தூதுவிடுக', என்று வேண்டியது வெளிப்படுத்திவிடு கின்றது. கண்ணன் செல்வதால் சந்து அகலுமாயின், தானும் தையலும் தம்பியரும் எடுத்துக்கொண்ட சபதங்கள் வீணாகுமாத லால், வீமன் தன்னைத் தூது போக்குமாறு வேண்டுகின்றான். தான் சென்றால் துரியோதனாதியரைக் கொன்று சபதத்தை நிறைவேற்றிக்கொள்ளலாம்; அல்லது போருக்காவது வழி செய்து கொண்டு வரலாம், என்பது அவன் கருத்து. வரம் என்பது விருப்பம், என்ற பொருளதும் ஆகும்.

20. மலைகண்ட தெனவென்கைம் மறத்தண்டின்
வலிகண்டு மகவான் மைந்தன்
சிலைகண்டு மிருவர்பொருந் திறல்கண்டு
மெமக்காகத் திருமா னின்ற
நிலைகண்டு மிவள்விரித்த குழல்கண்டு
மிமைப்பொழுதி னேரார் தம்மைக்
கொலைகண்டு மகிழாம லவன்குடைக்கீ
ழுயிர்வாழக் குறிக்கின் றாயே.

[மலைகண்டது என என் கை மறம் தண்டின் வலி கண்டும், மகவான் மைந்தன் சிலை கண்டும், இருவர் பொரும் திறல் கண்டும், எமக்கு ஆக திருமால் நின்ற நிலை கண்டும், இவள் விரித்த குழல் கண்டும் இமைப் பொழுதில் நேரார் தம்மை கொலை கண்டு மகிழாமல் அவன் குடைக்கீழ் உயிர் வாழ குறிக்கின்றாயே.]

**விளக்கம் :-** எனது கதையின் வலியையும், விசயனது சிலையையும், நகுல சகதேவரின் போர் ஆற்றலையும், திருமால் நமக்குத் துணை செய்ய நிற்கின்ற நிலையையும், (எப்பொழுது குழல் முடிக்கப் பெறுவேனோ என்று தவித்துக்கொண்டிருக்கும்) பாஞ்சாலியின் அவல நிலையையும் கண்டிருந்தும், நேராரை (பகைவரை) அமரில் கொன்று நாடு பெற்று மகிழாமல், அவன் குடையின்கீழ், ஊரும் வீடும் பெற்று மானமிலாது உயிர் வாழ நினைக்கின்றது ஏனோ தெரியவில்லை,—என்று வீமன் கூறினான், என்பதாம். திரௌபதி குழல் விரித்து நிற்பது, போர் செய் வதற்குக் காரணம்; மற்றவை வெற்றியின் நிச்சயத்தைக் குறிப்பவை. தண்டும் வில்லும். இருவர் திறலும், கண்ணனது துணையும் இருந்தும், வெற்றி தோல்வி நிச்சயமற்றது, என்பது தருமனது நினைவாயின், அப்பொழுதும் மானங் கருதிப் பழி தீர்த்துக்கொள்ளும் போரில், வெல்லல், அல்லது அக் கருமத்தில் இசையோடு சாதல், அன்றோ ஒரு க்ஷத்திரியன் செய்யத்தக்கது, என்று வீமன் கூறும் குறிப்பினதும் ஆகும், இது.

**21. வெம்புயவீ மனும்வெகுண்டு மீண்டுமிவை**
**யெடுத்துரைப்ப மேக மேனிப்**
**பைம்பொனெடுந் தனித்திகிரிப் பரந்தாமன்**
**கருணையுடன் பரிந்து நோக்கி**
**அம்புவியின் முன்பிறந்தோ ரரசுநெறி**
**முறையுரைத்தா லதுகே ளாமல்**
**தம்பியரு மறுப்பரோ தலைவவினிக்**
**கடுங்கோபந் தணிக வென்றான்.**

[வெம் புயம் வீமனும் வெகுண்டு மீண்டும் இவை உரைப்ப, பைம்பொன் நெடுந் தனி திகிரி பரந்தாமன் கருணையுடன் பரிந்து நோக்கி, அம்புவியில் முன் பிறந்தோர் அரசு நெறி முறை உரைத்தால் அது கேளாமல் தம்பியரும் மறுப்பரோ, தலைவ, இனி கடுங்கோபம் தணிக, என்றான்.

**விளக்கம் :—** மீண்டும் சினமொழி பகர்ந்த வீமனை அருளோடும் அன்போடும் நோக்கி, ''வீரனே, மூத்தோன் ராஜ தர்மத்தை எடுத்துக் கூற இளையோனாகிய நீ மறுத்தல் அமையுமோ; சினந்தணிக'' என்று வீமனைக் கண்ணன் அடங்கச் செய்தான், என்பதாம். கபட நாடகனான கண்ணன் பிள்ளையையுங் கிள்ளித் தொட்டிலையும் ஆட்டும் மாயம் சிறிது புரிகின்றான். சஞ்சய முனிவன் சென்றபின், தருமன், கண்ணனை நோக்கி, ''எமது இந்நிலையில், நாங்கள் என்ன செய்வது, கூறுக'', என்று கேட்க ''ஐவராம் அவனிபற்கு நினைவு ஏது?'' என்று மாயன் எதிர் வினா வழங்கியதில், பாண்டவர் கருத்தை நிறைவேற்றுங் கருத்தினன் போல் காட்டிக்கொண்டான். அதன்மேல் தருமன் ''போர் இன்றிக் கயிரவமும் தாமரையுங் கமழ்பழனக் குருநாட்டில் எம்மைச் சநதுபட உரைத்தருள்'', என்று கண்ணனை வேண்டினான். பூபாரம் தீர்க்க வந்த புயல் வண்ணனுக்கு இது பொருந்தாமையின், ''அவ்வாறு, செய்யின் பூதலத்தோர். ஏசாரோ, புகன்ற பெருவஞ்சினமும் பொய்த்திடாதோ, நீதியோ!''; என்று போர் தூண்டும் வாசகங்கள் கூறியதில் பாண்டவாரம் இளம் பிள்ளைகளைக் கிள்ளி விடுபவன் ஆகின்றான். இதற்கெதிர் தருமன், ''நீ தூது சென்று எமது நினைவு உரைத்தால், நினைவின் வண்ணம் எங்கள் தாயம் தாரானாகில் பொருதெனினும் பெறுவன்; இது வசையும் அன்று'', என்று ஆரம்பித்தவனது குரல், ஐந்து ஊரிலும் ஐந்து வீட்டிலும், தேய்ந்து ஒடுங்கலாயிற்று. இது கேட்ட வீமன் வெகுண்டு எழுந்தான். போரே கண்ணனது கருத்து என்ற துணிவினால், ''ஊனமிலான் மானமிலாது இவ்வாறு உரைக்கின்றானே? இவனுக்கு இளைஞனாகப் பிறந்தேனே புன்விதியேன்! எங்கள் விரதமொழி வீணாகுமே!'' என்று தமையனைக் கடிந்து கொள்பவனாயினான். மேலும் அவன், ''தூதே நின் கருத்தாயின் என்னைப் போகவிடு. என் வரமும், மடப்பாவை தன் வரமும் வழுவா வண்ணம் காரியத்தை முடித்துக் கொண்டு வருகின்றேன்'' என்றான். இந்த நிலையில். ''முன் பிறந்தோர் அரசு நெறிமுறை உரைத்தால் மறுப்பரோ பின்

பிறந்தோர்'', என்று கூறிக் கண்ணன் வீமனை வாயடங்கச் செய்தான். வீமனும் கண்ணனது கருத்து விளங்காமல் திகைத்த வனாய் உட்கார்ந்தான். கண்ணனது மாயச் செய்கையை இச் சிறு பிள்ளைகளால் எங்ஙனம் தெளிந்துகொள்ள முடியும்? வீமன் வாயடங்கி உட்காரலும், 'கண்ணன் எக் கருத்தினன்?' என்பது புரியாத விசயன், கூசிக் கூசி எழுந்து கூறியதை அடுத்த செய்யுள் கூறும்.

விசயன் கூறல்

**22. மைக்கால முகிலூர்தி வானவர்கோன்**
**றிருமதலை வணங்கி நின்று**
**முக்காலங் களுமுணரு முகுந்தனுக்கு**
**முதல்வனுக்கு மொழிவான் மன்னோ**
**அக்காலம் பொறுத்தவெலா மமையாம**
**லின்னமிருந் தறமே சொன்னால்**
**எக்காலம் பகைமுடித்துத் திரௌபதியுங்**
**குழல்முடிக்க விருக்கின் றாளே.**

[மைக்காலம் முகில் ஊர்தி வானவர்கோன் திருமதலை வணங்கி நின்று, முக்காலங்களும் உணரும் முகுந்தனுக்கும் முதல் வனுக்கும் மொழிவான், (மன்னோ), அ காலம் பொறுத்த எலாம் அமையாமல் இன்னம் இருந்து அறமே சொன்னால், எ காலம் பகை முடித்து, திரௌபதியும் குழல் முடிக்க இருக்கின்றாளே.]

**விளக்கம் :-** கார்காலத்து மேகத்தை வாகனமாகவுடைய தேவர் தலைவனான இந்திரனது சிறந்த மகனாகிய அருச்சுனன் (மெல்ல) எழுந்து கண்ணனையும் நமையனையும் வணங்கி நின்று, என்பது முதலடியின் பொருள். அக்காலம் - திரௌபதியைத் துகிலுரிந்த நாள். பொறுத்தவெல்லாம் போதாமல் இன்னமும் தர்மோபதேசமே செய்துகொண்டிருந்தால், திரௌபதி எப் பொழுது குழல் முடிப்பது, என்று விசயன் கூறினான், என்பதாம். திரௌபதி குழல் முடிப்பதில், தங்கள் சபதமும் நிறைவெய்து மாதலினால், திரௌபதி குழல் முடிப்பது எப்போது, என்றான், என்க.

அழகுடைய செய்யுள் இது. வீமனை வாயடக்கிய கண்ணன், தன்னையும் கையமர்த்திவிடுவானோ என்ற அச்சத்தால் விசயன், மெதுவாகக் கூசிக் கூசி எழுந்தான், என்பதை முதலடி காட்டும், ''விசயன் உடனே எழுந்தான்'', என்னாமல், மேகத்தை வாகன மாகவுடைய தலைவனது சிறந்த மகன், என்ற வாசகப்போக்கு, அவன் அஞ்சியஞ்சி எழுந்து நின்று பேசலுற்றான், என்பதைக் குறிக்கும். மேலும், 'எக்காலம் பகை முடித்து'' என்று

தொடர்ந்த வாக்கிய அமைப்பு, முறை பிறழ்ந்து 'திரௌபதி குழல் முடிக்கின்றாளே', என்று நடந்தது நயம் மிகவுடையது. எழுந்த அருச்சுனன் தன் கருத்தைத் தெரிவிக்கையில், தலைவிரிகோலமாய். நின்ற திரௌபதி கண்ணிற்பட, தாங்கள் எய்திய பரிபவத்தோடு திரௌபதியின் தோற்றமும் உள்ளக் கொதிப்பை உண்டாக்கவே, உரைதடுமாறல் நேர்ந்து, 'திரௌபதி எப்பொழுது குழல் முடிப்பது?', என்னாமல் 'திரௌபதியும் குழல்முடிக்க இருக்கின்றாளே', என வாய் விளம்பிவிட்டது. இதில் நாடகத் திறமையைக் காணலாம். இவ்வாறு கூறியவன் மேலும் கூறுவான்.

**23. தேவராயி னும்பழைய தெயித்தியரா**
**யினுமற்றுஞ் செப்பு கின்றோர்**
**யாவராயி னுமெதிர்ந்தோ ருயிருண வென்**
**றிருப்பதுவே யென்கை வாளி**
**மூவராய வர்களுக்கு முதல்வனா**
**கியமூர்த்தி முகிறோய் பூக**
**மீவராலு களும்வயற்கு ருநாடென்னி**
**வனவன்பால் வேண்டு மாறே.**

[தேவர் ஆயினும் பழைய தெயித்தியர் ஆயினும் மற்றும் செப்புகின்றோர் யாவராயினும் எதிர்ந்தோர் உயிர் உண என்று இருப்பது ஏ என் கை வாளி. மூவர் ஆயவர்களுக்கும் முதல்வன் ஆகிய மூர்த்தி முகில் தோய் பூகம் மீ வரால் உகளும் வயல் குரு நாடு என் இவன் அவன்பால் வேண்டு ஆறு, (ஏ). ]

**விளக்கம் :-** தெயித்தியர் - அசுரர். தேவர்களுக்கு மூத்தவராதலால் 'பழைய தெயித்தியர்', என்றார். செப்புகின்ற யாவராயினும் - ஆற்றல் உடையவர்களாகச் சொல்லப்படுகின்ற வேறு எவராயினும். 'என்று இருப்பதுவே', என்பதை, 'என்றே இருப்பது' என்று கூட்டுக. மூவராயவர்க்கும் முதல்வனாகிய மூர்த்தி - கண்ணன். முகில் தோய் பூகம் மீ வரால் உகளும் வயல் குரு நாடு - மேகத்தை அளாவி நிற்கும் பாக்கு மரங்களின் மேல் வரால் மீன்கள் அலையும் வயல்களை உடைய குரு நாடு, (அதாவது நீர்வளச் சிறப்பை உடைய வளநாடு, என்பது பொருள்). தேவரோ அசுரரோ, அல்லது அவரோடு ஒத்த வலியுள்ள யாவரே ஆயினும், அவர் உயிரை உண்ண என் கை வாளி இருக்க, மூவர்க்கும் முதல்வனான மூர்த்தி அவன் பால் நாடு ஏன் வேண்டவேண்டும், என்று விசயன் கூறும் கருத்தது இது.

**24. தீண்டாத கற்புடைய செழுந் திருவைத்**
**துகிலுரியச் செயலொன் றின்றி**
**நீண்டானே கரியானே நிமலாவென்**
**றரற்றினளாய் நின்று சோர**

**மாண்டார்போ லதுகண்டு மன்னவையில்**
**யாமிருந்த மாசு தீர**
**வேண்டரவோ வேண்டுவது மேம்படுநல்**
**லறமேயோ வேந்தர் வேந்தே.**

[தீண்டாத கற்பு உடைய செழுந்திருவை துகில் உரிய செயல் ஒன்று இன்றி, நீண்டானே கரியானே நிமலா என்று அரற்றின ளாய் நின்று சோர, மாண்டார்போல் அது கண்டு மன் அவையில் யாம் இருந்த மாசு தீர வேண்டாவோ, வேண்டுவது மேம்படு நல் அறமேயோ, வேந்தர் வேந்தே.]

**விளக்கம் :-** தீண்டாத - தீண்டத் தகாத, அல்லது வீட்டு விலக்காய் இருந்ததால் தீண்டத்தகாத. செழுந்திரு - அழகிய திருமகள் போன்ற திரௌபதி. நிமலன் - பரிசுத்தன், குற்ற மில்லாதவன். மாசு - பழி. அறம் - பொறுமை, தமது மானத் திற்கு உண்டான மாசினைத் துடைத்துக்கொள்ளத் துடிக்கும் மனத்தினனான விசயன், ''உற்ற பரிபவமோ பெரியது. அதைத் தீர்த்துக்கொள்வதற்கான ஆற்றலும் உளது. அவ்வாறாக, இவன் ஏன் தாழ்கின்றான். வெல்லும் திறமை இல்லாத போதன்றோ தர்மத்தையும் பொறுமையையும் உதவிக்கு அழைக்க வேண்டும்?'' என்ற கருத்தினனாய், ''இப்பொழுது வேண்டப்படு வது மாசு தீரும் வழி முயல்வதே; நல்லறம் அன்று'' என்று கூறினான், என்பதாம்.

**25. பொன்னாருந் திகிரியினான் போனாலும்**
**பொறைவேந்தன் புகன்ற வெலாம்**
**சொன்னாலு மவன்கேளான் விதிவலியாற்**
**கெடுமதிகண் டோன்றா தன்றே**
**எந்நாளு முவர்நிலத்தி னென்விளைவித்**
**திடினும்விளை வெய்தி டாது**
**பன்னாகந் தனக்கமிர்தங் கொடுத்தாலும்**
**விடமொழியப் பயன்கொ டாதே.**

[பொன் ஆரும் திகிரியினான் போனாலும், பொறைவேந்தன் புகன்ற எலாம் சொன்னாலும் அவன் கேளான், விதி வலியால் கெடுமதி கண் தோன்றாது அன்றே, எ நாளும் உவர் நிலத்தில் என் முளை வித்திடினும் விளைவு எய்திடாது, பன்னாகம் தனக்கு அமிர்தம் கொடுத்தாலும் விடம் ஒழிய பயன் கொடாதே.]

**விளக்கம் :-** பொன் ஆரும் திகிரியினான் - கண்ணன். பொறை வேந்தன் - பொறுமைக் குணம் வாய்ந்த தருமன். விதி வலியால் கெடுமதி கண் தோன்றாதன்றே - ஊழின் வலியால் புத்தியினிடத்தே நன்மை தீமை கட்புலனாகாது அல்லவா? உவர் நிலம் - பயிர் விளைவுக்கு ஏற்றதல்லாத களர் நிலம். பன்னாகம் - பாம்பு. கண்ணனே சென்றாலும் தூது பயன்

படாது, என்று விசயன் சொன்னான் என்பதாம். நல்ல உபதேசங்களால் தீயோரோ திருந்தார்; அதற்கு எதிர் அவர்கள் தீங்கையே இழைப்பர், என்பது ஈற்றடிகளின் கருத்து.

### நகுலன் கூறல்

**26. பார்த்தனிவை புகன்றிறைவன் பணித்தருள**
**விருந்ததற்பின் பரிவி னோடும்**
**தீர்த்தனிரு பதமிறைஞ்சித் தருமனையுங்**
**கைதொழுது சினங்கொள் வேலான்**
**நீத்தநெடுங் கடலெழுபா ரடலைவர்**
**பெறுவரெனு நிகழ்ச்சி பொய்யோ**
**கோத்தருமந் தனிலாண்மை கூறாதோ**
**கூறுகநீ கொற்ற வேந்தே.**

[பார்த்தன் இவை புகன்று, இறைவன் பணித்தருள இருந்த தன் பின், பரிவினோடும் தீர்த்தன் இரு பதம் இறைஞ்சி, தருமனையும் கை தொழுது, சினம் கொள் வேலான், நீத்தம் நெடுங்கடல் எழு பார் அடல் ஐவர் பெறுவர் எனும் நிகழ்ச்சி பொய்யோ, கோ தருமந்தனில் ஆண்மை கூறாதோ, கூறுக நீ கொற்றம் வேந்தே.]

**விளக்கம் :-** பணித்தருள - கையமர்த்தியருள. தீர்த்தன் - கண்ணபிரான். நீத்தம் நெடுங்கடல் எழு பார் - நீர்மயமான பெரிய கடலால் சூழப்பட்ட ஏழு தீவுகளை உடைய பூமி. பெறுவர் எனும் நிகழ்ச்சி - (ஐவர்) பெறுவர் என்று (உலகத்தார் சொல்லும்) சொல். ஆண்மை - வீரம், தறுகண் முதலியன. நிகழ்ச்சி, என்பது, என்பது, பொறுத்தார் பூமியாள்வார், என்ற பொருளதாகும். ''இராஜ தர்மம், ஆண்மைக்கு இடங் கொடுத்துளது'', என்று நகுலன் எடுத்துக்காட்டுங் கருத்தது ஈற்றடி. **ஜம்பு, பிலட்சம், குசம், கிரௌஞ்சம், சால்மலி, சாகம், புஷ்கரம்,** ஆகியவை ஏழு பார்.

**27. கேவலந்தீர் வலியபகை கிடக்கமுதற்**
**கிளர்மழைக்குக் கிரியொன் றேந்து**
**கோவலன்போ யுரைத்தாலுங் குருநாடு**
**மரசுமவன் கொடுக்க மாட்டான்**
**நாவலம்பூ தலத்தரசர் நாடிரந்தோ**
**மெனநம்மை நகையார வண்ணம்**
**காவலன்றன் படைவலியு மெமதுதடம்**
**புயவலியுங் காண லாமே.**

[கேவலம் தீர் வலிய பகை கிடக்க, முதல் கிளர் மழைக்கு கிரி ஒன்று ஏந்து கோவலன் போய் உரைத்தாலும், குரு நாடும் அரசும் அவன் கொடுக்கமாட்டான்; நாவல் அம் பூதலத்து அரசர் நாடு

இரந்தோம், என, நம்மை நகையா வண்ணம், காவலன் தன் படை வலியும் எமது தடம் புயவலியும் காணலாமே.]

**விளக்கம் :-** கேவலம்தீர்-சிறுமை தீர்ந்த, அதாவது பெரிய - வலிய பகை கிடக்க - வயிரமுடைய பெரிய பகை நீண்ட காலமாக நமக்கும் அவர்களுக்கும் இடையே நிலைத்திருக்க. முதல் கிளர் மழைக்கு கிரி ஒன்று ஏந்து கோவலன் - முன்பு ஆயர்பாடியில் வளர்ந்தபொழுது (இந்திரன் ஏவலால்) மிகுதியாகப் பொழிந்த மழையைத் தடுத்து, ஆயரை இரட்சிக்கக் கோவர்த்தனகிரியைக் குடையாக ஏந்திய கண்ணன். நாவலம் பூதலம் - ஜம்பூத்தீவு. இத் தீவிலுள்ள அரசர்கள் பகைவனிடம் நாடு இரந்தோம் என்று பரிகசிக்காதபடி செய்யவல்ல உன் தம்பியராகிய எங்கள் தோள் வலியையும், துரியோதனனது படையின் ஆள்வலியையும், நீ காணலாம்,—என்பது ஈற்றடிகளின் பொருள். ''கண்ணனே சொல்லினும் அவன் கேளான், இரந்தோம் என்ற பழி நம்மைச் சேராவண்ணம் பொரலே செய்தற்குரியது; வெற்றி பெறும் ஆற்றலும் நமக்குளது'', என்று நகுலன் கூறினான், என்க.

**28.** **அன்ன நடை யரம்பைதனை யவுணர்கவர்ந்**
**திடவிமையோ ரரசுக் காக**
**முன்னமவ ருடன்பொருது சிறைமீட்டா**
**னங்குலத்து முதல்வ னன்றோ**
**மன்னவையில் யாங்காண மடவரலைத்**
**துகிலுரிந்த வலியோன் றன்பால்**
**இன்னமிரந் தவன்குடைக்கீ ழிருந்தக்கா**
**னம்மையுல கென்சொ லாதே.**

*[அன்னம் நடை அரம்பைதனை அவுணர் கவர்ந்திட, இமையோர் அரசுக்கு ஆக, முன்னம் அவருடன் பொருது சிறை மீட்டான் நம் குலத்து முதல்வன் அன்றோ! மன் அவையில் யாம் காண மடவரலை துகில் உரிந்த வலியோன்பால் இன்னம் இரந்து அவன் குடைக் கீழ் இருந்தக்கால் நம்மை உலகு என் சொலாது, ஏ.]*

**விளக்கம் :-** இமையோர் அரசுக்காக - இந்திரன் பொருட்டு, அதாவது இந்திரனின் மானம் காத்தற் பொருட்டு. நம் குலத்து முதல்வன் - இளை என்பவளுக்கும் புதனுக்கும் பிறந்தவனான புரூரவச் சக்ரவர்த்தி. துகிலுரிந்த வலியோன் - (நமக்குமுன் ராஜசபையில்) துகில் உரிந்த நெஞ்சழுத்தமுள்ள தீயனான துரியோதனன். அவுணரால் அபகரிக்கப்பெற்ற அரம்பையின் துயரத்தையும் தேவர்கோனது மானத்தையும் அசுரரோடு பொருதுவென்று காத்த உத்தமனான புரூரவ சக்ரவர்த்தியின் வம்சத்தில் தோன்றிய நாம், அக்கினி சாட்சியாக மணந்த

மனைவியின் துகிலுரிந்து நம்மைப் பரிபவப்படுத்திய தீயனைத் தண்டித்துத் தையல் துயரத்தையும் நமது மானத்தையும் காக்காமல், அவன்பால் இரந்து நின்று நாடோ வீடோ பெற்று வாழின், உலகம் என் சொல்லி நம்மைப் பழிக்காது, என்று நகுலன் கூறினான், என்பதாம்.

**29.** **கானெறிபோய்க் கரந்துறைந்து கடவநாள்**
**கழித்ததற்பின் கான நீங்கி**
**ஈனமிலா வகைவந்தார் நந்துணைவ**
**ரெனச்சிறிது மிரங்கா னாகில்**
**மாநகரும் வளநாடு முரிமையுந்தன்**
**மொழிப்படியே வழங்கா னாகில்**
**தானறியா தவன்பிறர்போய்க் கற்பித்தா**
**லறிவனோ தரணி வேந்தே**

[கான் நெறி போய் கரந்து உறைந்து கடவநாள் கழித்து, அதன்பின் கானம் நீங்கி ஈனம் இலாவகை வந்தார் நம் துணைவர் என சிறிதும் இரங்கான் ஆகில், மாநகரும் வளநாடும் உரிமையும் தன் மொழிப்படியே வழங்கான் ஆகில், தான் அறியாதவன் பிறர் போய் கற்பித்தால் அறிவனோ, தரணிவேந்தே.]

**விளக்கம் :-** கான் நெறி போய்-காட்டு வழி சென்று பன்னிரண்டு வருடங்கள் வசித்து. கரந்து உறைந்து - ஓராண்டு அஜ்ஞாத வாசம் செய்து. கடவநாள் கழித்து - கழிக்கவேண்டிய பதின் மூன்று வருஷத்தையும் கழித்து. ஈனம் - குறைவு, குற்றம். ''பாண்டவர் தாம் கழிக்கவேண்டிய நாள்களைக் குற்றமிலாது கழித்து வெளிப்பட்டார், நாமும் சொன்ன சொல் தவறாமல் நடந்துகொள்ளவேண்டும்'', என்ற கடமை உணர்வு உள்ளவனாயின் உலூகன் சொல்லு முன்னமேயே நாட்டை வழங்கி இருப்பான். தன் கடமையைத் தானே உணராதவன், பிறர் சொல்ல உணர்வான், என்பது என்ன நிச்சயம்? கண்ணனே சென்றாலும் தூது பயன்படாது'', என்று நகுலன் கூறினான், என்க. தம்பியர் மூவரும் தருமனது கருத்தோடு மாறுபட்டுக் கூறியதைக் கண்டோம். அவர் தம் வயதிற்கும் குணத்திற்கும் ஏற்றபடி, வார்த்தையின் வன்மையைக் குறைத்துக் கூறியது புலவரது திறமையைக் காட்டுவதாகும். வீமன் முரட்டு சுவபாவமுடையவன். எனவே, தமையனை ''மானமிலான்'', என்றும், ''இவனோடு பிறந்தேனே'', என்றும் இகழ்ச்சி தோன்றச் சினமொழி பகன்றான். அவனுக்கு இளையவனான விசயன், மென்மைப் பண்பினைச் சிறிது உடையவன். அவன், ''துகிலுரிகையில் மாண்டார்போல் நாமிருந்த மாசு தீர வேண்டாவோ'' என்று முறையிடுபவன் போல் கூறினான். இது தருமனை அவன் **பிணமே** என்று அழைத்ததை ஒக்கும். எனினும் வீமனைப்போல் **மானமிலான்** என்று படர்க்கையில் கூறாமல், உளப்பாட்டுத் தன்மையில் தன்னை

யும் சேர்த்துக் கொண்டதில், அவ்வசையின் வன்மை சிறிது குறையக் காண்கின்றோம். இவ்விருவருக்கும் இளையவன் நகுலன். அவன், ''கோத்தருமம் ஆண்மை கூறாதோ'', என்றான். இது, தருமனைப் **பேடியே** என்று அழைத்ததை ஒக்கும். ஆனால், வீமனைப்போல் தைக்கும் சொற்களை விடுத்தும், விசயனைப் போல் தன்னையும் உளப்படுத்தாமலும், ''ராஜதர்மத்தில் ஆண்மைக்கு இடம் இல்லையோ''. என்று கேட்பான்போல், கூறியதில் வன்மையின் வேகம் மிகமிகக் குறைவதாகின்றது. **மானமிலி** என்று வீமன் கடிந்து கூறியதனினும், **பிணமே** என்று விசயன் கூறியதும், அதனினும், **பேடியே** என்று நகுலன் கூறியதும் வன்மை குறைந்த வாசகங்கள் ஆதல் காண்க. இவ்வாறு தம்பியர் மூவரும் ஒருவர்பின் ஒருவராய் எழுந்து கூற, ஆண்டிருந்த சகாதேவன் வாய் பேசாமல். இருந்தான். அது கண்ட கண்ணன், அவனது கருத்தைத் தெரிவிக்குமாறு பணிக்க, அவனும் கூறுவா னாயினான்.

## சகாதேவன் பேசல்

**30.** **நகுலனிவை யுரைத்ததற்பி னன்றெனக்கை**
**யமைத்தருளி நகுலன் சொல்லும்**
**இகல்விசயன் றன்மொழியுந் திறல்வீம**
**னியம்பியதும் யாவுங் கேட்டோம்**
**புகலரிய வுணர்வுடையோய் புகழுடையோய்**
**திறலுடையோய் புகனீ யென்ன**
**முகிலனைய திருமேனி முகுந்தனுக்கு**
**மனமுருக மொழிகின் றானே.**

[நகுலன் இவை உரைத்ததன்பின் நன்று என கை அமைத்தருளி, நகுலன் சொல்லும், இகல் விசயன் தன் மொழியும், திறல் வீமன் இயம்பியதும் யாவுங் கேட்டோம், புகல் அரிய உணர்வு உடை யோய், புகழ் உடையோய் புகல் நீ என்ன, முகில் அனைய திருமேனி முகுந்தனுக்கு மனம் உருக மொழிகின்றான், ஏ.]

**விளக்கம் :-** புகல் அரிய உணர்வு - மெய்யறிவு. திறல் - ஆற்றல், திறமை. ''உன் தமையன்மார் கூறியன கேட்டோம், வித்தகனே உன் கருத்து யாது?'' என்று கண்ணன் கேட்க, அப் பிரானது மனம் உருகும்படி சகாதேவன் கூறுவானா யினான்,—என்பதாம்.

**31.** **சிந்தித்த படிநீயுஞ் சென்றாலென்**
**னொழிந்தாலென் செறிந்த நூறு**
**மைந்தர்க்குண் முதல்வனிலம் வழங்காம**
**லிருந்தாலென் வழங்கி னாலென்**
**கொந்துற்ற குழலிவளு முடித்தாலென்**
**விரித்தாலென் குறித்த செய்கை**
**அந்தத்தின் முடியும்வகை யடியேற்குத்**
**தெரியுமோ வாதி மூர்த்தி.**

[சிந்தித்தபடி நீயும் சென்றால் என், ஒழிந்தால் என்? செறிந்த நூறு மைந்தர்க்குள் முதல்வன் நிலம் வழங்காமல் இருந்தால் என், வழங்கினால் என்? கொந்து உற்ற குழல் இவளும் முடித்தால் என், விரித்தால் என் ? குறித்த செய்கை அந்தத்தில் முடியும் வகை அடியேற்கு தெரியுமோ ? ஆதிமூர்த்தி.]

**விளக்கம் -:** கொந்து உற்ற குழல் - திருத்துதல் இல்லாமல் சிக்குப் பிடித்த கூந்தல். குறித்த செய்கை - நீ உன் திருவுளத்தில் கொண்டிருக்கும் காரியம், அந்தத்தில் முடியும் வகை - கடைசி யாக முடியும் விதம். பரம்பொருளே கண்ணன் என்பதையும் அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதையும் யாவரும் அறிவாரேனும், அகங்கார மமகாரங்களாகிய மாயை இடையிட்டு, ஜீவான்மாக்களை இடர் உறச் செய்கின்றன. எனவே, பாண்டவர் நால்வரும், ''அவன் கருத்தின் வழியே காரியம் நடக்கும் என்ற உணர்வினராய்க் காரியத்தை அவனிடம் ஒப்படைக்காமல்'', தங்கள் கருத்தைத் தெரிவிப்பவராயினர். அம் மாயையை வெல்லும் திறலுடைய தத்துவ வித்தகனாகிய சகாதேவன், ''அந்தத்தில் முடியும் வகை அடியேற்குத் தெரியுமோ ஆதிமூர்த்தி!'' என்பா னாயினான். அதாவது, கடவுள் இருந்து ஒரு காரியத்தை நடத்தி வைக்கும்பொழுது, அவன் கருத்தின் வழி காரியம் நடக்கவிடாமல், ''இது, இது, செய்க'' என்று உரைப்பதெல்லாம் வீணானதே, என்ற கருத்தது சகாதேவன் கூற்று.

**32. முருகவிழ்க்கும் பசுந்துளப முடியோனே**
**யன்றலகை முலைப்பா லுண்டு**
**மருதிடைச்சென் றுயர்சகடம் விழவுதைத்துப்**
**பொதுவர்மனை வளர்ந்த மாலே**
**ஒருவருக்குந் தெரியாதிங் குன்மாயை**
**யானறிவே னுண்மை யாகத்**
**திருவுளத்துக் கருத்தெதுவோ வதுவெனக்குங்**
**கருத்தென்றான் றெய்வ மன்னான்.**

[முருகு அவிழ்க்கும் பசுந்துளபம் முடியோனே, அன்று அலகை முலை பால் உண்டு, மருது இடை சென்று உயர் சகடம் விழ உதைத்து பொதுவர் மனை வளர்ந்த மாலே, ஒருவருக்கும் தெரியாது இங்கு உன் மாயை, யான் அறிவேன் உண்மையாக, திரு உளத்து கருத்து எதுவோ, அது எனக்கும் கருத்து என்றான், தெய்வம் அன்னான்.]

**விளக்கம் ;-** முருகு - தேன், பரிமளம். அலகை - பேய் மகளான பூதனை. மருது-இரட்டையான மருதமரங்கள். சகடம் - சகடாசுரன், (கண்ணனது நடைவண்டியில் ஆவேசித்த அசுரன்). இங்கே உள்ளவர் அறிந்துகொள்ளாத உன் மாயச் செயலை நான் நன்றாக அறிவேன் ; எனவே, ''உனது திருவுளத்துக் கருத்து எதுவோ, அது எனக்கும் கருத்து'' என்று தெய்வத் தன்மை

யுடைய சகாதேவன் கூறினான், என்பதாம். தன் கருத்தை நிறை வேற்றிக்கொள்ளும் நோக்கமுடைய கண்ணன், வஞ்சனையாய், ''ஐவராம் அவனிபர்க்கு நினைவு ஏது?'' என்று கேட்டதற்கு ஈடாக அறிஞனான சகாதேவனும், 'உனது திருவுள்ளக் கருத்தே எனது கருத்தும்'', என்றான். நினைத்த கருமம் முடிகின்றவரை, 'அது யாது?' என்று பிறர் அறியாவண்ணம் கண்ணன் செய்கின்ற மாயத்தை அவனது குழந்தைப் பருவ நிகழ்ச்சிகளாகிய, அலகை முலை உண்டது, மருதிடைத் தவழ்ந்தது, சகடு உதைத்தது ஆகிய வற்றால் சகாதேவன் குறித்துக் காட்டுவானாயினான். ''கம்சனால் ஏவப்பெற்றுக் கண்ணனைக் கொல்ல வந்த அரக்கியை முலை உண்பதுபோல் அவளது உயிர் உண்டான். நாரத சாபத்தால் இரட்டை மருத மரங்களாய் நின்ற குபேர புத்திரர்களான நள கூபன், மணிக்கிரீவன், என்பவர்களை, எசோதையால் உரலோடு கட்டப் பெற்ற கண்ணன், அந்த உரலை இழுத்துக்கொண்டு அம் மரங்களிடையே சென்று முறித்துச் சாபநீக்கம் பெறச் செய்தான். தொட்டியிலடியில் இருந்த வண்டியில் ஆவேசித்துத் தன்னைக் கொல்லச் சமயம் பார்த்துக்கொண்டிருந்த அசுரனைக் குழந்தைக் கண்ணன் காலால் உதைத்துக் கொன்றான்'', என்பன வரலாறு ஆகும். ''இவ்வண்ணம் பிள்ளைப் பருவத்தில் மாயம் பல புரிந்த நீ, இப்பொழுதும் செய்வது மாயம் என்பதை அறிவேன். எனினும், அம் மாயையின் முடிவு யாவதென்பதை நான் அறியேன்; எனவே, 'உன் கருத்தே என் கருத்தும்', என்றேன். இவ்வாறு நான் சொன்னாலன்றி உண்மையை உரைத்தவ னாகமாட்டேன்'', என்று கண்ணன் மனம் உருகும்படி இளவல் கூறினான், என்க.

**33. இவ்வண்ணஞ் சாதேவ னியம்புதலு**
**நகைத்தருளி யிகலோர் சொன்ன**
**அவ்வண்ணம் புகலாமல் விரகுரைத்தா**
**னிவனென்ன வவனோ டாங்கோர்**
**பைவண்ண மணிக்கூடந் தனிலெய்திப்**
**பாரதப்போர் பயிலா வண்ணம்**
**உய்வண்ணஞ் சொல்லுகநீ யுபாயமெனத்**
**தொழுதுரைப்பா னுரங்கொள் வேலான்.**

[இ வண்ணம் சாதேவன் இயம்புதலும் நகைத்தருளி, இகலோர் சொன்ன அ வண்ணம் புகலாமல் விரகு உரைத்தான் இவன் என்ன, அவனோடு ஆங்கு ஓர் பை வண்ணம் மணி கூடந் தனில் எய்தி, ''பாரதம் போர் பயிலா வண்ணம் உய் வண்ணம் சொல்லுக நீ உபாயம்'' என்ன, தொழுது உரைப்பான் உரம் கொள் வேலான்.]

**விளக்கம் :-** இகலோர்-வலிமையுடைய பாண்டவர் நால்வர். விரகு உரைத்தான் - தந்திரமாகப் பதில் மொழிந்தான். பை

வண்ணம் மணிக்கூடம் - பசிய இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற மண்டபம். பாரதப் போர் பயிலாவண்ணம் உய் வண்ணம் உபாயம் நீ சொல்லுக - பாரதப் போர் நடவாதபடியும், எல்லோரும் அழியாமல் வாழ்ந்திருக்கும்படியும், செய்யவல்ல ஓர் வழியை நீ சொல்லுக. உரம் கொள் வேலான் - வலிமைகொண்ட வேல் ஏந்திய சகாதேவன் மற்றவர் போல் கூறாமல், சமார்த்திய மாகப் பதில் சொன்னது கேட்டு மகிழ்ந்த கண்ணன், அவனைத் தனி யான இடம் அழைத்துச் சென்று, அவனைச் சோதிக்கும் கருத்தின னாய், ''ஐய, போரிலாது எல்லோரும் வாழும்படியான ஓர் உபாயத்தைச் சொல்வாய்'', என்று கேட்க, அவனும் கண்ணன் வியக்கும்படி கூறுவானானான், என்பதாம்.

கலிவிருத்தம்

**34. நீபா ரதவமரில் யாவரையு நீறாக்கிப்**
**பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் புயல்வண்ணா**
**கோபாலா போரேறே கோவிந்தா நீயன்றி**
**மாபா ரதமகற்ற மற்றார்கொல் வல்லாரே.**

[நீ பாரதம் அமரில் யாவரையும் நீறாக்கி பூ பாரம் தீர்க்க புரிந்தாய் புயல் வண்ணா, கோபாலா, போர் ஏறே, கோவிந்தா! நீ அன்றி மா பாரதம் அகற்ற மற்று ஆர்கொல் வல்லாரே.]

**விளக்கம் :-** பூ பாரம் நீக்கப் புரிந்தாய்-பூமியின் பாரத்தைத் தீர்க்க விரும்பியுள்ளாய், அல்லது சங்கற்பித்துக் கொண்டுள்ளாய். பாரதப்போர் நடத்தி யாவரையும் அழித்து நீறாக்கும் கருத் துடைய நீ அன்றி, வேறு யாரால் போர் நிகழாமல் காக்க முடியும்? என்று சகாதேவன் பதில் மொழிந்தான், என்பதாம். காய் மா விளச்சீர்களாக விரவிவரும் இதையும், தொடரும் இருபத்தொரு செய்யுள்களையும், சீர்கள் அளவொத்து நடவாமையின், **கலிவிருத்தம்** என்பதினும், நாற்சீர் நான்கு கொண்ட **தரவு கொச்சகம்,** என்னல் அமையுமென நினைக்கின்றோம்.

**35. பாராளக் கன்னனிகற் பார்த்தனைமுன் கொன்றணங்கின்**
**காரார் குழல்களைந்து காலிற் றளைபூட்டி**
**நேராகக் கைபிடித்து நின்னையும்யான் கட்டுவனேல்**
**வாராமற் காக்கலாம் மாபா ரதமென் றான்.**

[பார் ஆள கன்னன், இகல் பார்த்தனை முன் கொன்று, அணங்கின் கார் ஆர் குழல் களைந்து, காலில் தளை பூட்டி நேராக கை பிடித்து நின்னையும் யான் கட்டுவனேல், வாராமல் காக்க லாம் மா பாரதம் என்றான்.]

**விளக்கம் :-** கர்ணன் பூமியை ஆளும்படி, அவனோடு முற்றிய பகை உடைய அருச்சுனனை முன்னே கொன்று, திரௌபதியின் கார்ஆர் கூந்தலைக் களைந்து, நின்னையும் நான் காலில் தளை பூட்டி, கைபிடித்து நேராக (நன்றாக) கட்டி வைப்பேனேயானால், மகாபாரதப் போர் நிகழாமல் காக்கலாம், என்றான் சகாதேவன், —என்பது பொருள், ''கர்ணனைக் கொல்வேன்'' என்று விசயன் கொண்ட சபதமும், பாஞ்சாலியின் விரித்த கூந்தலும், கண்ணனது சங்கல்பமும் பாரதப் போருக்கு ஆதாரம் ஆதலால், சகாதேவன் இங்ஙனம் கூறினான், என்க.

**36. முன்ன நீ கூறியவை யெல்லா முடித்தாலும்**
**என்னை நீ கட்டுமா றெவ்வா றெனமாயன்**
**உன்னை நீ தானு முணராதா யுன்வடிவம்**
**தன்னை நீ காட்டத் தளைந்திடுவேன் யானென்றான்.**

[முன்னம் நீ கூறியவை எல்லாம் முடித்தாலும் என்னை நீ கட்டும் ஆறு எ ஆறு என மாயன், உன்னை நீ தானும் உணராதாய் உன்வடிவம் தன்னை நீ காட்ட தளைந்திடுவேன் யான் என்றான்.

**விளக்கம் :-** பார்த்தனை முதலில் கொன்று கர்ணனை அரசாளச் செய்தல், பாஞ்சாலியின் குழல் களைதல் ஆய வற்றைச் செய்து முடித்தாலும், என்னை நீ கட்டுதல் எவ்வாறு இயலும், என்று கண்ணன் கேட்க, (சகாதேவனும்), அடியார்க்கு எளியனாகும் உனது தன்மையை அறிந்துகொள்ளாமல் கேட்கின்ற வனே, உனது திவ்ய மங்கள வடிவத்தைக் காட்டினால், உன்னை யான் கட்டிவிடுவேன், என்றான், என்பதாம்.

**37. மாயவனு மன்பன் மனமறிவான் கட்டுகவென்(று)**
**ஆயவடிவு பதினா றாயிரங் கொண்டான்**
**தூயவனு மூலமாந் தோற்றமுணர்ந் தெவ்வுலகும்**
**தாயவடி யிணைக டன்கருத்தி னாற்பிணித்தான்.**

[மாயவனும் அன்பன் மனம் அறிவான் கட்டுக என்று, ஆய வடிவு பதினாறு ஆயிரம் கொண்டான், தூயவனும் மூலம் ஆம் தோற்றம் உணர்ந்து, எ உலகும் தாய அடி இணைகள் தன் கருத்தினால் பிணித்தான்.]

**விளக்கம் :-** மாயக் கண்ணனும், ''கட்டுக என்னை'' என்று தனது நிஜமான உருவில் எங்குமாய்த் தோன்ற, இத் தோற்றங் களுக்கெல்லாம் மூலமாகும் திவ்ய மங்கள வடிவத்தைத் தூயவ னான சகாதேவனும் தூய தன் அன்பினால் உணர்ந்து, ஒரு பகல் உலகெலாம் அளந்துகொண்ட இணையான சரண கமலங்களைத் தன் மனமாகிய கயிற்றினால் பிணித்தான்,— என்பது பொருள். பதினாறாயிரம் - மிகப் பல.

**38. நீதேவ னென்றறிந்து நெஞ்சாற் றனைக்கட்டும்
சாதேவன் கண்களிக்கத் தானேயாய் முன்னின்றான்
பூதேவருங் கனகப் பூங்கா நிழல்வைகும்
மாதேவருந் தேடிக் காணா மலரடியோன்.**

[நீ தேவன் என்று அறிந்து நெஞ்சால்தனை கட்டும் சாதேவன் கண்களிக்க தானேயாய் முன் நின்றான், பூதேவரும் கனகம் பூங்கா நிழல் வைகும் மாதேவரும் தேடி காணா மலர் அடியோன்.]

**விளக்கம் :-** தானேயாய் - தனது உண்மை வடிவோடு. பூதேவர் - வேத வித்தகர். கனகம் பூங்கா - பொன் மயமான கற்பகச்சோலை. அன்பர்க்கு எளியனும், மற்றவர்க்கு அரியனும் ஆகும் அவனது தன்மையை எடுத்துக் காட்டும் செய்யுள் இது. இறைவனை எட்டுதற்கு இடம், காலம், குலம், கல்வி போதா என்றும், தூய அன்பே வேண்டப்படுவது என்றும், கூறும் கருத்தின ஈற்றடிகள்.

**39. அன்பா லின்றென்னை யறிந்தே பிணித்தமைநன்று
என்பா தந்தன்னை யினிவிடுக வென்றுரைப்ப
வன்பா ரதப்போரில் வந்தடைந்தே மைவரையும்
நின்பார் வையாற் காக்கவேண்டு நெடுமாலே.**

[அன்பால் இன்று என்னை அறிந்தே பிணித்தமை நன்று, என் பாதம் தன்னை இனி விடுக, என்று உரைப்ப, வல் பாரதம் போரில் வந்து அடைந்தேம் ஐவரையும் நின் பார்வையால் காக்க வேண்டும் நெடுமாலே.]

**விளக்கம் ;-** அன்பினால் என்னை அறிந்து என்னை நீ கட்டினமை மிக நன்று; இனி, என் பாதம் விடுக, என்று கண்ணன் கூற (வேண்ட), திருமாலே, 'உன் சரணமே துணை' என்று சரணம் புகுந்துள்ள ஐவராகிய எம்மை உனது திருவருள் நோக்கினால் காத்தருள வேண்டும், (என்று சகாதேவன் வேண்டிக் கொண்டான்), என்பது பொருள். இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். அடைந்தேம் ஐவர் : தன்மையில் படர்க்கை வந்த இடவழு.

**40. என்றென் றிறைஞ்சி யிருதா மலரைத்தாளில்
ஒன்றுங் கதிர்முடியாற் கோமென் றுரைத்தருளி
இன்றிங் கிருவேமு மிப்போ துரைத்தமொழி
ஒன்றும் பிறரறிய வோதா தொழிகென்றான்.**

[என்று என்று இறைஞ்சி இரு தாமரை தாளில் ஒன்றும் கதிர் முடியாற்கு ஓம் என்று உரைத்தருளி, இன்று இங்கு இருவேமும் உரைத்த மொழி ஒன்றும் பிறர் அறிய ஓதாது ஒழிக, என்றான்.]

**விளக்கம் :-** (எங்களை நின்பார்வையால் காக்கவேண்டும்) என்று பலமுறை வேண்டி, தாமரை போன்ற உபயபாதங்களில் தலை பொருந்தும்படி வணங்கிய பிரகாசம் பொருந்திய கிரீடம் அணிந்த சகாதேவனுக்கு அப்படியே ஆகட்டும்,' என்று உரைத்தருளி, (அதன்பின்) இங்கே நாம் இருவரும் பேசிக்கொண்ட வார்த்தை ஒன்றையும் பிறர் அறியும்படி சொல்லுதல் ஒழிக, என்று கண்ணன் கூறினான்,—என்பதாம். தனியிடத்தே சகாதேவனுக்கும் கண்ணனுக்கும் இடை நிகழ்ந்தவற்றைக் கூறும் ஏழு பாசுரங்களும் சுவை நிறைந்தவை. இப் பாசுரங்களை முழுமையாய் உட்கொண்டு உன்னுவோர் உள்ளம் புகலரிய உவகையில் தாழ்ந்து தன்னையே தான் கண்டுகொள்ளும் நலத்ததாகும்.

'இனி செய்வதென்?' என்று தருமன் கண்ணனோடு கலந்து ஆலோசிக்கையில், வீமன் முதலிய ஏனையோர்போல், தான் ஒன்றுங் கூறாதிருந்த சகாதேவனை நோக்கிய கண்ணன், 'யாது உன் கருத்து?' என்று கேட்டபோது, இவனும் தான் விரித்த மாயவலையில் வீழ்ந்து சிக்குவான் என்று எண்ணினான் கண்ணன். மெய்யறிவின் முதிர்ந்த அன்பனோ, வலையில் சிக்காது, ''திருவுளத்துக் கருத்து எதுவோ, அதுவே தனது கருத்தும்'', என்று எதிர் உரைத்ததால் மாயனது தந்திரம் வீணாயிற்று. உடனே, அவன், அன்பனைத் தனி இடம் அழைத்துச் சென்று, ''பாரதப்போர் நிகழாமல் எல்லோரும் உய்யும்படி ஒரு பாயம் சொல்லுக,'' என்று கேட்க, அந்த வஞ்சனையுடைய வினாவும், ''நீயன்றி மாபாரதம் அகற்ற மற்று ஆர்கொல் வல்லாரே'' என்ற சகாதேவனது எதிர்வீச்சினால் வீழலாயிற்று. ''பூபாரம் தீர்க்க நிற்கின்ற உன் திருவுள்ளம் மாறினாலன்றி வழியில்லை'', என்று எடுத்துக்காட்டிய செம்மல், கண்ணனது போலிக்குப் போலியாய் ஒருபாயம் உரைப்பான் போல், ''தேவா, கர்ணன் அரசனாகும்படி செய்யவேண்டும், அது நேர அவனோடு பகையுடைய விசயனை முதலில் கொன்றுவிடல் இன்றியமையாததாகும். இதனால் போர் நிற்கும், என்பதற்கில்லை. 'தான் உற்ற பழி என்று தீரும்?' என்று தலைவிரித்தவளாய் நிற்கும் பாஞ்சாலியின் கூந்தலைக் களைய வேண்டும். இம் மூன்றையும் செய்தல் அரியதே. அரிய அவற்றைச் செய்து முடித்தாலும், அதனினும் அருமையானது வேறொன்று உளது. அதாவது, புதிய புதிய காரணங்களைக் கற்பித்துப் பூபாரம் தீர்த்தல் உனக்கு அருமையாகாது. எனவே, உன்னைக் கட்டிப்போடல் மிகவும் முக்கியமானது ஆகும்'' என்றான். இங்கேயும் தோல்வி கண்ணனதே ஆகின்றது. இந்நிலையில், மற்றுமோர் புணர்ப்பினால், அன்பனை வீழ்த்தக் கருதிய மாயோன், ''முன்னம் நீ கூறியவை எல்லாம் முடித்தாலும், என்னை நீ கட்டுமாறு எவ்வாறு?'' என்றான். இதற்கும் அவன் பின்வாங்கினானில்லை. ''தேவா, உனது அறியாமையைக் கண்டு நான் நகைக்க வேண்டியவன் ஆகின்றேன். உன்னையே நீ அறிந்திலையோ? அல்லது மறந்தனையோ? தேவகியின் திருவயிறு தோன்றி, ஆயர்மனை போந்து

வாழ்ந்து, இப்பொழுது துவரகாபதியாய் நடிக்கின்ற இவ் வேடத்தில் உன்னைப் பிணித்தல் முடியாததே. இவ் வேடந்தானோ நீ! என்றும், எப்போதும், யாருக்குங் கட்டுக்கு அடங்காத கண்ணன் என்றே கருதிக் கொண்டனை போலும்! உன்னிலும் உன்னை உண்மையாய் நான் அறிவேன். அன்பிற்கு எளியனாய், அன்பின் அடைந்தார்க்கு அடங்கி நிற்கும் அருள் வள்ளலான திருமால் அல்லனோ நீ! உனது இம் மாய வேடத்தைக் களைந்துவிட்டுத் தம்மையே தமர்க்கு நல்கும் மூலத்திருவடிவில் தோன்றுவாயாயின் உன்னைக் கட்டிவிடுவேன்'' என்றான், கண்ணனது சூழ்ச்சி இங்கும் பலிக்கவில்லை. அன்பனது மெய்யுணர்வே வாகை கொண்டது. எனினும் அண்ணல் பின்னுமோர் மாயம் புரிவானாய், **'கட்டுக'** என்று சொல்லிச் சங்கொடு சக்கரமுந் தாங்கிய திருவுருவோடும் நான்கு கரங்களோடும் எங்குமாய் வியாபித்தருளினான். அவனது தோற்றங்களில், ஒன்றே மூலம்; மற்றவை சாயைகள். பக்தனோ அஞ்சாமல் தனது என்றும் பிழையாத பேரன்பே துணையாக, மாவலிபால் மண்வேண்டி உலகெலாம் தாய திருவடிகளைத் தன் மனத்தில் நிலைநிறுத்தினான். வெற்றிக்கே மேன்மேலும் முயன்ற அப் பண்ணவன் அன்பிற்கே முற்றிலும் தோற்றதினால் எழுந்த பெருமகிழ்ச்சியில் பொங்கிப் பெருகி, அச் சகாதேவன் கண்களிக்கத் தானேயாய் அவன் முன் நின்றான். பெறுதற்கரிய இப் பேற்றை யாரே பெற்றார்? 'இனி, என் பாதந்தனை விடுக,' என்று இளைஞனை வேண்டிக் கொள்ளலும் நேர்ந்துவிட்டது. கிட்டிய வெவ்வியைப் பயன்படுத்திக் கொள்ள நினைத்த செம்மல், ''புயல் வண்ணா, யாவரையும் நீறாக்கிப் பூபாரம் தீர்க்க இருக்கின்றாய். எங்களுக்கு நீ துணை நிற்பதெல்லாம் உன் திருவுளத்தை நடத்திக்கொள்ளவே, என்பதை நான் அறிவேன். ஆயினும், உன்னைச் சரண் அடைந்த எங்கள் ஐவரையாவது, பாரதப் போரில் காத்தருளவேண்டும்'', என்று வேண்டலும், எம்பிரான், **ஓம்** என்றான். கட்டவிழ்ந்த எம்பிரான், தன்னுடைய மாய வேடத்தை மீண்டும் தரிக்கலானான். ''இங்கு இருவேமும் உரைத்த மொழி யொன்றும் பிறர் அறிய ஓதாது ஒழிக,'' என்று கண்ணன் கூறியதே பூபாரம் தீர்க்குங் கருத்தினன், என்பதற்குச் சான்றாகும். பாரதப் போரில் பாண்டவரைக் காத்தது, தருமனது அறம் அன்று, வீமனது தண்டு அன்று, விசயனது வில்லன்று, இருவர் பொரும் திறலும் அன்று, நெடுமால் நின்ற நிலையும் அன்று; மற்று, இவ்விளைஞனது தூய்மை தளராத பக்தியே ஆகும்.

## கண்ணன் சந்து இனிதெனல்

**41. ஆண்டிருந்த வலைவநீங்கி யறிவுடையோ ரிருவோரும்**
**பாண்டவர்கண் முன்னெய்திப் பழுதில்புகழ்ப் பாஞ்சாலி**
**நீண்டகருங் குழல்சோர நின்றாளை முகநோக்கி**
**ஈண்டிவரி லிளையோனுஞ் சந்துமிக வினிதென்றான்.**

[ஆண்டு இருந்த அவை நீங்கி அறிவு உடையோர் இருவோரும் பாண்டவர்கள் முன் எய்தி, (பின் கண்ணன்) பழுது இல் பாஞ்சாலி நின்றாளை முகம் நோக்கி, ஈண்டு இவரில் இளையோனும் சந்துமிக இனிது என்றான்,—இது அடுத்த செய்யுளோடு முடியும்.]

**விளக்கம் :-** இந்தச் செய்யுளைச் சகாதேவன் கூற்றாகக் கொள்கின்றனர். கண்ணனது சேர்க்கையால், குறும்பு செய்யும் மதியினானாய், நீண்ட கருங்குழல் சோர நின்ற பாஞ்சாலியின் முகம் நோக்கி ''அவள் தன் சொல்லைக்கேட்டு எவ்வாறு பதைக்கின்றாள்''. என்று கண்டு மகிழும் ஆசையினால், 'சந்து மிக இனிது', என்றான், என்று கொள்வது அவனது குணமே பாட்டோடு பொருந்தாது. முப்பத்திரண்டாவது செய்யுளில், **தெய்வம் அன்னான்,** என்று அவனைப் பாராட்டிய புலவர், அவனை வசையுறச் செய்யார். தத்துவ உணர்வின் முதிர்ந்தவனான இளவல், வாய்மை அல்லாதன விளம்புபவன் ஆகான், அவனோ, சந்து நேராது என்பதை அறிவான். அவ்வாறாக, இவ்வழி அவன் குறும்பு புரிந்தான், என்னல், அவனது செம்மையைக் கறையுறச், செய்ததாகும். எனவே, இதையும் இதைத் தொடரும் செய்யுளையும் கண்ணனது கூற்றாகக் கொள்ளலே, கவியின் கருத்தோடு பொருந்தியதாகும். தனியிடமிருந்து சகாதேவனோடு அவை வந்த கண்ணன், பாஞ்சாலியின் முகம் நோக்கியதும், ''இளையோன் சந்துமிக இனிதென்றான்'', என்றதும் கண்ணனது கூற்றாகக் கொள்ளலே, அவனது மாயங்களோடு இணங்கி நடப்பதாகும். எனவே, இதுவும் அடுத்த செய்யுளின் இரண்டடிகளும் கண்ணனது கூற்றே. நின்றாளை முகம் நோக்கி—(உருபுமயக்கம்) நின்றவளினுடைய முகத்தை நோக்கி.

**42. தருமனுக்குங் கருத்திதுவே தமருடன்போர் புரியாமல்**
**இருநிலத்தி லுடன்வாழ்த லெனக்குநினை**
**வென்றுரைத்தான்**
**வரிமலர்க்கண் புனல்சோர மலர்மறந்த குழல்சோர**
**விரைமலர்ச்செஞ் சேவடிக்கீழ் விழுந்தழுதாண்**
**மின்னனையாள்**

[தருமனுக்கும் கருத்து இதுவே, தமருடன் போர் புரியாமல் இருநிலத்தில் உடன் வாழ்தல் எனக்கும் நினைவு, என்று உரைத்தான்; வரிமலர் கண் புனல் சோர, மலர் மறந்த குழல் சோர, விரைமலர் செம் சே அடி கீழ் விழுந்து அழுதாள், மின் அனையாள்.]

**விளக்கம் :-** முன் செய்யுளில், ''இளையோனும் சந்துமிக இனிது'', என்றான், என்று கூறிய கண்ணன், இந்தச் செய்யுளில், அதைத் தொடர்ந்து, தருமனுக்கும், கருத்து இதுவே; தமருடன் போர் புரியாமல் உடன் வாழ்தல் எனக்கும் நினைவு,'' என்று

கூறினான்; கூறலும், பாஞ்சாலி கண்ணனது திருவடியில் வீழ்ந்து, புலம்பலுற்றாள். ''சமாதானமா, அல்லது போரா? எது கண்ணனது திருவுள்ளம்'', என்று தெளிந்துகொள்ள முடியாத படி, பாண்டவர் நால்வரையும் நங்கையையும் கண்ணன் குழம்பச் செய்தான், என்க.

## பாஞ்சாலி புலம்பல்

**43. சாலக் கனகன்றன் றனிமைந்தனை முனிந்த**
**காலத் தவனறைந்த கற்றூணிடை வந்தாய்**
**முலப்பே ரிட்டழைத்த மும்மதமால் யானைக்கும்**
**நீலக் கிரிபோன் முன்னின்ற நெடுமாலே.**

*[சால கனகன் தன் தனி மைந்தனை முனிந்த காலத்து அவன் அறைந்த கல் தூண் இடை வந்தாய், மூலம் பேர் இட்டு அழைத்த மும்மதம் மால் யானைக்கும், நீலம் கிரி போல் முன் நின்ற நெடுமாலே,]*

**விளக்கம் :-** கனகன் - இரணியன். சால முனிந்த - மிகவும் கோபித்துக்கொண்ட. மூலப்பேர் - ஆதிமூலப் பேர். நீலக்கிரி - நீலமலை. தன் பெயரைச் சொல்லாமல் நாராயணனது திரு நாமத்தையே சொல்லி வந்த தன் மைந்தனாகிய பிரகலாதனைப் பல வகையில் கொல்ல முயன்றும் முடியாமல் இறுதியில், ''நாராயணன் நீ சொன்னவிடம் இல்லாவிட்டால் நானே உன்னைக் கொன்று, உன் குருதி குடிப்பேன்'' என்ற காலத்து, அவன் சொன்ன தூணிடமிருந்து நரசிங்கமாகத் தோன்றினதால், 'சாலமுனிந்த காலத்து' என்றார். ஈற்றடிகள் கஜேந்திர மோக்ஷக் கதையைக் குறிக்கும். ''பிரகலாதனுக்கும் கஜேந்திரனுக்கும் நேர்ந்த இடுக்கண்களைக் களைந்தவனே'', என்று பாஞ்சாலி அழைத்தது, ''அவ்வாறே தன் துயரையும் அவன் தீர்க்க வேண்டும்'', என்று குறிக்கும் கருத்தது. ஆதலால் இது, **கருத்துடை அடை அணி** ஆகும்.

**44. கற்றைக் குழல்பிடித்துக் கண்ணிலான் பெற்றெடுத்தோன்**
**பற்றித் துகிலுரியப் பாண்டவரும் பார்த்திருந்தார்**
**கொற்றத் தனித்திகிரிக் கோவிந்தா நீயன்றி**
**அற்றைக்கு மென்மான மார்வேறு காத்தாரே.**

*[கற்றை குழல் பிடித்து கண் இலான் பெற்று எடுத்தோன் பற்றி துகில் உரிய பாண்டவரும் பார்த்து இருந்தார்; கொற்றம் தனி திகிரி கோவிந்தா, நீ அன்றி அற்றைக்கும் என் மானம் ஆர் வேறு காத்தார், ஏ.]*

**விளக்கம் :-** பிரகலாதனுக்கும் கஜேந்திரனுக்கும் உதவியதை முன் செய்யுளில் கூறியவள், இச் செய்யுளில், தனக்கு இதன்முன் மானங்காத்தருளியதைக் கூறுகின்றாள். அற்றைக்கும், என்ப

திலுள்ள உம்மை எதிரது தழுவியது; இன்றைக்கும் என்குழல் முடித்தருள வேண்டும், என்று வேண்டிக்கொள்ளும் கருத்தது. பாண்டவரும், என்பதிலுள்ள உம்மை, இழிவு சிறப்பினது; என் மானங் காக்குங் கடமையும் ஆற்றலும் இருந்தும் பார்த்திருந்தார், என்ற பொருளது.

**45. மன்றி லழைத்தெனக்கு மாசளித்த மன்னவர்பால்**
**சென்று தமக்கைந்தூர் திறல்வீரர் பெற்றிருந்தால்**
**அன்று விரித்த வருங்கூந்தல் வல்வினையேன்**
**என்று முடிப்பதினி யெம்பெருமா னென்றழுதாள்**

[மன்றில் அழைத்து எனக்கு மாசு அளித்த மன்னவர் பல் சென்று, தமக்கு ஐந்து ஊர் திறல் வீரர் பெற்று இருந்தால், அன்று விரித்த அருங் கூந்தல் வல் வினையேன் என்று முடிப்பது இனி எம்பெருமான் என்று அழுதாள்.]

**விளக்கம்:-** திறல் வீரர், என்று பாண்டவர்களைக் குறித்தது, இகழ்ச்சி. வெகுகாலமாகப் பலவகைத் துன்பங்களை அனுபவித்து வரலால் **வல்வினையேன்**, என்று தன்னை வெறுத்துக் கொண்டாள். என்று முடிப்பது, என்ற வினா, குழல் முடித்தல் தனக்கு நேராமல் போய்விடுமோ, என்று அஞ்சி வருந்தும் பொருளது. ''தருமனது கருத்து இதுவே. இளையோனும் சந்து மிக இனிது என்றான்; என் நினைவும் அதுவே'', என்று கண்ணன் கூறலும், பொங்கிய துயரத்துடன், பாஞ்சாலி கண்ணன் கழல் விழுந்து கதறியதைப் பொறாது, கண்ணனது இளையோனான சாத்தகி, தமையனைக் கடியலானான்.

சாத்தகி பேசல்

**46. தண்டிருந்த திவன்கரத்திற் றனுவிருத்த தவன்கரத்தில்**
**வண்டிருந்த பூங்குழன்மேன் மாசிருந்த தெனவிருந்தாள்**
**கண்டிருந்தீ ரெல்லீருங் கருதலர்பா லூர்வேண்டி**
**உண்டிருந்து வாழ்வதற்கே யுரைக்கின்றீ ருரையீரே.**

[தண்டு இருந்தது இவன் கரத்தில், தனு இருந்தது அவன் கரத்தில், வண்டு இருந்த பூங்குழல்மேல் மாசு இருந்தது என இருந்தாள், கண்டு இருந்தீர் எல்லீரும், கருதலர்பால் ஊர் வேண்டி உண்டு இருந்து வாழ்வதற்கே உரைக்கின்றீர் உரையீர், ஏ.]

**விளக்கம் :-** மாசு இருந்தது என இருந்தாள்—(தனது கூந்தலைக் கொடியனான துச்சாதனன் பற்றி யிழுத்ததால் உண்டான) பழுது நீங்காது இருக்கின்றது என்று எல்லோரும் சொல்லும் வசைச் சொல்லுக்கு ஆளாகி நிற்கின்றவள். உரைக் கின்றீர்—(விளி) வழி சொல்லுகின்றவர்களே, உரையீர் - இது முறையோ, சொல்லுங்கள்.

கண்ணனது தந்தையான வசுதேவருக்கும் சத்யகை என்பாளுக்கும் பிறந்தவன் சாத்தகி. எனவே, கண்ணனுக்கு அவன் தம்பியாகின்றான். ''சகோதரர் என்றும் பாராமல் பாண்டவர்க்கு இன்னல் பல புரிந்தும், பெண்ணென்று பாராது பாஞ்சாலியை மானபங்கம் செய்தும், கடவநாள் கழித்து வந்தவர்க்கு அவர்க்குரிய பாகத்தைக் கொடுக்க மறுத்தும், மதர்த்து வாழும் தீயரைப் போரில் கொன்று முழு நாடும் பெற முயலாது, கோழைகள் போல் ஊர் இரந்து வாழ நினைப்பது முறையோ,'' என்று சாத்தகி இடித்துரைத்தான், என்க. தனது இவ்வுரை, தருமனிடத்தோ, அல்லது கண்ணனிடத்தோ, எவ்விதக் கிளர்ச்சியையும் உண்டாக்காது போகவே, சினம் மூளப் பெற்றவனான சாத்தகி, இன்னும் சிறிது கடுமையுடன் பேசுவானாயினான். கருதலர் - மதியாதவர், பகைவர்.

**47. சண்டமுகி லுருமனைய சராசந்தன் றனக்கஞ்சி
வண்டுவரை யரணாக வடமதுரை கைவிட்ட
திண்டிறன்மா தவன்மதியோ திகழ்தருமன் றன்மதியோ
பண்டுமவர் கருத்தறிந்தும் பார்போய்வேண் டுவதென்றான்.**

[சண்டம் முகில் உரும் அனைய சராசந்தன் தனக்கு அஞ்சி, வள் துவரை அரண் ஆக வடமதுரை கைவிட்ட திண்திறல் மாதவன் மதியோ, திகழ் தருமன் தன் மதியோ! பண்டும் அவர் கருத்து அறிந்தும் பார் போய் வேண்டுவது, என்றான்.]

**விளக்கம் :-** சண்டம் முகில் உரும் - பெரிய அல்லது உக்கிரமான மேகத்தின் இடி. மதியோ - புத்தியின் காரியமோ. பண்டும் - முன்னமேயே, அல்லது மறுபடியும்; (முன்னமேயே துரியோதனாதியர் கருத்து அறிந்திருந்தும், அல்லது அவர் கருத்து அறிந்திருந்தும் மறுபடியும் பார்போய் வேண்டுவது, என்று பொருள்படும்) திண்திறல் மாதவன், திகழ் தருமன், என்ற அடைகள், இகழ்ச்சியின் பாற்படும். சராசந்தன், கம்சனது மாமன். கம்சனைக் கொன்ற கண்ணன் மீது பகைகொண்டு, போரெழுந்து சென்று கண்ணனை வடமதுரையிலிருந்து துவாரகைக்கு விரட்டினான், என்பது கதை.

## கண்ணன் பாஞ்சாலியைத் தேற்றுதல்

**48. சாத்தகிநின் றிவையுரைப்பச் சடைக்குழலா ளழுதரற்றக்
கோத்தருமன் முதலாய குலவேந்த ரைவரையும்
பார்த்தருளி யருள்பொழியும் பங்கயக்க ணெடுமாலும்
ஏத்தரிய பெருங்கற்பி னிளையாளுக் கிவையுரைப்பான்.**

[சாத்தகி நின்று இவை உரப்ப, சடை குழலாள் அழுது அரற்ற, கோ தருமன் முதலாய குலம் வேந்தர் ஐவரையும் பார்த்தருளி, அருள் பொழியும் பங்கயம் கண் நெடுமாலும் ஏத்து அரிய பெருங்கற்பின் இளையாளுக்கு இவை உரைப்பான்.]

**விளக்கம் :-** பங்கயம் - தாமரை, ஏத்தரிய பெருங்கற்பு - துதித்தற்கு அரிய (மிகச் சிறந்த) பெரிய கற்பு. சாத்தகி இவை கூறவும், பாஞ்சாலி அழுது அரற்றவும், அருள் பொழியும் பங்கயக் கண் நெடுமாலின் அவதாரமாகிய கண்ணன், தருமன் முதலாய பாண்டவர் ஐவரையும் பார்த்தருளிப் பின், பாஞ்சாலிக்குத் தேற்றுமொழி கூறுவானாயினான்,—என்பதாம்.

**49. தொல்லாண்மைப் பாண்டவர்க்குத் தூதுபோய்**
**மீண்டதற்பின்**
**நல்லாயுன் பைங்கூந்த னானே முடிக்கின்றேன்**
**எல்லாருங் காணவினி விரிப்ப தெண்ணரிய**
**புல்லார்த மந்தப்புர மாதர் பூங்குழலே.**

*[தொல் ஆண்மை பாண்டவர்க்கு தூது போய் மீண்டதன் பின், நல்லாய் உன் பைங் கூந்தல் நானே முடிக்கின்றேன்; எல்லாரும் காண இனி விரிப்பது எண் அரிய புல்லார்தம் அந்தப்புரம் மாதர் பூங்குழலே.]*

**விளக்கம் :-** தொல் ஆண்மை - பழமையான நெறி கடவாத பராக்கிரமம். புல்லார் - துரியோதனாதியர். பாண்டவர்க்குத் தூது போய்த் திரும்பியபின், உன் கூந்தலை நானே முடித்து வைக்கின்றேன்; இனி எல்லோரும் காண விரிப்பது துரியோதனாதி யரின் மனைவியரது பூங்குழலே, என்று கண்ணன் கூறினான், என்பதாம்.

**50. மைக்குழலாய் கேளாய் மருவா ருடற்புலத்துப்**
**புக்குழலா குங்கொழுவாம் போர்வா ளபிமன்னுத்**
**தொக்குழலும் வெங்கோன்மைத் தொல்வேந்தர் தங்குலமும்**
**இக்குழலுஞ் சேர முடியா திரானென்றான்.**

*[மை குழலாய், கேளாய், மருவார் உடல் புலத்து புக்கு உழல் ஆகும் கொழு ஆம் போர் வாள் அபிமன்னு, தொக்கு உழலும் வெங் கோன்மை தொல்வேந்தர் தம் குலமும், இ குழலும் சேர முடியாது இரான்.]*

**விளக்கம் :-** மருவார் - பகைவர். உடல் புலம் - உடம்பாகிய வயல். உழல் ஆகும் கொழு ஆம் போர்வாள் அபிமன் - (புகுந்து) உழுவதற்கு ஆகும் இருப்புக்கொழுவாகிய போர் செய்யும் வாளை உடைய அபிமன்யு. தொக்கு உழலும் - ஒன்றாகச் சேர்ந்து வாழ்கின்ற, அல்லது அலைகின்ற. வெங் கோன்மை - கொடுங்கோன்மை. குலம் - கூட்டம். கொடிய வேந்தர் கூட்டத்தை அழித்தும் உன் கூந்தலை முடித்தும் வையாதிரான் வீரனான அபிமன்யு, என்றபடி. முடியாது என்பது அழித்தல், முடித்தல் என்ற பொருள்களைத் தரலால், சிலேடை. கலப்பையின் நுனியில் இருக்கும் இரும்பு, கொழு; இதைக் **காறு** என்பர்.

**51. பெண்ணீர் மைகுன்றாப் பெருந்திருவின் செங்கமலக்
கண்ணீர் துடைத்திரு தன்கண்ணிற் கருணையெனும்
தெண்ணீ ரினாற்பொருந்தத் தேற்றினான் சாற்றுகின்ற
மண்ணீ ரனலனிலம் வான்வடிவா மாமாயன்.**

[பெண் நீர்மை குன்றா பெருந்திருவின் செங்கமலம் கண்ணீர் துடைத்து, இரு தன் கண்ணின் கருணை எனும் தெள்நீரினால் பொருந்த தேற்றிடினான், சாற்றுகின்ற மண் நீர் அனல் அனிலம் வான் வடிவு ஆம் மாமாயன்.]

**விளக்கம்** :- சாற்றுகின்ற மண் நீர் அனல் அனிலம் வான் வடிவு ஆம் மாமாயன், தன் இரு கண்ணின் கருணை எனும் தெள் நீரினால், பெண் நீர்மை குன்றா பெருந்திருவின் செங்கமலம் கண் நீர் துடைத்து, பொருந்த தேற்றினான்,—என்பது அன்வயம். பெண் நீர்மை - பெண்மைக் குணம். பெருந்திரு - சிறந்த திருமகள் போன்ற திரௌபதி. கருணை எனும் தெள் நீர் - கருணையாகிய தெளிந்த நீர், அல்லது கருணையுடைய தெளிந்த குணம். பொருந்த-தக்கபடி. மண்ணும் நீரும், நெருப்பும், காற்றும் ஆகாச முமான கண்ணன், என்பது, ஈற்றடியின் பொருள். தனது திவ்ய கடாட்சத்தால், கண்ணன் திரௌபதியின் கண்ணீரைத் துடைத்து அருளினான், என்பதாம். வானிலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து நெருப்பும், நெருப்பிலிருந்து நீரும், நீரிலிருந்து நிலமும் பிறந்தன என்று வேதம் கூறும். இவை யுக முடிவில், அதாவது லயகாலத்தில் நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்புக் காற்றிலும், காற்று வானிலும் முறையே ஒடுங்கும் என்பர். கண்ணன் எல்லாப் பொருள்களும் ஆனவன், என்பது, ஈற்றடியின் பொருள். ''சந்து மிக இனிதென்றான் சகாதேவன்'', என்றும், ''தருமனுக்குங் கருத்து இதுவே,'' என்றும், ''தமருடன் போா புரியாமல் உடன் வாழ்தல் எனக்கும் நினைவு'' என்றும், பாஞ்சாலியை நோக்கிக் கூறிய பெம்மான், அடுத்த மூச்சில், ''உன் பைங்கூந்தல் நானே முடிக்கிறேன்'', என்றும் கூறியது, அவன் தூது செல்வது சந்து செய்ய அன்று ; போர் அழைத்து வரவே என்பது எளிதில் புலப்படும், இக் கூற்று சகாதேவன் ஒழிந்த நால்வரையும் குழப்பி யிருக்கவேண்டும். குழம்பிய தருமனது மனம், செய்வினை தோன்றா நிலையில் எழலான சினம், திரௌபதியோடு தம்பி யரையும் கடிந்துகொள்ளும் மொழிகளாய் வெளிப்பட்டன, பாண்டவரை இவ்வாறு குழப்பிய கண்ணனைப் புலவர் மாமாயன், என்றார் என்க.

**52. துன்று பிணியோர் துறந்தோ ரடங்காதோர்
கன்று சினமனத்தோர் கல்லாதவ ரிளையோர்
ஒன்று முறைமை யுணராதவர் மகளிர்
என்றுமிவர் மந்தணத்தி னெய்தப் பெறாதாரே.**

[துன்று பிணியோர், துறந்தோர், அடங்காதோர், கன்று சினம் மனத்தோர், கல்லாதவர், இளையோர், ஒன்றும் முறைமை உணராதவர், மகளிர், என்றும் இவர் மந்தணத்தின் எய்தப் பெறாதார், ஏ.]

**விளக்கம் :-** துன்று பிணி - அடர்ந்த அல்லது மிகுந்த நோய். அடங்காதவர் - மூத்தோர் சொல் கேளாதவர். கன்று சினம் - அழலும் கோபம். ஒன்றும் முறைமை - பொருந்திய நீதிமுறைமை. மந்தணம் - மந்திராலோசனை சபை. தன் கருத்தின் வழி தூது செல்லக் கண்ணன் உடன்பட்டதாக எண்ணிய தருமன், திரௌபதி இடையிட்டது கண்டு, அவளையும், தன் கருத்தோடு மாறுபட்ட தம்பியர் மூவரையுங் கடிந்தபடி. இதுவும், அடுத்த செய்யுளும், குளகம்.

**53. என்னக் கழறி யிருந்தோருரை தவிர்த்து**
**நின்னொப் பவரில்லாய் நீயேகென வுரைப்ப**
**மன்னர்க்கு மன்னவன்பான் மாயோனுந் தூதாகிப்**
**பொன்னுற்ற நேமிப் பொருபரித்தேர் மேற்கொண்டான்.**

[என்ன கழறி இருந்தோர் உரை தவிர்த்து, ''நின் ஒப்பவர் இல்லாய், நீ ஏகு என'', உரைப்ப, மன்னர்க்கு மன்னவன்பால் மாயோனும் தூதாகி பொன் உற்ற நேமி பொரு பரி தேர் மேற் கொண்டான்.]

**விளக்கம் :-** என்று தருமன் தம்பியரையும் தையலையும் உறுத்துமாறு கூறி, சாத்தகி கூறிய உரைகளைப் பொருட் படுத்தாமல், (கண்ணனை நோக்கி) ''ஒப்பிலாதவனே, நீ செல்க'' என்று கூற, மாயவனும், மன்னர் மன்னனான துரியோதனன்பால் பாண்டவர் தூதனாகி, பொன்னாலான சக்கரங்களை உடையதும், போர் புரியும் திறலுடைய சிறந்த குதிரைகள் பூட்டப் பெற்றதுமான தேரின்மேல் ஏறியருளினான்,—என்பது பொருள். ''சமாதானம் செய்துவைக்கும் கருத்தில்லாக் கண்ணன், தூது செல்வதேன்?'' என்னில், பூபாரம் தீர்ப்பதற்கு அத்தினபுரியில் சில காரியங்களைச் செய்து முடிப்பதற்கே, என்க.

## கண்ணன் அத்தினபுரி அடைதல்

**54. சங்கு மணிமுரசுஞ் சல்லரியுந் தாரைகளும்**
**எங்கு முழங்க வெழில்வெண் குடைநிழற்றப்**
**பொங்கு கவரி புடையிரட்ட வெண்ணிலா**
**அங்க மொருநான்கு மவனிபருந் தற்சூழ.**

[சங்கும் அணி முரசும் சல்லரியும் தாரைகளும் எங்கும் முழங்க, எழில் வெள் குடை நிழற்ற, பொங்கு கவரி புடை இரட்ட, எண் இலா அங்கம் ஒரு நான்கும் அவனிபரும் தன் சூழ,—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** சங்கு, அழகிய முரசம், சல்லரி, தாரை முதலிய வாத்தியங்கள் எங்கும் முழங்கவும், வெண்கொற்றக்குடை நிழல் செய்யவும், சாமரைகள் இரு புறத்திலும் வீசவும், எண்ணில் அடங்காத நால்வகைச் சேனைகளும் மன்னர்களும் தன்னைச் சூழ்ந்து வரவும்,—அடுத்த கவியோடு தொடரும். சல்லரி - சல்லரி என்னும் வாத்தியம்.

**55. கல்வரையும் பாலைக் கடுஞ்சுரமுங் கான்யாறும்**
**நல்வரையு நீர்நாடு நாளிரண்டிற் சென்றருளித்**
**தொல்வரைய கோபுரமு நீண்மதிலுஞ் சூழ்ந்திலங்கும்**
**மல்வரைய தோளான் வளமாநகர் கண்டான்.**

[கல் வரையும், பாலை கடுஞ்சுரமும், கான்யாறும், நல் வயைர நீர் நாடும், நாள் இரண்டில் சென்றருளி, தொல் வரைய கோபுரமும் நீள் மதிலும் சூழ்ந்து இலங்கு மல்வரைய தோளான் வளம் மா நகர் கண்டான்.]

**விளக்கம் :-** கல்வரை - கற்கள் அடர்ந்த மலை (குறிஞ்சி). பாலை கடுஞ்சுரம் - பாலை நிலமாகிய கொடிய வெப்பத்தை யுடைய பூமி. கான்யாறு - முல்லை நிலத்திலுள்ள காட்டாறுகள், நவ்வரைய நீர் நாடு - நல் நீர்க்கரைகளையுடைய நீர்வளம் பொருந்திய மருத நிலம். தொல்வரைய கோபுரம் - பழமையான அதாவது அழிதல் இல்லாத மலை போன்ற கோபுரம். மல்வரைய தோளான் - வலிய மலை போன்ற தோள்களை உடைய துரியோதனன். வள மாநகர் - அத்தினபுரி. கண்ணன் உபப்பிலாவியத்திலிருந்து, இரண்டு நாள் பிரயாணத்தில் அத்தினபுரி போய்ச் சேர்ந்தான், என்பதாம்.

### கலித்துறை

### அத்தின புரியின் வருணனை

**56. மேவு செந்துகிர் திரளுமா மரகத விதமும்**
**கோவை வெண்கதிர்த் தரளமு நிரைநிரை குயிற்றித்**
**தாவும் வெம்பரித் தேரினான் றனக்கெதிர் சமைத்த**
**காவ ணங்களிற் றோன்றின பச்சிளங் கமுகம்.**

[மேவு செம் துகிர் திரளும், மரகதம் விதமும். கோவை வெள் கதிர் தரளமும் நிரைநிரை குயிற்றி, தாவும் வெம் பரி தேரினான் தனக்கு எதிர் சமைத்த காவணங்களின் தோன்றின பசு இளங்கமுகும்.]

**விளக்கம் :-** மேவு செம்துகிர் - விரும்பப்படும் செய்ய பவழங்கள். மரகதவிதம் - பலவகை பச்சை மணிகள். கோவை வெள் கதிர் தரளம்-மாலையாகச் செய்த வெள்ளிய ஒளியைஉடைய முத்துக்கள், (பவளமும், பச்சை மணிகளும் முத்துக் கோவைகளும்) நிரை நிரைகுயிற்றிய - வரிசையாகப் பதிக்கப்பெற்ற. வாவு பரிதேரினான் - பாயும் குதிரைகள் பூட்டப்பெற்ற தேரை

யுடைய கண்ணபிரான். காவணங்கள் - பந்தல்கள். அத்தினபுரி யின் புறச்சோலை வர்ணனை இது. அச் சோலையிடத்தே காணப்பெற்ற பசிய இளமையான பாக்கு மரங்கள், முத்தும், மரகத மணிகளும், பவளமும் வைத்து, அலங்காரமாக அமைக்கப் பெற்ற பந்தல்கள்போல், இருந்தன என்பதாம். பாக்கு மரத்தின் பழுத்த குலைகள் பவளம். பசுமையான இலைகள் பலவகைப் பட்ட மரகத மணிகள். வெள்ளிய குருத்துக்கள் முத்து வடங்கள். பெரியோர், அரசர்கள் வருங்கால், உபசாரமாகப் பந்தல் இடுதல் போல் இயற்கை, கண்ணனது வரவு நோக்கி, அவனுக்காக இடப் பட்ட பந்தல் போன்றிருந்ததாம்.

**57. வம்பு லாமகில் சந்தனம் வருக்கைமா கந்தம்**
**சம்ப கந்தமா லம்பல திசைதொறுந் தயங்க**
**உம்பர் நாயகன் வரவுகண் டுளங்களி கூர்ந்து**
**தும்பி பாடின தோகைநின் றாடின சோலை.**

[வம்பு உலாம் அகில் சந்தனம் வருக்கை மாகந்தம் சம்பகம் தமாலம் பல திசைதொறும் தயங்க, உம்பர் நாயகன் வரவு கண்டு உளம் களி கூர்ந்து தும்பி பாடின, தோகை நின்று ஆடின சோலை.]

**விளக்கம் :-** வம்பு உலாம் வாசனை வீசுகின்ற, வருக்கை - பலாமரம். மாகந்தம் - மாமரம்; தமாலம் - பரிமளமுடைய பச்சிலை மரம். அந்தச் சோலையில், அகில், சந்தனம் முதலிய மரங்கள் திசையெங்கும் அசைந்து விளங்க, தேவாதிதேவன் வருகை கண்டு மிகுந்த மனக் களிப்போடு, வண்டுகள் பாட மயில்கள் ஆடின, என்பதாம். எம்பெருமான், அஃறிணை உயர் திணைகளாகிய எல்லாப் பொருள்களினிடத்தும் வியாபித் திருப்ப வனாதலால், சேதாசேதனப் பொருள் எல்லாம் அவனது வருகை கண்டு களிப்பவாயின,—என்க,

**58. அணிகொ ளத்தினா புரியெனு மணங்குசெந் திருவின்**
**கணவ னுக்கெதிர் காட்டுநீ ராசனங் கடுப்ப**
**மணமி குந்தசெந் தாமரை மலருடன் சிறந்த**
**புணரி யிற்பெரும் புனலையுங் கொள்வன பொய்கை.**

[அணிகொள் அத்தினாபுரி எனும் அணங்கு, செம் திருவின் கணவனுக்கு எதிர்காட்டும் நீராசனம் கடுப்ப, மணம் மிகுந்த செம் தாமரை மலருடன் சிறந்த புணரியின் பெரும் புனலையும்- கொள்வன பொய்கை.]

**விளக்கம் :-** செந்திருவின் கணவன் --கண்ணன். நீராசனம் மங்கல ஆலத்தி, (மஞ்சள் நீரைச் சுற்றுதல்). கடுப்ப - போல (உவம உருபு). புணரியின் பெரும் புனல் - கடலினும் மிகுதியான நீர். பொய்கை - நீர்நிலை, குளம். கண்ணனுக்கு அத்தினபுரி

என்னும் பெண், மங்கள ஆலத்தி எடுப்பதுபோல், அங்கேயுள்ள தாமரை மலருடன் கூடிய தடாகங்கள், மிகுதியான நீரைக் கொண்டனவாய்ச் சிறந்து விளங்கின, என்பதாம். **கொள்வன,** என்பதைப் பொய்கைக்கு அடைமொழியாகவும், **சிறந்த** என்பதை முற்றாகவும் கொள்க. இது, தற்குறிப்பேற்ற அணி. கடலினும் பெரும்புனல் பொய்கை, என்றது உயர்வு நவிற்சியணி.

**59. நடந்த நாயகன் கோலமாய் வேலைசூழ் ஞாலம்**
**இடந்த நாளிடை யதுவழி யாகவந் தெழுந்து**
**படர்ந்த பாதல கங்கையப் படர்மதில் சூழ்ந்து**
**கிடந்த தாமெனச் சிறந்தது தாழ்புனற் கிடங்கு.**

[நடந்த நாயகன் கோலம் ஆய் வேலை சூழ்ஞாலம் இடந்த நாளிடை, அது வழியாக வந்து எழுந்து படர்ந்த பாதல கங்கை, அ படர் மதில் சூழ்ந்து கிடந்தது ஆம் என சிறந்தது, தாழ் புனல் கிடங்கு.]

**விளக்கம் :-** நடந்த நாயகன் - அத்தினபுரி சென்ற கண்ணன். கோலம் ஆய் - வராகமூர்த்தியாய். ஞாலம் இடந்த நாள் - அரக்கனால் சுருட்டிக்கொண்டு போகப்பெற்ற பூமியைக் கோட்டினால் குத்தி எடுத்துக்கொண்டு வந்த காலம். அது வழி - கோடு குத்தியதினால் உண்டான துவாரத்தின் வழி. இது, அந் நகரைச் சூழ்ந்துள்ள அகழி வர்ணனை. அரக்கனால் அபகரிக்கப்பெற்ற பூமியை, வராகவதாரங் கொண்டு மீட்டு வந்த காலத்து, பூமியைக் குத்தியெடுத்த கோட்டினால் உண்டான பிளவு வழியாகப் பாதாளகங்கை, அந்நகரின் மதிலைச் சூழ்ந்துகொண்டது போன்று, ஆழமான நீரை உடைய அகழி சிறந்து விளங்கிற்று, என்பதாம். தற்குறிப்பேற்ற அணி. பாதாள கங்கை, போகவதி என்ற பெயரது.

**60. அடிநி லத்திலே படிவன விடிமுகி லனைத்தும்**
**முடிநி லத்தினுக் குடுபதத் தினுமுடி வில்லை**
**நெடிய சக்கரப் பொருப்பையு நிகரிலா விதற்கோர்**
**படிவ குத்ததா மெனும்படி பரந்தது புரிசை.**

[அடி நிலத்திலே படிவன இடி முகில் அனைத்தும், முடி நிலத்தினுக்கு உடுபதத்தினும் முடிவு இல்லை, நெடிய சக்கரப் பொருப்பையும் நிகர் இலா இதற்கு ஓர் படி வகுத்தது ஆம் எனும் படி பரந்தது புரிசை.]

**விளக்கம் :-** இடி முகில் அனைத்தும் (அந்த மதிலின்) அடி நிலத்திலே படிவன; முடி நிலத்தினுர்கு (மதிலின் முடியிடத்திற்கு) உடுபதத்தினும் (நட்சத்திர மண்டலத்திலும்) முடிவு இல்லை, (அதாவது, அம் மண்டலத்தைக் கடந்ததாகும் மதிலின் முடி). நெடிய சக்கரப் பொருப்பையும் (சக்கரவாள கிரியையும்) நிகர்

இலா இதற்கு படி (ஏணி) வகுத்ததாம் என்று சொல்லும்படி புரிசை (மதில்) பரந்து (கிடந்தது).—என்பதாம். இந்த மதிலுக்கு ஒப்பாகமாட்டாத சக்கரவாளகிரியை, இம் மதிலுக்குப் படி (ஏணி) என்று சொல்லும்படி விரிந்து உயர்ந்து கிடந்தது மதில், என்றபடி. முதல் இரண்டடிகள், உயர்வு நவிற்சி; ஈற்றடிகள் தற்குறிப் பேற்றம்.

**61. பகலி னுங்கடும் பரிதிதன் கதிர்பரப் பாமல்**
**இகலி யெங்கணு மெறிந்துகால் பொருதலி னேத்திப்**
**புகலு கின்றமந் தாகினித் தரங்கமே போல**
**அகல்வி சும்பிடை மிடைவன நெடுங்கொடி யாடை.**

[பகலினும் கடும் பரிதி கதிர் பரப்பாமல் இகலி, எங்கணும் எறிந்து கால் பொருதலின், ஏத்தி புகலுகின்ற மந்தாகினி தரங்கமே போல, அகல் விசும்பிடை மிடைவன நெடுங்கொடி ஆடை.]

**விளக்கம் :-** நீண்ட கொடிச் சீலைகள், பகல் பொழுதிலும் சூரியன் தனது கதிர்களைப் பரப்பி வெப்பம் உண்டாக்காதபடி, அவனோடு பகைகொண்டு எங்கும், (கொடிகள் அசைவதனால் உண்டாகும்) காற்றை ஆயுதமாக எறிந்து போர் செய்தலின், எல்லோராலும் புண்ணிய நதி என்று ஏத்திப் பேசப்படுகின்ற ஆகாச கங்கையின் அலைகளைப்போல், ஆகாயத்தில் நெருங்குவன ஆயின,— என்பது பொருள். மந்தாகினி-ஆகாசகங்கை. தரங்கம்-அலை. வானளாவி நெருங்கி அசைந்து, சூரியனது கிரணங்கள் புக முடியாமல் மறைக்கின்ற வெள்ளிய கொடிகள், ஆகாச கங்கை யின் அலைகள் போன்றன, என்று புலவர் கொடிகளை வருணித்த படி. இது உவமையின் பாற்படும். கொடிகளின் அசைவைச், சூரியனோடு இகலிப் பொருவதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். பகலினும் உம்மை, உயர்வு சிறப்பு, மிடைதல் - நெருங்குதல்.

**62. புயங்க பூமியோ புரந்தரற் கமைந்தபொன் னுலகோ**
**தயங்கு செல்வநீ டளகையோ நிகரெனுந் தரத்த**
**இயங்கு கார்முகில் வரையினின் றெழுவன போல**
**வயங்கு காரகி னறும்புகை யுயிர்ப்பன மாடம்.**

[புயங்க பூமியோ, புரந்தரற்கு அமைந்த பொன் உலகோ, தயங்கு செல்வம் நீடு அளகையோ, நிகர் எனும் தரத்த; இயங்கு கார்முகில் வரையினின்று எழுவன போல, வயங்கு கார் அகில் நறும் புகை உயிர்ப்பன மாடம்.]

**விளக்கம் :-** இயங்கு கார்முகில்...மாடம், புயங்க பூமியோ... நிகரெனும் தரத்த, என்பது அன்வயம். இயக்கமுடைய கரிய மேகக் கூட்டங்கள் மலையினின்று எழுவனபோல், வாசனையின் விளக்கமுடைய கரிய அகிற்கட்டையின் புகைக்கூட்டம் வெளிப்

படுவனவான அந் நகரத்திலுள்ள மாடங்கள், நாகர் உலகோ, இந்திரலோகமோ, குபேரனது அளகையோ நிகராகும் என்று, எண்ணும்படியான தரத்த (தன்மையன) ஆகும்—என்பது பொருள். தயங்கு செல்வம் - விளங்கும் செல்வம். முதலிரண் டடிகள் ஐயவணி; ஈற்றடிகள் உவமை அணி. தரத்த, பலவின் பால் குறிப்பு வினைமுற்று.

**63. மன்னர் வேழமுஞ் சேனையு மெதிரெதி மயங்கப்**
**பின்னு முன்னுமெம் மருங்கினும் பெயரிடம் பெறாமல்**
**துன்னி நின்றவ ரேகுமி னேகுமி னென்னும்**
**என்னு மோசையே யுள்ளன வீதிக ளெல்லாம்.**

[மன்னர் வேழமும் சேனையும் எதிர் எதிர் மயங்க, பின்னும் முன்னும் எ மருங்கினும் பெயர் இடம் பெறாமல் துன்னி நின்றவர் 'ஏகுமின், ஏகுமின்', என்னும் என்னும் ஓசையே உள்ளன வீதிகள் எல்லாம்.]

**விளக்கம் :-** அந்த நகரத்து வீதிகள் எல்லாம், அரச குலத்தவர் ஏறும் யானைகளும், நால்வகைப் படைகளும் ஒன்றோ டொன்று நெருங்கிக் கலக்க, முன்பின்னாகிய எல்லாப் பக்கங் களிலும், இடம் பெயர்ந்து செல்வதற்கு இடம் பெறாமையால், நெருங்கி நின்றவர் ''செல்லுங்கள் செல்லுங்கள்'' என்று கூறும் ஓசைகளே உள்ளனவாயின. என்னும் என்னும், என்ற அடுக்கு, 'பல தடவை' என்ற பொருளது.

**64. வரையெ லாம்பல வனமெலாங் கடலெலாம் வளைந்த**
**தரையெ லாம்படு பொருளெலாந் தனித்தனி குவித்த**
**நிரையெ லாங்கவ ராவண நீர்மையைப் புலவோர்**
**உரையெ லாந்தொடுத் துரைப்பினு முவமைவே றுளதோ.**

[வரை எலாம், பல வனம் எலாம், கடல் எலாம் (அக் கடல்) வளைந்த தரை எலாம், படு பொருள் எலாம் தனி தனி குவித்த நிரை எலாம் கவர், ஆவணம் நீர்மையை புலவோர் உரை எலாம் தொடுத்து உரைப்பினும் உவமை வேறு உளதோ.]

**விளக்கம் :-** அந் நகரத்துக் கடைத் தெருவின் வருணனை இது. படு பொருள் - உண்டாகும். மலை, காடு, கடல் சூழ்ந்த ஏனைய நாடுகள் ஆகியவற்றில் உண்டாகும் பொருள்கள் எல்லாம், தனித்தனியே குவித்த வரிசைகளைத் தம்மிடத்தே கொண்ட கடைவீதியின் தன்மையைப் புலவர்கள் சொற்களைப் புனைந்து வருணித்தாலும், அக் கடைத்தெருவிற்கு நேராகக் கூடிய பொருள் வேறு உள்ளதாமோ! அதாவது, இதற்கு உபமானம் ஆகக்கூடிய பொருள் உலகத்தில், இல்லை, என்றபடி. மலைபடு பொருள் :— மிளகு, கோட்டம், அகில், தக்கோலம் முதலியன. வனம்படு பொருள் :—தேன், மயிற்பீலி, நாவி முதலியன. கடல்படு

பொருள்:—உப்பு, முத்து, பவளம் முதலியன. தரைபடு பொருள்:—நெல், பருப்பு வகை, வாழை, பலா, தென்னை, கரும்பு முதலியன. கவர் - தன்னிடத்தே கொண்டுள்ள.

**65. விரவு கான்மல ரினும்பல வீரரின் விதங்கள்**
**பரவை வெண்மண லினும்பல புரவியின் பந்தி**
**இரவில் வானமீ னினும்பல யானையி னீட்டம்**
**திரைகொள் கார்த்துளி யினும்பல தேரணி நிலையே.**

[விரவு கான் மலரினும் பல வீரரின் விதங்கள், பரவை வெள் மணலினும் பல புரவியின் பந்தி, இரவில் வானம் மீனினும் பல யானையின் ஈட்டம், திரை கொள் கார் துளியினும் பல தேர் அணி நிலை, ஏ.]

**விளக்கம் ;-** வீரர்களின் பலவிதப்பட்ட அணி வகுப்புக்கள் கான் விரவு மலர்களினும் மிகப் பலவாகும், குதிரைகளின் வரிசை கடற்கரையிலுள்ள வெள்ளிய மணலினும் அதிகமானவை, யானைகளின் கூட்டம் இரவில் வான் விளங்கும் நட்சத்திரங் களினும் அதிகமானவை ஆகும், தேர்களின் அழகிய வரிசை கூட்டமான மழை நீர்த் துளிகளினும் அதிகமானவை ஆகும், என்பது பொருள்- அந் நகரத்திலுள்ள நால்வகைப் படைகளின் மிகுதி கூறப்பட்டது.

**66. ஆசி லாமறை யந்தண ராலய மொருபால்**
**மாசி லாமுடி மன்னவர் மாளிகை யொருபால்**
**காசி லாமதி யமைச்சர்தங் கடிமனை யொருபால்**
**பேசி லாவள வணிகர்தம் பேரிட மொருபால்.**

[ஆசு இலா மறை அந்தணர் ஆலயம் ஒருபால், மாசு இலா முடி மன்னவர் மாளிகை ஒருபால், காசு இலா மதி அமைச்சர் தம் கடிமனை ஒருபால், பேசு இலா வளம் வணிகர் தம் பேர் இடம் ஒருபால்.]

**விளக்கம் :-** ஆசு, மாசு, காசு என்பவை குற்றம், என்ற பொருளன. பேசு இலா வளம் வணிகர் - சொல்லுதற்கு அரிய பொருள் மிகுதியை உடைய வணிகர். அந்த நகரத்தில், அந்தணர், மன்னர், அமைச்சர். வணிகர், ஆகியவர்களுடைய மாளிகைகள் முறையே, ஒவ்வோர் பக்கத்தில் இருந்தன, என்ப தாம். வீடு என்ற பொருளையுடைய ஆலயம், மாளிகை, கடி மனை, பேரிடம், என்ற பல சொற்கள் வந்தது, **பொருள் பின் வரு நிலை அணி.**

**67. மங்க லந்திகழ் மனையெலாம் வலம்புரி யோசை**
**திங்க டோய்நெடுந் தலமெலாஞ் செழுஞ்சிலம் போசை**
**அங்கண் மாநக ரனைத்துமும் முரசதி ரோசை**
**எங்க ணுங்கட வுளரிடந் தொறுமுழ வோசை.**

[மங்கலம் திகழ் மனை எலாம் வலம்புரி ஓசை, திங்கள்தோய் நெடுந்தலம் எலாம் செழுஞ்சிலம்பு ஓசை, அம் கண் மாநகர் அனைத்தும் மும் முரசு அதிர் ஓசை, எங்கணும் கடவுளர் இடம் தொறும் முழவு ஓசை.]

**விளக்கம் :-** சுப காரியங்களைச் செய்யும் வீடுகளில் வலம் புரிச் சங்குகளின் ஓசை, வானளாவிய நிலாமுற்றங்களை உடைய உபரிகைகளில் மாதர் அணியும் சிலம்புகளின் ஓசை, அழகிய இடமகன்ற நகரெங்கும் மூன்று வகைப்பட்ட முரசங்களின் ஓசை, எங்கும் உள்ள தேவாலயங்களில் எல்லாம் மத்தளங்களின் ஓசை, உளவாயின,—என்பது பொருள். ஒரே பொருளில் ஓசை என்பது பல இடங்களில் வந்தது, **சொற்பொருட் பின்வரு நிலை அணி.** ஓசை, என்பது அடிகளின் ஈற்றில் நிற்பது இயைபுத் தொடை ஆகும். மங்கல முரசு, வெற்றி முரசு, கொடை முரசு என்பவை, மூன்று வகைப்பட்ட முரசுகள்.

**68. முன்றி லின்கணின் றிடம்பெறா வரசர்மா முடிகள்**
**ஒன்றொ டொன்றறைந் தெற்றிமே லொளிர்பொறி சிதறிச்**
**சென்று சென்றுறு திசைதொறுந் திகழ்ந்தது செம்பொன்**
**குன்றெ னும்படி குருகுல நாயகன் கோயில்.**

[முன்றிலின்கண் நின்று இடம் பெறா அரசர் மாமுடிகள், ஒன்றொடு ஒன்று அறைந்து எற்றி மேல் ஒளிர் பொறி சிதறி, சென்று சென்று உறு திசைதொறும் திகழ்ந்தது செம்பொன் குன்று எனும்படி குருகுலம் நாயகன் கோயில்.]

**விளக்கம் :-** முன்றில் - முன்னிடம், முற்றம். அறைந்து எற்றி - ஒன்றோடொன்று பட்டுத் தேய்ந்து (பொறி போன்ற பொன் பொடியை) வெளியே விடலால். குருகுலத் தலைவ னாகிய துரியோதனனது அரண்மனை, முன்றிலினிடத்தே நிற்கவும் இடம் பெறாது இருந்த அரசர்களின் கூட்டமான கிரீடங்கள் ஒன்றோடொன்று உராய்வதால் வெளிப்பட்டு, அரண்மனையின் பக்கங்களி லெல்லாம் பொன் தூள்கள் சிதறி வீழ்வதால், பொன் குன்றம்போல் திகழ்ந்தது, என்பது பொருள். துரியோதனனது அரண்மனை வருணனை இது. சென்று சென்று உறுதிசை - (பொன்பொடிகள்) போய்ப் பொருந்துகின்ற பக்கங்கள் எல்லாம்.

**69. என்றி சைக்குநல் லொளிநிமி ரெழின்மணி மகுடக்**
**குன்றி சைக்குவன் கோபுர நீணகர் குறுகித்**
**தென்றி சைக்குளிர் செண்பக மலர்தொறுஞ் சிறைத்தேன்**
**நின்றி சைக்குவண் சோலைவா யமர்ந்தன னெடுமால்.**

[என்று இசைக்கும் நல் ஒளி நிமிர் எழில் மணி மகுடம் குன்று இசைக்கும் வள் கோபுரம் நீள் நகர் குறுகி, தென்திசை குளிர்

செண்பகம் மலர்தொறும் சிறை தேன் நின்று இசைக்கும் வள் சோலைவாய் அமர்ந்தனன், நெடுமால்.]

**விளக்கம் :-** (துரியோதனனுடைய மாளிகை பொன்குன்று போன்று இருந்தது) என்று சொல்லத்தக்க, நல்ல ஒளிமிகுந்த அழகிய மணிகள் இழைக்கப்பெற்ற மகுடங்களை (சிகரங்களை) உடைய மலையை ஒத்த எழலின் வளப்பத்தை உடைய கோபுரங் களைக் கொண்ட பெரிய அத்தினபுரியை நெருங்கி, குளிர்ச்சி பொருந்திய சண்பக மலர்களின் அயல் இறகுகளை உடைய வண்டுகள் நின்று ரீங்காரம் செய்யும் அழகிய சோலையில் கண்ணன் தங்கினான்,—என்பது பொருள். குன்றிசைக்கும், என்பதிலுள்ள இசைக்கும் உவம உருபு, வண்டு உணா மலர் செண்பகம். எனவே, மற்ற மலர்களிலுள்ள தேனை உண்டு மயங்கிய வண்டுகள் சண்பகத்தின் அயல் நின்று ஒலி செய்தன, என்க. மிக உஷ்ணத்தை உடைய சண்பகம், நீர்வள மிகுதியால் குளிர் சண்பகம், ஆயிற்று. கோபுரத்திற்கு மகுடம், கலசம்.

**70. அன்று தூதுகொண் டிலங்கைதீ விளைத்தவ ரைவர்க்(கு)**
**இன்று தூதுவந் தெயிற்புறத் திறுத்தன ரென்னாத்**
**துன்று தூதுவண் டினமுர றொடையலான் றனக்குச்**
**சென்று தூதுவ ரியம்பினர் சேவடி வணங்கி**

[அன்று தூதுகொண்டு இலங்கை தீ விளைத்தவர் இன்று தூது வந்து எயில் புறத்து இறுத்தனர் என்னா, துன்று தூது வண்டு இனம் தொடையலான் தனக்கு சென்று தூதுவர் இயம்பினர் சேஅடி வணங்கி.]

**விளக்கம் :-** (வாசனையாகிய) தூது வந்து துன்று வண்டு இனம் முரல் தொடையலான் தனக்கு, தூதுவர் சென்று, சேஅடி வணங்கி, அன்று தூதுகொண்டு இலங்கை தீ விளைத்தவர் ஐவர்க்கு இன்று தூது வந்து எயில் புறத்து இறுத்தனர், என்னா, இயம்பினர்,—என்பது அன்வயம். வாசனையாகிய தூதினால் வந்து நெருங்கிய வண்டுகள் சப்திக்கின்ற மாலை அணிந்த துரியோதனனுக்கு, தூதர் சென்று, அவன் சேவடி வணங்கி, அன்று (முன்னைய அவதாரத்தில்) அனுமனைத் தூதாகக் கொண்டு இலங்கையில் தீயை மூட்டியவர், பாண்டவர்க்காக இன்று தானே தூதுவந்து மதில் புறத்தே தங்கியுள்ளார், என்று, கூறினர், என்பது பொருள். கருத்துடைய செய்யுள் இது. துரியோதனனைச் சேர்ந்தாரிலும் நல்லவர் உளர் போலும். கண்ணனது வரவு உரைத்த தூதர், (அளவு கடந்த தீமை ஒரு நாளல்லாக்கால் ஒருநாள் அழிவைத் தாராமல் தீராது, என்ற எண்ணமுடைய அத் தூதர்) கண்ணன் நகரில் கால் வைத்தது, தீயோரின் மாயப் பொய் வாழ்வு தீய்ந்து அழியவே, என்ற

துணிவில், ''ஒரு தூதனைக் கொண்டு இலங்கையைச் சுட்டெரித்தவர், இப்பொழுது அவர் தாமே வந்துள்ளார்'', என்று அவனிடம் கூறுவாறாயினர். ''முன் தீங்கிழைத்த அரக்கனுக்குத் தூதனைக் கொண்டு அழிவு செய்த பெருமான், கொழுந்தியைத் துகிலுரிந்த உன்னைத் தண்டிக்க அவரே தூதாக வந்துள்ளார்; இனியாவது வாழ்க்கையைத் திரித்துக்கொள், இல்லையேல் அழிவு நிச்சயம்'', என்று தூதர் கூறும் கருத்தின் தொனியது, தூசர் கூற்று. எனவே, இது கருத்துடை அடை அணியின் பாற்படும். தீயவர் அழிவதில் ஊக்கம் பிறப்பது, நல்லவர் இயற்கையோடு பொருந்தியதே ஆகும். அந்த அழிவில் தங்களுக்கும் பங்குண்டு, என்று தெரிந்தும், அன்னார் ஊக்கம் குறைவதில்லை.

## துரியோதனன் நகரை அலங்கரித்தல்

**71. தொல்லை நாயகன் வந்தன னென்றலுஞ் சுரும்பார்**
**மல்லன் மாலையா னேவலான் மாநகர் மாக்கள்**
**எல்லை நீண்மதில் வட்டம்யோ சனையெழு நூறாஞ்**
**செல்வ மாநகர்த் தெருவினை யொப்பனை செய்தார்.**

[தொல்லை நாயகன் வந்தனன் என்றலும், சுரும்பு ஆர் மல்லல் மாலையான் ஏவலால், மா நகர் மாக்கள் எல்லை நீள் மதில் வட்டம் யோசனை எழுநூறு ஆம் செல்வம் மா நகர் தெருவினை ஒப்பனை செய்தார்.]

**விளக்கம் :-** தொல்லை நாயகன் - யாவர்க்கும் நாயகனாகிய புராதனனான கண்ணன். மல்லல், வளமை உணர்த்தும் உரிச்சொல். மல்லல் மாலையான் - துரியோதனன். வட்டம் நீள் மதில் எல்லை யோசனை எழுநூறு - வளைந்து நீண்ட மதிலின் அளவு எழுநூறு யோசனை. ஏழரை நாழியில் நடந்து கடக்கக் கூடிய தூரம், யோசனை. துரியோதனன் ஏவலால் கண்ணனது வருகைக்காக ஊர் வீதிகள் மக்களால் அலங்கரிக்கப்பெற்றன, என்பதாம்.

**72. மின்னு மாமுகிற் பல்லிய விதங்கண் முழங்க**
**மன்னர் மன்னவ னெழுந்தனன் மாலெதிர் கொள்வான்**
**என்னை நீயவற் கெதிர்செல்வ தென்றுதன் மருகன்**
**தன்னை வன்பொடு தகைந்தனன் கொடுமைகூர் சகுனி.**

[மின்னும் மா முகில் பல் இயம் விதங்கள் முழங்க, மன்னர் மன்னவன் எழுந்தனன் மால் எதிர் கொள்வான், ''என்னை நீ அவற்கு எதிர் செல்வது?'' என்று தன் மருகன் தன்னை வன்பொடு தகைந்தனன் கொடுமைகூர் சகுனி.]

**விளக்கம் :-** மின்னுகின்ற பெரிய மேகங்கள் இடிப்பதுபோல் பலவகைப்பட்ட வாத்தியங்கள் முழங்க,—என்பது முதலடியின் பொருள். வன்பொடு தகைந்தான் - வன்சொல் வழங்கித் தடுத்தான் (சகுனி.) கண்ணனை எதிர்கொள்வதற்கு எழுந்த

மருகனைக் கொடுமை கூர்சகுனி தடுத்தான், என்பதாம். பல்லிய விதங்கள் - கொட்டுவன, ஊதுவனவாகிய பலவித வாத்தியங்கள். ''மால் எதிர் கொள்ள எழுந்த மருகனைக் கொடுமைகூர் சகுனி தடுத்தான்; ஆதலால் சகுனியால் துரியோதனன் கெடுக்கப் பட்டான், என்னல் அமையாது''. துரியோதனன் இயற்கை யிலேயே கொடியனாதலால்தான், சகுனியால் தடுக்கப்படல் இயல்வதாயிற்று. ஒருவன் கெடுவதும், வாழ்வதும் சேர்க்கையால், என்று அறுதியிட்டுக் கூறல் அமையாது. அவ்வாறாயின், மற்றோர் மாமனான மாரீசன் காட்டிய நன்னெறியை, மருகனான இராவணன் கேட்டு, அரக்கர்குல அழிவைக் காத்திருக்கலாமே!

**73. சீர்வ லம்புரி திகிரிசேர் செங்கையான் றனக்குக்**
**கார்வ லம்புரி கோயிலுங் காட்சியு மமைத்துப்**
**போர்வ லம்புரி நிருபரு மிளைஞரும் போற்றத்**
**தார்வ லம்புரி யவனிருந் தனன்பொலந் தவிசில்.**

[சீர் வலம்புரி திகிரி சேர் செம் கையான் தனக்கு, கார் வலம் புரி கோயிலும் காட்சியும் அமைத்து, போர் வலம்புரி நிருபரும் இளைஞரும் போற்ற, தார் வலம்புரி அவன் இருந்தனன் பொலம் தவிசில்.]

**விளக்கம் :-** சீர் வலம்புரி - சிறந்த பாஞ்சசன்யம் என்னும் வலம்புரி சங்கு. கார் வலம்புரி கோயில் - மேகங்கள் வலம் வரும் படி உயர்ந்த மாளிகை. காட்சி - காணுதற்குரியது, அதாவது அலங்காரம். போர் வலம்புரி நிருபர் - போரை வல்லமையோடு செய்ய வல்ல அரசர். தார்வலம்புரி அவன் - நஞ்சாவட்டை மாலை தரித்துக்கொண்டிருக்கும் துரியோதனன். சகுனியால் எதிர் கொள்ளலை விடுத்த மருகன், கண்ணன் தங்குவதற்கு இடம் அமைத்து, அரசர்களோடும் தம்பியரோடும் அழகிய பொன் தவிசில் அமர்ந்திருந்தான்; அதாவது, தன் மனையிலேயே தங்கி விட்டான், என்பதாம், இச் செய்யுளில், வலம்புரி என்பது வேறு வேறான பொருளில் வந்திருப்பதால், இது சொல்பின் வருநிலை அணி ஆகும். இதனில் ஒவ்வோர் அடியிலும் முதல் எழுத்துத் தவிர மற்ற எழுத்துக்கள் ஒன்றாய்ப் பொருள் வேறுபாட்டோடு, நிற்பதால், **திரிபு** என்னும் சொல் அணியும் அமைந்துளது.

**74. தொல்ப கீரதீ மைந்தனுந் துரோணனுஞ் சுதனும்**
**வில்வி தூரனுங் கிருபனு முதலிய வேந்தர்**
**மல்கு மூவிரு பத்துநூ றாயிர மகிபர்**
**செல்வ நாயகர்க் கியோசனை யிரண்டெதிர் சென்றார்.**

[தொல் பகீரதி மைந்தனும், துரோணனும், சுதனும், வில் விதுரனும், கிருபனும் முதலிய வேந்தர், மல்கு மூவிருபத்து நூறாயிரம் மகிபர் செல்வம் நாயகர்க்கு யோசனை இரண்டு எதிர் சென்றார்.]

**விளக்கம் :-** தொல் பகீரதி மைந்தன் - வீடுமன். சுதன் - துரோண புத்திரனான அசுவத்தாமன். மல்கு - நெருங்கிய (அறுபது லட்சம் அரசர்கள்) செல்வநாயகன் - அஷ்ட ஐசுவரியங்களின் நாயகனான கண்ணன். இரண்டு யோசனை - பதினைந்து நாழிகையில் கடக்கக்கூடிய தூரம். வீடுமன் முதலிய அறுபது லட்சம் வேந்தர் கண்ணனை எதிர் கொண்டு அழைத்தனர். என்பதாம்.

### கண்ணன் விதுரன் மனை செல்லல்

**75. வந்து வந்திரு மருங்கினு மன்னவர் வணங்கப்**
**பைந்து ழாய்முடிப் பரமனுங் கண்மலர் பரப்பி**
**அந்த மாநகர் புகுந்தபி னரசனிற் புகாமல்**
**புந்தி கூரருள் விதுரன்வாழ் வளமனை புகுந்தான்.**

[வந்து வந்து இரு மருங்கினும் மன்னவர் வணங்க, பைந்து ழாய் முடி பரமனும் கண் மலர் பரப்பி, அந்த மா நகர் புகுந்தபின் அரசன் இல் புகாமல், புந்தி கூர் அருள் விதுரன் வாழ் வளம் மனை புகுந்தான்.]

**விளக்கம் :-** இருபுறத்திலும் வந்து வந்து மன்னவர் வணங்க, அவர்களைக் கண்ணன், தனது கண் மலர்களால் குளிரக் கடாட்சித்து, அந்த நகரை அடைந்தபின், துரியோதனன் தனக்காக அமைத்திருந்த மனை செல்லாமல், தத்துவ வித்தகனும், அருளுடையவனுமான விதுரனது வளமனை புகுந்தான், — என்பது பொருள். கண்ணன் வருவதற்குரிய **பாக்கியம்** உடைமை பற்றி விதுரன் மனையை **வளமனை** என்றார்.

**76. வேந்தர் யாரையும் விடைகொடுத் தகன்றபின் விமலன்**
**வாய்ந்த மாளிகை நடுவணோர் மண்டபங் குறுகி**
**ஆய்ந்து வல்லவர் நவமணி யழுத்திய வரியே(று)**
**ஏந்து மாசன மிடப்பொலிந் ததன்மிசை யிருந்தான்.**

[வேந்தர் யாரையும் விடை கொடுத்து, (அவர்) அகன்றபின் விமலன் வாய்ந்த மாளிகை நடுவண் ஓர் மண்டபம் குறுகி, ஆய்ந்து வல்லவர் நவ மணி அழுத்திய அரி ஏறு ஏந்தும் ஆசனம் இட, பொலிந்து அதன்மிசை இருந்தான்.]

**விளக்கம் :-** விமலன் பரிசுத்தனான கண்ணபிரான். அரி ஏறு ஏந்தும் ஆசனம் - சிம்மாசனம். தன்னை எதிர்கொண்ட அரசர்களுக்கு விடைகொடுத்து, அவர்கள் போனபின், வல்லவர் ஆய்ந்து எடுத்த நவரத்தினங்கள் பதிக்கப்பெற்ற சிம்மாசனத்தை (விதுரன்) இட, அதன் மீது கண்ணன் பொலிவுடன் அமர்ந்தருளினான், என்பது பொருள்,

**77. இருந்து வந்தரு ளிறைவனை யிறைஞ்சினா னிறைஞ்சிப்**
**பெருந்து வந்தனைப் பிறப்பையு மிறப்பையும் பிரித்தான்**
**மருந்து வந்தனை யமரருக் கருளிவ மாயோன்**
**விருந்து வந்தன னென்றுள முருகிய விதுரன்.**

[இருந்து உவந்தருள் இறைவனை இறைஞ்சினான், இறைஞ்சி, பெருந் துவம் தனை பிறப்பையும் இறப்பையும் பிரித்தான், மருந்து வந்தனை அமரருக்கு அருளிய மாயோன், விருந்து வந்த னன் என்று உளம் உருகிய விதுரன்.]

**விளக்கம் :-** வந்தனை (செய்த) அமரருக்கு மருந்து அருளிய மாயோன், விருந்து வந்தனன் என்று உளம் உருகிய விதுரன், உவந்து இருந்து அருள் இறைவனை இறைஞ்சினான், இறைஞ்சி பெருந்துவம் தனை பிறப்பையும் இறப்பையும் பிரித்தான்,-என்பது அன்வயம். தன்னை வழிபட்ட தேவர்களுக்கு அமுதம் அருளிய மாயவன், தனக்கு விருந்தினனாக வந்தனன் என்று மனம் உருகிய விதுரன், (தான் இட்ட ஆசனத்தில்) உவகையோடு இருந்தருளிய இறைவனை வணங்கினான்; வணங்கிய அந்த கணத்திலேயே பெரிய இரண்டு என்னும் வகையினவாகிய இறப்பையும் பிறப்பையும் பிரித் தான், அதாவது நீக்கிக்கொண்டவனானான், என்பது பொருள். அடிதோறும், இருந்து, பெருந்து, மருந்து, என வந்திருப்பது திரிபு என்னும் சொல்லணியாகும்.

**78. கேடு கொண்டகைக் குரிசிலை யலர்ந்தகோ கனதக்**
**காடு கண்டெனக் கண்டுதன் கண்ணிணை களியாத்**
**தோடு கொண்டதார் விதுரனிப் பிறப்பையுந் தொலைத்தான்**
**வீடு கண்டவர்க் கியம்பவும் வேண்டுமோ வேண்டா.**

[கோடு கொண்ட கை குரிசிலை அலர்ந்த கோகனதம் காடு கண்டு என கண்டு தன் கண் இணை களியா, தோடு கொண்ட தார் விதுரன் இ பிறப்பையும் தொலைத்தான், வீடு கண்டவர்க்கு இயம்பவும் வேண்டுமோ, வேண்டா.]

**விளக்கம் :-** அலர்ந்த கோகனதம் காடு (வண்டுகள்) கண்டு என, தோடு கொண்ட தார் விதுரன், கோடு கொண்ட கை குரி சிலை கண்டு என, கண் இணை களியா இ பிறப்பையும் தொலைத் தான்; வீடு கண்டவர்க்கு இயம்பவும் வேண்டுமோ, வேண்டா,— என்பது அன்வயம். கோகனதம் - தாமரை. மலர்ந்த தாமரைக் காட்டை வண்டு கண்டாற்போல, இதழ்களைக் கொண்ட மாலை அணிந்த விதுரன், சங்கைக் கையில் கொண்ட கண்ணனைக் கண்டு, தனது இரு கண்களும் களித்து இப் பிறவிய தான கர்மபந்தத்தையும் ஒழித்தான்; முத்தி நிலை உணர்ந்தவர் களுக்குக் கர்ம சம்பந்தம் நீங்கல் நிகழ்வதைச் சொல்லவும் வேண்

டுமோ, வேண்டுவதில்லை, என்பது பொருள் பரம்பொருளின் தன்மை உணர்ந்தவர்கள், முத்திநிலை உணர்ந்தவராகின்றனர். கண்ணனைப் பரம்பொருளாக உணர்ந்துகொண்ட விதுரன், பிறவியைத் தொலைத்ததோடு, இப் பிறவியில் கர்மசம்பந்தமும் நீங்கப்பெற்ற ஜீவன் முக்தன் ஆனான்,—என்பது கருத்து. ஈற்றடி கவிக்கூற்று. இவ்வடியின் பொதுப்பொருளை முதல் மூன்றடிகளில் கூறப்பெற்ற சிறப்புப் பொருளால் விளக்குதலால், இது, **வேற்றுப்பொருள் வைப்பு அணி** ஆகும்.

**79.** **உள்ளி னானுணர்ந் துள்ளமு முருகினா னெழுந்து**
**துள்ளி னான்விழுந் திணையடி சூடினான் றுயரைத்**
**தள்ளி னான்மலர்த் தடக்கையாற் றத்துவ வமுதை**
**அள்ளி னானெனக் கண்களா லருந்தினா னளியோன்.**

[உள்ளினான், உணர்ந்து உள்ளமும் உருகினான், எழுந்து துள்ளினான். விழுந்து இணை அடி சூடினான், துயரை தள்ளினான், மலர் தடக்கையால் தத்துவ அமுதை அள்ளினான் என, கண்களால் அருந்தினான் அளியோன்.]

**விளக்கம் :-** அளியோன் - கண்ணனது அருள் பெற்ற விதுரன். கண்ணபிரான் தன் மனை வருவதற்கான தனது பாக்கிய விசேஷத்தை நினைத்தான்: அவனைப் பரம்பொருளாக உணர்ந்து மனமுங் கரையப்பெற்றான்; அதன் பயனாய் அவசமுற்று எழுந்து துள்ளினான், அவனது உபய பாதங்களைத் தன் சிரசில் சூடிக்கொண்டான், பிறவித் துயரத்தை ஒழியச்செய்தான்; மலர் போன்ற தனது பெரிய கைகளால், நித்ய இன்பமாகிய அமுதினை அள்ளி உண்டவன்போல், தனது கண்களால் அருந்தினான், அதாவது ஆசை தீரத் தெரிசித்துக் களித்தான்,—என்பது பொருள். உள்ளமும் உருகினான், என்பதிலுள்ள உம்மை, உடலும் வியர்க்கப்பெற்றான், என்ற பொருள் குறிப்பினது. கண்களால் அருந்தினான். என்று வாயின் காரியத்தைக் கண்களில் ஏற்றிக் கூறியது உபசார வழக்கின்பாற்படும்.

**80.** **முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ**
**பன்ன காதிபப் பாயலோ பச்சையா லிலையோ**
**சொன்ன நால்வகைச் சுருதியோ கருதிநீ யெய்தற்(கு)**
**என்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடி லென்றான்.**

[முன்னமே துயின்று அருளிய முது பயோததியோ, பன்னக அதிபன் பாயலோ, பச்சை ஆல் இலையோ, சொன்ன நால்வகை சுருதியோ, கருதி நீ எய்தற்கு என்ன மாதவம் செய்தது இ சிறு குடில், என்றான்.]

**விளக்கம் :-** கருதி நீ எய்தற்கு இச் சிறுகுடில் என்ன மா தவம் செய்தது, (ஆதலால்) முன்னமே.....சொன்ன நால்வகைச்

சுருதியோ என்றான், என்று அன்வயம் கொள்க. பரம்பொருளாகிய நீ என் மனை வந்து தங்குவதற்கு ஏற்றது என்று எண்ணி வருவதற்கு, இச் சிறு குடில் என்ன பெரிய தவத்தைச் செய்துளது? (ஒன்றும் இல்லை. ஆதலால்) அநாதி காலமாக நீ துயின்றருளிய பழமையான பாற்கடல் என்று மயங்கியோ அல்லது, ஆதிசேஷ சயனம் என்று மயங்கியோ, அல்லது, மகாப்பிரளய காலத்தில் அண்டங்களை எல்லாம் திருவயிற்றில் அடக்கிக்கொண்டு குழந்தை வடிவில், பள்ளிகொண்ட ஆதிசேஷ அம்சமான ஆலிலை என்று மயங்கியோ, அல்லது, மேலோரால் புகழப்படும் நான்கு வகைப் பட்ட வேதம் என்று மயங்கியோ, (நீ வந்தருளினாய், அறிகிலேன்), என்று விதுரன் முகமன் கூறினான், என்பதாம். பயஸ் - உததி (பய-உததி) - தமிழில் பயயோததி, என்று விகாரப்பட்டது. பயம் - பால், உததி - கடல். ஆகவே, பயோததி - பாற்கடல். தமிழ் இலக்கியங்களில் பொருள்வளமும், சொல் நயமும் சிறந்து விளங்கும் செய்யுள்களில் ஒன்று இது. வில்லிபுத்தூரரும் விதுரனோடு தத்துவ அமுதை அள்ளிப் பருகினாலன்றி இவ்வகை முகமன், அவர் மனத்தில் உதித்திராது. கண்ணன் தன் மனை வந்தான் எனத் தழைத்த மனத்தின் நெகிழ்ச்சியின் உருவகமாகும் இம் முகமன். ''பெரியோய், என் மனை புகவேண்டும் என்று கருதி நீ வந்தருளினாய் என்று நான் நினையேன். அதற்கு மிகப் பெருந் தவம் வேண்டும். மேலும் செய்தவம் எவ்வளவாயினும், நீ விரும்பி வந்தருள அது போதுமோ! ஆதலால் ஏதோவொரு மயக்கத்தில் இங்கு நீ வந்திருத்தல்வேண்டும். அயர்ந்து தூங்குவான் ஒருவன் கண் விழிப்புக்கொண்டு பாயல் அகன்று, மீண்டும் துயிலப் புகுங்கால், தூக்க மயக்கத்தினால், முன் துயின்ற பாயல் ஈதென்று தெளியாமல் வேறோர் படுக்கையைத் துயிலிடமாகக் கொள்வதுபோல், பாற்கடலிலும், பன்னகாதிபப் பாயலிலும், பச்சை ஆலிலையிலும் அரு மறையிலும் துயின்ற நீ ஏதோ கருமங் கருதி இம் மண் வந்து, என் மனையை அவற்றில் ஒன்றாக மயங்கி அணைந்தனைபோலும். என் சிறுகுடில் தவமுடையதேனும், அது, மயக்கத்தால் நீ வருவதற்குப் போதுமானதாகுமே அன்றி, கருதி நீ வருவதற்குப் போதவே போதாது'', என்று விதுரன் கூறும் நயத்தது செய்யுள். இது மயக்க அணியின் பாற்படும்.

**81. மும்மை யாகிய புவனங்கண் முழுதையு மருந்தும்**
**எம்மை யாளுடைய நாயகன் விருந்தினுக் கிசைந்தான்**
**அம்ம வென்றன னாறுநூ றாயிர மடையர்**
**தம்மை நோக்கின னவர்களும் விரைவுடன் சமைத்தார்.**

[மும்மை ஆகிய புவனங்கள் முழுதையும் அருந்தும் எம்மை ஆள் உடைய நாயகன் விருந்தினுக்கு இசைந்தான், அம்ம, என்றனன்; ஆறு நூறாயிரம் மடையர் தம்மை நோக்கினன், அவர்களும் விரைவுடன் சமைத்தார்.]

**விளக்கம் :-** சுவர்க்க மத்திய பாதலம் என்று மூன்று வகைப் பட்ட உலகங்கள் முழுவதையும் (யுகப்பிரளய காலத்தில்) உண்டருளினவனும், எம்மை ஆளுடைய தலைவனும் ஆன திருமால் என் மனையில் விருந்துண்ண மனங்கொண்டான், ''அத் திருவயிறு நிறையும்படி நான் எப்படி உணவு அளிப்பேன்?'' என்று எண்ணியவனாய் ஆறு லட்சம் சமையற்காரரைப் பார்த்தான், அவர்களும் துரிதமாகச் சமைக்கலாயினர், என்பதாம். மும்மையாம் புவனங்கள் உண்டும் வயிறு நிறையப் பெறாத பெருமானுக்கு நான் எங்ஙனம் விருந்து செய்து கரை காணப்போகின்றேன், என்று விதுரன் எண்ணி மகிழ்ந்த நிலையை, அம்ம என்ற இடைச்சொல் குறிப்பதாகும்.

**82. வந்த கொற்றவேல் வரிசிலை யவர்க்கும்வா ளவர்க்கும்**
**கந்த டர்ப்பன கரிக்கும்வெங் கவனவாம் பரிக்கும்**
**ஐந்து பத்துநூ றாயிர மரசர்க்கு மெவர்க்கும்**
**இந்தி ரற்குமெய் தாவமு தெனும்படி யியற்ற.**

[வந்த கொற்றம் வேல் வரிசிலை அவர்க்கும், வாள் அவர்க்கும், கந்து அடர்ப்பன (ஆன) கரிக்கும் வெம் கவனம் வாம் பரிக்கும், ஐந்து பத்து நூறு ஆயிரம் அரசர்க்கும், எவர்க்கும், இந்திரற்கும் எய்தா அமுது எனும்படி இயற்ற,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** கண்ணனோடு வந்த வேல் வீரர்களுக்கும், வில் வீரர்களுக்கும், வாள் வீரர்களுக்கும், அவர்களது யானை குதிரைகளுக்கும், ஐம்பது லட்சம் தொகையுள்ள அரச குலத்தவர்களுக்கும், இந்திரனுக்கும் கிடைக்காத அமுதம் என்னும்படியான உணவு வகைகளை (மடையர்) சித்தம் செய்ய,—அடுத்த கவியில் முடியும். கந்து அடர்க்கும் வெம்கரி - கட்டுத் தறியை முறிக்கும் யானைகள். வெம் கவனம் வாம் பரி - நடைவேகத்தை உடைய தாவும் குதிரைகள்.

**83. அமைத்த வாசநன் னீர்கொடு மஞ்சன மாடிச்**
**சமைத்த பல்கறி யடிசிறம் விருப்பினா லருந்தி**
**உமைக்கு நாயக னிரவொழித் தருளினா னுதவ**
**இமைப்பி லாரமு தருந்திய வியல்பென விருந்தார்.**

[அமைத்த வாசம் நல் நீர் கொடு மஞ்சனம் ஆடி, சமைத்த பல் கறி அடிசில் தம் விருப்பினால் அருந்தி, உமைக்கு நாயகன் இரவு ஒழித்தருளினான் உதவ, இமைப்பு இலார் அமுது அருந்திய இயல்பு என, இருந்தார்.]

**விளக்கம் :** விதுரனது ஏவலர் சித்தம் செய்த நல்ல மணமுடைய நீரில் ஸ்நானஞ் செய்து, பக்குவம் செய்த பல கறி வகைகளோடு நல்ல உணவை விருப்பத்தோடு உண்டு, உமைக்கு நாயகனான சிவபெருமானது இரத்தலை அகற்றியருளிய திருமால்

உதவத் தேவர்கள் அமுது அருந்திய தன்மைபோல எல்லோரும் திருப்தி அடைந்தவர்களாய் இருந்தார்கள்,—என்பது பொருள்.

**84. வாச நீரும்வண் சுண்ணமு முறைமுறை வழங்கப்**
**பூசு றுந்தொழிற் பூசினார் சூடினார் புனைந்தார்**
**வீசு சாமர மிரட்டவெண் மதிக்குடை நிழற்ற**
**கேச வன்மணிக் கேசரித் தவிசிடைக் கிளர்ந்தான்.**

*[வாசம் நீரும் வள் சுண்ணமும் முறை முறை வழங்க, பூசுறும் தொழில் பூசினார், சூடினார், புனைந்தார், வீசு சாமரம் இரட்ட, வெள்மதி குடை நிழற்ற, கேசவன் மணி கேசரி தவிசு இடை கிளர்ந்தான்.]*

**விளக்கம் :-** வாசம் நீர் - பனிநீர், சந்தனக் குழம்பு முதலியன. சுண்ணம் - வாசனைப்பொடி. முறை முறை - ஒன்றன்பின் ஒன்றாக. பூசுறும் தொழில் - பூசிக்கொள்ள வேண்டிய முறைப்படி. சூடினார் - புஷ்ப சரத்தைத் தலையில் சூடிக்கொண்டனர். புனைந்தார் - மாலையை மார்பில் அணிந்து கொண்டனர். உண்டவர்க்கு விதுரனால் அளிக்கப்பெற்ற தாம் பூலாதிகளைத் தரித்த பின்பு கேசவன், வீசுதற்குரிய சாமரை இருபுறத்திலும் வீச, வெண்மதிக்குடை நிழல்தர அழகிய அரியா சனத்திடை விளக்கமுடன் வீற்றிருந்தான்,—என்பதாம்.

## அத்தமன வருணனை

**85. ஞான கஞ்சுக விதுரன்வாழ் மனையினா யகனும்**
**போன கம்பரி வுடனுகர்ந் திருந்தவப் பொழுதில்**
**தானு மேருவுக் கப்புறத் தவ்வமு தருந்தப்**
**பானு வும்பெருங் குடதிசைப் பரவையிற் படிந்தான்.**

*[ஞானம் கஞ்சுகம் விதுரன் வாழ் மனையின் நாயகனும் போனகம் பரிவுடன் நுகர்ந்து இருந்த அ பொழுதில், தானும் மேருவுக்கு அப்புறத்து அ அமுது அருந்த, பானுவும் பெருங் குட திசை பரவையில் படிந்தான்.]*

**விளக்கம் :-** ஞான கஞ்சுக விதுரன் - மெய்ஞ்ஞானமாகிய கவசம் பூண்ட விதுரன். போனகம் - உணவு. பானு - சூரியன். விதுரன் மனையில் கண்ணன் அமுது செய்து இருந்த பொழுது, சூரியன் தானும், (தேவர்களுக்கு உரியதான) அந்த அமிர்தத்தை அருந்தும் பொருட்டு, மேருமலைக்கு அப்பால் சென்று கடலில் மறைந்தான்,—என்பதாம். உண்ணுமுன் நீராடல் மரபாதலால், பரவையில் படிந்தான், என்றார். குடக்கு - திசை - குடதிசை. கண்ணபிரான் அமுது செய்தபின், சூரியன் அஸ்தமித்தான், என்க.

**86. கருதி யந்தணர் யாவருந் தங்கடன் கழிப்பச்**
**சுருதி யென்னும்வெஞ் சாபமே லம்புகை தொடுத்துப்**
**பரிதி தன்பெரும் பகைவர்மேல் விடுத்தலிற் பரந்த**
**குருதி யாமென நிவந்தெழச் சிவந்தது குடபால்.**

[கருதி அந்தணர் யாவரும் தம் கடன் கழிப்ப, சுருதி என்னும் வெம் சாபம் மேல் அம்பு கை தொடுத்து பரிதி தன் பெரும் பகைவர் மேல் விடுத்தலின், பரந்த குருதி ஆம் என நிவந்து எழ சிவந்தது குடபால்.]

**விளக்கம் :-** அந்தணர் எல்லோரும் மாலையில் செய்ய வேண்டிய சந்தியாவந்தனம் என்னும் கடமையைக் கழிக்கக் கருதி, வேத மந்திரம் (காயத்திரி) என்னும் கொடிய வில்லின்மேல், அம்பு (நீர்) ஆகிய அம்பைக் கையால், சூரியனது பெரும் பகைவர்மேல் தொடுத்து விடுதலால், பரவிய குருதி ஆகும் இது என்று சொல்லும்படி செவ்வானம் மிகுந்து தோன்றலால், மேற்குத் திசை சிவந்தது, என்பது பொருள். நீர், அம்பு, என்ற பொருள்களை உடைய அம்பு, இங்கே, நீராகிய அம்பு ஆயிற்று. இந்தச் செவ்வான வருணனை ஏதுத் தற்குறிப்பேற்ற அணி ஆகும். அந்தணர்கள் மந்திர பூர்வமாகக் கையால் எடுத்து விடும் அர்க்கிய ஜலம், அம்பு தொடுத்தலாயிற்று.

**87. தரங்க வாரிதிப் புறத்தெதிர் மலைந்தவெஞ் சமரில்**
**உரங்கொள் கூர்நெடும் படைகளா லுடன் றமந் தேகர்**
**துரங்க மேழுடைக் கடவுளை நிரைநிரை துணித்த**
**கரங்கள் போன்றன கரைதொறும் வளர்துகிர்க் காடு.**

[தரங்கம் வாரிதி புறத்து எதிர் மலைந்த வெம் சமரில், உரம் கொள் கூர் நெடும் படைகளால் உடன்ற மந்தேகர், துரங்கம் ஏழு உடை கடவுளை நிரை நிரை துணித்த கரங்கள் போன்றன, கரை தொறும் வளர் துகிர்காடு.]

**விளக்கம் :-** தரங்கவாரிதி - அலைகளை உடைய கடல். துகிர் காடு - பவளக்கொடிகளின் மிகுதி. மந்தேகர் - சூர்யனது பகைவர்களான அரக்கர். துரங்கம் ஏழு உடைக் கடவுள் - ஏழு நிறக் குதிரைகளை உடைய சூரியன். நிரை நிரை - வரிசை. கரம் - கிரணம், கை; கிரணங்களாகிய கை. மேலைக் கடலின் கரையெங்கும் அடர்ந்து கிடந்த பவளக் கொடிகள், கடற்கரைப் புறத்தே எதிர்த்து நின்று செய்த போரில், வலிய கூரிய பெரிய ஆயுதங்களால் பெருங் கோபங் கொண்ட மந்தேகர் என்பவர், சூரியனை வரிசை வரிசையாகத் துண்டு செய்து குவித்த கிரணங் களாகிய செய்ய கைகளை ஒத்திருந்தன, என்பது பொருள். கடற்கரையில் அடர்ந்து வளர்ந்து கிடந்த பவளக் கொடிகளின் வருணனையாகிய இது தன்மைத் தற்குறிப்பேற்ற அணி ஆகும்.

**88. நீதி யிற்புகல் பகலெலா நீரரமகளிர்**
**மீது றைத்தெழும் வெவ்வெயில் படாவகை விரித்துப்**
**போது புக்கதென் றினம்படச் சுருக்கிய பூம்பட்(டு)**
**ஆத பத்திரம் போன்றன தாமரை யடவி.**

[நீதியின் புகல் பகல் எலாம் நீர் அரமகளிர் மீது உறைத்து எழும் வெம் வெயில் படாவகை விரித்து, போது புக்கது என்று இனம் பட சுருக்கிய பூம் பட்டு ஆதபத்திரம் போன்றன தாமரை அடவி.]

**விளக்கம் :-** தாமரை அடவி, புகல் பகல் எலாம் உறைத்து எழும் வெம் வெயில் நீர் அரமகளிர்மீது படாவகை நீதியின் விரித்து, போது புக்கது என்று, இனம்பட சுருக்கிய பூம்பட்டு ஆதபத்திரம் போன்றன, — என்பது அன்வயம். நீதி - முறை. நீர் அரமகளிர் - நீரினிடம் வாழும் தெய்வப் பெண்கள். உறைத்து - தாக்கி. இனம்பட சுருக்கிய - (எல்லா மலர்களும்) ஒன்றுபட்டுக் குவித்துக்கொண்ட, அல்லது மூடிக்கொண்ட. ஆதபத்திரம் - குடை. தாமரை அடவி - தாமரைக்காடு, அதாவது காடுபோல் நெருங்கிய தாமரைக் கூட்டம். தாமரைகள், போற்றப்படும் பகல் எலாம் தாக்கி எழும் உக்கிரமான வெயில், நீர் வாழ் தெய்வ மகளிர்மீது படாதபடி முறையே இதழ்களை விரித்திருந்து, (மாலையில்) அப் பகல் ஒடுங்கியதென்று, (மலர்கள்) ஒன்று பட்டுக் குவிதலுற்று, அழகிய மடக்கப்பெற்ற பட்டுக் குடைகளைப் போன்றன வாயின, — என்பது பொருள். மாலைக் காலத்தில் குவிதலுற்ற தாமரையின் வர்ணனையாகும் இது, தன்மைத் தற்குறிப்பேற்ற அணி. அரமகளிர், என்பது அமர மகளிர், என்பதின் மரூஉ

**89. கலந்து மங்கல முழவுவெண் சங்கொடு கறங்க**
**மிலைந்த பூங்குழல் வனிதையர் மெய்விளக் கெடுப்பக்**
**கலந்த தாமரைத் தடமெலாங் குவிந்தது கண்டு**
**மலர்ந்த தாமரை வாவிபோன் றதுநகர் வட்டம்.**

[கலந்து மங்கலம் முழவு வெள் சங்கொடு கறங்க, மிலைந்த பூ குழல் வனிதையர் மெய் விளக்கு எடுப்ப, கலந்த தாமரை தடம் எலாம் குவிந்தது கண்டு, மலர்ந்த தாமரை வாவி போன்றது நகர் வட்டம்.]

**விளக்கம் :-** மாலையில் அத்தினபுரி அளித்த தோற்றத்தை, ஒரு மலர்ந்த தாமரைத் தடாகமாக வருணிக்கும் அழகிய செய்யுள் இது. நகர் வட்டம் - நகரின் விசாலமான இடம். மங்கல முழவமும் சங்கும் கலந்து ஒலிக்கவும், மலர் சூடின அழகிய கூந்தலையுடைய பெண்கள் மெய்யான விளக்கை ஏந்தவும், அத்தினபுரியாகிய விரிந்த பூமி, நெருங்கிப் பொருந்திய தாமரை மலர்கள் குளங்கள் எங்கும் குவியப்பெற்றிருத்தலைக் கண்டு, மலர்ந்த தாமரைக் குளத்தைப் போன்றதாயிற்று, — என்பது பொருள். நகர் வட்டம், தடாகம், பெண்கள் எடுத்த விளக்குகள், தாமரைகள். இயற்கைத் தாமரை தடாகங்களில் குவிந்திருக்க, அந் நகரம் செயற்கைத் தாமரைத் தடாகத்தை ஒத்த காட்சியதாயிற்று, — என்பதாம். இதுவும் தன்மைத் தற்குறிப்பேற்றம்.

## விதுரன் கண்ணனை வினாவுதல்

**90. உரக புங்கவன் மணிமுடி யொப்பன தீபம்**
**இரும ருங்கினு மாயிர மாயிர மேந்த**
**அரிசு மந்தபே ராசனத் தழகுட னிருந்த**
**புரவ லன்றனைப் புண்ணிய விதுரனும் போற்றி.**

[உரக புங்கவன் மணிமுடி ஒப்பன தீபம் இரு மருங்கினும் ஆயிரம் ஆயிரம் ஏந்த, அரி சுமந்த பேர் ஆசனத்து அழகுடன் இருந்த புரவலன்தனை புண்ணியம் விதுரனும் போற்றி,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்.]

**விளக்கம் :-** உரக புங்கவன்-ஆதிசேஷன். முடிமணி ஒப்பன தீபம் - அவனது முடியிலுள்ள நாகரத்தினங்களை ஒப்பனவாகிய திருவிளக்குகள். புரவலன் - காத்தல் தொழிலை மேற்கொண்டவனான கண்ணபிரான். நாகரத்தினம் போன்ற பிரகாசமுள்ள பலவாயிரம் தீபங்களைப் பணிபெண்கள் இருபுறத்திலும் ஏந்தி நிற்க, சிம்மாசனத்தில் பொலிவோடு வீற்றிருந்த கண்ணனை, நல்வினையுடைய விதுரன், துதித்து,—(அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்) என்பது பொருள்.

**91. பொங்க ராவணை பொலிவறப் போந்தபின் பொதுவர்**
**தங்கள் பாடியில் வளர்ந்துமா மருதிடைத் தவழ்ந்து**
**கங்கை மாநதி கால்வழி கருணையங் கடலே**
**இங்கு நீதனி நடந்தவா றுரைத்தரு ளென்றான்.**

[பொங்கு அரா அணை பொலிவு அற போந்தபின் பொதுவர் தங்கள் பாடியில் வளர்ந்து, மா மருதிடை தவழ்ந்து, கங்கை மாநதி கால் வழி (பெருகப் பெற்ற) கருணை அம் கடலே, இங்கு நீ தனி நடந்த ஆறு உரைத்தருள் என்றான்.]

**விளக்கம் :-** விதுரன், முதல் மூன்றடிகளால் திருமாலின் அவதாரமான கண்ணனைத் துதித்து, ஈற்றடியால் இங்கே தனியாய் எழுந்தருளிய காரணத்தை வினவினான் என்பதாம். திரிவிக்ரமாவதார காலத்தில் பிரும்மலோகம் சென்ற திருமாலின் திருவடிகளைப் பிரம்மன் நீரால் கழுவ, அந்நீர் கங்கையாய்ப் பெருகியது, என்பது கதை.

**92. தோட்டு வந்துசெந் தேனுகர் சுரும்புசூழ் தொடையாய்**
**காட்டு வந்துமுன் திரிந்துதங் கடவநாள் கழித்து**
**நாட்டு வந்தபே ரைவர்க்கு நற்குரு நாடு**
**கேட்டு வந்தன மென்றனன் விதுரனுங் கேட்டான்.**

[தோடு உவந்து செம் தேன் நுகர் சுரும்பு சூழ் தொடையாய், காடு உவந்து முன் திரிந்து தம் கடவநாள் கழித்து நாடு வந்த பேர்

ஐவர்க்கு நல் குருநாடு கேட்டு வந்தனம் என்றனன். விதுரனும் கேட்டான்,]

**விளக்கம் :-** தன்னை வினாவிய விதுரனை நோக்கி, ''முன்னே செய்த ஏற்பாட்டின்படி, காடு உவந்து சென்று கடவ நாள் கழித்து நாடு வந்துள்ள ஐவர்க்கு அவரது நாட்டைக் கேட்பதற்கு வந்துள்ளேன்'', என்று கண்ணன் கூற, பாண்டவரிடம் அன்புள்ள விதுரனும் அதை விருப்பத்தோடு செவி ஏற்றான், என்பதாம். தோடு உவந்து - மலர் இதழ்களை மகிழ்ந்து, அல்லது விருப்பங்கொண்டு. பேர் ஐவர் - பெருமையுடைய பாண்டவர்.

**93. முழக்கி னாலுயர் முரசுயர்த் தவன்றனக் குரிமை**
**வழக்கி னாலறிந் தடலர வுயர்த்தகோன் வழங்கான்**
**தழக்கி னாலிரு திசையினு முரசெழச் சமரில்**
**உழக்கி னாலல துணர்வனோ வென்றவ னுரைத்தான்.**

[முழக்கினால் உயர் முரசு உயர்த்தவன் தனக்கு உரிமை, வழக்கினால் அறிந்து, அடல் அரவு உயர்த்த கேகன் வழங்கான், தழக்கினால் இரு திசையினும் முரசு எழ சமரில் உழக்கினால் அலது உணர்வனோ, என்று அவன் உரைத்தான்.]

**விளக்கம் :-** முழக்கு - ஒலி, வழக்கு - நீதி. தழக்கினால் - ஆரவாரத்தோடு. உழக்கல் - கலக்கல். ''நீதி உணர்ந்து அரவக் கொடியோன், முரசக் கொடியனான தருமனுக்கு உரிமை கொடான்; போர் முரசம் எங்கும் சப்திக்கப் போரில் கலக்கினால் அன்றி, அவன் நியாயத்தை உணரமாட்டான்'', என்று விதுரன் பதில் மொழிந்தான், என்பதாம்.

**94. வாளை வாவியி லுகண்டெழ வளரிளங் கமுகின்**
**பாளை வாயளி முரன்றெழும் பழனநா டுடையான்**
**நாளை வாழ்வவர்க் களித்தில னெனிலெதிர் நடந்து**
**மூளை வாயுக முடிப்பர்வெம் போரென மொழிந்தான்.**

[வாளை வாவியில் உகண்டு எழ வளர் இளங் கமுகின் பாளை வாய் அளி முரன்று எழும் பழனம் நாடு உடையான், நாளை வாழ்வு அவர்க்கு அளித்திலன் எனில் எதிர் நடந்து, மூளை வாய் உக முடிப்பர் வெம் போர், என (எம்பிரான்) மொழிந்தான்.]

**விளக்கம் :-** முதலிரண்டடிகள் மருத நிலவருணனை. நீர் நிலைகளில் வாளை மீன்கள் துள்ளி எழுவதனால், அருகே வளர்ந்துள்ள இளைய கமுக மரங்களின் பாளைகளினிடத்தேயுள்ள வண்டு (அஞ்சி) ஒலித்துக்கொண்டு எழுந்து பறக்கும் கழனிகளை உடைய குரு நாட்டைத் தனதாக உடைய துரியோதனன்,— என்பது முதலிரண்டடிகளின் பொருள். (முன்னம் அவன் ஒத்துக் கொண்டபடி.) இனி ஐவர்க்கு வாழ்வு (அதாவது, அவரதான அரசை) கொடானாயின், (அவர்) எதிர்த்து வந்து, (பகை

வரது) மூளை வாய்வழி வெளிப்படும்படி கொடிய போரில் (அவர்களை) அழிப்பர், என்று கண்ணன் கூறினான், என்பதாம். நாளை - இனி, விரைவில்; எதிர் காலம் உணர்த்தும் இடைச்சொல்.

**95. விரைந்து பாய்பரி மன்னவ ரிதம்பட மெலிவுற்(று)**
**இரந்து வேண்டினுங் கிளைஞருக் கொருபொரு ளீயார்.**
**பரந்த போரினி லெதிர்த்தவர் படப்படப் பகழி**
**துரந்த போதவர்க் குதவுவர் சொன்னவை யெல்லாம்.**

]விரைந்து பாய் பரி மன்னவர், இதம்பட மெலிவு உற்று இரந்து வேண்டினும் கிளைஞருக்கு ஒரு பொருள் ஈயார், பரந்த போரினில் எதிர்த்து அவர் பட பட பகழி துரந்தபோது அவர்க்கு உதவுவர் சொன்னவை எல்லாம்.]

**விளக்கம் :-** விரைந்து பாயும் குதிரைப் படை உடைய அரசர்கள், (உறவினர்) மெலிவுற்று, தாழ்ந்து இரந்து வேண்டிக் கொண்டாலும், அச் சுற்றத்தாருக்குப் பொருள் ஒன்றும் கொண்டார்; படை விரிந்து பரந்த போரில் எதிர்த்து அவர்கள் அழியும்படி அம்புகளைச் செலுத்தியபோதே, அவர்களுக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட பொருள்கள் எல்லாவற்றையும் கொடுப்பர்; இது, சிற்றினத்தாரின் இயற்கையே, என்று, கண்ணன், தொடர்ந்து கூறினான், என்பது பொருள்.

கண்ணன் கண் வளர்தல்

**96. என்று பாரினி லியற்கையும் விதுரனுக் கியம்பி**
**வென்று போர்கெழு நேமியான் விடைகொடுத் தருளிக்**
**குன்று போற்புயக் காவலர் கொடுந்துடி கறங்க**
**மன்ற னாண்மலர்ப் பாயலின் மீதுகண் வளர்ந்தான்.**

]என்று பாரினில் இயற்கையும் விதுரனுக்கு இயம்பி, வென்று போர் கெழு நேமியான் விடை கொடுத்தருளி, குன்றுபோல் புயம் காவலர் கொடுந்துடி கறங்க, மன்றல் நாள் மலர் பாயலின்மீது கண் வளர்ந்தான்.]

**விளக்கம் :-** போர் வென்று கெழு நேமியான் - போர் வென்று விளங்கும் சக்ராயுதத்தைக்கொண்ட கண்ணன். கொடுந்துடி - கடூரமான ஒலியை உடைய துடி என்னும் வாத்தியம். கண்ணன், 'உலக இயற்கை இது,' என்று கூறி, விதுரனுக்கு விடை கொடுத்துவிட்டு, அதன்பின், துயில்வதற்குரிய காலத்தை அறிவிக்கும் அடையாளமான துடியின் முழக்கத்தைக் கேட்டதும், புஷ்பசயனத்தில் பள்ளிகொண்டருளினான், என்பதாம். கண் வளர்தல் - துயில் கொள்ளல்.

**97. குளிரு மாமதி முகத்தொளிர் குமுதவாய் மலர்த்தித்
தவள வாணகை பரப்பிவண் சததள மலர்க்கை
அளவி லேகுவித் தளியொடு மகன்றிலா மையினால்
களிகொ டோள்விலைக் கணிகையைப் போன்றதக் கங்குல்.**

[குளிரும் மா மதி முகத்து ஒளிர் குமுதம் வாய் மலர்த்தி, தவளம் வாள் நகை பரப்பி, வள் சத தளம் மலர் கை அளவிலே குவித்து, அளியொடும் அகன்றிலாமையினால், களிகொள் தோள் விலை கணிகையை போன்றது அ கங்குல்.]

**விளக்கம் :-** இரவு வர்ணனையாகும் இச் செய்யுள், சிலேடையின் துணையினால், இரவு விலைமகளை ஒத்ததாகின்றது. இரவில், குமுதம் மலர்தலும், முல்லை மலர்ச்சி பெறலும், தாமரை குவிதலும் இயல்பு. வேசையரும், தமது முகமாகிய மண்டலத்திலுள்ள குமுத மலர் போன்ற வாயைத் திறந்து காட்டி மினுக்கலும், முல்லை போன்ற பற்கள் தோன்றும் படி இளமுறுவல் கொள்வதும், தாமரை போன்ற தமது கையைக் குவித்து (தன்பால் வந்தாரை) உபசரிப்பதும் ஆகிய இயல்பினை உடையவர். இனிச் செய்யுளின் பொருளைப் பார்ப்போம். (கணிகையர்) குளிர்ச்சி பொருந்திய தமது பூர்ண சந்திரன் போன்ற முகத்தினிடம் விளங்கும் குமுத மலர் போன்ற வாயைத் திறந்து காட்டி,—(இரவு) குளிர்ச்சி பொருந்திய பூர்ண சந்திரனுக்கு எதிரே உள்ள குமுத மலரை மலரச் செய்து,—(கணிகையர்) முல்லை அரும்பு போன்ற தமது பற்களின் ஒளியை இளமுறுவலால் தோன்றக் காட்டி,—(இரவு) முல்லை மலர்களின் ஒள்ளிய விளக்கத்தை வெளியே தோன்றச் செய்து, – (கணிகையர்) அழகிய நூறு இதழ்களைக்கொண்ட தாமரை மலர் போன்ற தமதுகையைத் தம்மை நாடி வந்தாரின் பொருள் அளவுக்கு ஏற்பக் குவித்து உபசரித்து,—(இரவு) அழகிய தாமரை மலரினிடத்தே (வண்டு) வந்து சேர்ந்த அளவிலே அதைக் குவியச் செய்து,-(கணிகையர்) தோன்றக் காட்டும் அளியினின்று (அன்பினின்று) நீங்காமையால்,—(இரவு) தாமரையை அடைந்த அளி (வண்டு) வெளிப்பட்டு நீங்காமையால்,—அவ்விரவு, பொருள் கொடுப்பார் தழுவிக் களிப்படைவதற்கு இடமான தோள்களை உடைய கணிகையை ஒத்ததாயிற்று,—என்பது பொருள். சததள தாமரை, அதாவது நெருக்கமான இதழ்களைக்கொண்ட தாமரை. அளி - வண்டு, அன்பு. கங்குல் - இரவு.

**98. அளைந்த வாரிருட் கடல்பொறா தொருபுடை யண்டம்
பிளந்த தாமெனக் கரும்படாம் பீறிய தென்ன
வளைந்த வேழ்கடல் வற்றமேல் வடவையின் முகத்தீக்
கிளர்ந்த தாமெனக் கிளர்ந்தன விரவியின் கிரணம்.**

[அளைந்த ஆர் இருள் கடல் பொறாது ஒரு புடை அண்டம் பிளந்தது ஆம் என, கரும் படாம் பீறியது என்ன, வளைந்த ஏழ்

கடல் வற்ற மேல் வடவையின் முகம் தீ கிளர்ந்தது ஆம் என, கிளர்ந்தன இரவியின் கிரணம்.]

**விளக்கம் :-** இது, அருணோதய வர்ணனை. விடியற்காலையில் இருள் மிகுந்து இருக்கையில், திடீரென்று கீழ்வானம் வெளுத்தலையும் உதிக்கும் சூரியனின் செய்ய இளங்கதிர் தோன்றுவதையும் புலவர் அழகாக வர்ணிக்கின்றார். பரவிய நிறைந்த இருளாகிய கடலின் வெள்ளத்தைப் பொறுக்க மாட்டாது அண்ட கோளம் ஒரு புறத்தே (கீழ்த்திசையில்) பிளந்தது என்று சொல்லும்படியும், கரிய சீலையொன்று ஒரு பக்கம் கிழிந்தது என்று சொல்லும்படியும், பூமியைச் சூழ்ந்துள்ள ஏழு கடல்களும் வற்றும்படி வடவாமுகாக்னி மேலே எழுந்தது என்று சொல்லும் படியும், உதயசூரியனது கிரணங்கள் வெளித் தோன்றின, என்பது பொருள்.

**99. இகலும் வாளர வுயர்த்தவ னிருந்ததொல் பதியில்**
**அகில நாயக னொருதனி நடந்தவா றறிந்து**
**மகர வாரிதி யகன்றுமா மருங்குற வணைந்த**
**திகிரி போலவந் தெழுந்தன னிரவிகீழ்த் திசையில்.**

[இகலும் வாள் அரவு உயர்த்தோன் இருந்த தொல்பதியில் அகிலம் நாயகன் ஒரு தனி நடந்த ஆறு அறிந்து, மகரம் வாரிதி அகன்று மா மருங்கு உற அணைந்த திகிரி போல வந்து எழுந்தனன் இரவி கீழ் திசையில்.]

**விளக்கம் :-** சூர்யோதய வர்ணனை இது. பகைக்கு தன்மையுள்ள வாள் அரவைக் கொடியில் தூக்கியவனான துரியோதனன் இருந்த பழமையான அத்தினபுரியில், அகில நாயகனான கண்ணன் தனியே (துணை இல்லாமல்) வந்துள்ள விதம் அறிந்து, சுறாமீன்களை உடைய கடலை விட்டு நீங்கி, சிறப்புடைய அவனது பக்கத்தில் சேர்தற்கு நெருங்கிய (அவனது) சக்ராயுதம் போல, சூரியன் கீழ்த்திசை உதித்தான், என்பதாம். திருமாலினது சக்கரத்தின் அம்சமான சூரியன், கண்ணன் துணையின்றிக் கொடியனான துரியோதனனது பதியில் இருத்தல் அறிந்து. அவனுக்குத் துணையாக அவன் அருகு அடைந்தாற் போல், சூரியன் உதயமானான், என்ற இவ்வருணனை, தற்குறிப்பேற்றம் ஆகும்.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**துரியோதனன் கொலு மண்டபம்**

**100. சோதி வானதி மைந்த னும்பழைய**
**சுருதி யாலுயர்து ரோணனும்**
**ஆதி யாகவுயி ரினும்வி யப்புறவ**
**டுத்த மன்னவர நேகரும்**

**நீதி யாறுவகை யைந்து பத்தொடறு**
**பத்தொ றாயிரவர் நிருபரும்**
**நீதி லாததிற லக்கு ரோணிபதி**
**னொன்று பெற்றமிகு சேனையும்.**

[சோதி வானம் நதி மைந்தனும் பழைய சுருதியால் உயர் துரோணனும், ஆதி ஆக, உயிரினும் வியப்பு உற அடுத்த மன்ன வர் அநேகரும், நீதி ஆறு வகை ஐந்து பத்தொடு அறுபத்தொறா யிரவர் நிருபரும், தீது இலாத திறல் அக்குரோணி பதினொன்று பெற்ற மிகு சேனையும்,—இதுவும், இதைத் தொடரும் நான்கு செய்யுள்களும் குளகம்.]

**விளக்கம் :.** சோதி வானம் நதி மைந்தன் - புகழப்படுதலா கிய பிரகாசத்தையுடைய ஆகாச கங்கையின் மகனான வீடுமன். பழைய சுருதி - பழமையான வேதம். உயிரினும் வியப்புற - (துரியோதனனது) உயிரைக்காட்டிலும் மேலானவர் என்று வியப்புக் கொள்ளும்படி, அடுத்த-அவனைச் சார்ந்துள்ள, (அநேக அரசர்). ஆறுவகை நீதி - ஓதல், வேட்டல், ஈதல், உலகு காத்தல், படை பயிற்றல், பொருதல் என்ற ஆறுவகைப்பட்ட முறைமையை யுடைய, (நிருபர்). ஐந்து பத்தொடு அறுபத்தொராயிரம் - லட்சத்துப் பதினோராயிரம். தீது இலாத திறல் அக்குரோணி பதினொன்று - தோல்வி அறியாத வலிமையுனடய பதினொரு அக்குரோணி (என்ற தொகையை உடைய பெரிய சேனை). வீடும துரோணரும், துரியோதனது உயிரை ஒத்த அரசர் பலரும், லட்சத்துப் பதினோராயிரம் அரச குலத்தவரும், பதினோரு அக்குரோணி என்ற தொகையுடைய தோல்வி அறியாத சேனை களும் (சூழ்ந்து வர),—என்பதாம்.

**101. தொக்க வெண்கவரி யால வட்டநிரை**
**சொட்டை வாள்பரிசை துகிலுடன்**
**கைக்க ளாசியிவை கொண்டு லாவிவரு**
**கன்னி மங்கையர்க ளனைவரும்**
**மிக்க வேதியர்கள் வல்ல பலகலைவி**
**தத்தி லுள்ளவர்கள் யாவரும்**
**தக்க தம்பியரும் வந்து சூழவுயர்**
**தரணி மேனிருபர் தம்பிரான்.**

[தொக்க வெள் கவரி, ஆலவட்டம் நிரை. சொட்டை, வாள், பரிசை, துகிலுடன் கை களாசி, இவை கொண்டு உலாவி வரு கன்னி மங்கையர்கள் அனைவரும், மிக்க வேதியர்கள், வல்ல பல்கலை விதத்தில் உள்ளவர்கள் யாவரும், தக்க தம்பியரும் வந்து சூழ உயர் தரணி மேல் நிருபர் தம்பிரான்,—தொடரும்.]

**விளக்கம் :-** தொக்க வெள் கவரி-நெருங்கிய வெம்சாமரை. ஆலவட்டம் நிரை - பெரிய விசிறிகளின் வரிசை, சொட்டை -

வளைதடி. பரிசை - கேடகம். துகில் - கொடிச்சீலை. கைக் களாசி - கையில் கொள்ளுதற்குரிய தட்டு, தாம்பூலத்தட்டு. (இவற்றை ஏந்திக்கொண்டு) உலாவி வரும் கன்னி மங்கையர் - மெல்ல நடந்துவரும் இளம் பெண்கள். வல்ல பல்கலை விதத்தில் உள்ளவர் - நன்கு பயின்ற பலவிதப்பட்ட சாத்திரங்களில் ஆழ்ந்தவர். உயர் தரணிமேல் நிருபர் தம்பிரான் - சிறந்த பூமியில் உள்ள அரசர்களுடைய தலைவனான துரியோதனன். துரியோதனன், தன் பரிவாரங்களுடன், பல்கலை வினோதரும், வேதியரும் தம்பியரும் சூழ்ந்துவரச் சபாமண்டபம் சென்றான், என்க. தக்க தம்பியர் என்றது, கொடுமையில் தன்னோடு ஒத்த தம்பியர், என்ற பொருளது.

**102. நிரைக திர்க்கனக நீள்சு வர்ப்பவள**
**வுத்தி ரத்திடைநி ரைத்தவொண்**
**பரும ணிக்கிரண பற்ப ராகவயி**
**ரத்து லாமிசைப ரப்பிவெண்**
**தரள வர்க்கவயி டூரி யப்புதிய**
**கோம ளப்பலகை தைத்துமா**
**மரக தத்தினொரு கோடி தூணிரை**
**யமைத்த மண்டபம ருங்கரோ.**

[நிரை கதிர் கனகம் நீள் சுவர், பவளம் உத்திரத்து இடை நிரைத்த ஒள் பரு மணி கிரணம் பற்பராகம் வயிரம் துலாம் மிசை பரப்பி, வெள் தரளம் வர்க்கம் வயிடூரியம் புதிய கோமளம் பலகை தைத்து, மா மரகதத்தின் ஒரு கோடி தூண் நிரை அமைத்த மண்டபம் மருங்கு, அரோ.]

**விளக்கம் :-** நிரை கதிர் கனகம் நீள் சுவர் - தொகுதியுடைய ஒளிவிசேஷத்தைக் கொண்ட பொன்னால் ஆன நீண்ட சுவர்கள். பவளம் உத்திரம் - (அச் சுவர்களின்மேல் இடப்பட்ட) பவளத்தினால் செய்யப்பட்ட உத்திரம். (அந்த உத்திரத்தினிடத்தே) நிரைத்த ஒள் பரு மணி கிரணம் பற்பராகம் வயிரம் துலாம் - வரிசையாக இடப்பட்ட ஒள்ளிய பெரிய மாணிக்கக் கற்களாலும் ஒளிவிசேஷமுடைய பத்மராகக் கற்களாலும், வயிரக்கற்களாலும் அமைந்த வரிச்சல் சட்டங்கள், (துலாம் - உத்திர உறுப்பு). மிசை பரப்பி - (உத்திரங்களின்) மேல் பரப்பி. வெள் தரளம் வர்க்கம் வைடூரியம் கோமளம் பலகை - (அத் துலாங்களின்மேல்) வெள்ளிய முத்துக்களின் கூட்டங்களாலும் வைடூரியக் கற்களாலும் செய்யப்பெற்ற புதுமையான அழகிய பலகைகளைத் தைத்து (பதித்து). மரகதத்தின் ஒரு கோடி தூண் - மரகதமணிகளால் இழைத்த ஒரு கோடித் தூண்கள். பொன்சுவர்கள், பவள உத்திரம், பல மணிகளால் இழைக்கப் பெற்ற தூலம், நவமணித் திரள்களால் சமைந்த பலகை, மரகதத் தூண்கள் ஆகியவற்றைக் கொண்ட கொலுமண்டப வர்ணனை இது. இவ்வாறு வருணித்தல் **வீறுகோள்** அணியின் பாற்படும். பொய்யினாற்

பொலிவதே கலை, என்பார் **ஆஸ்கர் வொயில்டு** என்னும் ஆங்கில வித்தகர். தீதிலா அப்பொய்யின் பொலிவினில் நிமிரும் நலத்தது இவ் வருணனை.

**103.** **முட்ட நித்திலநி ரைத்த பந்தரின்**
**னகைத்த சீரரிமு கத்தகால்**
**வட்ட மெத்தைகொட மைத்த பீடமிசை**
**வாச வன்கொலென வைகினான்**
**பட்ட வர்த்தனரு மகுட வர்த்தனரும்**
**வந்து சேவடிப ணிந்தபின்**
**இட்ட பொற்றவிசின் முறைமை யாலினி**
**திருக்க வென்றவரை யேவியே.**

[முட்ட நித்திலம் நிரைத்த பந்தரின் நகைத்த சீர் அரி முகத்த கால், வட்டம் மெத்தை கொடு அமைத்த பீடம் மிசை வாசவன் கொல் என வைகினான்; பட்ட வர்த்தனரும் மகுடவர்த்தனரும் வந்து சேஅடி பணிந்த பின், இட்ட பொன் தவிசில் முறைமை யால் இனிது இருக்க என்று அவரை ஏவியே,—அடுத்த செய்யு ளோடு தொடரும்.]

**விளக்கம் :-** முட்ட-நெருங்கிய. நித்திலம் - முத்து. பந்தர்- விதானம். நகைத்த சீர் அரி முகத்த கால் - சிரிக்கின்ற சீர்மையை (தன்மையை) உடைய சிங்கத்தின் முகத்தின் வடிவமாகச் செதுக்கப் பெற்ற கால்கள். அத்தகைய சிம்மாசனத்தில், வட்ட மான மெத்தையைக் கொண்ட பீடத்தில் இந்திரனோ இவன், என்று சொல்லும்படி (துரியோதனன்) உட்கார்ந்தான்,—என்பது முதலிரண்டடிகளின் பொருள். அவன் அவ்வாறு இருக்க, (அங்கே இருந்த) • பட்டவர்த்தனரும் மகுடவர்த்தனருமான அரசர்கள் அருகே வந்து அவனது சேவடி வணங்கியபின், இடப்பெற்ற பொன் ஆசனத்தில் 'இனிதே அமர்க' என்று முறைப்படி ஏவி,— (அடுத்த கவியோடு சேர்ந்து முடியும்) என்பது ஈற்றடிகளின் பொருள். ஒரு கோடி கிராமங்களை ஆள்பவர் மகுடவர்த்தனர். அந்தஸ்தால் அவர்களுக்கு மேலானவர், பட்ட வர்த்தனர், பந்தர் - பந்தல், இறுதிப் போலி.

**104.** **காவன் மன்னவர் முகங்க டோறுமிரு**
**கண்ப ரப்பியமர் கருதுவோர்**
**ஏவ லின்கண்வரு தூத னாமிடைய**
**னின்று நம்மவை யெய்தினால்**
**ஓவ லின்றுயெதிர் சென்று கண்டுதொழு**
**துறவு கூறிலினி யுங்களூர்**
**தீவி லஞ்செய வடர்ப்ப னென்றுநனி**
**சீறி னான்முறைமை மாறினான்.**

[காவல் மன்னவர் முகங்கள் தோறும் இரு கண் பரப்பி, அமர் கருதுவோர் ஏவலின்கண் வரு தூதன் ஆம் இடையன் இன்று நம்

அவை எய்தினால், ஓவல் இன்றி எதிர் சென்று கண்டு தொழுது உறவு கூறில் உங்கள் ஊர் தீ வலம் செய அடர்ப்பன், என்று நனி சீறினான், முறைமை மாறினான்.]

**விளக்கம் :-** நீதியாகிய நெறியில் படர்தல் இல்லாத துரியோதனன், காவல் தொழிலையுடைய அரசர்களின் முகங்களை எல்லாம் தனித்தனி இரு கண்களாலும் பார்த்து, போர் கருதும் பாண்டவர்களின் ஏவலினால் தூதனாய் வந்துள்ள இடையனாகிய கண்ணன், இன்று நமது சபை வந்தால் சும்மாயிராமல், (வரவேற்க) எதிர் சென்று, அவனைக் கண்டு, தொழுது உறவு பாராட்டினால், இனி (அதன்மேல்) உங்கள் ஊர்களைத் தீச் சூழும்படி செய்து அழிப்பேன், என்று கோபமாய்க் கூறினான்,- என்பது பொருள். ஓவல் இன்றி - சும்மாயிராமல். துஷ்டர் களது சொல்லும் செயலும் அவர்களுக்கு வரவிருக்கும் கேட்டின் முன்னறிவிப்பாகும் வழியில் நடக்கும், என்பதைத் தெரிவிக்கும் செய்யுள் இது. துஷ்டனான துரியோதனன், வேந்தர் குலத்தின னான கண்ணனை இடையன், என்று இகழ்கின்றான். பரமபத நாதனே கண்ணன், என்பதைத் துரியோதனன் அறியாதவன் அல்லன். அறிந்தும் கண்ணனை, அவையுளோர் வரவேற்று வணங்கினால், அவரது ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்துவேன், என்று அச்சுறுத்துகின்றான். தானும் கெட்டு மற்றவரையும் கெடுத் தொழிக்கும் ஈனர்களின் சொல்லையும் செயலையுமே இப்பொழுது துரியோதனனிடத்தில் காண்கின்றோம்.

### கண்ணன் அவை வரல்

**105. இந்த வண்ணமுரை செய்து மன்னருமி**
**ராச ராசனுமி ருக்கவே**
**தந்த வண்ணனுடன் வந்த வண்ணலொளி**
**தங்கு கண்டுயிலு ணர்ந்தபின்**
**கந்த வண்ணமலர் கொண்டு கைதொழுது**
**காலை யிற்பல கடன்கழித்(து)**
**இந்த வண்ணமுனி ருந்த பேரவையி**
**லேயி னானிசைகொள் வேயினான்.**

[இந்த வண்ணம் உரைசெய்து மன்னரும் இராசராசனும் இருக்கவே, தந்த வண்ணனுடன் வந்த அண்ணல் ஒளி தங்கு கண் துயில் உணர்ந்தபின், கந்தம் வண்ணம் மலர் கொண்டு கை தொழுது காலையில் பல கடன் கழித்து, இந்த வண்ணம் முன் இருந்த பேர் அவையில் ஏயினான் இசை கொள் வேயினான்.]

**விளக்கம் ;-** தந்த வண்ணனுடன் வந்த அண்ணல் - வெண்ணிறத்தவனான பலராமனுடன் பிறந்தருளிய கண்ணன். ஒளிதங்கு கண் - சந்திர சூரியர்களின் வடிவமாகப் பொருந்திய

கண்கள். கந்தம் வண்ணம் மலர் - வாசனையும் அழகும் உடைய மலர். கைதொழுது, என்றது சூரிய நமஸ்காரத்தையும், காலை யிற் பல கடன் கழித்து என்றது, சந்தியாவந்தனம் என்னும் காலைச் சடங்குகளையும் குறிக்கும். இசைகொள் வேயினான் - சப்த சுரங்களையும் தன்னிடத்தே கொண்ட புல்லாங் குழலை ஊதிக் கோவியரையும் பசுக்களையும் மகிழ வைத்தவனான கண்ணன். இடையன் வந்தால் அவனை உபசரிக்கலாகாது என்று கூறித் துரியோதனனும், மற்ற அரசர்களும் அவையில் இருக்க, இசைகொள் வேயினனான, பலராமனுக்குப் பின் பிறந்த அண்ணல் (விதுரன் மனையில்) துயில் உணர்ந்து, அதன்பின் செய்ய வேண்டிய காலைக் கடன்களைச் செய்து முடித்து, இந்த விதமாக முன்னமே துரியோதனாதியர் கூடியிருந்த சபை சென் றான், என்பது பொருள். வேய் - மூங்கில்; அது ஆகுபெயராய் அதனாலாகிய குழலை உணர்த்தி நின்றது.

**106. துன்னு கங்கைமக னுந்து ரோணனொடு**
**சுதனு நீதிபுனை விதுரனும்**
**மன்னர் மன்னனையொ ழிந்த மன்னவரும்**
**வந்து சேவடிவ ணங்கினார்**
**கன்ன னுந்தலைக விழ்ந்தி ருந்தனன**
**ழன்று ளஞ்சகுனி கருகினான்**
**முன்ன நின்றவர்க ளிட்ட பீடமிசை**
**மொய்து ழாய்முகிலு மெய்தினான்.**

[துன்னு கங்கை மகனும் துரோணனொடு சுதனும், நீதி புனை விதுரனும், மன்னர் மன்னனை ஒழிந்த மன்னவரும் வந்து சேஅடி வணங்கினார்; கன்னனும் தலை கவிழ்ந்து இருந்தனன், அழன்று உளம் சகுனி கருகினான், முன்னம் நின்றவர்கள் இட்ட பீடம் மிசை மொய் துழாய் முகிலும் எய்தினான்.[

**விளக்கம் :-** சுதன் - துரோணகுமாரனாகிய அசுவத்தாமன். மன்னர் மன்னன் - துரியோதனன். கண்ணனைக் கண்டதும், வீடுமன், துரோணன், அசுவத்தாமன், விதுரன் ஆயவரும், மற்ற மன்னவர்கள் அனைவரும் தம்வயம் இழந்து பரவசப்பட்டவராய் எழுந்து அவனை வணங்கினார் ஆதலால் துரியோதனனது கட்டளை செல்லாமற் போயிற்று. கயவரிலும் கடையானவ ராகிய சகுனியும் துரியோதனனுமே சும்மாவிருந்தனர். மன்னனது கட்டளை மதியாது இப்படிப் பகைவனது காலில் விழும் மன்னவர் களை நம்பிப் பாரதப் போர் நடத்த வேண்டியிருக்கின்றதே, என்ற எண்ணத்தில் எழுந்த சினத்தினால் சகுனி மனக்கொதிப்புக் கொண்டான். துரியோதனனது சோற்றைத் தின்றிருப்பதா லன்றோ, எம்பெருமான் எய்தவும் தான் எதிர்சென்று வணங்க முடியாமல் போயிற்று, என்ற எண்ணத்தால் கர்ணன் கவிழ்ந்த தலையோடு வீற்றிருந்தான். இது கருதியே, பின் போர்க் களத்

தில் உயிர் நீங்கும் தருவாயில் அவன், துரியோதனனுக்குத் தான் செஞ்சோற்றுக்கடன் கழித்ததாகக் கூறுகின்றான்.

**107. முன்ன கங்குடை கவித்த காளமுகின்**
**முன்னி ருந்ததன்பின் முகங்கொடா(து)**
**என்ன கந்தனையொ ழித்து நென்னலிடை**
**யிந்த மாநகரி லெய்தியும்**
**பொன்ன கங்கொள் புயவி துரனில்லிடை**
**புகுந்த தென்கொலிது புகலெனாப்**
**பன்ன கந்தனையு யர்த்த கோவுமுரை**
**பகர மாலுமெதிர் பகருவான்.**

[முன் நகம் குடை கவித்த காளமுகில் முன் இருந்ததன்பின் முகம் கொடாது, என் அகம் தனை ஒழித்து நென்னல் இடை இந்த மாநகரில் எய்தியும், பொன் நகம் கொள் புயம் விதுரன் இல்லிடை புகுந்தது என் கொல்? இது புகல் என, பன்னகம் தனை உயர்த்த கோவும் உரை பகர, மாலும் எதிர் பகருவான்.]

**விளக்கம் :-** முன் நகம் குடை கவித்த காளமுகில் - இளமைப் பருவத்தில் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து ஆயரைக் காப்பாற்றிய கரிய மேகம் போன்ற கண்ணன். முகங்கொடாது - அவமதித்து. பொன் நகம் கொள்புயம் விதுரன் - பொன்மலை போன்ற தோள்களை உடைய விதுரன். பன்னகந்தனை உயர்த்த கோ - பாம்புக் கொடியனான துரியோதனன். முன்னே நின்றவர் இட்ட பீடமிசை கண்ணன் அமர்ந்த பின், துரியோதனன் முகங்கொடது, நேற்று இந்நகர் எய்தியும் என் மனையை ஒழித்து விதுரன் மனை புகுந்தது ஏன்? இதற்கு முதலில் பதில் சொல், என்று கூறலும், திருமாலாகிய கண்ணனும் பதில் மொழிவா னாயினான், — என்பதாம். முன் நகம் குடை கவிழ்த்த கானமுகில், என்று கண்ணனைக் குறித்தது கருத்துடைய தாகும். ''மலை கீழிருப்பதும், முகில் குடைபோல் அதன்மேலே கவிந்திருப்பதுந்தான் இயற்கை. இந்தக் கண்ணனாகிய காள முகிலோ, முகில் கீழும், மலைமேலுமாக இருக்கச் செய்துவிட்டான். எனவே, இன்னபடி யாவற்றையும் மேல் கீழாகப் புரட்டவல்ல மா மாயன், இந்தத் தீயனான துரியோதனன் சபையில், என்ன செய்ய இருக்கின்றானோ'', என்று புலவர், வியக்கும் கருத்தின தாகும். ''பொன் நகங்கொள் புய விதுரன்'', என்று கூறியது, ''வில்வீரனாகிய விதுரனைப் பாண்டவர் பக்கம் சேர்க்கும் கருத்தில் கண்ணன் அவன் மனை சென்றான் போலும்'', என்ற எண்ணத்தின் விளைவாகும்.

**108. என்னி னின்னிலொரு பேத மில்லையிது**
**வென்னி னின்னிலது வென்னினும்**
**மின்னின் மின்னிலகு விறனெ டும்படை**
**விதுரன் வந்தெதிர்வி ளம்பினான்**

**உன்னி லின்னமுள தொன்று பஞ்சவரு**
**ரைக்க வந்தவொரு தூதன்யான்**
**நின்னி லின்னடிசி லுண்டு நின்னுடன்**
**வெறுக்க வெண்ணுவது நீதியோ.**

[என் இல் நின் இல் ஒரு பேதம் இல்லை; இது என் இல் நின் இல் அது, என்னினும், மின்னின் மின் இலகு விறல் நெடும் படை விதுரன் வந்து எதிர் விளம்பினான்; உன்னில், இன்னும் உளது ஒன்று, பஞ்சவர் உரைக்க வந்த ஒரு தூதன் யான் நின் இல் இன் அடிசில் உண்டு நின்னுடன் வெறுக்க எண்ணுவது நீதியோ.]

**விளக்கம் :-** என் வீடு என்றும், உன் வீடு என்றும் ஒருவித வித்தியாசமும் எனக்கு இல்லை; ''இது என் வீடு, உன் வீடு அது'', என்று நீ பிரித்தே பேசுவாயானாலும், மின்னலைக் காட்டிலும் மிகுதியாக ஒளிவிடும் வலிய பெரிய ஆயுதங்களை உடைய விதுரனே எதிர் கொண்டு வந்து என்னை அழைத்தான்; உன்னில் (யோசிக்குங்கால்) இன்னும் ஒரு காரணமும் உளது, பாண்டவர் வேண்டிக்கொள்ள வந்த ஒரு தூதன் நான், உன் மனையில் இனிய உணவை உண்டுவிட்டு அதன்பின், உன்மீது வெறுப்புக் கொள்ளல் நீதி ஆகுமோ! ஆகவே, நான் உன் மனை வரவில்லை,—என்பது பொருள். கண்ணன் மன்னவன் மனை ஒழித்து விதுரன் மனை சென்றதற்கு மூன்று காரணங்களைக் கூறுகின்றான். ''ஐய, உன் வீடு, என் வீடு, என்ற பேதம் எனக்கு இல்லை. மற்று நீ பிரித்தே பேசுவாயாயின், என்பால் எதிர் வந்து அழைத்தவன் விதுரனே; எனவே, அவன் மனை சென்றேன். இவை இரண்டும் தக்க காரணங்களாயினும், ஒருவன் எதிர் கொண்டமைக்கு மகிழ்ச்சியும், அது ஒருவன் செய்யாமைக்குக் கோபமும் கொள்பவன் அல்லன் நான். பாண்டவர் சார்பில் தூது வந்த நான், வந்த காரியம் முடியாது போகுமாயின், பாண்டவர் தூதன் என்ற முறையில் உன்பால் நான் வெறுப்புக் கொள்ளல், நேரலாம். உன் மனையில் உண்டு, பின் உன்னை வெறுத்தல் நீதியாகா தாகையால், விதுரன் மனை சென்றேன்'', என்று கண்ணன் தன் கருத்தைத் தெரிவிக்கின்றான். ''இது என் இல், நின் இல் அது'', என்றதில், இது எனது அடியா ரான பாண்டவர் வீடு, வீரசுவர்க்கமாகிய அது இனி உன்னுடைய வீடு'', என்ற கருத்தின் தொனி காண்க.

**109. அரவ மல்கியப தாகை யாய்மதிய**
**மைச்ச ராயரச ழிப்பினும்**
**குரவர் நல்லுரைம றுக்கி னும்பிறர்பு**
**ரிந்த நன்றியது கொல்லினும்**
**ஒருவர் வாழ்மனையி லுண்டு பின்னுமவ**
**ருடன ழன்றுபொர வுன்னினும்**
**இரவி யுள்ளளவு மதிய முள்ளளவு**
**மிவர்க ளேநரகி லெய்துவார்.**

[அரவம் மல்கிய பதாகையாய், மதி அமைச்சர் ஆய் அரசு அழிப்பினும், குரவர் நல்உரை மறுக்கினும், பிறர் புரிந்த நன்றி அது கொல்லினும், ஒருவர் வாழ் மனையில் உண்டு பின்னும் அவருடன் அழன்று பொர உன்னினும், இரவி உள்ள அளவும், மதியம் உள்ள அளவும் இவர்களே நரகில் எய்துவார்.]

**விளக்கம் :-** துரியோதனன் மனை தான் செல்லாமைக்கு மூன்றாவது அடியில் கூறியது போதுமாயினும், கண்ணன் நரகப் பிராப்திக்குரிய வேறு மூன்று குற்றங்களைக் எடுத்துக் கூறியது கருத்துடையதாகும். ''நீயும் உன்னை அழிக்க நிற்கும் சகுனி முதலியவர்களும் நரகத்திற்குரியவான எல்லாப் பாபங்களையும் கூசாது புரிகின்றீர். பீஷ்மன், துரோணன், விதுரன் முதலிய பெரியோர்களது வார்த்தைகளை அவமதிக்கின்றீர்கள். காட்டில், கந்தருவன் உன்னைச் சிறை பற்றிய காலத்தில் சிறை மீட்டு உதவிய பாண்டவரது உபகாரத்தை மறந்து அவர்களைப் பகைக் கின்றாய், பீஷ்மன் முதலிய பெரியோர் சோற்றுக் கடனை எண்ணியே, உன் ஏவலில் அமைந்துள்ளார்'', என்று இடித்துரைக் கும் குறிப்பினதாகும்.

## கண்ணன் பாண்டவரது உரிமை கேட்டல்

**110.** **சீத நாண்மலர் மடந்தை கேள்வனிவை**
**செப்ப வுந்தெரிய வொப்பிலா**
**நாத நாயகன் முகத்தில் வைத்தவிரு**
**நயன னாகிமிக நகைசெயாத்**
**தூத னாகிவரு தன்மை சொல்லுகென**
**மன்னர் மன்னனிது சொன்னபின்**
**வேத நாறுமல ருந்தி வண்டுளப**
**விரைசெய் தாரவனு முரைசெய்வான்.**

[சீதம் நாள் மலர் மடந்தை கேள்வன் இவை செப்பவும் தெரிய, ஒப்பு இலா நாதர் நாயகன் முகத்தில் வைத்த இரு நயனன் ஆகி மிக நகை செயா, தூதன் ஆகி வரு தன்மை சொல்லுக என, மன்னர் மன்னன் இது சொன்னபின், வேதம் நாறும் மலர் உந்தி வள் துளபம் விரை செய் தாரவனும் உரை செய்வான்.]

**விளக்கம் :-** சீத நாள் மலர் மடந்தை கேள்வன் - லட்சுமி நாயகனான கண்ணன். முன் செய்யுளில் கூறியவற்றை அவன் அறியும்படி கண்ணன் கூற, தலைமைத் தேவர்களின் தலைவ னான கண்ணன் முகத்தில் (துரியோதனன்), செலுத்திய இரு கண்களை உடையவனாகி, இகழ்ச்சி தோன்ற நகைத்து, ''நீ தூது வந்த காரியத்தின் தன்மையைச் சொல்லுக'', என்று அவன் இவ் வார்த்தையைச் சொன்னபின், வேதம் மணக்கும் நாபிக் கமலத்தையும், அழகிய வாசனையுடைய துளப மாலையையும் உடைய எம்பிரான் கூறுவானாயினான், — என்பதாம். நாதர்

நாயகன், என்பது அந்தணர் - கன்னி - அந்தணக் கன்னி, என்று புணர்வதுபோல் நாத நாயகன், எனப் புணர்ந்து நின்றது.

**111. சூதி னாலரசி ழந்து நின்றுணைவர்**
**சொன்ன சொல்லும்வழு வாதுபோய்**
**ஏதி லார்களென நொந்து தண்ணிழலி**
**லாத கானினிடை யெய்தியும்**
**தீதி லாவகை குறித்த நாள்பலக**
**ழித்து வந்தனர் செகத்தினில்**
**கோதி லாதகுரு குலம கீபவவ**
**ருரிமை நண்பொடுகொ டுத்தியே.**

[சூதினால் அரசு இழந்து, நின் துணைவர் சொன்ன சொல்லும் வழுவாது போய், ஏதிலார்கள் என நொந்து தண் நிழல் இலாத கானினிடை எய்தியும், தீது இலாவகை குறித்த நாள் பல கழித்து வந்தனர்; செகத்தினில் கோது இலாத குருகுலம் மகீப, அவர் உரிமை நண்பொடு கொடுத்தி, ஏ.]

**விளக்கம் :-** துணைவர் - சகோதரர். ஏதிலார் - தொடர்பு இலாத அன்னியர். கோது இலாத குருகுலம் - உடன் பிறந் தாரைப் பகைத்தல் என்ற குற்றம் இலாத சிறந்த குருகுலம். சூதினால் அரசு இழந்த உன் துணைவர் சொன்ன சொல் வழுவாது, அயலார்போல் கானில் அலைந்து கடவ நாட்களை வழுவில்லாதபடி கழித்து வெளிப்பட்டார், அவர்களுக்குரிய பூமியை நட்பு முறையில் கொடுப்பாயாக, என்று கண்ணன் கூறினான் என்பதாம்.

**112. சொல்ல வாவுர கதுவச நின்னுரிய**
**துணைவர் தங்களை யழைத்துநீ**
**வல்ல வாறுசில நாட ளித்தவர்க**
**டம்மு டன் கெழுமி வாழ்தியேல்**
**நல்ல வாய்மைநிலை யுடையை யென்றரசர்**
**நாடோ றும்புகழ்வர் நண்புகொண்டு**
**அல்ல வாமெனம றுத்தி யேலறமு**
**மாண்மை யும்புகழு மல்லவே.**

[சொல் அவாவு உரகதுவச, நின் உரிய துணைவர் தங்களை அழைத்து நீ, வல்ல ஆறு சில நாடு அளித்து அவர்கள் தம்முடன் கெழுமி வாழ்தியேல், நல்ல வாய்மை நிலை உடையை என்று அரசர் நாள்தோறும் புகழ்வர் நண்புகொண்டு, அல்ல ஆம் என மறுத்தியேல் அறமும் ஆண்மையும் புகழும் அல்ல, ஏ.]

**விளக்கம் :-** புகழை விரும்பும் அரவக் கொடியோனே, உனது அன்புக்குரிய, அல்லது அரசுக்கு உரிய, துணைவரை அழைத்து,

உன்னால் இயன்றபடி சில நாடு அளித்து அவர்களோடு கலந்து வாழ்வையேல், வாய்மை கடவாநிலை உடையை என்று அரசர் அன்போடு உன்னை ஏத்துவர்; அது செய்ய மறுத்தியேல், அம் மறுப்பு, தர்மமும், ஆண்மையும், புகழுக்குரிய செயலும் ஆகாது,- என்று கண்ணன் கூறினான், என்பதாம்.

## துரியோதனன் எதிர் விளம்பல்

**113.** **என்று கேசவனி யம்ப வங்கெதிரி**
**ராச ராசனுமி யம்புவான்**
**அன்று சூதுபொரு துரிமை யாவையுமி**
**ழந்து போயினர்க ளைவரும்**
**இன்று நீவிரகின் மீள வுங்கவர**
**வெண்ணி னானவரி லெளியனோ**
**சென்று கானிலவ ரின்ன முந்திரிவ**
**துறுதி யென்றுநனி சீறியே.**

[என்று கேசவன் இயம்பவும் அங்கு எதிர் இராசராசனும் இயம்புவான், அன்று சூது பொருது உரிமை யாவையும், இழந்து போயினர்கள் ஐவரும்; இன்று நீ விரகின் மீளவும் கவர எண்ணின் நான் அவரில் எளியனோ, சென்று கானில் அவர் இன்னமும் திரிவது உறுதி, என்று நனி சீறியே.]

**விளக்கம் :-** என்று கேசவன்..... இராசராசனும் "ஐவரும், அன்று சூது .. போயினர்கள், இன்று நீ . அவரில் எளியனோ, சென்று கானில் ...உறுதி", என்று நனி சீறியே. இயம்புவான்,- என்று அன்வயிக்க. கண்ணன், பாண்டவருக்கு நாடளித்து அவருடன் ஒன்றி வாழ்தலே தர்மமும், புகழ்ச்சிக்குரிய காரியமு மாகும் என்று கூற மன்னன், "சூதினால் அரசிழந்து கான் சென்ற வர்களுக்காக நீ தந்திரமாய் நாட்டைப் பறிக்க எண்ணினால் முடியாது, நான் அவர்களைக் காட்டிலும் வலிமை, துணை பலம் முதலியவற்றால் குறைந்தவன் அல்லன். அவர்கள் மீண்டும் காடு சென்று திரிவது உறுதி", என்று மனக் கொதிப்போடு கூறினான்,- என்பதாம்.

**114.** **நீவெ றுக்கிலெ னிருந்த மன்னவர்**
**திகைக்கி லென்பல நினைக்கிலென்**
**போய்ந கைக்கிலெ னுரைத்தவுண் மைமொழி**
**பொய்த்த தென்றமரர் புகலிலென்**
**வேய்ம லர்த்தொடைய லைவ ரென்னுடன்மி**
**கைத்து வெஞ்சமர்வி ளைக்கிலென்**
**ஈயி ருக்குமிட மெனினு மிப்புவியில்**
**யான வர்க்கரசி னிக்கொடேன்.**

[நீ வெறுக்கில் என், இருந்த மன்னவர் திகைக்கில் என், பல நினைக்கில் என், போய் நகைக்கில் என், உரைத்த உண்மை மொழி பொய்த்தது என்று அமரர் புகலில் என்? வேய் மலர் தொடையல் ஐவர் என்னுடன் மிகைத்து வெம் சமர் விளைக்கில் என்? ஈ இருக்கும் இடம் எனினும் இ புவியில் யான் அவர்க்கு அரசு இனி கொடேன்,]

**விளக்கம் :-** போய் நகைத்தல் - மறைவில் சென்று நகைத்தல். வேய் - அணிந்த, அல்லது தொடுத்த. என், என்பது அதனால் எனக்கு ஒரு தீங்கும் இல்லை, என்ற பொருளது. மானம் காவாமை, பழிக்கு அஞ்சாமை, தீவினையச்சம் கொள்ளாமை, முதலிய கயமைக் குணங்களைத் துரியோதனன் கொண்டிருத்தலைக் கவி எடுத்துக் காட்டியபடி.

## கண்ணன் மீண்டும் வேண்டுதல்

**115. கார்வ ழங்குரு மெனச்சி னத்தினொடு**
**கண்ணி லான்மதலை கழறவும்**
**பார்வ ழங்கநினை வில்லை யேலவனி**
**பாதி யாயினும் வழங்குவாய்**
**தார்வ ழங்குதட மார்ப வென்னவது**
**தானு மன்னவன்ம றுக்கவைந்(து)**
**ஊர்வ ழங்குகென வுற்றி ரந்தனனிவ்**
**வுலகெ லாமுதவு முந்தியான்.**

[கார் வழங்கு உரும் என சினத்தினொடு கண் இலான் மதலை கழறவும், பார் வழங்க நினைவு இல்லையேல், அவனி பாதி ஆயினும் வழங்குவாய், தார் வழங்கு தட மார்ப, என்னி, அது தானும் மன்னவன் மறுக்க, ஐந்து ஊர் வழங்குக என உற்று இரந்தனன் இ உலகு எலாம் உதவும் உந்தியான்.]

**விளக்கம் :-** 'ஈ இருக்குமிடமும் தாரேன்' என்று கண்ணிலான் மகன் இடியென முழங்கவும், ஒரு நான்கு முகனோடு உலகு ஈன்ற உந்தியான், 'தார் வழங்கு தட மார்ப', என்று அவனை விளித்து, ''அவர்களது நாட்டைக் கொடுக்குங் கருத்து இலதாயின், அதனில் பாதியாவது கொடு'', என்றும், ''அதுவும் இல்லையாயின், ஐந்து ஊராவது கொடு'', என்றும், பொருந்திய தாழ்மையோடு அன்பர்களுக்காக யாசித்தருளினான், என்பதாம். உலகங்களை எல்லாம் தன்னதாக உடைய பிரான், முன்னே, வள்ளலான மாவலிபால் மண் இரந்தது போலவும் அல்லாமல், மகாபாபியும் லோபியுமான துரியோதனனிடம் அன்பர்க்காக இரந்து நிற்க நேர்ந்ததே என்று புலவர் இரங்குவதோடு, அவனது சௌலப்பியத்தையும் கொண்டாடும் கருத்தினது ஆகும். கார் - துரியோதனன். உரும் - அவனது கடுஞ்சொல்.

## துரியோதனன் மீண்டும் மறுத்தல்

**116. மாட ளிக்குல நெருங்கு பைந்துளப**
**மாலை யாய்மகர வேலைசூழ்**
**நாட ளித்திடவு மைந்து பேருடைய**
**நகர ளித்திடவும் வேண்டுமோ**
**காட ளிக்கவத னிடைதி ரிந்துறை**
**கரந்து போயினர்கள் காணவோர்**
**வீட ளிக்கினும் வெறுப்ப ரோவிதனை**
**விடுக வென்றெதிர் விளம்பினான்.**

[மாடு அளிகுலம் நெருங்கு பைந்துளபம் மாலையாய், மகரம் வேலை சூழ் நாடு அளித்திடவும், ஐந்து பேருடைய நகர் அளித்திடவும் வேண்டுமோ! காடு அளிக்க அதனிடை திரிந்து உறை கரந்து போயினர்கள், காண ஓர் வீடு அளிக்கினும் வெறுப்பரோ, இதனை விடுக, என்று எதிர் விளம்பினான்.]

**விளக்கம் :-** வண்டுகளின் கூட்டம் இரு புறத்திலும் நெருங்கி மொய்க்கின்ற பைந்துளப மாலையாய், என்று கண்ணனை அழைத்து, ''ஒரு வீடும் என்னிடத்திலிருந்து அவர்கள் பெறுவதற்கு இல்லை ; இப் பேச்சை விடுக'', என்று துரியோதனன் பதில் மொழிந்தான், என்பதாம். துரியோதனனது கூற்று, தருமன் சொன்னபடி 'ஐந்து வீடாவது கொடு' என்று கேட்பதற்கு இடமில்லாமல் செய்துவிட்டது. ஒரு வேளை, தூதின் பகுதியாகக் கண்ணன் கேட்டிருந்தால், அருகு இருந்த சகுனி, வீடு கொடுத்துப் பாரதப் போர் நேரா வண்ணம் செய்துகொள்ளுமாறு மருகனுக்குப் புத்தி கூறலும் நிகழலாம். சொல்லி அனுப்பியதைச் சொல்ல வேண்டும் என்பது தூதின் விதி. அவ்வழி பிழைத்த குற்றம் கண்ணனைச் சாராமல் காக்க, 'ஒரு வீடும் கொடேன்', என்று துரியோதனனைக் கவி கூறவைத்தார் போலும். ஒரு வீடும் தாரேன், என்றபின் ஐந்து வீடு கேட்கவேண்டும் என்பது மிகையாகும்.

## கண்ணன் மீண்டும் அறிவுரை கூறல்

**117. தந்தை காதலுற தன்மை ; கண்டிளைய**
**தாய்ப யந்தவிரு தம்பியர்க்(கு)**
**இந்த வாழ்வும ரசுங்கொ டுத்தவனு**
**நின்கு லத்தொருவ னிங்குளான்**
**முந்த மாநிலம னைத்தி னுக்குமுயர்**
**முறைமை யாலுரிய வரசருக்(கு)**
**ஐந்து மாநகரு நீகொ டாதொழியி**
**னென்ன தாகுமுன தரசியல்.**

[தந்தை காதல் உறு தன்மை கண்டு, இளைய தாய் பயந்த இரு தம்பியர்க்கு இந்த வாழ்வும் அரசும் கொடுத்தவனும் நின் குலத்து ஒருவன் இங்கு உளான் ; முந்த மாநிலம் அனைத்தினுக்கும் உயர் முறைமையால் உரிய அரசருக்கு, ஐந்து மாநகரும் நீ கொடாது ஒழியின், என்னது ஆகும் உனது அரசியல்.]

**விளக்கம் :-** தந்தையின் காதலை அறிந்து இளையவள் மைந்தருக்கு அரசும் வாழ்வும் வழங்கிய உங்கள் குலத்தவனான வீடுமனும் இங்கே இருக்கின்றான். அந்தச் சிறந்த குலத்தில் வந்த நீ பிராயத்தால் மூத்த தன்மையால் பூமி முழுவதற்கும் பழமை யான உரிமையுடைய தருமனுக்கும், அவனது தம்பியர்க்கும் ஐந்து பெரிய ஊர்களும் கொடாயாயின், உனது ஆட்சி நீதிக்கு இடமில் லாத தன்மையதாகும், என்று கண்ணன், கூறினான், என்பதாம். தந்தை - சந்தனு. தாய் - பரிமளகந்தி. தம்பியர் - சித்ராங்கன், விசித்ர வீரியன்.

**118. ஒருகு லத்தினிலி ரண்டு மன்னவரு**
**டன்பி றந்துரிமை யெய்தினால்**
**இருகு லத்தவரு மொக்க வாழ்வுறுத**
**லெக்கு லத்தினுமி யற்கையே**
**பொருகு லக்களிறு வளர்தி சைக்கண்மிகு**
**புகழ்ப ரப்பியெழு புவிபெறும்**
**குருகு லத்தவரி யற்கை நன்றெனமொ**
**ழிந்த னன்கரிய கோவலன்.**

[ஒரு குலத்தினில் இரண்டு மன்னவர் உடன் பிறந்து உரிமை எய்தினால், இரு குலத்தவரும் ஒக்க வாழ்வு உறுதல் எ குலத்தினும் இயற்கையே, பொரு குலம் களிறு வளர் திசைக்கண் மிகு புகழ் பரப்ப எழு புவி பெறும் குரு குலத்தவர் இயற்கை நன்று, என மொழிந்தனன் கரிய கோவலன்.]

**விளக்கம் :-** ஒரு குலத்தில் இரண்டு அரசர்கள் பிறந்து அரசுரிமை பெற்றிருந்தால் அவ்விரு குலத்து அரசரும் ஒத்த நிலை யினராய்ப் பகையின்றி வாழ்தல், எல்லாக் குலங்களினும், இயற்கை யாகும் ; அவ்வாறாக, போர் செய்யும் சுபாவமுள்ள சிறந்ததிசை யானைகள் ஓங்கி நிற்கும் எட்டுத் திசைகளினும் மிகுந்த புகழைப் பரப்பி, ஏழு தீவுகளை உடைய பூ மண்டலம் முழுதையும் தமதாகப் பெற்று விளங்கும் குருகுலத்தில் தோன்றிய அரசர் ஒன்றிவாழாது பகைத்து வாழ்தல் நன்றன்று, என்று கண்ணன் மீண்டும் கூறினான், என்பதாம். கரிய கோவலன் - கண்ணன்.

**119. பேர ராவணை துறந்த மாயனிவை**
**பேச வன்பினொடு பின்னையும்**
**சீர ராவினை யுயர்த்த கோவும்**
**விழிதீ யெனும்படி செயிர்த்துளே**

**போர ராநிருபன் மணிநெ டுஞ்சுடிகை**
**யாயி ரங்கொடு பொறுத்தபார்**
**வீர ரானவர தல்ல வோவுரிமை**
**வேண்டு மோவென விளம்பினான்.**

[பேர் அரா அணை துறந்த மாயன் இவை பேச, வன்பி னொடு பின்னையும் சீர் அராவினை உயர்த்த கோவும் விழி தீ எனும்படி செயிர்த்து உளே, போர் அரா நிருபன் மணி நெடுஞ் சுடிகை ஆயிரம் கொடு பொறுத்த பார், வீரர் ஆனவரது அல்லவோ, உரிமை வேண்டுமோ! என விளம்பினான்.]

**விளக்கம் :-** பெரிய ஆதிசேஷ சயனத்தைத் துறந்து மண் வந்த மாயனான கண்ணன் இவ் வார்த்தைகளைக் கூற, சிறந்த பாம்பின் வடிவத்தைக் கொடியிலே உயர்த்திய துரியோதனன் கொடுமையுடன், கண்களே தீ எனும்படி சிவக்க உள்ளத்தில் சினம் பொங்க, "போர் செய்யும் நாகங்களின் தலைவனான ஆதிசேஷன் அழகிய நெடிய ஆயிரந்தலைகளைக் கொண்டு தாங்கும் இந்த பூமி, வீரர்களுக்குச் சொந்தமானது அன்றோ! அதை அடைய உரிமை தக்கதாமோ!" என்று மொழிவானாயினான்,—என்பது பொருள். பாண்டவர்கள் பிறப்பினால் நாட்டிற்கு உரிமை யுடையராயினும், வீரர்களாகிய நாங்களே ஆளத்தக்கவர், என்று துரியோதனன் கூறும் கருத்தது இது.

**120. பொய்வ ளர்ந்தமொழி மன்னன் மற்றிவை**
**புகன்ற பின்புபுய வலியினால்**
**ஐவர் தங்களர சுங்கொ டாமலட**
**லாண்மை கொண்டெதி ரடர்த்தியேல்**
**மெய்வி ளங்கவரு குருநி லத்தினிடை**
**வந்து வெஞ்சமர் விளைக்கவே**
**கைவ ழங்குகென நின்ற தூணிடை**
**யறைந்து ரைக்குமிவை காவலன்.**

[பொய் வளர்ந்த மொழி மன்னவன் (மற்று) இவை புகன்ற பின்பு புயவலியினால், ஐவர் தங்கள் அரசும் கொடாமல் அடல் ஆண்மை கொண்டு எதிர் அடர்த்தியேல், மெய் விளங்க வரு குரு நிலத்தினிடை வந்து வெஞ் சமர் விளைக்கவே, கை வழங்குக என, (கண்ணன் கூற) நின்ற தூணிடை அறைந்து உரைக்கும் இவை காவலன்.]

**விளக்கம் :-** பொய் வளர்கின்ற சொற்களை உடைய துரியோதனன் "வீரர் ஆனவரது அரசு", என்ற இவ் வார்த்தை உரைத்த பின்பு கண்ணன், போரே கருத்தாயின், அவ்வுறுதியி லிருந்தேனும் பிறழாதபடி கையடித்துத் தருமாறு கேட்க, அயல் நின்ற தூணில் அறைந்து, கண்ணனை இகழ்ந்து மன்னன் பேசுவா னாயினான்,—என்பதாம். அடல் ஆண்மை - வலிமையுடைய

வீரம். மெய் விளங்க வரு குரு நிலம்-'வெல்வது தர்மமே', என்ற உண்மை விளங்குவதற்கு இடமான குருக்ஷேத்திரம். போர்க் களத்தில் இரு திறத்தாரும் அணி கொண்டு நிற்கையில், சூரத் திலும் சூழ்ச்சியே நிறைந்த சகுனி, ஐந்து ஊர் கொடுத்துப் போர் விலக்குமாறு மருகனுக்கு உபதேசித்தலும் இயலும் என்று எண்ணிய கண்ணன், 'போர் செய்யப் பின்வாங்கேன்' என்று கையடித்துக் கொடுக்குமாறு கேட்க' அத் தீயன், தன் வாய்மைக்கு வடு உண்டானதாகச் சீறுவானாயினான். தூணை அறைந்தவன் இவனுககு முன் ஒருத்தன் இருந்தான். அவன் அறைந்த தூணினுள் இருந்தான் திருமால்; இவன் அறைந்த தூணிற்கு அருகே அத் திருமால் இருக்கின்றான். இதுவே வேற்றுமை. முடிவில் அவன் கதியே இவனதும் ஆகப்போகின்றது.

## துரியோதனன் கண்ணனைப் பழித்தல்

**121. புன்பி றப்புடைய பொதுவர் தங்களொடு**
**புரவி லானிரை புரந்திடும்**
**உன்பி றப்புமுர லோடு கோவிய**
**ருனைப்பி ணித்தது மறந்துநீ**
**மன்பி றப்பிலுயர் குருகு லத்தவர்தம்**
**வாய்மை தானுமொரு மாசிலா**
**என்பி றப்புமுண ராமலோ சபையி**
**லிந்த வாசக மியம்பினாய்.**

[புல் பிறப்பு உடைய பொதுவர் தங்களொடு புரவில் ஆன் நிரை புரந்திடும் உன் பிறப்பும், உரலோடு கோவியர் உனை பிணித்ததும் மறந்து நீ, மன் பிறப்பில் உயர் குருகுலத்தவர் தம் வாய்மை தானும், ஒரு மாசு இலா என் பிறப்பும் உணராமலோ சபையில் இந்த வாசகம் இயம்பினாய்.]

**விளக்கம் :-** ''தாழ்ந்த பிறப்புடைய நீயோ, எனது வாய்மையை அயிர்ப்பது?'' என்று பொய்யனான துரியோதனன் கண்ணனைக் கடிகின்றான். குருகுலத்தவருடைய வாய்மையினில் தன் பொய்மை மறைந்துவிடும் என்று எண்ணிய மதியிலி, ''மன்னர் பெருமை இடையர் அறிவரோ!'' என்று கண்ணனை இகழ்வானாயினான். குணத்தால் இழிந்திருப்பதை மறந்து, பிறப்பும் குலமுங் கூறிப் பெருமை கொள்ளுதல் கயவர் இயற்கை யாகும். அதைத்தான் இவனிடம் காண்கின்றோம்.

**122. ஏவி லங்குசிலை யைவர் வந்தணுகின்**
**யானயர்ந் தெளிதி ருப்பனோ**
**கோவி லங்குபொர வஞ்சு மோகரட**
**குஞ்ச ரங்கள்பகை கொண்டகால்**

**மேவி லங்குமுன் மலைத்தல் கையறைய**
**வேண்டு மென்றதுநின் மேன்மையோ**
**நாவி லங்குமென வெண்ணி யோமிகவு**
**நன்று நன்றரசர் ஞாயமே.**

[ஏ இலங்கு சிலை ஐவர் வந்து அணுகின் யான் அயர்ந்து எளிது இருப்பனோ? கோ விலங்கு பொர அஞ்சுமோ கரடகுஞ்சரங்கள் பகை கொண்டகால்? மேவில் அங்கு முன் மலைத்தல் கை அறைய வேண்டும் என்றது நின் மேன்மையோ? நா விலங்கும் என எண்ணியோ? மிகவும் நன்று, நன்று அரசர் ஞாயம், ஏ.]

**விளக்கம் :-** ஏ - அம்பு. கோவிலங்கு - சிங்கம். கரட குஞ்சரம் - மதயானை. அங்கு மேவில் மலைத்தல் முன் கை அறையவேண்டும் என்பது நின் மேன்மையோ - குருக்ஷேத்திர பூமி வந்தால் போர் செய்வதாகப் போர் நிகழ்வதற்கு முன்பே கையடித்துத் தரவேண்டும் என்று நீ சொல்லியது, உனது பெருமை யைக் காட்டக் கூடியதாகுமோ! எனது சொல் பிறழும் என்று நினைத்தோ (இப்படிக் கேட்டாய்)! அரசர்களிடத்தில் பேசும் முறை மிக நன்றாயிருக்கின்றது, என்பது ஈற்றடியின் பொருள். நன்று, நன்று, என்ற அடுக்கு, இகழ்ச்சியின் பாற்படும். நியாயம், என்பதின் திரிபு ஞாயம். முன்னிரண்டடிகள், எடுத்துக் காட்டு உவமை. ''உரைத்த உண்மை மொழி பொய்த்தது, என்று அமரர் புகலில் என்?'' என்று கூறிய வாயீரம் உலருமுன், ''நாவிலங்கும், என எண்ணியோ கையறைய வேண்டும் என் கின்றாய்'', என்று பொய்யனான துரியோதனன் கூறியது, நகைத்தற்குரியதே.

**123. அளிவ ருங்குழல் பிடித்து மன்னவையி**
**லைவ ருக்குமுரி யாளைநான்**
**எளிவ ருந்துகி லுரிந்த போதரு**
**கிருந்து கண்டவர்க ளல்லரோ**
**துளிவ ரும்புனல் பரிந்த ருந்தியிடு**
**சோறு தின்றுயிர் சுமந்துதோள்**
**இளிவ ரும்படி யிருந்த பாவியரு**
**மின்று மானநிலை யுணர்வரோ.**

[அளி வரும் குழல் பிடித்து மன் அவையில் ஐவருக்கும் உரியாளை நான் எளிவரும் துகில் உரிந்தபோது அருகு இருந்து கண்டவர்கள் அல்லரோ! துளிவரும் புனல் பரிந்து அருந்தி, இடு சோறு தின்று உயிர் சுமந்து, தோள் இளி வரும்படி இருந்த பாவியரும் இன்று மானம் நிலை உணர்வரோ!]

**விளக்கம் :-** எளிவரும் - அவமானம் உண்டாகும்படி. இளி வரும்படி - இழிவு அடையும்படி. மானநிலை உணராத பாண்ட

வர்க்குத் தூதாக வந்த நீ, மன்னர் மரபும் அவை முறையும் எங்ஙனம் அறிவாய்? என்று கண்ணனைப் பொய் வளரும் நெஞ்சினன் ஏசுகின்றான். தங்களுடைய மானத்தைக் காக்க நினையாத கீழ்மக்களே, பிறரைப் பழிக்க முற்படுவர். கொழுந்தி என்றும் பாராது பாஞ்சாலியின் துகில் உரிந்த செய்கை மான முடையதாம். அதைக் கண்டு பேசாமல் பொறுத்திருந்த பாண்டவர்க்கே அவமானம் விளைந்ததாம். தானே கெடுத்து விட்டுப் பின் கேடடைந்தவர்களைக் கூசாது பழித்தல், தீயரில் கடையாய தீயரின் இழி குணங்களில் ஒன்றாகும்.

**124.** **அன்னை யானவரு மிருவ ராமுதல**
**ளித்த தந்தையர்க ளைவராம்**
**பின்னை யாசைகொடு குருகு லத்துரிமை**
**பெறுவ ராமொரு பிறப்பிலா**
**மின்னை யாமி வர்க ளைவரும்**
**பரிவினொடு தனித்தனி விரும்புவார்**
**என்னை யாமவரொ டொரு குலத்தரச**
**னென்ப தம்மவிவை யென்கொலாம்.**

[அன்னை ஆனவரும் இருவர் ஆம், முதல் அளித்த தந்தை யர்கள் ஐவர் ஆம், பின்னை ஆசை கொடு குருகுலத்து உரிமை பெறுவர் ஆம்; ஒரு பிறப்பு இலா மின்னை ஆம் இவர்கள் ஐவரும் பரிவினொடு தனி தனி விரும்புவார்; என்னை ஆம் அவரொடு ஒரு குலத்து அரசு என்பது, அம்ம, இவை என்கொல் ஆம்.]

**விளக்கம் :-** பாண்டவர்க்கு அன்னையர் இருவரும், தந்தையர் ஐவரும் ஆன வரலாறு ஆதிபருவத்தில் கூறப்பட்டுளது. குந்தியும், மாத்திரியும், அன்னையர். இவர் பிறப்பிற்கு ஆதி காரணமாயிருந்து அளித்தவர், யமன், வாயு, இந்திரன், அசுவினி தேவர் இருவர், ஆகிய ஐவர். பேருக்குத் தந்தையான பாண்டு இவர்களை வளர்த்தவனே ஆவான். ஒரு தந்தைக்கும் ஒரு தாய்க்கும், அல்லது ஒரு தந்தைக்கும் ஐந்து தாய்க்கும் பிறந்தவர் களே சகோதரர்கள் ஆதல் முறை. மேலும், அண்ணண் தம்பியர் என்று ஐவர் இருந்தால் அவ் வைவருக்கும் ஐந்து மனைவியர் இருப்பதே முறை. மற்று இப் பாண்டவர் ஐவருக்கும் ஒருத்தி மனைவி யாகின்றாள். அவளும் உலகறிந்தபடியான ஒரு பிறப்பு இல்லாதவள்; அதாவது, நெருப்பிலிருந்து தோன்றியவள். பாண்டவர் வரலாறு இதுவாக, என்னை அவரோடு ஒரு குலத்தவ னாகச் சொல்வது விந்தையே ஆகும் என்று துரியோதனன், தனக்கும் அவர்க்கும் உறவுத் தொடர்பு இல்லாமையை, எடுத்துக் காட்டுங் கருத்தது இது. ஆம்: இகழ்ச்சி.

## கண்ணன் வெளியேறல்

**125.** ஞால முற்றுமு டையவன் மொழிந்திட
நகைத்து வண்டுவரை நாதனும்
சால முற்று மினியவர் கருத்தென
நினைந்து பேரவை தணந்துபோய்க்
கோல முற்றசிலை விதுரன் வாழ்வுபெறு
கோயில் சென்றுநனி குறுகினான்
சீல மற்றவர் சினந்த போதுமொரு
தீதி லாதவர் செயிர்ப்பரோ.

[ஞாலம் முற்றும் உடையவன் மொழிந்திட, நகைத்து வள் துவரை நாதனும் சால முற்றும் இனி அவர் கருத்து என நினைந்து, பேர் அவை தணந்து போய் கோலம் உற்ற சிலை விதுரன் வாழ்வு பெறு கோயில் சென்று நனி குறுகினான் ; சீலம் அற்றவர் சினந்த போது ஒரு தீது இலாதவர் செயிர்ப்பரோ.]

**விளக்கம் :-** ஞாலம் முற்றும் உடையவன் - துரியோதனன். இனி அவர் கருத்து சால முற்றும் - இனி பாண்டவர் கருத்து முடிவு பெறும். தணந்து-நீங்கி. கோலம் - அழகு. சீலம் - நல்லொழுக்கம். செயிர்த்தல் - கோபித்தல். சீலம் அற்றவர் சினந்தபோது தீதிலா மேன்மக்கள் செயிர்ப்பரோ, என்ற பொதுப்பொருளால், துரியோதனன் சினந்து இகழ்ந்தபோது, கண்ணன் சினங்கொள்ளாமையாகிய சிறப்புப் பொருளைச் சாதிக்கும் இது, **வேற்றுப் பொருள் வைப்பு** அணியாகும்.

## விதுரனைப் பழித்தல்

**126.** கரிந்து மாலை சருகாகவும் புதிய
கமல வாண்முகம் வெயர்க்கவும்
திருந்து கண்ணிணை சிவக்க வுங்கொடிய
செய்ய வாயிதழ் துடிக்கவும்
இருந்த பேரவையி னெடிது யிர்த்திடு
மிரா சராச னவனுக்கிவன்
விருந்து செய்தவுற வென்கொ லென்றர
சரெதிர் விதுரனை விளம்புவான்.

[கரிந்து மாலை சருகு ஆகவும், புதிய வாள்முகம் வெயர்க்கவும், திருந்து கண் இணை சிவக்கவும், கொடிய செய்ய வாய் இதழ் துடிக்கவும், இருந்த பேர் அவையில் நெடிது உயிர்த்திடும் இராசராசன் ''அவனுக்கு இவன் விருந்து செய்த உறவு என் கொல்?'' என்று அரசர் எதிர் விதுரனை விளம்புவான்.]

**விளக்கம் :-** கண்ணனுக்கு விருந்திட்டது பொறாமல், அவையிருக்கும் அரசர்கள்முன் துரியோதனன் விதுரனைப் பழிப்பதானான், என்பதாம். கொடிய செய்யவாய் - பார்வைக்குச் சிவந்து அழகாகத் தோன்றுவதும் கொடிய சொற்களைத் தன்னிடத்தே

கொண்டதுமான வாய், என்பது பொருள். விளம்புவான் - நிந்தித்துப் பேசலானான்.

**127.** **வன்பி னாலவனி வெளவ வென்றுகொ**
**லென்மனை யிலுண்டியை மறுத்தவன்**
**தன்ப தாகினியொ டினிதருந் துமவகை**
**தன்னி லின்னமு தியற்றினான்**
**என்பி தாவொடு பிறந்து மின்றளவு**
**மென்கை யோதன மருந்தியும்**
**அன்பு தானுடைய னல்ல னென்பகை**
**தனக்கு முற்றபகை யல்லவோ.**

[வன்பினால் அவனி வெளவ என்று கொல் என் மனையில் உண்டியை மறுத்தவன், தன் பதாகினியொடு இனிது அருந்தும் வகை தன் இல் இன் அமுது இயற்றினான் ; என் பிதாவொடு பிறந்தும் இன்று அளவும் என் கை ஓதனம் அருந்தியும், அன்பு தானும் உடையன் அல்லன், என் பகை தனக்கும் உற்ற பகை அல்லவோ.]

**விளக்கம் :-** பதாகினி - பரிவாரம். ஓதனம் - அன்னம். கண்ணனுக்கு விருந்திட்டு உபசரித்த விதுரன்மீது துரியோதனனது சீற்றம் பாய்வதாயிற்று. ''என் பால் பகை கொண்டு வந்த கண்ணனை நீ ஏற்று உபசரித்தல் முறையாமோ! பகைவருடன் சேர்ந்துகொண்டு, என் அரசைக் கைப்பற்ற வேண்டும் என்பதோ உன் கருத்து? என் கை ஓதனம் தின்ற நீ சோற்றுக் கடனை நினைக்கவில்லையே! என் பிதாவுடன் பிறந்தவனோ இவ்வாறு துரோகம் செய்வது?'' என்று துரியோதனன் சிறிய தந்தையை ஏசினான். அவன் ஏசியது அவனது குணங்களோடு பொருந்தியதே. நன்னெறி பிறழ்ந்தார், எவரையும் நம்பார் ; இல்லாத குற்றங்களைச் சுமத்தவும் பின்வாங்கமாட்டார்.

**128.** **முதல்வி ழைந்தொரு வனுட னியைந்த**
**பொருள்பற்றி யின்புற முயங்கினும்**
**அதிக மென்றபொரு ளொருவன் வேறுதரி**
**னவனையே யொழிய வறிவரோ**
**பொதும டந்தையர் தமக்கு மண்ணிலிது**
**புதுமை யல்லவவர் புதல்வனாம்**
**விதுர னின்றவ னொடுறவு கொண்டதோர்**
**வியப்பை யென்சொலி வெறுப்பதே.**

[முதல் விழைந்து ஒருவனுடன் இயைந்த பொருள் பற்றி இன்புற முயங்கினும், அதிகம் என்ற பொருள் ஒருவன் வேறு தரின், அவனையே ஒழிய அறிவரோ ? பொது மடந்தையர் தமக்கு மண்ணில் இது புதுமை அல்ல, அவர் புதல்வன் ஆம் விதுரன் இன்று அவனொடு உறவு கொண்டது ஓர் வியப்பை என் சொலி வெறுப்பதே.]

**விளக்கம் :-** ''மனம் இசைந்து ஒருவன் முதலில் கொடுத்த பொருளைப் பெற்று, அவனொடு விரும்பி இன்பம் உற முயங்கி னும், வேறொருவன் அதிகமான பொருள்தரின், அவனையன்றி, முன்னம் பொருள் கொடுத்தவனை மதிப்பரோ! இது வேசையரின் பழைமையான இயற்கை; அத்தகையாரில் ஒருத்தியின் மகன் விதுரன்; எனவே, அவன் கண்ணனோடு உறவு கொண்டது அதிசயம் அன்று,'' என்று துரியோதனன், வெறுத்துக் கூறினான், என்பதாம். ஒருவனை அநீதியாய் ஏசப் புகுகின்ற துஷ்டர், பொய்யான குற்றங்களையும் கற்பித்துக்கொண்டு பழிக்கத் தலைப்படுவர். விதுரன் வேசி மகன் அல்லன். அம்பாலிகையின் தாசிக்கும் வியாச முனிவனுக்கும் பிறந்தவன் விதுரன். தாசி, என்ற சொல் பணிப்பெண் என்ற பொருளது. வேசி என்ற பொருளதன்று. அதனை அறிவான் துரியோதனன். எனினும், தாசியை, வேசி என்ற பொருள்படப் பேசும் வழக்கை மனத்திற் கொண்டு, சிற்றப்பனான விதுரனை ''வேசி மகன்'', என்று வாய் கூசாமல் நிந்திக்கலானான். பெரியோரைப் பழிக்க அஞ்சார் பாவியர். தன் சிறிய தந்தையை இவ்வண்ணம் நிந்திப்பதற்குப் பொய்யிலே தோய்ந்த நாவே துணியும்.

## விதுரன் வில்லை முறித்தல்

**129.** **இன்ன வாறிவ னுரைத்த போதவ**
**னெழுந் திருந்துவசை யென்னை நீ**
**சொன்ன வாய்குருதி சோர வாள்கொடு**
**துணித்துநின் முடிதுணிப் பன்யான்**
**மன்ன வாகுருகு லத்தி லேயொருவன்**
**மைந்த னாருயிரை வெளவினான்**
**என்ன வானவர் நகைப்பு ரேயெனை**
**யுரைத்த நாவுட னிருத்தியோ.**

*[இன்ன ஆறு இவன் உரைத்தபோது அவன் எழுந்திருந்து, வசை என்னை நீ சொன்ன வாய் குருதி சோர வாள்கொடு துணித்து, நின் முடி துணிப்பன் யான்; மன்னவா, குருகுலத்திலே ஒருவன் மைந்தன் ஆர் உயிரை வெளவினான், என்ன வானவர் நகைப்பரே! எனை உரைத்த நாவுடன் இருத்தியோ!]*

**விளக்கம் :-** ''அரசன் என்ற இறுமாப்பினால் அல்லவா, என்னை அவையில் இவ்வாறு நிந்திக்கத் துணிந்தாய், இவ்வுரை வழங்கிய வாய் குருதி சொரிய நாவினைத் துண்டித்து உன் முடியையும் தரை உருட்டுவேன். மண் உலகத்தவர் என்னை இகழார்; பாராட்டவே செய்வர். வசை பொறாமை க்ஷத்திரிய தர்மமும் ஆகும். ஆனால், மதியிலா மைந்தன் கடுஞ் சொல் வழங்கினான் என்று கோதிலாக் குணங்களால் உயர்ந்த தந்தை அவனைக் கொன்றோ கடிவது? என்று தேவர் நகைத்தல்

நேருமே, என்ற நினைவினால், உன் தலை கொய்யாமல் உன்னை வாழ விடுகின்றேன்'', என்று விதுரன் கூறும் பொருளது செய்யுள்.

130. ஈண்டவர்க் குதவி யாய தூதென
 விசைப்பவற் குலக மெங்கணும்
நீண்டவற் குதவி யாயி னேனென
 நினைத்துநீ யெனைய டர்த்தியே
மாண்டவர்க் குதவி யாய பேரறமு
 மிசையு மாண்மையும் வளர்த்திடும்
பாண்டவர்க் குதவியாகி லென்னை
 முடிமன்ன ரானவர் பழிப்பரோ.

[ஈண்டு அவர்க்கு உதவி ஆய தூது என இசைப்பவற்கு, உலகம் எங்கணும் நீண்டவற்கு உதவி ஆயினேன் என நினைத்து நீ எனை அடர்த்தி, ஏ; மாண்டவர்க்கு உதவி ஆய பேர் அறமும் இசையும் ஆண்மையும் வளர்த்திடும் பாண்டவர்க்கு உதவி ஆகில், என்னை முடி மன்னர் ஆனவர் பழிப்பரோ.]

**விளக்கம் :-** இப்பொழுது பாண்டவர்க்கு உதவியான தூதன் என்று சொல்லிக்கொள்பவரும், உலகம் எங்கும் திரிவிக்ரமனாய் விரிந்தவருமான கண்ணனுக்குத் துணை ஆனேன் என்று நினைத்து நீ என்னைப் பகைக்கின்றாய்; குணங்களால் உயர்ந்த மேன் மக்களுக்கெல்லாம் துணை நிற்கும் தருமத்தையும் புகழையும், ஆண்மையையும் வளர்க்கும் குணசாலிகளான பாண்டவர்களுக்கு உதவியாகில், என்னை முடி மன்னர் நிந்தியார்; அப்படிச் செய்வது புகழுமாகும்,—என்று விதுரன் கூறினான், என்பது பொருள்.

131. சொல்லி ரண்டு புகலே னினிச்சமரி
 னின்று வெங்கணை தொடேனெனா
வில்லி ரண்டினு முயர்ந்தவில் லதனை
 வேறி ரண்டுபட வெட்டினான்
மல்லி ரண்டினையு மிருவ ராகிமுன்
 மலைந்த காளமுகில் வந்துதன்
இல்லி ரண்டுதினம் வைகுதற் குலகி
 லெண்ணி லாததவ மெய்தினான்.

[சொல் இரண்டு புகலேன், இனி சமரில் நின்று வெம் கணை தொடேன் எனா, வில் இரண்டினும் உயர்ந்த வில் அதனை வேறு இரண்டுபட வெட்டினான், மல் இரண்டினையும் இருவர் ஆகி முன் மலைந்த காளம் முகில் வந்து தன் இல் இரண்டு தினம் வைகுதற்கு உலகில் எண் இலாத தவம் எய்தினான்.]

**விளக்கம் :-** இளம் பிராயத்தில் கம்சனால் ஏவப்பெற்ற சாணூரன் முஷ்டிகன் என்ற இரு மல்லர்களைக் கிருஷ்ண

பலராமர்கள் என்ற இருவராய்ப் பொருது அழித்த காளமேகம் போன்ற கண்ணன், தன் மனையில் இரு தினங்கள் தங்குவதற்கு எண்ணில் அடங்கா அளவினதான தவத்தைப் பெற்றவனான, விதுரன்,—என்பது ஈற்றடிகளின் பொருள். மைந்தன் வழங்கிய வசையைப் பொறாத விதுரன், புகழ் பெற்ற சிவதநுசு, விஷ்ணு தநுசு, என்ற இரண்டு வில்களில் சிறந்ததான விஷ்ணுவின் வில்லை முறித்தெறிந்தான்,—என்பதாம். சிவன் வில் ஜனகனிடம் போய்ச் சேர்ந்தது. விஷ்ணு வில் பரசுராமனிடத்திலும், அதன் பின் விதுரனிடத்திலும் சேரலாயிற்று. வில்லின் வலிமையையும், அதை ஆளும் விதுரனது ஆற்றலையும் நன்கு அறிந்த கண்ணன், அவ் வில்லும் விதுரனும் துரியோதனனுக்குப் பயன்படாமற் செய்ய வேண்டும் என்ற தன் எண்ணத்தை, விதுரன் மனையில் விருந்துண்டதோர் சூழ்ச்சியால் முடித்துக்கொண்டான். கண்ணன் தூதிற்கு இசைந்த நோக்கங்களில் இது ஒன்றாகும்.

**132. அந்த வில்லினை முறித்த வில்லிதன**
**தாலயம் புகுத வச்சுதன்**
**சந்த வில்லும ரன்வில்லு மொப்பதொரு**
**தாம வில்லினை முறிப்பதே**
**முந்த வில்லிய ரிலெண்ணு வில்லுடைய**
**விசயன் வந்தமரின் முடுகினால்**
**எந்த வில்லியெ திர்நிற்கும் வில்லியினி**
**யென்று காவல ரிரங்கினார்.**

[அந்த வில்லினை முறித்த வில்லி தனது ஆலயம் புகுத, அச்சுதன் சந்தம் வில்லும் அரன் வில்லும் ஒப்பது ஒரு தாமம் வல்லினை முறிப்பதே! முந்த வில்லியரில் எண்ணும் வில்லுடைய விசயன் வந்து அமரில் முடுகினால், எந்த வில்லி எதிர் நிற்கும் வில்லி இனி, என்று காவலர் இரங்கினார்.]

**விளக்கம் :-** அந்த வில்லை முறித்த வில்லியான விதுரன், மனை செல்ல, அங்கே இருந்த காவலர் (அரசர்) திருமாலினது அழகிய வில்லையும் சிவபிரானது வில்லையும் ஒப்பதான ஒப்பற்ற வில் முறியலாயிற்றே! வில் வீரர்களில் முதன்மையிடம் பெற்ற விசயன் போரில் எதிர்த்தால், இனி எதிர் நிற்கும் ஆற்றலுடைய வில் வீரன் எவனாவான்? என்று இரங்கினார், என்பதாம். முன் செய்யுளில், ''வில்லிரண்டினும் உயர்ந்த வில்'', என்றது கவிக் கூற்று. ''அச்சுதன், அரன் வில்லை ஒப்பது ஒரு வில்'' என்றது அவையிருந்த அரசர் கூற்று. எனவே, முரணாகாமை காண்க.

வீடுமன் கூற்று

**133. காரனைத் தும்விடு தாரை யன்னபல**
**கணைக ளேவியமர் கருதும்வில்**
**வீரனைப்பழு துரைத்தநீ பகைஞயை**
**யெங்ஙனே தனிகொல் வெல்லுவாய்**

**பாரனைத் துமினி லையவரா ளும்வகை**
**பண்ணு வித்தனை யழிந்ததுன்**
**பேரனைத் துமென வுள்ள ழிந்துசில**
**பேசி னானுயர் பிதாமகன்.**

[கார் அனைத்தும் விடு தாரை அன்ன பல கணைகள் ஏவி அமர் கருதும் வில் வீரனை பழுது உரைத்த நீ, பகையை எங்ஙனே தனி கொல் வெல்லுவாய்? பார் அனைத்தும் இனி ஐவர் ஆளும் வகை பண்ணுவித்தனை; அழிந்தது உன் பேர் அனைத்தும், என உள் அழிந்து சில பேசினான், உயர் பிதாமகன்.]

**விளக்கம் :-** குணங்களால் உயர்ந்த பாட்டனாரான வீடுமன் (அவையில் நிகழ்ந்தவற்றிற்கு) மனம் வருந்தி, சப்த மேகங்களும் சொரியும் மழைத் தாரைபோல் கணைகளை ஏவி யுத்தம் செய்யும் வில்லியைப் பகைத்துப் பேசிய நீ இனி எங்ஙனம் பகை வெல்லு வாய்? தனியே இருந்தோ வெல்லப் போகின்றாய்? பூமி முழுவதை யும் இனிப் பாண்டவர்கள் ஆளும்படி செய்துவிட்டாய்; (அழிந்தது போக எஞ்சியிருந்த) உனது புகழ் எல்லாம் அழிந்தது என்று, சில வார்த்தைகளைக் கூறினான்,— என்பது பொருள். ''பிதாமகன் உள் அழிவானேன்? பாண்டவர்கள், இனி வென்று விடுவார்களே, என்றா? அல்லது விதுரனை இராஜசபையில் பரிபவப்படுத்தினானே, என்றா?'' தெரியவில்லை, உயர் பிதாமகன், என்றதால், விதுரனுக்கு இழைத்த பிழையை நினைத்தே, உள்ளழிந்தான், என்று கொள்ளலாம்.

துரியோதனன் பதில்

**134. பிதாம கன்பரி வுடன்முனிந் துசில**
**பேச நாசமுறு பேரனாம்**
**விதார மொய்ம்பனும் விதுர னல்லது**
**வில்வல்ல வீரர்பிற ரில்லையோ**
**உதார சீலனுய ரங்கர்கோன் வரிவி**
**லொன்றுமே யமையு முற்றெழும்**
**பதாதி யோடம ரிலைவரும் படம்**
**லைந்திடப் பரணி பாடவே.**

[பிதாமகன் பரிவுடன் முனிந்து சில பேச நாசம் உறு பேரன் ஆம் விதாரம் மொய்ம்பனும், விதுரன் அல்லது வில் வல்ல வீரர் பிறர் இல்லையோ? உதாரசீலன் உயர் அங்கர்கோன் வரிவில் ஒன்றுமே அமையும், உற்று எழும் பதாதியோடு அமரில் ஐவரும் பட மலைந்திட பரணி பாடவே.]

**விளக்கம் :-** பாட்டனான வீடுமன் மனவருத்தத்தோடு சிறிது சினந்து சில வார்த்தைகளைச் சொல்ல, நாசம் அடைவதற்கான விதியுடைய பேரனாகிய போர் வல்ல துரியோதனனும், விதுரன்

அன்றி வில்லில் வல்ல வேறு வீரர்கள் இல்லையோ? ஈகையில் சிறந்தவனான உயர்ந்த அங்கதேசாதிபதியான கர்ணனது வரி வில் ஒன்றே போரில் பொருந்தி எழும் சேனைகளுடன் ஐவரும் அழியும் படி போர் செய்திடவும், புலவர் பரணி பாடவும் போதியதாகுமே! என்பது பொருள். பரணி, என்பது தொண்ணூற்றாறு பிரபந்த வகைகளுள் ஒன்று. போரில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனைத் தலைவனாக் கொண்டு, ஈரடித் தாழிசையால் பாடுவது.

**135. நீயிருக்க நெடு விற்கை யாசிரிய**
**னவனி ருக்க நிகரற்றவன்**
**சேயி ருக்க விறன்மன்ன ரிப்படித்**
**திரண்டி ருக்கவெதிர் சென்றுநீள்**
**வேயி ருக்குமித ழிடைய னுக்குநல்**
**விருந்து செய்தவன் வெறுக்கிலென்**
**போயி ருக்கிலென் முறிக்கி லென்சிலை**
**மலைந்துநம் மொடெவர் போர்செய்வார்.**

[நீ இருக்க, நெடு வில் கை ஆசிரியன் அவன் இருக்க, நிகர் அற்று அவன் சேய் இருக்க, விறல் மன்னர் இப்படி திரண்டு இருக்க, எதிர் சென்று நீள்வேய் இருக்கும் இதழ் இடையனுக்கு நல்விருந்து செய்தவன் வெறுக்கில் என்? போய் இருக்கில் என்? முறிக்கில் என் சிலை? மலைந்து நம்மொடு எவர் போர் செய்வார்?]

**விளக்கம் :-** நெடுவில் கை ஆசிரியன் - துரோணன். அவன் சேய் நிகர் அற்று இருக்க - அவன் புதல்வனாகிய அசுவத்தாமன் நிகர் இல்லாதவனாய் இருக்க. போய் இருக்கில் என் - அவன் நம்மைப் பிரிந்துபோய்த் தனியே இருந்தால் என்ன. நீயும் வீரர் பலரும் இருக்க, விதுரன் தம்மைவிட்டு அகன்றால் என்ன? என்று, துரியோதனன் வீடுமனிடம் கூறியபடி.

கர்ணன் செருக்கிக் கூறல்

**136. என்று கூறவிற லங்கர் பூபதியும்**
**யானிருக் கவிகல் விசயனை**
**சென்று சீறியுயிர் கொள்ள வல்லவர்கள்**
**யாவ ரென்றுநனி செப்புவீர்**
**கன்றி னால்விள வெறிந்த கள்வனி**
**வனின்று தேர்நனி கடாவினும்**
**அன்று போரினிடை காண லாகுமென**
**நாடல் வெஞ்சிலையி னாண்மையே.**

[என்று கூற, விறல் அங்கர் பூபதியும் யான் இருக்க இகல் விசயனை சென்று சீறி உயிர் கொள்ள வல்லவர்கள் யாவர் என்று, நனி செப்புவீர்; கன்றினால் விளவு எறிந்த கள்வன் இவன் நின்று

தேர் நனி கடாவினும், அன்று போரினிடை காணல் ஆகும் எனது ஆடல் வெம் சிலையின் ஆண்மையே.]

**விளக்கம் ;-** கன்றினால் விளவு வெறிந்த கள்வன்-கண்ணன். விளவு - விளாங்காய். ஆடல் - (அடல்) ஆற்றல், வெற்றி, ஆண்மை, திறமை. கண்ணனைக் கொல்லும் பொருட்டு மாமனான கம்சனால் ஏவப்பெற்ற அசுரன் பசுங்கன்றின் உருவங் கொண்டு மாட்டு மந்தையோடு கலந்து, சமயம் பார்த்துக் கொண்டிருத்தலை அறிந்த கண்ணன், அக் கன்றைக் குணிலாகக் கொண்டு விளாங்கனிகளை உதிர்த்தான், என்பது கதை. குணில்-கவண், குறுந்தடி, அடிகோல்.

**137.** **அம்ப ரத்தவ ருடன்று சீறினுமோ**
**ரம்பிலே யழிவர்திண் ணம்யான்**
**வெம்ப ணிப்பக ழியேவி லாவியுடன்**
**மீளுவா னமரில் விசயனோ**
**இம்ப ரிற்புகல விருத ளத்தினு**
**மெனக்குநே ரொருவ ரில்லையென்(று)**
**உம்பர் கற்பகமு நாண வண்மையி**
**லுயர்ந்த வீரனிவை யுரைசெய்தான்.**

[அம்பரத்தவர் உடன்று சீறினும் ஓர் அம்பிலே அழிவர் திண்ணம், யான் வெம் பணி பகழி ஏவில் ஆவியுடன் மீளுவான் அமரில் விசயனோ? இம்பரில் புகல இரு தளத்தினும் எனக்கு நேர் ஒருவர் இல்லை, என்று உம்பர் கற்பகமும் நாண வண்மையில் உயர்ந்த வீரன் இவை உரை செய்தான்.]

**விளக்கம் :-** அம்பரத்தவர் - தேவலோகத்தவர்; பணிப் பகழி - நாகாஸ்திரம். இம்பரில் இருதளத்தினும் எனக்கு நேர் புகல ஒருவர் இல்லை - இந்த பூமியில் இருதிறத்துப் படையிலும் எனக்கு நிகராகச் சொல்ல வல்லவர் எவரும் இல்லை. தேவரே எதிர் நிற்க மாட்டாதவர் என்னில், பூலோகத்தார் எனக்கு எம்மாத்திரம்? என்று மீண்டும் கர்ணன் கூறுவானாயினான், என்பதாம்.

கர்ணனை வீடுமன் கண்டித்தல்

**138.** **திசைய னைத்தினும் வளைந்த தானவரை**
**யிரவி வந்தொரு திசையின் வாய்**
**நிசியெ னப்பொருது வானவர்க்கர**
**சளித்து வந்தவிற லீர்மையான்**
**விசய னுக்குநிகர் நீகொலோ கடவுள்**
**[illegible] வெண்மதிக்குநிகர் வெள்ளியோ**
**வசையில் விற்றொழிலும் வல்லை யோவென**
**வொரசை விலாதவ னறைந்தனன்.**

[திசை அனைத்தினும் வளைந்த தானவரை இரவி வந்தது ஒரு திசையின் வாய், நிசி என பொருது வானவர்க்கு அரசு அளித்து வந்த விசயனுக்கு நிகர் நீ கொலோ, கடவுள் வெள் மதிக்கு நிகர் வெள்ளியோ ? வசை இல் வில் தொழிலும் வல்லையோ ! என, ஓர் அசைவு இலாதவன் அறைந்தனன்.]

**விளக்கம் :-** பக்ஷபாதம் இல்லாதவனாகிய வீடுமன், (கர்ணனை நோக்கி), ''எல்லாத் திசைகளிலும் வந்து சூழ்ந்து கொண்ட (நிவாதகவசர் காலகேயர் என்ற) அசுரர்களை சூரியன் தோன்றிய திசையிலே (அழிந்து மறைகின்ற) இருளேபோல் (அசுரர்களைப்) போரில் அழித்துத் தேவர்களுக்கு அரசாட்சிச் செல்வத்தை அளித்து வந்த ஆற்றல் பொருந்திய விசயனுக்கு நிகர் நீ ஆவாயோ ? தெய்வத்தன்மை பொருந்திய சந்திரனுக்கு நிகர் சுக்கிரனோ ? மேலும் பழுது இல்லாத விற்கலைப் பயிற்சியும் உடையவனாவாயோ ?'' என்று கூறினான், என்பது பொருள். அந்தண வேடங்கொண்டு பரசுராமனிடம் வில் தொழில் பயின்ற கர்ணனை, க்ஷத்திரியன் என்று அறிந்த பொழுது, ''உன் வில் வித்தை சமயத்தில் பயன்படாது ஒழியக் கடவது'', என்று பரசுராமன் இட்ட சாபங் கருதி, ''வசையில் விற்றொழில் வல்லையோ'', என்று வீடுமன் கூறினான், என்க.

### கர்ணன் வெகுண்டு கூறல்

**139. அவன்மொ ழிந்த மொழி தன்செவிப் படனு**
**மருகிருந் தமுத ருந்துநீ**
**இவனு டன்சிலர் பகைக்கின் மற்றவர் த**
**மிசையு மாண்மையு மியம்புவாய்**
**புவன மொன்றுபட வரினு மென்னொடு**
**பொருவ ராயினெதிர் பொரவிடாய்**
**சிவனு மென்கணையை யஞ்சு மென்றுநனி**
**சீறினா னிரவி சிறுவனே.**

[அவன் மொழிந்த மொழி தன் செவி படலும் அருகு இருந்து அமுது அருந்தும் நீ, இவனுடன் சிலர் பகைக்கின், (மற்று) அவர் தம் இசையும் ஆண்மையும் இயம்புவாய் ; புவனம் ஒன்றுபட வரினும் என்னொடு பொருவர் ஆயின் எதிர் பொர விடாய், சிவனும் என் கணையை அஞ்சும் என்று நனி சீறினான் இரவி சிறுவன், ஏ.]

**விளக்கம் :-** வீடுமன் கூறியது செவிப் படலும், இரவியின் மகனான கர்ணன், (அவனை நோக்கி) ''துரியோதனனுக்கு அருகு இருந்து (அவனது) அன்னத்தை அருந்துகின்ற நீ, இவனுடன் யாரேனும் பகைகொண்டால், அப்பகைவரது புகழையும் போராற்றலையும் எடுத்துப் பேசுவாய் ; இந்த உலகத்தார் எல்லோரும் ஒன்றுபட்டுப் பகைத்து வரினும், (அவர் என்னோடு போர் செய்யத் துணியார், ஒரு வேளை துணிந்தாலும்) என்னை அவருடன்

எதிர்த்துப் போர் செய்ய விடமாட்டாய்; சிவனும் என் அம்புகளுக்கு அஞ்சுவான்', என்று சினந்து கூறினான், என்பது பொருள். சிவனும்: உம்மை, உயர்வு சிறப்பு. சிவபிரான் அழித்தற் கடவுளாதல் பற்றி, அவனை ஆற்றலின் எல்லையாகக் கொண்டு, ''சிவனும், என் கணை அஞ்சும்'', என்றான், என்க. வண்மையாலும் மேன்மைக் குணங்களாலும் சிறந்தவனாயினும், தேரோட்டி மகனாகிய தன்னை அரசனாக்கி வாழ்வு கொடுத்த துரியோதனன்பால், நன்றியின் மிகுதியாலும், விசயன் மேலுள்ள பகையாலும் தன் வசம் இழந்த நிலையில், பீஷ்மனை இவ்வாறு அவன் இகழ்ந்து பேசுவானாயினான், என்க.

**140. இரவி மைந்தனொடு கங்கைமைந் தனெதிர்**
**வாய்மை யொன்றையு மிசைத்திலன்**
**பொரவ றிந்திடுது மன்று வெஞ்சமரி**
**லென்றெ ழுந்துதனி போயினான்**
**அரவ வெங்கொடி யுயர்த்த கோவுமிக**
**லரச ருக்குவிடை நல்கினான்**
**விரவு பைந்துளப மாலையான் விதுரன்**
**மனையி லுற்றது விளம்புவாம்.**

[இரவி மைந்தனொடு கங்கை மைந்தன் எதிர் வாய்மை ஒன்றையும் இசைத்திலன்; பொர அறிந்திடுதும் அன்று வெம் சமரில் என்று எழுந்து தனி போயினான், அரவம் வெம் கொடி உயர்த்த கோவும் இகல் அரசருக்கு விடை நல்கினான், விரவு பைந்துள மாலையான் விதுரன் மனையில் உற்றது விளம்புவாம்.]

**விளக்கம்** :- வீடுமன் கர்ணனுக்குப் பதிலாக வார்த்தை எதையும் சொல்லாமல், ''அன்று போரில் இவனது ஆண்மையை அறிவோம்'', என்று எண்ணிக்கொண்டு அவை அகன்று தனியே சென்றான்; துரியோதனனும், அவையிருந்த அரசர்க்கு விடை கொடுத்து அனுப்பினான்; விரவு பைந்துளப மாலையானான கண்ணன் தங்கியிருந்த விதுரன் மாளிகையில் நிகழ்ந்த செய்தியை இனிக் கூறுவோம்,—என்பது பொருள். ஈற்றடி கவிக்கூற்று.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**விதுரன் கண்ணனுக்குக் கூறியது**

**141. பொருசிலை முறித்த வீரன் கோயிலிற் புகுந்து நேமிக்**
**குரிசிலை வணங்கி யாங்க ணிருப்பவக் குரிசி னோக்கி**
**இருசிலை யுண்டென் றிந்த விருநிலத் தியம்பும் வில்லின்**
**ஒருசிலை முறித்த சீற்ற மென்கொலோ வுரைசெ**
**யென்றான்.**

[பொருசிலை முறித்த வீரன் கோயிலில் புகுந்து, நேமி குரிசிலை வணங்கி ஆங்கண் இருப்ப, அ குரிசில் நோக்கி இரு சிலை உண்டு என்று இந்த இரு நிலத்து இயம்பும் வில்லின் ஒரு சிலை முறித்த சீற்றம் என்கொலோ? உரை செய் என்றான்,]

**விளக்கம் :-** குரிசில், ஆண் பாற்சிறப்புப் பெயர். குரிசில், ஈரிடத்தும் கண்ணனைக் குறிக்கும். மனை வந்த விதுரன் சக்ரபாணியான கண்ணனைக் வணங்கி ஓரிடம் அமரவும், ''பிரசித்திபெற்ற இரண்டு விற்களில் ஒன்றான உன் வில்லை ஒடித்ததேன்? சொல்லுக'' என்று கண்ணன் கேட்டான், என்பதாம்.

**142. ஆவது கருதா னாகி லமைச்சர்சொற் கேளா னாகில்**
**வீவது குறியா னாகில் விளைவது முணரா னாகில்**
**நாவது காவா னாகி லவனுக்கா நடந்து போரில்**
**சாவது பழுதென் றன்றோ சகத்துளோர் சாற்று கின்றார்.**

[ஆவது கருதான் ஆகில், அமைச்சர் சொல் கேளான் ஆகில், வீவது குறியான் ஆகில், விளைவதும் உணரான் ஆகில், நா அது காவானாகில், அவனுக்கு ஆ(க) நடந்து போரில் சாவது பழுது என்று அன்றோ, சகத்து உளோர் சாற்றுகின்றார்.]

**விளக்கம் :-** ஆவது - நன்மை பயக்கும் காரியம். வீவது - அழிவது. ஆவது கருதாமை முதலிய துர்க்குணங்களை உடையவனுக்குப் போரில் துணை நின்று சாதல் பழுதுடையது, என்று பெரியோர் கூறுவர்; அப் பழி பாவங்கள் தன்னைச் சாராவண்ணங் காத்துக்கொள்ள வில்லை முறித்ததாக விதுரன் கூறினான், என்க.

**143. செல்வம்வந் துற்ற காலைத் தெய்வமுஞ் சிறிது பேணார்**
**சொல்வன வறிந்து சொல்லார் சுற்றமுந் துணையு நோக்கார்**
**வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணார்**
**வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழு மாந்தர்.**

[செல்வம் வந்து உற்ற காலை தெய்வமும் சிறிது பேணார், சொல்வன அறிந்து சொல்லார், சுற்றமும் துணையும் நோக்கார், வெல்வதே நினைவது அல்லால் வெம் பகை வலிது என்று எண்ணார், வல் வினை விளைவும் ஓரார் மண்ணின் மேல் வாழும் மாந்தர்.]

**விளக்கம் :-** செல்வம் உடைய துரியோதனன் செய்யுளில் கூறப்பட்ட எல்லாத் துர்க்குணங்களையும் முழுமையாகப் பெற்றவன், என்று பொதுவகையால் விதுரன் குறித்தபடி. பேணல் - போற்றல், கொண்டாடல். பேணப்படு பொருள்கள் எல்லாவற்றிலும் தெய்வம் தலைமையானது பற்றித் தெய்வமும், என்றார்;

உம்மை உயர்வு சிறப்பு. வல்வினை - விலக்கரிய வினை. சிறிது(ம்) பேணார், உம்மை, தொகை; இழிவு சிறப்பு.

**144.** **நினைக்கவுந் தொழவு மெட்டா நீயெழுந் தருளப் பெற்றும்**
**தனக்கிது தகுதி யென்று தமருடன் வாழ வெண்ணான்**
**மனக்கடுங் கனலி னான்றன் மனத்தினா லுரைத்த புன்சொல்**
**எனக்கிசை யாமல் யானு மிருஞ்சிலை யிறுத்த தென்றான்.**

[நினைக்கவும் தொழவும் எட்டாத நீ எழுந்தருளப் பெற்றும், தனக்கு இது தகுதி என்று தமருடன் வாழ எண்ணான், மனம் கடும் கனலினான் மனத்தினால் உரைத்த புன் சொல் எனக்கு இசையாமல் யானும் இருஞ்சிலை இறுத்தது, என்றான்.]

**விளக்கம் :-** நீயே வந்து, அருளிச் செய்த நல்லுரையைத் தக்கது என்று ஏற்று, நெருங்கிய சுற்றத்தாரான பாண்டவருடன் ஒன்றி வாழ எண்ணாதவனும், கனலினும் கொடிய மனத்தினனு மான துரியோதனன் நினைத்தே உரைத்த புன்சொல், எனக்குப் பொருந்தாமை காரணமாகச் சிலையை இறுத்தேன், என்று கூறியபடி. கோபத்தினால் கூறிய வார்த்தை அன்று மனத்தி னால் நினைத்தே கூறிய இழிசொல், என்ற கருத்தில், ''மனத்தி னால் உரைத்த புன் சொல்'', என்றான், என்க. இறுத்தது, என்ற தொழிற் பெயர், வினைமுற்றாய் நின்றது.

கண்ணன் கூற்று

**145.** **மாயனு மகிழ்ந்து நோக்கி மாசுண முயர்த்த மன்னன்**
**போயருஞ் சேனை யோடு போர்க்களங் குறுகும் போது**
**நீயவ னருகு நில்லா தொழியினுன் னேய மைந்தர்**
**தாயமுஞ் செல்வ முற்றுந் தரணியும் பெறுவ ரன்றே.**

[மாயனும்மகிழ்ந்து நோக்கி மாசுணம் உயர்த்த மன்னன், போய் அருஞ்சேனையோடு போர்களம் குறுகும்போது, நீ அவன் அருகு நில்லாது ஒழியின், உன் நேயம் மைந்தர் தாயமும் செல்வம் முற்றும் தரணியும் பெறுவர், அன்றே.]

**விளக்கம் :-** ''போர் நிகழுங்கால் நீ அவனயல் இல்லாமற் செல்வாயாயின் உன் அன்பிற்குரிய பாண்டவர், தாயத்தோடு, செல்வமும், பூமி முழுவதும் பெறுவர்'', என்று கண்ணன் கூறினான், என்பதாம். கண்ணன், மகிழ்ந்தது, அவனது பூபாரம் தீர்க்குங்கருத்து விரைவில் நிறைவேறும், என்ற எண்ணத்தில், என்க. அன்றே, அசை.

**146.** **ஏற்றிய நறுநெய் வீசி யிந்தன மடுக்கி னாலும்**
**காற்றுவந் துறாத போது கடுங்கனல் கதுவ வற்றோ**
**நீற்றணி நிமல னன்ன நின்கைவி லிற்ற தாயின்**
**சீற்றவே லரசன் சேனை தென்புலம் படர்கை திண்ணம்.**

[ஏற்றிய நறு நெய் வீசி இந்தனம் அடுக்கினாலும் காற்று வந்து உறாதபோது கடுங்கனல் கதுவ வற்றோ? நீறு அணி நிமலன் அன்ன நின் கையில் இற்றது ஆயின், சிற்றம் வேல் அரசன் சேனை தென்புலம் படர்கை திண்ணம்.]

**விளக்கம் :-** ''நெய் பெய்து எத்தனை விறகுகளை அடுக்கி னாலும் தீப்பற்றி எரிவதற்குக் காற்று அவசியம். அதுபோல் படை வலியும் துணை பலமும் இருந்தாலும் துரியோதனனது வெற்றிக்குச் சிவபிரானே அனைய உன் கை வில் அவசியம்; அது இல்லாமற்போனமையின், பாண்டவர் வெல்வதும், பகைவர் அழிவதும் நிச்சயம்'', என்று கண்ணன் கூறினான்,—என்பதாம். வற்றோ - வல்லதோ. தென்புலம், எமனது திசை. சிவன், அழித்தற் கடவுளானமைபற்றிப் பகை அழிக்கும் ஆற்றலுக்கு அவனை உவமை கூறினார். நிமலன் - ஆணவம், மாயை, கன்மம் என்ற மலம் அற்றவன்.

**147. பன்னிய புரையில் கேள்விப் பயனுகர் மனத்தாய் நின்னை**
**மன்னவன் மொழிந்த வெல்லாம் பொறுத்தியென் றருளி மாயோன்**
**அந்நகர் தன்னில் வண்மை யருளழ காண்மை பேசும்**
**கன்னனைப் பயந்த காதற் கன்னிதன் கோயில் புக்கான்.**

[''பன்னிய புரை இல் கேள்வி பயன் நுகர் மனத்தாய், நின்னை மன்னவன் மொழிந்த எல்லாம் பொறுத்தி'', என்று அருளி, மாயோன், அந்நகர் தன்னில் வண்மை, அருள், அழகு, ஆண்மை (ஆய்வற்றில் சிறந்தவனாக உலகம்) புகழும் கன்னனை பயந்த காதல் கன்னி தன் கோயில் புக்கான்.]

**விளக்கம் :-** ''புகழ்ந்து பேசப்படும் குற்றம் அற்ற கேள்வியின் பயனாகும் தத்துவ ஞானத்தில் தோய்ந்த மனத்தை உடைய வனே'', என்று கண்ணன் விதுரனை அழைத்து, ''துரியோதனன் உன்னை நிந்தித்துக் கூறிய புல்லிய மொழிகளைப் பொறுத்தி'', என்று கூறியருளி, அதன்பின், அந்நகரில் வைகும், வண்மை, அருள், வடிவழகு, வில் லாற்றல் ஆகியவற்றில் சிறந்தவன் என்று எல்லோரும் கொண்டாடும் கர்ணனைப் பெற்றவளாகிய குந்தி தேவியின் திரு மனை, அடைந்தான்,—என்பது பொருள்- புரை யில் கேள்வி - ஐயம் திரிபிற்கு இடமில்லாத கேள்வி. கன்னிப் பருவத்தில் சூரியனைக் கூடிக் கர்ணனைப் பெற்றதுபற்றி, கன்னனைப் பயந்த கன்னி, என்றார். மூன்றாவது அடிக்குக் கர்ணன் தன்னையே பாராட்டிக்கொள்வதாகப் பொருள் கொள்வது, கர்ண்னுக்குக் குறைவு தரும்.

## கண்ணனைக் கண்டு மகிழ்ந்த குந்தி வினாதல்

**148. மண்டல மதிய மன்ன மாசறு முகத்தி னாளும்
திண்டிறன் மருகன் றன்னைச் சென்றெதிர் கொண்டு
கண்டு
வெண்டிரை மகர வேலை விரிபுனல் முகந்து தோன்றும்
கொண்டலை மகிழ்ந்து காணுங் குளிர்பசுந் தோகை
போன்றாள்.**

*[மண்டலம் மதியம் அன்ன மாசு அறு முகத்தினாளும், திண் திறல் மருகன் தன்னை சென்று எதிர் கொண்டு, கண்டு, வெள் திரை மகரம் வேலை விரி புனல் முகந்து தோன்றும் கொண்டலை மகிழ்ந்து காணுங் குளிர் பசுந்தோகை போன்றாள்.]*

**விளக்கம் :-** சந்திரமண்டலம் போன்றதும், களங்கம் இல்லாததுமான முகத்தை உடைய குந்தியும், மிகுந்த வலிமையுடைய மருமகனான கண்ணனை, எதிர்கொண்டு சென்று, அவனைக் கண் குளிரக் கண்டு, வெள்ளிய அலைகளையும், சுறாமீன்களையும் உடைய கடலின் விரிந்து மிகுந்த நீரை முகந்துகொண்டு மேலெழுந்து தோன்றும் காளமேகத்தை மகிழ்ந்து நோக்குகின்ற குளிர்ந்த பசிய மயிலை ஒத்தாள்,—என்பது பொருள். புனல் முகந்து தோன்றும் கொண்டல், கண்ணன். அப் புனலைக் கண்டு தாபம் தணியப்பெற்று மகிழும் மயில் குந்தி. நீர்கொண்ட மேகத்தைக்கண்டு மயில் மகிழ்வதுபோல், கண்ணனைக் கண்டு குந்தி மகிழ்ந்தாள், என்க. உவமை அணி. மண்டலம், என்பதை மண் தலம், என்றும் பிரித்துக்கொள்ளலாம். அப்பொழுது மண்ணினிடத்தே வந்ததாகிய ஒரு மாசறு சந்திரன், என்பது பொருளாகும்.

**149. யானுறை யில்லின் வந்த தென்னமா தவமென் றேத்திக்
கானுறை மைந்தர் தம்மைக் கண்டனள் போன்றா ளாகித்
தேனுறை துளவி னான்றன் செய்யமா முகத்தை நோக்கி
வானுறை புரிசை மூதூர் வந்ததென் னருடி. யென்றாள்.**

*[யான் உறை இல்லின் வந்தது என்ன மா தவம் என்று ஏத்தி, இ கான் உறை மைந்தர் தம்மை கண்டனள் போன்றாள் ஆகி, தேன் உறை துளவினான் தன் செய்ய மா முகத்தை நோக்கி, வான் உறை புரிசை முது ஊர் வந்தது என்? அருடி (அருள்தி) என்றாள்.]*

**விளக்கம் :-** தான் வாழும் மனை வந்தது தான் செய்த எந்தப் பெரிய தவத்தின் பயனோ! என்று கூறிக் கண்ணனைத் துதித்து, (அவனைக் கண்டதால்) வனவாசம் செய்த தன் மக்களைக் கண்டது போன்ற மகிழ்ச்சியுடையவளாய்க் கண்ணனது அழகிய திருமுகத்தை நோக்கி, ''இம் மூதூர் வந்த காரணம் என்ன? சொல்லியருளுக'', என்று குந்தி வேண்டிக்கொண்டாள்,— என்பது பொருள். தேன் உறை துளவினான் - வண்டுகள்

மொய்க்கப்பெற்ற துளசிமாலை அணிந்த கண்ணன். வான்உறை புரிசை - மேகம் தங்கப்பெற்ற மதில், அல்லது வான் அளாவிய மதில்.

### கண்ணன் கூறல்

**150. நின்பெரும் புதல்வர் சொல்ல நெடும்புன னாடு வேண்டி**
**வன்புடை யரசர் கோமான் மனக்கருத் தறிய வந்தேன்**
**தென்புல வேந்தன் வெஃகச் செருத்தொழில் புரிவ**
**னென்றான்**
**என்பல சொல்லி னாளை யெதிர்க்கவே யியைந்த**
**தென்றான்.**

[நின் பெரும் புதல்வர் சொல்ல நெடும் புனல் நாடு வேண்டி வன்பு உடை அரசர் கோமான் மனம் கருத்து அறிய வந்தேன்; தென் புலம் வேந்தன் வெஃக செரு தொழில் புரிவன் என்றான், என் பல சொல்லின்? நாளை எதிர்க்கவே இயைந்தது, என்றான்.]

**விளக்கம் :-** ''உனது புதல்வர் சொல்ல அவருக்குரியதான நாடு பெறவேண்டி, வலிமையுடைய துரியோதனனது மனக் கருத்தை அறிய வந்தேன்; போரே செய்வேன் என்றான். பல வார்த்தைகளைச் சொல்லிப் பயன் ஒன்றுமில்லை, எதிர்த்தலே செய்வதற்குரியதாயிற்று'', என்று கண்ணன் கூறினான், என்பதாம். தென்புல வேந்தன் - யமன். வெஃக - உயிர்களை விரும்ப. சமாதான முறையில் காரியம் சாதித்துக் கொள்ள முயன்று பயன் படாமற் போனதைப்பற்றிய விபரங்களை இப்பொழுது கூறுவதால் ஒரு பயனுமில்லை, என்ற கருத்தினதாகும், 'என் பல சொல்லின்?' என்றது.

**151. என்றலுங் குந்தி சால விரங்கின ளெதிர்ந்த போரில்**
**வென்றிடு வார்கள் யாரோ விதியினா லமர்க்க ளத்தில்**
**பொன்றிடு வார்கள் யாரோ வென்றுளம் புலர்ந்து**
**நொந்தாள்**
**அன்றவ டன்னைத் தேற்றி யாழியா னுரைக்க லுற்றான்.**

[என்றலும் குந்தி சால இரங்கினள், எதிர்ந்த போரில் வென்றிடுவார்கள் யாரோ, விதியினால் அமர் களத்தில், பொன்றிடு வார்கள் யாரோ, என்று உளம் புலர்ந்து நொந்தாள்; அன்று அவள் தன்னை தேற்றி ஆழியான் உரைக்கல் உற்றான்.]

**விளக்கம் :-** கண்ணன் கூறியது கேட்டு மிகவும் வருந்திய குந்தி, விதி வசத்ததான போரில் வெற்றியும் தோல்வியும் நிச்சய மற்றவையாயிற்றே, என்று வாடி வருந்த, அப்பொழுது அவளை ஆழியான் (கண்ணன்) தேற்றி, மேலும் சில கூறலானான், என்பதாம். விதி, ஊழ், பால், தெய்வம், நியதி என்பவை ஒரு பொரு

ளுடைய பல சொற்கள். ஆழியான் - சக்ராயுதத்தை உடைய திருமால், அல்லது பாற்கடலில் பள்ளி கொண்டவன்.

## கர்ணன் பிறப்பு உரைத்தல்

**152. தன்மைநா னுரைப்பக் கேணின் தந்தைதன் மனையி னீயும்**
**கன்னியா யிருந்து வாழுங் காலையோர் முனிவன் வந்து**
**சொன்னமந் திரமோ ரைந்தி னொன்றினாற் சூரன் றன்னை**
**முன்னினை யவனு மன்று வந்துநின் முன்பு நின்றான்.**

[தன்மை நான் உரைப்ப கேள், நின் தந்தை தன் மனையில் நீயும் கன்னி ஆய் இருந்து வாழும் காலை, ஓர் முனிவன் வந்து சொன்ன மந்திரம் ஓர் ஐந்தின் ஒன்றினால் சூரன் தன்னை முன்னினை, அவனும் அன்று வந்து நின் முன்பு நின்றான்.]

**விளக்கம் :-** தன்மை - நடந்ததான ஓர் உண்மை நிகழ்ச்சி யின் தன்மை. முனிவன் - துர்வாச முனிவன். சூரன் - சூரியன். துர்வாச முனிவன் உனது கன்னிப்பருவத்தில் உபதேசித்த ஐந்து மந்திரங்களில் ஒன்றால், சூரியனை நீ தியானிக்க, அவன் உன் முன் வந்து தோன்றினான், — என்பதாம்.

**153. கதிரவ னருளி னாலோர் கணத்திடைக் காதல் கூர**
**மதலையங் கொருவன் றன்னைப் பயந்தபின் வடுவென் றஞ்சி**
**மிதவையம் பேழை தன்னிற் பொதிந்துநீ விடவப் போதந்**
**நதியுமம் மகவைக் கங்கை நதியிடைப் படுத்த தன்றே.**

[கதிரவன் அருளினால் ஓர் கணத்திடை காதல் கூர, மதலை அங்கு ஒருவன் தன்னை பயந்த பின் வடு என்று அஞ்சி, மிதவை அம் பேழை தன்னில் பொதிந்து நீ விட, அப்போது, அ நதியும் மகவை கங்கை நதியிடை படுத்தது, அன்றே.]

**விளக்கம் :-** வந்தடைந்த சூரியனது அருளினால் ஒரு கணத் தில் இன்பம் எய்தி, அங்கேயே ஒரு புதல்வனைப் பெற்று, அதன் பின்பு, இதனால் உன் குலத்திற்கும் உனக்கும் பழியுண்டாகும் என்று அஞ்சி, மிதக்கக்கூடிய ஓர் அழகிய பெட்டியில் அம் மகவை இட்டு அடக்கஞ் செய்து யமுனை நதியில் விட, அது அப் பெட்டி யைக் கங்கையிற் கொண்டுபோய்ச் சேர்த்தது, — என்பது பொருள். அன்றே: ஈற்றசை.

**154. காதனின் புதல்வன் றன்னைக் கண்ணிலா வரசன் பொற்றேர்**
**சூதன்வந் தெடுத்துக் கொண்டு சுதனென வளர்த்த காலை**
**ஆதப னிவனை யாருங் கன்னனென் றழைக்க வென்றான்**
**தாதையும் விசும்பிற் சொன்ன நாமமே தக்க தென்றான்.**

[காதல் நின் புதல்வன் தன்னை கண் இலா அரசன் பொன் தேர் சூதன் வந்து எடுத்துக்கொண்டு சுதன் என வளர்த்த காலை, ஆதபன் அவனை யாரும் கன்னன் என்று அழைக்க என்றான், தாதையும் விசும்பின் சொன்ன நாமமே தக்கது என்றான்.]

**விளக்கம் :-** சூதன் - தேர்ப்பாகன். ஆதபன் - சூரியன். கங்கையில் மிதந்து வந்த குழந்தையைத் திருதராட்டிரனது தேர்ப் பாகன் எடுத்து வந்து வளர்த்த காலை, சூரியன், ''எல்லோரும் இக் குழந்தையைக் கர்ணன் என்று அழைக்கட்டும்'', என்று, அசரீரியாகக் கூறினான்; தந்தையும் அதுவே தக்கது, என்று கொண்டான்,—என்பது பொருள்.

**155. பண்புடைக் குமரன் கற்ற படைத்தொழில் பலவுங் கண்டு**
**நண்புடை யுரிமை யெல்லா நல்கிமா முடியுஞ் சூட்டி**
**வண்பணி யுயர்த்த கோமான் வாழ்வவற் களித்தான் மற்றைத்**
**திண்பரித் தேர்வல் லோரி லிவனையார் செயிக்க வல்லார்.**

[பண்பு உடை குமரன் கற்ற படை தொழில் பலவும் கண்டு நண்பு உடை உரிமை எல்லாம் நல்கி, மாமுடியும் சூட்டி வள் பணி உயர்த்த கோமான் வாழ்வு அவற்கு அளித்தான்; மற்றை திண் பரி தேர் வல்லோரில் இவனை யார் செயிக்க வல்லார்.]

**விளக்கம் :-** நண்பு உடை உரிமை எல்லாம் - சீரிய நட்பிற்கு உடையதான உரிமை, அதாவது அரசற்குரிய செல்வங்கள் எல்லாம். வாழ்வு - அங்க தேசாதிபதியாக வாழும் செல்வ வாழ்வு. மற்றை - (மற்று என்பதின் ஈற்றுகரம் ஐயாகத் திரிந்தது) வேறு; அசையாகவும் கொள்ளலாம். வண்பணி (வள்பணி) என்பதற்கு, அழகிய அல்லது பெருமையுடைய என்று, பொருள் கொள்க. துரியோதனன், அவனது விற்றொழிற் சிறப்பைக் கண்டு, அரசச் செல்வங்களும் வாழ்வுங் கொடுத்துத் தன்து நண்பனாகக் கொண்டான்,—என்க.

**156. அந்தநின் மைந்தன் றானே யருஞ்சிலை விசய னோடு**
**வந்தெதிர் மலைய நின்றா னுறவுமற் றறிய மாட்டான்**
**சிந்தையி னையந் தீர விதனைநீ தெளியச் சொல்லிக்**
**கொந்தவி ழலங்க லானைக் கூட்டுக விரைவி னம்மா.**

[அந்த நின் மைந்தன் தானே அருஞ்சிலை விசயனோடு வந்து எதிர் மலைய நின்றான், உறவு மற்று அறிய மாட்டான்; சிந்தையின் ஐயம் தீர இதனை நீ தெளியச் சொல்லி, கொந்து அவிழ் அலங்கலானை கூட்டுக விரைவின், அம்மா.]

**விளக்கம் :-** நாளைப் போரில் விசயனோடு அந்த உன் புதல்வன் போர் செய்ய இருக்கின்றான், அவனோ, உறவு

முறையை அறிய மாட்டான்; பாண்டவர்களின் தமையன் என்ற உறவினை அவன் சந்தேகம் இல்லாமல் தெளிந்துகொள்ளும்படி எடுத்துக் கூறி, பாண்டவர் பக்கம் அவனை விரைவில் சேர்ப்பாயாக,—என்று கண்ணன் கூறினான், என்பதாம். மற்று: வினைமாற்று. அம்மா : அசை.

**157.** **தம்பிய ரைந்து பேருந் தனித்தனி யேவல் செய்ய**
**வம்பவி ழலங்க லோடு மாமணி மகுடஞ் சூட்டி**
**அம்புவி முழுது நீயே யாளலாம் வருக வென்றால்**
**உம்பர்கா வனைய கையா னுன்னுரை மறுத்தா னாகில்.**

[தம்பியர் ஐந்து பேரும் தனிதனி ஏவல் செய்ய, வம்பு அவிழ் அலங்கலோடு, மாமணி மகுடம் சூட்டி அம்புவி முழுதும் நீயே ஆளலாம், வருக என்றால், உம்பர் கா அனைய கையான் உன் உரை மறுத்தான் ஆகில்,—அடுத்த கவியோடு தொடரும்.]

**விளக்கம் :-** வம்பு - வாசனை. உம்பர் கா அனைய கையான் - தேவலோகத்ததான கற்பகச் சோலையை ஒத்த கையான் ஆகிய கர்ணன். அவன் வள்ள லானபடியால் கற்பகச் சோலையை உவமையாக்கினார். ''நீ அழைக்க அவன் வாரானா கில், இன்னது செய்ய வேண்டும்'' என்பதைக் கண்ணன் அவனுக்கு அடுத்த செய்யுளில் கூறுகின்றான். சூட்டி - சூடி, தரித்து.

**158.** **எரியமு தருந்தக் கான மெரித்தநா ளகன்று போன**
**அரவினை யங்கர் கோமா னாசுக மாகக் கொண்டான்**
**வரிசிலை விசயன் றன்மேன் மறுகணை தொடுக்கா**
**வண்ணம்**
**ஒருவரம் வேண்டு கென்றா னுற்றவர்க் குறுதி சூழ்வான்.**

[எரி அமுது அருந்த கானம் எரித்த நாள் அகன்றுபோன அரவினை அங்கர் கோமான் ஆசுகம் ஆக கொண்டான்; வரிசிலை விசயன் தன்மேல் மறு கணை தொடுக்கா வண்ணம் ஒரு வரம் வேண்டுக, என்றான், உற்றவர்க்கு உறுதி சூழ்வான்.]

**விளக்கம் :-** அக்கினி பகவான் உணவுகொள்ளும் பொருட்டு விசயன் காண்டவ தகனம் செய்த காலத்தில், தப்பிச் சென்ற அசுவசேனன் என்ற பாம்பைக் கர்ணன் அஸ்திரமாகக் கொண் டுள்ளான்; அந்த அஸ்திரத்தை இரண்டாவது முறை விடாதபடி, அவனிடத்தில் ஒரு வரம் வேண்டிப் பெறுக, என்று தன்னை அடைந்த அடியார்களுக்கு நன்மையையே நினைப்பவனாகிய கண்ணன் கூறினான்,—என்பதாம்.

**159. மன்றலந் தெரியல் வெய்யோன் மதலையென் மைந்த**
**னென்ப(து)**
**அன்றெனக் குரைத்தா யாயி னவனுட**
**னணுக வொட்டேன்.**
**சென்றுயி ரொழிக்கு மாறு செருவினை விளைத்துப் பின்னை**
**இன்றெனக் குரைத்தா யையா வென்னினைத் தென்செய்**
**தாயே.**

[மன்றல் அம் தெரியல் வெய்யோன் மதலை என் மைந்தன் என்பது அன்று எனக்கு உரைத்தாய் ஆயின், அவனுடன் அணுக ஒட்டேன்; சென்று உயிர் ஒழிக்கும் ஆறு செருவினை விளைத்து பின்னை இன்று எனக்கு உரைத்தாய் ஐயா, என் நினைத்து என் செய்தாய், ஏ.]

**விளக்கம் :-** அன்று - முன்னமேயே. சென்று உயிர் ஒழிக்கும் செரு - போர்க்களம் சென்று உயிரை அழித்துக்கொள்ளும் போர். இன்று - இப்பொழுது. ''முன்னமேயே, விஷயத்தை எனக்குக் கூறாமல், போரை மூளச் செய்துவிட்டு, இப்பொழுது கூறுகின்றாயே'', என்று குந்தி புலம்பினாள் என்பதாம்.

**160. கான்பட்ட கனலிற் பாயுங் கடுங்கணை விலக்கி னேனேல்**
**வான்பட்ட புரவித் தேரோன் மகன்படு மகவான் மைந்த**
**தான்பட்டு மடியுஞ் சென்று தடாதினி யிருந்தே னாகில்**
**யான்பட்ட கொடுமை நன்றென் றென்பட்டா ளிரங்கி**
**வீழ்ந்தாள்.**

[கான்பட்ட கனலின் பாயும் கடுங்கணை விலக்கினேனேல் வான்பட்ட புரவி தேரோன் மகன்படும், மகவான் மைந்தன் தான் பட்டு மடியும் சென்று தடாது இனி இருந்தேனாகில்; யான்பட்ட கொடுமை நன்று, என்று என் பட்டாள் இரங்கி வீழ்ந்தாள்.]

**விளக்கம் -:** காண்டவனத் தீயில் அகப்பட்டு அதனின்று தப்பி ஓடிய பாம்புக் கணையை விசயன்மேல் விடாது விலக்கினேனாயின் வான் பட்ட புரவித் தேரோன் (சூரியன்) மகன் மடிவான், நான் சென்று விலக்காதிருப்பேனாகில் மகவான் மைந்தன் (அருச்சுனன்) அக் கணை பட்டு மடிவான்; நான் அடைந்த இக் கொடியநிலை மிகவும் நன்றாயிருக்கின்றது! என்று சொல்லிக் குந்தி வீழ்ந்து அழுதாள், என்பது பொருள். 'என்பட்டாள்' என்றது, ''மிகவும் துன்பப்பட்டாள்'' என்ற பொருளது. 'கான் பட்ட கனலின் பாயும் கணை' என்பதற்குக் 'கானில் எழுந்த தீயைப் போல் பாயும் கணை', என்றும் பொருள் கொள்ளலாம்.

## கண்ணன் குந்தியைத் தேற்றுதல்

**161. தேக்குந்தி யகிலுஞ் சாந்துஞ் சிந்துநீர் நதிசூழ் செல்வக்
கோக்குந்தி யரசன் பாவை குலைந்தழுங் கொடுமை கண்டு
மீக்குந்தி யுறிக டோறும் வெண்ணெயுந் தயிரு முண்ட
வாக்குந்தி மலரோன் பின்னு மனத்தளர் வகற்றி னானே.**

[தேக்கு உந்தி அகிலும் சாந்தும் சிந்தும் நீர் நதி சூழ் செல்வம் கோ குந்தி அரசன் பாவை குலைந்து அழும் கொடுமை கண்டு, மீ குந்தி உறிகள் தோறும் வெண்ணெயும் தயிரும் உண்ட வாக்கு உந்தி மலரோன் பின்னும் மனம் தளர்வு அகற்றினான், ஏ.]

**விளக்கம் :-** தேக்கு மரங்களையும், அகில் சந்தனக் கட்டை களையும் வாரிக் கொண்டுவந்து கரைகளில் ஒதுக்கும் நீரையுடைய நதி சூழ்ந்ததும், செல்வத்தின் சிறப்புடையதுமான குந்தி நாட்டு அரசனது மகளான குந்தி என்பாள் நிலைகலங்கி அழுகின்ற கொடிய நிலைமையைக் கண்டு,—என்பது முதல் இரண்டடிகளின் பொருள். உரல், ஏணி முதலியவற்றின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு உரிகள் எல்லாவற்றிலுமுள்ள வெண்ணெயும் தயிரும் இளம்பிராயத்தில் உண்டருளிய திருவாய், திருவுந்தி ஆகிய மலர் களை உடைய கண்ணபிரான், (வருந்தும் குந்தியினுடைய) ஆற்றாமையை நீக்குவானாயினான், என்பது ஈற்றடிகளின் பொருள். வாக்கு - திருவாய்.

**162. பைவருந் தலைக ளைந்து படைத்தபன் னகமே போல
ஐவரும் படுத னன்றோ வங்கர்கோன் படுத னன்றோ
உய்வருஞ் சமரி லாவி யொருவர்போ யொருவ ருய்யார்
நைவருந் துயர மாறி நடப்பதே கரும மென்றான்.**

[பைவரும் தலைகள் ஐந்து படைத்த பன்னகமே போல, ஐவரும் படுதல் நன்றோ ? அங்கர்கோன் படுதல் நன்றோ ? உய்வு அருஞ் சமரில் ஆவி ஒருவர் போய் ஒருவர் உய்யார் ; நைவரும் துயரம் ஆறி நடப்பதே கருமம் என்றான்.]

**விளக்கம் :-** ஐந்து தலைகளை உடைய நாகம் போல், போரில் ஐவரும் மடிதல் நல்லதா ? அல்லது கர்ணன் ஒருவன் மடிவது நல்லதா ? தப்பிப் பிழைப்பதற்கு அரிய போரில் ஐவரில் ஒருவர் மாண்டால், மற்றவர் உயிரோடு இரார். எனவே, துயரம் நீங்கிக் கர்ணனிடம் செல்வதே செய்வதற்குரியது, என்று கண்ணன் தேற்றினான்,—என்பதாம்.

## அத்தமன வருணனை

**163. காளமா முகிலின் மேனி கரியநா யகனுந் தேற்றி
மீளமா தவத்தின் மிக்க விதுரன்வாழ் மனையி னெய்த
வாளமால் வரையில் வெய்யோன் குறுகினன் வருணன் றிக்கில்
நீளமால் யானை நெற்றி நிறத்தசெந் திலகம் போன்றே.**

[காளம் மாமுகிலின் மேனி கரிய நாயகனும் (குந்தியைத்) தேற்றி, மீள, மா தவத்தின் மிக்க விதுரன் வாழ் மனையின் எய்த, (சக்கர) வாள மால் வரையில் வெய்யோன் குறுகினன் வருணன் திக்கில், நீளம் மால் யானை நெற்றி நிறத்த செம் திலகம் போன்று, ஏ.]

**விளக்கம் :-** கண்ணன் விதுரன் மனையை அடையச் சூரியன், அஸ்தமித்தான், என்பதாம். வெய்யோன், நீளமால் யானை நெற்றியில் (அமைந்த) செம் நிறத்த திலகம் போன்று, வாள மால்வரையில் குறுகினன்,—என்பது ஈற்றடிகளின் அன்வயம், வாளமால்வரை - சக்கரவாளகிரி. வருணன் திக்கு - மேற்குத் திசை. நீண்ட பெரிய யானையின் நெற்றியினிடத்தே அமைந்த செந்நிறத் திலகம் போன்று, சூரியன் மேலைத் திசையில் உள்ள சக்கரவாளகிரியை அடைந்தான், அதாவது அஸ்தமித்தான்,— என்பதாம். சக்கரவாளகிரி, யானை, திலகம், வெய்யோன் (சூரியன்).

**164. நாற்றிசை யுலகு தன்னி னான்மறை யுணர்ந்தோர் தாமும்**
**போற்றிசை மாலை யென்னும் பொற்புடை யணங்கு வைக**
**மாற்றிசை விலாத செம்பொன் மண்டபந் தன்னி லாதி**
**மேற்றிசைக் கடவு ளிட்ட வெயின்மணிப் பீடம்**
**போன்றான்.**

[நால் திசை உலகு தன்னில் நால் மறை உணர்ந்தோர் தாமும் போற்று இசை மாலை என்னும் பொற்பு உடை அணங்கு வைக, மாற்று இசைவு இலாத செம்பொன் மண்டபம் தன்னில் ஆதி மேல் திசை கடவுள் இட்ட வெயில் மணி பீடம் போன்றான்.]

**விளக்கம் :-** முன் செய்யுளில் அஸ்தமன சூரியனை யானை யின் நெற்றித் திலகம் என்று வருணித்த புலவர், இச் செய்யுளில் சந்தியாதேவி உட்காருவதற்காக வருணன் இட்ட மிகுந்த ஒளி உடைய இரத்தின மயமான ஆசனம், என்று வருணிக்கின்றார். நால்திசை உலகு - நான்கு திசைகளை எல்லையாக உடைய உலகம். நால் மறை உணர்ந்தோர் - அந்தணர். போற்று இசை - சந்தியாவந்தனக் கடன்களைச் செய்து வேதமந்திரங்களால் செய்யும் துதி. மாலை என்னும் பொற்புடை அணங்கு - மாலை என்று சொல்லப்படும் அழகிய தெய்வப் பெண், அதாவது சந்தியா தேவி. மாற்று இசைவு இலா செம்பொன் - மாற்றின் மிகுதியைச் சொல்லால் உரைக்க முடியாத. சிறந்த செம்பொன், (மாற்று யர்ந்த சிறந்த பொன்). ஆதி மேல் திசைக் கடவுள் - பழமையான வருணன். பொற்பு, அழகை உணர்த்தும் உரிச்சொல்.

**165. கொண்டமென் சிறைவண் டென்னுங் கொழுநருக்**
**கிடங்கொ டாமல்**
**முண்டகக் குலத்து மாதர் முகங்குவித் தூடி நிற்பக்**
**கண்டெதிர் நின்ற காதற் கயிரவக் கணிகை மாதர்**
**வண்டுறை நின்று தங்கள் வாய்மலர்ந் தழைக்க லுற்றார்.**

[கொண்ட மெல் சிறை வண்டு என்னும் கொழுநர்க்கு இடம் கொடாமல் முண்டகம் குலத்து மாதர் முகம் குவித்து ஊடி நிற்ப, கண்டு எதிர் நின்ற காதல் கயிரவம் கணிகை மாதர், வள் துறை நின்று தங்கள் வாய் மலர்ந்து அழைக்கல் உற்றார்.]

**விளக்கம் :-** அந்தியில் தாமரை குவிதலையும், அல்லி மலர் மலர்தலையும் அழகாக வர்ணிக்குஞ் செய்யுள் இது. மென்மையான சிறகுகளை உடைய வண்டு என்னும் கணவனுக்கு (தன்னை நெருங்க) இடம் கொடாமல், முண்டகம் (தாமரை) என்னும் குல மாதர் முகம் குவித்து ஊடி நிற்க, அதைப் பார்த்து, (இதுதான் ஏற்ற சமயம் என்று) எதிர் நின்ற அல்லி மலர்கள் ஆகிய காதல் குறி போக்குகின்ற வேசையர் அழகிய நீர்த்துறைகளினின்று, தங்கள் வாய் மலர்ந்து (முறுவல் செய்து) அழைப்பாராயினர்,— என்பது பொருள்.

### சந்திரோதய வருணனை

**166. கானெலா மலர்ந்த முல்லைக் ககனமீ தெழுந்த தென்ன**
**வானெலாம் வயங்கு தாரை நிரைநிரை மலர்ந்து தோன்ற**
**வேனிலான் விழவின் வைத்த வெள்ளிவெண் கும்ப மென்ன**
**தூநிலா மதியம் வந்து குணதிசைத் தோன்றிற் றம்மா.**

[கான் எலாம் மலர்ந்த முல்லை ககனம் மீது எழுந்தது என்ன, வான் எலாம் வயங்கு தாரை நிரை நிரை மலர்ந்து தோன்ற, வேனிலான் விழவின் வைத்த வெள்ளி வெண் கும்பம் என்ன தூ நிலா மதியம் வந்து குணதிசை தோன்றிற்று, அம்மா.]

**விளக்கம் :-** கான் எலாம் மலர்ந்த முல்லை மலர்கள் வானத்தின்மீது எழுந்து பரவிய தென்ன, வான் எலாம் விளங்கும் நட்சத்திரங்கள் வரிசை வரிசையாக விளங்கித் தோன்ற, மன்மதனது உற்சவத்திற்கென்று மங்களகரமாக வைக்கப் பெற்ற வெள்ளியால் செய்யப்பட்ட வெண்ணிறமான பூர்ணகும்பம்போல், தூய நிலவொளியை உடைய சந்திரன் கீழ்த்திசையில் தோன்றிற்று. அம்மா ; ஈற்றிசை. வேனிலான் - மன்மதன். விழா - உற்சவம். வான் நிறைந்த நட்சத்திரங்களுக்கு இடையே சந்திரன் உதயமானான், என்க. தாரை - நட்சத்திரம்.

**167. தூவிய னிலவு தோன்றத் துணைவரைப் பிரிந்தோர் கண்கள்**
**காவியு மாம்ப லும்பைங் கருவிள மலரும் போன்ற**
**மேவிய மகளிர் கண்கண் மீனெறி பரவை யேழும்**
**தாவிய லுழையுங் காதற் சகோரமும் போன்ற மாதோ,**

[தூ இயல் நிலவு தோன்ற துணைவரை பிரிந்தோர் கண்கள், காவியும் ஆம்பலும் பைங்கருவிள மலரும் போன்ற; மேவிய மகளிர் கண்கள் மீன் எறி பரவை ஏழும் தாவு இயல் உழையும் காதல் சகோரமும் போன்ற, மாதோ.]

**விளக்கம் :-** தூ இயல் நிலவு - தூய தன்மையதான நிலவொளி. (அது தோன்ற) கணவரைப் பிரிந்த மகளிரின் கண்கள் (துயில் கொள்ளாமையின்) மலர்ந்த நீல மலரையும், ஆம்பல் மலரையும் பசிய கருவிள மலரையும் ஒத்திருந்தன; கணவரைக் கூடிய மகளிரின் கண்கள், (களிப்பின் மிகுதியால்) மீன்களை அலைத்து தள்ளுகின்ற ஏழு கடல்களையும் தாவும் தன்மையான மான்களையும். நிலவை விரும்பும் சகோர பட்சிகளையும் ஒத்திருந்தன, என்பது பொருள். சகோரம், என்பது நிலவை உணவாகக் கொள்ளும் ஒரு கற்பனைப் பறவை. வியல் தூ நிலவு, என்று கொண்டு, எங்கும் வியாபித்த தூய நிலவு, என்றும் பொருள் கொள்ளலாம் எழுகடல் தாவும் உழை என்றது, இல் பொருள். மான் என்க. மாதோ: அசை.

**168. அரவிய லல்கு லாரு மிகிழ்நரு மன்பு கூர**
**விரவிய வமளி யெய்தி வீதிமா நகரி யெங்கும்**
**பரவையி னிமிர்ந்த வோதை யமர்ந்தபின் பரித்தேர் வேந்தன்**
**இரவிடைச் சூழ்ந்த வண்ண மின்னதென் றியம்பு கின்றாம்.**

[அரவு இயல் அல்குலாரும் மகிழ்நரும் அன்புகூர, விரவிய அமளி எய்தி வீதி மாநகரி எங்கும் பரவையின் நிமிர்ந்த ஓதை அமர்ந்தபின், பரி தேர் வேந்தன் இரவு இடை சூழ்ந்த வண்ணம் இன்னது என்று இயம்புகின்றாம்.]

**விளக்கம் :-** பாம்பின் படம்போன்ற அல்குல் பிரதேசத்தை உடைய மகளிரும் அவர்கள் கணவரும் அன்பு மிகுந்தவராய்ப் பொருந்திய, படுக்கை அடைந்து பெரிய வீதிகளை உடைய நகர் எங்கும் கடல் ஒலிபோல் வியாபித்திருந்த ஓசை அடங்கியபின், நடு இரவில் பரித்தேர் வேந்தன் (துரியோதனன்) தன்னைச் சேர்ந்தாரோடு ஆலோசனை செய்த விதத்தை, இன்ன தன்மையது என்று, கூறுவோம், என்பது பொருள்.

சதியாலோசனை

**169. தந்தையும் தம்பி மாருங் கன்னனுஞ் சகுனி தானும்**
**சிந்தையிற் றெளிந்த கல்விச் செமமுதி யமைச்சர் தாமும்**
**முந்தர வுயர்த்த கோமா னேவலான் முழுது மெண்ணி**
**மந்திர மிருப்பான் வந்தோர் மண்டபங் குறுகி னாரே.**

[தந்தையும் தம்பிமாரும் கன்னனும் சகுனி தானும், சிந்தையில் தெளிந்த கல்வி செழுமதி அமைச்சர் தாமும், முந்து அரவு உயர்த்த கோமான் ஏவலால் முழுதும் எண்ணி மந்திரம் இருப்பான் வந்து ஓர் மண்டபம் குறுகினார், ஏ.]

**விளக்கம் :-** மனத்தினிடத்தே ஐயம் திரிபுக்கு இடமில்லாமல் கற்ற கல்வியும் நுண்ணிய அறிவின் செழுமையும் உடைய மந்திரிகளும், என்பது இரண்டாவது அடியின் பொருள். முந்து அரவு உயிர்த்த கோமான் - முன்னே உயர எடுத்த பாம்புக்கொடியோனான துரியோதனன். முழுதும் எண்ணி மந்திரம் இருப்பான் - தீர ஆலோசித்து முடிவு செய்யும் பொருட்டு. தந்தையோடு தம்பியரும், கர்ணன், சகுனி, மதிமந்திரிகள் ஆயவரும், துரியோதனனது ஏவலால், நன்றாக ஆராய்ந்து முடிவு காணும் பொருட்டு, (இரவில்) ஒரு மண்டபத்தை அடைந்தனர். தெளிந்த கல்வியும் நுண்ணறிவும் உடையவர்களாயினும் துரியோதனனிடம் தம் மனத்தில் பட்டதை எடுத்துச் சொல்ல அஞ்சும் மந்திரிகள், என்ற கருத்துத் தோன்ற, ''சிந்தையில் தெளிந்த கல்விச் செழுமதி அமைச்சர்'', என்றார்.

**170. தீதறு மதிவல் லோரைச் செழுமதிக் குடையா னோக்கிப்**
**பாதவ வனத்திற் போன பாண்டவர் தம்மை மீண்டும்**
**மேதக அழைத்து நாடு வேண்டுமி னென்று மூட்டும்**
**யாதவன் றனித்து வந்தா னென்செய்வ தியம்பு**
**மென்றான்.**

[தீது அறு மதி வல்லோரை செழு மதி குடையான் நோக்கி, ''பாதவம் வனத்தில் போன பாண்டவர் தம்மை மீண்டும் மேதக அழைத்து, நாடு வேண்டுமின், என்று மூட்டும் யாதவன் தனித்து வந்தான், என் செய்வது? இயம்பும்'', என்றான்.]

**விளக்கம் :-** செழுமதி குடையோன்-கலையின் நிறைவுடைய சந்திரன் போன்ற வெண்கொற்றக் குடையை உடைய துரியோதனன். பாதவ வனம் - மரங்கள் அடர்ந்த காடு, மேதக - மேன்மையோடு, சிறப்பினோடு. மூட்டும் - கலகம் விளைக்கும். ''பாண்டவரை அழைத்து வந்து மறுபடியும் நாடு கேளுங்கள், என்று தூண்டும் யாதவன், தனியே வந்துள்ளான், இந்த நிலையில் நாம் செய்யத்தக்கது யாது, சொல்வீர்'', என்று, அவையோரைத் துரியோதனன் கேட்டான்,—என்பதாம்.

**171. பொரும்படை மைந்தன் கூறத் தந்தையும் பொருந்தச்**
**சொல்வான்**
**இரும்புலி வலையிற் பட்டால் விடுவரோ வெயின ரானோர்**
**வரம்பில்வெஞ் சேனை யோடும் வளைந்தினி மாயன்**
**றன்னைக்**
**கரும்பொழு தகலு முன்னே கொல்வதே கரும மென்றான்.**

[பொரும் படை மைந்தன் கூற, தந்தையும் பொருந்த சொல்வான், ''இரும்புலி வலையில் பட்டால் விடுவரோ எயினர் ஆனோர்! வரம்பு இல் வெம் சேனையோடும் வளைந்து, இனி மாயன் தன்னை கரும் பொழுது அகலும் முன்னே கொல்வதே கருமம்'', என்றான்.]

**விளக்கம் :.** பொரும் படை - போர் செய்வதற்குரிய படை. தந்தை - திருதராட்டிரன். பொருந்தச் சொல்வான் - மகனது மனத்தோடு பொருந்தக் கூறுவான் ஆகி. கரும்பொழுது - இரவு. வலையில் அகப்பட்டுக்கொண்ட புலியை எயினர் கொன்று அழிப்பதுபோல், தனியே வந்து அகப்பட்டுக்கொண்ட மாயவனை இரவு விடியுமுன் கொல்வதே செய்யத் தக்கது, என்று திருத ராட்டிரன் கூறினான், — என்பதாம். இச் செய்யுள், **எடுத்துக் காட்டு உவமையின்** பாற்படும். வலையில் எளிதே அகப்படுத்த முடியாத புலி, என்பது தோன்ற ''இரும் புலி'', என்றான். இரவில் அவன் தூங்குகையில் கொல்ல வேண்டும், என்ற கருத்தில், ''கரும்பொழுது அகலு முன்னே'', என்றான். அதாவது, பகலில் கொல்லுதல் அரியது, என்றபடி.

## விகர்ணன் தகைதல்

**172. கண்ணிலா னுரைத்த மாற்றங் கேட்டலுங் காவ லோரின்**
**மண்ணிலா ரிதற்கு முன்பு தூதரை வளைந்து கொன்றார்**
**எண்ணிலா வித்த வெண்ண மெவ்வுழி கற்ற தென்று**
**வெண்ணிலா முறுவல் செய்து விகன்னனும் விளம்ப**
**லுற்றான்.**

[கண் இலான் உரைத்த மாற்றம் கேட்டலும், ''காவலோரில் மண்ணில் ஆர் இதற்கு முன்பு தூதரை வளைந்து கொன்றார்? என் இலா இந்த எண்ணம் எ உழி கற்றது'', என்று, வெள் நிலா முறுவல் செய்து விகன்னனும் விளம்பல் உற்றான்.]

**விளக்கம் :-** கண்ணிலான் கூறியது கேட்ட, அவனது கடை மைந்தனான விகர்ணன் என்பான், நகைத்து, ''உலகத்தில் காவல் செய்யும் அரசர்களில் தூதரை வளைந்துகொண்டு கொன்றவர் யாவர்? நினைக்கத் தகாத இந்த யோசனையை எங்கே கற்றது'', என்று கூறுவானாயினான். இவன், திரௌபதியின் துகிலுரிந்த போதும், தன் தமையனைத் தகைந்து பேசியுள்ளான். எண் இலா எண்ணம் - எண்ணுதற்கு அமையாத இந்த எண்ணம், அதாவது, எண்ணத் தகாத யோசனை.

**173. மூத்தவ ரிளையோர் வேத முனிவரர் பிணியின் மிக்கோர்**
**தோத்திர மொழிவோர் மாதர் தூதரென் றிவரைக்**
**கொல்லின்**
**பார்த்திவர் தமக்கு வேறு பாவமற் றிதனி னில்லை**
**பூத்தெரி தொடையாய் பின்னு நரகினும் புகுவ ரென்றான்.**

[''மூத்தவர், இளையோர், வேதம் முனிவரர், பிணியில் மிக்கோர், தோத்திரம் மொழிவோர், மாதர், தூதுவர் என்ற இவரை கொல்லின், பார்த்திவர் தமக்கு வேறு பாவம் (மற்று) இதனின் இல்லை, பூ தெரி தொடையாய், பின்னும் நரகினும் புகுவர்'', என்றான்.]

**விளக்கம் :-** தோத்திரம் மொழிவோர் - துதிபாடுவோர். வேறு பாவம் இதனின் இல்லை-இதைப் போன்ற கொடிய பாவம் வேறு இல்லை ; அதாவது, பிராயச்சித்தம் இல்லாததும், நரகத்தை அளிக்கக் கூடியதுமான பெரிய பாவம். பூ தெரி தொடையாய் - பூக்கள் மலர்ந்து விளங்குகின்ற மாலையை உடையவனே ? திருதராட்டிரனை, இவ்வாறு அழைத்துக் கூறினான், என்க. அல்லது துரியோதனனை விளித்ததாகவும் கொள்ளலாம். மற்று : அசை.

**174. பழியுடைப் பகைஞ ரேனுந் தன்பெரும் பதியில் வந்தால்**
**அழிவுறக் கோறல பாவ மாண்மையு மன்றா மென்பார்**
**கழிகடற் சேனை சூழக் கங்குலின் வளைந்திட் டாலும்**
**எழிலுடைக் கொண்டல் வண்ண னகப்படா னெவர்க்கு**
**மென்றான்**

[பழி உடை பகைஞரேனும் தன் பெரும்பதியில் வந்தால் அழிவு உற கோறல் பாவம, ஆண்மையும் அன்று ஆம், என்பார் ; கழி கடல் சேனை சூழ கங்குலின் வளைந்திட்டாலும் எழில் உடை கொண்டல் வண்ணன் அகப்படான் எவர்க்கும் என்றான்.]

**விளக்கம் :-** பழி உடை பகைஞர் - தன்னைப் பழிக்கும் பகைவர், அல்லது பழிக்கப்படுவதற்குரிய பகைவர். அழிவுறக் கோறல் - அழியும்படி கொல்லல். கழி - மிகுதிப் பொருளதான உரிச்சொல். எழிலுடை கொண்டல் வண்ணன் - கண்ணன். பழியுடைப் பகைவர் தன் பதி வந்தாலும் அவரைக் கொல்லுதல் பாவம் ஆவதோடு, ஆண்மையும் ஆகாது, என்பர் ; மேலும் சேனையோடு இரவில் சூழ்ந்து கொண்டாலும், கண்ணன் உங்கள் கையிற்படான்,—என்பதாம்.

துச்சாதனன் கூற்று

**175. வெம்புய வலியான் மாதை விரிதுகி லுரிந்த வீரன்**
**தம்பியை முனிந்து சீறித் தமையனை நோக்கிச்**
**சொல்வான்**
**வம்பவி ழலங்கன் மார்ப மந்தண முரைக்க லுற்றால்**
**இம்பர்மற் றியாது சொல்ல விளைஞரை யழைத்த**
**தென்றான்.**

[வெம் புயம் வலியால் மாதை விரி துகில் உரிந்த வீரன் தம்பியை முனிந்து சீறி, தமையனை நோக்கி சொல்வான், வம்பு அவிழ் அலங்கல் மார்ப, மந்தணம் உரைக்கல் உற்றால், இம்பர் (மற்று) யாது சொல்ல இளைஞரை அழைத்தது, என்றான்.]

**விளக்கம் :-** துகிலுரிந்த வீரனான துச்சாதனன் தம்பியை மிக முனிந்து, தமையனை நோக்கிக் கூறுவானாய், மணங்கமழும் மாலையாய், என்று அவனை அழைத்து, அந்தரங்க ஆலோசனை செய்யத் தொடங்கினால், (அந்த இரகசிய ஆலோசனைக்குரிய) இந்த இடத்தில் வயது முதிராத இளைஞனை, என்ன ஆலோசனை சொல்ல அழைத்தது? என்று கூறினான், என்பதாம். வீரன், என்றது இகழ்ச்சி. விரிதுகில் - கண்ணன் அருளால் வற்றாது விரிந்த துகில். மந்தணம் - இரகசியச் சதியாலோசனை. முனிந்து சீறி - மிகக் கோபித்து: ஒரு பொருட் பன்மொழி.

**176. அதிரதர் முதலா வுள்ள வவனிபர் வளைந்து நிற்ப**
**எதிர்முகி றவழுங் கோயி லெரியினை யெங்கு மூட்டி**
**விதுரனு மவனுஞ் சேர வெந்திட மலைவ தல்லால்**
**மதிபிறி தில்லை யின்னே வல்விரைந் தெழுமி னென்றான்.**

[அதிரதர் முதல் ஆ(க) உள்ள அவனிபர் வளைந்து நிற்ப எதிர், முகில் தவழும் கோயில் எரியினை எங்கும் மூட்டி, விதுரனும், அவனும் சேர வெந்திட மலைவது அல்லால், மதி பிறிது இல்லை, இன்னே, வல் விரைந்து எழுமின், என்றான்.]

**விளக்கம் :-** அதிரதர் - முழுத்தேர் வீரர். எதிர் வளைந்து நிற்ப, என்று கூட்டுக. அதிரதரோடு எல்லா அரசர்களும் ஒன்று பட்டு விதுரன் மனையை வளைத்துக்கொண்டு எல்லாப் பக்கங் களிலும் தீயை மூட்டி, விதுரனையும் கண்ணனையும் அழிப்பதே மதியுடைமையாகும், இப்பொழுதே விரைந்து எழுக,—என்று கூறினான், என்பதாம்.

கர்ணன் கூற்று

**177. செங்கதி ரெழுந்து சீறிற் செறியிரு ணிற்ப துண்டோ**
**இங்கிவ னிருந்த வில்லி லெரியிட வேண்டு மோதான்**
**வெங்கணை யொன்றி னாலே விளிந்திட வென்று மீள்வேன்**
**கங்குலி னெழுமி னென்று கன்னனுங் கனன்று சொன்னான்.**

[செங்கதிர் எழுந்து சிறின் செறி இருள் நிற்பது உண்டோ! இங்கு இவன் இருந்த இல்லில் எரி இட வேண்டுமோதான்! வெம் கணை ஒன்றினாலே விளிந்திட வென்று மீள்வேன், கங்குலின் எழுமின் என்று கன்னனும் கனன்று சொன்னான்.]

**விளக்கம் :-** ''சூரியன் உதிக்க, அடர்ந்த இருள் அதன்முன் அழியாமல் நிலைத்து நிற்பது உண்டோ? கண்ணன் இருந்த மனையில் தீ மூட்டல் வேண்டுமோ? எனது வெவ்விய கணை ஒன்றால், அவன் அழியுமாறு வென்று திரும்புவேன்; இவ் விரவிலேயே போர் எழுமின்'', என்று கர்ணன், கனன்று கூறினான், என்பதாம்.

### சகுனியின் சூழ்ச்சி

**178. பதிப்பெயர்ந் தேகி நாளைப் பகைவரைக் கூடு மாயின்**
**விதிப்பய னென்ன நம்மை வெஞ்சமர் வெல்ல**
**வொட்டான்**
**மதிப்பதென் வேறு கள்ள மாயனை மனையிற் கோலிச்**
**சதிப்பதே கரும மென்று சௌபலன் பின்னுஞ்**
**சொல்வான்**

[பதி பெயர்ந்து ஏகி நாளை பகைவரை கூடும் ஆயின், விதி பயன் என்ன நம்மை வெம் சமர் வெல்ல ஒட்டான், மதிப்பது என் வேறு? கள்ளம் மாயனை மனையில் கோலி சதிப்பதே கருமம் என்று சௌபலன் பின்னும் சொல்வான்.]

**விளக்கம் :-** நமது நகர் நீங்கிச் சென்று பகைவரைச் சேருவானாயின், தவறாது பயன் தரும் விதிபோல், போரில் நம்மை வெற்றி கொள்ளவிட மாட்டான். வேறே எண்ணுவதற்கு என்ன இருக்கின்றது? வஞ்சனையுடைய மாயனை நம் மனையில் அழைத்து அவனை வளைத்துக்கொண்டு மோசத்தால் வலி அழிப்பதே நாம் செய்வதற்குரிய கருமம், என்று சுபலன் மகனான சகுனி கூறி, மேலும் கூறுவானாயினான்,—என்பதாம். கோலு தல் - சூழ்ச்சியால் அகப்படுத்தல்.

**179. கொல்லுவ தியற்கை யன்று குழிபறித் தரக்க ரோடு**
**மல்லரை யிருத்தி மேலோ ராசனம் வகுத்து நாளை**
**எல்லிடை யழைத்து வீழ்த்தி யிகலுடன் விலங்கு பூட்டித்**
**தொல்லருஞ் சிறையில் வைத்த றூதருக் குரிமை**
**யென்றான்**

[கொல்லுவது இயற்கை அன்று, குழி பறித்து அரக்கரோடு மல்லரை இருத்தி, மேல் ஓர் ஆசனம் வகுத்து, நாளை எல் இடை அழைத்து வீழ்த்தி இகலுடன் விலங்கு பூட்டி, தொல் அருஞ்சிறை யில் வைத்தல், தூதருக்கு உரிமை என்றான்.]

**விளக்கம் :-** தூதாக வந்தவரைக் கொல்லல் அரசர்க்குத் தக்கது ஆகாது, ஒரு பெரிய குழிதோண்டி அதனுள் அரக்கரோடு மல்லர்களையும் இருக்கச் செய்து, அதன்மேல் ஓர் ஆசனம் அமைத்து, நாளைப் பகலில் அவனை இங்கே அழைத்து, அப் படு குழியில் வீழ்த்தி, வலிய விலங்கு பூட்டித் தப்புவதற்கு அரிய பழைமையான சிறையில் வைத்தல் தூதருக்குரிய தண்டனை ஆகும், என்று சகுனி கூறினான், என்பதாம்.

### நிலவறை அமைத்தல்

**180. மாதுல னுரைத்த மாற்ற மருகனு மிசைந்து கங்குல்**
**போதிடை யனேக மல்லர் வருகெனப் புகன்று தானும்**
**நீதியி னிருந்து தாழ நிலவறை சமைத்த பின்னர்**
**ஆதிநூ றாயி ரம்போ ரரக்கரை யதனுள் வைத்தான்.**

[மாதுலன் உரைத்த மாற்றம் மருகனும் இசைந்து, கங்குல் போதிடை அனேகம் மல்லர் வருக என புகன்று, தானும் நீதியின் இருந்து, தாழ நில அறை சமைத்த பின்னர், ஆதி நூறாயிரம் போர் அரக்கரை அதனுள் வைத்தான்.]

**விளக்கம் :-** மாதுலன் சொன்ன சூழ்ச்சியை மருகனும் ஏற்று, அவ்விரவிலேயே, அனேக மற்போர் வல்லாரை அழைத்து, தானும் அங்கே முறையின் இருந்து ஆழமாக நிலவறை அமைத்து, அதனுள் ஒரு லட்சம் அரக்கரை இருக்கச் செய்தான்,—என்பதாம். நிலவறை-பூமிக்குள் தோண்டப்படும் பள்ளம். ''நீதியின் இருந்து நிலவறை தாழச் சமைத்து'', என்பதை, ''நீதியின் தாழ இருந்து நிலவறை சமைத்து'', என்றும் கொள்ளலாம், அப்பொழுது, நீதி யினின்றும் வழுவியிருந்து நிலவறை சமைத்து, என்பது பொரு ளாகும். ஆதி - பழைமையான.

**181.** **மல்லர்பப் பரவர் தம்மை மற்றதி னிரட்டி வைத்தான்**
**வில்லுடை வீரர் தம்மை வேறதி னிரட்டி வைத்தான்**
**பல்படை வல்லோ தம்மைப் பதின்மடங் கதனில் வைத்தான்**
**அல்லிலோர் கடிகை தன்னி லறிவனை யழிக்க வென்றே.**

[மல்லர் பப்பரவர் தம்மை (மற்று) அதினின் இரட்டி வைத்தான், வில் உடை வீரர் தம்மை வேறு அதினின் இரட்டி வைத்தான், பல் படை வல்லோர் தம்மை பதின் மடங்கு அதனில் வைத்தான், அல்லில் ஓர் கடிகை தன்னில், அறிவனை அழிக்க, என்றே.]

**விளக்கம் :-** அறிஞனான கண்ணனை அழைத்து அழிக்க வேண்டுமென்று, அவ்விரவிலேயே, ஒரு நாழிகைப் பொழுதில், மற்போரில் வல்லராகிய பப்பர நாட்டு வீரரை, அந்த நிலவறையி லுள்ள இராக்கதரின் இரண்டு மடங்காக இருக்கச் செய்தான், வில் வீரர்களை வேறாக ஒருபுறம், அப் பப்பரர் தொகையினும் இரண்டு மடங்காக இருக்கச் செய்தான், பல ஆயுதங்களிலும் வல்லரான வீரர்களை, வில் வீரர் தொகையினும் பத்து மடங்காக இருக்க வைத்தான், என்பதாம். துரியோதனன் சமைத்த படுகுழி யில் கண்ணனை அழிப்பதற்காக வைக்கப்பட்டவர், அரக்கர் ஒரு லட்சம், பப்பரவர் இரண்டு லட்சம், வில்வீரர் நாலு லட்சம், பல்படை வல்லவர் நாற்பது லட்சம். இரு பத்துநான்கு நிமிஷம் கொண்டது ஒரு கடிகை. கடிகை, என்பது இங்கே, குறுகிய கால அளவை உணர்த்தும். மற்று, அசை.

**182.** **பெரும்பில வறையை வேயின் பிளப்பினா னிரைத்து மூடி**
**அரும்பெறன் மணிக ளாலோ ராசன மதன்மே லாக்கிச்**
**சுரும்பிமிர் மாலை தூக்கித் தொழிலுடை விதான மேற்றி**
**வரம்பிலா வென்றி வேலான் மாறிலா வண்ணஞ் செய்தான்.**

[பெரும் பிலம் அறையை வேயின் பிளப்பினால் நிரைத்து மூடி, அரும் பெறல் மணிகளால் ஓர் ஆசனம் அதன் மேல் ஆக்கி, சுரும்பு இமிர் மாலை தூக்கி தொழில் உடை விதானம் ஏற்றி, வரம்பு இலா வென்றி வேலான் மாறு இலா வண்ணம் செய்தான்.]

**விளக்கம் :-** எல்லையில் அடங்காத வெற்றியை உடைய வேல் ஏந்திய துரியோதனன், அந்தப் பெரிய ஆழமான நிலவறையை மூங்கிலின் பிளப்பினால் மேல்பாகத்தை வரிசைப்பட நன்றாக மூடி, பெறுவதற்கு அரிய இரத்தினங்களால் ஓர் ஆசனம் அதன்மேல் அமைத்து, வண்டுகள் மொய்த்து ரீங்காரம் செய்யும் பூமாலைகள் தொங்க விடப் பெற்ற வேலைப்பாடு உடைய மேற் கட்டியை அவ்வாசனத்திற்கு மேல் கட்டி, வேறுபாடு தோன்றா வண்ணம், எல்லாவற்றையும் செய்து முடித்தான், என்பது பொருள்.

## சூர்யோதயம்

**183. அடியவர் மனத்தி லுள்ள வாரிருட் கங்கு றீர்க்கும்**
**நெடியவ னிருக்க வென்று நிலவறை விரகிற் செய்த**
**கடியவ னியற்கை யஞ்சிக் கங்குலுங் கடிதிற் போகப்**
**படியவர் துயிலும் போகப் பரிதியு முதயஞ் செய்தான்.**

[அடியவர் மனத்தில் உள்ள ஆர் இருள் கங்குல் தீர்க்கும் நெடியவன் இருக்க என்று நில அறை விரகின் செய்த கடியவன் இயற்கை அஞ்சி, கங்குலும் கடிதில் போக, படியவர் துயிலும் போக பரிதியும் உதயம் செய்தான்.]

**விளக்கம் ;-** அடியார்களின் உள்ளத்து அரிய இருளை (அஜ்ஞான இருளை) போக்கியருளும் நெடியவனான கண்ணன் வீற்றிருப்பதற்கென்று வஞ்சனையாக நிலவறையைச் செய்து முடித்த கொடியனான துரியோதனனது பழியுடைய சுபாவத்தை அஞ்சி, இரவுப்பொழுதும் விரைவின் கழிய, சூரியன், நிலவுலகத்தவரது துயிலும் அகலும்படி உதயமானான்,—என்பது பொருள்.

**184. சிரந்தரு சுடிகை நாகத் திரண்மணி பலவுஞ் சிந்தி**
**நிரந்தர மருவி வீழு நிறந்திக ழுதயக் குன்றில்**
**பரந்தெழு மருக்கன் சூழ்ந்த படரிருட் கங்குல் கண்டு**
**புரந்தரன் கோயி லிட்ட பொங்கொளித் தீபம் போன்றான்.**

[சிரம் தரு சுடிகை நாகம் திரள்மணி பலவும் சிந்தி, நிரந்தரம் அருவி வீழும் நிறம் திகழ் உதயம் குன்றில் பரந்து எழும் அருக்கன் சூழ்ந்த படர் இருள் கங்குல் கண்டு, புரந்தரன் கோயில் இட்ட பொங்கு ஒளி தீபம் போன்றான்.]

**விளக்கம் :-** தலையிலே பொருந்திய உச்சிக் கொண்டையை உடைய நாகங்களின் திரளான மாணிக்க மணிகள் பலவும்

சிந்தப்பெற்று, இடையறாது சிவந்த நீரருவி விழப்பெற்று, அதனால் அழகிய நிறத்தின் விளக்கமுடைய உதயகிரியில் பரவிய கிரணங்களோடும் எழுந்த சூரியன், எங்கும் சூழ்ந்துள்ள இருளைப் பார்த்து, இந்திரன் மாளிகையில் ஏற்றி வைத்த ஒளி பொங்கும் தீபத்தைப்போல் காணப்பட்டான்,—என்பது பொருள். ஒளி பொங்கும் தீபம் - ஒளி மிகுந்த தீபம். இந்திரனது திசையாகிய கிழக்கில் உதித்த சூரியனை, இந்திரனது கோயிலில் இட்ட தீபம் என்றது, தற்குறிப்பேற்ற அணியாகும்.

**185. தொடர்ந்தொளி ருதய ராகத் தோடுற நெருங்கி மேன்மேல்
அடர்ந்தரி பரந்து காம னாகம வேதம பாடத்
தடங்கையன் மலைந்து லாவத் தாமரை முகமுங் காதல்
மடந்தையர் முகமுஞ் சேர மணம்பெற மலர்ந்த மாதோ.**

[தொடர்ந்து ஒளிர் உதயம் ராகத்தோடு உற நெருங்கி, மேல் மேல் அடர்ந்து அரிபரந்து காமன் ஆகமம் வேதம் பாட, தடங் கயல் மலைந்து உலாவ, தாமரை முகமும் காதல் மடந்தையர் முகமும் சேர மணம் பெற மலர்ந்த மாதோ.]

**விளக்கம் :-** தொடர்ந்து ஒளிர் உதயம் ராகத்தோடு, (அல்லது உதயம் ராகம் தோடு), உற நெருங்கி மேல் மேல் அடர்ந்து, அரி பரந்து, காமன் ஆகமம் வேதம் (பேதம்) பாட, தடங்கயல் (தடம் கயல்) மலைந்து உலாவ, தாமரை முகமும்,—

தடங்கயல் (தடகயல்) தொடர்ந்து ஒளிர் உதயம் ராகம் தோடு உற நெருங்கி மேல் மேல் அடர்ந்து, அரி பரந்து காமன் ஆகமம் வேதம் பாட மலைந்து உலாவக் காதல் மடந்தையர் முகமும்,—

சேர மணம் பெற மலர்ந்த மாதோ,—என்று அன்வயங் கொள்க.

இச் செய்யுள், உதயத்தில் தாமரை மலர்தலும், பெண்கள் கண் விழித்து முகமலர்ந்து இருத்தலும் ஆகிய இரு நிகழ்ச்சிகளைச் சிலேடையால் இணைத்துக் காட்டும் நலத்தது.

தொடர்ச்சி கொண்டு விளங்குகின்ற உதயத்திற்குரியதான உதய ராகத்தோடு (உதயராகம் பாடிக்கொண்டு), அல்லது, (உதயத்திற்குரிய செந்நிறமுடைய மலர்களோடு) மிக நெருங்கி, மேலும் மேலும் கூட்டமாய்ச் செறிந்து வண்டுகள் எங்கும் பரவி, சோலைகளில் பொருந்தியுள்ள மரபேதங்களில் (வேறு வேறு இனத்தவான மரங்களில்) இருந்து பாடவும், (ரீங்காரம் செய்யவும்), நீர்நிலைகளில் கயல்மீன்கள் ஒன்றோடொன்று மோதிக்கொண்டு சஞ்சரிக்கவும், தாமரைகளின் முகங்களும் (மேலிடங்களும்),—

பெரிய கடல் மீன்கள் போன்ற, நெடுந்தூரத்திலிருந்து தொடர்ச்சி அறாது ஒளி விடுகின்ற உதய சூரியனை ஒத்த செந் நிறத்தையுடைய (மாணிக்க மணிகளால் இழைக்கப்பெற்ற) தோடு என்னும் காது அணியோடு நெருங்கி மேலும் மேலும் சம்பந்தங்

கொண்டு, செவ்வரி படரப்பெற்று, காமனது ஆகம சாத்திரத்தை வெளியிடும்படி (காமக்குறி போக்கும்படி) பக்கங்களில் உலவுதலைச் செய்யும், காதல் மகளிரது முகங்களும்,—

ஒரு சேர மங்களகரமாக மலர்ந்தன,—என்பது பொருள்,

கா மன் ஆகமம் வேதம் - காவினிடம் பொருந்திய மரங்களின் பேதங்கள். பாட - (அம் மரங்களிலிருந்து வண்டுகள்) இசைக்க. காமன் ஆகம வேதம் பாட - பெண்கள் இங்கிதப் பார்வையால் காதல் குறி போக்க. மலைந்து உலாவுதல் - மோதிக்கொண்டு விளையாடுதல் ; கண்கள் பிறழ்ந்து நோக்குதல்.

**186.** **இருந்துயி லுணர்ந்து வேந்தர் யாவரு மிரவிற் சற்றும்**
**வருந்துயி லிலாத கண்ணான் வாழ்பெருங் கோயில் புக்கார்**
**பெருந்துயி லநந்த போகம் பேரணை துறந்த மாலும்**
**அருந்துயி லெழுந்து காலை யருங்கடன் முறையிற்**
**செய்தான்.**

[இருந்துயில் உணர்ந்து வேந்தர் யாவரும், இரவில் சற்றும் வரும் துயில் இலாத கண்ணான் வாழ்பெருங்கோயில் புக்கார், பெருந்துயில் அநந்தம் போகம் பேர் அணை துறந்த மாலும் அருந் துயில் எழுந்து காலை அருங்கடன் முறையின் செய்தான்.]

**விளக்கம் :-** நல்ல தூக்கம் தெளிந்து எழுந்த வேந்தர் எல்லோரும் இரவில் சிறிதும் இயல்பாய் வரும் தூக்கம் இல்லாத கண்ணனான துரியோதனன் வாழும் அரண்மனை அடைந்தனர்,— என்பது முதலிரண்டடிகளின் பொருள். ஆதிசேஷனது உடலாகிய பெரிய சயனத்தில் கொள்ளும் யோக நித்திரை துறந்த நெடு மாலாகிய கண்ணனும், பிறருக்கு அரியதான பொய்யுறக்கம் நீங்கிக் காலையில் செய்ய வேண்டிய அரிய கடமைகளை முறையே செய் தான், - என்பது ஈற்றடிகளின் பொருள். அநந்த போகம் - ஆதி சேஷனது உடல், (போகம், பாம்பின் உடல்).

## கண்ணன் துரியோதனன் அவை அடைதல்

**187.** **மாதவ னிருந்த கோயில் வந்தடி வணங்கி மன்னன்**
**தூதுவ ராழி யங்கைத் தோன்றலே துளப மாலே**
**யாதவ குலத்தோ ரேறே யெழுந்தருள் கென்றா னின்றெம்**
**மேதகு மரச னென்றார் முகுந்தனும் விரைந்து சென்றான்.**

[மாதவன் இருந்த கோயில் வந்து அடி வணங்கி மன்னன் தூதுவர், ஆழி அம் கை தோன்றலே, துளபம் மாலே, யாதவ குலத்தோர் ஏறே, எழுந்தருள்க என்றான், இன்று எம் மேதகும் அரசன் என்றார், முகுந்தனும் விரைந்து சென்றான்.]

**விளக்கம் :-** துரியோதனனது தூதர் விதுரன் மனை வந்து, கண்ணனை வணங்கி, எமது அரசன் அவை எழுந்தருள வேண்டும், என்று கூறினான், என்னலும், கண்ணனும் விரைந்து சென்றான், என்பதாம். தோன்றல் - (ஆண்பால் சிறப்புப் பெயர்) சிறந்தவன்.

**188. கந்தடு களிற்று வேந்தன் கண்ணிலா வரசுங் கங்கை**
**மைந்தனு முதலா வுள்ள மன்னரு மதிவல் லோரும்**
**தந்திர வகையு மேனை யிளைஞருந் தன்னைச் சூழ**
**இந்திர னிருக்கை யன்ன கோயிலூ டினிதி ருந்தான்.**

[கந்து அடு களிறு வேந்தன், கண் இலா அரசும், கங்கை மைந்தனும் முதல் ஆ(க) உள்ள மன்னரும், மதி வல்லோரும், தந்திரம் வகையும் ஏனை இளைஞரும் தன்னை சூழ, இந்திரன், இருக்கை அன்ன கோயிலூடு இனிது இருந்தான்.]

**விளக்கம் :-** கந்து அடு களிறு வேந்தன் - துரியோதனன். கண் இலா அரசு - திருதராட்டிரன். கங்கை மைந்தன் - வீடுமன். தந்திர வகை - பலவகைப்பட்ட சேனை. சேனையும், பெரியோரும், இளைஞரும் தன்னைச் சூழ்ந்திருக்கத் துரியோதனன், இந்திரனது மாளிகையை ஒத்த மண்டபத்தின் மத்தியில் இனிதே இருந்தான், என்பதாம்.

**189. நாமவே லரச ரோடு நால்வகைச் சேனை யோடு**
**மாமுகில் வண்ணன் வந்தா னென்றனர் வரவு கண்டோர்**
**வீமலர்த் தொடையி னானும் வேத்திரத் தவரை நோக்கித்**
**தாமரைத் தடங்கண் மாயன் றன்னையே விடுமி னென்றான்.**

[நாம வேல் அரசரோடும் நால்வகை சேனையோடும் மாமுகில் வண்ணன் வந்தான் என்றனர் வரவு கண்டோர், வீமலர் தொடையினானும் வேத்திரத்தவரை நோக்கி, தாமரை தடங்கண் மாயன் தன்னையே விடுமின், என்றான்.]

**விளக்கம் :-** நாமவேல் (பகைவர்க்கு) அச்சம் தரும் வேல். வீ - வண்டுகள். வேத்திரத்தவர் - கையில் பிரம்பு ஏந்திய காவலர், (வேத்திரம் - பிரம்பு). கண்ணன் வந்தான், என்று அவனது வரவு கண்டோர் கூறலும், துரியோதனன், கண்ணனை மாத்திரம் உள்ளே விடுமாறு, வேத்திரத்தவருக்குக் கூறினான், என்பதாம்.

**190. தன்பெருஞ் சேனை நிற்கத் தண்டுழா யலங்க லானும்**
**இன்புற நகைத்து வேந்த ரிருந்தபே ரவையி னெய்த**
**மின்புணர் துவச நாக விடநிகர் மனத்தி னானும்**
**அன்பொடு திகிரி யானை யதன்மிசை யிருக்க வென்றான்.**

[தன் பெருஞ்சேனை நிற்க, தண் துழாய் அலங்கலானும் இன்பு உற நகைத்து வேந்தர் இருந்த பேர் அவையின் எய்த, மின் புணர் துவசம் நாகம் விடம் நிகர் மனத்தினானும், அன்பொடு திகிரியானை அதன் மிசை இருக்க, என்றான்.]

**விளக்கம் :-** (துரியோதனனது கட்டளையைக் காவலர் தெரிவித்தலும்) தனது பெரிய சேனை நிற்கக் கண்ணன், நகைத்து அரசர்கள் கூடியிருந்த சபையை அடைய, கொடுமை பொருந்திய நாகத்தின் விஷத்தைக் கொண்ட மனத்தினனான துரியோதனன், (பொய்யான) அன்போடு, (அவன் அமைத்துள்ள) ''அந்த ஆசனத்தில் இருக்க'', என்று கூறினான்,—என்பதாம், மா மாயனான தன்னைத் துரியோதனன் வஞ்சிக்க நினைத்த பேதைமையை நோக்கிக் கண்ணன், சிரித்தபடி. மின்புணர் கொடி - பிரகாசம் பொருந்திய கொடி.

## கண்ணன் விசுவரூபங் கொள்ளல்

**191. இறைவனெ ழிற்கதிர் மணிகள ழுத்திய தவிசினி**
**ருத்தலுமே**
**நெறுநெறெ னக்கொடு நிலவறை யிற்புக நெடியவ**
**னப்பொழுதே**
**மறலியெ னத்தகு நிருபனி யற்றிய விரகை மனத்துணரா**
**முறுகுசி னத்துட னடியத லத்துற முடிகக னத்துறவே.**

[இறைவன் எழில் கதிர் மணிகள் அழுத்திய தவிசினில் இருத்தலுமே, நெறு நெறு என கொடு நிலவறையில் புக, நெடியவன் அப்பொழுதே மறலி என தகு நிருபன் இயற்றிய விரகை மனத்து உணரா, முறுகு சினத்துடன் அடி அதலத்து உற, முடி ககனத்து உறவே—அடுத்த செய்யுளோடு தொடரும்.]

**விளக்கம் :-** இறைவன் - கண்ணபிரான். (துரியோதனன் காட்டிய) அழகிய ஒளி பொருந்திய இரத்தினங்கள் பதித்த அவ்வாசனத்தில் இறைவன் அமர்ந்த அளவில், (நிலவறையின் மேல் பரப்பப்பெற்ற மூங்கில் பிளாச்சுகள்) நெறு நெறு என்ற ஒலியோடு முறிய, அவ்வாசனம் கொடிய நிலவறையில் போய்ச் சேர, நெடியவனாகிய கண்ணன், அப்பொழுதே, எமன் என்று சொல்லத்தக்க அரசனான துரியோதனனது, சூழ்ச்சியை உணர்ந்து, பொங்கியெழுந்த சினத்துடன், திருவடிகள் பாதலம் செல்லவும், திருமுடி வான் புகவும்,—அடுத்த செய்யுளோடு தொடரும்.

**192. அஞ்சின மஞ்சின மென்றுவி ரைந்துய ரண்டர்ப**
**ணிந்திடவும்**
**துஞ்சின மின்றென வன்பணி யின்கிளை துன்பமு**
**ழந்திடவும்**
**வஞ்சம னங்கொடு வஞ்சக னின்றிடு வஞ்சனை நன்றிதெனா**
**நெஞ்சில்வெ குண்டுல கொன்றுப டும்படி நின்றுநி**
**மிர்ந்தனனே.**

[அஞ்சினம் அஞ்சினம் என்று விரைந்து உயர் அண்டர் பணிந்திடவும், துஞ்சினம் இன்று என வல் பணியின் கிளை துன்பம்

உழந்திடவும், வஞ்சம் மனம் கொடு வஞ்சகன் இன்று இடு வஞ்சனை நன்று இது எனா, நெஞ்சில் வெகுண்டு உலகு ஒன்று படும்படி நின்று நிமிர்ந்தான், ஏ.]

**விளக்கம் :-** வஞ்சகன் வஞ்சம் மனம் கொடு இன்று இடு வஞ்சனை இது நன்று, எனா, நெஞ்சில் வெகுண்டு (தனது விசுவ ரூபத்தைக் கண்டு) உயர் அண்டர், 'அஞ்சினம் அஞ்சினம்' என்று விரைந்து பணிந்திடவும், வல் பணியின் கிளை இன்று துஞ்சினம் என துன்பம் உழந்திடவும், உலகு ஒன்றுபடும்படி நின்று நிமிர்ந்த னன்,—என்பது அன்வயம். கண்ணன், வஞ்சனான துரியோத னன் வஞ்சிக்கும் நினைவோடு இப்பொழுது செய்த மோசம் மிக நன்றாயிருக்கின்றது, என்று எண்ணிச் சினந்து, (தனது விசுவ ரூபத்தைக் கண்டு) உயர்ந்தவர்களான தேவர்கள் அஞ்சி வணங்க வும், பாதலத்திலுள்ள வலிய நாகங்கள், (அவ்வடியின் பாரத் தைத் தாங்க மாட்டாது) 'அழிந்தோம்' என்று மிகுதியாக வருந்தவும், உலகம் ஒன்றுபடும்படி, அதாவது எல்லாவுலகங் களிலும் வியாபித்தவனாய் ஓங்கி உயர்ந்தான், என்பதாம். 'இன்று துஞ்சினம்' என்ற இறந்த காலம், விரைவும், நிச்சயமும் பற்றிய காலவழு.

**193.** **மல்லரை ரக்கர்கு லத்தொடு பப்பரர் வாளினர் வேலினர்போர்**
**வில்லின ரிப்படி துற்றநி லத்தறை மேவிய வீரரெலாம்**
**தொல்லையி டிக்கயர் வுற்றுயி ரிற்றுறு சுடிகை யராவெனவே**
**கல்லென வுட்கினர் தத்தமு டற்பல கால்கொடு**
**தைத்திடவே.**

[மல்லர் அரக்கர் குலத்தொடு பப்பரர், வாளினர் வேலினர், போர் வில்லினர் இப்படி துற்ற நிலத்து அறை மேவிய வீரர் எலாம், தொல்லை இடிக்கு அயர்வு உற்று உயிர் இற்று உறு சுடிகை அரா எனவே கல் என உட்கினர் தத்தம் உடல் பல கால் கொடு உதைத்திட, ஏ.]

**விளக்கம் :-** மல்லரும் பல படைகளையுடைய வீரரும் ஆக, இப்படி நிலவறையில் நெருங்கிப் பொருந்திய வீரர்கள் அனை வரும், தம் தம் உடல்களை, (கண்ணன் தனது) பல கால்களைக் கொண்டு உதைக்கவும், பழமையான பெரிய இடிக்கு அஞ்சித் தளர்ந்து உயிர் ஒடுங்குகின்ற நாகங்கள்போல், கல்லென அஞ்சி நடுங்கினார்கள், என்பதாம். தொல்லை இடி - துன்பம் தரும் இடி; அல்லது ஒலியின் முதிர்ச்சியுடைய இடி. கல்: ஒலிக் குறிப்பு.

**194.** **அற்புத பங்கய நற்பத முந்தலி னக்குழி யின்புடையே**
**சற்பத லந்தொறு மற்றுவி ழுந்தன தத்தநெ டுந்தலை**
**போய்**
**முற்பவ னன்பொர முக்குவ டுந்துணி பட்டுமு டங்கியபொன்**
**வெற்பென நின்றனர் வெற்றுட லங்கொடு விற்படை**
**கொண்டவரே.**

[அற்புத பங்கயம் நல் பதம் உந்தலின் அ குழியின் புடையே சற்பதலம் தொறும் அற்று விழுந்தன தத்தம் நெடுந்தலை போய், முன்பவனன் பொர முக்குவடும் துணிபட்டு முடங்கிய பொன் வெற்பு என நின்றனர் வெறு உடலம் கொடு வில் படை கொண்டவர், ஏ.]

**விளக்கம் :-** அந்த நிலவறையின் உள்ளிடத்திலே, வில் ஏந்திநின்ற வீரர்கள்,—அற்புதமான தாமரை போன்ற அழகிய (கண்ணனது) பாதங்கள் உதைத்தலால், தங்கள் பெரிய தலைகள் துண்டிக்கப்பட்டுப்போய் நாகர் உலகம் எங்கும் விழுந்திடலும், தலையில்லாத வெறும் உடல்களைக் கொண்டு, முன்னொரு காலத்தில் வாயுபகவான் தாக்க, மூன்று சிகரங்கள் அறுபட்டு நலம் கெட்ட மேருமலையை ஒத்து நின்றனர், என்பது பொருள். பிறந்தாரை உய்விக்கும் பாதம் ஆதலின், நற்பதம், எனப்பட்டது. வெறுமை - உடல் - வெற்றுடல்.

**195. மேல்வலி யுற்றெதிர் வீசியெ ழிற்கரு மேகநி றத்திருமால்
கால்விசை யிற்பட மோதுத லிற்பொரு காமர்பு
யத்துணைபோய்
நீலநி றக்கவின் வாசவன் வச்சிர நீள்படை யிற்சிறகீர்
மால்வரை யொத்தனர் வாகைபெ றக்கதிர் வாள்க
ளெடுத்தவரே.**

[மேல் வலி உற்று எதிர் வீசி எழில் கருமேகம் நிறம் திருமால் கால் விசையின் பட மோதுதலின் பொரு காமர் புயம் துணை போய், நீலம் நிறம் கவின் வாசவன் வச்சிரம் நீள் படையின் சிறகு ஈர் மால் வரை ஒத்தனர், வாகை பெற கதிர் வாள்கள் எடுத்தவர், ஏ.]

**விளக்கம் :-** வாகை பெற கதிர் வாள்கள் எடுத்தவர், எழில் கருமேகம் நிறம் திருமால், மேல் வலி உற்று எதிர் வீசி கால் விசையின் பட மோதுதலின், பொரு காமர் புயம் துணைபோய் நீலம் நிறம் வாசவன் நீள் வச்சிரம் படையின் சிறகு ஈர் மால்வரை ஒத்தனர்,— என்பது அன்வயம். வெற்றிபெறும் பொருட்டு கூரிய வாள்களை ஏந்தி நின்ற வீரர்கள், - அழகிய கருமேகம் போன்ற திருமால் அவர்கள்மேல் வலிமையோடு எதிராக வீசி உக்கிரமாகத் தாக்குதலினால், பொருதற் குரிய அழகிய தோள்கள் இரண்டும அற்றுப்போய், நீல நிறத்தோடு அழகையும் உடைய இந்திரன், தனது பெரிய வச்சிராயுதத்தினால் சிறகு அறுக்கப்பட்ட பெரிய மலைகளை ஒத்தவராயினர்,—என்பது பொருள்.

**196. வெயில்விடு பைத்தலை யமளிமி சைத்துயில் விபுதர்க
ளுக்கரியோன்
பயிலவு தைத்தலி னவர்களு ரத்திடை பதமலர் பட்டுருவா
மயில்கட விக்கட வுளர்பகை யைக்கதிர் மகுடமு
ருக்கியவேள்
அயில்கொடு குத்திய நெடுவரை யொத்தன ரயில்களெ
டுத்தவரே.**

[வெயில் விடு பை தலை அமளி மிசை துயில் விபுதர்களுக்கு அரியோன், பயில உதைத்தலின் அவர்கள் உரத்திடை பதம் மலர் பட்டு உருவா, மயில் கடவி கடவுளர் பகையை கதிர் மகுடம் முருக்கிய வேள், அயில் கொடு குத்திய நெடுவரை ஒத்தனர் அயில்கள் எடுத்தவர், ஏ.]

**விளக்கம் :-** வேல் ஏந்திய வீரர்கள்,—ஒளிவிடும் படத்தை யுடைய (ஆதிசேஷனாகிய) படுக்கையில் துயில்பவனும், தேவர் களுக்கு அரியவனுமாகிய கண்ணபிரான். துன்பம் உண்டாகும்படி உதைக்கவே, அவ் வீரர்களின் மார்பினில் (கண்ணனது) பாத மாகிய மலர் பட்டுத் துளைக்க, மயிலின் மேல் ஊர்ந்து சென்று, தேவர்களின் பகைவர்களாகிய சூரபதுமாதி அரக்கர்களின் ஒளி யுடைய மகுடந் தாங்கிய தலைகளை அறுத்தொழித்த முருகக் கடவுள் வேலால் துளைத்த கிரௌஞ்ச கிரியை ஒத்தாராயினர்,— என்பது பொருள். விபுதர் - விசேஷ அறிவுள்ளவர், தேவர். மகுடம், என்பது ஆகுபெயராய், மகுடந் தாங்கிய தலையை உணர்த்தும். பயில - வருத்தும்படி.

**197. மின்சுடி கைப்புய கங்கள்வெ ருக்கொளும் வெங்கரு டக்கொடியோன்**
**வன்பத பற்பந கங்கொடெ டுத்துயர் வண்கக னத்திடலால்**
**முன்புவ னத்திடை வந்துக விக்கிறை மொய்ம்புண ரம்புகல்போ(து)**
**என்பும லைக்குறு பண்பைய டுத்தன ரெஞ்சிய பப்பரரே.**

[மின் சுடிகை புயகங்கள் வெருக்கொளும் வெம் கருடன் கொடியோன், வல் பதம் பற்பம் நகம் கொடு, எடுத்து உயர் வள் ககனத்து இடலால், முன்பு வனத்திடை வந்து கவிக்கு இறை மொய்ம்பு உணர புகல் போது, என்பு மலைக்கு உறு பண்பை அடுத்தனர் எஞ்சிய பப்பரர், ஏ.]

**விளக்கம் :-** ஒளி உடைய உச்சிக் கொண்டையைக் கொண்ட நாகங்கள் அஞ்சுவதற்குக் காரணமான, கொடிய கருடக் கொடியை உடைய கண்ணன், பற்பம் (தாமரை) போன்ற திருவடி களின் வலிய நகத்தினால் தூக்கி, உயர்ந்த பெரிய வானிடத்தே வீசி எறிதலால், முன் யுகத்திலே, தண்டகவனம் வந்து, வானரங் களின் அரசனான சுக்ரீவன் இராமபிரானது வலிமையைச் சோதித்து அறிய வேண்டுமென்று கூறியபோது, துந்துபியின் எலும்புக் கூடாகிய மலைக்கு ஏற்பட்ட தன்மையை, அழிந்த பப்பர வீரர்கள் அடைந்தனர்,—என்பது பொருள்.

**198.** மைந்துப டைத்துயர் பஞ்சவர் சொற்படி வந்தம
லர்கழலால்
உந்தியு தைத்துட லம்புதை யப்பில மொன்றியொ
ளித்திடலால்
அந்தணன் முற்பகல் வந்துபு டைத்திட வஞ்சிநி
லத்திடைவீழ்
விந்தமொ டொத்தனர் வன்குழி யிற்றிகழ் வெங்கண
ரக்கருமே

[மைந்து படைத்து உயர் பஞ்சவர் சொல்படி வந்த மலர் கழலால் உந்தி உதைத்து உடலம் புதைய பிலம் ஒன்றி ஒளித்திடலால், அந்தணன் வந்து புடைத்திட அஞ்சி நிலத்திடை வீழ் விந்தமொடு ஒத்தனர், வல் குழியில் திகழ் வெம் கண் அரக்கரும், ஏ.]

**விளக்கம் :-** மைந்து - வலிமை. பாண்டவர் சொல்படி தூது வந்த மலர் போன்ற திருவடியால், (கண்ணன்) உதைத்துத் தள்ள உடல்கள் புதையும்படி நிலவறையினுள் படிந்து மறைதலால், நிலவறைப் பள்ளத்தில் விளங்கிய பயங்கரமான கண்களை உடைய வலிய அரக்கர்கள் எல்லோரும், முன்னொரு காலத்தில் அகத்திய முனிவன் வந்து அழுத்தப் பயந்து பூமியில் ஒடுங்கிய விந்திய மலையைப் போன்றாராயினர்,—என்பதாம். அந்தணன் - அகத்தியன்.

**199.** அந்தவி டத்தெறி பம்பர மொத்துட லஞ்சுழ லச்சுழலக்
குந்தியு றித்தயி ருண்டவர் பொற்கழல் கொண்டுசு
ழற்றுதலால்
முந்தம ரர்க்கமு தந்தர மைக்கடன் முன்சுழ லச்சுழலும்
மந்தர மொத்தனர் குந்தமெ டுத்தெதிர் வந்தும
லைந்தவரே.

[அந்த இடத்து எறி பம்பரம் ஒத்து உடலம் சுழல சுழல, குந்தி உறி தயிர் உண்டவர் பொன் கழல் கொண்டு சுழற்றுதலால், முந்து அமரர்க்கு அமுதம் தர மை கடல் முன் சுழல சுழலும் மந்தரம் ஒத்தனர் குந்தம் எடுத்து எதிர் வந்து மலைந்தவர், ஏ.]

**விளக்கம் :-** அந்தப் படுகுழியிலே, சுழலுமாறு எறியப்பட்ட பம்பரம்போல், இடையறாது சுழலும்படி, (உரலின்மேல்) உட்கார்ந்து உறித் தயிர் உண்ட கண்ணன், தனது அழகிய கால்களால், சுழலச் செய்ய, எறிவேல் ஏந்தி வந்து போர் செய்தலில் முற்பட்ட வீரர்கள், முன்னொரு காலத்தில் அமரருக்கு அமுது தரும் பொருட்டுக் கரிய கடலில், நீர் சுழி கொள்ளும்படி சுழன்ற மந்தரமலையை ஒத்தனர்,—என்பது பொருள்.

**200. முட்டிய தொல்குரு திக்கடன் மல்கலின் முட்டிகொள்**
**பல்விரலால்**
**நெட்டுட லம்வகிர் பட்டத னுள்விழ நித்தர்செய்**
**கொல்வினையால்**
**மட்டற வல்விற லூற்றெதிர் செல்கவி மைக்கட**
**லெல்லையிலே**
**இட்டன கல்வரை யொத்தனர் வெல்கழ லெக்குல**
**மல்லருமே**

[முட்டிய தொல் குருதி கடல் மல்கலின், முட்டிகொள் பல் விரலால் நெடு உடலம் வகிர்பட்டு அதனுள் விழ, நித்தர் செய் கொல் வினையால் மட்டு அற வல் விறல் உற்று எதிர் செல் கவி மை கடல் எல்லையிலே இட்டன கல் வரை ஒத்தனர், வெம் கழல் எ குலம் மல்லரும்.]

**விளக்கம் :-** பெருகிப் பாய்ந்த மிகுதியின் முதிர்ச்சியுடைய கடல் போன்ற இரத்த வெள்ளம் நிறைந்ததால், முஷ்டியாகக் கொண்ட கண்ணனது பல விரல்களால் நீண்ட உடல்கள் பிளக்கப் பட்டு அந்தப் படுகுழியினுள் விழும்படி, நித்யனான கண்ணன் செய்த கொலைத் தொழிலால், வெற்றியின் அடையாளமாக அணிந்த கழல்களை உடைய சிறந்த மல்லர்கள் எல்லோரும், அளவற்ற மிகுந்த வலிமை கொண்டு (இராவணனை) எதிர்த்துச் சென்ற குரங்குகள், (அணைகட்டக்) கரிய கடலில் இட்டன வாகிய மலைகளை ஒத்தனர்—என்பது பொருள். மட்டு அற - அளவு இல்லாத. நித்தர் - நித்யர் ; அழிவற்றவர், கண்ணன். கவி - குரங்கு.

**201. எப்புவி நிற்பன வெக்கிரி நிற்பன வெக்கட**
**னிற்பனவென்(று)**
**இப்புவ னத்துயிர் முற்றும யக்குற வுட்கின**
**ரெய்த்திமையோர்**
**மைப்புய லொத்தொளிர் பச்சைநி றத்தினன் வர்க்கம**
**லர்க்கழலால்**
**ஒப்பற மட்குழி யுற்றவ ரைப்பட வொத்தி மிதித்தலுமே.**

[எ புவி நிற்பன எ கிரி நிற்பன எ கடல் நிற்பன என்று, இ புவனத்து உயிர் முற்றும் மயக்கு உற உட்கினர் எய்த்து இமை யோர், மை புயல் ஒத்து ஒளிர் பச்சை நிறத்தினன் வர்க்கம் மலர் கழலால் ஒப்பு அற மண்குழி உற்றவரை பட ஒத்தி மிதித்தலுமே.]

**விளக்கம் :-** மை புயல் ஒத்து...ஒத்தி மிதித்தலுமே, இ புவனத்து உயிர் முற்றும், எப்புவி நிற்பன...என்று மயக்குற இமையோர் எய்த்து உட்கினர்,—என்பது அன்வயம். கரிய புயலை ஒத்த பசிய நிறத்தினனான கண்ணபிரான் தனது கூட்டமான கால்களால் ஒப்பு இல்லாதபடி நிலவறை இருந்தவர்களை அழுத்தி

மிதித்த அளவிலே, இந்த உலகத்து உயிர்கள் எல்லாம்,—எந்த உலகம் அழியாமல் நின்றிடும்? எந்த மலைகள் சலியாது நின்றிடும்? எந்தக் கடல் பொங்காமல் நிலை நிற்கும் ? என்று திகைப்படைந்து நிற்க, தேவர்களும் மனம் சோர்ந்து அஞ்சினர், – என்பது பொருள். பூலோகத்தவரோடு தேவர்களும் இவ்வுலகம் நிலைகெட்டு அழியும் என்று அஞ்சினார்கள், என்க.

**202. கொண்டன்மு ழக்கென வம்புவி யைக்கடல் கொண்டெழு தற்கெதிரும்**
**சண்டமு ழக்கென வன்பவ னக்கிளை தந்தமு ழக்கெனவே**
**வண்டின மொய்த்தெழு வண்டுள வந்தொடை வண்டுவ ரைத்திருமால்**
**அண்டமு கட்டுற நின்றுசி ரித்தன னங்கணெ ருப்பெழவே.**

[கொண்டல் முழக்கு என, அம்புவியை கடல்கொண்டு எழுதற்கு எதிரும் சண்டம் முழக்கு என, வல் பவனம் கிளை தந்த முழக்கு எனவே, வண்டு இனம் மொய்த்து எழு வள் துளவம் தொடை வள் துவரை திருமால், அண்டம் முகடு உற நின்று சிரித்தனன் அம் கண் நெருப்பு எழவே.]

**விளக்கம் :-** வண்டுகள் மொய்த்துப் பறக்கின்ற மணம் மிகுந்த துளசிமாலை அணிந்த வளம் மிக்க துவாரகையின் நாதனான கண்ணன்,—மேகத்தின் இடி முழக்கம் போலவும், இவ்வுலகைப் பிரளயக் கடல் விழுங்குவதற்குப் பொங்கி யெழுகையில் உண்டாகும் பயங்கரமான ஆரவாரம் போலவும், வலிய காற்றின் வர்க்கம் வழங்கும் பேரொலி போலவும், அழகிய கண்களிலிருந்து நெருப்பு வெளிப்பட, அண்டத்தின் மேல் முகட்டினோடு பொருந்தி நின்று சிரித்தான்,—என்பது பொருள். காற்றின் கிளை - பல திசைகளினின்றும் வீசும் காற்றுக்கள் ; அல்லது ஏழுவகைப்பட்ட காற்று ; (சப்த மருத்துக்கள்).

**203 ஒன்றுப டக்கட லம்புமு கப்பன வும்பர்கு லத்தருவும்**
**சென்றுமு றிப்பன வெண்டிசை யிற்குல சிந்துர மெற்றுவ வெண்**
**குன்றமு டைப்பன பைம்பொனு ரக்கிரி கொண்டுதி ரிப்பனவால்**
**அன்றுத னித்தனி நின்றும லைத்தரு ளங்கைகள் பற்பலவே.**

[ஒன்றுபட கடல் அம்பு முகப்பன, உம்பர் குலம் தருவும் சென்று முறிப்பன, எண் திசையில் குல சிந்துரம் எற்றுவ, எண் குன்றம் உடைப்பன, பைம்பொன் உரம் கிரி கொண்டு திரிப்பன, (ஆல்), அன்று தனிதனி நின்று மலைத்தருள் அம் கைகள் பல்பல, ஏ.]

**விளக்கம் :-** அன்று தனித்தனியாக நின்று போர் செய்கின்ற மிகப் பலவான (கண்ணனது) அழகிய திருக்கைகள், —கடல் நீரை முழுமையாக மொண்டு கொள்ளவல்லனவும், தேவலோகத்தி லுள்ள சிறந்த கற்பக தருக்களை நெருங்கி முறிக்க வல்லனவும், எட்டுத்திசைகளிலும் உள்ள சிறந்த யானைகளை இடம் பெயரு மாறு தள்ள வல்லனவும், குலமலைகள் எட்டையும் உடைக்க வல்லனவும், பசிய பொன்மயமான மேருமலையை எடுத்துச் சுழற்றவல்லனவும், ஆக இருந்தன, என்பது பொருள். ஆல்: அசை. அம்பு - அப்பு (நீர்). துஷ்டர்களைக் கொல்லுதல் சிஷ்டர் பரிபாலனமாதலால், மலைத்தருள், என்றார், என்க.

**204. துகிரிதழ் வைத்துநல் வளைகண்மு ழக்கின தொடர்சில**
**கைத்தலமே**
**அகிலம் வெருக்கொள வரிமழு வெற்றின வடுசில**
**கைத்தலமே**
**புகலும் வடிக்கணை யுவணமெ டுத்தன பொருசில**
**கைத்தலமே**
**திகழ்விச யத்தொடு சிலைகள்கு னித்தன சிலசில**
**கைத்தலமே.**

[துகிர் இதழ் வைத்து நல் வளைகள் முழக்கின தொடர் சில கைதலம் (ஏ), அகிலம் வெருக்கொள அரிமழு எற்றின அடு சில கைதலம் (ஏ), புகலும் வடிகணை உவணம் எடுத்தன பொரு சில கைதலம் (ஏ), திகழ் விசயத்தொடு சிலைகள் குனித்தன சிலசில கைதலம் ஏ.]

**விளக்கம் :-** விசுவரூபங் கொண்ட கண்ணனது வரிசைத் தொடர்புடைய கைகள், பவளம் போல் சிவந்த வாயினில் நல்ல சங்குகளை வைத்து ஒலி செய்தன, பகை அழிக்கவல்ல சில கைகள் உலகம் அஞ்சும்படி அரிமழுக்களை (எரியிரும்புகளை) எடுத்து வீசின, போர் செய்யவல்ல சில கைகள் கூரிய அம்புகளை யும் கருடாஸ்திரத்தையும் எடுத்துப் பிரயோகித்தன, சிற்சில கைகள் வெற்றியோடு வில்களை வளைத்தன, —என்பது பொருள், உதணம் (கூர்மைமற்ற அம்பு), என்றும் பாடம் உளது. அரிமழு - தீவடிவமான எரியிரும்பு; அல்லது கோடரிப்படை. வடித்தல் - கூர்மை செய்தல்.

**205. வெங்கணை யத்திரள் குந்தநி றப்படை வெம்புமு**
**லக்கைகள்போர்**
**பொங்கிய வச்சிர முந்துக லப்பைகள் புண்கழு வர்க்கமயில்**
**எங்கும லைத்தெழு செங்சுரி கைத்திர டண்டமி**
**வற்றினொடும்**
**தங்கிய சக்கர பந்தித ரித்தன தண்பல கைத்தலமே.**

[வெம் கணையம், திரள் குந்தம் நிறம்படை, வெம்பும் உலக்கைகள், போர் பொங்கிய வச்சிரம், உந்து கலப்பைகள், புண் கழுவர்க்கம், அயில், எங்கும் மலைத்து எழு செம் சுரிகை திரள், தண்டம் இவற்றினொடும், தங்கிய சக்கரம் பந்தி தரித்தன தண் பல கைதலமே.]

**விளக்கம் :-** தண்ணிய, அதாவது கண்ணுக்கு இனிய பல கைகள்,—கொடிய வளைதடிகளின் கூட்டமும், ஒள்ளிய குந்தம் (எறிவேல்) ஆகிய ஆயுதங்களும், உக்கிரமான உலக்கைகளும், போரில் வலிமை மிகுந்த வச்சிரப் படைகளும், செலுத்தப்படும் கலப்பை என்னும் ஆயுதங்களும், பகைவரது நிணம் தோய்ந்த முள் படைகளின் மிகுதியும், அயில் (வேல்)களும், எங்கும் போர் செய்து பெருக்கும் இரத்தத்தின் சேர்க்கையால் சிவப்புற்ற கைவாள்களின் கூட்டமும், தண்டங்களும், (கதைகளும்) ஆகிய இவற்றோடு, தனக்கு ஏற்றதான சக்ராயுதங்களின் வரிசையையும், தாங்கியிருந்தன,—என்பது பொருள்.

**206. மேலெழு மங்கதிர் வாளுறை போம்படி வீசின**
**வான்புடையே**
**தோலின மேந்தின நீள்கவ ணேந்தின சோரிகள்**
**சோர்ந்திடவே**
**ஞாலமெ லாம்பொரு தோமரம் வாங்கின நாவொரு**
**மூன்றனவாம்**
**சூலமொ டோங்கின பாசமொ டோங்கின சூழ்சில**
**பூங்கரமே**

[மேல் எழும் அம் கதிர் வாள் உறை போம்படி வீசின, வான் புடையே தோல் இனம் ஏந்தின, நீள் கவண் ஏந்தின, சோரிகள் சேர்ந்திடவே ஞாலம் எலாம் பொரு தோமரம் வாங்கின, நா ஒரு மூன்றன ஆம் சூலமொடு ஓங்கின, பாசமொடு ஓங்கின, சூழ் சில பூங்கரமே.]

**விளக்கம் :-** சுற்றியிருந்த சில அழகிய கைகள்,—மேலே எழுந்து விளங்கும் ஒளியுடைய வாள்களை உறை கழலும்படி எடுத்து வீசின, வானிடத்தே, அதாவது உயரத்திலே கேடகம் என்னும் தோல் ஆயுதங்களைத் தாங்கியிருந்தன, நீண்டதூரம் செல்லக்கூடிய கவண் கற்களை எடுத்தன, பகைவர் உடல் இரத்த வெள்ளம் இடும்படி உலகை அழிக்க வல்ல தோமரப் படைகளை எடுத்தன, மூன்று நாக்குகளைக் கொண்ட சூலத்தை எடுத்து உயர்த்தின, பாசம் என்னும் ஆயுதங்களை எடுத்து உயர்த்தின, என்பது பொருள். வாள், தோல், கவண், தோமரம், சூலம், பாசம் முதலியவை, ஆயுத வகைகள். மூன்று நாக்குகளை உடைய சூலம் - முத்தலைச் சூலம். கவண் - எறி கல்.

**207. சிலசில கைத்தல மடுகழ லிற்பல திணிகழல் கட்டினவே**
**சிலசில கைத்தல மறுகுபு யத்திடை செறிதொடை யிட்டனவே**
**சிலசில கைத்தல மணிகொளு ரத்திடை பணிகடி ருத்தினவே**
**சிலசில கைத்தலம் விரல்கொடு சுட்டின செறுநர் திகைத்திடவே.**

*[சில சில கைதலம் அடு கழலில் பல திணி கழல் கட்டினவே, சில சில கைதலம் மறுகு புயத்திடை செறி தொடை இட்டனவே, சில சில கைதலம் அணிகொள் உரத்திடை பணிகள் திருத்தினவே, சில சில கைதலம் விரல் கொடு சுட்டின செறுநர் திகைத்திடவே.]*

**விளக்கம் :-** கைகள் சில,—பகைவரை அழிக்கும் கால்களில் நெருக்கமாகக் வீரக் கழல்களைக் கட்டின, சில,—சுழலும் தோள் களில் மலர் நெருங்கிய மாலைகளை இட்டன, சில,—அழகிய மார்பிலே பணிகளை (ஆபரணங்களை) பொருத்தமாக அணிந்தன, சில,—பகைவர்கள் திகைக்கும்படி விரல்களால் சுட்டிக் காட்டின,—என்பது பொருள்.

**208. மாயிரு ஞாலமெ லாம்வெளி யாயொளிர் மரகத சோபையுறப்**
**போயிரு பாலும்வ ளைந்துவ ளைந்தெதிர் பொருமுனை வெம்படையோ(டு)**
**ஆயிர மாயிர மங்கைபு றப்பட வண்டரு மாதவரும்**
**பாயிர நான்மறை பாடிவி யந்துப ணிந்துபு கழ்ந்தனரே.**

*[மா இரு ஞாலம் எலாம் வெளி ஆய் ஒளிர் மரகதம் சோபை உற, போய் இருபாலும் வளைந்து வளைந்து எதிர் பொரு முனை வெம் படையோடு, ஆயிரம் ஆயிரம் அம் கை புறப்பட, அண்டரும் மாதவரும் பாயிரம் நால்மறை பாடி வியந்து பணிந்து புகழ்ந்தனரே.]*

**விளக்கம் :-** இந்தப் பெரிய பூமியாகிய இடங்கள் எல்லா மாய்ப் பொருந்தி, ஒளிவிடும் மரகத ரத்தின காந்தி பொருந்த, வளைந்து வளைந்து இரு பக்கத்திலும் சென்று, எதிர்த்துப் போர் செய்யும் கூரிய ஆயுதங்களோடு, ஆயிரம் ஆயிரமாய்த் திருக் கரங்கள் வெளிப்பட, அத் தோற்றத்தைக் கண்டு, தேவர்களும் பெரிய தவத்தையுடைய முனிவர்களும் வியந்து, வணங்கி, ஓம், என்னும் பிரணவத்தைப் பாயிரமாகக் கொண்ட வேதங்களைச் சுரம் பிழையாமல் பாடித் துதித்தனர்,—என்பது பொருள். கண்ணனது விசுவரூபத்தைக் கண்டு மனத்தினால் வியந்து, யாக்கையால் பணிந்து, வாயினால் துதித்தனர்; அதாவது, திரிகரணங்களாலும், அதை வழிபட்டனர், என்க.

**209. ஆரண னேயர னேபுவ னங்கள னைத்தையு மன்றுதவும்**
**காரண னேகரு ணாகர னேகம லாசனி காதலனே**
**வாரண மேபொது வேயொரு பேரிட வந்தரு ளும்புயலே**
**நாரண னேமுனி யேன்முனி யேலென நாகர்ப ணிந்தனரே.**

[ஆரணனே, அரனே, புவனங்கள் அனைத்தையும் அன்று உதவும் காரணனே, கருணாகரனே, கமலாசனி காதலனே, வாரணம் (ஏ) பொதுவே ஒரு பேர் இட வந்தருளும் புயலே, நாரணனே, முனியேல், முனியேல், என நாகர் பணிந்தனரே.]

**விளக்கம் :-** ஆரணம் - வேதம். ஆரணன் - வேதத்தை நான்கு முகங்களாலும் எப்பொழுதும் ஓதிக்கொண்டிருக்கும் பிரும்மா. அவனே பிரும்மாவாக இருந்து படைத்தலைச் செய்த வினால், ஆரணனே, என்றார். உருத்திரனாய் நின்று அழித்தலைச் செய்தலின், அரனே, என்றார். புவனங்கள் அனைத்தும் அன்று உதவும் காரணன் - சிருஷ்டி காலத்தில், உலகம் முழுதையும் உண்டாக்கிய ஆதிகாரணன். கருணாகரன் - அருளின் இருப்பிடம் ஆனவன். கமலாசனி - திருமகள். வாரணம் - யானை (கஜேந்திரன்). பொதுவே ஒரு பேர் இட - பொதுவான ஆதிமூலமே என்ற பெயரை இட்டு அழைக்க. பரம் பொருளே, கோபங் கொள்ளாதே என்று நாகலோகத்தவர், வேண்டி வணங்கினர்,—என்பதாம். நாகர், என்பது தேவரையும் குறிக்கும்.

**210. மாதவ னேமுனி யேலெமை யாளுடை வானவனே முனியேல்**
**யாதவ னேமுனி யேலித யத்திலி ருப்பவ னேமுனியேல்**
**ஆதவ னேமுனி யேன்மதி வெங்கன லானவ னேமுனியேல்**
**நீதவ னேமுனி யேன்முனி யேலென நின்றுப ணிந்தனரே.**

[மாதவனே முனியேல், எமை ஆளுடை வானவனே முனியேல், யாதவனே முனியேல், இதயத்தில் இருப்பவனே முனியேல், ஆதவனே முனியேல், நீதவனே முனியேல், முனியேல் என (முனிவர்) நின்று பணிந்தனர், ஏ.]

**விளக்கம் :-** ஆதவன் - சூரியன். திருமால், சூரியன், சந்திரன், அக்கினி ஆகியவற்றின் சொரூபியானவனாதலால், ஆதவனே, என்றும் மதிவெங்கனல் ஆனவனே, என்றும் அழைத்தார். நீதவன்—நீதியாகிய முறைமை உடையவன். முன் செய்யுளில் தேவர் துதித்தனர். இச் செய்யுள், முனிவர் துதியாகும்.

**211. கங்கை மகன்கதி ரோன்மக னம்பிகை காதன்ம கன்றனயர்
அங்கவை யின்கணி ருந்தந ராதிப ரடையவெ
ழுந்தடைவே
செங்கைகு வித்தசி ரத்தின ராயுணர் வொன்றிய சிந்தையராய்
எங்கள்பி ழைப்பினை யின்றுபொ றுத்தரு ளென்று
பணிந்தனரே.**

[கங்கை மகன், கதிரோன் மகன், அம்பிகை காதல் மகன், தனயர், அங்கு அவையின்கண் இருந்த நராதிபர் (நர அதிபர்) அடைய எழுந்து அடைவே செம் கை குவித்த சிரத்தினராய், உணர்வு ஒன்றிய சிந்தையராய், எங்கள் பிழைப்பினை இன்று பொறுத்தருள், என்று பணிந்தனர், ஏ.]

**விளக்கம்** :- வீடுமன், கர்ணன், திருதராட்டிரன், அவன் மைந்தர்களில் பலர், அவையிருந்த அரசர் ஆயவர் அனைவரும் எழுந்து, முறையே சிரத்தின் மேல் குவித்த கையினராய், அறிவு எய்திய மனத்தினராய் எங்கள் பிழைகளைப் பொருத்தருள் என வேண்டிக் கண்ணனை வணங்கினர், என்பதாம்.

**212. கண்ண பொறுத்தருள் வெண்ணெ யருந்திய கள்வ
பொறுத்தருள்கார்
வண்ண பொறுத்தருள் வாம பொறுத்தருள் வரத
பொறுத்தருணீ
திண்ண மனத்துணர் வொன்று மிலாதவர் செய்த
பெரும்பிழை யென்(று)
அண்ணன் மலர்க்கழல் சென்னியில் வைத்தெதி
ரன்று துதித்தனரே.**

[கண்ண பொருத்தருள், வெண்ணெய் அருந்திய கள்வ, பொறுத்தருள், கார் வண்ண பொறுத்தருள், வாம பொறுத்தருள், வரத பொறுத்தருள், நீ திண்ணம் மனத்து உணர்வு ஒன்றும் இலாதவர் செய்த பெரும் பிழை என்று, அண்ணல் மலர் கழல் சென்னியில் வைத்து எதிர் அன்று துதித்தனரே.]

**விளக்கம்** :- வீடுமன் முதலியோர், கண்ணனை நோக்கி ''மனத்தில் உறுதியான அறிவு சிறிதும் இல்லாத சிறுவர்களாகிய நாங்கள் செய்த பெரும் பிழையைப் பொறுத்தருளவேண்டும்'', என்று வேண்டி அவன் எதிர் சென்று வணங்கித் துதித்தார்கள், என்பதாம். வாம - அழகுடையவனே. வரத - அடியாருக்கு வேண்டியதை அளிப்பவனே. மனத்து திண்ணம் உணர்வு - மனத்தில் உறுதியான அறிவு,

**213. தேவரும் வாசவ னுஞ்சிவ னுந்திசை முகனுந ராதிபரும்
யாவரு மன்பினொ டாயிர நாமமு மெண்ணியி
றைஞ்சுதலால்
மூவரு மொன்றென நின்றரு ணாதனு முனிவுத விர்ந்தருளா
மீவரு மண்டமு றுந்திரு மேனியொ டுங்கினன் மீளவுமே.**

*[தேவரும், வாசவனும் சிவனும் திசைமுகனும் நராதிபரும் யாவரும் அன்பினொடு ஆயிரம் நாமமும் எண்ணி இறைஞ்சுதலால் மூவரும் ஒன்று என நின்றருள் நாதனும் முனிவு தவிர்ந்து அருளா, மீவரும் அண்டம் உறும் திருமேனி ஒடுங்கினன் மீளவும், ஏ.]*

**விளக்கம் :-** தேவரும் இந்திரனும் சிவனும் பிரும்மதேவனும், பூலோக அரசர்களும், மற்றுமுள்ள யாவரும் அன்பொடு ஆயிரந் திருநாமங்களையும் மனத்தில் கொண்டு வணங்கினதால், திரிமூர்த்திகளும் ஒன்றென நின்ற தலைவனான கண்ணபிரான் சினந் தணிந்து, மிக வுயர்ந்த அண்டகோளம் முழுதும் விரிந்து பொருந்திய விசுவரூபம் மீளவும் ஒடுங்கப்பெற்றான்,—என்பது பொருள். யுகப்பிரளய காலத்தில் பிரும்மருத்ராதியர் தனது திருமேனியில் ஒடுங்குதல்பற்றி, 'மூவரும் ஒன்றென நின்ற நாதன்', என்றார்.

**214. தன்னினு யர்ந்தவர் யாருமி லாமுகில் சதுர்மறை யின்படியே
எந்நில முந்திரு வடியின் மறைந்திட விப்படி நின்றிடவும்
பின்னையு மஞ்சிய யர்ந்தில னெஞ்சுபெ யர்ந்தில
னாசனமும்
சென்னியி லுங்கரம் வைத்திலன் வண்புகழ் சிறிதுமொ
ழிந்திலனே.**

*[தன்னில் உயர்ந்தவர் யாரும் இலா முகில் சதுர் மறையின் படியே, எ நிலமும் திரு அடியில் மறைந்திட இப்படி நின்றிடவும், பின்னையும் அஞ்சி அயர்ந்திலன் நெஞ்சு, பெயர்ந்திலன் ஆசனமும், சென்னியிலும் கரம் வைத்திலன், வள்புகழ் சிறிதும் மொழிந்திலன், ஏ]*

**விளக்கம் :-** வேதங்களில் கூறியபடியே தன்னிலும் உயர்ந்தார் எவரும் இலாத கண்ணபிரான், பூமண்டலம் முழுதும் தன் திருவடியில் மறையும்படி, விசுவரூபத்தில் நின்றபோதும், உருவம் அடங்கப்பெற்ற பின்னும், (துரியோதனன்) அஞ்சி மனம் சோர்ந்தான் அல்லன், ஆசனத்திலிருந்து எழுந்தானும் அல்லன், சிரத்தில் கரம் வைத்து வணங்கினாலும் அல்லன், (கண்ணனது) சிறந்த புகழைச் சிறிதும் பேசினானும் அல்லன்,— என்பது பொருள்.

**215. தொல்லவை யின்கணி ருந்தந ராதிப துன்மதி யாலெனைநீ**
**கொல்லநி னைத்தது நன்றென வன்றிறல் கூறின**
**னெம்பெருமான்**
**ஒல்லையி னின்குல முற்றும டிந்திட வுற்றும**
**லைந்தொர்கணத்(து)**
**எல்லையின் வெஞ்சமர் நூறுவன் யாவரு மேறுவர்**
**வானுலகே.**

*[தொல் அவையின்கண் இருந்த நராதிப, துன்மதியால் எனை நீ கொல்ல நினைந்தது நன்று, என வல்திறல் கூறினன் எம் பெருமான், ஒல்லையின் நின் குலம் முற்றும் மடிந்திட உற்று மலைந்து ஓர் கணத்து எல்லையின் வெம் சமர் நூறுவன், யாவரும் ஏறுவர் வான் உலகு, ஏ.]*

**விளக்கம் :-** ''சந்திரவம்சத்து அரசர்கள் வீற்றிருந்த பழமை யான ராஜசபையில் இருக்கும் அரசனே, உனது துர்மதியால் என்னை நீ கொல்ல நினைத்தது மிக நன்றாயிருக்கின்றது'', என்று கண்ணபிரான் கூறி, ''ஒரு நொடிப் பொழுதில் உன் குலம் முழுவதும் வேரோடு அழியும்படி மலைந்து பொடியாக்குவேன், என்னை எதிர்ப்பவர் அனைவரும் வானுலகம் சேர்வர்'', என்று தனது திறமையைக் கூறினான்,—என்பதாம். ஒல்லை, விரைவு உணர்த்தும் இடைச்சொல்.

**216. அஞ்சின நின்னைய ழித்திட நின்னுட னன்றுபெ**
**ருஞ்சமர்வாய்**
**வெஞ்சுட ராயுத மொன்றுமெ டுக்கில மென்றுவி ளம்பியதும்**
**எஞ்சம லைந்தெதிர் வந்துயிர் கொள்ளுது மென்றுத**
**னித்தனியே**
**பஞ்சவா கூறிய வஞ்சின வாசக மும்பழு தாமெனவே.**

*[அஞ்சினம் நின்னை அழித்திட, நின்னுடன் அன்று பெருஞ்சமர் வாய் வெம் சுடர் ஆயுதம் ஒன்றும் எடுக்கிலம் என்று விளம்பியதும், எஞ்ச மலைந்து எதிர் வந்து உயிர் கொள்ளுதும் என்று தனி தனியே பஞ்சவர் கூறிய வஞ்சினம் வாசகமும் பழுது ஆம் எனவே.]*

**விளக்கம் :-** அன்று நான் 'போரில் படை எடேன்', என்று கூறியதும், துகிலுரித்த காலத்தில் பாண்டவர் எடுத்துக்கொண்ட சபத வார்த்தை வீணாதலாகாது என்றும் எண்ணியே, உன்னையும் உன்னைச் சேர்ந்தாரையும் கொல்லாது விடுகின்றேன்,—என்று கண்ணன் துரியோதனனுக்குச் சொன்னான், என்பதாம்.

## கர்ணன் பிறப்பு உணர்த்தல்

**217. என்றுரை யாடிநெ டுங்கடல் வண்ணனெ ழுந்தரு ளப்பிறகே**
**சென்றன ரெம்முடி மன்னவ ரும்பணி சேர்கொடி யோனையலார்**
**நின்றுப சாரமு ரைத்தவர் தம்மைநி றுத்திய னந்தரமே**
**வன்றிற லங்கர்பி ரானொடு கூறினன் மற்றொரு வாசகமே.**

[என்று உரை ஆடி நெடுங்கடல் வண்ணன் எழுந்தருள, பிறகே சென்றனர் எ முடிமன்னவரும் பணிசேர் கொடியோனை அலார்; நின்று உபசாரம் உரைத்து, அவர் தம்மை நிறுத்தி, அனந்தரம் (ஏ) வல்திறல் அங்கர் பிரானொடு கூறினன் மற்று ஒரு வாசகம், ஏ.]

**விளக்கம் :-** தான் கொன்று அழிக்காமைக்குக் காரணம் கூறிக் கண்ணன் எழுந்தருள, அவன்பின்னே, துரியோதனன் அல்லாத எல்லா அரசரும் செல்ல, (அப்பொழுது கண்ணன்) அவர்களை நோக்கி ஏற்ற எதிர் உபசார வார்த்தைகளைக் கூறி அனுப்பிவிட்டு, அனந்தரம் (அதன் பின்), வலிய திறலுடைய அங்கர்கோமானோடு ஒரு வார்த்தை கூறுவானாயினான்,— என்பதாம்.

**218. வண்மையி னாலுய ரங்கர் குலாதிப மதிகுலம் வாழ்வுறவந்(து)**
**உண்மையி னாலுயர் மன்னவ ரைவரு முன்னிலு னக்கிளையோர்**
**பெண்மையி னாலுயர் குந்தி வயிற்றிடை பெருமையி னாலிதயத்**
**திண்மையி னாலுயர் நின்னையு மன்பொடு தினகர னல்கினனே.**

[வண்மையினால் உயர் அங்கர் குல அதிப, மதிகுலம் வாழ்வு உற வந்து, உண்மையினால் உயர் மன்னவர் ஐவரும், உன்னில் உனக்கு இளையோர்; பெண்மையினால் உயர் குந்தி வயிற்றிடை பெருமையினால் இதயம் திண்மையினால் உயர் நின்னையும் அன்பொடு தினகரன் நல்கினன், ஏ.]

**விளக்கம் :-** வண்மை - ஈகை. உண்மை - சத்தியம். உன்னில் - எண்ணுங்கால். இதயத் திண்மை - மனவுறுதி. தினகரன் - சூரியன். வண்மையால் உயர் அங்கர் குலாதிப, என்று கண்ணன் கர்ணனை விளித்து, "சத்தியத்தால் உயர்ந்தவர்களான பாண்டவர் ஐவரும், உனக்குத் தம்பியர்; பெண்மையால் உயர்ந்த குந்தியினிடம், பெருமைக் குணங்களாலும், மனத்திண்மையினாலும் உயர்ந்த உன்னைச் சூரியன் அன்போடு உதவினான்", என்று கூறினான், என்பதாம்.

**219. ஏயு நெடுங்கொடி முரசுடை யோனையெ ழிற்றரு
மன் றரவே
வாயு வழங்கினன் வீமனை நல்கினன் விசயனை வாசவனும்
ஆயு நிகழ்ந்திடு வேதம ருந்துவ ரன்பொட ளித்தனர்செம்
தேயு வெனுந்திற னகுலனை யுஞ்சக தேவனை யும்பெரிதே.**

[ஏயும் நெடுங்கொடி முரசு உடையோனை எழில் தருமன் தரவே, வாயு வழங்கினன் வீமனை, நல்கினன் விசயனை வாசவனும், ஆயு நிகழ்ந்திடு வேதம் மருத்துவர் அன்பொடு அளித்தனர் செம் தேயு எனும் திறல் நகுலனையும் சகதேவனையும் பெரிது, ஏ.]

**விளக்கம் :** ஏயும் நெடு முரசு கொடி உடையோன் - பொருந்திய பெரிய முரசைக் கொடியிலே கொண்ட தருமன். எழில் தருமன் - அழகிய யமதர்மராஜன். ஆயி நிகழ்ந்திடு வேத மருத்துவர் - ஆயுளைப்பற்றிக் கூறும் ஆயுள் வேதத்தை நன்கு அறிந்த வேத வயித்தியர்களான அசுவிநீ தேவர்கள். பெரிது அன்பொடு அளித்தனர்-சிறந்த அன்போடு பெற்றனர். எமதர்மன், தருமனையும், வாயு வீமனையும், இந்திரன், விசயனையும், அசுவிநீ தேவர்கள் நகுல சகதேவர்களையும் பெற்றனர், என்று கண்ணன் கூறியபடி. செம் தேயு எனும் திறல் - சிவந்த அக்னியை ஒத்த பராக்கிரமத்தை உடைய (நகுல சகதேவர்.)

**220. அந்தணன் முன்றரு மந்திர மைந்தினி லறுவரை
யுங்கடவுள்
குந்திப யந்தனள் யானினி யென்பல கூறுவ துங்களினீர்
இந்தநி லம்பெறு வீர்தவிர் கிற்பெற யாரினி வேறுரியார்
வந்தினி தும்பியர் தம்மொடு சேர்கென மாயன்
மொழிந்தனனே.**

[அந்தணன் முன் தரு மந்திரம் ஐந்தினில் அறுவரையும் கடவுள் குந்தி பயந்தனள், யான் இனி என் பல கூறுவது, உங்களில் நீர் இந்த நிலம் பெறுவீர், தவிர்கின், பெற யார் இனி வேறு உரியார்? வந்து இனிது உம்பியர் தம்மொடு சேர்க, என, மாயன் மொழிந்தனன், ஏ.]

**விளக்கம் :-** அந்தணன் - துருவாச முனிவன். கடவுள் குந்தி - தேவர்களின் சம்பந்தம் உடைய குந்தி. உங்களில் நீர் இந்த நிலம் பெறுவீர் - உங்களுக்குள்ளேயே நீங்கள் இந்த பூமியைப் பெறுவீர்களாக; அல்லது குரு வம்சத்தவரான உங்களுள் நீங்கள் அறுவரே இந்த பூமியைப் பெறுவீர்களாக. தவிர்கின் - நீங்கள் பெறாவிட்டால். "முனிவனின் மந்திரத்தால், குந்தி உங்கள் அறுவரையும் பெற்றாள், நீங்களே இந்த பூமியைப் பெறுவதற்கு உரியவர். எனவே, உன் தம்பியரொடு கூடுக", என்று கண்ணன், கர்ணனுக்குக் கூறினான், என்பதாம்.

**221.** **கன்றால் விளவின் கனியுகுத்துங்**
**கழையா னிரையின் கணமழைத்தும்**
**குன்றான் மழையின் குலந்தடுத்துங்**
**குலவுஞ் செல்வக் கோபாலா**
**இன்றா லெனது பிறப்புணர்ந்தே**
**னென்றன் புருகி யெம்பியர்பால்**
**சென்றா லென்னை நீயறியச்**
**செகத்தா ரென்றுஞ் சிரியாரோ.**

[கன்றால் விளவின் கனி உகுத்தும், கழையால் நிரையின் கணம் அழைத்தும், குன்றால் மழையின் குலம் தடுத்தும் குலவும் செல்வம் கோபாலா, இன்று (ஆல்) எனது பிறப்பு உணர்ந்தேன் என்று, என்பு உருகி எம்பியர்பால் சென்றால், என்னை நீ அறிய செகத்தார் என்றும் சரியாரோ!]

**விளக்கம் :-** கழை - புல்லாங்குழல். குலவல் - மகிழ்தல். ''நான் இப்பொழுது தம்பியரைக் கூடினால் உலகம் என்னைச் சிரிக்காதா?'' என்றான்,—என்பதாம்.

**222.** **ஆரென் றறியத் தகாதவெனை**
**யரசு மாக்கி முடிசூட்டிச்**
**சீருந் திறமுந் தனதுபெருந்**
**திருவு மெனக்கே தெரிந்தளித்தான்**
**பாரின் றறிய நூற்றுவர்க்கும்**
**பழிதீர் வென்றிப் பாண்டவர்க்கும்**
**போரென் றறிந்துஞ் செய்ந்நன்றி**
**போற்றா தவரிற் போவேனோ.**

[ஆர் என்று அறிய தகாத எனை அரசும் ஆக்கி, முடி சூட்டி, சீரும் திறமும் தனது பெருந்திருவும் எனக்கே தெரிந்து அளித்தான், பார் இன்று அறிய நூற்றுவர்க்கும் பழிதீர் வென்றி பாண்டவர்க்கும் போர், என்று அறிந்தும் செய் நன்றி போற்றாதவரின் போவேனோ.]

**விளக்கம் :-** ஆர் - (மரூஉ) யார். திறம் - மேன்மை, உறவு, செல்வாக்கு. தெரிந்து அளித்தான் - மனம் ஒப்பிக் கொடுத்தான். போற்றாதவரின் - நினையாது மறந்தவர்போல். 'போற்றாது, அவரின்', என்றும் பிரித்துக்கொள்ளலாம். 'ஊர் பேர் தெரியாத எனக்கும், அரச வாழ்வும், நட்பும் உதவிய துரியோதனாதியருக்கும், குற்றமற்ற பாண்டவர்க்கும் போர் நிகழப்போவது அறிந்தும், நன்றி கொன்றாரைப் போல் நான் பாண்டவரைச் சேரல் அமையுமோ, என்று, கர்ணன், கூறினான், என்க.

**223.** **இரவிக் குரிய திருமதலை**
**யிவ்வா றுரைக்க விசைவண்டு**
**விரவிப் பயிலுந் துழாய்முடியோன்**
**வேறோர் மொழியும் விளம்பாமல்**
**உரவிற் றடந்தோ ளுரவோனை**
**யேகென் றருளி யொருசார்வெம்**
**புரவித் தாமா நின்றானை**
**வருகென் றழைத்துப் புகல்கின்றான்.**

*[இரவிக்கு உரிய திருமதலை இ ஆறு உரைக்க, இசை வண்டு விரவி பயிலும் துழாய் முடியோன் வேறு ஓர் மொழியும் விளம் பாமல், உரம் வில் தடந்தோள் உரவோனை ஏகு என்று அருளி, ஒரு சார் வெம் புரவித்தாமா நின்றானை வருக என்று அழைத்து புகல்கின்றான்.]*

**விளக்கம் :-** உரம் வில் தடந்தோள் உரவோன் - வலிய வில்லை ஏந்திய விசாலமான தோள்களின் வலிமையுடைய கர்ணன். பரித்தாமா - அசுவத்தாமன். தம்பியரோடு சேர முடியாமையைத் தெரிவித்த கர்ணனுக்கு விடை கொடுத்து அனுப்பிய பின், அசுவத்தாமன் என்ற அந்தணனைக் கண்ணன், அழைத்தான், என்பதாம்.

**224.** **போயே கானம் பலதிரிந்து**
**புகன்ற விரதம் பொய்யாதோர்**
**ஆயே வந்த பாண்டவர்க**
**ளைந்தூர் வேண்ட மறுத்ததற்குச்**
**சேயோ னனைய சிலைமுனிவன்**
**சேயே நாளைச் செருக்களத்தில்**
**நீயே கரியென் றெடுத்துரைத்தா**
**னெடியோன் றுளப முடியோனே.**

*[போயே கானம் பல திரிந்து புகன்ற விரதம் பொய்யாதோர் ஆயே வந்த பாண்டவர்கள் ஐந்து ஊர் வேண்ட மறுத்ததற்கு, சேயே அனைய சிலை முனிவன் சேயே, நாளை செரு களத்தில் நீயே கரி என்று எடுத்து உரைத்தான் நெடியோன், துளப முடி யோன், ஏ.]*

**விளக்கம் :-** விரதம் - வனவாசமும் அஜ்ஞாதவாசமும் செய்து வர வேண்டும் என்ற கட்டளை போன்ற வார்த்தை. சேய் - முருகக் கடவுள். சேயே அனைய முனிவன் சேய் - முருகக் கடவுளை ஒத்த வீரனான துரோணனது மகனாகிய அச்வத்தா மன். கரி - சாட்சி. நாளை நடக்கவிருக்கும் போருக்குக் காரணம், புகன்ற விரதம் பொய்யாது திரும்பிய பாண்டவர்க்கு ஐந்து ஊரும் தரத் துரியோதனன் மறுத்ததே, என்பதற்கு நீயே சாட்சியாவாய், என்று துளப மாலையணிந்த நெடியவனான கண்ணன், கூறியபடி. சேயே அனைய சேயே, என்று கூட்டி,

முருகக் கடவுளைப்போன்ற விரனே, என்று அசுவத்தாமனைக் கண்ணன் அழைத்ததாகவும் பொருள் கொள்ளலாம்.

**225. ஆனா வுனதாண் மைக்குநிக**
**ரவனி தலத்தில் வேறுண்டோ**
**ஞானா திபனே போர்க்களத்தி**
**னாகக் கொடியோன் பணிந்துன்னைச்**
**சேனா பதியா கென்றாலுஞ்**
**செலுத்தே னென்று நீமறுத்தீ**
**யானா லுய்வ ரைவருமற்**
**றவர்பா லுனக்கு மன்புண்டே.**

[ஆனா உனது ஆண்மைக்கு நிகர் அவனி தலத்தில் வேறு உண்டோ! ஞானாதிபனே (ஞான அதிபனே) போர்களத்தில் நாகம் கொடியோன் பணிந்து உன்னை சேனாபதி ஆகு என்றாலும் செலுத்தேன் என்று நீ மறுத்தி ஆனால் உய்வர் ஐவரும், (மற்று) அவர் பால் உனக்கும் அன்பு உண்டே.]

**விளக்கம் :-** ''நேரில்லா வீரனே, தாளை நிகழும் போரில் துரியோதனன் படைத் தலைமை பூணுமாறு வேண்டினாலும், நீ மறுத்தாயானால், பாண்டவர் உய்வர், அவரிடம் உனக்கும் அன்பு உளதே'', என்று கண்ணன், கூறியபடி. ஆனா - நீங்காத.

**226. ஆயோ தனத்தி லடலரியே**
**றனையான் றன்னை யில்வாறு**
**மாயோ னுரைத்துத் தன்விரலின்**
**மணியா ழியைமண் ணிடைவீழ்த்தான்**
**சேயோ னதனை யெடுத்தவன்றன்**
**செங்கை கொடுக்க வாங்காமல்**
**தூயோ யூர்கோள் பரிதிதனைச்**
**சூழ்ந்த தகல்வான் மீதென்றே**

[ஆயோதனத்தில் அடல் அரி ஏறு அனையான் தன்னை இ ஆறு மாயோன் உரைத்து, தன் விரலின் மணி ஆழியை மண்ணிடை வீழ்த்தான்; சேயோன் அதனை எடுத்து அவன் தன் செங்கை கொடுக்க, (அதை) வாங்காமல், தூயோய் ஊர்கோள் பரிதனை சூழ்ந்தது அகல்வான்மீது, என்றே,—இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்]

**விளக்கம் :-**ஆயோதனத்தில் அடல் அரி ஏறு அனையான்- போரில் வலிமையுடைய ஆண் சிங்கம் போன்றவனான அசுவத் தாமன். ஆழி-மோதிரம். ஊர்கோள்-மண்டலம், சூரியனைச் சுற்றிய ஓர் ஒளி வட்டம். முன் செய்யுளில் கூறியபடி அசுவத்தா மனுக்குக் கண்ணன் கூறியபின், அவன் தனது மோதிரத்தை பூமி யில் விழும்படி நழுவவிட, அதை அசுவத்தாமன் எடுத்துத் தன்

கையில் கொடுக்கவும், வாங்காமல், வானில் சூரியனைச் சுற்றி மண்டலம் இட்டுளது, என்று கூறி, (அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்), மேலும் கண்ணன் கூறுவானாயினான்,—என்பதாம். ஆயோதனம்-போர்.

**227.** **வரித்தா மரைகட் டிருநெடுமால்**
**வான்வாய் நோக்க வரிவிற்கைப்**
**பரித்தா மாவு மாழியுடன்**
**பரிதி வடிவந் தனைப்பார்த்தான்**
**கிரித்தாழ் கவிகைக் கருங்கள்வன்**
**கிளர்நூன் முனிவன் மைந்தனையும்**
**பிரித்தா னவனுஞ் சூளுற்றா**
**னென்றா ரிருந்த பேரவையோர்.**

[வரி தாமரை கண் திரு நெடுமால் வான் வாய் நோக்க, வரி வில் கை பரித்தாமாவும் ஆழியுடன் பரிதி வடிவந்தனை பார்த்தான்; கிரி தாழ் கவிகை கருங்கள்வன் கிளர் நூல் முனிவன் மைந்தனையும் பிரித்தான், அவனும் சூள் உற்றான், என்றார் இருந்த பேர் அவையோர்.]

**விளக்கம் :-** வரி - கண்ணில் படரும் செவ்வரி, இரேகை. கிரிதாழ் கவிகை - மேல் கீழாகக் கவிந்த கோவர்த்தன கிரியாகிய குடை. கிளர் நூல் முனிவன் - விளங்குகின்ற பூ நூல் அணிந்த துரோணன்; அல்லது தத்துவ நூல்களோடு வில் வித்தையும் அறிந்த துரோணன். ''ஊர் கோள் சூரியனைச் சூழ்ந்தது'', என்று சொல்லிக் கண்ணன் வான் நோக்க, அந்தணனும் மோதிரத்துடனே மேல் நோக்கிச் சூரியனைப் பார்க்கவும், துரியோதனனது பேரவை இருந்தோர், ''கருங்கள்வன் அந்தணனையும் பிரித்தான், அவனும் உறுதி மொழி கூறிவிட்டான்'', என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்,—என்பதாம். அந்தணனிடம் துரியோதனாதியர்க்கு நம்பிக்கை கெடும்படி சூழ்ந்த கண்ணனை, கருங்கள்வன், என்றார்.

**228.** **தனிவந் தகலுந் தூதனைப்போய்த்**
**தானே யணுகித் தடஞ்சாபம்**
**முனிவன் புதல்வன் மோதிரந்தொட்**
**டருஞ்சூள் முன்னர் மொழிகின்றான்**
**இனிவந் துறவாய் நின்றாலு**
**மெங்கள் றெளிவ திவனையெனத்**
**துனிவந் தரசர் முகநோக்கிச்**
**சொன்னா னிடியே றன்னானே.**

[தனி வந்து அகலும் தூதனை போய் தானே அணுகி, தடஞ் சாபம் முனிவன் புதல்வன் மோதிரம் தொட்டு அருஞ்சூள் முன்னர் மொழிகின்றான்; இனி வந்து உறவாய் நின்றாலும் எங்கன்

தெளிவது • இவனை என, துனி வந்து அரசர் முகம் நோக்கிச் சொன்னான் இடி ஏறு அன்னான், ஏ.]

**விளக்கம் :-** தனியே வந்த தூதனிடம் தானாகவே சென்று மோதிரந்தொட்டு சூள் உரைக்கின்ற இம் முனிமைந்தனை, இனி அவன் நம் பால் வந்தாலும், அவனை எங்ஙனம் நாம் நம்புவது ? என்று, துரியோதனன் அவையோரிடம் சினந்து கூறினான், என்பதாம். தடஞ்சாபம் முனிவன் - பெரிய வில் கலை வல்லவனான துரோணன். தெளிவது - நம்புவது. துனி வந்து - கோபம் மிகுந்து.

**229. துளியார் மதுவின் வலம்புரித்தார்த்**
**துரியோ தனன்றான் சொல்லியதும்**
**ஒளியா ரவையில் வாள்வேந்த**
**ரொருவர்க் கொருவ ருரைத்தனவும்**
**களியா னையனான் செவிப்படலுங்**
**கலங்கிச் சித்த மிவரென்னைத்**
**தெளியா வண்ணம் பேதித்தான்**
**றிருமா லென்றே சிந்தித்தான்.**

[துளி ஆர் மதுவின் வலம்புரி தார் துரியோதனன் தான் சொல்லியதும், ஒளி ஆர் அவையில் வாள்வேந்தர் ஒருவர்க்கு ஒருவர் உரைத்தனவும், களி யானை அனான் செவி படலும், கலங்கி சித்தம் இவர் என்னை தெளியாவண்ணம் பேதித்தான் திருமால் என்றே சிந்தித்தான்.]

**விளக்கம் :-** வலம் புரித்தார் - நந்தியா வட்டை மலராலான மாலை. களியானை அனான் - மதக்களிப்புடைய யானையைப் போன்றவனான அசுவத்தாமன். சித்தம் கலங்கி - மனக்கலக்கங் கொண்டு. துரியோதனன் சொல்லியதும், அவையிருந்தோர் பேசிக்கொண்டதும் கேட்டு, ''துரியோதனாதியர், என்னை நம்பாதபடி திருமால் சூழ்ந்துவிட்டான்'', என்று, அந்தணன், எண்ணினான், என்பதாம். சித்தங் கலங்கி, என்பதை அசுவத்தாமனோடு சேர்க்காமல், ''துரியோதனாதியர் மனங் கலங்கி'', என்றுங் கொள்ளலாம். ஒளி ஆர் அவை - ஒளி விளக்கம் பொருந்திய சபை.

## கண்ணன் இந்திரனை அழைத்தல்

**230. தண்ணந் துளப முடியோனுந்**
**தனித்தங் கிருந்து தன்மனத்தின்**
**எண்ணம் பலித்த தெனமகிழ்ந்தே**
**யிளையோன் றனக்கு விடைநல்கி**
**விண்ணின் றமரர் மிகத்துதிக்க**
**விதுரன் மனையின் மேவியபின்**
**திண்ணங் கடவுட் குலவரசன்**
**வருமா றறிந்து சிந்தித்தான்.**

[தண் அம் துளவம் முடியோனும் தனித்து அங்கு இருந்து தன் மனத்தின் எண்ணம் பலித்தது என மகிழ்ந்தே, இளையோன் தனக்கு விடை நல்கி, விண் நின்று அமரர் மிக துதிக்க, விதுரன் மனையில் மேவியபின், திண்ணம் கடவுள் குலம் அரசன் வரும் ஆறு அறிந்து சிந்தித்தான்.]

**விளக்கம் :-** தண் அம் துளவம் முடியோனும், தன் மனத்தின் எண்ணம் பலித்தது என மகிழ்ந்து, இளையோன் தனக்கு விடை நல்கி, விண் நின்று அமரர் மிக துதிக்க விதுரன் மனையில் மேவிய பின், தனித்து அங்கு இருந்து, அறிந்து, திண்ணம் கடவுள் குலம் அரசன் வருமாறு சிந்தித்தான்,—என்று அன்வயம் கொள்க. அறிந்து - அடுத்த படியாகச் செய்யவேண்டுவதை எண்ணித் தெளிந்து. திண்ணம் - வலிமை. கடவுள் குலம் அரசன் - தேவர்களின் அரசனான இந்திரன். அசுவத்தாமனுக்கு விடை கொடுத்து அவனை அனுப்பியபின் விதுரன் மனை அடைந்த கண்ணன், இந்திரனை அழைத்தான், என்க.

**231.** **அந்தக் கணத்தில் வந்திறைஞ்சு**
**மாகண் டலனை முகநோக்கிக்**
**கந்தத் துளப முடியோனுங்**
**கண்ணுங் கருத்துங் களிகூரத்**
**தந்தத் தொழிலி னரிசுமந்த**
**தவிசி னிடையே யுடனிருத்தி**
**முந்தக் கருது கின்றவினை**
**முடிப்பா னுபாய மொழிகின்றான்.**

[அந்த கணத்தில் வந்து இறைஞ்சும் ஆகண்டலனை முகம் நோக்கி, கந்தம் துளபம் முடியோனும் கண்ணும் கருத்தும் களி கூர, தந்தம் தொழிலின் அரி சுமந்த தவிசின் இடையே உடன் இருத்தி, முந்த கருதுகின்ற வினை முடிப்பான், உபாயம் மொழி கின்றான்.]

**விளக்கம் :-** நினைத்த அளவிலே வந்து இறைஞ்சி நின்ற ஆகண்டலனை (இந்திரனை) களிப்பு மிக நோக்கி, தந்தத்தால் செய்த சிம்மாசனத்தில் தன்னோடு இருக்கச் செய்து, முக்கியமான தென்று தான் நினைக்கின்ற காரியத்தை முடிப்பதற்கு எண்ணி, ஓர் உபாயத்தைக் கூறுவானாயினான்,—என்பது பொருள். நினைத்த அளவில் வந்த இந்திரனைப் பார்த்ததால், கண்களி கூர்தலும், அவனால் தனது காரியம் நிறைவேறும் என்ற எண்ணத்தால் கருத்துக் களிகூர்தலும் நிகழ்ந்தன, என்க.

**232.** **கிரியின் சிறகை யரிபடையாய்**
**கேண்மோ வாண்மைக் களமீதில்**
**விரிவெஞ் சிலைக்கை விசயனுக்கு**
**மாறாய் முனிந்து வருகின்ற**

**எரியுங் கனல்வாய் விடவரவொன்**
**றிவனுக் குற்ற பகையான**
**அரியின் புதல்வன் தனக்கொருபே**
**ரம்பா கியதா ரறியாதார்.**

[கிரியின் சிறகை அரி படையாய், கேண்மோ, ஆண்மை களம் மீதில், வரி வெம் சிலை கை விசயனுக்கு மாறு ஆய், முனிந்து வருகின்ற எரியும் கனல்வாய் விடம் அரவு ஒன்று இவனுக்கு உற்ற பகையான அரியின் புதல்வன் தனக்கு ஒரு பேர் அம்பு ஆகியது ஆர் அறியாதார்?]

**விளக்கம் :-** மலைகளின் சிறகு அரிந்த வச்சிராயுதம் உடைய இந்திரனே, கேட்பாயாக! ஆண்மைத் தொழிலுக்கு இடமான போர்க்களத்தில், விசயனுக்கு எதிராய்க் கறுக்கொண்டு இருந்து வருகின்ற, காண்டவ தகனம் செய்தபொழுது தீயினின்று தப்பிய விஷப் பாம்பு ஒன்று, இவனுக்குப் பெரும் பகையாய் அமைந்த சூர்ய புத்திரனான கர்ணனுக்கு ஒரு பெரிய அத்திரமாய் அமைந்திருப்பதை யார் அறியாதார்? (எல்லோரும் அறிவர், என்றபடி),— என்பது பொருள். நான்காவது அடியில் உள்ள, அரி, சூரியன் என்ற பொருளது.

**233. கன்னன் விசயன் றனைக்கொல்லிற்**
**கடற்பார் முழுதுங் கண்ணில்லா**
**மன்னன் புதல்வன் றனக்கேயா**
**மொழிந்தோர் தாமே மடிந்திடுவார்**
**முன்னஞ் சூதின் மொழிந்தபகை**
**முடியா திருக்கி னவர்க்கன்று**
**நின்னெஞ் சறிய யானறிய**
**நினக்கே வசையு நிலையாமே.**

[கன்னன் விசயன் தனை கொல்லின், கடல் பார் முழுதும் கண் இல்லா மன்னன் புதல்வன் தனக்கே ஆகும், ஒழிந்தோர் தாமும் மடிந்திடுவார் ; முன்னம் சூதில் மொழிந்த பகை முடியாது இருக்கின், அவர்க்கு அன்று, நின் நெஞ்சு அறிய, யான் அறிய, நினக்கே வசைவும் நிலை ஆம், ஏ.]

**விளக்கம் :-** கர்ணன் விசயனைக் கொன்றால் பூலோகம் முழுதும் திருதராட்டிரனது மகனுக்கே உரியதாய்விடும் ; விசயன் இறந்த பின்னர், மற்றைய நால்வரும் உயிர் வாழார் ; முன்னம் சூதாடிய காலத்தில் விசயன் முதலியோர் பகைத்துக் கூறிய சபத மொழிகள் நிறைவேறாதிருந்தால், அதனால் உண்டாகும் பழி அவருடையது மாத்திரமே ஆகாது, உன் மனம் அறியவும், நான் அறியவும் விசயனது தந்தையான உனக்கே 'பழிச்சொல் அழியாது நிலை நிற்பதாகும்'', என்று கண்ணன் கூறினான், என்பதாம்,

**234.** **கவசங் கனக குண்டலமென்**
**றிரண்டு புனையிற் கற்பாந்த**
**திவசம் பொரினுங் கன்னனுயிர்**
**செகுப்பார் மண்ணிற் சிலருண்டோ**
**அவசங் கிளைஞ ருறத்துணைவ**
**ராற்றக் களத்தி லடுகுரங்குத்**
**துவசம் படைத்தோன் படும்பயந்த**
**துணைவா வின்னே சொன்னேனே.**

[கவசம் கனக குண்டலம் என்று (என்ற) இரண்டு புனையின் கற்பாந்த திவசம் பொரினும் கன்னன் உயிர் செகுப்பார் மண்ணில் சிலர் உண்டோ! அவசம் கிளைஞர் உற, துணைவர் அரற்ற, களத்தில் அடு குரங்கு துவசம் படைத்தோன் படும்; பயந்த துணைவா, இன்னே சொன்னேன்.]

**விளக்கம் :-** கவசம் குண்டலம் என்ற இரண்டையும் கர்ணன் அணிந்திருப்பின், பிரும்மப் பிரளயம் வரையில் போர் செய்தாலும், அவனை அழிப்பார் எவரும் இலர்; நண்பர்களும் பந்துக்களும் தன் வசம் இழந்து வருந்தவும், உடன்பிறந்தோர் அழுது அரற்றவும் போர்க்களத்தில் அனுமக் கொடியை உடையவனான அருச்சுனன் (கர்ணனால்) கொல்லப்படுவான்; அவனைப் பெற்ற பந்துவாகிய இந்திரனே, இப்பொழுதே சொன்னேன்,—(அதாவது, அது நேராமல் காத்தல் உன் கடனாகும், என்று குறித்தபடி)— என்று கண்ணன் இந்திரனுக்குச் சொன்னான்,—என்பதாம். கற்பம் - (கல்பம்) பிரும்மனது ஆயுள் காலம். திவசம் - நாள். கிளைஞர் - பந்துக்கள், . நண்பர். துணைவர் - உடன்பிறந்தோர். பயந்த துணைவன் - பெற்றவனாகிய பந்து, (தந்தை).

**235.** **வல்லார் வல்ல கலைஞருக்கு**
**மறைநூ லவர்க்குங் கடவுளர்க்கும்**
**இல்லா தவர்க்கு முள்ளவர்க்கு**
**மிரந்தோர் தமக்குந் துறந்தவர்க்கும்**
**சொல்லா தவர்க்குஞ் சொல்பவர்க்குஞ்**
**சூழுஞ் சமயா திபர்களுக்கும்**
**அல்லா தவர்க்கு மிரவிமக**
**னரிய தான மளிக்கின்றான்.**

[வல்லார் வல்ல கலைஞருக்கும், மற்ற நூலவர்க்கும், கடவுளர்க்கும், இல்லாதவர்க்கும் உள்ளவர்க்கும், இரந்தோர் தமக்கும் துறந்தவர்க்கும், சொல்லாதவர்க்கும் சொல்பவர்க்கும், சூழும் சமய அதிபர்களுக்கும், அல்லாதவர்க்கும் இரவி மகன் அரிய தானம் அளிக்கின்றான்.]

**விளக்கம் :-** வல்லார் வல்ல கலைஞர் - வல்லவர்களான ஆசிரியரிடம் பயின்ற கலை வல்லார், அல்லது, கலை வல்லாருள் வல்லவர்களான கலைஞர். மறை நூலவர் - அந்தணர். கடவுளர் - தேவர். இல்லாதவர் - ஏழையர். உள்ளவர் - பொருளுடையவர். இரந்தோர் - யாசகர். துறந்தோர்-பந்தம் நீங்கிய சான்றவர். சொல்லாதவர் - தம் குறை கூறாதவர், அல்லது, தன்னைப் புகழாதவர். சூழும் சமயாதிபர் - ஆயும் சமய வித்தகர். அல்லாதவர் - பகைவர், நட்பில்லாதவர். ''இருக்கின்றவர், இல்லாதவர், உற்றார், அயலார் என்ற வேறுபாடு இல்லாமல் கர்ணன், பிறரால் கொடுத்தற்கு அரிய தானங்களைச் செய்கின்றான்'', என்று கண்ணன் கூறியபடி.

**236.** **மைந்தற் குறுதி நீவேண்டின்**
**வல்லே முனிவர் வடிவாகிச்**
**சந்தப் பனுவ லிசைமாலைத்**
**தானா கரனை விரைந்தெய்தி**
**அந்தக் கவச குண்டலங்க**
**ளளிப்பா யென்றா லவனொன்றும்**
**இந்தப் புவியின் மறுத்தறியா**
**னுயிரே யெனினு மீந்திடுவான்.**

[மைந்தற்கு உறுதி நீ வேண்டின் வல்லே (விரைந்து) முனிவர் வடிவு ஆகி, சந்தம் பனுவல் இசை மாலை தானாகரனை (தான ஆகரனை) விரைந்து எய்தி, அந்த கவச குண்டலங்கள் அளிப்பாய் என்றால், அவன் ஒன்றும் இந்த புவியில் மறுத்து அறியான், உயிரே எனினும் ஈந்திடுவான்.]

**விளக்கம் :-** சந்தம் பனுவல் இசை மாலை தானாகரன் - சந்தநலமுடைய பாடல்களில் அமைந்த புகழாகிய மாலை அணிந்த தானத்திற்கு இருப்பிடமான கர்ணன். நீ அந்தண வடிவில் சென்று அந்த கவச குண்டலங்களை யாசித்தால், எதையும் மறுத்து அறியாத கர்ணன், கொடுப்பான்; இரந்தார்க்கு உயிரையும் கொடுக்கப் பின்வாங்கான்,—என்று கண்ணன் கூறினான்,—என்பதாம்.

**237.** **இரண்டு மவன்பா னீகவரி**
**னிருந்தே ரூர்ந்திப் படியரசர்**
**திரண்டு வரினும் வெஞ்சமரிற்**
**றிண்டேர் விசய னெதிர்நில்லார்**
**முரண்டு பொருவிற் கன்னனுந்தன்**
**முன்னே யெய்தி முடிசிதறிப்**
**புரண்டு மறியு மெனவணங்கிப்**
**புத்தே ளரசன் போகின்றான்.**

[இரண்டும் அவன் பால் நீ கவரின் இருந்தேர் ஊர்ந்து இப்படி அரசர் திரண்டுவரினும் வெம் சமரில் திண் தேர் விசயன் எதிர்

நில்லார், முரண்டு பொருவில் கன்னனும் தன் முன்னே எய்தி முடி சிதறி புரண்டு மறியும் என, (கண்ணனை) வணங்கி புத்தேள் அரசன் போகின்றான்.]

**விளக்கம் :** ''கவச குண்டலங்களை நீ கவர்ந்துவிட்டால், உலகமே திரண்டுவரினும், விசயன் முன் எவரும் நிற்றல் அரிது. விசயனோடு போர் செய்யவல்ல கர்ணனும் இறப்பான்'', என்று கண்ணன் சொல்ல, இந்திரனும் அவனை வணங்கி அகல்பவனா னான், என்பதாம். புத்தேள் - தேவர். மறியும் - மடிவான். முரண்டு - பகைத்து.

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**இந்திரன் கர்ணன் மனை சேரல்**

**238.** **தண்டு தாளெனக் குனிந்துட லலமரத்**
**தாளிணை தளர்ந்துதள் ளாடக்**
**கண்டி யாவருங் கைதொழக் கவித்தகைக்**
**குடையுடன் கங்கைநீர் நுரையை**
**மொண்டு மேலுறச் சொரிந்ததா மெனநரை**
**திரையுடன் மூப்பொரு வடிவம்**
**கொண்ட தாமென வொருமுனி யாகியே**
**கொற்றவன் வாயில்சென் றடைந்தான்.**

[தண்டு தாள் என குனிந்து உடல் அலமர, தாள் இணை தளர்ந்து தள்ளாட, கண்டு யாவரும் கைதொழ, கவித்த கை குடையுடன் கங்கை நீர் நுரையை மொண்டு மேல் உற சொரிந்தது ஆம் என நரை திரையுடன் மூப்பு ஒரு வடிவம் கொண்டது ஆம் என, ஒரு முனி ஆகியே, கொற்றவன் வாயில் சென்று அடைந் தான்.]

**விளக்கம் :-** ஊன்றுகோல் கால்போல் உதவ, உடல் கூனிப் போய்த் தளரவும், இரண்டு கால்களும் சோர்வுடன் தடுமாறவும், கண்ட யாவரும் கைகூப்பி வணங்கவும், கவித்துக் கையில் பிடிக்கப் பெற்ற குடையுடன், கங்கை நீரின் நுரையை மொண்டெடுத்து மேலே மிகுதியாகச் சொரிந்தது போன்ற வெளுத்த மயிர்க் கூட்டங்களும் தோலின் சுருக்கமும் ஆகிய தோற்றத்துடன், முதுமைப் பருவம் ஒரு வடிவங்கொண்டது போன்ற அந்தண வேடங்கொண்டு (இந்திரன்) கர்ணனது மனைவாயில் போய்ச் சேர்ந்தான், — என்பதாம்.

**239.** **அடுத்த தானமும் பரிசிலு மிரவலர்க்**
**கருளுடன் முற்பக லளவுங்**
**கொடுத்து நாயகன் புகுந்தன னாளைநீர்**
**குறுகுமி னென்றவன் கோயில்**
**தடுத்த வாயிலோர் மீளவு முணர்த்தலிற்**
**றலைவனுக் தருகென விரைவின்**
**விடுத்த நான்மறை முனியையமுன் காண்டலும்**
**வேந்தனுந் தொழுதடி வீழ்ந்தான்.**

[அடுத்த தானமும் பரிசிலும் இரவலர்க்கு அருளுடன் மு, பகல் அளவும் கொடுத்து நாயகன் புகுந்தனன், நாளை நீர் குறும் மின் என்று, அவன் கோயில் தடுத்த வாயிலோர், மீளவுன் உணர்த்தலின், தலைவனும் தருக என, விரைவின் விடுத்த நால் மறை முனியை முன் காண்டலும், வேந்தனும் தொழுது அடி வீழ்ந்தான்.]

**விளக்கம்** :- "தன் மனை வந்த யாசகர்களுக்குரிய தானமும் வித்தகர்களுக்குப் பரிசிலாகப் பொருளும் அருளோடு நடுப்பகல் அளவும் கொடுத்து, எங்கள் நாயகனான கர்ணன், (தானமண்டபம் விட்டு) உள்ளே சென்றுவிட்டான், நாளை நீர் வருக", என்று சொல்லித் தடுத்த துவாரபாலகர், (வந்தவனது முதுமை நோக்கி) மறுபடியும் சென்று வேதியனது வருகையைத் தெரிவித்தலும், "அவரை உள்ளே விடுக", என்று கர்ணன் கூற, அவர்களும் விரைவாக அவ் வேதியனை அழைத்து வந்துவிட, அந்த வேத வித்தகனான முனிவனைக் காணலும், அரசன் தொழுது அவனது அடி விழுந்து வணங்கினான்,—என்பது பொருள்.

**240.** **என்ன மாதவம் புரிந்தனன் பரிந்துநீ**
**யீண்டெழுந் தருளுதற் கென்று**
**பொன்னி னாசனத் திருத்திமெய் யருளுடன்**
**பூசையு முறைமுறை புரிய**
**அன்ன வேதியன் றளர்ந்தவென் னடையினா**
**லானதே பிற்பக லென்று**
**சொன்ன வேலையி னகைத்துனக் களிப்பனீ**
**சொன்னவை யாவையு மென்றான்.**

[என்ன மாதவம் புரிந்தனன் பரிந்து நீ ஈண்டு எழுந்தருளுதற்கு என்று, பொன்னின் ஆசனத்து இருத்தி மெய் அருளுடன் பூசையும் முறை முறை புரிய, அன்ன வேதியன் தளர்ந்த என் நடையினால் ஆனது பின் பகல் என்று சொன்ன வேலையின் நகைத்து, "உனக்கு அளிப்பன் நீ சொன்னவை யாவையும்", என்றான்.]

**விளக்கம்** :- பரிந்து-விரும்பி. பூசை-உபசாரம். நகைத்து-சிரித்து, அதாவது, "தானங்கொடுக்கும் வேளை கழிந்தமையின் தன் காரியம் கைகூடாது போகுமோ, என்று அந்தணன் அயிர்க்கின்றான் போலும்", என்று எண்ணி நகைத்து. "ஐய, பிற்பகல் ஆய்விட்டதே என்று அஞ்சவேண்டா. நீ கேட்டதை, அது எதுவாயினும், கொடுப்பேன்", என்று கர்ணன் கூறினான்,—என்பதாம்.

**241.** **அருத்தி யீதல்பொற் சுரதரு வினுக்குமற்**
**றரிதுநீ யளித்தியோ வென்று**
**விருத்த வேதியன் மொழிந்திட நகைத்துநீ**
**மெய்யுயிர் விழைந்திரந் தாலும்**

**கருத்தி னோடுனக் களித்திலே னெனினெதிர்**
**கறுத்தவர் கண்ணிணை சிவப்ப**
**உருத்த போரினிற் புறந்தரு நிருபர்போ**
**யுறுபத முறுவனென் றுரைத்தான்.**

[''அருத்தி ஈதல் பொன் சுர தருவினுக்கும் மற்று அரிது, நீ அளித்தியோ'', என்று விருத்த வேதியன் மொழிந்திட, நகைத்து, நீ மெய் உயிர் விழைந்து இரந்தாலும் கருத்தினொடு உனக்கு அளித்திலேன் எனின், எதிர் கறுத்தவர் கண் இணை சிவப்ப உருத்த போரினில் புறம் தரு நிருபர் போய் உறு பதம் உறுவன், என்று உரைத்தான்.]

**விளக்கம் :-** அருத்தி - விருப்பமான பொருள். பொன் சுரதரு - பொன்மயமான தேவலோகத்திற்கு உரிய கற்பகதரு. கருத்தினொடு - மனப்பூர்வமாய். கறுத்தவர் கண் இணை சிவப்ப உருத்த போர் - சினந்து பகைவர் கண் சிவக்கும்படி கடுமையாகச் செய்யும் போர். ''நான் விரும்பிய பொருள், கொடுத்தல் கற்பக விருட்சத்திற்கும் அரியதாகும். நீ கொடுப்பையோ'', என்று வேதியன் சொல்ல, (கர்ணன்) சிரித்து, ''என் உயிரை இரந்தாலும் மனப்பூர்வமாக அதைக் கொடாமற் போவேனேயாயின், பகைவர் உக்கிரமாய்ச் செய்யும் போரில் பின்னிடும் அரசர் அடையும் கதியை நான் அடைவேன்'', என்று கூறினான், என்பதாம். மெய் உயிர் - உடலோடு சம்பந்தங் கொண்ட உயிர். கறுப்புஞ் சிவப்பும், வெகுளிப் பொருளன.

**242.** **வந்த வந்தணன் கவசகுண் டலங்களை**
**வாங்கிநீ வழங்கெனக் கென்னத்**
**தந்த னன்பெறு கெனவவன் வழங்கவிண்**
**தலத்திலோர் தனியச ரீரி**
**இந்தி ரன்றனை விரகினான் மாயவ**
**னேவினான் வழங்கனீ யெனவும்**
**சிந்தை யின்கணோர் கலக்கமற் றளித்தனன்**
**செஞ்சுடர்த் தினகரன் சிறுவன்.**

[வந்த அந்தணன் கவச குண்டலங்களை வாங்கி நீ வழங்கு எனக்கு என்ன, தந்தனன் பெறுக என அவன் வழங்க, விண் தலத்தில் ஓர் தனி அசரீரி, ''இந்திரன் தனை விரகினால் மாயவன் ஏவினான், வழங்கல் நீ'', எனவும், சிந்தையின்கண் ஓர் கலக்கம் அற்று, அளித்தனன், செம் சுடர் தினகரன் சிறுவன்.]

**விளக்கம் :-** ''கவச குண்டலங்களைக் கழற்றித் தருக'', என்னலும், (கர்ணன்), ''தந்தனன் பெற்றுக் கொள்க'', என்று கூறி வழங்கப் போகையில், வானிடத்தில் ஓர் ஒப்பற்ற அசரீரி, ''இந்திரனை மாயவன் கபடமாக ஏவியுள்ளான், வழங்கற்க'', என்று சொல்லியும் கேளாமல், மனக்கலக்கம் சிறிதும் ; இன்றி, சூர்யகுமாரனாகிய கர்ணன், அளித்தான், என்பதாம். தந்தனன்,

என்ற இறந்த காலம், விரைவும், நிச்சயமும் பற்றிய காலவழு.

**243.** **அண்டர் யாவரு மலர்மழை பொழிந்தன**
**ரந்தர துந்துபி யார்ப்பக்**
**கொண்டல் வாகனன் கொண்டமெய் யொழித்துத்**
**தன்கோல மெய்யுடன் வெளிநின்றான்**
**கண்டு மாமன முருகியே களித்திடுங்**
**கன்னனுக் கந்நெடுங் கடவுள்**
**மண்டு போரினில் வயந்தரு மிதுவென**
**மற்றொரு கொற்றவே லெடுத்தே.**

[அண்டர் யாவரும் மலர் மழை பொழிந்தனர், அந்தர துந்துபி ஆர்ப்ப, கொண்டல் வாகனன் கொண்ட மெய் ஒழித்து, தன் கோலம் மெய்யுடன் வெளி நின்றான்; கண்டு மாமனம் உருகியே களித்திடும் கர்ணனுக்கு அ நெடுங் கடவுள் மண்டு போரினில் வயம் தரும் இது என (மற்று) ஒரு கொற்றம் வேல் எடுத்தே, - அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்.]

**விளக்கம் :-** அண்டர் - தேவர். அந்தர துந்துபி - தேவ லோகத்து வாத்தியம். கொண்டல் வாகனன் - இந்திரன். நெடுங் கடவுள் - பெருமையில் சிறந்த இந்திரன். கர்ணன், அசரீரி தடுத்தும் கவச குண்டலங்களை மனப்பூர்வமாக வழங்கியது கண்டு தேவர்கள், அந்தர துந்துபி முழங்க மலர் மழை சொரிந்தனர். இந்திரனும் தனது வேடத்தை ஒழித்துத் தனது இயற்கையான அழகிய வடிவத்தோடு நின்றான். அவனைக் கண்டு, ''தேவர் தலைவனுக்குத் தான் ஒன்று கொடுக்க வாய்ப்புக் கிடைத்ததே'', என்று மனம் உருகிப் பெருங்களிப்புக் கொண்ட கர்ணனுக்கு இந்திரன்,. ''கொடுமை மிகுந்த போரில் வெற்றி தரும் இது'', என்று கூறி, ஒரு கொற்றம் தரும் வேலை எடுத்து,—(அடுத்த செய்யுளில் முடியும்) என்பது பொருள்.

**244.** **வெலற்க ருந்திறல் விசயன்மே லொழித்துநீ**
**வெஞ்சின மடங்கல்போ னெஞ்சில்**
**கலக்க மொன்றறப் பொருதிறல் புனைந்திடு**
**கடோற்கசக் காளைதன் னுயிரே**
**இலக்கு வந்தெதிர் மலைந்தபோ திதற்கென**
**வேவென மறையையு மியம்பிச்**
**சொலற்க ரும்புகழ் சுரபதி கொடுப்பவத்**
**தோன்றலுந் தொழுதுகைக் கொண்டான்.**

[வெலற்கு அருந்திறல் விசயன் மேல் ஒழித்து நீ வெம் சினம் மடங்கல்போல் நெஞ்சில் கலக்கம் ஒன்று அற பொரு திறல் புனைந் திடு கடோற்கசன் காளை தன் உயிரே, இலக்கு வந்து எதிர்

மலைந்தபோது இதற்கு என, ஏவு என, மறையையும் இயம்பி, சொலற்கு அரும் புகழ் சுரபதி கொடுக்க, அ தோன்றலும் தொழுது கைக்கொண்டான்.]

**விளக்கம் -:** விரிந்த பெரிய புகழை உடைய சுரபதி (இந்திரன்), வெல்வதற்கு அரிய திறலை உடைய அருச்சுனனை ஒழித்து, நீ, கொடிய கோபத்தையுடைய ஆண் சிங்கம்போல் மனக் கலக்கம் சிறிதும் இல்லாமல், போர் செய்யும் திறமையை மேற்கொண்ட கடோற்கசன் என்னும் இளவீரனது உயிரே,—அவன் போர்க்களம் வந்து எதிர் நின்று போர் செய்யும் பொழுது, இலக்காகக் கொண்டு இந்த வேலை ஏவுக,—என்று சொல்லி, அதற்குரிய மந்திரத்தையும் உபதேசித்து வேலைக் கொடுக்க, அந்தக் கர்ணனும், அவனை வணங்கி வேலைக் கையேற்றான், என்பது பொருள்.

**245.** **நிரந்த ரம்புகழ் நிலைபெறுங் கன்னனை**
**நெஞ்சுற மகிழ்ந்தவ ணிறுத்திப்**
**புரந்த ரன்பசுந் தண்டுழா யணிந்திடும்**
**புயல்வண னிருந்துழிப் போந்தே**
**இரந்து சென்றுதான் மொழிந்தது மவ்வள**
**வீந்தது மங்கவற் கிசைத்தான்**
**வரந்த ருந்திரு மாலதை வினவியவ்**
**வாசவன் றனக்குரை வழங்கும்.**

[நிரந்தரம் புகழ் பெறும் கன்னனை நெஞ்சு உற மகிழ்ந்து அவண் நிறுத்தி, புரந்தரன் பசுந்தண் துழாய் அணிந்திடும் புயல் வண்ணன் இருந்துழி (இருந்த உழி) போந்து (ஏ), இரந்து சென்று தான் மொழிந்ததும், அவ்வளவு ஈந்ததும் ஆங்கு அவற்கு இசைத் தான், வரம் தரும் திருமால் அதை வினவி, அ வாசவன் தனக்கு உரை வழங்கும்,]

**விளக்கம் :-** நிரந்தரம் - இடையறுதலின்றி எப்பொழுதும். நிரந்தரமான கீர்த்தி நிலைத்த (தன்னை வழியனுப்ப வந்த) கர்ணனை மகிழ்ந்து அங்கே நிற்கச் செய்து (விடைகொண்ட) இந்திரன், பசுந்துழாய் அணிந்த கண்ணனை அடைந்து, தான் கர்ணனிடம் சென்று இரந்ததையும், தான் கேட்ட அளவில் (உடனே) அவன் கொடுத்ததையும் அங்கே கண்ணனுக்குச் சொன்னான்; அடியார்க்குக் கேட்டவற்றை எல்லாம் அளிக்கும் திருமாலாகிய கண்ணனும் அவன் கூறியது கேட்டு, அவ் வாசவனுக்கு ஒரு வார்த்தை கூறலுற்றான்,—என்பதாம். . புரந்தரன் - இந்திரன். அவ்வளவு - அந்த அளவில் ; உடனே -தயக்கம் சிறிதும் இல்லாமல். வாசவன் - இந்திரன். வினவி - கேட்டு.

**246.** **உண்மை யாகவெஞ் சமர்முகத் தெறிபடை**
**யொன்றுவந் துடலுற வொட்டாத்**
**திண்மை யாலுயர் கவசகுண் டலங்களைச்**
**சென்றிரந் தவற்கிவன் கொடுத்தான்**

**எண்மை யாயினுங் கிளைஞரே யேற்பினு**
**மியல்பிலாப் புன்செல்வ ரீயார்**
**வண்மை யாளர்தம் மாருயிர் மாற்றலார்**
**கேட்பினு மறுக்கிலா ரென்றே.**

[உண்மை ஆக வெம் சமர் முகத்து எறிபடை ஒன்றும் வந்து உடல் உற ஒட்டா திண்மையால் உயர் கவச குண்டலங்களை சென்று இரந்தவர்க்கு இவன் கொடுத்தான், எண்மை ஆயினும் கிளைஞரே ஏற்பினும், இயல்பு இலா புல் செல்வர் ஈயார் ; வண்மையாளர் தம் ஆர் உயிர் மாற்றலார் கேட்பினும் மறுக்கிலார், என்றே.]

**விளக்கம் :-** போர் முகத்தில் நிச்சயமாக ஆயுதங்கள் எதுவும் உடலில் பதிய இடங்கொடாத வலிமையினால் உயர்ந்த கவச குண்டலங்களை, போய் யாசித்தவற்கு இக் கர்ணன் கொடுத்தான்; நல்ல குணம் இல்லாத புல்லிய செல்வர், இரப்பவர் உறவினரே யாயினும், கொடுக்கப்படு பொருள் சிறியதாயினும், அல்லது எளியதாயினும், கொடார்; வள்ளல்கள் ஆனோர் இரப்பவர் பகைவர்களே ஆயினும், இரக்கப்படுபொருள் அரிய உயிரே ஆயினும் மறுக்க மாட்டார், என்று,—(அடுத்த செய்யுளில் முடியும்), என்பது பொருள். எண்மை - (எள் - மை) எளிமை அல்லது அற்பம். மாற்றலார் - பகைவர். உத்தமரது இலக்கணமும், அதனெதிர் அதமரது தாழ்மையும், கண்ணனால் எடுத்துக் காட்டப்பட்டன. கர்ணன் நேரில்லா வள்ளல் என்பதை, உத்தமரது இலக்கணம் இத்தன்மையது என்ற பொதுப் பொருளால் தோற்றுவிக்கும் இது, வேற்றுப் பொருள் வைப்பின் பாற்படும். இரந்தவற்கு - யாசித்த உனக்கு (முன்னிலைப் படர்க்கை),

**247. வாசவன் றனக்கு விடைகொடுத் ததன்பின்**
**வந்தகா ரியந்தனை முடிப்பான்**
**கேசவன் றனது தாதையொ டுதித்த**
**கேண்மைகூர் தெரிவையைக் கிட்டித்**
**தேசவன் றந்த குரிசில்பால் விரைவிற்**
**செல்கெனப் பயந்த சேயிழையும்**
**பாசமுன் னுறமா லேவலாற் றனது**
**பாதபங் கயஞ்சிவப் பித்தாள்.**

[வாசவன் தனக்கு விடை கொடுத்ததன் பின், வந்த காரியந் தனை முடிப்பான், கேசவன், தனது தாதையொடு உதித்த கேண்மை கூர் தெரிவையை கிட்டி, தேசவன் தந்த குரிசில்பால் விரைவின் செல்க என, பயந்த சேயிழையும், பாசம் முன் உற மால் ஏவலால் தனது பாதபங்கயம் சிவப்பித்தாள்.]

**விளக்கம் :-** இந்திரனுக்கு விடை கொடுத் தனுப்பிய பின், கண்ணன் தான் வந்த காரியத்தை முடிக்கும் பொருட்டு, தனது

அத்தையான குந்தியிடம் சென்று, சூர்ய புத்திரனிடம் விரைவில் செல்க, என்று கூற, கர்ணனைப் பெற்ற சேயிழையும், அவனது ஏவலால், பாசம் முன் செல்லத் தனது பாதங்களாகிய தாமரை மலர் சிவக்கும்படி நடந்து சென்றாள்,—என்பதாம். கேண்மை கூர் தெரிவை - அன்பு மிகுந்த குந்தி. தேசவன் - சூரியன். சேயிழை - (செம்மை இழை) சிவந்த வஸ்திரம் அணிந்த குந்தி; விதவையாதலால் ஆபரணம் அணிந்தவள், என்னல் பொருந்தாது. பாதபங்கயம் சிவப்பித்தாள் - தாமரை மலர் போன்ற தன் பாதங்கள் சிவக்கும்படி நடந்து சென்றாள்.

## குந்தி கர்ணன் மனை சேர்தல்

**248.** **வந்து குந்திநின் கோயிலெய் தினளென**
**வாயிலோ ருரைத்திட மைந்தன்**
**முந்து மன்புடன் றொழுதெதிர் கொண்டுநன்**
**முறைமையா லாசனத் திருத்தி**
**இந்து வின்கதிர் கண்டுமேன் மேலுமுற்**
**றிரங்கிவான் கரைகடந் தேறும்**
**சிந்து வெண்டிரைச் சிந்துவொத் துருகுந்**
**தெரிவையோ டுரைசில செப்பும்.**

[வந்து குந்தி நின் கோயில் எய்தினள் என வாயிலோர் உரைத்திட, மைந்தன் முந்தும் அன்புடன் தொழுது எதிர் கொண்டு நல் முறையால் ஆசனத்து இருத்தி, இந்துவின் கதிர் கண்டு மேல் மேலும் உற்று இரங்கி வான் கரை கடந்து ஏறும் சிந்து வெள்திரை சிந்து ஒத்து உருகும் தெரிவையோடு உரை சில செப்பும்.]

**விளக்கம் :-** இந்து - சந்திரன். சிந்து - அலைகளைச் சிந்துகின்ற, எங்கும் இறைக்கின்ற. சிந்து - கடல். இரங்கல் - ஒலித்தல். குந்தியின் வரவை வாயில் காப்போர் உணர்த்தக் கர்ணன், முந்துகின்ற அன்புடன், எதிர் கொண்டு தொழுது முறையே சிறந்த ஆசனத்தில் இருக்கச் செய்து, (தன்னைக் கண்டு) சந்திர கிரகணத்தைக் கண்டு மேலும் மேலும் பொங்கி ஒலித்துப் பெரிய கரையைக் கடந்து. வெள்ளிய அலைகளைச் சிந்திக் கொண்டு பெருகும் கடலைப்போல் மனம் மகிழ்ந்து பெருகும் குந்தியினிடம் கர்ணன் சில உபசார வார்த்தைகளைக் கூறினான், என்பதாம். சிந்து - (ஸிந்து) கடல்.

**249.** **அன்னை வந்ததென் னருந்தவப் பயனென**
**வன்பினா லின்புற வணங்கி**
**என்னை வந்தவா றென்னமற் றவளுமே**
**யீன்றதா யானுனக் கென்று**
**முன்னை வந்தொரு மந்திரந் தவமுனி**
**மொழிந்ததுங் கதிரவ னருளால்**
**பின்னை வந்ததும் பேழையில் விடுத்ததும்**
**பிழையிலர துரைத்திடக் கேட்டே,**

[அன்னை, வந்தது என் அருந்தவம் பயன் என, அன்பினால் இன்பு உற வணங்கி, ''என்னை வந்த ஆறு?'' என்ன, (மற்று) அவளும் (ஏ) ''ஈன்ற தாய் யான் உனக்கு'', என்று, முன்னை வந்து ஒரு மந்திரம் தவமுனி மொழிந்ததும், கதிர்வன் அருளால் பின்னை வந்ததும், பேழையில் விடுத்ததும் பிழை இலாது உரைத்திட, கேட்டே,—அடுத்த செய்யுளோடு சேர்ந்து முடியும்-]

**விளக்கம் :-** ''முன்னை ஒரு தவமுனி வந்து மந்திரம் மொழிந்ததும்...'' என்று மூன்றாவது அடியை அன்வயிக்க. பிழையிலாது - நடந்தது நடந்தபடியே, எதையும் மறைக்காமல். ''அன்னையே, நீ வந்தது என் அருந்தவப் பயன்'' என்று கர்ணன் கூறி, அன்போடு தன் உள்ளம் இன்பம் அடைய வணங்கி, ''நீ வந்த காரியம் யாது?'' என்று கேட்க, அவளும் இளமைப் பருவத்தில் துர்வாச முனிவன் மந்திரம் உபதேசித்ததும், சூரியனது அருளினால் ஒரு மகவைப் பெற்றதும், அதை ஒரு பெட்டியில் இட்டு ஆற்றில் விட்டதும் ஆகியவற்றை விபரமாக உரைக்க, அது கேட்ட கர்ணன்,—(தொடரும்), என்பதாம்.

**250. மாய னார்விர கிதுவென மனத்தினின்**
**மதித்துவந் தளித்திடும் வள்ளல்**
**நீய நாளெனைப் பயந்தவ ளென்னினு**
**நின்மொழி நெஞ்சுறத் தேறேன்**
**பேய னார்சிலர் பேரறி வின்மையாற்**
**பெற்றதா யெனக்கென வந்து**
**தூய நாகரி னமைந்ததோர் துகிலாற்**
**றுன்பமுற் றென்புரு வானார்.**

[மாயனார் விரகு இது என மனத்தினின் மதித்து, உவந்து அளித்திடும் வள்ளல், நீ அ நாள் என்னை பயந்தவள் என்னினும் நின் மொழி நெஞ்சு உற தேறேன்; பேய் அனார் சிலர் பேர் அறிவு இன்மையால் பெற்ற தாய் எனக்கு என வந்து, தூய நாகரின் அமைந்தது ஓர் துகிலால் துன்பம் உற்று, என்பு உரு ஆனார்.]

**விளக்கம் ;-** இரந்தார்க்கொன்று உவந்து அளித்திடும் வள்ளலாகிய கர்ணன், இது கண்ணனது சூழ்ச்சி என்று எண்ணி, ''நீ அந்த நாள் என்னைப் பெற்ற தாய், என்று சொன்னாலும், உன் மொழியை மனம் பொருந்த நம்பமாட்டேன். பேய் போன்ற மகளிர் சிலர், நல்லறிவு இன்மையால், பெற்றதாய் எனச் சொல்லிக்கொண்டு வந்து, தூய்மையுடைய தேவர்களால் அமைக்கப்பட்டதான ஒரு சேலையால் துன்பமுற்று எலும்புக் கூடாய் அழிந்தனர்'',—என்று கூறினான்,—என்பதாம். இன்னாள் தாய் என்பது அறியாத கர்ணனிடம், பொருளாசையால், பேதையர் சிலர், தாய் என்று கூறிக்கொண்டு வரலும், அவன் தேவரை வேண்ட, அத் தேவர் ஓர் ஆடையை அளித்து,

''உண்மையான தாய் ஒழிய வேறு எவரேனும் இவ்வாடையை அணிந்தால், அவர் அழிவர்'', என்று கூறினர் என்பதும், தாயாக வந்தவர் பலர் அந்தத் துகிலால் எரிக்கப்பட்டு அழிந்தார் என்பதும், வரலாறு. நாகர் - தேவர்.

வேறு

**251.** **அடாது செய்தவர் படாது பட்டனரெனு**
**மங்கர்கோ னருண்மொழி கேட்டு**
**தடாத வன்புடைக் கெடாத தூமொழி**
**பகர்தையலும் மையலிற் றவிர்ந்து**
**படாமதென் கையிற் றருகென வருதலும்**
**பயந்திலே னெனிலெனை முனியென்(று)**
**எடாவிரித் தலைத்து டற்படப் போர்த்**
**தெதிரீன்ற தாயாமென விருந்தாள்.**

[அடாது செய்தவர் படாது பட்டனர் எனும் அங்கர்கோன் அருள் மொழி கேட்டு, தடாத அன்பு உடை கெடாத தூமொழி பகர் தையலும் மையலின் தவிர்ந்து, படாம் அது என் கையில் தருக என, வருதலும், ''பயந்திலேன் எனில் எனை முனி'', என்று, எடா விரித்து அலைத்து உடல் பட போர்த்து எதிர் ஈன்ற தாயாம் என இருந்தாள்,]

**விளக்கம் :-** செய்யத்தகாதது செய்தவர், பட முடியாத துன்பம் அடைந்து அழிந்தனர், என்று கூறிய அங்கர் கோனின் அருளுடைய மொழி கேட்டு, தடுக்கப்படாத அன்பு உடையவளும், கேடு இல்லாத தூய சொற்களைப் பேசுபவளும் ஆன குந்தி, ஐயம் நீங்கி, ''அந்த ஆடையை என் கையில் கொடுப்பாயாக'', என்று சொல்லி, அது தன் கை வந்த அளவில், ''பெற்றவள் நான் அல்லேன் எனில் முனிந்து அழிப்பாய்,'' என்று கூறி, அந்த வஸ்திரத்தை எடுத்து விரித்து உதறித் தன் உடலில் நன்கு பொருந்தும்படி போர்த்துக்கொண்டு, அவன் எதிரில் பெற்ற தாயாம் எனும்படி இருந்தாள்,—என்பது பொருள். அடாது - செய்யத்தகாதது; அதாவது பொய்யாக உறவு கூறல். வந்த குந்தி உண்மையான தாய் அல்லளாயின், அவள் அத் துகிலால் அழியலாகாது என்ற எண்ணத்தில், அவன் கூறியதால், அவன் கூற்று 'அருள் மொழி' ஆயிற்று. மையல், என்பது இங்கே சங்கை என்ற பொருளது. கண்ணனது கூற்றில் உள்ள நம்பிக்கையால், மையல் தவிர்ந்து, அதாவது சங்கை நீங்கி, ஆடையை அணிந்து கொண்டாள். படாம் அது - வஸ்திரமாகிய அது.

**252.** **இருந்ததா யீன்ற வன்றுபோ லுருகி**
**யிருதடங் கொங்கைபால் சுரந்தாள்**
**அருந்துவான் போல விரவிசேய் விரும்பி**
**யாதரத் துடன்புள கானான்**

**புரிந்ததா யன்பொ டிறுகுறத் தழுவிப்**
**பொன்முடி மோயின ளுயிராப்**
**பரிந்துநா னன்றே யுனைவளர்த் தெடுக்கப்**
**பாக்கியஞ் செய்திலே னென்றாள்.**

[இருந்த தாய் ஈன்ற அன்றுபோல் உருகி இரு தடங் கொங்கை பால் சுரந்தாள், அருந்துவான் போல இரவி சேய் விரும்பி ஆதரத்துடன் புளகு ஆனான், புரிந்த தாய் அன்பொடு இருகுற தழுவி, பொன்முடி மோயினாள் உயிரா, பரிந்து நான் அன்றே உனை வளர்த்து எடுக்க பாக்கியம் செய்திலேன், என்றாள்.]

**விளக்கம் :-** தேவர் தந்த ஆடை அணிந்திருந்ததால், பெற்ற அந்த நாளிற்போல் உருகி இரண்டு பெருய முலைகளினின்றும் பாலைச் சொரிய விட்டாள். அப் பாலைக் கர்ணன் அன்போடு அருந்துவான் போல, உள்ளக்களிப்பினால் உடல் புளகிக்கலானான்; இவ்வாறு செய்த தாயான குந்தி அன்போடு அவனை நன்றாகத் தழுவிக்கொண்டு, அவனது அழகிய உச்சி முகர்ந்து பெருமூச்சு விட்டு, ''உன்னைப் பெற்ற நாளிலேயே அன்போடு எடுத்து வளர்க்க நான் பாக்கியம் செய்தே னில்லை,'' என்று வருந்திக் கூறினாள்,—என்பது பொருள்.

**253. வருகவென் மதலா யிளைஞரை வருநின்**
**மலரடி யன்பினால் வணங்கி**
**உரிமையான் மனமொத் தேவலேபுரிய**
**வொருதனிச் செய்யகோ லோச்சி**
**அரசெலாம் வந்துன் கடைத்தலை வணங்க**
**வாண்மையுஞ் செல்வமும் விளங்கக்**
**குருகுலா திபர்க்குங் குரிசிலாய் வாழ்வு**
**கூர்வதே கடனெனக் குறித்தாள்.**

[வருக என் மதலாய், இளைஞர் ஐவரும் நின் மலர் அடி அன்பினால் வணங்கி, உரிமையால் மனம் ஒத்து ஏவல்(ஏ) புரிய ஒரு தனி செய்ய கோல் ஓச்சி, அரசு எலாம் வந்து உன் கடைத் தலை வணங்க, ஆண்மையும் செல்வமும் விளங்க, குருகுல அதிபர்க்கும் குரிசில் ஆய் வாழ்வு கூர்வதே கடன் என குறித்தாள்.]

**விளக்கம் :-** ''மகனே, என்னுடன் வருவாய்; இளைஞர் ஐவரும் அன்பினால் உன் அடி வணங்கி, உடன் பிறப்பின் உரிமையால் மனம் ஒத்து உனது ஏவல் செய்ய, ஒப்பற்ற செங்கோல் செலுத்தி, அரசர்கள் எல்லோரும் உன் தலைவாயில் வந்து வணங்கி நிற்க, வீரமும் செல்வமும் விளங்கக் குருகுலாதிபரின் நாயகனாய் வாழ்தலை விரும்புவதே கடன்'', என்று குந்தி அழைத்தாள், என்பதாம்.

**254** **பெற்றநீர் மகவன் பிலாமையோ வன்றிப்**
**பெரும்பழி நாணியோ விடுத்தீர்**
**அற்றைநாட் டொடங்கி யென்னையின் றளவு**
**மாருயிர்த் துணையெனக் கருதி**
**கொற்றமா மகுடம் புனைந்தர சளித்துக்**
**கூடவுண் டுரியதம் பியரும்**
**சுற்றமா னவரு மென்னடி வணங்கத்**
**தோற்றமு மேற்றமு மளித்தான்.**

[பெற்ற நீர் மகவு அன்பு இலாமையோ, அன்றி பெரும் பழி நாணியோ விடுத்தீர், அற்றை நாள் தொடங்கி என்னை இன்று அளவும் ஆர் உயிர் துணை என கருதி, கொற்றம் மா மகுடம் புனைந்து அரசு அளித்து, கூட உண்டு, உரிய தம்பியரும் சுற்றம் ஆனவரும் என் அடி வணங்க, தோற்றமும் ஏற்றமும் அளித்தான்.]

**விளக்கம் :-** என்னைப் பெற்ற நீர், அன்பிலாமையி னாலோ, அல்லது பழிக்கு அஞ்சியோ கைவிட்டீர்; அன்று முதல் இன்று வரை, என்னை அவன் ஆருயிர்த் துணைவனாகக் கருதி, முடி சூட்டி, அங்க நாட்டு அரசாட்சியும் அளித்து, உடனிருந்து உண்டு, தம்பியரும் சுற்றத்தாரும் என்னை வணங்குமாறு செய்து எனக்குப் புகழையும், உயர்வையும் தந்தான்,—என்று கர்ணன், கூறியபடி. அன்று - நாள் - அற்றை நாள்.

**255.** **மடந்தைபொற் றிருமே கலைமணி யுகவே**
**மாசறத் திகழுமே காந்தம்**
**இடந்தனிற் புரிந்தே நானயர்ந் திருப்ப**
**வெடுக்கவோ கோக்கவோ வென்றான்**
**திடம்படுத் திடவே லிராசரா னுக்குச்**
**செருமுனைச் சென்றுசெஞ் சோற்றுக்**
**கடன்கழிப் பதுவே யெனக்கினிப் புகழுங்**
**கருமமுந் தருமமு மென்றான்.**

[மடந்தை பொன் திருமேகலை மணி உகவே மாசு அற திகழும் ஏகாந்தம் இடந்தனில் புரிந்தே நான் அயர்ந்து இருப்ப, 'எடுக்கவோ, கோக்கவோ' என்றான், திடம்படுத்திட வேல் இராசராசனுக்கு செருமுனை சென்று செம் சோறு கடன் கழிப்ப துவே, எனக்கு இனி புகழும் கருமமும் தருமமும் என்றான்.]

**விளக்கம் :-** குற்றமற்று விளங்குவதான, அதாவது சிறந்த ஒரு ஏகாந்தமான இடத்திலே, துரியோதனன் மனைவியான பானுமதியின் பொன்னாலான அழகிய மேகலாபரணத்தின் மணிகள் சிதறும்படி செய்து செயலற்று இருக்க, (அப்பொழுது அவண் வந்த துரியோதனன்) ''எடுக்கவா, அல்லது கோக்கவா'', என்று கூறி, என் அச்சம் நீக்கினான்; அப்படிப்பட்ட வேல் ஏந்திய இராசராசனுக்கு உறுதி யுண்டாகும்படி போர்முனை சென்று

அவன் இட்ட சோற்றுக்கடன் கழிப்பதே, இனி எனக்குப் புகழும், செய்யத்தக்க கருமமும், செய்வதற்குரிய தர்மமும், என்றான்,—என்பது பொருள். ஒரு பகல் ஏகாந்தமான இடத்திலே கர்ணன் துரியோதனன் மனைவியோடு சூதாடிக்கொண்டிருக்கையில், தன் கணவன் வருவது அறிந்த நங்கை எழுந்திருக்கவும், ஆட்டத்தில் தன்னை மறந்திருந்த கர்ணன், அவளது மேகலையைப் பற்றி யிழுக்கவே மணிகள் உதிர, அவண் வந்த துரியோதனன், ''மணி களை எடுக்கட்டுமா அல்லது கோக்கட்டுமா?'' என்று கேட்டான், என்பது வரலாறு மேகலை - பெண்கள் இடையில் அணியும் ஓர் ஆபரணம். திடம்படுத்திட - உறுதியுண்டாக்க.

**256.** **பின்னையும் பற்பன் மொழிந்தபின் பலவும்**
**பேசியென் பூசலோ விளைந்தது**
**உன்னிநீ ரிங்கு வந்ததென் கரவா**
**துண்மையா லுள்ளவா றுரைமின்**
**என்னமைந் தனுமிப் பரிசினா லுரைப்ப**
**வீன்றறற் றுறத்தவன் றையினும்**
**அன்னைநெஞ் சழிந்தே யிருகணீர் சொரிய**
**வலறிவாய் குழறிநொந் தழுதாள்.**

[பின்னையும் பல் பல் மொழிந்தபின், பலவும் பேசி என்? பூசலோ விளைந்தது, ''உன்னி நீர் இங்கு வந்தது என், கரவாது உண்மையால் உள்ள ஆறு உரைமின்'', என்ன மைந்தனும் இ பரிசினால் உரைப்ப, ஈன்று அறல் துறந்த அன்றையினும், அன்னை நெஞ்சு அழிந்து இரு கண் நீர் சொரிய அலறி வாய் குழறி நொந்து அழுதாள்.]

**விளக்கம் :-** பின்னும் பல பல வார்த்தைகளைச் சொன்ன பின், மைந்தனான கர்ணனும், ''பல பேசிப் பயன் என்ன? போரோ விளையப் போகின்றது. நீர் என்னிடம் நினைத்து வந்த காரியம் யாது? எதையும் மறைக்காமல் உள்ளபடி சொல்லும்'', என்று, இந்த விதமாகக் கூறவும், பெற்றுத் தண்ணீரில் விட்ட அந்த நாளினும் அதிகமாகத் தாயாகிய குந்தி மனம் வருந்திக் கண்ணீர் பெருக அலறி, வாய் குழறித் துன்பம் மிகுந்து அழுதாள்,—என்பது பொருள். அறல் - நீர். போர் நிகழ்தல் தவறாது என்பது தோன்ற, 'பூசலோ விளைந்தது', என்று இறந்த காலத்தால் கூறினார்.

**257.** **ஆண்டுமா மகனு மிருகணீர் துடைத்தவ்**
**வன்னையைப் பன்முறை தேற்றி**
**மூண்டவல் வினையின் பயனலா தியார்க்கு**
**முயற்சியால் வருவதொன் றுண்டோ**
**வேண்டும்யா வையுமே தருகுவே னீரும்**
**வேண்டிய வேண்டுக வென்னப்**
**பாண்டுவின் றிருமா மனைவியு மதற்குப்**
**பண்பினா லின்னன பகர்வாள்.**

[ஆண்டு மா மகனும் இரு கண் நீர் துடைத்து, அ அன்னையை பல்முறை தேற்றி, மூண்ட வல்வினையின் பயன் அலாது யார்க்கும் முயற்சியால் வருவது ஒன்று உண்டோ! வேண்டும் யாவையுமே தருகுவேன், நீரும் வேண்டிய வேண்டுக என்ன, பாண்டுவின் திரு மா மனைவியும் அதற்கு பண்பினால் இன்னன பகர்வாள்.]

**விளக்கம் :-** அப்பொழுது சிறந்த மகனும் அழுது அரற்றும் அன்னையின் கண்ணீரைத் துடைத்துத் தேற்றி, ''எல்லாம் முன்னைய ஊழ்வினையின் படிதான் நடக்கும், முயற்சியால் ஒன்று வருவதுண்டோ? எனவே, வருந்தற்க. நீர் வேண்டுவன யாவையும் தருவேன், வேண்டியதை வேண்டுக'', என்று மகன் கூறலும், பாண்டுவின் மனைவியான குந்தியும் பண்போடு இவை கூறினாள், —என்பதாம். மூண்ட வினை - முன் சென்மத்தில் செய்த வினையின் விளைவாகும் வினை. வேண்டி - (பெயர்) வேண்டிய பொருள்.

### குந்தி வரம் வேண்டல்

**258.** **பார்த்தன்வெஞ் சமரி னின்னுடன் மலைந்தாற்**
**பகைப்பெரும் பாந்தளம் பகழி**
**கோத்தலும் பிழைத்தான் மறித்துநீ விடுத்துக்**
**கோறலென் றொருவரங் குறித்தாள்**
**வாய்த்தமற் றவர்க ளிளைஞரென் றவரை**
**மலையலென் றொருவரங் குறித்தாள்**
**மூத்தவன் காத லிளைஞர்தம் பொருட்டான்**
**மொழிந்தமை கேட்டிவை மொழிவான்.**

[பார்த்தன் வெம் சமரில் நின்னுடன் மலைந்தால் பகை பெரும் பாந்தள் அம் பகழி கோத்தலும் பிழைத்தால், மறித்து நீ விடுத்துக் கோறல், என்று ஒரு வரம் குறித்தாள்; வாய்த்த மற்ற வர்கள் இளைஞர் என்று அவரை மலையல், என்று ஒரு வரம் குறித்தாள்; மூத்தவன், காதல் இளைஞர் தம் பொருட்டு (ஆல்) மொழிந்தமை கேட்டு இவை மொழிவான்.]

**விளக்கம் :-** பார்த்தன் போரில் உன்னொடு பொருதால், அவனோடு பகையுடைய நாகாத்திரத்தை விடுத்த பின்னும் அவன் பிழைத்தால், மறுபடியும் அக் கணையை ஏவி அவனைக் கொல்லற்க, என்று ஒரு வரம் வேண்டினாள்; உனக்கு இளைஞராய் அமைந்த மற்றத் தம்பியரை எதிர்த்து அவர்களைக் கொல்லற்க, என்று ஒரு வரம் வேண்டினாள்; மூத்தவனான கர்ணன் அன்புக்குரிய தம்பியருக்காகத் தாய் சொன்னவை கேட்டு இனிவரும் மொழிகளைக் கூறுவானான், என்பதாம். பகழிக்கு **அம்** என்ற அடை, வேண்டாவழிச் சாரியை.

## கர்ணனது எதிர் உரை

**259.** **தெறுகணை யொன்று தொடுக்கவு முனைந்து**
**செருச்செய்வோன் சென்னியோ டிருந்தால்**
**மறுகணை தொடுப்ப தாண்மையோ வலியோ**
**மானமோ மன்னவர்க் கறமோ**
**உறுகணை யொன்றே பார்த்தன்மேற் றொடுப்ப**
**னொழிந்துளோ ருய்வரென் றுரைத்தான்**
**தறுகண ரலர்க்குந் தறுகணா னவர்க்குந்**
**தண்ணளி நிறைந்தசெங் கண்ணான்.**

[தெறுகணை ஒன்று தொடுக்கவும் முனைந்து செரு செய்வோன் சென்னியோடு இருந்தால், மறுகணை தொடுப்பது ஆண்மையோ, வலியோ, மானமோ, மன்னவர்க்கு அறமோ! உறுகணை ஒன்றே பார்த்தன் மேல் தொடுப்பன், ஒழிந்துளோர் உய்வர், என்று உரைத்தான், தறுகணர் அலர்க்கும் தறுகண் ஆனவர்க்கும் தண் அளி நிறைந்த செம் கண்ணான்.]

**விளக்கம் :-** தறு கணர் அலர்க்கும் (நல்லவர்க்கும்), தறுகண் ஆனவர்க்கும் (கொடிய பகைவர்க்கும்) நிறைந்த கருணை காட்டும் செவ்வரி படர்ந்த கண்களை உடைய கர்ணன்,—அழிக்கவல்ல நாகக் கணை ஒன்றைப் போர் முனையில் என்னை எதிர்த்துப் போர் செய்வோன் மேல் தொடுக்க அவன் உயிரோடு இருந்தால், அக் கணையை மறுபடியும் தொடுப்பது மன்னர்க்கு ஆண்மையும், வலிமையும், மானமும் அறமும் ஆகுமோ, (ஆகாது என்றபடி). நான் மெற்றுள்ள நாகக்கணை ஒன்றே பார்த்தன்மேல் தொடுப் பேன், மற்றவர் நால்வரும் என்னால் கொல்லப்படார், என்று கூறினான், என்பதாம்.

**260.** **பெருவர மிரண்டும் பெற்றபின் றன்னைப்**
**பெற்றதா யினைக்கரங் குவித்துத்**
**தருவர மெனக்கு மிரண்டுள வுலகிற்**
**சராசரங் களுக்கெலாந் தாயீர்**
**வெருவரு மமரிற் பார்த்தனா லடியேன்**
**வீழ்ந்தபோ தவனிப ரறிய**
**மருவரு முலைப்பா லெனக்களித் துந்த**
**மகனெனும் வாய்மையு முரைப்பீர்.**

[பெரு வரம் இரண்டும் (குந்தி) பெற்றபின், தன்னை பெற்ற தாயினை கரங்குவித்து தருவரம் எனக்கும் இரண்டு உள, உலகில் சர அசரங்களுக்கு எலாம் தாயீர், வெருவரும் அமரில் பார்த்த னால் அடியேன் வீழ்ந்தபோது அவனிபர் அறிய மருவு அரு முலை பால் எனக்கு அளித்தும், உம் தம் மகன் எனும் வாய்மையும் உரைப்பீர்.]

**விளக்கம் :-** பெரிய வரம் இரண்டைக் குந்தி (மகனிட மிருந்து) பெற்றபின், அவனும் தன்னை ஈன்ற தாயினைக் கரங்

குவித்து வணங்கி, ''சராசரங்களுக்கு எலாம் தாயீர், நீர் எனக்குத் தரவேண்டிய வரம் இரண்டு உள. அடியேன் பார்த்தனால் உயிரொழிந்தபோது, அரசர்கள் எல்லோரும் அறியும்படி, எனக்கு நீர் முலை தந்து, உமது மகன் நான் என்ற உண்மையையும் தெரிவிப்பீராக'', என்று வரம் வேண்டினான், என்பதாம். உலகம் மன்னனை உயிராகக் கொண்டிருத்தல்பற்றி, அம் மன்னரை ஈன்ற குந்தி, சராசரங்களின் தாயகின்றாள்.

**261.** **உய்வருந் திறல்வெம் போர்முடிப் பளவு**
**முமக்குநான் மகனெனுந் தன்மை**
**ஐவரு மரியா வண்ணநீர் காப்பீ**
**ரல்லதங் கவர்சிறி தறியின்**
**மைவருங் கடற்பா ரனைத்தையு மெனக்கே**
**வழங்குவர் வழங்கினால் யானென்**
**கைவருந் துணைவன் றனக்கலால் வழங்கேன்**
**கடைப்பிடி கருமமீ தென்றான்.**

[உய்வு அரு திறல் வெம் போர் முடிப்பு அளவும் உமக்கு நான் மகன் எனும் தன்மை ஐவரும் அறியாவண்ணம் நீர் காப்பீர், அல்லது, அங்கு அவர் சிறிது அறியின், மை வரும் கடல் பார் அனைத்தையும் எனக்கே வழங்குவர்; வழங்கினால் யான் என் கை வரும் துணைவன் தனக்கு அலால் வழங்கேன், கடைப்பிடி கருமம் ஈது, என்றான்.]

**விளக்கம் :-** பிழைத்தற்கு அரியதான வலிய கொடிய போர் முடியும் வரையில் உமக்கு நான் மகன் என்ற உண்மையை ஐவரும் அறியாதபடி நீர் காக்கக் கடவீர். அவ்வாறன்றி, அவர் சிறிது அறியின், கரிய கடலால் சூழப்பெற்ற பூமி முழுதையும் எனக்கே அவர் அளிப்பர்; அளித்தால் நான் அதைப் பல காலமாய் நெருங்கிப் பழகி வரும் நண்பனான துரியோதனனுக்கே அளிப் பேன், இது நீர் உறுதியாகக் கொள்ளவேண்டிய காரியமாகும், என்று கர்ணன் கூறியபடி. கை வரும் துணைவன்—கையொத்த, அதாவது நெருங்கிய நண்பன்.

**262.** **என்றலு மதுகேட் டீன்றதா யொக்கு**
**மென்றுகொண் டிவ்வர நேர்ந்து**
**வன்றுயர் மேன்மேல் வளரயான் றளரா**
**வகையுந் ருனக்குமுற் பெயர்வ(து)**
**என்றினி யெனத்தன் கண்கணீர் சொரிய**
**விளைந்துளைறந் தழுதழு திரங்கி**
**என்றருண் மதலை தனைத்தழீஇ நிறுத்தி**
**யாதவ னிருந்துழிச் சென்றாள்.**

[என்றலும், அது கேட்டு ஈன்ற தாய் ஒக்கும் என்று கொண்டு, இ வரம் நேர்ந்து, ''வன் துயர் மேல் மேல் வளர, யான் தளரா வகை (என்) உயிர் உனக்குமுன் பெயர்வது என்று இனி'', என

தன் கண்கள் நீர் சொரிய இனைந்து நைந்து அழுது அழுது இரங்கி, என்று (சூரியன்) அருள் மதலை தனை தழீஇ நிறுத்தி, யாதவன் இருந்துழி (இருந்த உழி) சென்றாள்.]

**விளக்கம் :-** என்று கர்ணன் சொல்லியன கேட்ட அளவிலே, பெற்ற தாயாகிய குந்தி, அமையும் என்று கொண்டு சம்மதித்து, அவன் வேண்டிய இரு வரங்களையுங் கொடுத்து, வலிய துயர் மேலும் மேலும் வளர, ''நான் தளர்ந்து தேயாதபடி உனக்கு முன் நான் உயிர் நீங்கப்பெறுவது என்று இனி நேருமோ'', என்று கூறி, தனது கண்கள் நீர் சொரிய வருந்தி, உடல் வாடி, வாய் விட்டு அழுது புலம்பி, என்று (சூரியன்) அளித்த மகனைத்தழுவி, அதன்பின் அவனை அங்கே இருக்கச் செய்து, கண்ணன் இருந்த இடம் போனாள்,—என்பதாம். எல் - ஒளி, அதை உடையது என்று, (சூரியன்).

## கண்ணன் பாண்டவர்பால் மீளல்

**263.** **கண்ணனுங் குந்தி கன்னனோ டுரைத்த**
**கருத்தெலாந் திருத்தமாக் கேட்டாங்(கு)**
**எண்ணமு டிந்த தெனமகிழ்ந் தந்த**
**வணங்கையு மில்லிடை யிருத்தித்**
**தண்ணளி யுடன்றன் பின்வரு நிருபர்**
**தம்மையு முறைமுறை நிறுத்திப்**
**பண்ணமை தடந்தேர் மீதுகொண் டன்றே**
**பாண்டவ ருறைநக ரடைந்தான்.**

[கண்ணனும் குந்தி கர்ணனோடு உரைத்த கருத்து எலாம் திருத்தம் ஆ(க) கேட்டு, ஆங்கு எண்ணம் முடிந்தது என மகிழ்ந்து, அந்த அணங்கையும் இல்லிடை இருத்தி, தண்ணளியுடன் தன் பின் வரு நிருபர் தம்மையும் முறை முறை நிறுத்தி, பண் அமை தடந்தேர் மீது கொண்டனன், அன்றே பாண்டவர் உறை நகர் அடைந்தான்.]

**விளக்கம் :-** குந்தி கர்ணனிடம் சொன்ன கருத்துடைய மொழிகளை நன்றாகக் கேட்டு, அங்கே தான் நினைத்தது எல்லாம் நிறைவேறியது என்று மகிழ்ந்து, குந்தியை அவளது இல்லத்தில் இருக்கச் செய்து, தன்னுடன் அன்பொடு வந்த அரசர்களை நிற்கச் செய்து, தேரேறி அன்றே பாண்டவர் இருக்கும் உபப்பிலாவிய நகரை அடைந்தான்,—என்பதாம்.

**264.** **தூதுபோ யரவத் துவசனோ டுறுதி**
**சொன்னது மறுத்தவன் கினைத்து**
**மோதுபோர் புரியத் துணிந்ததும் விதுரன்**
**மூரிவில் லிறுத்ததுங் கங்குல்**

**போதுபோர் வஞ்சம் விளைத்ததுங் கன்னன்
புரந்தரற் கீந்ததும் பயந்த
மாதுபோய் வரங்கள் பெற்றவை யொழிய
மற்றெலா மைத்துனர்க் குரைத்தான்.**

**விளக்கம் :-** குந்தி கர்ணனது தாய் என்பதையும், அவள் கர்ணனிடம் சென்று வரங்கள் பெற்றதையும் தவிர, மற்றெல்லா வற்றையும் கண்ணன் பாண்டவரிடம் கூறியருளினான்,—என்பதாம். மற்ற எல்லாவற்றையும் என்றதில், அசுவத்தாமனைப் பேதித்ததும், அடங்கும்.

**கிருட்டிணன் தூது சருக்கம் முற்றும்.**

## 5. படையெழுச்சிச் சருக்கம்

கண்ணன் தூது சென்று மீண்டபின், பாண்டவரும் துரியோதனாதியரும் ஆகிய இரு திறத்தாரது சேனைகள் திரண்டெழுந்து நின்ற செய்தியைக் கூறும் சருக்கம் இது. இருபத்து நான்கு செய்யுள்களைக் கொண்ட இச் சருக்கத்தில், முதல் பதின்மூன்று செய்யுள்கள் பாண்டவர் படை திரட்டின செய்தியையும், பதினொரு செய்யுள்கள், துரியோதனன் படை திரட்டின செய்தியையுங் கூறும்.

### கடவுள் வணக்கம்

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. **படர்ந்த கானகந் திரிந்துமீண் டன்புடன்
பணிந்தபஞ் சவர்க்காகக்
கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக்
கழலிணை சிவப்பேறத்
தொடர்ந்த நான்மறை பின்செலப் பன்னகத்
துவசன் மாநகர்த்தூது
நடந்த நாயகன் கருமுகில் வண்ணமென்
னயனம்விட் டகலாதே.**

[படர்ந்த கான் அகம் திரிந்து மீண்டு அன்புடன் பணிந்த பஞ்சவர்க்கு ஆக, கடந்த ஞானியர் கடவுளர் காண்கலா கழல் இணை சிவப்பு ஏற, தொடர்ந்த நால்மறை பின் செல, பன்னக துவசன் மாநகர் தூது நடந்த நாயகன் கருமுகில் வண்ணம் என் நயனம் விட்டு அகலாதே.]

**விளக்கம் :-** விரிந்து பரந்த கானகத்தே திரிந்து (கடவநாள் கழித்து) மீண்டு வந்து தன்னை அன்புடன் வணங்கிய பாண்டவர்களுக்காக, உலகப்பற்றுக் கடந்த ஞானிகளும் தேவர்களும் காண

முடியாத திருவடிகள் இரண்டும் சிவக்கவும், எட்டமாட்டாமை காரணமாக விடாது தொடரும் வேதங்கள் பின்வரவும், பாம்புக் கொடியோனான துரியோதனனது அத்தினபுரிக்குத் தூது நடந்த, ஜீவகோடிகளின் நாயகனான கண்ணனது கரிய முகிலின் நிறம் போன்ற திருமேனி நிறம், என் கண்களை விட்டு ஒருபோதும் அகலாது,—என்பது பொருள். தேவரோடு முனிவர்க்கும் நான் மறைக்கும் எட்டாச் செங்கண்மால், பக்தரான பாண்டவர் வேண்டலும், அவர் சார்பில் தூது சென்ற எளிமைக் குணத்தைப் புலவர், இப் பாசுரத்தால் கொண்டாடி மகிழ்கின்றார், என்க.

**2. முகுந்தன் வாசகங் கேட்பதன் முன்னமே**
**முரசுயர்த் தவன்முன்னி**
**மிகுந்த கோபமோ டிக்கண முடிப்பன்யான்**
**வெம்பகை யினியென்னாத்**
**தகுந்த ராதிபர் தன்னுட னிஙயந்தவர்**
**தமக்குவெஞ் சமர்மூளப்**
**புகுந்த வாறெலாந் தூதரிற் போக்கினா**
**னோலையின் புறத்தம்மா.**

[முகுந்தன் வாசகம் கேட்பதன் முன்னமே முரசு உயர்த்தவன் முன்னி, மிகுந்த கோபமோடு, இ கணம் முடிப்பன் யான் வெம் பகை இனி என்னா, தகும் தராதிபர் தன்னுடன் இயைந்தவர் தமக்கு, வெம் சமர் மூள புகுந்த ஆறு எலாம் தூதரின் போக்கினான், ஓலையின் புறத்து, அம்மா.]

**விளக்கம் :-** கண்ணன் உரைத்தது கேட்டதும், (துரியோதனாதியரின் புன்மையை) நினைத்து, (பொறுமைசாலியான) தருமன் கோபம் மிகக் கொண்டு, இக் கணத்திலே (மிக விரைவிலே) பகை முடிப்பேன், என்று கூறி, கொடிய போர் மூள்வதற்கான விதங்களை ஓலையில் பொறித்து (அவ்வோலையை) தன்னுடன் நேயமுடைய தகுந்த அரசர்களுக்கெல்லாம் தூதர் மூலம் அனுப்பினான், என்பது பொருள். ''கேட்பதின் முன்னே தூதிற் போக்கினான்'', என்று காரிய காரணத்தை விரைவுபற்றி முன்பின்னாகக் கூறியது **மிகை உயர்வு நவிற்சியின்** பாற்படும். ஓலையின் புறத்தே - ஓலையினிடத்தே (எழுதி).

**3. எட்டுத் திக்கினு முள்ளமன் னவருடன்**
**யாகசே னனும்வந்தான்**
**திட்டத் துய்மனுந் திட்டகே துவும்விறற்**
**சிகண்டியு முறைவந்தார்**
**ஒட்டிப் போர்பொரு முத்தமோ சாவும்வே**
**லுதாமனு டன்வந்தார்**
**பட்டப் போதகத் தேர்பரி யாளெனும்**
**படையுடைப் பாஞ்சாலர்.**

[எட்டு திக்கினும் உள்ள மன்னவருடன் யாகசேனனும், வந்தான்; திட்டத்துய்மனும், திட்ட கேதுவும், விறல் சிகண்டியும், முறை வந்தார்; ஒட்டி போர் பொரும் உத்தமோசாவும், வேல் உதாமனும் உடன் வந்தார் பட்டம் போதகம், தேர், பரி ஆள் எனும் படை உடை பாஞ்சாலர்.]

**விளக்கம் :-** (தருமனது ஓலை கண்டதும்) பட்டம் போதகம், தேர், பரி, ஆள் எனும் (நால்வகைப்) படையுடைய பாஞ்சாலர் மன்னனான யாக சேனனும், எட்டுத் திக்கினும் உள்ள மன்ன ருடன் வந்தான்; திட்டத்துய்மனும், திட்டகேதுவும், விறல் சிகண்டியும் முறை வந்தார்; ஒட்டி போர் பொரும் உத்தமோசா வும், வேல் உதாமனும் உடன் வந்தார், —என்று அன்வயிக்க. பாஞ்சாலர் யாகசேனன் பாஞ்சாலரின் நாயகனான துருபதன், (திரௌபதியின் தந்தை). திட்டத்துய்மன் - (திருஷ்டத்யும்நன்) துருபதனின் மகன். சிகண்டி - துருபதனின் மற்றோர் மகன், திட்டகேது-திட்டத்துய்மனின் மகன், உத்தமோசா-துருபதனின் உறவினன். உதாமன் - (யுதாமந்யு) துருபதனின் உறவினன். ஒட்டிப் போர் செய்தல் - ஆவேசம் பொருந்தப் போர் செய்தல். அல்லது, போரில் மேற்கொண்ட சபத வார்த்தை வீணாகாமல் நிறைவேறும் வழி போர் செய்தல். பாண்டவர்க்கு நெருங்கின பந்துவாதல் பற்றி, முதலில் பாஞ்சாலர் கூறப்பட்டார், என்க.

**4. விராட பூபனுஞ் சதானிக நிருபனும்**
**விறற்சிவே தனுமாதி**
**வராக கேதுவு முத்தர குமரனு**
**மச்சநாட் டவர்வந்தார்**
**பராவு பேருடைச் சேரசெம் பியருடன்**
**பாண்டியன் முதலோரும்**
**குராந றும்பொழிற் கேகயத் தலைவருங்**
**குந்திபோ சரும்வந்தார்.**

[விராடபூபனும் சதானிக நிருபனும் விறல் சிவேதனும், ஆதி வராக கேதுவும், உத்தரகுமரனும் (ஆகிய) மச்ச நாட்டவர் வந்தார்; பராவு பேர் உடை சேர செம்பியருடள் பாண்டியன் முதலோரும், குராநறும் பொழில் கேகயம் தலைவரும், குந்தி போசரும் வந்தார்.]

**விளக்கம் :-** மச்சநாட்டு அரசனான விராட மன்னனும், அவனது புதல்வர்களாகிய சுவேதனும், உத்திர குமாரனும், விராடனது உறவினர்களாகிய சதாநீகன் என்னும் அரசனும், வராககேது என்பானும், வந்து சேர்ந்தனர்; தென்னாட்டிலிருந்து, புகழ்ந்து பேசப்படும் சேர சோழ பாண்டியரும், குரவமரத்தின் மணம் மிக்க மலர்களையுடைய கேகய நாட்டு அரசர்களும், குந்திபோச நர்ட்டு மன்னர்களும் வந்து சேர்ந்தனர், என்பதாம்.

5. **அரக்கி தந்தருள் கடோற்கசக் காளையு**
**மமபினோ டிராவானும்**
**விரிக்கும் வெண்குடை விந்தனுஞ் சோமனும்**
**வீரகீர்த் தியும்போரில்**
**செருக்கு நெஞ்சுடைப் புண்டலன் செயசெனன்**
**செருவிடைத் தெவ்வோடத்**
**துரக்கும் வெம்பரித் துரௌபத ரைவருஞ்**
**சூழ்படை யுடன்வந்தார்.**

*[அரக்கி தந்து அருள் கடோற்கசன் காளையும், அபிமனோடு இராவானும், விரிக்கும் வெண்குடை விந்தனும் சோமனும் வீர கீர்த்தியும், போரில் செருக்கு நெஞ்சு உடை புண்டலன், செய செனன், செரு இடை தெவ் ஓட துரக்கும் வெம் பரி துரௌபதர் ஐவரும், சூழ் படையுடன் வந்தார்.*

**விளக்கம் :-** இடிம்பியின் மகனான கடோற்கசன், அருச்சுன குமாரனான அபிமன்யூ, இராவான், ஆயவர்களும், விந்தன், சோமன், வீரகீர்த்தி, புண்டலன், ஜெயசேனன், என்னும் திரௌபதியின் புதல்வர் ஐவரும், சேனைகள் சூழ வந்து சேர்ந்தனர், என்பதாம். சுபத்திரையினிடம் அருச்சுனனுக்குப் பிறந்தவன், அபிமன்யு. உலூபி என்னும் நாக கன்னிகையினிடம் அருச்சுனனுக்குப் பிறந்தவன் இராவான். திரௌபதியினிடம் பாண்டவர் ஐவருக்கும் பிறந்தவர் விந்தன் முதலியோர்; இவர்களை உபபாண்டவர் என்று அழைப்பர்.

6. **சீனர் சாவகர் மத்திரர் மாளவர்**
**தெலுங்கர்வெங் கலிங்கேசர்**
**சோன காதிபர் கன்னடர் மாகதர்**
**துலுக்கர்குச் சரரொட்டர்**
**ஆன வெம்படை யாதியாய் நடப்பன**
**வையிரண் டெண்பூமித்**
**தானை மன்னரும் வந்தன ரிந்தமண்**
**டலத்திலார் வாராதார்.**

*[சீனர், சாவகர், மத்திரர், மாளவர், தெலுங்கர், வெம் கலிங்கேசர், சோனாகாதிபர் (சோனக அதிபர்) கன்னடர், மாகதர், துலுக்கர், குச்சரர், ஒட்டர், ஆன வெம்படை ஆதியாய் நடப்பன, ஐயிரண்டு எண் பூமி தானை மன்னரும் வந்தனர்; இந்த மண் தலத்தில் ஆர் வராதார்?]*

**விளக்கம் :-** துலுக்கர் - துருஷ்கம் என்னும் நாட்டார். குச்சரர் - கூர்ஜர தேசத்தார். ஒட்டர் - ஒட்டர தேசத்தார். (சீனர் முதலிய அரசர்கள்) ஆதி ஆய் ஆன வெம்படை நடப்பன (ஆன) தானை, ஐயிரண்டு எண் பூமி மன்னரும் வந்தனர்; இந்த (சீனர் முதலிய அரசர்கள்) முதலாக உள்ள வெவ்விய படைக்கலன்

களோடு செல்வனவான சேனைகளையுடைய ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் வந்தனர். இந்தப் பூமியில் உள்ள அரசர் களில் வாராதவர் எவருமில்லை,—என்பது ஈற்றடிகளின் பொருள். ஐயிரண்டு எண் - ஐந்தும் இரண்டும் ஆகிய ஏழோடு எட்டு, $(5+2\times8)$ அதாவது ஐம்பத்தாறு. இந்தப் பூமண்டலத்திலுள்ள ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் பாண்டவர்பால் வந்து கூடினர்,—என்பதாம்.

**7. பாங்கி னால்வரு மகுடவர்த் தனருடன்**
**பட்டவர்த் தனருள்ளார்**
**வாங்கும் வெஞ்சிலை மன்னவ குமாரரின்**
**மண் டலீ கரினுள்ளார்**
**தாங்கு மாமொழி மந்திரி களினிகற்**
**றந்திரி களினுள்ளார்**
**ஓங்கு நீள்கொடிப் பதாகினி திரண்டவா**
**றுன்னியா ருரைக்கிற்பார்.**

[பாங்கினால் வரு மகுடன வர்த்தனருடன் பட்டவர்த்தனர் உள்ளார், வாங்கும் வெம்சிலை மன்னவர் குமாரரின் மண்டலீ கரின் உள்ளார், தாங்கு மாமொழி மந்திரிகளின் இகல் தந்திரிகளின் உள்ளார், ஓங்கு நீள் கொடி பதாகினி திரண்ட ஆறு உன்னி யார் உரைக்கிற்பார்?]

**விளக்கம் :-** பாங்கினால் - நட்பின் உரிமையினால். மகுட வர்த்தனர் - கிரீடம் தரித்த அரசர். பட்டவர்த்தனர் - கிரீடம் இல்லாத அரசர். மண்டலீகர் - சிற்றரசர். தாங்கும் மாமொழி மந்திரிகள் - ஏற்கக்கூடிய ஆலோசனையைச் சொல்லவல்ல மந்திரிகள். தந்திரம் - சேனை. தந்திரி - சேனையை உடையவன்; எனவே, சேனைத்தலைவனும், நீள்கொடிப் பதாகினி - நீண்ட கொடிகளை உடைய சேனை. பதாகினி - கொடியையுடையது ; எனவே சேனை என்ற பொருளதாயிற்று. மகுடவர்த்தனரோடு பட்டவர்த்தனராய் உள்ளவர்களும், வாங்கும் (வளைந்த) வெம் சிலை அரசகுமாரர்களுள்ளும், மண்டலீகளினுள்ளும், போர் செயற்குரியாராய் உள்ளவர்களும், மந்திரிகளினுள்ளும், தந்திரிகளி னுள்ளும், தகுதியுடையராய் உள்ளவர்களும், ஓங்கிய நீண்ட கொடிகளை உடைய சேனைகளாய்த் திரண்டு கூடிய விதத்தை, எண்ணிச் சொல்ல வல்லவர் யார், (ஒருவரும் இல்லை என்றபடி) என்பதாம்.

## வந்த அரசரைத் தருமன் வரவேற்றல்

**8. யானை தேர்பரி யாளெனுந் திறத்தினா**
**லிலக்கணத் தென்பட்ட**
**சேனை யேழுமக் குரோணிக டிரண்டன**
**திரைக்கட லேழென்னச்**

**சோனை மாமுகி லேழுமொத் ததிர்ந்தன**
**துந்துபிக் குலம்வந்த**
**தானை மன்னரைத் தனித்தனி முறைமையாற்**
**றருமனு மெதிர்கொண்டான்.**

[யானை தேர் பரி ஆள் எனும் திறத்தினால் இலக்கணத்து எண்பட்ட சேனை ஏழும் அக்குரோணிகள் திரண்டன, திரை கடல் ஏழு என்ன, சோனை மா முகில் ஏழும் ஒத்து அதிர்ந்தன துந்துபி குலம், வந்த தானை மன்னரை தனி தனி முறைமையால் தருமனும் எதிர் கொண்டான்.]

**விளக்கம் :-** இலக்கணம் - சேனைகளைக் கணக்கிடும் முறை. யானை தேர் பரி ஆள் என்னும் நான்கு வகையினால் இலக்கணத்துள் வைத்துக் கணக்கிடப்பட்ட ஏழு அக்குரோணி சேனைகளும் திரை கடல் ஏழுபோல் ஒன்றுபட்டுக் கூடின ; விடாது பொழியும் சப்தமேகங்களும் போல் இரண்பேரிகைகளின் கூட்டம் ஒலித்தன ; தனக்குத் துணையாக வந்த தானை மன்னர்களை முறைப்படி தனித்தனியே தருமன் எதிர் கொண்டு வரவேற்றான்,—என்பது பொருள். சேனை ஏழு அக்குரோணிகளும், என்று கூட்டுக. துந்துபி - இரணபேரிகை. சோனை முகில் - விடாது மழை பொழியும் மேகம்.

**9. தான்வ ணங்குநர் தன்கழல் வணங்குநர்**
**தங்களைத் தழீக்கொண்டு**
**தேன்வ ணங்குதார் மன்னவ ரிருந்தபின்**
**சென்றவர் முகநோக்கி**
**யான்வ ணங்கிமா மாயனைத் தூதுவிட்**
**டெனதுயா ரெனக்கென்ன**
**வான்வ ணங்கினும் வணங்கலா முடியினான்**
**மறுத்தமர் புரிகென்றான்.**

[தான் வணங்குநர், தன் கழல் வணங்குநர் தங்களை தழீஇக் கொண்டு, தேன் வணங்குதார் மன்னவர் இருந்தபின், சென்று அவர் முகம் நோக்கி, ''யான் வணங்கி மா மாயனை தூதுவிட்டு எனது பார் எனக்கு என்ன'', வான் வணங்கினும் வணங்கலா முடியினான் மறுத்து, அமர் புரிக என்றான்.]

**விளக்கம் :-** தான் வணங்குதற்கு உரியவரும், தன்னை வணங்குதற்குரியருமாகிய அரசர்களை (வணங்கியும், வணக்கத்தைப் பெற்றும்) தழுவிக்கொண்டு,—என்பது முதலடியின் பொருள். தேன் வணங்குதார் - தேன் பொழியும் மாலை ; அல்லது வண்டுகள் மொய்க்கும் மாலை. அம் மன்னர்களை அணுகி, அவர் முகம் நோக்கி, ''நான் மாயனை வணங்கி வேண்டி, துரியோதனன்பால் தூது அனுப்பி, எனக்குரிய பூமி எனக்குத் தரத் தக்கது'', என்று கேட்க, தேவரே வந்து வணங்கினும், எதிராக

வணங்காத முடியினனான அவன், நாடு மறுத்துப் போரே புரியட்டும்'', என்று கூறிவிட்டான்,— என்று தருமன் கூறினாள் என்பதாம்,

**10. கேண்மை யாலெனை தாசுநீ தருகெனக்**
**கேட்கவு மதியாமல்**
**ஆண்மை யாலவன் மறுத்தமை யெனக்குயி**
**ரனையநீ ரறிமின்கள்**
**வாண்மை யால்வரி வின்மையான் மேன்மையால்**
**வலியுரைக் கலனுங்கள்**
**தோண்மை யாலமர் தொலைத்தடல் வாகையுஞ்**
**சூடுவ னினியென்றான்.**

[கேண்மையால் எனது அரசு நீ தருக என கேட்கவும் மதியாமல், ஆண்மையால் அவன் மறுத்தமை எனக்கு உயிர் அனைய நீர் அறிமின்கள்; வாண்மையால், வரி வின்மையால் மேன்மையால் வலி உரைக்கலன், உங்கள் தோண்மையால் அமர் தொலைத்து அடல் வாகை சூடுவன், இனி என்றான்.]

**விளக்கம் ;-** கேண்மை - நட்பு; சமாதான வழி. ஆண்மை - பராக்கிரமம். வாண்மை - வாள்தொழில் வல்லமை. வின்மை - வில் தொழில் வல்லமை. மேன்மை - பெருமை. வலி உரைக் கலன் - எனது போராற்றலைச் சொல்லுகின்றேன் அலன். தோண்மை - தோள் வலிமை. சமாதான வழியில் எமது தாய பாகத்தைக் கேட்க, அவன் ஆண்மையால் மறுத்ததை, எனது உயிரனையீரான நீங்கள் அறிவீர்களாக; எனது வாண்மை, வின்மை மேன்மை ஆயவற்றால், நான் எனது போர் வலியைக் கூறுவதாகக் கொள்ளவேண்டா, மற்று, உங்கள் தோள்வலியின் துணை கொண்டு போர் தொலைத்து வாகை மாலை சூடுவேன்,— என்று தருமன், அரசர்களுக்குக் கூறினான், என்பதாம்.

**11. வெங்கண் மாமுர சுயர்த்தவ னிம்மொழி**
**விளம்பலும் விளக்கஞ்செய்**
**திங்கள் சூழ்தரு தாரையின் கணமெனச்**
**சேர்ந்தமன் னவரெல்லாம்**
**எங்க ளாவியு மெம்பெருஞ் சேனையும்**
**யாவையு நினவென்றார்**
**தங்கள் வீரமு மானமு மரபுநல்**
**வாய்மையுந் தவறில்லார்.**

[வெம் கண் மா முரசு உயர்த்தவன் இ மொழி விளம்பலும், விளக்கம் செய் திங்கள் சூழ்தரு தாரையின் கணம் என சேர்ந்த மன்னவர் எல்லாம், எங்கள் ஆவியும் எம் பெருஞ்சேனையும் யாவையும் நின, என்றார், தங்கள் வீரமும் மானமும் மரபும் நல் வாய்மையும் தவறு இல்லார்.]

**விளக்கம் :-** வெம் கண் மா முரசு....சேர்ந்த, தங்கள் வீரமும் மானமும் மரபும் நல்வாய்மையும் தவறில்லார் (ஆகிய) மன்னவர் எல்லாம் எங்கள் ஆவியும்...நின, என்றார்,—என்பது அன்வயம். விளக்கம் செய் திங்கள் சூழ்தரு தாரையின் கணம் - ஒளி செய்கின்ற சந்திரனைச் சூழ்ந்துள்ள நட்சத்திரங்களின் கூட்டம். மரபு - குலப் பெருமை. வாய்மை - சத்தியம். தவறிலார் - பிறழ்தல் இல்லாதவர். முரசக்கொடி உடையனான தருமன் கூறியது கேட்ட, சந்திரனைச் சூழ்ந்துள்ள தாரகைக் கணமென்ன தருமனைச் சூழ்ந்துகொண்டுள்ள வீரம், மானம், குலப்பெருமை, சத்தியம் தவறாமையாகிய பண்பினரான மன்னவர்கள் எல்லோரும், எங்கள் ஆவியும் சேனையும் ஆகிய எல்லாம் உனக்கு உரியன, என்று எதிர்மொழிந்தார், என்பதாம். வெம் கண் முரசு - வெவ்விய தன்மையை உடைய முரசு.

**12. சுற்று மன்னவர் சொற்ற சொற்களிற்**
**பகைதொலைத் தனன்போலாகிச்**
**செற்று வார்கழற் சிவேதனைத் தன்பெருஞ்**
**சேனையின் பதியாக்கி**
**அற்றை நாண்முர சறைந்தமர் குறித்தலு**
**மரவமின் மகன்றெவ்வர்**
**கொற்ற வெம்படை யனைத்துமோ ரம்பினாற்**
**கொல்வனோர் தினத்தென்றான்.**

[சுற்று மன்னவர் சொற்ற சொற்களின் பகை தொலைத்தனன் போல் ஆகி, செற்று வார் கழல் சிவேதனை தன் பெருஞ்சேனையின் பதி ஆக்கி, அற்றை நாள் முரசு அறைந்து அமர் குறித்தலும், அரவம் மின் மகன் தெவ்வர் கொற்றம் வெம்படை அனைத்தும் ஓர் அம்பினால் கொல்வன் ஓர் தினத்து, என்றான்.]

**விளக்கம் :-** தருமன் தன்னைச் சுற்றியுள்ள மன்னவர்கள் சொன்ன சொற்களால் பகை கடந்தவன் போன்றதோர் தன்மையை எய்தி, விராடனது மூத்த மகனாகிய சுவேதனைத் தன் சேனைகளின் தலைவனாக்கி, அன்றே முரசு அறைந்து போர் நிகழ்தற்கு இருப்பதைத் தெரிவித்தவுடன், உலூபி என்னும் நாக கன்னிகையின் மகனான இராவான் என்பவன், ''பகைவரது படை அனைத்தையும் ஒரு தினத்திலே அழிப்பன்'', என்று வீர முழக்கஞ் செய்தான், என்பதாம். செற்று - நெருங்கிய.

**13. பாண்டு வின்றிரு மைந்தர்க ளைவரும்**
**பார்த்திவ ருடன்கூடி**
**ஈண்டி ருந்தன் ரிவ்வுழிச் செருக்குறித்**
**தெழிலிமே னியானோடும்**

**தூண்டு வெம்பரித் தேர்த்துரி யோதனன்**
**தூதுபோய்ப் பரந்தாமன்**
**மீண்டு வந்தபின் னவ்வுழிப் புரிந்தன**
**விளம்புகின் றனமன்னோ.**

[பாண்டுவின் திரு மைந்தர்கள் ஐவரும் பார்த்திவருடன் கூடி ஈண்டு இருந்தனர் இ உழி செரு குறித்து எழிலி மேனியானோடும், தூண்டும் வெம் பரி தேர் துரியோதனன், தூதுபோய் பரந்தாமன் மீண்டு வந்தபின் அ உழி புரிந்தன விளம்புகின்றனம், மன்னோ.]

**விளக்கம் :-** பாண்டுவின் மைந்தர்கள் ஐவரும் தம்மைச் சார்ந்த அரசர்களுடன்கூடி தமது போர் செய்யும் கருத்தைத் தெரிவித்து மேகம் போன்ற திருமேனியனான கண்ணனோடும் இங்கே இருந்தார்கள் ; (அவ்வாறாக) அங்கே, (அத்தினபுரியில்) துரியோதனன் பரந்தாமன் (கண்ணன்) தூது சென்று திரும்பிய பின், அவர்கள் செய்தவற்றை (இனி) கூறுவோம்,—என்று கவி கூறியபடி. மன்னோ : ஈற்றசை.

வேறு

**துரியோதனன் துணை அழைத்தல்**

**14. முந்தர வுயர்த்தோ னோலை முடியுடை யரசர் காண்க**
**வெந்திற லைவ ரோடும் வெஞ்சமர் விளைந்த தம்மா**
**தந்தம கிளைஞ ரோடுஞ் சாதுரங் கத்தி னோடும்**
**வந்தவர் தமக்கே வாழ்வு முழுதுமென் றெழுதி விட்டான்.**

[முந்து அரவு உயர்த்தோன் ஓலை முடி உடை அரசர் காண்க, வெம் திறல் ஐவரோடும் வெம் சமர் விளைந்தது, அம்மா! தம் தம கிளைஞரோடும் சாதுரங்கத்தினோடும் வந்தவர் தமக்கே வாழ்வு முழுதும், என்று எழுதி விட்டான்.]

**விளக்கம் :-** அரவக் கொடியோனான துரியோதனனது ஓலையை முடியுடைய அரசர்கள் காண்பாராக ; "வெந்திறல் ஐவரோடு போர் செய்தல் ஏற்பட்டுவிட்டது. ஆதலால் தங்கள் சுற்றத்தோடும் பக்கத்தோடும் சதுரங்க சேனைகளோடும் எமக்குத் துணை வந்த அரசர்க்கே வாழ்வு உண்டு, மற்றவர்க்கு இல்லை", என்று ஓலை எழுதி அரசர்களுக்குத் தூதர் மூலம் அனுப்பினான், என்பதாம். வெந்திறல் ஐவர், என்றது, "துணை அவசியம் வேண்டும்", என்று தெரிவிக்கும் குறிப்பினது. அம்மா : வியப்பிடைச் சொல். அது நாடிழந்து, காட்டில் அலைந்து திரிந்தவர், எல்லா வசதிகளோடு, பொருளும், துணையும் உடைய தன்னுடன் போர் செய்தலை மேற்கொண்டார்களே, என்று துரியோதனன் வியந்ததைக் குறிக்கும். துரியோதனன் துணை நாடிய முறை அவனது செருக்கைக் காட்டும்,

**15. மித்திர ரான மன்னர் விறலுடைத் துணைவ ரோடும்
புத்திர ரோடுந் தத்தம் போர்புரி சேனை யோடும்
சத்திர நிழல்வி டாத தன்மைய ராகிச் சூழ
மத்திர பதியும் வென்றி மருகருக் காக வந்தான்.**

*[மித்திரர் ஆன மன்னர் விறல் உடை துணைவரோடும் புத்திரரோடும் தத்தம் போர்புரி சேனையோடும், சத்திரம் நிழல் விடாத தன்மையர் ஆகி சூழ, மத்திர பதியும் வென்றி மருகருக்கு ஆக வந்தான்.]*

**விளக்கம் :-** *தனது மித்திரர்களான அரசர்கள் தங்கள் தங்கள், வலிமையுடைய சகோதரர்களோடும், புத்திரர்களோடும் சேனைகளோடும், சத்திரம் நிழல் (குடை நிழல்)விட்டு நீங்காத தன்மையராய்த் தன்னைச் சூழ, மத்திர நாட்டு அரசனான சல்லியன், தனது வெற்றியுடைய மருமக்களான பாண்டவர்க்கு உதவியாகும் பொருட்டு உபப்பிலாவியம் வருபவனானான்,— என்பது பொருள். பாண்டுவின் இரண்டாவது மனைவியான மாத்திரி என்பாளின் சகோதரன், சல்லியன்.*

**16. இடைப்படு நெறியில் வைகு மவனது வரவு கேட்டுத்
தொடைப்படு தும்பை மாலைச் சுயோதனன் சூழ்ச்சி யாக
மடைப்படு விதியிற் செய்த விருந்தினான் மருண்ட வற்கே
படைப்படு சேனை யோடும் படைத்துணை யாயி னானே.**

*[இடை படு நெறியில் வைகும் இவனது வரவு கேட்டு, தொடை படு தும்பை மாலை சுயோதனன் சூழ்ச்சி ஆக, மடை படு விதியின் செய்த விருந்தினால் மருண்டு, அவற்கே படைபடு சேனையோடும் படைத் துணை ஆயினான், ஏ.]*

**விளக்கம் :-** *(பாண்டவர்க்குத் துணையாகும் பொருட்டு வந்த சல்லியன்) இடையிலுள்ள வழியிலே தங்கிய அவனது (சல்லியனது) வருகை அறிந்து, போருக்குரிய தும்பை மாலை அணிந்த துரியோதனன், தந்திரமாகச் சமைத்தல் தொழிலிற் குரிய முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட விருந்தினால் பிரமித்துப் போய், ஆயுதங்களோடு கூடிய சேனைகளுடன் அவற்கே (துரியோதனனுக்கே) போர்த்துணை ஆயினான், என்பதாம். இவ் வரலாறு, விராட பருவம் வெளிப்பாட்டுச் சருக்கத்தில் கூறப் பட்டுளது. மடைப் படு விதி - பாகசாத்திரவிதி.*

**17. சல்லியன் றானு மாயச் சகுனியுந் தறுகண் வேம்போர்
வல்லிய மனைய வென்றி மாகத பதியுங் கொற்ற
வில்லியல் கடகத் திண்டோள் விந்தரன் விந்த னென்று
சொல்லிய நிருபர் தானை யாறொடுங் கடலிற் சூழ்ந்தார்.**

*[சல்லியன் தானும், மாயச் சகுனியும், தறுகண் வெம்போர் வல்லியம் அனைய வென்றி மாகத பதியும், கொற்றம் வில் இயல்*

கடகம் திண் தோள் விந்தரன், விந்தன் என்று சொல்லிய நிருபர் தானை ஆறொடும் கடலின் சூழ்ந்தார்.]

**விளக்கம் :-** சல்லியனும் மோசம் வல்ல சகுனியும், அஞ்சாமையோடு கொடிய போரில் புலியை ஒத்த மகத தேசாதி பதியும், வெற்றி தரத்தக்க வில்தொழில் வல்லமை பொருந்திய கடகம் அணிந்த தோள்களை உடைய விந்திரன், விந்தன் என்ற அவந்தி நாட்டு அரசர்களும், தமது ஆறுவகைப்பட்ட சேனை களுடன் கடல்போல் துரியோதனனைச் சூழ்ந்துகொண்டனர்,— என்பதாம். அறுவகைப் படைகள் :—வேற்படை, வாள்படை, தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை, விற்படை.

**18. கலிங்கர்கோன் சோம தத்தன் கௌசிகன் காம்பி லீசன்**
**தெலுங்கர்கோன் போச னாதி கேகயன் றிகத்த பூபன்**
**வலங்கொள்வேற் கவுட ராசன் மாளவன் வளவன் சேரன்**
**துலங்குநீ ரோகனீக னெனும் பல வேந்தர் தொக்கார்.**

[கலிங்கர்கோன், சோமதத்தன் கௌசிகன், காம்பிலி ஈசன், தெலுங்கர்கோன், போசன், ஆதி கேகயன், திகத்தபூபன், வலம் கொள்வேல் கவுடராசன், மாளவன், வளவன், சேரன், துலங்கு நீர் ஓகனீகன், எனும் பலவேந்தர் தொக்கார்.]

**விளக்கம் :-** காம்பிலீசன் - காம்பிலிதேசத்து அரசன். திகித்த பூபன் - திரிகர்த்த தேசத்து அரசன். கவுடன் - கவுட நாட்டரசன். வளவன் - சோழன். ஓகனீகன்-ஓகநீகன் என்னும் அரசன். என்ற அரசர்கள் துரியோதனனுக்குத் துணையாய் வந்து கூடினர்,—என்பதாம். இதன் முன்கூறிய நாடுகள் சில மீண்டும் இங்கே கூறப்பட்டது, அந்தந்த நாட்டு அரச குலத்தாருள் சிலர் பாண்டவரையும், சிலர் கௌரவரையும் சேர்ந்தார், என்க. ஆதிகேகயன் - பழமையான கேகய நாட்டரசன்.

**19. பங்களங் குகுரஞ் சீனம் பப்பரங் கொப்பம் வங்கம்**
**சிங்களந் துளுவ மங்க மாரியந் திகத்தஞ் சேதி**
**கொங்கணங் கடாரங் கொங்கங் கூபக மிரட்ட மொட்டம்**
**எங்கணு முள்ள வேந்த ரியாவரு மீண்டி மொய்த்தார்.**

[பங்களம், குகுரம், சீனம், பப்பரம், கொப்பம், வங்கம், சிங்களம், துளுவம், அங்கம், ஆரியம், திகத்தம், சேதி, கொங் கணம், கடாரம், கொங்கம், கூபகம், இரட்டம், ஒட்டம் எங்கணும் உள்ள வேந்தர் யாவரும் ஈண்டி மொய்த்தார்.]

**விளக்கம் :-** பங்களம் முதலிய நாடுகளில் உள்ள அரசர்கள் எல்லோரும் வந்து கூடினர், என்க.

20. அண்ணலங் துரகத் தாமர வாதியாங் குமர ராலும்
எண்ணிரு பத்து நூறாம் யாதவ குமர ராலும்
வண்ணவேற் பூரி சௌரி மாமுதற் குமர ராலும்
எண்ணருஞ் சேனை வெள்ள மெங்கணும் பரந்த மாதோ.

[அண்ணல் அம் துரகத்தாமா ஆதி ஆம் குமரராலும், எண் இருபத்து நூறு ஆம் யாதவ குமரராலும், வண்ணம் வேல் பூரி, சௌரிமா முதல் குமரராலும் எண் அருஞ்சேனை வெள்ளம் எங்கணும் பரந்தது, மாதோ.]

**விளக்கம் :-** அண்ணல் அம் துரகத்தாமா - பெருமையுடைய அழகிய அசுவத்தாமன். எண் இருபத்து நூறு ஆம் யாதவ குமாரர்-பதினாறாயிரம் யாதவர்கள். பூரி - பூரிச்ரவசு, என்பான். சௌரிமா - சௌரிமா என்பான். அசுவததாமன் முதலிய இள வீரர்களாலும், பதினாறாயிரம் யாதவ குமாரர்களாலும், பூரிச்ரவசு, சௌரிமா என்ற இளவீரர்களாலும் ஆகிய, அளவிறந்த சேனைகளின் கூட்டம் எங்கும் பரவின, என்பதாம். மாதோ - (மாது, ஓ) ஈற்றசை.

21. தம்பிய ரனைவ ருந்துச் சாதனன் முதலா வுள்ளோர்
வெம்பரி தடந்தேர் வேழம் வேல்சிலை வடிவாள் வல்லோர்
அம்பரத் தளவு முந்நீ ரம்பர மெழுந்த தென்ன
உம்பரு மிம்ப ராரு முரகரும் வெருவ வந்தார்.

[தம்பியர் அனைவரும் துச்சாதனன் முதல் ஆ(க) உள்ளோர், வெம் பரி தடந்தேர், வேழம், வேல் சிலை வடிவாள் வல்லோர், அம்பரத்து அளவும் முந்நீர் அம்பரம் எழுந்தது என்ன, உம்பரும் இம்பரும் உரகரும் வெருவ வந்தார்.]

**விளக்கம் :-** வேகமுடைய குதிரை, பெரிய தேர், யானை ஆயவற்றை நடத்தும் தொழிலில் வல்லோரும், வேல், வில், வடிவாள் ஆயவற்றின் தொழிலில் வல்லோருமான வீரர் வெள்ளத்தோடு, துச்சாதனன் முதலாகவுள்ள தம்பியர் அனைவரும், மூன்று வகைப்பட்ட நீரைக்கொண்ட அம்பரம் (கடல்), அம்பரத்தளவும் (ஆகாயத்தளவும்) எழுந்தது என்று சொல்லும் படி, தேவர்களும் பூலோக வாசிகளும், நாகலோகத்தாரும் அஞ்சும் படி திரண்டு வந்தனர்,—என்பது பொருள்.

22. வீடுமன் கிருபன் கன்னன் விற்கையா சிரியன் வையம்
பாடுசீர் விகத்த சேனன் பகதத்தன் முதலா வுள்ளோர்
ஆடல்வெம் பரிதேர் யானை யனீகினித் தலைவர் செம்பொன்
கோடுயர் குன்றஞ் சூழ்ந்த குலகிரி யேழு மொத்தார்.

[வீடுமன், கிருபன், கன்னன், வில் கை ஆசிரியன், வையம் பாடு சீர் விகத்தசேனன், (நரகாசுரன் மைந்தனான) பகதத்தன்

முதல் ஆ(க) உள்ளோர் ஆடல் (அடல்) வெம் பரி, தேர், யானை, அனீகினி தலைவர், செம் பொன் கோடு உயர் குன்றம் சூழ்ந்த குலம் கிரி ஏழும் ஒத்தார்.]

**விளக்கம் :-** வீடுமன், கிருபன், கர்ணன், துரோணன், உலகம் போற்றிப் யாடும் சிறையுடைய விகத்தசேனன், பகதத்தன் முதலாகவுள்ள, வலிமை வேகமுடைய குதிரை, தேர், யானை முதலிய வற்றையுடைய சேனைகளின் தலைவர், செம் பொன்மயமான சிகரங்களை உடைய மேருமலையைச் சூழ்ந்துள்ள சப்த குல பர்வதங்களை ஒத்தார், என்பது பொருள். அனீகினி - சேனை.

**23.** **நதியினம் பலவும் வந்து சிந்துவி னண்ணு மாபோல்**
**எதிர றப் பொருது வெல்லு மிராசமண் டலங்க ளெல்லாம்**
**சதமகற் குவமை சாலுந் தரணிபன் றன்னைச் சூழ்ந்து**
**பதினொரக் குரோணி சேனை பார்மிசைப் பரந்த வன்றே.**

[நதி இனம் பலவும் வந்து சிந்துவில் நண்ணுமாபோல், எதிர் அற பொருது வெல்லும் இராசமண்டலங்கள் எல்லாம், சதமகற்கு உவமை சாலும் தரணிபன் தன்னை சூழ்ந்து பதினொரு அக்குரோணி சேனை பார்மிசை பரந்த அன்றே.]

**விளக்கம் :-** எதிர் அற - பகை அழியும்படி. சூழ்ந்து - சூழ (எச்சத்திரிபு). அன்றே : ஈற்றசை. செய்யுள் சுலபமானதே.

**24** **பரசுடை யிராமன் பாத பங்கயஞ் சென்னி யேந்தி**
**வரிசிலை வேதங் கற்று மற்றவன் றனையும் வென்ற**
**குரிசிலைக் கங்கை தந்த குருகுலக் கோமான் றன்னை**
**அரசன்வெஞ் சேனைக் கெல்லா மதிபதி யாக்கி னானே.**

[பரசு உடை இராமன் பாதபங்கயம் சென்னி ஏந்தி வரிசிலை வேதம் கற்று (மற்று) அவன் தனையும் வென்ற குரிசிலை, கங்கை தந்த குருகுலம் கோமான் தன்னை, அரசன் வெஞ்சேனைக்கு எல்லாம் அதிபதி ஆக்கினான், ஏ]

**படையெழுச்சிச் சருக்கம் முற்றும்.**

## 6. முகூர்த்தங் கேள்விச் சருக்கம்

துரியோதனன் போரில் வெற்றியை நாடிக் களபலி கொடுத்தற்குரிய நாளைக் குறித்துத் தருமாறு பாண்டவரில் இளையோனான சகாதேவனைக் கேட்க, சோதிட சாத்திர வல்லுநனான அவனும் முகூர்த்தங் குறித்துத்தரலை விஷயமாகக் கொண்டது இச் சருக்கம்.

## கடவுள் வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. கயம்படு மனத்த னாய கண்ணிலா வரசன் மைந்தன்**
**வயம்பட நினைந்து கங்குல் வகுத்ததோர் சூழ்ச்சி தன்னால்**
**பயம்படு மல்ல ரோடு பாதல மடிய நீண்ட**
**சயம்படு கமலத் தாளென் றலைமிசை யகல்கி லாவே.**

[கயம்படு மனத்தன் ஆய கண் இலா அரசன் மைந்தன் வயம் பட நினைந்து, கங்குல் வகுத்தது ஓர் சூழ்ச்சி தன்னால் பயம்பு அடு மல்லரோடு பாதலம் மடிய நீண்ட சயம்படு கமலம் தாள் என் தலை மிசை அகல்கிலா, ஏ.]

**விளக்கம் :-** கயம்படு - கயமைக் குணம் பொருந்திய. வயம் பட நினைந்து - வெற்றி அடைய நினைத்து. சூழ்ச்சி - தந்திரம். பயம்பு - பள்ளம், குழி, நிலவறை. அடு மல்லர் - பகை அழிக்கும் ஆற்றலுடைய மற்போர் வீரர். பாதலம் மடிய நீண்ட - பாதாள உலகத்தோரும் அழியும்படி நீண்ட. துரியோதனனது தாழ்மை யுடைய சூழ்ச்சியைக் கடந்த கண்ணனது கமலத்தாள்கள் என் சிரத்தினின்று என்றும் அகலா,—என்று புலவர் கூறியபடி. ஏகாரம், தேற்றம்.

**2. அளப்பிலாச் சேனை நாத னடிபணிந் தவனி வேந்தன்**
**களப்பலிக் குரியார் யாவர் கடவநாள் யாவ தென்னத்**
**தளப்பிலா முகூர்த்தம் வல்லோன் சாதேவ னல்ல தில்லை**
**உளப்பொலி வுடையா யின்றே யுற்றவற் கேண்மி**
**னென்றான்.**

[அளப்பு இலா சேனை நாதன் அடி பணிந்து அவனி வேந்தன், ''களம் பலிக்கு உரியார் யாவர்? கடவ நாள் யாவது?'' என்ன, தளப்பு இலா முகூர்த்தம் வல்லோன் சாதேவன் அல்லது இல்லை, உளம் பொலிவு உடையாய், இன்றே உற்று அவன் கேண்மின், என்றான்.]

**விளக்கம் :-** அளப்பு இலா - அளவிட முடியாத. சேனை நாதன் - வீடுமன். அவனி வேந்தன் - துரியோதனன். கடவநாள், உரிய முகூர்த்தம். தளப்பு இலா முகூர்த்தம் வல்லோன் - பயன் அளிப்பதில் தவறாதபடி முகூர்த்தம் குறிக்க வல்லவன். உளம் பொலிவு உடையாய் - உள்ளக்கிளர்ச்சி உடைய துரியோதனனே. ''களபலிக்கு உரியவன் யாவன்? அப் பலி கொடுத்தற்குரிய முகூர்த்தம் யாது?'' என்று துரியோதனன் வீடுமனைப் பணிந்து கேட்க, அவனும், ''நல்ல முகூர்த்தங் குறிக்க வல்லவன், சகா தேவனே! அவனை அடைந்து கேளுங்கள்'', என்று கூறினான், என்பதாம்.

**3. ஒன்றநம் படைக ளெல்லா மொருபகற் பொழுதிற்**
**கொல்வான்**
**நின்றன னிராவா னென்பா னீயவன் றன்னை வேண்டின்**
**கொன்றெனைப் பலிகொ டென்று கூறுமக்**
**குமரற் கொன்றால்**
**வென் றுனக் கரசும் வாழ்வு மெய்தலாம் விரைவி னென்றான்.**

[ஒன்ற நம் படைகள் எல்லாம் ஒரு பகல் பொழுதில் கொல்வான் நின்றனன் இராவான் என்பான், நீ அவன் தன்னை வேண்டின், கொன்று எனை பலி கொடு என்று கூறும்; அ குமரன் கொன்றால், வென்று உனக்கு அரசும் வாழ்வும் எய்தலாம் விரைவின்; என்றான்.]

**விளக்கம் :-** ''இராவான் என்பான், நம் படைகளை எல்லாம் ஒரு பகல் பொழுதில் கொல்வதற்கு இருக்கின்றான்; நீ அவனை வேண்டிக்கொண்டால், என்னைக் கொன்று பலி கொடு, என்பான்; அவனைக் கொன்றால் விரைவில் பாண்டவரை வென்று அரசையும் செல்வ வாழ்வையும் பெறலாம்'', என்று வீடுமன் கூறினான்,—என்பதாம்.

**4. என்றலு மவனு மாங்கோ ரியந்திர வெகின மூர்ந்து**
**சென்றன னவனுங் கேட்டுச் சிலையில்வெங் கதிரைத்**
**திங்கள்**
**ஒன்றிய பகலி ராவிற் களப்பலி யூட்டி னல்லால்**
**வென்றிட லரிதென் றிட்டான் கிளைஞரை வேறி டாதான்.**

[என்றலும் அவனும் ஆங்கு ஓர் இயந்திரம் எகினம் ஊர்ந்து சென்றனன், அவனும் கேட்டு, சிலையில் வெம் கதிரை திங்கள் ஒன்றிய பகலில், இரவில் களம் பலி ஊட்டின் அல்லால் வென்றிடல் அரிது என்றிட்டான், கிளைஞரை வேறு இடாதான்.]

**விளக்கம் :-** என்று வீடுமன் கூறலும், துரியோதனனும், ஓர் அன்னவடிவமான இயந்திர ஊர்தியில் ஏறி அங்கே (சகாதேவன் இருக்கும் இடம்) சென்றனன்; அவனும் (சகாதேவனும்) வந்த காரியத்தைக் கேட்டு அறிந்து, சிலையில் (தநுர் மாதத்தில்) வெங் கதிரை (சூரியனை) திங்கள் (சந்திரன்) கூடும் பகலில் (தினத்தில்) அதாவது அமாவாசை தினத்தில், இரவில் களப்பலி கொடுத்தால் அல்லாமல் போர் வெல்லுதல் முடியாததாகும், என்று கூறினான். கிளைஞரை வேறு இடாதான் - சுற்றத்தாரைப் பேதித்து நினைக்காத தூயனான சகாதேவன்.

**5. ஐவரி லிளையோன் றன்பான் முகூர்த்தங்கேட் டவர்சே யான**
**பைவரு முடியோன் றன்பாற் சேறலும் பணிந்து தாதை**
**உய்வரு வரங்கேட் டென்னை யூட்டுக பலிநீ யென்றான்**
**எய்வரு சிலையி னானும் பெற்றன னென்று மீண்டான்.**

[ஐவரில் இளையோன் தன்பால் முகூர்த்தம் கேட்டு, அவர் சேய் ஆன பைவரு முடியோன் தன்பால் சேறலும், பணிந்து,

தாதை உய் வரு வரம் கேட்டு, (மறுக்காமல்) என்னை ஊட்டுக பலி நீ என்றான்; எய்வரு சிலையினானும் பெற்றனன் என்று மீண்டான்.]

**விளக்கம் :-** சகாதேவனிடம் கேட்டுக் களபலிக்குரிய முகூர்த்தத்தைத் தெரிந்துகொண்டு, அதன்பின், பாண்டவர்களின் மகனான படம் பொருந்திய தலையை உடைய இராவானிடம் செல்ல, அவனும் வந்த தந்தையாகிய துரியோதனனை வணங்கி, அவன் கேட்ட (அவன்) பிழைத்தற்கு ஆதாரமான வரத்தைக் கேட்டறிந்து, (அதற்கு உடன் பட்டு) ''என்னை நீ பலி கொடுத்திடுக'' என்று கூறினான்; எய்வரு சிலையை உடையவனான துரியோதனனும், (இனி வாழ்ச்சி) பெற்றவனானேன், என்று மகிழ்ந்தவனாய் அத்தினபுரி திரும்பினான், என்பதாம். 'உய்வு அரு வரம்' என்று கொண்டு, தன் பிதாவான விசயன் பிழைத்தற்கு அரியதான வரம் என்றும் கொள்ளலாம். எய்வரு சிலை - எய்தற்குரிய வில். பைவரு முடியோன், என்பதிலுள்ள பை என்பது பசுமை என்பதின் திரிபாகக் கொண்டு, பசிய பொன்னாலான கிரீடத்தை உடைய இராவான், என்றும் பொருள் கொள்ளலாம்.

**முகூர்த்தங் கேள்விச் சருக்கம் முற்றும்.**

# 7. களபலியூட்டு சருக்கம்

நிகழ்வதற்கு இருக்கும் போரில் பாண்டவர் வெற்றி பெறும் பொருட்டுக் களபலி கொடுத்தலைப் பற்றிக் கூறும் சருக்கம் இது. இச் சருக்கம் எட்டுச் செய்யுள்களைக் கொண்டது.

**கடவுள் வணக்கம்**

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**1. குன்றெடுத் தாயர் மாதர் குரவைகொண் டொருவி ளாவில்**
**கன்றெடுத் தெறிந்து வெய்ய காளியற் கிருதா ணல்கி**
**அன்றெடுத் திறுத்த வில்லே யனையவில் விழவு காண்பான்**
**சென்றெடுத் திறுத்து நின்ற செங்கண்மா லெங்கள்**
**கோவே.**

[குன்று எடுத்து, ஆயர் மாதர் குரவை கொண்டு, ஒரு விளாவில் கன்று எடுத்து எறிந்து, வெய்ய காளியற்கு இருதாள் நல்கி, அன்று எடுத்து இறுத்த வில்லே அனைய வில் விழவு காண்பான் சென்று, எடுத்து இறுத்து நின்ற செங்கண்மால் எங்கள் கோவே.]

**விளக்கம் :-** கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்தும், ஆயர் குல மகளிரோடு குரவைக் கூத்து ஆடியும், ஒரு விளா ரெத்தின் மேல் ஒரு கன்றை எடுத்து எறிந்தும், காளியன் என்னும் மகடிாய நாகத்திற்குத் தனது திருவடிகளைத் தந்தும், இராமா

வ்தாரத்தில் எடுத்த இறுத்த வில்லையே ஒத்த வில்லின் விழவினைக் காணும் பொருட்டு வடமதுரை சென்று, அந்த வில்லை இறுத்தும் நின்ற செங்கண்மாலே எங்கள் தலைவன், என்பது பொருள். கோவே, என்பதிலுள்ள ஏகாரத்தைச் செங்கண்மாலோடு கூட்டுக. வில் விழவு - கிருஷ்ண பலராமர் களைக் கொல்லும் பொருட்டுக் கம்சனால் ஏற்பாடு செய்யப்பட்ட தநுர்யாக உற்சவம்.

**2. கொடுத்தனன் பலிக்குத் தன்னைக் குமரனென் றறிந்து குன்றம்**
**எடுத்தவன் றிதிபன் னான்கி னிடையுவா வின்றா கென்று**
**தொடுத்தநூன் முனிவ ரோடுஞ் சொல்லினன் சுடர்க டம்மில்**
**அடுத்ததிங் கென்னை யென்ன வன்றது வாய தன்றே.**

[கொடுத்தனன் பலிக்கு தன்னை குமரன் என்று அறிந்து, குன்றம் எடுத்தவன் திதி பன்னான்கின் இடை உவா இன்று ஆக என்று, தொடுத்த நூல் முனிவரோடும் சொல்லினான்; சுடர்கள் தம்மில் அடுத்தது இங்கு என்னை என்ன, அன்று அது ஆயது, அன்றே.]

**விளக்கம் :-** பாண்டவர் குமாரனான இராவான் தன்னைப் பலியிடும்படி பகைவர்க்குக் கொடுத்துவிட்டான் என்பது அறிந்து, கண்ணன், அமாவாசைக்கு முந்தின தினமாகிய சதுர்த்தசி தினமான இன்றைக்கே அமாவாசை ஆகட்டும் என்று, முனிவர் களுக்குச் சொன்னான்; (அவர்களும் அமாவாசைக்குரிய சடங்கு களைச் செய்ய) சந்திர சூரியர்களாகிய சுடர்கள் ஒன்று சேர்ந்து, இது நேர்ந்தது என்ன காரணம் என்று யோசிக்க, அவர்கள் ஒன்று சேர்ந்த அத் தினமே அமாவாசை ஆயிற்று,—என்பதாம். சந்திர சூரியர்கள் ஒன்று சேரும் தினம் அமாவாசை. உவா-அமாவாசை. பன்னான்கு, பதினான்கு என்பதின் மரூஉ.

**3. ஆயபின் றருமற் குற்ற வாறெலாம் விளம்பி யின்று**
**நீயவன் றனக்கு முன்னே களங்கொள நேரி னல்லால்**
**போயவன் றன்னை வேற லரிதெனப் புகன்று செங்கண்**
**மாயவ னென்னை வல்லே வன்பலி யூட்டு கென்றான்.**

[ஆயபின் தருமற்கு உற்ற ஆறு எலாம் விளம்பி இன்று, நீ அவன் தனக்கு முன்னே களம் கொள நேரின் அல்லால், போய் அவன் தன்னை வேறல் அரிது என, புகன்று, செம் கண் மாயவன் 'என்னை வல்லே வல் பலி ஊட்டுக', என்றான்.]

**விளக்கம் :-** சதுர்த்தசி அமாவாசை ஆனபின்பு, செங்கண் மாயவன் (கண்ணன்) நடந்தவற்றை எல்லாம் தருமனுக்குச் சொல்லி, இன்று, அவனுக்கு முன்னே களபலி கொடுத்தல் நிகழ்ந்தாலன்றி, போர்க்களஞ்சென்று அவனை வெல்லுதல்

முடியாததாகும்; ஆகவே, 'உடனே என்னை வலிய பலியாகக் கொடுப்பாயாக', என்றான். வல், விரைவை உணர்த்தும் இடைச்சொல்.

**4. தருமனுந் தம்பி மாருஞ் சாற்றிய மாற்றங் கேட்டே**
**உருமெறி புயங்கம் போல வுள்ளழிந் துள்ளாய் நின்ற**
**கருமுகில் வண்ணன் பாத கமலத்தில் வீழ்ந்து வாழ்வும்**
**பொருமுனை வயமும் வேண்டேம் பொன்றுத லமையு**
**மென்றார்.**

[தருமனும் தம்பிமாரும் சாற்றிய மாற்றம் கேட்டே, உரும் எறி புயங்கம் போல உள் அழிந்து, உள்ளாய் நின்ற கருமுகில் வண்ணன் பாதகமலத்தில் வீழ்ந்து, வாழ்வும் போர்முனை வயமும் வேண்டேம், பொன்றுதல் அமையும், என்றார்.]

**விளக்கம் :-** கண்ணன் கூறியது கேட்ட தருமனும் தம்பி மாரும், இடி விழப் பெற்ற நாகம்போல் உள்ளம் அழிந்து, எல்லாப் பொருள்களின் உள்ளேயும் கரந்துறையும் கண்ணனது திருவடிகளில் வீழ்ந்து, உன்னைப் பலி கொடுத்து, அதன் பயனாய் வரும் வெற்றியும் வாழ்வும் வேண்டேம்; இனி, நாங்கள் சாதலே அமையும், என்று கூறினார், என்பதாம்.

**5. அப்பொழு தரவ மைந்த னரவுயர்த் தவற்கு நேர்ந்தேன்**
**இப்பொழு துமக்கு நேர்ந்தே னெனைப்பலி யிடுமி னென்ன**
**மைப்புயல் வண்ண னின்னை யல்லது மண்ணி லென்னை**
**ஒப்பவ ரில்லை நம்மி லொருவரே வேண்டு மென்றான்.**

[அப்பொழுது அரவம் மைந்தன், அரவு உயர்த்தவற்கு நேர்ந்தேன், இப்பொழுது உமக்கு நேர்ந்தேன், என்னை பலி இடுமின் என்ன, மை புயல் வண்ணன், நின்னை அல்லது மண்ணில் என்னை ஒப்பவர் இல்லை, நம்மில் ஒருவரே வேண்டும், என்றான்.]

**விளக்கம் :-** ''துரியோதனன் என்னை வேண்டிக் கொண்ட போது பலிக்கு உடன்பட்டேன். அமாவாசை வந்த பின்னும் அவன் என்னை அழைக்க வரக்காணாமையின், இப்பொழுது உங்களுக்குப் பலியாக உடன்படுகின்றேன். பலி இடுங்கள்'', என்று இராவான் கூற, கரிய மேகம் போன்ற திருமேனியுடைய கண்ணன், இந்த உலகத்தில் உன்னை அல்லாமல் என்னை ஒப்பார் எவரும் இல்லாமையின், நம்மில் ஒருவரே, பலியாக வேண்டும், என்றான்,—என்பதாம்.

**6. அடியனே னிருக்க நீயே யரும்பலிக் கிசைவாய் போரின்**
**மடியநே ரலரைக் கொன்று வாழ்விவர்க் களிக்க நின்றாய்**
**கடியநேர் பலிதந் தாலுங் காயமர் சிலநாட் கண்டு**
**முடியநே ரலர்வெம் போரின் முடிவெனக் கருளு கென்றான்.**

[அடியேன் இருக்க நீயே அரும்பலிக்கு இசைவாய்! போரின் மடிய நேரலரை கொன்று வாழ்வு இவர்க்கு அளிக்க நின்றாய், கடிய நேர் பலி தந்தாலும் காய் அமர் சில நாள் கண்டு, முடிய நேரலர் வெம் போரின், முடிவு எனக்கு அருளுக, என்றான்.]

**விளக்கம் :-** அடியேன் இருக்க, நீயோ பலிக்கு இசைவாய் ஆவது! போரில் அழியும்படி பகைவரைக் கொன்று இவர்க்கு (பாண்டவர்க்கு) வாழ்வு கொடுக்க நிற்கின்றவனே, நேர் (ஏற்ற) பலியாக என்னை விரைவில் தந்தாலும், வெவ்விய போரினைச் சில தினங்கள் (அடியனேன்) கண்டு, பகைவர் அழிய, அதன்பின் கொடிய போரில் இறத்தலை எனக்குக் கொடுத்தருள்க, என்று வேண்டிக்கொண்டான்,—என்பது பொருள். நேரலர் - பகைவர்.

**7. அவ்வர மவற்கு நல்கி யத்தினத் தவ்வி ராவில்
தெவ்வரை ஒளித்துத் தங்கள் சென்மதே யத்திற் சென்றார்
மெய்வரு காளி முன்னர் மெய்யுறுப் பனைத்தும் வீரன்
கொய்வரு நிலையிற் கொய்து கொடுத்தன னென்ப
மன்னோ.**

[அ வரம் அவற்கு நல்கி அ தினத்து அ இராவில், தெவ்வரை ஒளித்து தங்கள் சென்ம தேயத்தில் சென்றார்; மெய்வரு காளி முன்னர் மெய் உறுப்பு அனைத்தும் வீரன், கொய்வரு நிலையின் கொய்து கொடுத்தனன், என்ப மன்னோ.]

**விளக்கம் :-** தெவ்வரை ஒளித்து - தெவ்வருக்கு (துரியோதனாதியருக்கு) ஒளித்து, அதாவது அவர்கள் அறியாதபடி தங்களை ஒளித்துக்கொண்டு. சென்மதேயம் - தங்களது நாடான குரு நாடு. காளி - பார்வதியின் அம்சமான துர்க்கை. மெய் வரு காளி - வடிவு உடைய காளி. மெய் உறுப்பு - உடலின் உறுப்புக்கள். கொய்வரு நிலை - பலியாகக் கொய்து கொடுக்க வேண்டிய முறை. இராவான் கேட்ட வரத்தைக் கண்ணன் கொடுத்தருளியபின், பாண்டவர் அன்றிரவே, பகைவர் அறியாத படி குரு நாடு செல்ல, மகன், காளியின் முன் முறைப்படி தானே தன் உறுப்புக்களை அறுத்துப் பலி கொடுத்தான்,—என்பதாம். என்ப, மன், ஓ, அசைகள். நல்க, என்ற செயவெனெச்சம் நல்கி என்று திரிந்து நின்றது.

**8. ஆண்டகை கன்னி முன்ன ரவயவ மனைத்து மீந்து
காண்டக மலர்ந்த தீப மெனமுகங் கவின நின்றான்
பாண்டவர் யாம ளத்தின் படிபக டாதி யாக
வேண்டிய பலிக ளீந்து வென்றியும் வேண்டி மீண்டார்.**

[ஆண் தகை கன்னி முன்னர் அவயவம் அனைத்தும் ஈந்து, காண் தக மலர்ந்த தீபம் என முகம் கவின நின்றான், பாண்டவர் யாமளத்தின்படி பகடு ஆதி ஆக வேண்டிய பலிகள் ஈந்து, வென்றியும் வேண்டி மீண்டார்.]

**விளக்கம் :-** ஆண் தகை - ஆண்மைக் குணமுடைய இராவான். காண்தக - காணத்தக்க (அழகிய). மலர்ந்த தீபம் - ஒளி விளக்கமுடைய தீபம். முகம் கவின நின்றான் - முகம் எழிலின் விளக்கம் பெற்று நின்றான்; (அதாவது மகிழ்ச்சியோடு நின்றான் என்றபடி). யாமளம் - அதர்வண வேதத்தின் ஒரு பகுதியாகும் நூல்; அதாவது பலி கொடுத்தற் குரிய விதிகளைக் கொண்ட நூல். பகடு, என்பது யானை, எருமை என்பவற்றின் ஆண்பாற் பெயர். இராவான், தன் உறுப்புக்களைப் பலியாகக் கொடுத்துத் துன்பம் சிறிதும் இல்லாமல் மலர்ந்த முகத்தோடு நின்றான்; அதன்பின் பாண்டவர் யானை முதலியவற்றை யாமள நூலின்படி பலி கொடுத்து, இனி நடக்கவிருக்கும் போரில் வெற்றி யையும் பிரார்த்தித்து உபப்பிலாவியம் திரும்பினார்கள், என்ப தாம்.

**களபலியூட்டு சருக்கம் முற்றும்.**

## 8. அணிவகுப்புச் சருக்கம்

பாண்டவரும் துரியோதனாதியரும் தங்கள் தங்கள் சேனை களை அணிவகுத்ததைக் கூறும் சருக்கம் இது. இச் சருக்கம் முப்பத்து நான்கு செய்யுள்களைக் கொண்டது.

**பாண்டவர் போரெழல்**

எழுசீர் ஆசிரிய விருத்தம்

**1. மற்றை நாள்வசு தேவன் மாமகன் மண்ட லீகரு மன்னரும்**
**செற்று நீடவை புக்கி ருந்தசி வேத னோடிவை செப்பினான்**
**இற்றை நாளதி ரதர்ம காரதர் சமர தராதிய ரெவரொடும்**
**கொற்ற வஞ்சிமி லைச்சி யேகுக குருநி லத்திடை**
**யென்னவே.**

[மற்றை நாள் வசுதேவன் மாமகன் மண்டலீகரும் மன்னரும் செற்று நீடு அவை புக்கு, இருந்த சிவேதனோடு இவை செப்பினான், இற்றை நாள் அதிரதர், மகாரதர், சமரதர் ஆதியர் எவரொடும் கொற்றம் வஞ்சி மிலைச்சி ஏகுக குரு நிலத்திடை என்னவே.]

**விளக்கம் :-** மறுநாள் வசுதேவனுடைய சிறந்த மகனாகிய கண்ணன், மண்டலாதிபதிகளும், வேறு பல அரசர்களும் நெருங்கி யுள்ள பெரிய சபை புகுந்து, அங்கேயிருந்த சுவேதனிடம், இன்றைய தினமே, அதிரதர், மகாரதர், சமரதர் ஆகியவர் எல்லோரோடும் வெற்றிச் சின்னமான வஞ்சிமாலை அணிந்து குருக்ஷேத்திர பூமிக்குச் செல்லுக, என்று இந்த வார்த்தைகளைக் கூறினான்,—என்பதாம். செற்று - நெருங்கி. பகைமேல் போர் எழுந்து செல்வோர் அணியும் மாலை, வஞ்சி.

2. அதிர தாதிபர் தானும் வீமனும் விசய னுந்திற லபிமனும்
சிதைவி லாதசி கண்டி சாத்தகி திட்டத் துய்மன்வி
ராடர்கோன்
மதுர மாமொழி தரும னோடிவர் மார தாதிபர் சமரதப்
பதிக ளானவர் யாக சேனனு தாம னுத்தம பானுவே.

[அதிரதஅதிபர், தானும் வீமனும், விசயனும் திறல் அபிமனும், சிதைவு இலாத சிகண்டி, சாத்தகி, திட்டத்துய்மன், விராடர் கோன், மதுரம் மாமொழி தருமனோடு இவர் மாரத அதிபர், சமரதர் பதிகள் ஆனவர் யாகசேனன், உதாமன், உத்தமபானு. ஏ.]

**விளக்கம் :-** தானும் வீமனும் விசயனும் திறல் அபிமனும் அதிரத அதிபர் (ஆகவும்), சிதைவு இலாத சிகண்டி, சாத்தகி, திட்டத்துய்மன், விராடர்கோன், மதுரம் மாமொழி தருமனோடு இவர் மாரதாதிபர் (ஆகவும்) யாகசேனன், உதாமன், உத்தமபானு ஆகியவர் சமரதர் தலைவர்கள் (ஆகவும்).— (அடுத்த செய்யுளோடு தொடரும்) என்று அன்வயிக்க, சேனைத் தலைவனான சுவேதன், கண்ணன் கட்டளையை ஏற்று அணி வகுத்ததைக் கூறும் இது. சிதைவு இலாத சிகண்டி - வலி கெடல் இலாத சிகண்டி. மதுரம் -ஆம் - மொழி தருமன், என்றும் பிரிக்கலாம்.

3. நண்ணு மர்த்தர தர்க்கு நாயகர் நகுல னுஞ்சக தேவனும்
எண்ணும் வெற்றிபெ றுங்க டோற்கச னென்னும்
வீரனு மாகவே
மண்ண கத்தணி யணிக ளாகம கீபர் தம்மைவ குத்துளான்
விண்ண கத்தணி விபுதர் சேனையில் வேளொ டொத்தனன்
வீரனே.

[நண்ணும் அர்த்த ரதர்க்கு நாயகர் நகுலனும் சகதேவனும், எண்ணும் வெற்றி பெறும் கடோற்கசன் என்னும் வீரனும் ஆகவே, மண் அகத்து அணி அணிகளாக மகீபர் தம்மை வகுத்து ளான், விண் அகத்து அணி விபுதர் சேனையில் வேளொடு ஒத்தனன் வீரனே.]

**விளக்கம்:-** விண் அகத்து அணி விபுதர் சேனையில், வேளொடு ஒத்தனன் (ஆகிய) வீரன் (ஏ), நகுலனும் சகதேவனும் எண்ணும் வெற்றி பெறும் கடோற்கசன் என்னும் வீரனும் நண்ணும் அர்த்த ரதர்க்கு நாயகர் ஆக (ஏ) மண் அகத்து மகீபர் தம்மை அணி அணிகளாக வகுத்துளான்,—என்பது, அன்வயம், தேவலோகத்தில் பொருந்தியுள்ள விபுதருடைய (தேவர்களு டைய) சேனையில் தலைமை பூண்ட முருகக் கடவுளோடு ஒத்த வீரனான சுவேதன் என்பான்,—நகுலனும் சகதேவனும், நன்கு மதிக்கப்படும் வெற்றியைப் பெற வல்லவனான கடோற்கசன் என்னும் வீரனும் பொருந்திய அர்த்த ரதத் தலைவர்களாகவும், உலகத்து அரசர்கள் எல்லோரையும் அணி அணியாகப் பிரித்தும் முறைப்படுத்தினான்,—என்பது பொருள்.

பலராம விதுரர் தீர்த்த யாத்திரை மேற்கொளல்

**4. நெருங்கு வெம்படை கண்டு வந்தபி னைம்பு லன்களு நெஞ்சமும்**
**ஒருங்கு சென்றென மன்ன ரைவரு மாலும் வெஞ்கம் முன்னவே**
**மருங்கு நின்றவி ராம னும்பின் மதித்த போர்முடி வளவும்யான்**
**பொருங் கடும்பு னனதி களாடுவ னென்று நண்பொடு போயினான்.**

[நெருங்கு வெம் படை கண்டு உவந்தபின், ஐம்புலன்களும் நெஞ்சமும் ஒருங்கு சென்று என, மன்னர் ஐவரும் மாலும் வெம் சமம் உன்ன (ஏ), மருங்கு நின்ற இராமனும் பின் மதித்த போர் முடிவு அளவும் யான் பொரும் கடும் புனல் நதிகள் ஆடுவன் என்று நண்பொடு போயினான்.]

**விளக்கம் ;-** (அணிவகுத்து) நெருங்கிய கொடி படை கண்டு உவந்தபின், ஐந்து இந்திரியங்களும் (அவற்றை இயக்கும்) மனமும் ஒன்றுபட்டு இயங்குவது போல (இந்திரியங்களாகிய) ஐவரும், (மனமாகிய) கண்ணனும் கொடிய போர் முயற்சியில் மனங் கொண்டு இருக்க,—பக்கத்திலே இருந்த பலராமனும் அதன்பின், கருதிய போர் முடியும் வரையிலும், அலை மோதும் மிகுந்த நீரைக்கொண்ட புண்ணிய நதிகளில் நான் நீராடுதலை மேற் கொள்வேன், என்று, எல்லோரிடத்திலும் நட்பு உடையவனாய் விடைபெற்றுக்கொண்டு சென்றான்,—என்பது பொருள். கண்ணனது தமையனும், துரியோதனனிடம் அபிமான முடைய வனுமான பலராமன், இப் போரை விரும்பாமையாலும், கண்ணனுக்கு எதிராய்ப் போரில் சம்பந்தப்படல் தக்கதாகாது என்ற கருத்தினாலும், தீர்த்த யாத்திரையை மேற்கொண்டான் என்க. கடும் புனல் (கடு புனல்), கடி, என்ற உரிச் சொல் ஈறு திரிந்து நின்றதாகக் கொள்க.

**5. போன வெம்பல பத்தி ரன்பொரு பூச லிற்புகு தேனெனா**
**மான வெஞ்சிலை முன்னி றுத்தவி தூர னோடும கிழ்ந்துபோய்க்**
**கான கங்களில் வரையில் வாழ்முனி கணம்வி ரைந்தெதிர் கொள்ளவே**
**நான மெங்கணு மாடு வானிரு நாலு திக்கினு நண்ணினான்.**

[போன வெம் பலபத்திரன், பொரு பூசலில் புகுதேன் எனா, மானம் வெம் சிலை முன் இறுத்த விதூரனொடும் மகிழ்ந்து போய், கானகங்களில், வரையில், வாழ் முனிவர் கணம் விரைந்து எதிர் கொள்ள (ஏ), (ஸ்)நானம் எங்கணும் ஆடுவான், இரு நாலு திக்கினும் நண்ணினான்.]

**விளக்கம் :-** இவ்வாறு தீர்த்த யாத்திரைக்குப் புறப்பட்டுச் சென்ற பலராமன், தாக்கும் போரில் எவர் பக்கத்திலும் சேர்ந்து போர் செய்ய மாட்டேன், என்று பெருமையுடைய கொடிய வில்லை முறித்தெறிந்த விதுரனோடு மனம் மகிழ்ந்து சென்று, காடுகளிலும் மலைகளிலும் வாழும் முனிவர் கூட்டம் விரைந்து வந்து எதிர்கொண்டு உபசரிக்க, எல்லா இடங்களிலும் உள்ள தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்வதற்காக எட்டுத் திசைகளிலும் யாத்திரை செய்தான், என்பது பொருள்.

## சதுரங்கசேனை வருணனை

**6. இடிப டப்பட வருமு கிற்குல மெனநி ரைக்கட லெனநெடுங்**
**கடிபடப்பட வதிர்ப ணைக்குல மெனவ திர்ப்பன கறைகள்**
**போல்**
**அடிப டப்பட வுரகர் பைத்தலை யணிம ணிக்கண**
**மடையவும்**
**பொடிப டப்பட வுடன டப்பன புகர்மு கக்கரி நிகரமே.**

[இடி பட பட வரும் முகில் குலம் என, நிரை கடல் என, நெடு கடி பட பட அதிர் பணை குலம் என அதிர்ப்பன, கறைகள் போல் அடி பட பட உரகர் பை தலை அணி மணி கணம் அடைய வும் பொடி பட உடன் நடப்பன, புகர் முகம் கரி நிகரம், ஏ.]

**விளக்கம் ;-** இது யானை வருணனை ஆகும். புள்ளிகளை உடைய முகத்தினவான யானைகளின் கூட்டம், இடிகள் உண்டாக வரும் நீருண்ட மேகக் கூட்டம், போலவும், வரிசைப் படப் பொங்கி எழும் கடல் போலவும், நீண்ட (அடிக்கும்) தடி பட ஒலிக்கும் வாத்தியங்களின் கூட்டம் போலவும் பிளிறுவன; கறைகள் (உரல்கள்) போன்ற (அவற்றின்) காலடிகள் (அடி யெடுத்து நடக்குந்தோறும்) படுதலால், நாக சாதியாரது படத்தையுடைய தலையின் இடத்தே பொருந்தியுள்ள மாணிக் கங்கள் எல்லாம் தூளாகும்படி நடப்பன,—என்பது பொருள். கடி - (கடிப்பு என்பதின் விகாரம்) அடிதடி. அடுக்குகள் மிகுதிப் பொருளன. நிகரம் - கூட்டம். முதல் இரண்டடிகள், உவமை அணி : யானையின் முகத்தில் செம்புள்ளிகள் இருத்தல், உத்தம இலக்கணம்.

**7. உருண்ம ணித்திகி ரியின்மு னைப்படி லுயர்பொ ருப்பையு**
**முரகர்வாழ்**
**இருநி லத்திடை புதைப டப்பட வெதிர் நடப்பனவிவுளியின்**
**குரது கட்கொடு வலக மிட்டணி கொடிநி ரைத்துகில்**
**கொடுபொலம்**
**தருநி லத்தவர் விழிது டைப்பன சரத மிப்படி யிரதமே.**

[உருள் மணி திகிரியின் முனை படில் உயர் பொருப்பையும், உரகர் வாழ் இரு நிலத்திடை புதை பட பட எதிர் நடப்பன;

இவுளியின் குரம் துகள் கொடு கலகம் இட்டு, அணி கொடி நிரை துகில் கொடு பொலம் தரு நிலத்தவர் விழி துடைப்பன, சரதம் இப்படி இரதமே.]

**விளக்கம் :-** இரதம் (தேர்கள்),—தமது அழகிய சக்கரங் களின் முனை பட்டால், உயர்ந்த மலைகளையும் நாகர் வாழும் பெரிய பாதலத்தில் புதையும்படி செய்து, அவற்றிற்கு எதிர் நடப்பன ஆகும்; (அத் தேர்களில் பூட்டிய) குதிரைகளின் கால் குளம்புகளால் எழும் தூளிகளால் (தேவர்களோடு) பூசல் விளைத்து, (அதாவது அவர்களது இமையாக் கண்களை வருத்தி,) (அதன்பின் தம் மீது கட்டியுள்ள) அழகிய கொடிக் கம்பங்களின் வரிசையுற்ற சீலைகளால், வேண்டிய பொருள்களை உதவும் கற்பக விருட்சங்களையுடைய தேவலோக வாசிகளான தேவர் களின் பனிக்கும் கண்களைத் துடைப்பனவாகும்; இவ்வாறு தேர்கள் செய்தல், (அதாவது மலைகளைப் புதையும்படி செய்தல், குதிரைகளின் குளம்பு எழுப்பிய புழுதியால் தேவரோடு பூசலிடு தல், கொடிச் சீலையால் கண்களைத் துடைத்தல்) உண்மை யாகும், அதாவது நிகழ்வனவாகும்,—என்பது பொருள். பெரிய மலைகளைப் புதையச் செய்தல், தேரின் வலிமையைக் குறிக்கும். குரத்துகளால் கலகம் இடல், குதிரைகளின் வலிமையைக் குறிக்கும். கொடிகளால் கண் துடைத்தல், தேரின் உயரத் தைக் குறிக்கும். பூசல் விளைத்தலும், அதன்பின் கண் துடைத்தலும் ஆகிய செயல்களைத் தேரினிடம் ஏற்றிக் கூறியது, தற்குறிப்பேற்ற அணி. பொலம் தரு - (பொலன் - பொருள்) வேண்டிய செல்வத்தை உதவும் கற்பகத் தரு. இச் செய்யுள் தேரின் வருணனை.

**8. பலவகைப்படு கவன மெய்க்கதி பவன மொப்பன பரவைசூழ்**
**உலக னைத்தையும் வெளியி னுய்த்தலி னுரக ருக்குமொ ருதவியாய்**
**இலகு சக்கர சிகரி சுற்றடி யெனவ ளைப்பன வெழுபெயர்க்**
**குலமு கிற்றலை கிழிய வைப்பன குரவி தத்தன புரவியே.**

[பலவகைப்படு கவனம் மெய் கதி பவனம் ஒப்பன, பரவை சூழ் உலகு அனைத்தையும் வெளியின் உய்த்தலின் உரகருக்கும் ஓர் உதவி ஆய், இலகு சக்கர சிகரி சுற்று அடி என வளைப்பன, எழு குலம் முகில் தலை கிழிய வைப்பன, குரம் விதத்தன புரவியே.]

**விளக்கம் :-** குதிரைகள் பலதிறப்பட்ட நடைகளை உடைய சிறந்த விரைவுடைய நடையினால் வாயுவை ஒப்பனவாகும்; கடல் சூழ்ந்த உலகம் முழுதையும் (தம் குளம்புகள் எழுப்பும் புழுதி மூலமாக) ஆகாயத்தில் செலுத்தலால், (பூமியைத் தாங்கும்) நாகருக்கும் சுமையைக் குறைத்துச் சிறிது உதவி, விளங்கும் சக்கரவாளகிரியை தமது ஓட்டத்திற்குரிய சுற்றெல்லை என்று சொல்லும்படி அக் கிரியைச் சுற்றி வருவன; ஏழு பெயர்

களை உடைய சிறந்த மேகங்களின் சிரம் (மேலிடம்) கிழியும்படி அவற்றின்மேல், வைப்பனவான குளம்புகளின் வகையை உடையன,—என்பது பொருள். இது குதிரைகளின் வர்ணனை. மல்லகதி, மயூரகதி, வியாக்ரகதி, வானரகதி, இடபகதி, என்பன குதிரையின் பலவகைப்பட்ட கதிகள். இச் செய்யுள் தற்குறிப் போடு கூடிய உயர்வு நவிற்சி, என்க.

**9. புருவ விற்குனி வெழவு யிர்ப்பொடு**
**புகையெ ழத்துகிர் புரையும்வாய்**
**மருவு முத்திள நிலவெ ழத்தனி**
**மனநெ ருப்பெழ வளர்தடக்**
**கரத லத்தயில் வெயிலெ ழப்புனை**
**கலன்வ னப்பெழ மிளிருநீள்**
**நிரையி மைப்பெறு விழிசி வப்பெழ**
**நிருத ரொத்தன விருதரே.**

[புருவம் வில் குனிவு எழ, உயிர்ப்பொடு புகை எழ, துகிர் புரையும் வாய் மருவும் முத்து இள நிலவு எழ, தனி மனம் நெருப்பு எழ, வளர்தட கரதலத்து அயில் வெயில் எழ, புனைகலன் வனப்பு எழ, மிளிரும் நீள் நிரை இமை பெறு விழி சிவப்பு எழ நிருதர் ஒத்தனர் விருதரே.]

**விளக்கம் :-** விருதர் (காலாட்படைவீரர்).—அவர் தம் புருவங்களாகிய விற்களின் வளைவு தோன்றவும், சுவாசக் காற்றோடு புகை வெளிப்படவும், பவளம்போல் சிவந்த அவர் களது வாயில் பொருந்தியுள்ள முத்தை ஒத்த பற்களினின்று ஒளி எழவும், சிறந்த அவர்களது மனத்தில் சினமாகிய கனல் எழவும், நீண்டு வளர்ந்த விசாலமான கையில் ஏந்திய வேலினின்று ஒளி எழவும், அவர்கள் அணிந்த ஆபரணங்களின் அழகு தோன்றவும், பிரகாசம் பொருந்திய நீண்ட ஒழுங்கான இமைகளைக் கொண்ட கண்களில் செந்நிறம் தோன்றவும். (பெற்றிருந்த காரணத்தால்) வலிய அரக்கரை ஒத்தனர்,—என்பது பொருள். இது காலாள் வீரர் வருணனை. விருது என்பது, வெற்றி என்ற பொருளது. அதையுடையவர், விருதர்.

**10. கொடிநெ ருக்கவு மதியெ னத்திகழ்**
**குடைநெ ருக்கவு நடைகொளாள்**
**அடிநெ ருக்கவு மிபநெருக்கவு**
**மயநெ ருக்கவு மெழுதுகள்**
**பொடிநெ ருக்கவும் வளர்பு யத்தொடு**
**புயநெ ருக்கவு மொளியறா**
**முடிநெ ருக்கவு முறைநெ ருக்கினர்**
**முரச மொத்தசொ லரசரே.**

[கொடி நெருக்கவும், மதி என திகழ் குடை நெருக்கவும், நடை கொள் ஆள் அடி நெருக்கவும், இபம் நெருக்கவும், அயம் நெருக்கவும், எழு துகள் பொடி நெருக்கவும், வளர் புயத்தொடு புயம் நெருக்கவும், ஒளி அறா முடி நெருக்கவும் முறை நெருக்கினர், முரசம் ஒத்த சொல் அரசரே.]

**விளக்கம் :-** தருமனுக்குப் போர்த்துணை வந்த அரசர்களின் மிகுதியைக் கூறும் செய்யுள் இது. இபம் - யானை. அயம் - குதிரை. துகள் பொடி - (ஒரு பொருட் பன்மொழி) புழுதி. முரசம் ஒத்த சொல் அரசர் - ஓசை மிகுந்த கம்பீரமான சொற்களை உடைய அரசர். அரசர்கள், கொடி, குடை, யானை, குதிரை, காலாள் படை ஆகியவற்றோடும் வந்து நெருங்கினர், என்பதாம். இவ் வருணனை, தன்மை நவிற்சியின் பாற்படும். முரசம் ஒத்த சொல், உவமை. நடை கொள் ஆள் அடி - நடத்தலைக் கொண்ட வீரர்களின் கால்கள்.

**11. பகன்ம றைத்திருள் வரவி டுத்தெறி**
**பவன மெய்க்கதி யுடனுலாய்**
**அகனி லத்திடை வருந திப்புன**
**லருவ ருத்துயர் நதியின்வாய்**
**உகள்வ ரிக்கய லினமு மொத்தன**
**வுடுகு லத்துட னொளிர்பெருங்**
**ககன வட்டமு மறைய விட்டன**
**கவச மொத்தன துவசமே.**

[பகல் மறைத்து, இருள் வரவிடுத்து, எறி பவனம் மெய் கதியுடன் உலாய், அகல் நிலத்திடை வரு நதி புனல் அருவருத்து உயர் நதியின் வாய் உகள் வரி கயல் இனமும் ஒத்தன, உடு குலத்துடன் ஒளிர் பெரு ககன வட்டமும் மறைய இட்டன கவசம் ஒத்தன துவசம், ஏ.]

**விளக்கம் :-** இது தேர்க் கொடிகளின் வருணனை. கொடிச் சீலைகள், சூரிய ஒளியை மறைத்து, இருளை வரச் செய்து, வீசுகின்ற காற்றின் உண்மையான சஞ்சாரத்தோடு ஒத்து அசைந்து, இடம் அகன்ற பூமியினிடத்தே ஓடும் நதிகளின் நீரை (சுத்தமுடையதன்றென்று) வெறுத்து மேலே வானிடத்தேயுள்ள ஆகாச கங்கை சென்று அதனில் புரள்கின்ற உடம்பில் கோடுகளை உடைய கயல் மீன்களின் கூட்டத்தையும் ஒத்தன; நட்சத்திரங்களின் கூட்டத்தோடு விளங்குகின்ற வானவட்டமும் மறையும்படி இடப்பெற்ற கவசத்தையும் ஒத்தன, என்பதாம். இது உவமை அணியாகும். பூலோக நதிகளின் நீரை வெறுத்து ஆகாய கங்கை சேர்ந்து கயல்கள் உகளலாயின, என்றது தற்குறிப்பேற்றம். கவசம் - உடலில் காப்பாக அணியும் அங்கி. அருவருத்தல் - வெறுப்புக் கொளல்.

12. உறவின் மிக்கவர் பகையி னெய்த்தவ
 ருதவு மப்படை குடைநிழல்
செறித லத்தினில் வளர்ந கர்ப்படை
 திரள்வ னப்படை பொருள்விலைத்
தறுகண் மெய்ப்ப டையுறு தியிற்பொரு
 தமத கப்படை யெனவிராய்
அறுவ கைப்படை களும்வ குத்தன
 வணிக ளுட்கின பணிகளே.

[உறவில் மிக்கவர், பகையின் எய்த்தவர் உதவும் அ படை, குடை நிழல் செறி தலத்தினில் வளர் நகர்படை, திரள் வனம் படை, பொருள் விலை தறுகண் மெய்படை, உறுதியின் பொரு தமது அகம்படை என, விராய், அறுவகை படைகளும் வகுத்தன அணிகள், உட்கின பணிகள், ஏ.]

**விளக்கம் :-** இது, ஆறுவகைப்பட்ட சேனைகளின் வருணனை. உறவினால் மிகுத்தவர்கள் தந்த படையும், பகையினால் எதிர்த்து வந்து தோல்வி யுற்றவர் திரையாகத் தந்த படையும், தமது குடையின் நிழலில் பொருந்திய நாட்டிலுள்ள நகரங்களிலிருந்து துணை வந்த படையும், திரண்டு வந்த காட்டுப் படையும், அஞ்சாமையும் உடல் வலியும் உடைய கூலிப்படையும், மனவுறுதியோடு போர் செய்ய வல்ல தமது மூலப்படையும் என்று ஆறுவகைப் படைகளும் விரவி வந்து அணிவகுக்கப்பட்டனவாக, (அப்பொழுது) பாதலம் வாழும் நாகங்கள் (சுமையின் மிகுதியை நோக்கி) அஞ்சின, என்பது பொருள். எய்த்தவர்-தோற்றவர். மெய்ப்படை - பெற்ற பொருளுக்கு எதிர் உண்மையோடு போர்த் தொழில் புரியும் படை, அதாவது கூலிப்படை. தமது அகப்படை - தமக்குச் சொந்தமான மூல பலப் படை. விராய் - ஒன்றுசேர்ந்து.

13. சதியெ னைப்பல வெனமு ழக்கின
 சதவி தப்பணை தவளமா
மதியெ னைப்பல வெனநி ழற்றின
 மகிபர் பொற்குடை மழைகொள்வான்
நதியெ னைப்பல வெனநி ரைத்தன
 நவம ணிக்கொடி நளினவெம்
பதியெ னைப்பல வெனவெ றித்தன
 பலவ கைப்படை குலவவே.

[சதி எனை பல என முழக்கின சதம் விதம் பணை, தவளம் மா மதி எனை பல என நிழற்றின மகிபர் பொன் குடை, மழை கொள்வான் நதி எனை பல என நிரைத்தன நவமணி கொடி, நளினம் வெம்பதி எனை பல என எறித்தன பல வகை படை, குலவவே.]

**விளக்கம்** :- இது, முரசம், கொடி, குடை ஆயுதங்கள் ஆய வற்றின் வருணனை. சதம் விதம்பணை எனை பல சதி என முழக்கின, மகிபர் பொன்குடை தவளம் மாமதி எனை பல என நிழற்றின, நவ மணி கொடி மழை கொள் வான் நதி எனை பல என நிரைத்தன, பலவகை படை நளினம் வெம்பதி எனை பல என குலவ எறித்தன,—என்பது அன்வயம். சதி - தாளம். எனைப்பல - எத்தனையோ பல, அதாவது மிகப்பல. சதம் - நூறு, இங்கே மிகப்பல, என்ற பொருளது. தவளம் வெண்மை. மழை கொள் வான் நதி - குளிர்ச்சி கொண்ட ஆகாயத்திலுள்ள நதி, (ஆகாச கங்கை), நளினம் வெம்பதி - தாமரையின் விருப்பத்திற்குரிய தலைவனான சூரியன், வெப்பத்தை உணர்த்தும் வெம்மை என்ற சொல், உரிச் சொல்லாய், விருப்பத்தையும் உணர்த்தும். அரசர் பொன்குடைகள், மிகப் பல சந்திரன் எனும்படி, அதாவது அநேக சந்திரர்கள் இருந்தால் போன்று நிழலைச் செய்தன, என்பது, இல் பொருள் உவமை. நவமணி கொடிகள் குளிர்ச்சி கொண்ட ஆகாச கங்கை பல என்று சொல்லும்படி ஒழுங்காய் நிறைந்திருந் தன, என்பதும் இல்பொருள் உவமை. பலவகைப் படைகள் (ஆயுதங்கள்) பல சூரியர்கள் சேர்ந்து இருந்தார்போல் விளங்கும்படி ஒளி வீசின, என்பதும் இல்பொருள் உவமை. எய்வன, வெட்டுவன, குத்துவன ஆகிய ஆயுதங்கள், பலவகைப்படை. சதி (தாளம்), நூற் றெட்டு வகைப்படும், குலவ எறித்தன - விளங்கும்படி ஒளிவீசின.

**14. பிடர்வ லிக்கட கரிக ளிற்செறி**
**பிடிக ளிற்புனை முடிக ளின்**
**படர்நி ழற்கவி கையின்மி சைத்துகள்**
**பரவி மொய்த்தெழு புரவியின்**
**சுடர்வி தப்படை களினி ரைப்படு**
**துகிலு டைக்கொடி களின்விராய்**
**அடர்பொ ருப்பின மிடைமி டைப்பயி**
**லடவி யொத்தது புடவியே.**

[பிடர் வலி கட கரிகளின், செறி பிடிகளின், புனை முடிகளின், படர் நிழல் கவிகையின், மிசை துகள் பரவி மொய்த்து எழு புரவி யின், சுடர் விதம் படைகளின் நிரை படு துகில் உடை கொடிகளின் விராய், அடர் பொருப்பு இனம் இடை இடை பயில் அடவி ஒத்தது புடவியே.]

**விளக்கம்** -: பிடரியின் வலிமையுள்ள மதத்தை உடைய ஆண் யானைகளாலும், செறிந்த (நெருங்கிய) பெண் ஆனைகளாலும், (மன்னர்கள்) அணிந்துள்ள கிரீடங்களாலும், பரந்த நிழலை யுடைய கவிகை (குடை)களாலும், வானிடத்தே தூளிகள் பரவும் படி நெருங்கி நடையிடும் குதிரைகளாலும், பிரகாச விளக்க முடைய பலதிறப்பட்ட ஆயுதங்களாலும், வரிசைப்பட்ட சிலை

களை உடைய கொடிக் கம்பங்களாலும் விரவி (கலந்து) பரவிய தால், பூமியானது, அடர்ந்த மலைக் கூட்டங்கள் இடையிடையே பொருந்திய கானத்தை ஒத்தது,—என்பது பொருள். இது, பாண்டவர் பக்கத்துச் சேனைகளின் பொது வருணனையாகும்.

**15. வளைமு ழக்கின கிடுகு கொட்டின**
**வயிரொ லித்தன மகுடியின்**
**கிளையி.மிழ்த்தன முழவ திர்த்தன**
**கிணையு ரற்றின பலவிதத்**
**துளையி சைத்தன முரசி ரைத்தன**
**துடிய ரற்றின செவிடுபட்(டு)**
**உளைய விப்படி படைபு றப்பட**
**வுலக முற்றது கலகமே.**

[வளை முழக்கின, கிடுகு கொட்டின, வயிர் ஒலித்தன, மகுடி யின் கிளை இமிழ்த்தன, முழவு அதிர்த்தன, கிணை உரற்றின, பலவிதம் துளை இசைத்தன, முரசு இரைத்தன, துடி அரற்றின, செவிடு பட்டு உளைய இப்படி படை புறப்பட உலகம் **உற்றது** கலகமே.]

**விளக்கம்** :- இது பலவகை வாத்தியங்களினால் உண்டான ஒலி மிகுதியின் வருணனை. வளை - சங்குகள். கிடுகு - ஒருவகைப் பறைகள். வயிர் - ஊது கொம்புகள். மகுடியின் கிளை - மகுடி என்னும் வாத்தியத்திற்கு இனமான வாத்தியங்கள். முழவு - மத்தளம். கிணை - மருதப் பறை. துளை - துளைக் கருவிகள். முரசு - பேரிகை, துடி - உடுக்கை (குறிஞ்சிப் பறை). இவ்வாறு பலவகைப்பட்ட வாத்தியங்கள் உண்டாக்கிய ஓசையால், கேட்ப வர் காதுகள் செவிடு பட்டு வருந்தும்படி இவ்விதம் (பாண்டவர்) படை புறப்பட உலகம் குழம்பியது, என்பதாம். ஒலித்தல் என்ற பொருளுடைய ''முழக்கின'' முதல் ''அரற்றின'' ஈறாக வந்த பல சொற்களை உடைமையின், இது, **பொருட்பின் வருநிலை அணி** ஆகும். உலகத்திலுள்ளோர் படையின் புறப்பாட்டினால் எழுந்த ஒலியால் காது செவிடுபடக் குழம்பிக் கலங்கினர்,—என்க. கலகம் - குழப்பம்.

**16. செங்கண் மாலுயிர் தருமன் மார்புசி**
**வேத னானன மிருபுயம்**
**வெங்கண் வீமனும் விசய னுந்திறல்**
**விண்ம ருத்துவர் மைந்தர்தாள்**
**அங்கண் மாமுடி யரசர் மற்றுள**
**வவய வாதிக ளாகவே**
**தங்கள் பூமியி லான போதொரு**
**வடிவ மொத்தது தானையே.**

[செம் கண் மால் உயிர், தருமன் மார்பு, சிவேதன் ஆனனம் இருபுயம் வெம் கண் வீமனும் விசயனும், திறல் விண் மருத்துவர்

மைந்தர் தாள், அம் கண் மா முடி அரசர் மற்று உள அவயவ ஆதிகள், ஆகவே, தங்கள் பூமியில் ஆனபோது ஒரு வடிவம் ஒத்தது, தானையே.]

**விளக்கம் :-** போருக்குச் சித்தமாய் அணி வகுக்கப்பெற்று நின்ற பாண்டவ சேனையின் தோற்றத்தை, ஒரு புருஷ ரூபமாகப் புலவர் வருணிக்கின்றார். கண்ணன், புருஷ வடிவமாகக் கற்பிக்கப் பெற்ற சேனையின் உயிர் ; தருமன், மார்பு ; சேனாதிபதியாகிய சுவேதன் ஆனனம் (முகம்) ; வீமனும் விசயனும் இரு புருவங்கள் ; வலிய விண்ணுலக மருத்துவரான அசுவிநீ தேவர்களின் மைந்தர்களான நகுல சகாதேவர்கள் இரண்டு தாள்கள் (கால்கள்), அம் கண் மாமுடி அரசர்கள் மற்றுள அவயவங்கள்; இவ்வாறாக, அந்த சேனை, பாண்டவர் தம் பூமியாள குருக்ஷேத்திர பூமியைச் சேர்ந்த பொழுது, ஒரு புருஷ வடிவத்தை ஒத்திருந்தது,—என்பதாம். இது தற்குறிப்பேற்ற அணியின் பாற்படும். பாண்டவசேனையின் உடலை இயக்கும் உயிர் கண்ணன். உறுப்பில் சிறந்தது மார்பு. எனவே, தருமன் சேனையின் மார்பு ஆனான். சுவேதன் சேனைத் தலைவன் ஆனமையின், அச் சேனையின் முகம் ஆயினான். போர் வெல்லும் திறமையுடைய வீமார்ச்சுனர், வலிய தோள்கள் ஆயினர். உடலை நினைத்தவிடம் செலுத்தும் கருவி கால் ஆதலால், மூத்தவரின் விருப்பத்தின் படி செயற்படும் இளையரான நகுல சகதேவர்கள் கால்களாயினர். துணை வந்த மற்ற அரசர்கள் மற்றைய அவயவங்களாயினர். இது, உருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற்ற அணி.

## வேறு

### துரியோதனன் கூறல்

**17. இங்கிவர்வ யப்படைகு றித்தகுரு பூமியிடை
யிவ்வகையெ ழுந்த தினிமேல்
அங்கவர்ச யப்படையெ ழுச்சியுரை செய்குவம
ருந்திதிம யக்கி விரையக்
கங்குலின ழைத்துரக கன்னிமக னைப்புகல்க
ளப்பலிகொ டுத்த னரெனச்
செங்கணர வத்துவச மீளியுமு ணர்ந்துதன
சேனைமுதல் வற்கு ரைசெய்வான்.**

[இங்கு இவர் வயம் படை குறித்த குரு பூமியிடை இ வகை எழுந்தது ; இனிமேல், அங்கு அவர் சயம் படை எழுச்சி உரை செய்குவம் ; அரு திதி மயக்கி, விரைய கங்குலின் அழைத்து உரக கன்னி மகனை புகல் களம் பலி கொடுத்தனர் என, செம் கண் அரவம் துவசம் மீளியும் உணர்ந்து, தன சேனை முதல்வற்கு உரை செய்வான் ]

**விளக்கம் :-** இங்கே இவர் (பாண்டவரது) வெற்றிப்படை போர்க் களமாகக் குறிக்கப்பெற்ற குரு க்ஷேத்திர பூமியில் இவ்வாறு அணி வகுத்து நின்றது ; இனி, அங்கே கௌரவரது வெற்றிப் படையின் போரெழுச்சியைக் கூறுவோம் ; மாற்றுவதற்கு அரிய திதியை மாற்றி அதாவது சதுர்த்தியை அமாவாசையாகச் செய்து, விரைவாக நாக கன்னியின் மகனான இராவானை இரவில் அழைத்துக் களபலியாகக் கொடுத்துவிட்டார்கள் என்று துரியோதனன் அறிந்து, தனது சேனைத் தலைவரான வீடுமனுக்குக் கூறலானான், — என்பது பொருள். புகல் களம் பலி - சிறப்பித்துப் பேசப்படும் களத்திற்கு உரிய பலி. மீளி - வீரனான துரியோதனன்.

## கௌரவர் படையின் அணிவகுப்பு

**18. கொதிகொள்சி னநெஞ்சின்வ லியின்றியவ**
**ரஞ்சுபுகொ டுத்தனர்க ளப்ப லிநமக்(கு)**
**எதிரொருவர் நிற்குமவ ரில்லையெனும்**
**வீரநிலை யானறிவ னீய றிவையே**
**அதிரதர்கண் மாவிரதர் சமரதர்க**
**ளர்த்தரத ராகநம்ம னீகி னியின்மா**
**மதுகைமுடி மன்னரைவ குத்தெழுக**
**வென்றனன் மனத்தசைவி லாத வலியோன்.**

*[கொதி கொள் சின நெஞ்சின் வலி இன்றி அவர் அஞ்சுபு கொடுத்தனர் களம் பலி, நமக்கு எதிர் ஒருவர் நிற்குமவர் இல்லை எனும் வீரம் நிலை யான் அறிவேன், நீ அறிவையே! அதிரதர்கள், மா இரதர், சமரதர்கள், அர்த்த ரதர் ஆக, நம் அனீகினியில் மா மதுகை முடி மன்னரை வகுத்து எழுக, என்றனன் மனத்து அசைவு இலாத வலியோன்.]*

**விளக்கம் :-** கொதிக்கும் சினங்கொண்ட நெஞ்சில் வலி இன்றி அப் பாண்டவர்கள் (நமக்குப்) பயந்து (நமக்கு முன்) திதியை மாற்றிக் களபலிகொடுத்தனர் ; நமக்கு எதிராக நிற்கக் கூடியவர் ஒருவர் இல்லை எனும் நமது வீர நிலையை நான் அறிவேன், நீயும் அறிவாய் அன்றோ? (எனவே, இப்பொழுது) நம் அனீகினியில் (சேனையில்) உள்ள மிக்க வலிமையுடைய முடி மன்னரை, அதிரதர், மாரதர், சமரதர், அர்த்தரதர் ஆக வகுத்துப் போர்க்களம் புறப்படுக, என்று மனத்தளர்ச்சி சிறிதும் இல்லாதவனான துரியோதனன் (வீடுமனுக்குக்) கூறினான், — என்பது பொருள். அஞ்சுபு - பயந்து.

**19. ஆனதென வீடுமனு மதிரதரின் மிக்கதனு**
**வாசிரியனும்பு தல்வனும்**
**தானுமுயர் பூரிசர வாவுமிவர் சோமவர**
**தத்தபக தத்தர் கள்வழா**

**மானமிகு துன்மருட னற்றலைவர் மாரதரில்**
**வன்கிருத பற்ப வரசன்**
**ஞானகிரு பன்சகுனி சல்லியச யத்திரதர்**
**நன்சமர தத்த தலைவரே.**

[ஆனது என வீடுமனும், அதிரதரில் மிக்க தனு ஆசிரியனும் புதல்வனும் தானும், உயர் பூரிசரவாவும் (ஆகிய) இவர் வர சோமதத்த பகதத்தர்கள், வழா மானம் மிகு துன்மருடன் நல் தலைவர் மாரதரில், வல் கிருதபற்ப அரசன், ஞான கிருபன், சகுனி சல்லிய சயத்திரதர் (ஆகிய இவர்) நல் சமரதர் தலைவர், ஏ.]

**விளக்கம் :-** (அணிவகுக்குமாறு துரியோதனன் கூறியவுடன்) வீடுமனும், ஆனது (என்று கூறி) மிக்க தனு ஆசிரியனும், புதல்வனும், தானும், உயர் பூரிசரவாவும் (ஆகிய) இவர் அதிரதரில் (தலைவர்); வர சோமதத்த பகதத்தர்கள், வழா மானம் மிகு துன்மருடன் நல் தலைவர் மாரதரில்; வல் கிருதபற்ப அரசன், ஞானகிருபன், சகுனி - சல்லிய - சயத்திரதர் நல் சமரதர் தலைவரே,—என்று அன்வயிக்க. ஆனது - ஆய்விட்டது ; அதாவது வெகு சீக்கிரத்தில் அணி செய்து முடிக்கின்றேன், என்று வீடுமன் கூறியபடி. இறந்த காலம் விரைவு பற்றிய காலவழு. துன்மன் - துர்மர்ஷணன், கிருதபற்பன் - கண்ணனால் துரியோதனனுக்கு அளிக்கப்பட்ட யாதவ சேனையின் தலைவன், சயத்திரதன், சிந்து நாட்டு அரசன் ; துரியோதனனின் சகோதரியான துச்சளையின் கணவன். வர சோமதத்தர் - சிறந்த சோமதத்தர்.

**20. அங்கர்பெரு மான்விருட சேனனர சற்குரிய**
**வனுசரிவ ரர்த்த ரதரில்**
**துங்கவய வீரரென விம்முறைவ குத்துரகத்**
**துவசனுட னேயு ரைசெய்தான்**
**கங்கைமக னோடுபல கூறிநனி சீறியுயிர்**
**காய்வனென வாளு ருவிநீ**
**பொங்கமரின் மாளுமள வும்படைதொ டேனெனமொ**
**ழிந்தனனி சாரி புதல்வன்.**

[அங்கர் பெருமான் விருடசேனன் அரசற்கு உரிய அனுசர் (ஆகிய) இவர் அர்த்த ரதரில் துங்க வய வீரர் என, இ முறை வகுத்து உரகத் துவசனுடனே (வீடுமன்) உரை செய்தான், கங்கை மகனொடு பல கூறி, நனி சீறி, உயிர் காய்வன் என வாள் உருவி, "நீ பொங்கு அமரின் மாளும் அளவும் படை தொடேன்", என மொழிந்தனன் நிசாரி புதல்வன்.]

**விளக்கம் :-** கர்ணனும் விருடசேனனும், துரியோதனனது தம்பியரும் அர்த்த ரதரில் சிறந்த வீரர் ஆவர், என்று வீடுமன் அணி வகுத்துத் துரியோதனனுக்குக் கூறலும், நிசாரியின்

(சூரியனின்) புதல்வனான கர்ணன், வெகுண்டெழுந்து, வீடு மனைப் பலபடி நிந்தித்து, 'உன்னைக் கொல்வேன்!' என்று வாள் உருவி, (துரியோதனன் முதலியோர் தடுக்கவே) 'நீ போரில் மாளும்வரை நான் படை தொடேன்', என்று சபதம் செய்தான், என்பதாம்.

**21. யானைமிசை தேரின்மிசை யிவுளிமிசை**
**பேரம்வயவ ரேதிசிலை வேல்வ யவரின்**
**தானைகளொ ராறுமுகி லேழுமென**
**வண்பணைத ழங்குதிசை சூழ வரவும்**
**ஏனைதர பாலரணி தோறுவெயில்**
**வாளிரவி யென்னவிரு பாலும் வரவும்**
**சேனைமுத னாதனொடு மெய்த்துணைவர்**
**தங்களொடு சென்றனனி ராச திலகன்.**

[யானைமிசை தேரின்மிசை இவுளிமிசை போம் வயவர், ஏதி சிலை வேல் வயவரின் (ஆகிய) தானைகள் ஓர் ஆறும், முகில் ஏழும் என வள்பணை தழங்கு திசை சூழ வரவும், ஏனை நரபாலர் அணி தோறும் வெயில் வாள் இரவி என்ன இருபாலும் வரவும், சேனை முதல் நாதனொடு மெய் துணைவர் தங்களொடு சென்றனன் இராசதிலகன்.]

**விளக்கம் :-** யானை தேர் குதிரை ஆயவற்றின் மேல் ஏறிச் செல்லும் வீரர்களோடும், வாள், வில், வேல் ஏந்திய வீரர் களோடும் ஆகிய அறுவகைச் சேனைகளும், சப்த மேகங்களும் முழங்குவதுபோல் பெரிய முரசங்கள் ஒலி செய்யும் திசையெங்கும் சூழ்ந்து வரவும், மற்றவர்களான அரசர்கள் அணி வரிசை எங்கும் வெப்பமுடைய கிரணங்களை உடைய சூரியன்போல இரு புறத்தி லும் தொடர்ந்து வரவும், சேனைத்தலைவனான வீடுமனுடனும், தனது உண்மையான தம்பிமார்களுடனும் அரசரில் சிறந்தவனான துரியோதனன், போர்க்களம் சென்றான், என்பது பொருள். வாள் - ஒளி, ஒளியுடைய சூரிய கிரணம்.

## கௌரவசேனை வருணனை

**22. பொழியுமுகில் பற்றியெழு மிளவெயிலெ**
**றித்தனைய புகரனப ணைக்கை கொடுகார்**
**கிழியும்வகை யெற்றிமிசை யொளிருந**
**வரத்நகண கிரணவுடு வைக்க வர்வபோர்**
**விழிவழிநெ ருப்புருகி வழிய நுத**
**லிற்றிலகம் வெயில்வழிய முற்று நிலவே**
**வழியுமதி யத்தின்வ கிர்நிகர்ப**
**ணைமருப்பி னிடைமகரி கைதரித்த மதமா.**

[பொழியும் முகில் பற்றி எழும் இள வெயில் எறித்து அனைய புகரன, பணை கை கொடு கார் கிழியும் வகை எற்றி மிசை ஒளிரும் நவரத்ந கண கிரண உடுவை கவர்வ, போர் விழி வழி நெருப்பு

உருகி வழிய நுதலில் திலகம் வெயில் வழிய, முற்றும் நிலவே வழியும் மதியத்தின் வகிர் நிகர் பணை மருப்பினிடை மகரிகை தரித்த மதம் மா.]

**விளக்கம் :-** இது துரியோதனன் படையிலுள்ள யானைகளின் வருணனை. மதயானைகள், பொழியும் மேகத்தைத் தழுவித் தோன்றும் இளவெயில் பிரகாசித்தாற் போன்ற புள்ளிகளை (முகத்தில்) கொண்டன; பனைமரம் போன்ற துதிக்கையால் மேகம் கிழியும்படி எற்றி, மிசை ஒளிரும் (வானத்திலே ஒளிரும்) நவரத்தினங்களின் கூட்டங்கள் போல் பலவகைப்பட்ட நிறத்தை உடைய ஒளியைக் கொண்ட நட்சத்திரங்களைப் பறிப்பன; போரில் கண்களின் வழியே சினத் தீ மிகுதியாக வெளிப்படவும், நெற்றியில் சிந்தூரத்திலகம் வெயிலைப்போல் ஒளியை வீசவும், முற்றிய நிலவைப் பொழியும் சந்திரனது வகிர் (துண்டம்) போன்ற பருத்த தந்தங்களில், கிம்புரி என்னும் (பொன்னால் ஆன) பூணை (அழகாக) அணிந்துள்ளன, — என்பது பொருள். புகர் - செம் புள்ளிகள். இளவெயில் - உதய சூரியனின் வெப்பங் கொள்ளாத கிரணம். மதியத்தின் வகிர் - சந்திரனின் துண்டம், அதாவது பிறைச் சந்திரன். யானை, கரு நிறத்தாலும் பொழியும் மதநீராலும், மழை பொழியும் முகிலை ஒத்ததாகின்றது. புயலைக் கிழித்து உடுவைக் கவர்வதாகச் சொல்லியது, யானைகளின் உயரத்தைக் குறிக்கும். போரின்கண் கோபமிகுதியால் கண் சிவப்புறுதலை விழிவழி நெருப்பு வழிய, என்றார். பிறைச் சந்திரன், யானைத் தந்தத்திற்கு உவமை. இதை உவமையோடு, உயர்வு நவிற்சியையும் அங்கமாகக் கொண்ட தன்மை நவிற்சி என்னலாம்.

**23.** **யவனச வனத்திடைவ ளர்வனக**
**தத்தினொடு மிரவிபுர விக்கு நிகர்வ**
**புவனதல முற்றுமுடன் வளையவொரி**
**மைப்பொழுதில் வருவனபு றப்பு ணரியைக்**
**கவனமொடெ ழுப்பிவிடு துகள்கொடுது**
**கிர்ப்பவிரை கதிகளின்வி தத்தை மொழியின்**
**பவனகதி யைத்தொடர்வ பரிமளவு**
**யிர்ப்புடைய பலவகைநி றத்த பரிமா.**

[யவனம் சவனத்திடை வளர்வன, கதத்தினொடும் இரவி புரவிக்கு நிகர்வ, புவன தலம் முற்றும் உடன் வளைய ஓர் இமைப் பொழுதில் வருவன, புறம் புணரியை கவனமொடு எழுப்பி விடு துகள்கொடு துகிர்ப்ப, விரை கதிகளின் விதத்தை மொழியின் பவனகதியைத் தொடர்வ, பரிமளம் உடைய, பலவகை நிறத்த, பரிமா.]

**விளக்கம் :-** இது குதிரைகளின் வருணனை. யவன நாட்டிலுள்ள வனத்தால் மிக்கதான (குதிரைகளின்) மத்தியிலே வளர்தலை உடையன, (போரில்) சினங்கொள்ளும் இயல்பினால், சூரியனது குதிரைகளுக்கு நிகர் ஆவன, பூலோகம் முழுவதும் உடனே, (விரைவில்) சுற்றிவரும் தன்மையன, நடையின் வேகத்தால் மேலே எழுப்பிவிடும் புழுதிகளால் இந்த அண்டத்தின்

புறத்ததான பெரும் புறக்கடலையும் தூர்க்கும் தன்மையன, நல்ல மணத்தோடு கூடிய மூச்சுக் காற்றை உடையன, பலவிதப்பட்ட நிறத்தை உடையன, துரியோதனனது படையிலுள்ள குதிரைகள், —என்பது பொருள். சவனக் குதிரை - வேகத்தால் சிறந்த குதிரை. சவனம் - (ஜவநம்) வேகம். கவனம் - நடை, கதி. பவனம் - காற்று.

**24.** **நடுநிலமு ரைக்கிலுய ரவனிதல**
**மொக்குமிசை நவமணிய ழுத்தி யனவான்**
**உடுநிகர மொக்குமுரு ளுருளைகள**
**ருக்கனுட னுடுபதியை யொக்குமகுடம்**
**கொடுமுடிக ளொக்குமிவு ளிகடிசைய**
**னைத்துமெறி குரைபவன மொக்கு மடைவே**
**இடுதுகினி ரைத்தகொடி சொரியருவி**
**யொக்குமெழு குலகிரிக ளொக்கு மிரதம்.**

[நடு நிலம் உரைக்கில் உயர் அவனி தலம் ஒக்கும், மிசை நவமணி அழுத்தியன, வான் உடு நிகரம் ஒக்கும், உருள் உருளைகள் அருக்கனுடன் உடுபதியை ஒக்கும், மகுடம் கொடு முடிகள் ஒக்கும், இவுளிகள் திசை அனைத்தும் எறி குரை பவனம் ஒக்கும், அடைவே இடு துகில் நிரைத்த கொடி சொரி அருவி ஒக்கும், எழு குல கிரிகள் ஒக்கும் இரதம்.]

**விளக்கம் :-** இது தேர்களின் வருணனை. தேர்களின் நடு விடத்தைப்பற்றிக் கூறின், அது உயர்ந்த இந்தப் பூமியையே ஒக்கும், (அத் தேரின்) மேலிடத்தில் பதிக்கப்பெற்ற நவரத்தினங்கள் வான் பொருந்திய தாரகைக் கணங்களை ஒக்கும், உருளும் சக்கரங்கள் சூரிய மண்டலத்தோடு சந்திரமண்டலத்தையும் ஒக்கும், தேரின் தலைப்புறம், (சிகரம்) மலைச் சிகரங்களை ஒக்கும், (தேரில் பூட்டிய) குதிரைகள், திக்குக்கள் எங்கும் வீசுகின்ற ஒலியுடைய காற்றை ஒக்கும், பொருத்தமாகக கட்டப்பெற்ற சீலைகளின் வரிசை பெற்ற கொடிக் கம்பங்கள் மலைகளிலிருந்து பெருகி விழும் அருவியை ஒக்கும், இத்தகைய நலத்தை உடைய தேர்கள் சப்த குலபர்வதங்களை ஒக்கும். இந்த வருணனை உயர்வு நவிற்சியின் பாற்படும். நிகரம் கூட்டம், நடு நிலம் - தேர்த்தட்டு, உட்காரும் இடம்.

**25.** **அரவின்வி டமொத்தவெரி சினமுநிலை**
**பெற்றுடைய வசலநிக ரொத்த மனமும்**
**புரவியுட னொத்தகதி விரைவுமுரு**
**மொத்தவதிர் குரலுமெழு வொத்த புயமும்**
**உரமனில மொத்தவலி யுரமுமத**
**னொத்தவொளி யுருவமும னைத்தும் விரவிப்**
**பரசைமண லொத்தபல வணிபடவ**
**குத்தபல படையுடன டக்கு நடையார்.**

[அரவின் விடம் ஒத்த எரி சினமும், நிலைபெற்று உடைய அசலம் நிகர் ஒத்த மனமும், புரவியுடன் ஒத்த கதி விரைவும், உரும் ஒத்த அதிர் குரலும், எழு ஒத்த புயமும், உரம் அனிலம் ஒத்த வலி உரமும், மதன் ஒத்த ஒளி உருவமும், அனைத்தும் விரவி பரவை மணல் ஒத்த பல அணிபட வகுத்த படையுடன் நடக்கும் நடையார்.]

**விளக்கம் :-** இது காலாள் படை வருணனை. பாம்பின் விஷத்தை ஒத்த அழலும் கோபமும், சலியாமல் நிலைத்தலை யுடைய மலைக்குச் சமானமாய் அமைந்த உறுதியுடைய மனமும், குதிரைகளோடு ஒத்த நடை வேகமும், இடியைப் போன்ற அதிரும் குரல் ஒலியும், தூண்களை ஒத்த தோள்களும், வலிய அனிலம் (காற்று) ஒத்த வலிமையுடைய மார்பும், மன்மதனைப் போன்ற பிரகாசமுடைய அழகிய உருவமும், ஆகிய அனைத்தும் ஒன்று பட்டுக் கலந்து கடல் கரை மணலைப் போல் கணக்கிட முடியாத, அணிகளாக வகுக்கப்பெற்ற, பலவகைப்பட்ட ஆயுதங்களோடு செல்லும் காலாட்கள், துரியோதனனது சேனையில் இருந்தனர்,— என்பது பொருள். வினை வருவித்துக் கொள்ளப்பட்டது. நிகர் ஒத்த - நிகர்த்த, சமானமாய் அமைந்த. எழு - தூண். உரம் - வலிமை, மார்பு. பரவை - கடல். நடையார் - காலாள் வீரர்.

**26. குடைநிலவெ றிக்கவிரு புறமுமசை**
**பொற்கவரி குளிர்நிலவெ றிக்க வெறிகைப்**
**படைவெயிலெ றிக்கவணி முடியுடன்ம**
**ணிப்பணிகள் பலவெயிலெ றிக்க வுடனே**
**இடையிடையெ டுத்தகொடி நிரையிருளெ**
**றிக்கயெழு துகளிருளெ றிக்க வெழுபார்**
**அடையவொர்தி னத்தின்வ லம்வருதி**
**கிரியொத்த னர்களவனி பரெனைப் பலருமே.**

[குடை நில்வு எறிக்க, இரு புறமும் அசை பொன் கவரி குளிர் நிலவு எறிக்க, எறி கை படை வெயில் எறிக்க, அணி முடியுடன் மணி பணிகள் பல வெயில் எறிக்க, உடனே இடை இடை எடுத்த கொடி நிரை இருள் எறிக்க, எழு துகள் இருள் எறிக்க, எழு பார் அடைய ஓர் தினத்தின் வலம் வரு திகிரி ஒத்தனர்கள் அவனிபர் எனை பலரும், ஏ.]

**விளக்கம் :-** குடைகளும், இரு புறம் வீசப்பெற்ற சாமரை களும் நிலவு எறித்தன; வீரர் கையேற்ற எறிபடைகளும், (ஆயுதங் களும்), அழகிய கிரீடங்களோடு பதிக்கப்பெற்ற பிற இரத்தினா பரணங்களும் வெயில் எறித்தன; இவற்றோடுகூட இடையிடையே தூக்கப்பெற்ற கொடி வரிசைகளும், சேனையின் செலவால் எழுந்த புழுதிகளும் இருளைச் செய்தன; அரசர்கள் எல்லோரும் ஏழு தீவுகளாகிய பூமி முழுவதையும் ஒரு நாளில் வலம் வரும் சூரியனை ஒத்தார்கள்,—என்பதாம். இது, அரசர்களின் வருணனை.

**27.** **முழவுமுத லெற்றுவன கடிபடுப ணைக்கருவி**
**முழுமணி முதற்க ருவிபைங்**
**குழன்முதல மைத்தபல வகைபடுது ளைக்கருவி**
**குலவளை நரம்பு நிரையால்**
**உழைமுதலெ ழுப்புவன விசைபடு மிசைக்கருவி**
**யுழையுழை யுதிர்த்த வுடனே**
**எழுகடல் கொதித்ததென வெழுபுவி மறித்ததென**
**வெழுமுகி லிடித்ததெனவே.**

[முழவு முதல் எற்றுவன கடிபடு பணை கருவி, முழு மணி முதல் கருவி, பைங்குழல் முதல் அமைத்த பல வகை படு துளை கருவி, குலம் வளை நரம்பு நிரையால் உழை முதல் எழுப்புவன இசைப்படும் இசை கருவி, உடனே எழு கடல் கொதித்தது என, எழுபுவி மறித்தது என, எழு முகில் இடித்தது எனவே.]

**விளக்கம் :-** மத்தளம் முதலாகவுள்ள அடிப்பனவான ஒலி மிகுந்த பறைகளாகிய தோல் கருவிகள், பெரிய மணி முதலிய கஞ்சக் கருவிகள், பைங்குழல் முதலிய முறையே அமைந்த பல வகைப்பட்ட துளைக் கருவிகள், சிறந்த சங்குகள், நரம்புகளின் வரிசையால் உழை முதலிய எழுப்பப்படுவனவான எழு வகையான சுவரங்களைத் தருகின்ற இசைக் கருவிகள், ஆகிய இவற்றுடன் ஒன்று, ஏழு கடல்களும் பொங்கியது போலவும், ஏழு தீவுகளும் எதிர்த்தது போலவும், சப்த மேகங்களும் இடித்தது போலவும், இடந்தோறும் (எல்லா இடங்களிலும்) ஒலித்தன,—என்பது பொருள். கஞ்சக் கருவி - மணி. தாளம் போன்ற வெண் கலத்தால் செய்யப்பட்ட கருவி. துளைக் கருவி - புல்லாங்குழல், நாயனம் முதலிய இசைக் கருவிகள். நரம்புக் கருவிகள் - வீணை, யாழ் முதலிய நரம்புக் கருவிகள். உழை - எழுவகை சுரங்களில் ஒன்று. உழை, இளி, விளரி, தாரம், குரல், துத்தம், கைக்கிளை என்பவை, எழு வகை சுரங்கள். உழை உழை, என்ற அடுக்கு எல்லா இடங்களிலும், என்ற பொருளது. இது, துரியோதனனது படையில் எழுந்த வாத்தியங்களின் ஒலி வருணனை.

**28.** **முறைமைத வறற்றகடி முரசெழுது**
**பொற்றுவச முதல்வனுயிர் மைத்து னமையால்**
**விறலுதவு தற்குவரு கரியவன்ம ணித்துவச**
**மிசைக்கருட னிற்கு மெனவோ**
**வெறிகொளுரு முத்துவசன் மதலைவித லைச்சமரி**
**னிறுதிலய விளைக்கு மெனவோ**
**அறைவெளியெ திர்த்துவர வெருவொடு புறக்கிடுவ**
**தரசனுர கத்து வசமே.**

[முறைமை தவறு அற்ற கடி முரசு எழுது பொன் துவசம் முதல்வன் உயிர் மைத்துனமையால், விறல் உதவுதற்கு வரு

கரியவன் மணித்துவசம் மிசை கருடன் நிற்கும் எனவோ, வெறி கொள் உருமு துவசன் மதலை விதலை சமரின் இறுதியை விளைக்கும் எனவோ, அறை வளி எதிர்த்து வர வெருவொடு புறக்கு இடுவது அரசன் உரகம் துவசம், ஏ.]

**விளக்கம் :-** இது துரியோதனனது பாம்புக் கொடியின் வருணனை. துரியோதனனது தேர் விரைந்து செல்லுகையில் வீசிய எதிர் காற்றால், கொடி அசையலுற்றுப் பின்னிடுதலை, கருடனுக்கும் இடிக்கும் அஞ்சிப் புறங்கொடுப்பதாகப் புலவர் கற்பித்துள்ளார். முறைமை - நீதி. நீதி தவறுதல் இல்லாத முரசு எழுதப்பெற்ற கொடியை உடையவனான தருமனது மைத்துனமை என்ற உயிரை ஒத்த உறவினால் வெற்றியை அளிக்க வந்த கண்ணனது அழகிய கொடியின் மிசை கருடன் நிற்குமே என்று எண்ணியோ, போரில் ஆவேசம் கொள்ளும் இடி எழுதிய கொடியை உடையவனான இந்திரனது மகனான விசயன் விதலை சமரின் (நடுக்கத்தைத் தரும் போரில்) அழிவை உண்டாக்குவான் என்று எண்ணியோ, அச்சத்தோடு அரசனான துரியோதனனது பாம்புக் கொடி வீசும் காற்றிற்கு எதிரில் பின்செல்வது போன்றதாகின்றது,—என்பது பொருள். விறல் - வெற்றி. விதலம் - நடுக்கம். அறை வளி - வீசும் காற்று. வெருவல் - அஞ்சுதல். புறக்கு இடல் - பின்னே செல்லல். புறத்துக்கு, என்பது அத்துச் சாரியை பெறாமல், புறக்கு என நின்றது. இது, **தற்குறிப்பேற்ற அணி.**

**29** **உயர்முறைமை தப்புமவர் குடைநிழலி**
**லிற்றையள வுளகுறைய கற்றி யினிதான்**
**இயல்புடைய நெறித்தரும னொருகுடைநி**
**ழற்றவவ னிடையினிலி ருக்கு வனெனா**
**வியனதிமு ழுப்புனலின் முழுகிவரு**
**தற்கவனி மிசையுறந டப்ப தெனவே**
**பயில்படை நடக்கவதன் முகடுறநி**
**றைத்தரிய பகலையும றைத்த துகளே.**

[உயர் முறைமை தப்பும் அவர் குடை நிழலில் இற்றை அளவு உள குறை அகற்றி இனி நான், இயல்பு உடைய நெறி தருமன் ஒரு குடை நிழற்ற அவன் இடையினில் இருக்குவன் எனா, வியன் நதி முழு புனலில் முழுகி வருதற்கு அவனி, மிசை உற நடப்பது என, பயில் படை நடக்க அதன் முகடு உற நிறைத்து அரிய பகலையும் மறைத்த துகளே.]

**விளக்கம் :-** உயர் நீதி தப்புமவர் - உயர்ந்த நீதி பிழைக்கும் தன்மையினரான துரியோதனாதியர். இயல்பு உடை நெறி தருமன் - முறைமை கடவாது நன்னெறி படர்தலையுடைய தருமன். ஒரு குடை நிழற்ற - சிறந்த அரசாட்சி செய்ய. வியன்

நதி - பெரிய ஆகாச கங்கை. முழுப் புனல் - மிகுந்த நீர். பயில் படை - போர்ப் பயிற்சியுடைய சேனை. சேனைகளின் செலவால் மேலெழுந்த புழுதிப்படலம் சூரியன் ஒளி மறையும்படி ஆகாயத்தில் பரவியதை, பூமிதேவி, துரியோதனனது நீதியற்ற அரசாட்சியில் இதுவரை இருந்ததால் தனக்கு உண்டான தோஷத்தை நீக்கிக் கொள்ளும் பொருட்டு ஆகாச கங்கையை நோக்கிச் செல்வதாகப் புலவர் வருணிக்கின்றார். இது, தற்குறிப்பேற்ற அணி.

**30. பொருபடை கொடிப்படை புறம்படு**
**பெரும்படை புகுந்துகுரு பூமி யுறவே**
**இருபடையு மொத்துட னெருங்கின**
**சுராசுர ரெதிர்ந்துபொரு பூச லெனவே**
**ஒருபடை யெனப்பட மொராயிர**
**முநொந்துரக னுரநெ ரிய வேழுலகமும்**
**வருபடை நிலத்தினிடை வந்தளவில்**
**வேறுததி வையமென தாய்முடியுமே.**

[பொரு படை கொடி படை புறம்படு பெரும் படை புகுந்து குரு பூமி உறவே, இரு படையும் ஒத்து உடன் நெருங்கின சுர அசுரர் எதிர்ந்து பொரு பூசல் எனவே ; ஒரு படை என, படம் ஓர் ஆயிரமும் நொந்து உரகன் உரம் நெரிய, ஏழு உலகமும் வருபடை நிலத்தினிடை வந்த அளவில் வேறு உததி வையம் எனது ஆய் முடியும், ஏ.]

**விளக்கம் :-** போர் செய்யும் சேனைகளும், முன்னணிச் சேனைகளும், பின்னணிச் சேனைகளும் குருக்ஷேத்திர பூமியில் சென்று பொருந்த,—என்பது முதலடியின் பொருள். கொடிப் படை - முன் அணிப் படை. பாண்டவர் கௌரவர் ஆகிய இரு திறத்துச் சேனைகளும், தேவரும் அசுரரும் எதிர்த்துச் செய்யும் போரைப்போல், விரைவாக ஒன்றுபட்டு நெருங்கின, என்பது இரண்டாவது அடியின் பொருள். ஏழு உலகமும் வரு படை ஒரு படை என, உரகன் படம் ஓர் ஆயிரமும் நொந்து உரம் நெரிய நிலத்தினிடை வந்த அளவில் உததிவையம் வேறு எனது ஆய் முடியும், என்பது ஈற்றடிகளின் அன்வயம். ஏழு தீவுகளை உடைய உலகத்தே உளவான எல்லாச் சேனைகளும், ஒரு சேனை என்று சொல்லும்படி ஒரு கூட்டமாக, பூமியைத் தாங்கும் ஆதிசேஷனது ஆயிரம் தலைகளும் (சுமை பொறாமல்) வருந்தி உரம் (மார்பு) தெரியும்படி அல்லது வலி அழியும்படி குருக்ஷேத்திர பூமியினிடத்திலே வந்தபொழுது, கடலால் சூழப்பட்ட உலகம் வேறு எத்தன்மையதாய் முடியும்? (அதாவது, உலகம் நிலை தடுமாறியது, என்றபடி),—என்பது, ஈற்றடிகளின் பொருள். உததி - கடல். பாண்டவ சேனை தேவர் சேனைக்கும், துரியோதனாதியர் சேனை அசுரர் சேனைக்கும் உவமை.

## துரியோதனனுக்கு வீடுமன் கூறல்

31. எண்ணறு பரப்பினிடை யோசனை களத்தினிடை
யிருபடையு நிற்ப வெவரும்
துண்ணென வெருக்கொள முனின்றருள்
பகீரதிசு தன்றனைவி யாள துவசன்
கண்ணெதிர் நிரைத்தபடை யாவையு
முருக்கியு யிர்கவர வெதுநாள் செலுமெனப்
பண்ணளி நெருக்கொழிய மாதரிரு
கண்ணளி படாததொடை மீளி பகர்வான்.

[எண் அறு பரப்பினிடை யோசனை களத்தினிடை இரு படையும் நிற்ப, எவரும் துண்ணென வெரு கொள, முன் நின்றருள் பகீரதி சுதன் தனை வியாள துவசன், கண் எதிர் நிரைத்த படை யாவையும் முருக்கி உயிர் கவர, எது நாள் செலும் என, பண் அளி நெருக்கு ஒழிய மாதர் இரு கண் அளி படாத தொடை மீளி பகர்வான்.]

**விளக்கம் :-** களத்தினிடை எண் அறு யோசனை பரப்பினிடை இரு படையும் நிற்ப, வியாள துவசன், (கண்டவர்) எவரும் துண்ணென வெருக்கொள முன் நின்றருள் பகீரதி சுதன் தனை, கண் எதிர் நிரைத்த படை யாவையும் முருக்கி உயிர் கவர எது நாள் செலும் என, பண் அளி நெருக்கு ஒழிய மாதர் இரு கண் அளிபடாத தொடை மீளி பகர்வான்,—என்பது அன்வயம்.

போர்க்களமான குருக்ஷேத்திர பூமியிலே அளவு கடந்த, அதாவது யோசனைகள் பல கொண்ட பரந்த இடத்திலே, இரு திறத்துச் சேனைகளும் போர் செய்யச் சித்தமாயிருக்க, (அப்பொழுது) பாம்புக் கொடியை உடையவனான துரியோதனன், கண்டவர் எவரும் துண்ணென அஞ்சும்படி (சேனையின்) முன்னிடத்திலே நின்ற கங்கை மைந்தனான வீடுமனை நோக்கி, ''கண்ணெதிரே அணிவகுக்கப்பெற்றுத் திரண்டு நிற்கும் சேனைகள் முழுதையும் கொன்றழிக்க எத்தனை நாள் பிடிக்கும்'', என்று கேட்க, இசைக்கும் வண்டுகள் நெருங்கி மொய்த்தல் அல்லாமல், பெண்களது இரண்டு கண்களாகிய வண்டுகள் மொய்க்கப்பெறாத மாலையை உடைய வீரனான வீடுமன், பதில் மொழிவா னாயினான், என்பது பொருள்.

32. ஒருபகலில் யான் மலைவன் முப்பகலி
லேமலைவ னுபநிடத விற்கை முனியும்
வருபகலொ ரைந்தின் மலைவன்ப
ரிதிமைந்த னொருநாழி கையினில்
பொருபடைய டங்கமலை யும்புவியும்
வானொடுபு ரந்தரனி ருந்த வுலகும்
வெருவர முனைந்தொரு கணத்தினிடை
யேமலைவன் வில்விசய னென்றனனரோ.

[ஒரு பகலின் யான் மலைவன், முப்பகலிலே மலைவன் உபநிடதம் வில் கை முனியும், வரு பகல் ஓர் ஐந்தின் மலைவன் பரிதி மைந்தன், முனி மைந்தன் ஒரு நாழிகையினில்; பொரு படை அடங்க மலையும், புவியும் வானொடு புரந்தரன் இருந்த உலகும் வெருவர முனைந்து ஒரு கணத்திடையே மலைவன் வில் விசயன் என்றனன், அரோ.]

**விளக்கம் :-** பொரு படை அடங்க, யான் ஒரு பகலில் மலைவன், உபநிடத வில் கை முனியும் முப்பகலிலே மலைவன், பரிதி மைந்தன் வருபகல் ஓர் ஐந்தில் மலைவன், முனி மைந்தன் ஒரு நாழிகையினில் மலையும், வில் விசயன் புவியும் வானொடு புரந்தரன் இருந்த உலகும் வெருவர முனைந்து ஒரு கணத்தி னிடையே மலைவன், என்றனன்,—என்பது அன்வயம். அரோ : ஈற்றசை. செய்யுள் சுலபமானதே.

## விசயன் கலங்கல்

**33. யானையொடு தேர்புரவி யாளிவைய**
**நேகவித மெண்ணரிய தானை யுடனே**
**சேனைமுத லாய்முனையி னின்றருள்**
**பிதாமகனு மற்றுமுள செழுங்கு ரவரும்**
**தானைநெடு வாரியிடை தேரிடைய**
**ருக்கனென நின்றதுரி யோத னனும்வான்**
**மீனைநிகர் கேளிரும ணிந்தநிலை**
**கண்டுருகி விபுதபதி மைந்தன் மொழிவான்.**

[யானையொடு தேர் புரவி ஆள் இவை அநேகம் விதம் எண் அரிய தானையுடனே சேனை முதல் ஆய் முனையின் நின்றருள் பிதாமகனும் மற்றுமுள செழுங்குரவரும், தானை நெடு வாரி யிடை, தேரிடை அருக்கன் என நின்ற துரியோதனனும், வான் மீனை நிகர் கேளிரும் அணிந்த நிலைகண்டு உருகி, விபுதபதி மைந்தன் மொழிவான்.]

**விளக்கம் :-** யானை தேர் குதிரை காலாள் என்னும் இவற்றா லாகிய பலவகைப்பட்ட எண் கடந்த சேனையின் தலைவனாய், சேனையின் முன்னிடத்தில் நின்ற (தன் பெரிய பாட்டனாரான) வீடுமனும், மற்றுமுள (துரோணன் கிருபன் அசுவத்தாமன்முதலிய) பெரியோர்களும், சேனா சமுத்திரத்தினிடையே சூரியனைப்போல் நின்ற துரியோதனனும், நட்சத்திரங்களை ஒத்த (அதாவது மிகப் பலரான) துச்சாதனன், விகர்ணன், சல்லியன் சயத்திரதன் போன்ற சுற்றத்தார்களும், வரிசைப்பட்டு நின்ற நிலை கண்டு மனம் உருகி இவர்களோடு போர் செய்ய மனம் இல்லாதவனாய், விசயன் கண்ணனிடம் கூறுவானயினான்,—என்பது பொருள். விபுதபதி - இந்திரன். போர்க்களத்தில் எதிர் நின்றவர், பாட்ட னும், அண்ணன் தம்பிமாரும், குருமார்களுமாக இருக்க, அதைக் கண்டு அருச்சுனன் போர் செய்யும் எண்ணம் ஒழிந்தான், என்ப தாம். வாரி - நீர்; கடலுக்கு இலக்கணை.

34. நின்றமர் தொடங்க நினைகிற்பவர்
பிதாமகனு நீள்கிளைஞ ருந்து ணைவரும்
கொன்றிவரை வாகுவலி யிற்கவர்வ
தித்தரணி கொள்பவனு மென்று ணைவனே
என்றுபல பேசியதி பாதகமெ னக்கருதி
யான்மலைவு றேனி னியெனா
அன்றுவசு தேவன்மக தேவன்மக னோடுரைசெய்
தானமரி லவனுமிவ னோடுரை செய்வான்.

[நின்று அமர் தொடங்க நினைகிற்பவர் பிதாமகனும் நீள் கிளைஞரும் துணைவரும், கொன்று இவரை வாகு வலியின் கவர்வது இ தரணி, கொள்பவனும் என் துணைவனே, என்று பல பேசி, அதிபாதகம் என கருதி, யான் மலைவு உறேன் இனி எனா, அன்று வசுதேவன் மகனோடு உரை செய்தான்; அவனும் இவனோடு உரை செய்வான்.]

**விளக்கம் :-** ''களம் நின்று போர் தொடங்க எண்ணியிருப்பவர் பாட்டனாரும், மிகுதியுற்ற சுற்றத்தாரும், சகோதரர்களும் ஆவர்; இவர்களைத் தோள் வலியால் வென்றழித்து பெறப்படுவது இந்த பூமி; அதனைப் பெறுபவனும் என் தமையன்'', என்று பல வார்த்தைகளைச் சொல்லி, (இவ்வாறு எல்லோரையும் கொன்று பூமி பெறுவது) மிகப் பெரிய பாவம், என்று எண்ணி, ''இனி நான் போர் செய்யேன்'', என்று கண்ணனுக்குச் சொல்ல, அப்பிரானும் இவனுக்குக் கூறுவான், (அதாவது கீதையை உபதேசித்தான்), என்பதாம்.

அணிவகுப்புச் சருக்கம் முற்றும்.

உத்தியோக பருவம் முற்றும்,

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

**எண்—பக்க எண்**

## வில்லி பாரதம்

| முதல் தொகுதி மொத்த செய்யுள்கள் | | 1258 |
|---|---|---|
| பாயிரம் செய்யுள்கள் | 23 | |
| தற்சிறப்புப்பாயிரம் செய்யுள்கள் | 8 | |

**1. ஆதி பருவம் செய்யுள்கள்** 790

| | | |
|---|---|---|
| 1. | குருகுலச் சருக்கம் | 147 |
| 2. | சம்பவச் சருக்கம் | 119 |
| 3. | வாரணாவதச் சருக்கம் | 136 |
| 4. | வேத்திரகீயச்சருக்கம் | 65 |
| 5. | மாலையிட்ட சருக்கம் | 109 |
| 6. | இந்திரப் பிரத்தச் சருக்கம் | 47 |
| 7. | தீர்த்த யாத்திரைச் சருக்கம் | 90 |
| 8. | காண்டவ தகனச் சருக்கம் | 77 |

**2. சபாபருவம் செய்யுள்கள்** 437

| | | |
|---|---|---|
| 1. | இராய சூயச் சருக்கம் | 153 |
| 2. | சூது போர்ச் சருக்கம் | 284 |

# வில்லி பாரதம்

## இரண்டாம் தொகுதி மொத்த செய்யுள்கள் 1448

# வில்லி பாரதம்

## மூன்றாம் தொகுதி மொத்த செய்யுள்கள் 1654